# மண்ட்டோ படைப்புகள்

சாதத் ஹசன் மண்ட்டோ



கதைகள்

சொற்சித்திரங்கள்

நினைவோடைகள்

ஹிப்டுல்லா

தொகுப்பு - தமிழாக்கம்:

ராமாநுஜம்

விரிவாக்கப்பட்ட பதிப்பு

# மண்ட்டோ படைப்புகள்

கதைகள் | சொற்சித்திரங்கள் | நினைவோடைகள் | ஹிப்டுல்லா

சாதத் ஹசன் மண்ட்டோ

தொகுப்பு - தமிழாக்கம்:
சீனிவாச ராமாநுஜம்



**Manto Padaippugal** (in Tamil)

**Compiled - Translation Srinivasa Ramanujam**

Previous Publication: 2005, 2008 (NIZHAL), 2009, 2013 (Pulam)

**Our Enlarged First Edition: December, 2016 Third Print: June, 2020**

**Published by**

**BHARATHI PUTHAKALAYAM**

7, Elango Salai, Teynampet, Chennai - 600 018

Email: thamizhbooks@gmail.com / www.thamizhbooks.com

மண்ட்டோ படைப்புகள்

**தொகுப்பு - தமிழாக்கம்: சீனிவாச ராமாநுஜம்**

முந்தைய பதிப்புகள்: 2005, 2008 (நிழல்) 2009, 2013 (புலம்)

**எமது விரிவுப்படுத்தப்பட்ட முதல் பதிப்பு: டிசம்பர், 2016 மூன்றாம் அச்சு: ஜூன், 2020**

## வெளியீடு:




7, இளங்கோ சாலை, தேனாம்பேட்டை, சென்னை - 600 018

தொலைபேசி : 044-24332424, 24356935 விற்பனை: 24332924,

விற்பனை நிலையங்கள்

**மதுரை:** 37A, பெரியார் பேருந்து நிலையம் - 045 22324674

**ஈரோடு:** 39, 39 ஸ்டேட் பாங்க் சாலை - 9245448353

**திண்டுக்கல்:** பேருந்து நிலையம் - 9942331105, 9976053719

**பழனி:** பேருந்து நிலையம் அருகில் - 9442883696

**திருப்பூர்:** 447, அவினாசி சாலை - 9486105018

**சேலம்:** பாலம் 35, அத்வைத ஆஸ்ரமம் சாலை 0427 2335952

**திருவல்லிக்கேணி:** 48, தேரடி தெரு - 9444428358

**வடபழனி:** பேருந்து நிலையம் எதிரில் அடையார்

**ஆனந்தபவன் மாடியில்** - 9444476967

**பெரம்பூர்:** 52, கூக்ஸ் ரோடு - 9444373716

**திருவாரூர்:** 35, நேதாஜி சாலை - 9442540543

**சேலம்:** 15, வித்யாலயா சாலை சாலை
**திருநெல்வேலி:** 25A, ராஜேந்திரநகர் - 9442149981
**அருப்புக்கோட்டை:** 31, அகமுடையார் மஹால் - 9994173551
**மதுரை:** சர்வோதயா மெயின்ரோடு
**குன்னூர்:** N.K.N வணிக வளாகம் பெட்போர்ட்
**செங்கல்பட்டு:** 1 D ஜி.எஸ்.டி. சாலை - 044 27426964
**விருதுநகர்:** 131, கச்சேரி சாலை - 0456 2245300
**கும்பகோணம்:** 352, ரயில் நிலையம் எதிரில் - 9443995061
**வேலூர்:** பேஸ் III, சத்துவாச்சாரி - 9442553893
**நெய்வேலி:** பேருந்து நிலையம் அருகில், - 9443659147
**தஞ்சாவூர்:** காந்திஜி வணிக வளாகம் காந்திஜி சாலை - 9655542400
**கோவை:** 77, மசக்காளிபாளையம் ரோடு, பீளமேடு - 8903707294
**திருச்சி:** வெண்மணி இல்லம், கரூர் புறவழிச்சாலை - 9994289492
**திருவண்ணாமலை:** முத்தம்மாள் நகர்
**நாகர்கோவில்:** 699 கே.பி.ரோடு EV புரம் - 9443450111
**சிதம்பரம்:** 22A / 18B தேரடி கடைத் தெரு,
**கீழவீதி அருகில்** - 9994399347
**கரூர்:** நாரத கானசபா அருகில் (TNGEA OFFICE) - 9442706676
**காரைக்குடி :** 12, 2 வது தெரு, கம்பன் மணிமண்டபம் பின்புறம் - 9443406150

நினைத்த நூல்கள்... நினைத்த நேரத்தில்...






8778073949

ரூ.545/-

அச்சு : மணி ஆப்செட், சென்னை - 600 053.

இக்கட்டான காலகட்டங்களிலும்
எம்மீது நம்பிக்கைவைத்து
எப்போதும்
உறுதுணையாக இருக்கும்
ப. பத்மினிக்கு

# பொருளடக்கம்

# மொழிபெயர்ப்பாளர் குறிப்பு

மண்ட்டோ சிறுகதைத் தொகுப்பைப் படித்ததிலி ருந்து எங்கு சென்றாலும் அவரின் படைப்புகளின் ஆங் கில மொழிபெயர்ப்பு ஏதேனும் புதிதாக வந்திருக்கிறதா என்று பார்ப்பதை வழக்கமாகவே கொண்டுள்ளேன். இப்போது இணையதளத்தில் தேடுவதும் இணைந்து கொண்டது. இப்படி அலைந்ததில் மண்ட்டோ படைப் புகளுக்கு வெவ்வேறு ஆசிரியர்களின் ஆங்கில மொழி பெயர்ப்புகளைக் கைக்கொள்ள முடிந்தது'.

1993ல் மண்ட்டோவின் கதைகளை அடிப்படையாகக் கொண்டு ஒரு நாடகப் பிரதியை உருவாக்கியிருந்தேன். காலம் - இடம் என்று வெவ்வேறு தளங்களில் இயங்கிய அவரின் சில தேர்ந்தெடுத்த கதைகளை ஒரு காலம் - இடம் வட்டத்திற்குள் அடக்கி ஒரு பிரதியை உருவாக்க முயன்றிருந்தேன். அது இன்று வரை 'டிராப்ட்' வடிவிலே எங்கோ தூங்கிக் கொண்டிருக்கிறது. இன்று இந்தியா, பாகிஸ்தான் என்று மட்டுமில்லாமல் பல வெளிநாடு களில் மண்ட்டோவின் கதைகளை அடிப்படையாகக் கொண்டு நாடகங்கள் தொடர்ந்து நிகழ்த்தப்படுகின் றன. இங்கு அது போல் நிகழ்த்த முடியாமல் போனது பெரும் வருத்தமே.

இந்தத் தொகுப்பைத் தமிழாக்கம் செய்தபோது என் னுடைய நாடக அனுபவங்கள் தான் பெரும் உதவியாக இருந்தன. எல்லாவிதமான மொழிபெயர்ப்புகளும் ஏதோ ஒரு விதத்தில் அதற்கான தேவையைப் பூர்த்தி செய்ய முயலுகின்றன. ஒரு மொழிபெயர்ப்பை ஒற்றைப் பரிமாணத்தில் வைத்துப் பார்ப்பதற்கு வாய்ப்பில்லை. மூல ஆசிரியரின் வரிகளை விட்டு விலகலாமா? வரி களை மாற்றலாமா? பத்திகளை விட்டு விடலாமா போன்ற கேள்விகளை எல்லாம் மொழிபெயர்ப்பு நோக் கத்தின் அடிப்படையிலேயே அணுக முடியும். விடப்பட்ட

பகுதிகள் பிழையில்லை, அது தீர்மானமாக எடுக்கப் பட்ட முடிவு. அப்படியிருக்க, நாம் அந்த மொழிபெயர்ப் பின் நோக்கத்தைப் புரிந்து கொள்ள வேண்டியுள்ளது. மொழிபெயர்ப்பாளனுக்கென்று சுதந்திரம் ஏதாவது இருக்கிறதா என்று யோசித்தால் நிச்சயம் இருக்கிறது என்றுதான் முடிவுக்கு வர வேண்டியுள்ளது. இல்லை யென்றால், எல்லா மொழிபெயர்ப்புகளும் ஏதோ ஒரு 'மென்பொருள்' கொண்டு செய்யப்பட்டது போல களை யிழந்து நிற்கும். அந்தச் சுதந்திரம் என்ன? அதன் எல்லை என்ன? ஒரு நாடக இயக்குநரும், நடிகரும் ஒரு நாடகப் பிரதி மேல் எடுத்துக் கொள்ளக்கூடிய சுதந்திர மும் சுயக் கட்டுப்பாடும் தான் மொழிபெயர்ப்பாளன் அவன் எடுத்துக்கொள்ளும் பிரதிக்குள்ளும் சாத்தியப்ப டுகிறது. ஒரு நாடக இயக்குநர் நாடகப் பிரதியை வாசிப் புக்கு உட்படுத்தி அதன் ஏற்ற இறக்கங்களோடு சில கோடுகளைப் போட்டுவிட்டு நடிகனிடம் கொடுக்கிறார். நடிகன் அதையொட்டி தீர்மானங்களோடு அந்தக் கோட் டின்மீது நடந்து செல்கிறான். நடிகன் நடக்கவேண்டிய கோடு இயக்குநரால் தீர்மானிக்கப்படுகிறது என்றாலும் எப்படி அந்தக் கோட்டின் மீது ஒரு நடிகன் நடக்கிறான் என்பதை நடிகனும், இயக்குநரும் இணைந்தே தான் தீர் மானிக்கிறார்கள். கோட்டின் மீது நின்று திசை தெரியா தது போல் பாசாங்கு செய்து பார்வையாளனை நம்ப வைப்பதாகட்டும்; திடீரென்று கோட்டின் மீது எட்டி நடை போட்டு வேகத்தைக் கூட்டுவதாகட்டும்; எதையோ சுமந்து கொண்டிருப்பது போன்று தடுமாறிய நடையாகட் டும்; இவையெல்லாமே இந்த இருவரால் தான் தீர்மா னிக்கப்படுகிறது. ஆனால் ஒற்றைக்காலில் நடனமாடும் திறமையாக இருந்தாலும் அதில் அந்த நடிகனே எதிர்பா ராத விதமாய்க் குப்புற விழுந்து - பார்வையாளனுக்கு அதை உணர்த்தாமல் - சமாளிக்கும் திறமையும், நடிக னின் சுதந்திரத்தோடு சம்பந்தப்பட்டது. இவை அனைத்

தையும் செய்யும் போது இயக்குநர் போட்ட கோட்டை மற வாமல் அந்தக் கோட்டிற்குக் கட்டுப்படுவது ஒரு சிறந்த நடிகனின் திறமையாகும். இங்கு ஒரு மொழிபெயர்ப்பாள னின் வாசிப்பு இயக்குநராகவும், அவனின் மொழி நடிக னாகவும் பரிணாமம் கொள்கிறது. எல்லா நடிகர்களும் எல்லாப் பாத்திரங்களையும் ஏற்பது சாத்தியமில்லை என்பது போலவே, ஓர் இயக்குநர் அவனுக்குச் சாத்தியப் பட்ட நடிகனைக் கவனத்தில் கொள்ளவேண்டியுள்ளது. ஒரு நடிகன் அவனின் திறமைக்குட்பட்ட பாத்திரத்தைத் தான் ஏற்றிருக்கிறானா என்பதைப் பார்வையாளர்கள் தான் தீர்மானிக்கவேண்டும் என்றாலும் அதைத் தேர்ந் தெடுப்பதில் ஒரு நடிகனுக்கும் நிச்சயம் பங்குண்டு. இத னால் தான் ஒரு மூலப் பிரதிக்குப் பல மொழிபெயர்ப்பு முயற்சிகள் அவசியமாகின்றன.

இந்தத் தொகுப்பைத் தமிழாக்கம் செய்தபோது பல முறை அசதி ஏற்பட்டு நிறுத்திவிடலாம் என்று கூட தோன்றியது. எனக்குக் கிடைத்த ஆங்கில மொழிபெ யர்ப்புகளை[1] வாசித்துப் பார்த்தபோது ஒவ்வொன்றுக் கும் உள்ள வேறுபாடு தலை சுற்ற வைத்தது. ஒரு பத் தியை எடுத்து அதை மற்ற மொழிபெயர்ப்புகளோடு ஒப் பிடலாம் என்றால், அந்தப் பத்தியும் அதைத் தொடர்ந்து பல பக்கங்களும் ஒரு புத்தகத்தில் காணாமல் போன தையும் பார்க்க முடிந்தது.

இதுவரை தமிழாக்கம் செய்யப்பட்ட மண்ட்டோவின் கதைகள் ஏறக்குறைய எல்லாமே காலித் ஹாசனின் ஆங்கில மொழிபெயர்ப்பை அடிப்படையாகக் கொண் டவை என்றே தோன்றுகிறது. இவரின் ஆங்கிலம் மிக அற்புதமானது. ஆனால் ஏறக்குறைய எல்லாக் கதைகளிலும் அவர் பல பத்திகளை விழுங்கியிருக் கிறார். உதாரணத்திற்கு 7500 வார்த்தைகள் கொண்ட 'மோஸல்' கதையில் 700 வார்த்தைகள் விழுங்கப்பட்

டுள்ளன. புதுச் சட்டம்' என்ற கதை 3500 வார்த்தைகள் கொண்டிருக்க வேண்டும். ஆனால் அதில் 500 வார்த் தைகளைக் காணவில்லை. அதுபோலவே 'டிட்வாலில் ஒருநாய்' என்ற 3500 வார்த்தைகள் கொண்ட கதையில் 500 வார்த்தைகள் விழுங்கப்பட்டிருக்கின்றன[2] 'மம்மி' கதையை மூன்று வெவ்வேறு ஆசிரியர்களின் மொழி பெயர்ப்பில் படித்தபோதுதான் காலித் ஹாசன் விழுங் கிய விபரீதம் புரிந்தது. அதுபோலவே 'சுதந்திரத்திற்காக' கதையிலும் இது நடந்திருக்கிறது. அவர் கதையின் தலைப்புகளை மாற்றிய விதமும் கதையின் வாசிப் பைத் திசை திருப்புவதாக அமைந்துள்ளது. 'திற' என்ற தலைப்புக்குப் பதில் திரும்புதல்' என்று அவர் மாற்றியி ருப்பதை உதாரணமாகச் சொல்லலாம். 'திற' கதையில் அந்தத் தலைப்பு எவ்வளவு முக்கியமானது என்பதைக் கதையைப் படிக்கும் வாசகர்கள் புரிந்து கொள்ளலாம். மொத்தத்தில் சிறந்த ஆங்கிலத்தில் மொழி பெயர்க் கப் பட்டிருந்தாலும், இந்தியத் துணைக் கண்டத்திற்கு வெளியே மண்ட்டோவை அறிமுகப்படுத்துவதில் அதன் நோக்கத்தைப் பூர்த்தி செய்திருந்தாலும், காலித் ஹாச னின் மொழிபெயர்ப்பை நாம் அப்படியே ஏற்றுக்கொள்ள முடியாது. ஆனால் அவரின் மொழிபெயர்ப்பு இன்று மிக வும் பிரபலமாக இருப்பது உண்மை தான்.

எந்த ஒரு மொழிபெயர்ப்பும் முதல் பதிப்பிலேயே பூர ணத்துவம் அடைவது அபூர்வம். ஒவ்வொரு மறுபதிப் பும் மேலும் சில முன்னேற்றங்களை வேண்டி நிற்கிறது. மேலும் மூல மொழியிலிருந்து அல்லாமல் தரகு மொழி யாய் ஆங்கிலம் வழியே தமிழாக்கம் செய்யும்போது, ஆங் கிலத்தில் புதுப்புது பதிப்புகள் வரும்போதெல்லாம் நம் தமிழாக்கத்தோடு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டிய அவசி யமும் உருவாகிறது. இப்படி ஒப்பிடுவதற்கு அசாதாரண மான உழைப்பு அவசியமாகிறது.

அதுபோலவே மண்ட்டோவின் பிரிவினை வன்முறை சம்பந்தப்பட்ட கதைத் தொகுப்புகளே பிரபலமாக இருந்ததால், மண்ட்டோவைப் பிரிவினைக் கலவரங்களுக்குள் சுருக்கிப் பார்க்கும் பார்வை பொதுவாகக் காணப்படுகிறது. 250க்கும் மேலாக சிறுகதைகள் எழுதியிருக்கும் ஒரு படைப்பாளியின் படைப்பில் பத்து சதவீதம் தேர்ந்தெடுத்த கதைகளை வைத்து ஒரு முழுமையான பார்வையைப் பெறமுடியாது என்றாலும் இந்தத் தொகுப்பு ஓரளவேனும் மண்ட்டோவின் மற்ற தளங்களை அறிமுகப்படுத்துவதோடு, அவரை மறுவாசிப்புக்கு உட்படுத்தும் சாத்தியங்களை ஏற்படுத்திக் கொடுக்கும் என்று நம்புகிறேன்.

இன்னும் பல பத்தாண்டுகளுக்கு மண்ட்டோ படைப்பின் முக்கியத்துவம் நிச்சயமாக நிலைத்திருக்கும். என்றோ ஒருநாள், யாரோ ஒருவரால் மண்ட்டோ படைப்புகள் முழுவதும் உருது மொழியிலிருந்து நேரடியாகத் தமிழாக்கம் செய்யப்படும் என்ற நம்பிக்கையிருக்கிறது. அப்போதுதான் மண்ட்டோவின் முழு ஆளுமையை நம்மால் உணரமுடியும். அதே சமயத்தில் ஆங்கிலத்தில் வெளியாகியுள்ள மண்ட்டோவின் மற்ற படைப்புகளையும் தமிழாக்கம் செய்யும் ஆசையும் இருக்கிறது.

- ராமாநுஜம்

***



## மண்ட்டோவின் பிரார்த்தனை

அன்புள்ள இறைவனே, இந்தப் பிரபஞ்சத்தின் ஆசானே, இரக்கமுள்ளவனே, கருணையுள்ளவனே! பாவங்களில் மூழ்கிக் கிடக்கும் நாங்கள், உன் அரியாசனத்திற்கு முன் மண்டியிட்டு - கடவுள் பற்றுக் கொண்ட குலாம் ஹசன் மண்ட்டோவின் மகனான, சாதத் ஹசன் மண்ட்டோவை உன்னிடம் அழைத்துக் கொள்ளுமாறு மன்றாடி வேண்டிக் கொள்கிறோம்.

அவனை உன்னோடு அழைத்துக்கொள் இறைவனே! நறுமணங்களில் இருந்து விலகி, தூய்மையற்றதைத் தேடி ஓடுகிறான். பிரகாசமான சூரிய ஒளியை வெறுத்து குழப்பமான இருண்ட பாதைகளைத் தேர்ந்தெடுக்கிறான். நிர்வாணத்தையும், அவமானமற்ற உணர்வுகளையும் கண்டு பிரமித்துப்போகும் அவன் நாணத்தை ஏற்றுக்கொள்ள மறுத்து

அலட்சியப்படுத்துகிறான். இனிமையானதை வெறுத்து, கசப்பான பழத்தை ருசி பார்க்கத் தன் உயிரையும் கொடுக்கத் தயாராக இருக்கிறான். குடும்பப் பெண்களை ஏறெடுத்துப் பார்க்காத அவன், வேசிகளோடு இருக்கும்போது ஏழாவது சொர்க்கத்தில் இருக்கிறான். தெளிந்த நீரோட்டத்தின் பக்கம் போகாதவன், சகதியில் நடக்க விரும்புகிறான். மற்றவர்கள் அழும்போது அவன் சிரிக்கிறான். மற்றவர்கள் சிரிக்கும்போது அவன் அழுகிறான். பாவங்களால் கருமையாக்கப்பட்டிருக்கும் முகங்களை அக்கறை கொண்டு கழுவி விட்டு

அந்த உண்மையான முகங்களைப் பார்க்க விரும்புகிறான். உன்னை எப்போதும் நினைத்ததில்லை அவன்.

ஆனால் சாத்தானை எப்போதும் பின்தொடர்ந்து கொண்டிருக்கிறான். முன்பு ஒரு முறை உன் அதிகாரத்திற்குக் கட்டுப்பட மறுத்த அதே தேவ தூதன்தான் அவன்.

- சாதத் ஹசன் மண்ட்டோ

***



## காலித்

மும்தாஜ் ஒவ்வொரு நாள் காலையிலும் மூன்று அறைகளையும் பெருக்கிச் சுத்தம் செய்வான். சிகரெட் துண்டுகள், எரிந்த தீக்குச்சிகள் மற்றும் சிதறிக் கிடக்கும் குப்பைகள் எல்லாவற்றையும் அப்புறப்படுத்துவான். இடத்தை மிகத் துல்லியமாகச் சுத்தம் செய்தால் தான் அவன் சௌகரியமாக உணர்வான்.

மனைவி வெளியே வராண்டாவில் படுத்திருந்தாள். குழந்தை அதனுடைய கட்டிலில் படுத்திருந்தது.

விடியற்காலையில் எழுந்து மூன்று அறைகளையும் பெருக்கிச் சுத்தம் செய்வது ஒரு சடங்காகவே மாறி யிருந்தது. இதைச் செய்வதற்குக் காரணம் அவனின் மகன் நடக்கத் தொடங்கியதோடு மட்டுமல்லாமல், அந்த வயதுக் குழந்தைகள் செய்வது போல தரையி லிருக்கும் எல்லாவற்றையும் எடுத்து வாயில் போட்டுக் கொள்கிறான்.

அவனேதான் எல்லா அறைகளையும் சுத்தம் செய்கி றான் என்றாலும், தரையில் உள்ள வெடிப்புகளில் சிக்கி யிருக்கும் தூசுகளைத் துப்பறியும் மகனின் திறமையைக் கண்டு ஆச்சரியப்பட்டுப் போனான்.

அவன் என்னதான் செய்து பார்த்தாலும் ஒரு வயது கூட நிரம்பாத அவனின் முதல் மகன் காலித் எப்படியா வது எதையாவது பொறுக்கி எடுத்து வாயில் போட்டுக் கொள்வான்.

சுத்தமாக இருப்பது அவனுள் ஒரு வெறியாகவே மாறி யிருந்தது. ஒவ்வொரு முறையும் காலித் எதையாவது பொறுக்கி எடுத்தால் அவன் குற்ற உணர்வால் தாக்கப் பட்டான். இன்னும் சிரத்தையோடு இல்லாமல் போன தற்குத் தன்னையே நொந்து கொண்டான்.

அவன் தன் மகனை உணர்ச்சி பொங்க நேசித்தான்... அது அவனைப் பைத்தியமாக்கியது மகனின் முதல் பிறந்தநாள் நெருங்க நெருங்க அவனுள் பயம் கூடத் தொடங்கியது. அவனால் ஏனென்று புரிந்து கொள்ள முடியவில்லை என்றாலும், அவனுடைய மகன் முதல் வயது பூர்த்தியாகும் வரை உயிரோடு இருக்க மாட்டான் என்று அவனுள் ஏதோ ஒன்று சொன்னது. அவனுடைய பயத்தைத் தன் மனைவியிடம் பகிர்ந்து கொண்டான். அவன் முதல் முறையாக அவளிடம் சொன்ன போது அவளால் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. அவ ளின் கணவன் இது போன்ற நோய்வாய்ப்பட்ட கற்பனை களுக்கெல்லாம் இடம் கொடுக்கக் கூடியவன் இல்லை. அதனால் அவள், "உங்களுக்கு என்ன ஆயிற்று? இப்ப டிப் பேசுவதை என்னால் நம்பவே முடியவில்லை. நீங் கள் இது போன்ற பைத்தியக்கார எண்ணங்களுக்கு இடம் கொடுக்கக்கூடியவர் இல்லை. கடவுளுடைய புண்ணியத்தில் நம்முடைய மகன் நூறு வயது வரை இருப்பான். அவனின் முதல் பிறந்தநாளை மிகப்பெரிய அளவில் கொண்டாடி, உங்களுடைய இந்தப் பைத்தி யக்காரச் சிந்தனைக்கு முடிவு கட்டுகிறேன்" என்றாள்.

அவன் மனைவியின் வார்த்தைகள் அவனைக் கொட்டின. அவள் எந்த அளவிற்குத் தன்னுடைய மகன் மீது அக்கறை கொண்டிருந்தாளோ, அதே அளவிற்கு அவனும் தன் மகன் மீது அக்கறை கொண்டிருந்தான். ஆனாலும் அவனுள் தோன்றிய இந்த விபரீத உணர்வை எதனாலும் அசைக்க முடியவில்லை.

காலித் திடமாக இருந்தான். குளிர் காலத்தில் ஒரு நாள் வேலைக்காரன் குழந்தையை வெளியே எடுத்துச் சென்றிருந்தான். அவன் திரும்பி வந்த உடன் மும்தா ஜின் மனைவியிடம், "பேகம் ஸாஹிபா, காலித் செல்லத் திற்குக் கன்னங்களில் சிவப்பு வர்ணம் உபயோகப்படுத் தாதீர்கள். ஏதாவது திருஷ்டிப்பட்டுவிடும்" என்றான்.

அவள், "மடையா! நான் என்ன குழந்தையின் கன்னத் தில் சிவப்புச் சாயமா பூசியிருக்கிறேன்? அது இயற்கை யாகவே சிவப்பாக இருக்கிறது" என்று கூச்சல் போட் டாள்.

குளிர்காலத்தில் காலித்தின் உடல் ஆரோக்கியமாகப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. ஆனால் கோடைக்கா லம் வர வர அவன் சற்றே பிரகாசத்தை இழந்திருந் தான். காலித்துக்குத் தண்ணீரில் விளையாடுவது என் றால் பிடிக்கும். காலை எழுந்தவுடன் உடலைப் பரப்பிக் கொண்டு பால் புட்டியில் இருந்து பாலைச் சத்தத்தோடு உறிஞ்சிக் குடிப்பான். பிறகு, வேலைக்குக் கிளம்பிக் கொண்டிருக்கும் அவனின் தந்தை அவனை ஒரு வாளி தண்ணீருக்குள் நிற்க வைப்பான். அவனின் பெற்றோர் கள் சந்தோஷமாகப் பார்த்துக் கொண்டிருக்க, அவன் தண்ணீரை வாரியிறைத்து விளையாடிக் கொண்டிருப் பான்.

ஆனாலும் மும்தாஜிடம் சந்தோஷங்களோடு கவலை யும் ஒட்டிக்கொண்டுதான் இருந்தது, "ஐயோ கடவுளே, என் மனைவியின் வார்த்தைகளை மெய்யாக்கும்படி உன்னை வேண்டிக் கொள்கிறேன். நான் குழம்பிக் கிடக்கிறேன். சதாசர்வ காலமும் காலித்தின் மரணம் பற் றிய சிந்தனை ஏன் என்னை வாட்டி எடுக்கிறது என்று எனக்குத் தெரியவில்லை . ஏன் என் மூ ளைக்குள் இந்தச் சிந்தனைகள் வந்து போகின்றன? ஏன் காலித்

சாக வேண்டும்? அவனின் வயதொத்தவர்களைக் காட்டிலும் அவன் ஆரோக்கிய மாகவும் பெரியவன் போலவும் தானே இருக்கிறான். என் செல்லமே! எனக்கு நிச்சய மாகப் பைத்தியம் பிடித்து விட்டது. எனக்குப் பைத்தியம் பிடிக்கும் அளவிற்கு நான் என் மகனை நேசிக்கிறேன். அதனால் தான் நான் இவ்வளவு நடுங்கிப்போகிறேன். நான் ஏன் என் மகனை இவ்வளவு நேசிக்க வேண்டும்? நான் உணர்வது போல் தான் மற்ற தந்தைமார்களும் உணர்கிறார்களா? எல்லாத் தகப்பனும் தன்னுடைய மகனின் மரணத்தைப் பற்றிப் பயந்து கொண்டு தான் வாழ்கிறார்களா? எனக்கு என்ன ஆயிற்று என்று என்னால் புரிந்து கொள்ள முடியவில்லையே"

மூன்று அறைகளையும் சுத்தம் செய்தபின், தரையில் பாயை விரித்துத் தலையணை இல்லாமல் மும்தாஜ் மல்லாக்கப் படுத்துக் கொள்வான். அரை மணி நேரம் நிம்மதியைச் சந்தோஷமாக அனுபவிப்பான். அன்றும் அவன் அப்படிப் படுத்திருக்கும் போது, "நாளைக்கு மறு தினம் என் மகன் ஒரு வயதைப் பூர்த்தி செய்கிறான். அதுவரை ஏதும் அசம்பாவிதம் நடக்காமல் கழிந்து விட்டால் என்னுடைய நிம்மதி எனக்குத் திரும்பக் கிடைத்து விடும். என் இதயத்தில் இருக்கும் கனம் எல்லாம் குறைந்து விடும். அல்லா!.." என்று நினைத்தான்.

கண்களை மூடிப் படுத்திருந்தபோது, அவனின் வெறும் மார்பில் மகனின் முழு கனத்தையும் உணர்ந்தான். கண்களைத் திறந்து மனைவி அருகில் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தான். அவள், "காலித் இரவெல்லாம் அமைதியில்லாமல் இருந்தான். தூக்கத்தில் அவன் நடுங்கிக் கொண்டே இருந்தான்" என்றாள்.

தந்தையின் மார்பில் சாய்ந்திருந்த காலித் மீண்டும் நடுக்கம் கொள்ளத் தொடங்கினான். குழந்தையின்

முதுகில் கைவைத்து அவன், "கடவுளே, என் மகனைக் காப்பாற்று" என்றான்.

அவனின் மனைவி எரிச்சலை அடக்க முடியாமல், "கடவுளுக்குப் புண்ணியமாகப் போகட்டும். நீங்களும் உங்களுடைய பைத்தியக்காரக் கற்பனைகளும் பைய னுக்கு சாதாரண ஜுரம் தான் சீக்கிரத்தில் குணமாகிவி டும்" என்று சொல்லி அறையை விட்டு வெளியேறினாள்.

பாதிக் கண்களை மூடியிருந்த காலித், தந்தையின் மார்பில் சாய்ந்து கொண்டிருந்தான். அவ்வப்போது அந் தச் சிறிய உடல் ஊடாக நடுக்கம் பாய்ந்தது. அப்போது மும்தாஜ் குழந்தையை முதுகில் தட்டிக் கொடுப்பான்.

சற்று நேரம் கழித்து காலித் தன்னுடைய கறுத்த கண் களைத் திறந்து தந்தையைப் பார்த்து, தளர்ந்த புன் னகையை வீசினான். மும்தாஜ் தன் மகனுக்கு முத்தம் கொடுத்து, "காலித், என் செல்லமே, ஏன் இவ்வளவு அமைதியுற்று இருக்கிறாய்" என்று கேட்டான்.

குழந்தை காலித் தன் தலையை உயர்த்திப் புன்ன கைத்தான். பிறகு, தலை தந்தையின் மார்பில் தவழ்ந் தது.

மும்தாஜ் குழந்தையின் முதுகில் தட்டிக் கொடுத்துக் கொண்டே, தன்னுடைய மகன் நீண்ட ஆயுள் பெற வேண்டும் என்று தன் இருப்பின் மையத்தில் இருந்து பிரார்த்தனை செய்தான். அவனின் மனைவி காலித்தின் முதல் பிறந்த நாள் கொண்டாட்டத்திற்கான காரியங்க ளில் மும்முரமாக இருந்தாள். அவளுடைய நண்பர்கள் எல்லோரும் அழைக்கப்பட்டிருந்தார்கள். குழந்தைக்கு மிகப் பிரத்தியேகமான உடை தைக்கதையல்காரன் வர வழைக்கப்பட்டிருந்தான். என்ன உணவு பரிமாறுவது என்று தீர்மானிக்கப்பட்டிருந்தது. கொண்டாட்டத்திற் குத் தேவையானது எல்லாம் யோசித்துச் செய்யப்பட்டது.

ஆனாலும் இவை எதுவுமே அவனுக்குச் சந்தோஷத்தைக் கொடுக்க மறுத்தன. அவனைப் பொறுத்த வரை அவன் மகனின் பிறந்த நாள் விழா முடிய வேண்டும். அவ்வளவுதான்! அவனின் காதுகளை எட்டாமலேயே குழந்தை ஒரு வயதைப் பூர்த்தி செய்து விட்டால் நல்லது தான். குழந்தையின் பிறந்தநாள் முடிந்த பிறகே அவனுக்கு அது தெரிவிக்கப்படுவதை விரும்பினான்.

மார்பில் அமர்ந்திருந்த காலித் நகரத் தொடங்கிய போது, "காலித் பேட்டா, உன் அப்பா நிம்மதியாக இருக்க வேண்டும் என்று நீ வாழ்த்த மாட்டாயா?" என்று கேட்டான்.

குழந்தை காலித் சிரித்துக்கொண்டே வலது கையை அவனின் நெற்றியை நோக்கி நகர்த்தினான்.

அவன் தன் மகனை வாழ்த்தினான். "நீ நீண்ட ஆயுளைப் பெற வேண்டும்" ஆனால் இந்த வார்த்தைகள் அவனின் உதடுகளில் இருந்து வெளியேறிய உடன் அவன் தன் நம்பிக்கையை இழந்து பயம் கொள்ளத் தொடங்கினான்.

குழந்தை காலித் தன்னுடைய தந்தையைப் பார்த்துப் புன்னகைத்து, அறையை விட்டு வெளியேறினான்.

அலுவலகத்திற்குக் கிளம்ப இன்னும் நிறைய நேரம் இருந்தது. பாயில் படுத்த படியே அவனை மூச்சடைக்கச் செய்த அந்தப் பயத்தை ஒழித்துக் கட்ட அவனால் முடிந்த மட்டும் முயன்றான்.

திடீரென்று அவன் மனைவி அதிர்ச்சியுற்றுக் கத்துவதைக் கேட்டான். "மும்தாஜ் சாகீப்.... மும்தாஜ் சாகீப், சீக்கிரம் இங்கு வாருங்கள்" அவளின் குரலில் கலக்கத்தின் சாயல் இருந்தது.

சட்டென்று உதறிக் கொண்டு எழுந்து, வராண்டா விற்கு ஓடினான். அவனின் மனைவி குழந்தையை இறுக்க அணைத்துக் கொண்டு குளியலறை முன்பு மேலும் கீழும் நடந்து கொண்டிருந்தாள்.

"என்ன நடந்தது?" என்று கேட்டுக்கொண்டே அவளி டம் இருந்து குழந்தையை வாங்கிக் கொண்டான்.

மிகவும் பயந்து போயிருந்த அவனின் மனைவி, "எனக்கு ஒன்றும் தெரியவில்லை.... தண்ணீரை வாரி யிறைத்து விளையாடிக் கொண்டிருந்தான். அவனின் மூக்கைச் சுத்தம் செய்ய தூக்க முயன்ற போது அப்படியே கவிழ்ந்து விழுந்து விட்டான்" என்றாள்.

குழந்தை காற்றில் திரும்பி தந்தையின் கரங்களுக்கு வந்தபோது, குழந்தையின் உயிர்த் துடிப்பு வற்றி விட்டது போல இருந்தது.

அவன் முன்னே இருந்த கட்டிலில் காலித்தைப் படுக்க வைத்தான். இப்போது அவனும் அவனின் மனைவியும் மிகவும் கவலைப்பட்டார்கள். பெற்றோர் கள் செய்வதறியாமல் திகைத்துப்போய் நின்று கொண் டிருக்க, காலித் படுக்கையில் தூக்கிப் போடப்பட் டுப் புரண்டு கொண்டிருந்தான். ஒருவர் மாறி ஒருவர் குழந்தையை வாஞ்சையோடு வருடிக் கொடுத்தார்கள். முத்தம் கொடுத்தார்கள்; அணைத்துக் கொண்டார் கள். குழந்தையின் முகத்தில் தண்ணீர் தெளித்தார்கள். ஆனாலும் குழந்தை உயிரற்றது போல் கிடந்தான்.

சற்று நேரம் கழித்து தாக்குதல் குறைய, குழந்தை நினைவிழந்து படுத்திருந்தது. தன் மகன் இறந்து விட் டான் என்று நினைத்த மும்தாஜ் தன் மனைவியிடம், "நம்மைவிட்டு அவன் போய்விட்டான்" என்றான்.

தன்னை மிகவும் கட்டுப்படுத்திக் கொண்டு , "கட வுளுக்குப் புண்ணியமாகப் போகட்டும், இப்படிப் பெரிய தீர்க்கதரிசிபோல் பேசுவதை நிறுத்துங்கள். குழந் தைக்கு வலிப்பு வந்திருக்கிறது. அவன் சீக்கிரத்தில் சரி யாகிவிடுவான்" என்றாள்.

அந்த நொடியில் காலித் தன்னுடைய கறுத்த விழி களை அசதியோடு திறந்து தந்தையைப் பார்த்தான்.

மும்தாஜ், அவனுள் பெரும் நிம்மதி பாய்வது போல் உணர்ந்தான். உறைந்து போன அவனின் உலகம் மீண் டும் இயங்கத் தொடங்கியது. "காலித் பேட்டா, உனக்கு என்ன ஆச்சு?" என்று குழந்தையை அணைத்துக் கொண்டு முணுமுணுத்தான்.

குழந்தை காலித் பலமற்றுப் புன்னகைத்தான். மும் தாஜ் குழந்தையைத் தூக்கிக்கொண்டு உள்ளே சென் றான். அவன் குழந்தையைக் கட்டிலில் படுக்க வைத்து சரி செய்தபோது அந்தச் சிறு உடம்பு மீண்டும் வலிப்பால் தாக்கப்பட்டது. அது காக்கா வலிப்பு தாக்குவது போல் இருந்தது. அது தன்னையும் தாக்கியது போல் மும்தாஜ் உணர்ந்தான்.

இந்த இரண்டாவது தாக்குதலுக்குப் பிறகு காலித் மேலும் உயிரற்ற பொருளானான். கண்கள் அவனின் தலைக்குள் புதைந்து கொண்டது.

மும்தாஜ் படப்படப்போடு, "காலித் பேட்டா, என்ன ஆயிற்று என்று அப்பாவிடம் சொல்லு. பேட்டா! நீ குண மாகி பழைய நிலைக்கு வருவாயா? காலித், உனக்குக் கொஞ்சம் வெண்ணெய் கொடுக்கட்டுமா?" என்றான்.

காலித்துக்கு வெண்ணெய் என்றால் பிடிக்கும். ஆனால் அன்று அவன் அதற்கு எந்த எதிர்வினையும் காட்டவில்லை. பிறகு தந்தை மகனிடம் பால் வேண்

டுமா என்று கேட்டான். குழந்தை எல்லாவற்றையும் நிரா கரித்தது. அவன் தன் மகன் மீது கொண்ட அன்பு அனைத்தையும் ஒன்று திரட்டிக் குழந்தையை அள்ளி எடுத்து தன்னோடு அணைத்துக்கொண்டு, குழந்தை யைப் பார்த்துப் புன்னகைத்தான். பிறகு காலித்தைத் தன் மனைவியிடம் கொடுத்து விட்டு, "இவனைப் பார்த் துக்கொள். நான் மருத்துவரை அழைத்து வருகிறேன்" என்றான்.

அவன் மருத்துவரோடு திரும்பியபோது, அவனின் மனைவி மேலும் கவலை கொண்டு காணப்பட்டாள். குழந்தைக்கு மேலும் மூன்று முறை வலிப்பு வந்தது, இப் போது நினைவிழந்து கிடந்தான்.

மருத்துவர் குழந்தையை மிகக் கவனமாகப் பரிசோ தித்து, "இதில் கவலைப்பட ஏதும் இல்லை, இந்த வயதுக் குழந்தைகளுக்கு இது போல வலிப்பு வருவது சகஜம் தான். வழக்கமாகப் பல் முளைக்கத் துவங்கி னால் இதுபோல் இருக்கும். இல்லை , வயிற்றில் ஏதா வது பூச்சி இருக்கலாம். நான் மருந்து எழுதிக் கொடுக் கிறேன். மருந்து எடுத்துக்கொண்டால் நிச்சயம் முன் னேற்றம் இருக்கும். இதற்காக நீங்கள் கவலைப்பட வேண்டாம்" என்றார்.

அன்று மும்தாஜ் வேலைக்குப் போகவில்லை. நாள் முழுக்கத் தன் மகனோடவே கழித்தான்.

மருத்துவர் சென்ற பிறகு காலித்துக்கு மேலும் இரண்டு முறை வலிப்பு வந்தது. அவன் சற்றும் அசைவற் றுப் படுத்துக் கிடந்தான்.

மாலை வந்தபோது, 'கடவுள் நம் மீது இரக்கம் கொண் டுள்ளார். ரொம்ப நேரமாய் குழந்தைக்கு வலிப்பு வர வில்லை' என்று தனக்குள் நினைத்துக்கொண்டான்.

அவனின் மனைவியும் நிம்மதி கொண்டவளாக, "கட வுள் புண்ணியத்தில் என் குழந்தை நாளை சரியாகி விடு வான்" என்றாள்.

இரவில் காலித்துக்கு மருந்துகள் கொடுக்க வேண் டியிருந்ததால், படுத்தால் தூங்கிவிடுவோம் என்று மும் தாஜ் படுக்காமலேயே இருந்தான். அதற்காகத் தன் மகன் படுத்திருந்த கட்டிலுக்கு அருகில் நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு, மிகக் கவனமாகப் பார்த் துக்கொண்டான். காலித் நிலைகொள்ளாமல் அவஸ் தைப் பட்டுக்கொண்டிருந்தான். அவன்

தூக்கிப்போடப்பட்டு இப்படியும் அப்படியும் புரண்டு கொண்டே இருந்தான். மும்தாஜ் மகனின் உடலைத் தொட்டுப் பார்த்த போது ஜுரம் மிக அதிகமாக இருப் பதை உணர்ந்தான்.

காலையில் குழந்தையின் ஜுரம் 104 டிகிரியைத் தொட்டது. மருத்துவர் மறுபடியும் வந்தார். அவர் சொன் னது எல்லாம் இவ்வளவுதான்: "இதில் கவலைப்படுவ தற்கு ஏதும் இல்லை. இது காசநோய் சம்பந்தப்பட்டது. நான் மருந்து எழுதிக்கொடுக்கிறேன். அவனுக்குச் சீக் கிரத்தில் குணமாகிவிடும்"

மருத்துவர் மருந்துச்சீட்டை எழுதி முடித்த அந்த நொடியில், மருந்துகளை வாங்கிவர அவன் ஓடினான். தன்னுடைய மகனுக்கு முதல் வேளை மருந்தைக் கொடுத்தான். ஆனால் அவனுள் ஏதோ ஒன்று விசித்தி ரமாக அதிருப்தியை வெளிப்படுத்தியது. மருத்துவ நிபு ணரைப் பார்த்துவிடுவது என்று முடிவு செய்தான்.

மருத்துவ நிபுணர் வந்தார். அவர் குழந்தையைப் பரி சோதித்து விட்டு, "இதில் கவலைப்படுவதற்கு ஏதும் இல்லை. குழந்தை சீக்கிரத்தில் குணமாகிவிடுவான் " என்று நம்பிக்கை கொடுத்தார்.

ஆனாலும் காலித்தின் நிலையில் எந்த முன்னேற்ற மும் இல்லை. அந்த நிபுணர் கொடுத்த மருந்துகளால் எந்தப் பயனும் இல்லை. காலித்துக்குத் தொடர்ந்து மிக அதிகமாக ஜுரம் இருந்துகொண்டே இருந்தது.

வேலைக்காரன், "காலித் செல்லத்திற்கு ஒன்றுமே இல்லை. ஏதோ திருஷ்டி குழந்தை மீது விழுந்திருக்கி றது. அவனுக்காக மந்திரிக்கப்பட்ட தாயத்து ஒன்று என் னிடம் இருக்கிறது. அல்லாவின் அருளால் அவன் சீக்கி ரத்தில் குணமாகி விடுவான் " என்றான் மும்தாஜிடம்.

ஏழு கிணறுகளில் இருந்து கொண்டுவரப்பட்ட தண் ணீரில் அந்த மந்திரிக்கப்பட்ட தாயத்தை கரைத்து, அதை வடிகட்டி காலித்தைக் குடிக்க வைத்தனர். பக் கத்தில் குடியிருந்தவர் வந்து பார்த்து விட்டு யுனானி மருந்தைச் சிபாரிசு செய்தார். மும்தாஜ் அந்த மருந் தையும் வாங்கி வந்தாலும் காலித்துக்குக் கொடுக்க வில்லை. அன்று மாலை உறவினர் ஒருவர் வேறொரு மருத்துவரைத் தன்னோடு அழைத்து வந்தார். அந்த மருத்துவர் காலித்தைப் பரிசோதித்து விட்டு, "இது மலேரியா, இவ்வளவு ஜுரம் இருப்பது சகஜம்தான். நான் அவனுக்கு ஒரு ஊசி போடுகிறேன். அவன் நெற்றியில் ஈரத்துணியை வைத்து எடுங்கள்" என்றார்.

காலித்தின் நெற்றியில் ஈரத்துணி வைத்து எடுக் கப்பட்டது. ஜுரம் உடனடியாகக் குறைந்தது. அவனும் மனைவியும் நிம்மதிப் பெருமூச்சு விட்டார்கள். ஆனால் அந்த நிம்மதி குறுகிய நேரத்தில் நிலை குலைந்து போனது.

குழந்தையின் ஜுரம் மறுபடியும் கூடியது. மும்தாஜ் குழந்தையின் வாயில் வெப்பமானியை வைத்தான் - 106 டிகிரி இருந்தது.

பக்கத்தில் குடியிருந்தவர், மீண்டும் வந்தார். அவர் குழந்தையைப் பார்த்து அவன் மனைவியிடம் முகவாட்டத்தோடு, "குழந்தையின் கழுத்து தொங்கியிருக்கிறது" என்றார். அவனின் இதயம் முழுகியது. அவன் வீட்டிற்குக் கீழ் இருந்த தொழிற்சாலையில் இருந்து மருத்துவமனைக்குத் தொலைபேசி மூலம் தொடர்பு கொண்டான். ஒரு நிமிடம் கூட தாமதிக்கக்கூடாது என்று அவனிடம் சொல்லப்பட்டது. அவன் டோங்காவை வரவழைத்து, காலித்தைத் தன் மடியில் போட்டுக்கொண்டு, மனைவிக்கு அருகில் அமர்ந்து கொண்டான். டோங்கா மருத்துவமனை நோக்கி நகர்ந்தது.

எவ்வளவு தண்ணீர் குடித்துக்கொண்டிருந்தாலும் அவனின் தாகம் தணிய மறுத்தது. அவர்கள் மருத்துவமனைக்குப் போய்க் கொண்டிருந்த போது அவனின் தொண்டை மிக மோசமாக வறண்டு கிடப்பது போல் உணர்ந்தான். டோங்கா ஓட்டியை ஏதாவது ஒரு கடைக்கு முன்பு நிறுத்தச் சொல்லி, குடிப்பதற்கு ஏதாவது வாங்கிக் கொள்ளலாம் என்று நினைத்தான். ஆனால் திடீரென்று அவனுள் இருந்து ஒரு குரல், "உன் தாகத்தைத் தணித்துக் கொள்ளாதே, மீறினால் காலித் இறந்து போவான்" என்று கத்தியது.

அவன் சிகரெட் பற்ற வைத்து, இரண்டு முறை புகையை இழுத்து, விட்டெறிந்தான். அந்தக் குரல், "மும்தாஜ், புகை பிடிக்காதே. மீறினால் குழந்தை இறந்து போகும்" என்றது அவனிடம்.

அவன் டோங்கா ஓட்டியிடம் வண்டியை நிறுத்தச் சொல்லி ஒரு நிமிடம் சிந்தித்தான், 'எனக்கு என்ன ஆகி விட்டது. இதெல்லாம் என்னுடைய கற்பனையே தவிர வேறு எதுவும் இல்லை . நான் புகை பிடிப்பது எப்படி என் மகனின் உயிரோடு சம்பந்தப்பட்டிருக்க முடியும்?'.

அவன் டோங்காவில் இருந்து இறங்கி ஏறக்குறைய முழு வதுமாக இருந்த சிகரெட்டை எடுத்துக்கொண்டு மீண் டும் டோங்காவில் ஏறி அமர்ந்து கொண்டான். அவன் சிகரெட்டை வாயில் வைத்து, ஒரு பெரிய இழுப்பு இழுக்க இருந்த தருணத்தில், கண்ணுக்குப் புலப்படாத ஏதோ ஒரு சக்தி ஒன்று, 'வேண்டாம் மும்தாஜ் வேண் டாம் புகை பிடிக்காதே. நீ புகை பிடித்தால் காலித் இறந்து விடுவான்' என்று அவனைத் தடுத்து நிறுத் தியது போல் உணர்ந்தான். அவன் மீண்டும் சிகரெட் டைவிட்டெறிந்தான். டோங்கா ஓட்டி அவனை அழுத் தமாக முறைத்தான். டோங்கா ஓட்டி தன்னைக் கவ னித்துக்கொண்டிருப்பது போலவும் தன்னைப் பார்த்து நகைப்பது போலவும் மும்தாஜ் உணர்ந்தான். தன் செயலுக்கு விளக்கம் கொடுக்க வேண்டியிருப்பதை நினைத்து, எரிச்சலோடு டோங்கா ஓட்டியிடம், "சிகரெட் அணைந்து விட்டது" என்றான். பிறகு தன் சட்டைப் பையில் இருந்து சிகரெட் பெட்டியை வெளியே எடுத்து மற்றொரு சிகரெட்டை எடுத்தான். ஆனால் அதைப் பற்ற வைக்கும் துணிச்சல் அவனிடம் இல்லை . அவன் மிகவும் கலவரப்பட்டிருந்தான். அவனின் பிரக்ஞை அவன் முட்டாள்தனமாகச் சிந்திக்கிறான் என்று திரும் பத் திரும்பச் சொன்னது. ஆனால் அந்தக் குரல் மேலும் பலம் கொண்டு மிக உரக்க அவனின் பிரக்ஞையை வென்றெடுத்தது. அவனால் அதற்கு மேல் சிந்திக்க முடி யவில்லை. டோங்கா மருத்துவமனை வளாகத்திற்குள் நுழைந்தது. அவன் பிடித்திருந்த சிகரெட்டைக் கசக்கி விட்டெறிந்தான். இத்தனை மனிதர்களுக்கு மத்தியில் அவன் மட்டுமே அவனின் அதீத கற்பனைக்குப் பலி யாகிவிட்டான், என்று அவனுக்காக அவன் பரிதாபப்பட் டான்.

காலித் உடனடியாக அனுமதிக்கப்பட்டான். ஒரு மருத்துவர் குழந்தையைப் பரிசோதித்து விட்டு, "பிராங் கியல் நிமோனியா" என்ற முடிவுக்கு வந்தார். "குழந்தை மிக ஆபத்தான நிலையில் இருக்கிறான்" என்றார்.

காலித் நினைவிழந்த நிலையில் இருந்தான். மும்தா ஜின் மனைவி கட்டிலுக்கு அருகில் அமர்ந்து கொண்டு தன்னுடைய மகனை வெறித்துப் பார்த்துக் கொண்டி ருந்தாள்.

மும்தாஜ் வறண்டுபோய்க் கிடந்தான். வார்டுக்கு அடுத்தாற் போல் இருந்த குளியல் அறைக்குள் நுழைந்து குழாயைத் திறந்தான். அவன் தன் கைக ளைக் குவளையாக மாற்றியபோது, 'மும்தாஜ்! நீ என்ன செய்து கொண்டிருப்பதாக நினைத்துக்கொண்டிருக்கி றாய்? நீ தண்ணீர் குடிக்காதே. மீறினால் காலித் இறந்து போவான்' என்றது அந்தக் குரல்.

அவன் அந்தக் குரலைச் சபித்து விட்டு, வயிற்றில் நிரப்ப முடிந்த அளவிற்குத் தண்ணீர் குடித்தான்.

குளியலறையில் இருந்து அவன் வெளியே வந்த போது, அவனின் தாகம் தணிந்து இருந்தது. ஆனால் காலித் இன்னும் அசைவேதும் இல்லாமல் நினைவி ழந்து மருத்துவமனையின் இரும்புக் கட்டிலில் படுத் திருப்பதைக் கண்டான். அங்கிருந்து ஓடிப்போய் விட வேண்டும் போல் உணர்ந்தான். சிந்திக்கும் திறன் எல் லாம் அவனை அனாதையாக விட்டுவிட்டது போல் உணர்ந்தான். எல்லாமே உண்மைக்குப் புறம்பான தோற்றத்தையே கொடுத்தன. அவன் மகனின் நோயை அவன் எடுத்துக் கொள்ள முடிந்தால் எவ்வளவு நன் றாக இருந்திருக்கும். அவனின் மகன் பார்ப்பதற்கு முன் னைக் காட்டிலும் வலுவிழந்து இருந்தான். "நான் தண் ணீர் குடித்தது தான் காரணமாக இருக்க வேண்டும்.

ஐயோ! நான் ஏன் இவ்வளவு தண்ணீரைக் குடித்தேன்? ஒரு வேளை நான் இவ்வளவு பேராசையுடன் நடந்து கொள்ளாமல் இருந்திருந்தால் இந்நேரம் என் மகனின் நிலையில் முன்னேற்றம் இருந்திருக்கும்" அவன் தன் னையே கடிந்துகொண்டான். பிறகு, திடீரென்று வேறு யாரோதான் இத்தகைய அதீத கற்பனைகளுக்குப் பலி யாகிவிட்டது போல் உணர்ந்தான். 'அது யாராக இருக் கும் என்று எனக்கு விளங்கவில்லை. அது நானாக இருக்க முடியாது. எனக்குத் தாகமாக இருந்தது. அத னால் கொஞ்சம் தண்ணீர் குடித்தேன். அது எப்படி என் மகனின் உடல் நிலையைப் பாதிக்க முடியும்? காலித் ரொம்ப சீக்கிரத்தில் பழையபடி நல்ல நிலைக்கு வந்து விடுவான். இன்ஷா அல்லா, அவனின் பிறந்த நாளைத் திட்டமிட்டபடி கொண்டாடிக் கொள்ளலாம்'

ஆனால் அவன் இத்தகைய சிந்தனைகளை வடிவ மைத்துக் கொண்டிருக்கும் போதே அவனின் இதயம் சுருங்கியது. எதற்கும் விட்டுக் கொடுக்காத அந்தக் குரல், ஒரு வயதைப் பூர்த்தி செய்யும் வரை காலித் உயி ரோடு இருக்க மாட்டான்' என்றது. அவனுக்கு அந்தக் குரலின் கழுத்தை நெரித்து அதை நிரந்தரமாக அமை தியாக்கிவிட வேண்டும் என்பது போல் உணர்ந்தான்.

பிறகுதான் அவனுக்குத் தோன்றியது. அந்தக் குரல் அவன் கற்பனையின் ஒரு பகுதிதானே தவிர வேறு ஏதும் இல்லை. "ஐயோ கடவுளே! அது ஏன் என்னை இவ்வளவு இம்சைப்படுத்துகிறது" அவனால் இதற்கு மேலும் தாங்கிக் கொள்ள முடியாது என்ற முடிவுக்கு வந்து, அந்தக் குரலிடம் மன்றாடினான். "என் மீது இரக் கம் கொள். என்னைத் தனியே விட்டுவிடு. ஏன் என்னை இவ்வளவு இம்சைப்படுத்துகிறாய்?"

மாலை வந்தது. பல மருத்துவர்கள் காலித்தைப் பார்த்தார்கள். சிறு சிறு இடைவெளி விட்டு மருந்தும் ஊசியும் கொடுக்கப்பட்டது. ஆனாலும் காலித் தன் நினைவைத் திரும்பப் பெறவில்லை.

சற்றும் எதிர்பாராத விதமாய் அந்தக் குரல், மருத்துவமனையை விட்டு உடனடியாக வெளியேறு இல்லையென்றால் காலித் இறந்து விடுவான்' என்றது.

அவன் வார்டை விட்டு வெளியே ஓடினான். மருத்துவமனையை விட்டு வெளியே ஓடினான். அந்தக் குரலின் கட்டளைகளைக் கண்மூடித்தனமாகச் செயல்படுத்துவதை மட்டும்தான் அவனால் செய்ய முடிந்தது. அவன் அதன் அடிமையானான்.

அந்தக் குரல் அவனை ஒரு மதுக்கடைக்குள் நுழையும்படி கட்டளையிட்டது. குடிக்க ஏதேனும் கொண்டுவர வேண்டும் என்று சொல்லச் சொன்னது. குடிப்பதற்குக் கொண்டுவந்து வைக்கப்பட்டபோது, அந்தக் குரல் அதை விட்டெறியுமாறு உத்தரவிட்டது. அவன் அதை விட்டெறிந்தான். பிறகு அந்தக் குரல் மற்றொரு முறை குடிப்பதற்குக் கொண்டுவருமாறு சொல்ல உத்தரவிட்டது. மற்றொருமுறை குடிப்பதற்குக் கொண்டுவருமாறு சொல்லி அதையும் விட்டெறிந்தான் மதுவுக்கும், உடைந்த கண்ணாடிக் குவளைகளுக்கும் பணம் கொடுத்துவிட்டு மதுக்கடையை விட்டு வெளியேறினான். அவனின் மண்டைக்குள் அந்தக் குரல் வீறிட்ட போதெல்லாம் அவனைச் சுற்றிலும் இருந்த வெளியின் அமைதியால் சூழ்ந்து கொள்ளப்பட்டான்.

அவன் திரும்ப மருத்துவமனையை நோக்கி நடந்தான்.

மகன் இருந்த வார்டை நோக்கி அவன் நகர்ந்தபோது அந்தக் குரல், அங்கு போகாதே, போனால் உன் காலித் இறந்து விடுவான்' என்று கட்டளையிட்டது.

அவன் ஒரு பூங்காவில் நின்று, அங்கிருந்த நீளமான இருக்கையில் படுத்துக் கொண்டான்.

அப்போது பத்து மணி. திறந்தவெளிகறுத்துக் கிடந் தது. காற்று அமைதியாக இருந்தது. எங்கோ தொலை வில் எப்போதாவது ஒரு காரின் ஹாரன் சத்தம் அந்த அமைதியைக் கிழித்துச் சென்றது. மருத்துவமனைக் கட்டடத்தின் முகப்பில் இருந்த கடிகாரம் அவனுக்கு எதிரே பிரகாசமாக இருந்தது.

அவனால் காலித் பற்றி மட்டுமே சிந்திக்க முடிந்தது. "அவன் பிழைத்துக் கொள்வானா? இப்படி உன்னிடம் இருந்து பிடுங்கிக் கொண்டு போவதாக இருந்தால் ஏன் குழந்தை பெற்றுக் கொள்ள வேண்டும்? இந்த அற்ப ஆயுள் கொண்டிருப்பதில் என்ன பிரயோசனம் இருக்கி றது? எனக்குக் கண்டிப்பாகத் தெரியும் காலித்..."

அவன் மண்டைக்குள் அந்தக் குரல் வீறிட்டது. அவன் இருக்கையில் இருந்து எழுந்து நமஸ்காரம் செய்வது போல் தரையில் படுத்துக் கொண்டான். அந்தக் குரல், 'உன் மகன் குணமாகும் வரை எழுந்து கொள்ளாதே' என்றது.

அவன் அப்படியே கிடந்தான். அந்தக் குரல் அவனுக் குச் சாதகமாக ஏதேனும் செய்யும் என்று நம்பினான். ஆனால் அந்தக் குரல் மிகக் கண்டிப்பான தொனியில் ஏதும் கேட்கக் கூடாது என்று சொன்னது. அவன் கண் களில் இருந்து கண்ணீர் வழிந்தது. அவன் கேட்டுக் கொண்ட சலுகை அவனுக்கானது அல்ல, அவனின் மகனுக்காகத்தான். "ஐயோ கடவுளே! இந்தக் குரலிடம் இருந்து என்னைக் காப்பாற்று. கண்டிப்பாகத் தேவை

என்றால் என் மகனின் உயிரை எடுத்துக்கொள். ஆனால் தயவு செய்து என்னை இம்சைப்படுத்துவதை நிறுத்து"

புல் வெளியில் சற்றுத் தள்ளி சில பேச்சுக் குரல்கள் மிதப்பதைக் கேட்டான். மறுபக்கத்தில் இரண்டு மருத்துவர்கள் சிமெண்ட் இருக்கையில் உட்கார்ந்து கொண்டு யாரோ ஏதோ ஒரு நோயாளியைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

"எவ்வளவு அழகான குழந்தை"

"தாயால் இதைக் கொஞ்சமும் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. பாவப்பட்ட பெண்."

"ஆமாம். எந்த ஒரு மருத்துவரைப் பார்த்தாலும் மகனின் உயிரைக் கொடுங்கள் என்று கெஞ்சத் தொடங்குகிறார்"

"நம்மால் முடிந்ததை நாம் செய்து விட்டோம்".

"கடவுளிடம் பிரார்த்தனை செய்யுமாறு சொல்யிருந்தேன்"

பிறகு ஒரு மருத்துவர் அவன் இருந்த பக்கம் திரும்பிப் பார்த்தார். அவன் அப்போதும் தரையில் குப்புறப் படுத்துக் கிடந்தான்.

டாக்டர்கள் தன்னை அழைப்பதை அவன் கேட்டான். "ஏய் அங்க யாரு?... இங்க வா"

அவன் எழுந்து அவர்கள் இருந்த பக்கம் நகர்ந்தான்.

அவன் யார் என்று ஒரு மருத்துவர் கேட்டார்.

வறண்டு போன உதடுகளை நாக்கால் ஈரப்படுத்திக் கொண்டு, "நான் ஒரு நோயாளி" என்றான்.

அந்த மருத்துவர் கண்டிப்பான குரலில், "நீ நோயாளி என்றால் படுக்கையில் தானே இருக்க வேண்டும். இந்தத் திறந்தவெளியில் என்ன செய்து கொண்டிருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டார்.

"டாக்டர், என் மகன் அங்கு உள்ள வார்டில் அனுமதிக் கப்பட்டுள்ளான்"

"அவன் உன் மகனா?"

"ஆமாம். நீங்கள் அவனைப் பற்றிப் பேசிக்கொண்டி ருந்தீர்கள் இல்லையா? அவனின் பெயர் காலித்'

"அந்தக் குழந்தையின் தகப்பன் நீ தானா"

துயரத்தோடு தலையை ஆட்டி, "ஆமாம் டாக்டர். நான் தான் அந்தக் குழந்தையின் தகப்பன்" என்றான்.

"பிறகு இங்கு என்ன செய்து கொண்டிருக்கிறாய்? உடனடியாக வார்டுக்குப் போ. உன் மனைவி மிகவும் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறாள்"

"சரி டாக்டர்"

அவன் வேகமாக வார்டை நோக்கி ஓடினான். அவன் இரண்டு படி ஏறியிருப்பான், கன்னங்களில் கண்ணீர் வழிய வேலைக்காரன் வராண்டாவில் நின்று கொண்டி ருப்பதைப் பார்த்தான்.

வேலைக்காரன், அவன் மேலே வருவதைப் பார்த்தவுடன், "சாகிப், காலித் நம்மை விட்டு போய்விட்டான்" என்றான்.

அவன் வார்டுக்குள் நுழைந்தான். அவனின் மனைவி தரையில் நினைவிழந்து கிடந்தாள். ஒரு மருத்துவரும் தாதியும் அவளுக்கு நினைவு திரும்ப முயன்று கொண்டி ருந்தார்கள்.

அவன் காலித் கிடந்த கட்டிலுக்கு அருகில் வந்து நின் றான். காலித் அங்கு படுத்துக் கிடந்தான். கண்கள் மூடி யிருக்க அவனின் முகத்தில் இறந்தவர்களிடம் காணப்ப டும் நிச்சலனமான அமைதி பிரகாசித்துக் கொண்டிருந் தது.

அவன் இறந்து கிடந்த குழந்தையின் பட்டுப்போன்ற தலை முடியைத் தன் விரல்களால் கோதி விட்டு, இத யத்தைச் சுக்குநூறாக்கும் குரலில், "காலித் செல்லம், உனக்கு இனிப்புகள் ஏதும் வேண்டாமா?" என்று கேட் டான்.

காலித்தின் உயிரற்ற உடல் எந்த எதிர்வினையும் காட்ட மறுத்தது.

பிறகு அவன் தன் மகனிடம், "காலித் தயவு செய்து இந்தக் குரலை அழைத்துப் போவாயா?" என்று கெஞ்சி னான்.

காலித் தன் தலையை அசைத்து, சரி என்று சொன்ன தைக் கேட்டதாக அவன் சத்தியம் செய்தான்.

***



# அவமானம்

முழுமையாக அசதியுற்ற அவள் கட்டிலில் படுத்த உடனே உறங்கத் தொடங்கி விட்டாள். முனிசிபாலிட்டியின் சுகாதார இன்ஸ்பெக்டர் - அவளால் சேட் என்று அழைக்கப்பட்டவன், அவளின் உடலை மணிக்கணக்காகச் சூறையாடி விட்டு, குடிபோதையில் அப்போது தான் வீட்டிற்குக் கிளம்பிச் சென்றான். அவன் இரவு முழுக்க அவளோடு தங்கியிருக்கவே விருப்பம் கொண்டாலும், அவன் மீது அன்பு கொண்ட மனைவி அவனுக்காக வீட்டில் காத்திருப்பதால் கிளம்பிச் சென்றான்.

உடல் ரீதியான சித்திரவதைகளுக்காக அவள் பெற்ற பணம், அவளின் இரவிக்கைக்குள், சுகாதார இன்ஸ்பெக்டரின் எச்சிலோடு கலந்து துருத்திக் கொண்டிருந்தது. சில சமயங்களில் அவள் பெருமூச்சுவிடும் போது, நாணயங்கள் ஒன்றோடு ஒன்று உரசி எழுப்பிய சத்தம், அவளின் ஒழுங்கற்ற இதயத்துடிப்பு சத்தத்தோடு கலந்தது. அந்த நாணயங்கள் உருகி, அவளின் இதயத்தின் ரத்தத்தோடு கலந்து விட்டது போல, இதயத்தில் அசாத்திய எரிச்சலைக் கொண்டிருந்தாள் அவள். அதற்குப் பாதி காரணம் சுகாதார இன்ஸ்பெக்டர் கொண்டு வந்திருந்த அரை பாட்டில் பிராந்தி. சோடா தீர்ந்து விட்டதால் உள்ளூர் சாராயத்தை, தண்ணீர் கலந்து குடித்தது மிச்சக் காரணம்.

பெரிய தேக்குக் கட்டிலில் கவிழ்ந்து படுத்துக்கிடந்தாள். தோள் பட்டைவரை நிர்வாணமாய் இருந்த அவ

ளின் கைகள், பனியில் நனைந்த காற்றாடியிலிருந்து பிரிந்து வந்த பிரம்பு போல் இருந்தது. அவளின் இடது அக்குளில் கட்டியான சதை பிதுங்கிக் கிடந்தது. அடிக் கடி அங்குச் சவரம் செய்யப்பட்டதால் அது நீல நிறத் திற்கு மாறியிருந்தது. பார்ப்பதற்குக் கோழிக்குஞ்சின் தோலை உரித்தெடுத்து

அங்கு ஒட்ட வைத்தது போல் இருந்தது.

அது மிகச்சிறிய அறை. பல பொருட்கள் அறை எங் கும் தாறுமாறாய் இறைந்து கிடந்தன. கட்டிலுக்கு அடி யில் மூன்று நான்கு உலர்ந்து போன பழைய செருப்புகள் கிடந்தன. அதில் தன் தலையை வைத்து சொறி பிடித்த - கலப்பின நாய் ஒன்று படுத்துறங்கிக் கொண்டிருந்தது. அது உறங்கும் போது கண்ணுக்குப் புலப்படாத ஏதோ ஒன்றைப் பார்த்துக் கொண்டிருப்பது போல் தோன்றும். சொறி சிரங்கு வந்ததால், பல இடங்களில் அது தன் முடியை இழந்து, பார்ப்பதற்கு மடிக்கப்பட்ட தடித்த மிதி யடி போன்ற தோற்றத்தைக் கொடுத்தது.

ஒரு பக்கத்திலிருந்த சிறிய அலமாரியில், அழகு சாத னங்கள் - கன்னங்களைச் சிவப்பாக்கிக் காட்டும் கிரீம், உதட்டுச்சாயம், பவுடர், சீப்பு, கொண்டை போட்டுக் கொள்ளுவதற்கான பின்கள் கிடந்தன. ஒரு கொம்பில் கட்டப்பட்டு தொங்கிக் கொண்டிருந்த கூண்டில் ஒரு பச்சைக்கிளி தன் இறக்கைகளில் தலையை மறைத்து வைத்து உறங்கிக்கொண்டிருந்தது. கூண்டிற்குள் அழு கிய சாத்துக்குடித் தோலும், கொய்யாப்பழமும் சிதறிக் கிடந்தன. நாற்றமடித்துக்கொண்டிருந்த இவற்றின் மேல் கொசுக்களும், விட்டில் பூச்சிகளும் சுற்றிக் கொண்டி ருந்தன. கட்டிலுக்கு அருகில் ஒரு பிரம்பு நாற்காலி கிடந் தது. பயன்படுத்தப்பட்டதால் தலை வைக்கும் இடத்தில் மோசமாக அழுக்கேறிக் கிடந்தது. நாற்காலிக்கு வலது

பக்கத்தில், அழகான சிறிய மேசையில் எளிதாகத் தூக் கிச் செல்லக்கூடிய 'ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்' இசைத் தட்டுப் பெட்டி கிடந்தது. அதனை மூடியிருந்த கருப்புத் துணி படு மோசமான நிலையில் இருந்தது. துருப்பி டித்த அதன் ஊசிகள், அந்த சிறிய மேசையில் மட்டு மல்லாமல் அறை எங்கும் சிதறிக் கிடந்தன. மேசைக்கு மேல் நான்கு வெவ்வேறு மனிதர்களின் புகைப்படங் கள் சட்டம் போடப்பட்டுத் தொங்கிக் கொண்டிருந்தன. அந்த புகைப்படங்களுக்குச் சற்றுத் தள்ளி, வாயிற்படி அருகில் இடது பக்கத்தில் அடர்த்தியான வண்ணங் களில் 'கணேஷ்ஜி 'யின் படம் தொங்கிக்கொண்டிருந் தது. அதன் மேல் பூ வைக்கப்பட்டிருந்தது. சில வாடி யவை, சில புதியவை. (இந்தப்படம் துணிச்சுருளைச் சுற்றி இருந்ததிலிருந்து எடுக்கப்பட்டு சட்டம் போடப் பட்டிருக்க வேண்டும்). படத்திற்கு அருகில் எண்ணெய் வழிந்து கொண்டிருந்த சிறிய அலமாரியில் ஓர் எண் ணெய்க் கிண்ணமும், அதன் அருகில் ஓர் எண்ணெய் விளக்கும் இருந்தன. அதன் திரி, சாதி அடையாளத்தை நெற்றியில் போட்டுக்கொள்வது போல், காற்று இல்லாத தால், நேராக நின்று கொண்டிருந்தது. அந்தச் சிறிய அல மாரியில் பெரிதும் சிறிதுமாக உடைந்துபோன ஊதுபத் திகளும் கிடந்தன.

ஒவ்வொருநாளும் முதல் வருமானம் கிடைத்தவுடன், அதை கணேஷ்ஜி'யின் படத்திற்குத் தொலைவிலி ருந்தே காணிக்கையாய் வைத்துத் தன் நெற்றியில் ஒற் றிக்கொள்வாள். பிறகு அது அவளின் இரவிக்கைக்குள் சென்றுவிடும். அவளுக்குப் பெரிய மார்பகங்கள் இருந் ததால், இரவிக்கைக்குள் எவ்வளவு பணம் போட்டாலும் அது பத்திரமாய் இருந்தது. இருந்தாலும் பல சமயங்க ளில் மாது விடுமுறையில் புனேவில் இருந்து வந்தால், கொஞ்சம் பணத்தை மறைத்து வைக்க வேண்டி, கட்டி

லின் கால் ஒன்றிற்கு அடியில் இதற்காகவே சிறிய பள் ளம் தோண்டி, அதில் பணத்தை மறைத்து வைத்தாள். மாதுவிடமிருந்து பணத்தைப் பாதுகாக்க, சுகந்திக்கு இதைக் கற்றுக்கொடுத்தவன் அவளின் தரகர் ராம்லால் மாது புனேவில் இருந்து வந்து அவளின் பணத்தை எல் லாம் எடுத்துப் போகிறான் என்று கேள்விப்பட்டபோது, அவளிடம் "எப்போதிலிருந்து அந்தத் தேவடியா மவன் உன் காதலனாக மாறினான். இது விசித்திரமான காதல் விவகாரம். தன் பையிலிருந்து சல்லிக்காசு செலவு செய் யாததோடு, உன்னோடு சந்தோஷமாகவும் இருந்து விட் டுப் போகிறான். இத்தோடு நிற்காமல் உன்னிடமிருந்து பணத்தையும் எடுத்துப் போகிறான். நான் இந்தத் தொழி லில் ஏழு வருஷங்களாக இருக்கிறேன். உன்னைப் போன்ற பெண்களின் பலவீனங்களை நான் முழுமை யாக அறிவேன்" என்றான் ராம்லால். பிறகு, பம்பாயில் பத்து ரூபாயிலிருந்து நூறு ரூபாய் வரை பெண்களை ஏற்பாடு செய்து கொடுக்கும் ராம்லால், "என் பேச்சைக் கேள். முட்டாள் போல், பணத்தை எல்லாம் விரயம் ஆக் காதே. தாயோளி மவன் ஒரு நாள் நீ உடுத்தியிருக்கும் துணியைக் கூட எடுத்துச்சென்று விடுவான். கட்டிலின் காலுக்கடியில் ஒரு சின்ன பள்ளம் தோண்டி அதில் உன் பணத்தை வைத்துக்கொள். அவன் வந்தால், 'மாது, சத் தியமாக இன்று காலையில் இருந்து சல்லிக் காசைக் கூடப் பார்க்கவில்லை. சாப்பாட்டிற்குக் கூட கஷ்டப்பட் டுக்கொண்டிருக்கிறேன், இரானி டீக்கடையிலிருந்து டீயும் பிஸ்கட்டும் வாங்கித் தா' என்று சொல்!... புரிகிறதா? இப்ப எல்லாம் காலம் மோசமாக இருக்கும்மா. பாழாய்ப் போன இந்தக் காங்கிரஸ் மதுவிலக்குச் சட்டத்தைக் கொண்டு வந்து, நம் பிழைப்பைக் கெடுத்து விட்டது. உனக்கு ஒருவன் இல்லை என்றால் இன்னொருவன் என்று குடிக்க ஏதாவது கிடைக்கிறது. கடவுள் மீது சத்தி யமாகச் சொல்கிறேன். உன் வீட்டில் காலி புட்டிகளைப்

பார்க்கும் போதும், சாராயத்தின் வாசனையை நுகரும் போதும், நானும் உன்னைப்போல் வேசியாய் இருந்தால் நன்றாக இருக்கும் என்று நினைப்பதுண்டு" என்றான்.

தன்னுடைய உடம்பில் மார்பகங்களைத்தான் சுகந் திக்கு மிகவும் பிடித்திருந்தது. ஒரு முறை ஜமுனா அவளிடம், " இந்த உருண்டையான ஆப்பிளை அடி யிலிருந்து முட்டுக் கொடுத்துக் கட்டிக்கொள். நீ பிரா அணிந்தால் அது நேராக நிற்க உதவும்" என்றாள். சுகந்தி சிரித்தாள். "ஜமுனா, நீ எல்லோரையும் உன் னைப்போலவே என்று நினைத்துக்கொள்கிறாய். பத்து ரூபாய்க்காக அவர்கள் உன் சதையையெல்லாம் ஈவு இரக்கம் இன்றிப் பிடுங்கி எடுக்க அனுமதிக்கிறாய். அது போலவே மற்றவர்களுக்கும் நடக்கிறது என்று நினைத்துக்கொள்கிறாய்... எவனாவது என்னிடம் புத் திசாலியாய் நடந்து கொள்ளப் பார்க்கட்டும்... நேற்று என்ன நடந்தது என்று உன்னிடம் சொல்ல வேண்டும்... இரவு இரண்டு மணிக்கு ராம்லால், ஒரு பஞ்சாபியை அழைத்து வந்தான். அவன் கட்டிலுக்கு வந்தவுடன் நான் விளக்கை அணைத்தேன்... நீ அவனைப் பார்த் திருக்க வேண்டுமே... அவன் பயந்த பயம்... என்னை நம்பு. அறை முழுக்க இருட்டானவுடன், அவனுடைய பந்தாவெல்லாம் காணாமல் போனது... நான் சொன் னேன்: 'ஏன் எதுவும் செய்யமாட்டேன் என்கிறாய். இப் போது மணி மூன்றை நெருங்கிக்கொண்டிருக்கிறது. சீக் கிரத்தில் விடிந்துவிடும். சீக்கிரம்...' அவன் சொன்னான்: 'விளக்கு... விளக்கு...' அவன் மிரண்டு போனதைப் பார்த்து, என்னால் சிரிப்பை அடக்க முடியவில்லை. நான் சொன்னேன்: 'நான் விளக்கைப் போடப் போவ தில்லை...' அப்புறம் அவனின் சதைப்பிடித்த தொடை யைக் கிள்ளினேன். அவன் வலியால் குதித்தெழுந்து விளக்கைப் போட்டான். நான் உடனடியாக ஒரு

துணியை எடுத்து என்னைச் சுற்றிக்கொண்டு கத்தி னேன்: 'பொறுக்கி, நீ செய்வது உனக்கே அசிங்கமாக இல்லை'; அவன் கட்டிலுக்கு வந்தான். நான் பாய்ந்தெ ழுந்து மறுபடியும் விளக்கை அணைத்தேன். அவன் மறு படியும் பயம் கொள்ளத் தொடங்கினான். சத்தியமாகச் சொல்கிறேன், இரவு முழுக்க இப்படிச் சௌகரியமாகக் கழிந்தது... ஒரு கணம் விளக்கு எரிந்தது... ஒரு கணம் இருண்டு கிடந்தது.... ஒரு கணம் இருண்டு கிடந்தது... ஒரு கணம் விளக்கு எரிந்தது... டிராம் வண்டியின் போக் குவரத்துத் தொடங்கியவுடன் அவன் தன் டிரௌசரை அணிந்து கொண்டு வெளியேறினான். அந்தத் தேவடி யாமகன் முப்பது ரூபாயைச் சூதாட்டத்தில் சம்பாதித்தி ருக்கணும், இல்லை என்றால் இந்த இழப்பை அவ்வ ளவு எளிதாக ஏற்றுக்கொண்டிருக்க மாட்டான்... ஜமுனா நீ முட்டாள்... இது போன்ற மனிதர்களைக் கையாளுவ தற்கு நான் நிறைய தந்திரங்களை வைத்திருக்கிறேன்"

சுகந்திக்குப் பல தந்திரங்கள் தெரியும் தான். அவ ளின் தோழிகள் ஒரு சிலருக்கு அதைச் சொல்லி யும் இருக்கிறாள். உண்மையில், எல்லோரிடமும் அவள் அந்தத் தந்திரங்களைச் சொல்லியிருக்கிறாள். அதிகம் பேசாத மதிப்பிற்குரிய கனவான் வந்தால், அவனிடம் குறும்பாக நடந்து கொள், நிறுத்தாமல் பேசிக்கொண்டே இரு. அவனைக் கோபப்படுத்து; சீண்டிவிடு; அவனோடு விளையாடு... வந்தவனுக்குத் தாடியிருந்தால், உன் விரல்களை அதன் ஊடாகச் செலுத்தி ஓரிரு முடியைப் பிடுங்கிவிடு... பெரிய தொந்தியோடு ஒருத்தன் வந்தால் அதில் தாளம் தட்டு... அவன் எதையும் தொடங்குவதற் குச் சந்தர்ப்பமே கொடுக்காதே... அவன் சந்தோசமாய்ப் போய்விடுவான், நீயும் தப்பித்துக்கொள்வாய்... அமைதி யான சுபாவம் கொண்டவன் தான் ரொம்பவும் ஆபத்

தானவன்... சந்தர்ப்பம் கிடைத்தால் உன் எலும்புகளை உடைத்துவிடுவான்."

சுகந்தி தன்னை வெளிப்படுத்திக் கொண்டது போல, அவ்வளவு ஒன்றும் புத்திசாலி இல்லை. அவள் குறை வான வாடிக்கையாளர்களைத் தான் கொண்டிருந்தாள். அத்தோடு எளிதில் உணர்ச்சிவசப்படக்கூடிய பெண். அதனாலேயே அவளுக்குத் தெரிந்த தந்திரங்கள் எல் லாம், அவளின் மண்டையிலிருந்து வயிற்றுக்கு இறங்கி வந்து, குழந்தையாய்ப் பெற்றெடுக்கப்பட்ட பின், வயிற் றில் பல கோடுகளைக் கொடுத்தன. இதை முத லில் அவள் பார்த்த போது, அவளின் வெறி பிடித்த நாய் அதனுடைய நகங்களால் உருவாக்கியது என்று நினைத்தாள். யாரேனும் அந்த நாயைக் கண்டு கொள் ளாமல் கடந்து சென்றால், அது, தான் அவமானப்படுத் தப்பட்டதை மறைத்துக்கொள்ள, தரையில் பிறாண்டத் தொடங்கும்.

சுகந்தியின் தனித்தன்மையில் அவளின் உணர்வு களே பிரதானமாக ஆக்கிரமித்திருந்தன. எவனாவது ஒருவன் இனிமையாகப் பேசினால் போதும் அவள் உரு கிவிடுவாள். அவளின் மூளை மட்டும், ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே ஆன உடல் ரீதியான உறவு என்பது மேம்போக்கானது என்று கருதியது. ஆனால் அவள் உடலின் மற்ற பகுதிகள் அதற்காக ஏங்கின. அவ ளின் கை, கால்கள் அசதியுறவேண்டும் என்றது - அந்த அசதி அவள் மீது தூக்கத்தைத் திணிக்க வேண்டும், ஆழமான தூக்கம், சந்தோஷத்தைக் கொடுக்கும் தூக் கம், உணர்வுகளை மறக்கடிக்க வைக்கும் தூக்கம், ஓரி டத்தில் இருப்பது போன்ற உணர்வையும், இல்லாதது போன்ற உணர்வையும் கொடுக்கக் கூடிய தூக்கம். இத் தகைய உணர்வில் தான் - இருப்பது போன்ற உணர்வும், இல்லாதது போன்ற உணர்வும், வான்வெளியில் மிதந்து

கொண்டிருப்பது போலவும், சுற்றிலும் காற்று மட்டுமே சூழ்ந்திருப்பது போலவும் தோன்றும். அத்தகையச் சூழ் நிலையில் கழுத்து நெரிக்கப்படுவது கூட இன்பத்தைத் தரும்.

அவள் குழந்தையாய் இருந்தபோது, கண்ணாமூச்சி விளையாட்டில், அம்மாவின் பெரிய பெட்டிக்குள் ஒளிந்து கொள்வாள். விளையாட்டில் மாட்டிக்கொள் வோம் என்ற பயமும், பெட்டிக்குள் போதுமான காற்று இல்லாததால் மூச்சு அடைத்துக் கொள்ளும் என்ற பய மும் இணைந்து அவளின் இதயத்தை வேகமாக அடித் துக்கொள்ள வைக்கும். ஆனாலும் அந்த உணர்வு எவ் வளவு சந்தோசமானது!

சுகந்தி தன் வாழ்நாள் முழுக்க ஒரு பெட்டிக்குள் ளேயே காலம் கடத்த விரும்பினாள். அவளைக் கண் டுபிடிக்க முயலுபவர்கள், திரும்பத் திரும்பச் சுற்றி அவ ளைத் தேடிக்கொண்டே இருக்க வேண்டும். சில சம யங்களில் இவள் கண்டுபிடிக்கப்படுவாள். அவர்களைத் தேடி இவள் சுற்றிச் சுற்றி வருவதற்கு வாய்ப்பு ஏற்படுத் திக் கொள்வாள். கடந்த ஐந்து வருடங்களாக, அவள் வாழ்ந்துகொண்டிருக்கும் வாழ்க்கை கண்ணாமூச்சி விளையாட்டைத் தவிர வேறெதுவும் இல்லை. சில சம யங்களில், இவள் எவரையோ கண்டுபிடித்தாள். சில சமயங்களில் எவரோ இவளைக் கண்டுபிடித்தார்கள். இப்படியே நாட்கள் நகர்ந்தன. அவள் சந்தோஷமாக இருந்தாள் - சந்தோஷமாக இருக்க வேண்டும் என்ப தால். ஒவ்வோர் இரவும் இவன் அல்லது அவன் என்று எவனோ ஒருவன் அவளின் பெரிய தேக்குக் கட்டிலில் அவளோடு படுத்திருந்தான். ஆண்களைக் கையாளுவ தில் பல தந்திரங்கள் தெரியும் என்று அவள் பெருமைப் பட்டுக்கொள்வதை மீறியும், ஆண்களால் மோசமாக நடத்தப்பட்டதை அனுமதிக்க மறுக்கும் அவள் தீர்மா

னத்தை மீறியும், அவர்களை வியாபார ரீதியாகக் கையா ளத் தெரியும் என்ற எண்ணத்தை மீறியும் அவள் எப்போ தும் உணர்வுகளால் பலவீனப்படுத்தப்பட்டு, கவனிப் புக்காக ஏங்கும் பெண்ணாக மாறிவிடுவாள். ஒவ்வோர் இரவும் அவளின் பழைய மற்றும் புது வாடிக்கையா ளர்கள் அவளிடம் சொல்லுவதுண்டு: 'சுகந்தி! நான் உன்னைக் காதலிக்கிறேன்'. அவர்கள் பொய் சொல் கிறார்கள் என்று அவளுக்குத் தெரியும். இருந்தாலும் அவள் உருகிப்போய் அந்த மனிதன் உண்மையிலேயே தன்மீது காதல் கொண்டிருப்பதாக நினைத்துக் கொள் வாள். காதல்.... எவ்வளவு அழகான சொல்... அதை உருக்கி, அதனை உடல் முழுக்கப் பூசிக்கொள்ள வேண்டும் என்றும், அது அவளின் உடலில் உள்ள ஒவ் வொரு தசை துவாரத்திலும் நுழைய வேண்டும் என் றும் நினைத்தாள். அல்லது அதனுள் குதித்து, தன்னை முழுமையாய் மூழ்கடித்துக்கொண்டு மூடியை மூடிவிட நினைத்தாள். சில சமயங்களில் இந்தக் காதல் கொள் ளும் உணர்வோ , அல்லது காதலிக்கப்படும் உணர்வோ தீவிரமடையும்போது, அந்த மனிதனை அள்ளி எடுத் துத் தன் மடியில் படுக்க வைத்து, தட்டிக்கொடுத்து, தாலாட்டுப் பாடி உறங்க வைக்க விரும்பினாள்...

அவளிடம் வரும் எந்த ஆணையும் காதல் கொள்ளும் அளவுக்கு, அவளிடம் அந்த உணர்வு அத்தனை தீவி ரத்தோடு ஆக்கிரமித்திருந்தது. அந்தக் காதலை அவள் தக்கவைத்துக்கொள்வாள். எதிரே சுவரில் தொங்கிக் கொண்டிருக்கும் அந்த நான்கு ஆண்களின் புகைப் படங்கள், அந்த உணர்வை, அவள் தக்கவைத்துக் கொண்டிருப்பதால் தான்.

அவள் நல்லவள் என்ற உணர்வு அவளின் இதயத் தில் எப்போதும் நிலைத்து நின்றது. ஆனால் ஆண் கள் ஏன் நல்லவர்களாக இல்லை? இதற்கு அவ

ளால் எப்போதும் விடை கண்டுபிடிக்க முடியவில்லை. ஒரு முறை கண்ணாடியில் அவள் தன்னைப் பார்த்துக் கொண்டிருந்தபோது. திடீரென்று இப்படிச் சொன்னாள்: "சுகந்தி... இந்த உலகம் உன்னை நல்லமுறையில் நடத் தவில்லை"

இந்த ஐந்து வருடகாலம் - பகலும், இரவும் நிறைந்த இந்த ஐந்து வருடகாலம், அவளின் வாழ்க்கையிலிருந்து பிரிக்க முடியாதது. இந்தக் காலங்கள் அவள் ஏங்கிய சந்தோஷத்தைக் கொடுக்கவில்லை என்றாலும், இப் போது இருப்பது போலவே, மிச்சவாழ்க்கையும் போக வேண்டும் என்று விரும்பினாள். பணத்தின் பின்னால் போவதற்கு நான் மாளிகை ஏதும் கட்ட வேண்டாம்.' என்று அவளுக்குள் சொல்லிக்கொள்வாள். அவளுக் கான விலை பத்து ரூபாய். அதில் இரண்டரை ரூபாய் தரகர் ராம்லாலுக்கு அவனின் பங்காய்ச் சென்றுவிடும். மிச்சமிருக்கும் ஏழரை ரூபாய் அவளின் தேவைகளுக் குப் போதுமானதாய் இருந்தது. அவள் ஒண்டிக் கட் டைதானே. மாது புனேயில் இருந்து வந்தால் - ராம் லால் வார்த்தைகளில் சொல்வதென்றால், அவள் மீது படையெடுத்து வந்தால், அவனுக்காகப் பத்துப் பதி னைந்து ரூபாய் செலவு செய்தாள். இந்தப் பணத்தை அவள் செலவு செய்யக் காரணம், அவனிடம் இருந்த ஏதோ ஒன்று அவளைச் சுற்றி வளைத்துக் கிடந்தது. அதையேன் மறைக்க வேண்டும்? அதை ஏன் அனுப விக்கக் கூடாது?... சுகந்தி மாதுவை முதன் முறையாகச் சந்தித்தபோது, "இதுபோல பேரம் பேசுவதற்கு உனக்கு அவமானமாக இல்லையா? என்னிடம் நீ எதற்கு பேரம் பேசுகிறாய் என்று உனக்குத் தெரியுமா? நான் ஏன் உன்னிடம் வந்தேன்? கேவலம்... பத்து ரூபாய், அதுவும் அதில் இரண்டரை ரூபாய் நீ சொல்வது போல தரக ருக்குப் போகிறது. மிச்சமிருப்பது ஏழரை ரூபாய். அந்த

ஏழரை ரூபாய்க்கு உன்னால் கொடுக்க முடியாத ஒன்றைக் கொடுக்கிறேன் என்று உறுதியாய்ச் சொல்கிறாய். என்னால் எடுத்துக்கொள்ள முடியாத ஒன்றை எடுத்துக்கொள்ள நான் வந்திருக்கிறேன். எனக்கு இப்போது ஒரு பெண் தேவைப்படுகிறாள், ஆனால் உனக்கு இப்போது ஒரு ஆண் தேவைப்படுகிறானா? எனக்கு எந்தப் பெண்ணாக இருந்தாலும் பரவாயில்லை. ஆனால் ஒரு ஆணாக என்னை உனக்குப் பிடித்திருக்கிறதா? உனக்கும் எனக்கும் இடையே உள்ள உறவுதான் என்ன? ஒன்றுமில்லை. ஒன்றுமேயில்லை... உனக்கும் எனக்கும் இடையில் குலுங்கிக் கொண்டிருப்பது, வெறும் பத்து ரூபாய்தான் - அதுவும் அதில் இரண்டரை ரூபாய், தரகருக்குப் போக மிச்சம் இங்கே அங்கே என்று சிதறிக் கிடக்கும். இந்தப் பத்து ரூபாய் குலுங்கிக்கொண்டிருக்கும் சத்தத்தை நீயும் கேட்கிறாய், நானும் கேட்கிறேன். நீ ஒன்றை நினைத்துக்கொண்டிருக்கிறாய், நான் ஒன்றை நினைத்துக்கொண்டிருக்கிறேன். உன்னுடைய தேவையை நான் பூர்த்தி செய்வது போலவும், என்னுடைய தேவையை நீ பூர்த்தி செய்வது போலவும். நாம் ஏன் ஏதாவது செய்யக்கூடாது? நான் புனேவில் ஏட்டாக இருக்கிறேன். நான் மாதம் ஒருமுறை மூன்று அல்லது நான்கு நாட்கள் வருவேன்... இந்தத் தொழிலை விட்டுத் தொலை... உன் தேவைகளுக்கு நான் பணம் அனுப்புகிறேன்... இந்த அறைக்கு வாடகை எவ்வளவு?" என்றான்.

மாது இன்னும் நிறையப் பேசினான். இவை எல்லாம் சுகந்தியிடம் மிக ஆழமான பாதிப்பை ஏற்படுத்த, ஒரு கணம் ஏட்டின் மனைவியாகத் தன்னைக் கற்பனை செய்து பார்த்தாள். அவளிடம் பேசி முடித்த பிறகு, மாது அறை முழுக்கத் தாறுமாறாய்ச் சிதறிக்கிடந்த பொருட்களை ஒழுங்குப்படுத்தத் தொடங்கினான். சுகந்தியின் கட்டிலுக்கு மேல் தொங்கிக் கொண்டிருந்த நிர்வாணப்

படத்தை, அவளைக் கேட்காமலேயே கிழித்து எறிந் தான். அவளிடம், "சுகந்தி இதுபோன்ற படங்கள் இங்கு இருப்பதை நான் அனுமதிக்க மாட்டேன்...இந்தத் தண் ணீர் பானையைப் பார், எவ்வளவு அழுக்காக இருக்கி றது... அப்புறம் இந்தக் கந்தல்... நீயே பார் எவ்வளவு நாற்றம் அடிக்கிறது, இதையெல்லாம் தூக்கி வெளியே போடு... அப்புறம் உன் தலைமுடியைப் பார், எவ்வளவு அழுக்காய் இருக்கிறது... அப்புறம்... அப்புறம்..." என் றான்.

மூன்று மணிநேரம் ஒருவரோடு ஒருவர் பேசிய பிறகு, சுகந்தியும் மாதுவும் மிகவும் நெருக்கமானார்கள். ஏட்டைப்பலவருடங்களாக அறிந்தது போல், சுகந்தி உணரத் தொடங்கினாள். இதுவரை அழுக்கடைந்த தண்ணீர்ப்பானையையோ, நாற்றம் அடித்த கந்தல் துணிகளையோ, நிர்வாணப்படத்தையோ எவனுமே கவனித்தது இல்லை. அத்தோடு இதுவரை இதுதான் அவளின் வீடு என்றும், இதை வீடு போல் வைத்தி ருக்க முடியும் என்றும் எவனுமே அவளுக்கு உணர வைத்தது கிடையாது. ஆண்கள் வந்தார்கள், அழுக்கே றிய படுக்கையைக் கூட கவனியாமல் வெளியேறினார் கள். யாரும் அவளிடம், இங்க பார் சுகந்தி, இன்று உன் மூக்கு ரொம்பச் சிவந்து கிடக்கிறது. ஜாக்கிரதையாக இரு. இல்லை என்றால் சளி பிடிக்கும்... இரு... நான் போய் உனக்கு ஏதாவது மருந்து வாங்கி வருகிறேன்' என்று சொன்னது கிடையாது. மாது எவ்வளவு நல்ல வனாக இருக்கிறான்... எவ்வளவு வெளிப்படையாகவும், நேர்மையாகவும் இருக்கிறான். சுகந்தி முதல் முறையாக அவனைச் சந்தித்தபோது, கண்டித்ததை நினைவுகூர்ந் தாள்.... மாது தனக்குத் தேவை என்று அவள் உணரத் தொடங்கினாள். இருவரும் இதனாலேயே நண்பர்கள் ஆனார்கள்.

புனேவிலிருந்து மாதத்திற்கு ஒருமுறை என்று மாது வந்து போகும்போது, "இங்க பார் சுகந்தி, நீ உன் தொழிலை மறுபடியும் தொடங்கினால் நீயும் நானும் நண்பர்களாக இருக்க முடியாது. இனி ஒரே ஒரு முறை நீ எந்த ஆணையாவது இந்த அறைக்குள் நுழையவிட்டால், உன் மயிரைப் பிடித்திழுத்து இந்த வீட்டை விட்டு வெளியே தூக்கியெறிவேன். நான் புனே போய்ச் சேர்ந்தவுடன், உன் மாதச் செலவுக்கான பணத்தை மணி யார்டர் மூலம் அனுப்பிவைக்கிறேன்... ஆமாம், இந்த அறைக்கு எவ்வளவு வாடகை?"

மாது புனேவிலிருந்து பணமும் அனுப்பியதில்லை, சுகந்தி தன் தொழிலை நிறுத்தியதும் இல்லை. என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று இருவருக்கும் தெரிந்து தான் இருந்தது. சுகந்தி மாதுவிடம், 'நீ என்ன முட்டாள் தனமாய்ப் பேசிக்கொண்டிருக்கிறாய்? ஒரு நயாபைசா நீ எனக்குக் கொடுத்திருக்கிறாயா?' என்று கேட்டதும் இல்லை , மாதுவும் சுகந்தியிடம், 'உனக்கு நான் பணம் ஏதும் அனுப்பாதபோது எங்கிருந்து இந்தப் பணம் எல்லாம் உனக்குக் கிடைக்கிறது? என்று கேட்டதுமில்லை. இருவரும் பொய்யர்கள். இருவரும் நம்பத் தகுந்தது போன்ற உலகில் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். ஆனாலும் சுகந்தி சந்தோஷமாக இருந்தாள். தங்கத்தை அணியக்கூடாது என்று விதிக்கப்பட்டவர்கள், கவரிங் நகைகள் தானே அணிய முடியும்?

அந்தச் சமயத்தில் சுகந்தி பெரும் அசதியில் உறங்கிக் கொண்டிருந்தாள். அவளின் தலைமேல் தொங்கிக்கொண்டிருந்த விளக்கை அவள் அணைக்க மறந்ததால் இன்னும் எரிந்து கொண்டிருந்தது. அதன் பிரகாசமான ஒளி அவளின் கண்களைத் தாக்கியது. ஆனாலும் அவள் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தாள்.

அறையின் கதவு தட்டப்பட்டது.... இரவு இரண்டு மணிக்கு யாராக இருக்கும்? சுகந்தியின் காதுகளில் அந்தச் சத்தம் மிக மெல்லியதாகப் பாய்ந்தது. கதவு தட் டப்படும் சத்தம், அதிகமானதுடன் திடுக்கிட்டு எழுந்து கொண்டாள். இரண்டு மது வகைகளும், அவளின் பற் களில் சிக்கியிருந்த மீன் துண்டுகளும் ஒன்று சேர்ந்து, அவளின் எச்சிலை அடர்த்தியாகவும் புளித்து துர்நாற்ற மெடுப்பதாகவும் ஆக்கியிருந்தது. அது அவளின் உதட் டோரத்தில் வழிந்தது. அவள் அணிந்திருந்த லுங்கியில் அதைத் துடைத்துக்கொண்டு, தன் கண்களைக் கசக் கிக்கொண்டாள். அவள் கட்டிலில் தனித்துக்கிடந்தாள். குனிந்து கட்டிலுக்கடியில் பார்த்தாள். அவளின் சொறி பிடித்த நாய் உலர்ந்து போன செருப்புகள் மீது தலை வைத்து, கண்ணுக்குப் புலப்படாத ஏதோ ஒன்றைப் பார்ப்பது போல முகத்தை வைத்து உறங்கிக் கொண் டிருந்தது. பச்சைக்கிளியும் உறங்கிக்கொண்டிருந்தது - அதன் சிறகுகளில் தலையை மறைத்துக்கொண்டு.

மறுபடியும் கதவு தட்டப்பட்டது. சுகந்தி படுக்கையில் இருந்து எழுந்தாள். அவளுக்குப் படுமோசமான தலை வலி. பானையில் இருந்து கொஞ்சம் தண்ணீரை எடுத்து வாயைக் கொப்பளித்தாள். பிறகு ஒரு முழுக் குவளை தண்ணீர் குடித்து விட்டு, கதவைக் கொஞ்சம்போல் திறந்தாள்.

“ராம்லால்...!"

கதவை இத்தனை நேரம் தட்டியதால் சோர்வுற்ற ராம்லால், "பிணம் போலவா தூங்கிக்கொண்டிருப்பாய்? நான் ஒரு மணி நேரமாய்க் கதவைத் தட்டிக்கொண்டி ருக்கிறேன். உனக்கு என்னதான் அப்படி இழவு நடந் தது?" என்று எரிச்சலோடு கத்தினான். பிறகு தன் குரலைத் தாழ்த்தி, "உள்ளே யாரும் இல்லை என்று

நினைக்கிறேன்" என்றான். சுகந்தி தனியாக இருப்பதாகச் சொன்னவுடன் ராம்லால் மறுபடியும் தன் குரலை உயர்த்தினான். "பிறகு ஏன் கதவைத் திறக்கவில்லை ?... இது தான் உன் எல்லை .... அப்படி என்ன தூக்கம் உனக்கு? ஒவ்வொருத்தியிடமும் நான் இரண்டு மணி நேரம் செலவு செய்தால், நல்ல வியாபாரம் தான் நான் செய்ய முடியும்... என்னை ஏன் அப்படிப் பார்த்துக் கொண்டு நிற்கிறாய்? போய்ப் புடவையை - பூப்போட்ட அந்தப் புடவையைக் கட்டிக்கொண்டு வா. கொஞ்சம் பவுடரும் போட்டுக்கொள்... நீ என்னோடு வந்தாக வேண்டும். வெளியே சேட்டு உனக்காக அவரின் காரில் காத்துக் கொண்டிருக்கிறார்... சீக்கிரம் கிளம்பு"

சுகந்தி பிரம்பு நாற்காலியில் அசதியோடு உட்கார்ந்து கொள்ள, ராம்லால் அவளின் தலையைக் கண்ணாடிக்கு முன்னால் சீவி விடத் தொடங்கினான்.

சுகந்தி சிறு மேசை பக்கம் தன் உடலை நீட்டி, அதில் இருந்த தைலத்தை எடுத்தாள். மூடியைத் திறந்து, "ராம்லால்! எனக்கு இன்று உடம்பு சரியில்லை" என்றாள்.

ராம்லால் சீப்பை அலமாரியில் தூக்கிப் போட்டு, அவள் பக்கம் திரும்பி, "ஏன் இதை நீ முன்பே சொல்லவில்லை?" என்று கேட்டான்.

தைலத்தை முன் நெற்றியிலும், நெற்றிப்பொட்டிலும் தேய்த்துக் கொண்டு, ராம்லால் தவறாகப் புரிந்து கொண்டிருப்பதைச் சரி செய்தாள். "அது இல்ல ராம்லால்.... உடம்பு ஒரு மாதிரி இருக்கிறது. நேற்றிரவு நிறையக் குடித்துவிட்டேன்"

ராம்லால் வாயில் எச்சில் ஊறியது. "ஏதாவது மிச்சமிருந்தால் என்னிடம் கொடு நானும் அது எப்படி இருக்கிறது என்று பார்க்கிறேன்."

சுகந்தி தைலத்தை மீண்டும் சிறிய மேசையில் வைத்தாள். "கொஞ்சம் மிச்சமிருந்திருந்தால், இவ்வளவு மோசமான தலைவலியில் நான் அவஸ்தைப் பட்டுக்கொண்டிருக்க மாட்டேன்... இங்க பாரு ராம்லால், வெளியே கார்ல உட்கார்ந்திருக்கிற அந்த மனுஷன. அவனை ஏன் இங்கு அழைத்து வரக் கூடாது?" ராம்லால் பதில் தந்தான் : "முடியாது. அவரால் இங்கு வர முடியாது. அவர் மிகவும் கண்ணியமான மனிதர். இந்தச் சந்தில் காரை நிறுத்தக்கூட அவர் மிகவும் பயப்பட்டார். உன் உடையை மாற்றிக்கொண்டு, என்னோடு சந்து முனைக்கு வா... எல்லாம் சரியாகிப் போகும்"

இது வெறும் ஏழரை ரூபாய் சம்பந்தப்பட்டது. இந்த நிலையில் - இவ்வளவு மோசமான தலைவலியில், சுகந்தி நிச்சயமாக இந்த ஏற்பாட்டிற்குச் சம்மதித்திருக்க மாட்டாள். ஆனால் அவளுக்கு அவசரமாகப் பணம் தேவைப்பட்டது. பக்கத்து அறையில் இருந்த ஒரு மதராஸி பெண்ணின் கணவர் மீது கார் ஒன்று ஏறிவிட்டது. அந்தப் பெண் அவசரமாக மெட்ராஸ் போய் ஆக வேண்டும். புனேயில் இருந்து வருபவனைத் தான் எதிர்பார்த்துக் கொண்டிருப்பதாகவும், அவனிடமிருந்து கடன் வாங்கி, அவள் புறப்பட ஏற்பாடு செய்வதாகவும் நேற்று தான் உறுதி அளித்திருந்தாள்.

மாது புனேவிலிருந்து வரும் சமயம் தான். ஆனால் பணத்திற்குச் சுகந்திதான் ஏற்பாடு செய்தாக வேண்டும். அதனால் அவள் எழுந்து உடைகளை மாற்றிக்கொள்ளத் தொடங்கினாள். ஒரு சில நிமிடங்களில் அவள் பூப் போட்ட புடவையை அணிந்து கொண்டு, கன்னத்தில் கொஞ்சம் போல் கிரீம் பூசிக்கொண்டு, கழுத்தில் பவுடர் போட்டுக்கொண்டாள். பிறகு கொஞ்சம் தண்ணீர் குடித்துவிட்டு ராம்லாலோடு படியிறங்கினாள்.

சிறு நகரங்களில் இருக்கும் பஜார் தெருக்களைக் காட்டிலும் சற்று அகலமான அந்தச் சந்து, முற்றிலும் அமைதியாய் இருந்தது. கம்பங்களில் பொருத்தப்பட்டி ருந்த காஸ் விளக்குகள், வழக்கத்தை விட மங்கலான வெளிச்சத்தைக் கொடுத்தன. போர் காரணமாக விளக் குகளின் பிரகாசம் கொஞ்சம் மங்கலாக்கப்பட்டிருந்தது. அந்த மங்கலான வெளிச்சத்தில், அந்தச் சந்தின் மறு கோடியில் ஒரு கார் நின்று கொண்டிருப்பதைப் பார்க்க முடிந்தது.

இந்த இரவின் கடைசிப் பகுதியில், முற்றிலுமான அமைதியில், காரின் நிழலைப் பார்த்த போது தனக்கு இருந்த தலைவலி அந்தப் பகுதி முழுவதுக்கும் பரவி விட்டது போல் சுகந்தி உணர்ந்தாள். பிராந்தியும், உள் ளூர் சாராயமும் கலந்து காற்றும், புளித்த துர்நாற்றத்தை வீசிக் கொண்டிருப்பதாக உணர்ந்தாள்.

ராம்லால் முன்னே போய் காரில் அமர்ந்திருந்த அந்த மனிதனிடம் ஏதோ பேசினான். அதே சமயத் தில் சுகந்தியும் காருக்கு அருகாமையில் வர, அவளைக் காண்பித்து, "இதோ இவள் தான் ஃபர்ஸ்ட் கிளாஸ் பொண்ணு . சமீபத்தில் தான் தொழிலில் சேர்ந்தாள்" என்று சொல்லி, அவள் பக்கம் திரும்பி, "இந்தப் பக்க மாக வா சுகந்தி. சேட் உன்னைக் கூப்பிடுகிறார்" என் றான்.

சுகந்தி முன்னே வந்தாள், தன் புடவை முந்தா னையின் ஒரு முனையைத் தன் விரல்களில் சுற்றிக் கொண்டு, கார் கதவருகே நின்றாள். சேட் அவன் கையிலிருந்த டார்ச் வெளிச்சத்தை அவளின் முகத்தை நோக்கிப் பாய்ச்சினான். ஒரு நிமிடம் டார்ச்சிலிருந்து பாய்ந்த ஒளி, போதையேறியிருந்த அவளின் கண்க ளைக் குருடாக்கியது. பிறகு டார்ச்விளக்கு அணைக்கப்

படும் சத்தம் கேட்டது. மீண்டும் அங்கு இருட்டு பரவியது. அதோடு சேட்டின் வாயிலிருந்து 'ந்நோ!' என்ற சத்தம் வெளியேறியது. காரின் இன்ஜின் இயக்கப்பட்டு, ஒரு சில வினாடிகளுக்குள் அது தன் முழு வேகத்தை எடுத்தது.

சுகந்தி என்ன நடந்தது என்று சிந்திப்பதற்குள் கார் வேகமாகப் புறப்பட்டுப் போனது. டார்ச் ஒளியின் பிரகாசம் இன்னும் அவளின் கண்களில் இருந்தது. அவளால் சேட்டின் முகத்தைக் கூட ஒழுங்காகப் பார்க்க முடியவில்லை. என்னதான் நடந்தது? அவளின் காதுகளில் இன்னும் ஒலித்துக்கொண்டிருந்த 'ந்நோ!' சத்தம் என்ன சொல்கிறது?... அப்போது ராம்லாலின் குரல் கேட்டது. "உன்னைப் பிடிக்கவில்லை... சரி, நான் கிளம்ப வேண்டும்... இரண்டு மணி நேரம் கொஞ்சமும் பிரயோசனம் இல்லாமல் போனது..."

இதைக் கேட்டவுடன், அவளின் கைகால்கள் மற்றும் மண்டையில் வினோதமான உணர்வு பாய்ந்ததை உணர்ந்தாள். " அந்தக் கார் எங்கே?.. அந்தச் சேட்டு எங்கே?. அப்போ அந்த 'ந்நோ'க்கு என்னைப் பிடிக்கவில்லை என்று அர்த்தம்.." கெட்ட வார்த்தைகள் அவளின் அடி வயிற்றிலிருந்து புறப்பட்டு உதடுகளில் சிக்கிக்கொண்டது. அவளால் யாரைத் திட்ட முடியும்? அந்தக் கார் போய்விட்டது. அதன் பின்பகுதியின், சிவப்பு விளக்கு கருமையில் முழுகிக்கொண்டிருந்தது. காரின் சிவப்பு விளக்குகள், எரிந்து கொண்டிருக்கும் கரித்துண்டாய் அவளின் இதயத்தைத் துளைத்துக் கொண்டிருப்பது போல உணர்ந்தாள். சுகந்திக்குக் கத்த வேண்டும் போல் இருந்தது.... 'உன் காரை நிறுத்து சேட்டு... ஒரே ஒரு நிமிடத்திற்கு ' ஆனால் அந்தச் சேட்டு போய்விட்டான்... ரொம்ப தொலைவிற்கு. கடவுள் அவனைச் சபிக்கட்டும்.

சுகந்தி வெறிச்சோடிக் கிடந்த பஜாரில் தனித்து நின்று கொண்டிருந்தாள். மிக முக்கியமான விசேஷங்களுக்கு மட்டுமே அவள் அணிந்து கொள்ளும் அந்தப் பூப் போட்ட புடவை, இரவுக் காற்றில் படபடத்துக்கொண் டிருந்தது. சுகந்திக்கு இது எரிச்சலைக் கொடுத்தது. அதன் சத்தம் சேட்டின் 'ஓ...!' போல இருந்தது. அவளுக் குப் புடவையைச் சுக்கு நூறாகக் கிழித்துப் போடவேண் டும் போல் தோன்றியது.

சுகந்தி கன்னத்தில் கிரீமும், உதட்டில் சாயமும் பூசி யிருந்தாள். இதை எல்லாம் செய்வது தன்னை அழ காகக் காட்டிக் கொள்ளத்தானே என்று உணர்ந்த போது, அவமான உணர்வால் தாக்கப்பட்டு, அவளுக்கு வியர்த்துக் கொட்டியது. இந்த அவமான உணர்வை எதிர்கொள்ள அவள் நினைத்தாள். அந்தத் தேவடியா மகனுக்காக நான் என்னை அழகு படுத்திக்கொள்ள வில்லை. நான் அழகாக இருக்க வேண்டும் என்பதற்கா கத்தான் என்னை அழகு படுத்திக்கொண்டேன்.... இது என் பழக்கம். நான் மட்டும் இல்லை, எல்லோரும் தங் களை அலங்கரித்துக் கொள்கிறார்கள். ஆனால் இந்த இரவு நேரத்தில்?.. அதுவும் இரண்டு மணிக்கு?... அப்புறம் தரகர் ராம்லால்?... பஜார்... அப்புறம் கார்... டார்ச் விளக் கின் ஒளி...'. இவை எல்லாம் அவள் நினைவில் இருந் தது. திட்டுத் திட்டாக ஒளி அவள் கண்களில் மிதந்து கொண்டிருந்தது. காற்றின் ஒவ்வோர் அசைவிலும் கார் இஞ்ஜின் இயக்கப்படும் சத்தத்தைக் கேட்டாள்.

அவள் தன்னை அலங்கரித்துக்கொண்டபோது நெற் றியில் போட்டுக்கொண்ட தைலம் ஏறக்குறைய மறைந்து விட்டது. இப்போது வியர்வைத்துளிகளோடு மெல்லிய இழைகளாய் மீண்டும் நெற்றியில் தோன்றி யது. சுகந்தி அவளுடைய நெற்றியை, வேறு எவருடை யதோ போல் உணர்ந்தாள். வியர்வைத்துளிகள் நிரம்

பிய அவளது நெற்றியில் காற்று படர்ந்த போது அவள் யாரோ குளிர்ச்சியான சரோடினைத் துண்டாக்கி அவள் நெற்றியில் ஒட்டிவைத்தது போல் உணர்ந்தாள். அவ ளுக்குத் தலைவலி இன்னுமிருந்தது. ஆனால் அவளுள் எழுந்த சிந்தனைகளும் அவை எழுப்பிய சத்தங்களும் அதை அழுத்தியது. சுகந்தி பலமுறை அவளின் சிந்த னைகளுக்கு அடியில் சிக்கிக்கொண்ட தலைவலியை வெளியே எடுக்க முயன்றாலும் தோற்றுப்போனாள். அவளுக்கு, அவளின் கைகால்கள், வயிறு என்று எல் லாம் வலியை உணரவேண்டும் என்று விரும்பினாள். இதயம் சுருங்கும் அளவிற்கு வலியின் தீவிரம் வேண்டும் என்று நினைத்தாள். ஆனால் அவளின் இதயம் விரிந் தது. இழவு... அந்தச் சேட்டின் 'ஓ..!' அவளின் இதயத்தில் சுருங்கிக்கொண்டும் விரிந்து கொண்டும் இருந்தது.

அப்போது தன் அறையை நோக்கி நடக்கத் தொடங் கிய சுகந்தி, சட்டென்று நின்றாள். அவள் மீண்டும் சிந்திக்கத் தொடங்கினாள் : 'சேட்டுக்கு என்னுடைய முகத்தைப் பிடிக்கவில்லை என்று தரகர் ராம்லால் நினைக்கிறான். இல்லை ராம்லால் என் முகத்தைப் பற்றி ஏதும் சொல்லவில்லை, அவன் சொன்னது, 'அவருக்கு உன்னைப்பிடிக்கவில்லை. அவனுக்கு என் முகத்தைப் பிடிக்கவில்லை... அதனால் என்ன... எனக்குக் கூடத் தான் சில ஆண்களின் முகம் பிடிக்கவில்லை . அமா வாசை இரவு அன்று வந்தவன் - அவன் எவ்வளவு கோர மாய் இருந்தான். நான் அவனை வெறுப்போடு பார்க் கவில்லையா? அவன் கட்டிலில் படுக்க வந்தபோது அவனிடமிருந்து விலக வேண்டும் என்று நினைக்க வில்லையா? எனக்கு ஏறக்குறைய குமட்டிக் கொண்டு வரவில்லையா? உண்மைதான். ஆனால் சுகந்தி நீ அவ னைத் திருப்பி அனுப்பவில்லை. காரில் வந்த சேட்டு உன் முகத்தில் காறி உமிழ்ந்துள்ளான். 'ந்நோ..!' இந்த

ந்நோ...!'க்கு வேறு என்ன அர்த்தம் இருக்க முடியும்?... இது தான் : ஓணான் போன்ற முகம், அதுவும் தலைக்கு மல்லிகைப்பூ மணம் கொண்ட எண்ணெயைத் தடவிக் கொண்டு! எப்படிப்பட்ட முகம். என்ன ஒரு எதிர்பார்ப்பு! ராம்லால் அந்த ஓணானை எங்கிருந்து பொறுக்கி வந் தாய்? இந்தப் பெண்ணையா நீ இவ்வளவு புகழ்ந்து கொண்டிருந்தாய் ? இவளுக்கா பத்து ரூபாய்?... ஒரு கோவேறு கழுதையே மேலானது...'

சுகந்தி சிந்தித்துக்கொண்டிருக்க. அவளின் உச்சந் தலை முதல் உள்ளங்கால் வரை வெப்பம் வெளியே றிக் கொண்டிருந்தது. சில கணங்களில் அவள் மீதே எரிச்சல் கொண்டாள். வேறு சில கணங்களில் இப் படி நடு ராத்திரி இரண்டு மணிக்கு இவ்வளவு கஷ் டங்களை அனுபவிக்க வைத்த ராம்லால் மீது கோபம் கொண்டாள். பிறகு திடீரென்று இருவரையும் குறை சொல்ல முடியாது என்று நினைத்து சேட் மீது எரிச்சல் கொண்டாள். இந்த எண்ணத்தில் அவளின் கண்கள், கைகால்கள் என்று உடலில் உள்ள ஒவ்வோர் அங்கமும் சேட்டை எங்காவது காண முடியுமா என்று வளைந்து கொடுத்தது. அவளுள் என்ன நடந்ததோ அது மறு படியும், ஒரே ஒரு முறை மீண்டும் நடக்க வேண்டும் என்ற சங்கடமான ஏக்கம் தோன்றியது.. அவள் மறுபடி யும் அதேபோல் நடத்தப்பட்டால்... வெறிபிடித்த பூனை நகங்களைக் கொண்டு அந்த சேட்டின் தலை முடியைப் பிடித்துக் காரில் இருந்து வெளியே இழுத்துப்போட்டு அசதியுறும் வரை உதைக்கத் தொடங்கி... சக்தியெல் லாம் இழந்து, அசதியில் அமர்ந்து அழத் தொடங்கி.....

சுகந்தியின் அசாத்தியக் கோபமும், இயலாமையும் மூன்று நான்கு பெரிய நீர்த்துளிகளை அவளின் கண் களில் இருந்து வெளிக் கொணர்ந்தது. சுகந்தி அவ ளின் கண்களைப் பார்த்துக் கேட்டாள், "எதற்காக அழு

கிறாய்? அப்படி என்ன நடந்தது என்று இப்போது நீலிக் கண்ணீர் வடிக்கிறாய்?"

அவள் தன் கண்களைப் பார்த்துக் கேட்ட இந்தக் கேள்வி, அந்தக் கண்ணீர்த் துளிகளில் சில கணங் கள் நீந்திக்கொண்டிருக்க, அந்தக் கண்ணீர்த்துளியோ, கண் இமையில் தொங்கிக்கொண்டிருந்தது. சுகந்தி இந்தக் கண்ணீர்த்துளி ஊடாக, மறைந்து போன சேட் டின் கார் நின்று கொண்டிருந்த வெற்றிடத்தை வெறித் துப் பார்த்துக் கொண்டு நின்றிருந்தாள். கர்.... கர்... கர். இந்தச் சத்தம் எங்கிருந்து வந்தது? சுகந்தி சுற்றிலும் பார்த்தாள். எவரும் அங்கில்லை . ஆங்....! அந்தச் சத் தத்தை எழுப்பியது அவளின் இதயம் தான் என்றாலும், ஏனோ கார் இஞ்ஜின் இயக்கப்படுவதாக நினைத் தாள்... ஏன் அவளின் இதயம் - இதுவரை ஒழுங்காக இயங்கிக்கொண்டிருந்தது, திடீரென்று விரிசல் விழுந்த இசைத்தட்டில் சிக்கிக்கொண்ட ஊசி போல, கர்.கார்...' என்ற சத்தத்தை எழுப்புகிறது? 'அன்று இரவு வானிலி ருந்த நட்சத்திரங்கள் எண்ணப்பட்டே கழிந்தது' என் பது, நட்சத்திரங்கள்... நட்சத்திரங்கள்... என்று இழுபட் டது போன்று.

வானம் நட்சத்திரங்களால் நிரம்பியிருந்தது. சுகந்தி நிமிர்ந்து பார்த்து, "எவ்வளவு அழகாக இருக்கிறது" என் றாள். அவளின் சிந்தனையை வேறு எதிலாவது திசை திருப்ப வேண்டும் என்று விரும்பினாள். ஆனால் அவள் 'அழகாக இருக்கிறது' என்று சொன்னவுடன், அவள் நினைத்தாள்... 'நட்சத்திரங்கள் அழகாக இருக்கின்றன. ஆனால் நீ கோரமாய் இருக்கிறாய். சற்று நேரத்திற்கு முன் எவனோ ஒருத்தன் அப்படிச் சொன்னதை நீ மறந்து விட்டாயா?'

'சுகந்தி! நீ ஒன்றும் பார்க்க அவ்வளவு அசிங்கமாக இல்லை '. இந்த எண்ணம், இந்த ஐந்து வருட காலங் களாக அவளைக் கண்ணாடியில் தன்னைப் பார்த்துக் கொண்டது, பிம்பங்களாக ஒன்றன்பின் ஒன்றாக அவ ளுள் தோன்றியது. உண்மைதான், இதில் எந்தச் சந் தோசமும் இல்லை. ஐந்து வருடங்களுக்கு முன் எந்தக் கவலைகளும் இல்லாமல் பெற்றோருடன் வாழ்ந்து வந் தபோது, அவள் இருந்தது போல் இன்று இல்லை தான். ஆனாலும் அவள் ஒன்றும் கோரமாக மாறிவிடவில்லை. ஒரு கணப்பொழுது ஆணின் கவனத்தைக் கவரக்கூடிய எல்லாப் பெண்களைப்போலத்தான் இருந்தாள். அவ ளைப் பொறுத்தவரை ஓர் ஆண், ஓரிரு இரவுகளுக் காக ஒரு பெண்ணிடம் எதிர்பார்க்கும் எல்லாத் தகுதிக ளும் அவளிடம் இருந்தன. அவளின் உடலில் இன்னும் இளமை இருந்தது. அவளின் அங்கங்கள் ஏற்றுக்கொள் ளக்கூடிய அளவில் இருந்தன. சில சமயங்களில் அவள் குளிக்கும் போது அவளின் தொடையைப் பார்த்துக் கொண்டாள். அவை திடமானதாகவும், உருண்டையாக வும் சிறப்பாக உருக்கொண்டும் இருந்தன. அவள் நல்ல இயல்புகளைக் கொண்டிருந்தாள். ஒரே ஒரு வாடிக்கை யாளர் கூட அவளிடம் திருப்தி இல்லாமல் திரும்பிப் போனது கிடையாது. அவள் இளகிய மனதோடும் அந் நியோன்னியமாகவும் பழகினாள். போனமுறை கிறிஸ்து மஸ் பண்டிகையில் அவள் கோல்பேட்டாவில் இருந்த போது, ஓர் இளைஞன் அவளிடம் வந்தான். காலை யில் எழுந்து அவன் போட்டுக்கொள்ள தன் கோட்டை எடுத்த போது அதில் அவனின் பர்ஸ் இல்லாததைக் கண்டான். அவன் நிலைகுலைந்து போனான். அவன் தன் விடுமுறையைக் கழிக்க ஹைதராபாத்திலிருந்து பம்பாய்க்கு வந்திருக்கிறான். இப்போது திரும்பிப் போவ தற்குப் பணம் இல்லை. சுகந்தி அவன் மீது இரக்கம்

கொண்டு அவன் கொடுத்த பத்து ரூபாயை அவனிடமே திருப்பிக் கொடுத்தாள்.

'என் மீது என்ன தவறு இருக்கிறது?' சுகந்தி இந் தக் கேள்வியைப் பார்த்த எல்லாவற்றிடமும் கேட்டாள் - மங்கலான கேஸ் விளக்குகள், இரும்புத் தூண்கள், நடைபாதையில் உள்ள சதுரமான கற்கள், தெருவில் குவிந்து கிடந்த பெயர்த்தெடுக்கப்பட்ட கற்கள். எல்லா வற்றையும் வரிசையில் ஒன்றன் பின் ஒன்றாகப் பார்த் தாள். பிறகு அவள் மீது தொங்கிக் கொண்டிருக்கும் வானத்தை நிமிர்ந்து பார்த்தாள். ஆனால் அதனிடமிருந் தும் பதிலேதும் கிடைக்கவில்லை.

பதில் அவளுக்குள்ளேயே இருந்தது. அவள் கோர மாய் இல்லை. பார்க்கச் சுமாரானவள் என்று அவ ளுக்கே தெரியும். ஆனால் இதை வேறு யாரேனும் ஊர் ஜிதப்படுத்த வேண்டும் என்று ஏங்கினாள்... யாரேனும்... யாரேனும் ஒருவன்.. அவளின் தோளில் கைவைத்து, "யார் சொன்னது சுகந்தி நீ அசிங்கமானவள் என்று, நீ அழகாக இருக்கிறாய்" என்று சொல்ல ஏங்கினாள்.

யாராவது தன்னைப் புகழ வேண்டும் என்று ஏன் எதிர்பார்க்கிறேன் என்று கேட்டுக்கொண்டாள். இதற்கு முன் இது போன்ற தேவையை, இவ்வளவு தீவிரமாக அவள் உணர்ந்ததே கிடையாது. ஏன் அவள் அழகாக இருக்கிறாள் என்று, உயிரற்ற பொருட்கள் கூட ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று பார்க்கிறாள்? ஏன் அவளின் உடலில் ஒவ்வொரு துவாரமும் 'தாயாக' மாறுகிறது? ஏன் இந்தப் பூமியில் உள்ள அனைத்தையும் ஒரு தாயைப் போல அள்ளி எடுத்துத் தன் மடியில் போட்டுக்கொள்ள நினைக்கிறாள்? ஏன் அந்த கேஸ் விளக்கைத் தாங்கிக் கொண்டிருக்கும், இரும்புத் தூணைத் தட்டிக்கொடுத்து, அதன் சில்லிட்ட உடலில் தன் முகத்தைப் பதித்து,

அதன் குளிர்ச்சியை உறிஞ்சிக்கொள்ள நினைக்கி றாள்?.....

சிறிது நேரம் கழித்து மங்கிய கேஸ் விளக்குகளும், இரும்புத் தூண்களும், நடைபாதையில் உள்ள சதுர மான கற்களும், இந்த இரவில் அசைவற்றுக் கிடந்த எல்லாமும் அவள் மீது இரக்கம் கொண்டு பார்ப் பதாக உணர்ந்தாள். கணக்கிலடங்கா ஓட்டைகளைக் கொண்ட, அடர்த்தியான பழுப்பு நிறத் துணியைப் போல, அவளின் தலைக்கு மேல் தொங்கிக் கொண் டிருந்த வானம் கூட அவளைப் புரிந்து கொண்டது என்று நினைத்தாள். மினுமினுக்கும் நட்சத்திரங்கள் கூட தன்னைப் புரிந்து கொண்டதாக நினைத்தாள்... ஆனால் அவளுள் இன்னும் எது அவளின் எலும் புகளைக் குடைந்துகொண்டிருக்கிறது? ஏன் அவளுள் - மழைக்கு முந்திய வான்வெளியில் காணப்படுவது போன்ற, நிலையற்ற தன்மை காணப்படுகிறது? அவ ளுள் புகைந்து கொண்டிருப்பது எல்லாம், அவளின் உடலில் உள்ள ஒவ்வொரு துவாரங்கள் வழியாக வெளி யேறிவிட வேண்டும் என்று நினைத்தாள். ஆனால் அது எப்படிச் சாத்தியமாகும்? எப்படி?...

சந்தின் ஒரு மூலையில் சிவப்பு நிறத் தபால் பெட்டி அருகே சுகந்தி நின்று கொண்டிருந்தாள். தபால் பெட் டியின் திறந்த வாயில் தொங்கிக் கொண்டிருந்த இரும்பு நாக்கு காற்று சற்று வேகமாக அடித்தபோது அசைந்து கொடுத்தது. திடீரென்று சுகந்தி கார் போன திசை யைப் பார்த்தாள். ஆனால் அங்கு பார்ப்பதற்கு எதுவுமே இல்லை... அந்தக் கார் திரும்ப வரவேண்டும் என்று எவ் வளவு ஆவலோடு இருந்தாள். ஆனால்.....

"அது ஒன்றும் வரவேண்டாம்" அவள் முணுமுணுத் தாள். "அது எக்கேடு கெட்டும் ஒழியட்டும். நான் ஏன்

என்னை இப்படி இம்சைப் படுத்திக்கொள்ள வேண்டும்? அறைக்குப் போய் நிம்மதியாய்ப் படுத்து உறங்கலாம். இதனால் எல்லாம் என்ன கிடைத்துவிடப்போகிறது. தேவையில்லாத தலைவலி"

"சுகந்தி போ, வீட்டிற்குப் போ..." அவளுக்குள் சொல்லிக் கொண்டாள். 'சில்லென்று ஒரு குவளை தண்ணீர் குடி, தைலம் தடவிக்கொண்டு படுக்கப் போ.. உனக்கு நன்றாகத் தூக்கம் வரும். பிறகு எல்லாம் சரியாகிவிடும். சேட்டும் அவனின் காரும் நரகத்திற்குப் போகட்டும்'

இந்த எண்ணம் குளிர்ச்சியான நீரைக் கொண்டிருந்த குளத்தில் குளித்தது போன்று சுகந்தியை இலகுவாக்கியது. இது அவளுக்குப் பிரார்த்தனை முடித்தபின் கிடைக்கும் உணர்வு போல் இருந்தது. அவள் வீட்டை நோக்கி நடந்தாள். இப்போது மனதில் உள்ள கவலைகளை எல்லாம் இறக்கி வைத்தது போல உணர்ந்ததால், அவளின் நடை அவ்வப்போது தடுமாறியது.

அவள் தன் வீட்டை நெருங்கியவுடன், நடந்தவையெல்லாம் வலியாய்த் திரும்ப வந்து அவளின் உடல் முழுக்க ஊடுருவியது. அவளின் நடை மீண்டும் இறுக்கமானது. அவள் வீட்டில் இருந்து அழைக்கப்பட்டதும், பஜாருக்குச் சென்றதும், டார்ச் விளக்கு ஒளி மூலமாய்க் கன்னத்தில் அறையப்பட்டு அவமானப்படுத்தப் பட்டதும், மீண்டும் அவளை மிரட்டத் தொடங்கியது. ஆட்டை வாங்க வந்தவன் அவனின் விரல்களால் ஆட்டுக்கு முடி மட்டும் இருக்கிறதா அல்லது சதையும் இருக்கிறதா என்று பரிசோதிப்பது போல் நடத்தப்பட்டதாக நினைத்தாள். அந்த சேட்... கடவுளே!... சுகந்தி அவனைச் சபிக்க விரும்பினாள். ஆனால் இப்போது சபிப்பதால் என்ன பயன்?" என்று நினைத்தாள். அவன் என் முன்னே நிற்க என்னுடைய வசவுகள் அவனின் உடலில் உள்ள எல்

லாத் துவாரங்களிலும் நுழைந்தால் அது வேடிக்கை யாக இருக்கும். அவன் வாழ்நாள் முழுக்கச் சங்கடப்படும் அளவிற்கு நிச்சயம் நான் ஏதாவது சொல்லியிருப்பேன்... நான் என் ஆடைகளைக் களைத்தெறிந்துவிட்டு அவன் முன்னே நிர்வாணமாக நின்று இப்படிச் சொல்லியிருப் பேன். இதை எடுத்துக்கொள்ளத்தானே நீ வந்தாய், பணம் ஏதும் கொடுக்காமல் நீ எடுத்துக்கொள். ஆனால் நான் எதுவாக இருந்தாலும் என்னுள் மறைந்து கிடக் கும் எதையும் உன் அப்பனால் கூட விலை கொடுத்து வாங்க முடியாது.'

விதவிதமாய்ப் பழிவாங்கும் உணர்வுகள் சுகந்தியின் மண்டைக்குள் ஏறத்தொடங்கியது. ஒரு முறை மட்டும், ஒரே ஒரு முறை, அந்த சேட். அவளால் அந்த சேட்டை சந்திக்க முடிந்தால் அவனைப் பழி வாங்குவதற்கு எதை யும் செய்யத் தயாராக இருந்தாள். இல்லை , அது.... பிற குதான் சேட்டைச் சந்திப்பது முடியாத காரியம் என்று உணரத் தொடங்கி, சிறு சிறு கெட்ட வார்த்தைகளைக் கொட்டித் திருப்திப்பட்டுக்கொண்டாள்... அந்தச் சிறு வசவுகள் அவளின் மூக்கின் மேல் ஈயைப்போல உட் கார்ந்து கொள்ளும் - திரும்பத் திரும்பப் பறந்து வந்து உட்கார்ந்து கொள்ளும்.

இத்தகைய போராட்டங்களைக் கொண்ட மனநிலை யோடு, அவளது அறையிருந்த இரண்டாவது தளத்தை அடைந்தாள். அவளின் இரவிக்கைக்குள் இருந்த சாவியை எடுத்துக் கதவைத் திறக்கக் கையை நீட்டி னாள். சாவி காற்றில் நகர்ந்தது. கதவில் பூட்டு இல்லை. சுகந்தி கதவை உள் நோக்கித் தள்ளினாள். மெல்லி யதான சத்தம் கேட்டது. உள்ளிருந்து யாரோ தாழ்ப்பா ளைத் திறந்தார்கள். கதவு திறக்கப்பட சுகந்தி உள்ளே போனாள். தன் தாடியின் பின்னே சிரித்துக்கொண்டே, மாது கதவைத் தாழிட்டான். "கடைசியாக என் அறிவு

ரையை நீ ஏற்றுக்கொள்கிறாய். காலையில் நடப்பது உட லுக்கு மிகவும் நல்லது. ஒவ்வொரு நாளும் காலையில் நடக்க வேண்டும். சோம்பேறித் தனத்தை ஒழித்துக்கட்ட இது உதவும். நீ அடிக்கடி குறைப்பட்டுக்கொள்ளும் உன் முதுகுவலியைக் குறைக்கவும் இது உதவும். குறைந்தது விக்டோரியா பூங்கா வரை நீ கண்டிப்பாக நடக்க வேண் டும்... சரியா?"

சுகந்தி பதிலேதும் சொல்லவில்லை. மாதுவும் அவ ளின் பதிலுக்கு ஆர்வத்தைக் காட்டவில்லை. உண்மை யில் மாது எப்போது என்ன பேசினாலும், சுகந்தி அதில் கலந்து கொள்ள வேண்டுமென்று அவன் எதிர்பார்த் ததே கிடையாது. அவர்கள் ஏதாவது பேசிக் கொள்வ தற்குக் காரணம், ஏதாவது பேசிக்கொள்ள வேண்டுமே என்பதற்காகத்தான்.

மாது பிரம்பு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான். நாற்காலியில் தலை வைக்கும் இடத்தில், அவனின் எண்ணெய்த் தலை பெரிய கறையை ஏற்படுத்தி இருந் தது. கால்மேல் கால் போட்டுக் கொண்டு தன் விரல்க ளால் தாடியைத் தடவிக் கொடுத்தான்.

சுகந்தி கட்டிலில் உட்கார்ந்த பிறகு, மாதுவிடம், "இன்று உனக்காகக் காத்திருந்தேன்" என்றாள். மாது ஆச்சரியத்தோடு, "காத்திருந்தாயா? நான் இன்று வரு வது உனக்கு எப்படித் தெரியும் " என்று கேட்டான். ஒட் டியிருந்த சுகந்தியின் உதடுகள் விரிந்து அசதி கொண்ட சிரிப்பை வெளிப்படுத்தியது. "நேற்றிரவு என் கனவில் உன்னைப் பார்த்தேன். நான் எழுந்து வந்து பார்த்த போது, எவரும் இங்கு இல்லை. அதனால் வெறுமனே நடைபோய் வரலாம் என்று நினைத்து... அப்புறம்..."

மாது மகிழ்ச்சியோடு, "அதான் நான் வந்து விட்டேன். காதலர்களின் இதயங்கள் ஒன்றாகத் துடிக்கும் என்று

ஞானிகள் சொல்லியிருக்கிறார்கள். நீ எப்போது கனவு கண்டாய்?"

சுகந்தி பதில் தந்தாள் : "சுமார் நாலு மணிக்கு "

மாது நாற்காலியில் இருந்து எழுந்து சுகந்தி பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டான். "நீயும் என் கனவில் வந்தாய்" என்றான். "சரியாக இரண்டு மணிக்கு நீ என் அருகில் நின்று கொண்டிருந்தாய்... பூப் போட்ட புடவையை உடுத்திக்கொண்டு... ஆங்... இதே புடவை... உன் கையில்... இப்போது உன் கையில்

என்ன இருக்கிறது....ஆமாம்... நீ ஒருபை முழுக்க நாணயங்களை வைத்திருக்கிறாய்...நீ அந்தப் பையை என் மடியில் வைத்துச் சொன்னாய், மாது நீ ஏன் கவலைப்படுகிறாய்! இந்தப் பையை எடுத்துக்கொள்... என் பணமாக இருந்தால் என்ன, உன் பணமாக இருந்தால் என்ன... என்ன வித்தியாசம் இருக்கிறது' சுகந்தி நான் சத்தியமாகச் சொல்கிறேன், உடனடியாக எழுந்து டிக்கெட் வாங்கி இங்கு நேராக வந்துவிட்டேன். நான் உன்னிடம் அதை எப்படிச் சொல்வேன் சுகந்தி... நான் ரொம்பவும் இக்கட்டான நிலையில் இருக்கிறேன்... எந்தக் காரணமும் இல்லாமல் நான் ஒரு வழக்கில் சம்பந்தப்படுத்தப்பட்டுள்ளேன்... என்னிடம் மட்டும் இருபது ரூபாய் இருந்தால்... இன்ஸ்பெக்டருக்கு லஞ்சமாகக் கொடுத்து இந்தச் சிக்கலில் இருந்து வெளியே வந்துவிடுவேன்... உனக்கு அசதியாக இருக்கிறதா, ஏன் படுத்துக்கொள்ளேன்... நான் உன் காலைப் பிடித்து விடுகிறேன்... நடந்து பழக்கமில்லை என்றால் நிச்சயமாக அசதியாக இருக்கும்... இப்படிப் படுத்துக்கொள், உன் காலை என் பக்கமாக நீட்டிக்கொள்.." சுகந்தி படுத்தாள். இரண்டு கைகளையும் மடித்துத் தலைக்கடியில் வைத்துக்கொண்டாள். பிறகு அவளுக்குச் சொந்தமில்லாத

குரலில் பேசத் தொடங்கினாள் : "மாது! உன்னை வழக் கில் சிக்க வைத்த அந்தப் பொறுக்கி யாரு? உன்னைச் சிறைக்கு அனுப்பும் சாத்தியங்கள் ஏதும் இல்லை என்று நம்புகிறேன். ஏன் இருபது, முப்பது ரூபாய்? இது போன்ற சூழ்நிலையில் ஐம்பது அல்லது நூறு ரூபாய் இன்ஸ்பெக் டருக்குக் கொடுத்தால் எல்லாம் இன்னும் எளிதாக முடி யும்... இனியும் நீ கவலைப்படாதே நான் ஒன்றும் அசதி யோடு இல்லை. காலைப் பிடிப்பதை நிறுத்திவிட்டு, முழு கதையையும் என்னிடம் சொல்.... வழக்குப் பற்றிக் கேள் விப்பட்டவுடன் என் இதயம் இன்னும் வேகமாக அடித் துக் கொள்கிறது... நீ எப்போது திரும்பிப் போவதாக இருக்கிறாய்?"

சுகந்தியின் மூச்சுக்காற்றில் மாது, மதுவின் நாற் றத்தை உணர்ந்தான். இது தான் நல்ல சந்தர்ப்பம் என்று நினைத்து, "மதியம் இரயிலில் நான் புறப்பட வேண் டும். சாயந்திரத்திற்குள் நான் இன்ஸ்பெக்டருக்கு ஐம் பது அல்லது நூறு கொடுத்தாக வேண்டும். அதற்கு மேல் கொடுக்க வேண்டிய அவசியமில்லை. நான் நினைக்கி றேன் ஐம்பதே போதுமானது."

"ஐம்பது!" சுகந்தி மிக அமைதியாக எழுந்து சுவ ரில் தொங்கிக் கொண்டிருந்த நான்கு புகைப்படங் களை நோக்கி மெதுவாக நகர்ந்தாள். இடது பக்கத்தில் இருந்த மூன்றாவது படம் மாதுவின் படம். பெரிய பெரிய பூக்கள் போட்ட திரைச்சீலைக்கு முன்பு இருந்த நாற் காலியில் அவன் அமர்ந்திருந்தான். அவனின் கைகள் தொடையின் மேல் வைக்கப்பட்டிருந்தன. ஒரு கையில் ரோஜாப்பூ ஒன்றைப் பிடித்திருந்தான். பக்கத்திலிருந்த சிறிய ஸ்டூலில் இரண்டு தடித்தப் புத்தகங்கள் இருந்தன. இந்தப் புகைப்படம் எடுக்கப்பட்ட போது அவனுள் தான் புகைப்படம் எடுக்கப்படப்போகிறோம் என்ற எண்ணம், 'ஓ... என்னைப் படம் பிடிக்கப்போகிறார்கள்... என்னைப்

படம் பிடிக்கப்போகிறார்கள்' என்று அவனின் கை கால் கள் மூலம் சொல்வது போல் இருந்தது. விரிந்திருந்த அவனின் கண்கள், அவன் சௌகரியமாக இல்லை என்ற எண்ணத்தை ஏற்படுத்தியது. சுகந்தி உரக்கச் சிரித்தாள். அவளின் அந்தச் சிரிப்பு குறி பார்த்துத் துளைப்பது போல் இருந்ததால், மாது மிகவும் சங்க டப்பட்டுப்போனான். கட்டிலில் இருந்து எழுந்து சுகந்தி அருகில் சென்று, "சுகந்தி யாருடைய படம் உன்னை இப்படிச் சிரிக்க வைத்தது?" என்று கேட்டான். சுகந்தி, இடது பக்கத்திலிருந்த முதல் படத்தைக் காட்டினாள், அது முனிசிபாலிட்டி சுகாதார இன்ஸ்பெக்டரின் படம். " இதுதான்... முனிசிபாலிட்டி இன்ஸ்பெக்டருடையது... அவனுடைய கோரமான முகத்தைப் பார்.... அவன் சொல்வான், மகாராணி ஒரு காலத்தில், அவன் மீது காதல் கொண்டாளாம்... மகாராணி இந்தக் கோர மான முகத்திற்கு ஏங்கியிருப்பாள்தான்..." சுகந்தி அந் தப் புகைப்படத்தைப் பிடித்து இழுத்தாள். அவள் பலம் கொண்டு இழுத்த வேகத்தில் ஆணியும் சுவரில் இருந்து பெயர்ந்து வந்தது. சுகந்தி அந்தப் படத்தை ஜன்னலுக்கு வெளியே விட்டெறிந்ததைப் பார்த்தபோது, மாதுவால் அதிர்ச்சியிலிருந்து மீள முடியாமல் போனது. இரண்டா வது மாடியிலிருந்து விட்டெறியப்பட்ட அந்தப் படத்தின் கண்ணாடி நொறுங்கும் சத்தம் கேட்டது. சுகந்தி சொன் னாள், " இராணி, குப்பை பொறுக்க வரும்போது குப் பைகளோடு இந்த இராஜாவையும் சேர்த்து எடுத்துப் போவாள்"

பிறகு கத்தியைக் கூர்ப்படுத்துவது போன்று கிழித் தெடுக்கும் சிரிப்பு, சுகந்தியிடமிருந்து சீறி வெளிப்பட் டது. மாது சிரமப்பட்டுப் புன்னகைத்தான். பிறகு உரக்கச் சிரிக்கத் தொடங்கினான். "ஹி... ஹி... ஹி..."

சுகந்தி இரண்டாவது படத்தையும் பிடுங்கி ஜன்ன லுக்கு வெளியே விட்டெறிந்தாள். " இந்த ராஸ்கல் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறான்" என்றாள். "கோரமான முகத்தோடு எவரும் இங்கு இருக்கக் கூடாது ... நான் சொல்வது சரிதானே மாது?'" மறுபடி யும் மாது சிரமப்பட்டுப் புன்னகைத்து, பிறகு சிரிக்கத் தொடங்கினான் "ஹி... ஹி... ஹி..." டர்பன் அணிந்து கொண்டிருந்தவனின் புகைப்படத்தை சுகந்தி ஒருகை யால் அகற்றி, மறு கையை, மாதுவின் படத்தை நோக்கி நீட்டினாள். அந்தக் கை தன்னை நோக்கி நீள்வது போல் நினைத்து மாது சுருங்கிப் போனான். ஒரு நொடி யில் ஆணியோடு சேர்ந்து இரண்டு புகைப்படங்களும் அவள் கையில் இருந்தன. உரக்கச் சிரித்து அவள் சொன்னாள்: 'ஓ..!' பிறகு இரண்டு படங்களையும் ஜன்ன லுக்கு வெளியே விட்டெறிந்தாள். படங்கள் தரையோடு மோதி, கண்ணாடி தூளாகும் சத்தம் கேட்டு, மாது அவ னுள் ஏதோ உடைந்து போனது போல் உணர்ந்தான். வலுக்கட்டாயமாகச் சிரிப்பை வரவழைத்துக்கொண்டு அவனால் சொல்ல முடிந்ததெல்லாம் இவ்வளவுதான் : "சரியாகச் செய்தாய் சுகந்தி. எனக்கும் அந்த படத்தைப் பிடிக்கவே இல்லை"

சுகந்தி மெதுவாக மாதுவை நோக்கி நகர்ந்து, "அந்தப் படத்தை உனக்கும் பிடிக்கவில்லை இல்லையா? நான் கேட்கிறேன், எவரேனும் உன்னை விரும்புவதற்கு உன் னிடம் என்ன இருக்கிறது? உன்னுடைய தடித்த இந்த மூக்கா, அல்லது முழுவதுமாக முடியைக் கொண்டிருக் கும் இந்த நெற்றியா... இந்த அகன்ற மூக்கு துவாரம்... நேராகப் பார்க்க முடியாத திருட்டுக் கண்கள், உன் மூச்சின் துர்நாற்றம், உன் உடம்பில் உள்ள அழுக்கு.... உனக்கும் அந்தப் படத்தைப் பிடிக்கவில்லை , இல் லையா? 'ஓ ...!" உனக்கு எப்படிப் பிடித்திருக்கும்... அது

உன் எல்லாக் குறைகளையும் மறைத்திருந்தது... இப்போது உலகம் இப்படித்தான் இருக்கிறது.... எவரெல்லாம் தங்களின் குறைகளை மறைக்கின்றார்களோ அவர்கள் எல்லோரும் தண்டிக்கப்படுவார்கள்."

மாது பின்னுக்கு நகர்ந்தான். சுவரோடு அவன் முதுகு ஒட்டிக் கொண்டபின், குரலை உயர்த்தி, " இங்க பார் சுகந்தி, நீ உன் தொழிலை மறுபடியும் தொடங்கிவிட்டாய் என்று நினைக்கிறேன். இப்போது நான் உனக்குக் கடைசி முறையாகச் சொல்கிறேன்..'

அதே தொனியில் சுகந்தி அவனின் பேச்சைத் தொடர்ந்தாள்:

"நீ மறுபடியும் உன் தொழிலைத் தொடங்கினால், நாம் நண்பர்களாக இருக்க முடியாது. இந்த அறைக்குள் எந்த ஆணாவது நுழைந்தால், நான் உன் தலைமுடியைப் பிடித்து இழுத்து வெளியே போடுவேன்... இந்த மாதத்திற்கான செலவுக்கு நான் புனே போய்ச் சேர்ந்தவுடன் பணம் அனுப்புகிறேன் - மணியார்டர் மூலமாக...."
மாது பிரமித்துப் போய்க் கிடந்தான். சுகந்தி தொடர்ந்து பேசிக்கொண்டிருந்தாள். "நான் உன்னிடம் சொல்கிறேன், இந்த அறைக்கு வாடகை பதினைந்து ரூபாய். என்னுடைய கூலி பத்து ரூபாய்... அதில் இரண்டரை ரூபாய் தரகருக்குப்போய்விடும் என்று உனக்குத் தெரியும். எனக்குக் கிடைப்பது ஏழரை ரூபாய். இந்த ஏழரை ரூபாய்க்கு, நான் உனக்குக் கொடுக்க முடியாததைக் கொடுப்பதாக உறுதியளிக்கிறேன். உன்னால் எடுத்துக்கொள்ள முடியாததை, எடுத்துக்கொள்ள நீ வந்திருக்கிறாய்... நம்மிடையேயான உறவு என்ன... எப்படிப் பார்த்தாலும் ஏதும் இல்லை. நம்மிடையே இந்தப் பத்து ரூபாய்தான் குலுங்கிக் கொண்டிருக்கிறது... அதனால் நாம் ஒன்று சேர்ந்தோம். உனக்கு நான் தேவை, எனக்கு

நீ தேவை... முன்னர் பத்து ரூபாய் நமக்கிடையே குலுங் கிக்கொண்டிருந்தது... இப்போது ஐம்பது ரூபாய் குலுங் கிக் கொண்டிருக்கிறது. அது குலுங்கும் சத்தத்தை நீயும் கேட்கிறாய், நானும் கேட்கிறேன்... பார், உன் தலை எப் படிக் கலைந்திருக்கிறது..."

பிறகு சுகந்தி தன் விரல்களால், மாது அணிந்திருந்த தொப்பியை எடுத்து விட்டெறிந்தாள். இதை மாது வால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அவன் அதிகா ரத்தோடு, "சுகந்தி!" என்று கத்தினான். சுகந்தி அவ னின் சட்டைப்பையிலிருந்து கைக்குட்டையை எடுத்து முகர்ந்து பார்த்துக் கீழே விட்டெறிந்தாள். " இந்தக் கந் தலைப் பார், என்ன துர்நாற்றத்தைக் கொடுக்கிறது... அதை எடுத்து வெளியே விட்டெறி..."

மாது கத்தினான்: "சுகந்தி!"

சுகந்தி கடுமையான குரலில், "என்ன இழவுக்குடா இங்க வந்த - தேவடியா பையா? உனக்கு ஐம்பது ரூபாய் கொடுக்க உன்னைப் பெற்றுப் போட்டவளா இங்கு இருக்கிறாள்? இல்லை நீ ரொம்ப அழகான, இளமை யோடு ஆன வாலிபன் என்ற எண்ணத்தில், நான் உன் மீது காதல் கொண்டுள்ளேன் என்று நினைத்தாயா... பொறுக்கி, நீ என்னை அதிகாரம் செய்யப் பார்க்கிறாய். நான் என்ன உன் அடிமையா? பிச்சைக்கார நாயே, நீ உன்னை என்னவென்று நினைத்துக்கொண்டிருக் கிறாய்? நான் கேட்கிறேன், உன்னைப்பற்றி நீ என்ன தான் நினைத்துக்கொண்டிருக்கிறாய். நீ என்ன பிக்பாக் கெட்டா இல்லை திருடனா?. இந்த நேரத்திற்கு ஏன்டா இங்கு வந்தாய்... நான் போலீசைக் கூப்பிடவா? புனே வில் வழக்கு இருக்கலாம், இல்லாமலும் போகலாம், ஆனால் நான் இங்கு ஒன்றைக் கொடுக்கிறேன்."

மாது பயத்தால் உறைந்து போனான். அடங்கிய குர லில் அவனால் சொல்ல முடிந்தது எல்லாம் இதுதான் : "உனக்கு என்ன ஆயிற்று சுகந்தி"

"அதைக் கேட்க நீ யாருடா நாயே... இப்பவே வெளியே போ... இல்லை என்றால் "

இதுவரை காய்ந்து போன செருப்பில் தலைவைத் துத் தூங்கிக் கொண்டிருந்த சொறிநாய், சுகந்தி போட்ட சத்தத்தில் விழித்துக் கொண்டது. மாது பக்கம் திரும்பி குரைக்கத் தொடங்கியது. சுகந்தி உரக்கச் சிரிக்கத் தொடங்கினாள். மாது பெரும் அச்ச உணர்வு தன்னைப் பீடித்திருப்பதை உணர்ந்தான். அவனின் தொப்பியை எடுக்கக் குனிந்தான். சுகந்தி, "எடுக்காதே" என்று கர் ஜித்தாள். "அது அங்கேயே இருக்கட்டும். போ... நீ புனே போய்ச் சேர்ந்தவுடன், அதை மணியார்டரில் அனுப் பிவைக்கிறேன்" என்றாள். பிறகு பிரம்பு நாற்காலியில் உட்கார்ந்து மீண்டும் உரக்கச் சிரிக்கத் தொடங்கி னாள். அவளின் சொறிபிடித்த நாய், குரைத்து மாதுவை அறையை விட்டு வெளியேற்றியது. பிறகு தன் வாலை ஆட்டிக்கொண்டு வந்த அது சுகந்தியின் காலடியில் அமர்ந்து, அவள் மீது தன் காதைத் தேய்க்கத் தொடங் கியது. சுகந்தி இந்த உலகிற்குத் திரும்பி வந்தாள். இது வரை அவள் அனுபவித்திராத மயான அமைதி அவள் அறையில் நிலவியது. எங்கும் வெறுமை சூழ்ந்திருப்பது போல - இரயில் தன் பயணிகளை எல்லோரையும் வெவ் வேறு நிறுத்தத்தில் இறக்கி விட்டு வெறுமையாய் திரும் புவதுபோல, உணர்ந்தாள். சுகந்தி இந்த வெறுமையைத் தாங்கிக் கொள்ள முடியாது என்று நினைத்தாள். பிரம்பு நாற்காலியில் நீண்ட நேரம் அமர்ந்து, அந்த வெறு மையை அகற்ற முயன்றாள். அவளால் முடியவில்லை. அவளின் மண்டையைப் பல எண்ணங்களால் நிரப்ப முயன்றாள். ஆனால் அவை, குழாயில் போய்க் கொண்

டிருப்பது போன்று ஒரு கணத்தில் உள்ளே நுழைந்து மறுகணத்தில் வெளியேறியது. அவளின் சிந்தனையை வேறு எதற்கும் திசை திருப்ப முடியாமல் போனபோது, தன் சொறிபிடித்த நாயை, எழுந்து அள்ளி எடுத்துக் கொண்டாள்.

கட்டிலில் அந்தச் சொறிபிடித்த நாய் அவள் அருகில் படுத்திருக்க அவள் உறங்கிப்போனாள்.

***



# திற!

அந்தச் சிறப்பு ரயில் அம்ரித்சரில் இருந்து மதியம் இரண்டு மணிக்குப் புறப்பட்டது. அது முகல்புராவை அடைய ஏறக்குறைய எட்டு மணி நேரம் எடுத்துக் கொண்டது. அதன் வழியில் பலர் கொல்லப்பட்டார்கள், மேலும் பலர் மோசமாகக் காயமுற்றார்கள், சிலர் திக்கற்றுப் போனார்கள்.

காலை சுமார் பத்து மணிக்கு, குளிர்ச்சியான மைதானத்தில் இருந்த முகாமில் சிராஜுதின் தன் கண்களைத் திறந்து பார்த்தபோது - ஆண்கள், பெண்கள், குழந்தைகள் என்று திரண்டு எழும் கடலைப் போல, முடிவில்லா மனிதர்கள் கூட்டத்தைக் கண்டார். சிந்திப்பதற்கும் புரிந்து கொள்வதற்குமான அவரின் திறன், இந்த மக்கள் வெள்ளத்தைப் பார்த்தவுடன் மேலும் மோசமாய்ப் பாதிக்கப்பட்டது. அவர் சாம்பல் நிற வானத்தை நீண்ட நேரம் வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தார். முகாமெங்கிலும் பெரும் சத்தங்கள் கேட்டுக்கொண்டேயிருந்தன. ஆனால் வயதான சிராஜுதினின் காதுகள் அந்தச் சத்தங்கள் எதையும் உள்வாங்கிக் கொள்ளாமல் - செவிடானது போல, ஒதுக்கித் தள்ளியது. எவரேனும் அவரைப் பார்த்தால், அவர் ஏதோ மண்டையைப் பிளக்கும் கவலையில் மூழ்கியிருப்பதாக நினைத்துக் கொள்ளக்கூடும். ஆனால் அது அப்படி இல்லை. அவர் தன் உணர்வுகளை இழந்த நிலையில் இருந்தார். அவ

ரின் சிந்தனைகள் மரத்துப்போய்க் கிடந்தன. அவரின் மொத்த இருப்பும் சூனியத்தில் இருந்தது.

எந்தக் காரணமும் இல்லாமல் சாம்பல் நிற வானத்தை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த சிராஜுதினின் கண்கள், திடீரென்று சூரியனில் நிலைத்தது. அதன் பிரகாசமான ஒளிக்கீற்று அவரின் இருப்பின் ஒவ்வொரு தசையிலும் ஊடுருவ அவர் விழித்துக்கொண்டது போல் உணர்ந்தார். அவரின் மூளைக்குள் நிறையக் காட்சிகள் ஒன்றன் பின் ஒன்றாக நகர்ந்து சென்றன; சூறையாடப்படுதல், தீ, குடிபெயர்தல்... இரயில் நிறுத்தம்... தோட்டாக்கள்... இரவு... ஷகினா... சிராஜுதின் உடனடியாக எழுந்துகொண்டு பைத்தியம் பிடித்தது போல, கடல் போல் சூழ்ந்திருந்த மனிதர்கள் கூட்டத்தில் ஊடுருவித் துழாவத் தொடங்கினார்.

முழுமையாக மூன்று மணி நேரம் முகாம் முழுக்க 'ஷகினா... ஷகினா...' என்று கூவிக்கொண்டே சுற்றி வந்தார். ஆனால் அவரால், இளம் பெண்ணான அவரின் ஒரே மகளின், சுவடைக் கூடக் காண முடியவில்லை . எங்கும் படுமோசமான குழப்பங்கள் நிலவின. எவரோ தன்னுடைய குழந்தையைத் தேடிக்கொண்டிருந்தார், எவரோ தன்னுடைய தாயை, எவரோ தன்னுடைய மனைவியை, எவரோ தன்னுடைய மகளை... முழுவதுமாக அசதியுற்ற சிராஜுதின் ஓர் ஓரமாய் உட்கார்ந்துகொண்டார். அவரின் நினைவுகளைப் பெரும் அழுத்தத்திற்கு உள்ளாக்கி, எங்கு எப்படி ஷகினா தன்னிடமிருந்து பிரிந்து போனாள் என்று சிந்திக்கத் தொடங்கினார். ஆனால் அவரின் சிந்தனை ஷகினா தாயின் இறந்த உடலோடு நின்றது - குடல் தனியே கிடக்க, அதன் அருகில் அவளின் உயிரற்ற உடல். அதற்கு மேல் அவரின் நினைவுகள் நகர மறுத்தன.

ஷகினாவின் தாய் இறந்து விட்டாள். சிராஜுதினின் கண்களுக்கு முன்பாகவே அவள் தன் கடைசி மூச்சை விட்டாள். ஆனால் ஷகினா எங்கே? ஷகினாவைப் பற்றி இறந்துகொண்டிருந்த அவளின் தாய் கடைசியாய்ச் சொன்னது இதுதான்: "என்னை விட்டு விடுங்கள்... ஷகினாவை அழைத்துக்கொண்டு வேகமாய் ஓடிப்போய் விடுங்கள்..."

ஷகினா அவரோடுதான் இருந்தாள்... வெறும் காலோடு இருவரும் ஓடிக்கொண்டிருந்தார்கள். ஷகினாவின் துப்பட்டா கீழே விழுந்தது. அவர் நின்று அதை எடுக்கக் குனிந்தார். ஆனால் ஷகினா கத்தினாள், "அப்பாஜி, விட்டுத்தள்ளுங்கள் " அவர் அணிந்திருந்த கோட்டில் உப்பிக் கிடந்த பகுதியைப் பார்த்தார். அதனுள் கையைவிட்டு ஒரு துணியை வெளியே எடுத்தார்... அது ஷகினாவின் துப்பட்டா... ஆனால் ஷகினா எங்கே?

சிராஜுதின் அசதியுற்ற மூளையை இன்னும் வருத்தி எடுத்தார். ஆனாலும் அவரால் ஒரு முடிவுக்கு வர முடியவில்லை . இரயில் நிலையத்திற்கு அவரோடு ஷகினாவை அழைத்து வந்தாரா?... அவள் அவரோடு இரயிலில் ஏறினாளா? –இரயில் வழியில் நின்று கலகக்காரர்கள் உள்ளே நுழைந்தபோது, அவர் மயங்கி விழுந்து ஷகினாவை அபகரித்துச் செல்ல சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொடுத்தாரா?

சிராஜுதினின் மண்டைக்குள் கேள்விகள் மட்டுமே இருந்தன. எந்தப் பதிலும் இல்லை. அவருக்கு அனுதாபம் தேவைப்பட்டது. சுற்றியிருந்தவர்கள் எல்லோருக்கும் அனுதாபம் தேவைப் பட்டது. சிராஜுதினுக்கு அழ வேண்டும் போல் இருந்தது. ஆனால் அவரின் கண்கள் அவருக்கு உதவ மறுத்தன. அவரின் கண்ணீர் எப்படி வற்றிப்போனது என்று கடவுளுக்குத்தான் தெரியும்.

ஆறு நாட்கள் கழிந்தன. அவர் சற்று நிலையான தன் மையை அடைந்தவுடன், அவருக்கு உதவத் தயாராக இருந்த சிலரைச் சந்தித்தார். அவர்கள் மொத்தம் எட்டு பேர் - வாலிபர்கள். அவர்களிடம் ஒரு லாரியும் சில துப் பாக்கிகளும் இருந்தன. சிராஜுதின் அவர்களை வாழ்த் திவிட்டு, ஷகினா எப்படி இருப்பாள் என்று விளக்கிச் சொன்னார். "அவள் நல்ல நிறத்தில் ரொம்ப அழகாக இருப்பாள்... அவளின் அம்மாவைக் கொண்டிருந்தாள், என்னைப்போல் இல்லை . அவளுக்குச் சுமார் பதி னேழு வயது... அவள் பெரிய கண்களையும், கறுத்த முடியையும் கொண்டிருந்தாள்... வலது கன்னத்தில் அவ ளுக்குப் பெரிய மச்சம் இருந்தது... அவள் என்னுடைய ஒரே மகள்... தயவு செய்து அவளைக் கண்டுபிடித்துக் கொடுங்கள்... கடவுள் உங்களைக் காப்பாற்றட்டும்...'

இளம் சமூக சேவகர்கள், வயதான சிராஜுதினிடம் பெரும் உணர்ச்சிப் பெருக்கோடு, அவர் மகள் உயி ரோடு இருந்தால் நிச்சயமாக ஓரிரு நாட்களில் அவரிடம் வந்து சேருவாள் என்று நம்பிக்கை கொடுத்தார்கள்.

அந்த எட்டு வாலிபர்களும் முயன்றார்கள். உயிரைப் பணயமாக வைத்து அவர்கள் அம்ரித்சர் போய்ச் சேர்ந் தார்கள். பெண்கள், ஆண்கள், குழந்தைகள் என்று பலர் பாதுகாப்பான இடத்திற்கு அவர்களால் கொண்டு சேர்க்கப்பட்டார்கள். பத்து நாட்கள் கடந்து போயின. ஆனாலும் அவர்களால் ஷகினாவைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

ஒரு நாள் அவர்கள் லாரியில் அம்ரித்சரை நோக்கி மீட்புப் பணிக்காகப் போய்க்கொண்டிருந்தார்கள். சிஹார்த்தா அருகில் ஒரு பெண்ணைத் தெரு ஓரமாகப் பார்த்தார்கள். லாரியின் சத்தம் கேட்டு, மிரண்டு போன அந்தப் பெண் ஓடத் தொடங்கினாள். சமூக சேவகர்கள்

லாரியை நிறுத்தி, அந்தப் பெண் பின்னால் ஓடினார் கள். பிறகு, அவளை வயல்காட்டில் பிடித்தார்கள். அவள் மிக அழகாக இருந்தாள். அவளின் வலது கன்னத்தில் பெரிய மச்சம் ஒன்று இருந்தது. வாலிபர்கள் கூட்டத்தில் ஒருவன் அவளிடம், "பயப்படாதே... உன்பெயர் ஷகினா தானே?" என்றான்.

அந்தப் பெண் வெளிறிப்போனாள். அவள் பதிலேதும் சொல்லவில்லை... அவள் பாதுகாப்பாய் இருக்கிறாள் என்று இளைஞர்கள் நம்பிக்கை கொடுத்த பிறகு, அவ ளின் அச்சம் சற்றே தணிய, தான் சிராஜுதினின் மகள் ஷகினா தான் என்று ஒத்துக்கொண்டாள்

அந்த எட்டு வாலிபர்கள், ஷகினாவைச் சந்தோசப் படுத்த பல வழிகளில் முயன்றார்கள். சாப்பிடுவதற்கு உணவு கொடுத்தார்கள். குடிப்பதற்குப் பால் கொடுத் தார்கள். பிறகு அவளை லாரியில் ஏற்றினார்கள். அவள், தன்னிடம் துப்பட்டா இல்லாததால் சுயப்பிரக்ஞை யோடு திரும்பத் திரும்பத் தன்னுடைய மார்பகங்களை அவளுடைய கைகளால் மறைத்துக்கொள்ள முயன்று கொண்டே இருந்தாள். ஒருவன் தன்னுடைய கோட்டை அவளுக்குக் கொடுக்க முன்வந்தான்.

பல நாட்கள் கடந்தன... சிராஜுதினுக்கு ஷகினா பற்றி எந்தச் செய்தியும் கிடைக்கவில்லை. அவர் நாள் முழுக்கப் பல முகாம்களுக்கும் அலுவலகங்களுக்கும் அலைந்துகொண்டே இருந்தார். எங்கும் அவரின் மகள் பற்றிய செய்தி, கிடைக்கவில்லை. ஷகினா உயிரோடு இருந்தால் நிச்சயம் ஓரிரு நாட்களில் கண்டுபிடித்துவி டுவோம் என்று நம்பிக்கை கொடுத்த அந்தச் சமூக சேவகர்கள் வெற்றியடைய இரவில் பிரார்த்தனை செய் தார்.

ஒரு நாள் சிராஜுதின், இளம் சமூக சேவகர்களை முகாமில் பார்த்தார். அவர்கள் லாரியில் அமர்ந்திருந் தார்கள். சிராஜுதின் அவர்களை நோக்கி ஓடினார். லாரி கிளம்பப் போன சமயத்தில் அவர்களிடம் "குழந்தைக ளா, என் மகள் பற்றி ஏதாவது செய்தி உண்டா ?" என்று கேட்டார்.

எல்லோரும் ஒத்த குரலில் "வருவாள் வருவாள்.." என் றார்கள். லாரி நகரத் தொடங்கியது.

சிராஜுதின் மீண்டும் அந்த வாலிபர்கள் வெற்றிபெற பிரார்த்தனை செய்தார். அவர் இப்போது மிகவும் இலகு வாக உணர்ந்தார்.

ஒரு மாலை நேரத்தில், சிராஜுதின் அமர்ந்திருந்த தற்கு அருகில் ஏதோ குழப்பம் நடந்தது. நான்கு பேர் எதையோ தூக்கி வந்தார்கள்... விசாரித்ததில் இரயில் தண்டவாளத்திற்கு அருகில் ஓர் இளம் பெண் மயங்கிக் கிடந்ததாகவும் அவளைத் தூக்கி வருகிறார்கள் என் றும் தெரிந்தது. சிராஜுதின் அவர்களைப் பின்தொடரத் தொடங்கினார். தூக்கி வந்தவர்கள் அந்தப் பெண்ணை மருத்துவமனை அதிகாரிகளிடம் கொடுத்து விட்டுச் சென்றார்கள்.

சற்று நேரம் மருத்துவமனைக்கு வெளியே இருந்த ஒரு மரக்கம்பில் சாய்ந்து கொண்டு சிராஜுதின் சிந் தித்துக் கொண்டிருந்தார். பிறகு மருத்துவமனைக்குள் போகத் தொடங்கினார். அந்த அறையில் எவரும் இல்லை. ஸ்ட்ரெச்சர் மட்டுமே கிடந்தது. அதில் ஓர் உயி ரற்ற உடல் கிடந்தது. சிறு அடிகள் எடுத்து வைத்து சிராஜுதின் அதனை நோக்கி நகர்ந்தார். திடீரென்று அறையில் வெளிச்சம் பாய்ந்தது. சிராஜுதின் அந்த உயி ரற்ற உடலில், சாம்பல் நிறத்திற்கு மாறியிருந்த முகத்தில்

பிரகாசமான மச்சத்தைப் பார்த்தார். அவர் வீறிட்டார்: "ஷகினா!"

விளக்கைப் போட்ட டாக்டர் சிராஜுதினைப் பார்த்து, "உங்களுக்கு என்ன வேண்டும்?" என்றார்.

சிராஜுதினால் இதை மட்டுமே சொல்லமுடிந்தது: "ஐயா... ஐயா.. நான் அவளைப் பெற்றவன்"

டாக்டர் ஸ்ட்ரெச்சரில் கிடந்த அந்த உடலைப் பார்த்து, அதன் நாடித்துடிப்பைப் பரிசோதித்தார். பிறகு சிராஜுதி னிடம் ஜன்னலைக் காண்பித்துச் சொன்னார், "திற!"

ஸ்ட்ரெச்சரில் இருந்த உடல் சில அசைவுகளைக் காட்டியது.

செயலற்றுக் கிடந்த அதன் கைகள், இடுப்பில் கட்டியி ருந்த நாடாவை அவிழ்த்த ன.

பிறகு சல்வாரைக் கீழே இறக்கி விட்டது.

"உயிரோடு இருக்கிறாள்... என் மகள் உயிரோடு இருக்கிறாள்" என்று சிராஜூ தின் சந்தோசத்தில் கத்தி னார்.

அவளையே பார்த்து நின்று கொண்டிருந்த டாக் டருக்கு உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரை வியர்த்துக் கொட்டியது.

***



# ஹமீதின் குழந்தை

பாபு ஹர் கோபால், லாகூரில் இருந்து வந்தது முதல், ஹமீத் இது எனக்கான நேரம்' என்று சொல்லிக்கொள் வதற்கு ஒரு நொடியும் கிடைக்கவில்லை. அவன் வந்து சேர்ந்தவுடன் ஹமீத்திடம் ஒருடாக்ஸியை ஏற்பாடு செய் யச் சொன்னான்.

"நீ நீண்ட பயணம் செய்திருக்கிறாய் உனக்கு மிகவும் அசதியாக இருக்கும். சற்று ஓய்வெடுத்துக்கொள்" என் றான் ஹமீத் பாபு ஹர் கோபால் அவனின் யோசனையை நிராகரித்தான். "நான் இங்கு விடுமுறைக்காக வந்திருக் கிறேன். ஓய்வெடுப்பதற்கு இல்லை. மிகவும் சிரமப்பட்டு பத்து நாள் விடுமுறை எடுத்துக்கொண்டுள்ளேன். இந்த முறை நான் என்னை முழுமையாய்ச் சந்தோசங்களில் மூழ்கடித்துக் கொள்ளப் போகிறேன். இந்தப் பத்து நாட் களும் நீ எப்போதும் என்னுடனே இருக்க வேண்டும். நான் சொல்வதை எல்லாம் நீ செய்தாக வேண்டும். முத லில் சோடா எடுத்து வா" என்றான். காலையில் இருந்து குடிப்பதை அவனால் முடிந்த மட்டும் தடுத்துப் பார்த் தான். ஆனால் பாபு ஹர் கோபால் பிடிவாதமாக இருந் தான். அவன் பெட்டியைத் திறந்து அதிலிருந்த ஜானி வாக்கர் புட்டியை எடுத்துத் திறக்கத் தொடங்கினான். அவன் ஹமீத்திடம், "உன்னால் சோடா கொண்டு வர முடியவில்லை என்றால் தண்ணீராவது கொண்டு வா. உன்னால் அதைக்கூட கொண்டுவர முடியாதா?" என்று கேட்டான்.

பாபு ஹர் கோபால், ஹமீதைக் காட்டிலும் வயது கூடியவன். ஹமீதுக்கு முப்பது இருக்கும், பாபு ஹர் கோபாலுக்கு நாற்பது. இறந்து விட்ட ஹமீதின் தந்தை, பாபு ஹர் கோபால் குடும்பத்தாருடன் நெருங்கிய உறவு வைத்திருந்தார். அதனாலேயே அவனுக்கு அவன் மீது ஒரு விதமான அக்கறை இருந்தது. உடனடியாகச் சோடாவுக்குச் சொல்லி அனுப்பி, " ஆனால் நானும் உன்னோடு சேர்ந்து கொள்ள வேண்டும் என்று தயவு செய்து வற்புறுத்தாதே. உனக்குத் தெரியும், என் மனைவி இது போன்ற விசயங்களில் மிகவும் கண்டிப்பானவள் என்று" என்றான். பாபு ஹர் கோபால் எந்தக் காரணங்களையும் ஏற்றுக்கொள்ள மறுக்க, ஹமீத் அவனோடு சேர்ந்து கொள்ள வேண்டியதாயிற்று.

எதிர்பார்க்கப்பட்டது போல நான்கு சுற்று விஸ்கி குடித்தவுடன் பாபு ஹர் கோபால், "நாம் இப்போது வெளியே கிளம்பலாம். ஒரு நல்ல டாக்ஸியைப் பிடி தனியார் கம்பெனியின் கார் கிடைத்தால், அதைவிடச் சிறந்தது வேறு எதுவும் இல்லை. நான் இந்த மீட்டர் போட்ட வண்டிகளை வெறுக்கிறேன் " என்றான்.

ஹமீத் ஒரு தனியார் கம்பெனியிலிருந்து காருக்கு ஏற்பாடு செய்தான். அது புத்தம் புதிய ஃபோர்ட்' வண்டி அதன் டிரைவரும் நல்ல மாதிரியாக இருந்தான். பாபு ஹர் கோபால் மிகவும் சந்தோஷப்பட்டான். காருக்குள் ஏறி அமர்ந்தவுடன் தன்னுடைய மணிபர்சை எடுத்து, அதில் இருந்ததைப் பார்த்தான். அதில் நிறைய நூறு ரூபாய்த் தாள்கள் இருந்தன. அவன் தனக்குள், 'போதும்' என்று சொல்லிக்கொண்டான். பிறகு டிரைவரிடம், "நாம் இப்போது போகலாம்" என்றான்.

டிரைவர் தன்னுடைய தொப்பியைச் சரி செய்து கொண்டு, "எங்கு சேட்?" என்று கேட்டான். பாபு ஹர்

கோபால், ஹமீத் பக்கம் திரும்பி, "நீ சொல்லு" என் றான். ஹமீத் சற்று நேரம் யோசித்து, ஒரு முகவரி யைக் கொடுத்தான். கார் நகர்ந்தது. மிகக் குறுகிய நேரத்தில் நகரத்தில் மிகப் பிரபலமான ஒரு காமத் தரகன் அவர்களோடு வண்டியில் இருந்தான். அவன் இவர்களைப் பல இடங்களுக்கு அழைத்துச் சென்று பலவிதமான பெண்களைக் காட்டினான். ஹமீதுக்கு யாரையும் பிடிக்கவில்லை. அவன் தயவுதாட்சண்யம் இல்லாமல், சுத்தத்தை எதிர்பார்த்தான். அந்தப் பெண் கள் கனத்த ஒப்பனையை மீறி பார்ப்பதற்கு சுத்தமற்ற வர்களாகத் தெரிந்தார்கள். அத்தோடு அவர்கள் செய் யும் தொழில் அவர்கள் முகங்களில் ஒட்டப்பட்டிருந்தது. ஒரு பெண் செய்யும் தொழில் அவளுடைய தனித்தன் மையை விழுங்கிவிடக்கூடாது என்று ஹமீத் நினைத் தான். இதற்கு நேர் மாறாக பாபு ஹர் கோபால் அசுத் தங்களைக் கண்டால் சந்தோசம் கொள்பவன். அவன் கோடீஸ்வரன். அவன் நினைத்தால் பம்பாய் நகரம் முழு வதையும் சுத்தம் செய்ய முடியும். ஆனால் சுத்தத்தைப் பற்றி அவன் எப்போதும் கவலைப்பட்டதே கிடையாது. மிகக் குறைவான தண்ணீரைக் கொண்டு தன்னுடைய குளியலை முடித்துக்கொள்வான். நாள் கணக்காய் சவரம் செய்து கொள்ளாமல் இருப்பான். குவளை மிக அசுத்தமாக இருந்தாலும் அதைப்பற்றி கவலைப்படா மல் மிகச்சிறந்த விஸ்கியை அதில் ஊற்றிக்கொள்வான். அழுக்கடைந்த பிச்சைக்காரப் பெண்களோடு படுத்து விட்டு, அந்த அனுபவம் தான் ரொம்ப ரொம்ப சந்தோச மானது என்று சொல்லிக்கொள்வான்.

பாபு ஹர் கோபாலின் இந்த நடத்தைகளை ஹமீத் மிகவும் ஆச்சரியத்தோடு பார்ப்பான். மிகவும் விலை உயர்ந்த 'ஹச்கான்' அணிந்தாலும் அதன் உள்ளே அவன் போட்டிருக்கும் பனியன் அழுக்கேறி நாற்றமடித்

துக்கொண்டிருக்கும். எப்போதும் கைக்குட்டை வைத் திருப்பான் என்றாலும், தன்னுடைய மூக்கைக் குர்தா வின் கைகளில் தான் துடைத்துக்கொள்வான். தலை யணை உறைகள் கறை படிந்து நாற்றமடித்துக் கொண் டிருக்கும், ஆனாலும் அதனை மாற்ற வேண்டும் என்று கவலைப்பட மாட்டான். ஹமீத் இதைப் பற்றி நிறைய சிந் தித்துப் பார்த்தான் என்றாலும் காரணம் என்னவென்று அவனால் ஒரு முடிவுக்கு வர முடியவில்லை . அவன் பல முறை ஹர் கோபாலிடம் இதைப் பற்றி கேட்டிருக்கிறான். எப்போதும் அவன், "நீ அழுக்கைத் தவிர வேறு எதை யும் பார்க்க மறுக்கிறாய். அதுக்கு யார் என்ன செய்ய முடி யும்?" என்று தான் பதில் தருவான். ஹமீத் அமைதியாக இருந்தாலும் பாபு ஹர் கோபாலின் இந்த அசுத்தமான நடத்தைகளில் அருவறுப்பே கொண்டான்.

கார் நீண்ட நேரம் சுற்றிக்கொண்டே இருந்தது. அந் தத் தரகன், தான் காட்டிய பெண்களை எல்லாம் ஹமீத் நிராகரித்துக் கொண்டிருப்பதைக் கண்டு சற்று நேரம் யோசித்துப் பிறகு டிரைவரிடம், " எங்களை சிவாஜி பார்க் கிற்கு அழைத்து செல். இவர்களுக்கு அதுவும் பிடிக்க வில்லை என்றால், கடவுள் மீது ஆணையாக நான் என் தொழிலை விட்டுவிடுகிறேன்" என்றான்.

சிவாஜி பார்க் அருகில் பங்களா போல் இருந்த ஒரு கட்டடத்திற்கு அருகில் கார் நின்றது. தரகன் உள்ளே சென்றான். சிறிது நேரம் கழித்துத் திரும்பி வந்து அவன் பாபு ஹர் கோபாலையும், ஹமீதையும் உள்ளே அழைத் துச் சென்றான்.

அறைமிகச் சுத்தமாக இருந்தது. தரையெல்லாம் பள பளத்துக்கொண்டிருந்தது. அங்கிருந்த பொருட்களில் பேச்சுக்குக் கூட தூசு இல்லை. ஒரு சுவரில் விவே கானந்தர் படமும், மற்றொன்றில் காந்திஜியின் படமும்

தொங்கிக் கொண்டிருந்தது. அங்கு சுபாஷ் பாபுவின் படமும் இருந்தது. மேசையின் மீது கொஞ்சம் மராத் திப் புத்தகங்கள் கிடந்தன. அந்தத் தரகன் இவர்களை உட்காரச் சொன்னான். இருவரும் சோபாவில் அமர்ந்து கொண்டார்கள். அந்த அறை அதற்கு ஏற்ற பொருட்க ளைக் கொண்டிருக்கவில்லை என்றாலும், இருந்தவை எல்லாம் மிக ஒழுங்காக வைக்கப்பட்டிருந்தன. ஹமீ துக்கு இது ரொம்பவும் பிடித்திருந்தது. இது ஒரு விலைமாதுவின் வீடு என்ற எண்ணத்தையே ஏற்படுத்த வில்லை .

ஹமீத் பொறுமையில்லாமல் அந்தப் பெண் எப்படி இருப்பாள் என்று பார்க்க ஆவலோடு காத்திருந்தான். பக்கத்து அறையில் இருந்து வந்த ஒருவன், தரகனி டம் மெல்லிய குரலில் ஏதோ பேசினான். பிறகு இவர்கள் இருவர் பக்கமும் திரும்பி,

"சில நிமிடங்களில் வந்து விடுவாள். அவள் குளித்து விட்டு உடை அணிந்து கொண்டிருக்கிறாள்" என்று சொல்லி விட்டு வெளியேறினான்.

ஹமீத், மிகக் கவனமாக அந்த அறையில் இருந்த பொருட்களை எல்லாம் நோட்டமிடத் தொடங்கினான். ஒரு மூலையில் மேசைக்கு அருகில் பல வண்ணங்க ளில் அழகாக இருந்த ஒரு சிறு பாய் கிடந்தது. மேசை மீது இருந்த புத்தகங்களோடு பத்துப் பதினைந்து பத் திரிகைகளும் இருந்தன. பளபளத்துக்கொண்டிருந்த தரையில் ஒரு ஜோடி செருப்பு கிடந்தது. அது கிடந்த விதம் மிக மென்மையான பாதங்கள், அப்போதுதான் அதை விட்டு வெளியேறியதைப் போன்ற தோற்றத் தைத் தந்தது. கண்ணாடிக் கதவுகள் கொண்டிருந்த அலமாரியில் புத்தகங்கள் அடுக்கப் பட்டிருந்தன. பாபு ஹர் கோபால், தன்னுடைய சிகரெட்டைத் தரையில்

போட்டு ஷுவால் அணைத்த போது, ஹமீத் மிகவும் எரிச்சல் கொண்டான். அவன் அதை எடுத்து வெளியே விட்டெறிய நினைத்தபோது, பட்டுப்புடவை சரசரக்கும் சத்தத்தைக் கேட்டான். அவன் தன் தலையைத் திருப்ப, நல்ல நிறத்தில் இருந்த ஒரு பெண், புடவை கட்டிக் கொண்டு வெறுங்காலில் நடந்து வருவதைப் பார்த் தான். தலையில் போர்த்தியிருந்த முக்காடு விலகியி ருக்க நடுவகிடு எடுத்திருப்பதைக் கண்டான். அவன் அருகே வந்து வணக்கம் தெரிவித்த போது, மிக நேர்த் தியாகக் கொண்டை போடப்பட்டிருப்பதைப் பார்த்தான். அவளின் வணக்கங்களை ஏற்றுக்கொள்ளும் வகையில் ஹமீத் எழுந்து நின்றான். அந்தப் பெண் வெட்கப்பட்டுக் கொண்டே அவர்கள் அருகில் அமர்ந்து கொண்டாள்.

ஹமீதின் மதிப்பீட்டில் அந்தப் பெண்ணிற்கு நிச்சயமா கப் பதினேழு வயதுக்கு மேல் இருக்காது. பார்ப்பதற்கு நல்ல உயரமும், வெங்காயத்தில் இருப்பது போன்ற சற்றே வெள்ளைக்கு அப்பால் உள்ள நிறமும் கொண்டி ருந்தாள். அவள் கட்டியிருந்த புதுப் புடவையில் பார்ப்ப தற்குச் சுத்தமாகவும் பளிச்சென்றும் இருந்தாள். அவள் நாற்காலியில் அமர்ந்தபோது அந்தப் பெரிய கருப்புக் கண்களைக் கீழ் நோக்கிச் சாய்த்தாள். அவள் பூசியி ருந்த நறுமணம் ஹமீதை ஆட்கொண்டது. பாபு ஹர் கோபால் அவனிடம் ஏதோ சொன்ன போதுதான், அவனை யாரோ தட்டி எழுப்பியது போல் உணர்ந்தான். "நீ ஏதாவது சொன்னாயா?" என்று கேட்டான். பாபு ஹர் கோபால், "அவளிடம் பேசு" என்றான். பிறகு ஹமீதிடம் மெல்லிய குரலில், "என்னைப் பொறுத்தவரை எனக்கு அவளைப் பிடிக்கவில்லை" என்றான்.

ஹமீத் கோபம் கொண்டான். அவன் அந்தப் பெண் ணைப் பார்த்துக் கொண்டே சிந்தனையில் மூழ்கினான். இங்கே ஒரு பெண், அவள் இளமையின் முதல் படியில்

சற்றும் கறை படியாமல் நின்று கொண்டிருக்கிறாள். அவ ளுக்கான விலை கொடுக்கப்பட்டால் அந்தப் பெண் ஓர் இரவிற்கு மட்டுமல்ல, பல இரவுகளுக்கும் அவனுடை யவளாக இருப்பாள். இந்த எண்ணம் அவனை மிகவும் கவலை கொள்ளச் செய்தது. இந்த ஏற்றத்தாழ்வுகள் ஏன்? இவளைப் போன்ற பெண்கள் எதற்காக விற்கப் பட வேண்டும் என்று தனக்குள் கேட்டுக் கொண்டான். பிறகு அவள் வாடகைக்கு இல்லை என்றால், அவள் தனக்குக் கிடைத்திருக்க மாட்டாள் என்ற எண்ணமும் வந்து போனது.

பாபு ஹர் கோபால் பொறுமை இல்லாமல் மீண்டும் கேட்டான், "நீ அவளைப் பற்றி என்ன நினைக்கிறாய்?" ஹமீதின் பகற் கனவு கலைந்தது. "உனக்கு அவளைப் பிடிக்கவில்லை . ஆனால் எனக்கு..." அவன் தன் சிந்த னையை இடை மறித்தான். பாபு ஹர் கோபால் சிறந்த நண்பன். அவன் புரிந்து கொண்டான். வியாபார ரீதி யில் தரகனிடம், "என்ன பணம் கொடுக்க வேண்டும்?" என்று கேட்டான். அந்தத் தரகன், "அவளை நன் றாகப் பார்த்துக்கொள்ளுங்கள், சமீபத்தில் தான் இந் தத் தொழிலுக்கு வந்திருக்கிறாள்" என்றான். பாபு ஹர் கோபால் அவனைத் தடுத்து, " இந்தக் கொக்கி எல் லாம் வேண்டாம். என்ன விலை? அதுக்கு வா" என்றான். அந்தத் தரகன் தன் பீடியைப் பற்ற வைத்துக்கொண்டே, "அவளை நாள் முழுக்கவோ அல்லது இரவு முழுக் கவோ வைத்துக்கொள்ளுங்கள். அதுக்கு நூறு ரூபாய். மேலேயும் கிடையாது குறைத்தும் கிடையாது" என்றான்.

பாபு ஹர் கோபால் ஹமீத் பக்கம் திரும்பி, "நீ என்ன சொல்கிறாய் " என்று கேட்டான். பாபு ஹர் கோபாலுக் கும் அந்தத் தரகனுக்கும் இடையே நடந்த உரையாடல், அந்தப் பெண்ணை அவமானப்படுத்துவதைப் போலி ருப்பதாக நினைத்து ஹமீத் எரிச்சல் கொண்டான்.

அப்பழுக்கற்ற அழகு, பிரகாசித்துக் கொண்டிருக்கும் இளமை, மராத்திய அழகின் முன்மாதிரியாய் சொர்க்கத் தில் இருந்து அனுப்பப்பட்டவள், இவளா வெறும் நூறு ரூபாய்க்கு மதிப்பிடப்படுகிறாள் என்று நினைத்தான். பிறகு இந்த விலை ஒரு நாளுக்கோ அல்லது ஒரு இரவுக்கோதான் என்ற எண்ணமும் வந்தது. அத்தோடு இவளைப் போன்ற பெண்ணோடு ஒருத்தன் தன்னு டைய முழு வாழ்க்கையையும் கழிக்க முடியும் என்ற எண்ணமும் வந்தது. பாபு ஹர் கோபால், "நீ என்ன சொல்கிறாய்?" என்று மறுபடியும் கேட்டான் ஹமீத் தன் னுடைய உணர்வுகளை வார்த்தைகளில் போட விருப் பம் கொள்ளவில்லை. பாபு ஹர் கோபால் புன்னகைத் தான், தன்னுடைய பர்சை எடுத்துத் தரகனிடம் நூறு ரூபாயை நீட்டி, "இந்தா உன்னுடைய நூறு ரூபாய், கூட வும் கிடையாது, குறைத்தும் கிடையாது" என்று சொல்லி ஹமீத்திடம், "இப்போது எல்லாம் முடிந்து விட்டது, வா கிளம்பலாம்" என்றான்.

ஹமீத் அமைதியாக இருந்தான். இருவரும் வெளியே வந்து காரில் அமர்ந்து கொண்டார்கள். சிறிது நேரத்தில் தரகன் அந்தப் பெண்ணை அழைத்து வந்தான். முத லில் அறைக்குள் நுழைந்தது போலவே வெட்கத்தோடு அவர்களோடு அமர்ந்து கொண்டாள். ஹமீதுக்கு ஒரு ஹோட்டல் அறையை ஏற்பாடு செய்து விட்டு பாபு ஹர் கோபால் ஒரு பெண்ணைத் தேடி தனியே கிளம்பிச் சென்றான்.

அந்தப் பெண் கீழ் நோக்கிய பார்வையோடு கட்டி லில் அமர்ந்து கொண்டாள். ஹமீத் பெருமூச்சு விட் டுக்கொண்டிருந்தான். பாபு ஹர் கோபால் மிச்சமிருந்த விஸ்கி பாட்டிலை விட்டுச் சென்றிருந்தான். அதில் பாதி தான் இருந்தது. ஹமீத் சோடாவை வரவழைத்து ஒரு பெரிய அளவு எடுத்துக்கொண்டான். அது அவனுக்குச்

சற்று தெம்பைக் கொடுத்தது. அவன் அந்தப் பெண் அருகே வந்து, "உன் பெயர் என்ன?" என்று கேட்டான். அந்தப் பெண் தன் கண்களை உயர்த்தி, "லதா மங் லோகர் " என்று பதில் தந்தாள். அவளின் குரல் மிக இனிமையாக இருந்தது. ஹமீத் மற்றொரு பெரிய அளவு விஸ்கி எடுத்துக்கொண்டு, அவளுக்கு நெருக்கத்தில் வந்து அவனுடைய விரல்களை அவளின் தலைமு டியின் ஊடாகச் செலுத்தத் தொடங்கினான். அவ ளின் கண் இமைகள் அடித்துக்கொண்டன. அவளின் மார்பகங்களை மறைத்திருந்த முந்தானையை விலக்கி விட்டான். மிக இறுக்கமாக அவள் அணிந்திருந்த இர விக்கைக்குள் அவளின் முலைகள் மூச்சுக்கு ஏற்றாற் போல் ஏறி இறங்குவதைக் கண்டான். ஓர் அதிர்வு, அவ னின் உடல் ஊடாகப் பாய்ந்து சென்றது. போதையூட்டும் அந்த உடல் வெப்பம் அவனை உறங்க வைக்கும் என்ற ஏக்கத்தோடு, அவளின் இரவிக்கையாக இருக்க விருப் பம் கொண்டான்.

லதாவுக்கு ஹிந்துஸ்தானி தெரியவில்லை. மங்லோ கரிலிருந்து இரண்டு மாதங்களுக்கு முன்புதான் வந்தி ருக்கிறாள். அவளால் மராத்தி மட்டுமே பேச முடியும். அந்த மொழி நளினமற்றது என்றாலும், அவள் பேசும் போது, அது மிக இனிமையாக இருந்தது. ஹமீதின் கேள்விகளுக்கு அவள் அரைகுறை ஹிந்துஸ்தானியில் பதில் தந்தாள். ஆனால் அவனுக்குப் பிடித்திருந்ததால் அவளை மராத்தியிலேயே பேசச் சொன்னான். அவள் சொல்வதை அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை என்றாலும், அவள் பேசுவதை ரசித்துக் கொண்டிருந் தான். சில சமயங்களில் அவன் அவளுக்கு முத்தங்கள் கொடுத்து, "நீ உச்சரிக்கும் இந்த இனிமையான சொற் களை என்னுடைய வாயில் போட்டுவிடு. நான் அதன் ருசியை அனுபவிக்க வேண்டும்" என்றான்.

அவளுக்கு எதுவும் புரியவில்லை என்றாலும், சிரித்தாள். ஹமீத் அவளைத் தன் கரங்களால் இறுக்க அணைத்துக்கொண்டான். அவளின் புஜங்கள் சிறப்பாக உருகொண்டு நல்ல நிறத்தில் இருந்தன. அவளின் இரவிக்கையின் இறுக்கம் அவளின் புஜத்தில் தன் பாதிப்பை ஏற்படுத்தியிருந்தது. ஹமீத் அவளின் புஜங்களில் பல முறை முத்தங்கள் கொடுத்தான். அவள் கைகளின் ஒவ்வொரு பகுதியும் அவனைக் கவர்ந்திழுப்பதாக இருந்தது.

இரவு ஒன்பது மணிக்கு லதாவை அவளுடைய வீட்டில் விட்டபோது, ஹமீத் அவனுள் வெறுமையை உணர்ந்தான். அவனின் உடலில் இருந்து அவளின் வெல்வெட் போன்ற தோல் பிய்த்து எடுக்கப்பட்டு விட்டதைப் போல உணர்ந்தான். இரவு முழுவதும் இந்தப் பக்கம், அந்தப் பக்கம் என்று மாறி மாறிப் புரண்டே கழித்தான். காலையில் பாபு ஹர் கோபால் வந்து அந்தப் பெண் எப்படி இருந்தாள் என்று கேட்ட போது, " அந்தப் பெண் பரவாயில்லை" என்று மட்டுமே சொன்னான். "நீ மறுபடியும் என்னோடு வர விருப்பப்படுகிறாயா?" என்று பாபு ஹர் கோபால் கேட்டான். "இல்லை" என்று ஹமீத் பதில் தந்தான். "எனக்கு அவசரமாக ஒரு வேலை இருக்கிறது" என்றான். "முட்டாள் தனமாகப் பேசாதே" என்றான் பாபு ஹர் கோபால். ஆனால் தனக்கு உண்மையிலேயே மிக அவசரமாக வேலை இருப்பதாகவும், ஒருவரைச் சந்திப்பதற்கு புனே போக வேண்டி இருப்பதாகவும் ஹமீத் சொன்னான்.

பாபு ஹர் கோபால் அதற்கு மேல் அவனைத் தொந்தரவு செய்ய விரும்பாமல் புதுப் புது சந்தோசங்களைச் சதைகளில் இருந்து பெறுவதற்காகப் புறப்பட்டுச் சென்றான்.

ஹமீத் ஒரு டாக்ஸியைப் பிடித்து, வங்கியில் இருந்து கொஞ்சம் பணத்தை எடுத்துக்கொண்டு நேராக லதா வின் வீட்டிற்குச் சென்றான். அவள் குளித்துக்கொண் டிருந்தாள். போன முறை அவள் குளித்து முடித்தபின் வருவாள் என்று சொன்ன அதே மனிதன் வெளியே உட் கார்ந்து கொண்டிருந்தான். ஹமீத் சற்றுநேரம் அவனிடம் ஏதோ பேசிவிட்டு, நூறு ரூபாய் நோட்டைக் கொடுத் தான். லதா வந்தாள், அவள் முன்னைக் காட்டிலும் அழ காகவும் சுத்தமாகவும் காணப்பட்டாள். அவள் கைகூப்பி அவனை வரவேற்றாள். ஹமீத் எழுந்து கொண்டு அந்த மனிதனிடம் "நான் கிளம்புகிறேன். தயவு செய்து அவளை அழைத்து வா, நான் நேரத்திற்கு அவளை இங்கு கொண்டு வந்து விட்டு விடுகிறேன்" என்று சொல்லி, வெளியே வந்தான். லதா வந்து அவனுக்கு அருகில் அமர்ந்து கொண்டாள். அவள் தன்னோடு இருப்பதால் இனம் புரியாத சந்தோஷத்தை அனுபவித் தான். அவளை டாக்ஸியிலேயே அணைத்துக்கொள்ள வேண்டும் என்று ஏங்கினான்; ஆனால் அவள் தடுத் தாள்.

லதா, ஹமீதோடுமாலை ஏழரை மணிவரை இருந் தாள். அவளை அவளுடைய வீட்டில் விட்ட பிறகு அவள் தன்னுடன் இருந்த போது இருந்த நிம்மதி இல்லாமல் இருப்பதை உணர்ந்தான். இரவெல்லாம் அந்த நிம்மதி இல்லாமல் கழித்தான். தொடர்பில்லாமல் பல எண் ணங்கள் அவனை அச்சுறுத்தின. அவனுக்குத் திரு மணம் ஆகி இரண்டு குழந்தைகள் இருக்கின்றனர். மிகவும் முட்டாள்தனமான செயலில் ஈடுபட்டிருப்பதாக உணர்ந்தான். அவனின் மனைவிக்கு இதைப்பற்றித் தெரியவந்தால் பெரிய புயலே வீசும் என்று நினைத்தான். எப்போதாவது ஒரு முறை இது போன்று சறுக்கி விழு வதை ஏற்றுக் கொள்ளலாம். ஆனால் இது ஏறக்குறைய

பழக்கமாகவே மாறிக்கொண்டிருக்கிறது என்று பயந் தான். இனி மீண்டும் சிவாஜி பார்க்கிற்குப் போவதில்லை என்று தீர்மானம் எடுப்பான். ஆனால் காலையில் விடிந்த உடன் அவனின் தீர்மானம் காணாமல் போய்விடும். அடுத்த நாள் பத்து மணிக்கு ஹோட்டல் கட்டிலில் அவன் லதாவோடு படுத்துக் கிடப்பான்.

அடுத்த பதினைந்து நாட்களுக்கு ஹமீத் தொடர்ந்து லதாவிடம் சென்று கொண்டிருந்தான். அவனின் வங் கியில் இரண்டாயிரம் ரூபாய் குறைந்துவிட்டது. அவன் இல்லாததால் அவனின் வியாபாரமும் நஷ்டப்பட்டது. இதை அவன் பிரக்ஞை பூர்வமாக உணர்ந்திருந்தாலும், லதா அவனின் உடலையும் மனதையும் முழுமையாகத் தன் பிடியில் வைத்திருந்தாள். ஒரு நாள் ஹமீத் துணிச்ச லோடு இந்த உறவை முறித்துக் கொள்வது என்று தீர்மா னம் செய்தான்.

பல நாட்கள் கழித்து ஹமீத், லதா வீட்டிற்கு மீண்டும் சென்றான். அவள் வந்த போது அவளின் எடை கூடி யிருப்பதை ஹமீத் கவனித்தான். அவளின் மார்பகங்கள் பெரிதாகிக் கிடந்தன. அவளின் முகம் உப்பிக் கிடந் தது. ஹமீத் நூறு ரூபாயைக் கொடுத்து விட்டு அவளை ஹோட்டலுக்கு அழைத்துச்சென்றான். அங்கு அவள் கருவுற்று இருப்பதை அறிந்து கொண்டான். அவன் தன் மேல் இருந்த பிடிப்பை முழுமையாக இழந்தான். படப டப்போடு, "யார் அதனுடைய தந்தை?" என்று கேட்டான். அவன் என்ன சொல்கிறான் என்று லதாவால் புரிந்து கொள்ள முடியவில்லை. மிகச் சிரமப்பட்டு அவன் சொல்ல வருவதை அவளுக்குப் புரிய வைத்தான். அவள் தலையை ஆட்டி, "எனக்குத் தெரியாது" என்று மட்டுமே சொன்னாள். வியர்த்துக் கொட்டிக்கொண்டி ருக்க அவன் மறுபடியும், "உனக்கு உண்மையிலேயே தெரியாதா?" என்று கேட்டான். லதா மீண்டும் தெரி

யாது என்பது போல் தலையை ஆட்டினாள். ஹமீத் எச்சிலை விழுங்கி, "என்னுடையதாக இருக்குமா?" என்று கேட்டான். அவளின் பதில் மறுபடியும் "எனக்குத் தெரியாது" என்றுதான் இருந்தது. ஹமீத் மேலும் பலவற்றை விசாரித்தான். பல கேள்விகளைக் கேட்டான். அவனால் தெரிந்து கொள்ள முடிந்தது எல்லாம், கருவைக் கலைக்க மேற்கொண்ட முயற்சிகள் எல்லாம் தோற்றுப் போய் விட்டன. எந்த மருந்தும் வேலை செய்யவில்லை. சொல்லப்போனால் ஒரு மருந்து அவளை நோயுறச் செய்து சில நாட்கள் படுக்கையில் கிடத்தியிருக்கிறது. ஹமீத் நிறைய சிந்தித்தான். அவனால் ஒரு முடிவுக்குதான் வர முடிந்தது: அவன் ஒரு நல்ல மருத்துவரைப் பார்க்க வேண்டும், அதுவும் உடனடியாக, ஏனென்றால் கருவுற்று இருப்பதால் லதாவை அவளின் கிராமத்திற்குத் திரும்ப அனுப்பப் போகிறார்களாம்.

ஹமீத் அவளின் வீட்டை விட்டு வெளியேறி ஒரு மருத்துவ நண்பரைப் பார்க்கச் சென்றான். அந்த டாக்டர் இது மிகவும் ஆபத்தான விசயம் என்றும், இது வாழ்வா சாவா சம்பந்தப்பட்டது என்றும் ஹமீத்திடம் விளக்கினார். அதற்கு ஹமீத், “இங்கு இது என்னுடைய வாழ்வா சாவா சம்பந்தப்பட்டது. அது என்னுடைய குழந்தைதான் என்பதில் எனக்குக் கொஞ்சமும் சந்தேகம் கிடையாது. நான் விரிவாகக் கணக்குப் போட்டுப்பார்த்து விட்டேன். அவளிடம் எல்லா விவரங்களையும் கேட்டுத் தெரிந்து கொண்டேன். என்னுடைய நிலைமையை நினைத்துப் பார் - அவள் என்னுடைய குழந்தையைச் சுமந்து கொண்டிருக்கிறாள். இந்த எண்ணமே எனக்கு நடுக்கத்தைக் கொடுக்கிறது. நீ உதவி செய்யவில்லை என்றால் எனக்குப் பைத்தியம் பிடித்துப் போகும்” என்றான்.

டாக்டர் ஏதோ ஒரு மருந்தைக் கொடுக்க, அவன் அதை லதாவிடம் கொடுத்தான். ஆனால் அதனால் எந்தப் பயனும் இல்லை. ஹமீத் நல்ல செய்திக்காகப் பொறுமையின்றிக் காத்துக் கிடந்தான். ஆனால் லதா மீண்டும் அவனிடம் அந்த மருந்துகளால் எந்தப் பய னும் இல்லை என்று தெரிவித்தாள். ஹமீத் வேறு ஒரு மருந்தை எடுத்து வந்தான். அதுவும் வேலை செய் யவில்லை. இப்போது முன்னுக்கு வந்த வயிறு, லதா கர்ப்பமாகியிருப்பதைச் சந்தேகத்திற்கு இடமில்லாமல் நிரூபித்தது. அவளோடு இருந்தவர்கள், அவளைக் கிரா மத்திற்கு அனுப்ப வேண்டும் என்று இருந்தார்கள். வேறு ஏதேனும் ஒரு வழியைக் கண்டு பிடிக்க முடியும் என்று ஹமீத் அவர்களை இன்னும் கொஞ்சம் காத்திருக்கும் படி சொன்னான். ஆனால் அவனின் நம்பிக்கைகள் எல் லாம் அவனை ஏமாற்றின. வேறு எந்த வழிகளிலும் அவன் நினைத்ததைச் சாதிக்க முடியவில்லை. ஹமீத் இப்போது அவனின் சாமர்த்தியங்களுக்கு வெளியே நின்று கொண்டிருந்தான். அவனுக்கு அடுத்து என்ன செய்வது என்று புரியவில்லை. தன்னையும் பாபு ஹர் கோபாலையும் சபித்துக் கொண்டான். பிறப்பது பெண் குழந்தையாக இருந்தால் சதை வியாபாரத்தில் இன்னு மொரு வருகையாக இருக்கும் என்ற எண்ணம் அவ னின் உணர்ச்சிகளை மரத்துப் போகச் செய்தது. இந்த முட்டாள்தனத்திற்காக அவனையே சபித்துக்கொண் டான். அவனுடைய பெண், அவளின் தாயைப்போலவே விலைமாதுவாக இருப்பாள் என்ற சிந்தனை, அவனுள் தற்கொலை செய்து கொள்ளும் எண்ணத்தை ஏற்படுத் தியது.

ஹமீத், லதாவை வெறுக்கத் தொடங்கினான். அவ ளின் அழகு அவனின் நரம்புகளில் எந்த அதிர்வுக ளையும் உருவாக்கவில்லை. எதேச்சையாக அவனின்

கை அவளைத் தொட்டால் கூட, எரிந்து கொண்டிருந்த கரித்துண்டைத் தொட்டுவிட்டது போல உடனடியாகக் கையை விலக்கிக்கொண்டான். அவனின் ஒரே சிந் தனை அந்தக் குழந்தை எப்படியாவது சாக வேண்டும். எத்தனையோ ஆண்கள் அவளோடு படுத்திருக்க, தன் மூலம் அவள் கருத்தரித்திருப்பதற்காகத் தன் விதியை நொந்து கொண்டான்.

சில சமயம் ஒரு கத்தியை அவள் வயிற்றில் பாய்ச் சியோ அல்லது அது போல் வேறு ஏதாவது செய்தோ அவளின் வயிற்றுக்குள் இருக்கும் குழந்தையைக் கொன்று விட வேண்டும் என்பது போல் நினைத்தான். லதாவும் மிகவும் கவலைப்பட்டாள். அவள் எப்போதும் தனக்குக் குழந்தை வேண்டாம் என்றே நினைத்தாள். முதலில் அந்தக் குமட்டல்கள் அவளைப் பரிதாபத்திற் குரியவளாக்கியது. இப்போது அவளுள் கூடியுள்ள கனம் மிகவும் அசவுகரியமாக உணர வைத்தது. இருந்தாலும் அவள் இதைப்பற்றி எந்தக் கவலையும் படவில்லை என்றே ஹமீத் நினைத்தான். சிலசமயம் வேறு எந்தக் காரணத்திற்காக இல்லை என்றாலும், தன் மீது பரிதா பம் கொண்டாவது குழந்தையை அவள் வாந்தி எடுத்து விட வேண்டும் என்று நினைத்தான்.

மருந்துகள் வேலை செய்ய மறுத்தவுடன், சாமியார் களிடமும், மந்திரவாதிகளிடமும் தஞ்சம் புகுந்தான். ஆனாலும் எதுவும் தன்னை அசைக்க முடியாதபடி குழந்தை திடமாக இருந்தது. கடைசியாக வேறு எந்த வழியும் இல்லாததால் லதா அவளின் கிராமத்திற் குப் போக வேண்டியதாயிற்று. அவனது கணக்குப்படி குழந்தை அக்டோபர் மாதம் முதல் வாரத்தில் பிறக்க வேண்டும். குழந்தை பிறந்த உடனே இறந்தாக வேண் டும் என்ற முடிவை ஹமீத் எடுத்து விட்டான். இதைச் செய்வதற்கு அவன் நகரத்தில் உள்ள பிரபலமான குற்ற

வாளியின் உதவியை நாடினான். நிறைய செலவு செய்து அவர்களை ஆடம்பரமாக உபசரித்தான்.

நேரம் வந்தபோது, அவன் தாதா கரீப் என்ற குற்றவாளியிடம் தன்னுடைய திட்டத்தை வெளிப்படுத்தினான். ஆயிரம் ரூபாய்க்கு ஒப்பந்தம் தீர்மானமாயிற்று. ஹமீத் உடனடியாகப் பணத்தைக் கொடுத்தான். தாதா கரீப், "நான் பச்சிளம் குழந்தையைக் கொலை செய்ய மாட்டேன் நான் அதைத் திருடிக் கொண்டு வந்து உங்களிடம் கொடுத்துவிடுகிறேன். பிறகு நீங்கள் நினைப்பது போல் என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளலாம். இந்த ரகசியம் என் இதயத்தோடு புதைந்துவிடும். நீங்கள் அதைப் பற்றி எந்தக் கவலையும் கொள்ள வேண்டாம்" என்றான்.

ஹமீத் சம்மதித்தான். அவன் குழந்தையை இரயில் தண்டவாளத்தில் வைத்தாலே போதும், அதுவே அதன் மரணத்தை ஊர்ஜிதப்படுத்திவிடும், அல்லது அதை வேறு ஏதேனும் ஒரு வழியில் ஒழித்து விடலாம் என்று நினைத்தான். தாதா கரீபோடு ஹமீத் லதாவின் கிராமத்திற்கு வந்தான். குழந்தை பிறந்து இரண்டு வாரங்கள் ஆகிவிட்டது என்று தாதா கரீப் அறிந்து வந்தான். ஹமீத் அவனுடைய முதல் மகன் பிறந்த போது ஆக்கிரமித்த உணர்வுகள் மீண்டும் தன்னுள் எழுவதைப் போல் உணர்ந்தான். ஆனால் உடனடியாக அதை எல்லாம் கசக்கி எறிந்து கரீபிடம், "குழந்தையை இன்று இரவே கொண்டுவருமாறு பார்த்துக்கொள்" என்றான்.

ஆள் ஆரவாரமற்ற ஓர் இடத்தில் இரவு பன்னிரெண்டு மணிக்கு ஹமீத் காத்திருந்தான். அவன் பெரும் புயலில் சிக்கி இருந்தான். மிகச் சிரமப்பட்டு தன்னை ஒரு கொலைகாரனாக மாற்றிக் கொண்டுள்ளான். அவனுக்கு முன்னால் இருந்த பெரிய பாறாங்கல்லைப்

பலமுறை தூக்கி அதன் கனத்தைத் தன்னுள் ஏற்றிக்கொண்டுள்ளான். ஒரு குழந்தையின் தலையைச் சிதைக்க அது போதுமானது.

மணி பன்னிரெண்டரை ஆனவுடனே யாரோ நடந்து வரும் சத்தத்தை ஹமீத் கேட்டான். அவனின் இதயம் தூள் தூளானது. இருட்டில் இருந்து தாதா கரீப் வெளியே வந்தான். அவனது கையில் ஒரு சிறு மூட்டை இருந்தது. ஹமீத்தின் அருகே வந்து, நடுங்கிக் கொண்டிருந்த அவனின் கைகளில் அந்த மூட்டையை வைத்து, "இதோ நீங்கள் கேட்டது. இந்த ஒப்பந்தத்தில் என்னுடைய பங்கு முடிந்து விட்டது. நான் கிளம்புகிறேன்" என்று சொல்லி அவன் கிளம்பிப்போனான். ஹமீத் உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரை நடுங்கிக்கொண்டிருந்தான். அந்த மூட்டைக்குள் குழந்தை கால்களை உதைத்துக் கொண்டிருந்தது. ஹமீத் அதைக் கீழே வைத்தான். தன்னுடைய நடுக்கத்தில் இருந்து மீள்வதற்கு முயற்சி செய்தான். சற்று நிதானத்தை அடைந்தவுடன், அந்தக் கனமான கல்லைத் தூக்கினான். குழந்தையின் தலையைக் குறிபார்த்தான். அந்தக் கல்லைக் குழந்தையின் தலையில் போடப்போகும் அந்தச் சமயத்தில் அவனுக்கு இந்தச் சிந்தனை எழுந்தது: 'குழந்தையை ஒரு முறை பார்த்தால் என்ன?' அவன் கல்லைக் கீழே வைத்தான். நடுங்கிக்கொண்டிருந்த, கைகளால் தீப் பெட்டியை எடுத்து ஒரு குச்சியைப் பற்ற வைத்தான். அது அவனின் கையிலேயே எரிந்து போனது. அதைக் குழந்தையின் அருகில் கொண்டு வர அவனுக்குத் தைரியம் இல்லை. தன்னை நிதானப்படுத்திக்கொள்ள மீண்டும் சற்று நேரம் சிந்தித்தான். பிறகு குழந்தையைச் சுற்றியிருந்த அந்தத் துணியை விலக்கினான். மீண்டும் ஒரு குச்சியைப் பற்ற வைத்து அதை அந்தக் குழந்தையின் அருகில் கொண்டு வந்தான். முதலில் சாதாரணமா

கவும் பிறகு கவனமாகவும் அந்தக் குழந்தையைப் பார்த்தான். தீக்குச்சி அணைந்து போயிற்று. அவன் பார்த்த குழந்தையின் முகம், அவன் முன்னரே எங்கோ பார்த்திருந்த ஏதோ ஒரு முகச் சாயலைக் கொண்டிருப்பதாக நினைத்தான். எங்கு, எப்போது அந்த முகத்தைப் பார்த்தான் என்று அவனால் நினைவு கூர முடியவில்லை. மீண்டும் ஒரு தீக்குச்சியைப் பற்ற வைத்து மறுபடியும் குழந்தையைப் பார்த்தான். அவனின் மூளைக்குள் ஒரு மின்னல் வெட்டியது. சிவாஜி பார்க்கில் லதாவோடு வாழ்ந்து கொண்டிருந்த அந்த மனிதன் முகம் அவன் முன்னே நின்றது. குழந்தையின் முகம் அவனுடையது போலவே, அதே சாயலில் இருந்தது. ஹமீத் உரக்கச் சிரித்தான். குழந்தையை இருந்த இடத்திலேயே விட்டு விட்டு அவன் கிளம்பிச் சென்றான்.

***



## மூன்றரையணா

"நான் ஏன் ஒரு கொலையைச் செய்தேன். ஏன் என் கரங்களை ஒரு மனிதனின் இரத்தத்தால் கறைப்படுத் திக்கொண்டேன்? இது பெரிய கதை. நான் எல்லா விசயத்தையும் உங்களிடம் சொல்லும் வரை உங்களால் எதையும் புரிந்துகொள்ள முடியாது. ஆனால் இப்போது உங்களின் உரையாடல் - குற்றங்கள் மற்றும் தண்ட னைகள் பற்றியும், சிறைச்சாலைகள் மற்றும் மனிதர்கள் பற்றியும் உள்ளது. நான் சிறைக்குச் சென்றிருப்பதால் என் கருத்துகள் தவறாக இருக்க முடியாது. குற்றவாளி யைச் சிறைச்சாலைகளால் சீர்திருத்த முடியாது என்ற மண்டோ சாகிப்பின் கருத்தோடு நான் முழுமையாக உடன்படுகிறேன். ஆனால் இந்தக் கருத்து கணக்கில் அடங்காத முறை திரும்பத் திரும்பச் சொல்லப்பட்டுள் ளதால், இதற்கு மேலும் முக்கியத்துவம் கொடுத்துப் பேசுவோமானால் அது ஒரு நகைச்சுவையைத் திரும் பத் திரும்பச் சொல்லப்படுவது போல் ஆகிவிடும். இது தெரிந்திருந்தும் இன்னும் நூற்றுக்கணக்கான சிறைச் சாலைகள் இருப்பது ஒன்றும் நகைச்சுவையல்ல. கைவிலங்குகள் இன்னும் இருக்கின்றன. இந்த மனித இனத்தின் அவமானமான கால் விலங்குகள் இன்னும் இருக்கின்றன. கேவலமான அந்த அணிகலன்களை நான் அணிந்திருக்கிறேன்."

இதையெல்லாம் சொல்லிவிட்டு, ரிஸ்வி என்பக்கம் திரும்பிப்புன்னகைத்தான். அவனின் உதடுகள் நீக்ரோ வின் உதடுகள் போல துடித்தன. அவனின் சிறிய

போதையேறிய கண்கள், கொலைகாரனின் கண்கள் போல் இருந்தாலும், அதில் ஒரு பிரகாசம் இருந் தது. எங்களின் உரையாடலில் அவன் திடீரென்று பங் கெடுத்துக்கொண்டவுடன் நாங்கள் ஆச்சரியப்பட்டுப் போனோம். எங்களுக்கு அருகாமையில் இருந்த நாற் காலியில் அமர்ந்திருந்த அவன் கிரீம் காப்பி குடித்துக் கொண்டிருந்தான். அவன் தன்னை அறிமுகம் செய்து கொண்ட போது, அவன் செய்த கொலையோடு தொடர் புடைய விஷயங்கள் எங்கள் நினைவிற்கு வந்தன. அர சாங்கத்தின் சாட்சியாக மாறிய இவன் புத்திசாலியாகத் தன்னையும் காப்பாற்றிக்கொண்டு தன் நண்பர்களை யும் தூக்குமேடையிலிருந்து காப்பாற்றியிருக்கிறான்.

அவன் அதே நாளில் விடுதலை செய்யப்பட்டுள் ளான். ரொம்ப மரியாதையோடு என்னிடம் பேசினான் "என்னை மன்னித்துக் கொள்ளுங்கள் மண்ட்டோ சாகிப், நீங்கள் விவாதித்துக் கொண்டிருந்த விஷயத்தில் எனக்கும் ஆர்வம் உண்டு. எனக்கும் இலக்கியங்களுக் கும் எந்தத் தொடர்பும் கிடையாது என்றாலும், நீங்கள் விவாதித்துக் கொண்டிருக்கும் விசயம் பற்றி என்னு டைய கரடுமுரடான இலக்கியத் தன்மையற்ற மொழியில் என்னால் நிச்சயமாக ஏதாவது சொல்ல முடியும்", பிறகு அவன், "என் பெயர் ஸித்திக் ரிஸ்வி. லன்டா பஜாரில் நடந்த கொலையில் நானும் சம்பந்தப்பட்டுள்ளேன்"

அந்த கொலையைப் பற்றி நான் படித்ததெல்லாம் தெளிவில்லாமல் இருந்தது. ரிஸ்வி தன்னை அறிமுகம் செய்து கொண்டவுடன், அந்தக் கொலை பற்றிய எல் லாத் தலைப்புச் செய்திகளும் என் நினைவில் மீண்டெ ழுந்தன.

எங்களின் உரையாடலின் தலைப்பு சிறைகளால் குற் றவாளிகளைச் சீர்திருத்தமுடியுமா என்பது பற்றிதான்.

இந்தத் தலைப்பைப் பற்றி விவாதிக்கும் போது, மக்கிப் போன ரொட்டியைச் சாப்பிடுவது போல் உணர்ந்தேன். இந்த விசயம் பலமுறை ஏற்கனவே விவாதிக்கப்பட்டது என்றும் இப்போதும் அது திரும்பத் திரும்பச் சொல்லப் பட்ட நகைச்சுவை போல் ஆகிவிட்டது என்றும் ரிஸ்வி சொன்னது எனக்குத் திருப்திகரமாக இருந்தது . ரிஸ்வி என் கருத்தை நிலை நிறுத்தியதாக உணர்ந்தேன்.

அவன் குடித்துக்கொண்டிருந்த கிரீம் காப்பியை முடித்துவிட்டு தன்னுடைய போதை ஏறிய சிறிய கண் களால் என்னைப் பார்த்துத் தீவிரமான குரலில், "மண்ட்டோ சாகிப்! ஒருவன் ஏன் குற்றத்தைச் செய் கிறான்? குற்றம் என்றால் என்ன? தண்டனை என்பது என்ன? இதைப் பற்றியெல்லாம் நான் அதிகம் சிந்தித் திருக்கிறேன். நான் நினைக்கிறேன், ஒவ்வொரு குற் றத்திற்குப் பின்பும் ஒரு வரலாறு இருக்கின்றது. அதில் வாழ்க்கையின் நிகழ்வுகள் அடர்த்தியாய் இறுகிக் கிடக் கிறது. மிகவும் குழப்பமான சிக்கல்களைக் கொண்ட துண்டு அது. நான் ஒன்றும் மனிதனின் மனங்களைக் கற்றவன் இல்லை, ஆனாலும் ஒரு குற்றம் ஒருவனால் மட்டும் செய்யப்படுவதில்லை, என்று மட்டும் எனக்குத் தெரியும். நிகழ்வுகள் குற்றம் செய்யப்படுவதை நோக்கி நகர்த்தித் தள்ளுகிறது"

"நீ சொல்வது மிகவும் சரி" என்றான் நஸீர்.

ரிஸ்வி மற்றொரு காப்பிக்கு உத்தரவிட்டு, பிறகு நசீ ரிடம், "நான் சொல்வதெல்லாம் என் அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டது. இல்லையென்றால் இந்த விசயம் மிகவும் பழமையானது, நான் நினைக்கிறேன் பிரபலமான பிரெஞ்சு நாவலாசிரியர் விக்டர் ஹியூகோ - ஒருவேளை அவர் வேறு நாட்டைச் சேர்ந்தவராகவும் இருக்கலாம் - உங்களுக்கு எல்லாம் அவரைத் தெரிந்

திருக்கும், குற்றங்கள் பற்றியும் தண்டனைகள் பற்றியும் நிறைய எழுதியிருக்கிறார். அவர் எழுதியதிலிருந்து சில வாக்கியத்தை நான் நினைவில் வைத்திருக்கிறேன்".

பிறகு என்னைப் பார்த்துப் பேசினான் " மண்ட்டோ சாகிப்! அது உங்களுடைய மொழியாக்கமாக இருக்க லாம்.... என்ன அது... மனிதனைக் குற்றங்கள் மற்றும் இன்னல்களை நோக்கி அழைத்துச் செல்லும் ஏணியை அகற்றிவிடுங்கள்... ஆனால், அந்த ஏணி எது என்று வியந்திருக்கிறேன். அதில் எத்தனை படிகள் இருக்கின் றன?

யார் என்ன சொன்னாலும், அந்த ஏணி மட்டும் இருக்கிறது, அதில் படிகள் இருக்கின்றன. எனக்குப் புரிந்தமட்டில் அதில் கணக்கிலடங்காப் படிகள் உண்டு. அதை எண்ணுவதும், அதைப்பற்றி கணக்குப் போட்டுப் பார்ப்பதும் மிக முக்கியமான விசயங்கள்...... அரசாங் கங்கள் மக்கள்தொகைக் கணக்கெடுப்பை எடுக்கிறன, எல்லாவகையான கணக்கெடுப்புகளும் இந்த அரசாங் கங்களால் நடத்தப்படுகின்றன - அந்த ஏணியில் எத் தனை படிகள் இருக்கின்றன என்று ஏன் கணக்கெடுக்க மாட்டேன் என்கிறார்கள். இதுவும் அவர்களின் பொறுப் புதானே. நான் கொலை செய்தேன், நான் இந்தக் குற்றத்தைச் செய்வதற்கு எத்தனை படிகள் ஏறி வந்தி ருக்கிறேன்? அரசாங்கம் என்னை அவர்களின் சாட்சி யாக மாற்றியது, கொலை பற்றி எந்த ஆதாரமும் இல் லாததால் இதை அவர்கள் செய்ய வேண்டியதாயிற்று. ஆனால் நான் கேட்க விரும்பும் கேள்வி இதுதான். நான் செய்த குற்றத்திற்காக யாரிடம் பாவமன்னிப்பு வேண்டி நிற்க முடியும்? என்னைக் கொலை செய்யத் தூண்டிய அந்தச் சந்தர்ப்பங்கள் இனி என் அருகில் இல்லை. அதற்கும் எனக்கும் இடையில் ஒரு வருடம் இடை வெளியாய் இருக்கிறது. இந்தத் தொலைவில் நின்று

கொண்டு நான் பாவ மன்னிப்பு கேட்கவா? அல்லது தொலைவில் நிற்கும் அந்தச் சந்தர்ப்பங்கள் என்னை முறைத்துக் கொண்டிருக்கிறதா?"

ரொம்ப ஆவலோடு ரிஸ்வி பேசிக்கொண்டிருப்பதைக் கேட்டுக்கொண்டிருந்தேன். பார்ப்பதற்குப் படித்தவன் போல் இல்லை என்றாலும், அவனின் பேச்சு நிறையப் படித்தவன் என்றும், பேச்சுத்திறமை பெற்றவன் என்றும் தோன்றியது. நான் அவனிடம் ஏதாவது சொல்லியிருக்க முடியும், என்றாலும், அவன் தொடர்ந்து பேச வேண்டுமென்று இருந்தேன். அவன் சொல்ல வருவதைக் கேட்க வேண்டுமென்று இருந்தேன். அதனால் அவன் பேசும்போது, குறுக்கிடவில்லை.

அவனுக்கு இன்னும் கொஞ்சம் காப்பி கொண்டு வரப்பட்டது. அதைக் குவளையில் ஊற்றி ஓரிருமுறை உறிஞ்சிக் குடித்தான்.

பிறகு தன் பேச்சைத் தொடர்ந்தான். "நான் எவ்வளவு பைத்தியகாரத்தனமாய்ப் பேசிக்கொண்டிருக்கிறேன் என்பது கடவுளுக்குத்தான் வெளிச்சம். ஆனால் என் மண்டை முழுக்க எப்போதும் நிரம்பி இருப்பது அந்த ஒரு மனிதனைப் பற்றிய சிந்தனைதான் - அந்த மனிதன் - அவன் குப்பை அள்ளுகிறவன் - என்னோடு சிறையிலிருந்தவன், மூன்றரையணா திருடியதற்காக அவனுக்கு ஒரு வருடக் கடுங்காவல் தண்டனை கொடுக்கப்பட்டுள்ளது"

நஸீர் ஆச்சரியத்தோடு கேட்டான், "மூன்றரையணா திருடியதற்காகவா?"

ரிஸ்வி சாதாரணமாய்ப் பதில் தந்தான், "ஆமாம் மூன்றரையணா மட்டுமே திருடியதற்காகத்தான். அதுவும் கூட அவன் அடையக் கூடாது என்று விதிக்கப்பட்டது போலும், அதற்குள் அவன் பிடிபட்டான். அந்தப் பணம்

கஜானாவில் பத்திரமாய்க் கிடக்கிறது. ஆனால் பாகு - குப்பை அள்ளுகிறவன் பத்திரமாய் இல்லை . மீண்டும் பசி அவனுக்கு எதிராகத் திரும்பலாம். எவருடைய கழி வுகளை எல்லாம் அவன் சுமந்து செல்கிறானோ, அவர் கள் அவனுக்கான ஊதியத்தைக் கொடுக்க மறுக்க லாம். யாருக்காக இவன் வேலை பார்க்கிறானோ, அவர் கள் பெறவேண்டிய ஊதியமும் அவர்களுக்குக் கிடைக் காமல் போகலாம். இந்தப், 'போகலாம்' என்ற விஷயம் ரொம்ப விசித்திரமானது. உண்மையைச் சொல்வதென் றால் இந்த உலகத்தில் எல்லாமே சாத்தியம் - ரிஸ்வி யால் ஒரு கொலையைக் கூடச் செய்ய முடியும்",

இதன் பிறகு அவன் சற்று நேரம் அமைதியானான். நஸீர் அவனிடம், "நீ குப்பைகளை அள்ளுகிற பாகு பற்றிப் பேசிக்கொண்டிருந்தாய் " என்று சொன்னான். ரிஸ்வி ஒழுங்கில்லாத தன் தாடியில் ஒட்டியிருந்த காப் பியைத் தன் கைக்குட்டையால் துடைத்துக்கொண்டு, "ஆமாம்... குப்பை அள்ளும் பாகு - அவன் திருடனாக இருந்தாலும், சட்டத்தின் பார்வையில் அவன் திருடன் தான், நம்முடைய பார்வையில் அவன் முற்றிலும் நேர் மையானவனே - கடவுள் மீது சத்தியமாக, இத்தனை நேர்மையான மனிதனை நான் இதுவரை பார்த்ததே கிடையாது. அவன் நிச்சயமாக மூன்றரையணாவைத் திருடி இருக்கிறான்.

நீதி மன்றத்தில் அவன் அதை வெளிப்படையாகச் சொல்லியும் இருக்கிறான் - 'நான் மறுப்பதற்கு ஏதும் இல் லாமல் இந்தப் பணத்தைத் திருடித்தான் இருக்கிறேன். எனக்கு ஆதாரமாக எந்தச் சாட்சியையும் ஆஜர்படுத்த விரும்பவில்லை'. அவன் நீதிமன்றத்தில் சொன்னான் - நான் இரண்டு நாட்களாகப் பட்டினிக் கிடந்ததால் தையல்காரர் கரீமின் பாக்கெட்டுக்குள் என் கையை நுழைக்க வேண்டியதாயிற்று; அவர் எனக்கு ஐந்து

ரூபாய் தர வேண்டியிருந்தது - இரண்டு மாதச் சம்ப ளம். ஆனால் மதிப்பிற்குரிய ஐயா அவர்களே, எனக்கு அவர் பணம் கொடுக்காதது அவருடைய தவறல்ல. அதற்குக் காரணம், அவருடைய பல வாடிக்கையாளர் கள். அவர்களுக்காக இவர் செய்த வேலைக்குப் பணம் கொடுக்கவில்லை... நான் முன்னரும் திருடியிருக்கி றேன். ஒரு வெள்ளைக்காரப் பெண்ணின் பர்ஸிலிருந்து பத்து ரூபாய் திருடியிருக்கிறேன்... எனக்கு ஒரு மாதம் சிறைத் தண்டனை வழங்கப்பட்டது. பிறகு டெபுடி சாகிப் வீட்டில் இருந்து வெள்ளிப் பொம்மை ஒன்றைத் திரு டியிருக்கிறேன். நான் இதைச் செய்யக் காரணம் என் மகனுக்கு நிமோனியா வந்திருந்தது. டாக்டர்கள் பெரும் தொகையைக் கேட்டார்கள், ஐயா, நான் உங்களிடம் பொய் சொல்லவில்லை. நான் திருடன் இல்லை, என் சூழ்நிலை அப்படி இருந்ததால் நான் திருடவேண்டிய தாயிற்று, அதே சூழ்நிலைதான் என்னைக் கைது செய் யவும் அனுமதித்தது. என்னைக் காட்டிலும் மோசமான திருடர்கள் இன்னும் வெளியே சுதந்திரமாய் இருக்கி றார்கள்... ஐயா, எனக்கு இப்போது மகனும் கிடையாது, மனைவியும் கிடையாது, ஆனால் துரதிருஷ்டவசமாக எனக்கு இன்னும் வயிறு இருக்கிறது. இந்த வயிறும் இறந்து விட்டால் எல்லாப் பிரச்சினைகளும் தீர்ந்துவி டும்... ஐயா, என்னை மன்னித்துவிடுங்கள்"

ஆனால் நீதிபதி அவனை மன்னிக்கவில்லை. ஒரு வருடக் கடுங்காவல் தண்டனை கொடுத்தார்."

ரிஸ்வி மிகவும் இயல்பான தொனியில் பேசிக்கொண் டிருந்தான். அதில் எந்தப் போலித்தன்மையும் கலந் திருக்கவில்லை. அவன் உதடுகளில் வார்த்தைகள் தானாக உருக்கொண்டு வெளியே கொட்டத் தொடங் கியது போல் இருந்தது. நான் சிகரெட் புகைத்துக் கொண்டு அவன் சொல்வதை எல்லாம் கேட்டுக்

கொண்டு முற்றிலும் அமைதியாக இருந்தேன். நஸீர் மறு படியும் அவனிடம், "நீ பாகுவின் நேர்மையைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தாய்" என்றான்.

"ஆமாம்' ரிஸ்வி ஒரு பீடியைத் தன் பையிலிருந்து எடுத்துப் பற்ற வைத்தான் "சட்டத்தின் கண்களில் என்ன நேர்மை இருக்கிறது என்று எனக்குத் தெரிய வில்லை, ஆனால் இதை மட்டும் என்னால் சொல்ல முடியும். நான் நேர்மையாகச் சொல்வது என்றால், நான் ஒரு கொலை செய்திருக்கிறேன், என்னுடைய பார்வை யில் நேர்மையாகச் சொல்வதென்றால், பாகு - நேர்மை யாக மூன்றரையணா திருடியிருக்கிறான். எல்லோரும் ஏன் நேர்மையை நற்குணங்களோடு சம்பந்தப்படுத்து கிறார்கள் என்று எனக்குத் தெரியவில்லை... உங்களி டம் உண்மையைச் சொல்வதென்றால் நல்லது எது, கெட்டது எது என்று சிந்திக்கத் தொடங்கிவிட்டேன். ஒன்று உங்களுக்கு நல்லதாகக் கருதப்படுவது எனக் குக் கெட்டதாகப் படலாம். ஒரு சமூகத்தில் நல்லது என்று கருதப்படுவது மற்றொரு சமூகத்தில் கெட்டதா கக் கருதப்படுகிறது, முசல்மான்களாகிய நம்மிடையே, ஒருவர் தன்னுடைய அக்குளில் முடி வளர்ப்பது பாவம் என்று கருதப்படுகிறது. ஆனால் சீக்கியர்களுக்கு அப் படி இல்லை . அக்குளில் முடி வளர்ப்பது உண்மையில் பாவம் என்றால், கடவுள் ஏன் சீக்கியர்களைத் தண்டிப்ப தில்லை. கடவுள் என்று ஒன்று இருந்தால் நான் அதனி டம் இதைத்தான் வேண்டிக்கொள்வேன் : மனிதன் உரு வாக்கிய சட்டங்களை உடைத்தெறி. மனிதன் உருவாக் கிய இந்தச் சிறைச்சாலைகளைத் தரைமட்டமாக்கு. பிறகு உன்னுடைய சிறைச்சாலைகளை ஆகாயத்தில் கட்டிக்கொள். நீயே உன் நீதிமன்றத்தில் மனிதர்களுக் குத் தண்டனை கொடு. வேறு எதற்கு இல்லை என்றா லும் நீ கடவுள் என்பதற்காகவேனும் இதைச் செய்"

ரிஸ்வியின் பேச்சு எனக்கு மிகவும் பிடித்திருந்தது. எது மிகவும் என்னைக் கவர்ந்தது என்றால் அவன் பேசிய முறை எங்களுக்காகப் பேசுவது போல் இருந்தாலும், அவன் அவனுக்காகவே பேசிக் கொண்டிருந்ததுதான்.

அவனின் பீடி அணைந்து போயிற்று. புகையிலை வேர் சிக்கி அடைத்துக்கொண்டிருக்கலாம். ஐந்து ஆறுமுறை அதைப் பற்ற வைக்க முயன்றான், அப்படியும் அது பற்றிக்கொள்ள மறுத்தபோது அதை விட்டெறிந்தான். என்னைப் பார்த்துச் சொன்னான், " மண்ட்டோ சாகிப்! பாகுவை என் வாழ்நாள் முழுக்க நான் மறக்க மாட்டேன். நான் இன்னும் மேலே சொன்னவுடன் உணர்ச்சிவசப் பட்ட பேச்சு என்றோ, மனக்கிளர்ச்சியைத் தூண்டிவிடும் பேச்சு என்றோ நீங்கள் சொல்லக்கூடும். நான் கடவுள் மீது ஆணையாகச் சொல்கிறேன். இதில் உணர்ச்சிகளைத் தூண்டுவதற்கு இடமே இல்லை. அவன் என் நண்பன் இல்லை... இல்லை அவன் என் நண்பன் தான். ஏனென்றால் பலமுறை அவன் எனக்கு அதை நிரூபித்துக் காட்டியுள்ளான்"

ரிஸ்வி மற்றொரு பீடியைத் தன் பையிலிருந்து எடுத்தான். அது உடைந்திருந்தது. நான் சிகரெட் ஒன்றினை நீட்டினேன். அவன் அதை எடுத்துக்கொண்டு, " நன்றி... மண்ட்டோ சாகிப், என்னை மன்னித்து விடுங்கள். நான் நிறைய அழுகிய விசயங்களைப் பேசிவிட்டேன். நான் இவ்வளவு பேசியிருக்கக் கூடாது காரணம் கடவுள் புண்ணியத்தில் நீங்கள்."

நான் குறுக்கிட்டேன், "ரிஸ்வி சாகிப்! தற்சமயம் நான் மண்ட்டோ இல்லை , நான் சாதத் ஹசன் மட்டுமே. தயவு செய்து தொடருங்கள். நான் உங்கள் பேச்சை ரொம்ப ஆவலோடு கேட்டுக்கொண்டிருக்கிறேன்"

ரிஸ்வி புன்னகைத்தான். போதை ஏறிய அவனின் சிறிய கண்கள் பிரகாசித்தன. "நான் மிகவும் கடமைப்பட் டவன் " என்றான். பிறகு நஸீரிடம், "நான் என்ன சொல் லிக்கொண்டிருந்தேன்?" என்று கேட்டான்.

நான் அவனிடம், "பாகுவின் நேர்மையைப் பற்றி ஏதோ சொல்ல வந்தீர்கள் " என்றேன்.

"ஆமாம்" நான் கொடுத்த சிகரெட்டைப் பற்றவைத் துக் கொண்டான், "மண்ட்டோ சாகிப், சட்டத்தின் பார் வையில் பாகு பழக்கப்பட்டுப் போன திருடன் ஒரு முறை பீடி வாங்க, எட்டணா திருடியிருக்கிறான். சுவ ரினைச் சிரமப்பட்டுக் கடந்து தப்பிக்க முயன்றபோது அவனின் கணுக்காலை முறித்துக் கொண்டிருக்கிறான். ஏறக்குறைய ஒரு வருடத்திற்கு அவன் சிகிச்சை பெற வேண்டியதாயிற்று. இருந்தாலும் என் சக குற்றவாளி ஜார்ஜி, இவர் மூலம் இருபது பீடிகள் கொடுத்தனுப்பிய போதும், காவலாளிகளின் கண்களில் இருந்து தப்பித்து, அத்தனையும் என்னிடம் கொடுத்துவிடுவார். அரசாங் கச் சாட்சியாக மாறுகிறவர்கள் எப்போதுவும் தீவிரக் கண்காணிப்பில் வைக்கப்படுவார்கள். ஆனால் ஜார்ஜி, பாகுவை தன் நண்பனாக்கிக் கொண்டு, தன்னுடைய ரகசியங்களை அவருடன் பகிர்ந்து கொண்டான், அவர் குப்பை அள்ளுகிறவர்தான் என்றாலும் மிகவும் இனி மையான சுபாவம் கொண்டவர், ஆரம்பத்தில் ஜார்ஜி கொடுத்தனுப்பிய பீடிகளை இவர் எடுத்து வரும்போது, நான் இப்படி நினைத்துக்கொள்வேன் : 'இந்தத் திருட் டுத் தேவடியா மவன் தனக்கென்று கொஞ்சம் எடுத்தி ருக்கக் கூடும்' ஆனால் பிறகு தெரிந்து

கொண்டேன், அவர் முற்றிலும் நேர்மையானவர்... பீடிக்காக எட்டணா திருடி, தன் கணுக்காலை உடைத் துக் கொண்டார். ஆனால் இந்தச் சிறையில் எங்கும்

புகையிலை கிடைக்காது என்றபோதிலும், அப்பாவித்த னமாய் ஜார்ஜி கொடுத்தனுப்பிய எல்லாப் பீடிகளையும், ஏதோ அவரது புனித நம்பிக்கையைச் சார்ந்தது போல, என்னிடம் கொடுக்கிறார். பிறகு தயக்கத்தோடு என்னி டம் கேட்பார், 'பாபுஜி, ஒரே ஒரு பீடியாவது கொடுங்கள்' நானும் ஒரே ஒரு பீடி மட்டும் கொடுப்பேன். மனிதனிடம் தான் எவ்வளவு கஞ்சத்தனம் ?"

ரிஸ்வி தன் மீதே கோபம் கொண்டது போல் தலையை அசைத்துக் கொண்டான். "நான் ஏற்க னவே உங்களிடம் சொன்னது போல், என்மீது நிறைய கட்டுப்பாடுகள் போடப்பட்டது. அரசாங்கச் சாட்சிகள் எப்போதும் இப்படித்தான் நடத்தப் படுகிறார்கள், என் னோடு ஒப்பிடும்போது ஜார்ஜி சுதந்திரமானவன். லஞ் சம் கொடுத்து அவனால் பல சலுகைகளை ஏற்படுத் திக்கொள்ள முடிந்தது, அவனுக்குத் சுத்தமான துணி கிடைத்தது; சோப்பு கொடுக்கப்பட்டது. பீடி கிடைக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டது. லஞ்சம் கொடுக்கச் சிறைக்குள் அவன் பணமும் பெற்று வந்தான். பாகுவின் சிறைத் தண்டனை முடிவடைய இன்னும் சில நாட்களே இருந்தன. கடைசி முறையாக அவர் ஜார்ஜி கொடுத் தனுப்பிய பீடிகளை என்னிடம் எடுத்து வந்த போது நான் என் நன்றியைத் தெரிவித்தேன். சிறையை விட்டு வெளியே போவதில் அவருக்குச் சந்தோசம் இல்லை. நான் அவருக்கு வாழ்த்துகள் தெரிவித்தபோது அவர், பாபுஜி நான் மறுபடியும் இங்கு திரும்ப வருவேன். பசித் தால் எப்படிச் சாப்பிட்டாக வேண்டுமோ, அது போல வறுமையில் இருப்பவன் திருடுவதைத் தவிர வேறு வழி யில்லை . பாபுஜி நீங்கள் ரொம்ப நல்ல மனிதர். எனக்கு நிறைய பீடிகள் கொடுத்து உதவியிருக்கிறீர்கள். உங்க ளின் நண்பர்கள் எல்லாம் விடுதலை ஆக வேண்டும்

என்று நான் கடவுளை வேண்டிக்கொள்கிறேன், ஜார்ஜி பாபுவுக்கு உங்களை மிகவும் பிடித்திருக்கிறது..."

இதைக் கேட்டவுடன் நணீர் தனக்குள் சொல்லிக் கொண்டது போல, "இவர் மூன்றரையணா திருடியதற் காகச் சிறையில் அடைக்கப்பட்டுள்ளார்" என்றான்.

ரிஸ்வி சூடான காப்பியை ஒரு முறை உறிஞ்சிக் குடித்துவிட்டுச் சாதாரணமாகச் சொன்னான், "ஆமாம் மூன்றரையணா திருடிய குற்றத்திற்காக. அதுவும் அந் தப் பணம் கஜானாவில் ஒப்படைக்கப்பட்டு பத்திரமாய் இருக்கிறது. அதை வைத்து இவரின் பசியை யாரால் போக்க முடியும் என்று கடவுளுக்குத் தெரியும்"

ரிஸ்வி மற்றொரு முறை காப்பியை உறிஞ்சிக் குடித் துவிட்டு என்னைப் பார்த்துச் சொன்னான்: "ஆமாம் மண்ட்டோ சாகிப், பாகுவின் விடுதலைக்கு ஒருநாள் தான் இருந்தது. எனக்கு அவசரமாகப் பத்து ரூபாய் தேவைப்பட்டது. நான் விவரங்களுக்குள் போக விரும்ப வில்லை. ஒரு விசயத்திற்காக, அந்தப் பணத்தை நான் ஏட்டுக்கு லஞ்சமாகக் கொடுக்க வேண்டியிருந்தது. சிர மப்பட்டுக் காகிதமும் பேனாவும் வரவைத்து ஜார்ஜிக்கு ஒரு குறிப்பு எழுதி, பாகு மூலம் கொடுத்து அனுப்பி னேன், எப்படியாவது பத்து ரூபாயை அனுப்பு என்று ஜார்ஜியைக் கேட்டுக்கொண்டேன்.

பாகு படிப்பறிவில்லாதவர். சாயந்திரம் தான் என்னைச் சந்தித்தார். ஜார்ஜின் பதிலை என்னிடம் கொடுத்தார். அதற்குள் பாகிஸ்தான் பத்து ரூபாய் நோட்டு சிறைப்பட் டுக் கிடந்தது. 'அன்புள்ள ரிஸ்வி, பத்து ரூபாயை நான் கொடுத்தனுப்பியுள்ளேன், ஆனால் வழக்கமான திரு டன் மூலம். உனக்கு இந்தப் பணம் கிடைக்கும் என நம் புகிறேன். ஏனெனில் அவன் நாளைக்கு விடுதலையா கப் போகிறான்.'

நான் அந்தக் குறிப்பைப் படித்து விட்டுப் பாகுவைப் பார்த்துப் புன்னகைத்தேன். மூன்றரையணா திருடியதற் காக அவர் ஒரு வருடகாலம் சிறையிலடைக்கப்பட்டுள் ளார். அவர் பத்து ரூபாய் திருடியிருந்தால் - மூன்ற ரையணாவுக்கு ஒரு வருடம் என்ற விகிதத்தில் பத்து ரூபாய்க்கு எத்தனை வருடங்கள் என்று சிந்திக்கத் துவங்கினேன்"

இதைச் சொல்லிக்கொண்டே ரிஸ்வி தன் காப்பியின் கடைசி மடக்கை எடுத்துக்கொண்டு, போய்வருகிறேன் என்று கூடச் சொல்லாமல் அந்த இல்லத்திலிருந்து வெளியேறினான்.

***



# கருப்பு சல்வார்

டெல்லிக்கு வருவதற்கு முன் அம்பாலா கண்டோன் மென்டில் இருந்த அவள், பல பிரிட்டிஷ் சிப்பாய்களை வாடிக்கையாளர்களாகக் கொண்டிருந்ததால், அவர்கள் மூலமாகப் பத்துப் பதினைந்து ஆங்கில வாக்கியங்க ளைப் பேசவும் கற்றுக்கொண்டாள். அதைச் சாதாரண உரையாடல்களில் பயன்படுத்துவது கிடையாது. என் றாலும், டெல்லி வந்த பிறகு அவளின் வியாபாரம் சூடு பிடிக்காததால், ஒரு நாள் பக்கத்தில் குடியிருந்த, தமாச் சாஜானிடம், இங்கு சம்பாத்தியங்கள் ஏதும் இல்லாத தால், வாழ்க்கை மிகவும் சிரமமாக இருக்கிறது என்ற அர்த்தத்தில் - "திஸ் லைஃப் வெரி பேட்" என்றாள்.

அம்பாலா கண்டோன்மென்டில் அவளின் வியாபாரம் நல்லபடி நடந்து வந்தது. சிப்பாய்கள் குடித்து விட்டு அவளிடம் வந்தார்கள். மூன்று நான்கு மணி நேரத் தில் எட்டு, பத்து சிப்பாய்களின் தேவையை அவளால் பூர்த்தி செய்ய முடிந்தது. அதில் இருப்பதில் இருந்து முப்பது ரூபாய் வரை அவளுக்குக் கிடைத்தது. இந்தச் சிப்பாய்கள் நம் நாட்டைச் சேர்ந்தவர்களைக் காட்டி லும் எவ்வளவோ மேலானவர்கள். உண்மைதான், அவ ளால் ஒரு வார்த்தை கூட புரிந்து கொள்ள முடியாத மொழியில்தான் அவர்கள் பேசினார்கள். ஆனால் அந்த மொழியைப் பற்றிய அவளின் அறியாமையே அவளின் பெரிய பலமாய் இருந்தது. பணத்தைக் குறைக்கச் சொல்லிக் கேட்டால், அவர்கள் சொல்வது அவளுக் குப் புரியவில்லை என்று தலையை அசைத்தாள். அவர்

கள், அளவுக்கு அதிகமாக உரிமை எடுத்துக்கொள்ள முயன்றால், தன் சொந்த மொழியில் அவர்களைத் திட்டத் தொடங்குவாள். அவர்கள் குழம்பிப்போய் இவளைப் பார்த்தால், "சாகிப் நீ ஒரு தேவடியா பையன், பொறுக்கி, புரிகிறதா?" என்று கேட்பாள். அவளின் இந்த எதிர்ப்பு கோபம் கலந்தோ, கடினமாகவோ இருக்காது. இதை அவள் ரொம்ப சாதாரணமாய்ச் சொல்லுவாள். அந்தச் சிப்பாய்கள் சிரிக்கத் தொடங்குவார்கள். அவளுக்கு அவர்கள் முட்டாள்களைப் போல் தெரிந்தார்கள்.

ஆனால் டெல்லி வந்து சேர்ந்ததில் இருந்து ஒரே ஒரு சிப்பாய் கூட அவளிடம் இன்னும் வரவில்லை. அவள் டெல்லி வந்து மூன்று மாதங்கள் கழித்து விட்டாள். 'லார்ட் சாஹிப் அங்கு தங்கியிருக்கிறார் என்றாலும் கோடைக் காலத்தில் அவர் சிம்லா போய்விடுவார் என்றும் கேள்விப்பட்டாள். ஆறு ஆண்கள் தான் அவளிடம் இதுவரை வந்திருக்கிறார்கள், ஆறே ஆறுதான்.

அதாவது ஒரு மாதத்திற்கு இரண்டு பேர் வீதம். இந்த ஆறு வாடிக்கையாளர்களிடம் இருந்து அவள் சம்பாதித்தது அற்ப பதினெட்டரை ரூபாய் மட்டுமே. ஒருத்தரும் மூன்று ரூபாய்க்கு மேல் கொடுப்பதற்குத் தயாராக இல்லை. சுல்தானா அவர்களில் ஐந்து பேரிடம் பத்து ரூபாய் என்று விலை பேசினாள். ஆனால் விசித்திரமாக ஒவ்வொருத்தனும் மூன்று ரூபாய்க்கு மேல் சல்லிக்காசு கொடுக்கத் தயாராக இல்லை என்று சொல்லிவிட்டார்கள். மூன்று ரூபாய்க்கு மேல் அவள் தகுதியானவள் தான் என்று அவர்கள் நினைக்க மறுத்தது, ஏன் என்று கடவுளுக்குத்தான் தெரியும். ஆறாவது நபர் வந்தபோது, அவனிடம், "ஒரு முறைக்கு எனக்கு மூன்று ரூபாய் வேண்டும். நயா பைசா கூட குறைக்க முடியாது. இங்கு இருக்கப் போகிறாயா அல்லது எழுந்து போகிறாயா என்று நீதான் தீர்மானிக்க வேண்டும்" என்றாள். அவன்

விவாதத்தில் எதுவும் ஈடுபடாமல் ஏற்றுக் கொண்டான். கதவை மூடியபின் அவன் தன் சட்டையைக் கழற்றிய போது சுல்தானா அவனிடம், "பால் வாங்க ஒரு ரூபாய் கொடு" என்று கேட்டாள். அவன் ஒரு ரூபாய் கொடுக்கவில்லை, என்றாலும் அரசனின் உருவத்தோடு பளபளத்துக் கொண்டிருந்த எட்டணாவைக் கொடுத்தான். ஒன்றுமில்லாததற்கு இது தேவலை என்று சிந்தித்தபடியே அதை வாங்கிக்கொண்டாள்.

மூன்று மாதத்தில் பதினெட்டரை ரூபாய்... அறைக்கு - அதன் சொந்தக்காரரர் ஆங்கிலத்தில் அதை பிளாட்' என்று அழைத்தார். வாடகை மட்டுமே மாதத்திற்கு இருபது ரூபாய். அந்த அடுக்குமாடிக் குடியிருப்பின் கக்கூசில் 'பிளஷ்' பொருத்தப்பட்டு இருந்தது. சங்கிலியைப் பிடித்து இழுத்தால் பெரும் சத்தத்தோடு பாய்ந்த தண்ணீர் மலத்தை எல்லாம் அடித்துச் சென்றது. முதல் நாள் கக்கூஸ் சென்றிருந்தபோது அவளுக்கு முதுகில் கடுமையான வலி இருந்தது. அவள் மலம் கழித்த பிறகு எழுந்து கொள்ள முயன்றபோது துணைக்கு 'பிளஷ் 'ஷோடு இணைக்கப்பட்டிருந்த சங்கிலியைப் பிடித்துக் கொண்டாள். அவள் முதலில் அந்தச் சங்கிலியைப் பார்த்தபோது, அவளைப் போன்ற தொழிலில் ஈடுபட்ட பெண்களுக்காகவே, எழுந்து நிற்க வசதியாக அது பொருத்தப்பட்டிருக்கிறது என்று நினைத்தாள். ஆனால் அவள் சங்கிலியைப் பிடித்த உடனேயே பெரும் சத்தத்தோடு தண்ணீர் பாய்ந்தது. அவள் பயத்தில் வீறிட்டாள்.

குதாபக்ஷ் மற்றோர் அறையில் அவனுடைய புகைப்படக் கருவிகளை ஒழுங்குபடுத்திவிட்டு சுத்தமான புட்டியில் ஹைட்ரோகுயினின் ஊற்றிக் கொண்டிருந்தான். அவன் சுல்தானாவின் அலறலைக் கேட்டு உடனடியாக அறையை விட்டு வெளியே வந்து என்ன ஆயிற்று என்று விசாரித்தான். சுல்தானா பெரும் மூச்சு வாங்க

நின்று கொண்டிருந்தாள். அவள், " இது என்ன கக்கூஸ்? ரயில் பெட்டியில் இருப்பது போல எதற்காக இந்தச் சங்கிலியை வைத்திருக்கிறார்கள்? எனக்கு முதுகு வலி இருந்ததால் அதைப் பிடித்துக்கொள்ளலாம் என்று நினைத்தேன். நான் அதைப் பிடித்தவுடன் என்னால் விவரித்துச் சொல்லமுடியாத ஏதோ ஒன்று வெடித்தது" என்றாள். குதாபக்ஷ் தலை வெடிக்கச் சிரித்துப் பிறகு சுல்தானாவிடம் இந்தச் சங்கிலியைப் பிடித்து இழுத்தால் கக்கூஸ் தானாக எப்படிச் சுத்தமாகிறது என்பதை விளக்கிச் சொன்னான்.

சுல்தானாவும், குதாபக்ஷும் எப்படி ஒன்று சேர்ந்தார்கள் என்பது ஒரு பெரிய கதை. குதாபக்ஷ் ராவல்பிண்டியைச் சேர்ந்தவன். நுழைவுத் தேர்வில் வெற்றிபெற்ற பின் அவன் லாரி ஓட்டக் கற்றுக்கொண்டான். நான்கு வருடங்களுக்கு அவன் காஷ்மீருக்கும் ராவல்பிண்டிக்கும் இடையில் லாரி டிரைவராக வேலை பார்த்து வந்தான். காஷ்மீரில் ஒரு பெண்ணோடு நெருக்கம் கொண்டு அவளை இழுத்துக்கொண்டு லாகூர் ஓடிப் போனான். அங்கு வேலை ஏதும் கிடைக்காதபோது அந்தப் பெண்ணை வைத்துத் தொழில் நடத்தத் தொடங்கினான். இது அடுத்த இரண்டு மூன்று வருடங்களுக்குத் தொடர்ந்தது. பிறகு அந்தப் பெண் வேறு யாருடனோ ஓடிப்போனாள். அவள் அம்பாலாவில் இருப்பதாகக் கேள்விப்பட்டு, அவளைத் தேடிக்கொண்டு அங்கு வந்தான். அங்குதான் அவன் சுல்தானாவைச் சந்தித்தான். சுல்தானாவுக்கு அவனைப் பிடித்திருக்க, இருவரும் ஒன்றாக வாழத் தொடங்கினார்கள்.

குதாபக்ஷ் வந்ததிலிருந்து சுல்தானாவின் தொழிலில் நல்ல முன்னேற்றம் இருந்தது. அவள் மூட நம்பிக்கைகள் கொண்டவளாக இருந்தாள். குதாபக்ஷ் ஏதோ அற்புதச் சக்திகளைக் கொண்டவன் என்றும், அதனா

லேயே அவள் நிலையில் முன்னேற்றம் உள்ளது என்றும் நினைத்தாள். இதனால் குதாபக்ஷ் அவளின் கண்களுக்கு மேலும் முக்கியத்துவம் வாய்ந்தவனாக மாறினான்.

குதாபக்ஷ் கடினமான உழைப்பாளி. அவன் வெறுமனே இருப்பதை எப்போதும் வெறுத்தான். இரயில் நிலையத்திற்கு வெளியே போலராய்ட் கேமரா வைத்துக்கொண்டு புகைப்படங்கள் எடுக்கும் ஒருவனோடு நட்பு கொண்டு, புகைப்படம் எடுக்கக் கற்றுக்கொண்டான். பிறகு சுல்தானாவிடமிருந்து அறுபது ரூபாய் கடன் வாங்கி ஒரு கேமராவை வாங்கினான். மெதுவாகப் பெரிய திரைச் சீலை செய்து, இரண்டு நாற்காலிகள் வாங்கி, மேலும் சில புகைப்படக் கருவிகளை வாங்கிச் சொந்தமாகத் தொழிலைத் தொடங்கினான்.

அவனின் தொழில் வெற்றியைக் கண்டது. அதனால் அவன் அம்பாலாவில் தங்கிவிட்டான். பிரிட்டிஷ் சிப்பாய்களைப் படம் எடுக்கத் தொடங்கி, ஒரு மாதத்திற்குள் பலரைத் தெரிந்து வைத்துக்கொண்டான். பிறகு அவர்களைச் சுல்தானாவிற்கு அறிமுகம் செய்துவைக்க, அவர்கள் அவளின் நிரந்தர வாடிக்கையாளர்களாக மாறினார்கள். இதனால் சுல்தானாவின் வருமானம் ஏறக்குறைய இரண்டு மடங்கானது.

சுல்தானா அவளுக்காக ஒரு காதுத் தோடும், 5.5 சவரனில் எட்டு வளையல்களும் செய்து கொண்டாள். மேலும் பத்துப் பதினைந்து நல்ல புடவைகள் வாங்கிக் கொண்டாள். வீட்டிற்குத் தேவையான பொருட்களும் வாங்கி வந்தாள். சுருங்கச் சொன்னால், அவள் அம்பாலா கண்டோன்மெண்டில் மிக நல்ல நிலையிலிருந்தாள். ஆனால் குதாபக்ஷுக்கு என்ன ஆயிற்று என்று கடவுளுக்குத்தான் வெளிச்சம். அவன் திடீரென்று டெல்

லிக்குக் குடிபெயர்ந்து போவதாக முடிவெடுத்தான். எப்படி சுல்தானாவால் முடியாது' என்று சொல்ல முடியும்? அவன்தானே அவளுக்கு அதிர்ஷ்டத்தைக் கொண்டு வந்தவன். அதனால் சந்தோஷமாகத் தன் சம்மதத்தைத் தெரிவித்தாள். 'லார்ட் சாஹிப் வசிக்கும் டெல்லி போன்ற பெரிய நகரத்தில் தன்னுடைய வியாபாரம் இன்னும் சிறப்பாக நடைபெறும் என்று நம்பினாள். டெல்லியைப் பற்றி அவளின் நண்பர்கள் புகழ்ந்து பேசுவதைக் கேட்டிருக்கிறாள். அத்தோடு டெல்லியில் ஹஸ்ரத் நிஜாமுதீன் அலியாவின் கல்லறை இருக்கிறது. அவர் மீது பெரும் பக்தி கொண்டவளாக இருந்தாள். வீட்டுப் பொருட்களை எல்லாம் சுலபத்தில் விற்று குதாபக்ஷுடன் டெல்லி வந்து சேர்ந்தாள். இருவரும் ஒரு வீட்டை மாதம் இருபது ரூபாய் என்று வாடகைக்கு எடுத்தார்கள்.

தெரு முழுக்க ஒரே மாதிரியாகப் புதிதாகக் கட்டப்பட்ட கட்டடங்கள் நீண்ட வரிசையில் இருந்தன. முனிசிபல் கமிட்டி விலைமாதுகளுக்கு என்று இந்த இடத்தைப் பிரத்தியேகமாக ஒதுக்கியிருந்தது. அவர்கள் நகரம் முழுக்க ஊடுருவாமல் இருக்க இப்படிச் செய்யப்பட்டுள்ளது. தரைத் தளத்தில் கடையும், அதற்கு மேல் இரண்டு தளங்களில் குடியிருப்புப் பகுதியும் இருந்தது. எல்லாக் கட்டடங்களும் ஒன்று போல் இருந்ததால் ஆரம்பத்தில் தன்னுடைய வீட்டைக் கண்டுபிடிப்பதில் சுல்தானாவிற்குக் கஷ்டமாக இருந்தது. ஆனால் அந்தக் கட்டடத்தில், ஒரு சலவைக்காரன் தன் கடையின் பெயர்ப் பலகையை வைத்தவுடன், அவளின் கட்டடத்தைச் சுலபத்தில் கண்டுபிடிக்கக் கூடிய அடையாளமாக மாறியது. இது போலவே அவள் பல முக்கிய அடையாளங்களை வைத்துக்கொள்ளத் தொடங்கினாள். உதாரணத்திற்கு மிகப் பெரிய எழுத்துகளில் பெயர்ப் பலகையைக் கொண்டிருந்த கறிக்கடை இருந்த கட்டடத்தில் தான்

அவளின் தோழி - ரேடியோவில் அவ்வப்போது பாடும் ஈரா பாயின் வீடு இருந்தது. வசதி படைத்தவர்களுக்கு மிகச்சிறந்த உணவுகள் வழங்கப்படும் என்று பெயர்ப் பலகையைக் கொண்டிருந்த ஓர் உணவகம் இருந்த கட்டடத்தில் தான் அவளின் தோழி முக்தர் வசித்து வந் தாள். மெத்தைகள் செய்வதற்காகப் பொருட்களைத் தயாரித்துக் கொண்டிருந்த பட்டறைக்கு மேல் நூரி இருந்தாள். அந்தப் பட்டறையின் உரிமையாளன் அவ ளின் நிரந்தர வாடிக்கையாளனாக இருந்தான். இரவு நேரங்களில் பட்டறையில் நடக்கும் வேலையை மேற் பார்வை செய்ய வேண்டியிருந்ததால் ஏறக்குறைய அவ ளோடேயே தங்கியிருந்தான்.

தொடக்கத்தில் புது இடத்தில் தொழில் தொடங்கி யவுடனே வாடிக்கையாளர்களை எதிர்பார்க்க முடியாது என்று தன்னைத்தேற்றிக்கொண்டு வந்தாள். ஆனால் இரண்டு மாதம் ஆகியும் எவரும் வராதபோது அவள் கவலை கொள்ளத் தொடங்கினாள். ஒருநாள் குதாபஷி டம், "என்ன காரணமாக இருக்கும்? நாம் இங்கு வந்து இரண்டு மாதத்திற்கு மேல் ஆகிவிட்டது, ஆனால் இன் னும் ஒருத்தரும் இங்கு வரவில்லை. இப்போது வியா பாரம் மந்தமாகத்தான் இருக்கிறது என்பதை ஏற்றுக் கொண்டாலும், ஒரு மாதம் முழுவதற்கும் ஒரு வாடிக் கையாளர்கூட வராதது ஏற்றுக் கொள்ளக் கூடியதாக இல்லை" என்றாள். குதாபக்ஷும் இதைப்பற்றிக் கவலை கொண்டிருந்தாலும் ஏதும் சொல்லாமல் நீண்ட நேரம் அமைதியாக இருந்தான். சுல்தானா இதைப் பற்றிய பேச்சைத் தொடங்கியதால், "நானும் இதைப் பற்றி பல நாட்களாகச் சிந்தித்துக் கொண்டு இருக்கிறேன். யுத்தம் காரணமாக மக்கள் தங்களுடைய வியாபாரத்தில் முழு மையாக ஈடுபட்டுள்ளதால், அவர்களுக்கு இது போன்ற கேளிக்கைகளுக்கு ஓய்வு நேரம் மிகக் குறைவாகவே

கிடைக்கிறது. எனக்கு இது ஒன்றுதான் காரணமாக இருக்க முடியும் என்று தோன்றுகிறது. இல்லை வேறு ஏதேனும்..." என்று அவன் ஏதோ சொல்லி முடிப்பதற் குள், யாரோ படியேறி வரும் சத்தம் கேட்டது. சுல்தானா வும் குதாபஷும் தங்களின் காதுகளைக் கூர்மையாக்கிக் கொண்டார்கள். சிறிதுநேரம் கழித்துக் கதவு தட்டப் பட்டது. குதாபக்ஷ் பாய்ந்தெழுந்து கதவைத் திறந்தான். ஒருவன் உள்ளே நுழைந்தான். மூன்று ரூபாய்க்கு ஏற் றுக் கொள்ள வைத்த அந்த முதல் வாடிக்கையாளன் இவன்தான். அவனுக்குப் பிறகு மேலும் ஐந்து பேர் வந் தார்கள். அதாவது மூன்று மாதத்தில் மொத்தம் ஆறு பேர். அதிலிருந்து சுல்தானா சம்பாதித்தது, பதினெட் டரை ரூபாய். வாடகை மட்டுமே இருபது ரூபாய். இதைத் தவிர தண்ணீர் மற்றும் மின்சாரக் கட்டணங்கள் வேறு. அதுவும் இல்லாமல் மற்றச் செலவுகளும் இருந்தன - சாப்பாடு, துணிமணி, மருந்து. இருந்தும் வருமானம் ஏதும் இல்லை . மூன்று மாதத்தில் பதினெட்டரை ரூபாய் என்பது எந்த விதத்திலும் வருமானம் என்று சொல்ல முடியாதது. இதன் விளைவாய், அம்பாலா கண்டோன் மென்டில் செய்யப்பட்ட ஐந்தரை சவரனில் இருந்த எட்டு வளையல்களை, ஒன்றன் பின் ஒன்றாக விற்க வேண்டி வந்தது. சுல்தானா மிகவும் கவலை கொள்ளத் தொடங்கினாள். அவளின் கடைசி வளையலும் வெளி யேறப் போன சமயத்தில் குதாபஷிடம், "நான் சொல்வ தைக் கேள். நாம் திரும்ப அம்பாலா சென்று விடலாம்.. இந்த நகரம் நமக்கு நல்லபடியாக அமையவில்லை . அம்பாலாவில் உன்னுடைய தொழிலும் நல்ல முறை யில் நடந்து வந்தது. நாம் திரும்பப் போய் விடலாம். நாம் இங்கு இழந்ததை எல்லாம், நம்முடைய எதிர்கால நன்மைக்காக நாம் செய்த தியாகங்களாக நினைத்துக் கொள்ளலாம். போய் இந்த வளையலை விற்று வா நான்

அதற்குள் எல்லாவற்றையும் கட்டி வைக்கிறேன். இன்று இரவு ரயிலில் புறப்படலாம்" என்று சொன்னாள்.

வளையலை வாங்கிக் கொண்ட குதாபக்ஷ், "இல்ல செல்லம், நாம் திரும்ப அம்பாலா போகப்போவது இல்லை. நாம் இங்கேயே தங்கியிருந்து சம்பாதித்துக் கொள்ளலாம். உன்னுடைய வளையல்களை எல்லாம் இந்த ஊரிலேயே திருப்பிக் கொள்ளலாம். கடவுள் மீது நம்பிக்கை வை. அவர் எல்லோரையும் கவனித் துக் கொள்வார். இங்கேயே நமக்கென்று ஒரு வழியை அவர் நிச்சயம் காட்டுவார்" என்றான். சுல்தானா அமை தியாக இருந்தாள். அவளின் கைகளில் இருந்து கடைசி வளையலும் போய்விட்டது. வெறும் கையைப் பார்த்து அவள் மிகவும் வேதனை கொண்டாள். ஆனால் வேறு வழியேதும் இல்லை. எப்படியாவது வயிற்றை நிரப்பிக் கொள்ளத்தானே வேண்டும்.

ஐந்து மாதங்கள் கழிந்த பிறகும் வருமானம் மொத் தச் செலவில் கால் பகுதிதான் என்றபோது சுல்தா னாவின் கவலைகள் மேலும் அதிகரித்தன. குதாபக்ஷ் நாள் முழுக்க வீட்டில் இல்லாமல் போனது அவ ளின் கவலையை மேலும் அதிகரித்தது. சுற்றியிருந்த வர்களிடம் ஏதாவது பேசி நேரத்தைக் கடத்த முடியும் என்றாலும் ஒவ்வொரு நாளும் அவர்களோடு மணிக் கணக்கில் செலவிடுவதை அவள் வெறுத்தாள். அத னால் பொதுவாக அவர்களைச் சந்திப்பதை முற்றிலு மாக நிறுத்திக்கொண்டாள். நாள் முழுவதும் வீட்டில் தனிமையில் கழித்தாள். சில சமயங்களில் பாக்கை உடைத்துக்கொண்டிருந்தாள். சில சமயங்களில் பழைய துணிகளைத் தைத்துக்கொண்டிருந்தாள். ஏதோ சில சமயங்களில் பால்கனியில் நின்று கொண்டு, தெரு வுக்கு எதிர்த்தாற் போல் இருந்த இரயில்வே ஷெட் டில் நகர்ந்து கொண்டிருந்த, நகராமலிருந்த இன்ஜின்

களை வேடிக்கை பார்த்துக்கொண்டு நின்றாள். தெரு முழுக்க ஒரு முனையில் இருந்து மறு முனைக்கு விரிந்த குடோன் ஒன்றும் இருந்தது. அதற்கு வலது பக்கத்தில் ஆஸ்பெஸ்டாஸ் கூரைக்கு அடியில் பெரிய பெரிய கட்டுகள் - எல்லாவிதமான வியாபாரப் பொருட்களையும் கொண்டவை, தாறுமாறாய் இறைந்து கிடந்தன. இடது பக்கத்தில் கிடந்த திறந்தவெளியில் கணக்கில் அடங்கா இரயில் தண்டவாளங்கள் தாறுமாறாய் ஓடிக்கொண்டிருந்தன. சூரிய ஒளியில் பிரகாசித்துக் கொண்டிருந்த அந்தத் தண்டவாளங்களைப் பார்க்கும் போதெல்லாம், சுல்தானா தன் கைகளைத் திருப்பிப் பார்த்துக் கொண்டாள். அதில் நரம்புகள் அந்தத் தண்டவாளங்களைப் போலவே இருந்தன. எல்லா நேரங்களிலும் ஒரு பக்கத்தில் இருந்து மறு பக்கத்திற்கு இரயில் இன்ஜின் பெட்டிகளும் நகர்ந்து கொண்டே இருந்தன. சதா நகர்ந்து கொண்டே இருந்த அந்தச் சத்தங்கள் வான்வெளியில் திரும்பத் திரும்ப எதிரொலித்துக் கொண்டே இருந்தன. காலையில் எழுந்தவுடன் பால்கனிக்கு வந்து நின்றால் விசித்திரமான காட்சியை அவள் காண நேர்ந்தது. பனி மறைந்தது போன்ற வெளியில், ரயில் இன்ஜின்கள் வாந்தி எடுத்த கருத்த புகைமூட்டம், இருண்ட வானத்தை நோக்கி நகர்வது, பார்ப்பதற்கு மிக தடித்த ஆண்கள் மேலே உயர்ந்து கொண்டிருப்பதைப் போலிருந்தது. அத்தோடு மிகப் பெரிய புகைமூட்டம் இன்ஜினுக்கு அடியிலிருந்தும் புறப்பட்டு, சில நிமிஷங்களில் காற்றில் கரைந்து போனது. ரயில் பெட்டி ஒன்றை, இன்ஜின் தள்ளிவிட, அது தனியே நகர்ந்து கொண்டிருந்ததைப் பார்த்தபோது, அவள் தன்னையே நினைத்துக் கொண்டாள். வாழ்க்கைத் தண்டவாளத்தில் தள்ளிவிடப்பட அவள் தனியே நகர்ந்து கொண்டிருப்பதைப் போல் உணர்ந்தாள். மற்றவர்களால் திசை மாற்றிவிடப்பட அவள் போய்ச் சேரும் இடம் பற்றி பிரக்ஞை

ஏதும் அற்று நகர்ந்து கொண்டிருக்கிறாள். தள்ளிவிடப் பட்ட வேகம் குறைய நிச்சயம் ஒரு நாள் முன்பின் அறி யாத ஏதோ ஒரு விசித்திரமான இடத்தில் அவள் நிற்க வேண்டிவரும் என்றும் நினைத்தாள்.

தாறுமாறாகப் பொருத்தப்பட்டிருந்த தண்டவாளங்க ளையும், அதில் ஓடிக்கொண்டிருக்கும் இன்ஜின்களை யும் மணிக்கணக்காய்ப் பார்த்தபடி நின்று கொண்டி ருப்பாள். எல்லாவிதமான சிந்தனைகளும் அவளின் மூளைக்குள் ஒன்றோடு ஒன்று நெருக்கித் தள்ளி அடைத்துக்கொள்ளும். அம்பாலா கண்டோன்மெண்டி லும் அவளின் வீடு ரயில் நிலையத்திற்கு அருகில் தான் இருந்தது. ஆனால் அங்கு இது போன்ற சிந்தனைக ளில் அவள் எப்போதும் சிக்கிக் கொண்டதே கிடை யாது. அவள் இந்த ரயில் தண்டவாளங்களையும் அவை எழுப்பும் புகையையும் பெரிய விலைமாதுகளின் இருப் பிடமாக ஒப்பிட்டுப் பார்த்தாள். இரயில் பெட்டிகளைத் தள்ளிவிட்ட அந்த ராட்சச இன்ஜின்கள் பார்ப்பதற்கு அம்பாலாவில் அவளிடம் வந்த சேட்டுகள் போல் இருந் தன. நிறைய பெட்டிகள் இணைந்து நிற்க, ஓர் இன்ஜின் அவற்றைக் கடந்து போகும்போது பார்ப்பதற்கு சிவப்பு விளக்குப் பகுதியில் உள்ள ஒரு தெருவில், மேலே வரிசையாக உள்ள அறைகளை ஒரு சேட் பார்த்துக் கொண்டே நடப்பது போல இருந்தது.

இத்தகைய சிந்தனைகள் ஒரு நோயுற்ற மனதிற்குத் தான் சாத்தியம் என்று சுல்தானாவிற்குத் தெரிந்துதான் இருந்தது. அதனால் இது போன்ற சிந்தனைகள் வரும் போது எல்லாம் பால்கனிக்குப் போவதை நிறுத்திக் கொண்டாள். அவள் பலமுறை குதாபஷிடம் தன் மீது இரக்கம் கொண்டு வீட்டில் தங்கியிருக்குமாறு கெஞ்சி யபோதெல்லாம் அவன், "என் செல்லம், நான் வெளியே போவது சம்பாதிப்பதற்கு ஏதேனும் வழி இருக்கிறதா

என்று பார்ப்பதற்குத் தான். கடவுளின் அருளால் நாம் நம்முடைய பழைய நாட்களைத் திரும்பக் காணப் போகி றோம்" என்று அவளைச் சமாதானப்படுத்தினான்.

ஐந்து மாதங்கள் கழிந்து விட்டன. ஆனாலும் அந் தப் பழைய நாட்கள் இன்னும் திரும்ப வரவில்லை. மொகரம் நெருங்கிக் கொண்டிருந்தது. கருப்புத் துணி வாங்குவதற்கு சுல்தானாவிடம் வழியேதும் இல்லை. லேடி ஹாமில்டன்' துணியில் முக்தர் புது பாணியில் கமீஸ் தைத்து வைத்திருந்தாள். அதன் கைகள் பட்டுச் சரிகை வேலைப்பாடுகளைக் கொண்டிருந்தது. அதற்கு இணைந்தது போல் அவளிடம் இருந்த கருப்பு சாட் டின்' சல்வார் கண்மை போல் பளபளத்துக் கொண் டிருந்தது. அன்வாரி பட்டுப் புடவை ஒன்று வாங்கியி ருந்தாள். அவள் புடவைக்கு ஏற்றாற்போல் வெள்ளை நிறத்தில் 'போஸ்கி' ப்ரா அணிந்து கொள்வேன் என்று சுல்தானாவிடம் சொல்லியிருக்கிறாள். அப்போது அது தான் மோஸ்தர் என்றும் சொல்லியிருந்தாள். புடவைக்கு ஏற்றாற்போல் அன்வாரி மிக நுண்ணிய வேலைப்பாடு களைக் கொண்ட கருப்பு பட்டுச் செருப்பும் வாங்கியி ருந்தாள். இதை எல்லாம் பார்த்தபோது மொகரத்திற்கு ஏற்றாற்போல் துணி வாங்கத் தன்னிடம் வசதி ஏதும் இல்லை என்ற கவலை அவளைத் தொற்றிக்கொண் டது.

அன்வாரி மற்றும் முக்தரின் புதுத் துணிகளைப் பார்த் துவிட்டு வீடு திரும்பிய போது அவளுள் ஏதோ புகைந்து கொண்டிருப்பது போல் உணர்ந்தாள். வீடு வெறுமை யாய் இருந்தது. குதாபக்ஷ் வழக்கம் போல வெளியே போயிருந்தான். நீண்ட நேரம் அவள் தரையில் போட் டிருந்த பாயில் தலையணை வைத்துப் படுத்துக் கிடந் தாள். தலையணை உயரமாக இருந்ததால் அவள் கழுத்து விறைப்பானது. பிறகு இந்தக் கவலைகளை

மண்டையிலிருந்து வெளியேற்ற அவள் பால்கனிக்கு வந்து நின்றாள்.

ரயில் தண்டவாளங்களில் இன்ஜின் ஏதும் இல்லாமல் நிறைய பெட்டிகள் நின்று கொண்டிருந்தன. சூரியன் மறைந்து விட்டது. தெருக்களில் தண்ணீர் தெளிக்கப் பட்டு இருந்ததால் புழுதி எல்லாம் அடங்கிக் கிடந் தது. அமைதியாக வீட்டிற்குப் போவது போல், மக்கள் தெருவில் நடந்து கொண்டிருந்தார்கள். ஆண்கள் எவ ரும் கவனிக்காதபடி, தலையை நிமிர்த்திப் பார்த்தார் கள். அப்படிப் பார்த்த ஒருவனை சுல்தானின் கண்கள் பிடித்தன. அவள் சிரித்தாள். ஆனால் அதே கணத்தில் ஒரு ராட்சத இன்ஜின் தோன்றியதால் அதன் மீது கவ னத்தைத் திருப்பி எல்லாவற்றையும் மறந்து போனாள். சுல்தானா அதை மிகக் கவனமாகப் பார்க்கத் தொடங் கினாள். அவளுக்கு, அந்த இன்ஜின் கூட தன்னைக் கருப்பால் சுற்றிக்கொண்டிருப்பது போல தோன்றியது. இந்தச் சிந்தனையை வெளியேற்ற அவள் மீண்டும் தெருப்பக்கம் பார்த்த போது, அவளை வெறியோடு பார்த்த அந்த மனிதன் ஒரு மாட்டு வண்டிக்குப் பக் கத்தில் நின்று கொண்டிருந்தான். சுல்தானா அவனை நோக்கிக் கையசைத்தாள். அவன் சுற்றுமுற்றும் பார்த்து விட்டுச் செய்கையால் அவளின் வீட்டிற்கு எப்படி வரு வது என்று கேட்டான். சுல்தானா வழியைக் காட்டினாள். அவன் சற்றுத் தயங்கிய பிறகு வேகமாக மேலே வந்தான்.

சுல்தானா அவனைத் தரையில் போட்டிருந்த பாயில் உட்காரச் சொல்லி ஏதாவது பேசவேண்டும் என்று, "மேலே வருவதற்கு ஏன் பயப்பட்டாய்?" என்று கேட்டாள். அவன் சிரித்து, இதில் பயப்படுவதற்கு என்ன இருக்கி றது?" என்று கேட்டான்.

"நீ தயங்கினாய். ஏதோ சிந்தித்த பிறகே இங்கு வந் தாய்." என்று பதில் தந்தாள். அவன் மறுபடியும் சிரித் தான். "நீ தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறாய். நான் உன் வீட்டிற்கு மேலே இருந்தவளைப் பார்த்துக்கொண் டிருந்தேன். அந்தப் பெண் தெருவில் இருந்த எவனி டமோ தன் நாக்கை நீட்டிக் காட்டி விளையாடிக் கொண் டிருந்தாள். அவள் செய்தது ரொம்ப வேடிக்கையாக இருந்தது. அதோடு அந்த பால்கனியில் பச்சைவிளக்கு எரிந்து கொண்டிருந்தது. எனக்குப் பச்சை என்றால் ரொம்பப் பிடிக்கும். அது கண்களுக்குக் குளிர்ச்சியைத் தரும்" என்று அவன் பேசிக்கொண்டிருக்கும்போது அந்த அறையை அளந்தெடுத்தான். பிறகு எழுந்து கொண்டான். சுல்தானா, "கிளம்புகிறாயா?" என்று கேட் டாள். "இல்லை" என்று சொல்லி, "நான் உன் வீட்டைப் பார்க்க விரும்புகிறேன். எனக்கு எல்லா அறைகளையும் காட்டு" என்றான்.

ஒவ்வொன்றாக மூன்று அறைகளையும் சுல்தானா காட்டினாள். அவன் எல்லாவற்றையும் அமைதியாகப் பார்த்தான். அவன் சற்றுமுன் அமர்ந்திருந்த அறைக்குத் திரும்பியவுடன்,

"என் பெயர் சங்கர்" என்றான். சுல்தானா முதல் முறையாக அவனை மிகக் கவனமாகப் பார்த்தாள். அவன் சுமாரான உயரத்தில் பார்ப்பதற்குச் சாதாரண மாக இருந்தான். ஆனால் அவனின் கண்கள் வழக் கத்திற்கு மாறாக மிகவும் தெளிவாகவும் பிரகாசமாகவும் இருந்தன. சில சமயங்களில் இது பிரகாசித்தது. அவ னின் உடல் சிறியதாகவும் திடமானதாகவும் இருந்தது. அவனின் நெற்றிப்பொட்டில் முடிகள் சற்றே நரைத்தி ருந்தது. அவன் முரட்டுத் தனமான அழுக்கேறிய ஊதா நிற டிரௌசர் போட்டிருந்தான். வெள்ளைச் சட்டைய ணிந்து காலரைத் தூக்கி வைத்திருந்தான். சுல்தானா

அவனைத் தேடி வந்தது போல், அவன் பாயில் அமர்ந் துகொண்டான். இது சுல்தானாவைச் சங்கடப்படுத்த, "நல்லது, நான் உனக்கு என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டாள். உட்கார்ந்திருந்த சங்கர் இதைக் கேட்டவு டன் படுத்துக்கொண்டான். "நீ எனக்கு என்ன செய்ய முடியும்? நான் உனக்கு என்ன செய்ய முடியும்?" என்று கேட்டான். சுல்தானா அமைதியாக இருந்தாள். அவன் மீண்டும் அமர்ந்து கொண்டு, "நான் சொல்லப் போவ தைக் கேள். நீ என்ன நினைத்துக் கொண்டிருந்தாலும் அவை எல்லாம் முற்றிலும் தவறானவை. நான் பணம் கொடுத்துப் பழக்கப்பட்டவன் இல்லை. மருத்துவரைப் போல எனக்கான ஊதியம் உண்டு. நான் அழைக்கப்பட் டால், ஊதியம் கொடுக்கப்பட வேண்டும்" என்றான். சுல் தானா ஆச்சரியத்தால் பிரமித்துப் போனாலும் உரக்கச் சிரிக்கத் தொடங்கினாள். "நீ என்ன செய்து கொண்டி ருக்கிறாய்?" என்று கேட்டாள்.

சங்கர், " நல்லது, நீங்கள் எல்லோரும் செய்து கொண் டிருப்பதைத்தான் " என்று பதில் தந்தான்.

"என்ன து?"

"நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்?"

"நான்... நான்... நான் ஏதும் செய்து கொண்டிருக்க வில்லை ."

"நானும் ஏதும் செய்து கொண்டிருக்கவில்லை."

"இது என்ன பேச்சு?" என்றாள் சுல்தானா எரிச்லோடு.

"நீ ஏதாவது செய்து கொண்டிருக்க வேண்டும்"

சங்கர் மிக அமைதியாகப் பதில் தந்தான். "நீயும் ஏதா வது செய்து கொண்டிருக்க வேண்டும்"

"நான் நேரத்தைக் கொன்று கொண்டிருக்கிறேன்."

"நானும் அதையேதான் செய்து கொண்டிருக்கிறேன்."

"அப்படி என்றால், இருவரும் ஒன்றாகச் சேர்ந்து நேரத்தைக் கொல்வோம்"

"நான் அதற்குத் தயார், ஆனால் நேரத்தைக் கொல்வதற்கு நான் பணம் கொடுப்பது இல்லை"

"உனக்கு என்ன புத்தி கெட்டுப் போய்விட்டதா? இது என்ன தர்மச்சத்திரம் என்றா நினைத்துக்கொண்டிருக்கிறாய்?"

"நானும் சேவை செய்வதற்காக இங்கு வரவில்லை."

சுல்தானா சற்றுத் தயங்கினாள். " சேவை செய்கிறவர்கள் யார்?" என்று கேட்டாள்.

"வடி கட்டிய முட்டாள்கள்" என்று பதில் தந்தான் சங்கர்.

"நான் வடி கட்டிய முட்டாள் இல்லை "

"ஆனால் உன்னோடு வாழ்ந்து வரும் அந்த குதாபக்ஷ உண்மையில் வடிகட்டிய முட்டாள்"

"ஏன்?"

"ஏன்? தொடர்ந்து பல நாட்களாக அவன் தன்னுடைய அதிர்ஷ்டம் மாற வேண்டும் என்று மாற்றுத் துணி கூட இல்லாத ஒரு பிச்சைக்காரனிடம் போய்க் கொண்டிருக்கிறான். துருப் பிடித்தப் பூட்டை போன்று அவனின் அதிர்ஷ்டம் மாற்ற முடியாதது." என்று சொல்லி சங்கர் சிரித்தான்.

"நீ ஓர் இந்து. அதனால் எங்கள் மதத்தின் புனிதங்களைக் கிண்டல் செய்கிறாய் " என்றாள் சுல்தானா

சங்கர் சிரித்தான். " இதுபோன்ற இடங்களில் இந்து, முசல்மான் என்ற கேள்விகளுக்கெல்லாம் இடமே

கிடையாது. பண்டிட் மாளவியாவும், திரு.ஜின்னாவும் இங்கு வந்தால் கூட, கண்ணியமான மனிதர்களாகத் தான் நடந்து கொள்வார்கள்".

"நீ எதைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறாய் என்று எனக்குத் தெரியவில்லை. நீ இங்கு இருக்க விரும்புகி றாயா அல்லது போகப் போகிறாயா?"

"நான் உன்னிடம் சொன்ன நிபந்தனைகளின் அடிப்ப டையில் மட்டுமே நான் இங்கு இருக்க முடியும்"

சுல்தானா எழுந்து கொண்டாள். "அப்படி என்றால் நீ கிளம்பலாம்" என்றாள்.

சங்கர் மிக நிதானமாக எழுந்து கொண்டு, தன் கைகளை டவுசர் பாக்கெட்டுகளுக்குள் நுழைத்தப டியே வெளியே வந்தபோது, "அடிக்கடி நான் இந்த பஜார் வழியே போவேன். உனக்கு எப்போது தேவைப்பட்டா லும் என்னைக் கூப்பிடு. நான் ரொம்ப உபயோகமான வன்." என்றான்.

சங்கர் போய்விட்டான். சுல்தானா கருப்புத் துணியை மறந்து விட்டு நீண்ட நேரம் அவனைப்பற்றி சிந்தித் துக்கொண்டிருந்தாள். அவள் அம்பாலாவில் வசதியான நிலையில் இருந்தபோது அவன் வந்திருந்தால் முற்றி லும் வேறு விதமாகப் பார்த்திருப்பாள். ஏன்; வீட்டை விட்டு வெளியே தூக்கி எறிந்தாலும் எறிந்திருப்பாள். ஆனால் அவள் இருந்த அவலநிலையில் அவனின் பேச்சு அவளுக்குப் பிடித்திருந்தது. அவலத்தின் பாரம் சற்றுக் குறைந்தது போல் உணர்ந்தாள்.

சாயந்திரம் குதாபக்ஷ் திரும்பி வந்த போது, "நாள் முழுக்க எங்கு போயிருந்தாய்?" என்று கேட்டாள். குதா பக்ஷ் மிகவும் அசதியுற்று இருந்தான். "நான் பழைய கோட்டையில் இருந்து வருகிறேன். ஒரு பக்கிரி

சில நாட்களாக அங்கு தங்கியிருக்கிறார். அவருடைய கருணை நம்முடைய அதிர்ஷ்டத்தை மாற்றும் என்று தினமும் அவரைப் போய்ப் பார்த்து வருகிறேன்" என் றான்

"அவர் உன்னிடம் ஏதாவது சொன்னாரா?"

"இல்லை , இதுவரை அவரின் கவனம் என் பக்கம் திரும்பவில்லை . ஆனால் சுல்தானா, நான் அவருக் குச் செய்து கொண்டிருக்கும் சேவைக்கான பயனை நிச்சயம் அடைவேன் கடவுளின் அருளாலும் பக்கிரி யின் ஆசீர்வாதங்களாலும் நாம் நம்முடைய பழைய நாட் களை நிச்சயம் மீண்டும் பார்ப்போம்"

சுல்தானாவை மொகரம் ஆக்கிரமித்துக் கொண்டி ருந்தது. குதாபஷிடம் தன்னுடைய கண்ணீரை அடக்கிக் கொண்டு, "நாள் முழுக்க நீ எங்கோ போய்விடுகிறாய். நான் இந்தக் கூண்டில் அடைபட்டுக் கிடக்கிறேன். என் னால் எங்கேயும் போக முடியவில்லை . மொகரம் வரப் போகிறது. அதைப் பற்றி நீ நினைக்கவாவது செய்தாயா? எனக்குக் கருப்புத் துணி தேவை என்று நீ உணர்ந் தாயா... இல்லையா? வீட்டில் சல்லிக்காசு கிடையாது. என் வளையல்களை எல்லாம் விற்றாயிற்று. இப்போது நாம் என்ன செய்வது? அந்தப் பக்கிரியின் ஆசீர்வாதங் களைப் பெறுவதற்கு இன்னும் எவ்வளவு நாட்கள் அவர் பின்னால் ஓடிக் கொண்டிருப்பாய். இங்கு டெல்லியில் கடவுள் நம்மிடமிருந்து முகத்தைத் திருப்பிக்கொண்டு விட்டார் போலிருக்கிறது. என் அறிவுரையை ஏற்று நீ உன் தொழிலை மறுபடியும் தொடங்கு. அது ஏதேனும் கொடுக்க வாய்ப்பிருக்கிறது" என்றாள்.

குதாபக்ஷ் பாயில் படுத்துக்கொண்டு , " ஆனால் வியாபாரத்தைத் தொடங்கக் கொஞ்சம் முன் பணம் தேவை... இந்த அழுக்குப் பிடித்த பேச்சுகளை இத்து

டன் நிறுத்திக்கொள். என்னால் இதற்குமேல் பொறுத் துக் கொள்ள முடியாது. அம்பாலாவை விட்டு வந்தது தவறு என்று ஒத்துக்கொள்கிறேன். ஆனால் கடவுள் என்ன நினைத்தாலும் அது நம்முடைய நல்லதுக்கு தான். யாருக்குத் தெரியும்? இவ்வளவு கஷ்டங்களுக்கு பிறகு ஒரு நாள் .", சுல்தானா இடைமறித்து, "கடவு ளுக்குப் புண்ணியமாகப் போகட்டும். தயவு செய்து ஏதா வது செய். திருடு, கொள்ளையடி எனக்கு அதைப் பற்றி கவலை கிடையாது. சல்வார் தைக்கவாவது எனக்குத் துணி எடுத்துக்கொடு. என்னிடம் வெள்ளை நிறத்தில் போஸ்கி ' கமிஸ் இருக்கிறது. அதற்கு நான் சாயம் போட்டுக்கொள்கிறேன். என்னிடம் வெள்ளை துப்பட் டாவும் இருக்கிறது, நீ எனக்கு தீபாவளிக்கு வாங்கிக் கொடுத்தது. அதையும் நான் சாயம் போட்டுக் கொள்கி றேன். சல்வார் ஒன்றுதான் தேவை. அதை எப்படியாவது நீ எனக்கு வாங்கிக் கொடுத்தாக வேண்டும். எனக்குச் சாத்தியம் செய்து கொடு, எப்படியாவது வாங்கித் தருகி றேன் என்று சத்தியம் செய்து கொடு" என்றாள்.

குதாபக்ஷ் எழுந்து அமர்ந்து கொண்டான். "நீ அவசி யமில்லாமல் நச்சரிக்கிறாய். அதை வாங்குவதற்கு என் னிடம் வழி ஏதும் இல்லை என்று உனக்கு நன்றாகத் தெரியும். விஷம் வாங்குவதற்குக் கூட என்னிடம் பணம் இல்லை."

"நீ செய்ய விருப்பப்படுவது போல் எதை வேண்டுமா னாலும் செய்து கொள். ஆனால் எனக்கு நாலரை கஜம் சாட்டின் எடுத்துக்கொடு." சுல்தானா வற்புறுத்தினாள்.

"இரண்டு மூன்று வாடிக்கையாளர்கள் இன்று இரவு கிடைக்க வேண்டும் என்று பிரார்த்தனை செய் " என் றான் குதாபக்ஷ்.

"ஆனாலும் நீ எதுவும் செய்ய மாட்டாய்?" என்று கேட்ட சுல்தானா மேலும் தொடர்ந்தாள், "நீ முயற்சி செய்தால் எனக்கு வாங்கித்தரும் அளவிற்கு உன்னால் சம்பாதிக்க முடியும். யுத்தத்திற்கு முன்னால் பன்னிரெண்டு, பதினான்கு அணாவுக்கு ஒரு கஜம் சாட்டின் கிடைத்தது. இப்போது ஒரு கஜத்தின் விலை ஒரு ரூபாய் நாலு அணா, நாலரை கஜத்திற்குப் பெரிய அளவு பணம் எதுவும் தேவைப்படாது"

"நீ இவ்வளவு அடம் பிடிப்பதால் நான் ஏதாவது செய்து தான் ஆகவேண்டும்" என்று சொன்ன குதாபக்ஷ் எழுந்து கொண்டு, "நான் போய் ஹோட்டலில் இருந்து சாப்பிட ஏதாவது வாங்கி வருகிறேன்" என்றான்.

சாப்பாடு வந்தது. இருவரும் மனச்சோர்வோடு உண்ட பிறகு உறங்கச் சென்றார்கள். காலையில் பழைய கோட்டைக்குப் பக்கிரியைப் பார்க்க குதாபக்ஷ் கிளம்பிச் சென்றான். சுல்தானா தனியே விடப்பட்டாள். சற்று நேரம் வெறுமனே படுத்துக் கிடந்தாள். பிறகு சற்று நேரம் உறங்கிப்போனாள். பிறகு வீடு முழுக்க வெறுமனே நடந்து கொண்டிருந்தாள். மதிய உணவுக்குப் பிறகு அவளின் போஸ்கி ' வெள்ளைச் சட்டையையும், வெள்ளைத் துப்பட்டாவையும் கீழே இருந்த சலவைக்காரனிடம் சாயம் போடக் கொடுத்தாள். அந்தக் கடையில் துணி துவைப்பதோடு சாயம் போடுவதையும் செய்து வந்தார்கள். இதை முடித்த பிறகு சினிமா பத்திரிகைகளைச் சற்று நேரம் புரட்டிக்கொண்டிருந்தாள். அந்தப் பத்திரிகையில் அவள் பார்த்த படங்கள் பற்றியும் பாட்டுகள் பற்றியும் எழுதியிருந்தது. அதைப் படித்தபடியே அவள் உறங்கிப் போனாள்.

அவள் எழுந்து கொண்ட போது மாலை நாலு மணி. சூரியன் வரவேற்பறையில் இருந்து நகர்ந்து போயிருந்

தது. அவள் குளித்து விட்டு, தடித்த டவலால் தன்னைச் சுற்றிக்கொண்டு பால்கனியில் வந்து நின்றாள். அவள் நின்று கொண்டிருந்த நேரத்தில் சூழ்நிலை மிகவும் பிரமாதமாக இருந்தது. இருட்டத் தொடங்கியிருந்ததால், விளக்குகள் ஏற்றப்பட்டன. கீழேயிருந்த தெரு பார்க்க அற்புதமாக இருந்தது. குளிரத் தொடங்கியது. ஆனால் சுல்தானா அதைப் பொருட்படுத்தவில்லை. நீண்ட நேரம் போய் வந்து கொண்டிருந்த டோங்காக்களையும், கார்களையும் பார்த்த படி நின்று கொண்டிருந்தாள். திடீரென்று அவள் சங்கரைக் கண்டாள். அவன் இவள் இருந்த கட்டடத்திற்கு அருகில் வந்தவுடன் தலையை உயர்த்தி சுல்தானாவைப் பார்த்துப் புன்னகைத்தான். அவளை அறியாமலேயே கையை உயர்த்தி அவனை நோக்கிக் கையசைத்து அவன் மேலே வரவேண்டும் என்பது போல் அர்த்தத்தைக் கொடுத்தாள்.

சங்கர் மேலே வந்தவுடன், சுல்தானா கவலை கொண்டாள். அவனிடம் என்ன பேசுவது என்று அவளுக்குத் தெரியவில்லை. சரியாகச் சொல்வதென்றால் யோசிக்காமலேயே அவனுக்கு அழைப்பு விடுத்தாள். அவன் உள்ளே வந்தவுடன் சொந்த வீட்டில் இருப்பது போல் பாயில் படுத்துக் கொண்டான். போன முறை போலவே இந்த முறையும் தலையணையை எடுத்துத் தலைக்கு வைத்துக் கொண்டான். நீண்ட நேரம் சுல்தானா ஏதும் பேசாததைப் பார்த்த அவன், "நீ விருப்பப்படுவது போல எப்போது வேண்டுமென்றாலும் எனக்கு அழைப்பு கொடுக்கலாம், எப்போது வேண்டுமென்றாலும் என்னை வெளியே போகவும் சொல்லலாம். நான் அதை எல்லாம் தவறாக எடுத்துக்கொள்ள மாட்டேன்" என்றான். சுல்தானா இப்போது தர்ம சங்கடமான நிலையில் இருப்பது போல் உணர்ந்தாள். "இல்ல, உட்காரு. உன்னை யாரும் வெளியே போகச் சொல்லவில்லை"

என்றாள். சங்கர் சிரித்தான், "அப்படி என்றால் என்னுடைய நிபந்தனைகளை நீ ஏற்றுக்கொள்கிறாய்?" என்றான்.

"என்ன நிபந்தனைகள்?" சுல்தானா சிரித்துக் கொண்டே கேட்டாள். "என்னைத் திருமணம் செய்து கொள்ளத் திட்டம் ஏதாவது வைத்திருக்கிறாயா?"

"திருமணம்! நீயும் சரி நானும் சரி எப்போதும் திருமணம் செய்து கொள்ள மாட்டோம், இந்தச் சடங்குகளெல்லாம் நம்மைப் போன்றவர்களுக்கு இல்லை. அதைப் பற்றி எல்லாம் பேசுவதால் எந்தப் பிரயோசனமும் இல்லை. ஏதாவது பிரயோசனமாகப் பேசு"

"நான் என்ன பேச வேண்டும் என்று நீ நினைக்கிறாய்?"

"நீ ஒரு பெண். இதயத்தை வருடிக் கொடுப்பது போல் ஏதாவது பேசு. வாழ்க்கையில் வியாபாரத்தைக் கடந்து எவ்வளவோ விசயங்கள் இருக்கிறது."

சுல்தானா மனதளவில் சங்கரை ஏற்றுக்கொள்ளும் நிலைக்கு வந்தாள். "என்னிடம் இருந்து உனக்கு என்ன வேண்டும் என்று ஏன் வெளிப்படையாகச் சொல்ல மாட்டேன் என்கிறாய்?"

சங்கர் அமர்ந்துகொண்டான். "ஒன்றுமில்லை. மற்றவர்கள் என்ன எதிர் பார்க்கிறார்களோ அதுதான்"

"அப்படி என்றால் உனக்கும் மற்றவர்களுக்கும் என்ன வித்தியாசம் இருக்கிறது?"

"உனக்கும் எனக்கும் வித்தியாசம் ஏதுமில்லை . ஆனால் எனக்கும் மற்றவர்களுக்கும் உலக அளவு வித்தியாசம் உள்ளது. கேட்கக் கூடாத கேள்விகள் நிறைய இருக்கிறது. கேட்காமலே பல கேள்விகளுக்கு நாம் பதிலைப் புரிந்து கொள்ள வேண்டும்"

சுல்தானா சற்று நேரம் அவன் சொல்ல வருவதைப் புரிந்து கொள்ள முயற்சித்தாள். பிறகு, "நீ என்ன சொல்ல வருகிறாய் என்று எனக்குப் புரிகிறது" என்றாள்.

"சரி! அப்படி என்றால் உன்னுடைய முடிவு என்ன?"

"நான் தோற்றுப் போய் நிற்கிறேன். நீ ஜெயித்துவிட் டாய். ஆனாலும் நான் இதையும் சொல்கிறேன். வேறு எவளும் இந்த நிபந்தனைகளுக்கு ஒத்துக்கொண்டி ருக்கமாட்டாள்."

"இது சரியில்லை. எந்த முணுமுணுப்பும் இல்லாமல் இது போன்ற அவமானத்தை நீ தினமும் ஏற்றுக்கொள் வது போல எந்த ஒரு பெண்ணும் ஏற்றுக்கொள்ள மாட் டாள் என்று நினைக்கும் சாதாரணப் பெண்கள் இந்தப் பகுதியில் இருக்கத் தான் செய்கிறார்கள். அவர்களால் நம்ப முடியாத இதையெல்லாம் மீறி, உன்னைப்போன்ற பெண்கள் ஆயிரக்கணக்கில் இருக்கத்தான் செய்கிறார் கள். உன்னுடைய பெயர் சுல்தானா சரியா?"

சங்கர் எழுந்து நின்று சிரிக்கத் தொடங்கினான். " என்னுடைய பெயர் சங்கர்... என்ன அசட்டுத்தனமான பெயர்கள்... சரி, நாம் உள்ளே போகலாம் "

திரும்பி வரும்போது சங்கரும் சுல்தானாவும் சிரித்துக் கொண்டிருந்தார்கள். எதைப்பற்றி என்று கடவுளுக்குத் தான் தெரியும். சங்கர் கிளம்பத் தயாரான போது சுல் தானா அவனிடம், "சங்கர் எனக்காக ஒன்று செய்வாயா?" என்று கேட்டாள்.

"முதலில் என்னவென்று சொல்" என்று பதில் தந்தான் சங்கர்.

சுல்தானா சற்று சங்கடப்பட்டாள், "நீ எனக்கு ஏதா வது ஈடு செய்ய வேண்டும் என்று நான் எதிர்பார்ப்பதாக நினைத்துக் கொள்வாய் ஆனால்..."

“துப்பித் தள்ளு... ஏன் நிறுத்தி விட்டாய்”

சுல்தானா தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, "விசயம் என்னவென்றால் மொகரம் வரப்போகிறது, கருப்பு சல்வார் வாங்க என்னிடம் போதுமான பணம் இல்லை. நாங்கள் இருக்கும் நிலையை ஏற்கனவே உன்னிடம் சொல்லிவிட்டேன். சட்டையும் துப்பட்டாவும் சாயம் போட இன்று கொடுத்துவிட்டேன்” என்றாள்.

"நீ கருப்பு சல்வார் வாங்க நான் பணம் கொடுக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறாயா"

"இல்லை " என்றாள் அவசரமாக. "நான் சொல்ல வந்தது... எனக்குத் தேவையான கருப்பு சல்வார் வாங்கித் தர முடியுமா?"

சங்கர் புன்னகைத்து, "என்னுடைய சட்டைப்பையில் சல்லிக்காசு கிடையாது, இருந்தாலும் என்னால் என்ன செய்ய முடியும் என்று பார்க்கிறேன். மொகரம் தொடங்கும் முதல் நாள் அன்று உனக்கு சல்வார் கிடைக்கும். இப்போது சந்தோசமாய் இரு” என்றான்.

பிறகு சுல்தானா அணிந்து கொண்டிருந்த காது கம்மலைக் காட்டி, "என்னிடம் அதைக்

சுல்தானா உரக்கச் சிரித்தாள். இதனால் உனக்கு என்ன பிரயோசனம். இது சாதாரண கவரிங் தோடு. ஐந்து ரூபாய்க்கு மேல் அதன் மதிப்பு இருக்காது" என்றாள்.

"நான் அந்தத் தோடுகளைத்தான் கேட்டேன். அதன் விலை என்னவென்று கேட்கவில்லை. அதைக் கொஞ்சம் கொடுக்க முடியுமா?" என்று சிரித்துக் கொண்டே சொன்னான்.

"தாராளமாக எடுத்துக்கொள்" சுல்தானா காது தோடு களைக் கழற்றி சங்கரிடம் கொடுத்தாள். பிறகு அவள் அதற்காக வருத்தப்பட்டபோது, சங்கர் புறப்பட்டுப் போய்விட்டான்.

சங்கர் தன்னுடைய வாக்கைக் காப்பாற்றுவான் என்று சுல்தானா கொஞ்சம் கூட நம்பிக்கை கொள்ளவில்லை. ஆனாலும் எட்டு நாட்கள் கழித்து, மொகரத்தின் முதல் நாள் அன்று காலை ஒன்பது மணிக்கு யாரோ கத வைத் தட்டினார்கள். சுல்தானா கதவைத் திறக்க, சங்கர் நின்று கொண்டிருந்தான். சுல்தானாவிடம் பழைய செய் தித்தாளில் சுற்றப்பட்டிருந்த ஒரு பொட்டலத்தை நீட்டி, "இது சாட்டின் சல்வார். ஒருவேளை இது உனக்குச் சற் றுப் பெரிதாக இருக்கலாம்... நான் இப்போது கிளம்புகி றேன்" என்றான்.

சங்கர் சல்வாரைக் கொடுத்தவுடன் ஏதும் பேசாமல் கிளம்பிச் சென்றான். அவனின் டவுசர் கசங்கிக் கிடந் தது. தலை முடி எல்லாம் கலைந்து கிடந்தது. பார்ப் பதற்கு அப்போதுதான் படுக்கையில் இருந்து எழுந்து நேராக இங்கு வந்து விட்டது போல் இருந்தான்.

சுல்தானா பொட்டலத்தைப் பிரித்தாள். அதில் இருந்த சாட்டின் சல்வார் அவள் முக்தரிடம் பார்த்தது போலவே இருந்தது. சுல்தானா மிகவும் சந்தோசப்பட் டாள். காது தோடுகளை இழந்த வருத்தம் இப்போது சல்வாரைப் பெற்றுக்கொண்டதிலும், சங்கர் தன் வாக்கு றுதியை நிறைவேற்றியதிலும் ஈடு செய்யப்பட்டது.

மதியம் சுல்தானா சலவைக்கடையில் இருந்து சாயம் போடக் கொடுத்த கமிஸ்ஸையும் துப்பட்டாவையும் வாங்கி வந்தாள். அவள் இந்த மூன்று கருப்புத் துணி களை அணிந்து கொண்டவுடன் கதவு தட்டப்படும் சத் தத்தைக் கேட்டாள். அவள் கதவைத் திறக்க, முக்தர்

நின்று கொண்டிருந்தாள். முக்தர் உள்ளே நுழைந்தாள். சுல்தானாவின் உடைகளைப் பார்த்து, "சட்டையும் துப் பட்டாவும் சாயம் போடப்பட்டது போல் இருக்கிறது. ஆனால் இந்தச் சல்வார் புதுசு போல் இருக்கிறது. இதை எப்போது தைத்தாய்?" என்று கேட்டாள்.

சுல்தானா, " இன்றுதான் டைலர் கொண்டு வந்து கொடுத்தான்" என்றாள். அப்போது முக்தரின் காதுக ளைப் பார்த்தாள். " இந்தத் தோடுகளை எப்போது செய்து கொண்டாய்?" என்று கேட்டாள்.

முக்தர் சொன்னாள்: "இன்று தான் வாங்கி வந்தேன்"

பிறகு அவர்களிடையே மௌனம் நிலவியது - ஏதும் பேச முடியாமல்.

***



## குருமூக்சிங்கின் கடைசி விருப்பம்

தொடக்கத்தில், இங்கு அங்கு என்று தொடர்பில்லாமல் சில கத்திக்குத்துகள் மட்டுமே நடந்தன. ஆனால் இப்போது அது முடிவே இல்லாத மதக் கலவரமாக உருக்கொண்டது. கத்திகள், பட்டாக்கத்திகள் தவிர துப்பாக்கிகளும், வாள்களும் தொடர்ந்து உபயோகப்படுத்தப்பட்டன. நாட்டு வெடி கூட வெடிக்கப்பட்டது.

அம்ரித்சர் மக்கள் இந்தக் கலவரம் நீண்ட நாட்களுக்கு நீண்டு போகாது என்றே பொதுவாக நினைத்தார்கள். இந்தக் கோபம் கொண்ட மனநிலை தணிந்த பின் எல்லாம் அமைதி நிலைக்குத் திரும்பிவிடும். இவை எல்லாம் முதல் முறையாக நடக்கும் மதக் கலவரங்கள் இல்லை . கடந்த காலங்களில் எத்தனையோ நடந்திருக்கின்றன. ஆனால் அவை எதுவுமே நீண்ட நாட்களுக்கு நிலைத்தது கிடையாது. பத்துப் பதினைந்து நாட்களுக்கு இது தொடரும். பிறகு அமைதி திரும்பி விடும். கடந்த கால அனுபவத்தின் அடிப்படையில், இப்போது நடப்பது கூட சீக்கிரமே ஒரு முடிவுக்கு வந்து விடும் என்று நினைத்திருந்தார்கள். ஆனால் இந்த முறை அது எந்த முடிவுக்கும் வரவில்லை. உண்மை என்னவென்றால் நாட்கள் நகர நகர, சூழ்நிலை மேலும் மோசமாகிக் கொண்டே போனது. இந்துக் குடியிருப்பு பகுதிகளில் உள்ள முசல்மான்கள் அங்கிருந்து வெளியேறத் தொடங்கினார்கள். அது போலவே முஸ்லிம்கள் பெரும்பான்மையாக இருக்கும் பகுதியில் வசித்து வந்த இந்துக்கள் பாதுகாப்பான இடத்தை நோக்கி நகரத்

தொடங்கினார்கள். ஆனால் இந்தக் குடிபெயர்தல்கள் எல்லாம் தற்காலிகமானவை என்றே கருதப்பட்டது. நிலைமை கண்டிப்பாக ஒரு கட்டுப்பாட்டுக்குள் வரும் என்ற நம்பிக்கை இருந்தது.

ஓய்வு பெற்ற துணை நீதிபதி மியான் அப்துல் ஹாயி, கண்டிப்பாக இன்னும் சில நாட்களில் அமைதி ஏற்ப டுத்தப்படும் என்று அசாத்திய நம்பிக்கை கொண்டிருந் ததால் கவலைப்படாமல் இருந்தார். அவருக்குப் பதி னொரு வயதில் ஒரு மகனும், பதினேழு வயதில் ஒரு மகளும் இருந்தார்கள். அத்தோடு ஏறக்குறைய எழு பது வயதான ஒரு வேலைக்காரக் கிழவரும் இருந்தார். அது சிறு குடும்பம். மியான் சாகிப் முன்னெச்சரிக்கை நடவடிக்கையாகத்தான், நிலைமை கட்டுக்கடங்காமல் போய், அதனால் கடைகள் எல்லாம் மூடியே கிடந்ததால் சாப்பாட்டு விஷயத்திலாவது கவலைப்படாமல் இருக்க, மளிகைப் பொருட்களைச் சேர்த்து வைத்திருந்தார்.

மியான் சாகிப்பின் மகள் சுக்ரா முழுக்கக் கவலை யோடு இருந்தாள். அவர்களின் வீடு மூன்று அடுக்கு களைக் கொண்டது. அது சுற்று வட்டாரத்தில் உள்ள மற்ற கட்டடங்களைக் காட்டிலும் மிகவும் உயரமானதாக இருந்தது. கட்டடத்தின் மொட்டை மாடியில் இருந்து முக்கால் நகரத்தைப் பார்க்க முடியும். பல நாட்களா கச் சுக்ரா அருகாமையிலும் தொலைவிலும் ஏதாவது எரிந்து கொண்டிருப்பதைப் பார்த்து வந்தாள். தொடக் கத்தில் தீயணைப்பு வண்டியின் அலறல்களைக் கேட்க முடிந்தது. ஆனால் இப்போது அதுவும் நின்று போனது. ஏறக்குறைய எல்லா இடங்களிலும் ஏதாவது எரிந்து கொண்டிருந்தது. அந்தக் காட்சி இரவு நேரங்களில் நடுங்க வைக்கக் கூடியதாக இருந்தது. கொடூரமான மிருகம் ஏதோ ஒன்று வாந்தி எடுப்பது போல் தீச்சுவா லைகள் இரவு நேரங்களில் வான் நோக்கிப் பாய்ந்தன.

'ஹர் ஹர் மகாதேவ்' என்றும் 'அல்லாஹு அக்பர்' என்றும் கோஷங்கள் விசித்திரமான சத்தங்களோடு சேர்ந்துகொண்டு, கோரமாகவும், நடுங்க வைக்கக்கூடியதாகவும் இருந்தன.

சுக்ரா தன்னுடைய கவலைகளை அவளுடைய தந்தையோடு பகிர்ந்து கொள்ளவில்லை. இதில் கவலைப்படுவதற்கு ஏதும் இல்லை என்று தீர்மானமாய்ச் சொல்லிவிடுவார். அதுவும் இல்லாமல் அவர் எப்போதும், தவறான முடிவுகள் எடுத்ததே கிடையாது. இருந்தாலும் மின்சாரமும், தண்ணீரும் தடைப்பட்ட பின் தயங்கித் தயங்கி தன்னுடைய கவலையை அவரிடம் சொல்லி, சுற்று வட்டாரத்தில் இருந்த முசல்மான்களின் குடும்பங்கள் எல்லாம் போன ஷாரிப்புராவுக்குக் குடிபெயர்ந்து போய்விடலாம் என்று தயங்கியபடியே யோசனை சொன்னாள். ஆனாலும் மியான் சாகிப் தன்னுடைய முடிவை மாற்றிக்கொள்ளாமல், " அவசியம் இல்லாமல் அவசர முடிவுகள் ஏதும் எடுக்கக் கூடாது. சூழ்நிலை சீக்கிரமாக சகஜ நிலைக்குத் திரும்பிவிடும்" என்றார்.

ஆனால் சூழ்நிலை சகஜ நிலைக்குத் திரும்பவில்லை. நாட்கள் நகர நகர அது மேலும் மோசமாகிக்கொண்டு தான் இருந்தது. மியான் அப்துல் ஹாயி வசித்து வந்த பகுதியில் ஒரு முசல்மான் குடும்பம் கூட இல்லாமல் போனது. சூழ்நிலையை மேலும் மோசமாக்குவது போல் மியான் சாகிப்பைப் பக்கவாத நோய் தாக்க, அவர் எதற்கும் பயனற்றவர் போல் ஆனார். அவரின் மகன் பஷாரத் எந்நேரமும் ஏதாவது விளையாடி நேரத்தைக் கழித்துக்கொண்டிருந்தவன், இப்போது தந்தையின் படுக்கைக்குப் பக்கத்திலேயே அமர்ந்திருந்து சூழ்நிலையின் இறுக்கத்தை உணர்ந்து கொள்ள முயன்று வந்தான்.

அவர்கள் வீட்டருகே இருந்த பஜார் வெறிச்சோடிக் கிடந்தது. டாக்டர் குலாம் முஸ்தபாவின் மருத்துவ நிலையம் பல மாதங்களாக மூடியே கிடந்தது. சற்றுத் தொலைவு தள்ளி டாக்டர் குராந்தித்தா மால் வசித்து வந்தார். சுக்ரா மொட்டை மாடியிலிருந்து அவரின் மருத்துவ நிலையமும் பூட்டப்பட்டிருப்பதைக் கண்டாள். மியான் சாகிப்பின் உடல்நிலை மோசமாகிக் கொண்டிருந்தது. சுக்ரா அவளால் தாக்குப் பிடிக்கக்கூடிய அளவிற்கு மேல் கவலைகளைக் கொண்டிருந்தாள். ஒரு நாள் பஷாரத்தைத் தனியே அழைத்துச் சென்று, "அப்பாஜியின் நிலைமை மிக மிக மோசமாக இருக்கிறது. வெளியே போவது பாதுகாப்பானது இல்லை என்று எனக்குத் தெரியும். ஆனாலும் நீ வெளியே போய் ஏதாவது உதவியைப் பெற வேண்டும்" என்றாள் பஷாரத் கிளம்பினான். ஆனால் நிமிடங்களில் திரும்பி வந்தான். அவனின் முகம் பிணம் போல வெளிறிப் போய்க் கிடந்தது. ஒரு சதுக்கத்தில் ஓர் உயிரற்ற உடல் ஒன்று ரத்தத்தில் மூழ்கிக் கிடந்ததைப் பார்த்திருக்கிறான். அருகில் வாள்களும் கேடயங்களும் கொண்டிருந்த மனிதர்கள் ஒரு கடையைச் சூறையாடிக்கொண்டிருந்தார்கள்.நடுங்கிக் கொண்டிருந்த தன் சகோதரனை சுக்ரா அணைத்துக்கொண்டு, பத்திரமாய்த் திரும்பி வந்ததற்குக் கடவுளுக்கு நன்றி தெரிவித்தாள். தந்தையின் நிலைமை அவளை நிலை கொள்ளாமல் செய்தது. மியான் சாகிப்பின் இடது பக்கம் முழுக்க உணர்வற்று அவருடைய பேச்சும் பாதிக்கப்பட்டிருந்தது. அவர் செய்கைகளால் கடவுளின் அருளால் எல்லாம் நல்லபடி முடியும்' என்று சுக்ராவிடம் தெரிவித்தார்.

சூழ்நிலையில் எந்த மாற்றமும் இல்லை. ரம்ஜான் முடிவுக்கு வந்து கொண்டிருந்தது. இன்னும் இரண்டு நாட்கள் விரதம் மட்டுமே பாக்கி இருந்தது. ஈத்-க்கு முன்

னரே சூழ்நிலை அமைதி நிலைக்குத் திரும்பி விடும் என்று மியான் சாகிப் உறுதியாக நம்பினார். ஆனால், ஈத் வரப்போகும் பெரும் துயரத்தை முன்னறிவிப்பு செய் வது போல, நகரத்தின் ஒவ்வொரு பகுதியில் இருந்தும் தீச்சுவாலைகள் உயர்ந்து கொண்டிருப்பதை மொட்டை மாடியிலிருந்து பார்க்க முடிந்தது. நடுங்க வைத்த குண்டு வெடிப்புகள், இரவு தூங்குவதைச் சாத்தியமில்லாமல் செய்தன. எப்படி இருந்தாலும் தந்தையைப் பார்த்துக் கொள்ள சுக்ரா இரவெல்லாம் விழித்திருக்க வேண்டி யிருந்தது. சில சமயங்களில் அந்தக் குண்டுவெடிப்பு கள் அவளின் மூளைக்குள் நிகழ்வது போல உணர்ந் தாள். சில சமயங்களில் எந்தப் பிரயோஜனமும் அற்றுப் போன அவளின் தந்தையைப் பரிதாபமாய்ப் பார்ப்பாள், சில சமயங்களில் நடுங்கிக் கொண்டிருக்கும் அவளின் சகோதரனைப் பார்ப்பாள். எழுபது வயதான அக்பர் இருந்தும் இல்லாதது போல்தான். அவர் எந்நேரமும் அவருடைய அறையில் இருமிக் கொண்டும், கோழை யாய்த் தூங்கிக் கொண்டும் படுத்தே கிடந்தார். ஒரு சமயம் சுக்ரா கோபத்தில் அவரைத் திட்டிவிட்டாள். "வேலைக்காரர்கள் தங்களின் எஜமானர்களுக்காக உயிரையும் தியாகம் செய்த காலங்கள் உண்டு. ஆனால் நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? மியான் சாகிப்பின் உடல் நிலை மிக மோசமாக இருக்கிறது. அவருக்கு உதவி தேவைப்படுகிறது. ஆனால் நீ மோசமாக ஆஸ்து மாவில் அவதிப்பட்டுக் கொண்டிருப்பது போல் நடித்துக் கொண்டிருக்கிறாய் " அவளுள் சேர்ந்து கிடந்த கோபங் கள் எல்லாம் இப்படி வெளியேறியவுடன், சற்று லகு வாக உணர்ந்தாள் என்றாலும், சிந்தித்தபோது அந்த வயதான மனிதரிடம் இவ்வளவு கடினமாகப் பேசியிருக் கக் கூடாது என்று வருத்தப்பட்டாள். அன்று மாலை அவரின் அறைக்கு ஒரு தட்டில் சாப்பாடு எடுத்துச் சென்றாள். அந்த அறை காலியாக இருந்தது. பஷாரத்

வீடு முழுக்கத் தேடிவிட்டான். அக்பரின் சுவட்டைக்கூட காண முடியவில்லை. முன் கதவு தாழ்ப்பாள் கழற்றப் பட்டு இருந்தது. அப்படி என்றால் அவர் வெளியே சென் றிருக்க வேண்டும். ஒரு வேளை மியான் சாகிப்புக்கு ஏதாவது உதவி செய்யும் எண்ணத்தோடு வெளியே சென்றிருக்கலாம் என்று நினைத்து, சுக்ரா அவர் வெற் றிக்கான பிரார்த்தனை செய்தாள். ஆனால் இரண்டு நாட்கள் கழிந்த பிறகும் அக்பர் திரும்பி வரவில்லை.

அது சாயந்திர வேளை. ஈத் பண்டிகைக்கு இன் னும் ஒரு நாள் தான் இருந்தது. இந்தப் பண்டிகை யின் போது அனுபவிக்கும் சந்தோஷமும், பரபரப்பும் சுக்ராவின் நினைவில் தெளிவாய் இருந்தது. ஆகாயத் தோடு ஆணியடிக்கப்பட்டது போல, நிலவை எதிர்பார்த் துக் காத்திருக்கும் கண்கள். எவ்வளவு அவசரப்படுவார் கள், மேகம் சூழ்ந்துகொண்டதால் எவ்வளவு கோபம் கொள்வார்கள், ஆனால் இப்போது நிலைமை எவ்வளவு வேறுபட்டிருக்கிறது. அவளும் பஷாரத்தும் மொட்டை மாடிக்குச் சென்றால் தீ, புகை மூட்டங்களை மட்டுமே பார்க்க முடிந்தது. தொலைவில் சில மனித நிழல்கள் தென்பட்டன. அவர்கள் நிலவைப் பார்த்துக் கொண்டி ருந்தார்களா அல்லது சுற்றிலும் எரிந்து கொண்டிருப்ப தைப் பார்த்துக் கொண்டிருந்தார்களா என்று சொல்வது கடினமாக இருந்தது.

விட்டுக்கொடுக்காத நிலவு, தீ புகை மூட்டங்களால் மறைக்கப்படுவதை அனுமதிக்கவில்லை. சுக்ரா நில வைப் பார்த்துக் கைகளை உயர்த்தி அவளின் தந்தை யின் உடல் நிலை தேறவேண்டும் என்று பிரார்த்தனை செய்தாள். இந்தக் கலவரங்களால் பண்டிகை இல்லா மல் போனது பஷாரத்தை எரிச்சல் கொள்ள வைத்தது.

அந்த நாளுக்கு இன்னும் சில மணி நேரங்களே உயிர் இருந்தது. சாயந்திர நிழல்கள் இன்னும் கறுத் துப் போகவில்லை. முற்றத்தில் தண்ணீர் தெளிக்கப் பட்டபின் மியான் சாகிப்பின் கட்டில் அங்கு கொண்டு வந்து போடப்பட்டிருந்தது. அசைவற்றுத் தொலைவில் இருந்த வானத்தையே வெறித்துப் பார்த்துக்கொண்டி ருந்த அவர் என்ன சிந்தித்துக் கொண்டிருக்கிறார் என் பது கடவுளுக்குத்தான் தெரியும். நிலவைப் பார்த்து விட் டுக் கீழே இறங்கி வந்து, சுக்ரா தந்தைக்கு தன்னுடைய வாழ்த்துகளைத் தெரிவித்தபோது, அவர் செய்கை யால் அதை ஏற்றுக்கொண்டு பாதிக்கப்படாத மற்றொரு கையால் குனிந்து வணங்கிய சுக்ராவின் தலையில் வாஞ்சையோடு தட்டிக்கொடுத்தார். சுக்ராவால் அவ ளுடைய கண்ணீரை அடக்கிக் கொள்ள முடியவில்லை. இதைப் பார்த்த மியான் சாகிப்பால் அவருடைய கண் ணீரை அடக்கிக் கொள்ள முடியாமல் போனது. அவ ளுக்குத் தைரியம் கொடுப்பதற்காக பாதிக்கப்பட்ட தன் னுடைய நாக்கு குழற, "கடவுள் இரக்கம் உள்ளவன் எல் லாம் மீண்டும் நல்ல நிலைக்குத் திரும்பும்" என்றார்.

அந்தச் சமயத்தில் வெளியே இருந்து யாரோ கத வைத் தட்டும் சத்தம் கேட்டது. சுக்ரா பஷாரத்தைத் திரும்பிப் பார்த்தாள். அவனின் முகத்தில் பயம் அப் பிக் கிடந்தது. மீண்டும் கதவு தட்டப்பட்டது. சுக்ராவின் இதயம் ஒரு துடிப்பை மறந்து போனது. 'யார் என்று பார்' என்று மியான் சாகிப் செய்கையில் தெரிவித்தார். அது வயதான அக்பராக இருக்கும் என்று நினைத்து பஷா ரத்திடம், "போய்ப் பார் அது அக்பராக இருக்கலாம்" என்றாள். இதைக் கேட்ட மியான் சாகிப் அதை ஏற்றுக் கொள்ள மறுப்பது போல் தன் தலையை அசைத்தார். "அப்பாஜி, அப்ப அது யாராக இருக்கும்?" என்று சுக்ரா கேட்டாள். மியான் சாகிப் அவருடைய தொண்டையில்

வருத்திக் கொண்டு ஏதோ சொல்வதற்கு முயன்றபோது, பஷாரத் திரும்பி வந்தான். அவனின் முகம் பயத்தால் வெளிறி போய்க் கிடக்க, பெரும் மூச்சு விட்டு நின்று கொண்டிருந்தான். சுக்ராவைத் தனியே அழைத்துச் சென்று மெல்லிய குரலில், "ஒரு சீக்கியன் " என்றான்

சுக்ரா அலறினாள். "சீக்கியனா? அவனுக்கு என்ன வேண்டுமாம்?"

"கதவைத் திறக்கச் சொல்கிறான்"

நடுங்கிக்கொண்டிருந்த பஷாரத்தை, தன் கரங்களால் அணைத்துக்கொண்டு சுக்ரா, தந்தையின் கட்டிலில் அமர்ந்து கொண்டு, அவரையே வெறித்துப் பாத்துக் கொண்டிருந்தாள். மியான் அப்துல் சாகிப் உயிரற்ற மெல்லிய உதடுகள் விரிந்து புன்னகைத்தது. அவர் குழ றியபடியே, "போய் கதவைத் திற, அது குருமூக்சிங்" என் றார்.

பஷாரத், அது வேறு யாரோ என்று தலையசைத்து மறுத்தான். மியான் சாகிப் தீர்மானமாக, "சுக்ரா போ, அது அவராகத்தான் இருக்கும்" என்றார்.

சுக்ரா எழுந்து கொண்டாள். அவளுக்கு குருமூக் சிங்கைத் தெரியும். ஓய்வு பெறுவதற்கு முன்பு அவ ளின் தந்தை அந்தப் பெயரைக் கொண்ட ஒருத்தருக்கு உதவி செய்துள்ளார். சுக்ராவுக்கு விவரங்கள் நினை வில் இல்லை. ஒருவேளை பொய் வழக்கில் இருந்து அவரைக் காப்பாற்றி இருக்கலாம். அப்போதிலிருந்து ஈத் பண்டிகையின் போது அவர் ஒரு பை முழுக்க வீட் டில் செய்த சவாயான்ஸ்' கொண்டு வருவார். அவளின் தந்தை பலமுறை அவரிடம் இவ்வளவு கஷ்டங்களை எடுத்துக்கொள்ளக் கூடாது என்று சொல்லியிருக்கி றார் என்றாலும், அவர் தன் கைகளைக் கட்டியபடியே, "மியான் சாகிப்! நீங்கள் எல்லாவற்றையும் கடவுளின்

அருளோடு பெற்றிருக்கிறீர்கள். இது நன்றிக்கடன் பட்டுள்ள என்னுடைய சிறிய அன்பளிப்பு. நீங்கள் எனக்குச் செய்த உதவியை என்னுடைய நூறு தலைமுறையினராலும் திருப்பிக் கொடுக்க முடியாது. எல்லாம் வல்ல அவன் உங்களுக்குச் சந்தோஷங்களைக் கொடுக்கட்டும்" என்று பதில் தருவார்.

கதவு தட்டப்பட்டபோதே, அது குருமூக்சிங்காகத் தான் இருக்கும் என்று தனக்குத் தோன்றாதது சுக்ராவுக்கு ஆச்சரியத்தைத் தந்தது. பிறகு ஏன் பஷாரத் அது வேறு யாரோ என்று சொன்னான் என்ற சிந்தனையும் வந்தது. அவனும் குருமூக்சிங்கைப் பலமுறை பார்த்திருக்கிறான்.

இந்தச் சிந்தனைகளோடு அவள் முற்றத்தைக் கடந்து முன் கதவுக்குச் சென்றாள். கதவைத் திறப்பதா அல்லது வெறுமனே யாரென்று கேட்பதா என்று அவளால் ஒரு தீர்மானத்திற்கு வர முடியவில்லை . அந்தச் சமயத்தில் மீண்டும் கதவு தட்டப்பட்டது. பெருமூச்சு விட்டபடியே, "யார் அது?" என்று கேட்டாள். பஷாரத் அவளுக்கு அருகில் நின்று கொண்டிருந்தான். கதவில் இருந்த ஒரு சிறிய உடைப்பைச் சுட்டிக்காட்டி, "அது வழியாகப் பார்" என்றான் சுக்ராவிடம்.

சுக்ரா அந்த உடைப்புக்கு ஊடாகப் பார்த்தாள். அது வயதான குருமூக்சிங் இல்லை. வெளியே நின்று கொண்டிருந்தவன் ஒரு வாலிபன். உடைப்புக்கு ஊடாகப் பார்த்தபடியே நிலைமையை அளந்து கொண்டிருந்தபோது மறுபடியும் கதவு தட்டப்பட்டது.

அந்த வாலிபன் குருமூக்சிங் வழக்கமாகக் கொண்டு வரும் அதே காகிதப் பையை வைத்திருப்பதைக் கவனித்தாள். கதவில் இருந்து தன் பார்வையை விலக்கி, "யார் நீ" என்று உரக்கக் கேட்டாள்.

"நான் சந்தோஷ், சர்தார் குருமூக்சிங்கின் மகன்" என்று வெளியே இருந்து பதில் வந்தது.

சுக்ராவின் பயம் அடங்கியது. மிகவும் மரியாதையோடு, "நீங்கள் இங்கு வர வேண்டிய காரணம் என்ன?" என்று கேட்டாள்.

"ஜட்ஜ் சாகிப் எங்கே?" என்று வெளியே இருந்தவன் கேட்டான். "அவருக்கு உடல் நிலை சரியில்லை" என்று சுக்ரா பதில் அளித்தாள். சந்தோஷ் சிங் அக்கறை கொண்ட குரலில், "ஓ..." என்றான். பிறகு தன்னுடைய காகிதப்பையைக் குலுக்கி, "நான் வீட்டில் செய்த 'சவாயான்ஸ்' கொண்டு வந்திருக்கிறேன். என்னுடைய தந்தை இந்த உலகத்தில் இல்லை. சர்தார்ஜி இறந்து விட்டார்" என்றான்.

"இறந்து விட்டாரா?" என்றாள் சுக்ரா அவசரமாக

அவர் இறந்து விட்டார். அவர் இறந்து போவதற்கு முன் என்னிடம், 'மகனே? நான் வீட்டில் செய்த சவாயான்ஸ்'ஸை, கடந்த பத்து வருடங்களாக ஈத் அன்று ஜட்ஜ் சாகிப்புக்குக் கொண்டு போய்க் கொடுத்து வருகிறேன். எனக்குப் பிறகு நீ இதைச் செய்தாக வேண்டும்' என்றார். இறந்து கொண்டிருந்த தந்தைக்குக் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்ற நான் இங்கு வந்திருக்கிறேன். தயவு செய்து இந்த 'சவாயான்ஸ்'ஸைப் பெற்றுக் கொள்ளுங்கள்"

சுக்ரா நெகிழ்ந்து போனாள். அவளின் கண்களில் இருந்து கண்ணீர் ஊற்றியது. அவள் கதவைப் பாதி திறந்தாள். குருமூக்சிங்கின் மகன் அதன் இடுக்கு வழியே பையைக் கொடுக்க, அதை எடுத்துக்கொண்ட சுக்ரா, "கடவுள் சர்தார் சாகிப்புக்குச் சொர்க்கத்தில் சந்தோஷங்களைக் கொடுக்கட்டும்" என்றாள்.

குருமூக்சிங்கின் மகன் சற்று மௌனத்திற்குப் பிறகு, "ஜட்ஜ் சாகிப்பின் உடல் நிலை மிகவும் மோசமாக இருக் கிறதா?" என்று கேட்டான்.

சுக்ரா அதை ஆமோதிக்கும் வகையில் "ஆம்" என் றாள்.

"உடம்புக்கு என்ன?"

"பக்கவாதம்"

"ஓ..." என்றான் சந்தோஷ். "சர்தார்ஜி உயிரோடு இருந் திருந்தால் இதைக் கேட்டு நிலை குலைந்து போயிருப் பார். அவரின் கடைசி மூச்சுவரை ஜட்ஜ் சாகிப் அவ ருக்குச் செய்த உதவியை நினைவில் வைத்திருந்தார். அவர் சொல்லுவார், 'ஜட்ஜ் சாகிப் ஒரு சாதாரண மனிதர் இல்லை , கடவுளால் அனுப்பப்பட்டவர். கடவுள் அவ ருக்கு நீண்ட ஆயுளைக் கொடுக்கட்டும்' தயவு செய்து என்னுடைய வணக்கங்களை அவருக்குத் தெரியப் படுத்துங்கள்"

சுக்ரா அவனிடம் மருத்துவரை அழைத்து வரச் சொல்லி உதவி கேட்கலாமா என்று யோசித்துத் தீர் மானம் எடுப்பதற்குள் சந்தோஷ் படிகளில் இறங்கிப் போய்க்கொண்டிருந்தான்.

ஜட்ஜ் சாகிப் வீட்டில் இருந்து சில அடி தூரங்களே அவன் போயிருப்பான். நான்கு நபர்கள் - அவர்களு டைய தாடியைப் பாதுகாப்பு கவசம் கொண்டு கட்டி இருந்தார்கள் - அவனை எதிர் கொண்டார்கள். இரண்டு பேர் கையில் எரிந்து கொண்டிருந்த தீப்பந்தங்கள் இருந்தன. மற்ற இரண்டு பேரும் மண்ணெண்ணெய் டின்களையும் வேறு சில வெடி மருந்துகளையும் வைத் திருந்தார்கள்.

அதில் ஒருத்தன் சந்தோஷிடம், "சர்தார்ஜி, நீ உன்னுடைய வேலையை முடித்துவிட்டாய் இல்லையா?" என்று கேட்டான்.

சந்தோஷ் தலையசைத்தான்.

"அப்போ, அதனை முடித்து வைக்க நாங்கள் எங்களுடைய வேலையைத் தொடங்கலாமா"

"உங்கள் இஷ்டம்" என்று சொன்ன குருமுக்சிங்கின் மகன் நடக்கத் தொடங்கினான்.

***



# ஜானகி

புனேவில் குதிரைப் பந்தயங்கள் தொடங்குவதற்குச் சற்று முன்பு, பெஷாவரிலிருந்து என்னுடைய நண்பன் அஜீஸ் ஒரு கடிதம் அனுப்பியிருந்தான். அதில் ஜானகி என்ற பெயர் கொண்ட ஒரு பெண்ணை அனுப்பி வைப்பதாகவும் அவளுக்கு பாம்பே அல்லது புனே சினிமா கம்பெனியில் வேலை கிடைக்க உதவி செய்ய வேண்டும் என்றும் கேட்டிருந்தான். எனக்குப் பல சினிமா கம்பெனிகளோடு இருந்த தொடர்பு மூலம் அவளுக்கு ஏற்றாற் போல் ஒரு வேலை வாங்கிக் கொடுப்பது சிரமமாக இருக்காது என்றும் அதில் குறிப்பிட்டிருந்தான்.

உதவுவதற்கான மனமோ நேரமோ இல்லாமல் போகவில்லை. பிரச்சினை என்னவென்றால் நான் இதுபோல் இதுவரை செய்தது கிடையாது. என்னைப் பொறுத்தவரை பொதுவாக ஒரு பெண்ணைச் சினிமா கம்பெனிக்கு அறிமுகப்படுத்துகிறவர்கள் அவளை வைத்துப் பணம் சம்பாதிப்பவர்களாகத் தான் இருந்திருக்கிறார்கள். ஆனாலும் அஜீஸ் என்னுடைய பழைய நண்பன் என்பதால், அவனுக்கு உதவி செய்ய மறுப்பது சரியாக இருக்காது என்று எனக்குள் சொல்லிக் கொண்டேன். இந்த எண்ணங்களோடு, ஓர் இளம் வயது பெண்ணுக்குச் சரியான சந்தர்ப்பங்கள் கிடைப்பதில் சிரமம் ஏதும் இருக்காது என்றும், என்னுடைய உதவி இல்லாமலேயே அவளால் அதைப் பெற முடியும் என்ற சிந்தனையும் என்னுள் எழத்தான் செய்தது.

நான்கு நாட்கள் கழித்து அந்தப் பெண் வந்தாள். பெஷாவரில் இருந்து பம்பாய்க்கும், பிறகு பம்பாயில் இருந்து புனேவுக்கும் என்று அவள் மிக நீண்ட பயணத்தை மேற்கொண்டுள்ளாள். இரயில் நிலையத்தில் நான் அவளைக் கண்டுபிடிக்க வேண்டும் என்பதால் முதல் பெட்டியில் இருந்து நடக்கத் தொடங்கினேன். ஆனால் நான் அதிக தூரம் போக வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. இரண்டாம் வகுப்புப் பெட்டியில் இருந்து, சுமாரான உயரத்தில் இருந்த ஒரு பெண் இறங்கி வந்தாள். அவள் கையில் ஒரு புகைப்படம் இருந்தது. அவளின் பின்பக்கம் என்னை நோக்கி இருக்க, அவள் தன்னுடைய குதிகாலில் நின்று கொண்டு யாரையோ தேடிக்கொண்டிருந்தாள். நான் அவளுக்கு அருகில் சென்று, "நீங்கள் என்னைத்தான் தேடிக் கொண்டிருக்கிறீர்கள் என்று நினைக்கிறேன்" என்றேன். அவள் திரும்பி கையில் இருந்த படத்தை ஒரு முறை பார்த்துக் கொண்டு, அவள் பல வருடங்களாக என்னை அறிந்திருந்தவள் போல, "சாதத் சாகிப்! இந்தப் பயணம் உண்மையிலேயே மிகவும் சிரமமாகவும், நீண்டும் கிடந்தது. இதில் மோசமானது என்னவென்றால், ஃப்ரான்டியர் மெயிலில் இருந்து இறங்கி பம்பாயில் காத்திருந்ததுதான்" என்றாள். நான் அவளின் மூட்டைகள் எல்லாம் எங்கே என்றேன். "இதோ ஒரு நிமிடத்தில் எடுத்து வருகிறேன்" என்றுச் சொல்லிப் பெட்டிக்குள் மறைந்து போனாள். இரண்டு பெட்டிகளையும், ஒரு சுருட்டிய படுக்கை மூட்டையையும் எடுத்து வந்தாள். நான் ஒரு கூலியை அழைத்தேன். நாங்கள் நிலையத்தில் இருந்து வெளியே வந்தபோது ஹோட்டலில் தங்க விருப்பம் கொள்வதாக அவள் தெரிவித்தாள். இரயில் நிலையத்திற்கு எதிரே இருந்த ஒரு ஹோட்டலில் ஓர் அறையை எடுத்துக் கொடுத்தேன். அவள் படுத்து, சற்று ஓய்வு எடுக்க விரும்புவாள் என்ற எண்ணத்தில்

என்னுடைய விலாசத்தைக் கொடுத்து பத்து மணிக்கு என்னை வந்து பார்க்குமாறு சொன்னேன்.

பத்தரை மணிக்கு பிராபாத் நகரில் நான் தங்கியிருந்த என் நண்பனின் வீட்டிற்கு வந்து சேர்ந்தாள். வீட்டைத் தேட வேண்டியிருந்ததால் சற்றுத் தாமதமாகி விட் டது. நான், பைஜாமாவும் பனியன் மட்டுமே போட்டுக் கொண்டு, டீ குடித்துக்கொண்டிருந்தபோது அவள் திடீ ரென அறைக்குள் நுழைந்தாள். விடியற்காலை வரை நான் எழுதிக்கொண்டிருந்ததால் காலையில் எழுந்து கொள்வதற்கு ரொம்ப தாமதமானது. என் நண்பன் வெளியே போயிருந்தான். வீட்டில் அந்த முட்டாள் வேலைக்காரன் மஸ்ஜித் தவிர வேறு எவரும் இல்லை.

இரயில் நிலையத்திலும் 'சரி; ஹோட்டலிலும் சரி' நீண்ட பயணத்தையும் மீறி ஜானகி உற்சாகமாகவும் தெளிவாகவும் இருந்தாள். ஆனால் என் அறைக்குள் நுழைந்தபோது கந்தலாகவும் வெளிறிப்போயும், பத் துப் பதினைந்து அவுன்ஸ் இரத்தத்தைத் தானமாகக் கொடுத்து விட்டு வந்ததைப் போலவும் காணப்பட்டாள்.

அவளுக்கு டீ ஊற்றிக்கொடுத்து, "நீங்கள் ஹோட் டலில் காலை உணவைச் சாப்பிட்டிருக்க வேண்டும். குறைந்தது இந்த டீயையாவது எடுத்துக்கொள்ளுங் கள்" என்றேன். சற்று தயக்கத்தோடு டீ கப்பை எடுத்து, குடிக்கத் தொடங்கினாள். அவளின் வலது கால் மோச மாக நடுங்கிக்கொண்டிருந்தது. அவளின் உதடுகளும் துடித்துக் கொண்டிருந்தன. அவள் என்னிடம் ஏதோ சொல்ல விரும்புவது போல் இருந்தது. ஹோட்டலில் யாராவது அவளிடம் மோசமாக நடந்து கொண்டிருக்க லாம் என்று நினைத்தேன். அதனால், "ஹோட்டல் உங் களுக்கு வசதியாக இருந்திருக்கும் என்று நினைக்கி றேன்" என்றேன். "ஆமாம்" என்று பதில் தந்தாள். டீயை

முடித்த பின்பு ஏதாவது பேச்சைத் தொடர வேண்டும் என்ற எண்ணத்தில், "அஜீஸ் சாகிப் எப்படி இருக்கி றார்?" என்று கேட்டேன். என் கேள்விக்கு அவள் பதில் சொல்லவில்லை.

டீ கப்பை மேஜை மீது வைத்து விட்டு எழுந்து கொண்டு, "மண்ட்டோ சாகிப்! உங்களுக்கு நல்ல டாக் டர் யாரையாவது தெரியுமா?" என்று கேட்டாள். எனக்கு புனேவில் யாரையும் தெரியாது என்று பதில் சொல்லி, அவள் உடல் நலம் சரியில்லாமல் இருக்கிறாளா என் றும் கேட்டேன். "ஆமாம்" என்று பதில் தந்து உட்கார்ந்து கொண்டாள். விஷயம் என்னவென்று கேட்டேன். ஏதோ சொல்ல வேண்டும் என்று தீவிரமாக இருந்தாலும் வார்த்தைகள் அவள் தொண்டைக்கு வர மறுத்தன. அவள் மீண்டும் எழுந்துகொண்டு என்னுடைய சிக ரெட் பெட்டியில் இருந்து ஒன்றை எடுத்துப் பற்ற வைத் துக்கொண்டாள். "நான் புகைப் பிடிப்பதற்கு என்னை மன்னிக்க வேண்டும்" என்றாள். அவளுக்குப் புகைப்ப ழக்கம் இருப்பதற்கு மேலாக, இடைவெளி இல்லாமல் தொடர்ந்து சிகரெட் பிடிப்பவள் என்றும் ஒரு நாளைக்கு ஏறக்குறைய எழுபத்தைந்து சிகரெட்டுகள் பிடிப்பவள் என்றும் பிறகுதான் தெரிந்து கொண்டேன். அவள் சிக ரெட் பிடிக்கும் பாணி ஆண்கள் பிடிப்பது போல் இருந் தது. இரண்டு விரல்களுக்கு இடையில் சிகரெட்டை அழுத்திப் பிடித்து ஆழமாகப் புகையை உள்ளிழுத்து விட்டாள். "உன்னை என்ன சங்கடப்படுத்திக்கொண்டி ருக்கிறது என்று ஏன் சொல்ல மாட்டேன் என்கிறாய்?" என்று கேட்டேன். ஒரு கன்னிப்பெண் தரையில் காலை ஓங்கி உதைப்பது போல் ஓங்கி உதைத்து, "ஐயோ கட வுளே, நான் அதை எப்படி உங்களிடம் சொல்வேன்" என்றாள். அவள் தன் வாயைத் திறந்தபோது பற்கள் மிக சுத்தமாகவும் பிரகாசித்துக் கொண்டும் இருப்பதை

யும் கவனித்தேன். அவள் அமர்ந்து கொண்டு என் கண் களைத் தவிர்த்து, "என்னுடைய மாதவிடாய் தள்ளிப் போகிறது. எனக்குப் பயமாக இருக்கிறது..." என்றாள். முதலில் அவள் சொல்வதில் என்ன முக்கியத்துவம் இருக்கிறது என்பது எனக்கு விளங்கவில்லை. அவள் முழு வாக்கியத்தையும் முடித்த பின்புதான் எனக்கு விளங்கியது. நான் சாதாரணமாக, "இது அடிக்கடி நடப் பது தானே" என்றேன். அவள் புகையை ஆழமாக இழுத்து ஓர் ஆணைப்போல் வெளியே விட்டு, "இல் லை, இது வித்தியாசமானது. நான் கருவுற்றிருப்பேனோ என்று எனக்குப் பயமாக இருக்கிறது" என்றாள். அவள் மறுபடியும் புகையை இழுத்துவிட்டு, சிகரெட்டை நசுக்கி அணைத்தாள். "முன்பு ஒரு முறையும் இதே போல் நடந் திருக்கிறது. பெஷாவரில் அஜீஸ் சாகிப் அவருடைய ஹாக்கிம் நண்பரிடம் இருந்து ஏதோ மருந்து வாங் கிக்கொடுக்க, விஷயம் ஒரு சில நாட்களில் முடிந்து போயிற்று. மறுபடியும் அது போல் நடந்தால் மிகவும் மோசமாக இருக்கும்" என்றாள்.

"உனக்குக் குழந்தைகள் என்றால் பிடிக்காதா?" என்று கேட்டேன்.

"எனக்கு அவர்களைப் பிடிக்கும். ஆனால் அவர் களை வளர்த்தெடுக்கும் சிரமங்களை யார் அனுபவிப் பது?" என்று பதில் தந்தாள். "கருக்கலைப்பு செய்வது சட்டப்படி குற்றம் என்று உங்களுக்குத் தெரிந்திருக்கும் என்று நினைக்கிறேன்" என்றேன். உடனடியாக அவள், "அஜீஸ் சாகிப்பும் இதேதான் சொன்னார். ஆனால் சாதத் சாகிப் நான் உங்களிடம் கேட்கிறேன், இதில் என்ன குற்றம் இருக்கிறது? அதிகபட்சம் நமக்குச் சொந் தமானதை நாம் அழிக்கிறோம். இந்தச் சட்டத்தை இயற் றியவர்களுக்கு, ஒருத்தி என்னவெல்லாம் கஷ்டங்களை அனுபவிக்க வேண்டியிருக்கிறது என்று தெரிந்திருக்

குமா? உண்மைதான் குற்றம் தான்" என்றாள் தீவிரமான குரலில். நான் சிரித்தேன். "ஜானகி! நீ உண்மையிலேயே விசித்திரமான பெண்தான்" என்றேன். அவளும் சிரிக்கத் தொடங்கி, "அஜீஸ் சாகிப்பும் இதேதான் சொல்வார்" என்றாள். அவள் சிரித்துக்கொண்டிருந்தபோது அவளின் கண்களில் இருந்து கண்ணீர் வடிந்தது. உண்மையாகவும் வெளிப்படையாகவும் நேர்மையாகவும் இருப்பவர்களுக்கு மட்டும்தான் சிரிக்கும்போது கண்ணீர் சிந்த முடியும் என்பது என்னுடைய தீர்மானமான நம்பிக்கை. அவள் தன்னுடைய கைப்பையைத் திறந்து அதில் இருந்து கைக்குட்டையை எடுத்து, கண்களைத் துடைத்துக் கொண்டாள். பிறகு சூதுவாது இல்லாத குழந்தையைப் போல, "சாதத் சாகிப், என் பேச்சு சுவாரசியமாக இருக்கிறதா?" என்று கேட்டாள். நான் சொன்னேன்: "ரொம்பவும்". "பொய்" என்று சொல்லி மற்றொரு சிகரெட்டைப் பற்றவைத்தாள். அவளே தொடர்ந்தாள். "நான் ரொம்ப சாதாரண முட்டாள் என்று மட்டும் எனக்குத் தெரியும் - நான் அதிகமாகச் சாப்பிடுவேன், அதிகம் பேசுவேன், நிறைய சிரிப்பேன். நான் அளவுக்கதிகமாகச் சாப்பிடுவதால் பாருங்கள் நான் எவ்வளவு குண்டாக இருக்கிறேன். அஜீஸ் சாகிப் அடிக்கடி சொல்வார், 'ஜானகி, குறைவாகச் சாப்பிடு' என்று. ஆனால் நான் அதற்குச் செவி சாய்த்ததே இல்லை. சாதத் சாகிப், நான் குறைவாகச் சாப்பிட்டால், நான் எதையோ மறந்துவிட்டது போல் உணர்வு கொள்கிறேன்" என்று சொல்லி மறுபடியும் சிரிக்கத் தொடங்கினாள். நானும் அவளோடு சேர்ந்துகொண்டேன். அவளின் சிரிப்பு விநோதமாக இருந்தது. சிறு சிறு மணிகளின் சத்தம் இடையிடையே புகுந்துகொண்டது போல் இருந்தது.

மறுபடியும் அவள் கருவுற்றிருப்பது பற்றிப் பேசத் தொடங்கிய சமயத்தில், நான் யாரோடு தங்கியிருக்கி

றேனோ அந்த நண்பன் திரும்ப வந்தான். அவனுக்கு ஜானகியை அறிமுகப்படுத்தி, சினிமாவில் ஏதாவது சந் தர்ப்பத்தை எதிர்பார்க்கிறாள் என்றும் சொன்னேன். அவன் உதவி இயக்குநராக வேலை பார்க்கும் கம் பெனிக்கு அவளை அழைத்துச் செல்வதாகச் சொன் னான். அவர்கள் எடுக்கப்போகும் புதுப்படத்தில் நிச்ச யம் ஏதாவது ஒரு வேஷத்தை இயக்குநர் கொடுப்பார் என்று நம்பிக்கையும் கொடுத்தான். மேலும் வேறு பல தொடர்புகள் மூலம் ஜானகியைப் புனேவில் இருந்த பல ஸ்டூடியோக்களுக்கு அறிமுகம் செய்து வைத்தேன். சிலர் அவளை குரல் பரீட்சைக்கு உட்படுத்தினார் கள். சிலர் கேமரா பரீட்சைக்கு உட்படுத்தினார்கள். ஒரு கம்பெனியில் அவளைப் பலவிதமான உடைகளில் அலங்கரித்தார்கள். ஆனாலும் இந்த முயற்சிகள் எல் லாம் வீணாகிக் கொண்டே இருந்தன. அதோடு மாத விடாய் தள்ளிப் போய்க் கொண்டே இருப்பது ஜான கியை மிகவும் கவலை கொள்ள வைத்தது. நான்கைந்து நாட்களாக ஸ்டூடியோக்களைச் சுற்றி, எந்தப் பயனும் இல்லாமல் போனது அவளின் கவலையை மேலும் கூட்டியது. கருவைக் கலைப்பதற்காக அவள் தினமும் இருபது கொய்னா எடுத்துக்கொள்ளத் தொடங்கினாள். இது அவளை மேலும் பலவீனமாக்கியது. இது எல் லாவற்றிற்கும் மேல் அவள் அஜீஸ் பற்றிக் கவலைப் பட்டுக்கொண்டிருந்தாள். புனே வந்து சேர்ந்தவுடன் அஜீஸுக்கு ஒரு தந்தி அடித்திருந்தாள். அத்தோடு ஒவ் வொரு நாளும் அவனுக்குக் கடிதம் அனுப்பிக்கொண் டேயிருந்தாள். ஒவ்வொரு கடிதத்திலும் அஜீஸ் அவ ளின் உடம்பைப் பார்த்துக்கொள்ள வேண்டும் என்றும் ஒழுங்காக மருந்துகளை எடுத்துக்கொள்ள வேண்டும் என்றும் மிகவும் முக்கியத்துவம் கொடுத்துக் கேட்டுக் கொண்டாள்.

அஜீஸுக்கு என்ன நோய் என்று எனக்குத் தெரியவில்லை. அஜீஸ் மட்டும்தான் அவள் மீது காதல் கொண்டிருப்பதாகவும், அவள் சொல்வது எதற்கும் அவன் மறுப்புச் சொல்ல மாட்டான் என்றும், அவன் வீட்டில் மனைவியோடு அடிக்கடி சண்டை போடுவான் என்றும், அவனின் மனைவி மருந்து எடுத்துக் கொள்ள வற்புறுத்தினால் மறுத்துவிடுவான் என்றும் ஜானகியிடமிருந்து என்னால் தெரிந்துகொள்ள முடிந்தது.

ஆரம்பத்தில் ஜானகி, அஜீஸ் மீது காட்டும் அக்கறை போலியானது என்றும் நடிப்பு என்றும் நினைத்தேன். ஆனால் சீக்கிரத்தில் அவன் மீதான அவளின் அன்பு உண்மையானது என்பதை ஏற்றுக்கொண்டேன். அஜீஸ் பற்றி அவள் பேசாத நாட்கள் கிடையாது. அவனிடமிருந்து எப்போது கடிதம் வந்தாலும் அவள் அழத் தொடங்கிவிடுவாள்.

பிலிம் கம்பெனிக்குச் சுற்றிக்கொண்டிருந்ததெல்லாம் எந்தப் பலனையும் தரவில்லை என்றாலும் திடீரென்று ஜானகி சந்தோசமாக இருப்பதைக் கண்டேன். பிறகுதான் தெரிந்தது, அவள் கருவுற்றிருக்கும் பயம் அவசியமில்லாமல் போனதாம். அவளின் மாதவிடாய் சற்றுத் தாமதித்திருக்கிறது. அவள் புனேவில் இருபது நாட்களாகத் தங்கியிருக்கிறாள். அஜீஸுக்குத் தொடர்ந்து கடிதம் எழுதிக்கொண்டிருந்தாள். அவனிடமிருந்தும் நீண்ட கடிதங்களைப் பெற்று வந்தாள். அஜீஸ் எனக்கு எழுதியிருந்த ஒரு கடிதத்தில் ஜானகிக்கு புனேவில் வேலை ஏதும் கிடைக்கவில்லை என்றால் பம்பாயில் நிறைய ஸ்டுடியோக்கள் இருப்பதால் அங்கு முயன்றுப் பார்க்கலாம் என்று சொல்லியிருந்தான். அவன் சொல்வது சரி; ஆனால் நான் ஒரு கம்பெனிக்கு திரைக்கதை எழுதுவதில் தீவிரமாக ஈடுபட்டு இருந்ததால் என்னால் புனேவை விட்டு நகர முடியவில்லை. அதனால் பம்பா

யில் ஒரு படத்தில் கதாநாயகனாக நடித்துக் கொண்டிருக்கும் என்னுடைய நண்பன் சையதைத் தொலைபேசி மூலம் தொடர்பு கொண்டேன். எப்போதும் நடப்பது போல, நான் அழைத்தபோது அவன் ஸ்டூடியோவில் இல்லை. நரைன் அங்கு இருந்தான். நான் புனேவில் இருந்து அழைப்பதைத் தெரிந்து கொண்டவுடன் அவன் மறுமுனைக்கு வந்து கத்தினான். "ஹலோ மண்ட்டோ, நான் இங்கு நரைன் பேசுகிறேன். இப்போது சையது இங்கு இல்லை. அவன் வீட்டில் ரஜியாவுடன் சில விசயங்களைக் கணக்குப் பார்த்துக் கொண்டிருக்கிறான்" என்றான். நான் அவனிடம் மேலும் அதைப் பற்றி சொல்லுமாறு கேட்டேன். அவன், "அவர்களுக்குள் சண்டை. ரஜியா வேறு யாரோடோ தொடர்பு வைத்திருக்கிறாள்" என்று பதில் தந்தான். "ஆனால் அது என்ன கணக்குகளைச் சரி பார்க்கும் விஷயம்" என்று கேட்டேன். "இந்த மனிதன் சையது நிசமாகவே அற்பமானவன். அவன் அவளை வீட்டை விட்டு வெளியே போகச் சொல்வதோடு அவளிடமிருந்து எல்லாவற்றையும் பிடுங்கிக் கொள்கிறான். அவன் அவளுக்கு வாங்கிக்கொடுத்த துணிமணிகளையும் கூட.... சரி அதை விட்டுத் தள்ளு, எதற்காக அழைத்தாய் என்று சொல்" நான் அவனிடம் பெஷாவரில் உள்ள என்னுடைய நண்பன் அனுப்பியிருக்கும் பெண் சினிமாவில் சேர வேண்டும் என்று ஆவலோடு இருப்பதாகச் சொன்னேன். ஜானகி எனக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்தாள். நான் விசயத்தைச் சரியான முறையில் அறிமுகம் செய்து வைக்கவில்லை என்றே நினைத்தேன். நான் மேலும் சொல்வதற்கு இருந்தபோது மறு முனையில் நரைன் வெடித்தான். "ஒரு பெண், அதுவும் பெஷாவரில் இருந்து வந்திருக்கும் பெண். என்ன அதிர்ஷ்டம், அவளை உடனடியாக அனுப்பி வை. உனக்குத் தெரியுமா? நான் கூட காபூலில் இருந்து வந்த பதான்தான்" என்றான். "வாயை மூடு

நரைன்" என்று சொல்லித் தொடர்ந்தேன், "நான் சொல்வதைக் கேள், அவள் நாளைக்கு டெக்கான் குயினில் வருவாள். சையதோ அல்லது நீயோ அவளை இரயில் நிலையத்தில் சந்திக்க வேண்டும். நினைவில் வைத்துக் கொள், நாளை டெக்கான் குயின்" என்றேன். நரைன், "ஆனால் எப்படி அவளை அடையாளம் கண்டுபிடிப்பது" என்றான். "அவள் உங்களைக் கண்டுபிடிப்பாள்" என்று சொல்லி மேலும் அவனால் முடிந்ததைச் செய்து அவளைத் திரைப்படத்தில் நுழைக்குமாறு கேட்டுக்கொண்டேன்.

மூன்று நிமிடங்கள் முடிந்து விட்டது. இணைப்பு துண்டிக்கப்பட்டது. நான் ஜானகியிடம், "நீ நாளை பம்பாய் போக வேண்டும். நான் சையது மற்றும் நரைனின் புகைப்படங்களை உனக்குக் காட்டுகிறேன். இருவரும் நன்றாகக் கட்டப்பட்ட உடலும் பார்ப்பதற்கு அழகாகவும் இருப்பார்கள். அவர்களை அடையாளம் காண்பதில் எந்தக் கஷ்டமும் இருக்காது" என்று சொன்னேன். பிறகு ஒரு ஆல்பத்தில் இருந்து சையது, நரைன் இருவரின் புகைப்படங்கள் பலவற்றை அவளிடம் காண்பித்தேன். அவள் அவற்றை நீண்ட நேரம் பார்த்துக் கொண்டேயிருந்தாள். அவள் சையது புகைப்படங்களில் அதிகக் கவனம் செலுத்துவதைக் கவனித்தேன். ஆல்பத்தைக் கீழே வைத்துக் கவனமாக என் கண்களைத் தவிர்த்து,"இந்த இரண்டு பேரும் எப்படிப்பட்டவர்கள்?" என்று கேட்டாள்.

"நீ என்ன சொல்ல வருகிறாய்?" நான் துருவினேன்.

"நான் சொல்ல வருவது பழகுவதற்கு அவர்கள் எப்படிப் பட்டவர்கள்? சினிமாத் தொழில் சம்பந்தப்பட்ட எல்லா ஆண்களும் ஒழுக்கம் கெட்டவர்கள் என்றே நான் நம்புகிறேன்" என்றாள். அவளின் வார்த்தை

கள் வெளிப்படையாக இருந்தன. அவள் என்னுடைய வெளிப்படையான அபிப்பிராயத்தை எதிர்பார்க்கிறாள் என்பதை உணர்ந்து கொண்டேன். "உண்மை தான். நல்ல மனிதர்களைச் சினிமா உலகம் கவர்வது இல்லை" என்று பதில் தந்தேன். "ஏன்?" என்று கேட்டாள். "ஜானகி, இந்த உலகத்தில் இரண்டு விதமான மனிதர்கள் இருக்கிறார்கள். சொந்தக் காயங்களில் இருந்து வலியை உணர்ந்து கொள்பவர்கள் ஒரு வகை, மற்றவர்களின் காயங்களில் இருந்து வலியை உணர்ந்து கொள்கிறவர்கள் மற்றொரு வகை. இதில் யாரால் வலியைச் சரியாக உணர முடியும் என்று உன்னால் சொல்ல முடியுமா?" என்றேன். அவள் சில நிமிடங்கள் சிந்தித்து விட்டு, "காயப்பட்டவர்களால்தான் அதை உணர முடியும்" என்றாள். "உண்மை அதுதான்... தன்னுடைய காதலியால் ஏமாற்றப்பட்ட ஓர் ஆணின் உணர்வுகளை அந்த வலியை உணர்ந்தவனால்தான் மிகச் சரியாக நடித்துக் காட்ட முடியும். ஒரு நாளைக்கு ஐந்து முறை தொழுகை செய்கிற பெண், காதலைப் பன்றிக்கறியை வெறுப்பது போல் வெறுப்பவள். காமிரா முன்னால் காதல் காட்சியில் காதலை ஏற்றுக்கொள்ளும் அளவிற்கு நடிக்க முடியாது" என்றேன். அவள் மறுபடியும் சிந்திக்கத் தொடங்கினாள். "இதன் அர்த்தம், திரைப்படத்தில் நுழைவதற்கு முன் ஒரு பெண் எல்லாவற்றையும் அனுபவித்தாக வேண்டுமா?" என்று கேட்டாள். "துறைக்குள் நுழைந்த பிறகும் அனுபவங்களைப் பெற்றுக் கொள்ளலாம்" என்றேன். நான் சொல்வதில் கவனம் செலுத்தாமல் அவள் முதலில் கேட்ட கேள்வியை மீண்டும் கேட்டாள். "சையதும், நரைனும் எப்படிப்பட்டவர்கள்?"

"உனக்கு எல்லா விவரங்களும் தெரிய வேண்டுமா?"

"சரியாகச் சொல்லுங்கள், 'விவரங்கள்' என்று எதைச் சொல்கிறீர்கள்?"

"இவனா அவனா, யார் உனக்குச் சரியாகப் பொருந்து வார்கள்?."

நான் சொன்னதற்கு ஜானகி எதிர்ப்பு தெரிவித்தாள். "என்ன சொல்கிறீர்கள்?"

"மிகச் சரியாக நீ எதைத் தெரிந்து கொள்ள விரும்பி னாயோ அதை"

"முட்டாள்தனமாகப் பேசாதீர்கள், சரி நான் இனிமேல் கேள்விகள் எதுவும் கேட்கவில்லை."

அவள் புன்னகைத்தாள், நானும் புன்னகைத்து, "என் னைக் கேட்டால், நான் நரைனைத் தேர்வு செய்வேன்" என்றேன்.

"ஏன்?"

"அவன் சையதுவைக் காட்டிலும் சிறந்தவன்."

எனக்கு அதில் எந்தச் சந்தேகமும் கிடையாது. சையது ஒரு கவிஞன். கொடூரமான கவிஞன். ஒரு கோழியை நேரிடையாகக் கொல்வதற்குப் பதில் முதலில் அதன் கழுத்தைத் திருகுவான். பிறகு அதன் இறக்கைகளைப் பிடுங்கிப் போடுவான். பிறகு அதன் குடலை வெளியே எடுத்துத் தின்பான். அதன் எலும்புகளைத் தூளாக்கு வான். பிறகு ஒரு மூலையில் அமர்ந்து கொண்டு ஒரு கோழியின் மரணத்தைப் பற்றி கவிதை எழுதுவான். அது அவனின் கண்ணீரோடு கலந்திருக்கும். அவன் எப்போதும் தன்னை மறக்கும் அளவிற்குப் போதை ஏற்றிக்கொண்டதே கிடையாது. எனக்கு இது மிகவும் சங்கடமான விசயம். ஏனென்றால் குடிப்பதற்கான கார ணத்தை அவன் அதனிடம் இருந்து எடுத்து விடுகி றான். காலையில் தாமதமாகத்தான் கட்டிலில் இருந்து எழுந்து கொள்வான். வேலைக்காரன் அவனுக்கு டீ கொண்டு வந்து கொடுப்பான். அவனுக்குப் பக்கத்

தில் ரம் பாட்டிலில் ஏதேனும் மிச்சம் இருந்தால் அதை டீயில் ஊற்றிக் கலக்கி, ஒரே மடக்கில் அதன் சுவையை உணர வேண்டிய அவசியம் ஏதும் இல்லாதது போல் குடித்து விடுவான். உடலில் ஏதேனும் கட்டி இருந் தால் அது கவனிப்பற்றுக் கிடக்கும். சீழ் அதில் இருந்து ஒழுகிக் கொண்டிருக்கும். இருந்தும் அவன் மருத்துவரி டம் காட்ட மாட்டான். அவனிடம் ஏதாவது சொன்னால் அதற்கு, "சில நோய்கள் உடலின் ஒரு பகுதிதான். இந்தக் கட்டி எனக்கு எந்தத் தொந்தரவும் கொடுக் காதபோது மருத்துவரைப் பார்க்க வேண்டிய அவசியம் என்ன இருக்கிறது?" என்று பதில் சொல்வான். பிறகு அந்தக் கட்டியை அழகான கவிதையைப் படைக்கும் கரு ஆகுவது போல் பார்த்துக் கொண்டிருப்பான். அவ னால் நிச்சயமாக நடிக்க முடியாது. அவன் அவனுடைய ஆளுமையின் கைதி. கதாநாயகி நடித்த பாடல்களால் பிரபலமான ஒரு படத்தில் அவன் நடித்திருந்ததைப் பார்த்தேன். ஒரு காட்சியில் கதாநாயகியின் கையைப் பிடித்து அவனின் காதலை வெளிப்படுத்த வேண்டும். அவன் ஒரு நாயின் முகவாயைப் பிடிப்பது போல அந் தக் கதாநாயகியின் கையைப் பிடித்திருந்தான். நடிக னாகும் எண்ணத்தை அவன் மண்டையில் இருந்து ஒழித்துக் கட்டி விட்டு, கவிதை எழுதுவதோடு நிறுத்திக் கொள்ளுமாறு நான் அவனுக்குப் பலமுறை அறிவுரை சொல்லியிருக்கிறேன். ஆனால் எப்படியாவது ஒரு நடிக னாக வேண்டும் என்று அவன் தீர்மானமாய் இருந்தான். எனக்கு நரைனைப் பிடிக்கும். ஸ்டூடியோ வாழ்க்கைக்கு என்று அவன் சில விதிமுறைகளை ஏற்றுக்கொண்டுள் ளான்.

1. நீ நடிகன் என்று நிலை நிறுத்தும் வரை திரு மணம் செய்து கொள்ளாதே. நீ திருமணம் செய்து கொண்டால் திரைப்படங்களிலிருந்து விவாகரத்து

பெற்றுக்கொண்டு பால் மற்றும் தயிர் விற்கும் கடை ஒன்றைத் திறந்து கொள். நீ உண்மையில் நல்ல நடிகன் என்றால் அந்தக் கடை மிகச் சிறப்பாக நடக்கும்.

2. எந்த நடிகையாவது உன்னைச் சகோதரன் என்று அழைத்தால், உடனடியாக அவளின் பிரா அளவைக் கேட்டு விடு.

3. நீ எந்த நடிகையுடன் படுக்க விருப்பப்பட்டாலும் தேவையில்லாத முன் தயாரிப்புகளில் நேரத்தை வீணாக்காதே. நேரடியாக விசயத்திற்கு வா.

4. எந்த நடிகையாவது உன்னைச் சார்ந்திருக்கும்படி நேர்ந்தால், அவளின் சம்பாத்தியத்திலிருந்து பணம் எதையும் எடுத்துக்கொள்ளாதே. அவளின் பணம் எல்லாம் அவளின் புருசனுக்கும், சகோதரர்களுக்கும் தான்.

5. ஒரு நடிகையின் மூலமாகக் குழந்தை ஏதும் பெற்றுக் கொள்ளாதே. சுதந்திரத்திற்குப் பிறகு நீ அதைச் செய்து கொள்ளலாம்.

6. நினைவில் வைத்துக்கொள். ஒரு நடிகன் கூட நடிப்புக்குப் பிறகு உள்ள வாழ்க்கை பற்றி சிந்திக்க வேண்டும். எல்லா நேரத்தையும் சீப்பிலும் பிளேடிலும் கழிப்பதற்குப் பதிலாக எப்போதாவது ஒரு முறையேனும் நல்ல காரியங்களைச் செய்.

7. ஸ்டூடியோக்களில் உள்ள பதான் கூர்க்காக்களுக்கு அதிகப்பட்சமான மரியாதையைக் கொடு. காலையில் உள்ளே நுழையும்போது முதல் காரியமாக அவனுக்கு வணக்கங்களைத் தெரிவித்து விடு. அது மிகப் பயனுள்ளதாக இருக்கும் - இந்த உலகத்தில் இல்லை என்றாலும் சினிமா ஸ்டூடியோக்கள்

ஏதும் இல்லாத அடுத்த உலகத்திற்கு நிச்சயம் உதவும்.

8. மதுவுக்கோ, நடிகைக்கோ உன்னை முழுமையாக இழந்து விடாதே. என்றாவது ஒரு நாள் காங்கிரஸ் ஆட்சிக்கு வந்தால் இரண்டையும் தடை செய்யலாம்.

9. ஒரு வியாபாரி இந்துவாகவோ, முசல்மானாகவோ இருக்கலாம். ஆனால் ஒரு நடிகனுக்கு மதங்கள் கிடையாது.

10. பொய்கள் பேசாதே.

இந்தச் சட்டங்களை நரைன் தன்னுடைய டைரியில் 'டென் கமென்ட்மென்ஸ் ஆப் நரைன்' என்று குறித்து வைத்திருந்தான். இவை அவனின் குணாம்சத்தை வெளிச்சம் போட்டுக் காட்டியது. அவன் இதையெல்லாம் பின்பற்றுவதில்லை என்று சொல்லிக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் என்னைப் பொறுத்தவரை நிச்சயமாக அவன் இதையெல்லாம் பின்பற்றிக்கொண்டுதான் இருக்கிறான்.

ஜானகி என்னிடம் கேட்காமலேயே நான் சையது மற்றும் நரைன் பற்றியும் என்னுடைய அபிப்பிராயங்களை வெளிப்படுத்தினேன். இறுதியாக அவளிடம், "நீ திரைப்படத்தில் நுழைய முடிந்தால் கண்டிப்பாக ஒரு ஆணின் உதவியை நாட வேண்டி வரும். என்னைப் பொறுத்தவரை நரைன் உனக்குச் சிறந்த நண்பனாக விளங்குவான்."

என் அபிப்பிராயங்களைக் கேட்டுக் கொண்டு, அவள் பாம்பே கிளம்பிச் சென்றாள். அடுத்த நாள் சந்தோசமாகத் திரும்பி வந்தாள். மாதம் ஐநூறு ரூபாய் சம்பளத்திற்கு நரைன் அவளுக்கு ஒரு ஸ்டுடியோவில் வேலை வாங்

கிக் கொடுத்துள்ளான். அவளுக்கு இந்த வேலை எப்ப டிக் கிடைத்தது என்று நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந் தோம். இறுதியாக நான் அவளிடம், "நீ சையது, நரைன் இருவரையும் சந்தித்திருக்கிறாய். யாரை உனக்கு அதி கம் பிடித்திருக்கிறது?" என்று கேட்டேன். ஜானகியின் உதடுகளில் மெல்லிய புன்னகை தோன்றியது. என் னைக் குறும்புத்தனமாகப் பார்த்து, "சையது" என்றாள். ஆனால் உடனடியாக அவள் இறுக்கமானாள்.

"சாதத் சாகிப்! நீங்கள் நரைனைப் பற்றி வானளவு புகழ்ந்தீர்கள். ஏன்?" நான் அவளிடம் இந்தக் கேள்விக் கான காரணத்தைக் கேட்டேன்.

"அவன் ஒரு பொறுக்கி" என்றாள். "மாலையில் அவ னும் சையதும் குடிப்பதற்கு உட்கார்ந்தார்கள். நான் என்னை அறியாமலேயே அவனை நரைன் பாய் என்று அழைத்தேன். உடனடியாக என்னுடைய காதில் ரக சியம் பேசுவது போல 'உன்னுடைய பிராவின் அளவு என்ன?' என்று கேட்டான். எவ்வளவு மோசமான பொறுக்கி அவன். எனக்கு என்ன செய்வது என்றே புரி யாமல் போனது."

நான் சிரிக்கத் தொடங்கினேன்.

"ஏன் சிரிக்கிறீர்கள்?" அவள் கூர்மையாக இந்தக் கேள்வியைக் கேட்டாள்.

"அவனின் முட்டாள்தனத்தை நினைத்து" என்றேன்.

நரைனைச் சற்றுநேரம் திட்டித் தீர்த்து விட்டு, அஜீஸ் பற்றிப் பேசத் தொடங்கினாள். அவனுக்காக வருத்தப் படுவதாகச் சொன்னாள். அவனிடமிருந்து பல நாட் களாகக் கடிதம் ஏதும் வரவில்லை என்றும் அவளு டைய மண்டையில் எல்லாவிதமான கோரமான சிந் தனைகளும் சுழன்று கொண்டிருக்கின்றன என்றும்

சொன்னாள். அவனுக்கு மீண்டும் சளி பிடித்திருக்கலாம் அல்லது வேகமாகச் சைக்கிள் ஓட்டும் போது ஏதேனும் விபத்து நிகழ்ந்திருக்கலாம் அல்லது அவளைப் பார்ப் பதற்காகப் புனே நோக்கி வந்து கொண்டிருக்கலாம். அவளை வழியனுப்ப அவன் வந்திருந்தபோது அவளுக் குத் தகவல் கொடுக்காமல் புனே வந்து அவளைச் சந் திப்பதாகச் சொல்லியிருக்கிறான்.

எங்களின் இந்த உரையாடல் அவளின் கவலைக ளைச் சற்று குறைத்தது. அவள் அஜீஸைப் புகழத் தொடங்கினாள் - குழந்தைகள் மீது அவன் காட் டும் அக்கறை, தினமும் காலையில் அவர்கள் உடற் பயிற்சி செய்ய அவன் எடுத்துக்கொள்ளும் சிரமங்கள், அவர்கள் பள்ளிக்கூடம் கிளம்ப அவர்களைத் தயார்ப டுத்தி, ஒவ்வொரு காலையிலும் அவர்களைப் பள்ளி யில் கொண்டு விடுவது மற்றும் இது போன்ற விசயங்கள் பற்றி பேசிக் கொண்டிருந்தாள். ஒரு முறை அவளுக்கு மஞ்சள் காமாலை வந்திருந்தபோது இருபது நாட்கள் அவளோடு தங்கியிருந்து மருத்துவம் பார்த்திருக்கிறான் என்றும் சொன்னாள்.

அடுத்த நாள் எனக்கு நன்றியைத் தெரிவித்து விட்டு, அவளுக்காகக் காத்திருக்கும் நட்சத்திர வாழ்க்கையை நோக்கிப் பம்பாய்க்குப் புறப்பட்டாள்.

புனேவில் திரைக்கதையை முடிக்க ஏறக்குறைய இரண்டு மாதங்களுக்கு மேல் எடுத்துக்கொண்டது. எனக்கான ஊதியத்தைப் பெற்றுக்கொண்டு பம்பாய் திரும்பினேன். அங்கு எனக்காக ஒரு புது ஒப்பந்தம் காத் துக்கிடந்தது. நான் அந்தேரி போய்ச் சேர்ந்தபோது காலை ஐந்து மணி. அங்கு ஒரு சுமாரான பங்களாவில் சையதும் நரைனும் ஒன்றாக வசித்து வந்தார்கள். நான் வராண்டாவுக்குள் நுழைந்தபோது முன்கதவு மூடிக்

கிடந்தது. அவர்கள் உறங்கிக் கொண்டிருப்பார்கள் என் றும் அவர்களைத் தொந்தரவு செய்வது சரியாக இருக் காது என்றும் நினைத்து, வேலைக்காரர்கள் போய் வரும் - எப்போதும் திறந்திருக்கும், பின்பக்கக் கதவு வழி யாகப் போகலாம் என்று தீர்மானித்தேன். நான் உள்ளே நுழைந்தவுடன் வழக்கம் போல சமையல் அறையும் சாப் பாட்டு அறையும் குப்பையாக இருப்பதைப் பார்த்தேன். முன்னால் இருந்த ஓர் அறை விருந்தாளிகளுக்கானது. நான் கதவைத் திறந்து உள்ளே நுழைந்தேன். அதில் இரண்டு கட்டில்கள் இருந்தன. அதில் ஒன்றில் சையது படுத்திருக்க, அவன் பக்கத்தில் யாரோ தடித்த போர் வையால் முழுக்க போர்த்திக்கொண்டு படுத்திருந்தார் கள். எனக்கு ரொம்பத் தூக்கக் கலக்கமாக இருந்தது. என் ஆடைகளை மாற்றிக்கொள்ளாமல் இரண்டாவது கட்டிலில் படுத்து அதிலிருந்த போர்வையால் போர்த்திக் கொண்டேன். என் கண்கள் இழுத்துக் கொண்ட சமயத் தில், சையதுக்குப் பின்னால் இருந்து வளையல்களைப் போட்டிருந்த ஒரு கை நீண்டு என் கட்டிலுக்குப் பக்கத் தில் இருந்த ஒரு நாற்காலியை நோக்கி நகர்ந்தது. அந்த நாற்காலியில் நீண்ட வெள்ளைத்துணியில் தைக்கப் பட்ட ஒரு சல்வார் கிடந்தது. நான் எழுந்து கொண்டேன். சையதுவோடு இருந்தது ஜானகி. நான் அந்த சல்வாரை எடுத்து அவளை நோக்கி விட்டெறிந்து விட்டு நரை னின் அறைக்குச் சென்றேன். நரைனைத் தொந்தரவு செய்ததற்காக வருத்தப்பட்டேன். எதிர்பாராதவிதமாய் என்னைப் பார்த்த உடன் நரைன் எழுந்து கொண்டு பேசத் தொடங்கினான். இது அது என்று ஒன்பது மணி வரை பேசிக்கொண்டே இருந்தோம். எங்கள் பேச்சில் ஜானகி பல முறை வந்து போனாள். 'பிரா அளவு' நிகழ்ச் சியை நான் சொன்னபோது நரைன் சிரித்தான். அத் தோடு நிற்காமல் அவன் சிரித்துக்கொண்டே, "நான் அவளின் 'பிரா' அளவைக் கேட்ட போது அவள் என்ன

சொன்னாள் தெரியுமா? இருபத்து நான்கு என்று கண்ணிமையை அசைக்காமல் சொன்னாள்... அவள் என்னைப் பார்க்கும் போதெல்லாம் துப்பட்டாவால் அவளின் மார்பகங்களை மறைத்துக்கொள்கிறாள்... மண்ட்டோ அவள் வெளிப்படையாகவும் நேர்மையான பெண்ணாகவும் இருக்கிறாள்" என்றான். அவன் இத்தகைய முடிவுக்கு எப்படி வந்தான் என்று கேட்டேன். அவன் சிரித்துக்கொண்டே, "ஒரு அந்நியனிடம் முகத்தை நேராக வைத்துக்கொண்டு ஒரு பெண் அவளின் பிரா அளவைச் சொல்கிறாள் என்றால், அவள் வேறுவிதமான பெண்ணாக இருக்க முடியாது... மண்ட்டோ உனக்குத் தெரியாது. சையது மீது அவ்வளவு ஈடுபாடு கொண்டிருக்கிறாள்" என்ற அவன் மேலும் தொடர்ந்தான், "அவனைப் போன்ற ஒரு காட்டுமிராண்டியைக் கவனித்துக் கொள்வது என்பது சாதாரண விசயம் இல்லை. அவள் மிகவும் நன்றியுள்ளஆயா போல் இருக்கிறாள். காலையில் அவனை எழுப்பி விட்டு அவனின் பற்களைத் தேய்த்து விடுகிறாள். ஒழுங்கான உடையைப் போட்டு விடுகிறாள். காலை சாப்பாடு கொடுக்கிறாள். இரவு ரம் குடித்து விட்டு அவன் படுக்கைக்குப் போகும் போது எல்லாக் கதவுகளையும் அடைத்துவிட்டு அவனோடு படுத்துக் கொள்கிறாள். ஸ்டூடியோவில் சையதுவைத் தவிர வேறு எதைப் பற்றியும் அவள் பேசுவது இல்லை - சையது எடை கூடியிருக்கிறது, சையதுவின் கோட் தயாராகிவிட்டது, சையது சாகிப்பிற்காக பெஷாவரில் இருந்து இரண்டு ஜோடி செருப்புகள் சொல்லப்பட்டிருக்கிறது, சையது சாகிப்பிற்கு தலைவலி இருப்பதால் ஏதாவது மாத்திரை வேண்டும், சையது சாகிப் அவளுக்காக ஒரு கவிதை எழுதி இருக்கிறார்... ஆனால் என்னைப் பார்த்தவுடன் 'பிரா அளவு' விசயத்தை நினைவில் கொண்டு வந்து எரிச்சலோடு முகத்தைத் திருப்பிக்கொள்கிறாள்" என்றான்.

நான் சையது மற்றும் நரைனின் விருந்தாளியாகப் பத்து நாட்களுக்குத் தங்கியிருந்தேன். இந்த நாட்களில் சையது ஒரு முறை கூட என்னிடம் ஜானகி பற்றி பேச வில்லை. அது பழைய கதையானதும்கூட ஒரு காரண மாக இருக்கலாம். ஆனால் ஜானகி அடிக்கடி பேசினாள். சையதுவோடு அவள் சந்தோசமாக இருந்தாள். ஆனா லும் அவனின் விசித்திரமான பழக்க வழக்கங்கள் பற்றிக் குறைப்பட்டுக்கொண்டாள். சையது சாகிப் அவரைப் பற்றி அக்கறை காட்டுவதே கிடையாது, மிகவும் கவனம் அற்று இருக்கிறார், சதா சர்வ காலமும் ஏதாவது சிந்தித் துக் கொண்டே இருக்கிறார் மற்றும் இது போல. "நான் சொன்னால் நீங்கள் சிரிப்பீர்கள். ஆனால் என்னை நம் புங்கள். ஒவ்வொரு நாளும் அவர் கக்கூஸ் போனாரா என்று நான் கேட்க வேண்டி உள்ளது" என்றாள்.

நரைன் என்னிடம் என்னவெல்லாம் சொல்லியிருந் தானோ அவை எல்லாம் சரியாக இருந்தன. ஜானகி முழு பக்தியோடு சையதுவைக் கவனித்துக் கொண்டி ருக்கிறாள். எனக்கு இது சந்தோசத்தைக் கொடுத்தது. ஆனால் அஜீஸ் மீது அவளுக்கு இருந்த பக்தி என்ன வாயிற்று என்று சில சமயங்களில் சிந்திப்பேன். சையது வைச் சந்தித்தவுடன். அஜீஸை மறந்து விட்டாளா? இன் னும் சில நாட்கள் அங்கு தங்கியிருந்தால் இதைப் பற்றி ஜானகியிடம் கண்டிப்பாகக் கேட்டிருப்பேன். ஆனால் நான் புது ஒப்பந்தத்தை எதிர்பார்த்திருந்த கம்பெனி யோடு சண்டைபோட நேர்ந்ததால், கொஞ்சம் நிம்மதி யாக இருக்கலாம் என்று அவசரமாக பம்பாயில் இருந்து கிளம்பிப் புனே போக வேண்டியதாயிற்று.

இரண்டு நாட்கள் தான் கழிந்திருக்கும். அஜீஸ் இட மிருந்து அவன் புனே வருவதாகத் தந்தி வந்தது. மிகக் குறுகிய காலத்தில் அவன் என்னோடு இருந்தான். அடுத்த நாள் காலை ஜானகி கதவைத் தட்டினாள்.

ஜானகியும் அஜீஸும் சந்தித்துக்கொண்ட போது, நீண்ட நாட்கள் பிரிந்திருந்த காதலர்கள் போல் அவர்கள் நடந்து கொள்ளவில்லை. அஜீஸும் நானும் பல வருடங்களாகச் சிறந்த நண்பர்களாக இருக்கிறோம் என்றாலும் எங்களிடையே ஒரு மெல்லிய மறைப்பு இருக்கத்தான் செய்தது. ஒருவேளை அது அவர்களின் உற்சாகத்தைக் கெடுத்திருக்கலாம்.

அஜீஸ் ஹோட்டலுக்கு மாற்றிக்கொள்ள வேண்டும் என்று விரும்பினான். நான் யாருடன் தங்கிக்கொண்டிருக்கிறேனோ அந்த நண்பன் வெளிப்புறப் படப்பிடிப்பிற்காகக் கோலாப்பூர் சென்றிருந்தான். அதனால் அஜீஸும் ஜானகியும் அந்த வீட்டிலேயே தங்கலாம் என்று யோசனை சொன்னேன். அங்கு மூன்று அறைகள் இருந்தன. நான் ஜானகிக்கு ஒன்றையும் அஜீஸுக்கு ஒன்றையும் கொடுத்தேன். நான் ஒரே அறையில் இருவரையும் தங்க வைத்திருக்கவேண்டும். ஆனால் இது போன்ற விசயங்களை வெளிப்படையாக்கும் அளவிற்கு அஜீஸ் உடனான என் நட்பு இல்லை. அத்தோடு அவனுக்கு ஜானகியோடு உள்ள உறவு பற்றி என்னிடம் சொன்னதும் இல்லை.

அன்று இரவு அவர்கள் ஒரு திரைப்படம் பார்க்கச் சென்றார்கள். புதிதாகக் கதை ஒன்றை எழுத வேண்டும் என்று நினைத்திருந்ததால் நான் போகவில்லை. காலை இரண்டு மணி வரை நான் விழித்திருந்தேன். பிறகு தூங்கப் போனேன். நான் அஜீஸிடம் ஒரு மாற்றுச் சாவி கொடுத்திருந்ததால் அதைப் பற்றிக் கவலைப்படுவதற்கு ஏதுமில்லை.

இரவு முழுக்க விழித்திருந்து வேலை செய்தாலும் காலையில் மூன்று அல்லது நான்கு மணிக்கு எழுந்து கொண்டு ஒரு குவளை தண்ணீர் குடிப்பேன். என்ன

நடந்தது என்றால், அஜீஸ் தங்கியிருந்த அறையில் தான் என்னுடைய மண் கூஜா இருந்தது. எனக்கு அத்தனை தாகம் இல்லாதிருந்தால் நான் அவனைத் தொந்தரவு செய்திருக்க மாட்டேன். ஆனால் அளவுக்கு அதிக மாகக் குடித்திருந்ததால் என்னுடைய நாக்கு வறண்டு கிடந்தது. அதனால் நான் கதவைத் தட்டவேண்டியதா யிற்று. ஜானகி கண்களைக் கசக்கிக் கொண்டே கத வைத் திறந்து, 'சையது சாகிப்' என்றாள். என்னைப் பார்த்தவுடன் மெல்லிய "ஓ..." என்று சொன்னாள். உள்ளே அஜீஸ் தூங்கிக்கொண்டிருந்தான். நான் புன் னகைத்து மண் கூஜாவை எடுத்துக்கொண்டு வெளியே வந்தேன்.

நான் காலையில் எழுந்து கொண்ட போது அறை முழுக்கப் புகையாய் இருந்தது. நான் சமையலறைக்குச் சென்று பார்த்தபோது அங்கு ஜானகி, அஜீஸ் குளிக்க சுடுதண்ணீருக்காக நிறைய காகிதங்களை எரித்துக் கொண்டிருந்தாள். இந்தப் புகையினால் அவளின் கண் களிலிருந்து நீர் வழிந்து கொண்டிருந்தது. "அஜீஸ் சாகிப்! பச்சை தண்ணீரில் குளித்தால் சளி பிடித்துவி டும்" என்றாள். "அவர் பெஷாவரில், ஒரு மாதம் முழுக்க நோயுற்றுக் கிடந்திருக்கிறார். இதில் ஆச்சரியம் எது வும் இல்லை. அவர் மருந்து எதுவும் எடுத்துக்கொள் ளவில்லை. அவர் எவ்வளவு பலவீனம் ஆகிவிட்டார் என்று கவனித்தாயா?"

அஜீஸ் தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டு வெளியே சென்றவுடன், ஜானகி என்னிடம் சையதுக்கு ஒரு தந்தி அடிக்குமாறு கேட்டுக்கொண்டாள். "நான் நேற்றே அதை அனுப்பியிருக்க வேண்டும். அவர் மிக வும் வருத்தப்பட்டுக்கொண்டிருப்பார்" என்றாள். என் னைத் தந்தி எழுதச் சொன்னாள். அவள் மீது அக் கறை கொண்டிருக்கும் ஒருவர் வந்திருக்கும் விசயத்

தைச் சொல்லியிருந்தாலும், அவனின் உடல் ஆரோக் கியத்தில் மட்டுமே அதிக கவனம் செலுத்தப்பட்டது. ஊசிகளை விடாமல் எடுத்துக்கொள்ளுமாறு கேட்டுக் கொண்டாள்.

நான்கு நாட்கள் கழிந்தன. ஜானகி ஐந்து தந்திகள் அனுப்பியிருந்தாலும் சையதுவிடமிருந்து பதில் ஏதும் வரவில்லை. அவள் பம்பாய் போவது என்று திட்டமிட் டாள். ஆனால் திடீரென்று அஜீஸுக்கு உடல் நலம் சரியில்லாமல் போனது. சையதுக்கு மற்றொரு தந்தி அடிக்குமாறு என்னைக் கேட்டுக் கொண்டு, இரவு முழுக்க அஜீஸுக்கு வைத்தியம் பார்த்தாள். அவனுக் குச் சாதாரண ஜுரம் தான் என்றாலும் ஜானகி அதிகம் கவலை கொண்டாள். அவளின் கவலைகள் சையது வின் மௌனத்தையும் உள்ளடக்கியது என்றே நினைத் தேன். இந்த நாட்களில் அவள் என்னிடம், "சையதுக்கு உடல் நிலை சரியில்லாமல் இருக்க வேண்டும். இல்லை என்றால் நிச்சயமாக என்னுடைய தந்திகளுக்குப் பதில் கொடுத்திருப்பார்" என்று பலமுறை சொல்லியிருந்தாள்.

ஐந்தாம் நாள் சையதுவிடம் இருந்து ஒரு தந்தி வந் தது. அப்போது அஜீஸும் அங்கிருந்தார். அந்தத் தந் தியில் உடல் நலம் சரியில்லாமல் இருப்பதால், ஜானகி உடனடியாகக் கிளம்பி வரவேண்டும் என்று இருந் தது. தந்தி வருவதற்கு முன்பு அவள் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தாள். ஆனால் சையதுவின் உடல் நிலை சரியில்லை என்ற செய்தியைக் கேட்டவுடன் அவளின் முகம் கவலையை வெளிப்படுத்த அமைதியானாள். அஜீஸ் இதைக் கொஞ்சமும் விரும்பவில்லை என்று என்னால் உணர முடிந்தது. அவனின் குரல் கூர்மையாக இருந்தது. நான் வெளியே வந்து விட்டேன்.

வீடு திரும்பிய போது, அவர்கள் இடையே சண்டை நடந்திருப்பதை என்னால் உணர முடிந்தது. ஜானகியின் முகத்தில் அழுததற்கான அடையாளங்கள் இருந்தன. கைப்பையோடு நின்று கொண்டிருந்த அவள் அஜீஸி டம், "நான் சீக்கிரத்தில் திரும்பி விடுவேன்" என்றாள். என் பக்கம் திரும்பி, "சாதத் சாகிப்! தயவு செய்து அவ ரைப் பார்த்துக்கொள்ளுங்கள் அவரின் ஜுரம் இன்னும் சரியாகவில்லை" என்றாள் அவள்.

நான் அவளோடு இரயில் நிலையத்திற்குச் சென்று, கள்ளச்சந்தையில் டிக்கெட் எடுத்துக்கொடுத்தேன். நான் திரும்பி வந்தபோது அஜீஸுக்குச் சற்று ஜுரம் இருந்தது. நாங்கள் நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந் தோம். ஜானகி பற்றி எந்தப் பேச்சும் அதில் இல்லை.

மூன்றாவது நாள், காலை ஐந்தரை மணிக்கு யாரோ கதவைத் திறக்கும் சத்தத்தைக் கேட்டேன். பிறகு ஜானகி அஜீஸோடு பேசிக்கொண்டிருப்பதைக் கேட் டேன் - எப்படி இருக்கிறாய். மருந்துகளை ஒழுங்காக எடுத்துக்கொண்டாயா... அஜீஸின் பதிலை என்னால் கேட்க முடியவில்லை. ஆனால் அரை மணிநேரம் கழித்து மீண்டும் என்னைத் தூக்கம் கவ்விய போது, அஜீஸ் ஜானகியிடம் கத்திக்கொண்டிருப்பதைக் கேட் டேன். அவனின் வார்த்தைகளை என்னால் தெளிவா கக் கேட்க முடியவில்லை என்றாலும் அவன் கோபத் தில் இருக்கிறான் என்பது மட்டும் சந்தேகத்திற்கு இட மில்லாமல் தெரிந்தது.

பத்து மணிக்கு அஜீஸ் பச்சைத் தண்ணீரில் குளி யலை எடுத்துக்கொண்டான். ஜானகி வைத்திருந்த சுடு தண்ணீர் உபயோகப்படுத்தப்படவில்லை. நான் இதை ஜானகியிடம் சொன்னவுடன் அவள் அழத் தொடங்கி னாள்.

குளித்த பிறகு அஜீஸ் வெளியே கிளம்பிச் சென்றான். ஜானகி கட்டிலில் படுத்துக்கிடந்தாள். சுமார் மூன்று மணியளவில் பார்த்து வரலாம் என்று சென்ற போது அவளுக்கு ஜூரம் மிக அதிகமாக இருப்பதைக் கண் டேன். டாக்டரை அழைத்துவர வெளியே வந்தேன். அப் போது அஜீஸ் ஒரு டோங்காவில் ஏறிக் கொண்டிருப்ப தைக் கண்டேன். அவன் எங்கு போகிறான் என்று கேட் டேன். என்னுடைய கையைக் குலுக்கி "பம்பாய்க்கு" என்று சொல்லி மேலும், "கடவுள் விருப்பப்பட்டால் நாம் மறுபடியும் சந்திப்போம்" என்றான். ஜானகிக்கு அதிக மாக ஜூரம் இருக்கிறது என்று அவனிடம் சொல்வதற் கான சந்தர்ப்பம் எனக்குக் கிடைக்கவில்லை.

டாக்டர், ஜானகியை முழுமையாகப் பரிசோதித்துப் பார்த்து, அவளுக்குக் காசநோய் இருப்பதாகத் தெரி வித்தார். சரியான சிகிச்சை எடுத்துக்கொள்ளவில்லை என்றால் நிமோனியாவாக வளர்ந்துவிடும் என்றும் எச்ச ரிக்கை விடுத்தார். டாக்டர் சென்ற பிறகு ஜானகி, அஜீஸ் பற்றி விசாரித்தாள். முதலில் சொல்ல வேண்டாம் என்று தான் இருந்தேன். ஆனால் இதை மறைப்பதால் எந்தப் பயனும் இல்லை என்ற முடிவுக்கு வந்து, அஜீஸ் கிளம்பி போய்விட்ட விசயத்தைச் சொன்னேன். அவள் மிகவும் நிலை குலைந்து போய் தலையணையில் தன் முகத் தைப் புதைத்து நீண்ட நேரம் அழுது கொண்டிருந்தாள்.

அடுத்த நாள் ஜானகிக்குச் சற்று ஜூரம் குறைந்திருந் தபோது, சையதுவிடம் இருந்து ஒரு தந்தி வந்தது. அவ ளின் வாக்குறுதியைக் காப்பாற்றாதது குறித்துக் கண்ட னம் தெரிவிக்கப்பட்டிருந்தது. நான் அவளைத் தடுத்து நிறுத்த முயன்றேன். ஆனால் நல்ல ஜூரத்தோடு புனே எக்ஸ்பிரசில் பம்பாய்க்குப் புறப்பட்டுச் சென்றாள்.

ஐந்து அல்லது ஆறு நாட்கள் கழித்து, நரைனிடம் இருந்து நான் உடனடியாக பம்பாய் புறப்பட்டு வர வேண் டும் என்ற செய்தி வந்தது. புது ஒப்பந்தம் சம்பந்தமாக யாரிடமாவது ஏதாவது பேசியிருப்பான் என்று நினைத் தேன். ஆனால் பம்பாய் போய்ச் சேர்ந்தவுடன் ஜானகி மிக மோசமான நிலையில் இருக்கிறாள் என்று தெரிந்து கொண்டேன். காசநோய் நிமோனியாவாக வளர்ந்து விட்டது. சையதுவை எவ்வளவு சீக்கிரம் பார்க்க முடி யுமோ அவ்வளவு சீக்கிரத்தில் பார்க்க வேண்டும் என்று ஓடுகின்ற இரயிலில் ஏறி விபத்துக்குள்ளாகி தன்னை மேலும் காயப்படுத்திக்கொண்டுள்ளாள். அவள் அந் தேரியை அடைந்த உடன் சையது அவளை வீட்டிற்குள் நுழைய அனுமதிக்க வில்லை என்று தெரிந்து கொண் டேன். இந்த மோசமான காட்சிக்குப் பார்வையாளனாக இருப்பதைத் தவிர்க்க வேண்டி தான் வெளியே சென் றுவிட்டதாக நரைன் சொன்னான். அவன் சாயந்திரம் திரும்பிய போது ஜானகி அங்கு இல்லை. வழக்கம் போல சையது அவனின் கட்டிலில் அமர்ந்து கொண்டு ஒரு கிளாஸ் ரம்மோடு கவிதை எழுதிக்கொண்டிருந்தான். அடுத்த நாள் அவள் ஒரு துணை நடிகையின் வீட் டில் தங்கியிருப்பதைக் கண்டு பிடித்ததாகவும் அவள் அபாயகரமான நிலையில் இருக்கிறாள் என்றும் நரைன் மூலம் தெரிந்து கொண்டேன். அவன் ஸ்டுடியோ உரி மையாளரிடம் பேசி அவளை மருத்துவமனைக்கு எடுத் துச் செல்ல ஏற்பாடு செய்திருக்கிறான். இதற்கு மேல் என்ன செய்ய முடியும் என்று கேட்டான். அவளுக்கு அவ னைப் பிடிக்காது என்பதாலும், நிச்சயமாக அவனிடம் பேசமாட்டாள் என்பதாலும், அவன் மருத்துவமனைக் குப் போக விரும்பவில்லை. நான் போய் அவளைப் பார்க்க வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டான்.

நான் மருத்துவமனைக்குச் சென்றேன். ஜானகி என்னிடம் கேட்டது எல்லாம் அஜீஸும் சையதும் எப்படி இருக்கிறார்கள் என்று மட்டும்தான். இந்த இருவரும் அவளை நடத்திய விதத்திற்கு அப்புறமும் அவர்கள்மீது அவள் காட்டும் அக்கறை என்னை நெகிழ வைத்தது. அவளின் நிலைமை படுமோசமாக இருந்தது. டாக்டர்கள் அவளின் இதயம் வீங்கிக் கிடப்பதாகவும் அவளின் உயிர் அபாயத்தில் இருப்பதாகவும் சொன்னார்கள். அவளின் நோயைப் பற்றி அவள் மிக அமைதியாகப் பேசிய விதம் என்னை ஆச்சரியப்பட வைத்தது.

நான் மருத்துவமனையில் இருந்து திரும்பிய பிறகு, நரைனைத் தேடினேன். அவன் நாள் முழுவதும் எங்கோ வெளியே போயிருப்பதாக என்னிடம் சொல்லப்பட்டது. மாலை அவன் திரும்பிய போது, என்னிடம் மூன்று ரப்பர் மூடிகளைக் கொண்ட சிறிய புட்டியைக் காண்பித்து, "இது எல்லாம் என்னவென்று உனக்குத் தெரியுமா?" என்று கேட்டான். நான், "ஏதோ ஊசி மருந்து போல் இருக்கிறது" என்று பதில் தந்தேன். "ஆமாம். இவை எல்லாம் பென்சிலின் ஊசி மருந்து" என்றான். நான் ஆச்சரியப்பட்டுப் போனேன். பென்சிலின் அரிதானது. மிகச் சிறிய அளவே இங்கிலாந்திலிருந்தும் அமெரிக்காவிலிருந்தும் இராணுவ மருத்துவமனைகளுக்கு வரும். நான் ஆச்சரியம் அடங்காமல், "இதை எங்கிருந்து எப்படி எடுத்து வந்தாய்?" என்று கேட்டேன். அவன் சிரித்துக்கொண்டே, "நான் சிறுவனாக இருந்தபோதே என் வீட்டில் இருந்து பணத்தைத் திருடுவது வழக்கம். இன்று இராணுவ மருத்துவமனை குளிர் பெட்டியில் இருந்து திருடினேன்" என்றான். பிறகு மேலும், "ஜானகியை நாம் ஏதாவது ஹோட்டலுக்கு மாற்ற வேண்டும்" என்றான்.

நான் மருத்துவமனைக்குச் சென்று ஜானகியை ஹோட்டலுக்கு அழைத்து வந்தேன். நரைன் இரண்டு

அறைகளை வாடகைக்கு எடுத்திருந்தான். ஜானகி பல முறை என்னிடம் எதற்காக ஹோட்டலுக்கு மாற்றப்படு கிறாள் என்று கேட்டாள். அவளாகவே சற்று நேரத்தில் தெரிந்து கொள்வாள் என்று சொன்னேன். அறைக்குள் நரைன் ஊசியோடு நுழைவதைப் பார்த்தவுடன் ஜானகி கோபத்தில் தன் முகத்தைத் திருப்பிக் கொண்டு, "சாதத் சாகிப்! தயவு செய்து அவனைப் போகச் சொல்லுங் கள். எனக்கு அவனின் முகத்தைப் பார்க்கக் கூட பிடிக்கவில்லை" என்றாள். நரைன் சிரித்துக்கொண்டே, "கோபப்படாதே என் அன்பே! இது உனக்கு வாழ்வா சாவா பிரச்னை" என்றான். படுமோசமான பலவீனத் தையும் மீறி ஜானகி எழுந்து உட்கார்ந்து கொண்டு, "சாதத் சாகிப்! அந்த மனிதனை உடனடியாக வெளியே போகச் சொல்லுங்கள் அல்லது நான் இங்கிருந்து போகிறேன்" என்று கத்தினாள். நரைன் அவளைக் கட் டிலில் தள்ளி விட்டு, "இந்த மனிதன் உனக்கு இந்த ஊசியைப் போடாமல் இந்த இடத்தை விட்டுப் போக மாட்டான்" என்றான். ஜானகியின் கையை இறுக்கமாகப் பிடித்துக்கொண்டு, ஊசியை என்னிடம் கொடுத்தான். பிறகு பஞ்சை எடுத்து ஸ்பிரிட்டில் நனைத்து அவளின் கையில் தேய்த்தான். பிறகு ஊசியை என்னிடமிருந்து வாங்கிக் கொண்டு அவளின் கையில் போட்டு விட் டான். அவள் வீறிட்டாள். ஆனால் மருந்து அவளின் உடலுக்குள் சென்று விட்டது. நரைன் அவளின் கையை விடுவித்த பிறகு அவள் அழத்தொடங்கினாள். நரைன் அதுபற்றி எந்த அக்கறையும் காட்டவில்லை. ஸ்பிரிட் டில் நனைக்கப்பட்ட பஞ்சை எடுத்து ஊசி போடப்பட்ட இடத்தில் தேய்த்துக் கொடுத்து விட்டு அடுத்த அறைக் குச் சென்று விட்டான்.

முதல் ஊசி இரவு ஒன்பது மணிக்குக் கொடுக்கப்பட் டது. இரண்டாவது மூன்று மணிநேரம் கழித்துக் கொடுக்

கப்பட வேண்டும். நேரத்தைச் சரியாகப் பின்பற்ற வில்லை என்றால், மருந்து எந்தப் பயனும் தராது என்று நரைன் என்னிடம் சொன்னான். அதனால் அவன் விழித்தே இருந்தான். பதினொன்றரை மணிக்கு அவன் அடுப்பை மூட்டி ஊசியைக் கொதிக்க வைத்து மருந்து கொண்டு நிரப்பினான். ஜானகி தூங்கிக்கொண்டிருந் தாள். நரைன் அவளின் மற்றொரு கையைப் பிடித்து, ஸ்பிரிட்டில் நனைக்கப்பட்ட பஞ்சால் தேய்த்து விட்டு ஊசியைப் போட்டான். ஜானகியிடம் இருந்து வலியி னால் மெல்லிய சத்தம் மட்டும் எழுந்தது. அவன் பஞ் சால் மறுபடியும் தேய்த்துக்கொண்டே, "அடுத்தது மூன்று மணிக்குக் கொடுக்கப்பட வேண்டும்" என்றான். மூன்றா வது மற்றும் நான்காவது ஊசியை எப்போது போட்டான் என்று எனக்குத் தெரியாது, ஆனால் நான் விழித்துக் கொண்ட போது அடுப்பு எரிந்து கொண்டிருந்தது. நரைன் ஹோட்டல் ஆளிடம் பென்சிலின் மருந்தைக் குளிர்ச்சியாக வைத்திருக்கக் கொஞ்சம் ஐஸ் கொண்டு வருமாறு சொல்லிக் கொண்டிருந்தான். ஒன்பது மணிக்கு ஐந்தாவது ஊசியைக் கொடுக்க ஜானகி அறைக்குள் நுழைந்தபோது, அவள் கண்களைத் திறந் தபடியே படுத்திருந்தாள். அவள் நரைனைப் பார்த்தாள். ஆனால் எதுவும் சொல்லவில்லை. நரைன் சிரித்துக் கொண்டே எப்படி இருக்கிறது என்று கேட்டான். ஜானகி மௌனமாக இருந்தாள். நரைன் அவளுக்குப் பக்கத் தில் நின்று கொண்டு, "நான் இந்த ஊசிகளை உனக்குப் போடுவதற்குக் காரணம் உன்னுள் காதல் உணர்வைத் தூண்டிவிடுவதற்காக இல்லை. நிமோனியாவை உன் னுள் இருந்து அகற்றுவதற்காக. நான் இதை இராணுவ மருத்துவமனையில் இருந்து திருடிக்கொண்டு வந்துள் ளேன். இப்போது திரும்பிப் படு. உன் பின்பக்கத்தில் போட்டுக்கொள். இந்த ஊசியை இதற்கு முன் எடுத்துக் கொண்டுள்ளாயா?" என்று கேட்டுக்கொண்டே அவன்

தன் விரல்களை அவளின் இடுப்புக்குக் கீழ் புதைத் தான். ஜானகி கோபத்தோடு அவனைப் பார்த்தாள். அவள் திரும்பிப் படுத்தபின், "சமர்த்தான பெண்" என் றான். அவள் மேலும் ஏதாவது சொல்வதற்கு முன் அவ ளின் சல்வாரைக் கீழே இறக்கி விட்டு, அவளின் தோளில் ஸ்பிரிட்டைத் தேய்க்குமாறு என்னிடம் சொன் னான். கட்டிலில் ஜானகி தன்னுடைய கால்களை உதைத்துக் கொள்ளத் தெடங்கினாள். "நிறுத்து!" நரைன் கத்தினான், "ஊசி போடப்பட வேண்டும்". இப்ப டியாக ஐந்தாவது ஊசி போடப்பட்டது. இன்னும் பதி னைந்து ஊசிகள் போடப்பட வேண்டும் - ஒவ்வொரு மூன்று மணி நேரத்திற்கு ஒன்று என்ற விதத்தில் நரை னுக்கு இன்னும் நாற்பத்தைந்து மணிநேர வேலை பாக் கியிருந்தது. ஐந்து ஊசிகள் போட்ட பிறகும் ஜானகியிடம் வெளிப்படையான முன்னேற்றம் எதுவும் இல்லை என் றாலும் கண்டிப்பாக பென்சிலின் அவளின் உயிரைக் காப்பாற்றும் என்று நரைன் நம்பிக்கையோடு இருந் தான். இந்த ஆச்சரியமான மருந்தைப் பற்றி சற்று நேரம் பேசிக்கொண்டிருந்தோம். சுமார் பதினொரு மணிக்கு நரைனின் வேலைக்காரன் எனக்கு ஒரு தந்தியைக் கொண்டு வந்து கொடுத்தான். அது புனேவில் இருந்து வந்திருந்தது. ஒரு சினிமா கம்பெனி என்னை உடனடி யாக அங்கு வருமாறு அழைத்திருந்தது. அதனால் நான் இங்கிருந்து கிளம்ப வேண்டியதாயிற்று.

பத்துப் பதினைந்து நாட்களுக்குப் பிறகு பம்பாய் திரும்பிய போது, நேராக அந்தேரிக்குச் சென்றேன். நரைன் இன்னும் ஹோட்டலில் இருப்பதாகத் தெரிந்து கொண்டேன். ஹோட்டல் மிகத் தொலைவில் இருந்த தால், இரவை அந்தேரியில் கழிப்பது என்றும் தீர்மானித் தேன்.

மறுநாள் விடியற்காலையில் நான் ஹோட்டலுக்குச் சென்றேன். நரைன் இருந்த அறைக்கதவு திறந்திருந் தது. அறை காலியாக இருப்பதைக் கண்டேன். நான் அடுத்த அறைக்குச் சென்றபோது எனக்கு அதிர்ச்சி காத்திருந்தது. என்னைப் பார்த்த உடன் ஜானகி அவளை மூடிக்கொண்டாள். நான் திரும்பிப் போவ தற்கு முயல்வதைப் பார்த்து, ஜானகி பக்கத்தில் படுத் திருந்த நரைன், "வா மண்ட்டோ! அந்த நாற்காலியில் உட்கார்ந்து கொள். நான் எப்போதும் கதவைத் தாழி டுவதற்கு மறந்து போகிறேன். ஜானகியின் சல்வாரைக் கொஞ்சம் எடுத்துப்போடு..." என்றான்.

***



## சாந்தி

ஒரு பார்ஸி பேக்கரியில், சூரியக் குடையின் கீழ் அமர்ந்து அவர்கள் டீ அருந்திக் கொண்டிருந்தார்கள். ஒரு பக்கத்தில் கடல் இருந்தது. அலைகளின் உறுமல் சத்தத்தைக் கேட்க முடிந்தது. டீ மிகவும் சூடாக இருந்ததால், அவர்கள் அதை மிக மெதுவாக உறிஞ்சிக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு முன்னால், தடிமனான புருவங்கள் கொண்டிருந்த, பழக்கப்பட்ட ஒரு யூதப் பெண்மணியின் முகம் இருந்தது. வளைந்த மூக்கும், தடித்த உதட்டுச் சாயம் பூசியிருக்கும் முழுநிலவு முகம் கொண்ட அந்தப் பெண்ணை, மத்தியில் இருக்கும் கதவிற்குப் பக்கத்தில் உள்ள நாற்காலியில் ஒவ்வொரு மாலையிலும் பார்க்க முடியும். மக்பூல் அவள் இருந்த பக்கம் பார்த்து, "வலையை வீசுவதற்கு அவள் தயாராக இருக்கிறாள்." என்று பால்ராஜிடம் சொன்னான். பால்ராஜ் அவளைப் பார்க்காமலேயே, "ஏதோ ஒரு மீன் அல்லது வேறெதோ ஒன்று அவளுடைய வலையில் நிச்சயம் சிக்கத்தான் போகிறது." என்று பதில் சொன்னான்.

மக்பூல் மற்றொரு கேக் துண்டை வாயில் போட்டுக் கொண்டு சொன்னான், "இது விசித்திரமான தொழில் தான். சிலர் தெருக்களில் சுற்றிக்கொண்டிருந்து வாடிக்கையாளர்களைப் பிடிக்கிறார்கள். சிலர் கடைகளிலிருந்துகொண்டு தங்களை விற்றுக்கொள்கிறார்கள். சிலர் உணவகங்களில் வாடிக்கையாளர்களுக்காகக் காத்துக் கிடக்கிறார்கள். உடலை விற்பது ஒரு கலை தான் என்பதோடு சிரமமானதும் கூட. எனக்கு ஆச்சரிய

மாகத்தான் இருக்கிறது, எப்படி அவள் வாடிக்கையாளர் களைக் கவர்கிறாள்?. நான் தயாராகத்தான் இருக்கிறே னென்று எப்படி வெளிப்படுத்திக்கொள்கிறாள்?". பால் ராஜ் புன்னகைத்துச் சொன்னான், "நீ ஓய்வாக இருக்கும் போது இங்கு வந்து கொஞ்சம் நேரத்தைச் செலவிடு. எவ்வாறு பரிமாற்றங்கள் செய்யப்படுகின்றன என்றும் வெறும் பார்வையிலேயே எப்படி எல்லாம் முடிக்கப்படு கின்றன என்றும் நீ தெரிந்துகொள்வாய்". பால்ராஜ் இதை சொல்லிக்கொண்டிருக்கும் போதே, மக்பூலின் கையைப் பிடித்து, "அங்கு யார் இருக்கிறது என்று பார்" என்று சொல்லி, மூலையிலிருந்த குடையைக் காண்பித் தான். மக்பூல் நிமிர்ந்து பார்த்தான். நல்ல நிறத்தில் அங் கொரு பெண் இருந்தாள். அவள் குட்டை முடி வைத்தி ருந்தாள். மஞ்சள் நிற மென் பட்டுப்புடவை அணிந்தி ருந்தாள். பார்ப்பதற்கு மிகச் சாதாரணமாகத்தான் இருந் தாள். "யார் அவள்?" என்று மக்பூல் கேட்டான். பால்ராஜ் அவளைப் பார்த்துக்கொண்டே, "விசித்திரமான பெண் பற்றிச் சொன்னேனே, அது அவள் தான்" என்றான். "நீ பார்க்கும் ஒவ்வொரு பெண்ணும் விசித்திரமானவர் கள் தான்" என்று மக்பூல் பதிலுக்கு சொல்லி, "அதில் இவள் யார்?" என்று கேட்டான். பால்ராஜ் புன்னகைத்து, "இவள் விசேஷமானவள். இவளைக் கவனமாகப் பாரு" என்றான். மக்பூல் மறுபடியும் அவளைப் பார்த்தான். அவ ளுடைய பின்னப்படாத தலைமுடி சற்றே பழுத்த நிறத் தில் இருந்தது. மஞ்சள் நிறத்தில் புடவை கட்டியிருந்த அவள், அரைக்கை ரவிக்கை அணிந்திருந்தாள். சிவப்பு நிறத்தில் உதட்டுச்சாயம் பூசியிருந்தாள். "உன்னுடைய இந்த விசித்திரமான பெண்ணுக்கு எப்படி உதட்டுச்சா யம் பூசுவது என்று கூடத் தெரியவில்லை. கொஞ்சம் கூர்ந்து கவனித்தால் புடவையைச் சரியாகக்கூட கட்ட அவளுக்குத் தெரிந்திருக்கவில்லை என்பதைப் பார்க்க முடியும். அவளுடைய தலைமுடியும் சுத்தமாக இல்லை".

பால்ராஜ் சிரித்தான். "நீ குறைகளை மட்டும்தான் பார்க்கிறாய். நல்ல விசயங்கள் உன் கண்களுக்கு அகப் படுவதே இல்லை".

"நல்ல விசயங்களை நீ சொல்லி நான் கேட்கிறேன்" என்று சொன்ன மக்பூல், "ஆனால் முதலில் உனக்கு அவளைத் தனிப்பட்ட முறையில் தெரியுமா, அல் லது...", அந்தப் பெண் பால்ராஜைப் பார்த்துப் புன்ன கைக்க, மக்பூல் நிறுத்தினான். "எனக்கு விடை கிடைத் துவிட்டது இப்போது அவளுடைய நல்ல விசயங்களைச் சொல்".

"முதல் நல்ல விசயம் என்னவென்றால்", பால்ராஜ் விளக்கத் தொடங்கினான், "அவள் மனதில் பட்டதை வெளிப்படையாகப் பேசக்கூடியவள். அவள் எப்போதும் பொய் சொல்வதில்லை. அவளாகத் தனக்கென்று உரு வாக்கிக்கொண்ட சட்ட திட்டங்களை மிகத் தீவிரமாக நடைமுறைப்படுத்தக் கூடியவள். அத்தோடு அவள் சுத் தம் மீது ரொம்பவும் அக்கறை காட்டுகிறவள். காதல் அது இது என்று எந்த நம்பிக்கைகளும் இல்லாதவள். இந்த மாதிரி விசயங்களில் அவள் கல்நெஞ்சுக்காரி".

பால்ராஜ் கடைசி வாய் டீ குடித்து முடித்தபின், "சரி, நீ என்ன செய்வதாக இருக்கிறாய்? " என்று கேட்டான். மக் பூல் அந்தப் பெண்ணை மீண்டும் ஒருமுறை பார்த்துச் சொன்னான், "நீ சற்றுமுன் விளக்கிய குணாம்சங்களை, அவள் போன்ற பெண்கள் நிச்சயமாகக் கொண்டிருக் கக் கூடாது. அவளிடம் வரும் ஆண்களில் எவனோ ஒருவன், தன்னுடைய காதலை அது உண்மையில்லை யென்றாலும், நடிப்புதான் என்றாலும் வெளிப்படுத்த லாம்.... ஒரு ஆண் தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்ள இந்தப் பெண் உதவவில்லை என்றால், அவள் முட்டாள் தான்".

"நானும் அப்படித்தான் நினைத்துக்கொண்டிருந் தேன்" என்று பதில் தந்தான் பால்ராஜ். "இந்தப் பெண் வெளிப்படையானவள். முரட்டுத்தனமாகவும் முகத்தில டிப்பது போன்றும் வெளிப்படையானவள். சில சமயங்க ளில் நாம் குழம்பிப்போகிறோம்...ஒரு மணி நேரத்திற்கு மேல் ஆகிவிட்டது. நீ செய்ய வேண்டியதை இன்னும் செய்யவில்லை. நான் கிளம்ப வேண்டும் என்பாள்.... அவள் கிளம்பிப் போய்விடுவாள்.... "நீ நாற்றமடிக்கிறாய். விலகிப் போ... என்னுடைய புடவையைத் தொடாதே. அதுவும் நாற்றமடிக்கும்" என்பாள்.... பால்ராஜ் சிகரெட் பற்றவைத்தான். "விசித்திரமான பெண்தான்" என்று தொடர்ந்தான் "நான் அவளை முதன்முதலாகப் பார்த்த போது எனக்கும் அதிர்ச்சியாகத்தான் இருந்தது. அவள் சொன்னாள்: ஐம்பது ரூபாய்க்குச் சல்லிக்காசு குறை யாது... உன்னிடம் பணமிருந்தால் நாம் கிளம்பலாம். இல்லையென்றால் என்னை விட்டுவிடு. எனக்கு வேறு வேலை இருக்கிறது". மக்பூல் அவளுடைய பெயர் என் னவென்று கேட்டான். "சாந்தி" என்று பால்ராஜ் பதில் தந்தான். "அவள் காஷ்மீரிலிருந்து வருகிறாள்" மக்பூ லும் காஷ்மீரிலிருந்து வந்தவன்தான் என்பதால் ஆச்ச ரியப்பட்டான். "உன்னுடைய சொந்த ஊரிலிருந்துதான்" என்று மேலும் சொன்னான்.

மக்பூல் மீண்டும் அந்தப் பெண்ணைப் பார்த்தான். நிச் சயமாக காஷ்மீரைச் சேர்ந்தவள் போல்தான் இருந்தாள். "அவள் எப்படி இங்குவந்து சேர்ந்தாள்?" என்று கேட் டான்.

"எனக்குத் தெரியாது" பால்ராஜ் பதில் தந்தான்.

மக்பூலுக்கு அந்தப் பெண் மீது ஆர்வம் கூடியது.

"எனக்குக் காஷ்மீர் பற்றித் தெரியாது. ஆனால் அவள் இங்கு தனியாக வாழ்கிறாள்", சிகரெட்டின் அடிப்பகுதியை அணைத்தவாறு பால்ராஜ் சொன்னான்.

"ஹார்ன்பி சாலையில் உள்ள ஹோட்டலில்தான் அவள் அறை ஒன்றை எடுத்திருக்கிறாள். எவரிடமும் அவள் இருக்கும் இடத்தைச் சொல்வதில்லை. ஏதோ சந்தர்ப் பவசத்தால் எனக்குத் தெரியவந்தது. அவளை அழைத் துச் செல்ல வருகிறவர்கள் யாராக இருந்தாலும் இங்கு தான் வருவார்கள். அவள் ஒவ்வொரு மாலையும் மிகச் சரியாக ஐந்து மணிக்கு இங்கு வருவாள்".

மக்பூல் சற்று நேரம் அமைதியாக உட்கார்ந்திருந்தான். பிறகு வெயிட்டரை அழைத்துப் பில் கேட்டான். அப் போது நல்ல முறையில் ஆடையணிந்திருந்த ஒருவன் வந்து அந்தப் பெண்ணிற்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான். அவர்கள் இருவரும் பேசிக்கொள்ளத் தொடங்கினார்கள். மக்பூல், "அவளை நான் ஒருமுறை சந்தித்தாக வேண்டும்" என்று சொன்னான். பால்ராஜ் புன்னகைத்தான். "நிச்சயமாக" என்றான். "ஆனால் இப் போது அவள் பிசியாக இருக்கிறாள். வேறொரு சமயம் ஒரு மாலையில் வா. அவளுக்கு அருகில் போய் உட் கார்".

மக்பூல் பணம் கொடுத்தபின் அவர்கள் வெளியேறி னார்கள்.

அடுத்தநாள் மக்பூல் தனியே வந்து டீக்குச் சொல் லிவிட்டு உட்கார்ந்து கொண்டான். மிகச் சரியாக ஐந்து மணிக்கு ஒரு பேருந்திலிருந்து இறங்கி, அவளுடைய கைப்பையை ஆட்டிக்கொண்டே வந்தாள். அவள் மக் பூல் அமர்ந்திருந்த மேஜையைக் கடந்துச் சென்று சற் றுத் தள்ளி உட்கார்ந்துக் கொண்டாள். மக்பூல் தனக் குள் சொல்லிக் கொண்டான்: "பாலியல் கவர்ச்சி எது வும் அவளிடம் இல்லை. உதட்டுச் சாயத்தைக்கூட கொஞ்சமும் அக்கறை இல்லாமல் போட்டிருக்கிறாள். புடவையை எப்படிக் கட்டுவது என்றுகூட அவளுக்குத் தெரியவில்லை. எப்படி அவளுக்கு வாடிக்கையாளர்கள்

கிடைக்கிறார்கள் என்பது ஆச்சரியமாகத்தான் இருக்கி றது". பிறகு அவளை

எப்படி அணுகுவது என்று யோசிக்கத் தொடங்கி னான். அவன் சொல்லியிருந்த டீ கொண்டுவரப்படா மல் இருந்திருந்தால் எழுந்து சென்று அவளுடைய மேசையில் அமர்ந்திருப்பான். அவன் டீயைக் குடிக்கத் தொடங்கினான். தன்னிருப்பை அவளுக்குத் தெரியப் படுத்துவதற்காகச் சத்தமெழுப்பிப் பார்த்தான். அந்தப் பெண் நிமிர்ந்து பார்த்தாள். சற்றே சங்கடமாக உணர்ந்தபிறகு உடனடியாகத் தன்னை ஒரு கட்டுக் குள் கொண்டுவந்தான். "கொஞ்சம் டீ குடிக்கிறாயா?" என்று கேட்டான். "இல்லை" என்றாள். இந்தச் சுருக்க மான வெட்டுவது போன்ற பதில், விருப்பமின்மையைத் தான் வெளிப்படுத்தியது. மக்பூல் சற்று நேரம் அமைதி யாக இருந்துவிட்டு பிறகு சொன்னான் "காஷ்மீரிகளுக் குப் பொதுவாக டீ என்றால் பிடிக்கும்" அந்தப் பெண் நேரடியாக விசயத்தைப் போட்டுடைத்தாள் "உனக்கு என்னோடு வரவேண்டுமா?" மக்பூலுக்குத் தூக்கிவா ரிப் போட்டது. "ஆமாம்" என்று எப்படியோ சமாளித்துச் சொன்னான். அந்தப் பெண், "ஐம்பது ரூபாய், சம்மதமா இல்லையா?" என்றாள். இது மீண்டும் அவனைத் தூக் கிவாரிப்போட்டது. ஆனால் இம்முறை மக்பூல் திடமாக நின்று சொன்னான், "கிளம்பு போகலாம்".

மக்பூல் டீக்குப் பணம் கொடுத்தபிறகு அவர்கள் டாக்சி நிறுத்தத்தை நோக்கி நகர்ந்தார்கள். வழியில் அவன் ஏதும் சொல்லவில்லை. அந்தப் பெண்ணும் அமைதியாக இருந்தாள். அவர்கள் டாக்சியில் ஏறிய பிறகு மக்பூலிடம் அவள் கேட்டாள், "உனக்கு எங்கு போக வேண்டும்?". "நீ என்னை எங்கு அழைத்துச் செல்கிறாயோ அங்கு" என்று மக்பூல் பதில் தந்தான். "எங்கு போக வேண்டுமென்று நீ சொல்" அந்தப்

பெண் உறுதியாக இருந்தாள். மக்பூல் சாதாரணமா கத்தான் சொன்னான், "எனக்குத் தெரியாது". ஆனால் உடனே அவள் டாக்சி கதவைத் திறக்கக் கையைத் தூக்கி, "நீ எப்படிப்பட்ட மனுசன். இதெல்லாம் என்ன விளையாட்டு" என்றாள். மக்பூல் அவளுடைய கையைப் பிடித்து, "நான் விளையாடவில்லை" என்றான். "எனக்கு உன்னோடு பேச வேண்டும் அவ்வளவுதான்". எரிச்சல டைந்த அவள், "என்ன முட்டாள்தனம். நீ ஐம்பது ரூபாய் கொடுக்கச் சம்மதித்திருக்கிறாய்" என்றாள். மக்பூல் தன் பையில் கையைவிட்டு ஐந்து பத்து ரூபாய் நோட்டு களை எடுத்து அவளிடம் கொடுத்தான். "இந்தா இதை எடுத்துக் கொள். இப்போது திருப்திதானே" அவள் பணத்தை வாங்கிக் கொண்டாள். "உனக்கு எங்கு போக வேண்டும்?" என்றாள். "உன் வீட்டிற்கு" என்றான் மக் பூல்.

"முடியாது"

"ஏன் முடியாது"

"நான் முடியாது என்று சொல்கிறேன்"

மக்பூல் புன்னகைத்து, "ஓகே. முடியாது"

சற்று அதிர்ச்சியடைந்த அந்தப் பெண், "நீ விசித்திர மான மனிதன்தான்" என்றாள்.

"நீ, ஐம்பது ரூபாய் சம்மதமா இல்லையா என்றாய். நான், சம்மதம் என்று சொல்லி ஐம்பது ரூபாய் கொடுத் தேன்... நீ முடியாது என்றாய். நான், ஓகே முடியாது என் றேன். நீ வேறு என்ன எதிர்பார்க்கிறாய்" என்றான் மக் பூல்.

அந்தப் பெண் யோசிக்கத் தொடங்கினாள். மக்பூல் புன்னகைத்து, "இங்கு பார் சாந்தி நான் உன்னிடம் ஒன்று சொல்ல வேண்டும். நேற்றுதான் உன்னை நான் பார்த்தேன். உன்னைப்பற்றி என் நண்பன் சில விச யங்கள் சொல்லியிருக்கிறான். அது என் ஆர்வத்தைத்

தூண்டியது. ஆக இன்று நான் உன்னைப் பிடித்தேன். நாம் நம் வீட்டிற்குச் செல்வோம். சற்று நேரம் பேசிக் கொண்டிருப்போம். பிறகு நான் கிளம்பிப் போகிறேன். இதை உன்னால் ஏற்றுக்கொள்ள முடியாதா?"

"முடியாது. இந்தா உன்னுடைய ஐம்பது ரூபாய்" அந் தப் பெண் பணத்தைத் திருப்பிக் கொடுத்தாள். அவளு டைய முகத்தில் எரிச்சல் காணப்பட்டது.

"நீ ஐம்பது ரூபாய் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்கி றாய். இந்த உலகத்தில் நூற்றுக்கணக்கான வேறு விச யங்கள் இருக்கின்றன" என்றான் மக்பூல். 'இப்போது டிரைவரிடம் உன் விலாசத்தைச் சொல்லு நாம் அங்குப் போவோம். நான் மரியாதைக்குரிய மனிதன். உனக்கு எந்தக் கெடுதலும் நேராது".

இவனிடம் காணப்பட்ட உண்மைத் தன்மையில் அவள் சற்றே இறங்கி வந்தாள். மேலும் சிறிது நேரம் யோசித்த பிறகு டிரைவரிடம், "ஹார்ன்பி சாலை" என் றாள்.

டாக்சி நகரத் தொடங்கியபோது மக்பூல் கொடுத்த பணத்தை. அவனுடைய பாக்கெட்டில் வைத்து, "நான் இதை எடுத்துக் கொள்ள மாட்டேன்" என்றாள். மக்பூல், "உன் விருப்பம் போல்" என்று மட்டும் சொன்னான்.

ஒரு ஐந்து மாடிக் கட்டடத்திற்கு முன் டாக்சி நின்றது. முதல் மற்றும் இரண்டாவது மாடிகளில் மசாஜ் நிறுவ னங்கள் இருந்தன. மூன்றாவது, நான்காவது மற்றும் ஐந் தாவது மாடிகளில் ஹோட்டல்கள் இருந்தன. அந்தக் கட்டடம் அழுக்கடைந்தும் இருண்டும் கிடந்தது. சாந் தியின் அறை நான்காவது மாடியில் இருந்தது. அவளு டைய கைப்பையிலிருந்து சாவியை எடுத்துக் கதவைத் திறந்தாள். அந்த அறையில் பொருட்கள் என்று மிகச் சொற்பமானவைதான் இருந்தன.

வெள்ளைத்துணி கொண்டு போர்த்தப்பட்டிருந்த ஒரு இரும்புக் கட்டில். ஒரு மூலையில் அலங்கரிப்புக் கண் ணாடி மேஜை. ஒரு மர ஸ்டூலில் மேஜை விளக் கொன்று. கட்டிலுக்கு அடியில் நான்கு பெட்டிகள் இருந் தன. அறையில் காணப்பட்ட சுத்தம் மக்பூலை வெகு வாகக் கவர்ந்தது. தலையணை உறைகள் பொதுவாக அழுக்கேறிக் கிடக்கும் ஆனால் அவளுடைய இரண்டு தலையணைகளும் மிகச் சுத்தமாக இருந்தன. மக்பூல் கட்டிலில் உட்கார எத்தனித்தபோது, அவள் தடுத்தாள். "இல்லை நீ அதில் உட்காரக்கூடாது" என்றாள்.

"என் கட்டிலில் உட்கார நான் எவரையும் அனுமதிப்ப தில்லை. அந்த நாற்காலியில் உட்கார்" என்று சொல்லி அவள் கட்டிலில் உட்கார்ந்து கொண்டாள். மக்பூல் புன் னகைத்து அந்த நாற்காலியில் உட்கார்ந்தான்.

சாந்தி அவளுடைய கைப்பையைத் தலையணைக்கு அடியில் வைத்துவிட்டு, "சொல்லு உனக்கு என்ன பேச வேண்டும்" என்றாள். மக்பூல் மிகக் கவனமாக அவ ளைப் பார்த்தான். பிறகு, "முதலில் உனக்கு உதட் டுச் சாயம் எப்படி போட்டுக் கொள்வதென்று தெரிய வில்லை" என்றான்.

சாந்தி எரிச்சல் எதையும் வெளிக்காட்டாமல் பதில் சொன்னாள். "எனக்கு அது தெரியும்". "எழுந்து போய் உதட்டுச் சாயத்தை எடுத்துவா" என்றான் மக்பூல். "அதை எப்படி உபயோகிப்பது என்று நான் உனக்குக் கற்றுத் தருகிறேன்". "அலங்கரிப்பு மேஜையில் இருக் கிறது எடுத்துக் கொள்" என்றாள் சாந்தி. "இங்கு வா" என்றான். "முதலில் இந்த அசிங்கத்தை சுத்தம் செய்ய வேண்டும்". "உன்னுடைய கைக்குட்டை வேண்டாம்" என்றாள் சாந்தி. "என்னுடையதை எடுத்துக் கொள்" அவள் ஒரு பெட்டியைத் திறந்து அதிலிருந்து சுத்தமான கைக்குட்டை ஒன்றை எடுத்தாள். அதைக் கொண்டு

மக்பூல் அவளுடைய உதட்டைச் சுத்தம் செய்துவிட்டு, சாயக் குச்சியை எடுத்து மிகக் கவனமாகவும் நேர்த்தி யாகவும் சாயம் பூசினான். பிறகு அவளுக்குத் தலைவாரி விட்டான். "இப்போது போய் உன்னையே கண்ணாடி யில் பார்த்துக் கொள்" என்றான். சாந்தி கண்ணாடியை நோக்கி நகர்ந்து அதற்கு முன் நின்றாள். அவளுடைய தலைமுடி மற்றும் உதட்டைப் பார்த்தாள். பாராட்டத் தகுந்த அளவிற்கு வேறுபாடு இருந்ததை அவள் கவ னிக்கத் தவறவில்லை. திரும்பி மக்பூலிடம் இதை மட் டும்தான் சொன்னாள்: "இப்போது சரியாக இருக்கிறது" பிறகு கட்டிலில் வந்து அமர்ந்து கொண்டாள்.

"உனக்கு மனைவி இருக்கிறாளா?" என்று கேட்டாள்.

"இல்லை" மக்பூல் பதில் தந்தான்.

சற்றுநேரம் அவள் அமைதியாக அமர்ந்திருந்தாள். மக்பூல் உரையாடல் தொடர வேண்டும் என்று விரும் பினான். அதனால், அவனே தொடங்கினான். "எனக்கு உன்னைப் பற்றி இவ்வளவுதான் தெரியும். சாந்தி, நீ காஷ்மீரிலிருந்து வந்தவள். இங்கு வாழ்ந்து கொண்டி ருக்கிறாய். இப்போது சொல், நீ இந்த ஐம்பது ரூபாய் சமா சாரத்திற்குள் எப்படி நுழைந்தாய்".

எவ்விதத் தயக்கமும் இல்லாமல் சாந்தி பதில் தந் தாள். "ஸ்ரீநகரில் என் தந்தை ஒரு மருத்துவர். நான் அங்கிருந்த மருத்துவமனை ஒன்றில் தாதியாக இருந் தேன். ஒரு பையன் எனக்கு ஆசைகாட்டி மோசம் போக வைத்தான். நான் வீட்டிலிருந்து ஓடி இங்கு வந்து சேர்ந்தேன். நான் ஒருவனைச் சந்தித்தேன். நான் அவனோடு சென்றால் ஐம்பது ரூபாய் தருவதா கச் சொன்னான். நான் சென்றேன். இப்படித்தான் இந்த வியாபாரத்திற்கு வந்தேன். நான் இந்த ஹோட்டலுக்கு மாறினேன். இங்கிருப்பவர்கள் எவருடனும் நான் பேசு வதில்லை. அவர்கள் எல்லோரும் உடலை விற்பவர்

கள் தான்". இதற்கு மேலும் துருவுவது சரியாக இருக் காது என்று மக்பூல் நினைத்தான். நிச்சயமாக அவன் பல விசயங்களைத் தெரிந்து கொண்டான். ஸ்ரீநகரில் அந்தப் பையன் இவளை அடைந்தபிறகு பத்து ரூபாய் கொடுத்திருக்கிறான். இவள் கோபம் கொண்டு அந்த ரூபாய் நோட்டைக் கிழித்தெறிந்திருக்கிறாள். இதுதான் அவள் வீட்டைவிட்டு ஓடவேண்டிய நிர்பந்தத்திற்கு உள்ளாக்கியது. ஐம்பது ரூபாய் கட்டணம் என்பது திட்ட மிடப்படாமல் எதேச்சையாக நடந்த ஒன்று. அவளுக்குப் பாலியல் உறவுகளில் ஈடுபாடு இல்லாததால், பாலியல் சந்தோஷங்கள் உண்டா என்ற கேள்வியே எழவில்லை. இது மிகச் சுத்தமான நேரடியான வியாபாரம். அவள் தாதியாக இருந்ததினால் சற்றுக் கூடுதல் கவனத்தோடு இருக்கிறாள். அவள் ஒரு வருடமாக பம்பாயில் தான் இருக்கிறாள் என்றும் மக்பூல் தெரிந்து கொண்டான். இந்த ஒரு வருடத்தில் பத்தாயிரம் ரூபாய்க்கு மேல் சம் பாதித்திருக்கிறாள் என்றும் தெரிந்து கொண்டான். குதி ரைப் பந்தயத்தில் அவளுக்கு ஈடுபாடு இருப்பதையும் தெரிந்து கொண்டான். போன பந்தயத்தில் ஐயாயிரம் ரூபாய் இழந்ததாகவும் அதை எப்படியும் மீட்டுவிடலாம் என்று நம்பிக்கை இருப்பதாகவும் தெரிவித்தாள். "அந் தப் பணத்தை நான் ஜெயித்துவிடுவேன்" என்றாள். செலவு செய்யப்படுகின்ற ஒவ்வொரு நயா பைசாவிற்கும் அவள் கணக்கு வைத்திருப்பதையும் தெரிந்து கொண் டான். ஒரு நாளைக்கு நூறு ரூபாய்க்கு மேல் சம்பாதிக் கிறாள். அதை நேராக வங்கியில் சேர்த்து விடுகிறாள். உடல்நலம் பாதிக்கப்படக் கூடாது என்று அதற்குமேல் சம்பாதிக்க அவள் முயற்சிகள் ஏதும் செய்வதில்லை.

இரண்டு மணிநேரம் கடந்து போனது. அவள் கைக் கடிகாரத்தைப் பார்த்து, "இப்போது நீ கிளம்ப வேண் டும். நான் இரவு உணவு எடுத்துக் கொண்டு உறங்கப் போகிறேன்" என்றாள். மக்பூல் எழுந்து கிளம்பத் தயா

ரானபோது அவள், "பேசுவதற்காக நீ வர விரும்பினால் காலை நேரங்களில் வா. மாலை என் தொழிலுக்கான நேரம்" என்றாள். மக்பூல் தலையசைத்துக் கிளம்பிச் சென்றான்.

அடுத்த நாள் காலை, சுமார் பத்து மணியளவில் மக்பூல் சாந்தியின் அறையை அடைந்தான். இந்த வருகையை அவள் விரும்பாமல் போகலாம் என்று நினைத்தான். ஆனால் அவள் எத்தகைய சங்கடத்தையும் வெளிப்படுத்தவில்லை. மக்பூல் அவளோடு மிக நீண்ட நேரம் இருந்தான். புடவையை எப்படிச் சரியாகப் கட்டிக்கொள்வது என்று அவளுக்குக் கற்றுக் கொடுத்தான். அவளிடம் நல்ல விதமான துணிமணிகள் நிறைய இருந்தன அதையெல்லாம் அவனிடம் காட்டினாள்.

அவள் இளமையானவளும் இல்லை. வயதானவளும் இல்லை. அவள் மரக் கிளையும் இல்லை. மரத்தண்டும் இல்லை. அவளுடைய வளர்ச்சி திடீரென்று தடைப்பட்டது போலிருந்தாள். இது மக்பூலை ரொம்பவும் சங்கடப்படுத்தியது. அவளுடைய வளர்ச்சி தடைப்படுவதற்கு முன்னர் அவள் எப்படி இருந்திருப்பாள் என்று கற்பனை செய்து பார்க்க முயன்றான். அவளைப் பற்றி இன்னும் அதிகம் தெரிந்துகொள்ள இரண்டு அல்லது மூன்று நாட்களுக்கு ஒருமுறை என்று மக்பூல் அவளைச் சந்திக்கச் சென்றான். அவனுக்கு என்று அவள் பிரத்தியேகமாக எதையும் செய்யவில்லை என்றாலும் அவனைக் கட்டிலில் உட்கார அனுமதித்தாள். ஒருநாள் அவள் சொன்னதைக் கேட்டு மக்பூல் அதிர்ச்சியடைந்தான். "உனக்குப் பெண் வேண்டுமா?" கட்டிலில் படுத்திருந்த மக்பூல் தூக்கிவாரிப் போட்டதுபோல் எழுந்துகொண்டு, "நீ என்ன சொன்ன?" என்று கேட்டான். சாந்தி திரும்பவும் சொன்னாள் "உனக்குப் பெண் வேண்டுமா என்று கேட்டேன். என்னால் இதற்கு ஏற்பாடு செய்ய முடியும்".

காரணமில்லாமல் இந்தச் சிந்தனை ஏன் அவளுக்குத் தோன்றியது என்று மக்பூல் கேட்டான். அவள் அமைதி யாக இருந்தாள். மக்பூல் தொடர்ந்து கேட்டதினால், "நீ வருகிறாய், வெறுமனே பேசிக்கொண்டிருக்கிறாய், பிறகு கிளம்பிப் போகிறாய். ஒரு பெண்ணாக நான் பிர யோஜனம் இல்லாதவள் என்று நினைக்கிறாய். எல்லாப் பெண்களும் என்னைப் போல் இருக்க மாட்டார்கள், அதனால் உனக்குத் தேவை இருக்குமானால் நான் ஏன் ஒரு பெண்ணுக்கு ஏற்பாடு செய்யக்கூடாது என்று நினைத்தேன்". என்று சொன்னாள். அவளுடைய கண் களில் மக்பூல் முதல்முறையாகக் கண்ணீரைப் பார்த் தான். திடீரென்று அவள் எழுந்து நின்று கத்தத் தொடங் கினாள் "நான் எதுவுமே இல்லை,... வெளியே போ.... நீ ஏன் இங்கு வருகிறாய்... போ". மக்பூல் எதுவும் சொல் லவில்லை. அவன் எழுந்து அமைதியாக வெளியே வந் தான்.

இதற்குப் பிறகு பார்ஸி பேக்கரிக்குத் தொடர்ந்து ஒரு வாரம் வந்து கொண்டிருந்தான். ஆனால் சாந்தியை எங் கும் பார்க்க முடியவில்லை. கடைசியாக அவள் தங்கி யிருக்கும் ஹோட்டலுக்குப் போனான். சாந்தி கதவைத் திறந்தாள். ஆனால் ஏதும் பேசவில்லை. மக்பூல் நாற் காலியில் அமர்ந்து கொண்டான். அவளுடைய உதட்டில் சாயம் பழைய மாதிரி அக்கறையில்லாமல் அப்பியிருந்த தைப் பார்த்தான். அவளுடைய தலைமுடியும் சுத்தமாக இல்லை. முன்பு போலவே புடவையும் மோசமாகக் கட் டியிருந்தாள். அவன், "உனக்கு என் மேல் கோபமா?" என்று கேட்டான். சாந்தி பதிலேதும் சொல்லவில்லை. அவளைச் சீண்டும் விதமாக, "நீ எல்லாவற்றையும் மறந் துவிட்டாய்" என்று சொன்னான். சட்டென்று, "என்னை அடி" என்று அவள் சொன்னாள். மக்பூல் எழுந்து நின்று மிகக் கனமான ஒரு அடியை அவள் கன் னத்தில் விட்டான். அவள் வலியால் அழுதாள். கண்

ணீர் அவளுடைய கன்னங்களில் வழிந்தோடியது. மக்பூல் தன்னுடைய கைக்குட்டையை எடுத்து மோசமாக அப்பியிருந்த உதட்டுச் சாயத்தைச் சுத்தம் செய்தான். அவள் எதிர்ப்புத் தெரிவித்தாள். ஆனாலும் அவன் தொடர்ந்தான். பிறகு சாயக்குச்சியை எடுத்து அவளுடைய உதட்டில் புதிதாக அழகாகச் சாயம் பூசினான். சீப்பை எடுத்து அவளுடைய தலைமுடியை வாரிவிட்டான். பிறகு கட்டளையிடும் தொனியில் சொன்னான், "போய்ப் புடவையை ஒழுங்காகக் கட்டிக் கொண்டு வா" சாந்தி எழுந்து நின்று மீண்டும் புடவையைக் கட்டிக் கொள்ளத் தொடங்கினாள். அவள் மறுபடியும் வெடித்து அழுது கட்டிலில் விழுந்தாள். மக்பூல் சற்று நேரம் அமைதியாக இருந்தான். அவளுடைய அழுகை சற்றே அடங்கியபின் அவளருகில் சென்று, "எழுந்திரு சாந்தி, நான் கிளம்புகிறேன்".

சாந்தி அவன் பக்கம் திரும்பிக் கத்தினாள் "முடியாது, நீ இங்கிருந்து போக முடியாது". மூடியிருந்த கதவில் சாய்ந்து நின்று வழியை மறித்தாள். "நீ இங்கிருந்து கிளம்பினால் உன்னைக் கொன்றுவிடுவேன்" என்று கத்திப் பெருமூச்சு வாங்கினாள். அவளுடைய முலை, இது வரை மக்பூலினால் கவனிக்கப்படாதது, ஏதோ பெரும் தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டது போல் மேலெழுந்தது. மக்பூலின் அதிர்ச்சியடைந்த கண்கள் சாந்திக்குள் ஏதோ பெரும் உருமாற்றம் நிகழ்ந்து கொண்டிருப்பதைப் பார்த்தன. கண்ணீரால் நிறைந்திருந்த அவளுடைய கண்கள் பிரகாசித்தன. சாயம் பூசிய அவளுடைய உதடுகள் துடித்தன. மக்பூல் ஓரடி அவளை நோக்கி நகர்ந்து அவளை அணைத்துக் கொண்டான். அவர்கள் கட்டிலில் உட்கார்ந்திருந்தபோது சாந்தி அவளுடைய தலையை அவனுடைய மடியில் சாய்த்தாள். அவளுடைய கண்களிலிருந்து கண்ணீர் ஓடுவது நிற்கவேயில்லை. மக்பூல் அவளைத் தட்டிக்கொடுத்துச் சொன்

னான், "அழுவதை நிறுத்து சாந்தி". தேம்பித் தேம்பி அழுத அழுகையின் ஊடாக அவள் சொன்னாள், "ஸ்ரீந கரில் ஒருவன் என் வாழ்க்கையை நாசம் செய்தான். இங்கு ஒருவன் எனக்கு மீண்டும் உயிர் கொடுத்தான்".

இரண்டு மணி நேரங்கள் கடந்து போனது. மக்பூல் கிளம்பத் தயாரானபோது, தன்னுடைய பையிலிருந்து ஐம்பது ரூபாய் நோட்டை எடுத்து சாந்தியின் கட்டி லில் வைத்து, "இதோ உன்னுடைய ஐம்பது ரூபாய்" என்று சொன்னான். சாந்தி அருவறுப்போடு அந்த ரூபாய் நோட்டை எடுத்து விட்டெறிந்தாள். பிறகு வேகமாக அலங்கரிக்கும் மேஜைக்குச் சென்று ஒரு டிராயரை இழுத்தாள். "இங்கு வா, இதிலிருப்பதைப் பார்" என்று சொன்னாள். டிராயரில் கசங்கிய நூறு ரூபாய் நோட்டு கள் இருப்பதைப் பார்த்தான். அதிலிருப்பதை கொஞ் சம் அள்ளியெடுத்துச் சுற்றிலும் இறைத்துப் போட்டுச் சொன்னாள், "இப்போது எனக்கு இது தேவை இல்லை". மக்பூல் புன்னகைத்தான். அவளுடைய கன்னத்தில் செல்லமாகத் தட்டிக் கொடுத்து, "இப்போது உனக்கு என்ன தேவை?" என்று கேட்டான். சாந்தி பதில் சொன் னாள், "எனக்கு நீதான் வேண்டும்". இதைச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே மக்பூலைக் கட்டி அணைத் துக் கொண்டு மறுபடியும் அழத் தொடங்கினாள். அவளு டைய தலைமுடியைக் கோதிவிட்டபடி மக்பூல் சொன் னான்: "நீ வேண்டியது உனக்குக் கிடைத்திருக்கிறது, அழாதே...".

***



## கடவுள் மீது சத்தியமாக...

அங்கிருந்து முசல்மான்களும் இங்கிருந்து இந்துக் களும் தொடர்ந்து குடிபெயர்ந்து கொண்டேயிருந்தார் கள். முகாம்கள் எல்லாம் நிரம்பி வழிந்தன. குண்டு மணி அளவுகூட இடம் கொடுக்க முடியாதபடி இருந்தது. இருந்தாலும் உயிருள்ள மனிதர்கள் இந்த முகாம்களில் மேலும் மேலும் திணிக்கப்பட்டார்கள். அங்கு உணவுப் பற்றாக்குறை இருந்தது. கழிவுகளுக்குச் சரியான ஏற் பாடுகள் எதுவும் செய்யப்படவில்லை. நோய்கள் பரவிக் கொண்டிருந்தன. ஆனால் இதைப் பற்றியெல்லாம் யார் கவலைப்பட்டார்கள்? அங்கு பெரும் குழப்பமும், ஒழுங் கற்ற தன்மையும் நிலவியது.

அது 1948ன் தொடக்கக் காலம் - ஒரு வேளை அது மார்ச் மாதமாக இருக்கலாம். இங்கும் அங்கும் தானாக முன் வந்த தொண்டர்கள் மூலமாகத் தொலைந்து போன பெண்களையும், குழந்தைகளையும் தேடும் படலம் தொடங்கப்பட்டது. இந்த நற்காரியத்தில் நூற் றுக்கணக்கான ஆண்கள், பெண்கள், சிறுவர்கள், சிறுமி கள் என்று பங்கெடுத்துக்கொண்டார்கள். நான் அவர்க ளின் தன்னலமற்ற சேவையைப் பார்த்தபோது ஒரு வித மான சந்தோஷத்தை உணர்ந்தேன். மனிதர்கள் செய்த முறையற்ற காரியங்களை அழித்துவிடும் செயலில் மனி தர்கள் இறங்கியிருப்பது போல் தோன்றியது. ஆனால் முதலில் கடத்தப்படுவதற்கும் பாலியல் பலாத்காரத் திற்கு உட்படுத்தப் படுவதற்கும் ஏன் அனுமதித்தார்கள்? பிறகு ஏன் அவர்கள் கடத்தப்பட்டவர்களையும், பாலியல்

பலாத்காரத்திற்கு உட்படுத்தப் பட்டவர்களையும் மீட் டெடுக்க முயன்றிருக்கிறார்கள்?

அவர்கள் மேலும் இழிவு படுத்தப்படுவதிலிருந்து, கறைப்படுவதிலிருந்து, வடுக்களிலிருந்து, காயங்களி லிருந்து காப்பாற்ற வேண்டும் என்பதற்காகத்தானா? மனித இரத்தத்தால் கறைபட்ட அவர்களின் கைகளைச் சுத்தமாக்கிக்கொண்டு மற்ற மனிதர்களோடு ஒன்று சேர்ந்து உண்பதற்காகவா? மற்றவர்கள் எல்லாம் தங்க ளின் கண்களை மூடிக்கொண்டிருக்கும் போது, பாலி யல் பலாத்காரத்தால் கிழிக்கப்பட்ட சதைகளை மனித இனம் என்னும் நூலைக் கொண்டு தைத்துவிட விரும்பு கிறார்களா?

என்னால் எதையும் புரிந்துகொள்ள முடியவில்லை. இருந்தாலும் இந்தத் தொண்டர்களின் செயல்கள் பாராட்டத் தகுந்ததாக இருந்தன.

நூற்றுக்கணக்கான கஷ்டங்களை அவர்கள் எதிர் கொள்ள வேண்டி இருந்தன. கணக்கில் அடங்காத் தடைகளை அவர்கள் கடக்க வேண்டி இருந்தன. கடத்துகிறவர்களைக் கண்டுபிடிப்பது அவ்வளவு சுலப மில்லை, அவர்கள் நகர்ந்து கொண்டே இருந்தார்கள். இன்று இங்கு இருப்பார்கள், நாளை அங்கு இருப்பார் கள். ஒரு நாள் ஓர் இடத்தில் இருப்பவர்கள், மறுநாள் வேறு இடத்தில் இருப்பார்கள். அவர்களைப் பற்றி அறிந் திருந்தவர்கள் கூட எந்த உதவியும் செய்ய மறுத்தார்கள்.

ஒருவரால் விசித்திரமான கதைகளைக் கேட்க முடிந் தது.

ஒரு அதிகாரி என்னிடம் சொன்னார்: சஹாரன்பூரில் இருந்த இரண்டு பெண்கள் பாகிஸ்தானில் இருந்த அவர்களின் பெற்றோர்களிடம் திரும்பிப் போக மறுத் தார்கள். வேறு ஒருவர், ஜலந்தரில் இருந்த பெண்; அவ ளைக் கடத்தியவர்கள் குடும்பத்தாரிடமிருந்து பிரித்

தெடுக்கப்பட்ட போது அவர்களின் மருமகள் எங்கோ தொலை தூரப் பயணம் மேற்கொள்ளப்போவது போல கண்ணீரோடு வழியனுப்பி வைத்தனர் என்று சொன்னார். சில பெண்கள் பெற்றோர்களிடம் கொண்ட பயத்தால் வழியில் தற்கொலை செய்து கொண்டார்கள். சிலர் இந்தத் துயரத்தின் அதிர்ச்சியைத் தாங்க முடியாமல் பைத்தியம் பிடித்துப் போனார்கள். குடிக்குப் பழகிப்போனவர்கள் தாகம் எடுக்கும் போதெல்லாம் தண்ணீருக்குப் பதில் மதுவைத் தேடியலைந்தார்கள், அவர்களிடம் பேச்சுக் கொடுத்தால் மோசமான வசவுகளைக் கொட்டினார்கள்.

மீட்டெடுக்கப்பட்ட இந்தச் சிறுமிகள், பெண்கள் பற்றி நான் சிந்திக்கும் போதெல்லாம், என் கண் முன்னால் அவர்களின் பிதுங்கிய வயிறுதான் வந்து நின்றது. இந்த வயிறுகளின் கதி என்னவாகும்? இந்த வயிற்றுக்குள் என்ன இருந்தாலும் அதற்கு யார் சொந்தக்காரர்கள்? அது இந்தியாவாகவோ, பாகிஸ்தானாகவோ இருக்க முடியுமா? அப்புறம் ஒன்பது மாதங்களுக்கு அவர்கள் அதைச் சுமக்க வேண்டும். அதற்கான ஊதியத்தை யார் கொடுப்பார்கள்? இந்தியாவா, பாகிஸ்தானா? அல்லது பொறுப்பற்ற சூழ்நிலையின் கொடூரங்கள் என்ற கணக்குப் புத்தகத்தில் சேர்த்துக் கொள்ளப்படுமா? உண்மையில் அந்தக் கணக்குப் புத்தகத்தில் ஏதேனும் வெற்றுப் பக்கங்கள் இன்னும் இருக்கிறதா?

மீட்டெடுக்கப்பட்ட பெண்கள் வந்து கொண்டிருந்தார்கள். மீட்டெடுக்கப்பட்ட பெண்கள் போய்க்கொண்டிருந்தார்கள்.

ஆச்சரியத்தோடு நான் சிந்திப்பது உண்டு, ஒரு பெண், ஆண்களோடு வீட்டை விட்டு ஓடிப்போனதைக் 'கடத்தப்பட்டாள்' என்றே பொதுவாக அழைக்கிறார்கள். வீட்டை விட்டுக் காதலனோடு ஓடிப்போவது ஒரு

ஆணும் பெண்ணும் கூட்டாளிகளாய் நிகழ்த்தும் ஒரு சாகசச் செயல். இரண்டு இதயங்களும் ஒரு சுருதியில் ஒலி எழுப்ப, கம்பி நாதங்களைச் சரி செய்வதில் உள்ள கடைசி சிக்கல் அது. ஆனால் ஒரு பாவமும் அறியாத ஒரு பெண்ணைப் பலவந்தமாகப் பிடித்து ஓர் அறையில் சிறைவைப்பது எந்த விதத்தில் வீட்டைவிட்டு ஓடிப்போனதாக இருக்க முடியும்?

ஆனால் காரண காரியம், தர்க்கம், தத்துவம் எல்லாம் எந்தப் பயனும் இல்லாமல் போன காலம் அது. அந்த நாட்களில் மக்கள் கோடைக் காலத்தில் கூட தங்கள் வீட்டுக் கதவுகளையும் ஜன்னல்களையும் முழுமையாக அடைத்துக்கொண்டு உறங்கினார்கள். அது போலவே நானும் என் மூளையில் உள்ள எல்லாக் கதவுகளையும் ஜன்னல்களையும் முழுமையாக மூடி வைத்துக்கொண்டேன் - அவற்றை எல்லாம் திறந்து வைப்பதற்கான அவசியம் இருந்தபோதும். ஆனால் நான் என்ன செய்ய முடியும்? நான் சிந்திக்க விரும்பவில்லை.

மீட்டெடுக்கப்பட்ட பெண்கள் வந்து கொண்டிருந்தார்கள். மீட்டெடுக்கப்பட்ட பெண்கள் போய்க்கொண்டிருந்தார்கள்.

இந்தப் போக்குவரத்து, எல்லாம் வியாபாரம் செய்யப்படுவது போல் தொடர்ந்து கொண்டேயிருந்தது. கவிஞர்கள் மற்றும் எழுத்தாளர்கள் அவர்களின் எழுதுகோலைக் கைகளில் பிடித்துக் கொண்டு வேட்டையாடுவதில் தீவிரமாக இருந்தார்கள். ஆனால் வெள்ளம் போல பாய்ந்து கொண்டிருந்த இந்தக் கதைகள், கவிதைகள் ஏறக்குறைய பெரும் புயலைப் போல் இருந்த நிகழ்வுகளுக்குப் பலியாக்கி எல்லோரையும் முழுமையான குழப்பத்திலும் திகைப்பிலும் ஆழ்த்தியது.

ஓர் அதிகாரி என்னைச் சந்தித்த போது, ஏன் இவ் வளவு சோகமாக இருக்கிறேன் என்று கேட்டார். நான் பதில் ஏதும் சொல்லவில்லை.

அந்த அதிகாரி என்னிடம் ஒரு கதையைச் சொன் னார்:

"கடத்தப்பட்ட பெண்களைத் தேடி நாங்கள் ஓர் ஊரில் இருந்து இன்னோர் ஊருக்கும், ஒரு கிராமத் தில் இருந்து இன்னொரு கிராமத்திற்கும், மூன்றாவதி லிருந்து நான்காவதுக்கு என்றும், ஒரு பகுதியில் இருந்து இன்னொரு பகுதிக்கும், ஒரு சந்தில் இருந்து இன் னொரு சந்துக்கும் என்று அலைந்து கொண்டேயிருக் கிறோம். பல சிரமங்களுக்கு மத்தியில் நாங்கள் தேடிக் கொண்டிருக்கும் பவளத்தைக் கண்டுபிடிக்கிறோம்...."

நான் எனக்குள் சொல்லிக்கொண்டேன், 'பவளம் - முழுமையாகவா அல்லது சிதைக்கப்பட்டா?'.

"நாங்கள் எதிர்கொள்ள வேண்டியிருக்கும் கஷ்டங் கள் பற்றி உங்களுக்கு ஏதும் தெரியாது. ஆனால் நான் உங்களிடம் சொல்ல வந்தது வேறு... பல முறை நாங் கள் எல்லையைக் கடந்து சென்றுள்ளோம். ஆச்சரி யமாக ஒவ்வொரு முறையும் வயதான ஒரு பெண்ம ணியைப் பார்த்தேன் - வயதான முஸ்லிம் பெண்மணி - ரொம்ப வயதானவர். ஜலந்தருக்கு வெளிப்புறத்தில் நான் அவரை முதல் முறையாகச் சந்தித்தேன். அவர் மனரீதியாகவும் உடல் ரீதியாகவும் மிகவும் பலவீனமாய்க் காணப்பட்டார். அவரின் பார்வை வெறித்துக் கிடந்தது, தலை முழுக்க தூசிகளால் நிரம்பியிருந்தது, ஆடை கள் கிழிதிருந்தது. அவரின் கண்களைப் பார்த்தபோது அவர் எதையோ தேடிக்கொண்டிருக்கிறார் என்று மட் டும் நிச்சயமாகச் சொல்ல முடிந்தது. அந்தப் பெண்ம ணிக்கு அதிர்ச்சியில் பைத்தியம் பிடித்து விட்டது என்று ஒரு சகோதரி என்னிடம் சொன்னாள். அவர் பாட்டியா

லாவைச் சேர்ந்தவர். அங்கு நடந்த கலவரத்தின் போது அவரின் ஒரே மகள் கடத்தப்பட்டுள்ளாள். அவரால் முடிந்த மட்டும் தேடியும், அவளைக் கண்டுபிடிக்க முடிய வில்லை. எங்களால் முடிந்த மட்டும் நாங்களும் முயன்று பார்த்தோம். எங்களாலும் அவளைக் கண்டுபிடிக்க முடி யவில்லை. ஒருவேளை அவள் கலவரத்தில் கொல்லப் பட்டிருக்கலாம். ஆனால் அவர் இதை ஏற்றுக்கொள்ள மறுத்தார்.

அடுத்த முறை நான் அந்தப் பைத்தியக்காரப் பெண் மணியைச் சஹாரன்பூர் பஸ் நிலையத்தில் பார்த்தேன். அவரின் நிலை இன்னும் மோசமாகக் காணப்பட்டது. அவரின் உதடுகள் படுமோசமாய் வெடித்துக்கிடந்தன. தலைமுடி சிக்குண்டுபோய், அது பிச்சை எடுப்பவர்க ளின் தலைமுடியைப் போல் காணப்பட்டது. நான் அவ ரிடம் பேசினேன் - அவர் பயனற்ற தேடலை விட்டுவிட வேண்டும் என்று விரும்பினேன். அதற்காக என் இத யத்தைக் கல்லாக்கிக் கொண்டு 'அம்மா, உங்களின் பெண் கொல்லப்பட்டு விட்டாள்' என்றேன். அந்தப் பைத்தியக்காரப் பெண்மணி என்னைக் கூர்ந்து பார்த்து, 'கொல்லப்பட்டு விட்டாளா... இருக்காது!' என்றார். அவ ரின் குரல் இரும்பு போல திடமாக இருந்தது. 'யாரா லும் என்னுடைய மகளைக் கொலை செய்ய முடியாது... யாராலும் முடியாது' என்று சொல்லி மீண்டும் அந்தப் பய னற்ற தேடலைத் தொடங்கினார். நான் நினைத்தேன் - ஒரு தேடல், அதுவும் பயனற்றது. ஆனால் அந்தப் பைத் தியக்காரப் பெண்மணி இதயத்தில், எந்தக் கிர்பானும் அவளின் பெண்ணை நோக்கி உயர்த்தப்படாது என்றும், கூர்மையான கத்தியோ, கூர்மையில்லாத கத்தியோ எது வுமே அவர் மகளின் கழுத்திற்கு வராது என்றும் எப்படி இவ்வளவு திடமான நம்பிக்கையைக் கொண்டிருந்தார். அவள் சாகாவரம் பெற்றவளா அல்லது அந்தத் தாய் தன் மகள் மீது கொண்ட அன்பு சாகாவரம் பெற்றதா?

அன்பு எப்படி இருந்தாலும் சாகாவரம் பெற்றதுதான். ஒரு வேளை அவர் அந்த அன்பைத்தான் தேடிக்கொண்டி ருக்கிறாரா? அவர் அதை எங்கேயோ தொலைத்து விட் டாரா?...

என்னுடைய மூன்றாவது பயணத்தில் நான் மறுபடி யும் அவரைப் பார்த்தேன். இப்போது அவர் முழுவதுமா கக் கந்தலில் - ஏறக்குறைய நிர்வாணமாக இருந்தார். நான் அவருக்கு ஆடைகள் கொடுத்தேன். ஆனால் அவர் அதை மறுத்துவிட்டார். நான் அவரிடம், 'அம்மா, நான் உண்மையைத்தான் சொல்கிறேன் உங்களுடைய பெண் பாட்டியாலாவில் கொலை செய்யப்பட்டு விட் டாள்' என்றேன். அவர் தன் இரும்பு போன்ற நம் பிக்கையோடு மீண்டும் மறுத்தார். 'நீங்கள் அவளுக் காக நிறைய துயரங்களை அனுபவித்து விட்டீர்கள். என்னோடு வாருங்கள் நான் உங்களைப் பாகிஸ் தான் அழைத்துச் செல்கிறேன்' என்று சொன்னேன். நான் சொல்வதைக் கேட்டுக்கொள்ளாமல் அவர் ஏதோ முணு முணுத்துக் கொண்டிருந்தார். திடீரென்று அவர் விழித்துக் கொண்டது போல் காணப்பட்டார். அவரின் குரல் இப்போது இரும்பைக் காட்டிலும் திடமாக நம்பிக் கையைக் கொண்டிருந்தது. 'முடியாது... யாராலும் அவ ளைக் கொலை செய்ய முடியாது'

நான் கேட்டேன்: "ஏன்?"

அந்த வயதான பெண்மணி, 'அவள் அழகானவள். அந்த அழகைக் கொண்டவளை யாராலும் கொலை செய்ய முடியாது. ஏன் அவளின் கன்னத்தில் ஒரு அறை கூட கொடுக்க முடியாது' என்றார் மெலிந்த முணுமு ணுப்பில்.

நான் சிந்திக்கத் தொடங்கினேன்... அவள் உண்மை யில் அத்தனை அழகானவளா?... ஒவ்வொரு தாயும் அவரின் வாரிசை சூரியனைக் காட்டிலும் சந்திரனைக்

காட்டிலும் அழகானவர்கள் என்றுதான் நினைக்கிறார்கள். ஒருவேளை அந்தப் பெண் உண்மையில் அவ்வளவு அழகைக் கொண்டவளாக இருக்கலாம்... ஆனால் இந்தப் புயலில், மனிதர்களின் முரட்டுப் பிடியில் சிக்காமல் அந்த அழகு எப்படித் தப்பித்திருக்கும். ஒருவேளை அந்தப் பெண்மணி இத்தகைய நம்பிக்கையில் தன்னை ஏமாற்றிக்கொண்டிருக்கலாம். ஏமாற்றிக் கொள்வதற்கு கோடானுகோடி வழிகள் இருக்கின்றன. வலி என்ற மையத்தில் லட்சக்கணக்கான, இல்லை... இல்லை கோடிக் கணக்கான தெருக்கள் சிக்கி ஒன்றோடு ஒன்று சந்தித்துக்கொள்கின்றன.

நான் எல்லையைக் கடந்து பலமுறை பயணம் மேற்கொண்டேன். ஒவ்வொரு முறையும் நான் அந்தப் பெண்மணியைப் பார்த்தேன். இப்போது அவர் எலும்புகளை மட்டுமே கொண்டிருந்த பையாக இருந்தார். அவரின் பார்வை மிகவும் பலவீனமாகியிருந்தது. தள்ளாடியபடியே அவர் தன் பாதையைத் தேடிக்கொண்டு இருந்தார். ஆனாலும் அவரின் மகளுக்கான தேடலை அதே பழைய தீவிரத்தோடு தொடர்ந்தார். தன் மகள் உயிரோடு இருக்கிறாள் என்ற அவரின் நம்பிக்கை இன்னும் திடமாய் இருந்தது. அதனாலேயே யாராலும் அவரின் மகளைக் கொலை செய்ய முடியாது.

அந்தப் பெண்மணியிடம் பேசுவது பயனற்றது என்று என்னிடம் ஒரு சகோதரி சொன்னார். அவரைப் பாகிஸ்தான் கொண்டு சென்று, பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் சேர்ப்பதுதான் சரியாக இருக்கும் என்றும் சொன்னார். நான் இதை முறையான செயலாக நினைக்கவில்லை. அவர் வாழ்க்கையின் மொத்த ஜீவனாக இருக்கக்கூடிய அந்தப் பயனற்ற தேடலை நான் அவரிடம் இருந்து பறிக்க விரும்பவில்லை. அத்தோடு இந்த பிரம்மாண்டமான பைத்தியக்காரர்கள் இருப்பிடத்தில்,

அவர் தன்னுடைய தாகத்தைத் தணித்துக்கொள்ள பாதங்களில் கொப்புளங்களோடு பல மைல்கள் நடந்துகொண்டிருப்பவரை, நான்கு சுவர்களுக்குள் சிறை பிடித்து வைக்க விரும்பவில்லை.

கடைசி முறையாக அவரை அம்ரித்சரில் பார்த்தேன். அவரின் நிலை இன்னும் மோசமாகிக் கொண்டிருப்பதைப் பார்த்து அழுது விட்டேன். அவரைப் பாகிஸ்தான் கொண்டு சென்று மனநலக் காப்பகத்தில் போட்டுவிடுவது என்று தீர்மானம் எடுத்தேன்.

அவர் ஃபாரித் சதுக்கத்தில் அரைகுறைப் பார்வையோடு அங்கும் இங்கும் எதையோ பார்த்தபடி நின்றுகொண்டிருந்தார். சதுக்கத்தில் பரபரப்பும் ஆரவாரங்களும் நிறைந்திருந்தது. நான் கடை ஒன்றில் ஒரு சகோதரியுடன் அமர்ந்து அபகரித்துச் செல்லப்பட்ட ஒரு பெண், இப்போது சபோனியா பஜாரில் ஒரு பனியாவின் பொறுப்பில் இருப்பதைப் பற்றி பேசிக் கொண்டிருந்தேன்.

எங்களின் உரையாடல் முடிந்து விட்டதால், அந்தப் பைத்தியக்காரப் பெண்ணிடம் ஏதாவது பொய் சொல்லி அவரை என்னோடு பாகிஸ்தான் வர சம்மதிக்க வைக்கும் தீர்மானத்தோடு எழுந்து கொண்டேன். திடீரென்று ஒரு ஜோடி என்னைக் கடந்து போனது. அந்தப் பெண் வெள்ளை முகத்திரை போட்டிருந்தாள். அது மிகச் சிறிய முகத்திரை. அவளோடு திடமாகவும் அழகாகவும் கூர்மையான முக அமைப்பும் கொண்ட ஒரு சீக்கிய வாலிபன் இருந்தான். அந்த இருவரும் அந்தப் பைத்தியக்காரப் பெண்மணியைக் கடந்து போகும் போது அந்த வாலிபன் சற்றே நின்று, இரண்டு அடி பின்னே வந்து, தன் கூட்டாளியின் கையைப் பிடித்துக்கொண்டான். இவை எல்லாம் அவ்வளவு வேகத்தில் நடந்தது. இதில் அந்தப் பெண்ணின் முகத்திரை விலகிக்கொண்டது. வெள்

ளைவெளேரென்று நீண்ட துணி சுத்தமாக துவைக்கப் பட்டு சட்டம் போடப்பட்டது போல் இருக்க, அதில் நான் பார்த்த இளஞ்சிவப்பு நிறத்தில் இருந்த அந்த முகத்தின் அழகை என்னால் வர்ணிக்க முடியாது.

நான் அவர்களுக்கு அருகில் தான் இருந்தேன்.

அந்தப் பைத்தியக்காரப் பெண்மணியைச் சுட்டிக் காட்டிய அந்தச் சீக்கிய இளைஞன் தேவதை போலி ருந்த அந்த அழகியிடம் சொன்னான், 'உன் அம்மா'.

அந்தப் பெண் ஒரு கணம் அந்தப் பைத்தியக்கா ரப் பெண்மணியைத் திரும்பிப் பார்த்தாள். பிறகு தன் முகத்தை, முகத்திரை கொண்டு முழுவதுமாக மறைத் துக்கொண்டு அந்தச் சீக்கிய இளைஞனின் கையைக் கெட்டியாகப் பிடித்து மிக மெல்லிய குரலில் சொன்னாள், 'வா போகலாம்'.

இருவரும் வேகமாக நடக்கத் தொடங்கினார்கள்.

அந்தப் பைத்தியக்காரப் பெண்மணி கத்தத் தொடங் கினாள். 'பாக் பாரி... பாக் பாரி' அவர் மிகவும் கலக்கத் தோடு காணப்பட்டார்.

நான் அவர் அருகில் சென்று என்ன விஷயம் என்று கேட்டேன். அவர் நடுங்கிக்கொண்டிருந்தார். 'நான் அவ ளைப் பார்த்தேன்... நான் அவளைப் பார்த்தேன்' என் றார்.

'யாரை நீங்கள் பார்த்தீர்கள்?' என்று கேட்டேன்.

அவரின் நெற்றிக்குக் கீழ் இருந்த பார்வையற்ற இரண்டு வெற்றுப் பள்ளங்கள் அதிர்ச்சியை வெளிக் காட்டியது. 'என் மகள் பாக் பாரி...!'

நான் அவரிடம் மறுபடியும் சொன்னேன், 'அம்மா, அவள் செத்துப் போய்விட்டாள்.'

அவர் திரும்பக் கத்தினார், 'நீ பொய் சொல்கிறாய்.'

நான் சொல்வதை அவர் முழுமையாக நம்ப வேண்டும் என்று இந்த முறை நான் சொன்னேன், 'அம்மா, கடவுள் மீது சத்தியமாகச் சொல்கிறேன், அவள் இறந்து விட்டாள்.'

இதைக் கேட்ட அடுத்த கணத்தில் அவர் நொறுங்கிப் போனார். அவரின் பயணம் ஒரு முடிவுக்கு வந்தது. சதுக்கத்தில் அவர் செத்துக்கிடந்தார்.

***



# குஷியா

குஷியா சிந்தித்துக்கொண்டிருந்தான்.

பான் வாங்கிக் கொண்டு, அந்தப் பான் கடைக்கு அடுத்து இருந்த கடையில் துருத்திக் கொண்டிருந்த மரத்தாலான சிறு மேடையில் அமர்ந்து கொண்டான். நாள் முழுக்க அந்த மேடையில் மோட்டார் வண்டியின் உதிரிப்பாகங்களும், டயர்களும் நிரம்பியிருக்கும். ஆனால் இரவு 8.30 மணிக்குக் கடை மூடப்பட்ட பிறகு, மேடைமேல் இருப்பது எல்லாம் கடைக்குள் அடைக்கப்படும். அதற்குப் பிறகு காலியான மேடையைக் குஷியா தன்னுடையதாக ஆக்கிக் கொள்வான்.

குஷியா, பானையும் அதனுள் இருக்கும் கருப்பு சீவலையும் வேண்டுமென்று மிக மெல்ல மென்று கொண்டிருந்தான். அதன் சாறு அவன் வாயில் நிரம்பியிருக்க, அது அவனின் உதட்டோரங்களில் வழியத் தொடங்கியது. அவனுடைய சிந்தனையைப் பொடியாக அரைத்து அதை அவனின் எச்சிலோடு கரைத்துக் கொண்டிருப்பதைப் போல உணர்ந்தான். ஒருவேளை இந்த எண்ணம் தான், அவன் வாயில் காரமாய் இருந்த சாற்றைத் துப்ப விடாமல் தடுத்திருக்கலாம்.

குஷியா மேலும் மேலும் எச்சிலைத் தன் வாயில் தக்க வைத்துக்கொண்டு, ஏறக்குறைய அரைமணி நேரத்திற்கு முன் நடந்ததைப்பற்றி சிந்தித்துக் கொண்டிருந்தான்.

அவன் கேட்வாடியில் உள்ள ஐந்தாவது தெருவின் கோடியில், மங்களூரில் இருந்து வந்து அவனோடு புதி தாகத் தொழிலில் சேர்ந்திருக்கும் காந்தா என்ற பெண் ணைச் சந்திக்கச் சென்றிருந்தான். யாரோ அவனிடம் அவள் ஊரைவிட்டுப் போவதாகச் சொல்ல, அது உண் மைதானா என்று தெரிந்து கொள்ளச் சென்றிருந்தான். அவன் கதவைத் தட்டினான். உள்ளிருந்து யார் என்று அவள் கேட்டாள். "நான் தான் குஷியா" என்று பதில் தந் தான். சற்று நேரம் கழித்துக் கதவு திறக்கப்பட அவன் பார்த்தது, ஏறக்குறைய அவனைத் தூக்கிப்போட்டது.

அவள் நிர்வாணமாக இருந்தாள். இல்லை, ஏறக்கு றைய நிர்வாணமாக இருந்தாள். அவள் தன் உடலை மறைக்கச் சுற்றியிருந்த கருமித்தனமான, சிறிய டவல் பெண்கள் பொதுவாக எதையெல்லாம் மறைக்க வேண் டும் என்று நினைப்பார்களோ அதையெல்லாம் மறைப் பதற்குப் போதுமானதாக இல்லாமல் எல்லாவற்றையும் வெளிப்படுத்தியது.

"குஷியா, என்ன விஷயமாக வந்தாய் இவ்வளவு சீக் கிரம் வர வேண்டிய அவசியம் என்ன?... நான் குளிக்கப் போக இருந்தேன்... உட்கார்... நீ வருவதற்கு முன்னால் எதிரே இருக்கும் கடையில் டீ சொல்லிவிட்டு வந்தி ருக்க வேண்டும்... இங்கு வேலை பார்த்துக்கொண்டி ருந்த அந்தத் தறுதலை பையன் ராமு ஓடிப் போய்விட் டான்."

இது வரை பெண்களை நிர்வாணமாகவோ அரை நிர்வாணமாகவோ பார்த்திராத குஷியா குழம்பிப்போய் நின்றான். அவனுக்குத் தன்னை எப்படி வெளிப்படுத் திக்கொள்வது என்றோ, என்ன சொல்வது என்றோ புரி யாமல் இருந்தான். அவனின் கண்கள் காந்தாவின் உட லைத் தவிர வேறு எங்கேனும் பார்த்துக் கொண்டிருக் கவே விரும்பியது.

ஆனால் அவனால் முணுமுணுக்க முடிந்தது எல்லாம் இவ்வளவுதான்: "நீ ஏன் போய்க் குளிக்கக் கூடாது." என்று சொல்லி, மேலும் "நீ ஒழுங்காக உடை உடுத் திருக்கவில்லை என்றால் எதற்காகக் கதவைத் திறந் தாய்? என்னால் இப்போது கதவைத் திறக்க முடியாது என்று சொல்லியிருந்தால் நான் வேறு ஒரு சமயம் வந்தி ருப்பேன்... சரி போய்க் குளித்து விட்டு வா" என்றான்.

காந்தா புன்னகைத்தாள். "நீ குஷியா என்று சொன்ன வுடன் உன்னை உள்ளே விடுவதால் என்ன தீங்கு வந் துவிடப் போகிறது என்று நினைத்தேன்... குஷியாதானே, நம்முடைய குஷியாதானே என்று நினைத்தேன்..."

இதை அவள் சொன்ன போது அவள் முகத் தில் தோன்றிய புன்னகை அவனுள் பெரும் போராட் டத்தைத் தோற்றுவித்தது. மெழுகில் வடித்தெடுத்த பொம்மை போல இருந்த அந்த நிர்வாண உடல் இப் போதும் அவன் முன் நின்று கொண்டு இருப்பது போல் உணர்ந்தான். அவளின் உடல் மிக அழகாக இருந் தது. தங்களின் உடலை விற்பவர்கள் கூட இவ்வளவு அழகாக இருப்பார்கள் என்பதை குஷியா முதல் முறை யாக உணர்ந்தான். இது அவனுக்குப் பெரும் அதிர்ச் சியாக இருந்தது. அதைவிட வெட்கமில்லாமல் அவன் முன்னே அவள் நிர்வாணமாய் இருந்தது மேலும் அதிர்ச் சியாக இருந்தது - ஏன்?

அவள் சொன்ன பதிலை நினைத்துப் பார்த்தான்: 'நீ குஷியா என்று சொன்னவுடன் உன்னை உள்ளே விடுவ தால் என்ன தீங்கு வந்துவிடப் போகிறது என்று நினைத் தேன்... குஷியாதானே, நம்முடைய குஷியாதானே என்று நினைத்தேன்...'

காந்தா, குஷியா இருவரும் ஒரே தொழிலில்தான் இருந்தார்கள். அவள் பொருளாகவும், அவன் அதனை விற்பனை செய்கிறவனாகவும். அந்த விதத்தில் அவள்

அவனை குஷியாதானே என்று நினைக்க உரிமை இருந்தாலும் அவன் முன்னே சற்றும் பயப்படாமல் மிக வும் சாதாரணமாய் நிர்வாணமாக நிற்க எந்த உரிமையும் கிடையாது. இப்படிச் செய்ய ஏதோ காரணம் இருக்க வேண்டும். காந்தாவின் பதிலில் ஏதேனும் உள் அர்த் தம் இருக்குமா என்று யோசித்தான். அவள் கொடுத்த விளக்கம் மிகத் தெளிவாகவும், அதே சமயத்தில் குழப்ப மாகவும் இருப்பதால் அவனால் எந்த ஒரு தீர்மானத்திற் கும் வர முடியவில்லை.

அவள் நிர்வாணமாய் நின்று கொண்டிருந்ததை இப் போதும் அவனால் பார்க்க முடிந்தது. அவளின் சதைகள் மிக இறுக்கமாக ஏதோ பெரிய டிரம்மைச் சுற்றியிருப்பது போலவும் அதை அந்த உடல் அறியாதது போலவுமே இருந்தது. இந்தக் குழப்பத்திலும் அந்த உடலை அளந் தெடுத்தான். ஊதா நிறத்தில் இருந்த அந்த நிர்வாண உடலை ஊடுருவிப் பார்த்தபோதும் அவள் எவ்விதச் சங்கடமும் இல்லாமல் சிலை போலவே நின்றிருந் தாள். அவனின் முறைப்புக்கு அவள் ஏதேனும் எதிர்ப்பு தெரிவித்திருக்க வேண்டும். என்ன இருந்தாலும் ஓர் ஆண், அவள் முன்னே முறைத்துக்கொண்டு நிற்கி றான். அதுவும் முழுமையாக வளர்ந்திருக்கக் கூடிய ஒரு ஆணின் கண்கள் எந்த ஒரு பெண்ணின் உடைகளை யும் குடைந்தெடுக்கக்கூடியவை. அவனின் சிந்தனை கள் எவ்வளவு தூரம் போகும் என்று பரமாத்மாவுக்குத் தான் தெரியும். இல்லை! அவள் உடம்பில் ஒரு முடி கூட அசையவில்லை. அவளின் கண்கள் கூட மெழு கிவிட்டது போல கொஞ்சமும் அவமானமோ, வெட் கமோ இல்லாமல் இருந்தது... சிறிதேனும் அவள் சங் கடத்தை வெளிப்படுத்தியிருக்க வேண்டும். அவளின் முகம் வெட்கத்தால் சிவந்திருக்க வேண்டும். உண்மை தான். அவள் தேவடியாள்தான். ஆனால் அவள் செய்

தது போலவா எல்லாத் தேவடியாள்களும் ஒரு ஆணின் முன்பு நிர்வாணமாக நிற்கிறார்கள்?

அவன் பத்து வருடங்களாக இந்தத் தொழிலில் இருக் கிறான். இந்தத் தொழிலில் ஈடுபடும் பெண்களின் பல வீனங்களையும் அவர்களின் இயல்புகளையும் நன்றாக அறிந்திருந்தான். உதாரணத்திற்குத் தெருக்கோடியில் வசித்து வந்த பெண் ஒருத்தி - தன் சகோதரன் என்று அவளால் அழைக்கப்பட்டவனோடு, வாழ்ந்து வந்தாள். அவளுக்கு 'அச்சுத் கன்யா' படத்தில் உள்ள பாடல் கள் என்றால் மிகவும் பிடிக்கும். காரணம், அவள் நடிகர் அசோக்குமார் மீது காதல் கொண்டிருந்தாள். பல வாலிபர்கள் அவளின் பலவீனத்தை அறிந்து கொண்டு அவளை அசோக்குமாருக்கு அறிமுகப்படுத் துவதாக உறுதியளித்து அவளோடு படுத்திருக் கிறார் கள். அவனுக்குத் தாதரில் வசித்துக் கொண்டிருக்கும் ஒரு பஞ்சாபி பெண்ணைப் பற்றியும் தெரியும். அவள் எப்போதும் அரை டிரௌசர், அணிந்திருப்பாள். அதற் குக் காரணம், அவளின் காதலன் அவளுடைய கால்கள் 'மொராக்கோ' திரைப்படத்தில் நடித்த நடிகையின் கால் களைப் போலவே இருப்பதாகச் சொல்லியிருக்கிறான். அவள் அந்தப் படத்தைப் பல முறை பார்த்திருக்கிறாள். அந்தப் படத்தின் நாயகி 'மார்லின் டிட்ரிச்'சியின் கால் கள் 2,00,000 ரூபாய்க்குக் காப்பீடு செய்யப்பட்டிருக்கி றது என்று தெரிந்து கொண்டவுடன், அவளும் புதிதாகத் தைத்த டிரௌசர் அணிந்து கொள்ளத் தொடங்கினாள். மஸாகானிலிருந்து வந்த மராத்தியப் பெண், அழகான கல்லூரி மாணவர்கள் என்றால் பிடித்துக் கொள்வாள். காரணம் அவள் மிக அழகான குழந்தைக்குத் தாயாக வேண்டும் என்று விரும்பினாள். ஆனால் அது நடக் கச் சாத்தியமே இல்லை என்று அவளுக்குத் தெரிந்து தான் இருந்தது. அவளால் கருவுற முடியாது. மதராஸில் இருந்து வந்த மிகக் கருப்பான பெண்ணைப் பொறுத்

தமட்டில், அவளின் சம்பாத்தியத்தில் பெரும் பகுதியை தன்னுடைய தோலை வெளுப்பாக்கச் செலவு செய்து கொண்டிருப்பதற்காக அவன் வருத்தப்பட்டான்.

அவனுடைய வட்டத்தில் இருந்த பெண்களைப் பற்றி எல்லாவற்றையும் தெரிந்து வைத்திருந்தபோதிலும், எப் போதும் அவனால் சரியாக உச்சரிக்க முடியாத பெய ரைக் கொண்ட காந்தா குமாரி, அவன் முன்னால் நிர் வாணமாக நின்று அவனுடைய வாழ்க்கையில் பெரும் சிக்கலை ஏற்படுத்துவாள் என்று மட்டும் தெரியாமல் போனது. அவனுடைய வாயில் அவ்வளவு எச்சில் சேர்ந்து கொண்டு விட்டதால், பாக்கின் சிறு சிறு துகள் கள் எச்சிலில் மிதந்து கொண்டிருந்ததால் பற்களுக்கி டையில் கொண்டுவர அவன் செய்த முயற்சிகள் எல் லாம் வீண்ணாயிற்று. அதை அவனால் கடிக்க முடியா மல் போனது. மஸ்லின் துணியில் பாலாடைக் கட்டியை அழுத்தினால், அந்தத் துணியில் தண்ணீர் முத்துக் கள் தோன்றுவது போல அவனின் குறுகிய நெற்றியில் வியர்வை முத்துக்கள் தோன்றின. அவனின் ஆண்மை காயப்படுத்தப்பட்டுள்ளது. காந்தாவின் வெறும் உட லைப் பற்றி அவன் நினைத்தபோதெல்லாம் அவமானப் படுத்தப்பட்டதாக நினைத்தான். 'இது அவமானம். இல் லையென்றால், வேறு எதுதான் அவமானம்? ஒரு பெண் முழு நிர்வாணமாய் ஒரு ஆண் முன்னே நின்றுகொண்டு, 'உள்ளே வா, குஷியா தானே. நம்முடைய குஷியா தானே' என்கிறாள். அப்படிப்பட்டவன் ஒரு ஆணாக இருக்க முடியாது. அவளுடைய கட்டிலில் எப்போதும் காலைப் பரப்பிக் கொண்டு நடக்கும், அவளின் செல்லப் பிராணி யான பூனையாகத்தான் இருக்க முடியும்.'

அங்கு உட்கார்ந்து சிந்தித்துக் கொண்டிருந்த வன், அவமானப்படுத்தப்பட்டதாக முடிவுக்கு வந்தான். அவன் ஓர் ஆண்மகன். குடும்பப் பெண்ணாக இருக்

கட்டும் வேறு எதுவாக இருக்கட்டும்; ஓர் ஆண்மகன் நடத்தப்படுவதைப் போல நடத்தப்பட வேண்டும் என்று நினைத்தான். இயற்கையில் ஆணுக்கும் பெண்ணுக் கும் இடையில் ஏற்பட்டிருக்கும் இடைவெளியைத் தக் கவைத்துக் கொள்ள வேண்டும் என்று நினைத்தான். அவள் உண்மையிலேயே ஊரை விட்டு வெளியேறு கிறாளா என்றும், அப்படியிருந்தால் எங்கே போகிறாள் என்று தெரிந்துகொள்ளவும் தான் அவன் காந்தாவின் வீட்டிற்குச் சென்றிருந்தான். அது வியாபாரம் சம்பந்தப் பட்டது இல்லை. அவன் கதவைத் தட்டியபோது அவள் என்ன செய்து கொண்டிருப்பாள் என்று யோசித்திருக்க வேண்டும் என்றால் இப்படித்தான் அவனால் சிந்தித்து இருக்க முடியும்: தலைவலி இருப்பதால் ஒரு துண் டைத் தலையில் கட்டிக் கொண்டு கட்டிலில் படுத்திருக் கலாம் அல்லது அவளுடைய பூனையோடு விளையா டிக்கொண்டிருக்கலாம் அல்லது அவனால் சகித்துக் கொள்ள முடியாத நாற்றமடிக்கும் பவுடரைப் பூசிக் கொண்டும் அக்குளைச் சுத்தம் செய்து கொண்டும் இருக்கலாம்... ஒருவேளை தன்னந்தனியாகச் சீட்டாட் டம் ஆடிக்கொண்டும் இருந்திருக்கலாம்.

அவளோடு வீட்டில் யாரும் தங்கியிருப்பதில்லை. இருந்தால் வேறு சூழ்நிலையை அவனால் யோசித்துப் பார்த்திருக்க முடியும். ஆனால் அவள் என்ன செய்து கொண்டிருப்பாள் என்று குஷியா கவலைப்படவில்லை. அவனுக்குக் கிடைத்த செய்தியை ஊர்ஜிதப் படுத்திக் கொள்ள விரும்பினான். எப்போதும் தடித்த வண்ணங்க ளில் ஆடை அணிந்து கொள்ளும் காந்தா, திடீரென்று அவன் முன்னால் நிர்வாணமாய் நிற்கிறாள். அவள் சுற் றியிருந்த சிறிய டவல் மறைக்க வேண்டியது எதையும் மறைக்க முடியாமல் இருந்தது. குஷியா, அவன் பிடித் திருந்த வாழைப்பழம் நழுவி தோல் மட்டும் அவன் கையில் இருக்க, பழம் காந்தா வடிவில் அவன் முன்னே

நிற்பது போல் உணர்ந்தான். இல்லை, அவனே நிர்வா ணமாக நிற்பது போல் உணர்ந்தான். அவளை நிர்வாண மாய்ப் பார்த்ததோடு எல்லாம் முடிந்திருந்தால் அவன் எல்லாவற்றையும் மறந்திருப்பான். ஏன் அது அவனுள் சந்தோஷமான அனுபவமாய்ப் பதிந்திருக்கும். ஆனால் அவளின் வார்த்தைகள் அவனின் காதுகளில் திரும் பத் திரும்ப ரீங்காரமிட்டுக்கொண்டிருந்தன. 'நீ குஷியா என்று சொன்னவுடன் உள்ளே வரச் சொல்வதால் என்ன தீங்கு வந்துவிடப் போகிறது என்று எனக்குள் சொல்லிக் கொண்டேன். வந்திருப்பது யார்? குஷியா தானே, நம்மு டைய குஷியா தானே என்று நினைத்தேன்'.

'அந்தத் தேவடியா... சிரித்துக் கொண்டு நின்றாள்' என்று திரும்பத் திரும்ப முணுமுணுத்துக் கொண்டிருந் தான். அந்தப் புன்னகை அவளைப்போலவே நிர்வா ணமாய் இருந்தது. திடீரென்று அவன் சிறு பையனாக இருந்தபோது ஒரு பெண் அவனிடம், 'குஷியா, என் மகனே! ஒரு பக்கெட் தண்ணீர் கொண்டு வா' என்று அடிக்கடி சொல்லும் அனுபவம் அவன் நினைவில் வந் தது. அவன் எடுத்து வந்தபோது தற்காலிகமான திரைக் குப் பின்னால் நின்று கொண்டிருந்த அந்தப் பெண்,

'வா, இங்கே அதைக் கொண்டுவந்து வை. என் முகத் தில் சோப்புப் போட்டிருப்பதால் என்னால் பார்க்க முடிய வில்லை' என்பாள். அவன் திரையின் ஒரு மூலையைப் பிடித்து விலக்கி பக்கெட்டை அந்தப் பெண்ணுக்கு அருகில் வைப்பான். உடம்பு முழுக்க சோப்பு போடப்பட் டிருந்த அந்த நிர்வாண உடலைப் பார்ப்பான். ஆனால் அது இப்போது அவனை இம்சைப்படுத்துவதைப் போல் எந்த உணர்வுகளையும் தோற்றுவிக்கவில்லை. 'நான் அப்போது சிறு பையன்தான். ஒரு சிறுவனுக்கும் வாலி பனுக்கும் நிறைய வேறுபாடுகள் உண்டு. எந்தப் பெண் ணும் சிறு பையன்களிடமிருந்து தங்களை மறைத்துக்

கொள்ள முயற்சிக்கமாட்டார்கள். ஆனால் இப்போது நான் வளர்ந்த மனிதன். இருபத்தெட்டு வயதான ஆண் மகன். எப்படி ஒரு பெண் - அவள் வயதான கிழவியா கவே இருக்கட்டும், என் வயதைக் கொண்ட ஆண்கள் முன் வெறும் உடம்போடு நிற்க முடியும்?'

அவனை என்னவென்று காந்தா நினைத்துக்கொண் டிருக்கிறாள்? ஒரு வாலிபனிடம் இருக்கக் கூடியவை எல்லாம் அவனிடம் இல்லாமல் போய்விட்டதா? உண் மைதான். அவளின் வெறும் உடம்பு அவனை எதிர்பா ராதவிதமாய்த் தாக்கி அதிர்ச்சிக் குள்ளாக்கியது என் றாலும், அவன் அந்த உடம்பை அளந்தெடுக்கத்தானே செய்தான். தினமும் அந்த உடல் பலவிதங்களில் உபயோகப்படுத்தப்பட்டிருந்தாலும் எல்லாம் இருக்க வேண்டிய இடத்தில் இருப்பதோடு, சரியான வடிவத் திலும் திடமாகவும் இருப்பதை அவன் பார்க்கத்தான் செய்தான். அவள் ஒரு முறைக்குப் பத்து ரூபாய் பெற்று வந்தாள். ஆனால் அவள் கொடுப்பதை ஒப்பிட்டுப் பார்த்தால் அது ஒன்றும் பெரிய பணம் இல்லை. முன்பு ஒரு நாள் வங்கிக் குமாஸ்தா ஒருவர் அவள் இரண்டு ரூபாய் குறைக்க மறுத்தாள் என்று திரும்பிப் போய்விட் டான். சந்தேகத்திற்கு இடமில்லாமல் அவன் அதிர்ஷ் டமற்றவன். எல்லாவற்றையும் மீறி அவனின் உடல் விசித்திரமாக விறைப்பானதை நினைவில் கொண்டு வந்தான். எலும்புகள் முறியும் வரை உடலை வளைத்து விறைப்பை எல்லாம் வெளியேற்றிவிட வேண்டும் என் பது போல் அப்போது உணர்ந்தான். மங்களூரில் இருந்து வந்த கோதுமை நிறத்தில் இருக்கும் அந்தப் பெண், ஏன் அவனை ஒரு ஆணாகப் பார்க்க மறந்து 'குஷியா தானே' என்று சொல்லி எல்லாவற்றையும் அவனுக்குக் காண் பித்து நின்றாள்.

கோபத்தில் அடர்த்தியான பான் சாறு எச்சிலை நடை பாதையில் கண்டவாறு துப்பினான். எழுந்து டிராம் பிடித்து வீட்டிற்குச் சென்றான்.

குளித்து விட்டு மிகச் சுத்தமான வேட்டி கட்டிக் கொண்டு பக்கத்திலிருந்த முடி வெட்டும் கடைக்குச் சென்றான். அங்கு இருந்த கண்ணாடியில் தலைவா ரிக் கொண்டிருந்த போது, திடீரென்று ஏதோ தீர்மா னம் எடுத்தவன் போல, முடி வெட்டும் நாற்காலி யில் உட்கார்ந்து கொண்டு, தன்னை நிதானப்படுத் திக் கொண்டு, முடி வெட்டுபவனிடம் சவரம் செய்துவி டச் சொன்னான். முடி வெட்டுபவன் அதிர்ச்சி அடைந்து, "குஷியா பாய் உனக்கு மறந்து விட்டதா? காலையில் தான் உனக்குச் சவரம் செய்தேன்" என்றான். குஷியா தன் விரல்களை மோவாயில் தடவி விட்டு,

"உன் சவரக்கத்தி அவ்வளவு கூர்மையாக இல்லை" என்றான்.

சவரம் செய்து கொண்டபின் முகத்தில் கொஞ்சம் பவு டர் பூசிக்கொண்டான். பிறகு கடையிலிருந்து வெளியே வந்து டாக்ஸி நிறுத்தத்தை நோக்கி நடந்தான். இவன் சைகை காட்ட, டாக்ஸி வரிசையிலிருந்து பிரிந்து இவனை நோக்கி வந்தது. டாக்ஸி டிரைவர் கதவைத் திறந்து விட்டு, "எங்கு சாகிப்! " என்று கேட்டான். சாகிப் என்று அழைக்கப்பட்டதில் குஷியா சந்தோஷம் கொண் டான். "நான் சொல்கிறேன்... லாமிங்டன் தெரு வழியாக ஓபரா ஹவுஸ்க்கு போ, புரிகிறதா?" என்றான். டிரை வர் மீட்டரைப் போட்டுவிட்டு வண்டியைக் கிளப்பினான். லாமிங்டன் தெரு முடிவில் வண்டியை இடது பக்கமா கத் திருப்பச் சொன்னான். டாக்ஸி இடது பக்கமாகத் திருப்பி, டிரைவர் வண்டியின் கியரை மாற்றுவதற்குள் குஷியா, "ஒரு நிமிஷம் அந்த விளக்குக் கம்பத்திற்குப் பக்கத்தில் நிறுத்து" என்றான்.

அவன் வண்டியை விட்டு வெளியே வந்து தெருவைக் குறுக்காகக் கடந்து, அங்கிருந்த பான் கடைக்குச் சென்றான். பான் வாங்கிப் போட்டுக் கொண்டு, அங்கு நின்று கொண்டிருந்தவனோடு ஒரு சில வார்த்தைகள் பேசினான். பிறகு அவன் பேசிய மனிதனோடு திரும்ப வந்தான். இருவரும் டாக்ஸியில் ஏறிக்கெண்டார்கள். குஷியா டிரைவரிடம், "நேராகப் போ" என்றான். குஷியாவின் வழி காட்டுதலில் டாக்ஸி சற்றுநேரம் ஓடிக் கொண்டிருந்தது. மிகப் பிரகாசமாக விளக்குகள் எரிந்து கொண்டிருந்த தெருக்கள் ஊடாக அவர்களின் டாக்ஸி சென்று, இறுதியாக மிக மங்கலான வெளிச்சத்தைக் கொண்ட சந்துக்குள் நுழைந்தது. அந்தச் சந்தில் மக்கள் படுத்துறங்க பாயை விரித்துக்கொண்டிருந்தார்கள். சிலர் எண்ணெய் மசாஜ் எடுத்துக்கொண்டிருந்தார்கள். டாக்ஸி மேலும் நகர்ந்து பங்களா போல் மரத்தால் கட்டப்பட்டிருந்த வீட்டை நெருங்கியது. குஷியா டாக்ஸியை நிறுத்தச் சொல்லி, அவனோடு வந்தவனிடம், "நீ போ, நான் இங்கிருக்கிறேன்" என்றான். அந்த மனிதன் வாயைப் பிளந்து குஷியாவை முட்டாள்தனமாகப் பார்த்து, டாக்ஸியை விட்டு இறங்கி, தயக்கத்தோடு அந்தச் சந்தைக் குறுக்காகக் கடந்து குஷியா அவனிடம் காட்டிய வீட்டிற்குள் நுழைந்தான்.

குஷியா இருக்கையில் சரிந்து கால் மேல் கால் போட்டு உட்கார்ந்து கொண்டான். பிறகு தன் சட்டைப் பையில் இருந்து ஒரு பீடியை எடுத்துப் பற்ற வைத்தான். ஆனால் இரண்டே இரண்டு இழுப்பு இழுத்து விட்டு ஜன்னல் வழியாக விட்டெறிந்தான். அவன் நிலை கொள்ளாமல் இருந்தான். அவனின் இதயம் மிக வேகமாக அடித்துக்கொள்ள, ஒரு கணம் டிரைவர் கூடுதலாகப் பணம் வாங்க இன்ஜினை அணைக்காமல் வைத்திருப்பதாக நினைத்து, "இந்த இன்ஜினை ஓடவிடுவது

மூலம் எவ்வளவு பணம் கூடுதலாகச் சம்பாதிப்பாய்?" என்று கோபமாகக் கேட்டான்.

டிரைவர் திரும்பி காயப்பட்ட பார்வையோடு, "சேட், இஞ்ஜின் ஓடிக்கொண்டிருக்கவில்லை" என்றான்.

குஷியா தன் தவறை உணர்ந்தவுடன் மேலும் நிலை கொள்ளாமல் தவித்தான். அவனுடைய உதடுகளைக் கடிக்கத் தொடங்கினான். பிறகு அவனின் அக்குள் இடுக்கில் பிடித்திருந்த காந்தி குல்லாவை அணிந்து கொண்டான். குஷியா தன் கையை நீட்டி டிரைவரின் தோளில் தட்டிக் கூப்பிட்டு, "நான் ஒரு பெண்ணை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். அவள் வந்து ஏறிய உடனே வேகமாகப் போ... புரிகிறதா.. வீணாகப் பயப்ப டாதே... பிரச்சனை ஏதும் இருக்காது" என்றான்.

எதிரே இருந்த மரத்தாலான வீட்டிலிருந்து இரண்டு உருவங்கள் வெளியே வந்தன. குஷியாவை அழைத்து வந்தவன் முன்னே வர, பின்னால் அடர்த்தியான வண் ணங்களில் சேலை கட்டிக் கொண்டிருந்த காந்தா வந் தாள்.

குஷியா வண்டியின் இருட்டான பகுதியில் தன்னை மேலும் சரித்துக் கொண்டான். அவனோடு வந்த வன் காரின் கதவைத் திறந்து மெதுவாகக் காந்தாவை உள்ளே தள்ளிவிட்டான்.

"குஷியா!... நீயா!" காந்தா ஏறக்குறைய வீறிட்டாள்.

"ஆமாம், நான் குஷியா தான்... ஆனால் ஏற்கெ னவே உனக்கான பணம் கொடுக்கப்பட்டு விட்டது இல் லையா?" என்று சொல்லி, டிரைவரிடம் குரலை உயர்த்தி, "டிரைவர், நேராக 'ஜுஹு' கடற்கரைக்குப் போ" என் றான்.

டிரைவர் இன்ஜினை இயக்க, அது உயிர் பெற்றுச் சீறிப் பாய்ந்தது. காந்தா என்ன சொல்லியிருந்தாலும் அது இன்ஜினின் இரும்பு போன்ற முழக்கத்தில் மூழ்கிப்

போனது. டாக்ஸி இரவுக்குள் காணாமல் போக, குஷி யாவோடு வந்தவன் எப்போதும் அப்படித்தான் என்பது போல பிரமித்துப் போய் நின்று கொண்டிருந்தான்.

அதற்குப் பிறகு குஷியாவை யாரும் மோட்டார் வண்டி உதிரிப் பாகங்கள் விற்கும் கடையின் மர மேடையில் பார்த்ததேயில்லை.

***



## ஷரிபான்

காசிம் அவன் வீட்டுக் கதவைத் திறந்தபோது, அவனது வலது காலில் ஒரு தோட்டா புகுந்திருந்ததால், அதன் வலியை மட்டுமே அவன் உணர்ந்திருந்தான். ஆனால் வீட்டிற்குள் நுழைந்தவுடன், அவன் மனைவியின் உயிரற்ற உடலைப் பார்த்த போது, அவனுள் ஆயிரம் தோட்டாக்கள் தாக்கியது போல் உணர்ந்தான். நடந்தவற்றைத் தன்னுடைய பிடிக்குள் கொண்டு வருவதற்குள், பெரும் வெறி அவனை ஆட்கொண்டது. அவன் மரத்தை வெட்டப் பயன்படுத்தப்படும் கோடாலியை எடுத்துக்கொண்டு வீட்டை விட்டு வெளியேறிக் காண்பவரை எல்லாம் வெட்டி சாய்க்கத் தொடங்கி விடுவான் போலிருந்தது. ஆனால் திடீரென்று அவன் தன்னுடைய மகள் ஷரிபான் பற்றி நினைத்தான்.

"ஷரிபான்... ஷரிபான்..." அவன் உரக்கக் கூப்பிடத் தொடங்கினான்.

முற்றத்திற்குப் போகும் முன் கதவுகள் இரண்டும் மூடிக் கிடந்தன. ஒரு வேளை பயத்தின் காரணமாக, உள்ளே ஒளிந்து கொண்டிருக்கலாம் என்று காசிம் நினைத்தான். அவன் கதவருகே சென்றான். அவனுடைய வாயைக் கதவுகளின் இடையில் வைத்து "ஷரிபான்... நான் உன் அப்பாம்மா" என்று கத்தினான். உள்ளிருந்து பதில் ஏதும் வரவில்லை. காசிம் இரண்டு கைகளாலும் பலம் கொண்ட மட்டும் கதவைப் பிடித்துத் தள்ளினான். அவை திறந்து கொள்ள, அவன் முற்றத்தில் தடுமாறி விழுந்தான். அவன் எழுந்து கொள்ள

முயன்றபோது, எதையோ உணர்ந்தவன் போல... அவன் வீறிட்டான்.

சுமார் ஓர் அடி தள்ளி ஒரு பெண்ணின் உயிரற்ற உடல் கிடந்தது... நிர்வாணமாக... முழு நிர்வாணமாக... நல்ல வடிவம் கொண்ட உடல்... சிறிய மார்பகங்கள் கூரையை நோக்கி இருந்தன... காசிமின் உடல் முழுக்க அதிர்ச் சியில் நடுங்கத் தொடங்கியது. அவனுள் வானத்தைப் பிளக்கக் கூடிய கதறல் எழுந்தது. ஆனால் சிக்குண்ட உதடுகள் அதை வெளியே விட மறுத்தன. அவனின் கண்கள் மூடிக்கொண்டன. இரண்டு கைகளாலும் தன் முகத்தை மறைத்துக்கொண்டான். அவனின் உதடுக ளிலிருந்து மிக மெல்லிய சத்தம் வெளியேறியது, "ஷரி பான்..." அவனின் கண்கள் இன்னும் மூடியிருக்க, அவன் ஏதாவது துணி கிடைக்குமா என்று தேடத் தொடங்கி னான். கிடைத்ததை ஷரிபான் உடல்மீது விட்டெறிந் தான். அது அவளை விட்டுச் சற்றுத் தள்ளி விழுந்து கிடந்ததை உணராமலே, அவன் வெளியேறினான்.

அவன் வெளியே வந்தபோது, தன்னுடைய மனை வியின் உயிரற்ற உடலைப் பார்க்கவில்லை. ஷரிபா னின் நிர்வாண உடல் மற்ற எல்லாவற்றையும் முழுமை யாக விளக்கிவிட்டதால், அதற்கு அவசியம் இல்லா மல் போனது. அவன் கோடாலியை எடுத்துக்கொண்டு வீட்டை விட்டு வெளியே வந்தான்.

காசிமின் வலது காலில் ஒரு தோட்டா புகுந்து கிடந் தது. அவன் மனைவியின் உயிரற்ற உடல் அதை மறக்க வைத்தது. இப்போது அவளின் மரணத்தின் துயரம் கூட மறைந்து விட்டது. ஒரே ஒரு காட்சி தான் அவன் கண் முன்னே நிலைத்து நின்றது. ஷரிபானின் உடல், ஷரிபா னின் நிர்வாணமான உடல். ஈட்டி போல அது கண்களை ஊடுருவி, நேராக அவனின் இதயத்திற்குள் பாய்ந்தது.

கையில் கோடாலியோடு காசிம் வெறிச்சோடிக் கிடந்த சந்தைகள் ஊடாக, எரிமலை வெடித்துத் தீக்குழம்பு பாய்வது போல ஓடிக்கொண்டிருந்தான். ஒரு சதுக் கத்திற்கு அருகில், நல்ல கட்டுமஸ்தான உடலைக் கொண்ட ஒரு சீக்கிய இளைஞனைப் பார்த்தான். அவ னைத் தாக்கிய வேகத்தில் அவன் புயலின் வேகத்திற்கு ஈடு கொடுக்க முடியாத மரம் வேரோடு சாய்வது போல உயிரற்ற உடலாய்க் கீழே விழுந்தான்.

காசிமின் நரம்புகளில் ஓடிக்கொண்டிருந்த இரத்தம் இன்னும் கொதித்துக்கொண்டிருந்தது. தொலைவில், தெருவிற்கு எதிர்ப்பக்கமாய், சில மனிதர்களைப் பார்த் தான். அம்பு போல அவர்களை நோக்கிப் பாய்ந்தான். இவனைப் பார்த்தவுடன் அவர்கள், 'ஹர் ஹர் மகாதேவ்' என்று கோஷமிட்டார்கள். அதற்குப் பதிலாக காசிம் படு கேவலமான வசவுகளை அவர்கள் மீது கொட்டித், தன் கோடாலியை உயர்த்திப் பிடித்து அவர்களைத் தாக்கத் தொடங்கினான்.

சில நிமிடங்களில் மூன்று உடல்கள் உயிரற்றுத் தெருவில் கிடந்தன. மற்றவர்கள் ஓடிப்போய் விட்டார் கள். காசிமின் கோடாலி சுழன்றுகொண்டே இருந்தது. அவனின் கண்கள் மூடி இருந்தன. திடீரென்று ஒரு பிணம் தடுக்கிக் கீழே விழுந்தான். அவன் தாக்கப்படு வதாக நினைத்துக்கொண்டான். அவன் வசவுகளைக் கொட்டிக்கொண்டே, "என்னைக் கொல்லுங்கள்... என் னைக் கொல்லுங்கள்..." என்று கத்தினான். அவன் மீது எந்த அடியும் விழவில்லை. அவனின் குரல் வளையை நோக்கி எந்தக் கையும் நீளவில்லை. அவன் தன் கண் களைத் திறந்து பார்த்தான். தெருவில் அவனையும் மூன்று உயிரற்ற உடல்களையும் தவிர வேறு யாரும் இல்லை.

ஒரு கணப்பொழுது, காசிம் ஏமாற்றத்தை உணர்ந் தான். அவன் சாகவே விரும்பினான். அந்தக் கணத்தில் ஷரிபானின் நிர்வாண உடல் மீண்டும் அவன் கண்களில் தோன்றியது. உருகிய ஈயம் போல அது அவனைத் தாக் கியது. அவனின் உடம்பு, வெடிப்பதற்குத் தயாராயிருந்த வெடிமருந்துப் பெட்டி போல இருந்தது. அவன் எழுந்து கோடாலியை எடுத்துக் கொண்டு, மீண்டும் தெருவில் நடக்கத் தொடங்கினான்.

காசிம் சென்ற எல்லா பஜார்களும் வெறிச்சோடிக் கிடந்தன. அவன் நுழைந்த ஒரு சந்தில் முசல்மான்கள் வசித்து வந்தார்கள். எரிச்சலோடு அவன் வேறு திசை யில் நடக்கத் தொடங்கினான். ஒரு பஜாரை அடைந்த வுடன், கோடாலியை உயர்த்திப் பிடித்துத் தாறுமாறாய் சுழற்றி, உரத்த வசவுகளைக் கொட்டத் தொடங்கினான். அவனுக்குத் தெரிந்த எல்லா வசவுகளையும் கொட் டித் தீர்த்தான். பிறகு ஹிந்தியில் பெயர்ப் பலகையைக் கொண்டிருந்த ஒரு வீட்டை நோக்கி நகர்ந்தான்.

கதவு உள்பக்கமாய்த் தாழிடப்பட்டிருந்தது. பைத்தி யம் பிடித்தவன் போல், காசிம் தன் கோடாலியைச் சுழற் றினான். வெகு சீக்கிரத்தில் கதவு பெயர்ந்து விழுந்தது. காசிம் உள்ளே சென்றான். அது சிறிய வீடு. வறண்டு போன தன் வாயிலிருந்து வலுக் கட்டாயமாக வசவுக ளைக் கொட்டி, "வெளியே வா..." என்று கத்தினான்.

முற்றத்தில் கதவுக்குப் பின்னால் ஏதோ நகர்வது போல் இருந்தது. காசிம் தொடர்ந்து வசவுகளைக் கொட்டிக்கொண்டே இருந்தான். கதவு திறக்கப்பட்டது. ஒரு பெண் தோன்றினாள். அவன் கர்ஜித்தான், "யார் நீ?".

வறண்டு போன தன் உதடுகளை நாக்கால் ஈரப்ப டுத்திக்கொண்டு அந்தப் பெண் சொன்னாள், "இந்து" அவனின் கண்கள் கனலைக் கக்கிக் கொண்டிருந்

தன. அவன் அந்தப் பெண்ணைப் பார்த்தான். அவளின் வயது பதினான்கு, பதினைந்தைக் கடந்திருக்காது. பிடித்திருந்த கோடாலியைக் கீழே போட்டு விட்டு அந் தப் பெண் மீது கழுகு போல் பாய்ந்து, அவளை உள்ளே இழுத்துச்சென்றான். இரண்டு கைகளாலும் அவளின் ஆடைகளைக் கிழித்தெறியத் தொடங்கினான். கிழிக் கப்பட்ட துண்டுத் துணிகள், தீ வைக்கப் பட்ட பஞ்சு போல் எங்கும் பறந்துகொண்டிருந்தன.

காசிம் ஏறக்குறைய அரைமணி நேரம் எடுத்துக் கொண்டான் - பழி வாங்குவதற்கு. அந்தப் பெண் எந்த எதிர்ப்பும் காட்டவில்லை. அவள் தரையில் விழுந்த உடனேயே, தன் நினைவுகளை இழந்து விட்டாள்.

காசிம் தன் கண்களைத் திறந்த போது, தன்னுடைய இரண்டு கைகளும் அவளின் கழுத்தில் மிக ஆழமா கப் பதிந்திருப்பதைக் கண்டான். ஓர் அதிர்வோடு பின் னுக்கு நகர்ந்து, எழுந்து கொண்டான். வியர்வையில் மூழ்கியிருந்த அவன், ஊர்ஜிதப் படுத்திக்கொள்ள அந் தப் பெண்ணை மறுபடியும் பார்த்தான்.

அந்தப் பெண்ணின் உயிரற்ற உடல் ஓர் அடி தள் ளிக் கிடந்தது - நிர்வாணமாய்... முழு நிர்வாணமாய்... நல்ல நிறத்தில் சிறப்பாக உருவாகியிருந்தது அந்த உடல். சிறிய மார்பகங்கள் கூரையை நோக்கிக் கிடந் தன. காசிமின் கண்கள், உடனடியாக மூடிக் கொண்டன. இரண்டு கைகளாலும் தன்னுடைய முகத்தை மறைத் துக்கொண்டான். சூடாக இருந்த அவனின் உடல் வியர்வை இப்போது சில்லிட்டுக்கிடந்தது. அவனின் உடலில் இருந்த வெப்பம் மறைந்து விட்டது.

சிறிது நேரம் கழித்து ஒரு மனிதன் அந்த வீட்டிற்குள் நுழைந்தான். அவனின் கையில் வாள் ஒன்று இருந் தது. அவன் முற்றத்தில் யாரோ, எதையோ போர்வை கொண்டு மூடுவதைப் பார்த்தான். அவன் கத்தினான்,

"யார் நீ?". காசிம் அதிர்ந்து போனான். அவனின் கண்கள் திறந்திருந்தாலும் அவனால் எதையும் பார்க்க முடிய வில்லை. கையில் வாளைப் பிடித்திருந்த அந்த மனிதன் கத்தினான், "காசிம்...!". காசிம் அந்த மனிதனை நினை வில் கொண்டு வர முயன்றான். ஆனால் அவனின் கண் கள் ஒத்துழைக்க மறுத்தன.

"நீ இங்கு என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" வாளைப் பிடித்திருந்த அந்த மனிதன் நடுங்கிக் கொண்டே கேட்டான். காசிம் போர்வையை நோக்கிக் கையை நீட்டி, "ஷரிபான்...." என்று அவன் சொன்ன போது அவனின் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது.

ஆயுதம் தாங்கியிருந்த அந்த மனிதன் போர்வையை விலக்கப் பாய்ந்தான். அந்த நிர்வாண உடலைப் பார்த் தவுடன் அவனின் கண்கள் மூடிக் கொண்டன. அவன் பிடித்திருந்த வாள் அவன் கையில் இருந்து நழு விக் கீழே விழுந்தது. அவன் வீட்டை விட்டுக் கத்திக் கொண்டே வெளியே ஓடினான். "பிம்லா... பிம்லா..."

***



## ஜுபைதா

ஜுபைதாவுக்குத் திருமணம் ஆன போது அவளுக்கு வயது இருபத்தைந்து. முன்னதாகவே அவளுக்குத் திரு மணம் செய்து வைக்க அவளின் பெற்றோர் முயற்சித் தாலும், அவளுக்கு ஏற்றாற்போல் மாப்பிள்ளை கிடைக் காததால் முயன்றதெல்லாம் வீணாய்ப் போயிற்று. வேறு வழியில்லாமல் தன்னுடைய முதல் மனைவியை இழந்த ஒருத்தருக்கு இரண்டாம் தாரமாக மணம் முடித்து வைக்க ஒத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. அவனுக்கு வயது ஏறக்குறைய முப்பதைந்து இருக்கும். ஒரு வேளை கூடவும் இருக்கலாம். ஆனாலும் வசதியான நிலையில் இருந்தான். அவனின் மொத்த வியாபாரத் துணிக்கடை யில் இருந்து மாதத்திற்கு அறுநூறு ரூபாய்க்கு மேல் வந்தது. மரபு ரீதியாக வளர்க்கப்பட்ட பெண் என்பதால் ஜுபைதா தன்னுடைய பெற்றோரின் முடிவை ஏற்றுக் கொண்டாள்.

அவளின் திருமண வாழ்க்கை வெற்றிகரமாக அமைந்தது. இலுமுதீன் - அவளின் கணவன், அவள் மீது அதிக ஈடுபாடு கொண்டு நல்ல முறையில் நடத்தி வந்தான். துணி பற்றாக்குறையாக இருந்த மோசமான காலங்களில் கூட அவளுக்கு வேண்டியதும், அதற்கு மேலும் கிடைத்தது. மிகவும் ஆடம்பரமான பொருட்க ளைக் கூட அவள் கேட்க வேண்டும், அவ்வளவுதான்.

ஜுபைதா ஒவ்வொரு வாரமும் அவளின் பெற்றோர் வீட்டிற்குப் போய் வந்தாள். ஒரு நாள் அவள் வந்திருந் தபோது, அவளின் தந்தைக்குத் திடீரென்று மாரடைப்பு

ஏற்பட்டு இறந்து போனார். அழுகைகளும் கதறல்களும் வீடு முழுக்க ஆக்கிரமித்துக் கிடந்தன. அவளின் தாயைப் பார்த்துக்கொள்ள, ஒரு வயதான வேலைக்காரனைத் தவிர வேறு யாரும் இல்லை. தன் கணவரிடம் தன்னுடைய தாயை நம்மோடு தங்கியிருக்கச் சொல்லலாமா என்று கேட்டாள். இலுமுதீன் அதற்கு உடனடியாகச் சம்மதம் கொடுக்க, அவளின் தாய் இவர்கள் வீட்டிற்கு வந்தார்.

இலுமுதீன் அவன் வீட்டில் தங்கியிருக்க தனக்கு அனுமதி கொடுத்ததற்கு அவளின் தாய் மிகுந்த நன்றியுணர்வு கொண்டிருந்தார். அவன் அன்போடும் அரவணைப்போடும் இருந்தான். சில ஆயிரம் ரூபாய்கள் மதிப்புள்ள தன்னுடைய நகைகளை எல்லாம் அவனுக்குக் கொடுத்து, அதை வைத்துத் தொழிலை மேலும் விருத்தி செய்யச் சொல்லலாம் என்று பலமுறை நினைத்தார். ஆனால் இந்த எண்ணம் எப்போதும் செயல் வடிவம் பெறவில்லை. ஒருவேளை உடன் பிறந்துவிட்ட கஞ்சத்தனம் காரணமாக இருந்திருக்கலாம். ஒரு நாள் அவர் ஜுபைதாவிடம், "நான் இந்த வீட்டில் பத்து மாதத்திற்கு மேலாகத் தங்கியிருக்கிறேன் என்றாலும் ஒரு நயா பைசா கூட செலவு செய்யவில்லை. உன்னுடைய அப்பா பத்தாயிரம் ரூபாயும், அதற்குச் சமமான நகைகளையும் விட்டுச் சென்றுள்ளார். நான் பல முறை அதை இலுமுதீனிடம் கொடுக்கலாம் என்று நினைத்தேன். ஆனால் என்னுடைய பேரப்பிள்ளைக்காக அதை எல்லாம் சேமித்து வைத்திருக்கிறேன்" என்றாள். ஜுபைதாவுக்குத் திருமணம் ஆகி இரண்டு வருடங்கள் ஆகிவிட்டது என்றாலும் குழந்தை பிறப்பதற்கான அறிகுறிகள் ஏதும் தென்படவில்லை. இது அவளின் தாயை மிகவும் கவலை கொள்ளவைத்தது. ஜுபைதா பல மந்திரவாதிகளிடம் அழைத்துச் செல்லப்பட்டாள். எல்லாவிதமான மருந்துகளும் முயன்றுப் பார்க்கப்பட்டன. எதுவும்

பலன் தரவில்லை. அதனால் ஜுபைதா இந்த விசயத் தில் சலிப்புற்றுப் போனாள். அவள், "தயவு செய்து இதை மறுபடியும் தொடங்க வேண்டாம். நான் ஏற்கனவே அனு பவித்ததெல்லாம் போதாதா?" என்றாள். அவளின் தாய் கடிந்துகொண்டாள், "ஜுபைதா ஏன் புரிந்துகொள்ள மாட்டேன் என்கிறாய்?. ஒரு குழந்தைதான் ஒரு பெண் ணின் மொத்த இருப்பின் அடையாளம்" என்றார். ஜுபைதா, அதற்கு, "குழந்தை பெற்றுக்கொள்ளாததற்கு நானா காரணம்?" என்று கேட்டாள். "அது யாருடைய தவ றும் இல்லை" என்று சொன்ன அவளின் தாய், மேலும் ஜுபைதா குழந்தை வேண்டும் என்று கடவுளிடம் பிரார்த் தனை செய்யாததைப் போல, "அது கடவுளின் கருணை யைத் தவிர வேறு எதுவும் இல்லை" என்றார். ஜுபைதா தொடர்ந்து ஈடுபாட்டோடு பிரார்த்தனைகள் செய்து கொண்டுதான் இருக்கிறாள். ஆனாலும் அந்தப் பிரார்த் தனைகளும் எந்தப் பயனும் அற்றுப் போயின. அவளின் தாய் அடிக்கடி இந்த விசயத்தை நினைவூட்ட, அவள் 'தான் வறட்டு நிலம்' என்றும் வறட்டு நிலமாகவே இருக்க சபிக்கப்பட்டவள் என்றும் நினைக்கத் தொடங்கினாள்; அதில் ஓர் உயிர் கூட பூத்துக் குலுங்காது என்று நினைத் தாள். அவள் பலவிதமான கனவுகளைக் காணத் தொடங்கினாள். பாலைவனத்தில் கையில் குழந் தையை ஏந்திக் கொண்டிருப்பது போல் கண்டாள். திடீ ரென்று ஆகாயத்தில் இருந்து எவரோ அதைப் பிடுங்கிக் கொண்டு போனது போல, அந்தக் குழந்தை காணாமல் போகும். சில சமயங்களில் அவள் உயிருள்ள மற்றும் உயிரற்ற குழந்தைகளின் உடல்களைக் கொண்டு செய் யப்பட்ட கட்டிலில் படுத்திருப்பது போல கனவு கண் டாள். நாட்கள் நகர நகர அவளின் நிலைமை மேலும் மேலும் மோசமானது. திடீரென்று குழந்தை அழும் சத் தம் கேட்க அவள் தன் தாயிடம், "யாருடைய குழந்தை அழுது கொண்டிருக்கிறது?" என்று கேட்பாள். அவளின்

தாய் உற்றுக் கேட்பார். எந்தச் சத்தங்களும் அவர் காதில் விழாது. ஜுபைதா, ஒரு குழந்தை அழுதுகொண்டு தான் இருக்கிறது என்று தீர்மானமாய்ச் சொல்வாள். இத்தோடு நிற்காமல், குழந்தை அழுது அழுது செத்துப் போகப்போகிறது என்பாள். அவளின் தாய், "ஒன்று நான் செவிடாக இருக்க வேண்டும். இல்லை நீ விசயங்களைக் கற்பனை செய்துகொண்டிருக்க வேண்டும்" என்பாள். ஜுபைதா அமைதியாகிப் போவாள். ஆனாலும் பிறந்த குழந்தைகளின் அழுகை அவளைத் துரத்திக் கொண்டே இருந்தது. அவளுக்காக அழைப்பு விடுப்பது போல அவளின் காதுகளில் எதிரொலித்துக் கொண்டேயிருந்தது. சில சமயங்களில் அவளின் மார்பகங்களில் பால் சுரப்பது போல் நினைத்தாள். இதை அவளின் தாயிடம் சொல்லவில்லை என்றாலும் அடிக்கடி தன்னுடைய ரவிக்கையை அவிழ்த்துப் பார்ப்பாள். அவளின் மார்பகங்கள் வீங்கிக் கிடந்தன. காலத்தின் ஓட்டம் அவளின் நிலைமையை மிக மோசமாக்கியது. குழந்தைகள் தெருவில் விளையாடும் சத்தத்தைக் கேட்டால், அவர்களின் கழுத்தை இறுக்க வேண்டும் போல் உணரத் தொடங்கினாள்.

குழந்தை இல்லாததைப் பற்றி அவளின் கணவன் எந்தக் கவலையும் கொள்ளவில்லை. அவனின் வியாபாரம் காரணமாக இதைப் பற்றி எல்லாம் சிந்திப்பதற்கு நேரமில்லாமல் போயிருக்கலாம். துணி விலை உயர்ந்து கொண்டே இருந்தது. அவன் புத்திசாலியான வியாபாரி என்பதால், நிறைய சரக்கை முன்கூட்டியே வாங்கி வைத்திருந்தான். அதனால் அவனின் வருமானம் ஏறக்குறைய இரண்டு மடங்காயிற்று. ஆனால் இந்தச் செல்வச் செழிப்பு எதுவுமே

ஜுபைதாவுக்குச் சந்தோசத்தைக் கொடுக்கவில்லை. அவளின் கணவன் கட்டுக்கட்டாய் ரூபாய்

நோட்டுக்களைக் கொண்டு வந்து கொடுப்பான். குழந் தையைத் தூங்க வைப்பது போல அதை எல்லாம் அவ ளின் மடியில் வைப்பான். அவள் அதை எல்லாம், குழந் தையைக் கட்டிலில் படுக்க வைப்பது போல எடுத்து வைப்பாள். ஒரு நாள் சில ரூபாய் நோட்டுகள் பால் பாத் திரத்தில் இருப்பதை இலுமுதீன் பார்த்தான். ஜுபைதா விடம் அது எப்படி அங்கு வந்தது என்று கேட்டான். அவள், "இந்தக் குழந்தைகள் ரொம்ப அட்டகாசம் செய் கிறார்கள், அவர்கள் அதை அங்கே போட்டிருக்க வேண் டும்" என்று பதில் தந்தாள். இலுமுதீன் அதிர்ச்சியுற்று, "என்ன? குழந்தைகளா!" என்றான். "இங்குக் குழந்தை கள் எங்கே இருக்கிறார்கள்?" என்று மேலும் கேட்க, ஜுபைதா அதிர்ச்சியுற்று, "நீங்கள் என்ன பேசிக்கொண் டிருக்கிறீர்கள்?. நம்முடைய குழந்தைகள். அவர்கள் பள் ளிக்கூடத்தில் இருந்து திரும்பும் நேரமாயிற்று. இதை யார் செய்தது என்று நான் கேட்கிறேன்" என்றாள். இலு முதீன் தன்னுடைய மனைவியின் நிலை மோசமாகிக் கொண்டிருப்பதை உணர்ந்து, இந்த விசயத்தை தனக் குள் வைத்துக்கொண்டான். ஆனாலும் அவளுக்கு எப் படி உதவி செய்ய முடியும் என்று மேலும் கவலை கொள் ளத் தொடங்கினான். அவளுக்கு மிக உதவியாக இருந் திருக்கக் கூடியது, அவனின் சக்திக்கு அப்பால் இருந் தது. நண்பர்களோடு ஆலோசித்துப் பார்த்தான். அவர்க ளுக்கும் எந்த வழியும் தெரியாமல், அவளை மனநலக் காப்பகத்தில் விட்டு விடுமாறு அறிவுரை சொன்னார் கள். இலுமுதீனுக்கு இந்தச் சிந்தனை மிகக் கொடூரமா னதாக இருந்தது. அவன் கடைக்குப் போவதை நிறுத் திக் கொண்டு, அவளைப் பார்த்துக்கொள்ள வீட்டி லேயே தங்கியிருந்தான். இந்தத் தொடர்ந்த கவனிப்பு ஜுபைதாவைச் சற்றுத் தேற்றியிருந்ததாலும், அவள் வியாபாரத்தைப் பற்றிக் கவலைப்படத் தொடங்கினாள். வியாபாரப் பொறுப்புகள் கொடுக்கப்பட்ட வேலையாட்

கள் ஏமாற்றிக்கொண்டிருப்பார்கள் என்று தீர்மானமாய் நம்பினாள். அவள் அடிக்கடி, "நீங்கள் ஏன் கடைக்குப் போவதில்லை?" என்று கேட்டாள். அதற்கு இலுமுதீன், "நான் இத்தனை வருடங்களாக மிகக் கடினமாக உழைத்து விட்டேன். எனக்கு இப்போது சற்று ஓய்வு தேவை" என்று பதில் தந்தான். "அப்போது யார் கடையைப் பார்த்துக்கொள்கிறார்கள்?" என்று விசாரித்தாள். இலுமுதீன் கடையைப் பார்த்துக் கொள்கிறவன் அப்பழுக்கற்றவன் என்றும் நேர்மையானவன் என்றும், கடையைப்பற்றி அவள் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை என்றும் சொன்னான். அதற்கு ஜுபைதா, "நான் எப்படிக் கவலைப்படாமல் இருக்க முடியும்? இந்த வேலைக்காரன் நம் பணத்தையெல்லாம் சுருட்டிக் கொண்டால், என் பிள்ளைகளின் எதிர்காலம் என்னவாகும்?" என்று கேட்டாள். அவள் இது போல் பேசுவதைக் கேட்கும் போது இலுமுதீனால் தன்னுடைய கண்ணீரை அடக்கிக்கொள்ள முடியவில்லை. எப்போதும் இருண்டு கிடக்கும் சிறைகளில் கூட சில சமயங்கள் சூரிய ஒளிக் கீற்றைக் காண முடியும்? ஆனால் அவன் இருந்த சிறையில் நிரந்தரமான இருட்டே விதிக்கப்பட்டது போல் அதில் வெறுமையும் இருளையும் தவிர வேறெதுவும் இல்லை. ஜுபைதா அவளுடைய கற்பனைக் குழந்தைகளுக்குத் துணிகள் தைக்கத் தொடங்குவாள் அல்லது அவர்களின் காலுறையைத் துவைத்து வைப்பாள் அல்லது அவர்களுக்குப் பருத்தி ஆடை தைக்கத் தொடங்குவாள். சில சமயம் இலுமுதீனிடம் அவர்களுக்காக ஷூ வாங்கி வரச் சொல்லி ஒவ்வொரு நாளும் காலையில் பளபளவென்றிருக்குமாறு பாலீஷ் போட்டுக்கொண்டிருப்பாள். இதை எல்லாம் பார்த்த இலுமுதீன் அழத் தொடங்கினான். ஓர் ஆண் மட்டுமே அழ முடிந்தது போல அழுதான். இந்தத் தண்டனைக

ளுக்கெல்லாம் என்ன பாவம் செய்தேனோ என்று வியக்கத் தொடங்கினான்.

இலுமுதீன் ஒரு நாள் அவனின் நண்பனைச் சந்தித்தான். அவனின் நண்பன் ஒரு பிரச்சனையோடு வந்திருந்தான். அவனோடு நெருங்கியிருந்த ஒரு பெண் கருவுற்றிருக்கிறாள். கருக்கலைப்பிற்கான எல்லா முயற்சிகளும் தோற்றுப் போயின. இலுமுதீன் இதில் நம்பிக்கை ஒளிக்கீற்றைக் கண்டான். அவன் அந்த நண்பனிடம், "கருக்கலைப்புக்கு மேலும் முயலாதே. அந்தக் குழந்தை பிறக்கட்டும். நான் உன்னிடம் இருந்து அதை எடுத்துக் கொள்கிறேன்" என்றான். குழந்தை பிறப்பதற்கு இன்னும் ஒரு மாதமோ அதற்கு மேலோ இருந்தது. இலுமுதீன் ஜுபைதாவிடம் அவள் கருவுற்றிருக்கிறாள் என்று சொல்லத் தொடங்கினான். அதற்கு ஜுபைதா, "எனக்கு இதற்கு மேலும் குழந்தைகள் வேண்டாம். நமக்குப் போதுமான அளவிற்கு இருக்கிறார்கள்" என்று பதில் தந்தாள். இலுமுதீன் அமைதியாக இருந்தான்.

ஓர் இரவு அவள் தூங்கிக்கொண்டிருந்தபோது, குழந்தையைத் தூக்கி வந்து கட்டிலில் அவளுக்கு அருகில் வைத்தான். பிறகு, அவளை எழுப்பி, "ஜுபைதா இங்கே பார், உனக்குப் பக்கத்தில் என்ன இருக்கிறது என்று பார்" என்றான்.

ஜுபைதா திரும்பிக் குழந்தையைப் பார்த்தவுடன் சந்தோசத்தால் பூரித்துப்போனாள். "இது எப்போ வந்தது?" என்று கேட்டாள். "காலை ஏழு மணிக்கு" என்றான் இலுமுதீன். "ஆச்சர்யமாக இருக்கிறது. எனக்குத் தெரியவே இல்லை" என்றவள், மேலும், "வலியில் நான் மயக்கம் அடைந்திருக்க வேண்டும்" என்று விளக்கமும் கொடுத்தாள். இலுமுதீன் தலையசைத்தான்.

அடுத்த நாள் இலுமுதீன் அவளின் அறைக்குச் சென்றபோது, ஜுபைதாவின் உடலிலிருந்து ஏராளமான இரத்

தம் வழிந்து கொண்டிருப்பதைக் கண்டான். அவன் சவரம் செய்யும் கத்தியைக் கொண்டு, கோபத்தில் தன் மார்பகங்களை வெட்டிக்கொண்டிருந்தாள். இலுமுதீன் பாய்ந்து சென்று அந்தக் கத்தியைப் பிடுங்கினான். "என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று கத்தி னான். அவள் தனக்குப் பக்கத்தில் இருந்த குழந்தை யைக் காட்டி, "இரவு முழுக்க இது அழுது கொண்டே இருந்தது, ஆனால் இந்தப் பாழாய்ப் போன மார்பகங்க ளில் பால் ஏதும் இல்லை. இது இருப்பதனால் என்ன பயன்?" என்று சொல்லி இரத்தம் வழிந்துகொண்டிருந்த தன் விரலை உயர்த்தி குழந்தையின் வாயில் வைத்தாள். பிறகு அவள் உறங்கிப்போனாள் - நிரந்தரமாக!

***



# கழுவேற்றப்படுதல்

காஷ்மீருக்கு ஜம்முதாவி வழியாகப் போகும்போது, குட் என்ற இடத்தைக் கடந்த பின் பட்டோட் என்ற ஒரு மலைக் கிராமத்தைக் கடந்து செல்ல வேண்டும். மிகவும் ரம்யமான அந்தக் கிராமத்தில் காச நோயாளி களுக்கு என்று சிறிய மருத்துவமனை ஒன்று இருந்தது. எட்டு அல்லது ஒன்பது வருடங்களுக்கு முன்பு, நான் அங்கு மூன்று மாதங்களைக் கழித்திருக்கிறேன். என் னுடைய இளமைக்கால காதல் சாகசம் ஒன்று அந்த இடத்தோடு சம்பந்தப்பட்டிருந்தது. ஆனால் இந்தக் கதை எந்த விதத்திலும் என் பலவீனத்தைப் பற்றியது இல்லை.

ஆறு அல்லது ஏழு மாதங்களுக்கு முன்பு, காச நோய் மருத்துவமனையில் மரணத்தின் விளிம்பில் இருந்த என் நண்பனின் மனைவியைப் பார்க்க நான் பட்டோட் சென்றிருந்தேன். நான் போய்ச் சேர்ந்த உடனே ஒரு நோயாளி இறந்து போனார். பாவம் பத்மா - எப்படி இருந் தாலும் மூச்சு விடுவதில் மிகவும் சிரமப்பட்டுக்கொண் டிருந்த அவள் மேலும் மோசமானாள். என்னால் அதற் கான காரணத்தைச் சொல்ல முடியவில்லை என்றாலும், நான்கு நாட்களுக்குள் அந்தச் சிறு மருத்துவமனையில் ஒன்றன் பின் ஒன்றாக மூன்று மரணங்கள் நிகழ்ந்ததை எதேச்சையானது என்றுதான் சொல்ல வேண்டும். ஒரு கட்டில் காலி செய்யப்பட்ட உடன் அந்த நோயாளியைக் கவனித்துக்கொண்ட சுற்றத்தாராலும், உறவினர்களா லும் எழுப்பப்படும் அந்தக் கதறலையும் அழுகையை

யும் ஒருவனால் கேட்க முடிந்தது. விசித்திரமான சோகம் அந்த மருத்துவமனையின் மீது கவிழ, உயிரை ஒரு மெல்லிய நூலில் பிடித்துத் தொங்கிக் கொண்டிருந்த மற்ற நோயாளிகள் அந்தச் சோகத்தால் விழுங்கப்பட்டார்கள். என் நண்பனின் மனைவி பத்மா ஏறக்குறைய உயிரற்றுக் காணப்பட்டாள். அவளின் உதடுகளில் மரணத்தின் பயம் தென்படத் தொடங்கியது. ஆழத்தில் இருந்த அவளின் கண்கள் சோகத்தோடு அனுதாபத்தை வேண்டி நின்றன. முன்னே பயம் கொண்ட 'ஏன்' நின்றது. அதற்குப் பின்னால் பல கோழைத்தனமான 'வேண்டாம்' இருந்தன.

மூன்றாவது நோயாளியின் மரணத்திற்குப் பிறகு நான் வராந்தாவிற்குச் சென்று வாழ்வு மற்றும் சாவு பற்றி சிந்திக்கத் தொடங்கினேன். இந்தக் காச நோய் மருத்துவமனை ஒரு பாத்திரத்தில் உள்ள ஊறுகாய் போலவும், அதில் உள்ள நோயாளிகள் வினிகரில் ஊறிக்கொண்டிருக்கும் வெங்காயம் போலவும் ஒரு கரண்டி உள்ளே நுழைந்து வெங்காயத்தைத் தேடி அது முழுமையாய் அபகரித்துக் கொண்டு போவது போலவும் இருந்தது. என்ன ஒரு கோரமான உவமை!. இது என் மண்டையில் திரும்பத் திரும்ப ஏன் வருகிறது என்று கடவுளுக்குத் தான் தெரியும். மரணம் ஒரு கோரமான விசயம் என்பதைத் தவிர வேறு எதையும் என்னால் சிந்திக்க முடியவில்லை. நீ திடமாகவும், ஆரோக்கியமாகவும் இருக்கிறாய். திடீரென்று எங்கிருந்தோ ஒரு நோய் வருகிறது, உன்னை இறுக்கிப் பிடித்துக்கொள்கிறது, நீ இறந்து போகிறாய். ஓர் எழுத்தாளன் என்ற முறையில் கூட கதைக்கான இந்த முடிவு சுவாரசியம் இல்லாமல் தான் இருக்கிறது.

வரந்தாவில் இருந்து எழுந்து நான் உள்ளே சென்றேன். நான் அதிகபட்சம் பத்து அல்லது பதினைந்து

அடிகள் வைத்திருப்பேன், என் பின்னால் இருந்து யாரோ இப்படிச் சொல்வதைக் கேட்டேன், "அப்ப நீ நம் பர் 22ஐ புதைத்துவிட்டாய்?".

நான் திரும்பிப் பார்த்தேன். கட்டிலில் வெள்ளை விரிப்புகளுக்கு ஊடே இரண்டு கருப்புக் கண்கள் சிரித் துக்கொண்டிருந்தன. நான் பின்னர் தெரிந்து கொண் டேன் - அதனோடு வழியில் மிக ஆர்வத்தோடு மர ணத்திற்காகக் காத்துக்கொண்டிருந்த அந்தக் கண்கள் ஒரு வங்காளிப் பெண்ணுக்குச் சொந்தமானவை. 'அப்ப நீ நம்பர் 22ஐ புதைத்துவிட்டாய்?' என்று அவர் கேட்ட போது, நாங்கள் புதைத்தது ஒரு மனிதனை இல்லை, ஒரு எண்ணைத்தான் என்பது போலவே உணர்ந்தேன். உண்மையைப் பேசுவது என்றால் உயிரற்ற அந்த உடல் சடங்கு முறையோடு சவக்குழிக்குள் அனுப்பப்பட்ட போது இறந்து போனவன் ஒரு மனிதன் தான் என்றோ, அவனின் மறைவால் இந்த உலகத்தில் ஒரு வெற்றிடம் தோற்றுவிக்கப்படுகிறது என்றோ நான் உணரவில்லை. அந்த வங்காளிப் பெண்ணோடு மேலும் பேசுவதற்காக நான் அமர்ந்த போது - மோசமான நோயைக் கொண் டிருந்தபோதிலும், அவரின் கண்கள் பளிச்சென்று பிர காசித்துக்கொண்டிருப்பதைக் கண்டேன். அவர் சொன் னார்: "என்னுடைய நம்பர் 4." கசங்கிக் கிடந்த தன் னுடைய போர்வையைத் தன் கைகளால் இழுத்துவிட் டுக்கொண்டு மிகவும் அந்நியோன்னியமான குரலில், "பிணங்களைப் புதைப்பதில் நீங்கள் அதிக ஈடுபாடுக் காட்டுகிறீர்கள்" என்று சொன்னார்.

நான் தெளிவில்லாத ஒரு பதிலைச் சொன்னேன். "அப்படி இல்லை". அத்தோடு எங்களுடைய உரையா டல் முடிந்தது. நான் என் நண்பனிடம் திரும்பிச் சென் றேன்.

அடுத்த நாள் வழக்கம் போல, நான் நடை போட வெளியே வந்தபோது மெல்லியதாகத் தூறல் போட்டுக் கொண்டிருக்க, அது சூழ்நிலையை மிகவும் ரம்மியமாக்கி இருந்தது. நோயாளிகள் தங்களின் மூச்சுக் காற்று மூலம் கிருமிகளைக் காற்றில் கலக்க விடுகிறார்கள் என்பதைப் பற்றி எந்தக் கவலையும் கொள்ளாதது போல் அவை காட்சி தந்தன. உயரமான பைன் மரங்கள் குன்றை அரவணைத்துக்கொண்டிருக்க, நீலநிறப் பனிமூட்டம், தெருக்களை நோக்கிச் சரிந்து கொண்டிருக்கும் பாறாங்கற்கள், குட்டையாக இருந்தாலும் ஆரோக்கியமான எருமை மாடுகள்... சுற்றிலும் பேரழகு குடிகொண்டிருந்தது. அபகரிக்கப்படும் என்ற பயம் ஏதும் கலக்காத தன்னம்பிக்கை கொண்ட அழகு அது. நான் என் நடையை முடித்துக்கொண்டு மருத்துவமனைக்குத் திரும்பிய போது நோயாளிகளின் சுருண்டு கிடந்த முகங்களைப் பார்த்தபோது மேலும் ஒரு எண் போய் விட்டது என்று நினைத்துக்கொண்டேன். மற்றொரு பொட்டலம் அகற்றப்பட்டு விட்டது. அது எண் 11. அதாவது பத்மா. அவளின் குழி விழுந்த கண்கள் திறந்தே கிடந்தன. அதில் பயம் கொண்ட பல 'ஏன்'களும் கணக்கிலடங்கா கோழைத்தனமான 'வேண்டாம்'களும் உறைந்து கிடப்பதைக் கண்டேன். பரிதாபத்திற்குரிய பெண்மணி.

மழை பெய்து கொண்டிருந்தது. அதனால் காய்ந்த கட்டைகளைப் பொறுக்கி வருவது பிரச்சனையாக இருந்தது. கடைசியாக அந்த உயிரற்ற உடல் தீக்கிரையாக்கப்பட்டது. என் நண்பன் சிதைக்கு அருகில் அமர்ந்து கொண்டிருந்தான். நான் மற்ற விஷயங்களைக் கவனிக்க மருத்துவமனைக்குத் திரும்பி வந்தேன். நான் உள்ளே நுழைந்த உடன் அந்த வங்காளிப் பெண் சொல்வதைக் கேட்டேன். "உங்களுக்கு ரொம்ப நேரம் எடுத்துக் கொண்டு விட்டது."

"ஆமாம்" என்று பதில் தந்தேன். "மழை பெய்ததினால், காய்ந்த கட்டை கிடைக்கவில்லை, அதனால் நேரம் எடுத்துக்கொண்டது."

"மற்ற இடங்களில் விறகுக் கடைகள் உண்டு; ஆனால் இங்கு நாம் தான் மரத்தை வெட்டி எடுத்து வர வேண்டும் என்று கேள்விப்பட்டேன்"

"ஆமாம்"

"தயவு செய்து சற்று நேரம் இப்படி உட்கார்"

அவருக்குப் பக்கத்தில் இருந்த ஒரு ஸ்டூலில் நான் அமர்ந்து கொள்ள, என்னிடம் விசித்திரமான ஒரு கேள்வியை அவர் கேட்டார், "கட்டைக்காக அலைந்திருக்கிறாய். காய்ந்த கட்டை கிடைத்தவுடன் உனக்குச் சந்தோஷமாக இருந்திருக்க வேண்டும்."

அவர் என் பதிலுக்காகக் காத்திருக்கவில்லை, பளபளக்கும் கண்கள் ஊடாக என்னை மிகக் கவனமாகப் பார்த்து. "மரணத்தைப் பற்றி உன்னுடைய அபிப்பிராயம் என்ன?" என்று கேட்டார்.

"அடிக்கடி நான் அதைப்பற்றி சிந்தித்திருக்கிறேன் என்றாலும் என்னால் அதைப் புரிந்துகொள்ள முடியவில்லை" என்றேன்.

அவர் ஒரு ஞானி போல் புன்னகைத்து, குழந்தைத்தனமான குரலில், "என்னால் ஓரளவு அதைப் புரிந்து கொள்ள முடிந்துள்ளது. அதற்குக் காரணம் நான் பல மரணங்களைப் பார்த்திருக்கிறேன். நீ நூறு வயது வாழ்ந்தால் கூட அவ்வளவு மரணங்களை உன்னால் பார்க்க முடியாது. நான் வங்காளத்தைச் சேர்ந்தவள். அதன் பஞ்சம் பிரபலமானது, லட்சக்கணக்கில் மக்கள் இறந்து போனார்கள் என்று நீ அறிந்திருப்பாய். அதைப் பற்றி பல கதைகள் வந்துள்ளன. நூற்றுக்கணக்கான கட்டுரைகள் பிரசுரிக்கப்பட்டுள்ளன. இருந்தாலும் அந்தப் பேரழிவு சரியாக மதிப்பீடு செய்யப்படவில்லை என்றே

சொல்லப்படுகிறது. அந்த மரணச் சந்தையில் நான் மர ணத்தைப் பற்றி சிந்தித்திருக்கிறேன்" என்றார்.

"என்ன முடிவுக்கு வந்தீர்கள்?" என்று கேட்டேன்.

படிப்பறிவு இல்லாதவர் போல் அவர் பதில் தந்தார். "நான் நினைக்கிறேன்; ஒரு மரணம் நிகழும் போது அது மரணமாகிறது. லட்சக்கணக்கான மரணங்கள் நிகழும் போது அது ஒரு 'தமாஷா', பொய்யானது, ஒரு காட்சிப் பொருள். உண்மையைப் பேசுவது என்றால், என்னை மிரட்டிக்கொண்டிருந்த மரணம் பற்றிய பயத்திலிருந்து நான் விடுதலை பெற்றேன். ஒவ்வொரு பஜாரிலும் பத்து, இருபது என்று பிண ஊர்வலங்கள் போய்க்கொண்டி ருந்தால், மரணம் அதன் உண்மையான அர்த்தத்தை இழந்து நிற்காதா? என்னால் புரிந்து கொள்ள முடிந் ததெல்லாம், இத்தனை பெரிய அளவில் மரணங்கள் நிகழும்போது ஒருவர் கண்ணீர் சிந்துவது அர்த்தமற்றது. சொல்லப்போனால் முட்டாள்தனமானது. முதலில் அத் தனை மரணங்கள் நிகழ்வதே, அதன் அளவில் முட் டாள்தனமானது."

நான் உடனடியாகக் கேட்டேன், "யாருடையது?"

"யாருடையதாக இருந்தாலும், முட்டாள்தனம் முட் டாள்தனம் தான். மக்கள் வசித்துக்கொண்டிருக்கும் ஒரு நகரத்தில் குண்டு போட்டால் மக்கள் இறந்துதான் போவார்கள். ஒரு கிணற்றில் விஷத்தை ஊற்றினால், அதிலிருந்து தண்ணீர் எடுத்துக் குடிப்பவர்கள் எல்லாம் இறந்துதான் போவார்கள். பஞ்சம், யுத்தங்கள், நோய் கள் எல்லாமே அபத்தமானவை. இவற்றால் மரணமடை வது கூரை தலையில் விழுந்து மரணம் அடைவது போல அபத்தமானவை. ஆனால் எல்லாவற்றையும் விட உள் ளத்தில் உள்ள உண்மையான ஏக்கங்களை மரணம் கொள்ள வைப்பதுதான் மிகக் கொடூரமானது. ஒரு மனி தனைக் கொலை செய்வது பெரிய விசயம் இல்லை.

ஆனால் அவனின் இயல்பான உணர்வுகளைக் கொல் வது என்பது தான் மிகக் கொடூரமானது."

இதற்குப் பிறகு அவர் சற்று நேரம் அமைதியாக இருந்தார். பிறகு அவர் படுத்திருந்த நிலையை மாற்றிக்கொண்டு, "நான் எப்போதும் இப்படியெல்லாம் சிந்தித்துக் கொண்டிருக்கவில்லை. உன்னிடம் உண்மையைச் சொல்வதென்றால் இப்படிச் சிந்திப்பதற்கெல்லாம் எனக்கு நேரமும் இல்லை, இது போன்ற விசயங்களை என்னால் புரிந்து கொள்ள முடிந்ததும் இல்லை. ஆனால் அந்தப் பஞ்சம் என்னைப் புது உலகிற்குள் விட்டெறிந்தது" என்றார்.

அவர் நிறுத்தி என்னைப் பார்த்தார். அவர் சொன்னதில் சிலவற்றை நான் என் நோட்டில் குறிப்பெடுத்துக் கொண்டிருந்தேன்.

"என்ன எழுதிக்கொண்டிருக்கிறாய்" என்று கேட்டார்.

நான் அவரிடம் உண்மையைச் சொன்னேன். "நான் ஒரு எழுத்தாளன். எனக்குச் சுவாரஸ்யமாகப்படும் விசயங்களை இந்த நோட்டில் குறிப்பெடுத்துக்கொள்வேன்"

"ஓ... அப்படி என்றால் நான் என் முழுக் கதையையும் உன்னிடம் சொல்கிறேன்."

மூன்று மணிநேரம் பலவீனமான குரலில் அவரின் கதையை என்னிடம் சொன்னார். அதை நான் என் வார்த்தைகளில் சொல்கிறேன்.

விவரங்களுக்கு போக வேண்டிய அவசியம் ஏதுமில்லை. வங்காளத்தில் பஞ்சம் பரவி, பெருமளவில் மக்கள் செத்துக் கொண்டிருந்தார்கள். சகினாவின் மாமன் அவளை ஐந்நூறு ரூபாய்க்கு விற்றான். வாங்கியவன் அவளை லாகூருக்கு அழைத்து வந்து ஒரு ஹோட்டலில் தங்க வைத்து அவளைப் பயன்படுத்திப் பணம் சம்பாதிக்க முயற்சி செய்தான். முதல் நபராக வந்தவன்

பார்ப்பதற்கு அழகாகவும், பணக்காரனாகவும் இருந்தான். பஞ்சத்திற்கு முன்னால் உணவுக்கும் உடைக்கும் கவலைப்பட வேண்டிய அவசியம் இல்லாத காலங்களில், இவனைப்போன்ற ஆண்தான் தன்னுடைய கணவனாக வரவேண்டும் என்று கனவு கண்டதுண்டு. ஆனால் இங்கு வியாபாரம் நடத்தப்படுகிறது. நினைத்தாலே உடலை நடுங்க வைக்கக் கூடிய செயலை அவள் செய்ய நிர்பந்திக்கப்பட்டுள்ளாள்.

கல்கத்தாவில் இருந்து லாகூருக்கு அழைத்து வரப்பட்டபோதே, அவளுக்கு என்ன காத்திருக்கிறது என்பதை அறிந்துதான் இருந்தாள். அவள் புத்திசாலியான பெண். அவள் ஒற்றை நாணயம் போல ஒரு கையிலிருந்து மற்றொரு கைக்கு மாற்றப்படுவாள் என்று அவளுக்குத் தெரிந்துதான் இருந்தது. இதை எல்லாம் அவள் அறிந்திருந்தாலும், சிறையில் இருப்பவன் கருணை அடிப்படையில் விடுதலை செய்யப்படுவதற்குச் சாத்தியமே இல்லை என்று உணர்ந்திருந்ததாலும், அதற்காக ஏங்குவதுபோல் ஏதாவது ஓர் அதிசயம் அவளைக் காப்பாற்றி விடும் என்று நம்பிக்கையோடு இருந்தாள். அப்படி அதிசயம் ஏதும் நடக்கவில்லை என்றாலும், அவள் இரும்பு போன்ற திடமான மனதைக் கொண்டிருந்ததாலும், அவளிடம் வந்த அந்த அழகான வாலிபனின் முட்டாள்தனத்தாலும் அவள் ஹோட்டலில் இருந்து ஓடிப்போனாள்.

இப்போது லாகூர் தெருக்களும் அதன் அபாயங்களும் அவளைச் சூழ்ந்திருந்தன. ஒவ்வோர் அடியிலும் ஆண்களின் கண்கள் அவளை வெறித்துப் பார்த்து விழுங்க முயல்வதுபோல் உணர்ந்தாள். அவர்களின் பார்வை அவளை நேராகப் பார்க்கவில்லை என்றாலும், மறைத்து வைக்க முடியாத அவளின் இளமையான உடலை ஏதோ கூரான கருவியை நேராகப் பாய்ச்சு

வது போல அவளுள் ஆழமாய் ஊடுருவியது. அது தங்கமாகவோ, வெள்ளியாகவோ, பவளமாகவோ இருந்திருந்தால் மற்றவர்களின் வெறி பிடித்த பார்வையிலிருந்து மறைத்து வைத்திருப்பாள். ஆனால் அவள் மற்றவர்களால் எளிதாக அபகரிக்கக்கூடியதைப் பத்திரப்படுத்த முயன்றுக் கொண்டிருந்தாள். மூன்று நாட்களுக்கு இங்கே அங்கே என்று அலைந்து கொண்டேயிருந்தாள். பசி அவளுள் அரித்தெடுத்தது அவளின் நரம்புகளை மரத்துப்போக வைத்தது. ஆனாலும் அவள் யாரிடமும் கையேந்தி நிற்கவில்லை. இதைச் செய்வது ஓர் இருட்டறைக்கு இழுத்துச் சென்று ஆடைகளை உரித்தெடுப்பதற்குச் சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொடுக்கும் என்று அஞ்சினாள். கடைகளில் இனிப்புகள் அலங்கரித்து வைக்கப்பட்டிருப்பதைப் பார்த்தாள். மக்கள் குடிப்பதையும் உண்ணுவதையும் பார்த்தாள். ஆனால் அவளுக்கு ஒரு கவளம் சோறு கூட, ஏன் ஒரு அரிசிப் பருக்கை கூட கிடைக்கவில்லை. வாழ்க்கையில் முதல் முறையாக உணவின் முக்கியத்துவத்தை உணர்ந்தாள். முன்னர் உணவு அவளைத் தேடி வந்தது. இப்போது அவள் அதற்காக வெறிபிடித்து அலைந்தாலும் அவளுக்குக் கிடைக்கவில்லை. நான்கு நாள் கொலைப் பட்டினி கிடந்தது; அவளின் கண்களுக்கு அவளைத் தியாகியாக்கினாலும், அது அவள் வாழ்க்கையின் அஸ்திவாரத்தை ஆட்டிப் பார்த்தது. தியாகியான திருப்தி ஒரு கட்டத்தில் சுருங்கத் தொடங்கியது.

நான்காவது நாள் மாலையில், ஒரு தெருவில் நடந்து கொண்டிருந்தபோது, கடவுளுக்குத்தான் தெரியும் அவள் மண்டைக்குள் என்ன புகுந்தது என்று, சட்டென்று ஒரு வீட்டிற்குள் நுழைந்தாள். அவள் உள்ளே நுழைந்த போதுதான் பிடிபட்டால் இத்தனை நாட்கள் அனுபவித்தது எல்லாம் வீண் போகுமே என்று பயந்தாள். ஆனால் அவளிடம் சக்தி ஏதும் மிஞ்சியிருக்

கவில்லை. இத்தகைய சிந்தனையில் மூழ்கியபடியே அவள் அந்த வீட்டின் முற்றத்தை அடைந்தாள். அரை குறை வெளிச்சத்தில் அலமாரியில் இரண்டு தண் ணீர்ப் பானைகளைப் பார்த்தாள். அதற்குப் பக்கத்தில் இரண்டு பெரிய தட்டில் ஆப்பிள், மாதுளம் பழம், பேரிக் காய் எல்லாம் இருந்தன. மாதுளம் பழம் பயனற்றது. ஆப்பிளும் பேரிக்காயும் தேவலாம் என்று நினைத்தாள். தண்ணீர்ப் பானைகளின் மேல் ஒரு சின்ன பாத்திரம் இருந்தது. அதன் மூடியைத் திறந்தபோது அந்தப் பாத்தி ரம் முழுக்க ஐஸ்கிரீம் இருப்பதைப் பார்த்தாள். ஏதேனும் சிந்திப்பதற்குள் அதை எடுத்து விழுங்கத் தொடங்கி னாள். ஐஸ்கிரீம் முழுக்க இப்போது அவளின் வயிற் றுக்குள் இருந்தது. என்ன ஒரு சுகம். எவருடைய வீட் டிற்குள்ளோ அத்துமீறி நுழைந்திருக்கிறோம் என்பதை மறந்து விட்டாள். ஆப்பிள்களையும் பேரிக்காயையும் உண்ணத் தொடங்கினாள். அலமாரியில் வேறு ஏதோ ஒன்றும் இருந்தது. அந்த சூப் சில்லிட்டுக் கிடந்தாலும் அது இருந்த பாத்திரத்தை முழுமையாகக் காலி செய் தாள்.

திடீரென்று அவளுக்குத் தலைச் சுற்றத் தொடங்கி யது. அவள் எழுந்து கொண்டாள். எங்கிருந்தோ எவரோ இருமும் சத்தம் கேட்டது. அவள் ஓட முயன்றாள். ஆனால் தலைச்சுற்றல் அவளைக் கீழே தள்ளிவிட, மயங்கி விழுந்தாள்.

அவள் தன் நினைவுகளைத் திரும்பப் பெற்றபோது மிக சுத்தமான கட்டிலில் படுத்திருப்பதை உணர்ந்தாள். மறுபடியும் கெட்ட எண்ணங்கள் கொண்ட மனிதர்களி டம் சிக்கிக் கொண்டு விட்டதாகவே முதலில் நினைத் தாள். அவள் மேலே சிந்திப்பதற்குள், அங்கு மறுப டியும் மெல்லியதான இருமல் சத்தத்தோடு எலும்புக ளைக் கொண்ட பை ஒன்று அறைக்குள் நுழைந்தது.

பெரும் பஞ்சத்தின் போது சகினா அவளின் கிராமத்தில் பசியினால் பாதிக்கப்பட்டவர்களைப் பார்த்திருக்கிறாள். ஆனால் இந்த மனிதன் அவர்களிடமிருந்து முற்றிலுமாக வேறுபட்டிருந்தான். அவனின் கண்கள் இழிவான எண் ணங்களைக் கொண்டதாக இருந்தன. ஆனால் உண வுக்காக மறைக்கப்பட்ட ஏக்கங்களோ பூர்த்தியாகாத உணர்வுகளோ இல்லை. அவள் உணவு காணாத வயிற் றோடும் வெறி பிடித்த கண்களோடும் இருக்கும் மனிதர் களைப் பார்த்திருக்கிறாள். ஆனால் இந்த மனிதனின் கண்களில் ஒரு மெல்லிய திரையைப் - பனி மறைத்தது போன்ற மெல்லிய திரைக்குப் பின்னால் இவளையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருக்கும் பயம் கொண்ட கண்களையே கண்டாள். சகினா பயந்து கொண்டிருப் பதற்குப் பதில், அந்த மனிதனே பயத்தின் பிடியில் இருப்பது போன்ற தோற்றத்தைக் கொடுத்தான். நிறுத்தி நிறுத்தித் தயக்கத்தோடு வெட்க உணர்வு ஏதும் இல்லா மல்,

"நீ சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது, நான் சற்றுத் தள் ளிதான் நின்று கொண்டிருந்தேன். ஓ..., நான் என் இரு மலை அடக்கிக் கொள்ள எவ்வளவு கஷ்டப்பட்டேன். நீ அமைதியாகச் சாப்பிட்டுக்கொண்டிருக்கும் அந்த அழகான காட்சியை எங்கே பார்க்க முடியாமலும் செய்து விடுமோ என்று பயந்தேன். பசி துடிப்புள்ளது. நானும் இருக்கிறேன். கடவுளிடமிருந்து பெற்ற அன்பளிப்பைத் தொலைத்துவிட்டு, இல்லை; அந்த அன்பளிப்பைத் தொலைத்து விட்டேன் என்று சொல்லக் கூடாது. நானே அதைக் கொன்று விட்டேன்" என்றார்.

சகினாவால் எதையும் புரிந்து கொள்ள முடியவில்லை.

ஒரு விடுகதைக்கான விடை மற்றொரு விடுகதையை உருக்கொள்ளச் செய்தது. இருந்தாலும் அந்த மனி தன் சொன்னது சகினாவுக்குப் பிடித்திருந்தது. அது

மனித நேயத்தின் அரவணைப்பைக் கொண்டிருந்தது. அதனால் தன் முழுக் கதையையும் அந்த மனிதனிடம் சொன்னாள். சகினா அவருக்கு நன்றி தெரிவித்த போது கண்ணீர் கூட மறுக்கப்பட்டது போல கண்களைக் கொண்டிருந்த அவன், "நான் ஒரு காச நோயாளி. எனக்குச் சாப்பாடு, பழம் எதுவும் பிடிக்காது. நான் உன்னை உண்ண வைத்து அதைப் பார்க்கிறேன்" என்றார். இதைச் சொன்ன உடன் அவர் புன்னகைத்தார்.

"இது என்ன முட்டாள்தனம்" என்றார். "இதை யாராவது கேட்டால் என்ன சொல்வார்கள், யாரோ ஒருத்தர் சாப்பிட வேண்டுமாம்; நான் அதைப் பார்க்க வேண்டுமாம்... இல்லை. சகினா, நீ இங்கேயே தங்க வேண்டும் என்று நான் மனப்பூர்வமாய் விரும்புகிறேன். நீ அதற்கு ஒத்துக்கொள்வாயா?"

சகினா சிந்திக்கத் தொடங்கினாள். "முடியாது" என்று பதில் தந்தாள். "நான் என்ன சொல்ல வருகிறேன் என்றால், இந்த வீட்டில் நீங்கள் மட்டும் தான் தனியாக இருக்கிறீர்கள்... இல்லை, இல்லை... நான் என்ன சொல்கிறேன்..."

இதைக் கேட்ட உடன் அவர் பெரும் அதிர்ச்சிக்கு உள்ளாகிச் சற்று நேரம் பிரமித்துப் போய் நின்றார். அவர் மறுபடியும் பேசத் தொடங்கியபோது அது வெத்தாய் இருந்தது. "இத்தனை வருடங்களாக நான் கல்லூரியில் பெண்களுக்குப் பாடம் நடத்தியிருக்கிறேன். நான் எப்போதும் அவர்களை என் மகள்களாகவே நினைத்து வந்துள்ளேன். நீயும் என்னுடைய மற்றொரு மகளாவாய்" என்றார்.

அவர் ஒரு வருடமும் சில மாதங்களும் உயிர் வாழ்ந்தார். இந்த நாட்களில் சகினா அவரைப் பார்த்துக் கொள்வதற்குப் பதில் நோயுற்றுக் கிடந்த அவரே முழு மனதோடு அவளை எல்லா விதங்களிலும் சௌகரிய

மாக வைத்திருக்க முடிந்ததையெல்லாம் செய்தார் - கடி தத்தை எடுத்துப் போகும் நேரம் வந்துவிட்டதால் ஒரு மனிதன் அவசர அவசரமாக அவன் நினைப்பதை எல் லாம் எழுதி முடிக்க நினைப்பது போல்.... சகினாவுக்கு மிக அவசியமாக இருந்த இந்தக் கவனிப்பு சில மாதங்க ளில் அவளின் பழைய நிலைக்கு அவளைக் கொண்டு வந்தது. இப்போது அவர் அவளிடமிருந்து சற்று வில கியே இருந்தார். ஆனாலும் அவர் காட்டிய அக்கறையில் மட்டும் எந்த மாற்றமும் இல்லை.

முடிவுக்கு அருகாமையில் திடீரென்று அவரின் நிலை மிக மோசமானது. ஒரு நாள் அவர் படபடப்போடு எழுந் துகொண்டு கத்தத் தொடங்கினார், "சகினா... சகினா." இந்தச் சத்தத்தைக் கேட்டு சகினா அச்சம் கொண் டாள். அவரின் குழி விழுந்த கண்களை மறைத்திருந்த மெல்லிய திரை இப்போது விலகியிருந்தது. சகினா அந்தக் கண்களில் அசாத்திய வலியைக் கண்டாள். அவர் நடுங்கிக் கொண்டிருக்கும் கரங்களால் அவளின் கையைப் பிடித்துக் கொண்டார். "நான் இறந்து கொண் டிருக்கிறேன். ஆனாலும் நான் அதற்காக வருத்தம் கொள்ளாததற்குக் காரணம், என்னுள் எத்தனையோ மரணங்கள் ஏற்கனவே நிகழ்ந்து விட்டன. உனக்கு என்னுடைய கதையைக் கேட்க வேண்டுமா?... நான் எப்படிப்பட்டவன் என்று நீ தெரிந்து கொள்ள விரும் புகிறாயா?... கேள். நான் பொய். மிகப்பெரிய பொய். என் வாழ்க்கை முழுக்க எனக்கு நானே பொய் சொல் லிக் கொள்வதிலும், அது உண்மை என்று நம்புவதி லும் கழிந்து விட்டது. ஐயோ! எவ்வளவு வலிகளைக் கொண்டது அது. நடைமுறைக்கெல்லாம் எத்தனை முரணானது. எவ்வளவு மனிதத்தன்மை அற்றது. நான் ஒரு ஆசையைக் கொன்றேன். ஆனால் அதற்குப் பிறகு பல கொலைகளைத் தொடர்ந்து செய்ய வேண்டிவரும் என்று எனக்குத் தெரியாமல் போயிற்று. ஓர் ஆசைக்குக்

கதவுகள் மூடிக்கொள்வதால் என்ன நடந்து விடப்போ கிறது என்றுதான் நினைத்தேன். என் உடலில் உள்ள எல்லாக் கதவுகளையும் எப்போதும் அடைக்க வேண்டி வரும் என்று அப்போது நான் உணரவில்லை. சகினா நான் சொல்லிக் கொண்டிருப்பது எல்லாம் தத்துவார்த்த மோசடி. உண்மை என்னவென்றால், நான் என்னை அப் பழுக்கற்ற ஒழுக்கசீலனாக வைத்திருக்க நினைத்து, அதன் போக்கில் போக அது சோர்வூட்டும் புதை மண லில் கொண்டுவிடும் என்று எதிர்பார்க்கவில்லை. நான் இறந்து போவேன், ஆனால் வர்ணங்கள் அற்ற புகழ்ச்சி என் சாம்பலின் மீது வீசிக் கொண்டிருக்கும். நான் பாடம் கற்றுக்கொடுத்த பெண்கள் எல்லாம் எப்போதே னும் என்னைப் பற்றி நினைத்தால், மனிதர்கள் நிறைந்த இந்த உலகத்தில் ஒரு தேவனாக அனுப்பப்பட்டவன் என்று சொல்லுவார்கள். நான் உன் மீது காட் டிய அன்பை உன்னால் கூட மறக்க முடியாது. ஆனால் உண்மை என்னவென்றால், நீ இந்த வீட்டிற்குள் நுழைந் தது முதல் நான் உன்னை ஏக்கத்தோடு பார்க்காமல் ஒரு நாளும் கழிந்ததில்லை. நான் இறந்து போவேன். நான் விரும்புவது எல்லாம், என்னுடைய இந்த உயரிய பண்புகள் குரங்கைப்போல ஒரு மரக்கிளை யில் அமர்ந்து கொண்டு கைதட்டி மக்களை எல்லாம் ஒன்று கூட்டி, 'என்னைப் பாருங்கள். இதிலிருந்து உங் கள் பாடத்தைக் கற்றுக்கொள்ளுங்கள்' என்று சொல்ல வைக்கும் துணிச்சல் மட்டும் தேவை."

இது நடந்ததற்குப் பிறகு பேராசிரியர் ஐந்து நாட்க ளுக்கு மட்டுமே உயிரோடு இருந்தார். சகினா சொன்ன தின் அடிப்படையில் இறந்து போவதற்கு முன் அவர் மிக வும் சந்தோசமாக இருந்தார்.

***



# மோஸல்

நான்கு வருடங்களில் முதன்முறையாக திர்லோச்சன் இரவு வானத்தைப் பார்த்தான். அவன் மிகவும் குழம்பி யிருந்ததால் தூய்மையான காற்றில், சில விசயங்களைச் சிந்திக்க 'அத்வானி சேம்பரின்' மொட்டை மாடிக்குச் சென்றிருந்தான்.

வானம் மிகவும் தெளிவாக இருந்தது, பேச்சுக்குக்கூட மேகத்தை எங்கும் காண முடியவில்லை. வானம் பம்பாய் நகரத்தின் மீது பெரிய கூரை போல் தொங்கிக்கொண்டி ருந்தது. பார்க்க முடிந்த தொலைவிற்கு எரிந்து கொண் டிருந்த விளக்குகள் வானத்திலிருந்து விட்டெறியப்பட்ட நட்சத்திரங்கள் போலவும், மரங்கள் போலிருந்த கட்ட டங்களில் அவை புதைந்திருப்பது போலவும், இருட்டில் மின்மினிப் பூச்சிகளாய் மின்னுவது போலவும் திர்லோச் சன் உணர்ந்தான்.

வானத்தின் கீழ் நிற்பது திர்லோச்சனுக்குப் புதிய அனுபவம். இந்த நான்கு வருடங்கள் அடுக்கு மாடிக் குடியிருப்பில் சிறைப்பட்டுக் கிடந்தது போலவும் இயற் கையின் அரிய பொக்கிஷத்தைத் தொலைத்திருந்தது போலவும் உணர்ந்தான். அப்போது நேரம் விடியற் காலை 3 மணி, இதமான காற்று வீசியது. திர்லோச் சன் பழக்கப்பட்டிருந்த மின்விசிறிக் காற்று, அவனின் முழு உடலையும் ஈயத்தால் செய்யப்பட்டது போல் மாற் றியிருந்தது. காலையில் எழுந்த உடன் இரவு முழுக்க எவரிடமோ அடிபட்டது போல் உணர்வான். இந்தத் தூய்மையான காற்று அவனை மிகவும் இலகுவாகவும்,

சௌகரியமாகவும் உணர வைத்தது. அவன் இங்கு வந்த போது மனதில் பெரும் பாரத்தோடு வந்தான். வெறும் அரைமணி நேர நல்ல காற்று அவனின் பாரத்தைப் பெருமளவு குறைத்தது. இப்போது அவனால் தெளிவா கச் சிந்திக்க முடிந்தது.

கிர்பால் கௌரும், அவளின் குடும்பமும், வெறிபிடித்த முஸ்லிம்கள் பெரும்பான்மையாக வாழும் பகுதியில் இருந்தார்கள். ஏற்கனவே பல வீடுகள் அங்கு தீக்கிரை யாயிற்று, பலர் கொல்லப்பட்டார்கள். திர்லோச்சன், அந் தக் குடும்பத்தை அங்கிருந்து அழைத்து வந்திருப்பான். ஆனால் ஊரடங்கு உத்தரவு அமுலில் இருந்ததுதான் பிரச்சனையாக இருந்தது. அது எப்போது விலக்கப்படும் என்று எவருக்கும் தெரியாது. அடுத்த நாற்பத்து எட்டு மணி நேரங்கள் கூட அமுலில் இருக்கலாம். சுற்றி லும் முஸ்லிம்கள் கொலைகள் செய்வதில் வெறியாய் இருந்தார்கள். பஞ்சாபிலிருந்து முஸ்லிம்களுக்கு எதி ராகச் சீக்கியர்கள் செய்திருக்கும் அட்டூழியங்கள் செய் திகளாகக் கொட்டிக்கொண்டே இருந்தன. எந்த முஸ் லிம் வேண்டுமென்றாலும் கத்தியை உருவி கிர்பால் கௌரைக் கொலை செய்ய முடியும்.

கிர்பாலின் தாய் பார்வையற்றவர், அவளின் தந்தை பக்கவாத நோயால் பாதிக்கப்பட்டவர். அவளின் சகோ தரன் நிரஞ்சன் சில காலங்களாக இவர்களை விட்டு தியோலாலில், அவனுக்குக் கிடைத்த புது ஒப்பந்தங்க ளைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

திர்லோச்சன், கிர்பாலின் சகோதரன் மீது கோபம் கொண்டான். அவனிடம் அதிகரித்துக்கொண்டிருக்கும் பாதுகாப்பற்றத் தன்மையைப் பற்றி வெளிப்படையா கவே ஒரு வாரத்திற்கு முன் பேசிவிட்டான். "நிரஞ் சன், இந்த ஒப்பந்தங்களை எல்லாம் கொஞ்சம் மறந்து தொலை. நாம் மிகவும் குழப்பமான கால கட்டத்தில்

வாழ்ந்து கொண்டிருக்கிறோம். நீ உன் வீட்டில் இருப்பது மிகவும் அவசியமானது. நீ உன் குடும்பத்தோடு என் வீட்டிற்கு மாற்றிக் கொள் என்று கூட நான் யோசனை சொல்வேன். என் வீட்டில் இடம் குறைவானதுதான். ஆனாலும் இதுபோன்ற குழப்பமான காலங்களில் இருப்பதை வைத்து நாம் நம்முடைய தேவைகளைப் பார்த்துக் கொள்ள வேண்டும்". ஆனால் நிரஞ்சன் இதைப்பற்றி அக்கறை ஏதும் எடுத்துக்கொள்ளவில்லை. இவனின் அறிவுரைகளுக்கெல்லாம் அவனின் ஒரே வெளிப்பாடு தன் அடர்ந்த தாடிகளுக்குப் பின்னே புன்னகைப்பதுதான். "நீ தேவையில்லாமல் கவலைப்படுகிறாய் என் நண்பா", என்று சொன்னான் "நான் பல கலவரங்களை இங்கு பார்த்திருக்கிறேன், இது அம்ரித்சரோ, லாகூரோ இல்லை - இது பம்பாய். நீ நான்கு வருடங்களாகத்தான் இங்கிருக்கிறாய், நான் இங்கு பன்னிரெண்டு... பன்னிரெண்டு வருடங்களாக வாழ்ந்து கொண்டிருக்கிறேன்."

நிரஞ்சன் பம்பாய் பற்றி என்ன நினைத்தான் என்று யாராலும் சொல்ல முடியாது. ஒரு வேளை இந்த நகரத்தில் கலவரங்கள் தோன்றினாலும், அது தானாகவே அமைதி நிலைக்குத் திரும்பிவிடும் என்று நினைத்திருக்கலாம். அல்லது பம்பாய் ஏதோ பாட்டிக் கதையில் வரும் கோட்டையாகவும், எத்தகைய புயல்களிலிருந்தும் அது தன்னைப் பாதுகாத்துக் கொள்ளக் கூடியது என்றும் நினைத்திருக்கலாம்.

காலை நேரத் தூய்மையான காற்றில் திர்லோச்சனால் தெளிவாகப் பார்க்க முடிந்தது. இந்தப் பகுதி கொஞ்சமும் பாதுகாப்பானதல்ல, கிர்பால் கௌரும் அவளின் குடும்பமும் கொல்லப்பட்டார்கள் என்று காலைச் செய்தித்தாள்களில் படிக்கக் கூட அவன் தயாராக இருந்தான்.

கிர்பால் கௌரின் பக்கவாதம் வந்த தந்தையைப் பற்றியோ, அல்லது பார்வையற்ற தாயைப் பற்றியோ திர்லோச்சன் கவலை கொள்ளவில்லை. கிர்பால் கௌர் உயிரோடு இருந்து அவளின் பெற்றோர் இறந்து விட்டால் ஒருவிதத்தில் அவனுக்கு நல்லதாகத்தான் இருக்கும். அவளின் சகோதரன் நிரஞ்சனும், தியோலாலில் கொலை செய்யப்பட்டு இறந்து விட்டால் அது மேலும் நன்றாகத்தான் இருக்கும். அவனுக்கான வழியில் உள்ள தடைகள் எல்லாம் சுத்தமாக அகற்றப்பட்டது போலிருக்கும். குறிப்பாக நிரஞ்சன் இவனின் பாதையில், சின்னத் தடங்களாக இல்லாமல் பாறாங்கல்லைப் போல் பெருந்தடையாக இருந்தான். எப்போது கிர்பால் கௌரிடம் பேச்சுக் கொடுத்தாலும், அவனின் பெயர் அடிபட்டது. அவள் அவனை நிரஞ்சன்சிங் என்பதற்குப் பதிலாக குங்கர்சிங் என்றே அழைத்தாள்.

காலைக் காற்று மிகவும் நிதானமாகத் தவழ்ந்தது. திர்லோச்சனின் தலைப்பாகை இல்லாத நீண்ட முடி இனிமையான குளிர்ச்சியான உணர்வை அனுபவித்தது. ஆனால் அவனுள் முரண்பாடு முட்டி மோதியது. இவனின் வாழ்க்கையில் கிர்பால் கௌர் சமீபத்தில்தான் நுழைந்தாள். தடித்த குங்கர்சிங்கின் சகோதரி தான் என்றாலும், அவள் மென்மையானவளாகவும் துவள்கிறவளாகவும் இருந்தாள். அவள் கிராமத்தில் வளர்ந்தவள் - அதன் பல கோடைக்காலங்களையும் குளிர்காலங்களையும் கண்டவள். சாதாரணமாகக் கிராமத்துப் பெண்கள், கடினமான உழைப்பால், முரட்டுத்தனத்தையும் திடகாத்திரத்தையும் பெற்றிருப்பது போல் அல்லாமல் அவள் இருந்தாள். அவளின் அங்கங்களோ இன்னும் அதன் முழு அளவிற்கு வளரவில்லை என்ற தோற்றத்தைக் கொடுத்தது. அவளின் சிறிய மார்பகங்களில் இன்னும் சற்றுக் கூடுதலான சதை தேவைப்பட்டது. மற்ற கிராமத்துச் சீக்கியப் பெண்களோடு ஒப்பிடும்போது

அவள் நல்ல நிறத்தில் இருந்தாள். சாயம் பூசப்படாத பெரிய துணியைப்போல் அவள் நல்ல நிறத்தில் இருந் தாள். அவளின் உடல் மிருதுவாகவும் பட்டுப் போலவும் - ஏறக்குறைய பக்குவப்படுத்தப்பட்ட பஞ்சு போலவும் இருந்தது. அவள் ரொம்பவும் கூச்சம் கொண்டவளாக வும் இருந்தாள்.

திர்லோச்சன் அவள் கிராமத்தைச் சேர்ந்தவன். ஆனால் அங்கு அதிகம் தங்கியது கிடையாது. ஆரம் பக்கல்வி முடித்தவுடன் உயர்கல்வி பயில நகரத்துக்கு வந்துவிட்டான். அங்கேயே இருக்க வேண்டியதாயிற்று. உயர்கல்வி முடிந்தவுடன் கல்லூரிப் படிப்புத் துவங்கியது. அந்தக் காலங்களில் அவன் கிராமத்துக்குப் பலமுறை - கணக்கிலடங்கா முறை சென்றிருக்கிறான். ஆனா லும் கிர்பால் கௌர் பற்றி அவன் கேள்விப்பட்டதுகூடக் கிடையாது. ஒருவேளை எப்போது அங்கு சென்றாலும், உடனடியாக நகரத்துக்குத் திரும்ப வேண்டும் என்று அவன் அவசரப்பட்டதே காரணமாக இருந்திருக்கலாம்.

கல்லூரி நாட்கள் எல்லாம் அவன் பின்னால் நகர்ந்து போனது. கல்லூரிக் கட்டடத்திற்கும் அத்வானி சேம்ப ருக்கும் 10 வருட இடைவெளி இருந்தது. இந்தப் பத்து வருட திர்லோச்சனின் வாழ்க்கை பல விநோத அனு பவங்களைக் கொண்டது. பர்மா, சிங்கப்பூர், ஹாங்காங் என்று இப்போது கடைசி நான்கு வருடங்களாக அவன் பம்பாயில் இருக்கிறான். இந்த நான்கு வருடத்தில் முதல் முறையாக இரவு நேரத்தில் வானத்தைப் பார்க்கி றான். வானம் ஒன்றும் பார்ப்பதற்கு அவ்வளவு மோசமாக இல்லை என்று நினைத்தான். ஆயிரம் விளக்குகளால் பிரகாசமாக இருக்கும் கூடாரம். அப்புறம் காற்று - சில் லென்றும் அமைதியாகவும் வீசியது.

திர்லோச்சன் சிந்தனை கிர்பால் கௌரிடமிருந்து - அத்வானி சேம்பரில் வசித்து வந்த யூதப் பெண் மோஸல்

பக்கம் திரும்பியது. திர்லோச்சன் அவள் மீது ஆழமான காதல் கொண்டான். அவனின் முப்பது வருட வாழ்க்கையில் இந்தக் காதல் நோய் அனுபவம் மிகவும் மோசமானதாக இருந்தது.

ஒரு கிறித்துவ நண்பர் மூலம் அத்வானி சேம்பரில் இரண்டாவது தளத்தில் உள்ள வீட்டிற்குக் குடி வந்த அன்று மோஸலைச் சந்தித்தான். முதல் பார்வையில் அவள் புத்தி பிசகியவள் போன்ற தோற்றத்தைத் தந்தாள். அவளின் வெட்டப்பட்ட தலைமுடி கோரமாய் இருந்தது, அவள் பூசியிருந்த உதட்டுச்சாயம் இரத்தத்தால் பூசியது போல் இருந்தது, அதுவும் ஒழுங்கில்லாமல் விட்டு விட்டுப் பூசப்பட்டிருந்தது. அவள் தளர்ச்சியான, நீண்ட வெள்ளை அங்கி அணிந்திருந்தாள். திறந்து கிடந்த அங்கியின் முன்பகுதி ஏறக்குறைய, அவளின் மார்பகங்களை முக்கால் பாகம் வெளிப்படுத்தியது. அவளின் வெற்றுக்கைகள் அப்போதுதான் முடிவெட்டிக்கொண்டு திரும்பியது போல் தடித்த முடிகளோடு காணப்பட்டது. அவளின் உதடுகள் தடித்தது இல்லை என்றாலும், உதட்டுச் சாயம் பூசப்பட்டிருந்த விதம் அவை மாட்டுக்கறி போல் தோற்றத்தைத் தந்தது.

திர்லோச்சன் வீடு, மோஸல் வீட்டிற்கு நேர் எதிரே இருந்தது. இரண்டுக்கும் இடையில் குறுகிய - மிகவும் குறுகிய நடைக்கூடம் தான் இருந்தது. திர்லோச்சன் தன் வீட்டிலிருந்து வெளியே வந்தபோது, மோஸலும் வெளியே வந்தாள். அவள் மரச்செருப்பு அணிந்திருந்தாள். செருப்புச் சத்தம் கேட்டு திர்லோச்சன் நின்றான். மோஸல் அவன் வைத்திருந்த சாவியைப் பார்த்துக்கொண்டிருக்க, அவன் வேகமாகக் கதவை நோக்கி நகர்ந்தான். மோஸல் அணிந்திருந்த மரச்செருப்பு ஒன்று சிமெண்ட் தரையில் வழுக்க அவன் மீது விழுந்தாள். திர்லோச்சன் தன்னை நிதானப் படுத்திக்கொண்ட

போது மோஸல் தன் மீது படர்ந்திருப்பதைக் கண்டான். அவளின் தளர்ச்சியான அங்கி மேலே தூக்கிக் கிடக்க, அவளின் இரண்டு திடமான, நிர்வாணமான கால்கள் அவனுக்கு இரண்டு பக்கங்களிலும் கிடந்தன. அவன் எழுந்து கொள்ள முயன்றபோது, அது சிக்கலாகிப் போய், சோப்புக் கட்டியை உடல் முழுக்கத் தேய்ப்பது போல அவள் உடல் முழுக்கத் தேய்த்தெடுக்க வேண் டியதாயிற்று, பெருமூச்சு வாங்க அவன் எழுந்து, சரியான வார்த்தைகளில் மன்னிப்புக் கேட்டான். மோஸல் தன் அங்கியைக் கீழே இறக்கி விட்டுப் புன்னகைத்தாள்.

"இந்த மரச்செருப்புகள்... கொஞ்சமும் பிரயோசனம் இல்லை".

அந்தச் செருப்பை மறுபடியும் அணிந்து கொண்டு, அவள் நடைக்கூடத்தைக் கடந்து சென்றாள்.

மோஸல் நட்பைப் பெறுவது மிகவும் சிரமமானது என திர்லோச்சன் நினைத்தான். ஆனால் சீக்கிரத்தில் அவர் கள் நண்பர்களானார்கள். மோஸல் நிதானமானவளாக வும், யூகிக்க முடியாதவளாகவும் இருந்தாள். அவளை விருந்திற்கு அழைத்துச் செல்லவும், சினிமாவிற்குப் போகவும், ஜுகு கடற்கரையில் மணிக்கணக்காய்ப் பேசி காலம் கடத்தவும் என்று தன்னைச் சந்தோசப்படுத்த அவனை அனுமதித்தாள். ஆனால் கட்டி அணைப்ப தற்கும் முத்தம் கொடுப்பதற்கும் மேலாக அவன் ஏதா வது முயன்றதால் கண்டிப்போடு தடுத்து நிறுத்தினாள். திர்லோச்சனின் காம உணர்வுகள் அவனின் தாடிக்குள் ளும் மீசைக்குள்ளும் சுருங்கிக் கிடக்க வேண்டியதா யிற்று.

திர்லோச்சன் இதற்கு முன் காதலித்தது கிடையாது. லாகூர், பர்மா, சிங்கப்பூர் - இந்த இடங்களில் எல்லாம் குறுகிய காலங்களுக்குப் பெண்களைப் பெற்று வந்தான். ஆனால் பம்பாய் வந்தவுடன் இப்படி முரட்டுத்தனமான

யூதப் பெண் மீது காதல் கொள்ள நேரிடும் என்று கனவில் கூட அவன் நினைத்துப் பார்த்தது கிடையாது. திர்லோச்சனிடம் அவளின் நடத்தை மிகவும் விநோத மாக இருந்தது. சினிமாவிற்குப் போக வேண்டும் என்று அழைத்தால் உடனடியாக அலங்கரித்துக்கொண்டு கிளம்பி விடுவாள். ஆனால் இருக்கையில் அமர்ந்தவு டனே, அவளின் கண்கள் இங்கேயும் அங்கேயும் அலை பாயத் தொடங்கும், அவளுக்குத் தெரிந்தவர்கள் யாரே னும் தென்பட்டால் உற்சாகமாகக் கையசைத்து திர் லோச்சனிடம் ஏதும் சொல்லிக்கொள்ளாமல், தெரிந்த அந்த மனிதனிடம் சென்று அவனுடன் அமர்ந்து கொள் வாள். உணவகத்தில் திர்லோச்சன் முழு விருந்துக்கு ஆர்டர் கொடுத்திருப்பான். ஆனால் பழைய நண்பர்கள் யாரேனும் கண்ணில் பட்டுவிட்டால் போதும், திர்லோச் சனைப் பொறாமையால் குமுறிக்கொண்டிருக்கும்படி விட்டுவிட்டு, அவர்களுடன் சேர்ந்து கொள்வாள்.

பழைய நண்பர்களிடமோ அல்லது தெரிந்தவர்க ளிடமோ ஏற்பட்ட தொடர்பின் காரணமாக, அவள் தொடர்ந்து பல நாட்கள் அவனைச் சந்திக்கவில்லை என்றால், மிகவும் கோபம் கொள்வான். சில சமயங் களில் தலைவலி எனக் காரணம் சொல்வாள். வேறு சில சமயங்களில் வயிற்றுவலி. அவளின் உடல் இரும் பைப்போன்று திடமானது என்றும், அவள் உடல்நிலை சரியில்லாமல் போக வாய்ப்பே இல்லை என்றும் திர் லோச்சனுக்கு நன்றாகத் தெரியும். மறுபடியும் அவளைச் சந்திக்க நேரிடும் போது, "நீ சீக்கியன்! உன்னால் இது போன்ற மென்மையான விசயங்களை எல்லாம் புரிந்து கொள்ள முடியாது" என்று சொல்வாள். இது திர்லோச் சனுக்குள் பெரும் தீயை உண்டாக்கும், "என்ன மென் மையான விசயங்கள்?" என்று கேட்பான், "நீ வழக்கப்படி நெருப்பைக் கொட்டிக் கொண்டிருக்கிறாய்." காலைப் பரப்பி, தன் அகலமான இடையில் கைகளை வைத்துக்

கொண்டு, "நீ இப்படியெல்லாம் பேசி என்னைப் பணிய வைக்க முடியும் என்று நினைக்கிறாயா? உண்மை தான். அவர்கள் என் நண்பர்கள். எனக்கு அவர்களைப் பிடித்திருக்கிறது. அது உன்னைப் பொறாமை கொள்ள வைத்தால் நீ அதை விழுங்கத்தான் வேண்டும். நான் அதற்கு என்ன செய்ய முடியும்?", திர்லோச்சன் ரொம்ப உரிமையோடு "நாம் எவ்வளவு காலங்களுக்கு இப்ப டியே காலம் கடத்த முடியும்?" என்று கேட்பான். மோஸல் உரக்கச் சிரிக்கத் தொடங்கி, "நீ உண்மையில் சீக்கியன் தான். முட்டாள், யார் உன்னிடம் சொன்னது நீ என் னுடன் நிரந்தரமாக உறவு கொள்ள வேண்டுமென்று. உனக்கு அதுதான் தேவை என்றால், உன் கிராமத் திலிருந்து யாராவது ஒரு சீக்கியப் பெண்ணைத் திரு மணம் செய்து கொள். என்னிடம் இது போன்ற உறவு கள் மட்டுமே சாத்தியம்" என்பாள். திர்லோச்சன் அமை தியாவான். உண்மை என்னவென்றால் மோஸல் அவ னின் மிகப்பெரிய பலவீனமாகயிருந்தாள். என்ன விலை கொடுத்தேனும் அவளிடம் நட்புக் கொள்ள வேண்டும் என்று விரும்பினான். அவளுக்காகவே பலமுறை தான் அசிங்கப்படுத்தப்படுவதை அனுமதித்தான். எதற்கும் பிரயோசனமில்லாத கிறித்துவ ஆண்களுக்கு முன்னே அவமானப்படுத்தப்பட்டான்.

சாதாரணமாக அவமானப்படுத்தப்படுவது பழி வாங் கும் எண்ணத்தையே உருவாக்கும். ஆனால் திர்லோச்ச னிடம் அது வேறுவிதமாய் வெளிப்பட்டது. தன் மனதை யும் காதுகளையும் அவமானங்களிலிருந்து மூடி வைத் துக்கொண்டான். தன் நண்பர்களிடம், 'நான் அவள் மீது வெறி கொண்டு காதலிக்கிறேன்' என்று சொல்வது உண்டு. காதலெனும் இந்தப் புதைகுழியில் இறங்குவ தைத் தவிர மாற்று வழிகள் ஏதும் அவனுக்கு இல்லை.

இரண்டு முழு வருடங்கள் இப்படி அவமானப்படுத் தப்பட்டுக் கழித்தான், ஒரு நாள் மோஸல் உற்சாகமாக இருந்தபோது, அவளைத் தன் கரங்களால் அணைத் துக்கொண்டு, "மோஸல்! என்னைக் காதலிக்கிறாயா?" என்று கேட்டான். மோஸல் அவனின் கரங்களிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு நாற்காலியில் அமர்ந்து இமைகொட்டாமல் அவனைப் பார்த்து, "நான் ஒரு சீக் கியனைக் காதலிக்க முடியாது" என்றாள். திர்லோச் சனுக்கு எவரோ, எரிந்து கொண்டிருக்கும் கங்குத் துண்டுகளைத் தன் தலைப்பாகைக்குள் வைத்தது போல் உணர்ந்தான். அவன் நிலைகுலைந்து போனான். "மோஸல்! எப்போதும் நீ என்னைக் கிண்டல் செய் கிறாய், நீ என்னைக் கேவலப்படுத்தவில்லை, என் காதலைக் கேவலப்படுத்துகிறாய்." மோஸல் எழுந்து கொண்டு குட்டையாய் இருந்த தன் தலைமுடியைப் பாசாங்கோடு ஆட்டினாள். "நீ சவரம் செய்து கொள்ள வேண்டும்" என்றாள். "அப்புறம் உன் தலைமுடியை வெட்டு. நான் நிச்சயமாய்ச் சொல்கிறேன், நிறையப் பெண்கள் உன் வலையில் விழுவார்கள்.

"நீ பார்க்க ரொம்ப அழகாய் இருக்கிறாய்". திர் லோச்சன் தன் தலையில் ஏதோ தீப்பொறி பறப்பது போல் உணர்ந்தான். அவன் முன்னே வந்து, மோஸ லைத் தன்னை நோக்கி இழுத்து, மீசை மறைத்த தன் உதட்டை, அவளின் செந்நிற உதடுகளின் மேல் வைத்தான். மோஸல் "ச்சீ... ச்சீ" என்று அவனின் பிடி யில் இருந்து தன்னை விடுவித்துக் கொண்டாள், "நான் காலையில் பல் தேய்த்து விட்டேன். அதைச் சுத்தம் செய்வது பற்றி நீ ஒன்றும் கவலைப்பட வேண்டாம்" என்றாள். திர்லோச்சன் கத்தினான், "மோஸல்". அவள் தன் பகட்டான கைப்பையிலிருந்து சிறிய கண்ணாடியை எடுத்துத் தன் உதடுகளைப் பார்த்துக்கொண்டாள். அடர்த்தியாகப் பூசப்பட்ட சாயத்தில் கீறல்கள் தெரிந்

தன. "கடவுளே! உன் மீசையையும் தாடியையும் சரியாக உபயோகப்படுத்துவதில்லை. முடி எவ்வளவு நன்றாக இருக்கிறது. என்னுடைய நீலநிற சட்டையைச் சுத்தம் செய்வதற்கு அது மிகச் சரியாக இருக்கும். இப்போது தேவைப்படுவதெல்லாம் கொஞ்சம் பெட்ரோல் தான்"

உச்சத்துக்குப் போன திர்லோச்சனின் கோபம் திடீரென்று அடங்கியது, சோபாவில் உட்கார்ந்து கொண்டான். மோஸல் அவன் அருகில் வந்து அவனின் தாடியை அவிழ்க்கத் தொடங்கினாள். அதிலிருந்த குண்டூசிகளை ஒன்றன் பின் ஒன்றாக எடுத்துத் தன் பற்களில் பிடித்துக் கொண்டாள். திர்லோச்சன் பார்க்க அழகாக இருந்தான். அவனின் மீசை மற்றும் தாடியை அவிழ்த்துத் தொங்கவிட்ட போது பலமுறை அவன் அழகான இளம் பெண் என்று தவறுதலாகப் பார்க்கப் பட்டான். புதர் போலிருக்கும் அடத்தியான முடி, அவனின் முகத் தோற்றத்தை முழுமையாய் மறைத்தது. இதெல்லாம் அவனுக்குத் தெரிந்ததுதான், இருந்தாலும் அவன் கடமை தவறாத ஒழுக்கங்களைக் கொண்ட பையன். தன் மதத்தை மதித்தான். தன் மதத்தின் வெளி அடையாளங்களை விட்டுக் கொடுக்க அவன் தயாராக இல்லை.

அவனின் தாடி அவிழ்க்கப்பட்ட பின் அது அவனின் மார்பு வரை தொங்கியது, "மோஸல்! என்ன செய்வதாக உத்தேசித்துள்ளாய்?" என்று கேட்டான்.

குண்டூசிகளைத் தன் பற்களில் பிடித்தபடியே அவள் புன்னகைத்தாள். "உன் முடி ரொம்ப மிருதுவாக இருக்கிறது, என் வெளிறிய நீலநிறச் சட்டையை இந்த முடியைக் கொண்டு சுத்தம் செய்ய முடியும் என்று நான் அனுமானம் செய்தது தவறு, இதை என்னிடம் கொடுத்து விடு திர்லோச்சன். நான் இதைக் கோர்த்து அழகான கைப்பை செய்து கொள்கிறேன்."

இப்போது திர்லோச்சனின் தாடி பற்றியெரிந்தது. அவன் அழுத்தமாக, "மோஸல்! நான் உன் மதத்தை எப்பவும் கிண்டல் செய்தது கிடையாது, என்னுடையதை நீ ஏன் கிண்டல் செய்கிறாய்? ஒருவரின் மத நம்பிக்கையில் விளையாடுவது மோசமான விசயம். நான் உன் மீது வெறிகொண்டு காதல் கொண்டிருப்பதால்தான் இதை எல்லாம் பொறுத்துக்கொள்கிறேன். இல்லையென்றால்... இது உனக்குத் தெரியாதா என்ன?"

திர்லோச்சனின் தாடியோடு விளையாடிக்கொண்டிருப்பதை மோஸல் நிறுத்தினாள். "எனக்குத் தெரியும்" என்றாள்.

"பிறகு"

திர்லோச்சன் தன் தாடியை ஒழுங்காகக் கட்டி, மோஸல் அவளின் பற்களில் பிடித்திருந்த குண்டூசிகளை எடுத்தான்.

"உனக்கு நன்றாகவே தெரியும், நான் ஒன்றும் பொம்பளைப் பொறுக்கி இல்லை. எனக்கு உன்னைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும்".

மோஸல் மெதுவாகத் தலையை அசைத்துக் கொண்டே எழுந்து, சுவரில் மாட்டியிருந்த படத்தைப் பார்க்கத் தொடங்கினாள்.

"எனக்கு அது தெரியும்" என்றாள். "நானும் ஏறக்குறைய உன்னைத் திருமணம் செய்து கொள்ள முடிவெடுத்துவிட்டேன்". திர்லோச்சன் குதித்தான்.

"நிஜமாகவா?"

மோஸலின் சாயம் பூசிய உதடுகள் புன்னகையில் விரிய, அவளின் திடமான வெள்ளைவெளேரென்று இருந்த பற்கள் தெரிந்தன.

"ஆமாம்"

திர்லோச்சன் அவளைத் தன்பக்கம் இழுத்தான்.

"எப்போது?"

மோஸல் தன்னை விலக்கிக்கொண்டாள்.

"நீ உன் முடியை வெட்டிய பிறகு".

திர்லோச்சன் - இறுதியாகப் போராடுகிறவனைப் போல, ஏதும் சிந்திக்காமல், "நான் நாளைக்கே இதை வெட்டி விடுகிறேன்" என்றான்.

மோஸல் கால்களைத் தட்டி நடனமாடத் தொடங்கி னாள்.

"நீ முட்டாள்தனமாய் நிறையப் பேசிக்கொண்டிருக் கிறாய் திர்லோச்சன். உனக்கு அதைச் செய்வற்கான தைரியம் கிடையாது".

இது திர்லோச்சனின் இதயத்திலும், மண்டையிலும், மதத்தின் மீதிருந்த அவனின் கொஞ்ச நஞ்சம் அக்க றையையும் துடைத்து எடுத்தது. "நாளை நீயே பார்க்கத் தான் போகிறாய்" என்றான்.

"பார்க்கலாம்" அவள் வேகமாக முன்னேறி திர்லோச்ச னின் மீசையில் முத்தமிட்டு விட்டு வெளியேறினாள்.

அன்று இரவு முழுக்க திர்லோச்சன் எவ்வளவு கஷ் டப்பட்டான், எத்தகைய துயரங்களை அனுபவித்தான் என்று அளந்து பார்க்க முயல்வது வீண் வேலை. அடுத்த நாள் 'ஃபோர்ட்' பகுதியில் தன் தலைமு டியை வெட்டி, சவரமும் செய்து கொண்டான். இது நடந்து கொண்டிருக்கும்போது தன் கண்களை மூடியே வைத்திருந்தான். எல்லாம் முடிந்த பிறகு அவன் கண் களைத் திறந்து கண்ணாடியில் நீண்ட நேரம் அவ னையே வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தான். பம்பா யில் உள்ள மிக அழகான பெண்கள் கூட அவனை ஒரு முறை திரும்பிப் பார்க்க வைக்கும் அளவிற்கு அவனின் முகம் அவ்வளவு இளமையோடு இருந்தது.

முடிவெட்டும் கடையிலிருந்து வெளியே வந்த போது திர்லோச்சன் உற்சாகமாகவும் குளிர்ச்சியாகவும் உணர்ந்தான். அதே உணர்வு இப்போது அவனுக்குள் தோன்ற, மொட்டை மாடியில் வேகமாக மேலும் கீழும் நடக்கத் தொடங்கினான். நீர்த் தொட்டிகளும் குழாய்க ளும் எங்கும் நிறைந்திருந்தன. அவன் தன் நினைவி லிருந்து மோஸல் சம்பந்தப்பட்ட மிச்சப்பகுதியை மறக் கவே விரும்பினாலும் அது அவனை விட மறுத்தது...

தன் முடியை வெட்டிய அன்று அவன் வீட்டிற்குள் ளேயே இருந்தான். அடுத்தநாள் தான் நலமாக இல்லை என்றும், அவள் வந்து தன்னைப் பார்க்க வேண்டும் என்றும் வேலையாள் மூலம் மோஸலுக்குச் சீட்டுக் கொடுத்து அனுப்பினான்.

நீண்ட முடி இல்லாத அவனைப் பார்த்த உடன் மோஸல் சற்று நேரம் அதிர்ந்துதான் போனாள். பிறகு "என் செல்லமே திர்லோச்சன்" என்று உரக்க வெடித் தாள். பிறகு தன்னைக்கொண்டு அவனை முழுவதுமா கச் சுற்றிக்கொண்டாள். அவனின் முகம் முழுக்கத் தன் உதட்டுச் சாயத்தால் சிவப்பாக்கினாள். திர்லோச்சனின் சுத்தமான மிருதுவான முகவாயில் தன் கையை வைத் தாள். குட்டையாய் இருந்த அவன் தலைமுடியைத் தன் விரல்களால் கோதி விட்டாள். சந்தோசத்தில் கத்தத் தொடங்கினாள். அவள் மூக்கிலிருந்து தண்ணீர் வெளி யேறும் அளவிற்கு அவளின் கூச்சல் இருந்தது. இதை உணர்ந்த உடன் மோஸல் தன் அங்கியின் கீழ்ப் பகு தியைப் பிடித்து உயர்த்தி, அதைக்கொண்டு தன் மூக் கைத் துடைத்துக்கொண்டாள். திர்லோச்சன் தன் கண் களை வேறு பக்கம் திருப்பிக்கொண்டான். அவளின் அங்கியைப் பிடித்து கீழிறக்கி,

"நீ கீழே ஏதாவது போட்டுக்கொள்ள வேண்டும்" என் றான்.

இது மோஸலை எந்தவிதத்திலும் பாதிக்கவில்லை. அவளின் உதட்டில் பூசியிருந்த சாயம் வெளிறிப்போயும், பல இடங்களில் வெடித்தும் இருக்க அவள் புன்னகைத்து இதை மட்டுமே சொன்னாள், "எனக்கு அது வசதியாக இல்லை... எனக்கு இப்படித்தான் பிடித்திருக்கிறது."

இருவரும் முட்டி மோதிச் சிக்குண்ட அந்த முதல் நாளை திர்லோச்சன் நினைத்துப்பார்த்தான். புன்னகைத்து அவளை அணைத்துக்கொண்டான். "நம் திருமணம் நாளைக்கு நடக்கப் போகிறது".

"நிச்சயமாக" என்று சொல்லி அவனின் முகவாயைத் தன் கையின் பின்புறத்தால் தடவிக்கொடுத்தாள்.

அவர்களின் திருமணம், பதிவுத்திருமணமாக இருக்க வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. இதற்குப் பத்து அல்லது பதினைந்து நாட்கள் முன்னறிவிப்புத் தேவையாக இருந்தது, திர்லோச்சனின் நண்பர்கள் பலர் வசித்து வந்ததாலும், அருகாமையிலிருந்ததாலும், புனே தேர்ந்தெடுக்கப்பட்டது. மறுநாளே புனே கிளம்புவதற்காகத் திட்டம் போட்டார்கள்.

மோஸல் 'ஃபோர்ட்' பகுதியில் உள்ள கடை ஒன்றில் விற்பனைப் பெண்ணாக வேலை பார்த்து வந்தாள். அந்தக் கடைக்கு அருகாமையில் ஒரு டாக்ஸி நிறுத்தம் இருக்க, அங்கு திர்லோச்சனைக் காத்திருக்கச் சொன்னாள். குறிப்பிட்ட நேரத்திற்கு திர்லோச்சன் அங்கிருந்தான். ஒன்றரை மணி நேரம் அங்குக் காத்திருந்தான். மோஸல் வரவில்லை. அடுத்தநாள், புதிதாகக் கார் ஒன்று வாங்கிய நண்பரோடு அவள் தியோலாலி போயிருப்பதாகக் கேள்விப்பட்டான். அங்கு அவள் காலவரம்பு இல்லாமல் தங்கியிருக்கத் திட்டம் போட்டிருப்பதாகவும் கேள்விப்பட்டான்.

திர்லோச்சன் என்னவெல்லாம் அனுபவித்தான் என்பது ஒரு பெரிய கதை. சுருங்கச் சொன்னால் அவளை முழுவதுமாக மறந்துவிடுவது என்று தீர்மானம் எடுத்தான். இந்தச் சமயத்தில்தான் அவன் கிர்பால் கெளரைச் சந்திக்க, அவள் காட்டிய அன்பைத் திரும்பச் செலுத்தத் தொடங்கினான். வெகுசீக்கிரத்தில், மோஸல் கல்லைப்போன்ற இதயத்தைக் கொண்டவள் என்றும், ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குத் தாவித் தாவிச் செல்லும் குருவி போன்றவள் என்றும், நம்ப முடியாதவள் என்றும் நினைக்கத் தொடங்கினான். அவளைத் திருமணம் செய்து கொள்வதிலிருந்து தான் காப்பாற்றப்பட்டது நல்லதாய்ப் போயிற்று என்றும் நினைத்தான். இருந்தாலும் அவளைப்பற்றி எப்போதாவது ஓரிரு முறை சிந்திக்கும் போதெல்லாம், கணப்பொழுது சங்கடமான உணர்வு அவனைக் குத்தி எடுத்தது. அவள் பொறுப்பற்றவளாகவும், வெட்கம் கெட்டவளாகவும், மற்றவர்களின் உணர்வுகளுக்கு மதிப்புக் கொடுக்கத் தெரியாதவளாகவும், இருந்தாலும், அவனுக்கு அவளைப் பிடித்திருக்கிறது என்பதை அவன் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். அவனையும் அறியாமல் அவனின் சிந்தனை மோஸல் பக்கம் திரும்ப - தியோலாலியில் இப்போது அவள் என்ன செய்து கொண்டிருப்பாள், புது கார் வாங்கிய அந்த நண்பனோடுதான் இருக்கிறாளா அல்லது அவனையும் விட்டுவிட்டு வேறு எவருடனோ போய் விட்டாளா? மோஸலின் குணம் அவனுக்குத் தெரிந்திருந்தாலும் இந்தச் சிந்தனை அவனைத் துயரம் கொள்ள வைத்தது.

அவளுக்காக அவன் நூற்றுக்கணக்கில், இல்லை - ஆயிரக் கணக்கில் செலவிட்டிருக்கிறான். இதைச் செய்ய வேண்டும் என்பதற்காகவே செய்தான். இல்லையென்றால் மோஸல் ஒன்றும் அவ்வளவு செலவு வைக்கக் கூடியவள் இல்லை. அவளுக்கு மலிவான பொருட்களே பிடித்திருந்தன. ஒரு முறை அவனுக்குப்

பிடித்திருந்த தங்கத்தோடு ஒன்றை அவளுக்கு வாங்கிக் கொடுக்க விருப்பம் கொண்டான். ஆனால் அதே கடை யில் விலை அதிகமில்லாத பளிச்சென்று இருந்த மோதி ரத்தைத் தேர்ந்தெடுத்து தோடுக்குப் பதிலாக இதையே வாங்கிக் கொடுக்குமாறு கெஞ்சினாள்.

திர்லோச்சனால் மோஸலை முழுமையாகப் புரிந்து கொள்ள முடியவில்லை, அவளோடு மணிக்கணக் காய்ப் படுத்திருக்கிறான், முத்தம் கொடுக்க அனுமதித் திருக்கிறாள், அணைத்துத் தழுவவும், தடவிக் கொடுக் கவும் அனுமதித்திருக்கிறாள். ஆனால் அதற்கு மேல் அவன் போக அனுமதித்ததே கிடையாது. அவனைக் கிண்டல் செய்ய, "நீ ஒரு சீக்கியன், நான் உன்னை வெறுக்கிறேன்" என்பாள்.

அவள் தன்னை வெறுக்கவில்லை என்று திர்லோச் சனுக்குத் தெரியும். அப்படியிருந்திருந்தால் அவனைச் சந்திக்க அவள் அக்கறை காட்டியிருக்க மாட்டாள். அவள் தான் விரும்பாதது எதையும் ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை. அவனோடு இரண்டு வருடங்கள் கூட அவளால் சேர்ந்து வாழ்ந்திருக்க முடியாது. தனக் குச் சவுகரியமாக இல்லை என்பதால், ஜட்டி அணி வதில்லை என்று தீர்மானித்திருக்கிறாள். திர்லோச் சன் பலமுறை அதன் அவசியத்தை அவளிடம் எடுத் துச் சொல்லியிருக்கிறான், அடக்கம் வேண்டுமென்று நினைவூட்டியிருக்கிறான். ஆனால் இதுபோன்ற விசயங் களுக்கு அவள் மதிப்புக் கொடுத்ததே கிடையாது.

திர்லோச்சன் அவளிடம் அடக்கம் பற்றிப் பேசும் போதெல்லாம், அவள் சலிப்புற்று, "இதெல்லாம் சரி யான அழுகின சமாச்சாரங்கள்" என்றுதான் சொல் வாள், "உனக்கு இது சங்கடமாக இருக்கிறது என்றால் கண்களை மூடிக்கொள். ஒருத்தியை வெளிக்காட்டா மல் முழுமையாக மறைக்கும் ஆடை ஏதாவது இருக்கி

றதா? அல்லது மனிதனின் கண்கள் ஊடுருவிப் பார்க்க முடியாத ஆடைகள் ஏதாவது இருக்கின்றதா? இந்த முட்டாள்தனத்தை எல்லாம் என்னிடம் பேசாதே... நீ சீக்கியன். எனக்குத் தெரியும் உன் பேண்டுக்குள்ளே நீ பைத்தியக்காரத்தனமாய், சின்ன டவுசர் போல் இருக்கும் ஜட்டியை அணிந்து கொண்டிருப்பாய்; இது கூட உன் நீண்ட முடி, தாடியைப் போல் உன் மதத்தின் ஒரு பகுதிதான். உன்னைப் போன்ற வளர்ந்த மனிதன், மதத்தை ஒருத்தனின் ஜட்டியோடு சம்பந்தப்படுத்துவதற்காக வெட்கப்பட வேண்டும்."

தொடக்கத்தில், இதுபோன்ற பேச்சுக்களைக் கேட்டு திர்லோச்சன் கோபம் கொள்வான். ஆனால் இதைப் பற்றியெல்லாம் சிந்திக்கும் போது அவள் சொன்னதை ஏற்றுக்கொள்ளும் நிலைக்கு வந்து, அவன் தனக்குள் சொல்லிக்கொள்வான்: "அவள் சொல்வது எல்லாமே தவறு என்று சொல்ல முடியாதுதான்."

தன் தலைமுடி, தாடியை விட்டொழிந்த பின் இத்தனை காலங்களாகத் தேவையில்லாமல் அதனைச் சுமந்ததாக நினைத்தான்.

தண்ணீர்த் தொட்டியை நெருங்கியவுடன் திர்லோச்சன் நின்று மோசமான கெட்ட வார்த்தைகளை வெளியே கொட்டினான். மோஸல் பற்றிய அவனின் சிந்தனை இப்போது கிர்பால் கௌர் பக்கம் திரும்பியது. அவன் காதலிக்கும் பெண் இப்போது ஆபத்திலிருக்கிறாள். வெறி பிடித்த முஸ்லிம்கள் சூழ்ந்திருக்கும் பகுதியில் சிறைப்பட்டது போல் இருக்கிறாள். இரண்டு மூன்று சம்பவங்கள் அங்கு ஏற்கெனவே நடந்து விட்டன. வம்பு செய்கிறவர்களை, வம்புகள் செய்வதிலிருந்து ஊரடங்கு உத்தரவு தடுக்கப்போவதில்லை. தெருவில் நுழையாமலேயே அவர்களால் கிர்பால் கௌர் மற்றும் அவளின் பெற்றோரைக் கொலை செய்ய முடியும்.

இத்தகைய சிந்தனைகளில் மூழ்கியிருந்த திர்லோச்சன், நகர்ந்து பெரிய குழாய் மேல் அமர்ந்துகொண்டான். அவனின் தலை முடி இப்போது வளர்ந்து இருந்தது. இன்னும் ஒரு வருடத்தில் நீண்ட கூந்தலைப் பெற முடியும் என்று நம்பிக்கையுடனிருந்தான். அவனின் தாடியும் வேகமாக வளர்ந்து கொண்டு வந்தது. ஆனாலும் அதை ரொம்ப நீளமாக வளரவிட வேண்டாம் என்று இருந்தான். 'ஃபோர்ட்' பகுதியில் இருக்கும் முடி வெட்டுபவன், முடி வெட்டப்பட்ட சுவடே இல்லாத அளவிற்குத் திறமையோடு, வேண்டிய அளவிற்கு முடியை வெட்டிவிடுவான். தன் விரல்களால் தன் மிருதுவான தலைமுடியைக் கோதி விட்டுச் சில்லென்று வீசிய காற்றை உள்வாங்கிப் பெருமூச்சு விட்டான். அவன் எழுந்து கொள்ள எத்தனித்த போது ஒரு மரச்செருப்பு சத்தத்தைக் கேட்டான். யாராக இருக்கும் என்று நினைத்துப் பார்த்தான் - இந்தக் கட்டடத்தில் நிறைய யூதப் பெண்கள் இருக்கிறார்கள். அவர்கள் எல்லோரும் வீட்டில் மரச் செருப்புதான் அணிந்து கொள்கிறார்கள். அந்தச் சத்தம் இன்னும் நெருக்கத்தில் வந்தது. அவன் மற்றொரு தண்ணீர்த் தொட்டியின் பக்கத்தில் மோஸலைப் பார்த்தான். அவள் யூதப் பெண்கள் வழக்கமாக அணியும் நீண்ட தளர்ச்சியான அங்கியை அணிந்திருந்தாள். உடலை இழுத்து வளைத்துக் கொட்டாவி விட்டாள். திர்லோச்சன் தண்ணீர்க் குழாயில் இருந்து எழுந்து நின்று தனக்குள் சொல்லிக்கொண்டான், 'பூமியில் எங்கிருந்து, திடீரென்று அவள் தோன்றுகிறாள். இந்த நேரத்தில் அவள் மொட்டை மாடிக்கு வரவேண்டிய அவசியம் என்ன?'

மோஸல் மறுபடியும் கொட்டாவி விட்டாள். அவள் அணிந்திருந்த தளர்ச்சியான அங்கி, அவளின் திடமான மார்பகங்களில் நீலநிற குருதிக்குழாய் பிதுங்கிக் கொண்டிருந்ததை வெளிப்படுத்தியது. திர்லோச்சன் இடுப்பிற்குக் கீழே கலக்கத்தை உணர்ந்தான்.

அவன் சத்தமாக இருமினான். மோஸல் திரும்பி அவனைப் பார்த்தாள். அவளின் மரச்செருப்பைத் தேய்த்துத் தேய்த்து நடந்து. அவனை நோக்கி நகர்ந்து வந்து அவனின் சிறு தாடியை முறைத்தபடியே, "திர்லோச்சன்! நீ மறுபடியும் சீக்கியனாக மாறிவிட்டாய்" என்றாள்.

திர்லோச்சனின் தாடி முடி அவனைக் குத்தத் தொடங்கியது, மோஸல் முன்னே நகர்ந்து, தன் கையின் பின்புறத்தால் அவனின் முகவாயைத் தடவிக் கொடுத்துப் புன்னகைத்தாள், "இப்போது இந்த பிரஷ் சுலபமாக என்னுடைய வெளிறிய நீல நிறச் சட்டையைச் சுத்தம் செய்ய உபயோகப்படும்... ஆனால் அந்தச் சட்டை தியோலாவில் பின்தங்கி விட்டது."

திர்லோச்சன் அமைதியாக இருந்தான், மோஸல் அவனின் கையைக் கிள்ளினாள். "ஏன் எதுவும் பேசமாட்டேன் என்கிறாய், சர்தார் சாகிப்?"

திர்லோச்சன் தான் செய்த பழைய தவறுகளை மீண்டும் செய்யக் கூடாது என்று இருந்தான். இருந்தாலும் விடியற்காலை பனி படர்ந்த வெளிச்சத்தில் மோஸலின் முகத்தை மிகக் கவனமாகப் பார்த்தான். அவளிடம் எந்த மாற்றமும் இல்லை. அவள் சற்றே மெலிந்திருந்தாள். "உனக்கு உடம்பு சரியில்லையா?" என்று கேட்டான்.

"இல்லை" பதில் தந்த மோஸல், தன்னுடைய குட்டையான தலை முடியை மெல்ல ஆட்டினாள்.

"நீ மெலிந்திருக்கிறாய்"

"நான் சாப்பாட்டைக் குறைத்து வருகிறேன்"

மோஸல் பெரிய தண்ணீர்க் குழாய் மீது அமர்ந்து கொண்டு, தன் மரச்செருப்பால் தரையில் தட்டிச் சத்தம் எழுப்பிக் கொண்டிருந்தாள்.

"ஆக நீ மறுபடியும் சீக்கியனாக மாறிக்கொண்டிருக்கிறாய்"

"ஆமாம்" என்றான் திர்லோச்சன் சற்று எதிர்ப்புணர் வோடு.

"வாழ்த்துகள்"

மோஸல் தன் மரச்செருப்பு ஒன்றைக் கையிலெடுத்து, அதைக் கொண்டு குழாயில் தட்டத் துவங்கினாள்.

"நீ வேறு ஏதேனும் காதல் விவகாரத்தைத் துவங்கிவிட்டாயா?"

"ஆமாம்" என்றான் திர்லோச்சன் மென்மையாக.

"வாழ்த்துகள். அவள் இந்தக் கட்டடத்தில் வசிக்கிறாளா?"

"இல்லை"

"அது மோசம்" மோஸல் தன் மரச்செருப்பை அணிந்து கொண்டாள், "ஒருத்தர் எப்போதும் தன்னைச் சுற்றி இருப்பவர்களைக் கவனித்துக் கொள்ள வேண்டும்".

திர்லோச்சன் அமைதியாக இருந்தான்.

மோஸல் எழுந்து கொண்டு மறுபடியும் தன் விரல்களால் அவனின் தாடியை வருடிக் கொடுத்தாள், "அந்தப் பெண் நீ தாடி வளர்க்க வேண்டுமென்று அறிவுரை சொன்னாளா?"

"இல்லை"

தாடியைச் சீர்செய்யும் போது அது சிக்கிக் கிடப்பதை உணர்வது போல் திர்லோச்சன் அசௌகரியமாக உணர்ந்தான். அவனின் 'இல்லை' ஓர் எதிர்ப்புணர்வால் சுற்றப்பட்டுக் கிடந்தது.

மோஸலின் உதடுகளில் உள்ள சாயப்பூச்சு பார்ப்பதற்கு இறைச்சி போல் இருந்தது. அவள் புன்னகைத்தாள். தன்னுடைய கிராமத்திலிருக்கும் இறைச்சிக் கடைக்காரன், ஓர் இறைச்சித் துண்டை இரண்டாகப் பிளந்து போட்டது போல் திர்லோச்சன் உணர்ந்தான்.

சிறிது நேரம் கழித்து அவள் சிரிக்கத் துவங்கினாள். "நீ உன் தாடியைச் சவரம் செய்தால் கடவுள் மீது சத்திய மாக நான் உன்னைத் திருமணம் செய்து கொள்கிறேன்."

மதிப்பிற்குரியவளும், கண்ணியமானவளும், மதநம் பிக்கைகளும் உடைய ஓர் இளம் கன்னியோடு காதல் கொண்டுள்ளேன் என்றும், அவளைத் திரும ணம் செய்துக் கொள்ளப்போகிறேன் என்றும் மோஸலி டம் சொல்ல நினைத்தான். அவளோடு ஒப்பிடும்போது மோஸல் கோரமானவள் என்றும், நம்ப முடியாதவள் என்றும் ஒழுக்கங்கெட்டவள் என்றும், சொல்ல நினைத் தான். ஆனால் அவன் சொன்னது இவ்வளவுதான்: "மோஸல்! நான் யாரைத் திருமணம் செய்து கொள்ளப் போகிறேன் என்று தீர்மானித்து விட்டேன், அவள் என் கிராமத்திலிருந்து வந்த எளிமையான, மதநம்பிக்கை கள் கொண்ட பெண். அதனால் மறுபடியும் என் முடியை வளர்த்துக்கொள்வது என்று முடிவெடுத்து விட்டேன்".

மோஸல் சிந்தித்துப் பழக்கப்பட்டவளில்லை என்றா லும், தான் ஏதோ சிந்தனையில் மூழ்கியிருப்பது போல் உணர்ந்தாள். பிறகு அவள் தன் மரச்செருப்பை வைத்து அரை வட்டம் போட்டு, "அவள் மதநம்பிக்கை கொண் டவள் என்றால் உன்னை எப்படி ஏற்றுக் கொள்வாள்? நீ உன் முடியை வெட்டி உள்ளாய் என்பது அவளுக்குத் தெரியாதா?" என்றாள். "அவளுக்குத் தெரியாது" என்று திர்லோச்சன் பதில் தந்தான். "நீ தியோலாலி சென்றி ருந்த போது நான் மறுபடியும் என் தாடியை வளர்க்கத் தொடங்கினேன் - சும்மா பழிவாங்கும் உணர்வோடு தான். அதன் பிறகு தான் நான் அவளைச் சந்தித்தேன், எனக்கு நீளமான முடி இல்லை என்று யாராலும் கண் டுபிடிக்க முடியாத அளவிற்கு, நான் என் தலைப்பாகை யைக் கட்டிக் கொள்வேன். என் தலைமுடி சீக்கிரத்தில் வளர்ந்து விடும்."

திர்லோச்சன் மிருதுவான, வளர்ந்து கொண்டிருக்கும் தன் முடியைக் கோதி விட்டுக்கொண்டான் மோஸல் தன் அங்கியை உயரே தூக்கி விட்டுக் கொண்டு, திடமாகவும் நல்ல நிறத்திலும் இருந்த அவளின் தொடையைச் சொறிந்து கொடுத்தாள்.

"இது ரொம்ப நல்லா இருக்கு... இங்கேயும் கொசு... பார் எவ்வளவு மோசமாக என்னைக் கடித்திருக்கிறது".

திர்லோச்சன் வேறு பக்கம் பார்க்கத் தொடங்கினான், மோஸல் தன் விரலில் எச்சிலைத் தடவி, கொசு கடித்த அந்த இடத்தில் தேய்த்தாள். பிறகு தன் அங்கியைக் கீழே நழுவ விட்டு நேராக நிமிர்ந்து நின்றாள்.

"எப்ப கல்யாணம்?"

"எதுவும் இன்னும் முடிவு செய்யப்படவில்லை" அவன் குரலில் பெரும் கவலை தெரிந்தது.

சற்று நேரம் அங்கு அமைதி நிலவியது. பிறகு அவனின் கவலையைப் புரிந்து கொண்டு, "நீ என்ன சிந்தித்துக் கொண்டிருக்கிறாய் திர்லோச்சன்?" என்று கேட்டாள். அந்த நேரத்தில் அவனுக்கு யாருடைய ஆறுதலாவது மிகவும் தேவையாக இருந்தது. அது மோஸலிடமிருந்து வருவதாக இருந்தாலும். அவளிடம் முழுக் கதையையும் சொன்னான். மோஸல் சிரித்தாள்.

"நீ வடிகட்டிய முட்டாள், போய் அவளை அழைத்து வா. இதில் என்ன கஷ்டமிருக்கிறது."

"என்ன கஷ்டம்? மோஸல், இந்தச் சிக்கலான சூழ்நிலையை உன்னால் புரிந்து கொள்ள முடியாது. நீ தன்னிச்சையான பெண். நமக்குள் நெருக்கமான உறவு சாத்தியப்படாமல் போனதற்கு அதுதான் காரணம். என் வாழ்க்கை முழுக்க நான் இதற்காக வருந்துவேன்."

மோஸல் தன் மரச்செருப்பை வேகமாகத் தண்ணீர்க் குழாயில் அடித்தாள் "உன் வருத்தத்தைத் தூக்கிக் குப்

பையில் போடு.. கேவலமான முட்டாளே, உன்னால் சிந் திக்க முடியாதா?... அந்தப் பெண்... அவள் பெயரென்ன... அவளை அந்தப் பகுதியிலிருந்து காப்பாற்ற ஏதாவது வழி கண்டுபிடித்தாகணும், ஆனால் நீ கடந்த காலத் தைப் பேசிக்கொண்டிருக்கிறாய். உனக்கும் எனக்கும் நிலையான உறவு என்பது எப்போதும் சாத்தியமே இல்லை.

நீ அறிவற்றவன்... பயந்தாங்கொள்ளி. எனக் குத் தேவைப்படுகிறவன் துணிச்சல் கொண்டவனாக இருக்க வேண்டும்... ஆனால் அதையெல்லாம் ஒதுக் கித் தள்ளு, வா நாம் போய் உன்னுடைய கௌரை காப் பாற்றலாம்".

மோஸல் அவனின் கையைக் கெட்டியாகப் பிடித் தாள், அவன் குழம்பிப்போய் கேட்டான், "எங்கிருந்து?"

"அவள் எங்கிருந்தாலும். என்னோடு வா, எனக்கு அந் தப் பகுதியை நன்றாகத் தெரியும்."

"ஆனால் நான் சொல்வதைக் கேள். நகரத்தில் ஊர டங்கு உத்தரவு இருக்கின்றது."

"மோஸலுக்குக் கிடையாது... வா"

அவனின் கரத்தைப் பிடித்து, படிக்கட்டுகளில் கொண்டு விடும் கதவை நோக்கி இழுத்துச் சென்றாள். கதவைத் திறந்து, படியில் இறங்க அவள் எத்தனித் தபோது, அப்படியே நின்று திர்லோச்சனின் தாடியைப் பார்த்தாள்.

திர்லோச்சன் கேட்டான் "என்ன விசயம்?"

"உன்னுடைய இந்தத் தாடி... சரி இருந்து விட்டுப் போகட்டும். அது ஒன்றும் அவ்வளவு நீளமாக இல்லை... நீ மட்டும் தலைப்பாகை இல்லாமல் இருந்தால் யாரும் உன்னைச் சீக்கியன் என்று நினைக்கவே மாட்டார்கள்".

"வெறும் தலையோடு?" சற்றுக் குழப்பத்தோடு கேட்டான் திர்லோச்சன். "நான் தலைப்பாகை இல்லாமல் வரமாட்டேன்".

மோஸல் மிகவும் அப்பாவித்தனமாய்க் கேட்டாள், "ஏன்?..."

திர்லோச்சன் ஒரு முடியைப் பிடித்து அதை நேர்ப்படுத்தினான். "இதை உன்னால் புரிந்து கொள்ள முடியாது, நான் தலைப்பாகை இல்லாமல் வருவது முறையல்ல" என்றான்.

"அது தான் ஏன்?"

"ஏன் புரிந்துகொள்ள மாட்டேன் என்கிறாய்? நான் தலைப்பாகை இல்லாமல் வெறும் தலையோடு இருப்பதை அவள் இதுவரை பார்த்தது இல்லை... எனக்கு நீண்ட முடி இருப்பதாக அவள் நினைத்துக் கொண்டிருக்கிறாள். இப்போது நான் அவளுக்கு உண்மையை வெளிப்படுத்த வேண்டாம் என்று இருக்கிறேன்."

மோஸல் தன் மரச்செருப்பால் கதவின் சட்டத்தில் வேகமாக உதைத்தாள். "நீ உண்மையில் வடிகட்டிய முட்டாள்... கழுதை... இது வாழ்வா சாவா பிரச்சனை... அவள் பெயரென்ன... உன் காதலி கௌர்...?"

திர்லோச்சன் விசயங்களை விளக்கிச் சொல்ல முயன்றான். "மோஸல் அவள் மிகவும் மத நம்பிக்கை கொண்டவள், நீண்ட முடியில்லாமல் என்னைப் பார்த்துவிட்டால் வெறுக்கத் தொடங்கி விடுவாள்".

மோஸல் மிகவும் சலிப்புற்றாள். "உன் காதலி எக்கேடு கெட்டாவது ஒழியட்டும்... எல்லாச் சீக்கியர்களும் உன்னைப் போல் முட்டாள்கள்தானா? ....அவளின் வாழ்க்கை ஆபத்தில் இருக்கிறது. ஆனால் நீ தலைப்பாகை அணிய வேண்டும் என்று சொல்கிறாய். அடுத்து நீ சிறு டிரௌசரை ஜட்டியாக அணிய வேண்டும் என்று சொல்வாய்."

"நான் எப்போதும் அதைத்தான் அணிந்திருக்கிறேன்" என்றான் திர்லோச்சன்.

"நன்றாகத்தான் சொல்கிறாய், கடவுளுக்குப் புண்ணியமாகப் போகட்டும், ஒரு விசயத்தைப் புரிந்து கொள் - அந்தப் பகுதி மிகவும் வெறிபிடித்த முஸ்லிம்களைக் கொண்டது, நீ தலைப்பாகையோடு அங்கு சென்றால் இறைச்சியாக்கப்படுவாய்".

திர்லோச்சன் சுருக்கமாகத் தன் பதிலைத் தந்தான், "எனக்குக் கவலை இல்லை. நான் என் தலைப்பாகையோடுதான் வருவேன். என்னால் என் காதலைச் சிக்கலில் மாட்டி விட முடியாது."

மோஸல் கோபத்தில் வெடித்தாள், "கழுதை, உன்னைக் கொலை செய்த பிறகு, உனது காதல் எங்கிருக்கும்? அப்புறம் உன்னுடைய கௌர்... அந்தப் பைத்தியக்காரப் பெண்ணின் பெயரென்ன... அவளும் கொலை செய்யப்பட்டால்...? அப்புறம் அவளின் குடும்பம்.... நீ உண்மையில் சீக்கியன் தான். அதுவும் கடவுள் புண்ணியத்தில் புத்தி கெட்ட சீக்கியன்..."

திர்லோச்சன் முகமெல்லாம் வெளிறிப் போக, "அப்படியெல்லாம் பேசாதே" என்று கத்தினான்.

மோஸல் உரக்கச் சிரித்தாள். தன் கரங்களால் அவனின் கழுத்தைச் சுற்றி வளைத்துக் கொண்டு அவனைக் கொஞ்சம் பிடித்து ஆட்டிவிட்டு, "என் செல்லம் நீ விரும்புவது போல் செய். போய் உன் தலைப்பாகையை அணிந்து கொண்டு வா. நான் கீழே பஜாரில் இருக்கிறேன்?" என்றாள்.

அவள் படியிறங்கத் தொடங்கினாள், திர்லோச்சன் அவளை நிறுத்தி, "நீ உடை மாற்றிக் கொள்ளவில்லையா" என்று கேட்டான்.

"இல்லை" மோஸல் தீர்மானமாகத் தன் தலையை அசைத்துக் கீழே இறங்கினாள். அவளின் மரச்செருப்பு

எழுப்பிய 'டப்... டப்...' சத்தத்தை அவள் கீழ்த் தளம் போகும் வரை திர்லோச்சனால் கேட்க முடிந்தது. பிறகு தன் முடியை உள்நோக்கி மடித்து விட்டுக் கொண்டு, அவனின் வீட்டிற்கு வந்தான். வேகமாகத் தன் ஆடை களை மாற்றிக் கொண்டான், தலைப் பாகையைக் கட் டிக் கொண்டான், தலையில் அதைச் சரி செய்து கொண்டு வீட்டைப் பூட்டிக் கீழே வந்தான்.

நடைபாதையில் மோஸல் ஏறக்குறைய ஓர் ஆணைப் போல் புகை பிடித்துக்கொண்டு நின்றிருந்தாள். திர் லோச்சன் அவளை நெருங்கியவுடன் குறும்பாக, அவ ளின் வாய் முழுக்க இருந்த புகையை அவனின் முகத் துக்கு நேராக ஊதினாள். திர்லோச்சன், "நீ கீழ்த்தர மான பொறுக்கி" என்றான் கோபத்தில். மோஸல் புன்ன கைத்தாள். "இப்ப நீ சொன்னது ஒண்ணும் புதுசில்லே, இதே போல் பலமுறை என்னை நீ அழைத்திருக்கிறாய்". பிறகு அவனின் தலைப்பாகையைப் பார்த்து, "நன்றா கத்தான் கட்டிக் கொண்டிருக்கிறாய், உனக்கு நீண்ட முடி இருப்பது போன்ற தோற்றத்தைத் கொடுக்கிறது" என்றாள்.

பஜாரில் மயான அமைதி நிலவியது. மெல்லிய காற்று வீசியது. ஆனால் அதுவும் ஊரடங்கு உத்தரவு அமுலில் இருந்ததால் பயம் கொண்டது போல் வீசியது. விளக்கு கள் எரிந்து கொண்டிருந்தாலும் அவை நோய் கொண் டது போல் இருந்தன. வழக்கமாக இந்த நேரத்தில் 'டிராம்'கள் அதன் தண்டவாளங்களில் ஓடிக்கொண்டி ருக்கும். மனிதர்களின் போக்குவரத்து தொடங்கி யிருக் கும். ஆனால் இப்போது, மனிதர்கள் இங்கு எப்போ தும் நடந்து சென்றதே கிடையாது என்பது போலவும், இனியும் எவரும் நடக்க மாட்டார்கள் என்பது போலவும் தோற்றத்தைத் தந்தது.

மோஸல் முன்னால் சென்று கொண்டிருந்தாள். நடை பாதையில் இருந்த கற்களோடு அவளின் மரச்செருப்பு உரசி சத்தம் எழுப்பியது. சுற்றிலும் அமைதி நில வியதால், அந்தச் சத்தம் எதிரொலித்தது. திர்லோச் சன் தனக்குள் மோஸலைச் சபித்துக் கொண்டிருந் தான். இந்த மரச்செருப்புகளைக் காட்டிலும் இன்னும் கண்ணியமான வேறு ஏதேனும் ஒன்றை அவள் ஏன் அணியக் கூடாது? அவள் அதைக் கழற்றி விட்டு வெறுங் காலில் நடக்கட்டும் என்று சொல்ல வேண்டும் போல் நினைத்தான். அவள் நிச்சயமாக ஏற்றுக்கொள்ள மாட் டாள் என்று தெரிந்து இருந்ததால் அமைதியாக இருந் தான்.

திர்லோச்சன் மிகவும் பயந்து கிடந்தான். ஓர் இலை அசைந்தாலும் அவனின் இதயத் துடிப்பு நின்று போனது. ஆனால் மோஸல் எந்தப் பயமும் இல்லாமல் - ஏதோ நிதானமாக ஊர்ச் சுற்றிப் பார்க்க நடப்பது போல, புகையை இழுத்து, அதை வெளியே விட்டவாறு நடந்து கொண்டிருந்தாள்.

அவர்கள் ஒரு சதுக்கத்தை அடைந்தபோது, ஒரு போலீஸ்காரன் கத்தினான். "எங்கு போகிறீர்கள்?". திர் லோச்சன் பயத்தால் உறைந்து போனான். மோஸல் அந்தப் போலீஸ்காரனை நோக்கிச் சென்று, தன் தலை முடியைக் கொஞ்சம் ஆட்டி, "ஓ... நீயா! என்னை அடை யாளம் தெரியவில்லையா?... நான் தான் மோஸல்..." என்றாள். பிறகு ஒரு சந்தைக் காட்டி, "...அங்கு, அந்தப் பக்கத்தில் ...என் சகோதரி இருக்கிறாள்... அவளுக்கு உடம்பு சரியில்லை... அவளுக்காக நான் டாக்டரை அழைத்துச் செல்கிறேன்... " என்றாள்.

போலீஸ்காரன் அவளை நினைவு கூர முயன்றான். அவள் எங்கிருந்து தான் ஒரு சிகரெட் பாக்கெட்டை எடுத்தாள் என்பது கடவுளுக்குத்தான் தெரியும்.

அதைப் போலீஸ்காரனிடம் நீட்டி, "புகை பிடி" என்றாள். போலீஸ்காரன் ஒரு சிகரெட்டை எடுத்துக்கொண்டான். மோஸல் தன் வாயில் இருந்த சிகரெட்டை எடுத்து, "இந்தா நெருப்பு" என்றாள். போலீஸ்காரன் சிகரெட் டைப் பற்ற வைத்துக் கொண்டான். மோஸல் போலீஸ் காரனைப் பார்த்துக் கண் சிமிட்டினாள். திர்லோச்ச னைப் பார்த்துக் கண் சிமிட்டினாள். பிறகு ஒரு சந்தை நோக்கி நடந்தார்கள். அவர்கள் போக வேண்டிய பகுதி, அதைக் கடந்திருந்தது. அவளுக்கு ஊரடங்கு உத்த ரவை மீறுவதில் ஒரு சந்தோஷம் இருக்கிறது என்று திர் லோச்சன் நினைத்தான்.

அவள் அபாயங்களோடு விளையாடுவதை விரும்பி னாள். ஜுகு கடற்கரைக்கு அவள் திர்லோச்சனுடன் சென்றால், அவனுக்குப் பெரும் தொந்தரவாக மாறிவி டுவாள். அவள் ரொம்ப ஆழத்திற்குச் சென்று உயரும் அலைகளுக்கு எதிரே நீந்துவாள். கடலில் மூழ்கிவிடு வாளோ என்று அவன் அச்சம் கொள்வான். அவள் திரும்பி வரும் போது, வேகமான அலைகள் அவளின் உடலில் ஏற்படுத்திய சேதங்கள், அடையாளங்களாகப் பதிந்து கிடக்கும். அவை பற்றி அவள் கவலைப்பட்டதே கிடையாது.

மோஸல் முன்னே நடந்து கொண்டிருந்தாள். திர் லோச்சன் அவளைத் தொடர்ந்தான். 'எவரேனும் திடீ ரென்று கத்தியோடு வந்துவிட்டால்?' என்ற பயத்தோடு திர்லோச்சன் சதா சுற்றுமுற்றும் பார்த்துக்கொண்டே நடந்தான். மோஸல் நின்றாள். திர்லோச்சன் அவளரு கில் வந்த உடன், அவன் எதையோ புரிந்துகொள்ள வேண்டும் என்று நினைத்து, ஏதோ சொன்னாள், "திர் லோச்சன் கண்ணா, பயத்தோடு நடக்காதே. நீ இப்படி நடந்து கொண்டால் நிச்சயம் ஏதாவது நடக்கும். நான் உண்மையைத்தான் சொல்கிறேன். நான் இதையெல்

லாம் அனுபவித்திருக்கிறேன்." திர்லோச்சன் அமைதி யாக இருந்தான்.

கிர்பால் கௌர் வசிக்கும் பகுதிக்குள் நுழைய ஒரு தெருவைக் கடந்த உடன் மோஸல் திடீரென்று நின் றாள். சற்றுத் தொலைவில் ஒரு மார்வாடிக் கடை சூறை யாடப்பட்டுக் கொண்டிருந்தது. சில கணங்கள் அவள் நிலைமையை மதிப்பிடத் தொடங்கினாள். பிறகு, "ஒன் றும் கவலையில்லை. நாம் போகலாம்" என்றாள்.

இருவரும் நடக்கத் தொடங்கினார்கள். பெரிய தட்டை தன் தலையில் சுமந்து நடந்துகொண்டிருந்த ஒருவன் திர்லோச்சன் மீது மோத, அது கீழே விழுந்தது. திர் லோச்சனை அந்த மனிதன் முறைத்தான். திர்லோச் சன் சீக்கியன் என்பது தெள்ளத்தெளிவாகத் தெரிந் தது. அந்த மனிதனின் கை அவனது இடுப்பை நோக்கி நகர்ந்தது. இந்தச் சமயத்தில் சட்டென்று மோஸல் குடித் திருப்பது போல் இந்தப் பக்கம் அந்தப் பக்கம் என்று தள்ளாடிக்கொண்டே வந்தாள். அந்த மனிதன் மீது வேகமாக மோதி போதையேறியது போன்ற குரலில், "நீ என்ன செய்ய முயற்சிக்கிறாய், நீ உன் சகோதரனைக் கொலை செய்யப் போகிறாயா?... நான் இவனைத் திரும ணம் செய்து கொள்ளப் போகிறேன்" என்றாள். பிறகு திர் லோச்சன் பக்கம் திரும்பி, "கரீம்! அந்தத் தட்டை எடுத்து இவரின் தலையில் வை" என்றாள்.

அந்த மனிதன் தன் கையைப் பின்னெடுத்து, மோஸலை வெறிபிடித்த கண்களோடு பார்த்தான். தன் முழங்கையால் அவளின் முலையில் இடித்து, "சந்தோ சமாய் இரு ஜானி, சந்தோசமாய் இரு" என்றான். தட்டைத் தூக்கிக்கொண்டு அவன் மறைந்தான். திர் லோச்சன் முணுமுணுத்தான். "எவ்வளவு அருவறுப்பாக இருக்கிறது... அந்தப் பொறுக்கி நடந்து கொண்ட விதம்". "இதில் அருவறுப்பு ஏதும் இல்லை... நாம் போகலாம்"

என்று சொல்லி வேகமாக நடக்கத் தொடங்கினாள். திர் லோச்சனும் தன் நடையின் வேகத்தைக் கூட்டினான்.

கடைசியாக அவர்கள் கிர்பால் கௌர் வசித்து வந்த பகுதியை அடைந்தார்கள். "நாம் இப்போது எந்தத் தெருவுக்குப் போக வேண்டும்?" என்று மோஸல் கேட் டாள். திர்லோச்சன்,

"இடது பக்கம் மூன்றாவது. மூலையில் உள்ள வீடு தான் அவளுடையது" என்றான்.

அவன் சொன்ன பக்கம் மோஸல் நடக்கத் தொடங்கி னாள். எங்கும் பூரண அமைதி நிலவியது. அந்தப் பகுதி மிகவும் நெருக்கமான குடியிருப்புகளைக் கொண்டது என்றாலும், ஒரு குழந்தை அழும் சத்தம் கூடக் கேட்க வில்லை. அவர்கள், அந்தக் கட்டடத்திற்கு அருகாமை யில் வந்த போது ஏதோ அசம்பாவிதம் நடப்பதை அவர் களால் பார்க்க முடிந்தது. அந்தக் கட்டடத்திலிருந்து ஒருவன் வேகமாக வெளியேறி மற்றொரு கட்டடத்திற் குள் நுழைந்தான். மூன்று ஆண்கள் அந்தக் கட்டடத்தி லிருந்து வெளியேறினார்கள். சுற்றும்முற்றும் பார்த்து மற் றொரு கட்டடத்திற்குள் நுழைந்தார்கள். மோஸல் ஏதோ தீங்கு நடக்கப் போவதை உணர்ந்தது போல், தன்னை மறைத்துக் கொள்ளுமாறு திர்லோச்சனிடம் செய்கை காட்டினாள். பிறகு மென்மையாகச் சொன்னாள், "திர் லோச்சன் கண்ணா, அந்தத் தலைப்பாகையை கழட்டு". அவன் பிடிவாதமாய், "எந்தச் சூழ்நிலையிலும் முடியாது" என்றான்.

மோஸல் சலிப்புற்றாலும் இதை மட்டுமே சொன்னாள்,

"உன் விருப்பம் போல, ஆனால் நம் முன்னே என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று உன்னால் பார்க்க முடி யவில்லையா?"

அங்கு மோசமானது நடந்து கொண்டிருக்கிறது என் பது மட்டும் தெளிவாயிற்று.

வலது பக்கத்திலிருந்த கட்டடத்திலிருந்து இரண்டு நபர்கள் தங்கள் முதுகில் கோணி மூட்டையைச் சுமந்து, வெளியே வந்ததைப் பார்த்தபோது, மோஸல் உச்சந் தலையில் இருந்து உள்ளங்கால் வரை நடுங்கித்தான் போனாள். அந்தக் கோணிப்பையிலிருந்து அடர்த்தி யான வண்ணத் திரவம் ஏதோ சொட்டிக்கொண்டிருந் தது. மோஸல் தன் உதடுகளைக் கடிக்கத் தொடங் கினாள். அவள் சிந்தித்துக் கொண்டிருந்தாள். அந்த இரண்டு நபர்களும், அந்தத் தெருவின் கடைசிக்குச் சென்று, பார்வையிலிருந்து விலகிய பிறகு திர்லோச்ச னிடம், "இங்க பார், நான் அந்த மூலைக் கட்டடத்திற்கு வேகமாய் ஓடுகிறேன். என்னைத் துரத்திக்கொண்டு வருவதுபோல் என் பின்னால் வேகமாக ஓடிவா... புரிந் ததா? ஆனால் நாம் இதை மிகவும் வேகமாகச் செயல்ப டுத்த வேண்டும்" என்றாள்.

திர்லோச்சனின் பதிலுக்குக் காத்திராமல் மரச்செருப் போடு அந்த மூலைக் கட்டடத்தை நோக்கி வேகமாக ஓடத் தொடங்கினாள். திர்லோச்சன் அவள் பின்னால் ஓடினான். சில நிமிடங்களில் அவர்கள் கட்டடத்திற்குள் இருந்தார்கள். மாடிப்படிக்கு அருகில் மூச்சு நின்று போய் திர்லோச்சன் நின்று கொண்டிருந்தான். மோஸல் எந்தப் பாதிப்புக்கும் ஆளாகவில்லை, அவள் அவனிடம் கேட் டாள், "எந்தத் தளம்?". "இரண்டு" திர்லோச்சன் தன் உத டுகளை ஈரப்படுத்திக்கொண்டு சொன்னான்.

"வா போகலாம்" என்று மோஸல் படியேறத் தொடங்கி னாள். திர்லோச்சன் அவளைப் பின் தொடர்ந்தான்.

மாடிப்படிகளில் இரத்தம் சிதறிக் கிடப்பதைப் பார்த் தவுடன் அவன் எலும்புகள் ஊடே நடுக்கம் பாய்ந்தது. அவர்கள் இரண்டாவது தளத்திற்கு வந்தவுடன், திர் லோச்சன் நிலைப்படியில் சில அடிகள் நடந்து ஒரு வீட்டின் கதவைத் தட்டினான். மோஸல் படிக்கட்டு

கள் பக்கத்தில் நின்று கொண்டிருந்தாள். திர்லோச்சன் மறுபடியும் கதவைத் தட்டி, தன் முகத்தைக் கதவின் இடுக்கில் பதித்து, "மெக்னாசிங்ஜீ..., மெக்னாசிங்ஜீ...." என்று கூப்பிட்டான். எவரோ உள்ளிருந்து கேட்டார்கள், "யாரது?". திர்லோச்சன் தான் யார் என்று சொன்னான். கதவு திறக்கப்பட்டது. திர்லோச்சன் மோஸலுக்குச் சைகை செய்தான். அவள் வேகமாக வந்தாள். இருவரும் உள்ளே நுழைந்தார்கள். மோஸல் தனக்குப் பக்கத்தில் மெலிந்த பெண் ஒருத்தி பயத்தில் உறைந்துபோய் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தாள். சில நொடிகளில் மோஸல் அவளை அளந்தெடுத்தாள். அவளின் அங்கங்கள் மிருதுவாகவும், அவளின் மூக்கு மிக அழகாகவும் இருந்தது. அவள் ஜலதோசத்தால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தாள். மோஸல் அவளை அணைத்துக் கொண்டு, தன் அங்கியின் கீழ்ப் பகுதியைப் பிடித்து உயர்த்தி அவளின் மூக்கைத் துடைத்துவிட்டாள். திர்லோச்சனின் முகம் சிவந்தது. மோஸல் மிகவும் பாசத்துடன், "இனி நீ எதற்கும் பயப்பட வேண்டாம். திர்லோச்சன் உன்னை அழைத்துப் போக வந்திருக்கிறார்" என்றாள் கிர்பால் கௌரிடம்.

கிர்பால் கௌர் தன்னை மோஸலிடம் இருந்து விடுவித்துக் கொண்டு, இன்னும் பயந்திருந்த கண்களோடு திர்லோச்சனைப் பார்த்தாள். "சர்தார் சாகிப்பைச் சீக்கிரமாகக் கிளம்பச் சொல். அப்புறம் உன் தாயையும். ஆனால் எல்லாம் வேகமாக நடக்க வேண்டும். கொஞ்சம் கூட தாமதிக்க நேரமில்லை" என்றான் திர்லோச்சன்.

அந்தச் சமயத்தில் மேல் தளத்தில் ஏதோ சண்டை நடப்பதும் எவரோ வீறிடும் சத்தமும் கேட்டது. கிர்பால் கௌர் தொண்டையிலிருந்து ஏதோ தப்பி வெளியேறியது. "அவனைப் பிடித்துவிட்டார்கள்" அவள் முணுமுணுத்தாள்.

"யாரை?" என்று கேட்டான் திர்லோச்சன்.

கிர்பால் கௌர் பதில் சொல்ல முயன்றபோது, மோஸல் அவளின் கரங்களைப் பிடித்து ஒரு மூலைக்கு இழுத்துச் சென்றாள்.

"அவன் எக்கேடு கெட்டு ஒழியட்டும். உன் ஆடை களைச் சீக்கிரமாகக் மாற்றிக் கொள்" கிர்பால் கௌர் ஏதும் சொல்லும் முன்பு, மோஸல் அவளின் சட் டையைக் கழற்றி விட்டெறிந்தாள். கிர்பால் கௌர் தன் நிர்வாண உடம்பைத் தன் கரங்களால் மறைத் துக்கொண்டு பயத்தால் முகம் வெளிறிப்போய் நின்று கொண்டிருந்தாள். திர்லோச்சன் தன் முகத்தைத் திருப் பிக் கொண்டான். மோஸல் தன் அங்கியைக் கழற்றி கிர் பால் கௌருக்கு அணிவித்தாள். இப்போது அவள் நிர் வாணமாய் இருந்தாள். வேகமாகக் கிர்பால் கௌரின் சல்வார் நாடாவைக் கட்டி, திர்லோச்சன் பக்கம் திரும்பி, "அவளை அழைத்துப் போ... ஆனால்... இரு" அவள் கிர் பால் கௌரின் தலைமுடியைக் கட்டிவிட்டாள். "இப்ப போ... வேகமாக"

கிர்பால் கௌரை "வா, போகலாம்" என்று அழைத்த திர்லோச்சன் சட்டென்று நின்றான். முழு நிர்வாணமாய் இருந்த மோஸல் பக்கம் திரும்பி அவளைப் பார்த்தான்.

"நீ ஏன் கிளம்ப மாட்டேன் என்கிறாய்" என்று எரிச்ச லோடு மோஸல் கேட்டாள். திர்லோச்சன் அமைதியா கச் சொன்னான், "அவளின் பெற்றோரும் இங்குதான் இருக்கிறார்கள்."

"அவர்கள் எக்கேடு கெட்டு ஒழியட்டும்.. இவளை நீ அழைத்துப் போ"

"நீ"

"நான் வருகிறேன்"

திடீரென்று நிறைய மனிதர்கள் மேல் தளத்திலிருந்து இறங்கி வரும் சத்தம் கேட்டது. இவர்களின் வீட்டின் கதவருகில் வந்து, அதை எப்படியாவது உடைத்துவி டவேண்டும் என்பது போல் கதவைத் தட்டினார்கள். கிர்பால் கௌரின் பார்வையற்ற தாயும், பக்கவாதம் வந்த தந்தையும் மற்றோர் அறையில் ஏதோ புலம்பிக் கொண் டிருந்தார்கள். ஒரு கணப்பொழுது மோஸல் ஏதோ சிந் தித்து, தன் தலையை மெல்ல அசைத்து, "இப்போது ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. நான் கதவைத் திறக் கிறேன்..." கிர்பால் கௌரின் தொண்டையில் ஏதோ அடைத்தது. அவளால் சொல்ல முடிந்ததெல்லாம் இது தான், "கதவு". மோஸல், திர்லோச்சனிடம் தொடர்ந்து பேசிக்கொண்டிருந்தாள், "நான் கதவைத் திறந்து வெளியே போகிறேன். நீ என் பின்னால் ஓடிவா. நான் படியேறிப் போகிறேன், நீ என்னைத் தொடர்ந்து வா. இப் போது கதவைத் தட்டிக்கொண்டிருக்கும் இவர்கள் எல் லாவற்றையும் மறந்து நம் பின்னே ஓடிவருவார்கள்".

"பிறகு?" திர்லோச்சன் கேட்டான்.

"இந்தக் குழப்பத்தில் உன்னுடைய இந்தக் கௌர்... அவள் பெயரென்ன... வெளியேறிவிட வேண்டும். அவள் அணிந்திருக்கும் ஆடையில் யாரும் எதுவும் செய்ய மாட்டார்கள்"

திர்லோச்சன் எல்லாவற்றையும் கிர்பால் கௌரிடம் வேகமாக விளக்கிச் சொன்னான்.

அடித்தொண்டையிலிருந்து அலறியபடியே, மோஸல் கதவைத் திறந்து வெளியே இருந்த நபர்கள் மீது விழுந் தாள். அவர்கள் முழுமையான வியப்பில் தாக்கப்பட்டார் கள். மோஸல் எழுந்து படியேறி ஓடத் தொடங்கினாள். திர்லோச்சன் அவள் பின்னே ஓடினான். எல்லோரும் வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

மோஸல் எதைப் பற்றியும் கவலைப்படாமல் படியே றிக் கொண்டிருந்தாள். மரச்செருப்பு அவளின் பாதங் களில் இருந்தது. கதவைத் தட்டிக் கொண்டிருந்த நபர்கள் தங்களைத் தாக்கிய அதிர்ச்சியிலிருந்து சுதா ரித்துக் கொண்டு இவர்கள் பின்னால் ஓடத் தொடங்கி னார்கள். திடீரென்று மோஸல் வழுக்கிக் கீழே விழுந் தாள். இரும்புக் கைப்பிடியில் இடித்துக் கொண்டு, படிக் கட்டுகளில் மோதி உருண்டு நடைக்கூடத்தில் வந்து விழுந்தாள். திர்லோச்சன் வேகமாக வந்து, அவளின் மூக்கிலும் வாயிலும் இரத்தம் கசிந்துகொண்டிருப் பதைப் பார்த்தான். அவளின் காதுகளிலும் இரத்தம் இருந்தது. கதவை உடைக்க வந்தவர்கள் அவளைச் சுற்றி நின்றார்கள். என்ன நடந்தது என்று எவரும் கேட் கவில்லை. எல்லோரும் அமைதியாய் உடல் முழுக் கக் காயம் பட்டிருந்த மோஸலின் நிர்வாண உடம்பைப் பார்த்து கொண்டு நின்றார்கள். திர்லோச்சன் அவளின் கையைப் பிடித்து, "மோஸல்... மோஸல்" என்று கத்தி னான். மோஸல் தன் பெரிய யூதக் கண்களைத் திறந்து -அது இறைச்சி போல சிவப்பாக இருந்தது-புன்னகைத் தாள். திர்லோச்சன் தன் தலைப்பாகையை எடுத்து விரித்து அவளின் நிர்வாண உடம்பில் போர்த்தினான். மோஸல் மறுபடியும் புன்னகைத்துத் தன் வாயிலிருந்து வந்த இரத்தக் குமிழியை ஊதித்தள்ளி திர்லோச்சனி டம், "போய் என் ஜட்டி அங்கு இருக்கிறதா என்று பார்... நான் சொல்ல வருவது..."

திர்லோச்சன் அவள் சொல்ல வருவதைப் புரிந்து கொண்டாலும் எழுந்து போக விரும்பவில்லை. மோஸல் கோபமாக,

"நீ உண்மையிலேயே சீக்கியன் தான்... போ, போய் பாரு அது அங்கு இருக்கிறதா என்று..."

திர்லோசான், கிர்பால் கௌரின் வீட்டிற்குச் சென்றான். மோஸல் தன்னுடைய பார்வை மங்கிய கண்களால் சுற்றிலும் இருந்தவர்களைப் பார்த்தாள், "இந்த மனிதன் ஒரு முசல்மான்... முரட்டு ஆசாமி... பொறுக்கிக் கூட்டத்தின் தலைவன் போன்றவன்.... நான் அவனைச் சீக்கியன் என்றே அழைப்பேன்..."

திர்லோச்சன் திரும்பி வந்தான். கிர்பால் கௌர் தப்பித்து விட்டாள் என்று கண்களால் தெரிவித்தான். மோஸல் பெருமூச்சு விட்டாள். இதனால் அவளின் வாயிலிருந்து நிறைய இரத்தம் வெளியேறியது. "சே... என்ன இழவு இது" என்று சொல்லித் தன் மணிக்கட்டால் தன் வாயைத் துடைத்துக் கொண்டாள்.

திர்லோச்சனிடம், சொன்னாள்: "சரிடா செல்லம், பை பை"

திர்லோச்சன் ஏதோ சொல்ல முயன்றான். ஆனால் வார்த்தை தொண்டையில் அடைபட்டது.

திர்லோச்சனின் தலைப்பாகை துணியைத் தன் உடம்பின் மீதிருந்து எடுத்து "இதை எடுத்துப் போ... உன்னுடைய இந்த மதத்தை..."

அவளின் கரம், அவளின் திடமான பருத்த மார்பகங்களின் மீது உயிரற்று விழுந்தது.

***



# நூறு விளக்குகளின் வெளிச்சம்

கைஸர் பாக் வெளியே ஒரு சதுக்கத்தில் டோங் காக்கள் நிறுத்தப்படும் இடத்தில் இருந்த ஒரு விளக் குக் கம்பத்தில் சாய்ந்துகொண்டு அவன் அமைதியாக நின்று கொண்டிருந்தான். நின்றபடியே அவன் சுற்றிலும் பார்த்து, "என்ன மோசமான பாலைவனம் போல் இருக் கிறது" என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

இதே கைஸர் பாக் இரண்டு வருடங்களுக்கு முன்பு எவ்வளவு பரபரப்போடும், கோலாகலமாகவும் இருந் தது.. இப்போது எல்லாம் வெறிச்சோடிப் போய் அழுது வடிகிறது. ஒரு சமயத்தில் ஆண்களும் பெண்களும் நாகரிகமான உடைகளில் நிதானமாகவும், சந்தோஷ மாகவும் இங்கு சுற்றிக் கொண்டிருந்தார்கள். இப் போதும் பஜாரில் கூட்டம் அலைமோதிக்கொண்டிருக்கி றது. ஆனால் போக்கிரிகளாலும், கோரமானவர்களாலும் நிரம்பியிருந்தது. சிமெண்ட் கட்டடங்கள் அதன் நிறங் களை இழந்து, அவை ஒன்றை ஒன்று, கணவனை இழந்த பெண் போல சூன்யப் பார்வையில் பார்த்துக் கொண்டிருந்தன. அவன் பார்த்த அந்த சந்தோசங்கள் எல்லாம் எங்கு போயிற்று என்று வியந்தான். அவன் இரண்டு வருடங்களுக்கு முன் முதல் முறையாக இங்கு வந்திருந்தான். ஒரு கல்கத்தா கம்பெனி நல்ல சம்ப ளத்திற்கு அவனை அழைத்திருந்தது. அவனால் முடிந்த மட்டும் கைஸர்

பாக்கில் ஓர் அறை எடுக்கப் பல சிபாரிசுகளோடு முயன்றும் தோற்றுப்போனான். இப்போது காய்கறி வியா பாரிகள், முடி வெட்டுபவர்கள், துணி நெய்பவர்கள் எல் லாம் அந்த அடுக்கு மாடிக் குடியிருப்புகளில் இருப்ப தைப் பார்த்தான். முன்பு ஒரு பிலிம் கம்பெனியின் அலு வலகம் இருந்த இடம் இப்போது சமையலறையாக மாறி யிருந்தது. ஒரு காலத்தில் செழிப்பானவர்கள், பொழு துபோக்கிற்காகக் கூடியிருந்த இந்த இடம் இப்போது சலவைக்காரர்கள் அழுக்குத் துணிகளைத் துவைத்து உலர்த்தும் இடமாக மாறியிருக்கிறது. இரண்டே வருடத் தில் என்ன ஒரு மாற்றம்! அவனால் நம்ப முடியவில்லை. நண்பர்கள் மூலமாகவும் செய்தித்தாள்கள் மூலமாகவும் இந்த இடத்தைத் தாக்கிய புயலைப் பற்றி அறிந்திருந் தான்: அது மனிதர்கள் மனிதர்களைக் கொலை செய்ய வைத்தது. பெண்களை மோசமாக எல்லா விதங்களி லும் அவமரியாதைகளுக்கு உட்படுத்தியது. அத்தோடு நிற்காமல் அந்தப் புயல் கட்டடங்களில் உள்ள மர வேலைப்பாடுகளிலும் செங்கற்களிலும் கூட மோசமாய் விளையாடியிருந்ததைத்தான் அவனால் நம்பவே முடி யவில்லை. அவற்றிடம் இருந்த கம்பீரத்தையெல்லாம் அது பறித்து விட்டது. அந்தப் புயலின் போது பெண் கள் நிர்வாணப்படுத்தப்பட்டு அவர்களின் மார்பகங்கள் வெட்டி எறியப்பட்டன என்றும் கேள்விப்பட்டிருந்தான். இப்போது எல்லாமே அதன் இளமையை இழந்து நிர்வா ணமாய் நிற்பது போல் தோன்றியது.

தன்னுடைய நண்பனுக்காகக் காத்துக்கொண்டிருந் தான். அவன் மூலமாக தங்குவதற்கான இடத்தைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அவனின் நண்பன், கைஸர் பாக் டோங்கா நிறுத்தத்திற்கு அருகில் காத்திருக்கச் சொல்லியிருந்தான்.

இரண்டு வருடங்களுக்கு முன்பு ஒரு வேலை விசய மாக இங்கு வந்தபோது இந்த டோங்காக்கள் நிறுத்து மிடம் மிகவும் பிரபலமாக இருந்தது. மிகச்சிறந்த டோங் காக்கள் இங்கு நிறுத்தப்பட்டிருந்தன. அதற்குக் கார ணம் இந்த இடம் வியாபார மையமாய் விளங்கியது. சந் தோஷமாய் நேரத்தைக் கழிக்க விரும்பியவர்கள் இங்கு ஒன்றாகக் கூடினார்கள். ஆடம்பரமான உணவுகளைக் கொடுத்த மிகச் சிறந்த ஹோட்டல்களும், உணவகங் களும் அங்கு இருந்தன. மற்ற இன்பங்களும் இங்கு கிடைத்தன. நகரத்தின் காமத் தரகர்கள் இங்குக் கூடி யிருப்பார்கள். பெரிய மனிதர்களால் பணமும் மதுவும் இங்கு தண்ணீர் போல் ஓடிக்கொண்டிருந்தது.

இரண்டு வருடங்களுக்கு முன்பு அவன் நண்பனோடு மிக சந்தோசமாகக் கழித்ததை நினைவு கூர்ந்தான். ஒவ் வோர் இரவும் மிக அழகான பெண்கள் அவர்களின் மடி யில் கிடந்தார்கள். யுத்தம் காரணமாக ஸ்காட்ச் விஸ்கி கிடைப்பதில் சிரமம் இருந்தாலும், அவர்களுக்கு வேண் டிய அளவிற்குக் கிடைத்தது.

டோங்காக்கள் இன்னும் அங்கிருந்தன என்றாலும், நகரத்தில் மற்றது எல்லாவற்றையும் போலவே, அவை யும் தங்கள் அழகை இழந்து நின்றன. அதில் இருந்த செம்பு, தங்கம் போல் பளபளத்துக்கொண்டிருக்க வில்லை. குதிரைகளை அலங்கரித்திருந்த குஞ்சலமும், இறகு சூட்டும் இப்போது காணாமல் போய்விட்டன.

அவன் கைக்கடிகாரத்தைப் பார்த்தான். ஐந்தைக் கடந்திருந்தது. பிப்ரவரி மாதம் என்பதால் இருட்டு இறங் கிக்கொண்டிருந்தது. தன்னுடைய நண்பனைச் சபித்து விட்டு எதிரே இருந்த உணவகத்தில், சாக்கடைத் தண் ணீர் போல் மோசமாகத்தான் இருக்கும் என்று தெரிந் திருந்தும் டீ குடிக்கலாம் என்று நகர்ந்தான். அந்தச் சம

யத்தில் யாரோ அவனைக் கூப்பிடும் சத்தத்தைக் கேட்டான். நண்பன் வந்துவிட்டதாக நினைத்தான். ஆனால் அவன் திரும்பிப்பார்த்த போது, அவனுக்கு அறிமுகமில்லாத ஒருவன் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தான் - பார்ப்பதற்குச் சாதாரணமாகவும், துவைக்கப்படாத, கசங்கிய நீண்ட சல்வாரை அணிந்தும் இருந்தான். அவனின் நீல நிறச் சட்டை 'என்னைத் துவைத்து விடு' என்று கதறுவது போல் இருந்தது. அவனிடம் "என்னைக் கூப்பிட்டாயா?" என்று கேட்டான். அந்த மனிதன் மிக மெதுவாக "ஆம்" என்றான். அந்த மனிதன் அகதியாக இருக்கலாம் என்றும் ஏதோ உதவி கேட்கப்போகிறான் என்றும் நினைத்தான். "உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டான். "ஒன்றும் இல்லை ஐயா" என்று அமைதியாகச் சொன்ன அந்த மனிதன், இன்னும் அருகில் வந்து, "உங்களுக்கு ஏதாவது தேவைப்படுகிறதா?" என்று கேட்டான்.

"எது போல?"

"ஒரு பெண் அல்லது வேறு ஏதேனும்?". அவன் சில அடிகள் திரும்பி நடக்கத் தொடங்கினான்.

இத்தகைய சமயங்களில் கூட மனிதன் தன்னுடைய மிருகப் பசிக்கு உணவு தேடி அலைவதை நினைத்த போது அவனுள் சுருக்கென்று ஏதோ குத்தியது. மனிதனின் இயற்கையான தன்மை அதன் கீழ்த்தரமான நிலையில் தன்னை வெளிப்படுத்திக்கொள்கிறது என்று நினைத்தான். இருந்தாலும், "எங்கு இருக்கிறாள்?" என்று கேட்டான்.

அந்தத் தரகன் இவன் பேசிய தொனியைப் பார்த்து உற்சாகத்தை இழந்து, மேலே நடக்கத் தொடங்கி, "உங்களுக்கு விருப்பமில்லை போல் தெரிகிறது" என்றான்.

தரகனை நிறுத்தி, "நீ எப்படி அந்த முடிவுக்கு வந்தாய்?" என்று கேட்டான். "எல்லாக் காலங்களிலும் எல்லா இடங்களிலும் ஒரு மனிதனுக்கு இதுபோன்ற சந்தோ சங்கள் நிச்சயம் தேவைப்படுகின்றன" என்று தத்து வார்த்த விளக்கம் கொடுத்துக் கொண்டிருந்தவன், சட் டென்று நிறுத்தினான். பிறகு, "அவள் இந்தச் சுற்று வட் டாரத்தில் இருந்தால் நான் வருவதற்குத் தயாராக இருக் கிறேன். எங்கு இருக்கிறாள்?" என்று கேட்டேன்.

"இதே இடத்தில். முன்னால் இருக்கும் கட்டடத்தில்".

முன்னால் இருந்த கட்டடத்தைப் பார்த்து "அந்தப் பெரிய கட்டடத்திலா?" என்று கேட்டான்.

"ஆமாம்" என்றான் காமத் தரகன்.

"நான் உன்னோடு வரவா?" என்று கேட்டான்.

"சரி. ஆனால் நான் முன்னால் போகிறேன்" அந்தத் தரகன் அந்தக் கட்டடத்தை நோக்கி முன்னால் நடக்கத் தொடங்கினான். இதயத்தைப் பிளந்தெடுக்கும் ஆயிரம் விசயங்களைச் சிந்தித்துக் கொண்டே அவன் அந்தத் தரகனைப் பின் தொடர்ந்தான்.

அவ்வளவு தொலைவில் ஒன்றும் இல்லை. சீக்கி ரத்தில் அவனும் அந்தத் தரகனும் பெயர்ப் பலகை கொண்ட ஒரு கட்டடத்திற்குள் நுழைந்தார்கள். அது அசிங்கமான நிலையில் இருந்தது. குழாய்களில் தண் ணீர் கசிந்துகொண்டிருந்தது. செங்கல்லும் உடைக்கப் பட்ட கற்களும் எங்கும் இறைந்து கிடந்தன.

அப்போது பின்மாலைப் பொழுது. பெரிய வரவேற்புக் கூடத்தைக் கடந்து, கட்டிட வேலைகள் நிறுத்தப்பட் டிருந்த பக்கமாக அந்தத் தரகன் சென்றான். செங் கல் பூசப்படாமல் கிடந்தது. சுண்ணாம்பும் கட்டியான

சிமெண்டும் குவியல் குவியலாய் எங்கும் இறைந்து கிடந்தன.

கட்டி முடிக்கப்படாத மாடிப்படி வழியாக ஏறிச்செல்லும் போது, "இங்கேயே காத்திரு, நிமிடத்தில் வந்து விடு கிறேன்" என்று சொன்னான். அவன் நின்றான். தரகன் மறைந்தான். அவன் தன் தலையை உயர்த்திப் பார்த் தபோது மிகப் பிரகாசமான வெளிச்சத்தைப் பார்த்தான். அவன் ஒரு சில நிமிடங்கள் காத்திருந்த பிறகு, மெதுவா கப் படிக்கட்டுகளில் ஏறத் தொடங்கினான். திடீரென்று அந்தத் தரகரின் சத்தமான குரல் கேட்டது. "நீ எழுந்து கொள்வாயா மாட்டாயா?". ஒரு பெண்ணின் குரல், "நான் தூங்க வேண்டும்" என்றது. அந்தக் குரல் அமுங்கி இருந் தது. அந்தத் தரகன் மீண்டும் கர்ஜித்தான். "எழுந்திரு. நான் சொல்கிறேன்... இல்லை என்றால் என்ன நடக்கும் என்று..."

"கடவுளுக்குப் புண்ணியமாகப் போகட்டும், என் மீது கொஞ்சம் இரக்கம் காட்டு" என்றாள் அந்தப் பெண்.

அந்தத் தரகன் இப்போது சமாதானப்படுத்தும் தொனியில் "கண்ணே, தயவு செய்து என்னைப் புரிந்து கொள்ள முயற்சி செய். நாம் வாழ்க்கை நடத்தியாக வேண்டும். இவ்வளவு முரண்டு பண்ணாதே" என்றான். அந்தப் பெண், "எல்லாம் நரகத்துக்குப் போகட்டும். நான் பசியால் சாகவும் தயாராக இருக்கிறேன். கடவுளுக் குப் புண்ணியமாகப் போகட்டும். என்னைத் தொந்தரவு செய்யாதே, எனக்குத் தூக்கம் வருகிறது" என்றாள். அந்த மனிதன் மீண்டும் கர்ஜித்தான். "அப்ப, பன்றிக்குப் பிறந்த நீ எழுந்து கொள்ள மாட்டாய்... உன் ஆத்தாளுக் குக் கல்யாணம் ஆகாமலேயே பிறந்தவ தானே நீ..." அந் தப் பெண் கத்தத்தொடங்கினாள், "என்னால் முடியாது... என்னால் முடியாது". அந்த மனிதன் அமைதியாக, "கட

வுளுக்குப் புண்ணியமாகப் போகட்டும் கத்தாதே, யாரா வது நீ கத்துவதைக் கேட்டுவிடுவார்கள். வா எழுந்திரு... நீ நாற்பது, ஐம்பது ரூபாய் சம்பாதிக்கலாம்" என்றான்.

"இங்க பார், நான் கையெடுத்துக் கும்பிட்டு வேண்டிக் கொள்கிறேன். என்னைத் தனியாக விடு" என்று அந் தப் பெண் கெஞ்சினாள். "நான் பல நாட்களாகத் தூங் கவில்லை. தயவு செய்து என்மீது கொஞ்சம் இரக்கம் காட்டு" அவளின் குரல் மிகவும் பணிந்து போய் இருந் தது.

"வெறும் இரண்டு மணி நேரம் தான். பிறகு நீ தூங்க லாம். என்னை முரட்டுத்தனமாக நடந்துகொள்ளும்படி செய்யாதே" என்றான் அந்த மனிதன். சிறிது நேரம் எல் லாம் அமைதியாக இருந்தது. அவன் மெதுவாக இன் னும் மேலே ஏறி, பிரகாசமான ஒளிவீசிக் கொண்டிருந்த அந்த அறைக்குள் தலையை நீட்டிப் பார்த்தான். அழுக் கடைந்த சிறு அறையைப் பார்த்தான். தரையில் ஒரு பெண் படுத்திருந்தாள். மூன்று நான்கு பாத்திரங்கள் ஒரு பக்கமாய்க் கிடந்தன. வேறு எதுவும் இல்லை. தரகன் அந்தப் பெண்ணுக்கு அருகில் அமர்ந்து கொண்டு, அவளின் காலைப் பிடித்து விட்டுக் கொண்டிருந்தான். சில நிமிஷங்களுக்குப் பிறகு அவன், "இப்ப எழுந்து கொள். இரண்டு மணி நேரத்திற்கு மேல் நிச்சயம் எடுக் காது. பிறகு நீ தூங்கலாம்" என்றான். அந்தப் பெண் எழுந்துகொண்டே "சரி... சரி..." என்று கத்தினாள். அவன் திரும்பிப் படிகளில் இறங்கத் தொடங்கினான். ஒரு நிமி டம் அவன் ஓடிப் போய்விடலாம் என்று கூட நினைத் தான், இந்த நகரத்தில் இருந்து ஓடிவிடலாம் என்று, இந்த உலகத்தில் இருந்து ஓடிவிடலாம் என்று - ஆனால் எங்கு போவது... அந்தப் பெண் யார்?" என்று தனக்குள் கேட்டுக்கொண்டான். "ஏன் அவள் மீது இவ்வளவு வன் முறை சுமத்தப்படுகிறது? யார் அந்த மனிதன்? அவனுக்

கும் அவளுக்கும் உள்ள உறவு என்ன? ஏன் அந்த அறை அவ்வளவு பிரகாசமான வெளிச்சத்தைக் கொண்டிருக் கிறது? அந்த வெளிச்சம் நூறு விளக்குகள் எரிந்தால் மட்டுமே கிடைக்கக் கூடியது. எப்படி ஒருவனால் அவ் வளவு பிரகாசமான ஒளியில் படுக்க முடியும்? ஏன் இரு பத்தைந்து அல்லது பதினைந்து விளக்குகளை மட் டும் பயன் படுத்தியிருக்கக் கூடாதா?" என்று சிந்தித்துக் கொண்டிருந்தான். திடீரென்று அவன் காலடிச் சத்தங்க ளைக் கேட்டான். இரண்டு நிழல்கள் அவனை நெருங்கி வந்தன. அந்த மனிதன் சொன்னான், "பார்த்துக்கொள்"

"பார்த்தாயிற்று" என்று பதில் தந்தான்.

"அவளைப் பிடித்திருக்கிறதா?"

"பிடித்திருக்கிறது"

"நாற்பது ரூபாய் செலவாகும்."

"சரி"

"தயவு செய்து பணத்தைக் கொடுங்கள்."

அவனால் அதற்கு மேல் ஏதும் சிந்திக்க முடிய வில்லை. தன் பாக்கெட்டில் கையை விட்டு ரூபாய் நோட்டுகளை எடுத்து அந்த மனிதனிடம் நீட்டினான். "எவ்வளவு இருக்கிறது என்று பார்" என்றான்.

ரூபாய் நோட்டுகள் சரசரக்கும் சத்தம் கேட்டது. அந்த மனிதன், "ஐம்பது இருக்கிறது" என்றான்.

"நீயே வைத்துக்கொள்" என்றான். அந்த மனிதன் தன் நன்றியைத் தெரிவித்தான். அவன் ஒரு கல்லை எடுத்து அந்தத் தரகனைத் தாக்க வேண்டும் போல் உணர்ந் தான். அந்தத் தரகன் அவனிடம், "நீங்கள் இவளை அழைத்துச் செல்லலாம். ஆனால் தயவு செய்து ரொம் பவும் தொந்தரவு கொடுக்காதீர்கள். ஓரிரு மணி நேரத்

திற்குள் அவளைத் திரும்ப இங்கு கொண்டு வந்து விட் டுவிடுங்கள்..." என்றான்.

சிதைந்து போயிருந்த பெரிய பெயர்ப் பலகை யைக் கொண்டிருந்த அந்தப் பெரிய கட்டடத்தில் இருந்து வெளியே வந்தான். ஒரு டோங்காவை வாட கைக்கு எடுத்து முன்னே அமர்ந்து கொண்டான். அந்தப் பெண் பின்னால் அமர்ந்து கொண்டாள். அந்தத் தரகன் விறைப்பான சல்யூட் அடித்தான். அவன் மீண்டும் அவ னைக் கல்லால் தாக்க வேண்டும் என்பது போல் உணர்ந்தான்.

டோங்கா நகரத் தொடங்கியது. அருகிலிருந்த, வெறிச் சோடிக் கிடந்த ஹோட்டலுக்கு அவளை அழைத்துச் சென்றான். அவன் அவளைப் பார்த்தான். உச்சந்தலை யில் இருந்து உள்ளங்கால் வரை வெறுமையால் நிறைந் திருப்பவள் போல் காணப்பட்டாள். அவளின் நெற்றிப் பொட்டு வீங்கியிருந்தது. அவளின் கண்கள் கீழ் நோக்கி இருந்தன. அவள் அசதியுற்றுக் காணப்பட்டாள். பார்ப் பதற்கு எந்த நிமிடத்திலும் சரிந்து விழக்கூடிய கட்டடம் போல் இருந்தாள்.

அவன் அவளிடம், "உன் முகத்தைக் கொஞ்சம் நிமிர்த்து" என்றான். அவள் அதிர்ச்சியுற்று, "என்ன?" என்று கேட்டாள்.

"ஒன்றுமில்லை... நீ ஏன் எதுவும் பேசமாட்டேன் என்கி றாய்" என்று கேட்டான்.

அவள் அமைதியாக இருந்தாள். அவளின் கண்கள் எவரோ சிவப்பு மிளகாய்ப் பொடியைத் தூவியது போல் இரத்தச் சிவப்பாக இருந்தன.

"உன் பெயர் என்ன?"

"ஒன்றும் இல்லை" என்றாள் முரட்டுத்தனமாக.

"உன் சொந்த ஊர் எது?"

"அதைப் பற்றி என்ன?"

"ஏன் இப்படி வெட்டி வெட்டிப் பேசுகிறாய்."

அந்தப் பெண் இப்போது முழுமையாக விழித்துக் கொண்டு, இரத்தச் சிவப்பான கண்களின் ஊடாக அவனைப் பார்த்து, "உனக்கு என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்து முடி, பிறகு நான் கிளம்ப வேண்டும்" என்றாள்.

அவன் கேட்டான், "எங்கே?"

"எங்கிருந்து அழைத்து வந்தாயோ அங்கே" என்றாள், அந்தப் பெண் கொட்டுவது போல்.

"நீ போகலாம்"

"நீ உன் வேலையை முடி. ஏன் என்னைத் தொந்தரவு செய்கிறாய்."

"உன்னைத் தொந்தரவு செய்யும் எண்ணம் ஏதும் எனக்கில்லை." என்றான். "நான் உன் மீது பரிதாபப்படுகிறேன்". அவனின் குரல் பெரும் வலியை எதிரொலித்தது.

"என் மீது இரக்கப்பட வேண்டிய அவசியம் ஏதுமில்லை" என்றாள் நிதானமிழந்து. பிறகு ஏறக்குறைய அடித்தொண்டையிலிருந்து கத்தினாள். "உன் வேலையை நீ முடி. நான் போக வேண்டும்" என்று சொல்லி ஓரமாய்ப் போய் உட்கார்ந்து கொண்டாள். "என்னைத் தொந்தரவு செய்யாதே. நான் பல நாட்களாகத் தூங்கவில்லை. நான் வந்ததிலிருந்து விழித்துக் கொண்டே இருக்கிறேன்"

"இங்கு ஏன் நீ தூங்கக்கூடாது" என்று அக்கறையோடு கேட்டான். அந்தப் பெண்ணின் கண்கள் மேலும் சிவப்

பாகின. "நான் இங்கு தூங்குவதற்காக வரவில்லை... இது என் வீடும் இல்லை" என்றாள் கூர்மையாக.

"நீ எங்கிருந்து வந்தாயோ அது மட்டும் உன் வீடா என்ன?"

அந்தப் பெண் சண்டை போடுவது போல, "கடவுளுக் குப் புண்ணியமாகப் போகட்டும். இந்தப் பைத்தியக்கா ரப் பேச்சை எல்லாம் நிறுத்து. எனக்கு வீடு என்று எது வும் கிடையாது... உன் வேலையை முடி அல்லது என் னைத் திரும்ப அழைத்துச் சென்று உன் பணத்தைத் திரும்பப் பெற்றுக்கொள்" என்று கத்தினாள். அவன் மீது வசவுகளைக் கொட்டுவதிலிருந்து தன்னைத் தடுத்துக் கொண்டாள்.

அவள் இருந்த நிலையில், அவள் மீது இரக்கம் காண் பிப்பதோ அல்லது அவளிடம் ஏதாவது கேட்க நினைப் பதோ பயனற்றது என்ற முடிவுக்கு வந்தான். அதனால் அவளிடம், "வா, நான் உன்னைத் திரும்ப விட்டு விடுகி றேன்" என்றான். அவன் அவளை அந்தப் பெரிய கட்ட டத்தில் கொண்டு போய் விட்டான்.

அடுத்த நாள் கைஸர் பாக்கில் இருந்த ஒரு பாழடைந்த ஹோட்டலில் தன் நண்பனிடம் அந்தப் பெண்ணைச் சந்தித்த கதை முழுக்கச் சொன்னான். அந்த நண்பன் பெரும் அனுதாபத்தை வெளிப்படுத்தி, "அவள் இளமையாக இருந்தாளா?" என்று கேட்டான்.

"எனக்குத் தெரியாது. நான் அவளை ஒழுங்காகக் கூடப் பார்க்கவில்லை. எந்நேரமும் என் மண்டைக் குள் ஆக்கிரமித்திருந்தது, நான் ஏன் அந்தத் தரகனின் தலையில் ஒரு கல்லைத் தூக்கிப் போடவில்லை என்ற சிந்தனை மட்டும்தான்"

அவனின் நண்பன், "அது மிக உன்னதமான செயலாக இருந்திருக்கும்" என்றான்.

அவனால் அவனின் நண்பனோடு நீண்ட நேரம் தங்கி யிருக்க முடியவில்லை. நேற்று நடந்தவை எல்லாம் அவ னின் மனதில் பெரிய பாரமாய்க் கிடந்தன.

டீ குடித்த பிறகு இருவரும் பிரிந்தார்கள்.

அவனின் நண்பன் அமைதியாக டோங்காக்கள் நிறுத்தப்படும் இடத்திற்கு வந்தான். சற்றுநேரம் அந்தத் தரகனுக்காகக் காத்திருந்தான். ஆனால் அவனை எங் கும் காண முடியவில்லை. அப்போது நேரம் மாலை ஆறு மணிக்கு மேல் ஆகியிருந்தது. சில அடிகள் தள்ளி, அந் தப் பெரிய கட்டடம் அவன் முன்னே இருந்தது. அவன் அதை நோக்கி நகரத் தொடங்கி அதனுள் சென்றான். எந்தச் சிரமமும் இல்லாமல் அவன் நினைத்த இடத் திற்கு வந்து சேர்ந்தான். அப்போது நல்ல இருட்டாக இருந்தது. ஆனால் அவன் மாடிப்படியை அடைந்த போது அந்த வெளிச்சத்தைப் பார்த்தான். நிமிர்ந்து பார்த்து மெதுவாகப் படியேறி மேலே சென்றான். கடைசி படிக்கட்டில் ஒரு நிமிடம் அமைதியாக நின்றான். அறை யில் இருந்து பிரகாசமான ஒளி வீசிக் கெண்டிருந்தது என்றாலும் சத்தம் ஏதும் வரவில்லை. அவன் முன்னே நகர்ந்தான். கதவு சற்றே திறந்திருந்தது. தலையை உள்ளே நுழைத்துப் பார்த்தான். அவனின் கண்கள் அந்த விளக்கோடு மோத, அதன் ஒளி அவனைக் குரு டாக்கியது. உடனே கண்களில் இருந்த பிரகாசத்தின் எதிரொளி குறைய வேண்டி இருட்டை நோக்கி முகத் தைத் திருப்பிக் கொண்டான். பிறகு மீண்டும் கதவை நோக்கித் திரும்பினான். இந்த முறை அந்த விளக் கைத் தவிர்த்து தலையை உள்ளே நீட்டிப் பார்த்தான். அவனால் பார்க்க முடிந்த பகுதியில், ஒரு பெண் தரை

யில் பாய் விரித்துப் படுத்திருந்தாள். அவன் அவளைக் கவனமாகப் பார்த்தான். அவள் தூங்கிக்கொண்டிருந் தாள். அவளின் முகம், ஒரு துணியால் மூடியிருக்க, பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தாள். அவன் மேலும் சற்று முன்னே நகர்ந்தான். அடிவயிற்றிலிருந்து புறப்பட்ட அலறல் அவனின் உதடுகளில் இருந்து தப்பிக்க முயன் றது. ஆனால் அவன் அதன் குரல் வளையை நெரிக்க முயன்றான். அந்தப் பெண்ணுக்குச் சற்றே தள்ளி வெறுந்தரையில் ஒரு ஆண் தரையில் கிடந்தான். அவனின் தலை மோசமாக நசுக்கப்பட்டிருந்தது. அரு கில் இரத்தக்கறையோடு ஒரு செங்கல் கிடந்தது. இவை எல்லாவற்றையும் ஒரே சமயத்தில் பார்த்த அவன், படிக் கட்டுகளை நோக்கிப் பாய்ந்தான். அவன் வழுக்கிக் கீழே விழுந்தான். ஆனால் காயங்களைப் பற்றிக் கவ லைப்படாமல், தன்னுடைய தைரியத்தைத் தக்கவைத் துக் கொண்டு எப்படியோ வீடு வந்து சேர்ந்தான். அன்று இரவு முழுக்க அவன் பல கோரமான கனவுகளின் பிடி யில் சிக்கியிருந்தான்.

***



## இது 1919-ல் நடந்தது

1919ல் நடந்த சம்பவம் இது. பாய் ஜான், ரௌலட் சட்டத்தை எதிர்த்து பஞ்சாப் முழுக்கப் பெரும் போராட் டங்கள் நடந்த காலம். நான் அம்ரித்சர் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறேன். சர்.மைக்கேல் -ஓ -டையர், இந்தி யப் பாதுகாப்புச் சட்டத்தில், காந்தியைப் பஞ்சாப்பிற்குள் நுழையத் தடை செய்தான். அவர் பல்வாலில் தடுக்கப் பட்டு, கைது செய்யப்பட்டுத் திருப்பி பம்பாய்க்கு அனுப் பப்பட்டார். இந்தத் தவறை மட்டும் பிரிட்டிஷ் அரசாங் கம் செய்யாமல் இருந்திருந்தால், அவர்கள் இந்தியாவை ஆண்ட கறுப்பு வரலாற்றில் ஒரு கோரமான அத்தியா யமாய் விளங்கும் ஜாலியன் வாலாபாக் பெருந்துயரம் நடந்தே இருக்காது.

முசல்மான்கள், ஹிந்துக்கள், சீக்கியர்கள் - எல்லோ ருக்கும் காந்திஜி மீது மரியாதை இருந்தது. அவர் கைது செய்யப்பட்ட செய்தி லாகூரை அடைந்த உடன் எல்லா வேலைகளும் ஸ்தம்பித்துப் போயின. அங்கு முழுமை யான கதவடைப்பு நடந்தது. லாகூரில் இருந்து இந்தச் செய்தி அம்ரித்சருக்குப் பாய்ந்து வந்தது. இங்கும் எல் லாச் செயல்பாடுகளும் அந்தக் கணம் முதல் ஸ்தம்பித் ததுப் போயின.

டாக்டர் சத்யபால் மற்றும் டாக்டர் கிச்லூ ஆகியோரை வெளியேற்றும் உத்தரவை இணை ஆணையர், ஏப்ரல் 9ம் தேதி மாலை பெற்றுக் கொண்டார் என்று சொல் லப்பட்டது. இந்த உத்தரவை நடைமுறைப்படுத்துவதில்

அவருக்கு உடன்பாடு இல்லை. காரணம், அவரைப் பொறுத்தவரை அம்ரித்சரில் அமைதி கெடும் ஆபத்து ஏதும் இல்லை. மக்கள், கூட்டங்கள் மற்றும் அது போன்ற தொன்றை நடத்தினார்கள்; ஆனால் அமை தியான முறையில். இத்தகைய கூட்டங்களால் வன் முறை வெடிக்குமா என்ற கேள்விக்கே அவசியமில்லா மல் இருந்தது. நான் சாட்சியாக இருந்த நிகழ்வு ஒன் றைச் சொல்லப் போகிறேன். 9ம் தேதி அன்று ராம நவமி திருவிழா. ஊர்வலங்கள் நடத்தப்பட்டன என்றாலும், அரசாங்க விதிமுறைகள் ஒன்றுகூட மீறப்படவில்லை. ஆனால் பாய் ஜான், இந்த மனிதன், சர்.மைக்கேல் சுத் தமாக மூளை என்று ஏதும் இல்லாத அதிகாரி. இணை ஆணையரின் அறிவுரைகளுக்குத் தன் காதுகளை மூடிக்கொண்டான். அவனுள் இருந்த இந்த ஒரே ஒரு பயம் தான் பேயாட்டம் போட்டது. மகாத்மா காந்தியின் தலைமையில் இந்த அரசாங்கத்தை வீழ்த்தியெறிய இந்தத் தலைவர்கள் குறியாய் இருக்கிறார்கள்.

டாக்டர் கிச்லு மற்றும் டாக்டர் சத்யபால், அம்ரித்சரில் இருந்து வெளியேற்றப்பட்ட செய்தி நிமிடத்தில் காட் டுத்தீயைப் போல் நகரமெங்கும் பரவியது. கொடூரமான துயரம் ஏதோ ஒன்று அரங்கேற்றப்படப் போகிறது என்ற அச்ச உணர்வு எல்லோரிடமும் இருந்தது. வியாபாரம் முழுக்க நின்று போனது. நகரம் மயானம் போல் காட்சி தந்தது. இணை ஆணையர் பகதூரிடம் முறையிட்டு உத்தரவைத் திரும்ப பெறவேண்டி ஆயிரக்கணக்கான மக்கள் ஒன்று கூடி எழுப்பிய கோஷங்கள் அந்த மயான அமைதியைக் கலைத்தது. ஆனால் பாய் ஜான், இது போன்ற கோரிக்கைகளுக்கு எல்லாம் மதிப்பு கொடுத்த காலம் இல்லை அது. மூளை இல்லாத மிருகம் சர் மைக் கேல் அதிகாரத்தில் இருந்தான். மக்களின் கோரிக்கை களைக் காது கொடுத்துக் கேட்பது இருக்கட்டும், மக்

கள் ஒன்று கூடியதே சட்ட விரோதமானது என்று அறி வித்தான்.

அம்ரித்சர் - நாட்டின் சுதந்திரப் போராட்டத்தில் உயர்ந்த வீரனைப் போல் நிமிர்ந்து நின்ற நகரம். ஜாலி யன் வாலாபாக் துயரம் உருவாக்கிய வடுவை அதன் நெஞ்சில் பொறுமையோடு சுமந்து கொண்டிருக்கும் இந்த நகரம் - அது எந்த நிலைக்கு வந்திருக்கி றது என்று பாருங்கள். அந்தக் கீழ்த்தரமான கதையை ஒதுக்கித் தள்ளுவோம். அது வலியைக் கொடுக்கி றது. இந்தப் புனித நகரத்தில் ஐந்து வருடங்களுக்கு முன் என்ன நடந்திருந்தாலும், அதற்குக் காரணம் பிரிட் டிஷ் தான் என்று எல்லோரும் சொல்லி வந்தார்கள். ஆனால் வெளிப்படையாகச் சொல்லுவதென்றால், பாய் ஜான், அன்று அங்கு இரத்தம் ஓடியதற்கு நம்மை நாம் தான் பழித்துக் கொள்ள வேண்டும். எது எப்படியாவது இருந்து விட்டுப் போகட்டும். (இங்கு பிரிவினைக் கலவ ரங்கள் பற்றிக் குறிப்பிடப்படுகிறது).

இணை ஆணையரின் பங்களா, உயர் அதிகாரிக ளும், அரசாங்கத்தில் செல்வாக்கு உடைய விசுவாச மானவர்களும் தங்கியிருந்த, சிவில் லேனில் இருந்தது. நீங்கள் அம்ரித்சரைப் பார்த்திருப்பீர்கள். நகரத்தையும் சிவில் லேனையும் இணைக்கும் பாலம் இருப்பது உங்க ளுக்குத் தெரிந்திருக்கும். பாலத்தைக் கடந்தால் அங்கு ஆட்சியாளர்கள் அவர்களுக்கென்று இந்தப் பூமியில் ஒரு சொர்க்கத்தைக் கட்டியிருக்கும் பகுதியை அடைய லாம்.

கூட்டம் தர்வாஸா ஹாலை அடைந்தவுடன், பாலத் தில் குதிரை மீது அமர்ந்திருக்கும் பிரிட்டிஷ் சிப்பாய்கள் நிற்கிறார்கள் என்ற செய்தியைப் பெற்றனர், ஆனாலும் கூட்டம் தயங்கவில்லை. அது முன்னேறியது, பாய் ஜான், நான் அந்தக் கூட்டத்தில் இருந்தேன். எல்லோரும் நிரா

யுதபாணி. ஒருவரும், ஒரு சாதாரணக் கத்தியைக் கூட எடுத்து வரவில்லை. நகரத்தின் மூத்த அதிகாரிகளிடம் தங்கள் எதிர்ப்பைத் தெரிவிக்கவும், டாக்டர் கிச்லு மற்றும் டாக்டர் சத்யபால் ஆகியோரை நிபந்தனையின்றி விடுவிக்கக் கோரியும் தான் அவர்கள் வெளியே வந்திருந்தார்கள். கூட்டம் பாலத்தை நோக்கி முன்னேறியது. அவர்கள் பாலத்தை அடைந்த உடன், குதிரை மீது இருந்த பிரிட்டிஷ் சிப்பாய்கள் சுடத் தொடங்கினார்கள். அங்குப் பெரும் குழப்பம் ஏற்பட்டு மனிதர்கள் மனிதர்களால் மிதிக்கப்பட்டார்கள். இருபது அல்லது இருபத்தைந்து சிப்பாய்கள்தான் இருந்தார்கள். மறுபக்கத்தில் ஆயிரக்கணக்கானோர் கூட்டத்தில் இருந்தார்கள். ஆனால் பாய் ஜான், துப்பாக்கி ஏந்தியிருக்கும் இரண்டு டஜன் சிப்பாய்களால் பெரும் குழப்பத்தை உருவாக்க முடியும். அங்கு உருவான குழப்பத்தைக் கற்பனை செய்து பார்க்க முடியாது. துப்பாக்கிச் சூட்டில் சிலர் காயமுற்றார்கள், அதனைத் தொடர்ந்து மிதிபட்டு வேறு பலர் காயமடைந்தார்கள். வலது பக்கத்தில் சாக்கடை இருந்தது. நான் அதில் தள்ளி விடப்பட்டேன். துப்பாக்கிச் சூடு நின்றவுடன் நான் எழுந்து கொண்டேன். கூட்டம் கலைந்து விட்டிருந்ததைப் பார்த்தேன். காயமுற்றவர்கள் தெருவில் விழுந்து கிடந்தார்கள். பாலத்தில், குதிரை மீதிருந்த பிரிட்டிஷ் சிப்பாய்கள் சிரித்துக் கொண்டிருந்தார்கள். பாய் ஜான், அப்போதைய என் மன நிலையை என்னால் சுத்தமாக நினைவு கூர முடியவில்லை. என் உணர்வின் பிடிப்பு முழுவதையும் இழந்து விட்டேன் என்றே நினைக்கிறேன். நான் சாக்கடையில் விழுந்த போதும், நான் என் நினைவில் இல்லை. நான் வெளியே வந்தவுடன், என் மனது நடந்தவற்றை நினைவு கூரத் தொடங்கியது.

தொலைவில் நிறைய ஜனங்கள் ஒன்று கூடி கோபத்தில் கத்திக் கொண்டிருக்கும் கூச்சல் கேட்டது. நான்

சாக்கடையைக் கடந்து பீர்-கா-தக்கியா வழியாகத் தர்வாஸா ஹறாலுக்கு வந்து சேர்ந்தேன். முப்பது அல்லது நாற்பது வாலிபர்கள். தர்வாஸா கட்டடத்தில் இருந்த கடிகாரத்தின் மீது உற்சாகமாகக் கற்களை எறிந்து கொண்டிருப்பதைப் பார்த்தேன். கடிகாரத்திலிருந்து உடைந்து போன கண்ணாடித் துண்டுகள் கீழே விழுந்த போது ஒரு வாலிபன் தன்னுடன் இருந்தவனிடம், "நாம் போய், மகாராணியின் சிலையை உடைக்கலாம்" என்று உரக்கச் சொன்னான்.

"வேண்டாம்" என்றான் மற்றொருவன். "நாம் குத்வாலியைத் தீ வைத்துக் கொளுத்தலாம்"

மூன்றாமவன் கத்தினான், "எல்லா வங்கிகளையும்"

நான்காவது நபர் எல்லோரையும் தடுத்து, "இதனால் எல்லாம் என்ன பயன்? நாம் சென்று பாலத்தில் நின்று கொண்டிருக்கும் அந்த பிரிட்டிஷ் சிப்பாய்களைக் கொல்வோம்" என்றான்.

நான் அவனை அடையாளம் கண்டுகொண்டேன். அவனின் பெயர் முகமது தஃபைல். ஆனால் அவன் விலைமாது பரம்பரையில் வந்தவன் என்பதால் தய்லா கஞ்சிர் என்றே அறியப்பட்டான். அவன் சிறு வயதிலிருந்தே பொறுக்கி. குடிப்பதற்கும் சூதாடுவதற்கும் பழக்கப்பட்டுப் போனவன். அவனின் இரண்டு சகோதரிகள் ஷம்ஷாத் மற்றும் அல்மாஸ் அந்தக் காலத்தில் நகரத்திலேயே மிகவும் அழகான நாட்டியப் பெண்கள். ஷம்ஷாத் மிகவும் இனிமையான குரலைப் பெற்றிருந்தாள். மிகத் தொலைவான இடங்களில் இருந்தும் சீமான்கள் அவளின் 'முஜ்ரா' வுக்கு வந்தார்கள். இருவரும் தம் சகோதரனின் நடவடிக்கைகளில் மிகவும் வெறுப்புற்றும் சலிப்புற்றும் இருந்தார்கள். அவர்கள் அவனுடனான எல்லாத் தொடர்புகளையும் அறுத்துக்கொண்டு விட்டார்கள் என்ற விஷயம் நகரம் முழுக்க நன்கறிந்தது

தான். இருந்தாலும் ஏதேனும் காரணம் சொல்லி அவ னின் தேவைகளுக்காக அவர்களிடமிருந்து பணத்தை உறிஞ்சி எடுத்துக் கொண்டுதான் இருந்தான். அவன் வசதியாக வாழ்ந்து வந்தான். நகைச்சுவையாகக் கதை கள் சொல்லுவதில் தேர்ந்தவன். நடன அரங்கில் பங் கேற்கும் இசையமைப்பாளர்கள் கூட்டத்திலிருந்து தள் ளியே இருந்தான். பார்ப்பதற்குச் சாதாரணமாய் இருப்ப வர்களைக் காட்டிலும் உயரமானவனாகவும், நல்ல உட லமைப்புக் கொண்டவனாகவும், திடமானவனாகவும் இருந்தான்.

அவனுடன் சேர்ந்திருந்த வாலிபர்கள் கட்டுக்கடங்கா உணர்ச்சி வேகத்தில் அவன் சொல்வதைக் கேட்க மறுத்து மகாராணி சிலையை நோக்கி நகரத் தொடங்கி னார்கள். அவன் மறுபடியும் அவர்களிடம் சொன்னான், "உங்களின் சக்தியை விரய மாக்காதீர்கள். என்னோடு வாருங்கள். நாம் எல்லோரும் ஒன்றாகச் சென்று அந்த பிரிட்டிஷ் சிப்பாய்களைக் கொல்வோம். அவர்கள் நம்மு டைய அப்பாவி மக்களைக் காயப்படுத்தியும், கொலை செய்தும் இருக்கிறார்கள். கடவுள் புண்ணியத்தில் நாம் அவர்களைக் காட்டிலும் வலுவுள்ளவர்களாக இருக்கி றோம். வாருங்கள் போகலாம்."

சிலர் மகாராணி சிலையை நோக்கிப் புறப்பட்டுவிட் டார்கள். மற்றவர்கள் நின்றார்கள். தய்லா பாலத்தை நோக்கி நகரத் தொடங்கிய உடன், இவர்களும் அவ னைப் பின் தொடர்ந்தார்கள். நான் எனக்குள் சொல்லிக் கொண்டேன்: "இந்த இளைஞர்கள் அவசியம் ஏதும் இல்லாமலேயே மரணத்தை வரவழைத்துக் கொள்கி றார்கள்." நான் ஒரு அருவியின் அருகே சென்று மறைந்து கொண்டேன். அங்கிருந்து நான் தய்லாவிடம், "கடவுளுக்குப் புண்ணியமாகப் போகட்டும், போகாதே! தேவையில்லாமல் ஏன் நீயும் இவர்களும் கொலை

செய்யப்படுவதில் இவ்வளவு குறியாய் இருக்கிறாய்?" என்று கத்தினேன்.

இதைக் கேட்ட உடன் உரத்த ஏளனச் சிரிப்புச் சிரித்து, "தய்லா, தோட்டாக்களுக்குப் பயப்பட்டவன் இல்லை என்று நிரூபிப்பதில் குறியாய் இருக்கிறான்." என்று திரும்பக் கத்தினான். பிறகு தன் உடனிருந்தவர்கள் பக் கம் திரும்பி, "உங்களுக்குப் பயமாக இருந்தால் திரும்பிப் போய் விடுங்கள்" என்று சொன்னான்.

அத்தகைய சூழ்நிலையில் எப்படி முன்னே வைத்த அடிகள் பின்னே போகும்? அதுவும் அவர்களின் தலை வன் தன் உயிரையும் கொடுக்கத் தயாராக இருக்கும் போது. தய்லா வேகமாக நகர்ந்தான். மற்றவர்களும் அவ னின் வேகத்துக்கு ஈடு கொடுத்தார்கள்.

தர்வாஸா ஹாலுக்கும் பாலத்திற்கும் உள்ள இடை வெளி அவ்வளவு ஒன்றும் பெரிய தொலைவு இல்லை. அறுபது அல்லது எழுபது அடிகளுக்கு மேல் இருக்காது. தய்லா கூட்டத்திற்குத் தலைமை தாங்கினான். பாலம் தொடங்கும் இடத்தில் இரண்டு பிரிட்டிஷ் சிப்பாய்கள் குதிரை மீது அமர்ந்திருந்தார்கள். தய்லா கோஷங்கள் எழுப்பிக்கொண்டு அவர்கள் அருகாமையில் சென்றவு டன் அங்கு துப்பாக்கி சுடப்பட்டது. தய்லா கீழே விழுந் திருப்பான் என்று நினைத்தேன். ஆனால் அவன் உயி ரோடு இருப்பதையும் மேலும் முன்னேறிக் கொண்டி ருப்பதையும் பார்த்தேன். அவனின் கூட்டாளிகள் பயத் தால் திரும்பி ஓடிக்கொண்டிருந்தார்கள். அவன் மேலும் முன்னேறிக் கொண்டிருந்தான். அவன் திரும்பி, "பயந்து ஓடாதீர்கள்... வாருங்கள்" என்று கத்தினான்.

தய்லாவின் முகம் என்னை நோக்கி இருந்தது. மறுப டியும் துப்பாக்கி சுடப்பட்டது. சிப்பாய்கள் பக்கம் திரும்பி, அவன் தன் கையால் தன் முதுகைத் தொட்டுப் பார்த் தான். பாய் ஜான், அவனின் வெண்மையான போஸ்கி

பட்டுச்சட்டையில் நான் சிவப்புக் கறையைப் பார்த்தேன். அடிபட்ட புலி போல அவன் முன்னே பாய்ந்தான். மறு படியும் துப்பாக்கி சுடப்பட்டது. அவன் தடுமாறினான், ஆனாலும் உடனடியாகத் தன்னை நிலைப்படுத்திக் கொண்டு குதிரை மீதிருந்த ஒரு சிப்பாய் மீது பாய்ந்தான். கண் இமைக்கும் நேரத்தில் குதிரை சேணம் வெறுமனே கிடந்தது. அந்தச் சிப்பாய் தரையில் கிடக்க, அவன் மீது தய்லா கிடந்தான். உடனிருந்த மற்றொரு சிப்பாய் - முத லில் குழம்பிப்போய் கிடந்தவன், அமைதி இழந்த தன் குதிரையை நிலைக்குக் கொண்டு வந்து, சுடத் தொடங் கினான். அடுத்து என்ன நடந்தது என்று எனக்குத் தெரியவில்லை. அருவியின் அருகில் நான் நினைவி ழந்து கிடந்தேன்.

எனக்கு நினைவு திரும்பிய போது, பாய் ஜான், நான் என் வீட்டில் இருப்பதை உணர்ந்தேன். எனக்குத் தெரிந்தவர்கள் சிலர் என்னை வீட்டிற்குத் தூக்கி வந்தி ருக்கிறார்கள். துப்பாக்கிச் சூட்டிற்குப் பிறகு கூட்டம் அங் கிருந்து கலைந்து விட்டதென்றும், ஆனால் மகாராணி சிலையை உடைத்தெறிய முயன்றதாகவும், மூன்று வங் கிகளுக்கும், டவுன் ஹாலுக்கும் தீ வைக்கப்பட்டதாக வும், ஐந்தாறு வெள்ளைக்காரர்கள் கொல்லப்பட்டதாக வும், அவர்களிடமிருந்து தெரிந்துகொண்டேன். அங்கு நிறைய சூறையாடல்கள் நடந்திருந்தன.

கொள்ளை அடிக்கப்பட்டதைக் கண்டு பிரிட்டிஷ் அதிகாரிகள் கவலை கொள்ளவில்லை. கொடூரமான ஜாலியன் வாலாபாக் படுகொலை, வெள்ளையர்களின் மரணத்திற்குப் பழி வாங்கும் விதமாகவே அரங்கேற்றப் பட்டது. இணை ஆணையர் பகதூர் ஆட்சிப்பொறுப்பை ஜெனரல் டயரிடம் ஒப்படைத்தார். ஏப்ரல் பன்னிரெண் டாம் தேதி, டயர், நகர பஜார்கள் ஊடாக இராணுவ அணிவகுப்பு நடத்தினான். நூற்றுக்கணக்கில் அப்பாவி

மக்கள் கைது செய்யப்பட்டார்கள். பதின்மூன்றாம் தேதி ஜாலியன் வாலாபாக்கில் கூட்டம் நடந்தது. ஏறக்குறைய இருபத்தைந்தாயிரம் மக்கள் அங்கு கூடியிருந்தார்கள். சாயந்திரம் ஜெனரல் டயர் ஆயுதங்கள் ஏந்திய கூர்க்கா மற்றும் சீக்கியப் படைகளுடன் அங்கு வந்து நிராயுதபாணிகளான மக்கள் கூட்டத்தைச் சுடத் தொடங்கினான்.

அந்தச் சமயத்தில் எவராலும் எத்தனை உயிர்கள் பறிக்கப்பட்டன என்று சொல்ல முடியவில்லை. பிறகு நடந்த விசாரணையில் ஏறக்குறைய ஆயிரம் பேர் கொல்லப்பட்டார்கள் என்றும், மூவாயிரம், நாலாயிரம் பேர் காயம் அடைந்தார்கள் என்றும் கண்டுபிடிக்கப் பட்டது. ஆனால் நான் தய்லாவைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தேன். பாய் ஜான், என் கண்களால் பார்த்ததை நான் சொல்லிவிட்டேன். கடவுள் மட்டும் தான் கறை படியாதவன். இறந்த மனிதன் மீது எல்லாக் கறைகளும் படிந்திருந்தன. அவன் வேசியின் மகன், ஆனால் துணிச்சல் கொண்ட மனிதனாக இருந்தான். ஆனால் இப்போது என்னால் தீர்மானமாய்ச் சொல்ல முடியும்; குதிரை மீதிருந்த பிரிட்டிஷ் சிப்பாயின் முதல் தோட்டாவும் அவனைத் தாக்கி உள்ளது. சுடுகிற சத்தம் கேட்டு தன்னோடு இருந்தவர்களுக்குத் தைரியம் ஊட்ட அவன் திரும்பிய அந்தக் கணத்தின் இறுக்கத்தில், அவனின் நெஞ்சில் ஒரு தோட்டா புதைப்பட்டிருப்பதைக் கூட அவன் உணரவில்லை. இரண்டாவது தோட்டா அவனைப் பின்புறத்தில் தாக்கியுள்ளது. மூன்றாவது மறுபடியும் நெஞ்சில் தாக்கியுள்ளது. நான் இதைப் பார்க்கவில்லை என்றாலும் சிப்பாயின் கழுத்தை இரு கைகளாலும் இறுக்கப் பிடித்திருந்த தய்லாவின் உடலை, அந்தச் சிப்பாயிடமிருந்து பிரித்தெடுக்க முயன்றபோது அதை அவ்வளவு எளிதில் பிரித்தெடுக்க முடியவில்லை என்று கேள்விப்பட்டேன்.

அடுத்த நாள், தய்லாவின் உடல் அவனின் குடும்பத் தாரிடம் அடக்கம் செய்யக் கொடுக்கப்பட்டபோது அது தோட்டாக்களால் துளைக்கப்பட்டுக் கிடந்தது. இரண் டாவது சிப்பாய் தன் துப்பாக்கியில் இருந்த எல்லாத் தோட்டாக்களையும் தய்லா மீது குறி பார்த்துச் சுட்டிருக் கிறான். இறந்த உடல் மீது, அந்தச் சாத்தானின் மகன் குறி பார்த்துச் சுடும் பயிற்சியை எடுத்துக் கொண்டிருக் கிறான்.

தய்லாவின் உடல் மொஹல்லாவை அடைந்தபோது உரத்த அழுகைகளின் சத்தம் வானத்தைத் தொட்டது என்று சொல்லப் பட்டது. அவன் தன் சமூகத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்டவன் இல்லை என்றாலும், தோட் டாக்கள் துளைத்த அந்த உடலைப் பார்த்த உடன் எல் லோரின் அழுகையிலும் வலி தென்பட்டது. அவனின் சகோதரிகள் ஷம்ஷாத் மற்றும் அல்மாஸ் மயங்கி விழுந் தார்கள். சவ ஊர்வலம் தொடங்கியபோது, அவர்களின் துயரம், கூடியிருந்த அனைவர் கண்களிலும் இரத்தமே கண்ணீரானது.

பாய் ஜான், நான் எங்கோ படித்திருக்கிறேன், பிரெஞ் சுப் புரட்சியில் முதல் தோட்டா உள்ளூர் விலைமாது வைத் தாக்கியதாம். இறந்து போன முகமது தஃபைல் ஒரு விலைமாதுவின் மகன். அவனைத் தாக்கிய முதல் தோட்டா அன்று சுடப்பட்டதில் பத்தாவதா பதினைந் தாவதா என்று எவரும் விசாரணை செய்யாததற்கு, பரி தாபத்திற்குரிய அவன், சமூகத்தில் எந்த அந்தஸ்திலும் இல்லாமல் இருந்ததே காரணம். நான் நினைக்கிறேன், தய்லா கஞ்சிரின் பெயர் பஞ்சாபில் இரத்தம் சிந்தி, தியாகியானவர்கள் பட்டியலில் கூட இடம் பெறாது. அப் படி ஒரு பட்டியல் தயாரிக்கப்பட்டிருக்குமா என்று கூடத் தெரியாது.

அவை நிம்மதியற்ற காலங்கள். இராணுவ ஆட்சியே அன்று நடந்து கொண்டிருந்தது. ரௌலட் சட்டம் என்ற இராட்சசன் தன் இரு கால்களையும் பரப்பி நடுத்தெரு வில் நின்று கொண்டு, அது செய்த கொலைகளை ஜீர ணம் செய்து கொண்டிருந்தது. அந்த ஏழையின் மரணம், அவனது உறவினர்களால் - ஏதோ பெரிய குற்றம் போல வும் அந்த மரணத்தின் அடிச்சுவடுகள் ஏதும் இல்லாமல் அழிக்க விரும்பியது போலவும், அவனின் உடல் அவச ரம் அவசரமாய்ப் புதைக்கப்பட்டது. நல்லது பாய் ஜான், தய்லா இறந்து விட்டான்... தய்லா புதைக்கப்பட்டான்... அப்புறம்...". இதைச் சொன்ன என் சக பயணி மேலே தொடர்வதில் தயக்கம் கொண்டு, முதன் முறையாக அமைதியானார். இரயில் வேகமாகப் போய்க் கொண் டிருந்தது. இரயில் வண்டியின் சத்தம், தய்லா இறந்து விட்டான்... தய்லா புதைக்கப்பட்டான்... என்று திரும் பத் திரும்பச் சொல்வது போலிருந்தது. தய்லா மரணம் அடைந்ததையும், புதைக்கப்பட்டதையும் பிரிப்பதற்கு ஏதுமில்லை என்பது போல, ஒரு கணத்தில் மரணம் அடைந்தான், மறு கணத்தில் புதைக்கப் பட்டான். வண் டியின் சத்தத்தோடு கலந்த வார்த்தைகள் சோகத்தை முழுமையாகக் கொண்டிருந்ததால் அதை என் தலைக் குள் இருந்து ஒழிக்க வேண்டியதாயிற்று. அதனால் நான் என் சக பயணியிடம், "நீங்கள் மேலும் ஏதோ சொல்ல விரும்புகிறீர்கள்" என்றேன். அவர் என்னை ஆச்சரியத்தோடு பார்த்து, "ஆமாம், இந்தக் கதைக்கு மற்றும் ஒரு சோகமான அத்தியாயமும் உண்டு" என்றார். நான், "அது என்ன?" என்று கேட்டேன். அவர் தொடங் கினார்: "நான் ஏற்கனவே சொல்லியிருந்தேன். தய்லா விற்கு ஷம்ஷாத் மற்றும் அல்மாஸ் என்று இரண்டு மிகவும் அழகான சகோதரிகள் இருந்தார்கள். ஷம்ஷாத் உயரமாகவும், செதுக்கியது போலவும், போதை ஏற்றும் கண்களோடும் இருந்தாள், அவள் மிகத் திறமையான

தும்ரு பாடகி. பெரும் நிறைவோடு பாடுவாள். அவள் கான் சாகிப் ஃபதே அலிகான் மாணவி என்றும் சொல்லப்படுவாள். மற்றொருத்தி, அல்மாஸுக்குக் குரல் வளம் கிடையாது ஆனால் திறமை பெற்ற நடனக்காரி. அவள் நடனத்தில் ஒவ்வொரு தசையும் உயிர்ப்போடு வெளிப்படும். அவள் ஒவ்வோர் உணர்வுகளையும் வெளிப்படுத்தும் விதம் பார்வையாளர்களை மெய்மறக்க வைத்தது. அவளின் கண்களில் இருந்த ஏதோ மாயம் அவர்களை மயக்கியது."

என் சக பயணி தேவைக்கு அதிகமான நேரத்தை அந்தப் பெண்களைப் புகழ்வதற்கு எடுத்துக்கொண்டாலும், அதில் குறுக்கிடுவது முறையல்ல என்று நினைத்தேன். சற்று நேரம் கழித்து அவரே தன் பகற் கனவில் இருந்து வெளியே வந்து அந்தக் கதையின் சோகமான பகுதியைத் தொடர்ந்தார். "பாய் ஜான், பிரிட்டிஷாரை அண்டிப் பிழைத்துக்கொண்டிருந்தவர்கள், இராணுவ அதிகாரிகளிடம் இந்தப் பெண்களின் அழகைப் பற்றிச் சொல்லியிருக்கிறார்கள். நடந்த கலவரத்தில் ஒரு வெள்ளைக்காரப் பெண்மணி... அவள் பெயரென்ன... மிஸ். ஷீர்வுட் கொல்லப்பட்டாள். அதனால் இந்தப் பெண்கள் அழைக்கப்பட்டு, வெள்ளைக்காரப் பெண்மணியின் மரணத்திற்கு அவர்களின் இதயம் நிரம்பப் பழி வாங்க வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது... உங்களுக்குப் புரிகிறதா, பாய் ஜான், நான் என்ன சொல்ல வருகிறேன் என்று உங்களுக்குப் புரிகிறதா?" என்றார். நான் சொன்னேன், "ம்... நிச்சயமாக". என் சக பயணி நிம்மதிப் பெருமூச்சு விட்டார். "இது போன்ற மென்மையான விசயங்களில் நடனப் பெண்களுக்குக் கூட, ஒருவன் தன் தாய்க்கும் சகோதரிக்கும் கொடுக்கும் மரியாதையைக் கொடுக்க வேண்டும், ஆனால் பாய் ஜான் இந்த நாட்டில் கௌரவம் என்பது முற்றிலுமாகத் தொலைந்துவிட்டது. லகா தனேதார் மேலதிகாரிகளிடம் இருந்து

உத்தரவு வந்தவுடன் அதை நிறை வேற்றுவதாக உடன டியாக ஒப்புதல் அளித்தான். அவனே நேரிடையாக அந் தச் சகோதரிகள் வீட்டிற்குச் சென்று, 'சாகிப் உங்களை வரச் சொல்கிறார், அவர்கள் உங்களின் முஜ்ராவைப் பார்க்க விரும்புகிறார்கள்' என்று சொல்லியிருக்கிறான். அவர்களின் சகோதரனின் மீது உள்ள மண்ணில் இன் னும் இரத்தம் காயவில்லை, அவன் இறந்து இரண்டு நாட்கள்தான் ஆகிறது. அதற்குள் அவர்கள் முஜ்ரா நிகழ்த்த வேண்டும் என்று கட்டளை இடப்பட்டிருக் கிறார்கள். அவமான வலியைக் கொடுப்பதைக் காட்டி லும் வேறு எப்படி ஒருவரை அவமானப்படுத்த முடியும்? நான் நினைக்கிறேன், இதைக் காட்டிலும் உணர்ச் சிகள் அற்ற வேறொரு மோசமான விசயத்தை நாம் கண்டுபிடிப்பது சிரமமாக இருக்கும். நடனப் பெண்க ளுக்கும் சுயமரியாதை இருக்கிறது என்று அவர்களை அழைத்தவர்கள் உணரவில்லை... இருக்கிறது தானே?" இந்தக் கேள்வியை அவருக்கே கேட்டுக்கொண்டாலும் என்னை நோக்கிக் கேட்டார். "இருக்கிறது" என்று பதில் தந்தேன். "ஆமாம்" என்றார் அவர்.

"தய்லா என்ன இருந்தாலும் அவர்களின் சகோதரன். அவன் ஒன்றும் குடித்துவிட்டுச் சண்டைபோட்டுத் தன் உயிரை மாயத்துக் கொள்ளவில்லை. குடிபோதையில் அராஜகம் செய்ததால் அவன் கொலை செய்யப்பட வில்லை. தன் தாய்நாட்டிற்காகத் தன் உயிரைத் தியாகம் செய்துள்ளான். அவன் விலைமாதுவின் மகன் தான், ஆனால் அந்தப் பெண்மணியும் ஒரு தாய்தான். ஷம் ஷாத் மற்றும் அல்மாஸ் அந்தத் தாய்க்குப் பிறந்தவர்கள் தான். தய்லாவின் சகோதரிகள். அவனின் உயிரற்ற உட லைப் பார்த்து அவர்கள் மயங்கி விழுந்தார்கள். அடக் கத்தின் போது அவர்களின் கதறல் வானத்தைப் பிளந் தது."

"அவர்கள் போனார்களா?" நான் கேட்டேன்.

என் சக பயணி சற்று மௌனமான இடைவெளிக் குப் பிறகு வருத்தத்தோடு சொன்னார். "ஆமாம், அவர் கள் போனார்கள். மிகச் சிறந்த ஆடைகளில் தங்களை அலங்கரித்துக் கொண்டார்கள்". இதைச் சொன்ன உடன், அவரின் வருத்தம் எரிச்சலாக மாறியது. "அவர் கள் தங்களின் வாடிக்கையாளர்களிடம் மகாராணிகள் போல் சென்றார்கள். அன்று இரவு எல்லோராலும் 'பிர மாதம்' என்று புகழப்பட்டதாகச் சொன்னார்கள். இரண்டு சகோதரிகளும் அவர்களிடம் இருந்த எல்லாத் திற மைகளையும் வெளிப்படுத்தினார்கள். வண்ணமயமான ஆடைகளில், அவர்கள் சொர்க்கத்திலிருந்து வந்த தேவதைகள் போல் இருந்தார்கள். அளவில்லாமல் மது ஊற்றப்பட்டது. அவர்கள் பாடினார்கள், ஆடினார்கள், இரவு இரண்டு மணி இருக்கும்போது மேலதிகாரியின் சாடைக் குறிப்பின் அடிப்படையில் அந்தக் கொண்டாட் டம் முடிந்தது..." என் சக பயணி எழுந்து நின்று, வெளியே ஓடிக்கொண்டிருக்கும் மரங்களைப் பார்க்கத் தொடங்கி னார். அவரின் கடைசி இரண்டு வார்த்தைகள், சக்க ரத்தின் தாளத்திற்கு ஏற்ப நடனமாடத் தொடங்கியது. நான் கேட்டேன், "பிறகு என்ன நடந்தது?". அவர் ஓடிக்கொண்டிருந்த மரங்களில் இருந்தும் கம்பங்க ளில் இருந்தும் தன் கவனத்தைத் திருப்பி இறுக்க மான குரலில் இதைச் சொன்னார்: "அவர்கள் தங்களின் ஜொலிக்கும் வண்ணமயமான ஆடைகளை அவிழ்த் துப் போட்டு நிர்வாணம் ஆனார்கள். அங்கு கூடியிருந்த வர்களைப் பார்த்து 'நன்றாகப் பார்த்துக் கொள்ளுங்கள். உங்களின் தோட்டாக்களால் துளைத்து எடுக்கப்பட்ட, அழகான உடலையும் அதனுள் இருந்த இந்த நாட்டை நேசித்த ஆன்மாவையும் கொண்டிருந்த தய்லாவின் சகோதரிகள் நாங்கள். அதே மனிதனின் அழகான சகோதரிகள்தான் நாங்கள்... வாருங்கள், வாசனைத் திர

வியங்கள் பூசப்பட்ட எங்களின் இந்த அழகான உடலை, உங்களின் காமம் தணியும் வரை அனுபவிக்க வரிசை யில் வாருங்கள்... ஆனால் இதை நீங்கள் செய்வதற்கு முன் நாங்கள் உங்கள் முகத்தில் காறி உமிழ்கிறோம்."

அவர் மேலும் ஏதும் சொல்லப்போவது இல்லை என் பது போல் மீண்டும் மௌனமானார். நான் உடனடியாகக் கேட்டேன், "பிறகு என்ன நடந்தது?". அவரின் கண்க ளில் கண்ணீர் வழிந்தது. "அவர்கள் சுட்டுக் கொல்லப் பட்டார்கள்" என்று பதில் தந்தார்.

நான் ஏதும் சொல்லவில்லை. இரயில் வேகத்தைக் குறைத்து நிலையத்தில் நின்றது. அவர் கூலியை அழைத்து அவருடைய மூட்டைகளை வெளியே எடுத் தார்.

அவர் கிளம்பப் போகும் சமயத்தில் நான், "நீங்கள் இப்போது சொன்னதற்குச் சாட்சியாக இருந்திருப்பீர்கள் போலும்" என்றேன். அவர் ஆச்சரியத்துடன் பின்வாங்கி என்னைப் பார்த்து "அதை எப்படி நீங்கள் யூகித்தீர்கள்?" என்றார். "உங்களின் குரலில் விவரிக்க முடியாத கோபம் தெரிந்தது" என்றேன்.

தன் வாயில் உள்ள துர்நாற்றத்தை விழுங்கிய என் சக பயணி சொன்னார், "ஆமாம்... அவர்கள்..." கெட்ட வார்த் தைகள் உபயோகப்படுத்துவதிலிருந்து தன்னை அடக் கிக் கொண்டு இதை மட்டும் சொன்னார். "தியாகியான அவர்களின் சகோதரனின் பெயருக்கு அவர்கள் களங் கம் விளைவித்தார்கள்" இதைச் சொன்ன உடன் அவர் நிலையத்திற்குள் இறங்கினார்.

***



## சுதந்திரத்திற்காக...

எந்த வருடம் என்று என்னால் சரியாக நினைவு கூர முடியவில்லை. ஆனால் அது அம்ரித்சர் நகரில் 'இன்குலாப் ஜிந்தாபாத்!' என்ற கோஷங்கள் எதிரொலித்துக் கொண்டிருந்த காலம். நான் சரியாக நினைவு கூர்ந்தால், பஜார்கள் ஊடாகச் செழுமையாக இருந்த பால்காரி ஒருத்தி, வறட்டியால் நிரம்பியிருக்கும் கூடையைத் தலையில் சுமந்துகொண்டு மிகச் சாமர்த்தியமாக நடக்கும் நடையில் பாய்ந்தோடக் கூடிய உற்சாகத்தைக் காணமுடிவது போல், அந்த கோஷங்களில் விநோதமான உற்சாகங்கள் நிறைந்திருந்தன. அது கட்டுக்கடங்காமலும், முரட்டுத்தனமாகவும் இருந்த காலகட்டம். ஜாலியன் வாலாபாக் படுகொலைக்குப் பிறகு, சூழ்நிலையில் நிறைந்திருந்த அச்சம் கலந்த சோகம் முழுமையாகக் கரைந்து போய் இப்போது, எங்கு கொண்டு போய் விடும் என்பதைப் பற்றிய சிந்தனை ஏதுமில்லாமல் நேராகப் பாய்வதற்கான துணிச்சலைக் கொண்ட அச்சமற்ற உற்சாகம் அவ்விடத்தில் நிரம்பியிருந்தது.

மக்கள் கோஷங்கள் எழுப்பி, மறியல் செய்து நூற்றுக் கணக்கில் சிறைக்குச் சென்றார்கள். கைதாவது என்பது அப்போது மிகவும் விரும்பப்பட்ட பொழுதுபோக்காக இருந்தது. காலையில் கைது செய்யப்பட்டு மாலையில் விடுதலை செய்யப்படுவார்கள். சில சமயங்களில் நீதிமன்றத்தில் விசாரிக்கப்பட்டு சில மாதங்களுக்குச் சிறையில் தள்ளப்படுவார்கள். 'நீ வெளியே வருவாய், வேறு

ஒரு கோஷம் போடுவாய். மீண்டும் கைது செய்யப்படு வாய்'.

அந்த நாட்கள் உயிரோட்டம் நிரம்பியதாக இருந்தன. சிறிய நீர்க்குமிழி வெடித்தால் போதும், அது அடக்க முடியாத சுழல் காற்றாய் மாறிவிடும். எவனோ ஒருவன், ஏதோ ஒரு சதுக்கத்தில் நின்று கொண்டு வேலை நிறுத் தம் செய்ய வேண்டும் என்று கோரிக்கை வைப்பான். உடனடியாக வேலை நிறுத்தம் செய்யப்படும். எல்லோ ரும் கைத்தறி ஆடைகளைத் தான் உடுத்த வேண்டும், லங்காஷயர் ஆடைத் தொழிற்சாலைகளுக்கு வியாபா ரம் இல்லாமல் செய்ய வேண்டும் என்ற அலை ஒன்று பெரியதாக எழுந்து, அது எல்லாவற்றையும் அடித்துச் செல்லும். அந்நியப் பொருட்கள் பகிஷ்காரம் செய்யப்ப டும். ஒவ்வொரு சதுக்கத்திலும் தீ மூட்டப்பட்டு அந்நியப் பொருட்கள் எரிக்கப்படும். இந்தப் பரபரப்பின் இறுக்கத் தில் மக்கள், அவர்கள் அணிந்திருந்த ஆடைகளைக் கூட அந்த இடத்திலேயே கழற்றி நெருப்பில் விட்டெறி வார்கள். எப்போதாவது ஒரு முறை ஏதோ ஒரு பெண் மணி தேவையில்லை என்று நினைத்த புடவையைப் பால்கனியில் இருந்து விட்டெறிவாள். உடனே மக்கள் கைதட்டிக் கரகோஷம் செய்வார்கள்.

எனக்கு நினைவிருக்கிறது. டவுன் ஹால் பக்கத் தில் இருந்த பிரதான காவல் நிலையம் முன்பு, பெரும் தீ மூட்டப்பட்டு எரிந்துகொண்டிருந்தது. என்னோடு படித்த ஷைக்கூ மிகவும் உணர்ச்சிவசப்பட்டு அவன் அணிந்திருந்த பட்டு ஜாக்கெட்டைக் கழற்றி அந்நியப் பொருட்கள் எரிந்து கொண்டிருந்த தீயில் போட்டான். இதைத் தொடர்ந்து காதைப் பிளக்கும் அளவிற்குக் கைத்தட்டல்கள் ஒலித்தன. இதற்குக் காரணம், அவன் மிகப் பிரபலமான பிரிட்டிஷ் அடிவருடியின் மகன். இந் தக் கைத்தட்டல் அவனை மேலும் உற்சாகம் கொள்ள

வைத்தது. அவன் அணிந்திருந்த பட்டுச் சட்டையை யும் கழற்றித் தீக்கிரையாக்கினான். பிறகுதான், அந்தப் பட்டுச்சட்டையில் தங்கத்திலான பொத்தான்கள் இருந் ததை அவன் உணர்ந்து கொண்டான்.

ஷைக்கூவை நையாண்டி செய்வது என் நோக்க மில்லை. உண்மை என்னவென்றால் அந்த நாட்க ளில் நானும் அவனைப் போல் தான் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தேன். ஒரு கைத்துப்பாக்கியை எப்படியா வது பெற்றுக் கொண்டு நான் விரும்புவது போல் ஒரு தீவிரவாதக் குழுவை அமைத்துக் கொள்வது என்று கனவு கண்டேன். என் தந்தை அரசாங்கத்திடமிருந்து ஓய்வூதியத்தைப் பெற்று வருகிறார் என்பது என் மண் டைக்குள் உதிக்கவேயில்லை. ஏதோ விளையாட்டில் உள்ள ஆர்வத்தால் தன்னை மறந்து ஈடுபடுவது போல என்னுள் ஏதோ ஒன்று புகைந்துகொண்டிருக்க, அதற் கான செயல் வடிவத்தைக் கொடுக்க வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்தேன்.

நான் எப்போதும் பள்ளிக்கூடங்கள் மீது அக்கறை காட்டியதில்லை. அந்த நாட்களில் அதன் மீது அரு வறுப்புக் கொண்டு முழுவதுமாகத் தவிர்த்து வந்தேன். வீட்டிலிருந்து புத்தகங்களோடு புறப்பட்டு, நேராக ஜாலி யன் வாலாபாக் சென்று விடுவேன். பள்ளிக்கூடம் முடி யும் நேரம் வரை அங்கு என்ன நடந்தாலும் அதை யெல்லாம் கவனித்துக் கொண்டிருப்பேன். அல்லது ஏதாவது ஒரு மரத்தடியில் அமர்ந்து கொண்டு சற்றுத் தொலைவில் இருக்கும் வீட்டு ஜன்னல்களில் தெரியும் பெண்களை முறைத்துப் பார்த்துக் கொண்டிருப்பேன், யாராவது என் மீது காதல் கொள்ள மாட்டார்களா என்ற நம்பிக்கையோடு. இப்படி ஒரு சிந்தனை என் மண்டைக் குள் ஏன் நுழைந்தது என்று எனக்குத் தெரியாது.

அந்தக் காலங்களில் ஜாலியன் வாலாபாக் அவ்வளவு செயல்பாடுகளைக் கொண்டிருந்தது. எங்கும் கூடாரங் களும் தற்காலிகக் கூரைகளும் போடப்பட்டிருக்கும். ஒவ்வொரு சில நாட்களிலும் மக்கள் யாரோ ஒரு வனைத் தங்களுடைய 'சர்வாதிகாரி'யாய் நியமிப்பார் கள். அங்கிருந்ததில் மிகப்பெரிய கூடாரத்தில் தக்க மரியாதைகளோடு அவன் பதவியேற்றுக் கொள்வான். உண்மையிலேயே நையாண்டி செய்யப்படுவது போல, மூன்று நான்கு நாட்களுக்கு, அதிகபட்சம் இரண்டு வாரங்களுக்கு அவன் கதராடை அணிந்து கொண்டு ஆண்களிடமிருந்தும் பெண்களிடமிருந்தும் வாழ்த்துக ளைப் பெற்றுக்கொள்வான். அவன் சமையல் செய்வ தற்கு வியாபாரிகளிடமிருந்து கோதுமை மற்றும் அரி சியை நன்கொடையாகத் திரட்டுவான். என்றாவது ஒரு நாள் அவன் லஸ்ஸி குடித்துக் கொண்டிருக்கும் போது (ஜாலியன் வாலாபாக்கில் எப்போது வேண்டுமானாலும் லஸ்ஸி கிடைத்தது எப்படி என்பது கடவுளுக்குத்தான் வெளிச்சம்) போலீஸ் அதிகாரி உள்ளே நுழைந்து அவ னைக் கைது செய்து இழுத்துச் சென்று விடுவார்.

முன்பு என்னோடு படித்தவன் சாஹ் ஸாதா குலாம் அலி. நானும் அவனும் உயர்நிலைப் பள்ளித் தேர்வில் ஒன்றாக இரண்டு முறை தோற்றுப் போனோம். ஒரு முறை ஒன்றாக பம்பாய்க்கு ஓடிப் போனோம், இதி லிருந்து எங்களுக்கிடையேயான நட்பு எப்படிப்பட்டது என்று நீங்களே யூகித்துக் கொள்ளுங்கள். எப்படியாவது சோவியத் யூனியனை அடைவதுதான் எங்களின் திட் டம். ஆனால் கையிலிருந்த பணம் எல்லாம் கரைந்து, நடைபாதையில் படுக்க வேண்டிய நிலை வந்தபோது, வீட்டிற்கு மன்னிப்புக் கடிதம் எழுதிப்போட்டுத் திரும்பி னோம்.

சாஹ் ஸாதா குலாம் அலி, பொதுவாகக் காஷ்மீரைச் சேர்ந்தவர்கள் இருப்பது போல உயரமாகவும், நல்ல நிறத்திலும், கூர்மையான மூக்கும், விளையாட்டுத்தன மான கண்களும் கொண்டு பார்க்க அழகாக இருந்தான். அவன் நடக்கும்போது ஏதோ ஒன்று அவனைக் கம்பீர மாகக் காட்டியது. அதில் குண்டர்களிடம் காணப்படுவது போன்று சற்று இறுமாப்பும் கலந்திருந்தது.

என்னோடு பள்ளியில் படித்த நாட்களில் அவன் 'சாஹ் ஸாதா' இல்லை. ஆனால் புரட்சிக்கான தீவிரம் அவனைப் பற்றிக் கொண்டவுடன், பல ஊர்வலங்களில் கலந்து கொண்டான். கோஷங்கள், மாலைகள், தேசப் பற்று பாடல்கள், பெண் உறுப்பினர்களோடு சகஜமாகப் பழகும் சந்தர்ப்பங்கள் இவையெல்லாம் அவனை அரை வேக்காட்டுப் புரட்சிக்காரனாக மாற்றியிருந்தது. பிறகு ஒரு நாள் ஒரு பொதுக்கூட்டத்தில் அவன் முதல் முறை யாகப் பேசியிருந்தான். அடுத்த நாள் செய்தித்தாள்க ளில் பார்த்தேன், குலாம் அலி 'சாஹ் ஸாதா'வாக மாறியி ருந்தான்.

சீக்கிரத்தில் மிகச் சிறிய நகரமான அம்ரித்சரில் அவன் பிரபலமானான். அங்கு பொறுக்கி என்றோ தியாகி என்றோ பெயர் எடுப்பதற்கு நீண்ட நாட்கள் தேவைப்படாது. அங்கு வசித்தவர்கள் பொதுவாக மற்ற வர்கள் பற்றி எல்லா வழிகளிலும் தப்பு கண்டுபிடித்துக் குறைபட்டுக் கொண்டாலும் மதத்தலைவரோ, அரசியல் தலைவரோ என்ன தவறு செய்தாலும் மன்னிக்கத் தயா ராக இருந்தார்கள். அவர்களுக்குப் பொதுக் கூட்டங் களோ, மத போதனைகளோ எப்போதும் தேவைப்பட் டுக் கொண்டே இருந்தன. அங்கு யார் வேண்டுமென் றாலும் நீண்ட நாட்களுக்குத் தலைவராகத் தன்னை நிலைநிறுத்திக் கொள்ள முடியும். ஒவ்வொரு முறையும்

ஒவ்வொரு முகத்தோடு இருந்தால் போதும் - இப்போது கருப்பு, இப்போது நீலம்.

ஆனால் அது மிகவும் வித்தியாசமான காலம். மூத்த தலைவர்கள் எல்லோரும் ஏற்கெனவே சிறையிலிருந் தார்கள். அந்த வெற்றிடங்களை யார் வேண்டும் என்றாலும் எடுத்துக் கொள்ளும் சந்தர்ப்பம் இருந்தது. உண்மையில் மக்களுக்குத் தலைவர்கள் தேவைப்ப டவில்லை. குறைந்தபட்சம் அவ்வளவு அவசரத்தோடு தேவைப்படவில்லை. ஆனால் புரட்சிகர இயக்கத்திற் குக் கண்டிப்பாகத் தேவைப்பட்டது. கதராடை உடுத் திக் கொள்ளவும், ஜாலியன் வாலாபாக்கில் உள்ள மிகப் பெரிய கூடாரத்தில் அமர்ந்து கொள்ளவும் பொதுக் கூட் டங்களில் பேசவும் கைது செய்யப்படவும் கண்டிப்பாக மக்கள் தேவைப்பட்டார்கள்.

அந்த நாட்களில் ஐரோப்பா முதல் முறையாகச் சர் வாதிகாரிகளைப் பார்த்தது. ஹிட்லரும் முஸோலினியும் கொடூரமானவர்கள் என்று சற்றுப் பிரபலமாகியிருந்தார் கள். ஒருவேளை காங்கிரஸ் கட்சி அதைப் பார்த்து தான் கட்சிக்குள்ளும் சர்வாதிகாரிகளை உருவாக்கியி ருக்கலாம். சாஹ் ஸாதா குலாம் அலி முறை வந்தபோது மொத்தம் நாற்பது சர்வாதிகாரிகள் ஏற்கனவே கைது செய்யப்பட்டிருந்தார்கள்.

விசித்திரமான சூழ்நிலைகளின் சேர்க்கை, குலாம் அலியைச் சர்வாதிகாரியாக மாற்றியிருக்கிறது என்று அறிந்தவுடன், ஜாலியன் வாலாபாக் நோக்கிப் புறப்பட் டேன். பெரிய கூடாரத்திற்கு வெளியே தொண்டர்கள் காவல் காத்து நின்றார்கள். என்னைப் பார்த்தவுடன் குலாம் அலி உள்ளே வருமாறு அழைத்தான். தரையில் கதர் படுக்கை விரிப்பு கொண்ட ஒரு மெத்தை போடப் பட்டிருந்தது. அதிலிருந்த திண்டில் சாய்ந்தபடி குலாம் அலி கதராடை அணிந்திருந்த பணியாக்களோடு பேசிக்

கொண்டிருந்தான். அவர்களின் பேச்சு காய்கறிகள் பற்றி இருந்தது என்று நினைக்கிறேன். அவன் பேச்சைச் சுருக்கமாக முடித்துக் கொண்டு, தொண்டர்களுக்குச் சில கட்டளைகளைக் கொடுத்த பிறகு என்னை நோக் கித் திரும்பினான். அவனிடம் காணப்பட்ட பொறுப் புணர்ச்சி என்னை நையாண்டி செய்யத் தூண்டியது. தொண்டர்கள் எல்லோரும் வெளியேறிய பின் நான் சிரித்துக் கொண்டே, "ஏ... சாஹ் ஸாதா, என்ன விஷ யம்?" என்றேன்.

நான் சற்று நேரம் அவனைக் கிண்டல் செய்து கொண் டிருந்தேன். ஆனால் அவனிடம் மறுக்க முடியாத மாற்றம் தெரிந்ததென்னவோ உண்மைதான். அது மிகத் தெளி வாக இருந்ததோடு அவனும் அதை அறிந்திருந்தான். அவன் திரும்பத் திரும்ப என்னிடம், "சாதத், வேண்டாம். என்னைக் கிண்டல் செய்யாதே. நான் மிகச் சாதாரண மானவன் என்று எனக்குத் தெரியும். இந்த மரியாதைக ளுக்கு எல்லாம் நான் தகுதியானவன் இல்லை. ஆனால் இப்போதிலிருந்து நான் இதை இப்படி வைத்திருக்கவே விரும்புகிறேன்" என்றான்.

அன்று மாலை நான் மீண்டும் ஜாலியன் வாலாபாக் சென்றேன். மக்கள் கூட்டம் நெருக்கித் தள்ளியது. நான் முன்னதாகவே வந்திருந்ததால் மேடைக்கு அருகில் ஓர் இடத்தைப் பிடித்துக் கொண்டேன். பெரும் கரகோஷங் களுக்கு நடுவே குலாம் அலி தோன்றினான். அப்பழுக் கற்ற வெள்ளைக் கதராடையில் அவன் கவர்ச்சியாக இருந்தான். நான் முன்னரே சொல்லியிருந்த இறுமாப் பும் சேர்ந்திருக்க, அது மேலும் அவனைக் கவர்ச்சி யாகக் காட்டியது. ஏறக்குறைய ஒரு மணி நேரம் பேசி னான். அவன் பேசியபோது நான் பலமுறை சிலிர்த்துப் போனேன். நானே வெடிகுண்டு போல் வெடித்து விட வேண்டும் என்ற எண்ணம் இரண்டு மூன்று முறை என்

னுள் தோன்றியது. ஒரு வேளை அப்படி வெடித்தால் இந்தியாவைச் சுதந்திரம் அடையச் செய்யலாம் என்று நினைத்தேன்.

அதற்குப் பிறகு எத்தனை வருடங்கள் கழிந்து விட்டன என்று கடவுளுக்குத்தான் தெரியும். எங்களின் உணர்வு களும் நிகழ்வு அலைகளும் நிலையற்ற நிலையிலேயே இருந்தன. அதன் சரியான ஏற்ற இறக்கங்களை இப் போது சொல்வது மிகவும் சிரமமானது. ஆனால் இந்தக் கதையை நான் எழுதிக் கொண்டிருக்கும் இந்த நேரத் தில், அவன் பொதுக்கூட்டத்தில் பேசியதை நினைவில் கொண்டு வரும்போது என்னால் பார்க்க முடிந்ததெல் லாம், அந்த வாலிபம் பேசிக் கொண்டிருப்பதைத்தான். அரசியலை அறியாத அப்பாவித்தனமான வாலிபம்... தெருவில் நடந்து கொண்டிருக்கும் ஒரு பெண்ணைத் திடீரென்று வழிமறித்து உண்மையான உணர்வுகள் நிரம்பிய துணிச்சலோடு அவளின் முகத்தை நேரா கப் பார்த்து, "இங்க பார், நான் உன்னைக் காதலிக்கி றேன்" என்று சொல்லிவிட்டுச் சட்டத்திற்குச் சரணடை வது போல் இருந்தது.

அதற்குப் பிறகு நான் பல பொதுக்கூட்டங்களைக் கேட்டிருக்கிறேன். ஆனால் எதிலும் அன்று குலாம் அலியின் குரலில் நிரம்பியிருந்த முட்டாள்தனத்தையும், பொறுப்பற்ற வாலிபத்தையும் நளினப்படாத உணர்வு களையும் நிர்வாணமான சவால்களையும் வேறு எந் தப் பொதுக்கூட்டங்களிலும் சிறிது கூட எதிரொலித் துக் கேட்டதில்லை. இன்றைய பொதுக்கூட்டங்களில் திட்டமிட்ட தீவிரத்தோடும் புளித்துப்போன அரசியலோ டும் கவித்துவப் பஞ்சணையில் படுத்திருக்கும் சுயநலத் தைத்தான் கேட்க முடிகிறது.

அந்தச் சமயத்தில் அரசாங்கமாகட்டும், மக்களாகட் டும், அனுபவமில்லாதவர்களாக இருந்தார்கள். விளை

வுகளைப் பற்றிக் கவலைப்படாமல் ஒருவர் மற்றவ ரின் குரல்வளையை நோக்கிப் பாய்ந்தார்கள். அரசாங் கம் அதன் செயல்களின் பின்விளைவுகள் பற்றி புரி தல் ஏதுமில்லாமல் மக்களைச் சிறைக்குள் தள் ளியது. அது போலவே கைது செய்யப்படுவதற்குத் தானாக முன்வந்த தொண்டர்களும் அவர்கள் செயலின் உண்மையான நோக்கம் என்னவென்று அறியாதவர்க ளாக இருந்தார்கள். இது தவறான சிந்தனைகளையும் பெரும் அபாயத்தையும் உள்ளடக்கியதாக இருந்தது. இது மக்களைக் கிளர்ச்சியுறச் செய்யும். பிறகு அமுங்கிப் போகும். மறுபடியும் கிளர்ச்சியுறச் செய்து, எல்லாம் முத லில் இருந்து தொடங்கப்படும். பொதுவாகக் கட்டுப்பா டுகள் கொண்ட சூழ்நிலையில், மந்தமாகவும், சோகமுற் றும் இருக்கும் நிலையில் அது திடீரென்று வீறு கொண்ட உணர்வுகளைத் தோற்றுவிக்கும்.

சாஹ் ஸாதா குலாம் அலி தன் பேச்சை முடித்தவுடன் ஜாலியன் வாலாபாக் முழுக்கப் பெரும் கைத்தட்டல்க ளும் உணர்ச்சிகளைத் தூண்டக்கூடிய கோஷங்களும் எழுப்பப்பட்டன. அவனின் முகம் பிரகாசித்துக் கொண் டிருந்தது. நான் அவனைத் தனியே சந்திக்கும் சந்தர்ப் பத்தில் பாராட்டுவதற்காக அவனின் கையைப் பிடித் தபோது, அது நடுங்கிக் கொண்டிருப்பதை உணர்ந் தேன். அது போலவே அவனின் பிரகாசமான முகமும் துடித்துக் கொண்டிருந்தது. அவன் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தான். உணர்வுகளின் வெப்பத்தில் அவ னின் கண்கள் பளபளத்துக் கொண்டிருந்தன என்றா லும், எதையோ தேடித் தேடி அசதியுற்ற சுவட்டையும் அவை தன்னுள் மறைத்துக் கொண்டிருந்தன. அவை மிகத் தீவிரமாக யாரையோ தேடிக் கொண்டிருந்தன. திடீரென்று அவன் என் கையை விடுவித்துக் கொண்டு, மல்லிகைப்பூ புதர்களை நோக்கி வேகமாக நகர்ந்தான்.

மிகச் சுத்தமான கதர்ப்புடவை கட்டியிருந்த இளம் பெண் ஒருத்தி அங்கு நின்றிருந்தாள். சாஹ் ஸாதா குலாம் அலி அவளோடு காதல் கொண்டுள்ளான் என்று எனக்கு அடுத்த நாள்தான் தெரிய வந்தது. அது ஒரு தலையான விசயம் இல்லை. நிகாரும் பதிலுக்கு அவ னைப் பைத்தியம் பிடித்ததுபோல் காதலித்தாள். இஸ் லாமிய மதத்தைச் சேர்ந்த நிகார் ஓர் அனாதை. மகளி ருக்கான மருத்துவமனையில் தாதியாக வேலை பார்த்து வந்தாள். பர்தாவை விட்டெறிந்து விட்டு அம்ரித்சரில், காங்கிரஸ் இயக்கத்தில் சேர்ந்த முதல் இஸ்லாமியப் பெண் அவளாக இருக்கக்கூடும். அவள் அணிந்திருந்த கதராடையும், காங்கிரஸ் நடவடிக்கைகளில் பங்கெடுத் துக் கொண்டதும், ஓரளவு அவள் வேலை செய்த மருத் துவமனையின் சூழ்நிலையும், ஒன்றிணைந்து அவளின் இஸ்லாமியப் புறத் தோற்றத்தையும், பொதுவாக இஸ் லாமியப் பெயர்களில் காணப் படும் முரட்டுத் தன் மையையும் சற்றே மட்டுப்படுத்திக் காட்டிய தோடும், அவளை மென்மையானவளாகவும் ஆக்கியிருந்தது. அவள் அழகாக இல்லை என்றாலும் அவளுடைய வழி யில் அவள் பெண்மையின் உதாரணமாகத் திகழ்ந் தாள். ஓர் இந்துப் பெண்ணின் உருவாக்கத்தின் பாங் காய் இருக்கும் - மரியாதை கொடுப்பதற்கும், பிரார்த் தனை செய்வதற்கும் ஏக்கங்களைக் கொண்ட அடக்க மும், தன்னம்பிக்கையும் மிக அற்புதமாக ஒன்றிணைந்து நிகாரிடம் காணப்பட்டன. அன்று இந்தப் படிமம் என் னுள் தோன்றியிருக்க சாத்தியமே இல்லை என்றாலும், நான் அவளைப் பற்றி எப்போது சிந்தித்தாலும் இஸ்லா மியர்களின் நமாஸும், இந்துக்களின் ஆரத்தியும் மிகச் சரியாக ஒன்றிணைந்தது போல் அவள் எனக்குத் தோற் றம் தருகிறாள்.

அவள் எல்லாவிதங்களிலும் சாஹ் ஸாதா குலாம் அலியைத் தெய்வமாக மதித்தாள். அவனும் அவளைப்

பைத்தியம் கொண்டு காதலித்தான். நான் அவனிடம் நிகார் பற்றி விசாரித்தபோது, காங்கிரஸ் ஊர்வலத்தில் சந்தித்ததாகவும், சில காலங்கள் பழகிய பிறகு திரும ணம் செய்து கொள்ள முடிவெடுத்துள்ளதாகவும் சொன் னான்.

அவன் கைது செய்யப்படுவதற்கு முன்னரே திரும ணத்தை முடித்துவிட வேண்டும் என்று குலாம் அலி விரும்பினான். அது ஏனென்று எனக்குப் புரியவில்லை. அவன் சிறையிலிருந்து வெளியே வந்த பிறகும் அவ ளைத் திருமணம் செய்து கொள்ளலாம். அந்த நாட்க ளில் சிறைத்தண்டனை என்பது மிகக் குறுகிய காலத் திற்குத்தான் இருந்தது. மூன்று மாதங்கள் அல்லது அதி கப்பட்சம் ஒரு வருடம். சிலர் இடமில்லாத காரணத் தால் பதினைந்து நாட்களில் விடுதலை செய்யப்பட்ட தும் உண்டு. எப்படி இருந்தாலும் அவன் தன் திட்டத்தை நிகாரிடம் சொல்ல, அவளும் அதை ஏற்றுக் கொண்டி ருக்கிறாள். தேவைப்பட்டதெல்லாம் பாபாஜியின் ஆசிர் வாதங்கள் மட்டுமே.

பாபாஜி, மிகப் பிரபலமானவர் என்று உங்களுக்குத் தெரிந்திருக்கும். அவர் நகரத்துக்கு வெளியே, ஹரிராம் என்ற நகரத்திலேயே மிகப் பணக்கார நகை வியாபாரி யின் ஆடம்பரமான பங்களாவில் தங்கியிருந்தார். பொது வாக அவர் பக்கத்து கிராமத்தில் இருந்த அவரின் ஆசி ரமத்தில் தங்குவதுதான் வழக்கம். ஆனால் எப்போது அம்ரித்சர் வந்தாலும் ஹரிராம் பங்களாவில் தான் தங் கியிருப்பார். அவர் தங்கியிருக்கும் நாட்களில் அவரின் தரிசனம் கிடைக்க மக்கள் பொறுமையோடு மிக நீண்ட வரிசையில் நின்று கொண்டிருக்க, அது பக்தர்களுக் கான புனித ஸ்தலமாக மாறிவிடும். மாலை நேரங் களில் பங்களாவிலிருந்து சற்றுத் தள்ளியிருந்த மாந் தோப்பில் ஒரு மரத்தடியில் மரத்தாலான மேடையில்

அமர்ந்து கொண்டு, பாபாஜி பொதுமக்களுக்குத் தரிசனம் கொடுத்து, ஆசிரமத்திற்கான நன்கொடையை வசூலித்துக் கொண்டிருப்பார். இதற்குப் பிறகு பஜனை பாடப்பட்டு அவர் விருப்பத்தின் அடிப்படையில் கூட்டம் முடிவுக்கு வரும்.

பாபாஜி மிகக் குறைந்த அளவே உண்பவராகவும், அதீத கடவுள் நம்பிக்கை கொண்டவராகவும் இருந்தார். அவர் புத்திசாலியாகவும் நிறைய படித்தவராகவும் இருந்தார். இந்தக் குணாம்சங்களால் இந்துக்கள், சீக்கியர்கள், முசல்மான்கள், தீண்டத்தகாதவர்கள் என்று எல்லோராலும் நேசிக்கப்பட்டவராக இருந்தார். எல்லோருமே அவரைத் தங்களுடைய தலைவராகக் கருதினார்கள்.

மேல்மட்டத்தில் பாபாஜிக்கு அரசியலோடு எந்தச் சம்பந்தமும் இல்லை என்றே தோன்றும். ஆனாலும், பஞ்சாபில் நடக்கும் எந்த ஓர் இயக்கமும் அவரின் உத்தரவின் பேரில்தான் தொடங்கப்படுகிறது என்பதும், முடிக்கப்படுகிறது என்பதும் ஊர் அறிந்த ரகசியம். அரசாங்கத்தால் அவரைப் புரிந்து கொள்ள முடியவில்லை. அரசாங்கத்தில் இருந்த மிக புத்திசாலியான அதிகாரிகளால் கூட இந்த அரசியல் விடுகதைக்கான விடையைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அவரின் மிக மெல்லிய புன்னகைகூட லட்சக்கணக்கான அனுமானங்களை உற்பத்தி செய்தது. ஆனால் அவரே மிகவும் வித்தியாசமான முறையில் அதற்கான விளக்கத்தைத் தெரிவித்த போது, ஏற்கனவே அவரின் மாயப்பிடியில் இருந்த மக்கள் கூட்டம் உண்மையில் உணர்ச்சிப் பெருக்கில் மூழ்கிப் போனது.

ஒத்துழையாமை இயக்கம் அம்ரித்சரில் தொடர்ந்து நடந்தது. அதில் பலர் கலந்து கொண்டது பாபாஜியின் செல்வாக்கினால்தான் என்பது மிகத் தெளிவா

னது. ஒவ்வொரு நாள் மாலையிலும் அவர் தரிசனம் கொடுக்கும் போது, பஞ்சாப் முழுக்க நடந்து கொண்டி ருக்கும் சுதந்திரப் போராட்டம் பற்றியும் அரசாங்கத்தின் புதிதான மேலும் மோசமான அடக்குமுறைகள் பற்றியும் மிகச் சாதாரணமாக ஓரிரு வார்த்தை, பல் ஏதும் இல் லாத அவரின் வாயிலிருந்து உதிர்ந்தால் போதும், மிகப் பிரபலமான தலைவர்கள் எல்லாம் நெருக்கித் தள்ளி முந்திக்கொண்டு அவர் உதிர்த்ததை அள்ளி எடுத்து அவர்களின் கழுத்தில் விலை மதிக்க முடியாத மந் திரிக்கப்பட்ட தாயத்தைப் போல அணிந்து கொள்வார் கள்.

அவரின் கண்கள் காந்த சக்தியைக் கொண்டிருக் கின்றன, குரல் மந்திர சக்தியைக் கொண்டிருக்கிறது. மிகவும் நிதானமாகச் சிந்திக்கக் கூடியவர் - அதாவது படுமோசமான கெட்ட வார்த்தைகளாலும், கூர்மையான நையாண்டிகளாலும் அவரைச் சீண்டினால் கூட ஒரு நொடியை ஒரு லட்சத்தால் வகுத்தால் வரக்கூடிய அள வுக்குக் கூட அவர் தன் நிதானத்தை இழக்க மாட்டார் என்று மக்கள் சொன்னார்கள். இது அவரின் எதிரிக ளைச் சலிப்பு கொண்டு நெளிய வைத்தது.

அவர் அம்ரித்சரில் நூற்றுக்கணக்கான போராட்டங்க ளில் கலந்து கொண்டிருக்கிறார் என்றாலும், விநோத மாக நான் மற்ற தலைவர்கள் எல்லோரையும் பார்த்தது போல இவரை, அருகிலிருந்தோ தொலைவிலிருந்தோ அவரின் உருவத்தைக் கூடப் பார்த்தது கிடையாது. அதனால் குலாம் அலி 'அவரைத் தரிசித்து திருமணம் செய்து கொள்ள ஒப்புதல் பெறப் போகிறேன்' என்று சொன்னபோது என்னையும் உடன் அழைத்துச் செல்லு மாறு கேட்டுக் கொண்டேன்.

அடுத்த நாளே குலாம் அலி ஒரு டோங்காவிற்கு ஏற்பாடு செய்ய, நாங்கள் லாலா ஹரிராமின் பிரம்மாண்டமான பங்களாவை அடைந்தோம்.

பாபாஜி தன்னுடைய காலைச் சடங்குகளையும், பிரார்த்தனைகளையும் முடித்து விட்டு, மிக அழகான காஷ்மீர் பண்டிட் பெண் ஒருத்தி தேசபக்தி பாடல் பாடிக் கொண்டிருப்பதைக் கேட்டுக் கொண்டிருந்தார். வெள்ளை வெளேரென்று இருந்த தரையில் ஒரு பாய் மட்டும் விரிக்கப்பட்டிருக்க, அதில் அவர் அமர்ந்திருந்தார். அவருக்கு அருகில் ஒரு திண்டு கிடந்தது என்றாலும், அவர் அதன் மேல் சாய்ந்து கொண்டிருக்கவில்லை.

அந்த அறையில் பாயைத் தவிர வேறு எந்தப் பொருளும் இல்லை. பாட்டுப்பாடிக் கொண்டிருந்த பண்டிட் பெண்ணின் முகம் வெங்காயத்தின் நிறத்திலிருந்தது. தரையில் பட்டுத்தெறித்த வெளிச்சத்தில் அவளின் முகம் பிரம்மித்துப் போகும் அளவிற்கு அழகாக இருந்தது.

காவித்துண்டு மட்டும் இடுப்பில் கட்டியிருந்த பாபாஜிக்கு எழுபத்திரண்டு வயதாகிறது என்றாலும் அவர் உடலில் எங்கும் எந்தச் சுருக்கத்தையும் காண முடியவில்லை. அவரின் தோல் பழுப்பு நிறத்தில் பளபளத்துக் கொண்டிருந்தது. அவர் தினமும் குளிப்பதற்கு முன் ஆலிவ் எண்ணெயில் மசாஜ் செய்து கொள்வார் என்று பிறகுதான் தெரிந்து கொண்டேன்.

அவர் சாஹ் ஸாதா குலாம் அலியைச் சிறு புன்னகையோடு வரவேற்று, என்னை ஒரு பார்வை பார்த்தார். எங்களுடைய வணக்கங்களை அதே புன்னகையைச் சற்று மேலும் நீட்டி ஏற்றுக் கொண்டார். பிறகு எங்களை உட்காருமாறு செய்கை செய்தார்.

இன்று நான் அந்தக் காட்சியைக் கற்பனை செய்து நுணுக்கமாகப் பரிசோதித்துப் பார்த்தால் பெரும் கிளர்ச் சியை என்னுள் தோற்றுவிக்கிறது. அரை நிர்வா ணக் கிழவர் யோகிபோல் ஒரு பாயில் அமர்ந்திருக்கி றார். அவர் அமர்ந்திருந்த விதம், வழுக்கைத் தலை, பாதி திறந்திருந்த கண்கள், மென்மையான பழுப்பு நிற உடல் இவையெல்லாம் எப்படியிருந்தது என்றால், அவர் முகத்தில் உள்ள ஒவ்வொரு தசையும், படுமோசமான நில நடுக்கம் வந்தால் கூட இந்த உலகம் அவரை மலை உச்சியில் கொண்டு வைத்திருப்பதை அசைக்க முடி யாது என்ற நம்பிக்கையும், நிச்சலனமான அமைதியை யும் பிரதிபலித்துக் கொண்டிருந்தன. அவருக்கு அரு கில் அப்போதுதான் காஷ்மீர் பள்ளத்தாக்கில் மலர்ந்த மொட்டுப்போல் அந்தப் பெண் - வயதான அந்த மனி தருக்கு மரியாதை கொடுக்கும் விதமாகவும், தேசப்பற்று பாடல்களின் விளைவாகவும், அவள் அணிந்திருந்த முரட்டுத்தனமான வெள்ளைப் புடவையின் பிடியில் இருந்து நழுவி வெளியே சிந்திவிடத் துடித்துக்கொண் டிருக்கும் கட்டுக்கடங்காத அவளின் இளமையினாலும், அவள் பாடிய பாடல் நாட்டுக்காக மட்டுமல்லாமல், அவ ளின் இளமைக்கும் அதனை அர்ப்பணிப்பது போல் - அவள் தலை கவிழ்ந்து அமர்ந்திருந்தாள். தனக் கருகில் இருந்த அந்த வயதான மனிதருக்குத் தன் னுடைய மரியாதைகளைச் செலுத்துவதை மீறி எங்கி ருந்தோ வந்து அவளின் கரங்களைத் துணிச்சலோடு பிடித்து கொழுந்துவிட்டு எரியக்கூடிய தீயில் குதிக்கத் தயாராக இருக்கும் ஓர் ஆரோக்கியமான வாலிபனுக்கும் தன்னுடைய மரியாதைகளையும் தெரிவித்துக் கொண் டிருந்தாள். அந்த வயதான மனிதரின் பாறாங்கல்லைப் போன்ற நம்பிக்கைகளுக்கும், தவத்தன்மைக்கும் அவ ளின் வெங்காய நிற முகமும், கருத்த துடிப்புள்ள கண் களும், முரட்டுத்தனமான கதர் இரவிக்கைக்குள் ஏறி

யிறங்கிக்கொண்டிருந்த அவளின் மார்பகங்களும் - எல்லாம் மிக அமைதியாகச் சவால் விடுவது போலிருந்தது. 'வா... நான் நின்று கொண்டிருக்கும் இடத்திலிருந்து என்னைப் பலம் கொண்ட அளவிற்குக் கீழே தள்ளி விடு அல்லது பேரானந்த நிலைக்கு என்னைத் தூக்கிவிடு' என்று சொல்வது போலிருந்தது.

நிகார், சாஹ் ஸாதா குலாம் அலி மற்றும் நான் ஓர் ஓரமாய் அமர்ந்திருந்தோம். பாபாஜியின் ஆட்கொள்ளக் கூடிய தனித்துவமும் இளம் காஷ்மீர் பெண்ணின் கறை படியாத அழகும் சமஅளவில் என்னை மயக்க நிலைக்குக் கொண்டு செல்ல, சரியான முட்டாள்போல் உறைந்து கிடந்தேன். பளபளத்துக் கொண்டிருந்த தரையும் என்னைப் பாதித்தது. உண்மையில் அதனால் ரொம்பவும் பாதிக்கப்பட்டுக் கிடந்தேன். அந்தப் பண்டிட் பெண் ஒரே ஒரு முறை அவளின் கண்களை முத்தம் கொடுக்க அனுமதித்தால் என்ன ஆகிவிடப்போகிறது? இந்தச் சிந்தனை என் உடலுக்குள் ஓர் அதிர்வை ஏற்படுத்த, உடனடியாக என் சிந்தனை சமீப காலங்களில் என்னை ஏங்க வைத்துக் கொண்டிருக்கும் எங்கள் வீட்டு வேலைக்காரியை நோக்கி நகர்ந்தது. நான் எல்லோரையும் இப்படியே விட்டுவிட்டு நேராக வீட்டிற்குப் போய்விட வேண்டும் போல் உணர்ந்தேன். நான் அந்த வேலைக்காரியைத் திருட்டுத்தனமாக மாடியில் உள்ள குளியல் அறைக்கு இழுத்துச் செல்வதற்கான வாய்ப்பிருக்கிறது. அந்த அளவிற்கு நிச்சயம் வாய்ப்பிருக்கிறது. ஆனால் அடுத்த கணத்தில் என் கண்கள் பாபாஜியைப் பார்த்ததாலும், உணர்ச்சிப்பூர்வமான தேசப்பற்றுப் பாடல் என் காதுகளைத் தாக்கியதாலும் என் உடலுக்குள் வேறு ஒரு சிந்தனை பாயத் தொடங்கியது - என்னிடம் மட்டும் ஒரு கைத்துப்பாக்கி கிடைத்தால் நேராக சிவில் லைன் பகுதிக்கு ஓடிச் சென்று, அங்கிருக்கும்

இங்கிலீஷ்காரர்களின் ஆயுளை முடிக்கத் தொடங்கு வேன்.

இந்த முட்டாளுக்கு அருகில் நிகாரும் குலாம் அலியும் அமர்ந்திருந்தார்கள். காதலில் சிக்கியிருக்கும் இரண்டு இதயங்கள். மிக நீண்ட நிகழ்வுகள் அற்ற துடிப்புகளில் சற்றே அசதியுற்ற இதயங்கள். காதலின் மற்ற வர்ணங்க ளைக் காண ஒன்று மற்றொன்றோடு உருகி கலந்துவிட துடித்துக் கொண்டிருக்கும் இதயங்கள். வேறு வார்த் தைகளில் சொல்வதென்றால் அவர்கள் இங்கு எல் லாவற்றிற்கும் மேலாக அவர்களின் அரசியல் தலைவர் பாபாஜியிடம் திருமணம் செய்து கொள்ள ஒப்புதல் வாங்க வந்திருக்கிறார்கள். அவர்களின் இதயங்களில் அந்த நொடியில் தேசப்பற்று பாடல்கள் எதிரொலித் துக்கொண்டிருக்கவில்லை என்பது மட்டும் வெளிப்ப டையானது. அந்த இதயங்களில் இருந்தது அவர்களின் சொந்தப்பாடல்; மிக அழகானது ஆனால் இன்னும் பாடப்படாதது.

பாடல் முடிந்தது. பாபாஜி செய்கை மூலம் பாட்டுப் பாடிய பெண்ணுக்குத் தன்னுடைய ஆசீர்வாதங்க ளைத் தெரிவித்தார். பிறகு திரும்பிப் புன்னகைத்தப டியே நிகாரையும் குலாம் அலியையும் பார்த்தார். மீண் டும் என்னை நோக்கி சிறு பார்வையை வீசினார்.

குலாம் அலி தன்னையும் நிகாரையும் பாபாஜிக்கு அறிமுகம் செய்து கொள்ள முயன்றபோது - கடவுளே! என்ன ஞாபக சக்தி! உடனடியாக அவர் தன்னுடைய இனிமையான குரலில், "சாஹ் ஸாதா, இன்னும் நீ கைதாகவில்லையா?" என்று கேட்டார்.

"இல்லை, இன்னும் இல்லை" கைகளைக் கட்டியப டியே குலாம் அலி பதில் தந்தான்.

பாபாஜி பேனாப் பெட்டியில் இருந்து ஒரு பென்சிலை எடுத்து அதை வைத்து விளையாடிக்கொண்டே, "நீ கைதாகியிருப்பதாக நான் நினைத்தேன்" என்றார்.

அவர் சொன்னது குலாம் அலியைச் சங்கடம் கொள்ள வைத்தது. அதனால் பாபாஜி பண்டிட் பெண் பக்கம் திரும்பி நிகாரைச் சுட்டிக் காட்டி, "நிகார், நம்முடைய சாஹ் ஸாதாவை வெற்றி கொண்டு விட்டாள்" என்றார்.

நிகார் நாணமுற்றாள். குலாம் அலியின் திறந்த வாய் மூடவே இல்லை. வெங்காய நிறத்தில் இருந்த பண்டிட் பெண்ணின் முகம் சந்தோஷத்தால் சிவந்து போனது. அவளின் கருவிழிகள் இந்த ஜோடியைப் பார்த்து 'எவ்வளவு சந்தோஷமாக இருக்கிறது' என்று சொல்வது போல் இருந்தது.

பாபாஜி மீண்டும் பண்டிட் பெண்ணைப் பார்த்து, "இந்தக் குழந்தைகள் என்னுடைய ஒப்புதலைப் பெறுவதற்காக வந்திருக்கிறார்கள்" என்று சொல்லி மேலும், "கமால் நீ எப்போது திருமணம் செய்து கொள்ளப் போகிறாய்?" என்று கேட்டார்.

அப்படியென்றால் அவளின் பெயர் கமால். இந்த நேரடிக் கேள்வியை அவள் சற்றும் எதிர்பார்க்காததால் முகம் சிவந்து போக, "எனக்கா?..." என்று நடுக்கம் கொண்ட குரலில் கேட்டு, "நான் உங்கள் ஆசிரமத்தில் சேர்வதாக முடிவு செய்து விட்டேன்" என்றாள்.

அவள் சொன்ன பதிலில் வருத்தத்தின் சுவடு கலந்திருந்தது. பாபாஜியின் மிகக் கூர்மையான மூளை நொடியில் அதை உள்வாங்கிக் கொண்டது. அவளைப் பார்த்துப் புன்னகைத்தார். யோகி புன்னகைப்பது போல் அது மிக மென்மையாக இருந்தது. பிறகு குலாம் அலி மற்றும் நிகார் பக்கம் திரும்பி, "சரி அப்படி என்றால் நீங்கள் இருவரும் முடிவு செய்து விட்டீர்கள்" என்றார்.

"ஆமாம்" என்று இருவரும் ஒத்த குரலில் பதில் கொடுத்தார்கள்.

பாபாஜி ஓர் அரசியல்வாதியின் கண்கள் ஊடாக அவர்களை அளந்தெடுத்தார். "சில நேரங்களில், ஒரு வர் தான் எடுத்த முடிவை மாற்றிக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படலாம்" என்றார்.

முதல் முறையாக பாபாஜி ஆகிருதியின் முன்பு குலாம் அலி தன்னுடைய சிறுபிள்ளைத் தனமான உற்சா கத்தை ஓரங்கட்டி, "எங்களுடைய முடிவு ஏதோ சில கார ணங்களுக்காகத் தள்ளிப் போகலாம். ஆனாலும் மாற்ற முடியாதது" என்றான்.

பாபாஜி தன் கண்களை மூடிக்கொண்டு ஒரு வக்கீ லைப்போல், "ஏன்?" என்று கேட்டார்.

ஆச்சரியமாக குலாம் அலி தன்னுடைய நிலையிலி ருந்து கொஞ்சமும் அசைந்து கொடுக்கவில்லை. நிகார் மீது அவன் கொண்டிருந்த காதல், "சூழ்நிலைகள் எங்க ளின் முடிவைத் தள்ளிப் போக வைக்கலாம். ஆனால் எப்படி இந்தியா சுதந்திரம் அடைவதில் எந்த மாற்றமும் இருக்க முடியாதோ, அது போல எங்கள் முடிவிலும் மாற் றம் ஏதும் இருக்க முடியாது" என்று சொல்ல வைத்தது.

இதற்கு மேலும் இந்த விஷயம் பற்றிக் கேள்விகள் கேட்பது பயனற்றது என்ற முடிவுக்கு பாபாஜி வந்துவிட் டதாக நினைத்தேன். அவர் புன்னகைத்தார்... அந்தப் புன்னகைக்கு அங்கிருந்தவர்கள் எல்லோரும் அவர வர் வழியில் அதற்கான அர்த்தத்தைக் கொடுத்திருக்கக் கூடும். ஆனால் பாபாஜி, அதற்கு முற்றிலும் வேறு வித மான அர்த்தத்தைக் கொடுக்கக் கூடும். எனக்கு அதில் எந்தச் சந்தேகமும் இல்லை.

எப்படி இருந்தாலும் அந்தப் புன்னகை மேலும் சற்று விரிந்து, "நிகார்! எங்கள் ஆசிரமத்தில் சேர்ந்துகொள்.

எப்படியிருந்தாலும் ஒரு சில நாட்களில் சாஹ் ஸாதா கண்டிப்பாகச் சிறை போக வேண்டி வரும்" என்றார்.

"சரி, நான் சேர்ந்து கொள்கிறேன்" என்று பதில் சொன்னாள் மிக அமைதியாக.

பாபாஜி பேச்சை மாற்றி ஜாலியன் வாலாபாக்கில் நடந்து கொண்டிருக்கும் புரட்சிகர நடவடிக்கைகள் பற்றி பேசத் தொடங்கினார். குலாம் அலி, நிகார் மற்றும் கமால், பலர் கைது செய்யப்பட்டது பற்றியும் விடுதலை செய்யப்பட்டது பற்றியும் ஏன் பால், லஸ்ஸி, மற்றும் காய்கறிகள் பற்றி கூட பல தகவல்களை அவருக்கு மிக நீண்ட நேரம் கொடுத்தது போலிருந்தது. இந்த நேரம் முழுக்க ஏன் பாபாஜி, குலாம் அலி மற்றும் நிகாருக்குத் தன்னுடைய ஆசீர்வாதங்கள் வழங்குவதில் இவ்வளவு இழுபறி செய்து கொண்டிருக்கிறார் என்று சிந்தித்துக் கொண்டே முட்டாள் தலையன் போல் உட்கார்ந்திருந்தேன். அவர்கள் இருவரும் ஒருத்தரை ஒருத்தர் காதலிப்பதைச் சந்தேகம் கொண்டு பார்க்கிறாரா? குலாம் அலியின் நேர்மையைச் சந்தேகப்படுகிறாரா? நிகாரின் கணவன் கண்டிப்பாகச் சந்தேகத்திற்கு இடமில்லாமல் கைது செய்யப்படுவதற்கான சந்தர்ப்பம் இருப்பதையும் அதனால் அவள் அதன் வலியை உணர்வாள் என்றுதான் அவளை ஆசிரமத்திற்கு அழைத்தாரா? ஆனால் ஏன் 'கமால் நீ எப்போது திருமணம் செய்து கொள்ளப் போகிறாய்?' என்று பாபாஜி கேட்டதற்கு, 'நான் உங்கள் ஆசிரமத்தில் சேர்வதாக முடிவெடுத்துள்ளேன்' என்று பதில் தந்தாள்? ஆசிரமத்தில் ஆண்களும் பெண்களும் திருமணம் செய்து கொள்வதில்லையா? இது போன்ற கேள்விகள் வெறிகொண்டு என் மண்டைக்குள் எழுந்த போது, அவர்கள் நால்வரும் ஐந்நூறு தொண்டர்களுக்குச் சப்பாத்தி செய்து போட பெண் தொண்டர்கள் போதுமான அளவிற்கு இருக்கிறார்களா என்று கணக்

குப் போட்டுக் கொண்டிருந்தார்கள். எத்தனை அடுப்பு இருக்கிறது? எவ்வளவு பெரிய சப்பாத்திக்கல் இருக்கிறது? ஆறு பெண்கள் ஒரே சமயத்தில் சப்பாத்தி செய்யும் அளவிற்குப் பெரிய கல் ஏதாவது இருக்கிறதா?

அந்தப் பண்டிதப் பெண் ஆசிரமத்தில் சேர்ந்து விட்டால் பாபாஜியின் ஆன்ம திருப்திக்காக பஜனைகளையும், தேசபக்திப் பாடல்களை மட்டுமே பாடிக்கொண்டே இருப்பாளா என்று எனக்குள் யோசித்துக் கொண்டிருந்தேன். ஆசிரமத்தில் இருக்கும் ஆண் தொண்டர்களை நான் பார்த்திருக்கிறேன். உண்மைதான்! அவர்கள் எல்லோருமே ஒவ்வொரு நாள் காலையிலும் சடங்குகளோடு குளித்தார்கள், பல் விளக்கினார்கள், பெரும்பாலான நேரங்கள் திறந்த வெளியில்தான் கழித்தார்கள், ஆசிரமத்தின் சட்டங்களுக்கு உட்பட்டு பஜனை பாடினார்கள். ஆனாலும், அவர்கள் அணிந்திருந்த ஆடைகளில் வியர்வை நாற்றம் இருந்து கொண்டுதானே இருக்கிறது, இல்லையா? சிலரது வாயிலிருந்து துர்நாற்றமும் வீசியது. அவர்கள் யாரிடமும் திறந்த வெளியில் வாழ்பவர்களிடம் காணப்படும் நற்குணங்களையோ புத்துணர்வுகளையோ நான் பார்த்ததில்லை. அதற்கு மாறாகக் கூனிக்குறுகி, நசுக்கப்பட்டவர்கள் போலவே இருந்தார்கள். முகம் சோர்ந்து போய் கண்களில் குழி விழுந்து உடல் சூறையாடப்பட்டது போல வெளிறிப்போய் மாட்டின் பால் மடியில் இருந்து கடைசிச் சொட்டுப் பாலும் கறக்கப்பட்டுவிட்டது போல் உயிரற்றுக் காணப்பட்டார்கள்.

நான் ஜாலியன் வாலாபாக்கில் இந்த ஆசிரமத்தைச் சேர்ந்தவர்களைப் பலமுறை பார்த்திருக்கிறேன். முழுவதுமாகப் பாலும், தேனும், குங்குமப்பூவும் கொண்டு வடிவமைக்கப்பட்ட கமால், ஈனத்தனத்தைத் தவிர வேறு எதுவும் இல்லாத இந்த ஆண்களின் பார்வை

களுக்கு மத்தியில் உலாவுவதை என்னால் கற்பனை கூட செய்து பார்க்க முடியவில்லை. சாம்பிராணி மணத்தைத் தன் உடல் முழுக்கக் கொண்டிருக்கும் அவளா, அழுகிய வைக்கோலை விட மோசமாக நாற்றம் எடுத்துக் கொண்டிருக்கும் அவர்கள் வாய்களிலிருந்து வரும் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருக்க வேண்டும்? ஒருவேளை இந்தியாவின் சுதந்திரம் இவை எல்லாவற்றையும் விட மேலானதாக இருக்கலாம் என்று நினைத்தேன்.

ஆனால் இந்த 'இருக்கலாம்' என்பதை மட்டும், எப்போதும் என்னுடைய தேசப்பற்று மட்டும், இந்தியா சுதந்திரம் பெற வேண்டும் என்ற உணர்வோடு இணைத்துப் பார்த்து அதன் அர்த்தத்தைப் புரிந்து கொள்ள முடியவில்லை. எனக்கு மிக அருகில் அமர்ந்து கொண்டு பொதுவாகச் சிவப்பு முள்ளங்கி சமைப்பதற்கு அதிக நேரம் எடுக்கும் என்று பாபாஜியிடம் சொல்லிக் கொண்டிருந்த நிகார் பற்றிச் சிந்தித்தேன். கடவுளுக்குப் புண்ணியமாகப் போகட்டும், சிவப்பு முள்ளங்கிக்கும் இவர்களின் திருமணத்திற்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது? அவளும் குலாம் அலியும் பாபாஜியின் ஆசீர்வாதங்களைப் பெற்றுக்கொள்ளத்தானே வந்திருக்கிறார்கள், இல்லையா?

என்னுடைய சிந்தனைகள் நிகார் பற்றியும் நான் இதுவரை பார்த்திராத ஆசிரமம் பற்றியும் சுற்றி வந்தன. ஆசிரமங்கள், வித்யாலயங்கள், ஜமாத் கானாக்கள், தக்கியாக்கள், தர்காக்கள் போன்ற இடங்கள் என்னுள் மிக ஆழமான வெறுப்புணர்வை ஏற்படுத்துகின்றன. அது ஏனென்று எனக்குத் தெரியவில்லை. நான் பலமுறை அனாதை இல்லங்களைச் சேர்ந்த அதன் காப்பாளர்களும் குழந்தைகளும், பார்வையற்றோர் பள்ளிக்குழந்தைகளும் தெருவில் வரிசையாக நடந்துகொண்டே

யாசிப்பதைப் பார்த்திருக்கிறேன். நான் ஜமாத் கானா மற்றும் தர்காவைச் சேர்ந்த பையன்களையும் பார்த்தி ருக்கிறேன். முட்டிக்கு மேல் தூக்கிவிடப்பட்ட பைஜா மாவை அணிந்துகொண்டும், அவர்களின் சின்ன வயதை மீறி அந்த நெற்றியில் காணப்படும் தடிப்புகளும், சற்று வயது கூடிய பையன்கள் புதர்போல் அடர்த்தியாக தாடி வைத்திருப்பதையும், அவர்களைவிடச் சற்று வயது குறைந்தவர்களின் கன்னங்களிலும் கழுத்துப் பகுதியி லும் வளர்ந்திருக்கும் முரட்டுத்தனமான முடிகளும் - இவர்கள் எல்லோருமே பிரார்த்தனையில் மூழ்கியிருந் தாலும் அவர்கள் முகங்கள் மிருகத்தனத்தைத்தான் பிர திபலித்துக் கொண்டிருந்தன.

நிகார் ஒரு பெண். அவள் இஸ்லாமியரோ, இந்துவோ, சீக்கியரோ, கிறித்துவரோ இல்லை. வெறுமனே ஒரு பெண். இல்லை, அவள் அதைக் காட்டிலும் மேலான வள். தன்னுடைய காதலனுக்காகவோ அல்லது அவ ளின் இதயம் நிரம்பி நேசிக்கும் ஒருவனுக்காகவோ பிரார்த்தனை செய்யும் பெண். பிரார்த்தனையாகவே இருந்த அவள் பாபாஜியின் ஆசிரம விதிமுறைப்படி ஒவ் வொரு நாள் காலையிலும் தன் கைகளை உயர்த்திப் பிரார்த்தனை செய்வதை என்னால் கற்பனை செய்து கூட பார்க்க முடியவில்லை.

பாபாஜி, நிகார், குலாம் அலி மற்றும் பரவசமூட்டக்கூ டிய அழகைக் கொண்ட பண்டிட் பெண் ஏன் அம்ரித்ச ரில் இருந்த மொத்தச் சூழலும், சுதந்திர இயக்கத்தின் காவியத்தன்மையால் சூழப்பட்டிருந்த அந்த நாட்களை, இன்று நினைத்துப் பார்க்கும் போது எல்லாமே ஒரு கன வைப் போல, அதுவும் ஒருவன் திரும்பத் திரும்பக் காண ஏங்கும் கனவைப் போல காட்சி தந்தது.

நான் இன்று வரை பாபாஜியின் ஆசிரமத்தைப் பார்த் ததில்லை. ஆனாலும் அன்று நான் அதை வெறுத்

தது போலவே இன்றும் வெறுக்கிறேன். மனிதர்களின் இயற்கைக்கு முரணான நடத்தை களுக்கு உட்படுத்தும் இடம் எதுவானாலும் நான் அதைப் பற்றிக் கொஞ்சமும் அக்கறை காட்டியதில்லை. சுதந்திரத்திற்காக வாழ்வது என்பது சரிதான். அதற்காக உயிரைக் கொடுப்பதைக் கூட என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் மக் களை ஏதோ காய்கறிகள் போல உணர்வுகளோ உந் துதல்களோ இல்லாமல் மாற்றுவதை என்னால் ஏற் றுக்கொள்ள முடியவில்லை. மிக மோசமான வீட்டில் வசிப்பது, ஆரோக்கியமான சூழ்நிலையை நிராகரிப்பது, இறைவனைப் புகழ்ந்து பாட்டு பாடுவது, தேசப்பற்று மிக்க கோஷங்கள் எழுப்புவது - எல்லாம் சரிதான். ஆனால் மனிதனின் அழகுணர்வு மொத்தமாய் நெரிக் கப்படுவது ஏன்? அழகுணர்வு இல்லாமலும் வாழ்க்கை மீது வெறி இல்லாமலும் இருப்பது எப்படிப்பட்ட மனிதர் களுக்குச் சாத்தியம்? இதையெல்லாம் சாத்தியமாக்கும் ஆசிரமங்கள், இஸ்லாமியப் பள்ளிகள், வித்தியாலயங் கள் இவற்றிற்கும் சிவப்பு முள்ளங்கி விலை நிலையத் திற்கும் உள்ள வேறுபாட்டை என்னிடம் காட்டுங்கள்.

பாபாஜி ஜாலியன் வாலாபாக்கில் மற்ற நடவடிக்கை கள் பற்றி குலாம் அலி மற்றும் நிகாரிடம் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தார். இறுதியாக தாங்கள் வந்த காரியத்தை மறக்காமல் இருந்த ஜோடிகளிடம், நாளை அவரே முன்னின்று திருமணத்தை நடத்தி வைப்பதாகச் சொன்னார்.

இருவரும் பரவசம் அடைந்தார்கள். பாபாஜி திரும ணத்தை நடத்தி வைப்பதைக் காட்டிலும் வேறு என்ன அதிர்ஷ்டத்தை ஒருவன் எதிர்பார்க்க முடியும்? அவன் அடைந்த சந்தோஷத்தை அவனால் நம்ப முடிய வில்லை என்று பிறகு என்னிடம் சொன்னான். பாபா ஜியின் சிறிய அசைவு கூட வரலாற்று முக்கியத்துவம்

வாய்ந்ததாக மாறிவிடும். ஏதோ ஒரு விபத்தில் காங் கிரஸ் சர்வாதிகாரியாக மாறிய ஒரு சாதாரண மனி தனுக்காக அவரே நேரில் ஜாலியன் வாலாபாக் வரு வதை அவனால் நம்ப முடிய வில்லை. எதிர்பார்த் தது போலவே நாடுமுழுக்கச் செய்தித் தாள்கள் இந்த விஷயத்தை முதல் பக்கத்தில் தலைப்புச் செய்தியாகக் கொண்டு வந்தன.

பாபாஜி உண்மையிலேயே வருவாரா என்று குலாம் அலி கவலை கொள்ளத் தொடங்கினான். எப்படியிருந் தாலும் அவர் எப்போதும் மிக முக்கியமான வேலைக ளில் மூழ்கியிருப்பவர். ஆனால் உளவியல் ரீதியாகத் தற்காத்துக் கொள்ள எழுப்பப்பட்ட இந்தச் சந்தேகம் தவறாகிப்போனது. எதிர்பார்த்தது போல் மிகச் சரியாக ஆறு மணிக்கு அவர் வந்தார். அப்போதுதான் 'ராத்-கி-ராணி' தன்னுடைய வாசனையைப் பரப்பிக் கொண்டி ருந்தது. ஒரு தொண்டர்கள் கூட்டம் மணமக்களுக்கா கச் ஒரு சிறிய கூடாரத்தில் மல்லிகைப்பூ மற்றும் ரோஜாப் பூக்களைக் கொண்டு அலங்கரித்துக் கொண்டிருந் தது... பாபாஜி பிடித்திருந்த கொம்பில் தன்னை ஊன்றிக் கொண்டு வர அவருடன் எப்போதும் தேசபக்தி பாடல் பாடிக்கொண்டிருக்கும் பண்டிட் பெண்ணும், அவரின் உதவியாளரும், லாலா ஹரி ராமும் ஒன்றாக வந்தார்கள். மிகச் சரியாக பாபாஜி வந்துவிட்டார் என்று செய்தி வந்த அந்த நொடியில், லாலா ஹரி ராமின் பச்சை நிறக் காரும் ஜாலியன் வாலாபாக் பிரதான வாசலில் வந்து நின்றது.

நானும் அங்கிருந்தேன். மற்றொரு சிறிய கூடாரத்தில் பெண் தொண்டர்கள் நிகாரை மணமகள் கோலத் தில் அலங்கரித்துக் கொண்டிருந்தார்கள். குலாம் அலி தனக்கென்று சிறப்பாக எதையும் செய்து கொள்ள வில்லை. நாள் முழுக்க நகரத்தைச் சேர்ந்த பணி யாக்களிடம் தொண்டர்களின் உணவுக்காக மளிகைச்

சாமான்கள் பற்றி பேச்சு வார்த்தை நடத்திக் கொண் டிருந்தான். அதற்குப் பிறகு நிகாரிடம் தனியே பேச ஒரு சில நிமிடங்களைத் திருடிக் கொண்டான். பிறகு, அவனுக்குக் கீழ் இருந்த பொறுப்பாளர்களிடம் திருமண நிகழ்வு முடிந்தவுடன் அவனும் நிகாரும் ஒன்றாய் தேசி யக் கொடியை ஏற்றுவோம் என்று சொல்லியிருந்தான், என்றே நினைக்கிறேன்.

குலாம் அலி கிணற்றுக்கருகில் நின்று கொண்டிருக் கும்போது பாபாஜி வந்து விட்ட செய்தி அவனுக்குத் தெரிவிக்கப்பட்டது. என் நினைவு சரியாக இருந்தால் அப்போது நான் அவனிடம், "உனக்குத் தெரியுமா குலாம் அலி... முன்பு ஒருமுறை இந்தக் கிணற்றில் அதன் வாய் முழுக்க துப்பாக்கிச் சூட்டில் பலியான மனித உடல்களால் நிரம்பியிருந்தது. உனக்குத் தெரி யும்தானே? இன்று எல்லோரும் இந்தக் கிணற்றிலி ருந்துதான் தண்ணீர் எடுத்துக் குடிக்கிறார்கள். இந்தப் பூங்காவில் இருக்கும் ஒவ்வொரு செடிக்கும் இதிலிருந் துதான் தண்ணீர் ஊற்றப்படுகிறது. மக்கள் இங்கு பூக் கும் மலர்களைப் பறித்துக் கொள்கிறார்கள். ஆனால் விசித்திரமாக, ஒரு சொட்டுத் தண்ணீர் கூட இரத்தத் தின் உப்புக்கரிப்பைக் கொண்டிருக்கவில்லை. மலரின் ஓர் இதழ்களில் கூட இரத்தத்தின் சிவப்பு கலந்திருக்க வில்லை. இது ஏன்?" என்று கேட்டேன்.

நான் இப்படிப் பேசிய போது எனக்கு மிக நன்றாக நினைவிருக்கிறது, அங்கிருந்து தெரிந்த ஒரு வீட்டின் ஜன்னலைப் பார்த்தேன். அங்கிருந்து ஓர் இளம் பெண் நடந்த படுகொலையை வேடிக்கை பார்த்துக் கொண் டிருந்தபோது ஜெனரல் டயரால் சுட்டுக் கொல்லப்பட் டாள். அந்த ஜன்னலைக் கொண்டிருந்த சுண்ணாம்புச் சுவரில் காணப்படும் ரத்தக் கோடுகள் மங்கிப் போயி ருந்தன.

இரத்தம் மிகவும் மலிவாகிப் போனதால் அதைச் சிந் துவது, முன்பு மக்களைப் பாதித்தது போல் இப்போ தெல்லாம் பாதிப்பதில்லை. நான் மூன்றாம் வகுப்போ, நான்காம் வகுப்போ படித்துக்கொண்டிருக்கும் போது, அந்தப் படுகொலைக்கு ஆறு அல்லது ஏழு மாதங்க ளுக்குப் பிறகு எங்களுடைய ஆசிரியர் ஜாலியன் வாலா பாக் பார்க்க எங்களை அழைத்து வந்தார். இப்போது உள்ளது போல் பூங்கா என்று எவ்விதத்திலும் சொல்ல முடியாதபடி அது அப்போது இருந்தது. பார்ப்பதற்கு அசிங்கமாகவும், உபயோகமற்றதாகவும், வறண்ட நிலம் போலும், மேடு பள்ளங்கள் கொண்டு எங்கு பார்த்தாலும் காய்ந்து போன சேற்றைக் கொண்டிருந்தது. எங்களு டைய ஆசிரியர் யாரோ வெற்றிலை போட்டுத் துப்பியி ருந்த சிவப்பு மண்ணைக் கையில் அள்ளி எடுத்து எங்க ளிடம் காண்பித்து, "பாருங்கள், நம் தியாகிகளின் இரத் தத்தால் இன்னும் இது சிவப்பாக இருக்கிறது!" என்று சொன்னது எனக்கு நினைவிருக்கிறது.

நான் இந்தக் கதையை எழுதும்போது தொடர்பில்லா மல் பல சின்னச் சின்ன தகவல்கள் என் மண்டைக்குள் வந்து கொண்டே இருக்கின்றன. ஆனால் இந்தக் கதை குலாம் அலி மற்றும் நிகார் திருமணம் பற்றியதுதான் இல்லையா?

எப்படியிருந்தாலும் பாபாஜி வந்துவிட்டார் என்ற செய் தியைக் கேட்டவுடன் குலாம் அலி, தொண்டர்களை ஒரே இடத்தில் ஒன்றுகூட்ட வேகமாகச் சென்றான். பாபாஜிக்கு இராணுவ மரியாதை கொடுக்கப்பட்டது. அவர்கள் இருவரும் எல்லாக் கூடாரங்களையும் ஒரு சுற்று பரிசோதித்தார்கள். இதைச் செய்து கொண்டிருக் கும் போது பாபாஜி அங்கிருந்த பெண் தொண்டர்கள் மற்றும் பிற வேலையாட்களிடம் தன்னுடைய கூர்மை

யான நகைச்சுவை உணர்வைக் கொண்டு புத்திசாலித் தனமாக நிறைய பேசிக்கொண்டே இருந்தார்.

இதற்கிடையில் ஜாலியன் வாலாபாக் மீது இருட்டு கவிழத் தொடங்க, அருகாமையில் இருந்த வீடுகளில் இருந்து இங்கொன்றும் அங்கொன்றும் என்று விளக்கு கள் எரியத் தொடங்கின. பெண் தொண்டர்கள் கூட்டம் ஒன்று பஜனை பாடத் தொடங்கியது. அவர்கள் எல்லோ ரும் சேர்ந்திசைக்க, சிலரின் குரல் இனிமையாகவும், சிலரின் குரல் கரடுமுரடாகவும் சுருதி சேராமலும் இருந் தது. ஆனால் மொத்தமாய்க் கேட்பதற்கு இனிமையாக இருந்தது. பாபாஜி தன் கண்களை மூடியபடி கேட் டுக் கொண்டிருந்தார். ஏறக்குறைய ஆயிரம் பேராவது கூடியிருக்க வேண்டும். எல்லோரும் மேடையைச் சுற்றி நிலத்தில் அமர்ந்திருந்தார்கள். பஜனை பாடிக்கொண் டிருந்த பெண்களைத் தவிர மற்ற எல்லோரும் மிக அமைதியாக இருந்தார்கள்.

பஜனைப் பாட்டின் சத்தம் மெல்ல அமைதியை நோக் கிக் குறுகியது. அந்த அமைதி உடைக்கப்பட எல்லோ ரும் ஆவலோடு காத்திருந்தார்கள். அதனால் பாபாஜி தன் கண்களைத் திறந்து, மெல்லிய அருவியாய், "குழந் தைகளே! உங்களுக்கெல்லாம் தெரிந்ததுதான். நாம் இங்கு இந்த இரண்டு சுதந்திரப் போராட்ட வீரர்களைத் திருமணத்தின் மூலம் ஒன்று சேர்க்க வந்திருக்கிறோம்" என்று சொன்னவுடன் ஜாலியன் வாலாபாக் முழுக்க உற் சாகக் கரகோஷத்தில் எதிரொலித்தது.

மணப்பெண் கோலத்தில் இருந்த நிகார், தலை யைக் கவிழ்ந்தபடி மேடையில் ஓர் ஓரமாய் அமர்ந்தி ருந்தாள். மூவர்ண கதர்ப் புடவையில் அவள் பார்க்க ரொம்ப அழகாக இருந்தாள். பாபாஜி அவளைக் குலாம் அலிக்கு அருகில் வந்து அமருமாறு செய்கை செய்தார். இது கூட்டத்தை மேலும் கரகோஷம் செய்ய வைத்தது.

குலாம் அலியின் முகம் வழக்கத்திற்கு மாறாக வெட் கத்தால் சிவந்து கிடந்தது. திருமண ஒப்பந்தப் பத்தி ரத்தை தன் நண்பனிடம் இருந்து எடுத்து பாபாஜியிடம் கொடுத்தபோது அவனின் கைகள் நடுங்கிக் கொண்டி ருப்பதைக் கவனித்தேன்.

மேடையில் மௌல்வி சாஹப்பும் இருந்தார். அவர் திருமண விழாக்களில் ஓதப்படும் குரானின் வரி களை ஓதினார். பாபாஜி தன் கண்களை மூடியபடியே அதைக் கேட்டுக்கொண்டிருந்தார். 'முன் மொழிதலும், ஏற்றுக்கொள்ளப்படுதலும்' என்ற சடங்கு முடிந்தவுடன் பாபாஜி மணமகள் மற்றும் மணமகனுக்குத் தன்னுடைய ஆசீர்வாதங்களைத் தெரிவித்தார். இதற்கிடையில் இது போன்ற விழாக்களில் செய்யப்படும் மரபைப் பின்பற்றி, காய்ந்த பேரீச்சைப்பழம் மற்றும் பாதாம் கொட்டை கள் திருமண மேடை மீது வாழ்த்துக்கள் தெரிவிக்கும் முறையில் விட்டெறியப் பட்டன. பாபாஜி சிலவற்றைப் பிடித்து அவருக்காக பத்திரப்படுத்திக் கொண்டார்.

வெட்கத்தோடு சிரித்துக்கொண்டே நிகாரின் இந்துத் தோழி ஒருத்தி குலாம் அலியிடம் மிகச் சிறிய பெட்டி ஒன்றைப் பரிசாகக் கொடுத்துவிட்டு அவனுடைய காதில் ஏதோ முணுமுணுத்தாள். அவன் அந்தப் பெட் டியைத் திறந்து அதிலிருந்த குங்குமத்தை நிகாரின் நெற்றி வகிடில் வைத்தான். மந்தமாய் இருந்த ஜாலியன் வாலாபாக் மீண்டும் உரத்த கரகோஷங்களால் உயிர் பெற்றது.

இந்தக் கரகோஷங்களுக்கு ஊடாக பாபாஜி எழுந்து நின்றார். அந்த நொடியில் கூட்டத்தில் பெரும் அமைதி பாய்ந்தது.

அந்த மாலை நேரக் காற்றில் 'ராட்-கி-ராணி'யின் மண மும், மல்லிகைப் பூ மணமும் ஒன்றாய்த் தவழ்ந்தது. அந்தச் சூழல் பரவசமூட்டுவதாய் இருந்தது. பாபாஜி

யின் குரல் இன்று மேலும் இனிமை கலந்ததாக இருந்தது. திருமண ஜோடியை வாழ்த்திவிட்டு, "இவர்கள் இருவரும் இந்த நாட்டிற்காகவும் இந்தத் தேசத்திற்காகவும் உழைப்பதற்கு தங்களை மேலும் அர்ப்பணித்துக் கொள்வார்கள். ஏனென்றால் திருமணத்தின் உண்மையான அர்த்தம் ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையேயான உண்மையான நட்பைத் தவிர வேறு எதுவும் இல்லை. குலாம் அலியும் நிகாரும் இந்திய சுதந்திரத்திற்காக நண்பர்களாய் ஒன்றிணைந்து உழைப்பார்கள். இது போன்ற திருமணங்கள் ஐரோப்பாவில் சகஜமானது - நான் சொல்ல வருவது நட்பு. நட்பை மட்டுமே சார்ந்திருக்கும் திருமணங்கள். எவர் ஒருவர் தன் வாழ்க்கையில் மிருக உணர்வுகளை வென்றெடுக்கிறாரோ அவர் நம்முடைய மரியாதைகளுக்குத் தகுதியுடையவர் ஆகிறார்" என்றார்.

பாபாஜி திருமணம் பற்றி அவரின் பார்வையை நீண்ட நேரம் விவரித்துக் கொண்டிருந்தார். திருமணம் செய்து கொள்கிறவர்களின் உண்மையான சந்தோஷம் நிச்சயமாக உடல் ரீதியான சேர்க்கை தரும் இன்பங்களுக்கு வெளியே உள்ளதாகவும், அதற்கு அப்பாற்பட்டதாக இருப்பதாகவும் தீர்மானமாய் நம்பினார். பொதுவாக உடல்ரீதியான சேர்க்கைக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுவதை அவர் ஏற்றுக்கொள்ள மறுத்தார். ஆயிரக்கணக்கான மக்கள் இந்த ருசிக்கான ஏக்கங்களை அடக்க முடியாதவர்களாக இருக்கிறார்கள், என்பதனாலேயே அது மனிதனின் கடமை போல் ஆகிவிடுமா? உயிர் வாழ்வதற்காக மட்டுமே உண்கிறவர்கள் வெகு சிலரே என்றாலும், அவர்கள் மட்டும் தான் உண்பதின் உண்மையான சந்தோஷத்தை உணர்த்தியிருக்கிறார்கள். அது போலவே திருமணம் செய்து கொள்கிறவர்களில் இந்த உணர்வுகளின் தூய்மையை அனுபவிக்க வேண்டும் என்று ஏக்கங்கள் கொண்டவர்களும், இந்த

உறவின் புனிதத்தன்மையை உணர வேண்டும் என்று ஏங்குகிறவர்களும் தான் இந்தத் தாம்பத்திய உறவில் உண்மையான சந்தோஷத்தை அனுபவிக்கிறார்கள்.

பாபாஜி தன்னுடைய நம்பிக்கைகளை மிகத் தெளிவாகவும், வெளிப்படையாகவும், எடுத்துக் கூறிய விதம் அங்கிருந்த பார்வையாளர்களுக்குப் புத்தம்புதிய உலகைத் திறந்து காட்டியது. நான் கூட மிக மோசமாகப் பாதிக்கப்பட்டேன். எனக்கு எதிரே அமர்ந்திருந்த குலாம் அலி, பாபாஜியின் பேச்சில் மிக ஆழமாக மூழ்கி அவரின் ஒவ்வொரு வார்த்தையையும் பருகிக் கொண்டிருப்பவன் போல் இருந்தான். பாபாஜி தன் பேச்சை முடித்தவுடன் நிகாரிடம் ஏதோ சுருக்கமாக ஆலோசித்து எழுந்து நின்று நடுங்கிக் கொண்டிருக்கும் குரலில், "எங்களுடையது வெறும் திருமணம் மட்டுமாகவே இருக்கும். இந்தியா சுதந்திரம் அடையும் வரை நிகாருடனான என்னுடைய உறவு முழுக்க முழுக்க நட்பு முறையில் மட்டுமே இருக்கும்" என்றான். பலத்த கைத் தட்டல்கள் இதனைத் தொடர்ந்தன. சோர்வுற்றிருந்த ஜாலியன் வாலாபாக்கின் சூழ்நிலை உற்சாகம் கொண்டு சற்று நேரம் குழப்பமான சந்தோஷத்தில் திளைத்தது. சாஹ் ஸாதா குலாம் அலி மேலும் உணர்ச்சி வசப்பட்டு இருக்க, அவனின் காஷ்மீரி முகம் திட்டுத் திட்டாய்ச் சிவந்து போய்க் கிடந்தது. "நிகார்!" மணமகளை உரத்த குரலில் அழைத்து, "உன்னால் இந்த உலகத்தில் ஓர் அடிமைக் குழந்தையை பெற்றெடுக்க முடியுமா?" என்று கேட்டான்.

மணப்பெண்ணாக இருந்ததாலும், பாபாஜி கூட்டத்தில் நிகழ்த்திய உரையாலும் ஏறக்குறைய சிந்திக்கும் திறனை இழந்திருந்தவள், சாட்டையடிபோல் இந்தக் கேள்வி அவள் மீது வீசப்பட்ட போது சிந்திக்கும்

திறனை முழுமையாக இழந்து, "முடியாது! நிச்சயமாக முடியாது!" என்று மட்டுமே அவளால் சொல்ல முடிந்தது.

கூட்டம் மீண்டும் பலமாகக் கைத்தட்டியது. இது குலாம் அலியை மேலும் இறுக்கமான உணர்வு நிலைக் குத் தள்ளியது. ஓர் அடிமைக்குழந்தையைப் பெற்றெ டுக்கும் இழுக்கிலிருந்து நிகாரைக் காப்பாற்றி விட்ட எண்ணம் அவன் மண்டைக்குள் புகுந்து கொண்டது. பிரதான விசயத்திலிருந்து விலகி, தாறுமாறான வழிக ளில் எப்படி நாட்டை விடுதலை அடையச் செய் வது என்று அலைந்து கொண்டிருந்தான். அடுத்த ஒரு மணி நேரம் அவன் உணர்வுப் பெருக்கெடுத்து பேசிக் கொண்டிருந்தான். திடீரென்று அவனின் பார்வை நிகார் மீது விழ, அவன் வாயடைத்துப் போனான். அவனால் அதற்கு மேல் ஒரே ஒரு வார்த்தையை வெளியே கொண்டுவர முடியவில்லை. ஏதோ ஒரு குடிகாரன் எவ் வளவு செலவு செய்கிறோம் என்ற பிரக்ஞையே இல் லாமல் ரூபாய் நோட்டுகளைக் கொடுத்துக்கொண்டே இருந்தவன், திடீரென்று அவனிடம் பணம் ஏதுமில்லை என்பதை உணர்ந்ததுபோல குலாம் அலி இருந்தான். அவனின் பேச்சு இப்படிச் சற்றும் எதிர்பாராத விதத் தில் செயலற்றுப் போனது அவனை மிகவும் எரிச்சல் கொள்ள வைத்தது. ஆனால் அவன் உடனடியாக பாபா ஜியின் பக்கம் திரும்பி தலையைத் தாழ்த்தி மீண்டும் தன் குரலைப் பிடித்துக் கொண்டான். "பாபாஜி! எங்க ளின் சபதத்தில் நாங்கள் நிலையாய் இருக்க எங்களை வாழ்த்துங்கள்" என்றான்.

அடுத்த நாள் காலை ஆறு மணிக்கு சாஹ் ஸாதா குலாம் அலி கைது செய்யப்பட்டான். நாடு சுதந்திரம் அடையும் வரை ஒரு குழந்தைக்குத் தகப்பனாக இருக் கமாட்டேன் என்று சபதம் செய்த அதே பேச்சில், இந்த

ஆங்கிலேயர்களை அப்புறப்படுத்துவதாக மிரட்டியிருந் தான்.

கைது செய்யப்பட்ட சில நாட்கள் கழித்து குலாம் அலிக்கு எட்டு மாதகால சிறைத் தண்டனை விதிக் கப்பட்டு முல்தான் சிறைக்கு மாற்றப்பட்டான். அவன் நாற்பத்து ஓராவது அம்ரித்சர் சர்வாதிகாரி. நான் செய் தித்தாள்களில் கொடுக்கப்பட்ட எண்களைச் சரியாக நினைவு வைத்திருந்தால், நாற்பதாயிரமாவது நபராக அரசியல் செயல்பாடுகளுக்காகவும் சுதந்திர இயக்கத் தில் பங்கெடுத்துக்கொண்டதற்காகவும் சாஹ் ஸாதா குலாம் அலி கைது செய்யப்பட்டிருக்கிறான்.

எல்லோரும் சுதந்திரம் சீக்கிரத்தில் கிடைத்துவிடும் என்று நினைத்தார்கள். ஆனால் புத்திசாலியான பிரிட் டிஷ் அரசியல்வாதிகள் சுதந்திரப் போராட்ட இயக் கத்தை அதன் போக்கில் போகவிட்டார்கள். முக்கிய மான இந்தியத் தேசியத் தலைவர்களுக்குள் ஓர் ஒன்று பட்ட கருத்துக்கு உடன்பட முடியாமல் போனது, இயக் கத்தின் பல்லைப் பிடுங்கிவிட்டது போல் ஆக்கியது.

தலைவர்கள் விடுதலை செய்யப்பட்ட பின், சுதந்திர வேட்கை கொண்ட அவர்கள் தாங்கள் பட்ட கஷ்டங் களின் நினைவுகளை எல்லாம் பின்னுக்குத் தள்ளி விட்டு இடையூறுகளால் பாதிக்கப்பட்டிருந்த அவர்க ளின் தொழில்களைச் சரியான பாதையில் கொண்டு வரச் சென்றார்கள். சாஹ் ஸாதா குலாம் அலி, ஏழு மாதங்களுக்குப் பின் விடுதலை செய்யப்பட்டான். புரட் சிகர உணர்வுகள் பெரும் அளவில் மந்தமாகியிருந் தாலும், அவனை வரவேற்க மக்கள் அம்ரித்சர் இர யில் நிலையத்தில் கூடினார்கள். ஒரு சில பொதுக் கூட்டங்களும், ஊர்வலங்களும் அவனைக் கௌரவிக்க நடத்தப்பட்டது. நான் எல்லா நிகழ்ச்சிகளிலும் கலந்து கொண்டேன். ஆனால் அவை எல்லாமே உத்வேகங்

களற்று நிகழ்த்தப்பட்டன. ஓட்டப்பந்தய வீரர்கள் பாதி தொலைவு ஓடிக் கொண்டிருக்கும்போது, "நிறுத்துங் கள்! நாம் முதலில் இருந்து தொடங்குவோம்" என்று சொல்லி ஒவ்வொரு முறையும் தொடக்கக் கோட்டுக்கு வரவழைக்கப்படுவது போல மக்களிடம் விசித்திரமான சோர்வு கவிழ்ந்து கிடந்தது.

பல வருடங்கள் கழிந்தன. அசதியும் சோர்வும் இந் தியா முழுக்கக் கவிழ்ந்து கிடந்தது. என் சொந்த வாழ்க்கையும் தொடர்ந்து பல ஏற்ற இறக்கங்களையும் கண்டது. சில மிகச் சாதாரணமானவை, சில அப்படி யில்லை. என் முகத்தில் தாடியும் மீசையும் முளைக் கத் தொடங்கிவிட்டது. நான் கல்லூரிக்குள் நுழைந்து இரண்டு முறை என்னுடைய எஃப்.ஏ. தேர்வில் தோற்றுப் போனேன். என் தந்தை இறந்து போனார். வேலை தேடி அலைந்து ஒரு மூன்றாம் தர செய்தித்தாளில் மொழி பெயர்ப்பாளனாகச் சேர்ந்து கொண்டேன். சலிப்புற்றுப் போய் மீண்டும் கல்லூரிக்குப் போவதாகத் தீர்மானித்து அலிகார் பல்கலைக்கழகத்தில் சேர்ந்து கொண்டேன். காசநோயால் பாதிக்கப்பட்டு மூன்று மாதங்கள் காஷ் மீர் கிராமங்களில் சுற்றி நோயிலிருந்து குணமாகி வந் தேன். பிறகு பம்பாய் நோக்கிப் புறப்பட்டேன். இரண்டு வருடங்களில் மூன்று இந்து முஸ்லிம் கலவரங்களைப் பார்க்க நேரிட, அது என்னை டெல்லி நோக்கி மூட்டை கட்டி அனுப்பியது. ஆனால் ஒப்பிட்டுப் பார்த்த அளவில் டெல்லி மிக மந்தமாகவும் எல்லாமே ஆமை வேகத்தில் நகர்வதாகவும் இருந்தது. எங்காவது செயல்பாடுகளின் அறிகுறி தென்பட்டாலும் அதில் பெண்மை கலந்திருக் கும் உணர்வையே கொடுத்தது. நல்லது; எப்படியிருந் தாலும் - அடுத்த வீட்டில் இருப்பவனுக்கு உன்னு டைய பெயர் என்னவென்று கேட்கக் கூட நேரமில்லை என்றாலும் பம்பாய் ஒன்றும் அவ்வளவு மோசமில்லை என்று நினைத்தேன். அதனால் என்ன? எங்கு நிறைய

நேரம் இருக்கிறதோ அங்கு நிறைய போலித்தனங்களையும் நோய்களையும் கொண்டிருக்கும். இப்படி நிகழ்வுகள் எதுவும் அற்ற இரண்டு வருடங்களை டெல்லியில் கழித்த பிறகு, எல்லாவற்றிலும் வேகத்தைக் கொண்டிருந்த பம்பாய்க்குத் திரும்பினேன்.

நான் வீட்டை விட்டு வெளியேறி எட்டு வருடங்கள் ஆகிவிட்டன. என் பழைய நண்பர்கள் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள் என்று எனக்கு ஏதும் தெரியாது. அம்ரித்சரின் சந்துகளும் குறுக்குப்பாதைகளும் கூட என் நினைவிலிருந்து மறையத் தொடங்கின. எப்படி நினைவில் வைத்திருக்க முடியும்? அம்ரித்சரில் யாரோடும் எந்தத் தொடர்பும் நான் வைத்திருக்கவில்லை. உண்மையைச் சொல்வதென்றால் இந்த எட்டு வருடங்களில் என்னுடைய கடந்த காலத்தைப் பற்றி நான் கொஞ்சமும் அக்கறை கொள்ளாதவனாக மாறியிருந்தேன். எதற்காகக் கடந்த காலத்தைப் பற்றிச் சிந்திக்க வேண்டும்? இந்த எட்டு வருடங்களில் நடந்ததை எல்லாம் ஒன்று திரட்டுவதில் என்ன நன்மை இருக்க முடியும்? வாழ்க்கை பணப்பெட்டியில் இருந்து செலவு செய்யப்படும் ஒவ்வொரு நயா பைசாவும் நாளையை நோக்கிக் குறி வைத்திருப்பதை மட்டுமே கணக்கில் எடுத்துக் கொள்ள முடியும்.

ஆறு வருடங்களுக்கு முன்பு நான் ஓரளவு நல்ல நிலையில் இருந்தபோது கோட்டைப் பகுதியில் உள்ள ஒரு கடைக்கு விலை உயர்ந்த ஷூ வாங்கச் சென்றிருந்தேன். ஹார்ன்பை தெருவில் 'ஆர்மி அண்ட் நேவி' கடைக்குப் பின்னால் இருந்த கடை ஒன்றில் காட்சி அலமாரியில் இருந்த ஷூ என்னைக் கொஞ்ச நாட்களாக வாங்கத் தூண்டியது. ஆனால் எனக்கு ஞாபகசக்தி குறைவாக இருந்ததால் முன்பு பார்த்த அந்தக் கடையை என்னால் இப்போது கண்டுபிடிக்க முடியவில்லை. எப்

போதும் செய்து பழக்கப்பட்டது போல நான் குறிப் பாக ஷூ வாங்கத்தான் வந்திருந்தாலும் மற்றக் கடை கள் உள்ளே புகுந்து நோட்டமிடத் தொடங்கினேன். ஒரு கடையில் சிகரெட் வைப்பதற்கான பெட்டி ஒன் றைப் பார்த்தேன். மற்றொரு கடையில் புகைபிடிக்கும் பைப் ஒன்றைப் பார்த்தேன். இப்படியாக நான் நகர்ந்து கொண்டிருந்தபோது காலணிகள் விற்கும் ஒரு சின்ன கடைக்கு வந்தேன். நான் சற்று நின்று உள்ளே போய்ப் பார்த்து விடுவது என்று தீர்மானித்தேன். கடைக்காரன் என்னை வரவேற்று, "வாங்க சாகிப், என்ன வேண்டும்?" என்று கேட்டான்.

ஓரிரு நிமிடங்கள் நான் எதை வாங்க வந்தேன் என்று நினைவில் கொண்டுவர முயன்றேன். "ஓ... சரி, அடியில் ரப்பர் கொண்ட ஷூவைக் காட்டு" என்றேன்.

"நாங்கள் அதை விற்பது கிடையாது"

எப்போது வேண்டுமென்றாலும் மழை தொடங்கிவிட லாம் என்பதால் குதிகால் வரை போடும் பூட்ஸ் ஒன்று ஏன் வாங்கக் கூடாது என்று நினைத்து, "சரி, ரப்பர் பூட்ஸ் இருக்கா?" என்று கேட்டேன்.

"நாங்கள் அதையும் விற்பதில்லை" என்று சொன்ன கடைக்காரன் மேலும், "அடுத்தக் கடையில் கேட்டுப் பாருங்கள். நாங்கள் ரப்பர் கொண்ட எதையும் விற்பது இல்லை" என்றான்.

"ஏன்?" என்று ஆர்வத்தால் கேட்டேன்.

"முதலாளியின் கட்டளை"

மரியாதையற்ற, ஆனால் தீர்மானமான இந்தப் பதி லுக்குப் பிறகு அங்கிருந்து புறப்படுவதைத் தவிர வேறு எதுவும் செய்ய முடியாத நிலையில் இருந்தேன். நான் கிளம்பத் திரும்பியபோது, கையில் குழந்தையோடு சிறப்பாக உடையணிந்து கொண்டு வெளியே நடைபா தையில் நின்று கொண்டு தெருவிலிருந்த ஒரு பழ வியா

பாரியிடம் பழம் வாங்கிக் கொண்டிருந்தவனை என் கண்கள் பார்த்தன. நான் வெளியே கால் வைத்த அந்த நொடியில் அவன் கடையை நோக்கித் திரும்பினான். "நீ! குலாம் அலி?"

"சாதத்!" என்று கத்தி என்னைக் கட்டிக் கொண்டான். குழந்தை அவனுக்கும் எனக்கும் இடையில் சிக்கியிருந்தது. குழந்தைக்கு இது பிடிக்கவில்லை. அது அழத் தொடங்கியது. கடையில் என்னை வரவேற்று பதில் சொன்னவனை குலாம் அலி அழைத்து, அவனிடம் குழந்தையைக் கொடுத்துவிட்டு, "வீட்டுக்கு எடுத்துப் போ" என்று சொல்லி பிறகு என் பக்கம் திரும்பி, "எத்தனை வருஷங்கள் ஆகிவிட்டன? இல்லையா" என்றான்.

நான் அவன் முகத்தை அளந்தெடுத்தேன். அவனிடம் பிரதானமாக இருந்த முரட்டுத்தனமும், எப்போதும் மெல்லியதாகக் கலந்திருக்கும் இறுமாப்பும் வேகமும் இப்போது முழுமையாக மறைந்திருந்தன. என் முன்னே நிற்கிறவன் கதர் உடை அணிந்து உணர்ச்சி பொங்கப் பேசிய பேச்சாளன் இல்லை. அவன் சாதாரணமான குடும்பஸ்தனாக இருந்தான். சோர்வுற்றிருந்த ஜாலியன் வாலாபாக் சூழ்நிலையை, "நிகார்! இந்த உலகத்தில் உன்னால் ஓர் அடிமைக் குழந்தையைப் பெற்றெடுக்க முடியுமா?" என்று அனல் பறக்கும் வார்த்தைகளால் உற்சாகம் கொள்ள வைத்த அவனின் கடைசிப் பேச்சை நினைவு கூர்ந்தேன். உடனடியாகச் சில கணங்களுக்கு முன் குலாம் அலி தூக்கிவைத்திருந்த குழந்தை பக்கம் என் சிந்தனை திரும்பியது. "அது யாருடைய குழந்தை?" என்று கேட்டேன்.

"என்னுடையதுதான், இதில் என்ன சந்தேகம்?" என்று சற்றும் தயக்கம் இல்லாமல் பதில் தந்தான். "இவனுக்கு மூத்தவனும் இருக்கிறான். உனக்கு... உனக்கு எத்தனை குழந்தைகள்.?"

ஒரு நொடிப்பொழுது வேறு யாரோ என்னோடு பேசிக் கொண்டிருப்பது போல் உணர்ந்தேன். நூற்றுக்கணக் கான கேள்விகள் என் மண்டைக்குள் முட்டி மோதியது - குலாம் அலி அவன் செய்த சபதத்தை முழுமை யாக மறந்துவிட்டானா? அரசியல் வாழ்க்கையிலிருந்து தன்னை முற்றிலுமாகத் துண்டித்துக் கொண்டானா? இந்தியா சுதந்திரம் பெற வேண்டும் என்று கொண்டி ருந்த வேகமும் துடிப்பும் எங்கு போயிற்று?அந்த நிர்வா ணமான சவாலுக்கு என்ன நேர்ந்தது? நிகார் எங்கே? அவளால் எப்படி இரண்டு அடிமைக் குழந்தைகளைப் பெற்றெடுக்க முடிந்தது? ஒரு வேளை அவள் இறந்து போய் குலாம் அலி இரண்டாவது திருமணம் செய்து கொண்டிருக்கலாம்.

"என்ன சிந்தித்துக்கொண்டிருக்கிறாய்?" என்று என் தோளில் வேகமாகத் தட்டிய குலாம் அலி, "வா நாம் பேசுவோம். ரொம்ப காலங்களுக்குப் பிறகு சந்திக்கி றோம்" என்றான்.

நான் ஏதோ சொல்லத் தொடங்கி, "ஆ... மா... ம்" என்று இழுத்து வெளியே விட்டு வார்த்தைகளுக்காகத் தடு மாறினேன். ஆனால் குலாம் அலி எனக்குச் சந்தர்ப்பம் கொடுக்காமல் அவனே பேசத் தொடங்கினான். "இது என்னுடைய கடை. இரண்டு வருடங்களாக நான் பம் பாயில்தான் இருக்கிறேன். வியாபாரம் நன்றாக நடக்கி றது. ரொம்ப சுலபமாக மாதா மாதம் முன்னூறு, நானூறு ரூபாய் வரை சேமிக்க முடிகிறது. சரி நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? நீ பெரிய எழுத்தாளனாகி விட் டாய் என்று கேள்விப்பட்டேன். நாம் ஒன்றாக பம்பாய்க்கு ஓடிப் போனது உனக்கு நினைவிருக்கிறதா? ஆனால்... அந்த பம்பாய் வேறுமாதிரி இருந்தது. அது சிறியதாக இருந்தது. இது பிரம்மாண்டமாய் இருக்கிறது. அல்லது

எப்படியிருந்தாலும், எனக்கு அப்படித்தான் தோன்றி யது".

அப்போது ஒரு வாடிக்கையாளன் உள்ளே நுழைந்து டென்னிஸ் ஷு இருக்கிறதா என்று விசாரித்தான். குலாம் அலி, "இரப்பர் சம்பந்தப்பட்டது எதுவும் இங்கு கிடையாது. அடுத்தக் கடைக்குப் போய் பாருங்கள்" என்றான்.

"ஏன் விற்பதில்லை?" என்று அந்த வாடிக்கையாளன் வெளியேறியவுடன் குலாம் அலியிடம் கேட்டு, "நானும் அடியில் இரப்பர் கொண்ட ஷுவைத் தேடித்தான் வந் தேன்" என்றேன்.

நான் இந்தக் கேள்வியை மிகச் சாதாரணமாகத் தான் கேட்டேன். ஆனால் அவனின் முகம் சுருங்கியது. "எனக்கு அது பிடிக்கவில்லை, அவ்வளவுதான்" என் றான் அமைதியாக.

"அது என்று எதைச் சொல்கிறாய்?"

"ரப்பர். நான் சொல்ல வருவது ரப்பரால் செய்யப்பட் டதை". அவன் புன்னகைக்க முயன்றான் ஆனால் முடியவில்லை. அதற்குப் பதில் உரத்த வறண்டு போன சிரிப்பை வெளியே விட்டான். "சரி, நான் உன்னிடம் சொல்கிறேன்; இது அற்ப விஷயம்தான் என்றாலும் அது என் வாழ்க்கையில் பெரும் பாதிப்பை உருவாக்கியிருந் தது".

எதையோ மிகத் தீவிரமாக யோசிப்பது போல் இருந் தான். எப்போதும் குறும்புத் தனத்தைக் கொண்டிருக் கும் அவனின் கண்கள் ஒரு நொடிப்பொழுது மந்தமாகி மீண்டும் பிரகாசித்தது. "இதுதான் வாழ்க்கை - எல் லாவிதத்திலும் போலியானது! சாதத்.. உன்னிடம் உண் மையைச் சொல்வதென்றால் நான் தலைவன் என்று ஏதோ ஒன்று என் மண்டைக்குள் நுழைந்திருந்த அந்த நாட்களை முழுவதுமாக மறந்து விட்டேன். ஆனால்

இந்த நான்கைந்து வருடங்களாக மிகவும் சந்தோஷ மாக இருக்கிறேன். கடவுள் எனக்குக் கொடுத்ததற்கு என்ன கைம்மாறு செய்ய முடியும் என்று எனக்குத் தெரி யவில்லை. எனக்கு மனைவி இருக்கிறாள், குழந்தை கள்..."

'கடவுளுக்குக் கைம்மாறு' செய்யும் விதமாக அவன் இந்தத் தொழிலைத் தொடங்கினான் - வியாபாரத்திற் கான முதல், முதல் வருடத்தில் கிடைத்த லாபம், இப் போது வங்கி சேமிப்பில் இருக்கும் பணம். நான் அவ னைக் குறுக்கிட்டு, "அது சரி! உன் வாழ்க்கையில் பெரும் பாதிப்பை ஏற்படுத்திய அந்த அற்ப விஷயம்தான் என்ன?" என்று கேட்டேன்.

அவன் முகத்தில் இருந்த பிரகாசம் மீண்டும் மறைந் தது. "ஆ...மா...ம்" என்றான். "அது மிகப் பெரிய பாதிப்பை ஏற்படுத்தியது. கடவுள் புண்ணியத்தில் அதிலிருந்து வெளியேறிவிட்டேன். நான் உன்னிடம் எல்லாவற்றை யும் சொல்லத்தான் வேண்டும் என்று நினைக்கிறேன்."

இந்த நேரத்தில் கடைப்பையன் திரும்பி வந்தான். குலாம் அலி கடையைப் பார்த்துக் கொள்ளுமாறு அவ னிடம் சொல்லிவிட்டு பின் பகுதியில் இருந்த ஓர் அறைக்கு என்னை அழைத்துச் சென்றான். அங்கு மிக நிதானமாக, ரப்பர் பொருட்கள் ஏன் இவ்வளவு அருவ றுப்பைத் தன்னுள் வளர்த்திருக்கிறது என்று சொல்லத் தொடங்கினான்.

"நான் எப்படி என் அரசியல் வாழ்க்கையைத் தொடங் கினேன் என்று உனக்கு நன்றாகவே தெரியும். நான் எப்படிப்பட்டவன் என்றும் உனக்குத் தெரியும். நீயும் நானும் ஏறக்குறைய ஒரே மாதிரிதான். நான் என்ன சொல்கிறேன் என்றால் - நாம் நேர்மையாக இருப் போம், நம்முடைய பெற்றோர்கள் நம்மைப் பற்றி பெரு மையாகப் பேசும் அளவிற்கு நாம் கறை படியாதவர்

கள் இல்லை. நான் ஏன் இதையெல்லாம் உன்னிடம் சொல்லிக் கொண்டிருக்கிறேன் என்று தெரியவில்லை. ஒரு வேளை நீ என்னை உன் போக்கில் இழுத்திருக் கலாம். திடமாக இருப்பது எனக்குச் சாத்தியமில்லை. ஆனால் ஏதோ ஒன்று செய்ய வேண்டும் என்ற துடிப்பு என்னுள் இருந்தது. அதுதான் என்னை அரசியலுக்குத் தள்ளியது. ஆனால் கடவுள் மீது ஆணையாகச் சொல் கிறேன் நான் போலியானவன் இல்லை. இந்த நாட்டிற் காக என் உயிரையும் கொடுக்கத் தயாராக இருந்தேன். இப்போதும் தயாராக இருக்கிறேன். அதே சமயத்தில் நிறைய சிந்தித்த பிறகுதான் நான் இந்த முடிவுக்கு வந் தேன். இந்திய அரசியலும் அதன் தலைமையும் நான் முன்பு இருந்தது போலவே அனுபவமற்றதாக இருக்கி றது. பெரிய அலை ஒன்று எழும் - ஆனால் அது தானாக எழவில்லை, திட்டமிட்டு உருவாக்கப்படுகிறது என்றே தோன்றுகிறது. நான் சொல்ல விரும்புவதை உன்னி டம் சரியாகச் சொல்ல முடியவில்லை என்றே நினைக்கி றேன்."

அவனின் சிந்தனைகள் மிக மோசமாகக் குழம் பிக் கிடந்தன. நான் சிகரெட் ஒன்றைக் கொடுத் தேன். அதைப் பற்றவைத்து சில நீண்ட இழுப்புகள் இழுத்துத் தன் பேச்சைத் தொடர்ந்தான். "நீ என்ன நினைக்கிறாய்? இந்தியா சுதந்திரம் பெறச் செய்யப்படும் ஒவ்வொரு முயற்சியும் செயற்கையானதாக உனக்குப் படவில்லையா? இல்லை, முயற்சிகள் என்று சொல்லா மல் முயற்சிகளின் விளைவு என்று தான் நான் சொல் லவேண்டும். நம்மால் ஏன் இன்னும் விடுதலை பெற முடியவில்லை? நாம் என்ன கோழைகளா? நிச்சயமாக இல்லை. நாம் ஆண்கள். ஆனால் நம்முடைய குறிக் கோளை அடைய சூழ்நிலை வேண்டி நிற்கும் அளவிற்கு நம்முடைய சக்திகள் போதுமானதாக இல்லை."

"நமக்கும் சுதந்திரத்திற்கும் இடையே பெரிய மதில் இருக்கிறது என்று சொல்ல வருகிறாயா?" என்றேன்.

அவனின் கண்கள் பிரகாசித்தன. "நிச்சயமாக. ஆனால் அது திடமான சுவரைப் போலவோ உடைக்க முடியாத பாறாங்கல் போலவோ இல்லை. அதிகபட்சம் அது பார்ப்பதற்கு ஜவ்வுத் திரைபோல் இருக்கும்... நாம் அரசியல் நடத்திய விதமும், வாழ்வது போல் பாசாங்கு செய்யும் நம்முடைய வாழ்க்கையும் தூசு படிந்த சிலந் திவலையைப் போல் மதிலை உருவாக்கி இருக்கிறது. இந்த வாழ்க்கையில் நாம் மற்றவர்களை ஏமாற்றிக் கொண்டிருந்தோம்... அதைவிட, நம்மை நாமே படுமோ சமாக ஏமாற்றிக் கொண்டிருந்தோம்."

அவனின் சிந்தனைகள் இன்னும் ஒழுங்கற்றுப் பல விஷயங் களால் சிதறிக் கிடந்தன. அவனுடைய கடந்த கால வாழ்க்கை அனுபவங்களுக்கு எல்லாம் அந்த இடத்தில், அந்த நேரத்தில் கணக்கு பார்த்துவிட முயல் வது போலிருந்தது. சிகரெட்டை நசுக்கி அணைத்து விட்டு என்னைப் பார்த்து, "ஒருவன் கடவுளால் எது வாகப் படைக்கப்படுகிறானோ அவன் அதுவாகவே இருக்க வேண்டும். நற்காரியங்கள் செய்வதற்காக அவன் தன்னுடைய தலையைச் சிரைத்துக் கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. காவித்துணி கட்ட வேண்டிய அவசியம் இல்லை. உடம்பு முழுக்க சாம் பலைப் பூசிக்கொள்ள வேண்டியதும் இல்லை, இல் லையா? ஒருவன் இதையெல்லாம் அவனின் சொந்த விருப்பத்தின் அடிப்படையில் செய்வதாக நீ சொல்ல லாம். இது எப்படிச் சரியாகும். மிகச் சரியாகச் சொல்வ தென்றால் ஒருவன் தன்னுடைய சொந்த விருப்பத்தின் அடிப்படையில் செய்யும் இந்த நாடகத்தனம் தான் மக் களைத் திசைமாறிப் போக வைக்கிறது. குறைந்தபட் சம் நான் அப்படித்தான் நினைக்கிறேன். சிம்மாசனத்தில்

அமர்ந்திருக்கும் இவர்கள் மனித பலவீனங்கள் பற்றி அக்கறை காட்டுவது கிடையாது. அத்தோடு சாதாரண மனித மனங்களில் குடிகொண்டிருப்பது இவர்களு டைய இயல்புகளோ, சிந்தனை முறைகளோ, நம்பிக் கைகளோ இல்லை என்பதை முற்றிலும் மறந்து விடுகி றார்கள். உண்மையைச் சொல்வதென்றால் கணப்பொ ழுதில் இவையெல்லாம் காற்றில் கரைந்து காணாமல் போகின்றன. எது நிலைத்து நிற்கிறது என்றால், சிரைக் கப்பட்ட தலை, காவி உடை, சாம்பல் அப்பிய உடல்க ளின் பிம்பங்கள் மட்டும்தான்".

குலாம் அலி மிகவும் உணர்ச்சிவசப்பட்ட நிலையி லிருந்தான். "இந்த உலகம் நிறைய சீர்திருத்தவாதிக ளைப் பார்த்திருக்கிறது. யாரும் அவர்களுடைய போத னைகளை நினைவில் வைத்திருக்கவில்லை. ஆனால் சிலுவைகளும் பூணூல்களும், தாடிகளும் கடகங்க ளும், அக்குள் முடிகளும் நிலைத்து நிற்கின்றன. ஆயி ரம் தலைமுறைக்கு முந்திய நம்முடைய மூதாதையர்க ளைக் காட்டிலும் நாம் அதிக அனுபவம் பெற்றவர்கள். இப்போது இருக்கும் சீர்திருத்தவாதிகள் மனிதனை அடையாளமே காண முடியாத அளவிற்கு ஏன் சிதைத் துவிடுகிறார்கள் என்று என்னால் புரிந்து கொள்ள முடி யவில்லை. சில நேரங்களில் நான் கதற வேண்டும் என் பது போல் உணர்கிறேன். கடவுளுக்குப் புண்ணியமாகப் போகட்டும். நீங்கள் அவனை ஏற்கெனவே உருக்கு லைத்தது போதாதா? இப்போதாவது அவன் மீது இரக் கம் கொண்டு அவனை விட்டு விடுங்கள். நீங்கள் அவனைக் கடவுளாக்க முயலுகிறீர்கள். ஆனால் பாவம் அவன்; அவனுடைய மனிதத் தன்மையை தக்கவைத் துக் கொள்ள அரும்பாடு பட்டுக்கொண்டிருக்கிறான். சாதத், கடவுள் மீது ஆணையாக நான் இப்படித்தான் உணர்கிறேன். இவையெல்லாம் தவறானவை, பொய் என்றால் எது சரியானது, நிஜம் என்று எனக்குத் தெரி

யவில்லை. இரண்டு வருடங்களாக இதனோடு நான் என் மண்டைக்குள் மல்யுத்தம் செய்துகொண்டிருந் தேன். என் இதயத்தோடு என் மனசாட்சியோடு, ஏன் என் உடலில் உள்ள ஒவ்வொரு தசை நாளங்களோடும் விவாதம் செய்தேன். முடிவில் மனிதர்கள் மனிதர்களா கவே இருக்க வேண்டும் என்று முடிவுக்கு வந்தேன். ஒரு கணவனும் மனைவியும் அவர்களின் காம உணர்வை நசுக்கிக் கொல்ல வேண்டும் என்று நினைத்தால் நசுக் கிக் கொல்லட்டும். ஆனால் மொத்த மனித இனமும் நசுங்க வேண்டுமா? ஐயோ கடவுளே அப்படி நசுக்குவ தால் எந்த நன்மையைச் சாதிக்கப் போகிறார்கள்?"

சற்று நேரம் நிறுத்தி, மற்றொரு சிகரெட்டைப் பற் றவைத்துத் தீக்குச்சியை முழுக்க எரிய விட்டான். பிறகு தன் தலையை மறுப்பது போல் ஆட்டி மேலும் தொடர்ந்தான். "இல்லை சாதத். உடலாலும் மனதாலும் நான் என்னவெல்லாம் கஷ்டங்களை அனுபவித்தேன் என்று உனக்குத் தெரியாது. ஆனால் அது வேறுமா திரியும் இருந்திருக்க முடியாது. இயற்கைக்கு எதிராகச் செயல்பட முயலுபவர்கள் யாராக இருந்தாலும் அதற் கான விலையைக் கொடுத்துத்தான் ஆக வேண்டும். உனக்கு நினைவிருக்கிறதா? நானும் நிகாரும் இந்த உலகத்தில் ஒரு அடிமைக் குழந்தையைப் பெற்றெ டுக்க மாட்டோம் என்று அன்று ஜாலியன் வாலாபாக்கில் சபதம் செய்தோம். அன்று என்னுள் மின்சாரம் பாய்வது போல் சந்தோஷம் பாய்ந்தது. நான் செய்த அந்தத் தீர் மானத்தின் மூலம் என் மண்டைக்குள் நான் வானளவு வளர்ந்துவிட்டதாக நினைத்தேன். ஆனால் சிறையிலி ருந்து வெளியே வந்தபோது தான் நிஜத்தின் வலி என் னைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தாக்கத் தொடங்கி யது. என் உடலிலும் மனதிலும் மிக முக்கியமானதற்குக் கடிவாளம் போட்டுக் கொண்டேன்... என் தோட்டத்தில் இருந்த மிக அழகான பூவை என்னுடைய இரண்டு

உள்ளங்கைகளுக்கு இடையில் வைத்து நசுக்கிவிட்டேன். முதலில், இந்த எண்ணம் என்னுள் பெருமை கொள்ளும் பூரிப்பை ஏற்படுத்தியது - மற்றவர்கள் செய்ய முடியாததை நான் செய்து விட்டேன். ஆனால் மிக மெதுவாக என்னுடைய சிந்தனைகள் தெளிவாகத் தொடங்கியபோது, கசப்பான உண்மை என்னுள் இறங்கத் தொடங்கியது. நான் நிகாரைப் பார்க்கச் சென்றேன். அவள் மருத்துவமனை வேலையை விட்டு விட்டு பாபாஜியின் ஆசிரமத்தில் சேர்ந்திருந்தாள். வெளிறிப் போயிருந்த அவளின் முகம், மனதாலும் உடலாலும் அவள் மாறியிருந்த நிலை - இல்லை, என்னால் நம்ப முடியவில்லை. அவளோடு ஒரு வருடம் கழித்த பிறகு, அவளும் என்னைப் போலவே சித்திரவதைகளை அனுபவித்துக்கொண்டிருக்கிறாள் என்று சந்தேகத்திற்கு இடமில்லாமல் உணர முடிந்தது. ஆனால் சுருக்குக் கயிற்றினால் நாங்கள் இறுக்கக் கட்டிப் போடப்பட்டிருப்பதை உணர்ந்திருந்தாலும், இதைப் பற்றி நாங்கள் பேசிக் கொள்ளவில்லை.

அரசியலின் உற்சாக எழுச்சி எல்லாம் ஒரு வருடத்தில் அமுங்கிப் போனது. கதர் ஆடைகளும் மூவர்ணக் கொடியும் அதன் கவர்ச்சியை இழந்து நின்றன. இப்போதும் கூட அங்கு இங்கு என்று 'இன்குலாப் ஜிந்தாபாத்' கோஷங்கள் கேட்டாலும் அந்த நாட்களில் இருந்த வீரியத்தின் எதிரொலியை இன்று காண முடியவில்லை. ஜாலியன் வாலாபாக் முழுக்க ஒரு கூடாரத்தைக்கூடப் பார்க்க முடியவில்லை. பழைய காலங்களின் நினைவாக நிலத்தில் சில முறுக்காணிகளை மட்டுமே பார்க்க முடிந்தது. வீறுகொண்டு பாய்ந்த அரசியல், ஏறக்குறைய வற்றிப்போய் இருந்தது. இப்போது நான் என் பெரும்பாலான நேரங்களை என் மனைவிக்கு அருகில் இருந்து, வீட்டில் கழிக்கிறேன்".

அவன் நிறுத்தினான். அதே காயப்பட்ட புன்னகை அவனின் உதடுகளில் விளையாடிக்கொண்டிருந்தது. அவனின் சிந்தனை ஓட்டத்தைத் தடைசெய்யக்கூடாது என்று அமைதியாக இருந்தேன்.

சற்று நேரம் கழித்து நெற்றியில் இருந்த வியர்வை யைத் துடைத்துக் கொண்டு சிகரெட்டை அணைத்து விட்டு, "நாம் இருவரும் விசித்திரமான சாபத்தால் சபிக் கப்பட்டவர்கள். நான் நிகாரை எந்த அளவுக்கு நேசிக் கிறேன் என்று உனக்குத் தெரியும். இது எப்படிப்பட்ட நேசிப்பு? நான் அவளைத் தொடும்போது என் னுள் உருவாகும் அதிர்வுகளை அதன் உச்சத்திற்கு ஏன் கொண்டு செல்ல மறுக்கிறேன்? நான் ஏன் குற்ற உணர்வுகளை அனுபவிக்கிறேன்? ஏதோ பாவம் செய் துவிட்டது போல ஏன் உணர்கிறேன்? எனக்கு நிகா ரின் கண்களை ரொம்பவும் பிடிக்கும். ஒருநாள் நான் சாதாரணமான உணர்வுகளைக் கொண்டிருந்தபோது - நான் சொல்ல வருவது ஒருவன் எப்படி உணர வேண் டுமோ அப்படி - நான் அந்தக் கண்களை முத்தமிட்டேன். அவள் என்னுடைய கரங்களில் இருந்தாள். இல்லை நான் இப்படித்தான் சொல்ல வேண்டும் - என் கரங் களில் பெரும் நடுக்கத்தை ஏந்திக்கொண்டிருக்கும் உணர்வே என்னுள் இருந்தது. என்னை முழுமையாக அதன் போக்கில் விட அனுமதிக்க இருந்தவன், கடைசி நிமிடத்தில் என்னுடைய கட்டுப்பாட்டை மீட்டெடுத் தேன். அதற்குப் பிறகு நீண்ட நாட்களுக்கு என்னைக் கட்டுப்படுத்திக் கொண்டதன் மூலம் என் இதயம் பெற்ற அந்தச் சந்தோஷத்தை வெகு சிலரே அனுபவித்து இருக்கக் கூடியது என்று நம்பினேன். உண்மை என் னவென்றால் நான் தோற்றுப்போனேன். அந்தத் தோல் வியை மாபெரும் வெற்றியாக நம்ப வேண்டும் என்று நினைத்து இந்தப் பூமியின் மிகவும் பரிதாபத்திற்குரியவ னாக என்னை மாற்றிக் கொண்டேன். ஆனால் உனக்

குத் தெரியும்தானே! இந்த மனித இனம் எப்படியிருந்தாலும் அது அடைய வேண்டியதை, அடைவதற்கான வழியைக் கண்டுபிடித்துவிடுகிறது. நானும் அதுபோல ஒரு வழியைக் கண்டுபிடித்தேன் என்று வைத்துக் கொள்வோம். நாங்கள் இருவரும் வற்றிக் கொண்டிருந்தோம். எங்களுக்குள் எங்கோ மிக ஆழத்தில் எங்களின் சந்தோஷங்களுக்கு இடையில் பள்ளத்தாக்கு போல் ஒன்று உருவாகத் தொடங்கியிருந்தது. நாங்கள் மிக வேகமாக அந்நியர்களாக மாறிக் கொண்டிருந்தோம். நிறைய சிந்தித்த பிறகு சபதத்தையும் விட்டுக் கொடுக்காமல் எங்களின் தேவையைப் பூர்த்தி செய்து கொள்ள முடியும். நான் என்ன சொல்கிறேன் என்றால் நிகார் ஓர் அடிமைக் குழந்தையை பெற்றெடுக்கமாட்டாள்"

காயப்பட்ட அந்தப் புன்னகை மூன்றாவது முறையாகத் தோன்றிக் கரைந்து போன அதே நொடியில் வலியின் இதழ்களைச் சுமந்த உரத்த சிரிப்பாக மாறியது. பிறகு மிகவும் வருத்தம் கொண்ட குரலில் மேலும் தொடர்ந்தான். "இப்படியாக எங்கள் திருமண வாழ்வில் ஒரு விசித்திரமான பகுதி தொடங்கியது. இது பார்வையற்றவனுக்கு திடீரென்று ஒரு கண்பார்வை கிடைத்தது போல் இருந்தது. நான் மறுபடியும் பார்க்கத் தொடங்கினேன். ஆனால் வெகு சீக்கிரத்தில் என் பார்வை தெளிவில்லாமல் போனது. முதலில் நாங்கள் நினைத்தோம்..." அவன் சரியான வார்த்தையைப் பிடிக்க முயன்றுகொண்டிருந்தான். "முதலில் எங்களுக்கு அது திருப்திகரமாக இருந்தது. நான் சொல்ல வருவது ரொம்ப சீக்கிரத்தில் படுமோசமான அதிருப்தி நிலையை அடைந்து விடுவோம் என்று கொஞ்சம் கூட நினைத்துப் பார்க்கவில்லை. ஒற்றைக்கண் பார்வை போதாது போலிருந்தது. தொடக்கத்தில் எங்களின் உடல் நிலையிலும் முன்னேற்றம் இருப்பதாகவும் எங்களை மீட்டு எடுத்துக்கொண்டிருப்பதாகவும் நினைத்தோம். நிகாரின் முகத்தில் பளபளப்பும்,

கண்களில் ஒளியும் தோன்றத் தொடங்கியது. என்னைப் பொறுத்தவரை எந்நேரமும் நரகத்தில் இருப்பது போன்ற உணர்வு நிலையில் இருந்து மீண்டு வந்தேன். ஆனால் மெதுவாக நாங்கள் ரப்பர் பொம்மைகள் போல் உணரத் தொடங்கினோம். இதை அவளைக் காட்டிலும் நான் அதிகம் உணர்ந்தேன். உன்னால் நம்ப முடியாது, ஆனால் கடவுள் மீது ஆணையாகச் சொல்கிறேன், நான் ஒவ்வொரு முறையும் என்னுடைய சதையைக் கிள்ளிப் பார்த்த போது, ஏதோ ரப்பரைத் தொட்டு விட்டதைப் போல் உணர்ந்தேன். நிச்சயமாக! எனக்கு இரத்தக் குழாய்கள் ஏதும் இல்லாதது போல் உணர்ந்தேன். நிகா ரின் நிலையைப் பொறுத்தவரை அது வேறாக இருந்தது. அவள் இதை உள்வாங்கிய விதமும் வேறாக இருந்தது. அவள் தாயாக வேண்டும் என்று ஏங்கினாள். நாங்கள் இருந்த தெருவில் எந்தப் பெண்ணுக்காவது குழந்தை பிறந்தால் அவள் பெருமூச்சு விடத் தொடங்கினாள். குழந்தை பெற்றுக் கொள்வதைப் பற்றி நான் கொஞ்ச மும் கவலைப்படவில்லை. நமக்கு இல்லை என்பதால் என்னவாகி விடப்போகிறது? இந்த உலகத்தில் கணக்கி லடங்காதவர்களுக்குக் குழந்தை கிடையாது. குறைந்த பட்சம் என் சபதத்தில் நான் நிலையாக இருக்கிறேன். அது ஒன்றும் அவ்வளவு சாதாரண விசயம் இல்லை. நல் லது இது போன்ற சிந்தனைகள் என்னை நிம்மதி கொள்ள வைத்தாலும், சிலந்தி வலைபோல் ரப்பர் என் மூளையைச் சுற்றிக் கொள்ளத் தொடங்கியது. நான் மேலும் மேலும் கவலை கொள்ளத் தொடங்கினேன். மண்டைக்குள் ரப்பர் ஒட்டிக் கிடக்கப் பெரும் சிந்தனை யில் ஆழ்ந்திருப்பவன் போல நான் மாறத் தொடங்கி னேன். சாப்பிட உட்கார்ந்தால் என் பற்களுக்கிடையில் ரொட்டித்துண்டு ரப்பர் போல் மென்மையாகவும் மென்று கொண்டே இருக்க வேண்டும் என்பது போலவும் இருந் தது." இதைச் சொன்னபோது அவன் உடல் ஊடாக ஓர்

அதிர்வு பாய்ந்து சென்றது. "அது குமட்டி எடுக்கும். எந் நேரமும் என் விரல்களுக்கிடையில் சோப்பு நுரை ஒட் டிக்கொண்டிருப்பது போலவும், சுத்தம் செய்தாலும் அது போக மறுப்பது போலவும் உணர்ந்தேன். நான் என் னையே வெறுக்கத் தொடங்கினேன். என் உடலில் இருந்த நீரெல்லாம் வெளியேறிவிட்டது போலவும் மிச்ச மிருப்பது எல்லாம் மெல்லியதான சதை போன்று ஏதோ ஒன்று என்றும் நினைத்தேன் - அதாவது உபயோகப்ப டுத்தப்பட்ட வாளின் உறை" அவன் சிரிக்கத் தொடங்கி னான்.

"கடவுளுக்கு நன்றி சொல்ல வேண்டும். இப்போது அந்த அருவறுப்பை விட்டெறிந்து விட்டேன். ஆனால் அவ்வளவு மனவேதனைகளை அனுபவித்த பிறகு. சாதத், என் வாழ்க்கை வறண்டு போய் சதையெல்லாம் சுருங்கி, ஏதோ சதைத் துண்டு உடலில் ஒட்டிக் கிடப் பது போலவும், ஆசைகள் எல்லாம் கொல்லப்பட்டது போலவும் மாறியிருந்தது என் உடல். ஆனால் விசித் திரமாக என் தொடும் உணர்வு வழக்கத்தில் இல்லாத அளவிற்கு ஏறக்குறைய அதீத சக்தி பெற்றது போல கூர்மையானது. ஒரு வேளை கூர்மை இல்லை என் றாலும் ஒரு திசையை நோக்கி அதன் கவனம் குவிந்து கிடந்தது என்று சொல்லலாம். நான் எதைத் தொட் டாலும் - மரம், கண்ணாடி, இரும்பு, காகிதம் அல்லது கல், எல்லாமே ஒன்று போல மென்மையாக ரப்பரைத் தொட்டுவிட்டது போன்ற உணர்வு என்னை நோயுற்றவ னாக மாற்றியது. நான் அதைப்பற்றி நினைத்தபோதெல் லாம் என்னுடைய அருவறுப்பு மேலும் கூடியது. நான் செய்ய வேண்டியதெல்லாம் என்னுள் வேதனைகளைத் தோற்றுவித்த அதை இரண்டு விரல்களில் பிடித்து விட் டெறிய வேண்டும் அவ்வளவுதான்... ஆனால் அதற் கான துணிச்சல் என்னிடமில்லை. இந்த அவஸ்தை கள் என்ற பெரும் கடலில் இருந்து கரைக்கு வந்து

சேர, பிடித்துக் கொள்ள ஏதேனும் ஒன்று கிடைக்குமா - குறைந்தபட்சம் வைக்கோலாவது கிடைக்குமா என்று ஏங்கினேன். நான் வெறிபிடித்து அதைத் தேடிக் கொண் டிருந்தேன். ஒரு நாள் மொட்டை மாடியில் வெயிலில் படித்துக் கொண்டிருந்தபோது, இல்லை புத்தகத்தின் பக்கங்களைப் புரட்டிக்கொண்டிருந்தபோது என் கண் கள் முகமது நபியின் 'ஹாதீத்' தைப் பார்க்க, நான் சந்தோஷத்தால் குதித்தேன். அந்த உதவி என் கண்க ளைக் கூசச் செய்தது. நான் அந்த வரிகளைத் திரும் பத் திரும்பப் படித்தேன். என் வாழ்க்கையின் வறண்டு போன நிலத்தில் திடீரென்று தண்ணீர் பாய்ந்தோடுவது போல் உணர்ந்தேன். அதில் எழுதியிருந்தது - 'ஓர் ஆணும் பெண்ணும் திருமணத்திற்குப் பிறகு இனப்பெ ருக்கம் செய்வது அவர்களின் கடமையாகும். பெற்றோர் களின் உயிருக்கு ஆபத்து என்றால் மட்டுமே கருத் தடை செய்து கொள்ள அனுமதிக்கப்படுகிறது'. அந்த நொடியில் என் அருவறுப்பை உருவி எடுத்து விட்டெ றிந்தேன்."

அவன் குழந்தைபோல் வாயை மூடிக்கொண்டு சிரித் தான். நானும் சிரித்தேன். காரணம், அவன் தன்னுடைய இரண்டு விரல்களால் சிகரெட்டை எடுத்து, அவனுக்கு எதிராக முடிவே இல்லாமல் கிளர்ச்சி செய்யும் பொருள் போல அதை விட்டெறிந்தான்.

சற்றும் எதிர்பாராதவிதமாய் அவன் இறுக்கம் கொண்ட குரலில், "சாதத்! நீ என்ன செய்வாய் என்று எனக்குத் தெரியும். நான் உன்னிடம் சொன்ன எல்லா வற்றையும் கதையாக மாற்றி விடுவாய். ஆனால் தயவு செய்து என்னை அதில் கிண்டல் செய்யாதே. கடவுள் மீது ஆணையாக நான் உணர்ந்ததைத்தான் உன்னிடம் சொன்னேன். இது பற்றி உன்னோடு நான் விவாதம் செய்ய மாட்டேன். ஆனால் நான் கற்றுக்கொண்டதன்

சாராம்சம் இதுதான்: இயற்கைக்கு எதிராகப் போராடு வதில் வீரம் ஏதும் இல்லை. சாவதோ அல்லது பட்டினி கிடந்து வாழ்வதோ, பள்ளம் தோண்டி அதில் நாள் கணக்கில் புதைந்து கிடப்பதோ, கூர்மையான ஆணி கள் கொண்ட படுக்கையில் மாதக் கணக்காகப் படுத் திருப்பதோ, வருடக் கணக்கில் ஒரு கையை உயர்த்தி நின்று அது அழுகிப் போய் கட்டையாக மாற வைப்ப திலோ சாதனைகள் ஏதும் இல்லை. இவையெல்லாம் வியாபாரத் தந்திரங்கள். தந்திரங்கள் மூலம் கடவுளைக் காண முடியாது. சுதந்திரம் பெற முடியாது. இந்தியா சுதந் திரம் அடையாததற்கு மிகச் சரியான காரணம், நம் நாட் டில் உண்மையான தலைவர்களைக் காட்டிலும், வியா பாரிகள்தான் அதிகம் இருக்கிறார்கள். இருக்கும் ஒரு சில தலைவர்களும் இயற்கை விதிகளுக்கு எதிராகப் போய்க் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் கண்டெடுத்த அரசியல், நம்பிக்கைகளும் உண்மைகளும், பிறப்புக் கொள்வதைத் தடுத்துவிடுகிறது. இந்த அரசியல்தான் சுதந்திரத்தின் கருவறையை அடைத்துவிட்டது."

குலாம் அலி மேலும் தொடர வேண்டும் என்று இருந் தபோது கடைப்பையன் உள்ளே வந்தான். அவன் ஒரு குழந்தையைத் தூக்கி வைத்திருந்தான். ஒரு வேளை அது குலாம் அலியின் முதல் மகனாக இருக்கக் கூடும். அந்தக் குழந்தை மிக அழகான பலூன் ஒன்றைப் பிடித் துக்கொண்டிருந்தது. குலாம் அலி வெறி பிடித்தவன் போல அதனை நோக்கிப் பாய்ந்தான். அது பெரும் சத் தத்தோடு வெடித்தது. ஒரு ரப்பர் துண்டு தொங்கிக் கொண்டிருந்த சிறிய நூலை மட்டுமே அந்தக் குழந்தை பிடித்துக் கொண்டிருந்தது. குலாம் அலி தன்னுடைய இரண்டு விரல்களால் அதைப் பிடித்து இழுத்து அவ னுக்கு எதிராக முடிவே இல்லாமல் புரட்சி செய்யும் பொருளைப் போல வெளியே விட்டெறிந்தான்.



## சில்லிட்டுப் போன சதைப் பிண்டம்

ஐஷர்சிங், ஹோட்டல் அறைக்குள் நுழைந்த உடனே குல்வந்த் கௌர் கட்டிலில் இருந்து இறங்கி அவனை முரட்டுத்தனமாய் முறைத்தபடியே, கதவைத் தாழிட் டாள். அது நடுநிசியைக் கடந்த நேரம். நகரத்தைச் சுற்றி லும் விசித்திரமான அமைதி பரவியிருந்தது.

குல்வந்த் கௌர் திரும்பிச்சென்று கட்டிலில் சம்ம ணமிட்டு அமர்ந்து கொண்டாள். முழுவதுமாகச் சிக் குண்ட நூல் கண்டை ஒழுங்குபடுத்த முயல்வது போல, தீவிர சிந்தனையில் ஐஷர்சிங் ஒரு மூலையில் நின்று கொண்டிருந்தான். இப்படியே சில கணங்கள் அமை தியில் நகர்ந்தன. சிறிது நேரத்திற்குப் பின், அவள் அமர்ந்திருந்த நிலையில் சலிப்புற்று, தன் கால்களைக் கீழே தொங்கவிட்டு ஆட்டத் தொடங்கினாள். ஐஷர்சிங் அமைதியாக நின்றுகொண்டிருந்தான்.

குல்வந்த் கௌர் திடமாகவும், தடித்தும், நல்ல கட்ட மைப்பும், தாராளமான சதைப்பிடிப்புகளும் வழக்கத்தை விட பெரிய மார்பகங்களும் பெற்ற பெண்மணியாக இருந்தாள். அவளின் கண்கள் பிரகாசமாகவும், மேல் உதட்டின் மேல் கொஞ்சம் போல் பூனை முடியும் வளர்ந் திருந்தது. அவளின் முகவாய் அமைப்பு, பெரும் சக்தி பெற்றவள் என்றும், தீர்மானங்கள் கொண்டவள் என்றும் குறிப்பிடுவது போல் இருந்தது.

ஐஷர்சிங் இன்னும் மூலையில் அமைதியாக நின்று கொண்டிருந்தான்; தன் தலையைச் சற்றே கவிழ்த்தபடி.

இறுக்கமாய்க் கட்டியிருந்த அவனின் தலைப்பாகை, தளர்ச்சியுற்றிருந்தது. கிர்பான் பிடித்திருந்த அவனின் கை சற்றே நடுங்கிக் கொண்டிருந்தது. இருந்தாலும் மொத்தத்தில் அவனைப் பார்க்கும்போது, நல்ல உய ரமும், கம்பீரமான உடலமைப்பும் எல்லா விதத்திலும் குல்வந்த் கௌருக்கு ஏற்ற ஜோடிதான் என்றே தோன்றி யது.

இன்னும் சற்று நேரம் இதே அமைதியில் நகர, குல் வந்த் கௌரால் அதற்கு மேல் தன்னை அடக்கிக் கொள்ள முடியவில்லை. அவளின் பிரகாசமான கண் களை உருட்டி, அவளால் சொல்ல முடிந்ததெல்லாம்: "ஐஷர்சியான்"

ஐஷர்சிங் தன் தலையை நிமிர்த்தி குல்வந்த் கௌரை நோக்கினான். அவளின் கண்களை நேரடியாகப் பார்க்க முடியாமல் முகத்தைத் திருப்பிக்கொண்டான். குல்வந்த் கௌர் கத்தினாள், "ஐஷர்சியான்". ஆனால் உடனடி யாகத் தன்னை அடக்கிக்கொண்டு, கட்டிலில் இருந்து இறங்கினாள். அவனை நோக்கி நடந்து, "இத்தனை நாட்களாக எங்கு போயிருந்தாய்?" என்று கேட்டாள். ஐஷர்சிங் உலர்ந்து போன தன் உதடுகளை நாக்கால் ஈரப்படுத்திக் கொண்டு, "எனக்குத் தெரியாது" என்றான். குல்வந்த் கௌர் எரிச்சலுற்று "...இது என்ன பதில்?" என்றாள். ஐஷர்சிங் தன் கிர்பானைச் சற்றுத் தள்ளி விட் டெறிந்து விட்டுக் கட்டிலில் படுத்தான். அவனுடைய தோற்றம் சில நாட்களாக அவன் உடல் நிலை சரி யில்லாதது போல் இருந்தது. கட்டிலில் தன்னை விரித் துப் படுத்திருந்த ஐஷர்சிங்கைப் பார்த்தாள். அவன்மீது இரக்கம் கொண்டு, அவன் நெற்றியில் தன் கையை வைத்தாள். "என்ன விசயம், என் செல்லம்?" என்று அன் போடு கேட்டாள்.

ஐஷர்சிங் கூரையைப் பார்த்துக்கொண்டிருந்தான். குல்வந்த் கௌரின் பக்கம் திரும்பி அவளின் முகத்தை ஏக்கத்தோடு பார்த்தான். அவன் சொன்னான்: "குல் வந்த்". அவன் குரலில் இளகிய தன்மை கலந்திருந்தது. குல்வந்த் கௌர் தன்னை முழுமையாய், அவனுடைய மேல் உதட்டிற்குக் கொண்டு வந்தாள். அதைக் கடித்து, "சொல்லு, செல்லம்" என்றாள்.

ஐஷர்சிங் தன் தலைப்பாகையை எடுத்துவிட்டு குல் வந்த் கௌரைப் பார்த்தான்; அனுதாபமும் உதவியும் வேண்டி. பிறகு அவள் பக்கமாய்த் திரும்பி, அவளின் சதை கொண்ட இடையில் ஓர் அடி அடித்தான். இதைச் செய்யும்போது அவனின் முடி கலைந்து போனது. குல் வந்த் கௌரும் தன் விரல்களை அதன் ஊடாகச் செலுத்தத் தொடங்கினாள். மிக அன்னியோனியமாக, மறுபடியும் கேட்டாள், "இத்தனை நாட்கள் எங்கிருந் தாய்.?" "என் எதிரியைப் பெற்றுப் போட்டவளோடு படுக் கையில் இருந்தேன்" அவளை முறைத்தபடியே பதில் சொன்னான்.

தன் விரல்களால், விம்மிய அவளின் பருத்த முலை களை வருடிக்கொடுத்தான். "அடக் கடவுளே... நீ எவ் வளவு மென்மையாய் இருக்கிறாய்" என்று முணுமுணுத் தான். குல்வந்த் கௌர் அவனின் கையை மெதுவாய் ஒதுக்கித் தள்ளி மறுபடியும் கேட்டாள், "எங்கிட்ட சொல் லுடா, செல்லம், நீ எங்கு போயிருந்தாய். நீ நகரத்துப் பக்கம் போயிருந்தாயா?" ஐஷர்சிங், தன் தலைமுடியை முடிந்த படி, "இல்லை" என்றான். குல்வந்த் கௌர் எரிச் சலடைந்தாள்,

"நீ நகரத்துப் பக்கம் போயிருக்கிறாய், நிறையப் பொருட்களைக் கொள்ளை அடித்திருக்கிறாய், இதை யெல்லாம் என்னிடமிருந்து மறைக்கப் பார்க்கிறாய்".

"உன்னிடம் பொய் சொல்லியிருந்தால், என் அப்ப னுக்குப் பிறந்தவன் இல்லை நான்" சற்றுநேரம் குல் வந்த் கௌர் அமைதியாக இருந்துவிட்டு, மறுபடியும் வெடிக்கத் தொடங்கினாள். "அன்று இரவு உனக்கு என்ன நேர்ந்தது என்று என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை, என்னுடன் ரொம்பவும் சவுகரியமாகப் படுத் திருந்தாய். நகரத்திலிருந்து கொள்ளையடித்து வந்த நகைகளைக் கொண்டு என்னை அலங்கரித்து வெறி பிடித்தது போல் எனக்கு முத்தங்கள் கொடுத் துக் கொண்டு இருந்தாய். திடீரென்று உனக்கு என்ன ஆயிற்று என்று எனக்குத் தெரியவில்லை. நீ உன் ஆடைகளை அணிந்து கொண்டு வெளியே போனாய்".

ஐஷர்சிங் வெளிறிப்போனான். இந்த மாற்றத்தைப் பார்த்த குல்வந்த் கௌர், "பார் உன் முகம் கறுத்துப் போயிருக்கிறது. கண்டிப்பாக நீ எதையோ என்னிடமி ருந்து மறைக்க முயலுகிறாய் ஐஷர்சியான்".

"சத்தியமாக ஏதுமில்லை." என்று ஐஷர்சிங் சொன்னா லும் அவனின் குரல் தீர்மானமாய் இல்லை.

குல்வந்த் கௌரின் சந்தேகங்கள் வலுப்பெற்றன. ஒவ்வொரு வார்த்தையாய் அழுத்தி அவள் சொன் னாள்: "என்ன விஷயம் ஐஷர்சியான்? எட்டு நாட்களுக்கு முன்பிருந்த அதே மனிதனாக இன்று நீ இல்லை." எவரோ தாக்கியது போல ஐஷர்சிங் சட்டென்று எழுந்து கொண்டான். குல்வந்த் கௌரைத் தன் கரங்களால் அணைத்துக்கொண்டு, அவளைத் தடவிக் கொடுக்கத் தொடங்கினான். "நான் அதேதான் செல்லம்" என்றான். "எதுவுமே மாறவில்லை, என்னை இறுக்க அணைத் துக்கொள், உன் விரல்களில் உள்ள வெப்பம் தணியட் டும்."

குல்வந்த் கௌர் எந்த எதிர்ப்பும் காட்டவில்லை. ஆனால், "அன்று இரவு என்ன நடந்தது?" என்று தொடர்ந்தாள்.

"அது நரகத்துக்குப் போகட்டும்"

"அப்போ, நீ என்னிடம் சொல்லமாட்டாய்"

"சொல்லுவதற்கு ஏதாவது இருந்தால் நிச்சயமாகச் சொல்வேன்."

"நீ பொய் சொன்னால், நீயே உன் கைகளால் என்னைப் புதைத்து விடு"

ஐஷர்சிங் தன் கரங்களால் அவளின் கழுத்தை வளைத்துக் கொண்டு தன் உதடுகளை அவளின் உதடுகளோடு இணைத்தான். அவனின் தாடி முடி ஒன்று அவளின் மூக்கிற்குள் நுழைய அவள் தும்மத் தொடங்கினாள். இருவரும் உரக்கச் சிரித்தார்கள்.

ஐஷர்சிங் தன் மேல் சட்டையைக் கழற்றி, குல்வந்த் கௌரைப் பார்த்து, "நாம் நம் ஆட்டத்தை வைத்துக் கொள்வோம்" என்றான்.

குல்வந்த் கௌரின் மேல் உதடுகளில் வியர்வை முத்துக்கள் தென்பட்டன. வெட்கத்தோடு அவள் தன் கண்களை உருட்டி, "நரகத்துக்குப் போ" என்றாள்.

ஐஷர்சிங் அவளின் இடையை அழுத்திக் கிள்ளினான்.

குல்வந்த் கௌர் வலியோடு மறுபக்கம் திரும்பிக் கொண்டு, "அப்படிச் செய்யாதே ஐஷர்சிங், வலிக்குது" என்றாள்.

ஐஷர்சிங் இன்னும் அருகில் வந்து, தன் பற்களால் அவளின் மேல் உதட்டைக் கவ்வி அதனை மெல்லத் தொடங்கினான்.

குல்வந்த் கௌர் உருகினாள்.

ஐஷர்சிங் தன் குர்தாவைக் கழற்றி, "நாம் செய்வோம்" என்றான்.

குல்வந்த் கௌரின் மேல் உதடுகள் துடிக்கத் தொடங்கின. ஆட்டின் தோலை உரிப்பது போல, அவளின் சட்டையைப் பிடித்து அவளிடமிருந்து உருவி எடுத்து விட்டெறிந்தான். அவளின் நிர்வாண உடம்பை முறைத்துப் பார்த்தான். அவளின் புஜத்தை அழுத்திக் கிள்ளினான். "கடவுள் ஆணையாய்ச் சொல்கிறேன் நீ மனிதனைத் தின்னும் ராட்சசி தான்" என்றான். குல்வந்த் கௌர் தன் இடது கை புஜத்தில் ஏற்பட்டிருந்த சிவந்த பகுதியைப் பார்த்து,

"நீ கொடூரமான மனிதன் ஐஷர்சியான்" என்றாள்.

தன் தடித்த கறுத்த தாடிக்குப் பின்னே ஐஷர்சிங் சிரித்தான். "இன்று கொடூரமான நாளாகவே இருக்கட்டும்" என்றான். மறுபடியும் குல்வந்த் கௌரின் மேல் உதட்டைத் தன் பற்களால் கவ்வி எடுத்து ஆழமாய்க் கடித்தான். பிறகு அவளின் காதின் கீழ்ப் பகுதியைத் தன் பற்களால் பிறாண்டத் தொடங்கினான். அவளின் இடையில் ஓங்கித் தட்டி அவளின் மார்பகங்களை அழுத்திப் பிடித்து, அவளின் கன்னங்களில் முத்தமிட்டான். பிறகு அவள் உடல் முழுக்க எச்சிலால் ஈரமாகும் வரை தன் நாக்கால் நக்கினான். குல்வந்த் கௌர் நல்ல தீயில் வைக்கப்பட்ட வெந்நீர் பாத்திரம் போல கொதித்துக் கொண்டிருந்தாள்.

ஆனால் இந்த எல்லா முயற்சிகளுக்குப் பிறகும் ஐஷர்சிங் தன் ஆண்மை உறங்கிக் கொண்டிருப்பதை உணர்ந்தான். மிகவும் அனுபவம் பெற்ற மல்யுத்த வீரன் போல, அவனுக்குத் தெரிந்த எல்லாத் தந்திரங்களையும் முயன்று பார்த்தும் எதுவும் வேலை செய்யவில்லை.

இப்போது முழுவதுமாக முறுக்கேற்றி விடப்பட்ட குல்வந்த் கௌர், "சீட்டுக்கட்டை குலுக்கிப் போட்டது

போதும் ஐஷர்சியான். இந்த முன் விளையாட்டு எல் லாம் போதும். நாம் விளையாட்டைத் தொடங்குவோம்" என்றாள்.

இந்த வார்த்தைகள் வெளிப்பட்ட அடுத்த கணத்தில் ஐஷர்சிங் கொஞ்சம் போல் வசப்படுத்தி மேலே தட்டி எழுப்பியதும் தன் வீரியத்தை இழந்தது. சவம்போல குல் வந்த் கௌர் பக்கத்தில் சரிந்தான். அவன் நெற்றியில் சில்லிட்ட வியர்வைத் துளிகள் தோன்றின.

குல்வந்த் கௌர் அவனின் வீரியத்தைத் தட்டி எழுப்ப முயன்றாலும் அவளால் வெற்றி காண முடிய வில்லை.

இதுவரை படுக்கையில் இவர்களின் வாழ்க்கை இரு வருக்கும் மிகவும் திருப்திகரமாக அமைந்து வந்தது. சொல்லப்போனால் எல்லாமே பழக்கப்பட்டது போல நடந்து கொண்டிருந்தது. அதனால் குல்வந்த் கௌரால் இந்தத் திடீர் மாற்றத்திற்கான காரணத்தைப் புரிந்து கொள்ள முடியவில்லை. ஏமாற்றத்தோடு கட்டிலில் இருந்து கீழே இறங்கினாள். அவளுக்கு முன்னே சுவரில் ஒரு துணி தொங்கிக் கொண்டிருந்தது. அதை எடுத்து, அதைக் கொண்டு தன்னைச் சுற்றிக் கொண்டாள். அலைக்கழிக்கப்பட்ட உணர்வோடு, "உன் ஆண்மை எல்லாவற்றையும் உறிஞ்சி எடுத்த அந்த ராட்சசி யாரு?" என்று கேட்டாள்.

ஐஷர்சிங் ஏதும் சொல்லாமல் கட்டிலில் படுத்துக் கிடந்தான். குல்வந்த் கௌர் இப்போது நிறமிழந்து குமு றிக்கொண்டிருந்தாள். "என்னிடம் ஏன் சொல்லமாட் டேன் என்கிறாய், உடலை விற்கும் பரம்பரையிலிருந்து வந்த அந்தத் தேவடியாள், யார் அந்த ராட்சசி, யார் அந்த வேசிமகள்?"

ஐஷர்சிங் அசதியுற்ற குரலில், "யாரும் இல்லை குல் வந்த், யாருமில்லை" என்றான். குல்வந்த் கௌர் தன்

கைகளை இடுப்பில் வைத்துக் கொண்டு, "ஐஷர்சியான், எனக்கு உண்மை தெரிகிற வரை உன்னை விடமாட் டேன். இதற்குப் பின்னால் பெண் எவளும் இல்லை என்று கடவுள் மீது சத்தியம் செய்து சொல்." என்றாள்.

ஐஷர்சிங் ஏதோ சொல்ல முயன்றான். ஆனால் குல் வந்த் கௌர் அவனைப் பேசவிடவில்லை, "நீ சத்தியம் செய்வதற்கு முன்னால் இதையும் நினைவில் வைத்துக் கொள். நான் சர்தார் நிக்கல் சிங்கின் மகள். நீ மட்டும் பொய் சொன்னால், உன்னைக் கந்தலாய்க் கிழித்துப் போடுவேன்... இப்ப சொல்லு, நீ எந்தப் பொம்பளை யோடும் இல்லை என்று கடவுள் மீது சத்தியம் செய்து சொல்." ஐஷர்சிங் இல்லை என்று தலை ஆட்டிய விதம் அவளின் சந்தேகத்தை ஊர்ஜிதப்படுத்தியது. இப்போது குல்வந்த் கௌர் வெறிபிடித்த மிருகம் போல் இருந்தாள். அவள் பாய்ந்து, கிர்பானை எடுத்து, அதன் உறையை வாழைப்பழத் தோலை உரிப்பது போல உருவி எடுத் தாள். பிறகு ஐஷர்சிங்கை அதைக் கொண்டு தாக்கி னாள்.

கண் இமைக்கும் நேரத்தில் ஐஷர்சிங்கின் உடலில் இருந்து இரத்தம் கசியத் தொடங்கியது. இதுவும் கூட குல்வந்த் கௌரைத் திருப்திப்படுத்தவில்லை. வெறிபி டித்தது போல அவனின் தலை முடியைப் பிடித்து இழுக்கத் தொடங்கினாள். அவனின் ஆண்மையைக் கொள்ளையடித்த அந்தப் பெண் மீது படுமோசமான வார்த்தைகளைக் கொட்டினாள். ஐஷர்சிங் சிறிது நேரம் கழித்து தன்மீது இரக்கம் கொள்ள வேண்டி, "இது போதாதா குல்வந்த்?" என்று கெஞ்சினான்.

குல்வந்த் கௌர் ஓர் அடி பின்னே நகர்ந்தாள்.

ஐஷர்சிங்கின் தொண்டையில் இருந்து கசிந்த இரத் தம் இப்போது அவனது தாடியை நனைத்தது. நடுங் கிக் கொண்டிருக்கும் தன் உதடுகளைத் திறந்து நன்றி

யுணர்வும் அவமானமும் கலந்த உணர்வோடு குல்வந்த் கௌரைப் பார்த்து, "நீ அவசரப்பட்டு விட்டாய்," என்றான். "அப்படியே இருக்கட்டும். எது நடக்க வேண்டுமோ அது நடந்துள்ளது."

குல்வந்த் கௌர் மறுபடியும் கடும் வேதனையைத் தரக்கூடிய பொறாமையை உணர்ந்தாள்.

"தாயோளி, யார் அவ?" தீர்மானமாய்க் கேட்டாள்.

இரத்தம் ஐஷர்சிங்கின் நாக்குக்குச் சென்றது. அதன் சுவை அவனுள் பெரும் புரட்சி உணர்வைத் தோற்றுவித்தது. "...நான் எட்டுப் பேரை இந்த கிர்பானால் கொன்றேன்..." என்றான். குல்வந்த் கௌரின் மண்டை முழுக்க ஐஷர்சிங்கோடு இருந்த அந்தப் பெண் முழுமையாக ஆக்கிரமித்துக் கொண்டிருந்தாள். "தேவடியாளுக்குப் பிறந்த அந்தத் தேவடியா யாரு... சொல்லு" என்றாள்.

ஐஷர்சிங்கின் பார்வை மங்கியது. திடீரென்று அவன் கண்களில் பிரகாசம் தோன்றியது.

"அதிர்ஷ்டம் இல்லாத அந்தப் பெண்ணைச் சபிக்காதே" என்றான்.

குல்வந்த் கௌர் மறுபடியும் அழுத்தமாய்க் கேட்டாள், "அது சரி, யார் அவ?".

ஐஷர்சிங் யாரோ தன் குரல்வளையை நெரிப்பது போல் உணர்ந்தான். "எல்லாவற்றையும் உன்னிடம் ஒரு நிமிடத்தில் சொல்கிறேன்" என்றான். அவனின் கை அவளின் தொண்டையை நோக்கி நகர்ந்தது. தன் இரத்தத்தைப் பார்த்துப் புன்னகைத்தான்.

"விசித்திரமான பிறவிதான் இந்த மனிதன்" என்றான்.

குல்வந்த் கௌர் அவனின் பதிலுக்காகக் காத்திருந்தாள். "சம்பந்தமில்லாத விஷயங்களை இத்தோடு நிறுத்திக் கொள். விஷயத்திற்கு வா" என்றாள்.

ஐஷர்சிங்கின் சிரிப்பு விரிந்தது. "நான் விஷயத்திற்கு வருகிறேன்..." என்றான். "என்னுடைய தொண்டை அறு பட்டுக் கிடக்கிறது... இந்தக் கதையை நான் உன்னிடம் சொல்ல கொஞ்சம் நேரம் எடுக்கும்".

கதையை அவன் சொல்லத் தொடங்கினான். அவ னின் நெற்றியில் மறுபடியும் சில்லிட்ட வியர்வைத்துளி கள் தோன்றின.

"குல்வந்த், என் செல்லம்... நான் அனுபவித்ததை எப் படி உன்னிடம் சொல்வேன்... இந்த மனித இனம் விசித் திரமானதுதான்... நகரத்தில் கலவரத்தின் போது, மற்ற வர்கள் போல நானும் என்னால் முடிந்ததை எல்லாம் எடுத்துக்கொண்டேன். நகைகள், பணம்... என்று எது வெல்லாம் என் கைக்குக் கிடைத்ததோ அதையெல் லாம் எடுத்து வந்து நான் உன்னிடம் கொடுத்தேன்... ஆனால் ஒன்றை மட்டும் உன்னிடமிருந்து மறைத் தேன்..."

ஐஷர்சிங் காயப்பட்ட இடத்தில் வலியை உணர்ந்தான்.

குல்வந்த் கௌர் அவனைப்பற்றி எந்தக் கவலையும் காட்டாமல், "அது என்ன?" என்றாள். தன் தாடியில் உறைந்து கொண்டிருந்த இரத்தத்தை ஊதிவிட்டான். "அந்த வீடு... நான் தாக்கிய அந்த வீட்டில்... அங்கு... ஏழுபேர்... ஆறு... நான் கொன்றேன்... இதே கிர்பானால்... எதை வைத்து நீ... அதில் மிக அழகான பெண் ஒருத்தி யும் இருந்தாள்... நான் அவளைத் தூக்கிக் கொண்டு வந் தேன்..."

குல்வந்த் கௌர் மௌனமாகக் கேட்டுக்கொண்டி ருந்தாள்.

ஐஷர்சிங் மறுபடியும் தன் தாடியில் உள்ள இரத்தத்தை நோக்கி ஊதினான்.

"என்னால் அதை உன்னிடம் விளக்க முடியாது குல் வந்த், என் செல்லம்... அவள் எவ்வளவு அழகாக

இருந்தாள்... நான் அவளையும் கொன்றிருக்க முடியும், ஆனால் நான் எனக்குள் சொல்லிக் கொண்டேன்... ஐஷர்சியான், தினமும் நீ குல்வந்த் கௌரை அனுபவிக் கிறாய், புதிதாய்க் கண்டெடுத்த இவளோடு ஒரு நாள் இருந்தால் என்ன என்று எனக்குள் சொல்லிக் கொண் டேன்."

குல்வந்த் கௌர் இதை மட்டும் சொன்னாள்: "அத னால்..."

"என் தோளில் அவளைத் தூக்கிப் போட்டுக் கொண்டேன்." ஐஷர்சிங் தொடர்ந்தான், "வீட்டைவிட்டு வெளியே வந்தேன்... நடந்து சென்ற வழியில்... நான் என்ன சொல்லிக் கொண்டிருந்தேன்?... ஆமாம் நான் சென்ற வழியில்... கால்வாய் ஓரமாய்ப் புதர்களுக்கு அரு கில் நான் அவளை இறக்கினேன்... முதலில் கொஞ் சம் முன் விளையாட்டுகள் விளையாடலாம் என்றுதான் நினைத்தேன்... ஆனால் இந்தச் சம்பிரதாயங்கள் எல் லாம் எதற்கு என்று நினைத்து..."

ஐஷர்சிங்கின் தொண்டை அடைத்தது.

குல்வந்த் கௌர் எச்சிலை விழுங்கிக் கொண்டு, "பிறகு என்ன நடந்தது?" என்று கேட்டாள். ஐஷர்சிங் மூடிக்கொண்டிருந்த தன் கண்களைத் திறந்து, குல் வந்த் கௌரின் உடலைப் பார்த்தான். அதில், ஒவ் வொரு தசையும் எரிந்து கொண்டிருந்தது. அவனால் சொல்ல முடிந்தது எல்லாம், இவ்வளவுதான், "...அவள் இறந்து கிடந்தாள்... வெறும் பிணம்... சில்லிட்டு போன சதைப் பிண்டத்தைத் தவிர வேறெதுவும் இல்லை... என் செல்லமே, உன் கையைக் கொடு..."

குல்வந்த் கௌர் தன் கையை ஐஷர்சிங்கின் கை மேல் வைத்தாள். அது உறைந்து போன தண்ணீரைக் காட்டிலும் சில்லிட்டுக் கிடந்தது.



## மம்மி

அவரின் பெயர் திருமதி ஸ்டெல்லா ஜேக்ஸன் என்றாலும் எல்லோரும் அவரை மம்மி என்றே அழைத்தார்கள். நடுத்தர வயதுப் பெண்மணியான அவர் சற்றுக் குள்ளமாகவும் சுறுசுறுப்பாகவும் காணப்பட்டார். அவரின் கணவர் ஜேக்ஸன், முதலாம் உலக யுத்தத்தில் கொல்லப்பட்டார். கடந்த பத்து வருடங்களாக, ஸ்டெல்லா அவரின் ஓய்வூதியத்தைப் பெற்று வருகிறார்.

அவர் எப்போது புனே வந்தார், எப்போதிலிருந்து இங்கு வசித்து வருகிறார் என்று எனக்கு ஏதும் தெரியாது. உண்மை என்னவென்றால், அவரின் பின்னணியைத் தெரிந்து கொள்ள நான் எந்த முயற்சியும் எடுக்கவில்லை. ஒரே ஒரு முறை சந்தித்தாலே அவரின் கடந்த காலத்தைப் பற்றித் தெரிந்துகொள்ளும் எண்ணம் ஏதும் ஏற்படாத அளவிற்கு அவர் மிகவும் சுவாரசியமானவர். என்னுடைய பல நினைவுகள் புனே நகரத்தோடு பின்னிப் பிணைந்துள்ளன. மம்மி இவற்றோடு இணைந்தே உள்ளார்.

எனக்குப் பயணங்கள் மேற்கொள்வதில் பெரும் ஆர்வம் உண்டு என்றாலும், அடிப்படையில் நான் ஒரு சோம்பேறி. என்னிடம் பேசினால் நான், 'கஞ்சன் சங்கா'வையோ அல்லது இமயமலையில் ஏதோ ஒரு உச்சியையோ வெற்றிகொள்ளத் தீர்மானித்திருப்பது போல் எண்ணம் ஏற்படலாம். ஒருவேளை நான் அதைச் செய்யவும் கூடும். ஆனால் அதை அடைந்த உடன்

பெரும்பாலும் அங்கிருந்து மேற்கொண்டு நகர எந்த முயற்சியும் எடுக்காமல் இருக்கவும் வாய்ப்புகள் உண்டு.

பம்பாயிலிருந்து என் மனைவியோடு புனேவிற்குப் போவது என்று தீர்மானித்தபோது, எத்தனை வருடங்கள் பம்பாயில் இருந்தேன் என்று எனக்கு நினைவில்லை. கொஞ்சம் இருங்கள், நான் யோசிக்கிறேன்... என் மகன் இறந்து நான்கு வருடங்கள் ஆகின்றன... ஆமாம், நான் பம்பாய் வந்து குறைந்தது எட்டு வருடங்களாவது ஆகியிருக்க வேண்டும். இந்த எட்டு வருடங்களில், நான் ஒரு முறைகூட பம்பாயின் விக்டோரியா பூங்காவிற்கோ, மியூசியத்திற்கோ சென்றது கிடையாது. ஏதோ திடீரென்று காரணம் ஏதுமில்லாமல் புனே போவது என்ற தீர்மானத்தை எடுக்கவில்லை. நான் வேலை பார்த்துக்கொண்டிருந்த சினிமாக் கம்பெனியோடு தகராறு ஏற்பட்டதால், அந்த எரிச்சலிலிருந்து என்னை விடுவித்துக்கொள்ள புனே போவதாகத் தீர்மானித்தேன். புனேவைத் தேர்ந்தெடுக்கக் காரணம், அது பம்பாய்க்கு அருகில் இருந்ததோடு சினிமாத் துறையோடு சம்பந்தப்பட்ட என்னுடைய பல நண்பர்கள் அங்கு வசித்து வருகிறார்கள் என்பதுதான்.

புனேவில், முன்பு என்னோடு வேலை பார்த்த, என்னுடைய பழைய நண்பர் வசித்து வந்த பிரபாத் நகருக்குப் போக வேண்டியிருந்தது. இரயில் நிலையத்தில் இறங்கிய உடனே, பிரபாத் நகர் தொலைவிலிருக்கிறது என்பதை அறிந்து கொண்டோம். அதற்குள் நாங்கள் ஒரு டோங்காவை வாடகைக்குப் பேசி முடித்திருந்தோம். மெதுவாக நகரும் எதுவும் எனக்கு எரிச்சலூட்டும். ஆனால் நான் ஒரு மாறுதலுக்குத்தானே வந்திருக்கிறேன். அவசரம் ஏதும் இல்லை. அது மிகவும் பழுதடைந்த வண்டி - அலிகரின் குதிரை பூட்டிய இக்காவைவிட மோசமானது. கீழே விழுந்துவிடுவோம் என்று எந்த நேரமும் பயந்து கொண்டிருந்தோம். தூசு படிந்த

ஓரிரு பஜார்களைக் கடந்த பின், நான் மிகவும் அசௌ கர்யமுற்று, என் மனைவியிடம் என்ன செய்யலாம் என்று கேட்டேன். அவள், "மற்ற டோங்காவும் இதே போல்தான் இருக்கிறது, இதையும் விட்டால் இந்தக் கொளுத்து கின்ற வெயிலில் நாம் நடப்பதைத் தவிர வேறு வழியில் லாமல் போகும்" என்றாள். அவள் சொல்வது சரிதான். வெயில் மிகக் கொடுமையாக இருந்தது.

நாங்கள் ஒரு பர்லாங்கு தூரம் கூடப் போயிருக்க மாட்டோம், அதே போன்ற ஒரு டோங்கா எதிர்த்தி சையில் எங்களைக் கடந்தது. நான் அதனுள் சாதா ரணமாகப் பார்த்தேன். திடீரென்று யாரோ கத்தினார் கள். "மண்ட்டோ, கழுதை". அது சத்தா, அவனுடன் ஒரு வயதான ஐரோப்பியப் பெண்மணியும் அமர்ந்திருந் தார். வயதான, அருவறுப்பான பெண்ணோடு இருக் கும் அளவிற்கு அவன் தன் அழகியல் உணர்ச்சிகள் எல்லாவற்றையும் இழந்து விட்டான் என்றுதான் நான் முதலில் நினைத்தேன். என்னால் அவரின் வயதைத் தீர்மானிக்க முடியவில்லை என்றாலும், சிவப்புச் சாயம் மற்றும் பௌடர் போட்டுக் கொண்டிருந்ததையும் மீறி அவரின் முகத்தில் இருந்த சுருக்கங்கள் மிகத் தெளி வாகத் தெரிந்தன. அவரின் ஒப்பனை, ரசனையற்றதாக வும், வெறுப்பைத் தருவதாகவும் இருந்தது.

நீண்ட இடைவெளிக்குப் பிறகு நான் சத்தாவைப் பார்க்கிறேன். அவன் என்னுடைய மிகச்சிறந்த நண் பன். 'மண்ட்டோ கழுதை' என்று அவன் கத்தியதற்குப் பதிலாக நானும், அதேபோல் அதற்குச் சமமாக ஏதே னும் சொல்லியிருப்பேன். ஆனால் அவனுடன் அந்தப் பெண்மணியும் இருந்ததால் நான் என்னைக் கட்டுப்ப டுத்திக் கொண்டேன். என் டோங்கா ஓட்டியை நிறுத்தச் சொன்னேன். சத்தாவும் அதையே செய்தான். அந்தப் பெண்மணியைத் திரும்பிப் பார்த்து, "ஒரு நிமிஷத்தில் வந்துவிடுகிறேன், மம்மி" என்றான் சத்தா. டோங்காவில்

இருந்து குதித்த அவன், எங்களை நோக்கிக் கத்திக் கொண்டே ஓடி வந்து, "நீயா? இங்கேயா? எது உன்னை இங்கு கொண்டு வந்து விட்டது?" என்றான். பிறகு எந்தச் சடங்குமில்லாமல் என் மனைவியின் கையைப் பிடித்துக் குலுக்கிக் கொண்டே, "பாய் ஜான், நீங்கள் மாபெரும் அற்புதத்தை நிகழ்த்தி விட்டீர்கள். கடைசியாக இந்த மலையை நகர்த்தி விட்டீர்கள்" என்றான்.

"எங்கு போய்க்கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டேன்.

"எனக்குக் கொஞ்சம் வேலை இருக்கிறது. நீ நேராக என் வீட்டுக்குப் போ" என்று சொல்லி, டோங்கா ஓட்டி பக்கம் திரும்பி, "இந்தக் கனவானை என் வீட்டிற்கு அழைத்துப் போ. அவரிடமிருந்து பணம் ஏதும் வாங்கக்கூடாது" என்றான். பிறகு என்னிடம், "அங்கு ஒரு வேலையாள் இருக்கிறான். போய் சௌகரியமாக இரு. நான் சீக்கிரத்தில் வந்துவிடுகிறேன்" என்று சொல்லி மீண்டும் டோங்காவில் குதித்து ஏறி, மம்மி என்று அவன் அழைத்த அந்த வயதான பெண்மணியின் அருகில் அமர்ந்து கொண்டான். அவன் அவரை மம்மி என்று அழைத்தது, நான் அவனை அவரோடு பார்த்தவுடன் என் மண்டைக்குள் ஏற்பட்ட சங்கடமான உணர்வை விலக வைத்தது.

அவனின் டோங்கா நகரத்தொடங்கியது. என் டோங்கா ஓட்டியிடம் நான் ஏதும் சொல்லவில்லை. மூன்று நான்கு பர்லாங் போனவுடன் அவனே பிரயாணிகள் தங்கும் பங்களா போல் இருந்த ஒரு கட்டடத்தின் முன் வண்டியை நிறுத்தி இறங்கிக்கொண்டான். "நாம் வந்துவிட்டோம்" என்றான். "இது தான் சத்தா சாஹிப்பின் வீடு"

நான் என் மனைவியைத் திரும்பிப் பார்த்தேன். அவளுக்கு இது பிடிக்கவில்லை என்பதை என்னால் பார்க்க முடிந்தது. உண்மையில் புனே வருவதில் அவ

ளுக்குக் கொஞ்சமும் சம்மதம் இல்லை. இங்குக் கூட்டத்தோடு சேர்ந்து, என் முதலாளி மீது இருந்த எரிச்சலைத் தணித்துக்கொள்ளக் குடிக்கத் தொடங்கிவிடுவேன் என்று தீர்மானமாய் இருந்தாள்.

நான் டோங்காவில் இருந்து இறங்கி, ஒரு சிறு பையை எடுத்துக்கொண்டு என் மனைவியிடம் சொன்னேன், "வா போகலாம்". நான் ஒரு தீர்மானத்திற்கு வந்துவிட்டேன் என்பதை உணர்ந்த அவள் மறுப்பு ஏதும் சொல்லாமல் கீழே இறங்கினாள்.

அது ஒரு சாதாரண வீடு. பார்ப்பதற்கு இராணுவத்தினரால் கட்டப்பட்டு, சில காலங்கள் மட்டுமே உபயோகப்படுத்தப்பட்டு, பின் விட்டுச்சென்றது போல இருந்தது அந்தச் சிறிய பங்களா. அதில் சுண்ணாம்பு மற்றும் செங்கல் உபயோகிக்கப்பட்ட முறை மிகவும் கீழ்த்தரமாக இருந்தது. அதன் மேல்பூச்சு பல இடங்களில் வெடித்துக்கிடந்தது. வீட்டிற்குள்ளேயும் மிகச் சாதாரணமாக, திருமணமாகாத ஆண்களின் குடியிருப்பு போலவே இருந்தது. திருமணமாகாத ஆண் - சினிமாக் கம்பெனியின் நடிகன், மாதாமாதம் சம்பளம் கொடுப்பதற்குப் பதில் மூன்று மாதத்திற்கு ஒரு முறை அதுவும் தவணை முறையில் சம்பளம் கொடுக்கும் சினிமாக் கம்பெனி. ஒரு பெண்ணுக்கு அதுவும் மனைவியாக இருப்பவளுக்கு இது ஏற்ற சூழ்நிலை இல்லை என்றும், இத்தகைய சூழ்நிலை அவளுக்குச் சந்தோசத்தைக் கொடுக்காது என்றும் நான் முழுக்க உணர்ந்துதான் இருந்தேன். அதனால் நான் சத்தாவின் வருகைக்காகக் காத்திருந்தேன். அவன் வந்துவிட்டால் பிரபாத் நகரில் குழந்தை குட்டியோடுள்ள என் நண்பனின் வீட்டிற்கு நகர்ந்து விடலாம்.

சத்தாவின் வேலைக்காரனும் விசித்திரமானவன். நாங்கள் உள்ளே நுழைந்த போது, எல்லாக் கதவுகளும் முழுக்கத் திறந்தே கிடந்தன. அவனை எங்கும் பார்க்க முடியவில்லை. அவன் கடைசியாக வந்தபோது,

நாங்கள் இங்குப் பல வருடங்களாக இருப்பது போல, எங்களின் இருப்பை எந்தவிதத்திலும் பொருட்படுத்தா மல் இருந்தான். அறைக்குள் நுழைந்து, எங்களைக் கவனிக்காமல் அவன் நகர்ந்து சென்ற போது, அவன் யாரோ துணை நடிகன் என்றும், அவன் சத்தாவோடு தங்கி இருக்கிறான் என்றும் நினைத்தேன். ஆனால் நான் அவனிடம் வேலைக்காரன் பற்றி கேட்டபோது தான், அவன்தான் சத்தாவால் நேசிக்கப்பட்ட வேலைக் காரன் என்று கண்டுபிடித்தேன்.

எனக்கும் என் மனைவிக்கும் மிகவும் தாகமாக இருந் தது. அவனிடம் குடிக்கத் தண்ணீர் கொண்டுவரச் சொன்னேன். அவன் டம்ளர்களைத் தேடத்தொடங் கினான். நீண்ட நேரத்திற்குப் பிறகு ஓர் அலமாரியின் அடியிலிருந்து கொத்தப்பட்ட டம்ளரை எடுத்து முணு முணுத்தான், "சாஹிப் நேற்று இரவுதான் பன்னிரெண்டு டம்ளர்கள் புதுசாக வாங்கினார். அவை எல்லாம் எங்கு போயிற்று என்று கடவுளுக்குத்தான் வெளிச்சம்".

கொத்தப்பட்ட டம்ளரைக் காட்டி, "நீ இதில் எண் ணெய் ஏதாவது வாங்கிவரப் போகிறாயா?" என்று கேட் டேன்.

'போய் கொஞ்சம் எண்ணெய் வாங்கி வா' என்பது பம்பாயில் விசேஷமான வெளிப்பாடு. என் மனைவிக்கு அதன் அர்த்தம் புரியவில்லை என்றாலும் அவளும் சிரிக்கத் தொடங்கினாள். வேலைக்காரன் குழம்பிப் போனான். "இல்லை ஐயா" என்றான். "நான் டம்ளர் களைக் கண்டுபிடிக்கவே முயன்று கொண்டிருக் கிறேன்...". என் மனைவி தண்ணீர் பற்றி கவலைப்பட வேண்டாம் என்று சொன்னாள். அவன் அந்தக் கொத் தப்பட்ட டம்ளரை மீண்டும் அந்த அலமாரிக்கு அடி யில் வைத்தாக வேண்டும் என்பது போல் வைத்தான். அவன் செய்தது அதை வேறு எங்கேனும் வைத்துவிட் டால் இந்த வீட்டில் உள்ளது எல்லாமே இடிந்து விழுந்து

விடும் என்பது போலவே இருந்தது. பிறகு அவன் அறையை விட்டு வெளியேறினான்.

நான் சென்று கட்டிலில் அமர்ந்தேன். அது சத்தா வின் கட்டிலாக இருக்கவேண்டும். அந்த அறையில் இருந்த இரண்டு நாற்காலிகளில் என் மனைவி ஒன்றில் அமர்ந்து கொண்டாள். சிந்தனையில் மூழ்கியபடி இரு வரும் மௌனமாக இருந்தோம். பிறகு சத்தா வந்தான். அவன் தனியாக வந்தான். நாங்கள் அவனின் விருந் தாளி என்பதால் அதற்கேற்றாற்போல் எங்களை நடத்த வேண்டும் என்ற சிந்தனையே அவனிடம் இல்லை. அவன் அறைக்குள் நுழைந்தவுடன், "அப்ப நீ வந்து விட் டாய். வா, நாம் ஒரு நிமிடம் ஸ்டூடியோ வரை போய் வரலாம். நீ என்னோடு இருந்தால் முன்பணம் பெறு வது எளிதாகும். இன்று மாலை..." அவனின் கண்கள் என் மனைவியைப் பார்த்தன. அவன் நிறுத்தி உரக்கச் சிரிக்கத் தொடங்கினான். "பாய் ஜான், நீங்கள் இவனை மௌல்வியாக மாற்றிவிடவில்லை என்று நினைக்கி றேன்" என்று சொல்லி, மீண்டும் உரக்கச் சிரித்தான். "எழுந்திரு மண்ட்டோ" என்றான் என்னிடம். "பாய் ஜான் இங்கேயே இருக்கட்டும். நாம் சீக்கிரத்தில் திரும்பிவிடு வோம்"

ஏற்கனவே என் மனைவி கொள்ளிக்கட்டை போல் கனன்று கொண்டிருந்தாள். இப்போது அந்தக் கட்டை யில் இருந்து தீ பாய்ந்தது. நான் எழுந்து சத்தாவுடன் கிளம்பினேன். எனக்குத் தெரியும் அவள் சற்று நேரம் கழித்துத் தூங்கிவிடுவாள் என்று.

ஸ்டூடியோ ஒன்றும் அவ்வளவு தொலைவில் இல்லை. எப்படியோ சத்தா மேத்தாஜியிடமிருந்து இருநூறு ரூபா யைப் பெற்று வந்தான். முக்கால் மணி நேரம் கழித்து நாங்கள் திரும்பியபோது, என் மனைவி நாற்காலியி லேயே ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தாள். அவளைத் தொந்தரவு செய்யக்கூடாது என்று, குப்பைக் கூளம்

போல் இருந்த பக்கத்து அறைக்குச் சென்றோம். அங்கு இருந்தவை எல்லாமே உடைந்து போய், தூசியால் மூடப்பட்டு எதற்கும் கட்டுக்கடங்காத தன்மையைத் திட்டமிட்டே வெளிப்படுத்துவது போன்ற தோற்றத்தைக் கொடுத்தன. சத்தா அவனின் வேலைக்காரனைக் கண்டுபிடித்து, அவனிடம் நூறு ரூபாயைக் கொடுத்து, "சீனாவின் இளவரசே, இரண்டு பாட்டில் 'ட்ரிபிள் எக்ஸ்' ரம்மும் அரை டஜன் கண்ணாடி தம்ளரும் வாங்கி வா" என்றான். பிறகுதான் தெரிந்து கொண்டேன், அந்த வேலைக்காரன் சீனாவின் இளவரசன் மட்டுமல்ல, சத் தாவால் சிந்திக்க முடிந்த எல்லா நாட்டிற்கும் இளவரசன் என்று.

சீனாவின் இளவரசர், நூறு ரூபாயைப் பரிசோதித்த படியே வெளியேறினார். சத்தா 'ட்ரிபிள் எக்ஸ்' ரம்மை குடிக்கத் தன்னைத் தயார் படுத்திக் கொள்வது போல, தன் நாக்கால் உதட்டில் நக்கினான். பிறகு, "நல்லது நல் லது எப்படியோ இங்கே நீ வந்து சேர்ந்தாய்" என்றான். திடீரென்று அக்கறையோடு, "பாய் ஜானுக்கு என்ன ஏற் பாடுகள் செய்வது?" என்று கேட்டான். "அவர் இங்கு ரொம்பவும் சலிப்புற்றுப் போவார்"

சத்தாவுக்கு மனைவி இல்லை என்றாலும், எப்போதும் நண்பர்களின் மனைவி மீது தன் அக்கறையை வெளிப் படுத்துவான். அவன் பிரம்மச்சாரியாகவே இருக்கத் தீர் மானம் கொண்டிருந்தான். அவன், "எப்போது இந்தத் திருமண விஷயம் எழுந்தாலும், உடனடியாக என் சம் மதத்தைத் தெரிவிப்பேன். பிறகு தான், நான் ஒரு மனைவிக்கு ஏற்றவன் இல்லை என்ற எண்ணம் வரும். உடனே இந்த விஷயம் மீண்டும் பரணில் தூக்கி வைக் கப்படும்" என்று சொல்வதுண்டு.

ரம் வாங்கி வரப்பட்டது. அதே போல் கண்ணாடி டம்ளர்களும். சத்தா ஆறு கண்ணாடி டம்ளர்களுக்குச் சொல்லியிருந்தான். ஆனால் சீனாவின் இளவரசர் மூன்

றுதான் கொண்டுவந்தார். வழியில் மூன்று உடைந்து விட்டது. சத்தா இதைப்பற்றி அக்கறை ஏதும் காட்டா மல், ரம் பாட்டில் பத்திரமாக வந்து சேர்ந்ததற்குக் கட வுளுக்கு நன்றியைத் தெரிவித்தான். அவன் உடனடி யாக ஒரு பாட்டிலைத் திறந்து, இதுவரை உபயோகிக்கப் படாத கிளாஸில் 'ரம்' ஊற்றினான். கிளாஸை உயர்த்திப் பிடித்து, "நீ புனே வந்ததற்காக" என்றான். நாங்கள் வேக மாகக் குடிக்க, சீக்கிரத்தில் கிளாஸ் காலியானது.

இரண்டாவது சுற்றுத் தொடங்கியவுடன், சத்தா எழுந்து அடுத்த அறைக்குச் சென்றான். அங்கு என் மனைவி இன்னும் உறங்கிக் கொண்டிருந்தாள். அவ ளுக்காக அவன் வருத்தப்பட்டு, "நாம் ஏதாவது சத்தம் எழுப்புவோம், அது அவளை விழித்துக் கொள்ளச் செய் யும், பிறகு... வேண்டாம், இரு. நான் முதலில் அவளுக் காக டீ கொண்டு வர ஏற்பாடு செய்கிறேன்" என்றான். அவன் கிளாஸில் இருந்து ஒரு சின்ன மடக்குக் குடித்து விட்டு, "ஜமைக்காவின் இளவரசே" என்று கத்தினான்.

ஜமைக்காவின் இளவரசர் அங்கு உடனடியாக வந்து சேர்ந்தார். சத்தா அவனிடம், "போய் மம்மியிடம் பிரமா தமாக டீ போட்டுக் கொடுத்தனுப்பச் சொல்" என்றான். வேலைக்காரன் வெளியே சென்றான்.

சத்தா தன் கிளாஸ் முழுக்கக் குடித்து விட்டு, மீண் டும் ஒரு சிறு அளவு ஊற்றிக்கொண்டு, "நான் இப் போது அதிகம் குடிக்கப் போவதில்லை. நான்கு சுற்றுக் குப் பிறகு நான் ரொம்பவும் உணர்ச்சிவசப்பட்டுப் போகி றேன். நான் உன்னோடு பிரபாத் நகர் வந்து பாய் ஜானை அங்கு விட்டு வர வேண்டும்" என்றான்.

அரை மணி நேரம் கழித்து டீ வந்தது. சுத்தமாகவும், தட்டில் அழகாக வைக்கப்பட்டும் கொண்டு வரப்பட்டது. சத்தா டீ தட்டை எடுத்து முகர்ந்து பார்த்துத் திருப்தியை வெளிப்படுத்தினான். "மம்மி தங்கம்" என்று சொல்லி, எத்தியோப்பியாவின் இளவரசரை நோக்கிக் கத்தத்

தொடங்கினான். இந்தச் சத்தம் என் மனைவியை விழித்துக் கொள்ளச் செய்திருக்கும் என்று தெரிந்து, டீ தட்டை எடுத்துக் கொண்டு என்னிடம், "வா" என்றான்.

என் மனைவி விழித்திருந்தாள். சத்தா டீ தட்டை நிலை இல்லாமல் ஆடிக்கொண்டிருந்த ஒரு மேசையில் வைத்து, மரியாதையோடு, "உங்களுக்காக டீ கொண்டு வரப்பட்டுள்ளது, பேகம் சாஹிபா" என்றான். என் மனை விக்குச் சத்தாவின் இந்த நாடகத்தனமான வெளிப்பாடு பிடிக்கவில்லை என்றாலும், டீ பாத்திரங்கள் சுத்தமாக இருந்ததால் மறுப்பேதும் சொல்லாமல் இரண்டு கப் டீ குடித்தாள். இப்போது அவள் சற்று ஆசுவாசப்பட் டது போல் தெரிந்தாள். எங்கள் இருவரையும் அர்த்தத் தோடு பார்த்து, "நீங்கள் இருவரும் ஏற்கனவே உங்க ளின் டீயை அருந்தியிருக்க வேண்டும்" என்றாள். நான் பதில் சொல்லவில்லை என்றாலும் சத்தா, "ஆமாம். நாங்கள் தவறு செய்துவிட்டோம். நீங்கள் கண்டிப்பாக எங்களை மன்னிப்பீர்கள் என்று நம்புகிறோம்" என் றான். என் மனைவி புன்னகைத்தாள். அவன் உரத்தச் சிரிப்பை வெடித்து, "நாங்கள் இருவரும் செய்யக்கூடா ததை எல்லாம் செய்யும் இரண்டு அபூர்வமான பன்றி கள்... நீங்கள் மசூதிக்குக் கிளம்ப வேண்டிய நேரம் வந்து விட்டது" என்றான். அவனின் இந்தப் பேச்சை அவள் விரும்பவில்லை. என் மனைவி, சத்தாவை ரொம்பவும் வெறுத்தாள். உண்மை என்னவென்றால் அவள் என் நண்பர்கள் எல்லோரையும் வெறுத்தாள். அதுவும் சத்தா மீதான அவளின் வெறுப்பு சற்றுக் கூடுதலாக இருக் கக் காரணம், என் மனைவி நன்னடத்தை என்றும், கண்ணியமானது என்றும், வரையறுத்திருப்பதை அவன் அடிக்கடி மீறிக்கொண்டிருந்தான். ஆனால் இதைப்பற்றி எல்லாம் சத்தா எப்போதும் கவலைப்பட்டதே இல்லை. நான் நினைக்கிறேன், இதைப்பற்றி ஒரு முறைகூட அவன் சிந்தித்திருக்க மாட்டான். இது போன்ற பயனற்ற

விசயங்களில் நேரத்தைச் செலவிடுவது வீண் என்றே நினைத்தான். என் மனைவியின் எரிச்சலுற்ற முகத்தைக் கொஞ்சமும் அக்கறை காட்டாத பாவனையில் எதிர்கொண்டு அவனின் வேலைக்காரனைக் கூப்பிட்டான். "கஸகிஸ்தான் இளவரசே, ஒரு டோங்காவை - ரோல்ஸ் ராய்ஸ் போன்ற டோங்காவை எடுத்து வா" என்றான். கஸகிஸ்தான் இளவரசர் வெளியேறினார். சத்தா அடுத்த அறைக்குச் சென்றான். நாங்கள் தனியாக இருந்தபோது, என் மனைவியிடம் நம்முடைய கட்டுப்பாட்டில் இல்லாத விசயங்கள் மீது நாம் இப்படி எரிச்சல் படுவது அவசியமில்லை என்று எடுத்துச் சொன்னேன். ஆனால் வழக்கம் போல், நான் சொல்வதை ஏதும் காது கொடுத்துக் கேட்காமல் அவள் தொடர்ந்து முணுமுணுத்துக் கொண்டிருந்தாள். அந்த நேரத்தில் கஸகிஸ்தான் இளவரசர் ரோல்ஸ் ராய்ஸ் போலிருந்த டோங்காவைக் கொண்டு வர, நாங்கள் பிரபாத் நகருக்குப் புறப்பட்டோம்.

நாங்கள் சென்ற நேரத்தில், என் நண்பன் வீட்டில் இல்லாமலிருந்தது நல்லதாய்ப் போயிற்று. ஆனால் அவனின் மனைவி வீட்டில் இருந்தாள். சத்தா என் மனைவியை அவளிடம் ஒப்படைத்து, "இனம் இனத்தோடு சேர வேண்டும்" என்றான். பிறகு என் பக்கம் திரும்பி, "நாம் கிளம்பலாம் மண்ட்டோ, உன் நண்பனை நாம் ஸ்டூடியோவில் பிடித்துக்கொள்ளலாம்" என்றான். என் மனைவி அவளின் சிந்தனைகளை ஒன்று திரட்டுவதற்குள், என் கையைப் பிடித்து இழுத்து வெளியே கொண்டு வந்தான். டோங்காவில் அமர்ந்தவுடன் அவன் எதைப் பற்றியோ சிந்தித்துக் கொண்டிருப்பது போல, "இது முடிந்தது. அடுத்தது என்ன?" என்றான். பிறகு உரக்கச் சிரிக்கத் தொடங்கி, "மம்மி... கிரேட் மம்மி" என்றான்.

யார் அவனின் மம்மி என்று கேட்க வாயெடுத்தேன். ஆனால் அவன் அதற்குள் பேச்சை வேறு திசைக்குத் திருப்பி விட்டான்.

பயணிகள் தங்கும் பங்களா போல் இருந்த அந்தக் கட்டடத்திற்கு டோங்கா மீண்டும் திரும்ப வந்தது. அதன் பெயர் சயிதா காட்டேஜ். ஆனால் சத்தா அதைக் கபிதா காட்டேஜ் - தனிமையும், சோகமும் கொண்ட காட்டேஜ் என்ற அர்த்தத்தில் அழைத்தான். அவன் அர்த்தப்ப டுத்தியது சரியானது அல்ல என்று பிறகுதான் தெரிந்து கொண்டேன்.

சயிதா காட்டேஜ் முதல் பார்வைக்கு மிகக் குறைவான நபர்களைக் கொண்டிருப்பது போன்ற எண்ணத்தை ஏற் படுத்தியது. உண்மையில் அது நிறைய நபர்களைத் தன் னுள் கொண்டிருந்தது. எல்லோருமே வேலை பார்ப் பது சினிமாக் கம்பெனியில் - அந்தக் கம்பெனி மாதச் சம்பளத்தை, மூன்று மாதத்திற்கு ஒருமுறை - அதுவும் தவணை முறையில்தான் கொடுக்கும். நான் அவர் களிடம் அறிமுகப்படுத்தப்பட்ட போது, எல்லோருமே உதவி இயக்குநர்களாக இருந்தார்கள் - சிலர் பிரதான உதவியாளர்கள் - சிலர் அவனுக்கான உதவியாளர் கள் - இன்னொருவன் உதவியாளர்களுக்கான உதவி யாளன். இப்படி ஒவ்வொருத்தனும் மற்றவனுக்கு உத வியாளனாக இருந்தான். ஒவ்வொருத்தனும் சொந்தக் கம்பெனியைத் தொடங்க பணத்தைத் தேடிக்கொண்டி ருந்தான். அவர்கள் தங்களை அலங்கரித்துக்கொண்ட விதமும், அணிந்து கொண்ட உடைகளும் ஒவ்வொருத் தனும் கதாநாயகன் என்ற தோற்றத்தையே ஏற்படுத் தியது. யுத்தம் காரணமாகக் கட்டுப்பாடுகள் நிறைந்த அந்த நாட்களில் அவர்களிடம் ரேசன் கார்டு கூடக் கிடையாது. எந்தச் சிரமமும் இல்லாமல் நியாயமான விலையில் வாங்கக் கூடிய பொருட்களைக் கூட அவர் கள் கருப்புச் சந்தையில் வாங்கி வந்தார்கள். ஆனால்,

திரைப்படங்களைத் தொடர்ந்து பார்த்து வந்தார்கள். பந்தயங்கள் நடக்கும் காலங்களில் அதற்குச் சென்றார் கள். பந்தயத்தில் பணம் கட்டும் பழக்கம் இருந்தாலும் அவர்கள் எப்போதும் ஜெயித்ததே இல்லை. பெரும்பா லும் பணத்தை இழந்தார்கள்.

சயிதா காட்டேஜில் தேவையான அளவிற்கு இடம் இல்லாததால், கார் கொட்டகை கூட வசிப்பிடமாக மாற் றப்பட்டிருந்தது. அதில் ஒரு குடும்பம் வசித்து வந்தது. அந்தக் குடும்பத் தலைவியின் பெயர் ஷிரின். அவ ளின் கணவன் துணை இயக்குநர்களைக் கொண்ட ஒரு சினிமா கம்பெனியில் டிரைவராக இருந்தான். அவனின் நடவடிக்கைககளை யாரும் அறிய முடியவில்லை. கார ணம் எப்போது போகிறான், எப்போது வருகிறான் என்று யாருக்கும் தெரியாது. நான் அவனை அங்கு பார்த்ததே கிடையாது. ஷிரினுக்கு ஒரு சிறிய ஆண் குழந்தை இருந் தான். அவனை சயிதா கட்டேஜில் உள்ள ஒவ்வொரு வரும் நேசித்து வந்தார்கள். பார்ப்பதற்கு அழகாயிருந்த ஷிரின், எல்லா நேரத்தையும் கார் கொட்டகையிலேயே கழித்து வந்தாள்.

சயிதா காட்டேஜில் இருந்த பெரிய அறையில் சத்தா மற்றும் அவனின் இரண்டு சகாக்களும் இருந்தார்கள். அவர்கள் இருவரும் நடிகர்கள். கதாநாயகனாக முயன் றுக் கொண்டிருந்தார்கள். ஒருவனின் உண்மையான பெயர் சயிதா என்றாலும், அவனின் சினிமா பெயர் ரஞ் சித்குமார். இந்தக் காட்டேஜின் உண்மையான பெயர் கபிதா காட்டேஜ் என்றும், இப்போது சயிதா என்ற பெயர் அவனால் வந்தது என்றும் சத்தா சொல்வான். ரஞ்சித்கு மார் பார்க்க மிக அழகாகவும் அதிகம் பேசாதவனாகவும் இருந்தான். சத்தா அவனைச் சில சமயங்களில் ஆமை என்று அழைப்பான். இதற்குக் காரணம் அவன் எதைச் செய்தாலும் அவ்வளவு மெதுவாகச் செய்வான். மற் றொரு நடிகனின் உண்மையான பெயர் தெரியவில்லை

என்றாலும் அவனை எல்லோரும் காரீப் நவாஸ் என்றே அழைத்தார்கள் - அதாவது ஏழைகளின் இரட்சகன். அவன் ஹைதராபாத்தைச் சேர்ந்த, வளமான குடும்பத் தைச் சேர்ந்தவன். சினிமா மீதிருந்த மோகம் அவனை புனேவுக்குக் கொண்டு வந்தது. அவனின் மாதச்சம்ப ளம், இருநூற்று ஐம்பது ரூபாய் என்று நிர்ணயிக்கப்பட் டுள்ளது. அவன் ஒரு வருட காலமாக இந்த வேலையில் இருக்கிறான். இந்த ஒரு வருடத்தில் அவனுக்கு ஒரே ஒரு முறைதான் இருநூற்று ஐம்பது ரூபாய் கொடுக்கப் பட்டுள்ளது; அதுவும் முன்பணமாக. இந்த முன்பணத் தைக் கூட அவன் பெறக் காரணம் முரட்டுத்தனமான வட்டிக்காரனிடமிருந்து சத்தாவைக் காப்பாற்றத்தான். அவன் இலக்கிய ரீதியாகக் கதைகளும், சில சமயங்க ளில் கவிதைகளும் எழுதுவதுண்டு. காட்டேஜில் உள்ள ஒவ்வொருத்தரும் அவனிடம் கடன்பட்டிருந்தார்கள்.

ஷகிலும் அகிலும் சகோதரர்கள். இருவரும் யாரோ ஒரு துணை இயக்குநருக்கு உதவி இயக்குநர்களாக இருந்தார்கள். ஷகில் என்றால் அழகானவன் என்றும், அகில் என்றால் ஞானமுள்ளவன் என்றும் அர்த்தம். இருவரும் செய்வதற்கு ஏதுமில்லாமலும், நேரமும் இல் லாமலும் அலைந்துகொண்டே இருந்தார்கள்.

சத்தா, சயிதா, மற்றும் காரீப் நவாஸ் இந்த மூன்று மூத்தவர்களும் ஷிரின் மீது மிக அதிக அக்கறை காட் டினார்கள் என்றாலும், கார் கொட்டகைக்கு இவர்கள் யாரும் ஒன்றாகச் சென்றதே கிடையாது. போவதற்கு என்று எந்தக் குறிப்பிட்ட நேரமும் கிடையாது. காட்டே ஜின் வரவேற்பறையில் மாலை வேளைகளில் ஒன்றாக இருக்கும்போது யாரோ ஒருத்தன் எழுந்து கார் கொட் டகைக்குச் செல்வான். அவர்கள் ஷிரினிடம் பல்வேறு குடும்ப சம்பந்தப்பட்ட விஷயங்களில் அறிவுரை கூறி வந்தார்கள். இந்தத் துணை இயக்குநர் வகையறாக்கள் அவளுக்கு அன்றாட வேலையில் உதவி செய்து வந்

தார்கள். சில சமயங்களில் அவளுக்கு ரேசன் பொருட் கள் வாங்கித் தந்தார்கள்; சில சமயங்களில் துணிமணி களை சலவைக் காரனிடம் எடுத்துச்சென்றார்கள்; சில சமயங்களில் அழுது கொண்டிருக்கும் அவளின் குழந் தையைக் கவனித்துக் கொண்டார்கள்.

அங்கு வசித்து வந்தவர்கள் உற்சாகம் குன்றி, சோகத்தோடு காணப்படும் வகையைச் சேர்ந்தவர்கள் இல்லை. எப்போதும் உற்சாகத்தோடு இருந்தார்கள். அவர்களின் கஷ்டங்களைப் பற்றி பேசிக்கொள்ளும் போது கூட, அது எந்தக் கனத்தையும் கொண்டிராம லேயே இருந்தது.

நாங்கள் சயிதா காட்டேஜுக்குள் நுழையப் போன சமயத்தில் காரீப் நவாஸ் வெளியே வந்து கொண்டிருந் தான். சத்தா அவனைப் பார்த்தவுடன், தன் பாக்கெட் டிலிருந்து கொஞ்சம் ரூபாய் நோட்டுகளை எடுத்து, அதை எண்ணாமல் அவனிடம் நீட்டி, "நான்கு ஸ்காட்ச் பாட்டில் தேவை. பணம் போதவில்லை என்றால் மிச்சத் தைப் போட்டுக்கொள். ரொம்ப அதிகமாக இருந்தால் மிச்சத்தை என்னிடம் திருப்பிக் கொடு" என்றான். காரீப் நவாஸ் பணத்தைப் பெற்றுக்கொண்டு நகர்ந்தான். நாங் கள் காட்டேஜ் உள்ளே நுழைந்தோம். சத்தா மிகப்பெ ரிய கொட்டாவி ஒன்றை விட்டு, பாதிக்கு மேல் காலி யாய் இருந்த ரம் பாட்டிலை எடுத்தான். அதன் அளவை ஆராய்ந்து, வேலைக்காரனுக்காகக் கத்தினான்.

"ஓ... குக்கிஸ்தானின் இளவரசே". குக்கிஸ்தானின் இளவரசர் வராத காரணத்தால், அவன் கிளாஸில் ஒரு பெரிய அளவு ஊற்றிக் கொண்டு, "நான் நினைக்கி றேன். அவன் அதிகம் குடித்திருக்க வேண்டும். அதிர்ஷ் டமற்றவன்" என்றான். தன் கிளாஸைக் காலி செய்து விட்டு அவன் இதயத்தில் குற்ற உணர்வு கொண்டுள் ளது போல், "நீ அவசியமில்லாமல் பாய் ஜானை இங்கு அழைத்து வந்திருக்கிறாய்" என்றான். பிறகு தன்னையே

சமாதானப்படுத்திக்கொள்வது போல், "ஆனால் அங்கு அவருக்குச் சலிப்பு வராது" என்றான். நான், "அவள் அங்கிருந்து கொண்டு என்னைக் கொலைச் செய்வதற்குத் திட்டங்கள் ஏதும் தீட்ட முடியாது" என்று சொல்லி, என் கிளாஸில் மேலும் கொஞ்சம் ரம் ஊற்றிக் கொண்டேன்.

நாங்கள் அமர்ந்திருந்த அந்தக் குப்பை அறையில் இரண்டு பெரிய ஜன்னல்கள் இரும்புக் கம்பிகளோடு இருந்தன. இவை ஊடாக திறந்தவெளி நிலத்தைப் பார்க்க முடிந்தது. அந்தத் திசையில் இருந்து சத்தாவின் பெயரைச் சொல்லி யாரோ உரக்கக் கத்தினார்கள். அது இசையமைப்பாளர் வெங்குத்ரி. அவனைப் பார்த்து யாராலும் அவன் மங்கோலியனா, நீக்ரோவா, ஆரியனா அல்லது வேறு ஏதோ ஒன்றா என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஒரு தீர்மானத்தை அடையும்போது அவனின் முக அமைப்பில் ஏதோ ஒன்றைக் கண்கள் பார்க்க, எடுக்கப்பட்ட தீர்மானத்தைச் சந்தேகத்திற்கு உட்படுத்தும். உண்மையில் அவன் மராத்தி. சிவாஜியின் கம்பீரமான குறிபார்த்த மூக்கைப் போல் இல்லாமல், அவனின் மூக்கு, தட்டையாகவும், சற்றே வளைந்தும் பார்க்கக் கோரமாய் இருந்தது. அவனைப் பொறுத்தவரை இசைக்கு இந்த மூக்கே மிகச் சிறந்தது. அவன் என்னைப் பார்த்தவுடன், "மண்ட்டோ - மண்ட்டோ சேட்" என்று கத்தினான். சத்தா திரும்பக் கத்தினான், "சேட் எல்லாம் நாசமாகப் போகட்டும் உள்ளே வா." அவன் உள்ளே வந்து, தன் பையிலிருந்து ஒரு பாட்டில் ரம்மை எடுத்து மேசை மீது வைத்தான், "நான் மம்மியைப் பார்க்கப் போயிருந்தேன். உன்னுடைய நண்பன் யாரோ இங்கு வந்திருப்பதாகச் சொன்னார். யார் அந்த இழவு நண்பனாக இருக்க முடியும் என்று எனக்குள் சொல்லிக் கொண்டேன். அது கழுதை மண்ட்டோவாக இருக்கும் என்று எனக்குத் தெரியாமல் போயிற்று" என்றான்.

பூசணிக்காய் வடிவத்தில் இருந்த வெங்குத்ரியின் தலையில், சத்தா ஓங்கித் தட்டி, "வாயை மூடு கழுதை, நீ ரம் கொண்டு வந்திருக்கிறாய். அத்தோடு நிறுத்திக் கொள்" என்றான். வெங்குத்ரி காலியாய் இருந்த ஒரு கிளாஸை எடுத்து அவனுக்காகப் பெரிய அளவு ரம் ஊற்றிக் கொண்டு, "மண்ட்டோ, நான் இந்தக் கழுதையை இன்று சந்தித்த போது குடிக்க வேண்டும் போல் இருப்பதாக என்னிடம் சொன்னான். நான் என்ன செய்ய முடியும் என்று சிந்திக்கத் தொடங்கினேன்... என்னிடம் சல்லிக் காசு கிடையாது." சத்தா மறுபடியும் அவன் தலையில் ஓங்கி அடித்து "வாயை முடு... பேசாதே.. ஏதோ சிந்திக்கத் தெரிந்தவன் போல..." என்றான். "தேவடியாப் பையா, யோசிக்காமல் எப்படி இவ்வளவு பெரிய பாட்டிலைக் கொண்டு வந்திருக்க முடியும்? கழுதை, இதை உன் அப்பனா கொடுத்தான்?" என்று சொல்லி ஒரே மடக்கில் வெங்குத்ரி கிளாஸைக் காலி செய்தான். வெங்குத்ரி சொல்ல வந்ததை உதாசீனப்படுத்தி, "மம்மி என்ன சொன்னார் என்று சொல்?. பாலி அங்கு வந்தாளா? தெல்மா எப்போது வருவாள்? அப்புறம் பிளாட்டினம் முடி கொண்ட அந்தப் பெண் பற்றி ஏதாவது செய்தி உண்டா?" என்று கேட்டான். வெங்குத்ரி பதிலாக ஏதோ சொல்ல முயன்றான். ஆனால் சத்தா அதற்குள் என் கையைப் பிடித்துக் கொண்டு பேசத் தொடங்கினான், "மண்ட்டோ! என்ன அருமையாக ஒன்று சேர்க்கப்பட்ட பொருள் தெரியுமா அது!. நான் பிளாட்டினம் தலைமுடி என்று ஒன்று இருப்பதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன் என்றாலும் இது வரை பார்த்ததில்லை. நேற்றுதான் ஒன்றைப் பார்த்தேன்... அவளின் முடி... மெல்லிய வெள்ளி இழைகளைப் போல இருந்தது... பிரமாதம்! மண்ட்டோ கடவுள் மீது ஆணையாகச் சொல்கிறேன் அவள் உண்மையிலேயே பிரமாதமானவள்... மம்மி ஜிந்தாபாத்." பிறகு அவன் வெங்குத்ரியை விஷமத்தனமாகப் பார்த்துக்

கண்டிப்பான குரலில், "வெங்குத்ரி உற்சாகத்தில் ஏன் கைத் தட்ட மறுக்கிறாய். ஏன் 'மம்மி ஜிந்தாபாத்' என்று கத்தமாட்டேன் என்கிறாய்" என்றான். வெங்குத்ரி சத்தா வோடு சேர்ந்து கொண்டு "மம்மி ஜிந்தாபாத்" என்று திரும்பத் திரும்பக் கத்தினான். இதற்குப் பிறகு வெங் குத்ரி சத்தாவிற்குப் பதில் சொல்ல முயன்றான். ஆனால் சத்தா அவனின் வாயை அடைத்து, "மண்ட்டோ, நான் மிகவும் உணர்ச்சிவசப்பட்டுள்ளேன். நம்முடைய மரபில் காதலியின் முடி கருத்தது என்று, அது கருத்த மேகங்க ளோடு ஒப்பிடப் படுகிறது. ஆனால் இங்கு எல்லாம் வேறு மாதிரியாயிருக்கிறது... அவளின் முடி வெள்ளியின் நிறத்தில் இருந்தது... இல்லை, அதை வெள்ளியின் நிறம் என்று சொல்ல முடியாது... பிளாட்டினம் என்ன நிறம் என்று கடவுளுக்குத்தான் தெரியும். நான் அந்த உலோகத்தை இதுவரை பார்த்ததே இல்லை. அது விசித்திரமான நிறம்... பார்ப்பதற்கு வெள்ளியும் இரும்பும் கலந்தது போலத் தெரிகிறது" என்றான். வெங்குத்ரி தன் னுடைய இரண்டாவது சுற்றை முடித்துக் கொண்டு, "அத் தோடு 'ட்ரிபிள் எக்ஸ்' ரம்மும் ஒரு சுற்றுக் கலந்திருக் கும்" என்றான். சத்தா அவன் மீது மோசமான கெட்ட வார்த்தையை விட்டெறிந்து விட்டு, "முட்டாள்தனமாய்ப் பேசிக் கொண்டிருக்காதே" என்றான். பிறகு அவன் கண் கள் முழுக்க ஏக்கங்கள் நிரம்பி வழிய என்னைப் பார்த்து, "நண்பா, நான் உண்மையில் ரொம்பவும் உணர்ச்சி வசப் பட்டுக் கிடக்கிறேன்... ஆமாம்... அந்த நிறம்... அது உண் மையில் சொர்க்கம். மீனுடைய வயிற்று நிறத்தைப் பார்த் திருக்கிறாயா... அது அதைச் சுற்றியிருக்கும்... போம்பிரட் மீன்... அதை என்னவென்று சொல்வது... இல்லை இல்லை... பாம்பிடமிருக்கும் அந்தச் சிறு... சிறு... உருது வில் அதை 'கேப் டே' என்று சொல்வார்கள்... எவ்வளவு அழகானதற்கு, எவ்வளவு அசிங்கமான பெயரை வைத் திருக்கிறார்கள்... பஞ்சாபில் நாங்கள் அதை 'சானே'

என்று அழைப்போம்... இந்த வார்த்தையில் தான் எவ்வ ளவு துடிப்பு இருக்கிறது... அவளின் முடியிலிருக்கும் அதே துடிப்பு... சிறு சிறு பாம்புகள் தொங்கிக்கொண்டு நடனமாடுவது போல..." அவன் எழுந்துகொண்டு, "நட னமாடும் சிறு சிறு பாம்புகள் எக்கேடு கெட்டும் ஒழியட் டும்... நான் மிகவும் உணர்ச்சிவசப்பட்டுள்ளேன்" என்று ஆங்கிலத்தில் சொன்னான். வெங்குத்ரி அப்பாவித்தன மாக, "அது என்னவென்று சொல்லேன்" என்று கேட் டான். "இதையெல்லாம் உன்னால் புரிந்து கொள்ள முடி யாது" என்று கத்திவிட்டு மேலும், "ராஜாஜி பாஜிராவ் நானா பர்நாவிஸ் பரம்பரையில் வந்த உன்னால் எல் லாம் அதைப் புரிந்து கொள்ள முடியாது" என்றான் சத்தா. வெங்குத்ரி மற்றொரு சுற்று ஊற்றிக்கொண்டு, என்னை நோக்கி, "இந்தக் கழுதை சத்தா நினைத்துக் கொண்டிருக்கிறான், எனக்கு ஆங்கிலம் புரியாது என்று. நான் மெட்ரிகுலேசன் தேறியிருக்கிறேன். என் அப்பா வுக்கு என் மீது பாசம் அதிகம்... அவர்..." என்று ஆரம் பிக்க, சத்தா எரிச்சலோடு குறுக்கிட்டு, "அவர் உன்னை டார்ஜானாக ஆக்கினார்... உன் மூக்கைப் பிடித்துக் கொஞ்சம் வளைத்து அதன் துவாரங்கள் வழியாக சத் தங்கள் சுலபமாக வர வழிசெய்தார்... நீ குழந்தையாய் இருந்த போது துருபத் பாடக் கற்றுக்கொண்டாய். நீ குழந்தையாய் இருந்த போது உனக்குப் பால் தேவைப் பட்டால் அதற்குப் பதிலாகத் தோடியை எடுத்துக் கொண்டாய்... நீ ஒன்னுக்கு இருக்கும் போது கூட பாடி னாய்... நீ பேசிய முதல் வார்த்தை சாஸ்திரிய சங்கீதம் சம் பந்தப்பட்டது... அப்புறம் உன் அப்பன்... அவர் மிகச் சிறந்த பயிற்சியாளர்... அவர் பேஜு பாவ்ராவை விடச் சிறந்தவர்... நீ உன் அப்பனை விடச் சிறந்தவன். அதனா லேயே உன் பெயர் 'காங்குத்ரி' என்று வைக்கப்பட்டுள் ளது..." என்று சொல்லி என் பக்கம் திரும்பி "மண்ட்டோ! இந்தத் தேவடியாப் பையன் எப்போது குடித்தாலும்,

அவன் அப்பனைப் புகழத் தொடங்கிவிடுவான்... அவன் அவ்வளவு நேசிக்கும் அளவுக்கு இவன் அப்பன் என்ன செய்து விட்டான்... மெட்ரிக்குலேசன் தேற வைத்துள் ளான். அப்படி என்றால் என்ன அர்த்தம். நான் என் பி.ஏ., சான்றிதழைக் கிழித்துப் போட வேண்டுமா..." என்றான்.

இதற்கு வெங்குத்ரி தன் எதிர்ப்பைத் தெரிவிக்க விரும்பினாலும், சத்தா அதற்குச் சந்தர்ப்பம் கொடுக்கா மல், "வாயை மூடு" என்றான். "நான் ஏற்கனவே உன்னி டம் சொல்லிவிட்டேன், நான் மிகவும் உணர்ச்சி வசப்பட் டுள்ளேன் என்று... ஆமாம் போம்பிரட் மீன் போல உள்ள அந்த நிறம்... இல்லை இல்லை... பாம்பு கொண்டுள் ளது போல அந்த நிறம்... அவளின் முடி அதே நிறத்தில் தான் உள்ளது... மம்மி என்ன இசையை வாசித்து அந்தப் பாம்பைக் கொண்டு வந்தார் என்று கடவுளுக்குத் தான் தெரியும்"

"ஆர்மோனியத்தைக் கொண்டு வா, நான் வாசித் துக் காட்டுகிறேன்" என்றான் வெங்குத்ரி பெருமையாக. சத்தா உரக்கச் சிரித்துக் கொண்டே, "நீ சும்மா உட்காரு மெட்ரிகுலேட் சாக்லேட் பையா" என்று கத்தி மிச்சமி ருக்கும் ரம்மை தன் கிளாஸில் ஊற்றிக் கொண்டான். பிறகு என்னிடம்: "மண்ட்டோ என்னால் பிளாட்டினம் முடி கொண்ட அந்தப் பெண்ணை மட்டும் வெற் றிக் கொள்ள முடிந்தால், நான் துறவறம் ஏற்று இமய மலைக்குப் போய்விடுகிறேன்..." என்று சொல்லித் தன் கிளாஸை ஒரே மடக்கில் காலி செய்தான்.

தான் கொண்டு வந்த பாட்டிலை வெங்குத்ரி திறந் தான். சத்தா, "இன்று... இன்று இரவு நான் ஒரு பார்ட்டி கொடுக்கப்போகிறேன். நீ இன்று இங்கு வந்தது நல்ல தாய்ப் போயிற்று. அதனால் மேதாஜி இருநூறு ரூபாயை முன்பணமாகக் கொடுத்தான். இல்லை என்றால் விஷ யம் ரொம்ப அசிங்கமாக ஆகியிருக்கும்... இன்று இரவு... இன்று இரவு..." என்று சொல்லிப் பாடத் தொடங்கினான்.

அவன் மோசமாகப் பாடிய முறைக்கு வெங்குத்ரி எதிர்ப் புத் தெரிவிக்க முயன்றபோது, காரீப் நவாஸும், ரஞ்சித் குமாரும் உள்ளே நுழைந்தார்கள். இருவரும் இரண்டு ஸ்காட்ச் பாட்டிலைப் பிடித்திருந்தார்கள். அதை மேஜை மீது வைத்தார்கள். ரஞ்சித்குமாரை எனக்கு நன்றாகத் தெரியும் என்றாலும், அது ஒரு சடங்கு முறைக் கட்டுப் பாட்டிற்குள் அடங்கிக் கிடந்தது. அதனாலேயே எங்க ளிடையேயான உரையாடல் எப்போதும், 'எப்போது வந் தாய்?', 'இன்று தான் வந்தேன்' என்பது போல சாதாரண மாக இருக்கும். பிறகு அங்கும் கண்ணாடித் தம்ளர்கள் ஒன்றோடு ஒன்று உரசுவதும், குடிப்பதும் தொடங்கியது.

சத்தா உண்மையில் மிக மோசமாக உணர்ச்சிவசப் பட்டுக் கிடந்தான். அவன் பேச்சில் ஒவ்வொரு வாக்கி யத்திற்குப் பிறகும் பிளாட்டினம் முடி கொண்ட அந்தப் பெண்ணைக் கொண்டு வந்து நுழைத்தான். ரஞ்சித்கு மார் இரண்டாவது பாட்டிலில் கால் பகுதியைக் குடித்து முடித்திருந்தான். காரீப் நவாஸ் மூன்று சுற்று ஸ்காட் சைக் குடித்திருந்தான். அவர்கள் இருவரும் ஏறக்குறை யச் சமமாக இருந்தார்கள். நான் படுமோசமான குடிகா ரன். அதனாலேயே ஒப்பீட்டளவில் நான் மற்றவர்களைக் காட்டிலும் தெளிவாக இருந்தேன். அவர்கள் பேச்சிலி ருந்து, இந்த நால்வரும் மம்மி எங்கிருந்தோ கொண்டு வந்திருந்த அந்தப் பெண்ணிற்காக ஏங்குகிறார்கள் என்று உணர்ந்து கொண்டேன். அவளின் பெயர் ஃபி லிஸ் என்றும் தெரிந்து கொண்டேன். புனேவில் உள்ள முடிதிருத்தகம் ஒன்றில் வேலை பார்த்து வந்தாள். அவ ளோடு எப்போதும் ஒரு பையன் - பார்ப்பதற்குப் 'பெண்' போல இருந்தவன் சுற்றிக்கொண்டிருந்தான். அந்தப் பெண்ணின் வயது பதினான்கு, பதினைந்திற்கு மேல் இருக்காது. காரீப் நவாஸ் ஹைதராபாத்தில் உள்ள தன்னுடைய சொத்தை எல்லாம் விற்று அவளுக்காகச் செலவு செய்யத் தயாராக இருக்கும் அளவிற்கு அந்தப்

பெண்ணிடம் தன் இதயத்தைப் பறிக் கொடுத்திருந்தான். சத்தாவின் பலம் அவனின் அழகு. வெங்குத்ரி தன் இசையால் அவளைத் தன் பக்கம் இழுத்துக்கொள்ள முடியும் என்று நம்பிக்கை கொண்டிருந்தான். ரஞ்சித்குமார், அவனின் தீர்க்கமான வேகமும், நேரடியான தன்மையும் அவனின் மிகப்பெரிய பலமாகக் கருதினான். ஆனால் யார் வெற்றி பெறப்போகிறார்கள் என்பதை மம்மி தான் தீர்மானிக்க முடியும் என்பதை நால்வரும் அறிந்திருந்தார்கள். சத்தாவுடன் டோங்காவில் நான் பார்த்த அந்தப் பெண்மணிதான், பிளாட்டினம் முடி கொண்ட ஃபிலிஸை யார் அடையப் போகிறார்கள் என்பதைத் தீர்மானிப்பவராக இருந்தார்.

ஃபிலிஸ் பற்றிப் பேசிக்கொண்டிருந்த சத்தா திடீரென்று கடிகாரத்தைப் பார்த்து என்னிடம், "அந்தப் பெண் எக்கேடும் கெட்டு ஒழியட்டும்... நாம் கிளம்பலாம்... உன் மனைவி இந்த நேரத்தில் தீக்குழம்பாய் மாறியிருப்பாள்... ஆனால் பிரச்சனை என்னவென்றால் நான் அங்கும், இதே போல் உணர்ச்சி வசப்படாமல் இருப்பேன் என்று என்னால் தீர்மானமாய்ச் சொல்ல முடியவில்லை... எப்படியோ நீ அதைப் பார்த்துக்கொள்" என்றான். மிச்சமிருந்த ரம்மை ஒரே மடக்கில் குடித்துவிட்டு அவனின் வேலைக்காரனுக்காய்க் கத்தினான், "எகிப்தின் இளவரசே, 'மம்மி'களைக் கொண்ட நாட்டைச் சேர்ந்தவரே நீ எங்கே இருக்கிறாய்?". தன் கண்களைக் கசக்கிக்கொண்டே 'மம்மி'களைக் கொண்ட தேசத்தில் இருந்து எகிப்தின் இளவரசர் வந்தார். பார்ப்பதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன் புதைக்கப்பட்டவனைத் தோண்டி எடுத்தது போல் இருந்தான். சத்தா கொஞ்சம் ரம்மை அவன் முகத்தில் தெளித்து, "எகிப்து ரதம் போல் உள்ள இரண்டு டோங்காவைக் கொண்டு வா" என்றான்.

டோங்கா வந்தது. நாங்கள் அதில் ஏறிக்கொள்ள? அது பிரபாத் நகர் நோக்கிப் புறப்பட்டது. என் நண் பன் ஹரீத் என் மனைவியைச் சௌகரியமாக வைத் திருக்க அவனால் முடிந்தததை எல்லாம் செய்தி ருக்கிறான். சொல்லப்போனால் அவனால் முடிந்ததற்கு மேலும் செய்திருக்கிறான். அதனால் என் மனைவி கோபம் எதையும் வெளிப்படுத்தவில்லை. அவள் நேரத்தை ஏறக்குறைய சந்தோஷ மாகக் கழித்திருப்பது போல் தெரிந்தது. ஹரீத்துக்குப் பெண்களின் மனநிலை அத்துப்படி. அவன் அவளுக்கு விருப்பமானதையே பேசியிருப்பதோடு, அவளை ஒரு புதுப் படப்பிடிப்பிற்கு அழைத்துச் செல்வதாகவும் சொல்லியிருக்கிறான். நாங் கள் உள்ளே நுழைந்த உடன் சத்தா, ஹரீத்துக்குக் கண் ணடித்து இன்று மாலை ஏதோ இருக்கிறது என்பதை உணர வைத்தான். ஹரீத் மிகுந்த ஒத்துழைப்பைக் கொடுத்தான். என் மனைவி பக்கம் திரும்பி, படப்பிடிப்பு நாளைக்குத்தான் என்று சொன்னான். ரொம்ப ஆவ லோடு இருந்த என் மனைவி இதைக் கேட்டவுடன் சற்று உற்சாகம் குன்றிப்போனாள். ஹரீத்தின் மனைவி நிலை மையைக் காப்பாற்றினாள். "இருந்துவிட்டுப் போகட்டும், இன்று பயணத் திற்குப் பிறகு நீ மிகவும் களைப்புற்று இருப்பாய்" என்றாள். ஹரீத் என்னிடம், "மண்ட்டோ, என்னோடு கிளம்பி வா" என்றான். என் மூன்று நண் பர்களைப் பார்த்து அவன் மேலும், "சேட் இவனின் கதையைக் கேட்க விரும்புகிறார்" என்றான். நான் என் மனைவியைத் திரும்பிப் பார்த்து, "நீ அவளின் உத் தரவைப் பெற வேண்டும்" என்றேன் ஹரீத்திடம். என் மனைவியால் என் நண்பர்களின் இந்தப் புத்திசாலித் தனத்தை உணர முடியாமல், ஹரீத்திடம், "பாம்பேயில் இருந்து கிளம்பும்போது அவரின் கதைகளை எல்லாம் எடுத்து வரச் சொன்னேன். ஆனால் அவர் அதற்கு அவசியம் ஏதும் இல்லை என்றார். அது இல்லாமல்

எப்படி அவரால் கதை சொல்ல முடியும்?" என்றாள். அதற்கு ஹரீத், "அது ஒன்றும் பிரச்சனை இல்லை. வாயால் சொல்லட்டும்" என்று பதில் தந்தான். பிறகு என்னைக் கேள்விக்குறியோடு பார்ப்பது போல், சீக்கிரமாக 'ஆமாம்' சொல் என்பது போல் பார்த்தான். நான் நம்பிக்கையோடு, "ஆமாம், அது சாத்தியம் தான்" என்றேன். இந்த நாடகத்தின் கடைசிப் பகுதியைச் சத்தா முடித்துக் கொடுத்தான். "நல்லது. அப்படி என்றால் நாங்கள் கிளம்புகிறோம்" என்று சொல்லி மூவரும் கிளம்பினார்கள். சிறிது நேரம் கழித்து நானும் ஹரீத்தும் கிளம்பினோம். டோங்கா பிரபாத் நகருக்கு வெளியே காத்திருந்தது. சத்தா எங்களைப் பார்த்தவுடன் கத்தினான். "ராஜா ஹரீத் சந்தர் ஜிந்தாபாத்"

ஹரீத் தவிர நாங்கள் எல்லோரும் மம்மி வீட்டை நோக்கிப் புறப்பட்டோம். ஹரீத் அவனின் ஒரு பெண் நண்பருக்குத் தேதி கொடுத்திருந்ததால் அங்குச் சென்றுவிட்டான்.

மம்மியின் வீடும் ஒரு காட்டேஜ் தான். பார்ப்பதற்கு அது சயிதா காட்டேஜ் போலவே இருந்தது. ஆனால் அது சுத்தமாகக் காட்சியளித்தது, மம்மியின் வாழ்க்கை முறையை வெளிப்படுத்தியது. வீட்டில் இருந்த பொருட்கள் சாதாரணமானவை என்றாலும் அவை எல்லாம் வைக்கப்பட வேண்டிய இடத்தில் வைக்கப்பட்டிருந்தன. நான் பிரபாத் நகரில் இருந்து கிளம்பியபோது, அது விலைமாதுவின் வீடு போல் தான் இருக்கும் என்று நினைத்திருந்தேன். ஆனால் அந்த வீட்டில் இருந்தது எதுவுமே அத்தகைய உணர்வை ஏற்படுத்தவில்லை.

மம்மி வரவேற்பறைக்குள் நுழைந்தபோது, நான் நினைத்தேன், இங்கு இருப்பவை எல்லாமே வாங்கி வந்தது போல் இருக்கின்றன, காலம் அவற்றினெதன் மீதும் தன்னுடைய பாதிப்பை ஏற்படுத்தவில்லை. அங்கு இருந்தவை எல்லாமே ஒப்பனைகள் ஏதும் இல்லாத

தால் மம்மியை விட வயது குறைந்தே காணப்பட்டன. அவரின் அழுத்தமான ஒப்பனையைப் பார்த்தபோது, சுற்றியிருக்கும் பொருட்களைப் போலவே, அவருக்கும் வயது கூடவில்லை என்று நினைக்கவே ஆசைப்பட் டேன். சத்தா அவரை எனக்கு அறிமுகப்படுத்தினான். அறிமுகம் மிகச் சுருக்கமாக இருந்தது. அவன் சொன்ன தெல்லாம் இவ்வளவுதான்: "இவர் தான் மம்மி. கிரேட் மம்மி" இந்தப் புகழ்ச்சிக்கு மம்மி மெல்லியதாகப் புன் னகைத்து, என்னைப் பார்த்துக்கொண்டே சத்தாவிடம், "நீ டீ கேட்டு அனுப்பியிருந்தாய். வழக்கம் போல அவ சரத்தோடு. அவரின் மனைவி அதை விரும்பினாளா என்று எனக்குத் தெரியவில்லை" என்று சொல்லி, பிறகு என்னை நோக்கி, "மிஸ்டர் மண்ட்டோ, எனக்கு மிகவும் அசிங்கமாக இருக்கிறது. ஆனால் குற்றவாளி உங்களின் தோழன் சத்தா தான். எல்லாச் சீர்திருத்தங்களுக்கும் அப்பாற்பட்ட என் மகன்" என்றார். நான் சரியான வார்த் தைகளில் புகழ்ந்து மம்மிக்கு என் நன்றியைத் தெரி வித்தேன். அவரைத் திருப்திப்படுத்த இந்தத் தகுதி யற்ற புகழ்ச்சிகள் எல்லாம் வேண்டாம் என்று என்னிடம் சொல்லி, பிறகு சத்தாவிடம், "சாப்பாடு தயாராக இருக்கி றது... நீ கடைசி நிமிஷத்தில் அவசரப்படுத்துவாய் என்ற பயத்தில் எல்லாவற்றையும் முடித்து விட்டேன்" என்றார். சத்தா மம்மியை அணைத்துக்கொண்டான். "நீ கெட்டித் தங்கம் மம்மி, நாம் அந்த விருந்தைச் சாப்பிடத்தானே போகிறோம்" என்றான். என் மனைவி எங்கே என்று மம்மி கேட்டதற்கு, அவள் பிரபாத் நகருக்குப் போய்விட் டதாகச் சத்தா சொன்னான். மம்மி கத்தத் தொடங்கி னார், "கடவுள் உன்னைச் சபிக்கட்டும். நீ என்ன காரியம் செய்திருக்கிறாய்?." சத்தா உரக்கச் சிரித்துக்கொண்டே, "அதற்குக் காரணம் இன்று இரவு இங்கு ஒரு பார்ட்டி இருக்கிறது" என்றான். "நான் அதை என் மனதளவில் ரத்து செய்துவிட்டேன்" என்றார் மம்மி. "நான் திரு

மதி மண்ட்டோவைப் பார்த்தவுடன்" என்று சொல்லிக் கொண்டே ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்தார்.

சத்தா மிகவும் ஏமாற்றம் அடைந்து, "கடவுளுக்குப் புண்ணியமாகப் போகட்டும் அப்படிச் சொல்லாதீர்கள். நாங்கள் இதை யெல்லாம் செய்ததற்குக் காரணம் இந் தப் பார்ட்டிக்காகத்தான்" என்றான். பிறகு அறையில் இருந்த எல்லோரையும் நோக்கிப் பேசத் தொடங்கி னான், "ஒரு அழகான கனவிற்கு என்ன ஒரு கோர மான முடிவு... அந்த பிளாட்டினம் தலைமுடி... பாம்பின் செதிலை நினைவூட்டும் அந்த முடி..." பிறகு அவன் மம்மியைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, "நீங்கள் தானே பார்ட்டியை ரத்து செய்தீர்கள்? இல்லையா" என் றான். அவரின் இதயத்தில் சிலுவை போட்டுக் காட்டி, "பார்ட்டி இன்று கிடையாது. அது கிடையாது என்று மம்மி எல்லோருக்கும் சொல்லிவிட்டார்" என்று கத்தினான். சத்தா ஏமாற்றம் அடையக்கூடாது என்று நினைத்தது போல மம்மி அவனின் கன்னத்தில் வாஞ்சையோடு தட் டிக் கொடுத்து, "கவலைப்படாதே, என்ன செய்ய முடி யும் என்று பார்க்கலாம்" என்று சொல்லி வெளியேறி னார். சத்தா உற்சாகத்தில் மீண்டும் ஒருமுறை கோஷம் போட்டு வெங்குத்ரியிடம், "தளபதி வெங்குத்ரி, நம் தலைமையகத்திற்குச் சென்று எல்லா ஆயுதங்களையும் கொண்டு வா" என்றான். வெங்குத்ரி சல்யூட் அடித்து சத்தாவின் கட்டளையை நிறைவேற்ற வெளியேறினான். சயிதா காட்டேஜ் பக்கத்தில் தான் இருந்தது. நிமிடத்தில் அவன் பாட்டில்களோடு திரும்பி வந்தான். அவனோடு சத்தாவின் வேலைக்காரனும் இருந்தான். அவனைப் பார்த்த உடன், சத்தா அவனை வரவேற்று, "வாருங்கள் கோ காஃப் இளவரசே, பாம்பின் செதில்களின் நிறத்தில் தலைமுடியைக் கொண்ட அந்தப் பெண் இங்கு வருகி றாள். அதிர்ஷ்டம் இருந்தால் நீயும் முயன்று பார்க்கலாம்" என்றான்.

ரஞ்சித்குமாருக்கும், காரீப் நவாஸுக்கும் சத்தாவின் இந்தப் பேச்சு பிடிக்கவில்லை. அதை அவர்கள் என்னிடமும் சொன்னார்கள். சத்தா அவனின் வழக்கமான பாணியில் தொடர்ந்து கொண்டிருந்தான். அவர்கள் ஒரு மூலையில் ரம் குடித்துக்கொண்டு, சத்தாவின் நடவடிக்கையை ஏற்க மறுக்கும் பாவனையை ஒருவர் மற்றவருக்குக் காட்டிக் கொண்டிருந்தார்கள்.

நான் மம்மியைப் பற்றிச் சிந்தித்துக்கொண்டிருந்தேன். காரீப் நவாஸ், ரஞ்சித்குமார், சத்தா அவரின் குழந்தைகள் போலவும், அவர் ஏதோ பொம்மை வாங்கி வருவதற்குக் காத்திருப்பது போலவும் இருந்தார்கள். அவனே மம்மியால், மிகவும் நேசிக்கப்பட்டு வருபவன் என்பதால், சத்தாவின் முகத்தில் அசாத்திய நம்பிக்கை வெளிப்பட்டது. நான் முதன் முதலில் அவரோடு சத்தாவை டோங்காவில் பார்த்தபோது, அவர்களுக்கிடையேயான உறவு பற்றி என் மனதில் மோசமான எண்ணம் எழுந்தது. அத்தகைய எண்ணத்தை அனுமதித்ததற்காக நான் இப்போது வெட்கப்படுகிறேன். அவரின் படுமோசமான ஒப்பனை இன்னும் என்னைச் சங்கடப்படுத்திக் கொண்டுதான் இருந்தது. அது அவரின் முகத்தில் உள்ள சுருக்கங்களை அவமானப்படுத்தியது. சத்தா, காரீப் நவாஸ், வெங்குத்ரி மற்றும் - கடவுளுக்குத்தான் தெரியும் யார் எல்லாம் உண்டு என்று, அவர்கள் எல்லோர் மீதும், அவர் வெளிப்படுத்திய தாய் அன்பை அது அவமானப்படுத்தியது.

நான் சத்தாவிடம், அவர் ஏன் அவ்வளவு கனமாக ஒப்பனையைப் போட்டுக்கொள்கிறார் என்று கேட்டேன். அதற்குச் சத்தா, "காரணம் இந்த உலகம் பளபளப்பைத்தான் அங்கீகரிக்கிறது. உன்னைப் போன்றும், என்னைப் போன்றும் ஒரு சில முட்டாள்கள் மட்டுமே அமைதியான நிறத்தையும், மென்மையான இசையையும் பாராட்டுகிறோம். நம்மைப் போன்ற முட்டாள்கள்

தான், வாலிபம் குழந்தைப் பருவத்து உடையில் இருப்ப தையும், வயோதிகம் வாலிபத்தின் முகமூடியணிந்து நட னமாடுவதையும் பார்க்க மறுக்கிறோம். நம்மைக் கலை ஞர்கள் என்று நாமே அழைத்துக் கொள்கிறோம். ஆனால் உண்மையில் நாம் மிகப்பெரிய முட்டாள்கள்... இரண்டாம் தர முட்டாள்கள். இந்த உலகத்தில் எதுவுமே முதல் தரமாக இருக்க முடியாது... எல்லாமே இரண்டாம் தரம் அல்லது மூன்றாம் தரமாகத்தான் இருக்க முடியும்... ஆனால், ஃபிலிஸ்... அவள் மட்டுமே முதல் வகுப்பைச் சேர்ந்தவள்..." வெங்குத்ரி ஒரு கிளாஸை சத்தாவின் தலையில் கவிழ்த்தான்.

"உன் மூளையை இழந்து விட்டாய்..." என்றான். அவன் தலையிலிருந்து சொட்டிய ரம்மைத் தன் நாக் கால் நக்கிக்கொண்டே வெங்குத்ரியிடம், "உன் அப் பன் உன்னை எவ்வளவு நேசித்தான் என்று என்னி டம் சொல்... என் தலை இப்போது குளிர்ந்து போயிற்று" என்றான். வெங்குத்ரி என்னை நோக்கி, "கடவுள் மீது ஆணையாகச் சொல்கிறேன், மண்ட்டோ! அவர் என்னை மிகவும் நேசித்தார். எனக்குப் பதினைந்து வயது இருக்கும்போதே எனக்குத் திருமணம் செய்து வைத்தார்" என்று தீவிரத்தோடு சொன்னான். சத்தா சிரித்துக்கொண்டே, "உன்னைக் கார்ட்டூன் போல் ஆக் கிவிட்டான் அந்தத் தேவடியா மகன். சொர்க்கத்தில் கட வுள் அவனுக்கு நல்ல ஆர்மோனியத்தைக் கொடுத்து வாசிக்கச் சொல்லட்டும். அவன் உனக்காக ஒரு அழகான ராகத்தைக் கண்டுபிடித்துக் கொடுப்பான்" என்றான். வெங்குத்ரி மேலும் தீவிரமாக, "மண்ட்டோ! நான் பொய் சொல்லவில்லை, என் மனைவி உண்மை யிலேயே மிகவும் அழகாக இருப்பாள்" என்றான்.

"உன் மனைவி நாசமாகப் போகட்டும்" என்று கத்தி னான் சத்தா. "ஃபிலிஸ் பற்றிப் பேசு, அவளைக் காட்டி லும் எவளுமே அழகாக இருக்க முடியாது". பிறகு ஒரு

மூலையில் காரீப் நவாஸும், ரஞ்சித்குமாரும் ஒன்றாக அமர்ந்து ஏதோ முணுமுணுத்துக் கொண்டிருப்பதைப் பார்த்தான். "கன் பவுடர் சதித் திட்டத்தின் தலைவர் களே! உங்களின் சதித் திட்டங்கள் எதுவும் வெற்றி காணாது" என்று கத்திச் சொன்னான். பிறகு அவன் தன் வேலைக்காரன் பக்கம் திரும்பி, "வேல்ஸ் நாட்டு இளவரசே! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட் டான். வேல்ஸ் நாட்டு இளவரசர் வேகமாகக் காலியா கிக் கொண்டிருக்கும் ரம் பாட்டிலைப் பொறாமையோடு பார்த்து நின்று கொண்டிருந்தார். சத்தா சிரித்துக் கொண்டே பாதி கிளாஸ் ரம்மை அவனிடம் கொடுத் தான்.

காரீப் நவாஸும், ரஞ்சித்குமாரும் அவர்களுக்குள் ஃபிலிஸ் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள், அதே சம யத்தில் அவளை எப்படி வென்றெடுப்பது என்று தனியா கவும் திட்டமிட்டுக் கொண்டிருந்தார்கள்.

மாலை இரவாக மாறிக்கொண்டிருக்க அறையில் விளக்குகள் போடப்பட்டன. பாம்பே ஃபிலிம் கம்பெனி பற்றிய செய்திகளைச் சொல்லச் சொல்லி சத்தா ஆவ லோடு கேட்டுக்கொண்டிருந்தான். திடீரென்று மம்மி யின் குரல் சத்தமாக வெளியே கேட்டது. சத்தா வேக மாக வெளியே ஓடினான். காரீப் நவாஸும் ரஞ்சித் குமாரும் அர்த்தத்தோடு ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டு, கதவின் பக்கம் பார்வையைத் திருப்பினார் கள்.

மம்மி அறைக்குள் நுழைய, அவரோடு நான்கைந்து ஆங்கிலோ இந்தியப் பெண்கள் வெவ்வேறு வடிவத்தில், வெவ்வேறு அளவில் உள்ளே நுழைந்தார்கள். அவர் கள்: பாலி, டாலி, கிட்டி, எல்மா, தெல்மா. 'பெண்' போல இருந்த பையனும் அவர்களோடு இருந்தான். கடைசி யாக ஃபிலிஸ் நுழைந்தாள். அவனோடு கையை அவ ளின் இடையில் வளைத்தபடி சத்தாவும் வந்தான். காரீப்

நவாஸ்சும் ரஞ்சித்குமாரும் சத்தாவின் இந்த மீறலைக் குறித்துக் கொண்டார்கள்.

பெண்கள் அறைக்குள் நுழைந்தவுடன் பெரும் கூச் சல் உண்டாயிற்று. அங்கு ஆங்கிலம் அதிகம் பேசப் பட, வெங்குத்ரியோ தன் மெட்ரிக்குலேசனில் பலமுறை தோற்றுப்போனான். ஆனால் அவன் அதைப் பற்றிக் கவலைப்படாமல் தொடர்ந்து பேசிக்கொண்டே இருந் தான். எவருமே அவனிடம் பேச ஆர்வம் காட்டவில்லை என்றபோது அவன் தெல்மாவை (அவள் எல்மாவின் மூத்த சகோதரி) பிடித்துக்கொண்டு சோபாவில் அமர்ந் தான். அவன் அவளுக்கு இந்திய நடனத்தின் நுணுக் கங்களில் பாடம் எடுக்கத் தொடங்கினான். சத்தா சுற் றியிருந்த பெண்களிடம் வெத்து வேடிக்கைப் பாட்டுக ளைச் சொல்லிக் கொண்டிருந்தான். அவன் இது போன் றவற்றை நூற்றுக்கணக்கில் தெரிந்து வைத்திருந்தான். மம்மி சோடா பாட்டிலும் நொறுக்குத் தீனியும் ஏற்பாடு செய்து கொண்டிருந்தார். ரஞ்சித்குமார் ஃபிலிஸ்ஸை முறைத்தபடி, தொடர்ந்து புகை பிடித்துக் கொண்டிருந் தான். காரீப் நவாஸ் மம்மியிடம், அவருக்குப் பற்றாக் குறையாக இருந்தால் பணம் கொடுப்பதாகத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தான்.

ஸ்காட்ச் பாட்டில்கள் திறக்கப்பட்டுக் கொண்டாட்டம் தொடங்கப்பட்டது. ஃபிலிஸ் அதில் சேர்ந்து கொள்ள அழைக்கப்பட்டபோது, அவள் தன்னுடைய பிளாட் டினம் தலைமுடியை அசைத்து மறுப்புத் தெரிவித் தாள். தான் விஸ்கி குடிப்பதில்லை என்று சொன்னாள். எல்லோரும் வற்புறுத்தினார்கள் என்றாலும் அவள் வளைந்து கொடுக்கவில்லை. சத்தா தன் ஏமாற்றத்தை வெளிப்படுத்திய போது, மம்மி ஒரு சிறு அளவு ஊற்றி அதை அவளின் உதடுகளுக்கு அருகே எடுத்துச் சென்று, "துணிச்சலான பெண்ணாய் இதைக் குடித்து விடு" என்றார். ஃபிலிஸால் இதற்கு மறுப்புத் தெரி

விக்க முடியவில்லை. இதனால் சந்தோசம் அடைந்த சத்தா மேலும் இருபது, இருபத்தைந்து வெத்து வேடிக் கைப் பாட்டுகளைச் சொல்லி முடித்தான். எல்லோரும் சந்தோசமாய் இருந்தார்கள். 'இந்த மனித இனம் தன் னுடைய நிர்வாணத்தில் சலிப்புற்றுப் போய் ஆடைகள் அணிந்து கொள்ள முடிவெடுத் திருக்க வேண்டும். ஆனால் இப்போது அது அணிந்து கொண்டிருக்கும் ஆடைகளில் சலிப்புற்று நிர்வாணத்திற்குத் திரும்ப முயன்றுகொண்டிருக்கிறது. இன்றோ, நாளையோ நிச்ச யமாக இந்த நிர்வாணம் நம் கலாச்சாரத்தைப் பின்னுக் குத் தள்ளிவிடும். அல்லது இது வாழ்க்கையின் கொடூ ரமான பந்தயத்திலிருந்து தப்பிப்பதற்கான ஒரு வழி தானா?' என்று சிந்தித்தேன்.

இளம் பெண்களோடு இரண்டறக் கலந்து, சத்தாவின் வெத்து வேடிக்கைப் பாட்டுகளைக் கேட்டுச், சத்தமான சிரிப்போடு கைதட்டித் தன் ஏற்பை வெளிப்படுத்திக் கொண்டிருக்கும் மம்மியைக் கவனித்துக் கொண்டிருந் தேன். அவர் முகத்தில் வழக்கம் போல இருந்த கனமான ஒப்பனையை மீறி அவரின் சுருக்கங்கள் வெளிப்பட் டன. சந்தேகத்திற்கு இடமில்லாமல் நான் கோரமான வெளித்தோற்றத்துக்குப் பார்வையாளனாக இருந்து கொண்டிருக்கிறேன். ஆனால் அது அதன் தேவையைப் பூர்த்தி செய்து கொண்டிருந்தது.

ஒரு மூலையில் நின்று கொண்டு, ரஞ்சித்குமாரிடம் அவளின் புது ஆடையைப் பற்றி - எப்படி புத்திசா லித்தனமாய் பிரயோசனமே இல்லாத துண்டுத் துணி களைக் கொண்டு இந்த ஆடையை உருவாக்கினேன் என்று பாலி சொல்லிக் கொண்டு இருந்தாள். ரஞ்சித் குமார் அவளின் புத்திசாலித்தனத்தைப் புகழ்ந்து மனப் பூர்வமாக அவளுக்கு இரண்டு புது ஆடைகள் வாங்கித் தருவதாக வாக்குறுதி கொடுத்தான். அவனின் இதயத் தில், அவனுக்குத் தெரியும் இவ்வளவு பணத்தை ஃபி

ஸிம் கம்பெனியில் இருந்து ஒரே தவணையில் வாங்கு வது என்பது முடியாத காரியம் என்று. டாலி, காரீப் நவாஸிடமிருந்து கடனாகக் கொஞ்சம் பணம் பெற முயன்று கொண்டிருந்தாள் - அவளின் அடுத்த சம்பளம் கிடைத்தவுடன் கண்டிப்பாகத் திருப்பிக் கொடுத்துவி டும் வாக்குறுதியோடு. கொடுத்த பணத்தைத் திரும்பப் பார்ப்பதற்கு வாய்ப்பே இல்லை என்று காரீப் நவாஸ்க் குத் தெரிந்திருந்தாலும் அவளை நம்புவது போல் தோற்றத்தை ஏற்படுத்தினான். தெல்மாவுக்கு தாண் டவ நடனத்தின் நுணுக்கங்களை வெங்குத்ரி சொல்லிக் கொடுத்துக்கொண்டிருந்தான் - அவள், தன் வாழ்க்கை முழுக்க அதற்காக அர்ப்பணித்தாலும், அவளால் புரிந்து கொள்ள முடியாது என்று அவனுக்குத் தெரிந்துதான் இருந்தது.

எந்தப் பிரயோசனமும் இல்லாமல் நேரத்தைக் கழித் துக் கொண்டிருக்கிறாள் என்று தெல்மாவுக்கும் தெரிந் துதான் இருந்தது. இருந்தாலும், அவள் மிகவும் கவ னமாக வெங்குத்ரி சொல்வதைக் கேட்டுக்கொண்டிருந் தாள். சத்தா, தன் டவுசரில் வைத்திருக்கும் சீப்பால் ஃபி லிஸின் தலைமுடியை வாரி விட்டுக்கொண்டிருந்தான். தங்கமும் பழுப்பும் கலந்த நிறத்தில் இருந்த ஸ்காட்ச் சையும், வெள்ளி நிறத்தில் இருந்த ஃபிலிஸின் தலைமு டியையும் - ஒன்று கலக்க முயன்று கொண்டிருந்தான். மம்மி ஒரு விருந்தாளியிடமிருந்து மற்றொருவருக்கு என்று மிதந்து கொண்டேயிருந்தார். அதே சமயத்தில் அவர் புது சோடா பாட்டில்களைத் திறப்பதும், உடைந்து போன கண்ணாடி கிளாஸை அப்புறப்படுத்துவதும் என்று எல்லாவற்றின் மீதும் தன் கண்களைப் பதித்துக் கொண்டேயிருந்தார். தூங்குவது போல பாவனை செய் யும் பூனை, அதனைச் சுற்றிலும் நடப்பதை முற்றிலும் அறிந்திருப்பது போல - அவர் தன்னுடைய ஐந்து குட்டிக ளையும் அவை என்ன குறும்புகளைச் செய்யத் தொடங்

கிவிடுமோ என்பது போல் கண்காணித்துக் கொண்டே யிருந்தார்.

'வாழ்க்கை என்ற சிறையும்
துயரம் என்ற கைவிலங்கும்
ஒன்றேதான்.
பிறகு ஏன் மனிதன்
இறக்கும் முன்
துயரத்தில் இருந்து விடுதலை பெற வேண்டும்'

என்று காலிப் சொல்லியிருக்கிறார். அப்படித் துயரம் என்பது வாழ்க்கையோடு இணைந்த ஒன்றுதான் என் றால், ஏன் மனிதன் அவனுடைய வாழ்நாளில், அதில் இருந்து விடுதலை பெற முயலக் கூடாது என்று நினைத் தேன். ஏன் மரணத்தைக் கொண்டு வருபவனுக்காகக் காத்திருக்க வேண்டும்? ஏன் சந்தோசத்திற்காக - அது நிலையற்றது என்றாலும் கூட, இப்போது என் முன்னே நடிக்கப்படுவது போல விளையாடி ஏன் சந்தோசத்தை அனுபவிக்கக் கூடாது? இந்த விளையாட்டில் கோர மான மம்மியின் அலங்காரம் கூட, பொருந்திதான் இருந் தது.

மம்மி எல்லோரையும் எப்போதும் புகழ்ந்து கொண் டேயிருந்தார். அவரின் இதயத்தில் அன்பைத் தவிர வேறு எதற்கும் இடமேயில்லை போலும். எல்லோருக் கும் தாயாக இருக்கும் சக்தி அவரின் உடலில் இல்லை என்பதால், வெகு சிலரை மட்டுமே தேர்ந்தேடுத்து மிச்ச உலகத்தை ஒதுக்கித் தள்ளிவிட்டார் போலும் என்று நினைத்தேன்.

ஃபிலிஸுக்குச் சோடா கலக்காமல், சத்தா மது ஊற் றிக் கொடுத்திருப்பது மம்மிக்குத் தெரியாது. அதை அவன் திருட்டுத்தனமாகச் செய்யவில்லை. எல்லோர் முன்னிலையிலும் வெளிப்படையாகச் செய்தான். அந்த நேரத்தில் மம்மி அடுப்பங்கரையில் இருந்தார். ஃபிலி ஸுக்குப் போதை ஏறி இருந்தது. போதை ஏறிய நிலை

யில் அந்தப் பிளாட்டினம் தலைமுடி அவளின் தள்ளா டிய நடையோடு சேர்ந்து தள்ளாடிக் கொண்டிருந்தது.

அது நடுநிசியைக் கடந்த நேரம். இந்திய நடனத்தில் பாடங்களை முடித்த பின் வெங்குத்ரி, இப்போது தெல் மாவிடம் அவனின் தந்தை பற்றியும், அவனின் மனைவி எவ்வளவு அழகாக இருப்பாள் என்பது பற்றியும் பேசிக் கொண்டிருந்தான். காரீப் நவாஸ், டாலிக்குக் கடனாகப் பணம் கொடுத்து விட்டு அதை முழுமையாக மறந்தும் விட்டான். ரஞ்சித்குமார், டாலியோடு அறையை விட்டு வெளியேறி விட்டான். தெல்மா மற்றும் கிட்டி உல கத்தில் உள்ள ஏறக்குறைய எல்லாவற்றையும் பற்றிப் பேசி முடித்த பின் அசதியுற்று இருந்ததால் ஓய்வெடுக்க விரும்பினார்கள். மேசையைச் சுற்றி மம்மி, ஃபிலிஸ் மற் றும் அவளோடு 'பெண்' போல் இருந்தவனும் அமர்ந்தி ருந் தார்கள். சத்தா இப்போது நிதானமான நிலையில் இருந்தான். முதல் முறையாக மது அருந்திய ஃபிலிஸ் அவனின் மடியில் அமர்ந்திருந்தாள். அந்த அளவிற்கு அவன் வெற்றி கண்டான் என்பது வெளிப்படையான விஷயம். மம்மி இதை அறிந்திருக்க முடியாது என்று சொல்ல முடியாது.

சற்று நேரம் கழித்து ஃபிலிஸின் 'பெண்' போல் இருந்த நண்பன் சோபாவில் போய் அமர்ந்து, சீப்பை எடுத் துத் தன் தலையை வாரிக் கொண்டு படுத்து உறங் கிப்போனான். எல்மாவும் கிட்டியும் மம்மியிடம் மார்க்ரேட் என்று எவரைப் பற்றியோ பேசிவிட்டு வெளியேறினார் கள். வெங்குத்ரி கடைசி முறையாகத் தன் மனைவியின் அழகைப் பற்றி சொல்லி விட்டு, ஏக்கத்தோடு ஃபிலி ஸைப் பார்த்தான். பிறகு தெல்மாவின் கையைப் பிடித்து அவளுக்கு நிலாவைக் காட்ட வெளியே அழைத்துச் சென்றான்.

என்ன நடந்தது என்று கடவுளுக்குத்தான் தெரியும். திடீரென்று மம்மியும் சத்தாவும் விவாதத்தில் ஈடுபட்டார்

கள். சத்தா திக்குவாய் கொண்டவன் போலிருந்தான். அவன் மம்மியிடம் அடம் பிடிக்கும் குழந்தை போல விவாதித்துக்கொண்டிருந்தான். ஃபிலிஸ் அவர்களி டையே சமாதானத்தைக் கொண்டு வர முயன்று தோற் றுப்போனாள். சத்தாவுக்குப் ஃபிலிஸை சயிதா காட் டேஜுக்கு அழைத்துச் செல்ல வேண்டும். மம்மி அது கூடாது என்று சொல்ல, அவன் அடமாய் இருந்தான். அவன் திரும்பத் திரும்ப,"மம்மி, பெண்களைக் கூட் டிக் கொடுக்கும் உனக்கு வயதாகிவிட்டது, பைத்தியம் பிடித்துவிட்டது... ஃபிலிஸ் எனக்கானவள்... அவளையே கேட்டுப்பார்" என்று சொல்லிக் கொண்டிருந்தான். மம்மி வெறிபிடித்த அவனின் இந்தக் கத்தல்களை நீண்ட நேரம் கேட்டுக் கொண்டு இருந்தார். பிறகு அவன் தன் நிலைக்குத் திரும்ப வேண்டும் என்று, "சத்தா என் மகனே, ஏன் புரிந்து கொள்ள மாட்டேன் என்கிறாய்? அவள் ரொம்பச் சின்னப்பெண். ரொம்ப ரொம்பச் சின் னவள்" என்றார். அவரின் குரல் கெஞ்சுவது போல் இருந்தது. ஆனால் சத்தா அதற்குச் செவி கொடுக்க மறுத்தான். அந்த நேரத்தில் அவனுக்குப் ஃபிலிஸும், அவளை ஆக்கிரமித்துக்கொள்வதும்தான் பிரதானமாக இருந்தது. நான் ஃபிலிஸ்ஸை நோக்கித் திரும்பிப் பார்த் தேன். அப்போது தான் முதல்முறையாக உணர்ந்து கொண்டேன், அவள் உண்மையில் மிகச் சிறிய பெண் - அதிகபட்சம் பதினைந்தைக் கடந்திருக்கமாட்டாள். சத்தா அவளது கரங்களைப் பிடித்துத் தன்னை நோக்கி இழுத்தான். பிறகு சினிமா படத்தில் கதாநாயகன் செய் வது போல் மிக இறுக்கமாக அவளை அணைத்துக் கொண்டான். மம்மி, "அவளை விட்டு விடு சத்தா. கட வுளுக்குப் புண்ணியமாய்ப் போகட்டும் அவளை விட்டு விடு" என்று கத்தினார். சத்தா தன் பிடியை விட்டுக் கொடுக்காத போது, மம்மி அவன் கன்னத்தில் ஓங்கி அறைந்து, "இங்கிருந்து வெளியே போ. வெளியே போ"

என்று கத்தினார். சத்தா அதிர்ச்சியில் உறைந்து போய் நின்றான். அவன் ஃபிலிஸை விட்டுவிட்டு மம்மியை விரோதத்தோடு பார்த்து வெளியே நடக்கத் தொடங்கி னான். நானும் விடைபெற்றுக்கொண்டு கிளம்பினேன்.

நான் சயிதா காட்டேஜை அடைந்தபோது தன் ஆடைகளை மாற்றாமல் சத்தா கட்டிலில் விழுந்து கிடப் பதைப் பார்த்தேன். நான் அவனிடம் ஏதும் பேசாமல் அடுத்த அறைக்குச் சென்றேன்.

மறுநாள் காலையில் நான் எழுந்து கொண்டபோது மணி பத்து ஆயிற்று. சத்தா வீட்டில் இல்லை, விடியற் காலையில் அவன் கிளம்பி விட்டதாக என்னிடம் சொல் லப்பட்டது. எங்கு சென்றான் என்று ஒருத்தருக்கும் தெரியவில்லை. நான் என் குளியலை முடித்து வெளியே வந்தபோது, கார் கொட்டகையில் அவனின் குரல் கேட் டது, நான் அப்படியே நின்றேன். அவன் யாரிடமோ, "அவர் பிரமாதமான மனிதர், உண்மையில் பிரமாதமான மனிதர், அந்த வயதை அடையும் போது நீயும் அது போல் பிரமாதமாக இருக்க வேண்டும் என்று கடவுளை வேண்டிக்கொள்" என்று சொல்லிக் கொண்டிருந்தான். அவனின் குரலில் ஒரு விதமான சோர்வு இருந்தது. அவன் சொன்னது அவனுக்கானதா அல்லது அவனின் எதிரே நின்றுகொண்டிருந்தவருக்கானதா என்று என் னால் தீர்மானிக்க முடியவில்லை. அங்கு அதற்கு மேல் நிற்பது முறையல்ல என்று நான் உள்ளே சென்றேன். அரைமணி நேரம் நான் அவனுக்காகக் காத்திருந்தேன். அவன் வரவில்லை என்பதால், நான் பிரபாத் நகருக்குப் புறப்பட்டேன்.

என் மனைவியின் கோபம் ஏறக்குறைய ஏற்கக் கூடிய அளவில் இருந்தது. ஹரீத் வீட்டில் இல்லை. அவனின் மனைவி அவனைப் பற்றிக் கேட்டபோது, இரவு முழுக்க விழித்திருந்ததால் அவன் இன்னும் உறங்கிக் கொண்டி ருப்பதாகச் சொன்னேன். புனேயில் சில நாட்கள் தங்கி

விட்டதால், திரும்பிப் போவது என்று தீர்மானித்திருந் தேன். ஹரீத்தின் மனைவியிடம், "நாங்கள் இப்போது கிளம்ப வேண்டும்" என்றேன். அவர் வழக்கமான சடங் காக எங்களை மேலும் சில நாட்கள் தங்கி இருக்குமாறு சொன்னார். நான் சயிதா காட்டேஜில் இருந்து புறப்பட்ட போதே, நேற்று இரவு நடந்தது சிந்திப்பதற்குப் போது மானது என்ற தீர்மானத்திற்கு வந்திருந்தேன். அதனால் நாங்கள் கிளம்பினோம்.

திரும்புகிற வழியில் என் மனைவியிடம் நேற்று இரவு நடந்ததை எல்லாம் முழுக்கச் சொன்னேன். அவளைப் பொறுத்தவரை ஃபிலிஸ், மம்மியின் மிக நெருங்கிய உற வினராக இருக்க வேண்டும் அல்லது அவளை மேலும் முக்கியத்துவம் வாய்ந்த ஏதோ ஒன்றிற்காகக் காப்பாற்றி இருக்க வேண்டும் என்றாள்.

பம்பாய் திரும்பிய சில நாட்களுக்குப் பிறகு, சத்தா விடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் மிகச் சுருக்க மாக அன்று இரவு நடந்த அந்த நிகழ்வு பற்றிக் குறிப்பு இருந்தது. அதில், "அன்று இரவு நான் மிருகமானேன். அதற்காக நான் அவமானப்படுகிறேன்" என்று எழுதியி ருந்தது.

மூன்று மாதங்கள் கழித்து நான் மீண்டும் புனே போக வேண்டி வந்தது. நான் சயிதா காட்டேஜுக்குச் சென் றபோது, சத்தா அங்கு இல்லை. கார் கொட்டகையில் ஷிரினின் குழந்தையோடு விளையாடிவிட்டு வெளியே வந்து கொண்டிருந்த காரீப் நவாஸைச் சந்தித்தேன். மிக அன்போடு என்னை வரவேற்றான். சிறிது நேரம் கழித்து ரஞ்சித்குமார் வந்தான். ஆமை போல் வந்து அமைதி யாக உட்கார்ந்து கொண்டான். அவர்களிடம் பேசியதி லிருந்து அந்த இரவுக்குப் பிறகு சத்தா மம்மி வீட்டிற் குப் போகவில்லை என்றும், மம்மியும் இவனைப் பார்க்க வரவில்லை என்றும் தெரிந்து கொண்டேன். மம்மி, அடுத்த நாளே ஃபிலிஸை அவளின் பெற்றோர்களிடம்,

அதாவது 'பெண்' போல் இருந்த அந்தப் பையனோடு, எங்கிருந்து ஓடி வந்தாளோ அங்கேயே திருப்பி அனுப்பிவிட்டார் என்று தெரிந்து கொண்டேன். ரஞ்சித்குமாரைப் பொறுத்தமட்டில் ஃபிலிஸ் இன்னும் சில நாட்கள் இருந்திருந்தால் நிச்சயம் அவளை வென்றெடுத்திருக்க முடியும் என்று நம்பியிருந்தான். காரீப் நவாஸுக்கு இது போன்ற நம்பிக்கைகள் ஏதும் இல்லை. அவள் திரும்பிப் போய்விட்டதற்காக மட்டுமே வருத்தப்பட்டான். சத்தாவைப் பொறுத்தவரை கடந்த சில நாட்களாக உடல் நலம் சரியில்லாமல் இருந்திருக்கிறான் - ஜுரம். காரீப் நவாஸ் இதை என்னிடம் சொல்லிக்கொண்டு இருந்த போது, ரஞ்சித்குமார் அறையை விட்டு வெளியேறினான். ஜன்னல் வழியாகப் பார்த்தபோது, நான் எதிர் பார்த்தது போல் கார் கொட்டகைக்குள் சென்றான். ஷிரினைப் பற்றி காரீப் நவாஸிடம் சரியான சந்தர்ப்பத்தில் விசாரிக்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டிருந்த சமயத்தில் வெங்குத்ரி கலவரத்தோடு உள்ளே ஓடி வந்து, சத்தாவுக்கு ஜுரம் மிக அதிகமாக இருந்ததால் மயங்கி விழுந்து விட்டதாகவும், டோங்காவில் அவனைக் கொண்டு வந்திருப்பதாகவும் சொன்னான். நானும் காரீப் நவாஸும் வெளியே சென்று சத்தாவை வீட்டிற்குள் கொண்டு வந்தோம். அவனின் உடல் உண்மையில் கொதித்துக்கொண்டிருந்தது. 106 டிகிரிக்கு மேல் இருக்க வேண்டும். காரீப் நவாஸிடம் ஒரு டாக்டரை அழைத்து வருமாறு சொன்னேன். அவன் வெங்குத்ரியோடு ஏதோ கலந்தாலோசித்து விட்டு வெளியே சென்றான். அவன் திரும்பியபோது, மம்மி அவனோடு இருந்தார். அவர் உள்ளே நுழைந்தவுடன், சத்தாவைப் பார்த்த பின் அழுகின்ற குரலில், "நீ உனக்கு என்ன செய்து கொண்டுள்ளாய் மகனே" என்றார்.

வெங்குத்ரி மம்மியிடம் சத்தாவுக்குப் பல நாட்களாக உடல்நிலை சரியில்லை என்று சொன்னபோது, அவர்

கோபத்தில், "நீங்கள் எல்லாம் எப்படிப்பட்ட மனிதர்கள்? ஏன் என்னிடம் நீங்கள் இதைச் சொல்லவில்லை" என்று கத்தினார். பிறகு எனக்கும் காரீப் நவாஸுக்கும், வெங் குத்ரிக்கும் சில வேலைகளைக் கொடுத்தார். ஒருத்தர் சத்தாவின் காலைப் பிடித்துவிடச் சொன்னார். மற்றொ ருவர் கொஞ்சம் ஐஸ்கட்டி கொண்டு வர வேண்டும், மூன்றாமவன் சத்தாவுக்கு விசிறிவிட வேண்டும். சத் தாவின் உடல் நிலையைப் பார்த்து அவர் ஆடிப்போய் இருந்தாலும், தன் நிலையை இழக்காமல் இருந்தார். நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்று சொல்லிவிட் டுப் பிறகு மருத்துவரை அழைத்து வரச் சென்றார். ரஞ்சித்குமாருக்குச் சத்தாவின் நிலையைப்பற்றி எப்ப டித் தெரிந்தது என்று எனக்குத் தெரியவில்லை. மம்மி வெளியேறியவுடன் மிகவும் கலவரத்தோடு, அறைக்குள் ஓடிவந்தான். வெங்குத்ரி எல்லாவற்றையும் அவனிடம் சொல்லி மம்மி டாக்டரை அழைத்து வரச் சென்றிருப்ப தாகச் சொன்னவுடன், அவன் நிம்மதி பெருமூச்சு விட் டான்.

மம்மி, நிலைமையை கையில் எடுத்துக்கொண்டது எல்லோருக்கும் திருப்தி அளித்தது. மம்மி சொன் னது எல்லாம் நிறைவேற்றப்பட்டன. சத்தாவின் கால் கள் பிடித்துவிடப்பட்டது. ஐஸ்கட்டி அவன் நெற்றியில் வைக்கப்பட்டது. மம்மி டாக்டரோடு திரும்பி வரும்போது சத்தா தன் நினைவுகளைத் திரும்பப் பெறத் தொடங் கியிருந்தான். டாக்டர் அவனைப் பரிசோதிக்க நீண்ட நேரம் எடுத்துக்கொண்டார். பிறகு அவர் மம்மியைத் தனியே அழைக்க, இருவரும் அறையை விட்டு வெளி யேறினார்கள். சற்று நேரம் கழித்துத் திரும்பி வந்த மம்மி, கவலைப்படுவதற்கு ஏதுமில்லை என்று சொன் னார். சத்தா தன் கண்களைத் திறக்கவில்லை என்றா லும், பேசப்படுவதைக் கேட்டுக்கொண்டிருந்தான். மம்மி அங்கிருந்ததில் சத்தா ஆச்சர்யப்படவில்லை என்றா

லும், சற்றே சங்கடப்பட்டான். சிறிது நேரம் கழித்து எப்படி, ஏன் மம்மி அங்கு வந்தார் என்று தெரிந்து கொண்ட பின், அவன் மம்மியின் கையைப் பிடித்து, "மம்மி, உண்மை யில் நீங்கள் கிரேட்" என்றான்.

மம்மி, அவனின் படுக்கையில் அமர்ந்து கொண்டார். அவர் அன்பும், நேசமும் நிறைந்த பிம்பமாய் இருந் தார். அவர் தன் கையைக் கொதிக்கும் அவனின் நெற்றியில் வைத்து இதை மட்டுமே சொன்னார், "என் மகனே... ஓ... என் மகனே". சத்தாவின் கண்களில் இருந்து கண்ணீர் வழிந்தது. அந்தக் கண்ணீரை நிறுத்த முயன்று கொண்டே, "மம்மி, உன்னுடைய மகன் ஒரு முதல் தரமான பொறுக்கி... மறைந்த உங்கள் கணவரின் துப்பாக்கியை எடுத்து வந்து அவனைச் சுட்டுத் தள் ளுங்கள்" என்றான். மம்மி மென்மையாக அவனின் கன் னத்தில் ஓர் அறை விட்டு, "முட்டாள்தனமாகப் பேசிக் கொண்டிருக்காதே" என்றார். பிறகு திறமை வாய்ந்த தாதி போல், எழுந்து நின்று எங்கள் எல்லோரையும் பார்த்து, "பாய்ஸ், நாம் இப்போது சத்தாவை மருத்துவம னைக்கு அழைத்துச் செல்ல வேண்டும்" என்றார். சத்தா தனக்கு அப்படி ஏதும் மோசமாக இல்லாதபோது எதற் காக மருத்துவமனைக்கு அழைத்துச் செல்ல வேண்டும் என்று எதிர்ப்பு தெரிவித்தான். மம்மி, "பயப்படுவதற்கு ஏதும் இல்லைதான் ஆனாலும் மருத்துவமனையில் நீ முழுமையாக ஓய்வெடுத்துக்கொள்ளலாம்" என்று பதில் தந்தார். பொதுவாகத் தான் நினைப்பதில் தீர்மான மாக இருக்கும் சத்தா, கடைசியாக ஒத்துக்கொண்டான். ஒரு டாக்ஸி வரவழைக்கப்பட்டு, அவன் மருத்துவம னைக்குக் கொண்டு செல்லப்பட்டான். மம்மி என்னைத் தனியே அழைத்து அவனை பிளேக் நோய் தாக்கியிருப் பதாகச் சொன்னார். இதைக் கேள்விப்பட்டவுடன், என் உடலில் இருந்த இரத்தம் வெளியேறி விட்டதைப் போல் உணர்ந்தேன். மம்மியும் மிகவும் பாதிக்கப்பட்டிருந்தா

லும், சத்தா இதிலிருந்து மீள முடியும் என்றும், சீக்கிரத்தில் குணமாகிவிடுவான் என்றும் அசாத்திய நம்பிக்கையோடு இருந்தார்.

ஒரு தனியார் மருத்துவமனையில் சத்தாவுக்குச் சிகிச்சை அளிக்கப்பட்டது. அவன் மீது அதிகபட்ச அக்கறையும் கவனிப்பும் செலுத்தப்பட்டது. இவை எல்லாவற்றையும் மீறி பல சிக்கல்கள் உருவாயின. அவனின் சதையில் வெடிப்புகள் தோன்றத் தொடங்கின. ஜுரமும் அதிகரித்தது. அந்த மருத்துவமனை அவனை பம்பாய்க்குக் கொண்டு செல்லப்பட வேண்டும் என்று அறிவுரை கொடுத்தது. ஆனால் மம்மி, அதற்குச் சம்மதிக்காமல், அவனைத் தன்னுடைய வீட்டிற்கு அழைத்துச்சென்றார்.

என்னால் புனேவில் அதிக நாட்கள் தங்கியிருக்க முடியவில்லை. பம்பாய் திரும்பியவுடன் தொலைபேசியில் பல முறை அவனின் உடல் நிலை பற்றி விசாரித்தேன். அவனால் பிளேக்கின் இந்தத் தாக்குதலில் இருந்து மீண்டு வர முடியாது என்றே என்னுள் தோன்றியது. ஆனாலும் குணமாவது மிக மெதுவாக இருந்தாலும், அவன் அதை நோக்கி நகர்ந்து கொண்டிருப்பதாகத் தெரிந்து கொண்டேன்.

நான் லாகூருக்கு ஒரு வழக்கு சம்பந்தமாகப் போக வேண்டியிருந்ததால், பதினைந்து நாட்கள் வெளியே இருந்தேன். நான் திரும்பிய உடன், சத்தாவிடம் இருந்து வந்த ஒரு கடிதத்தை என் மனைவி என்னிடம் கொடுத்தாள். அதில் 'தன்னலமற்ற மம்மி மரணத்தின் பிடியிலிருந்து தன்னைக் காப்பாற்றிவிட்டார்' என்று மட்டுமே இருந்தது. இந்தச் சில வார்த்தைகளில் கடல் போல உணர்ச்சிகள் அலைமோதின. நான் இதை என் மனைவியிடம் என் வழக்கத்துக்கு மாறாக மிகவும் உணர்ச்சிவசப்பட்ட நிலையில் சொன்னபோது, அவள் இதைத்தான்

சொன்னாள், "அவளைப் போன்ற பெண்களால் இது போன்ற விசயங்களைச் சாதிக்க முடியும்".

நான் சத்தாவுக்கு இரண்டு, மூன்று கடிதங்கள் எழுதி யிருந்தாலும் பதில் ஏதும் எனக்குக் கிடைக்கவில்லை. மம்மி அவனை லூனாவாலாவில் உள்ள அவரின் நண் பரிடம், சத்தா பூரணமாகக் குணமாகும் வரை தங்கியி ருக்க அனுப்பி வைத்துள்ளார் என்று பிறகு தெரிந்து கொண்டேன். சத்தா அங்கு ஒரு மாதம் மட்டுமே தங் கியிருந்தான். அதற்குள் சலிப்புற்றுத் திரும்பி விட்டான். அவன் திரும்பிய அன்று நான் புனேவில் இருக்கும்படி நேர்ந்தது.

பிளேக்கின் தாக்குதல் அவனை மிகவும் பலவீனமாக ஆக்கியிருந்தது. ஏதோ சைக்கிளில் சின்ன விபத்தில் சிக்கிக் கொண்டது தவிர வேறு ஏதும் இல்லை என் பது போல, அவனைத் தாக்கிய நோயைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தான். இப்போது அவன் பூரணமாகக் குண மாகியிருந்தான். அதனால் இனியும் இந்த நோயைப் பற் றிப் பேசுவதை அவன் விரும்பவில்லை.

சத்தா நோயுற்று இருந்த நாட்களில் சயிதா காட்டே ஜில் சிறு சிறு மாற்றங்கள் நிகழ்ந்திருந்தன. சகோத ரர்கள் ஷகிலும் அகிலும் தாங்கள் தொடங்க இருந்த சினிமாக் கம்பெனிக்கு சயிதா காட்டேஜின் சூழ்நிலை ஏற்றதாக இல்லாததால் வெளியேறி விட்டிருந்தார்கள். அவர்கள் இடத்தை ஒரு வங்காளி இசையமைப் பாளர் சென் எடுத்துக்கொண்டுள்ளான். அவனோடு ஒரு சிறு பையன், ராம்சிங் என்று அழைக்கப்பட்டவன் - லாகூரில் இருந்து ஓடி வந்தவன், தங்கியிருந்தான். அவன் மிக வும் அடக்கம் கொண்டவனாகவும், நல்ல பையனாகவும் இருந்தான். எல்லோரும் அவனைச் சிறு சிறு வேலை கள் செய்ய உபயோகப்படுத்திக் கொண்டார்கள். மம்மி யின் வற்புறுத்தலால் லூனாவாலா புறப்பட்டுக் கொண் டிருந்த போது அவன் சத்தாவைப் பார்க்க வந்திருக்

கிறான். சத்தா, காரீப் நவாஸிடமும் ரஞ்சித்குமாரிடமும் அவனைச் சயிதா காட்டேஜில் தங்க அனுமதிக்குமாறு சொல்லியிருக்கிறான். சென்னின் அறையில் இடமிருந்ததால் அவன் அங்கு தங்க வைக்கப்பட்டுள்ளான்.

ஒரு ஃபிலிம் கம்பெனியின் புதுப்படத்தில் ரஞ்சித் குமார் கதாநாயகனாகத் தேர்வு செய்யப்பட்டுள்ளான். அந்தப் படம் நல்ல முறையில் வெற்றி கண்டால் அடுத்த படத்தை அவனே இயக்குவதற்காக உறுதியும் அளிக்கப்பட்டுள்ளது. சத்தா தன்னுடைய இரண்டு வருட கால ஊதிய சேமிப்பிலிருந்து ஆயிரத்து ஐநூறு ரூபாயை வெற்றிகரமாகப் பெற்றுக் கொண்டுள்ளான். அவன் ரஞ்சித்குமாரிடம், "நண்பா! உனக்குப் பணம் வேண்டும் என்றால், பிளேக் நோயை வரவழைத்துக்கொள். நடிகனாகவோ, இயக்குநராகவோ இருப்பதைக் காட்டிலும் அது எளிதானது" என்று சொல்லியிருக்கிறான். காரீப் நவாஸ் அப்போதுதான் ஹைதராபாத்திலிருந்து திரும்பி வந்திருக்கிறான். அதனால் சயிதா காட்டேஜ் ஒருவிதமாக செழுமையான நிலையில் இருந்தது. கார் கொட்டகைக்கு வெளியே விலை உயர்ந்த துணியில் தைக்கப்பட்ட சட்டைகளும், சல்வார்களும், காய்வதற்காகத் தொங்கிக் கொண்டிருந்தன. ஷிரினின் குழந்தையிடம் விளையாடுவதற்குப் புது பொம்மைகள் இருந்தன. என்னுடைய பழைய நண்பன் ஹரீத் புதுப்படக் கதாநாயகியோடு படுக்க முயன்று கொண்டிருந்தான். அவள் ஒரு பஞ்சாபி, அவளின் கணவர் கட்டுமஸ்தான உடலும், அடர்த்தியான தாடியும் கொண்டிருந்தான். அதனால் என் நண்பன் வெற்றி காண்பது, சாத்தியக் குறைவானது. ஆனாலும் சத்தா அவனை உசுப்பேற்றி, "அந்தத் தேவடியா மகன் பற்றிக் கவலைப்படாதே, பெரிய உடலும் அடர்த்தியான தாடியும் கொண்ட எந்த ஒரு பஞ்சாபிக் கணவனையும் நாம் வெற்றி காண முடியும். நீ செய்ய வேண்டியதெல்லாம் பஞ்சாபியில் பத்து கெட்ட வார்த்

தைகளை என்னிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு கெட்ட வார்த்தைக்கும் நீ எனக்கு நூறு ரூபாய் தரவேண்டும். இது அவனை வெற்றிக்கொள்ள ரொம்பவும் உபயோகமாக இருக்கும்" என்று சொல்லி யிருக்கிறான். ஹரீத் ஒரு மது பாட்டிலுக்கு ஒரு வார்த் தையைச் சத்தாவிடமிருந்து கற்றுக்கொண்டுள்ளான். ஆனாலும் இதுவரை அவனுக்குப் பெரிய இடைஞ்சல் ஏதும் இல்லாததால் அதற்கு மேல் சத்தாவின் உதவி தேவையில்லாமல் போனது.

மம்மியின் வீட்டில் பார்ட்டிகள் மீண்டும் தொடங்கப் பட்டன. பாலி, டாலி, கிட்டி, தெல்மா, எல்மா மற்றும் பலர் வழக்கம் போல் வந்தார்கள். வெங்குத்ரி வழக் கம் போல தெல்மாவிற்கு கதகளி மற்றும் தாண் டவ நடனங்களின் நுணுக்கங்களைப் பாடம் எடுத்துக் கொண்டிருந்தான். அவளும் அதைக் கற்றுக் கொள்வ தற்காகத் தீவிர முயற்சிகள் எதையும் எடுக்கவில்லை. காரீப் நவாஸ் அவனுக்குச் சாத்தியப்பட்டது போலத் தொடர்ந்து கடனாகப் பணம் கொடுத்துக்கொண்டிருந் தான். ஒரு படத்தில் கதாநாயகனாக நடிக்க வாய்ப்புப் பெற்றிருந்த ரஞ்சித்குமார் வழக்கம் போல ஏதாவது ஒரு பெண்ணோடு வெளியே சுற்றிக்கொண்டிருந்தான். சத் தாவின் வெத்து வேடிக்கைப் பாட்டுக்களும், அதில் சந்தோஷம் கொள்ளும் சிரிப்புகளும் தொடர்ந்து கேட் டுக்கொன்டே இருந்தன. சத்தாவால் விவரிக்க முடியாத தலைமுடியைக் கொண்டிருந்த ஃபிலிஸை மட்டுமே அங்கு காண முடியாமல் போனது. சத்தாவின் கண்கள், அங்கு நடந்த பார்ட்டிகளில் அவளைத் தேடிக் கொண் டிருக்கவில்லை. சில சமயங்களில் மம்மியின் கண்களை நேராகச் சந்திக்க நேரிடும்போது, அவன் தன் பார்வை யைத் தாழ்த்திக்கொண்டான். அன்று இரவு நடந்ததின் அவமான உணர்வே இது என்று நினைத்துக்கொண் டேன். ஒரு சில சுற்று குடித்த பிறகு சத்தா அவனை

அறியாமலேயே, "சத்தா, நீ உண்மையில் கேவலமான மிருகம்" என்று சொல்வான். இதைக் கேட்டு மம்மி, 'குப்பைகளைப் பேசிக்கொண்டிருக்காதே' என்பது போல ஓர் இறுக்கமான புன்னகையை வெளிப்படுத்துவார். வெங்குத்ரியுடனான அவனின் விவாதங்கள் தொடர்ந்து கொண்டிருந்தன.

மம்மி அதே பழைய மம்மிதான். பாலியின் மம்மி, டாலியின் மம்மி, சத்தாவின் மம்மி, ரஞ்சித்குமாரின் மம்மி. அவர் அதே பழைய உற்சாகத்தோடு சோடா பாட்டில்கள் வைப்பதிலும், நொறுக்குத் தீனி செய்வதிலும், இதர வேலைகள் செய்வதிலும் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். அவர் முகத்தில் இருந்த ஒப்பனை அதே பழைய கோரமான ஒப்பனையாகத்தான் இருந்தது. அவரின் ஆடைகள் வழக்கம் போல அடர்த்தியான வண்ணங்களிலும், இறுக்கமாகவும் இருந்தன. அவரின் தடித்த ஒப்பனையை மீறி அந்த முகச் சுருக்கங்கள் வெளிப்பட்டுக் கொண்டிருந்தன. நான் இப்போது இதை மிகவும் புனிதமானதாகக் கருதினேன். பிளேக் நோய் கூட அவற்றைத் தொட அச்சம் கொண்டு, பயத்தில் தப்பி ஓடிவிட்டது. அவை சத்தாவின் உடலை விட்டும் ஓட நேர்ந்ததற்குக் காரணம், அந்த உடலும் இந்தச் சுருக்கங்களின் பாதுகாப்பில் இருந்ததுதான்.

மம்மியின் உதவியால், வெங்குத்ரியின் மனைவி கருக்கலைப்பிலிருந்து காப்பாற்றப்பட்டாள். தெல்மா இந்திய நடனத்தைக் கற்றுக்கொள்ளும் ஆர்வத்தில் ஒரு கதக் நடனக்காரனோடு ஈடுபாடு கொண்டு, மிக மோசமான நோயால் பாதிக்கப்பட்டிருப்பதை ஒரு நாள் கண்டறிந்தார். மம்மி அன்று சாயந்திரமே அவளின் சிகிச்சைக்கான ஏற்பாடுகளைச் செய்தார். கிட்டி குறுக்கெழுத்துப் போட்டியில் ஐநூறு ரூபாயைப் பரிசாகப் பெற்றபோது, மம்மி அதில் பாதிப் பணத்தை காரீப் நவாஸுக்கு கொடுக்கச் சொன்னார் - அப்போது அவன்

மோசமான பணக்கஷ்டத்தில் இருந்தான். நான் தங் கியிருந்த பதினைந்து நாட்களும் என் மனைவியைப் பற்றி ரொம்ப அக்கறையோடு பலமுறை விசாரித்தார். பல வருடங்களாகியும், எங்களின் முதல் குழந்தையின் மரணத்திற்குப் பிறகு இன்னும் இரண்டாவது குழந்தை ஏதும் இல்லாததற்கு மிகவும் வருத்தப்பட்டார். ரஞ் சித்குமாரோடு அவர் எப்போதும் சகஜமாகப் பேசிய தில்லை. தன்னை எப்போதும் பெரிதுபடுத்திக் காட்டிப் பேசும் அவனின் தன்மை அவருக்குப் பிடிக்கவில்லை. ஓரிரு முறை அதை என்னிடம் சொல்லியும் இருக்கிறார். இசையமைப்பாளர் 'சென்'னை அவர் மிகவும் வெறுத் தார். சத்தா அவனைத் தன்னோடு அழைத்து வந்தால், அவனை மீண்டும் அழைத்து வரக்கூடாது என்று சொன் னார். "ஏன்?" என்று சத்தா கேட்டதற்கு அவர், "இங்கு உள்ள சூழ்நிலையில் அவன் அன்னியப்பட்டுள்ளான்... அவன் இந்த இடத்திற்கு ஏற்றவன் இல்லை" என்றார். இந்த விளக்கத்தைக் கேட்டு சத்தா சிரித்தான்.

மம்மியின் வீட்டில் பல பார்ட்டிகளில் கலந்து கொண்ட சந்தோஷத்தோடு நான் பம்பாய் திரும்பிச் சென்றேன். இந்த பார்ட்டிகள் அதற்கான சூழ்நிலையைத் தன் னுள்ளே கொண்டிருந்த அந்தச் சூழல் - காமத்தை யும், போதையையும் அடிப்படையாகக் கொண்டிருந்தது. அங்கு எதுவுமே மறைமுகமாகவோ, மறைக்கப்பட்டதா கவோ இல்லை. எல்லாமே பிரசவத்தின் கடைசி நிலை யில் இருக்கும் வயிற்றைப் போல வெளிப்படையாக இருந்தன. வெளித் தோற்றத்தில் பார்வையாளனுக்குக் கோரமானதாகவும், ஒழுக்கமற்றதாகவும், நாகரிகமற் றதாகவும், காட்சி தந்தது. எப்போதும் தீர்மானம் ஏதும் எடுக்க முடியாத நிலையிலேயே, பார்வையாளனை வைத்திருந்தது. ஆனால் உண்மையில் அங்கு எல் லாமே மிகச் சரியாகவும், ஒழுங்கோடும், நளினத்தோடும் இருந்தன.

ஒரு நாள் செய்தித்தாளில் இசையமைப்பாளர் சென், சயிதா காட்டேஜில் கொலை செய்யப்பட்டதாகப் படித் தேன். ராம்சிங் கொலைகாரனாகக் குற்றம் சாட்டப்பட் டுள்ளான். அவனின் வயது சுமார் பதினான்கு என்று கொடுக்கப்பட்டிருந்தது. நான் உடனடியாகப் புனேவிற் குத் தொலைபேசியில் தொடர்பு கொள்ள முயன்றபோது அங்கு எவரும் இல்லை. ஒரு வாரம் கழித்து சத்தாவிடம் இருந்து ஒரு கடிதம் வந்தது. அது முழுக் கதையையும் கொண்டிருந்தது.

எல்லோரும் தூங்கிக்கொண்டிருந்தார்கள். யாரோ தன்னுடைய கட்டிலில் வந்து விழும் சத்தம் கேட்டு, சத்தா பயந்து போய் விளக்கைப் போட்டுப் பார்த்திருக் கிறான் - சென், மோசமாக இரத்தம் சொட்டிக் கொண் டிருந்தது. சத்தா சிரமப்பட்டுத் தன் உணர்வுகளை ஒரு நிலைக்குக் கொண்டு வந்த போது, ராம்சிங் கையில் கத்தியோடு, கதவருகே நின்று கொண்டிருந்தான். அந் தச் சமயத்தில் காரீப் நவாஸும், ரஞ்சித்குமாரும் வந்து சேர்ந்தார்கள். இப்போது சயிதா காட்டேஜ் முழுக்க விழித்துக் கொண்டுவிட்டது. காரீப் நவாஸும் ரஞ்சித் குமாரும் ராம்சிங்கைப் பிடித்துக்கொண்டு, அவனிட மிருந்த கத்தியைப் பிடுங்கினார்கள். சென் கட்டிலில் படுக்க வைக்கப்பட்டான். அவனிடம் ஏதும் கேட்கப்ப டும் முன்பே அவன் விக்கி இறந்துபோனான்.

"பாபாஜி அவன் இறந்துவிட்டானா?" என்று ராம் சிங் கேட்க, "ஆமாம்" என்று சத்தா சொல்லியிருக்கி றான். காரீப் நவாஸ் மற்றும் ரஞ்சித்குமாரிடம் தன்னை விடுவிக்குமாறும், ஓடிவிட மாட்டேன் என்றும் சொல் லியிருக்கிறான். தன்னால் எதுவும் தீர்மானிக்க முடிய வில்லை என்றும், மம்மிக்குச் சொல்லி அனுப்பலாம் என்றும் சத்தா சொல்லியிருக்கிறான். அவர் வந்து சேர, இனி விஷயம் சரியான முறையில் கையாளப்படும் என்று எல்லோரிடமும் ஒரு விதத் திருப்தி வெளிப்பட்டது.

அவர் ராம்சிங்கைக் காவல் நிலையத்திற்கு அழைத்துச் சென்றிருக்கிறார். என்ன நடந்ததோ, அதை அப்படியே உண்மையாகச் சொல்லுமாறு அவனிடம் சொல்லியிருக்கிறார். சில நாட்கள் போலீஸ் விசாரணைக்குப் பிறகு, கோர்ட்டில் வழக்குத் தொடங்கியது. இந்த நாட்களில் மம்மி, இங்கு அங்கு என்று நிறைய அலைந்திருக்கிறார். அதனால் ராம்சிங் எப்படியும் விடுதலை செய்யப்படுவான் என்று எல்லோரிடமும் நம்பிக்கை இருந்தது. கடைசியில் அதுதான் நடந்தது. கீழ் நீதிமன்றமே அவன் குற்றவாளி இல்லை என்று தீர்ப்பளித்தது. அவன் நீதிமன்றத்தில் சொன்ன விசயங்கள், காவல் நிலையத்தில் சொன்னதோடு முழுமையாக ஒத்திருந்தது. நீதிமன்றத்தில் எல்லாவற்றையும் மிகத் தெளிவாக விளக்கியிருக்கிறான். அவனுக்கு இசையில் ஆர்வம் இருந்ததால், சென் அவனைப் பின்னணிப் பாடகராக ஆக்குவதாக உறுதியளித்துள்ளான். பிறகு சென் அவனின் கீழ்த்தரமான இச்சைகளுக்கு இவனைப் பயன்படுத்திக் கொள்ள முயன்றபோது, இவன் அதற்கு மறுப்புத் தெரிவித்திருக்கிறான். இவனின் மனசாட்சி அதற்கு இடம் கொடுக்கவில்லை. கடைசியாக ஒரு நாள் அவன் சென்னிடம் இனி ஒருமுறை, தான் இது போல் செய்ய நிர்ப்பந்திக்கப்பட்டால், நிச்சயமாக அவனைக் கொன்று விடுவதாகச் சொல்லியிருக்கிறான். கொலை செய்யப்பட்ட அன்று இரவு மிகச் சரியாக அதுதான் நடந்திருக்கிறது.

மம்மி நீதிமன்றத்திற்கு வந்திருந்ததாகச் சத்தா சொல்லியிருந்தான். அவரின் கண்கள் நம்பிக்கையின் ஒளியை வீசி, ராம்சிங் உண்மைகளை, மட்டுமே சொல்லுமாறு நிர்ப்பந்தப்படுத்தியது.

'உன் கறை படிந்த கரங்கள் பற்றிக் கவலைப்படாதே' என்று சொல்லியிருக்கிறார். அதற்குக் காரணம் இழிவான, அருவறுப்பான ஒன்றுக்கு அவன் கட்டாயப்படுத்

தப்பட்டது தான் என்றும் சொல்லி நம்பிக்கையூட்டியி ருக்கிறார்.

ராம்சிங் முழுக் கதையையும் நேர்மையாகவும், நேர டியாகவும், உண்மையாகவும் சொல்லியிருக்கிறான். நீதி மன்றம் அவன் பேச்சில் மிகவும் திருப்தி கொண்டு அவனை விடுதலை செய்திருக்கிறது. சத்தா கடிதத்தை இப்படி முடித்திருந்தான்: 'இந்த ஒழுக்கங்கெட்ட உல கத்தில் உண்மைக்குக் கிடைத்த விசித்திரமான வெற்றி இது. இந்தக் கிரீடம் மம்மியின் தலையையே அலங்க ரிக்க வேண்டும்'.

சத்தா, சயிதா காட்டேஜில் ராம்சிங்கின் விடுதலை யைக் கொண்டாட ஏற்பாடு செய்திருந்த நிகழ்ச்சிக்கு என்னையும் அழைத்திருந்தான். வேறு வேலைகள் கார ணமாக என்னால் அதற்குப் போக முடியவில்லை. சகோ தரர்கள் ஷகிலும் அகிலும் மீண்டும் சயிதா காட்டேஜுக் குத் திரும்பியிருக்கிறார்கள். வெளியுலகமும் அவர்கள் தொடங்குவதாக இருந்த ஃபிலிம் கம்பெனிக்கு ஏற்றாற் போல் இல்லை என்றும் அவர்கள் உணர்ந்து கொண் டார்கள் என்று தெரிய வந்தது. அவர்களின் சேமிப்பில் சில நூறு ரூபாய் நோட்டுகள் மட்டுமே மிச்சம் இருந்தது. சத்தாவின் வேண்டுகோளுக்கு இணங்கி அந்தப் பணத் தைக் கொண்டாட்டத்திற்காக அவர்களின் பங்காகக் கொடுத்திருக்கிறார்கள். அதற்கு சத்தா, "நான் என்னு டைய நான்காவது சுற்றுக்குப் பிறகு நீங்கள் தொடங்க இருக்கும் சினிமாக் கம்பெனிக்காகப் பிரார்த்தனை செய்கிறேன்" என்று சொல்லியிருக்கிறான். இந்தக் கொண்டாட்டத் தில், வெங்குத்ரி தன் அப்பனைப் புகழ வில்லை என்றும் தெரிந்து கொண்டேன். அவன், தன் னுடைய அழகான மனைவி பற்றிக் கூட ஏதும் சொல் லவில்லையாம். கிட்டிக்கு அவசரமாகத் தேவைப்பட்டது என்பதால் இருநூறு ரூபாயை காரீப் நவாஸ் கடனாகக் கொடுத்துள்ளான். மம்மி ராம்சிங் மீது மிகுந்த அக்கறை

காட்டி அவனைத் திரும்ப ஊருக்கு அனுப்பி வைப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும் என்று யோசனையும் சொல்லியுள்ளார். அந்த நேரத்திலேயே, அந்த இடத்திலேயே தீர்மானம் எடுக்கப்பட்டது. அடுத்த நாள், காரீப் நவாஸ் இரயில் டிக்கெட்டுக்கு ஏற்பாடு செய்ய, ஷிரின் பயணத்திற்கான உணவைத் தயாரித்தாள். எல்லோரும் அவனை வழியனுப்ப இரயில் நிலையத்திற்குச் சென்றிருக்கிறார்கள். நீண்ட நேரம் கையசைத்து விடை கொடுத்து அனுப்பியிருக்கிறான்.

இந்தக் கொண்டாட்டத்திற்கு ஒரு வாரம் கழித்து நான் ஒரு வேலை விஷயமாகப் புனே போக வேண்டியிருந்தது. சயிதா காட்டேஜில் எந்த மாற்றமும் இல்லை - ஒரு வேளை, அது உருவாக்கிய வெறுமையை, அதுவே நிறைத்துக்கொள்ளும் போலும். நான் போய்ச் சேர்ந்த அன்று எல்லோருக்கும் இனிப்புகள் கொடுக்கப்பட்டன. ஷிரின் மற்றொரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். வெங்குத்ரி கையில் கிளாஸ்கோ டின் ஒன்று இருந்தது. அந்தக் காலங்களில் அதைப் பெறுவது அவ்வளவு எளிதில்லை. எங்கிருந்தோ தன் குழந்தைக்காக இரண்டும், ஷிரினின் குழந்தைக்காக ஒன்றும் வாங்கி வைத்திருந்தான். வெங்குத்ரியின் வாயில் கடைசி இரண்டு லட்டுகளைத் திணித்து, "இந்த கிளாஸ்கோ டின்களைக் கொண்டு வந்தது மூலம் நீ மிகப்பெரிய செயலைச் செய்திருக்கிறாய். ஆனால் அதற்காக உன் அப்பனையோ, உன் மனைவியையோ புகழத் தொடங்குவதில்லை என்பதில் தெளிவாக இரு" என்றான் சத்தா. வெங்குத்ரி ரொம்பவும் அப்பாவித்தனமாக, "தேவடியாப் பையா, நான் என்ன இப்போது போதையிலா இருக்கிறேன்?. அந்தப் பேச்சுகள் போதையில் மட்டுமே வரும். ஆனால் நான் சொல்வதை நீ நம்பு என் மனைவி உண்மையிலேயே மிக அழகாக இருப்பாள்" என்றான். சத்தா சிரித்த சிரிப்பில் வெங்குத்ரி வேறு ஏதே

னும் சொல்வதற்குச் சந்தர்ப்பமே கிடைக்கவில்லை. பிறகு சத்தாவும், ரஞ்சித்குமாரும், காரீப் நவாஸும் அவர் களின் கவனத்தை என் பக்கம் திருப்பி ஒரு திரைப்ப டத் தயாரிப்பாளருக்காக நான் எழுதிக்கொண்டிருக்கும் கதையைப் பற்றிப் பேசத் தொடங்கினார்கள். சீக்கிரத் தில் ஷிரினின் புதுக் குழந்தைக்குப் பெயர் வைப்பது விவாதத்தின் பொருளாயிற்று. எத்தனையோ பெயர்கள் முன்வைக்கப்பட்டு, வேண்டாம் என்று தீர்மானிக்கப்பட் டது. எனக்கு என்னவோ காரீப் நவாஸும், ரஞ்சித்குமா ரும், சத்தாவும் அவர்களின் வழக்கமான உற்சாகத்தில் இல்லை என்ற உணர்வு என்னுள் இருந்து கொண்டே யிருந்தது. இதற்கு வெப்பநிலையோ அல்லது ஷிரினின் புதுக்குழந்தையோ அல்லது சென்னின் மரணமோ கார ணமாக இருக்கலாம் என்று நினைத்துக்கொண்டேன்.

நான் எழுதிக்கொண்டிருக்கும் கதையை முடிப்பதற் காக ஹரீத்தின் வீட்டிற்கு மாறிக் கொண்டேன். இந்த நாட்களில் சத்தா ஏன் என்னைப் பார்க்க வரவில்லை என்று வியந்துகொண்டே இருந்தேன். வெங்குத்ரி கூட வந்து பார்க்கவில்லை. பிரபாத் நகர் வந்து என்னைப் பார்க்கும் அளவிற்கு ரஞ்சித்குமாரோடு எனக்கு நெருக் கமில்லை. அடுத்து காரீப் நவாஸை பொறுத்த வரை அவன் ஹைதராபாத் போயிருக்கலாம் என்று நினைத் தேன்.

திடீரென்று ஒரு நாள் என்னுடைய கதைக்கு, சுவா ரசியமான திருப்பத்தைக் கொடுத்துக்கொண்டிருந்த போது சத்தா வந்து நின்றான். வந்த உடனேயே, "நீ வேலை செய்து கொண்டிருக்கும் இந்தக் குப்பைக்கு ஏதாவது பணம் கிடைத்ததா?" என்று கேட்டான். நான் என்னுடைய இரண்டாவது தவணையை இரண்டு நாட் களுக்கு முன் பெற்றேன் என்றும், எனக்கு இரண்டா யிரம் ரூபாய் கொடுக்கப்பட்டது என்றும் சொன்னேன். "அந்தப் பணம் எங்கே?" என்று கேட்டான். "என் பாக்

கெட்டில்" என்று பதில் தந்தேன். அவன் என் பாக் கெட்டில் கையை விட்டு நான்கு நூறு ரூபாய் நோட் டுகளை எடுத்துக்கொண்டான். "சாயந்திரம் மம்மி வீட் டிற்கு வா, அங்கு இன்று பார்ட்டி உண்டு" என்று சொல்லி, நான் வேறு ஏதேனும் கேட்பதற்கு முன்பே அங்கிருந்து கிளம்பிச் சென்றான். சில நாட்களாக அவன் முகத்தில் தெரிந்த சோகம் இன்னும் நிலைத்திருப்பதைக் கண் டேன். ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருப்பது போலவும் தெரிந்தான். நான் அதைப்பற்றிச் சிந்திக்க முயன்றாலும் நான் எழுதிக்கொண்டிருந்த கதையில், மூழ்கியிருந்த தால் என்னால் அதிலிருந்து கவனத்தைத் திருப்ப முடிய வில்லை.

நான் சுமார் ஐந்து மணிக்குப் புறப்பட்டு ஏழு மணியள வில் சயிதா காட்டேஜை அடைந்தேன். துணிக்கயிற்றில் நிறைய மூத்திரத்துணிகள் தொங்கிக் கொண்டிருந்தன. குழாய்க்கு அருகில் 'ல்' சகோதரர்கள் ஷிரினின் முதல் குழந்தையோடு விளையாடிக் கொண்டிருந்தார்கள். கார் கொட்டகையின் கோணித் திரை விலக்கி வைக் கப்பட்டிருந்தது. சத்தா பற்றி நான் விசாரிக்க அவன் மம்மி வீட்டிற்குப் போய்விட்டதாகச் சொன்னார்கள்.

மம்மியின் வீட்டை நான் அடைந்த போது அங்குப் பெரும் சத்தம் வெளிப்பட்டுக் கொண்டிருந்தது. எல் லோரும் நடனமாடிக் கொண்டிருந்தார்கள் - காரீப் நவாஸ் டாலியோடும், ரஞ்சித்குமார் கிட்டி மற்றும் எல் மாவோடும், வெங்குத்ரி தெல்மாவோடும். அவன் அவ ளிடம் கதகளி பற்றி விளக்கிக்கொண்டிருந்தான். சத்தா மம்மியின் கரங்களைப் பிடித்துக் கொண்டு இங்கும் அங்கு முயல் போல குதித்துக் கொண்டிருந்தான். எல் லோரும் குடித்திருந்தார்கள். அங்கு பெரும் குழப்பம் நிலவியது. நான் உள்ளே நுழைந்தவுடன் சத்தா தான் முதலில் கத்தினான். பிறகு உள்ளூர் வெளியூர் மொழி என்று எல்லாம் ஒன்றிணைந்து பெரும் சத்தம் உரு

வாக்கப்பட நீண்ட நேரம் என் காதுகளில் அது எதிரொலித்துக்கொண்டே இருந்தது. மம்மி என்னிடம் வழக்கமாகக் காட்டும் ஒழுங்கு முறையான வெளிப்பாட்டைக் கடந்து, மிக அன்யோன்யத்தோடு என்னை வரவேற்றார். அவர் என் கையைப் பிடித்து, "முத்தம் கொடு அன்பே" என்றார். அவரே என் கன்னத்தில் ஒரு முத்தம் கொடுத்து, என்னை நடனமாடும் கூட்டத்திற்குள் இழுத்துச் சென்றார். சத்தா, "நடனமாடியது போதும் இப்போது நாம் குடிக்கத் தொடங்குவோம்" என்று கத்தினான். பிறகு தன் வேலைக்காரனை அழைத்து, "ஸ்காட்லேண்ட் இளவரசே, ஒரு புது விஸ்கி பாட்டிலைக் கொண்டு வாருங்கள்" என்று உத்தரவிட்டான். ஸ்காட்லேண்ட் இளவரசர் அங்கிருந்து மறைந்து, மீண்டும் கையில் விஸ்கி பாட்டிலோடு தோன்றினார். குடித்திருந்த அவன், பாட்டிலைத் திறக்க முயன்றபோது, அது நழுவிக் கீழே விழுந்து தூள் தூளாக உடைந்து போனது. மம்மி அவனைக் கடிந்து கொள்ள முயன்றபோது சத்தா தடுத்து, "மம்மி! அவன் ஒரு பாட்டிலைத்தான் உடைத்துவிட்டான் ஆனால் இங்கு நிறைய உடைந்து போன இதயங்கள் இருக்கின்றன" என்றான். திடீரென்று அங்கு பெரும் அமைதி தோன்றியது. உடனடியாக சத்தா தன்னுடைய உரத்த சிரிப்பில் அதை மூழ்க வைத்தான். புது பாட்டில் கொண்டு வரப்பட்டு எல்லோருடைய கிளாஸிலும் பெரிய அளவு ஊற்றப்பட்டது.

சத்தா தன் பிரசங்கத்தைத் தொடங்கினான்: "லேடீஸ் அன்டு ஜென்டில் மேன், நீங்கள் எல்லோரும் எக்கேடு கெட்டு ஒழியுங்கள்... இங்கு மண்ட்டோ நம்மோடு இருக்கிறான்... இந்த மண்ட்டோ தன்னையே மிகச் சிறந்த சிறுகதை எழுத்தாளன் என்றும் மனித மனங்களை அறிந்து கொண்டவன் என்றும்... அவன்... அதை நாம் என்னவென்று சொல்வோம்... மனித மனத்தின் ஆழத்தில் பாய்ந்து... இதெல்லாம் அபத்தம்... எல்

லாம் அபத்தம்... முழுமையான குப்பை... இவனைக் காட்டிலும் கிணற்றில் குதிப்பவர்கள் மேலானவர்கள்... இங்கு உருது எழுத்துக்களைச் சரியாக உச்சரிக்கக் கூடத் தெரியாத 'ஹைதராபாதி' இருக்கிறான். அவனை ஒருத்தன் பல வருடங்கள் கழித்துச் சந்தித்தாலும் கூட நேற்றுதான் சந்தித்தது போல் சொல்லக் கூடிய வன் அவன்... இலட்சக்கணக்கான தங்கக்கட்டிகளும், கோடானுகோடி நகைகளும் ஹைதராபாத் நிஜாமிடம் இருக்கலாம். ஆனால் அவனிடம் மம்மியைப் போல் யாரும் கிடையாது, ஆமாம்... கிணற்றில் குதிப்பவர்களே மேலானவர்கள்; மனிதனின் ஆன்மாவிற்குள் ஆழ மாய்க் குதித்து ஆராய்கிறேன் என்று சொல்லும் இந்த மண்ட்டோவைக் காட்டிலும் அவர்கள் மேலானவர்கள்... ஏமாற்று வேலை வேறு எதுவும் இல்லை... சுத்த மான ஏமாற்று வேலை... பஞ்சாபியில் டோப்பாஸ் என்று கிணற்றின் ஆழத்தில் குதிப்பவர்களைச் சொல்வோம்... அவர்கள் மனித மனத்தை மண்ட்டோவைக் காட்டிலும் சிறப்பாகப் புரிந்து கொண்டு இருப்பவர்கள்..."

'சத்தா ஜிந்தாபாத்' என்று எல்லோரும் கத்தினார்கள்.

அவன் தன் கண்களைச் சிமிட்டி, "இது மண்ட் டோவால் தீட்டப்பட்ட சதி. நான் விரோதம் என்ற மந்திரத்தை ஹிட்லரைப் போல பிரசங்கம் செய்யவே விரும்புகிறேன்... நீங்கள் எல்லோரும் மரணம் வேண் டும் என்று கோஷம் எழுப்ப வேண்டும்... ஆனால் நீங் கள் எல்லோரும் ஏற்கனவே செத்துதான் கிடக்கிறீர் கள்..." மிகவும் உணர்ச்சிவசப்பட்ட நிலையில் இருந்த சத்தா தன் பேச்சைத் தொடர்ந்தான், "...அன்று இரவு பாம்பின் செதில்கள் போன்ற நிறத்தில் தலைமுடியைக் கொண்டிருந்த அந்தப் பெண்ணிற்காக நான் என் மம் மியை எரிச்சலடையச் செய்தேன்... நான் என்னை எப்படிப்பட்ட டான்ஜுவானாக நினைத்துக்கொண்டேன் என்று எனக்கே தெரியவில்லை ஆனாலும்... இல்லை...

அவளை அடைவது சிரமமே இல்லை. என் இள மையின் மீது ஆணையாகச் சொல்கிறேன், அவள் உதட்டில் நான் கொடுக்கும் ஒரு முத்தத்தில் அவளு டைய கற்பை எல்லாம் உறிஞ்சி எடுத்திருக்க முடி யும்... ஆனால் அப்படிச் செய்வது அயோக்கியத்தனம். அவள் மிகவும் சின்னப்பெண்... பலவீனமான சின்னப் பெண், இன்னும் அவளுக்கென்று ஒரு நிலை இன்னும் உருவாகவில்லை..." அவன் கண்களில் கேள்வியோடு என்னைப் பார்த்தான். "என்னிடம் சொல்லு நண்பா, நடத்தை கெட்டவனுக்கு உருதுவில், பாரசீக மொழியில் அரேபிய மொழியில், என்ன வார்த்தை என்று... லேடீஸ் அன்டு ஜென்டில் மென்... அவள் மிகவும் சிறியவளாக வும், பலவீனமானவளாகவும் இன்னும் பக்குவப்படாதவ ளாகவும் இருந்தாள். அந்த ஓர் இரவு என்னோடு கழிக் கப்பட்டிருந்தால் ஒன்று அவள் வாழ்நாள் முழுக்க அதை நினைத்து வருத்தப்பட்டிருப்பாள் அல்லது அடுத்த நாளே அதை மறந்து போயிருப்பாள்... மம்மி அன்று இரவு என்னை வெளியே விட்டெறிந்ததற்கு நான் சந்தோஷப் படுகிறேன்... லேடீஸ் அன்டு ஜென்டில் மென் நான் என் பேச்சை முடித்துக்கொள்கிறேன். நான் நிறையப் பேச வேண்டும் என்றிருந்தேன். ஆனால் என்னால் முடிய வில்லை... நான் இப்போது குடித்தாக வேண்டும்".

சத்தா மற்றொரு சுற்றுக் குடித்தான். அவன் உளறிக் கொண்டிருந்தபோது எல்லோரும் அமைதியாக இருந் தார்கள். அதற்குப் பிறகும் எல்லோரும் அமைதியாகவே இருந்தார்கள். மம்மி எதைப்பற்றி சிந்தித்துக் கொண்டி ருக்கிறார் என்று கடவுளுக்குத்தான் தெரியும். அவரின் அழுத்தமான ஒப்பனைகளுக்கு அடியில் கிடந்த அந்தச் சுருக்கங்கள் ஏதோ தீவிரச் சிந்தனைகளில் தன்னை மூழ்கடித்துக்கொண்டிருந்தன. அவனின் பேச்சுக்குப் பிறகு, சத்தா வெறுமையானது போலக் காணப்பட்டான். ஏதோ ஒரு பத்திரமான மூளையைத் தேடிக்கொண்

டிருப்பது போலவும் அங்கு அவன் மறக்க விரும்பாத ஒன்றை மறைத்து வைக்க விரும்புவது போலவும் அங் கும் இங்கும் நடந்து கொண்டேயிருந்தான். நான் ஒரு முறை அவனிடம், "என்ன விஷயம் சத்தா?" என்று கேட்டேன். அவன் சிரித்துக்கொண்டே, "ஒண்ணும் இல்லை... இன்று இந்த விஸ்கி என் உணர்வுகளில் சரி யாக உட்கார மறுக்கிறது" என்றான். அவனின் சிரிப்பு வெற்றாய்க் கிடந்தது.

தெல்மா எழுந்து கொண்டு தனக்கு அருகில் உட் கார்ந்து கொள்ளுமாறு வெங்குத்ரி செய்தான். அவர்க ளின் பேச்சு இசையமைப்பாளர் சென் பக்கம் திரும்பி யது. அவன், "அந்த சென் ஒரு மூன்றாம் தர மனிதன். அவன் கான் சாஹிப் அப்துல் கரீம் கானின் சிஷ்யன் என்று பெருமைப்பட்டுக் கொள்வான். அதெல்லாம் பொய், பச்சைப் பொய். அவன் யாராவது வங்காளி காமத்தரகனின் சிஷ்யனாக இருந்திருக்க வேண்டும்" என்றான்.

அப்போது, கடிகாரம் இரண்டு முறை அடித்தது. கிட்டி யுடன் நடனமாடிக்கொண்டிருந்ததை நிறுத்தி, அவளை ஓரமாகத் தள்ளி விட்ட பிறகு வெங்குத்ரியிடம், "அந் தக் கேவலமான பேச்சை நிறுத்து. இப்போது ஏதா வது பாடு. ஆனால் அது சாஸ்திரிய சங்கீதங்களில் ஒன்றாக இருக்கக் கூடாது" என்று சொன்னான். வெங் குத்ரி பாடத் தொடங்கினான். இரண்டு மூன்று சினிமாப் பாடல்களை மல்குவான்ஸ் ராகத்தில் ஒன்றன் பின் ஒன் றாகப் பாடினான். அது சூழ்நிலையை மேலும் சோகம் கொள்ள வைத்தது. மம்மியும் சத்தாவும் ஒருவரை ஒரு வர் அவ்வப்போது பார்த்துக் கொள்வதும், கண்ணை அகற்றுவதுமாக இருந்தார்கள். காரீப் நவாஸ் அவ்வ ளவு பாதிக்கப்பட்டுக் கிடந்தான் - அவன் கண்களிலி ருந்து கண்ணீர் வழிந்தது. சத்தா சிரித்துக்கொண்டே, "இந்த 'ஹைதராபாதி'களுக்குள் மிகவும் மென்மையான

கண்ணீர்க் குழாய் இருக்கிறது. காரணம் இருந்தோ, இல்லாமலேயோ, அதிலிருந்து கண்ணீர் கொட்டத் தொடங்கிவிடும்" என்றான். காரீப் நவாஸ் தன் கண் களைத் துடைத்துக் கொண்டு எல்மாவோடு நடனமா டத் தொடங்கினான். சத்தா மீண்டும் மம்மியைத் தன் கரங்களால் அணைத்துக்கொண்டு சுற்றிலும் குதிக் கத் தொடங்கினான். திருமண நிகழ்ச்சிகளில் பாட்டுப் பாடும் பெண்கள் தொடர்ந்து பாடுவதால் தொண்டை பாதிக்கப்படுவது போல, சத்தாவின் குரல் கரகரக்கத் தொடங்கியது.

இந்தச் சத்தமும் குதிப்பதும் நான்கு மணி வரை தொடர்ந்தது. மம்மி, "இந்தப் பார்ட்டி முடிவுக்கு வர வேண்டும்" என்றார் சத்தாவிடம். சத்தா பாட்டிலைத் தன் வாயில் வைத்து, அதில் மிச்சமிருந்ததைக் காலி செய்து விட்டெறிந்தான். என் பக்கம் திரும்பி, "வா மண்ட்டோ கிளம்பலாம்" என்றான். அவனின் கண் ணீர்க் குழாய் கூட மென்மையானதாகத்தான் இருந்தது. நான் மம்மியிடம், "போய் வருகிறேன்" என்று சொல்ல எத்தனித்த போது, சத்தா என்னைப் பிடித்து, "இன்று இரவு யாரும் போய் வருகிறேன் என்று சொல்லப் போவ தில்லை" என்றான். நாங்கள் வெளியே வந்தவுடன், வெங்குத்ரி அழுகின்ற சத்தம் கேட்டது. நான் உள்ளே போக முயன்றபோது சத்தா என்னைத் தடுத்து, "அவனி டமும் மென்மையான கண்ணீர்க் குழாய் தான் இருக்கி றது" என்றான்.

சயிதா காட்டேஜ் சில நிமிடங்களில் நடந்து போகும் தூரத்தில்தான் இருந்தது. வழியில் நாங்கள் ஏதும் பேசிக்கொள்ளவில்லை. படுக்கப் போகும் முன், இந்த விசித்திரமான பார்ட்டி பற்றிக் கேட்டேன். தூக்கக் கலக் கத்தில் இருப்பதாகவும், படுக்கப் போக வேண்டும் என் றும் சத்தா சொன்னான்.

காலையில் எழுந்த உடன் நான் குளிக்கச் சென்றேன். நான் திரும்பி வந்த போது, காரீப் நவாஸ் கார் கொட்ட கையின் கோணித் திரைக்கு அருகில் நின்றுகொண்டி ருந்தான். அவன் அழுது கொண்டிருந்தான். என்னைப் பார்த்தவுடன் அவன் முகத்தைத் திருப்பிக்கொண்டு, தன் கண்களைத் துடைத்து விட்டுக் கொண்டான். கார ணத்தை விசாரிக்க நான் அவனை நோக்கிச் சென் றேன். "மம்மி போயாச்சு" என்றான். "எங்கு?" என்று கேட் டேன். "தெரியாது". காரீப் நவாஸ் பதில் சொல்லிவிட்டுத் தெருப்பக்கம் முகத்தைத் திருப்பிக்கொண்டான்.

சத்தா கட்டிலில் படுத்துக் கிடந்தான். இரவு முழுக்க ஒரு கணப்பொழுதும் அவன் தூங்கவில்லை என் பது போல் காணப்பட்டான். நான் மம்மியைப் பற் றிக் கேட்டவுடன், அவன் சிரித்து, "அவர் போயாயிற்று, அவர் காலை இரயிலில் புனேவை விட்டுப் போயாக வேண்டும்" என்று சொன்னான். "ஏன்?" என்று கேட் டேன். சத்தாவின் குரல், எரிச்சலைக் கொண்டிருந்தது. "இந்த அரசாங்கம் அவரின் நடத்தையை அங்கீகரிக்க வில்லை. அவர் கொடுத்த பார்ட்டி எல்லாம் கண்டனத் திற்கு உரியது என்று அவர்கள் நினைத்தார்கள். இந்தப் போலீஸ் அவரை அவர்களின் கைக்கூலியாய்த், தரக ராய்ப், பெண்களை ஏற்பாடு செய்து தருபவராய் உப யோகப்படுத்த நினைத்தார்கள். அதில் அவர்கள் வெற் றியைக் காணாத போது, அவர் மீது ஒரு பொய் வழக்கை ஜோடித்தார்கள். போலீஸ் அறிக்கையின் பெயரில், இந்த அரசாங்கம் அவர் புனேவை விட்டு வெளியேற வேண்டும் என்று உத்தரவிட்டுள்ளது". அவன் மேலும் தொடர்ந்தான். "அவர் பெண்களைக் கூட்டிக்கொடுப்ப வர் என்றும், பைத்தியக்காரப் பெண்மணி என்றும் அவ ரின் இருப்பே இந்தச் சமூகத்திற்கு ஆபத்தானது என்றும் நினைத்தால் அவரை ஒழித்துக் கட்டியிருக்க வேண் டும். குப்பையை, வேறோர் இடத்திற்குத் தூக்கிப் போடு

வது அர்த்தமில்லாதது" அவன் சிரித்தான். கசப்பான உயிரற்றச் சிரிப்பு. பிறகு ரொம்பவும் உணர்ச்சிவசப்பட்ட நிலையில் அவன், "நான் எதற்காக வருந்துகிறேன் என்றால், மண்ட்டோ இந்தச் சுத்தப்படுத்தலின் விளைவாக, நம்மிடையே இருந்த மிகச் சிறந்த ஒரு பெண்மணியை நம்மிடமிருந்து பறித்துவிட்டார்கள். மன்னிக்க முடியாத குற்றத்தைச் செய்வதிலிருந்து, என்னைக் காப்பாற்றிய அந்தப் பெண்மணியை... ஆனால் நான் ஏன் இதற்கு வருத்தப்பட வேண்டும்... அவர் எங்கு சென்றாலும் நான் இருந்தது போல என் நிலையில் உள்ள ஆண்களை அவர் நிச்சயம் எதிர்கொள்வார். என்னைச் சுத்தப்படுத்தியது போலவே, அவர்களையும் சுத்தப்படுத்துவார். நான் என் மம்மியை அத்தகைய மனிதர்களிடம் ஒப்படைக்கிறேன்... மம்மி ஜிந்தாபாத்... ஜிந்தாபாத். வா நாம் போய் காரீப் நவாஸைப் பார்ப்போம். சோகத்தில் அவனையே கொன்று கொண்டிருப்பான். இந்த ஹைறதிராபாதிகளுக்குள் மென்மையான கண்ணீர்க்குழாய்கள் உண்டு. காரணம், இருந்தோ இல்லாமலேயோ அவை கொட்டத் தொடங்கிவிடும்" என்றான்.

நான் சத்தாவைப் பார்த்தேன். அவன் கண்களில், நதியில் பிணங்கள் மிதந்து கொண்டிருப்பது போல கண்ணீர் மிதந்து கொண்டிருந்தது.

***



## சஹாய்

"ஒரு லட்சம் இந்துக்களும் ஒரு லட்சம் முஸ்லிம்களும் இறந்து போனார்கள் என்று சொல்லாதீர்கள். இரண்டு லட்சம் மனிதர்கள் இறந்து போனார்கள் என்று சொல் லுங்கள். இரண்டு லட்சம் மனிதர்கள் மரணம் கொண் டதில் துயரம் கொள்வதற்கு ஏதுமில்லை. உண்மையில் துயரம் கொள்ள வைப்பது எதுவென்றால் கொல்லப் பட்டவர்களும் கொலை செய்தவர்களும் ஒரே வகை யைச் சேர்ந்தவர்கள் தான். ஒரு லட்சம் இந்துக்களைக் கொன்றதன் மூலம் இந்து மதத்தை ஒழித்து விட் டதாக இஸ்லாமியர்கள் நினைத்துக் கொண்டிருப்பார் கள். ஆனால் அந்த மதம் இன்னும் உயிரோடு இருக் கிறது. உயிரோடுதான் இருக்கும். அது போலவே ஒரு லட்சம் இஸ்லாமியர்களைக் கொன்றதன் மூலம் இஸ் லாம் மதத்தை ஒழித்து விட்டதாக இந்துக்கள் பெரும் மகிழ்ச்சியில் நடனமாடிக் கொண்டிருக்கலாம். ஆனால் உண்மை உங்களுக்கு முன்னால் இருக்கிறது. இஸ்லாம் மதத்தின் மீது ஒரு சின்ன சிராய்ப்பைக் கூட ஏற்படுத்த முடியவில்லை. துப்பாக்கிகளால் மதத்தை ஒழித்து விட லாம் என்று நினைப்பவர்கள் முட்டாள்கள். மஸாப், தீன், இமான், தர்மா, நம்பிக்கை - இவையெல்லாம் மனித னின் உடலில் இல்லை. ஆன்மாவில் இருக்கிறது. இவற் றைக் கொலைகாரர்களின் கத்திகளாலும், வாள்களா லும், தோட்டாக்களாலும் ஒழித்துக் கட்ட முடியாது".

மும்தாஜ் அன்று வழக்கத்திற்கு மாறாக மிக வும் உணர்ச்சிவசப்பட்ட நிலையில் இருந்தான். அவ னைக் கப்பலில் அனுப்பிவைக்க நாங்கள் மூவர் மட் டுமே வந்திருந்தோம். மீண்டும் எப்போது சந்திப்போம் என்ற கேள்விக்கு விடைதெரியாமல் எங்களை விட்டுப் பிரிந்து செல்கிறான். அவன் பாகிஸ்தான் நோக்கிப் புறப் பட்டு விட்டான் - பாகிஸ்தான் உருவாகும் என்று நாங்கள் கனவில் கூட நினைத்துப் பார்த்தது கிடையாது.

நாங்கள் மூவரும் இந்துக்கள். வடக்கு பஞ்சாபில் எங்களின் உறவினர்களின் பொருட்களும் உயிர்களும் சூறையாடப்பட்டு பெரும் நஷ்டத்தை எதிர் கொள்ள வேண்டியிருந்தது... ஜுகலுக்கு, லாகூர் மதக்கலவரத் தில் அவனின் மாமா கொல்லப்பட்டதாகக் கடிதம் வந் ததிலிருந்து துயரத்தில் பாதிக்கப்பட்டிருந்தான். அந்தத் துயரச் செய்தியின் தாக்குதல் இருந்தபோதே, மிகவும் சாதாரணமாக மும்தாஜிடம், "நம்முடைய பகுதியில் கல வரம் தோன்றினால் நான் என்ன செய்வேன் என்று எனக்குத் தெரியவில்லை" என்று சொல்லி இருக்கி றான்.

"சரி நீ என்ன செய்வாய்?" என்று மும்தாஜ் கேட்டான்.

"நான் உன்னையும் கொலை செய்யக்கக்கூடும்" என் றான் ஜுகல் அழுத்தமாக.

மும்தாஜ் அமைதியானான். மரணம் கொண்டது போல அமைதியானான். அவனின் இந்த மௌனம் எட்டு நாட் களுக்கு அவனோடு இருந்தது. அவன் கராச்சிக்கு கப் பல் மூலமாகப் கிளம்பிப் போவதாகவும், அதுவும் மதியம் மூன்றே முக்கால் மணிக்குக் கிளம்பிப்போவதாக அறி வித்த போதுதான் அவனின் மௌனம் கலைந்தது.

நாங்கள் மூவரும் அவனின் இந்த முடிவைப் பற்றி அவனிடம் ஏதும் பேசவில்லை. மும்தாஜ் கிளம்பிப் போவதற்கான காரணத்தை ஜுகல் முழுக்க உணர்ந் திருந்தான். 'நான் உன்னையும் கொலை செய்திருக்

கக்கூடும்' என்று அவன் சொன்னதுதான் காரணம். ஒரு வேளை தன்னுடைய உடன்பிறவா சகோதரனாக இருந்த மும்தாஜைக் கொலை செய்யும் அளவிற்குத் துணிச்சலைப் பெற்றிருக்க முடியுமா என்று அவன் சிந் தித்துக் கொண்டிருக்கலாம். இதனால் தான் எங்கள் மூவரில் ஜுகல் மட்டுமே மிகவும் அமைதியாக இருந் தான். ஆனால் மிகவும் விசித்திரமாகக் கிளம்புவதற்குச் சில மணிநேரங்களே இருந்த போது மும்தாஜ் நிறைய பேசிக்கொண்டே இருந்தான்.

அவன் காலையில் எழுந்து கொண்டது முதல் குடிக் கத் தொடங்கி விட்டான். ஏதோ விடுமுறைக்குப் போவது போல தன் பெட்டிகளைக் கட்டத் தொடங்கினான். அவன் ஏதோ சொல்ல ஆரம்பித்து, காரணமே இல்லா மல் சிரிக்கத்தொடங்கிவிடுவான். அறிமுகமில்லாதவர் யாரேனும் பார்த்திருந்தால் பம்பாயை விட்டுக் கிளம்புவ தற்குச் சந்தர்ப்பம் கிடைத்ததில் அவன் பெரும் மகிழ்ச்சி கொண்டிருக்கிறான் என்றே நினைத்துக் கொண்டிருக் கக் கூடும். ஆனால், தன்னையும் எங்களையும் ஏமாற்ற அவன் இதையெல்லாம் செய்து கொண்டிருக்கிறான் என்று எங்கள் மூவருக்கும் மிக நன்றாகத் தெரியும்.

இப்படித் திடீரென்று கிளம்பிப்போகும் அவனின் முடிவைப் பற்றி நிறையப் பேசவேண்டும் என்று நினைத் தேன். ஜுகல்தான் இந்த விசயத்தைத் தொடங்க வேண்டும் என்று அவனிடம் குறிப்பால் உணர்த்தி னேன். ஆனால் மும்தாஜ் எங்களுக்குச் சந்தர்ப்பம் ஏதும் கொடுக்கவில்லை.

மூன்று நான்கு சுற்று குடித்தவுடன், ஜுகல் மேலும் அமைதியாகி அடுத்த அறைக்குச் சென்று படுத் துக் கொண்டான். நானும் பிரிஜ் மோகனும் மும் தாஜுடன் இருந்தோம். அவன் நிறைய பண பாக் கிகளைக் கொடுக்க வேண்டியிருந்தது. டாக்டருக்குப் பணம் கொடுக்க வேண்டியிருந்தது. சலவைக்கடையி

லிருந்து துணிகளை வாங்கி வர வேண்டியிருந்தது. இதை எல்லாம் அவன் புன்னகைத்தபடியே செய்து கொண்டிருந்தான். ஆனால் ஹோட்டலுக்கு அடுத்தாற் போலிருந்த பெட்டிக்கடையில் வெற்றிலை வாங்கிய போது அவனால் கண்ணீரை அடக்கிக் கொள்ள முடி யவில்லை. கடையை விட்டுச் சற்று தூரம் கடந்த பிறகு பிரிஜ் மோகன் தோளில் கையைப் போட்டு, மிக மென் மையாக, "உனக்கு நினைவிருக்கிறதா பிரிஜ், பத்து வரு டங்களுக்கு முன் நம்மிடம் சல்லிக்காசு இல்லாதபோது கோவிந்த் ஒரு ரூபாயைக் கடனாகக் கொடுத்தான்" என்றான்.

பிறகு வீடு வந்து சேரும் வரை மும்தாஜ் அமைதி யாக இருந்தான். ஆனால் வீட்டிற்குத் திரும்பியவுடன் மீண்டும் தொணதொணவென்று உளறிக் கொண்டிருந் தான். அவன் பேசிய விஷயங்களுக்குத் தலையுமில்லை வாலுமில்லை. ஆனாலும் அவன் பேசியதெல்லாம் அவ் வளவு அன்யோன்யமாக இருந்ததால் நானும் பிரிஜும் அந்த உரையாடலில் கலந்து கொண்டோம். கிளம் பும் நேரம் வந்த போது ஜுகலும் சேர்ந்து கொண்டான். டாக்ஸி துறைமுகத்தை நோக்கி நகரத் தொடங்கிய போது, எங்கள் எல்லோரிடமும் பெரும் அமைதி நிலவி யது.

மும்தாஜின் கண்கள் பம்பாயின் மிகப்பெரிய செழிப் பான பஜார்களுக்கு விடை கொடுத்துக்கொண்டிருந் தன. டாக்ஸி போக வேண்டிய இடத்தை அடைந்தது. அங்குக் கூட்டம் அலை மோதிக் கொண்டிருந்தது. அக திகள் ஆயிரக்கணக்கில் போய்க் கொண்டிருந்தார்கள். அதில் வெகு சிலரே செல்வந்தர்களாக இருந்தார்கள். பெரும்பாலானோர் ஏழைகள். இவ்வளவு கூட்டம் இருந் தபோதிலும் மும்தாஜ் மட்டுமே போவது போலவும் - அதுவும் முன்பின் அறியாத ஏதோவோர் இடத்திற்கு எங் களை எல்லாம் விட்டு விட்டு, தன்னுடையது என்று ஏற்

றுக்கொண்ட ஓர் இடத்திற்குப் போகிறான் என்றாலும், அவன் அங்கும் அந்நியனாகவே தான் இருப்பான் என்று நினைத்தேன். இவையெல்லாம் என்னுடைய அனுமா னங்கள். மும்தாஜ் என்ன நினைத்துக் கொண்டிருக்கி றான் என்று எனக்குத் தெரியாது.

அவனுடைய பெட்டிகள் எல்லாம் கேபினுக்குள் எடுத்து வைக்கப்பட்ட பிறகு, மும்தாஜ் கப்பல் தளத்தில் ஒரு ஓரமாய் எங்களை அழைத்துச் சென்றான். அங்கி ருந்து கடலும் வானமும் சந்தித்துக்கொள்வதைக் காண முடிந்தது. இந்தக் காட்சியை மும்தாஜ் நீண்ட நேரம் பார்த்துக் கொண்டு நின்றான். பிறகு ஜுகலின் கையைப் பிடித்துத் தன்னுடைய கையோடு சேர்த்துக் கொண்டு, "இந்தத் தோற்றம் மாயை தான் - இந்தக் கடலும் வான மும் சந்தித்துக் கொள்வது. ஆனால் இந்த மாயைத் தோற்றத்தில்தான் எவ்வளவு அழகிருக்கிறது - அந்தச் சந்திப்பு!"

ஜுகல் அமைதியாக இருந்தான். ஒருவேளை அவன் மும்தாஜிடம் 'நான் உன்னைக் கொலை செய்திருக்கக் கூடும்' என்று சொன்னது அவனை இன்னும் குத்திக் கொண்டு இருக்கலாம்.

காலையில் இருந்து பிராந்தி குடித்துக்கொண்டிருப்ப தால் கப்பலில் இருந்த பாரில் பிராந்திக்குச் சொல்லி அனுப்பினான். கண்ணாடித் தம்ளரைப் பிடித்தபடி நாங் கள் நால்வரும் இரும்புக் கம்பி தடுப்புக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்தோம். அகதிகள் கூட்டம் கூட்ட மாய்க் கப்பலில் ஏறிக்கொண்டிருந்தார்கள். ஏறக்குறைய அமைதியாக இருந்த கடலில் பறவைகள் சிறகடித்துப் பறந்து கொண்டிருந்தன.

ஜுகல் தன்னுடைய சுற்றை ஒரே மடக்கில் குடித்து விட்டு மும்தாஜிடம் மிகவும் தடுமாற்றம் கொண்டு, "என் னை மன்னித்து விடு மும்தாஜ், அன்று நான் உன்னைக்

காயப்படுத்திவிட்டேன் என்று நினைக்கிறேன்" என்றான்.

மும்தாஜ் சற்று நேர மௌனத்திற்குப் பிறகு ஜுகலிடம், "அன்று நீ, 'நான் உன்னையும் கொலை செய்திருக்கக் கூடும்' என்று சொன்ன போது உண்மையில் நீ சொல்ல விரும்பியதைத்தான் உன் வார்த்தைகள் வெளிப்படுத்தியதா? நிதானமாய்ச் சிந்தித்துத்தான் நீ இந்த முடிவுக்கு வந்தாயா?" என்று கேட்டான். ஜுகல் ஆமோதிப்பது போல் தலையசைத்து, "ஆனால் நான் மிகவும் வருத்தப்படுகிறேன்" என்றான். "நீ என்னைக் கொலை செய்திருந்தால் இன்னும் மோசமாக வருத்தப்பட்டிருப்பாய்" என்றான் மும்தாஜ் ஏதோ தத்துவம் பேசுவது போல. "ஆனால் நீ இந்த விஷயத்தைப் பற்றி மிகக் கவனமாகச் சிந்தித்துப் பார்த்திருந்தால் ஒன்றை உணர்ந்திருப்பாய். நீ கொலை செய்தது உன்னுடைய நண்பன் மும்தாஜோ அல்லது ஒரு முஸ்லிம் மும்தாஜோ இல்லை. மும்தாஜ் என்ற மனிதனை. அவன் ஒரு பொறுக்கி என்றால்

நீ கொன்றது அந்தப் பொறுக்கித்தனத்தை இல்லை ஒரு மனிதனைத்தான். அவன் ஒரு முஸ்லிம் என்றால் நீ அவன் மதத்தைக் கொலை செய்யவில்லை. அவனைத்தான் அழித்திருக்கிறாய். அவனின் உயிரற்ற உடல் முஸ்லிம்கள் கையில் கிடைத்திருந்தால் சுடுகாட்டில் மேலும் ஒரு சமாதி உருவாகியிருக்கும். ஆனால் இந்த உலகம் ஒரு மனிதனை இழந்திருக்கும்"

குடிப்பதற்காகச் சற்று நேரம் நிறுத்தி மீண்டும் பேச்சைத் தொடர்ந்தான், "என்னுடைய மதத்தைச் சேர்ந்தவர்கள் என்னைத் தியாகி என்றுகூட சொல்லியிருக்கக் கூடும். ஆனால் கடவுள் மீது ஆணையாகச் சொல்கிறேன். முடிந்தால் என்னுடைய கல்லறையை உடைத்து வெளியே வந்து, 'எனக்கு இந்தக் கௌரவம் தேவையில்லை. நான் தேர்வு எதுவும் எழுதி தேர்ச்சி பெறாத இந்தப் பட்டம் எனக்கு அவசியமில்லை...' என்று கத்

தியிருக்கக் கூடும். சில முஸ்லிம்கள் உன்னுடைய மாமாவை லாகூரில் கொன்றார்கள். அந்தச் செய்தியை நீ பம்பாயில் தெரிந்து கொண்டு என்னைக் கொலை செய்கிறாய். சொல்லு, எத்தகைய மெடல்களுக்கு நீயும் நானும் தகுதியுடையவர்களாகிறோம். அப்புறம் லாகூரில் உன்னுடைய மாமாவும் அவரைக் கொலை செய்த முஸ் லிம்களும் எத்தகைய கௌரவங்களுக்குத் தகுதியுடை யவர்களாகிறார்கள். என்னால் இதைத்தான் சொல்ல முடியும் - செத்தவர்கள் நாய்போல செத்தார்கள். கொலை செய்கிறவர்கள் எந்தக் காரணமும் இல்லாமல் அப்பாவி மக்களின் இரத்தத்தைச் சிந்தியவர்கள் ஆகி றார்கள்."

மும்தாஜ் பேசிக்கொண்டிருக்கும் போது மிகவும் உணர்ச்சிவசப்பட்ட நிலையில் இருந்தான். ஆனா லும் பொங்கிய அந்த உணர்வுகள் அன்யோன்யமாக வும் நட்புணர்வோடும் இருந்தது. மதம் நம் பிக்கை எல்லாம் நம்முடைய உடலில் இல்லை. அதைக் கத்தி கொண்டோ, வாள் கொண்டோ, தோட்டாக்கள் கொண்டோ அழிக்க முடியாது என்று அவன் சொன்னது என்னை மிகவும் பாதித்தது. நான் அவனிடம், "நீ சொன் னது சரிதான் மும்தாஜ்?" என்று சொன்னேன்.

இதைக் கேட்டவுடன் தன்னுடைய சிந்தனைகளில் தன்னைத் தொலைத்து விட்டது போல மும்தாஜ் காணப்பட்டான். பிறகு சற்று படபடப்போடு, "இல்லை. அது சரியானது என்று நான் சொல்ல மாட்டேன். அதில் உண்மையிருக்கலாம் ஆனால் நான் சொல்ல விருப்பப் பட்டதைச் சரியாகச் சொல்லவில்லை என்றே நினைக் கிறேன். மதம் என்று நான் சொன்னது நம்மில் 93 சதவீ தம் பேர் அவதிப்பட்டுக்கொண்டிருக்கும் மதத்தை நான் சொல்லவில்லை. நான் அதை எப்படிப் புரிந்து கொண் டிருக்கிறேன் என்றால் இந்தப் பூமியில் உள்ள எல்லா உயிரினங்களிலும் மனிதனைப் பிரித்துக் காட்டக்கூடி

யதை - எது மனிதனை மனிதனாக்குகிறதோ அதா வது உண்மையான மனிதனாக்குகிறதோ, அதைத்தான் சொல்கிறேன். ஆனால் நான் அதை என் உள்ளங்கை யில் வைத்துச் சுற்றிலும் காட்ட முடியாது" என்றான்.

இதை அவன் சொன்னபோது, தன்னுள் எதையோ தேடிக் கொண்டிருப்பவன் போல, அவனின் கண்களில் ஒரு மின்னல் தோன்றி மறைந்தது. "அவனிடம் அப் படி என்ன விஷேசம் இருக்கிறது?" என்று கேட்டுவிட்டு, "அவன் மத நம்பிக்கைகள் கொண்ட ஓர் இந்து. அவ னின் தொழில் மிகக் கேவலமானது. இதை எல்லாம் மீறி அவனின் இதயம் எவ்வளவு நேர்மையானதாகவும் பரி சுத்தமானதாகவும் இருந்தது." என்றான்.

நான் கேட்டேன், "யாருடைய இதயம்?".

"ஒரு காமத் தரகனுடையது" என்று பதில் தந்தான். நாங்கள் மூவரும் மிகவும் ஆச்சர்யப்பட்டுப் போனோம். ஆனால் மும்தாஜ் இதைச் சொன்ன முறையில் எந் தப் போலித்தனமும் இல்லாமல் இருப்பதை உணர்ந்து, "பெண்களைக் கூட்டிக்கொடுப்பவனின் இதயமா?" என்று தீர்மானமாகக் கேட்டேன். மும்தாஜ் தலைய சைத்து, "அந்த மனிதனை நினைத்து நான் ஆச்சர்யப் படுகிறேன். அதுவும் இந்த உலகத்தின் கண்களுக்கு அவன் காமத் தரகன் - பெண்களைக் கூட்டிக்கொடுப் பவன் என்ற விஷயம் என்னை மேலும் ஆச்சரியப்பட வைக்கிறது. ஆனால் அவனின் இதயம் தங்கம் போல் இருந்தது" என்றான்.

தன்னுடைய பழைய நினைவுகளைத் தட்டி எழுப்ப நினைப்பது போல சற்றுநேரம் அமைதியாக இருந் தான். சில நிமிடங்கள் கழித்து அவன் மறுபடியும் பேசத் தொடங்கினான், "என்னால் அவனுடைய முழுப் பெயரையும் நினைவில் கொண்டுவர முடியவில்லை. ஆனால் அவன் ஏதோ ஒரு சஹாய். பனாரஸைச் சேர்ந்தவன். சுத்தமாய் இருப்பதில் குறியாய் இருந்தான்.

அவன் இருந்த இடம் மிகவும் சிறியதாக இருந்தது என்றாலும் அதை மிக அழகாகக் கட்டம் போட்டுப் பிரித்தது போல அமைத்திருந்தான். திரைச்சீலைகள் தொங்க விடுவதற்குப் போதுமான ஏற்பாடுகள் செய்தி ருந்தான். அங்கு கட்டில்களோ மெத்தைகளோ கிடை யாது. ஆனால் பாய்களும் தலையணைகளும் இருந் தன. படுக்கை விரிப்புகளும் தலையணை உறைகளும் மிகச் சுத்தமாக இருந்தன. அங்கு வேலைக்காரன் ஒரு வன் இருந்தான் என்றாலும் எல்லாவற்றையும் அவனே சுத்தம் செய்தான். சுத்தம் செய்வது மட்டுமல்ல; எல்லா வேலைகளையும் அவனே செய்து வந்தான். கடின மான சூழ்நிலையில் இருந்து எப்போதும் அவன் ஓடிப் போனதே கிடையாது. ஏமாற்றுவது என்பது அவனை மீறிய விஷயம். அது பின்னிரவாக இருந்து தண்ணீரோடு கலக்கப்பட்ட மதுதான் கிடைக்கும் என்று அவனுக்குத் தெரிந்திருந்தால், பணத்தை இது போன்ற மதுபானங்க ளில் செலவு செய்யக்கூடாது என்று வெளிப்படையாகச் சொல்லிவிடுவான். ஒரு பெண் பற்றி ஏதேனும் சந்தே கம் இருந்தால் அந்த விஷயத்தை மறைக்க மாட்டான். இதையெல்லாம் விட, இந்த மூன்று வருடங்களில் ஏறக் குறைய இருபதாயிரம் ரூபாய் சம்பாதித்து விட்டதாக வும் பொதுவாக வாடிக்கையாளரிடம் பேசும் பணத்தில் 25 சதவீதம் அவனின் பங்கு என்றும் என்னிடம் சொல் லியிருந்தான். மேலும் பத்தாயிரம் ரூபாய் எப்படியாவது சேர்த்துவிடவேண்டும் என்றும் சொல்லியிருந்தான். ஏன் பத்துக்கும் மேல் சேர்க்கக்கூடாதா என்று கேட்டதற்கு இந்த முப்பதாயிரம் ரூபாயைக் கொண்டு பனாரஸில் துணிக்கடை ஒன்று வைக்கப்போவதாகப் பதில் தந் தான். அவன் ஏன் துணிக்கடை வைப்பதில் குறியாக இருந்தான் என்று என்னால் சொல்ல முடியாது".

நான் இதைக் கேட்டவுடன் என்னால் தவிர்க்க முடி யாமல், "என்ன விசித்திரமான மனிதன்..." என்றேன்.

மும்தாஜ் தொடர்ந்தான், "அவன் சரியான ஏமாற்றுக் காரன் என்றும் ஏதோ நூல் சுற்றிக்கொண்டும் இருக் கிறான் என்றும் நினைத்தேன். வியாபாரத்தில் ஈடுபட்ட பெண்களின் எதிர்பார்ப்பை எல்லாம் மீறி ஒவ்வொருத் தியின் பெயரிலும் தபால் நிலையத்தில் ஒரு சேமிப் புக் கணக்கை உருவாக்கி, அதில் அவர்களின் பணத் தைப் போட்டு வந்தான் என்றால் யாரால் நம்ப முடியும்? அதே அளவிற்குப் பத்துப் பன்னிரெண்டு பெண்களுக்கு அவர்களின் அன்றாடச் செலவுகளுக்கு அவனே பணம் கொடுத்துக் கொண்டிருந்தான் என்பதும் நம்ப முடியா மல் தான் இருந்தது. அவனைக் குறித்த அனைத்துமே செயற்கைத்தனமாக இருப்பது போல் உணர்ந்தேன். ஒரு நாள் நான் அவனைப் பார்க்க சென்றிருந்தபோது அவன், "ஆமினாவும், ஷகினாவும் இன்று வெளியே போயிருக்கிறார்கள் ஒவ்வொரு வாரமும் ஒருநாள் நான் அவர்களை வெளியே போய் ஹோட்டலில் கறி சாப் பிட்டு வர அனுமதிக்கிறேன். உனக்குத்தான் தெரியுமே. இங்கு எல்லாம் சைவம்தான்" என்றான். நான் புன்ன கைத்து மற்றொரு பெரிய புருடாவை என்மீது விட்டெறி கிறான் என்று நினைத்துக் கொண்டேன். சில நாட்கள் கழித்து அகமதாபாத்தில் இருந்து வந்த பெண் ஒருத்தி, அவளின் வாடிக்கையாளன் ஒருவனைத் திருமணம் செய்து கொண்டதாகவும், லாகூரில் இருந்து கடிதம் எழு தியிருப்பதாகவும், அதில் அவளுக்காக அவள் செய்த பிரார்த்தனைகள் வேண்டியதைக் கொடுத்து விட்டதா கவும் இப்போது அவன் முப்பதாயிரம் ரூபாய் சேர்த்துக் கொண்டு பனாரஸில் துணிக்கடை வைப்பதற்காகப் பிரார்த்தனை செய்து கொண்டிருப்பதாகவும் எழுதியி ருப்பதாகச் சொன்னான். என்னால் சிரிப்பை அடக் கிக் கொள்ள முடியவில்லை. நான் முஸ்லிம் என்பதால் என்னைச் சந்தோஷப்படுத்த இப்படியெல்லாம் சொல் கிறான் என்று நினைத்துக் கொண்டேன்" என்றான்.

நான் மும்தாஜிடம், "நீ தவறாகப் புரிந்து கொண்டிருந் தாயா?" என்று கேட்டேன்.

"கண்டிப்பாக" என்று சொன்ன மும்தாஜ் மேலும் தொடர்ந்தான். "அவனின் வார்த்தைகளும் செயல்க ளும் எப்போதும் ஒன்றுபோல் இருந்தன. அவனிடம் குறைகள் இருந்திருக்கலாம். அவன் வாழ்க்கையில் பல தவறுகளும் செய்திருக்கலாம். ஆனால் அவன் மிக அரு மையான மனிதன்".

ஜுகல், "உனக்கு இது எப்படித் தெரியும்?" என்று கேட் டான்.

"அவனின் மரணத்தில்" என்று சொன்ன மும்தாஜ் சற் றுநேரம் மௌனமானான்.

பிறகு எங்கோ தொலைவில் கடலும் வானமும் ஒன் றோடு ஒன்று குழப்பங்களோடு அணைத்துக்கொண்டி ருப்பதைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டு நின்றான்.

"கலவரம் தொடங்கிவிட்டது. ஒரு நாள் விடியற்காலை யில் நான் பிண்டி பஜார் வழியாகப் போய்க்கொண்டிருந் தேன். ஊரடங்கு உத்தரவு அமுலில் இருந்ததால் போக் குவரத்து மிகக் குறைவாக இருந்தது. டிராம்களும் ஓட வில்லை. டாக்ஸி கிடைக்குமா என்று பார்த்துக் கொண்டே ஜே.ஜே. மருத்துவமனையை நெருங்கியவு டன் நடைபாதையில் மிகப்பெரிய கூடைக்குப் பக்கத் தில் யாரோ ஒருவன் தாறுமாறாய்க் கிடப்பதைப் பார்த் தேன். முதலில் ஒரு கூலித் தொழிலாளி படுத்துத் தூங் கிக் கொண்டிருக்கிறான் என்றுதான் நினைத்தேன். ஆனால் நடைபாதைக் கற்களில் இரத்தம் சிதறிக் கிடப் பதைப் பார்த்தவுடன் நின்றேன். கொலை செய்ய முயற் சிக்கப்பட்டிருக்கிறது. ஒருசில கணங்கள் நான் இதில் தலையிடக்கூடாது என்று நினைத்தேன். பிறகு அங்கு கிடந்த உடலில் இன்னும் உயிர் இருப்பதைக் கண் டேன். சுற்றிலும் யாரும் இல்லை. அது யார் என்று பார்க் கக் குனிந்தேன். அவன் வேறு யாரும் இல்லை, சஹாய்.

அவனின் முகத்தை நான் நன்கறிவேன். அவன் உடல் முழுக்க இரத்தம் தெறித்துக் கிடந்தது. நடைபாதையில் அவனுக்கு அருகில் அமர்ந்து கொண்டேன். அவன் அணிந்திருந்த, சாய்ந்த வரிகளைக் கொண்டிருப்பது போல் நெய்யப்பட்ட வெள்ளைச் சட்டை - அது எப்போ தும் துளி அழுக்கும் இல்லாமல் வெள்ளைவெளே ரென்று இருப்பது. அன்று இரத்தத்தால் நனைந்திருப்ப தைக் கண்டேன். காயம் அவனின் சிறுகுடல் பகுதியில் ஏற்பட்டிருக்க வேண்டும். வலியால் முனங்கிக்கொண்டி ருந்தான். நான் அவனின் தோள்பட்டையில் கைவைத் துத் தூங்கிக் கொண்டிருப்பவனை எழுப்புவது போல் மெல்ல உலுக்கிவிட்டேன். ஓரிருமுறை அவன் பெயரை யும் சொல்லி அழைத்தேன். எந்தப் பதிலும் இல்லை. நான் கிளம்ப இருந்தபோது அவன் கண்களைத் திறந் தான். சற்று நேரம் என்னை முறைத்துப் பார்த்தான். பிறகு திடீரென்று அவனின் உடலில் பெரும் நடுக்கம் தோன்றியது. என்னை அடையாளம் கண்டு கொண்டு, 'நீ, நீயா இங்கு' என்றான். நான் தொடர்ந்து பல கேள்வி களை அவனிடம் கேட்டேன் - இந்தப் பக்கம் எதற்காக வந்தாய், யார் அவனைத் தாக்கியது, எவ்வளவு நேரமாய் நடைபாதையில் விழுந்து கிடக்கிறாய், எதிரே இருக்கும் மருத்துவமனைக்குத் தகவல் சொல்லட்டுமா? அவனி டம் பதில் சொல்வதற்கான சக்தி இல்லை. அவன் சொன்னது இவ்வளவுதான்: 'எனக்கான நேரம் வந்து விட்டது. என் விதி இப்படித்தான் எழுதப்பட்டிருக்கிறது'. மிக மோசமாக வலியால் அவதிப்பட்டுக் கொண்டிருந் தான். அவனின் விதியைப் பற்றியெல்லாம் எனக்கு கொஞ்சமும் அக்கறை இல்லை. ஒரு முஸ்லிமான என் னால், எனக்குத் தெரிந்த ஒரு இந்து, முஸ்லிம்கள் பெரும்பாலானவர்களாக வசிக்கும் பகுதியில், ஒரு முஸ் லிமால் கொல்லப்பட்டு, அவனோடு இருந்த கடைசி மனிதனும் ஒரு முஸ்லீம் தான் என்ற எண்ணத்தோடு மர

ணம் கொள்வதை என்னால் ஏற்றுக் கொள்ள முடிய வில்லை. நான் கோழையில்லை. ஆனால் அந்த நேரத் தில் நான் ஒரு கோழையைவிட மோசமாக உணர்ந் தேன். ஒரு பக்கம் கொலை செய்ததற்காக நான் கைது செய்யப்படலாம் என்ற பயமும், மறுபக்கத்தில் நான் கைது செய்யப்படவில்லை என்றாலும் விசாரணைக் காக அழைத்துச் செல்லப்படலாம் என்ற பயமும் என்னை வாட்டியது. நான் அவனை மருத்துவமனைக்கு அழைத்துச் சென்றால் பழிவாங்குவதற்காக நான்தான் அவனைக் கொன்று விட்டேன் என்று சொல்ல வாய்ப் புண்டு என்று நினைத்தேன். இது போன்ற சிந்தனைகள் என்னுடைய மண்டைக்குள் முட்டிமோத நான் எழுந்து கிளம்பி விடலாமென்றிருந்தேன். இல்லை ஓடிப் போய் விட இருந்தேன். ஆனால் சஹாய் என்னை அழைப்ப தைக் கேட்டேன். நான் நின்றேன். உண்மை என்ன வென்றால் என்னையும் மீறி என் கால்கள் அவனை நோக்கி நகர மறுத்தன. நான் அவனைப் பார்த்த பார்வை யில், 'சீக்கிரம் சொல் நீ என்ன சொல்ல நினைக்கிறாய் என்று சொல், நான் போக வேண்டும்' என்று சொல்வது போல் இருந்திருக்கும். வலி மேலும் மோசமாகத் தாக்க அவன் தன் சட்டைப் பொத்தான்களை அவிழ்த்துக் கையைச் சட்டைக்கு உள்ளே விட முயன்றான். ஆனால் அதற்குமேல் செய்ய அவனிடம் சக்தியில்லை. அவன் என்னைப் பார்த்து, 'என் சட்டைக்குள்ளே சிறு பொட்ட லம் இருக்கிறது அதில் கொஞ்சம் நகைகளும் பன்னி ரெண்டாயிரம் ரூபாயும் இருக்கிறது. இவை யெல்லாம் சுல்தானாவுக்குச் சொந்தமானது... நான் இதை... நான் இதை என் நண்பனிடம் கொடுத்து வைத்திருந்தேன்... இன்று... இன்று நான் இதை அவளிடம் திருப்பிக் கொடுக்க இருந்தேன்... காரணம்... காரணம் நிலைமை இங்கு மோசமாகிக் கொண்டே இருந்தது... அபாயம் அதி கரித்துக்கொண்டே இருக்கிறது... தயவு செய்து இதை

அவளிடம் கொடுத்து விடுங்கள்... அப்புறம் உடனடியாக அவளைக் கிளம்பிப் போகச் சொல்லுங்கள்... அப்புறம் உங்களைப் பார்த்துக் கொள்ளுங்கள்..."

மும்தாஜ் அமைதியானான். எங்கோ மிகத் தொலைவில் கடலும் வானமும் சோகத்தோடு ஒன்றை ஒன்று தழுவிக்கொண்டிருக்கும் நிலையில், மும்தாஜின் குரல் ஜே.ஜே. மருத்துவமனை முன்னே நடைபாதையில் செத்துக்கொண்டிருக்கும் சஹாயின் வார்த்தைகளோடு ஒன்றெனக் கரைந்துகொண்டு இருப்பதுபோல் உணர்ந்தேன்.

கப்பல் கிளம்புவதற்கான விசில் ஊதப்பட்டது. "நான் சுல்தானாவைச் சந்தித்தேன். அந்தப் பணத்தை அவளிடம் கொடுத்தபோது அவள் அழுது விட்டாள்." என்றான் மும்தாஜ்.

மும்தாஜுக்கு விடைகொடுத்து நாங்கள் கீழே வந்தோம். அவன் கப்பல் தளத்தில் இரும்புக் கம்பிகளுக்குப் பின்னே நின்று கொண்டிருந்தான். அவன் தன்னுடைய வலது கையை அசைத்துக் கொண்டிருந்தான். நான் ஜுகலிடம், "பார்ப்பதற்கு மும்தாஜ் தன்னோடு பயணம் செய்ய சஹாயின் ஆன்மாவை அழைப்பது போல் இருக்கிறதில்லையா?" என்று கேட்டேன்.

ஜுகலால் இதை மட்டுமே சொல்ல முடிந்தது: "நான் சஹாயின் ஆன்மாவாக இருக்கவே விருப்பப்படுகிறேன்."

***



## கடைசி சல்யூட்

காஷ்மீர் யுத்தம் ஒரு விசித்திரமான யுத்தம்தான். சுபே தார் ரப் நவாஸ் சில சமயங்களில் பழுதடைந்த துப்பாக்கியின் குதிரையைப் போல் தன்னுடைய மூளை மாறி விட்டதாக உணர்ந்தான்.

முந்திய உலக யுத்தத்தில் அவன் பல முனைகளிலிருந்து போரிட்டுள்ளான். கொலை செய்வதும், கொலை செய்யப்படுவதும் - அவனுக்கு ஒன்றும் அந்நியமானது அல்ல. மேல் அதிகாரிகளும், அவனுக்குக் கீழ் உள்ளவர்களும் அவன் மீது பெரும் மரியாதை வைத்திருந்தார்கள். அவன் துணிச்சலானவன், பயம் அறியாதவன். புத்திசாலியானவன். படைப் பிரிவைச் சேர்ந்த கமாண்டர்கள் மிகவும் கடினமான வேலையைத்தான் அவனுக்குக் கொடுப்பார்கள் என்றாலும் அவன் எப்போதும் அவர்கள் ஏமாற்றம் கொள்ளும்படி செய்ததே கிடையாது. ஆனால் இந்த காஷ்மீர் யுத்தம் எல்லா விதத்திலும் வித்தியாசமான யுத்தம். எதிரி முகத்திற்கு நேராய் நிற்கும் போது, தெரிந்த மனிதர்களோடு மோத வேண்டியுள்ளது. சிலர் மிக நெருங்கிய நண்பர்கள். அவர்கள் தோளோடு தோள் உரசி முந்திய உலக யுத்தத்தில் போரிட்டு இருக்கிறான். இப்போது அதே மனிதர்கள் எதிரிகளாகி விட்டார்கள்.

முந்திய உலக யுத்தத்திற்கான அறிவிப்பு, ஆட்களைத் தேர்ந்தெடுக்கும் படலம், உயரம் மற்றும் மார் பளவை அளந்தெடுப்பது, உடற்பயிற்சி, குறிப்பார்த்துச்

சுடும் பயிற்சி, அடுத்து பாகிஸ்தான் உருவாக்கம், பிறகு காஷ்மீரில் யுத்தம். மிகக் குறுகிய காலத்தில் நிறை யவே அழுத்திவைக்கப்பட்டுவிட்டன. இவை எல்லாமே ரப் நவாஸுக்குக் கனவு போல் தோன்றின. மக்கள் எதையுமே புரிந்துகொள்ளவே கூடாது என்பதற்காகவே அவர்களைக் குழப்புவதுதான் இதற்கெல்லாம் குறிக் கோள் என்று நினைத்தான். இல்லை என்றால் இத்த கைய பெரிய நிகழ்வுகள் இத்தனை வேகமாக ஒன்றன் பின் ஒன்றாக நடப்பது எப்படித்தான் சாத்தியம்?

காஷ்மீரைத் தங்களுடையதாக ஆக்கிக் கொள்ள அவர்கள் போராடிக்கொண்டிருக்கிறார்கள் என்ற அள விற்கு ரப் நவாஸ் புரிந்து கொண்டான். காஷ்மீர் ஏன் கைப்பற்றப்பட வேண்டும் என்றும் அவன் புரிந்து கொண்டிருந்தான். அது பாகிஸ்தானின் இருப்புக்கு அவசியமானது. இருந்தாலும் பரிச்சயமான முகத்தை எதிரிகளிடையே பார்க்க வேண்டி நேர்ந்தபோதெல் லாம், எதற்காகச் சண்டையிட்டுக் கொண்டிருக்கி றோம் என்ற காரணத்தையும், இதுவரை நண்பர்களாக இருந்தவர்களுக்கு எதிராகத் துப்பாக்கியை உயர்த்த வேண்டிய நிர்ப்பந்தத்தையும் அவன் மறந்துபோனான். அவன் ஒன்றும் பதக்கங்களுக்காகவோ, நிலபுலன்க ளைப் பரிசாகப் பெறுவதற்காகவோ, ஊதிய உயர்வுக் காகவோ சண்டையிடவில்லை என்பதைத் தொடர்ந்து நினைவு படுத்திக் கொள்ள வேண்டியிருந்தது. இப் போது அவன் தாய்நாட்டிற்காகப் போரிட்டுக்கொண்டி ருக்கிறான். பாகிஸ்தான் உருவாவதற்கு முன்பும் இது தான் அவனுடைய நாடாக இருந்தது. இப்போதும் இது தான் அவனுடைய நாடாக உள்ளது. ஆனால் நேற் றுவரை அவனுடைய சொந்த நாட்டைச் சேர்ந்தவர்க ளாக இருந்தவர்களோடு அவன் போரிட வேண்டியுள் ளது - ஒரு சமயத்தில் அவன் வசித்து வந்த பகுதியில் வசித்தவர்களோடும், தலைமுறை தலை முறையாய்

அவனுடைய குடும்பத்தோடு தொடர்பு கொண்டிருந்த வர்களோடும். இந்த மனிதர்கள் இப்போது, முற்றிலும் அந்நியர்களாக இருக்கும் ஒரு நாட்டின் குடிமக்களாக மாறிவிட்டார்கள். அவர்களுடைய தோள்பட்டையில் துப்பாக்கி சுமத்தப்பட்டு பாகிஸ்தானோடு போரிடுமாறு சொல்லப்பட்டிருக்கிறார்கள். இந்த நிலப்பரப்பில்தான் அவர்களுடைய வாழ்க்கையின் பல வருடங்களைக் கழித்தவர்கள். அதுவும் இப்போது அவர்கள் முழுக்க முழுக்க அந்நியர்களாக இருக்கும் நாட்டிற்காகச் சண் டையிட வேண்டியுள்ளது. அங்கு அவர்களுடைய வீடு என்று இரண்டே இரண்டு செங்கல்கூட அவர்களால் வைக்கப்படவில்லை. வீசும் காற்றும் இன்னும் அவர் களுக்குப் பரிச்சயமாகவில்லை. குடிக்கும் தண்ணீரின் ருசிக்குத் தங்களை இன்னும் பழக்கப்படுத்திக் கொள் ளவில்லை.

ரப் நவாஸ் நினைப்பதுண்டு - தங்களுடைய இத யத்தையும் இல்லறத்தையும் இந்தியாவில் விட்டுவிட்டு வந்த ஒரு முசல்மான் சிப்பாய் இங்கு ஒன்றும் நல்ல நிலையில் இல்லை. அவர்களிடம் இருந்த அனைத்தும் பறிக்கப்பட்டுவிட்டன. பாகிஸ்தானுக்கு வந்து சேர்ந்தவு டன் அவர்களுக்குக் கிடைத்தது எல்லாம் ஒரு துப்பாக் கிதான். எப்போதும் அவர்கள் உபயோகப்படுத்தி வந்த அதே துப்பாக்கி. ஒரே கம்பெனியில் தயாரிக்கப்பட்டது, ஒரே எடை, ஒரே அளவு மற்றும் வடிவம் - ஆனால் புது எதிரியோடு போரிடுவதற்கு. முன்பெல்லாம் அவர்கள் ஒரு பொது எதிரியோடு போரிட்டார்கள். அவர்கள் உண் மையில் எதிரிகள் இல்லையென்றாலும் விருதுகள் கிடைக்கும் என்றும் வாழ்வதற்கான சம்பாத்தியத்தைக் கொடுக்கும் என்பதற்காகவும் அவர்களை எதிரிகளாக ஏற்றுக் கொண்டார்கள். இப்போது அவர்களுக்குள்ளா கவே அவர்கள் இரண்டு பிரிவுகளாகப் பிரிந்துவிட்டார் கள். முன்பு அவர்கள் எல்லோரும் இந்தியச் சிப்பாய்

களாக இருந்தார்கள். இப்போது சிலர் இந்தியச் சிப் பாய்கள். சிலர் பாகிஸ்தானியச் சிப்பாய்கள். ரப் நவாஸ் இதைப் பற்றியெல்லாம் சிந்தித்தபோது குழம்பித்தான் போனான். அதுவும் காஷ்மீர் பற்றி நினைக்கும் போது மேலும் குழம்பிப் போனான். பாகிஸ்தானியச் சிப்பாய்கள் காஷ்மீருக்காகப் போரிடுகிறார்களா அல்லது காஷ் மீர் முசல்மான்களுக்காகப் போரிடுகிறார்களா? காஷ்மீர் முசல்மான்களைக் காப்பாற்றத்தான் போரிடுகிறார்கள் என்றால், ஏன் அவர்கள் ஹைதராபாத் மற்றும் ஜுனாகட் முசல்மான்களுக்காகப் போரிடவில்லை. இது ஒரு இஸ் லாமிய யுத்தம்தான் என்றால் ஏன் உலகத்தில் உள்ள மற்ற இஸ்லாமிய நாடுகள் இந்த யுத்தத்தில் பங்கேற்க வில்லை?

ரப் நவாஸ் நிறைய சிந்தித்த பிறகு, ஒரு சிப்பாய் இதுபோன்ற பெரும் குழப்பங்களில் சிக்கிக்கொள்ளக் கூடாது என்ற முடிவுக்குத்தான் வந்தான். ஒரு சிப்பாய் மரத்துப்போன மூளையைக் கொண்டவனாக இருக்க வேண்டும்.

மூளையில்லாத மனிதன் மட்டுமே சிறந்த சிப்பாயாக இருக்க முடியும். அவன் இது போன்ற தீர்மானங்களுக்கு வந்தாலும், தவிர்க்க முடியாமல் இத்தகைய குழப்பங்க ளில் சிலசமயம் அகப்பட்டுக்கொள்ளத் தன்னை அனு மதித்துவிட்டு, பிறகு அவனுடைய இந்த முட்டாள்தனத் தைப் பார்த்து நகைத்துக்கொள்வான்.

கிருஷ்ணாகங்கா நதிக்கரையில், முசாராபாத்தில் இருந்து கிரனுக்குப் போகும் சாலையில் சிறிது கால மாகச் சண்டை நடந்துகொண்டிருந்தது. இது விசித்திர மான சண்டை. சில சமயங்களில் இரவு நேரங்களில் துப் பாக்கிச் சத்தங்களுக்குப் பதிலாகக் குன்றுகளைச் சுற்றி சரமாரியாக வசவுகள் எதிரொலித்தன.

ஒரு இரவு ரப் நவாஸ் தாக்குதல் நடத்துவதற்காக அவனுடைய படையைத் தயார் படுத்திக்கொண்டிருந்த

போது, பள்ளத்தாக்குக்குக் கீழே இருந்து இடைவி டாமல் வந்த வசவுகளைக் கேட்டான். தொடக்கத்தில் அவன் சற்று பயந்துதான் போனான். அவர்கள் உரக்கச் சிரிக்கத் தொடங்கினார்கள். அது ஓர் அரக்கன் நடனம் ஆடுவது போல இருந்தது. "பன்னிப்பயலுங்களா" என்று முணு முணுத்து, "அங்கு என்னதான் நடந்து கொண்டி ருக்கிறது?" என்றான்.

அவனுடைய படையைச் சேர்ந்த ஒருவன், உரத்த குர லில் பதில் வசவு கொடுத்துவிட்டு, ரப் நவாஸிடம், "பெத் தவளோடு படுத்தவங்க நம்மைத் திட்டுகிறானுங்க" என் றான்.

மிகவும் கோபத்தைத் தூண்டக்கூக்கூடிய அந்த வச வுகளை ரப் நவாஸ் கேட்டுக்கொண்டிருந்தான். அவ னும் அவர்களோடு சேர்ந்து கொள்ள நினைத்தாலும் அடுத்தக் கணத்தில் அந்தச் சிந்தனையை ஒதுக்கித் தள்ளினான். அவனுடைய ஆட்களும் அமைதியானார் கள். இருந்தாலும், கொஞ்சநேரம் கழித்து வசவுகள் தாளமுடியாத அளவுக்குப் போகப் போக அவனுடைய ஆட்கள் நிதானத்தை இழந்து வசவுக்கேற்ற வசவு என்று தொடங்கினார்கள். இது போன்ற யுத்த முறைக்கு ரப் நவாஸ் முற்றிலும் பழக்கமில்லாதவன். ஓரிருமுறை அவ ருடைய ஆட்களை அமைதியாக இருக்கும்படிக் கேட் டுக்கொண்டான். ஆனால் வசவுகள் மிகவும் கொச்சை யாக இருந்ததால் அதற்குப் பதில் கொடுக்காமல் இருப் பது என்பது ஏறக்குறைய இயலாத காரியமாக இருந்தது.

எதிரிகள் கண்ணுக்குத் தெரியவில்லை - இரவில் மட் டுமல்ல, பகலிலும் கூட. குன்றின் அடிவாரத்தில் இருந்து மேலேழுந்து வந்த வசவுகள் பாறைகளோடு மோதி காற் றில் காணாமல் போனது. ரப் நவாஸின் ஆட்கள் பதில் தாக்குதல் தொடுத்த போது, அந்த வசவுகள் அடிவா ரத்தை அடையாமல் மேலெழுந்து எங்கோ காணாமல் போயின. இது ரப் நவாஸை மிகவும் எரிச்சல் கொள்ள

வைத்தது. இதனால் உச்சக்கட்ட ஏமாற்றத்தில் இருந்த ஒரே காரணத்திற்காக எதிரியைத் தாக்குவதற்கு உத்தர விட்டான்.

ரப் நவாஸ் இந்தக் குன்றுகளில் ஒரு விசித்திரத்தன் மையைக் கண்டான். சில குன்றுகளின் உச்சி நல்ல அடர்த்தியான மரங்களால் நிரம்பியிருக்கும். ஆனால் சரிவுகள் தரிசாய் இருக்கும். அதாவது ஒரு காஷ்மீரியின் வழுக்கைத் தலையைப் போன்று. சில மேலே தரிசாய் இருக்கும், ஆனால் சரிவுகள் வழுக்கக்கூடியதால் உய ரமான, நிறைய இலைகளைக் கொண்ட பைன் மரங்க ளால் நிரம்பியிருக்கும்.

ரப் நவாஸின் படை ஆக்கிரமித்திருந்த குன்றின் சரி வுகள், மரங்கள் அற்றவையாக இருந்தன. அதனால் தாக்குதல் நடத்துவது என்பது மிகவும் அபாயகரமான திட்டமாகத்தான் இருக்கும். ஆனாலும் அவனுடைய ஆட்கள் வசவுகளுக்குப் பழிவாங்க தாக்க வேண்டும் என்று துடித்துக்கொண்டிருந்தார்கள்.

தாக்குதல் வெற்றிகரமாக நடந்து முடிந்தது. உயிர் இழந்தவர்கள் இரண்டே இரண்டு பேர்தான். நான்கு பேர் காயமுற்றார்கள். எதிரிகள் மூன்று ஆட்களை இழந்தார் கள். மற்றவர்கள் அவர்களுடைய பொருட்கள் எல்லா வற்றையும் அப்படியே போட்டு விட்டுப் பின்வாங்கினார் கள்.

சுபேதார் ரப் நவாஸ் மற்றும் அவனுடைய ஆட்க ளுக்கு, இந்த வசவுகளுக்குப் பதிலாக முகத்தைப் பார்த் துப் பழிவாங்கும் விதமாக ஒரே ஒரு எதிரி சிப்பாய் கூட இவர்களிடம் அகப்பட்டுக் கொள்ளாதது பெரும் வருத் தத்தைக் கொடுத்தது. ஆனாலும் இந்தத் தாக்குதல் மிக முக்கியமான குன்றைக் கைப்பற்றுவதைச் சாத்தியப் படுத்தியது. ரப் நவாஸ் உடனடியாக அவனுடைய படை யின் கமாண்டர், மேஜர் அஸ்லாமுக்கு இந்த வெற்றி

யைத் தெரிவித்து விட்டு, அவனுடைய முயற்சிகளுக்கா கச் சரியான பாராட்டுதல்களைப் பெற்றான்.

பொதுவாகவே ஒவ்வொரு குன்றின் உச்சியிலும் முழுக்க நீர் நிரம்பிய ஒரு குட்டை இருக்கும். இந்தக் குன்றிலும் ஒரு குட்டை இருந்தது. இது மற்ற குன்று களில் காணப்படும் குட்டையைக் காட்டிலும் பெரிதாக இருந்ததோடு பளிங்குபோல் தண்ணீரையும் கொண்டி ருந்தது. மிகவும் குளிராக இருந்தாலும், எல்லோரும் அதில் குளித்தார்கள். அவர்களுடைய பற்கள் எல்லாம் தொடர்ந்து அடித்துக்கொண்டாலும், அதைப் பற்றிக் கவலைப்படாமல் தொடர்ந்து குளித்தார்கள். அவர்களு டைய இந்தச் சடங்குகளில் மும்முரமாக இருந்தபோது துப்பாக்கி வெடிச் சத்தத்தைக் கேட்டார்கள். வெளியே வந்து நிர்வாணமாய் தரையில் படுத்தார்கள். சற்று நேரம் கழித்து சுபேதார் ரப் நவாஸ் அவனுடைய பைனாகு லரை எடுத்து பள்ளத்தாக்குக்குக் கீழே நோட்டமிட் டான். எதிரிகள் எங்கு மறைந்திருக்கிறார்கள் என்று அவனால் கண்டுபிடிக்க முடியவில்லை. அப்போது மேலும் ஒரு சுற்று சுடப்பட்டது. சரிவுகளுக்குக் கீழே தொலைவில், ஒரு குன்றின் அடிவாரத்திலிருந்து புகை கிளம்பி மேலேழுந்து வருவதைப் பார்த்தான். உடனடி யாகச் சுடுவதற்கு உத்தரவிட்டான்.

இரண்டு பக்கங்களில் இருந்தும் கனமான துப் பாக்கிச்சூடு தொடங்கியது. ரப் நவாஸ் பைனாகுலர் ஊடாக மிகக் கவனமாக எதிரியின் நிலையை மதிப் பீடு செய்தான். அவர்கள் மிக நீண்ட பாறைச்சுவருக்குப் பின் இருந்தார்கள். அந்தத் தற்காப்புச் சுவரின் உயரம் அதிகம் ஒன்றும் இல்லை. அதனால் அங்கு நீண்ட காலம் நிலைத்திருப்பார்கள் என்று எதிர்பார்க்க வேண் டியதில்லை. ஒரு சிறு அசைவு செய்வது யாராக இருந் தாலும் ரப் நவாஸின் குறிக்குப் பலியாகப்போவது என் னவோ நிச்சயம். சுடுவது சற்று நேரத்திற்குத் தொடர்ந்து

கொண்டிருந்தது. பிறகு ரப் நவாஸ் தன்னுடைய ஆட்க ளிடம் தோட்டாக்களை வீணடிக்க வேண்டாம் என்றும், ஆனால் அந்த மறைவிடத்திலிருந்து யார் வெளியே வர முயன்றாலும் சுட்டுத்தள்ளுமாறு கேட்டுக்கொண்டான். அவனுடைய நிர்வாண உடலைப் பார்த்து, "பன்னிப்பய" என்று முணுமுணுத்து, "ஆடைகள் இல்லாமல் மனிதன் அற்பத்தனமாய்த்தான் இருக்கிறான்" என்றான்.

இடைவெளி விட்டு விட்டு எதிரிகள் ஓரிருமுறை என்று சுட்டுக் கொண்டிருந்தார்கள். எப்போதாவது ஒரு முறை என்று ரப் நவாஸ் ஆட்கள் பதிலுக்குச் சுட் டார்கள். இந்த விளையாட்டு இரண்டு நாட்களுக்குத் தொடர்ந்தது. வானிலை திடீரென்று ரொம்பவும் குளிர்ச் சியானது - அதாவது பகல் நேரத்திலேயே ரத்தத்தை உறைய வைக்கும் அளவிற்குக் குளிர்ச்சியானது. சுபே தார் ரப் நவாஸ் பல முறை டீ கொடுக்குமாறு கட்ட ளையிட்டான். இதனால் கெட்டில் எந்நேரமும் கொதித் துக்கொண்டிருந்தது. குளிர் தாங்க முடியாத அள விற்கு இருந்ததால், அதிலிருந்து தப்பிக்கச் சூடான டீ தேவைப்பட்டது. எதிரிகளைத் தொடர்ந்து பைனாகுலர் ஊடாக வரிசை முறையில் கண்காணித்து வந்தார்கள்.

எலும்புகளை நடுங்க வைக்கும் குளிர்க் காற்று வீசிக் கொண்டிருந்தது. அப்போது பாறைகளுக்குப் பின்னால் ஏதோ நடந்து கொண்டிருக்கிறது என்று கண்காணிப் புப் பணியில் இருந்த சிப்பாய் சொன்னான். சுபேதார் ரப் நவாஸ் அவனிடமிருந்த பைனாக்குலரை வாங்கி, அதன் ஊடாக மிகக் கவனமாகப் பார்த்தான். அவனால் எந்த அசைவுகளையும் பார்க்க முடியவில்லை. ஆனால் திடீரென்று மிகச் சத்தமான குரல் ஒன்று கேட்டது. ரப் நவாஸால் அதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. அவன் துப்பாக்கியை உயர்த்திச் சுட்டான். துப்பாக்கி வெடிச்சத்தம் அடங்கிய அந்தக் கணத்தில், மற்றொரு முறை சத்தமான குரல் வந்தது. யாரோ அவனுடைய

பெயரைச் சொல்லி அழைத்தார்கள் அல்லது அப்படித் தான் அவன் நினைத்தான். ரப் நவாஸ் எதிர்த்துக் கத்தி னான், "பன்னிப்பயலே, உனக்கு என்ன வேண்டும்?"

படைகள் ஒன்றிலிருந்து மற்றொன்று தொலைவில் ஒன்றும் இல்லை. ரப் நவாஸின் வார்த்தைகள் எதிரி யைச் சென்றடைந்திருக்க வேண்டும். அதனால் பதில் வந்தது. "சகோதரனே, திட்டாதே", ரப் நவாஸ் தன் ஆட்களைப் பார்த்துக் குழப்பமும் ஆச்சர்யமும் கலந்த குரலில், "சகோதரனா?" என்றான். பிறகு அவனுடைய இரண்டு கைகளையும் வாய்க்கு அருகில் குவித்து வைத்து, "சகோதரன்... இங்கு யாரும் சகோதரர் கள் கிடையாது. உன்னைப் பெற்றவளோடு படுப்பவர் கள் மட்டுமே உண்டு" என்று கத்தினான். உடனடியாக எதிர்ப்பக்கத்தில் இருந்து ஒரு குரல் உயர்ந்தது. "ரப் நவாஸ்". ரப் நவாஸின் ஊடாக ஒரு நடுக்கம் பாய்ந்து ஓடியது. அந்த வார்த்தை குன்றுகளில் எதிரொலித் துக் குருதியை உறைய வைக்கும் காற்றில் கரைந்து போனது.

நீண்ட நேரத்திற்குப் பிறகுதான் ரப் நவாஸ் தன் நிதா னத்தைத் திரும்பப் பெற்றான். "அது யாராக இருக்கும்?" "பன்னிப்பய" என்று மறுபடியும் முணுமுணுத்தான். டிட் வால்படையைச் சேர்ந்த பெரும்பாலான சிப்பாய்கள் 6/9 ரெஜிமெண்ட்டை, அதாவது அவனுடைய ரெஜிமென் டைச் சேர்ந்தவர்கள்தான் என்று அவனுக்குத் தெரியும். சிலபேர் மீது தனிப்பட்ட காரணங்களுக்காக விரோதம் கொண்டிருந்தாலும், பலர் அவனுக்கு நெருங்கிய நண் பர்களாகத்தான் இருந்தார்கள். ஆனால் அவனுடைய வசவுக்குப் பதிலாக அவனை உரக்க அழைத்தவன் யாராக இருக்கும்?

ரப் நவாஸ் பைனாகுலர் ஊடாகப் பார்த்தான். ஆனால் குன்றுக்குக் கீழே எவரையும் காண முடியவில்லை. அவனுடைய கைகளை வாய்க்கு அருகில் குவித்து மறு

படியும் கத்தினான். "என்னுடைய பெயரைச் சொல்லி அழைத்தவன் யார்? நான் ரப் நவாஸ் பேசுகிறேன். ரப் நவாஸ், ரப் நவாஸ்..."

உடனடியாகப் பதில் வந்தது. "நான்தான்... ராம் சிங்"

எதிர்ப்பக்கத்திற்குத் தாவிவிட வேண்டும் என்று நினைப்பதுபோல் ரப் நவாஸ் குதித்தான்.

பிறகு தனக்குள், "ராம்சிங்" என்று சொல்லிக்கொண்டான். பிறகு அவன் உச்சஸ்தாயியில் கத்தினான். "ஓய்.... ராம் சிங்கா, பன்னிப்பயலே"

பதில் ஒரு கத்தலாக இருந்தது. "ஓ... கொசவக் கழுதை"

ரப் நவாஸ் தன் ஆட்களைத் திரும்பிப் பார்த்து, "அந்த பன்னிப் பய முட்டாள்தனமாய்ப் பேசுகிறான்" என்று முணுமுணுத்தான். பிறகு ராம் சிங்குக்குப் பதில் தந்தான். "கொழுத்த பன்னிடா நீ"

ராம் சிங்கின் உரத்த சிரிப்பைக் கேட்க முடிந்தது. ரப் நவாஸும் வாய் தெறிக்கச் சிரித்தான்.

இந்தச் சிரிப்புகள் காற்றில் எதிரொலிப்பதை ரப் நவாஸின் ஆட்கள் அமைதியாகப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

இந்தச் சிரிப்பு சங்கதியெல்லாம் முடிந்தபின், ராம்சிங், "நண்பா, நாங்கள் டீ குடிக்க வேண்டும்" என்று கத்தினான்.

"குடி" என்றான் ரப் நவாஸ். "சந்தோஷமாய் இரு"

ராம்சிங் திரும்பக் கத்தினான். "எப்படி எங்களால் முடியும்? எங்களுடைய டீ சாமான்கள் எல்லாம் எதிர்ப்பக்கத்தில் இருக்கின்றன"

"எதிர்ப்பக்கம் என்றால் எங்கே?" என்றான் ரப் நவாஸ்.

ராம் சிங் சொல்வதை மீண்டும் கேட்க முடிந்தது. "அதை எடுக்க நாங்கள் இந்தப் பாதுகாப்பில் இருந்து வெளியேற வேண்டும். நீ எங்களைச் சுட்டுவிடுவாய்"

ரப் நவாஸ் சிரித்தான். "பன்னிப்பயலே உனக்கு என்ன தான் வேண்டும்?"

"எங்களுடைய சாமான்களை எடுத்து வர அனுமதி கொடு" என்றான் ராம் சிங்.

ரப் நவாஸ் "போய் எடுத்துக்கொள்" என்று பதில் தந்து தன் ஆட்களைத் திரும்பிப் பார்த்தான்.

"எங்களைச் சிதறடிக்கமாட்டாயே கொசவக்கழு தையே" என்று ராம்சிங் கத்தினான்.

"பைத்தியக்காரத்தனமாய்ப் பேசிக்கொண்டிருக் காதே, ஊர்ந்து போகும் சீக்கிய ஆமையே." என்று ரப் நவாஸ் கோபத்தில் பதில் தந்தான்.

ராம் சிங் சிரித்துத் திரும்பக் கத்தினான், "எங்களைக் கொல்ல மாட்டாய் என்று சத்தியம் செய்து கொடு"

"யார் மீது நான் சத்தியம் செய்ய வேண்டும்." என்று ரப் நவாஸ் கேட்டான்.

"உனக்கு யாரைப்பிடிக்குமோ அவர் மீது சத்தியம் செய்து கொடு" என்றான் ராம் சிங்.

ரப் நவாஸ் சிரித்து, "போய் உன்னுடைய பொருட் களை எடுத்துக்கொள்" என்றான்.

ஒரு சில நிமிடங்கள் அங்கு அமைதி நிலவியது. பைனாகுலர் வைத்திருந்த சிப்பாய், ரப் நவாஸை அர்த் தத்தோடு பார்த்தான். அவன் சுடுவதற்கு இருந்தான். ஆனால் ரப் நவாஸ் அவனைத் தடுத்தான். அவனிடமி ருந்து பைனாகுலரை வாங்கிக்கொண்டு, அதன் ஊடா கப் பார்த்தான். ஒரு மனிதன் பாறைக்குப் பின்னாலி ருந்து தவழ்ந்து வந்து கொண்டிருந்தான். சற்று நேரம் தவழ்ந்த அவன், எழுந்து கொண்டு புதர்களுக்குப் பின் னால் மறைந்து போனான். சில நிமிடங்கள் கழித்து கை நிறையப் பொருட்களோடு திரும்பினான். ஒரு கணம் நின்றான். பிறகு பாறையின் பாதுகாப்பை நோக்கி ஓடி னான்.

அவன் பார்வையில் இருந்து மறைந்தபின், ரப் நவாஸ் அவனுடைய குழல் துப்பாக்கியை எடுத்துச் சுட்டான். பிறகு உரக்கச் சிரித்தான். ராம் சிங், "தேங்க்யூ" என்று கத்தினான்.

"நோ மென்ஷன்" என்று பதில் தந்த ரப் நவாஸ், அவனுடைய ஆட்களைப் பார்த்து "நாம் ஒரு சுற்று வைத்துக் கொள்வோம்" என்றான். இரண்டு பக்கங்களிலிருந்து சுடுவது தொடர்ந்தது - வேடிக்கையாகத்தானே தவிர வேறு எதற்காகவும் அல்ல. பிறகு அங்கு அமைதி நிலவியது.

ரப் நவாஸ் பைனாகுலர் ஊடாகக் கீழே இருந்த குன்றிலிருந்து புகை உயரே வருவதைப் பார்த்தான். அவன், "அப்ப உங்களுடைய டீ தயார்தானே ராம் சிங்" என்று கத்தினான். "இன்னும் இல்லை கொசவக் கழுதையே" என்று பதில் வந்தது.

ரப் நவாஸ் குயவர் சாதியைச் சேர்ந்தவன். இதை நினைவூட்டுவது எப்போதுமே அவனைக் கோபம் கொள்ள வைத்தது. ராம் சிங் மட்டுமே இதைச் சொல்ல அவன் அனுமதிக்கக் காரணம் அவர்கள் இருவரும் மிக நெருங்கிய நண்பர்கள். இருவரும் ஒரே கிராமத்தில் ஒன்றாக வளர்ந்தவர்கள். ஒரே வயதை ஒத்தவர்கள். அவர்களுடைய தந்தையரும் தாத்தாமாரும் நண்பர்களாக இருந்தவர்கள். தொடக்கக் கல்வி வரை இருவரும் ஒரே பள்ளியில் படித்தவர்கள். ஒரே நாளில் ராணுவத்தில் சேர்ந்தவர்கள். போன உலக யுத்தத்தில் தோளோடு தோள் உரசி பல முனைகளில் இருந்து போரிட்டவர்கள்.

ரப் நவாஸ், "பன்னிப்பய, அவன் எப்போதும் அதை விட்டுத் தொலைக்கமாட்டேன் என்கிறான்" என்று அவனுடைய ஆட்களைப் பார்த்துச் சொன்னான்... "வாயை மூடு கொட்டைப் புண்ணான கழுதை ராம் சிங்கா" என்று கத்தினான். பிறகு அவனை நோக்கி வீசப்பட்ட ராம்சிங்

கின் மிக உரத்த சிரிப்பை அவன் கேட்டான். ரப் நவாஸின் துப்பாக்கி எதிரி நிலையைக் குறிபார்த்து இருந்தது. விளையாட்டிற்காகத்தான் அவன் அதன் குதிரையை அழுத்தினான். வானத்தைப் பிளக்கும் அலறல் கேட்டது. ரப் நவாஸ் உடனடியாக பைனாகுலரை எடுத்துப் பார்த்தான். அது ராம்சிங். பாறைச் சுவருக்கு அருகில் வயிற்றைப் பிடித்துக்கொண்டு இரண்டாக மடிந்து கீழே விழுந்துகொண்டிருந்தான்.

ரப் நவாஸ் மிக உரக்கக் கத்தினான். "ராம் சிங்கா"

இரண்டு மூன்று முறை எதிரி பக்கத்தில் இருந்து சுடப்பட்டது. ஒரு தோட்டா ரப் நவாஸின் புஜத்தை உரசிக்கொண்டு சென்றது. அவன் அந்தக் கணத்தில் தரையில் படுத்துக்கொண்டான். இப்போது இரண்டு பக்கங்களில் இருந்தும் சுடுவது தொடங்கியது. இந்தக் குழப்பத்தைச் சாதகமாக்கிக் கொண்டு எதிர்ப்பக்கத்தில் இருந்து சில சிப்பாய்கள் பாறையின் மறைவில் இருந்து தப்பிக்க முயன்றார்கள். இந்தப் பக்கத்தில் இருந்து சுடுவது தொடர்ந்து கொண்டிருந்தாலும் எதுவுமே குறியைத் தாக்கவில்லை. ரப் நவாஸ் தன் ஆட்களை இறங்க உத்தரவிட்டான். உடனடியாக மூன்று பேர் கொல்லப்பட்டார்கள் என்றாலும் மற்றவர்கள் எப்படியோ அந்தக் குன்றை அடைந்தார்கள்.

ராம் சிங் ரத்தத்தில் நனைந்தபடியே பாறைப் பரப்பில் விழுந்து கிடந்தான். வலியும் படுமோசமாக இருந்தது. தோட்டா அவனுடைய வயிற்றைத் தாக்கியுள்ளது. ரப் நவாஸைப் பார்த்தவுடன் கண்கள் பரவசமாக, "கொசவக் கழுதையே நீ என்ன செய்து விட்டாய்?" என்று கேட்டான். ஏதோ ஒரு தோட்டா அவனைத் தாக்கி விட்டது போல் ரப் நவாஸ் உணர்ந்தான். அவன் ராம் சிங்கை நோக்கிக் குனிந்து அவனது இடுப்புப் பட்டையை அவிழ்க்கத் தொடங்கினான். "பன்னிப்பயலே.. உன்னை யாருடா வெளியே வரச்சொன்னது?" என்றான்.

இடுப்புப்பட்டையை அவிழ்த்தது ராம் சிங்குக்குப் பெரும் வலியைக் கொடுத்தது. அவன் வாய்விட்டு அழு தான். பட்டையை அவிழ்த்தவுடன் ரப் நவாஸ் காயத் தைப் பார்த்தான். அது மிக ஆழமாக இருப்பதைக் கண்டான். ராம் சிங் அவனுடைய கையை அழுத்தி, "நான் வெளியே வந்தது என்னை உனக்குக் காண் பிக்க நினைத்துத்தான். ஆனால் நீ என்னைச் சுட்டுவிட் டாய்" என்றான். ரப் நவாஸுக்குத் தொண்டை அடைக்க, "நான் கடவுள் மீது சத்திய மாகச் சொல்கிறேன். விளை யாட்டாகத்தான் சுட்டேன். நீ வெளியே வந்து கொண்டி ருப்பது எனக்குத் தெரியாது. என்னை மன்னித்து விடு" என்றான்.

ரப் நவாஸ் மற்றும் அவன் ஆட்கள் இந்த இடத்தை அடைவதற்குப் பல மணிநேரம் ஆனது. ராம் சிங் நிறைய ரத்தத்தை இழந்து விட்டான். இந்த மனிதன் உயிரோடு இருப்பது ரப் நவாஸுக்கு ஆச்சரியமாகத்தான் இருந் தது. அவன் இன்னும் நீண்ட நேரம் உயிரோடு இருப் பான் என்று கொஞ்சமும் நம்பிக்கையற்றவனாக இருந் தான். அவனை அவ்விடத்திலிருந்து அகற்ற முயல்வது ஆபத்தானது என்பதால் ரப் நவாஸ் அவனுடைய படை கமாண்டரை வயர்லெஸ் மூலம் தொடர்பு கொண்டு அவனுடைய நண்பன் ராம்சிங் மிக மோசமாகக் காய முற்றிருப்பதால் ஒரு மருத்துவரை உடனடியாக அனுப்பி வைக்குமாறு வேண்டிக்கொண்டான்.

ஒரு மருத்துவர் அவ்விடத்தை வந்தடைவது என்பது, அதுவும் நேரத்திற்கு என்பது எவ்விதத்திலும் இயலாத காரியம். ராம்சிங் இன்னும் நீண்ட நேரம் உயிரோடு இருக்கமாட்டான் என்று ரப் நவாஸுக்குத் தெளிவாகத் தெரிந்திருந்தது. இருந்தாலும் வயர்லெஸ் மூலம் செய்தி கொடுத்தபின் ராம்சிங்கிடம், "கவலைப்படாதே டாக்டர் வந்துகொண்டிருக்கிறார்" என்றான். ராம்சிங் ஈனஸ்வ ரத்தில், "நான் கவலைப்படவில்லை. ஆனால் என்னு

டைய ஆட்கள் எத்தனை பேர் கொல்லப்பட்டார்கள்?" என்று கேட்டான்.

"ஒருவன்தான்" என்று ரப் நவாஸ் பதில் தந்தான்.

ராம் சிங்கின் குரல் மேலும் பலவீனமானது. "நீங்கள் எவ்வளவு இழந்தீர்கள்?"

ரப் நவாஸ் பொய் சொன்னான், "ஆறு..." என்று சொல்லி, அவனுடைய ஆட்களைத் திரும்பி அர்த்தத் தோடு பார்த்தான்.

ராம்சிங் ஒவ்வொன்றாக எண்ணத் தொடங்கினான். "நான் விழுந்தவுடன், என்னுடைய ஆட்கள் எல்லா நம் பிக்கையையும் இழந்தார்கள், ஆனால் நான் அவர்களி டம் இதைத்தான் சொன்னேன். இந்தக் கணத்தில் உங் களுடைய உயிரைப் பணயமாய் வையுங்கள். அப்புறம் எதிரிகளின்... ஆறு... அது சரிதானே" என்று சொன்ன அவனுடைய குரல் கொஞ்சமும் கேட்க முடியாத நிலை யில் இருந்தது. பிறகு அவனுடைய மனது கடந்த காலங் களில் சுற்றத் தொடங்கியது. பழைய நிகழ்வுகளை நினைவுப்படுத்தத் தொடங்கினான். வயற்காடு பற்றிப் பேசினான். பள்ளி பற்றி, ரெஜிமெண்ட் பற்றி, கமாண் டர்கள் பற்றி தொடர்பற்ற விஷயங்கள், வெளிநாடுகளில் அவர்களுடைய பெண் சாவகாசங்களைப் பற்றி... பெண் பற்றி நினைப்பு வந்தவுடன் ஒரு நிகழ்ச்சியை நினைவில் கொண்டுவந்து சிரிக்கத் தொடங்கினான். காயம் வலி யைக் கொடுத்ததாலும், அதைப் பற்றி அக்கறை காட் டாமல், "அந்த மேடத்தை உனக்கு நினைவிருக்கிறதா பன்றிக்குப் பிறந்தவனே?" என்றான்.

"யார்?" என்று ரப் நவாஸ் கேட்டான்.

ராம் சிங், "இத்தாலியைச் சேர்ந்தவள். நாம் அவளுக்கு என்ன பெயர் வைத்திருந்தோம்? ஆண்களை எப்படி முழுமையாய் விழுங்கிவிடுவாள்" என்றான்.

ரப் நவாஸ் உடனடியாக அந்தப் பெண்ணை நினை வில் கொண்டு வந்தான். "ஆமாம். அது... மேடம் மனிடா

ஃபான்டோ... பணம் இல்லை என்றால் விளையாட்டு இல்லை... ஆனால் அவளுடைய இதயத்தில் உனக்கு என்று மென்மையான பகுதி ஒன்று இருந்ததுதானே... முசோலினி பரம்பரையில் வந்தவள்"

ராம் சிங் உரக்கச் சிரித்தான்... உறைந்து போன ரத்தம் அவனது காயத்தில் இருந்து வெளியேறியது. ரப் நவாஸ் தற்காலிகமாகப் போட்டிருந்த கட்டு நகர்ந்து கொண் டது. கட்டை மீண்டும் பழைய இடத்தில் போட்டுவிட்டு, "இப்போ கொஞ்சம் அமைதியாய் இரு" என்றான்.

ராம் சிங்குக்குக் காய்ச்சல் அதிகமாக இருந்தது. அது அவனுடைய மூளையைத் தீவிரமாகச் செயல்படவைத் தது. அவனிடம் கொஞ்சமும் தெம்பில்லை என்றாலும் தொடர்ந்து ஏதோ பேசிக் கொண்டிருந்தான். சில சமயம் டேங்கில் எவ்வளவு பெட்ரோல் இருக்கிறது என்று பரி சோதிக்க வேண்டியிருப்பது போல் நிறுத்தினான். சில சமயம் நினைவிழந்த நிலைக்குச் சென்றான். மிகக் குறு கிய நேரத்திற்கு அதிலிருந்து மீண்டு வந்து மறுபடியும் பழைய நிலையில் விழுந்தான். இத்தகைய இடைவெ ளியில் ஒருமுறை, ரப் நவாஸிடம், "என் நண்பா, என் னிடம் நேர்மையாகச் சொல். உங்களுக்கு உண்மையி லேயே காஷ்மீர் தேவைதானா?" என்று கேட்டான்.

ரப் நவாஸ் தீர்மானத்தோடு, "ஆமாம், ராம் சிங்" என் றான்.

இதை ஏற்றுக்கொள்ள மறுக்கும் பாணியில் தலைய சைத்த ராம் சிங், "இல்லை. நான் இதை நம்பத் தயாராக இல்லை. நீ தவறான பாதையில் விடப்பட்டிருக்கிறாய்" என்றான்.

தான் சொல்வதை அவன் ஏற்றுக்கொள்ளும்படி பதில் சொல்ல ரப் நவாஸ் முயன்றான். "நான் நபிகள் மற்றும் அவருடைய குடும்பத்தார் மீது சத்தியமாகச் சொல்கி றேன். நீதான் தவறான பாதையில் விடப்பட்டிருக்கிறாய்".

ரப் நவாஸின் கையைப் பிடித்துக்கொண்டு, "என் நண்பா, சத்தியம் செய்யாதே... ஒரு வேளை நீ சொல்வது சரியாகக்கூட இருக்கலாம்" என்று ராம் சிங் சொன்னாலும், அவனுடைய குரல், ரப் நவாஸ் சென்னதை நம்பவில்லை என்பதைத் தெளிவாகக் காட்டியது.

சூரியன் மறைவதற்குச் சற்று முன்பு படை கமாண்டர் மேஜர் அஸ்லாம், சில சிப்பாய்களோடு வந்து சேர்ந்தார். அவரோடு எந்த மருத்துவரும் இல்லை. ராம் சிங் மயக்கத்தில் ஏதோ உளறிக் கொண்டிருந்தான். அவனுடைய குரல் மிகவும் பலவீனமாக இருந்ததால், எதுவுமே தெளிவாக இல்லை. மேஜர் அஸ்லாமும் 6/9 ரெஜிமெண்ட்டைச் சேர்ந்தவர்தான் அவருக்கும் ராம் சிங்கை நன்றாகத் தெரியும். எல்லா விஷயங்களையும் ரப் நவாஸிடமிருந்து ஊர்ஜிதப்படுத்திகொண்டபின் ராம் சிங் நோக்கிக் குனிந்து அவனுடைய பெயரைச் சொல்லி அழைத்தார். ராம் சிங் அவனுடைய கண்களைத் திறந்தவுடன், உடலை நேரான நிலைக்குக் கொண்டுவர, விறைப்பாக்கிக் கையை உயர்த்திச் சல்யூட் அடித்தான்.

ஆனால் மேஜர் அஸ்லாமை மிகக் கவனமாகப் பார்த்தபின் உயர்த்திய கையை கீழே நழுவ விட்டு, முணுமுணுத்தான், "ஒண்ணும் இல்லை ராம் சிங்கா... பன்னிப் பயலே, நீ மறந்துவிட்டாய்... இது யுத்தம்... இது யுத்தம்..." அவனால் வாக்கியத்தை முடிக்க முடிய வில்லை. ரப் நவாஸைப் பார்த்துக்கொண்டிருந்த அவனுடைய கண்கள் கல்லானது. கடைசி மூச்சு அவனுடைய உடலை விட்டு வெளியேறியது.

***



# கடவுளின் கடமையைச் செய்தல்

நான், மேற்கிந்தியாவில் உள்ள குஜராத்திலுள்ளகத் தியவார் என்ற பகுதியிலிருந்து வருகிறேன். பனியா சாதி யைச் சேர்ந்தவனான நான், பரம்பரை வியாபாரி. போன வருடம், நாட்டின் பிரிவினையைத் தொடர்ந்து எனக்கு இந்த உலகம் தலைகீழானது. நான் தற்காலிகமாக வேலை எதுவும் இல்லாமலிருந்தேன். கொக்கேயின் விற்றதின் மூலம் கொஞ்சம் போல் பணம் பார்த்ததைத் தவிர வேறு எதுவுமில்லை.

இங்கிருந்து அங்கும், அங்கிருந்து இங்கும் ஆயிரக் கணக்கான அகதிகள் குடிபெயரத் தொடங்கியிருந்தார் கள். ஆகையால் ஒருநாள் நானும் பாகிஸ்தானுக்குக் குடிபெயர்ந்துவிடுவதென்று முடிவு செய்தேன். அங்கு செய்வதற்கு ஏதேனும் ஒன்று எப்போதும் இருக்கு மென்று எனக்குள் சொல்லிக்கொண்டேன். கொக்கே யின் இல்லையென்றாலும் வேறேதேனும் ஒன்று. அத னால், நான் கிளம்பினேன். அங்கு போய்ச் சேருவ தற்கு எனக்குக் கொஞ்ச நாட்கள் எடுத்துக் கொண் டன. ஆனால் எப்படியோ போய்ச் சேர்ந்துவிட்டேன். ஏன், போகிற வழியில் கொஞ்சம் போல் என்னால் பணம் பார்க்கவும் முடிந்தது.

பாகிஸ்தானில் வியாபாரம் தொடங்கவேண்டுமென்று நான் குடிபெயர்ந்ததால், அங்கு நிலவிய சூழ்நிலையை மிகக் கவனமாகக் கவனிக்கத் தொடங்கினேன். இந் துக்கள் விட்டுச் சென்ற சொத்துக்களை ஒதுக்கீடு செய்துகொள்வதுதான் மும்முரமாக நடந்து கொண்டி

ருந்தது. வம்பளப்பதில் எனக்குத் திறமை இருந்ததாலும் மனிதர்களோடு எளிதாக பழக முடிந்ததாலும், என்னால் சரியான இடங்களில் நண்பர்களை உருவாக்கிக் கொள்ள முடிந்தது. உடனடியாக என் பெயருக்கு ஒரு வீடு ஒதுக்கப்பட்டது. நான் அதை உடனடியாக விற்று, கைமாற்றியதில் நல்ல லாபம் பார்த்தேன். இது நம்பிக்கைத் தரக்கூடியதாக இருந்ததால், நான் ஒரு நகரத்திலிருந்து மற்றொரு நகரம் என்று நகர்ந்து, சொத்துக்களை என் பெயரில் பெறுவதும், ஆவணங்கள் என் கைக்குக் கிடைத்தவுடன் அதை விற்றுவிடுவதுமாகவும் இருந்தேன்.

எல்லா வேலைகளும் உழைப்பை வேண்டுவதுதான். வாழ்க்கையில் எளிதானது என்று ஏதுமில்லை. நல்லது, நான் மட்டும் விதிவிலக்காக இருக்கவேண்டும் என்று எதிர்பார்க்க முடியாது. இது ஒரு தொடர்ந்த போராட்டம். சில சமயங்களில் முகத்திற்கு நேராகப் புகழ்வது காரியத்தை முடித்துக் கொடுக்கும். மற்ற சமயங்களில் லஞ்சம் அல்லது இரவு உணவுக்கான அழைப்பு. ஏன், சில சமயங்களில் மாலைப் பொழுதுகளில் 'சந்தோஷமான நேரங்கள்'. எனக்கு நினைவிலிருப்பதெல்லாம் நான் தொடர்ந்து ஓடிக் கொண்டே இருந்ததுதான். ஒரு நகரத்திற்கு வருவேன், குடியிருப்புப் பகுதிகளை நோட்டமிடுவேன், ஒரு அழகான வீட்டைத் தேர்ந்தெடுப்பேன், அதைக் கைக்கொள்ள முயலுவேன்.

கடினமான உழைப்பு எப்போதும் அதற்கான பலன்களைக் கொடுக்கும் என்பதால், ஒரு வருடத்தில் ஓரளவிற்கான செல்வத்தை என்னால் எப்படியோ குவிக்க முடிந்தது. சிறப்பாக வாழ ஒரு மனிதனுக்கு என்னவெல்லாம் தேவையோ அவையெல்லாம் என்னிடமிருந்தன: அருமையான வீடு, வங்கியில் தேவைக்கு அதிகமான பணம், பெரிய கார். வியாபார ரீதியாக வருமானம் தரும் சொத்துக்கள் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை.

ஆனாலும் நான் அமைதியற்று இருப்பதை உணர்ந்தேன். நான் கொக்கேயின் விற்றுக்கொண்டிருந்தபோது, இதுபோன்ற விசித்திரமான மன அழுத்தம் சில சமயங்களில் வந்ததுண்டு ஆனால், நான் இப்போது அனுபவித்துக் கொண்டிருப்பதோடு ஒப்பிடும்பொழுது அது ஒன்றுமேயில்லை. ஏதோ மிகப்பெரிய பாரத்திற்கடியில் இருப்பதுபோல் உணர்ந்தேன். அது என்னவென்று என்னால் விளக்க முடியவில்லை.

நான் புத்திசாலியான மனிதன். என்னை ஏதேனும் ஒன்று தொந்தரவு செய்து கொண்டிருந்தால், அது என்னவென்று எப்போதும் நான் கண்டுபிடித்துவிடுவேன். இதனுடைய அடியை நான் பார்த்துவிடுவது என்பதில் தீவிரமாக இருந்தேன். எனக்கு என்னவாயிற்று?

பெண்கள்? நல்லது, நான் தடைகள் ஏதுமில்லாதவன். குஜராத்தில் என் மனைவியை இழந்துவிட்டேன். இருந்தாலும் வேறு பெண்கள் இருந்தார்கள். உதாரணத்திற்கு, என் தோட்டக்காரனின் மனைவி. இதில் ருசியையெல்லாம் கணக்கிட்டுக்கொண்டிருக்க முடியாது. பெண்கள் என்று வரும்போது அவர்களுடைய இளமைதான் முக்கியமானது என்று நான் நம்புகிறேன். அவர்கள் படித்திருக்க வேண்டுமென்றோ, அவர்களுக்கு நடனமாடத் தெரியவேண்டும் என்றோ அல்லது அதுபோல் ஏதேனும் இருக்கவேண்டும் என்றோ, எதுவுமே முக்கியமானவை கிடையாது. நான் எனக்காக மட்டுமே பேசமுடியும். எனக்குப் பெண்கள் இளமையாக இருக்கவேண்டும், அவ்வளவுதான்.

நான் முன்பே சொன்னதுபோல், நான் புத்திசாலியான மனிதன். என் வாழ்க்கையில் ஏதோ ஒன்று குறைகிறது என்று எனக்குத் தெரியும். என் வியாபாரம் ஓகே தான். என் வங்கிக் கணக்கில் பணம் ஒவ்வொரு நாளும் கூடிக்கொண்டே போகிறது. எனக்காக வேலை செய்ய ஆட்கள் இருந்தார்கள். இன்னும் சொல்லப் போனால்

என் பங்கிற்கு நான் எந்த முயற்சிகளும் செய்யாம லேயே பணம் வரும் ஒரு நிலையை அடைந்துவிட்டேன். நிறைய யோசித்தப் பிறகு நான் பாகிஸ்தான் வந்ததிலி ருந்து ஒரு நல்ல காரியம் கூட செய்யாததுதான், அமை தியற்று இருப்பதற்கான காரணம் என்ற விடையைக் கண்டுபிடித்தேன்.

முன்பு கத்தியவாரில், என்னுடைய வரவுக் கணக்கில் சில நல்ல காரியங்கள் இருந்தன. உதாரணத்திற்கு, என் நண்பன் பாண்டுரங்கன் இறந்தபிறகு அவனுடைய மனைவியை என்னுடைய வீட்டிற்கு அழைத்து வந்து, குறைந்தபட்சம் இரண்டு வருடக் காலத்திற்கு இந்த உலகிலேயே மிகப் பழமையான தொழிலைச் செய்வ திலிருந்து என்னால் அவளைத் தடுக்க முடிந்தது. மற்றொரு நண்பன் விநாயகம், அவனுடைய மரக்கால் களை உடைத்துக் கொண்டபோது உடனடியாக மற் றொன்றிற்கு ஏற்பாடு செய்தேன். எனக்கு நாற்பது ரூபாய் செலவானது. இப்படி நிறையச் சொல்லலாம் என்றா லும், பாகிஸ்தானுக்கு வந்ததிலிருந்து நல்ல காரியம் ஒன்றைக் கூட நான் செய்ததில்லை. ஒருவேளை என் இதயம் அமைதியற்று இருப்பதற்கு இது காரணமாக இருக்கலாம்.

நல்ல காரியங்கள் எத்தகைய சிறந்த முறைகளில் செய்யப்படலாம் என்று சிந்திக்க முயன்றேன். பிச்சை போடுவது? நல்லது, ஒருநாள் நான் நகரத்தைச் சுற்றி நடந்துவந்தேன். அது பசியோடும் நிர்வாணமாகவும் இருக்கும் ஈனர்களால் நிரம்பியிருந்தது. இவர்களுக் கெல்லாம் நான் ஒருவனாக மட்டும் உணவும் ஆடை யும் கொடுப்பது எப்படி சாத்தியமாகும்? பொதுச் சமை யல் அறை ஒன்றை நிறுவினால் என்ன? இது நடைமு றைச் சாத்தியமாகத் தெரியவில்லை. இதற்கு மிகப்பெ ரும் அளவு தானியங்கள் வாங்கவேண்டியிருக்கும். அது கள்ளச் சந்தையில் மட்டும்தான் கிடைக்கும். ஒரு நல்ல

காரியம் செய்ய வேண்டும் என்பதற்காக, ஒரு அறமற்ற செயலைச் செய்வதில் என்ன அர்த்தம் இருக்க முடியும்?.

ஒவ்வொரு நாளும் பல மணி நேரங்கள் என்று இன்னல்களையும் துயரங்களையும் கேட்டுக் கொண்டிருந்தேன். ஒவ்வொருவரிடமும் சொல்வதற்கு ஒரு சோகக் கதை இருந்தது; தெருவில் படுத்துக் கிடக்கிறவர்கள் முதல் பிரம்மாண்டமான விலையுயர்ந்த பங்களாக்களில் வாழ்பவர்கள் வரை. நடைபாதையில் இருந்தவன் சந்தோஷமற்று இருந்தான், அவனுக்கு வசதியான ஒரு காலனி இல்லாமல் போனதால். டிரைவர் வைத்து சுற்றி வருமளவிற்கு பணவசதி கொண்டவனும் அமைதியற்றிருந்தான். ஏனெனில் அவனால் புதுவகையான காரை வாங்க முடியவில்லை. எல்லாக் குறைகளும் உண்மையானவைதான், நியாமானவைதான்.

நான் ஒருமுறை, சோலாப்பூரைச் சேர்ந்த அமீனாபாய் சிட்டால்கர் (அவளுடைய ஆன்மா சாந்தி அடையட்டும்) பாடிய கஜல் ஒன்றை நினைத்துக் கொண்டேன். அதில் ஒரு வரி இப்படிப் போகும்: 'எந்த ஒரு மனிதனாலும் மற்றொருவனின் தேவையைப் பூர்த்தி செய்ய முடியாது' ஆக நான் இங்கிருக்கிறேன். உதவுவதற்குத் தயாராக இருந்தும், நிசமாகவே நடைமுறைப்படுத்த முடியாமல். உதவி வேண்டி நிற்பவர்கள் இங்கு மிக அதிக அளவில் இருக்கிறார்கள்.கொஞ்சம் யோசித்தபிறகு, அள்ளிக்கொடுப்பது சரியான தீர்வல்ல என்ற முடிவுக்கு வந்தேன். நான் அகதிகள் முகாமிற்குச் சென்றிருந்தபோது, அங்கிருந்தவர்கள் பெரும்பாலானேர் சோம்பேறிகளாக மாறியிருப்பதைப் கண்டேன். வேலை ஏதும் செய்வதில் அவர்களுக்குக் கொஞ்சமும் நாட்டமில்லை. அவர்கள் நாள் முழுக்க முகாமில் சௌகரியமாகப் படுத்துக் கிடந்ததைப் பார்த்தேன். சீட்டாட்டம் அல்லது வம்புப் பேச்சுகள் என்று இலவசமாக உணவு கிடைக்கக் காத்துக் கிடந்தார்கள். எவ்வாறு இந்த ஈனர்களால் பாகிஸ்தா

னுக்கு ஏதேனும் செய்திட முடியும்? அதனால் பிச்சைப் போடுவது ஒரு நல்ல காரியமாக இருக்க முடியாது என்ற தீர்மானத்திற்கு வந்தேன். ஆக நான் என்ன செய்யப் போகிறேன்?

இத்தகைய முகாம்களில் நூற்றுக்கணக்கானவர்கள் இறந்து கொண்டிருந்தார்கள். தொற்றுநோய்கள் அடிக் கடி பரவியது. நகரத்தில் உள்ள மருத்துவமனைகள் நிரம்பி வழிந்தன. நான் ஒரு இலவச மருத்துவமனை கட்டுவது என்று முடிவு செய்தேன். நான் முழுத் திட்டத் தையும் தயார் செய்தேன். கட்டுமானப்பணியில் விருப்ப முள்ளவர்கள் விண்ணப்பிக்க அழைப்பு விடலாம். விண் ணப்பிப்பதற்குப் பணம் கட்டச் சொல்லி ஓரளவிற்குப் பணம் வசூலிக்கலாம். என்னுடைய சொந்தக் கம்பெ னியை நிறுவி, அதைக் கட்டுவதற்கான ஒப்பந்தத்தை ஒரு லட்சம் ரூபாய்க்குக் கொடுக்கலாம் (எப்படியும் எழு பதாயிரம் ரூபாய்க்கு மேல் ஆகாது. எனக்குச் சுளை யாக முப்பதாயிரம் மிஞ்சும்). இப்படியாக நான் என் குறிக்கோளை அடையலாம். இருந்தாலும் நான் இந்த எண்ணத்தைத் துறந்தேன். ஏனெனில் இந்த உயிர்க ளையெல்லாம் நான் எப்படியோ காப்பாற்றுகிறேன் என் றாலும், அதனால் என்ன லாபம்? இழவு, ஜனத்தொகை வெடிப்புதான் நடக்கும். இதை இந்தத் தேசம் எப்படிச் சமாளிக்கும்?

இப்படி நினைத்துப் பார்த்ததால் பிரச்சனைகளுக்கு எல்லாம் காரணம், மிக அதிகளவில் மக்கள் இருப்பது தான். மக்கள் தொகை உயர்ந்துகொண்டே போகிறது. ஆனால் உணவு உற்பத்தி செய்யும் நிலங்கள் அதே அளவில்தான் இருக்கின்றன. இந்த எண்ணிக்கைக ளின் அபரிமிதமான வளர்ச்சியோடு மழை ஈடுகொடுப்ப தில்லை. அதனால் மருத்துவமனை கட்டுவதில் அர்த்த மேதுமில்லை என்ற முடிவுக்கு வந்தேன்.

பிறகு ஒரு மசூதி கட்டலாமா என்று நினைத்தேன். சோலாப்பூரைச் சேர்ந்த அமீனாபாய் சிட்டால்கர் என்ற கிழவியைக் கடவுள் சொர்க்கத்தில் அமைதியாக வைத் திருப்பாராக. 'நீ போனபிறகு உன் பெயரைச் சொல் லுமளவிற்கு நீ செய்யும் காரியங்கள் இருக்க வேண் டும்' என்பதுபோல் அவள் ஏதோ பாடியதுண்டு. எப் படிப்பட்ட நல்ல காரியங்கள் பற்றி அவள் பாடியிருக் கிறாள்?. கிணறு வெட்டுவது, பாலங்கள் அமைப்பது, மசூதிகள் கட்டுவது. ஆனால் இத்தகைய காரியங்க ளால் எந்தப் பயனுமில்லை. ஏனெனில், ஏற்கனவே நக ரத்தில் தேவைக்கு அதிகமான மசூதிகள் இருந்தன. நிறைய மசூதிகள் என்றால் இறைப்பற்று உடையவர்கள் இடையே நிறைய சச்சரவுகள், நிறைய உட்பிரிவுகள். நான் இதை இன்னும் அதிகமாக்க விரும்பவில்லை.

நான் மக்காவிற்குப் புனித யாத்திரை போகலாம் என்று முடிவு செய்தேன். ஆனால், நான் பயணத்தைத் தொடங்குவதற்கு முன்னதாகவே, இறைவனே எனக் கான விடையை அருளினான். நகரத்தில் ஒரு பேரணி நடந்தது. அது பெரும் களேபரத்தில் முடிந்தது. கால் களில் மிதிபட்டே முப்பது பேர் இறந்து போனார்கள். அடுத்தநாள் காலையில் இது செய்தித்தாள்களில் வந் தபோது, அவர்கள் கொல்லப்பட்டவர்கள் அல்லவென் றும், அவர்கள் எல்லோரும் 'தியாகியானவர்கள்' என்றும் சொன்னது.

இது என்னைச் சிந்திக்கத் தூண்டியது. நான் நக ரத்தில் உள்ள பல முக்கியமான மத அறிஞர்களிடம் சென்றேன். இறந்தவர்கள் அவர்களுடைய தவறினால் இறக்கவில்லை என்பதால், அவர்கள் எல்லோரும் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் என்றும், அதனால் அவர்க ளைத் தியாகிகள் என்று அழைப்பது சரியானது என் றும் உறுதிப்படுத்தினார்கள். ஒரு மனிதன் ஏங்கக்கூடிய மிக உயர்ந்த நிலை இதுவாகத்தான் இருக்க முடியும்.

நான் எனக்குள் சொல்லிக் கொண்டேன்: மக்கள் சாதாரணமாக இறந்துபோவதைக் காட்டிலும் தியாகிகளாவது மிக அற்புதமான ஒன்றுதானே?. சாதாரணமாக மரணம் கொள்வதில் என்ன அர்த்தமிருக்க முடியும்?. முற்றுமுழுவதுமாக வீணானது. அர்த்தமற்ற இந்த வாழ்க்கைக்கு ஒரு தியாகியாவது தான் ஓர் அர்த்தத்தைக் கொடுக்க முடியும்.

இந்தச் சிக்கலான விசயம் பற்றி நான் மேலும் கொஞ்சம் சிந்தித்துப் பார்த்தேன். என்னைச் சுற்றிலும் இருப்பதைப் பார்த்தேன். நான் எதைப் பார்த்தேன்?. சொங்கிப்போன கண்களும், ஊட்டச்சத்தில்லாமல் வெளிறிப்போன முகங்களும் வறுமையின் பாரத்தில் நசுக்கப்பட்டும் கந்தல் ஆடைகளில் பேய் போல் உலாத்திக் கொண்டிருக்கும் பாவப்பட்ட பிராணிகளின் பெரும் கூட்டத்தைத்தான். ஒரு குப்பைமேட்டில் வீசியெறியப்பட்ட வேண்டாத பொருளாகத்தான் அவர்கள் இருந்தார்கள். பிய்ந்துபோன குடிசைகளில் வாழ்ந்துகொண்டு நகரத்துப் பஜார்களில் எவராலும் உரிமை கொண்டாடப்படாத மிருகங்கள் போல் ஊர்ந்து கொண்டிருந்தார்கள். இந்த மக்கள் இன்னும் ஏன் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்று எனக்கு நானே கேட்டுக் கொண்டேன். அவர்கள் எதற்காக, எப்படி வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்? எவருக்கும் தெரியாது. இங்குதான் ஆயிரக்கணக்கில் இறந்து கொண்டிருக்கிறார்கள். பசியிலும் தாகத்திலும் இறந்து கொண்டிருக்கிறார்கள். குளிரில் இறந்து கொண்டிருக்கிறார்கள். வெப்பத்தில் இறந்து கொண்டிருக்கிறார்கள். இதற்கெல்லாம் மேலாகத் துயரப்படவும் நினைக்கப்படவும் எவருமில்லாமல் இறந்து கொண்டிருக்கிறார்கள்.

இவர்கள் இறந்தபின், இவர்களுக்கு என்ன நடக்கிறது? எதுவுமே இல்லை. அதனால் எனக்கு ஒரு எண்ணம் தோன்றியது. இந்த மக்கள் எல்லாம், எக்காலத்

திற்கும் பசியோடும் சோர்வோடும் வலியோடும் வாழ்ந்து கொண்டிப்பதற்குப் பதிலாக, ஏன் தியாகிகளாகக்கூ டாது.? இவர்களுடைய பாழ்பட்டுப்போன முகங்களை ஏறெடுத்துப் பார்க்காதவர்களும் இவர்களைப் போற்றிப் புகழுமாறு இந்த உலகத்தில் இவர்களுக்கென்று ஒரு மரியாதையான இடத்தை இவர்கள் ஏன் வெல்லக்கூ டாது?.

கேள்வி இதுதான்: இந்த மக்கள் தியாகிகள் ஆவதற் குத் தயாராக இருப்பார்களா? இருப்பார்கள் என்று நான் திடமாக நம்பினேன். ஏனெனில் அவர்கள் மிகச் சிறந்த முசல்மான்கள். ஒவ்வொரு சிறந்த முசல்மானும் பெரும் மதிப்பிற்குரிய தியாகியாவதற்குப் பெரும் ஏக்கத்தைக் கொண்டிருப்பவர்கள். ஏன் இப்போதெல்லாம் இந்துக் களும் சீக்கியர்களும் கூட தியாகிகளாவதற்கு முனைப் புக் காட்டுகிறார்கள். ஆனால் எலும்பும்தோலுமான ஒரு ஈனன் (நான் அவனிடம் நீ தியாகியாக விரும்புகிறாயா என்று கேட்டபோது) அப்படிப்பட்ட லட்சியங்கள் ஏது மில்லை என்று சொன்னபோது எனக்கு ஏமாற்றமாகத் தான் இருந்தது.

பரிதாபத்திற்குரிய அந்த ஜந்து உயிரோடு இருந்து எதைக் காணப்போகிறது என்று என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. நான் அவனோடு விவாதம் செய்ய முயன்றேன். நான் சொன்னேன்: இங்கு பார் என் நண்பனே, நீ கிழவனாகி விட்டாய். நீ இன்னும் ஒரு மாதத்திற்கு அல்லது ஒன்றரை மாதத்திற்கு மேல் உயிரோடு இருக்கப் போவதில்லை. இப்போதே நீ இவ் வளவு பலவீனமாக இருப்பதால், உன்னால் நடக்கக் கூட முடியவில்லை. உன்னுடைய வழக்கமான இரும லின் பிடிக்குள் சிக்கிக் கொள்ளும்போது, அதிலிருந்து நீ வெளியேறி வருவதே மிக அதிசயமான ஒன்றுதான். உன் பெயரில் சல்லிக்காசு கிடையாது, உன் வாழ்க்கை யில் நிம்மதியான நாளென்று ஒருநாள் கூட கிடையாது.

உன்னுடைய விசயத்தைப் பொறுத்தமட்டில் எதிர்காலம் பற்றிய கேள்விகளும் கிடையாது. நீ ஏன் உயிரோடு இருக்க வேண்டும்? எதற்காக? நீ இராணுவத்தில் சேர முடியாத அளவிற்கு வயதானவனாகிவிட்டாய். இல்லை யென்றால் நம் நாட்டிற்காகப் போரிட்டு மரணம் கொள் ளும் சந்தர்ப்பமாவது உனக்குக் கிடைத்திருக்கும். ஒரு தியாகியாவதற்கான ஏற்பாடுகளை நீ ஏன் செய்யத் தொடங்கக் கூடாது.

'எப்படி ஏற்பாடு செய்வது?' என்று அவன் கேட்டான். ஆக எப்படியென்று நான் அவனுக்கு விளக்கம் கொடுத் தேன். 'தரையில் உனக்கு முன்னால் ஒரு வாழைப்பழத் தோல் கிடக்கிறது, நீ அதில் வழுக்கி விழுவதாக வைத் துக்கொள்வோம், அப்போது அந்த அதிர்ச்சியைத் தாங் கமுடியாமல் நீ இறந்துபோவாய். இப்படியாக நீ தியாகி யாக்கப்படுவாய்'. என்னுடைய வாதங்களை அவன் ஏற் றுக் கொள்ளவில்லை. அதற்குப் பதிலாக அவன் சொன் னான்: 'என்னுடைய கண்களைத் திறந்து வைத்துக் கொண்டே வாழைப்பழத் தோலில் சறுக்கி விழுவதற்கு எனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்றா நினைக்கி றாய்? நான் என் வாழ்க்கையை நேசிக்கவில்லையா?'. ஐயோ, கடவுளே! இந்த எலும்பு மூட்டை இப்படித்தான் சொன்னது. அவன் வாழ்ந்து கொண்டிருப்பதாக அவன் நினைக்கிறானாம்.

அவனுடைய மனப்பான்மை என்னைச் சோர்வு கொள்ளவைத்தது. ஓரிரு நாட்களுக்குப் பிறகு மிகச் சாதாரணமாகத் தியாகியாகியிருக்கக்கூடியவன், ஒரு இலவச மருத்துவமனையில் ஒரு வெற்று இரும்புக் கட்டிலில் இருமிக்கொண்டே இறந்துபோனான் என்று கேள்விப்பட்ட பொழுது அது என்னை மேலும் சோர்வு கொள்ள வைத்தது.

அப்புறம் அந்தக் கிழவி ஒருத்தி இருந்தாள்; அவ ளுடைய வாயில் பற்கள் இல்லாமலும், வயிற்றில் குட

லில்லாமலும். எந்த நிமிடம் வேண்டுமென்றாலும் அவளுடைய கடைசி மூச்சை விடலாம் என்பதுபோல்தான் இருந்தாள். நான் அவளுக்காக வருத்தப்பட்டேன். அவளுடைய வாழ்க்கை முழுவதும் துயரத்திலும் வறுமையிலும்தான் கழிக்கப்பட்டிருக்கிறது. நான் அவளை அலுங்காமல் தூக்கி ரயில் தண்டவாளத்தில் படுக்கவைத்தேன். ஆனால் ரயில் வரும் சத்தத்தைக் கேட்ட அந்த நொடியில், முழுக்க சாவி கொடுத்துத் திருகப்பட்டிருந்த பொம்மை போல் குதித்தெழுந்து ஓடிப்போனாள்.

இது என் இதயத்தை உடைத்தது என்றாலும், நான் என் முயற்சியைக் கைவிடவில்லை. நான் மிக உயர்ந்த லட்சியத்திற்காக மிக நீளமான மிகக் குறுகலான சந்துகளை எல்லாம் பார்த்துவிட்டேன். அவ்வளவு எளிதாக சுலபமாக என் கவனம் சிதைக்கப் பட முடியாதது.

முகலாய மன்னர்களின் காலத்தைச் சேர்ந்த, எவரும் உபயோகப்படுத்தாத கட்டடம் ஒன்று நகரத்திலிருந்தது. அதில் மிகச் சரியாக நூற்று ஐம்பத்தொரு மிகச்சிறிய அறைகள் இருந்தன. அனுபவம் வாய்ந்த என் கண்களால் அடுத்துப் பெய்யும் பெரும் மழையில், ஒழுகிக்கொண்டிருக்கும் அதன் கூரை இடிந்து விழுந்துவிடும் என்று முதல் பார்வையிலேயே கணக்கிட்டேன். சில ஆயிரம் ரூபாய்களுக்கு அதை வாங்கி, ஏறக்குறைய ஓராயிரம் கூரையில்லாதவர்களுக்கு மாதத்திற்கு ஒரு ரூபாய்க்கு மேல் இல்லை என்று வாடகைக்கு விட்டேன். இரண்டு மாதங்களுக்கு நான் வாடகையும் பெற்றுக்கொண்டேன். நான் கணக்கிட்டது போலவே மூன்றாவது மாதத் தொடக்கத்தில் நகரத்தில் பெரும் மழை பெய்ததையொட்டி கூரை இடிந்து விழுந்தது. ஆண்கள் பெண்கள் குழந்தைகள் என்று எழுநூறு பேர் தியாகியானார்கள்.

என் இதயம் சற்று இலகுவானது போலிருந்தது. இந்த உலகத்தில் உணவும் ஆடைகளும் தேவைப்பட்

டவர்களில் எழுநூறு பேர் குறைந்திருந்தார்கள். இதற்கு மேலாக அவர்கள் எல்லோரும் தியாகிகளாகிச் சொர்க் கத்திற்குச் சென்று விட்டார்கள்.

என்னுடைய நல்ல காரியம் தொடர்ந்து கொண்டிருந் தது. என்னுடைய முயற்சிகள் ஊடாக இரண்டு அல்லது மூன்று பேர் தியாகியாகும் இனிமையான கோப்பையைச் சுவைக்காமல் ஒருநாள் கூட கழிந்ததில்லை.

எந்த வேலையாக இருந்தாலும் உழைக்க வேண் டியிருந்தது. சோலாப்பூரைச் சேர்ந்த கிழவி அமீனா பாய் சிட்லாக்கர் வழக்கமாகப் பாடுவதுபோல். ஆனால் அதை விட்டுத் தள்ளுங்கள். என்னால் வார்த்தைகளை நினைவில் கொண்டுவர முடியவில்லை. என்னுடைய உன்னதமான லட்சியத்திற்கு நான் மிகக் கடுமையாக உழைத்துக் கொண்டிருந்தேன் என்று சொல்வது மட் டும் போதுமானது. பத்துமுறைகளுக்கு மேலாக அவனு டைய பாதையில் வாழைப்பழத் தோலை வீசியிருந்தும் அவனை மூட்டைக்கட்டி அனுப்பப்பட முடியாத பாவப் பட்ட பிராணி ஒருவன் இருந்தான். என்ன இருந்தாலும் மரணம் போலவே தியாகியாவது என்பதும் முன்னரே விதிக்கப்பட்டதுதான். ஒருநாள் அவன் குளியலறையில் வழுக்கி விழுந்தபோது பெருமைப்படக்கூடிய தியாகிகள் கூட்டத்தில் அவனும் சேர்ந்து கொண்டான்.

சமீபத்திய நாட்களில் நான் மிகப் பெரிய குடியிருப்புக் கட்டடம் கட்டுவதில் ஈடுபட்டிருந்தேன். இரண்டு லட் சம் பெறுமானமுள்ள ஒப்பந்தங்கள் என் சொந்தக் கம் பெனியால் செயல்படுத்தப்படுகின்றது. குறைந்தபட்சம் எழுபத்தைந்தாயிரம் ரூபாய் லாபமாகப் பார்க்க முடியும் என்பதில் உறுதியாக இருந்தேன். நான் இந்தக் கட்டடத் தைக் காப்பீடும் செய்து வைத்திருந்தேன். நான் அவ்வ ளவு தரக்குறைவான பொருட்களை உபயோகித்திருந்த தினால், மூன்றாவது மாடி எழுப்பப்படும் போது கட்டடம் நொறுங்கி விழுந்துவிடும் என்று கணக்கிட்டிருந்தேன்.

கட்டுமானப்பணியில் ஈடுபட்டிருக்கும் முன்னூறு பேர்க ளில், அதிர்ஷ்டம் என்று ஒன்றிருந்தால் எவரும் உயி ரோடு இருக்கப்போவதில்லை. ஆனால், உடனடியாக எக்காலத்திற்குமான தியாகி நிலையை அடைந்துவிடு வார்கள்.

ஆனால் அதில் உயிர் பிழைத்தவர்கள் இருக்கிறார் கள் என்றால், அவர்கள் பாவம் செய்தவர்கள் என்ப தோடு அன்பானவனான, இரக்கமுள்ளவனான இறை வனால் மதிப்பிற்குரிய தியாகிகளாக ஏற்றுக்கொள்ளப் பட மறுக்கப்பட்டவர்கள் என்றுதான் அர்த்தம்.

***



# ஒரு நாள்

புதிதாகச் சுதந்திரம் பெற்ற நாட்டிலுள்ள ஒவ்வொரு நகரத்திலும், கிராமத்திலும், தெருக்களிலும் இனிமேல் யாரேனும் பிச்சை எடுத்துக் கொண்டிருந்தால் அவர்கள் தூக்குமேடைக்கு அனுப்பப்படுவார்கள் என்ற செய்தி பரப்பப்பட்டது. உடனடியாகக் கைது செய்யும் படலம் தொடங்கப்பட்டது. எப்படியோ பிச்சைக்காரர்களின் தொந்தரவு ஒழிக்கப்பட்டதைக் கண்டு பொதுமக்கள் மிகவும் சந்தோஷப்பட்டனர்.

நாடோடிப் பாட்டுக்காரனான கபீர் மட்டும்தான் சோகத்தில் மூழ்கியிருந்தான்.

அவன் நெசவாளி சாதியைச் சேர்ந்தவன் என்பதால், "உனக்கு என்ன ஆச்சு நெசவாளி?" என்று மக்கள் கேட்டார்கள்.

"நான் துயரம் கொண்டிருப்பதற்குக் காரணம் துணி இரண்டு நூல்களைக் கொண்டுதான் நெய்யப்படுகிறது. ஒன்று குறுக்காகவும், மற்றொன்று நெடுக்காகவும் இருக்கும். கைது செய்யப்படுவது என்பது குறுக்கானது. பசியோடு இருப்பவனுக்கு உணவளிப்பது என்பது நெடுக்கானது. நீங்கள் எப்படி இந்தத் துணியை நெய்யப் போகிறீர்கள்?"

இந்தியாவில் இருந்து அகதியாய் வந்தவன் - அவன் வக்கீல் தொழிலைச் செய்து வந்தான், மற்றவர்கள் விட்டுச் சென்ற இருநூறு கைத்தறி இயந்திரங்களுக்குச்

சொந்தக்காரனாக்கப்பட்டான். அந்த வழியே சென்ற கபீர் அதைப் பார்த்து அழத்தொடங்கினான்.

"உனக்குச் சொந்தமாக இருக்க வேண்டியதை எனக்குக் கொடுத்துவிட்டார்கள் என்று நீ அழுது கொண்டிருக்கிறாயா?" என்று கேட்டான் அந்த வக்கீல்.

"இல்லை. நான் அழுவதற்கான காரணம் இந்தத் தறியெல்லாம் மறுபடியும் துணி நெய்ய உபயோகப்படாது. நீ எல்லா நூல்களையும் லாபத்திற்கு விற்று விடுவாய். இந்தத் தறி எழுப்பும் சத்தத்தைத் தொடர்ந்து கேட்பதற்கு உனக்குப் பொறுமை இருக்காது. ஆனால் இந்தச் சத்தம்தான் ஒரு நெசவாளி உயிர் வாழ்வதற்கான காரணம்".

ஒருவன் அச்சடிக்கப்பட்ட ஒரு புத்தகத்தில் இருந்த பக்கங்களை எல்லாம் கிழித்துக் காகிதப்பை செய்து கொண்டிருந்தான். கபீர் ஒன்றை எடுத்து அதில் அச்சாகியிருந்ததைப் படித்தான். அவன் கண்களில் இருந்து கண்ணீர் வழிந்தது.

"உனக்கு என்ன ஆயிற்று?" என்று காகிதப்பை செய்து கொண்டிருந்தவன் திகைத்துப்போய் கேட்டான்.

"நீ பை செய்து கொண்டிருக்கும் காகிதத்தில் பார்வையற்ற ஒரு இந்து ஞானி பகத் சூர்தாஸ் எழுதிய ஆன்மிகக் கவிதைகள் அச்சாகியுள்ளன" என்று பதில் தந்தான் கபீர்.

காகிதப்பை செய்து கொண்டிருந்தவனுக்கு ஹிந்தி தெரியாது. ஆனால் அவனுக்குத் தெரிந்த பஞ்சாபியில் பார்வையற்ற பக்தனுக்கு சூர்தாஸ் என்று சொல்வது கிடையாது. அதற்கு அர்த்தம் பன்றி.

"எப்படி ஒரு பன்றி ஞானியாக இருக்க முடியும்?" என்று கேட்டான்.

அந்த நகரத்தில் இருந்த மிகப் பிரம்மாண்டமான கட்டடத்தை, செல்வத்தைக் குறிக்கும் இந்துத் தெய்வ

மான லட்சுமியின் சிலை அலங்கரித்துக் கொண்டிருந் தது. ஆனால் அதில் புதிதாகக் குடிவந்திருந்தவர்கள் - எல்லைக்கு அந்தப் பக்கத்தில் இருந்து வந்த அகதி கள் - ஓர் அழுக்கடைந்த கோணியை எடுத்து அந்தச் சிலையை மூடிவைத்திருந்தார்கள். இதைப் பார்த்த கபீர் அழத்தொடங்கினான்.

"நம்முடைய மதம் உருவ வழிபாட்டைத் தடை செய்கி றது" என்றார்கள் அவர்கள்.

"அழகைக் கொச்சைப்படுத்துவதை உங்கள் மதம் தடை செய்யவில்லையா?" என்று கபீர் கேட்டான்.

ஓர் இராணுவ ஜெனரல் அவனின் படையில் இருந் தவர்களுக்கு உரையாற்றிக் கொண்டிருந்தார். "நம் முடைய பயிர்கள் எல்லாம் நாசமாக்கப்பட்டதால், உண வுக்குப் பற்றாக்குறை ஏற்பட்டுள்ளது. ஆனால் இதில் கவலைப்படுவதற்கு ஏதுமில்லை. என்னுடைய வீரர்கள் வெறும் வயிற்றோடு எதிரியை ஒழித்துக் கட்டுவார்கள்".

பெறப்போகும் வெற்றிக்காக கோஷங்கள் எழுப்பப்பட் டன.

"வீரமிக்க ஜெனரல் அவர்களே, யார் பட்டினியை ஒழித்துக் கட்டுவார்கள்?" என்று கபீர் கேட்டான்.

"அன்புள்ள கடவுள் நம்பிக்கை கொண்ட சகோதரர் களே, உங்களின் தாடி முடியை வளர்த்துக் கொள் ளுங்கள், நெறியற்ற உங்களின் மீசையைச் சிரைத் துக்கொள்ளுங்கள். உங்களின் டிரௌசர்களை எப்படி அணிய வேண்டுமோ அப்படி அணிந்து கொள்ளுங்கள் - அதாவது முட்டிக்கு மேல் ஓர் அங்குலம். அன்புள்ள கடவுள் நம்பிக்கை கொண்ட சகோதரிகளே, உங்களின் முகங்களைப் பெயிண்ட் கொண்டு பூசிக்கொள்ளாதீர் கள். உங்களைத் திரை கொண்டு மறைத்துக்கொள்ளா தீர்கள். இது இறைவனின் கட்டளை."

கபீரின் கண்களில் இருந்து கண்ணீர் வழிந்தது.

"உனக்குச் சகோதரனும் கிடையாது, சகோதரியும் கிடையாது. உன்னுடைய தாடி உண்மையில் கருப்பானதும் கிடையாது. அது சாயம் பூசப்பட்டது. உன்னுடைய வெள்ளைத் தாடியை வெளிக் காட்ட நீ விருப்பப்படவில்லையா?" என்று கேட்டான் கபீர்.

அனல் பறக்கும் விவாதம் அறிவுஜீவிகளுக்குள்ளே நடந்து கொண்டிருந்தது.

"கலை கலைக்காகவே"

"முட்டாள் தனம். கலை வாழ்க்கைக்காகவே"

"நீ நரகத்துக்குப் போ"

"உன்னுடைய ஸ்டாலின் நரகத்துக்குப் போகட்டும்"

"வாயை மூடு! இன்று கலை என்பது வேறு வடிவத்தில் பிரச்சாரம் தான்"

"இந்த உலகத்தில் உள்ள மரபுவாதிகளும் அவர்களின் பிளப்பார்ட்ஸும், பூதலேக்கரும் நரகத்திற்குப் போகட்டும்"

கபீர் அழத்தொடங்கினான்.

"அவன் முதலாளித்துவ மனவேதனையை அனுபவித்துக் கொண்டிருக்கிறான்" என்றான் ஒரு அறிவுஜீவி.

"இல்லை. கலை எதற்கானது என்று நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக அழுகிறேன்" என்றான் கபீர்.

"அவன் தொழிலாளி வர்க்கத்தின் கோமாளி!"

"இல்லை. அவன் முதலாளித்துவ வர்க்கத்தின் கோமாளி!"

நகரத்தில் இருக்கும் விலைமாதுகள் எல்லோரும் இன்னும் முப்பதே நாட்களில் திருமணம் செய்து கொண்டாக வேண்டும் என்று புதுச் சட்டம் அமுல்படுத்தப்பட்டது. விலைமாதுகளின் வாடிய, கவலை கொண்ட முகங்களைப் பார்த்து கபீர் அழத் தொடங்கினான்.

ஒரு மதத்தலைவர் கபீரிடம், "சிறந்த மனிதனே, எதற்காக அழுகிறாய்?" என்று கேட்டார்.

"யார் அவர்களுக்குக் கணவனைத் தேடிக் கொடுப்பார்கள்?" என்று கபீர் கேட்டான்.

அந்த மதத் தலைவர் உரக்கச் சிரிக்கத் தொடங்கினார்.

இது போன்ற அசட்டுத்தனமான கேள்வியை இது வரை யாரும் அவரிடம் கேட்டதேயில்லை.

ஓர் அரசியல் தலைவர் கூட்டத்தில் உரையாற்றிக் கொண்டிருந்தார்.

"என் அன்புச் சகோதரர்களே, நம்முடைய தலையாய பிரச்சனை என்னவென்றால் நம்முடைய பெண்கள், எதிரிகளால் எல்லைக்கு அந்தப் பக்கத்திற்குக் கடத்திச் செல்லப்பட்டிருக்கிறார்கள். நாம் ஏதேனும் செய்யவில்லை என்றால் அவர்கள் எல்லோரும் விபச்சார விடுதியில் கொண்டு விடப்படுவார்கள் என்று எனக்குப் பயமாக இருக்கிறது. நாம் அவர்களை இதிலிருந்து காப்பாற்றியாக வேண்டும். அவர்களை உங்கள் இல்லங்களுக்கு அழைத்துச் செல்லுமாறு நான் கேட்டுக் கொள்கிறேன். உங்கள் குடும்பத்தை அடுத்து யாரேனும் ஒருத்தருக்குத் திருமணம் செய்து வைக்க முயற்சிகள் மேற்கொண்டால் பரிதாபத்திற்குரிய இவர்களை நீங்கள் கவனத்தில் எடுத்துக்கொள்ள வேண்டும்"

இதைக் கேட்டவுடன் கபீர் தேற்ற முடியாத அளவிற்கு அழத் தொடங்கினான்.

அந்தத் தலைவன், "இந்த நல்ல மனிதனைப் பாருங்கள், என்னுடைய வேண்டுகோள் அவனை எந்த அளவிற்கு ஆழமாகப் பாதித்திருக்கிறது" என்றான் கூட்டத்தில்.

"இல்லை. உன்னுடைய வேண்டுகோள் என்னைக் கொஞ்சமும் பாதிக்கவில்லை... நான் அழுவதற்குக்

காரணம் பணக்காரப் பெண் ஒருத்தி உனக்கு இன்னும் கிடைக்காததால், நீ திருமணம் செய்து கொள்ளாமல் இருக்கிறாய் என்று எனக்கு தெரியும்." என்றான் கபீர்.

"இந்தப் பைத்தியக்காரனை வெளியே தூக்கிப்போடுங்கள்" என்று அந்தக் கூட்டம் சீறியது.

தேசத்தின் தந்தை முகமது அலி ஜின்னா இறந்து விட்டார்.

நாடு துக்கத்தில் மூழ்கியது. கையில் பட்டையாகக் கருப்புத் துணி கட்டிக்கொண்டு எல்லோரும் சுற்றிக் கொண்டிருந்தார்கள்.

கபீர் அமைதியாகக் கன்னங்களில் நீர்வழிய அவர்களைப் பார்த்துக்கொண்டு நின்றான்.

"இத்தனைக் கைப்பட்டைகளுக்கு எவ்வளவு துணி தேவைப்பட்டிருக்கும். பசியோடு, நிர்வாணமாய் இருப்பவர்களை மறைக்க இது பயன்பட்டிருக்கும்" என்றான் கபீர் துக்கம் கொண்டாடிக் கொண்டிருந்தவர்களிடம்.

"நீ ஒரு கம்யூனிஸ்ட்" என்றார்கள் அவர்கள்.

"நீ நாட்டைக் காட்டிக் கொடுக்கும் துரோகி"

"நீ பாகிஸ்தானின் விரோதி"

அன்று முதல் முறையாகக் கபீர் சிரித்தான், "ஆனால் நண்பர்களே! நான் என் கையில் கருப்பு, பச்சை, சிவப்புப் பட்டை எதையும் அணிந்திருக்கவில்லை".

***

மண்ட்டோவின் சமர்ப்பணம்
அவன் செய்த தீய செயல்கள் பற்றி
என்னிடம் விவரித்துக் கொண்டிருக்கும் பொழுது,
"நான் அந்த வயதான பெண்மணியைக்
கொன்ற போது, ஏதோ கொலையே
செய்து விட்டது போல் உணர்ந்தேன்"
என்றான். - அவனுக்கு.



## ஊதியம்

**கொள்ளையடிப்பதும், சூறையாடுவதும் தொடர்ந்தது.**

**தீக்கொழுந்துகள் எங்கும் நிறைந்திருந்தன.**

**வெப்ப அளவு உயர்ந்துகொண்டேயிருந்தது.**

ஒரு மனிதன் ஹார்மோனியத்தை வாசித்துக் கொண்டே பாட்டு பாடிக் கொண்டு சந்தோஷமாய்த் தெருவில் போய்க் கொண்டிருந்தான்.

**அவள் தொலை தூரம் சென்று விட்டாள்.**

**என் இதயத்தை உடைத்து விட்டு.**

**இனி யாரை என்னுடையவள் என்பேன்.**

**என் அன்பே...**

ஒரு சிறு பையன் பை நிறைய அப்பளக் கட்டுகளோடு ஓடிக் கொண்டிருந்தான். அவன் ஏதோ தடுக்கி நிலை தடுமாற, ஒரு கட்டு நழுவி கீழே விழுந்தது. அவன் அதை எடுக்கக் குனிந்த போது, ஒரு தையல் மிஷினைத் தலையில் சுமந்து ஓடிக்கொண்டிருந்த ஒரு வயதானவர், "பையா! அது அப்படியே இருக்கட்டும். கொதித்துக் கொண்டிருக்கும் இந்தத் தெருவில் அது தானாகப் பொரிந்து விடும்" என்றார்.

தும்...! ஒரு சாக்கு மூட்டை, கடைத் தெருவின் நடுவில் பெரும் சத்தத்தோடு விழுந்தது. ஒரு மனிதன் வேகமாக ஓடி வந்து, அவன் வைத்திருந்த பெரிய கத்தியால் அதைக் கிழித்துத் திறந்தான். மனிதக் குடலுக்குப் பதிலாக மூட்டையில் இருந்து வெளியே கொட்டியது சர்க்கரை. வெள்ளவெளேரென்று பொடிப்பொடியாய் இருந்

தது. உடனே கூட்டம் சூழ்ந்து கொள்ள, அணிந்திருந்த சட்டையை ஏந்தி அள்ளிப் போடத் தொடங்கினார்கள். கூட்டத்தில் இருந்த ஒருவன் சட்டை ஏதும் அணியாமல் இருந்தான். அவன் தன் இடுப்புத் துணியை அவிழ்த்து, இப்படித்தான் செய்யப்பட வேண்டும் என்பது போல, முற்றிலும் நிர்வாணமாக நின்று கொண்டு, தற்காலிகப் பையாக மாறியிருந்த அந்தத் துணியில் சர்க்கரையை அள்ளிப் போடத் துவங்கினான்.

"வழி விடு! வழி விடு! பார்த்து... வழி விடு" ஒரு டோங்கா பளபளத்துக் கொண்டிருந்த மரச்சாமானை - அது மிகச் சிறந்த மரத்தில் செய்யப்பட்டிருக்க வேண்டும், சுமந்து சென்றது.

தெருவிற்கு எதிர்த்தாற் போலிருந்த உயரமான கட்ட டத்தின் மேல் மாடியில் இருந்து, யாரோ ஒரு மஸ்லின் துணி உருளையை விட்டெறிந்தார்கள். ஆனால் அது கீழே வரும் வழியில் கீழ்த் தளத்தில் இருந்த ஒரு ஜன் னலின் வழியாகப் பாய்ந்து கொண்டிருந்த தீயில் சிக்கித் தரையைத் தொடுவதற்கு முன்பே சாம்பலாக மாறியி ருந்தது.

"பாங்... பாங்..." கார் எழுப்பிய சத்தம் இரண்டு பெண்க ளின் அலறல்களோடு சேர்ந்து கொண்டது.

பத்துப் பதினைந்து பேர் எப்படியோ அந்த மிகப்பெரிய இரும்பு பீரோவை வீட்டிற்கு வெளியே கொண்டு வந்து விட்டார்கள். அவர்கள் கட்டைகள் கொண்டு அதைத் திறக்க முயன்றுக் கொண்டிருந்தார்கள்.

ஒரு கடையில் இருந்து நிறைய 'கௌ அண்டு கேட்' பால் பவுடர் டின்னைச் சுமந்து கொண்டு ஒருவன் வந்தான். நிதானமாகவும் கவனமாகவும் அடியெடுத்து வைத்து நடந்த அவன் மறைந்து போனான் - எவரும் அவன் மீது எந்தக் கவனமும் செலுத்தவில்லை.

ஒரு கத்தல் கேட்டது - "லெமேனேட், வாருங்கள். வாருங்கள். ஒரு புட்டி லெமேனேட் எடுத்துக் கொள் ளுங்கள். இது கோடைக்காலம்."

கழுத்தில் காரின் டயரை மாலையாய்ப் போட்டுக் கொண்டு இருந்தவன், அங்கு வந்து இரண்டு பாட்டில் களை எடுத்துக் கொண்டு, நன்றி கூடச் சொல்லாமல் திரும்பிப் போனான்.

எவனோ ஒருவன் கத்தினான், "உடனடியாகத் தீய ணைப்புப் படைக்குச் சொல்லி அனுப்புங்கள். இல்லை என்றால் எல்லாம் சாம்பலாகிப் போகும்". ஆனாலும் இந்த அறிவுரைக்கு யாரும் எந்தக் கவனமும் செலுத்த வில்லை.

எங்கும் தீ ச்சுவாலை கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருக்க, கொள்ளையடிப்பதும் சூறையாடுவதும் தொடர்ந்து கொண்டிருந்தது. திடீரென்று அங்குத் துப் பாக்கிச் சுடும் சத்தம் கேட்டது. போலீஸ் வந்தபோது அந்த பஜார் வெறிச்சோடிக் கிடந்தது. தொலைவில், புகையால் சூழப்பட்டிருந்த ஒரு காருக்கு அருகில், அவர் கள் ஒருவனைப் பார்க்க, விசிலை ஊதிக் கொண்டே அந்தத் திசையை நோக்கி நகரத் தொடங்கினார்கள். புகைக்கு ஊடாக அவ்வப்போது தெரிந்தும் மறைந்தும் கொண்டிருந்த அந்த உருவத்தைத் துரத்தத் தொடங் கினார்கள். இப்போது அவனைத் தெளிவாகப் பார்க்க முடிந்தது. தினசரி ஊதியத்திற்காக ஆயிரக் கணக் கில் வந்திறங்கும் காஷ்மீர் தொழிலாளிகளில் ஒரு வன். அவன் முதுகில் பெரிய சாக்கு மூட்டை இருந் தது. போலீஸ்காரர்கள் மூர்க்கத்தனமாக தங்களுடைய விசில்களை ஊதினார்கள். இருந்தாலும் அவன் நிற்க வில்லை, அவன் முதுகில் இருப்பது கனமற்ற கோணி மூட்டை இல்லை. அது முழுக்க எதனாலோ அடைக் கப்பட்டு இருந்தது. ஆனாலும் அவன் ஏதோ இறகி

னைச் சுமந்து கொண்டிருப்பது போல ஓடிக் கொண்டிருந்தான்.

போலீஸ்காரர்களுக்குப் பெருமூச்சு வாங்கியது. அவர்களின் விசில்களுக்குக் கூட தொண்டை அடைத்துக் கொண்டது போலும். இதனால் எரிச்சல் கொண்ட ஒரு போலீஸ்காரன் தன்னுடைய துப்பாக்கியை வெளியே எடுத்துச் சுட, அது அந்தக் காஷ்மீர் கூலியின் காலில் தாக்கியது. அந்தச் சாக்குமூட்டை அவனின் முதுகில் இருந்து கீழே விழுந்தது. அவன் நின்று, அடிபட்ட இடத்திலிருந்து இரத்தம் பாய்ந்து கொண்டிருப்பதைக் கண்டான். ஆனால் அதைப் பற்றி எந்தக் கவலையும் கொள்ளாமல், ஒரே மூச்சில் அந்தச் சாக்கு மூட்டையைத் தூக்கித் தன்னுடைய முதுகில் வைத்துக் கொண்டு, மிக வேகமாக நொண்டத் தொடங்கினான்.

"அவன் நரகத்துக்குப் போகட்டும்" என்றான் ஒரு போலீஸ்காரன் அசதியுற்று. அதே கணத்தில் அந்தக் காஷ்மீர் கூலி தடுமாறிக் குப்புற விழ, அந்தச் சாக்கு மூட்டை அவன் மீது கிடந்தது.

போலீஸ்காரர்கள் அவனையும், அந்தச் சாக்கு மூட்டையையும் காவல் நிலையத்திற்குக் கொண்டு வந்தார்கள். வழியில் தன்னைப் பிடித்திருப்பவர்களிடம், "மதிப்பிற்குரிய ஐயா, இந்த ஏழையை ஏன் கைது செய்கிறீர்கள்? நான் எடுத்துக்கொண்டது எல்லாம் இந்த ஒரு அரிசி மூட்டை தான். நான் உயிரோடு இருக்க இதைத் தான் சாப்பிட வேண்டும். இந்த ஏழையை அநியாயமாகச் சுட்டுவிட்டீர்கள்" என்றான். அவர்கள் அவனைப்பற்றிக் கொஞ்சமும் அக்கறை கொள்ளவில்லை.

காவல் நிலையத்தில் கூட தன் நிலையைப் புரிய வைக்க நிறைய உளறிக் கொண்டிருந்தான். "மதிப்பிற்குரிய ஐயா, மற்றவர்கள் விலை உயர்ந்த பொருட்களை எல்லாம் திருடுகிறார்கள். இந்த ஏழை எடுத்தது எல்லாம் ஒரு அரிசி மூட்டை மட்டும் தான். ஐயா, நான்

ரொம்ப ஏழை ஐயா, தினமும் சோறு மட்டுமே தின்கிற வன்..."

இறுதியாகக் கெஞ்சி அசதியுற்ற அவன் தன் நம் பிக்கையை இழந்தான். வழிந்துகொண்டிருந்த வியர் வையை, அழுக்கேறியிருந்த அவனுடைய தொப்பியை எடுத்துத் துடைத்துக்கொண்டான். பிறகு அந்த அரிசி மூட்டையை ஏக்கத்தோடு பார்த்தான். தன்னுடைய இரு கைகளை யும் விரித்து இன்ஸ்பெக்டர் காலில் விழுந்து, "சரிங்க ஐயா, இந்த அரிசியை நீங்களே வைத் துக்கொள்ளுங்கள், என்னுடைய ஊதியத்தை மட்டும் கொடுங்கள்" என்றான்.

***



## ஒத்தழைப்பு

நாற்பது ஐம்பது பேர் கொண்ட ஒரு கட்டுக்கடங்காத கூட்டம், கையில் கம்புகளோடு ஒரு பெரிய வீட்டை நோக்கித் தீர்மானமாக நகர்ந்தது. அவர்களின் நோக்கம் மிகத் தெளிவாக இருந்தது: சூறையாடுதல்.

திடீரென்று நடுத்தர வயதைக் கொண்ட மெலிவான மனிதன், கூட்டத்திற்குள்ளிருந்து கிளம்பி, எல்லோரையும் ஓரமாகத் தள்ளி, அந்தக் கூட்டத்தின் தலைவன் போன்று பேசத் தொடங்கினான். "சகோதரர்களே, இந்த வீட்டில் நிறைய செல்வம் இருக்கிறது. விலை மதிக்க முடியாத பொருட்களைக் கொண்டிருக்கிறது. நாம் அதையெல்லாம் எடுத்து நமக்குள் சமமாகப் பங்கிட்டுக் கொள்வோம்' என்றான்.

பல கம்புகள் காற்றில் அசைக்கப்பட்டன. மூடிய உள்ளங்கைகள் மேலே உயர்ந்து, எழுப்பிய சத்தம் வானத்தைப் பிளந்தது.

நடுத்தர வயதைக் கொண்ட அந்த மெலிந்த மனிதனால் நடத்திச் செல்லப்பட்ட, அந்தக் கூட்டம் நிறைய 'செல்வத்தையும், விலைமதிக்க முடியாத பொருட்களையும்' கொண்டிருப்பதாகச் சொல்லப்பட்ட அந்த வீட்டை நோக்கி நகர்ந்தது.

முன் கதவை அடைந்தவுடன் அந்த மெலிந்த மனிதன் மீண்டும் பேசினான்: 'சகோதரர்களே, உள்ளே இருப்பதெல்லாம் நமக்குச் சொந்தமானது. அப்படி இருக்க யாரும் எதற்கும் அவசரப்பட வேண்டியதில்லை. யார் எதை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று ஒரு

வரோடு ஒருவர் சண்டை போட வேண்டியதில்லை. வாருங்கள் போகலாம்'.

"ஆனால் கதவு பூட்டி இருக்கிறது" யாரோ ஒருவன் கத்தினான்.

"அந்தக் கதவை உடையுங்கள்..." என்றான் ஒருவன்.

"ஆமாம், அந்தக் கதவை உடையுங்கள்" என்று பலர் கத்தினார்கள்.

பல கம்புகள் காற்றில் அசைக்கப்பட்டன. மூடிய உள் ளங்கைகள் மேலே உயர்ந்து, எழுப்பிய சத்தம் வானத் தைப் பிளந்தது.

உதடுகளில் மெல்லிய புன்னகையோடு, அந்த மெலிந்த மனிதன் கொள்ளையடிக்க வந்தவர்களை அமைதியாக இருக்கும்படி சைகை செய்து, 'சகோதரர் களே, சாவியின் உதவியோடு நான் இந்தக் கதவைத் திறக்கப்போகிறேன்' என்றான்.

பிறகு அவன் தன் பாக்கெட்டிலிருந்து ஒரு சாவிக் கொத்தை எடுத்து, அதில் கவனமாக ஒரு சாவியைத் தேர்ந்தெடுத்துப் பூட்டிற்குள் நுழைக்க, அது திறந்து கொண்டது. அந்தக் கனமான மரக்கதவு பெரும் சத்தத் தோடு திறந்து கொள்ள, கூட்டம் உற்சாகத்தில் பைத்தி யம் பிடித்தது போல் உள்ளே ஓடியது.

அந்த மெலிந்த மனிதன் தன்னுடைய சட்டைக் கையி னால் நெற்றி வியர்வையைத் துடைத்து விட்டு, "சகோத ரர்களே, அமைதியாக இருங்கள். இந்த வீட்டிலிருப்பது எல்லாம் உங்களுக்கே சொந்தம். அப்படியிருக்க நீங்கள் இப்படி அவசரப்படுவதில் அர்த்தம் ஏதாவது இருக்கி றதா?" என்று கேட்டான்.

இது உடனடியாக அந்தக் கலகக்காரர்கள் மத்தியில் அமைதியை ஏற்படுத்தியது. அவர்கள் கதவின் வழியாக மிக ஒழுங்கான முறையில் நுழையத் தொடங்கினார் கள். ஆனால் அவர்கள் உள்ளே சென்றபிறகு மீண்டும்

ஒழுக்கங்கெட்டும் முரட்டுத்தனமாகவும், பேராசையோ டும் நடந்துகொண்டார்கள்.

இதைப் பார்த்த அந்த மெலிவான மனிதன் பெரும் வேதனையோடு, 'சகோதரர்களே, முரட்டுத்த னமாக நடந்து கொள்ளாதீர்கள். சண்டை போடுவ தற்கோ மற்றவர்கள் எடுத்துக் கொண்ட பொருளைப் பிடுங்குவதற்கோ என்ன அவசியமிருக்கிறது? எல்லோ ரும் ஒற்றுமையுணர்வோடு வேலையில் ஈடுபடுவோம். மற்றொருவன் விலை உயர்ந்த பொருளை வைத்திருந் தாலும் அவனைப் பார்த்துப் பொறாமைப்படாதீர்கள். இது மிகப்பெரிய வீடு. நிச்சயமாக எல்லோரும் சமமான அளவில் எடுத்துக்கொள்ள முடியும். அதனால் நாம் காட்டுமிராண்டிகளைப் போல நடந்து கொள்ள வேண் டிய அவசியம் ஏதுமில்லை. அது, உங்களுக்குச் சொந்த மானதை நீங்களே உடைப்பதில் கொண்டு விடும். அத னால் உங்களுக்குத்தான் நஷ்டம்.'

கூட்டத்தில் மறுபடியும் ஒழுங்கு தோன்றிற்று. அந்த வீட்டிலிருந்தது எல்லாம் நிதானமாகவும் ஒழுங்கான முறையிலும் அகற்றப்பட்டது.

எந்நேரமும், அந்த மெலிந்த மனிதன் தன்னுடைய அறிவுரையை வழங்கிக் கொண்டேயிருந்தான்.

"இங்கு பார் நண்பா, அந்த ரேடியோவை மிகக் கவ னமாகத் தூக்கு. இல்லை என்றால் அதை உடைத்து விடுவாய். ஆமாம் அந்த ஆன்டனாவை விட்டு விடக்கூ டாது".

"அது தேக்கு மரத்தால் செய்யப்பட்ட மேசை. தந்தத் தால் வேலைப்பாடுகள் கொண்டுள்ளது. அதை எளி தாக மடித்துக் கொள்ளலாம்... இப்படி"

"இல்லை இல்லை இங்கே குடிக்காதே. அது உன் தலைக்கு ஏறிவிடும். பாட்டிலை உன்னோடு எடுத்துப் போ"

"கவனமாக இரு. நான் சுவிட்ச்சை அணைத்து விடுகிறேன். இல்லை என்றால் மோசமாக ஷாக் அடிக்கும்."

ஓர் அறையில் ஏதோ சண்டை நடந்தது. பட்டுத் துணிச்சுருளை யார் எடுத்துக் கொள்வது என்று கொள்ளை அடிக்க வந்தவர்களில் நான்கு பேர் சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள். மெலிந்த மனிதன் இந்த முறை மிகவும் நயமான முறையில், "நீங்கள் அதைச் சுக்கு நூறாகக் கிழிக்கத்தான் போகிறீர்கள். இந்த வீட்டில் எங்கேயாவது டேப்பும் கத்திரிக்கோலும் கிடைக்கும். நாம் அதை முதலில் தேடி எடுப்போம். பிறகு துணியை அளந்து நான்கு சம அளவில் வெட்டிக்கொள்வோம்" என்றான்.

திடீரென்று ஒரு நாய் குரைக்கும் சத்தம் கேட்டது, "லொள்... லொள்... லொள்." ஒரு பெரிய அல்ஷேசன் நாய் அறைக்குள் பாய்ந்தது. அது அத்துமீறி நுழைந்த பலர் மீது பாய்ந்து அவர்களைத் தரையில் சாய்த்தது.

"டைகர், டைகர்" அந்த மெலிந்த மனிதன் கத்தினான்.

ஒருவனின் தொண்டையைப் பிடிக்கப் போன டைகர், உடனடியாக அவனை விட்டு விட்டு, தன் கால்களுக்கு இடையில் வாலைச் சுருட்டிக் கொண்டு பூமியை நோக்கிப் பார்த்தபடி அந்த மெலிந்த மனிதன் அருகில் வந்து நின்றது.

டைகரின் முரட்டுப் பிடியிலிருந்து தப்பித்த அந்த ஒருவனைத் தவிர, எல்லோரும் ஓடிப்போய் விட்டார்கள்.

தனியாக விடப்பட்ட அவன் மட்டும் அந்த மெலிந்த மனிதனைப் பார்த்து, 'நீங்கள் யார்?' என்று கேட்டான்.

"இந்த வீட்டுக்குச் சொந்தக்காரன்." என்று சொல்லிப் புன்னகைத்து, மேலும், "ஜாக்கிரதையாக இரு. அந்தக் கண்ணாடி ஜாடியை நழுவ விட்டுவிடுவாய்... அது உன் விரல்களில் இருந்து நழுவிக் கொண்டிருக்கிறது" என்றான்.



## பாதி பாதி

இருப்பதிலேயே மரத்தால் செய்யப்பட்ட மிகப் பெரிய பணப் பெட்டியை அவனுக்கு என்று தேர்ந்தெடுத்துக் கொண்டான். ஆனாலும் எவ்வளவு முயன்றும் அவனால் அதனை நகர்த்தக்கூட முடியவில்லை.

விலை மதிப்புள்ள பொருள் எதையும் எடுத்துக் கொள்ள முடியாமல் போக இன்னொருத்தன் அவனிடம் வந்து, "உனக்கு உதவி தேவையா?" என்று கேட்டான்.

முதலாமவன் அதை ஏற்றுக் கொண்டான். சேவை செய்ய முன் வந்தவன், பிணம் போல் கனத்த அதைத் தன்னுடைய வலுவான கரங்களால், ஒரே மூச்சில் தூக் கித் தன்னுடைய அகன்ற முதுகில் வைத்துக் கொண் டான். இருவரும் நடக்கத் தொடங்கினார்கள்.

உண்மையில் அது பெரும் கனத்தோடு இருந்தது. அதைச் சுமந்து கொண்டிருந்தவன் தன்னுடைய முதுகு உடைந்து போகும் அல்லது பிசகிப் போய் கால் நொண் டியாகி விடும் என்று நினைத்தான். எது அவனை உற் சாகம் கொள்ள வைத்தது என்றால், பரிசு கிடைக்கும் என்ற எதிர்பார்ப்புதான்.

பணப்பெட்டியைக் கண்டுபிடித்தவனின் உடல் அவ் வளவு திடமான நிலையில் இல்லை. ஆனாலும் அதன் உரிமையாளன் என்று நிரூபிக்க, அது பாதுகாப்பான இடத்திற்குப் போய்ச் சேரும்வரை அந்தப் பரிசை ஒரு கையால் உறுதியாகப் பிடித்துக்கொண்டே நடந்தான்.

பத்திரமான இடத்திற்குப் போய்ச் சேர்ந்தவுடன், இவ் வளவு கடினமான உழைப்பைக் கொடுத்தவன், "என்

னுடைய பங்கு என்னவென்று எனக்குத் தெரிய வேண் டும்" என்றான்.

"கால் பங்கு"

"அது போதாது"

"போதாதா? நீ அதிகம் எதிர்பார்க்கிறாய். ஆனால் நினைவில் வைத்துக்கொள், நான் தான் அதைக் கண் டுபிடித்தேன்."

"உண்மைதான், ஆனால் யார் இவ்வளவு தூரம் முது கில் தூக்கி வந்தது?"

"பாதி, பாதிக்கு என்ன சொல்கிறாய்?"

"சரி, உள்ளே என்ன இருக்கிறது என்று பார்ப்போம்"

பணப்பெட்டி திறக்கப்பட்டது. நீண்ட வாளைப் பிடித் துக் கொண்டிருந்த ஒரு மனிதன் வெளியே வந்தான். அவன் உடனடியாக இரண்டு பங்குதாரர்களையும் நான் காகப் பிரித்தான்.

***



## சரியான உபயோகம்

பத்துச்சுற்று சுட்டு, மூன்று பேரைக் கொன்ற அந்தப் பதானி, தானும் வீரமிக்கவர்கள் கூட்டத்தோடு இணைந்துகொண்டதாகச் சந்தோஷப்பட்டான்.

அங்கு மிக மோசமான குழப்பம் நிலவியது. மக்கள் தலைதெறிக்க ஓடிக்கொண்டிருந்தார்கள். பொருட்களை அபகரிப்பதிலும், கொலை செய்வதிலும் ஈடுபட்டிருந்தனர். கையில் பெருமையாகத் துப்பாக்கியைப் பிடித்திருந்த பதானி, அந்தக் கூட்டத்தோடு சேர்ந்து ஒரு மணி நேரத்திற்கு மேலாகச் சண்டை போட்டு, எப்படியோ ஒரு பரிசை வென்றெடுத்தான் - ஒரு தெர்மாஸ் ஃபிளாஸ்க்.

போலீஸ் வந்தவுடன், பதானி உட்பட எல்லோரும் ஓடத் தொடங்கினார்கள்.

மயிரிழையில் அவன், தலையில் தோட்டா பாய்வதில் இருந்து தப்பித்தாலும் அவன் அந்தச் சிவப்பு ஃபிளாஸ்க்கை மட்டும் விடவில்லை.

பெருமையோடு அவன் தன்னுடைய நண்பர்களிடம் இந்தப் பரிசைக் காண்பித்த போது, ஒருவன் சிரித்துக் கொண்டே,

"கான் சாகிப் நீ என்ன எடுத்து வந்திருக்கிறாய் என்று தெரியுமா?" என்று கேட்டான்.

உற்சாகம் கொண்ட கண்களோடு இருந்த பதானி பளபளத்துக் கொண்டிருந்த அந்த ஃபிளாஸ்க்கைப் பார்த்து, "ஏன்?" என்று கேட்டான்.

"அது ஒரு வித்தியாசமான புட்டி. குளிர்ச்சியான பொருளைக் குளிர்ச்சியாகவும், வெப்பமான பொருளை வெப்பமாகவும் வைத்திருக்கும் என்று உனக்குத் தெரியுமா?"

ஃபிளாஸ்க்கைத் தன்னுடைய பெரிய டவுசர் பாக்கெட்டில் பத்திரமாகச் சொருகிக்கொண்டு அந்த பதானி சொன்னான், "நல்லது. என்னுடையதை இதனுள் வைத்துக் கொள்வேன். அதைக் குளிர்காலத்தில் சில்லென்றும், கோடைக் காலத்தில் வெப்பத்தோடும் வைத்திருக்க உதவும்".

***



## அறியாமையின் பயன்கள்

துப்பாக்கியின் குதிரை அழுத்தப்பட, எரிச்சல் கொண்டு 'உஸ்...' சத்தத்தோடு தோட்டா வெளியே பாய்ந்தது.

ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்துக்கொண்டிருந்த மனிதன் சத்தம் எழுப்பாமல் கவிழ்ந்து விழுந்தான்.

சிறிது நேரம் கழித்து மீண்டும் துப்பாக்கியின் குதிரை அழுத்தப்பட்டது. இரண்டாவது தோட்டா கோபத்தில் உறுமிக் கொண்டே வெளியேறியது.

தண்ணீர் சுமந்து கொண்டிருந்தவன் போட்டிருந்த ஆட்டுத்தோல் கிழிந்தது. அவன் கவிழ்ந்து விழ, அவ னின் இரத்தம் தண்ணீரோடு கலந்து தெருவில் ஒரு குட்டையை உருவாக்கியது.

துப்பாக்கியின் குதிரை மூன்றாவது முறையாக அழுத் தப்பட்டது. தோட்டா குறி தவறிப்போய் ஒரு மண் சுவரில் புதைந்து கொண்டது.

நான்காவது ஒரு வயதான பெண்மணியைப் பின்புற மாகத் தாக்கியது. அவர் கத்துவதற்குக்கூட நேரமில்லா மல் கீழே விழுந்தார்.

ஐந்தாவதும் ஆறாவதும் வீணாக்கப்பட்டது. யாரும் கொல்லப் படவில்லை, யாரும் காயப்படவில்லை.

குறி பார்த்தவன் ஏமாற்றத்தோடு காணப்பட்டான். திடீரென்று அவனின் கண்கள் தெருவில் ஒரு குழந்தை ஓடிவருவதைப் பார்த்தது. அவன் தன்னுடைய துப்பாக் கியை உயர்த்தி அந்தக் குழந்தையைக் குறி பார்த்தான்.

"நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" உடனிருந்தவன் கேட்டான்.

"ஏன்?"

"உன் துப்பாக்கியில் தோட்டாக்கள் இல்லை"

"வாயை மூடு, அந்தச் சிறு குழந்தைக்கு அது எப்படித் தெரியும்?"

***



## அவசியமான நடவடிக்கைக்கு

தாக்குதல் தொடங்கியவுடன் அந்த வட்டாரத்தில் இருந்த சிறு பான்மையினர் சிலர் கொல்லப்பட்டார்கள். உயிரோடு இருந்தவர்கள் ஓடிப்போனார்கள். ஆனால் ஒரு கணவனும் மனைவியும் மட்டும் அவர்களுடைய வீட்டின் அடியில் இருந்த அறையில் பதுங்கிக் கொண் டார்கள்.

எந்த நொடியும் கொலைகாரர்களால் கண்டுபிடிக் கப்படுவோம் என்ற பயத்தோடு இரண்டு இரவுகளைக் கழித்தார்கள்.

யாரும் வரவில்லை.

மேலும் இரண்டு இரவுகள் கழிந்த பிறகு, மரணம் பற் றிய பயம் பின்னுக்குப் போக பசியின் வேதனை அந்த இடத்தை எடுத்துக் கொண்டது.

மேலும் நான்கு நாட்கள் கழிந்தன. இப்போது அவர் கள் உயிரோடு இருப்பதைப் பற்றியோ, கொலை செய் யப்படுவது பற்றியோ எந்தக் கவலையும் படமுடியாத நிலைக்கு வந்து சேர்ந்தார்கள். அவர்களின் மறைவிடத் தில் இருந்து வெளியே வந்தார்கள்.

மற்றவர்கள் கவனத்தை ஈர்க்க, "நாங்கள் சரணடைய வந்திருக்கிறோம். எங்களைக் கொன்று விடுங்கள்" என்று மிகவும் சிரமப்பட்டு, ஈனஸ்வரத்தில் சொன்னார் கள்.

இவர்களின் உரையாடலில் பங்கெடுத்துக் கொண்ட வர்கள், "எங்களுடைய மதம் கொலை செய்வதை அனு மதிப்பதில்லை" என்றார்கள்.

அவர்கள், எல்லோரும் ஜைன மதத்தைச் சேர்ந்தவர்கள்.

அவர்களுக்குள் ஆலோசித்த பிறகு, சோர்வுற்றிருந்த அந்தத் தம்பதிகளை வேறு பகுதியில் இருந்தவர்களிடம் 'அவசியமான நடவடிக்கைக்கு' ஒப்படைத்தனர்.

***



## அதிசய மனிதன்

கொள்ளை அடிக்கப்பட்ட பொருட்களை மீட்பதற்காகப் போலீஸ் பல வீடுகளைச் சோதனை செய்தார்கள்.

பயந்துபோன மக்கள், கொள்ளையடித்து வந்த பொருட்களை நடு இரவில் ஜன்னல்களுக்கு வெளியே விட்டெறிந்தார்கள். சட்டத்தின் முறையற்ற நடவடிக்கைகளில் இருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காக நேர்மையாக வாங்கிய பொருட்களைக்கூட சிலர் விட்டெறிந்தார்கள்.

ஒருவனுக்கு மட்டும் பிரச்சனை இருந்தது. ஒரு மளிகைக் கடை சூறையாடப்பட்ட போது, எடுத்து வந்த இரண்டு பெரிய சர்க்கரை மூட்டைகள் அவனிடம் இருந்தன. ஓர் இரவு அவன் எப்படியோ அதை அந்த வட்டாரத்தில் இருந்த கிணற்றுக்கு இழுத்துச் சென்றான். ஒரு மூட்டையைச் சுலபமாகக் கிணற்றுக் குழிக்குள் தூக்கிப் போட்டான். ஆனால் இரண்டாவதைத் தூக்கிப் போடும் போது, அதோடு சேர்ந்து அவனும் கிணற்றுக்குள் விழுந்தான்.

அவனின் அலறல் எல்லோரையும் எழுப்பி விட்டது. கயிறு கிணற்றுக்குள் இறக்கப்பட்டாலும் பயன் ஏதும் இல்லை. இறுதியாக இரண்டு வாலிபர்கள் உள்ளே இறங்கி விழுந்தவனை வெளியே இழுத்து வந்தார்கள். ஆனால் அவன் அடுத்த சில மணிநேரங்களில் இறந்து போனான்.

அடுத்த நாள் காலை அந்தக் கிணற்றில் இருந்து தண்ணீர் எடுத்துக் குடித்த போது அது மிகவும் இனிப் பாக இருந்தது.

அன்று இரவிலிருந்து அந்த அதிசய மனிதனின் சமா தியில், விளக்குகள் ஏற்றப்பட்டு பிரார்த்தனை செய்யப் பட்டது.

***



## சரியான கண்காணிப்பு

'அ' தன்னுடைய நண்பன், 'ஆ'வும் அதே மதத்தைச் சேர்ந்தவன் தான் என்று அறிமுகப்படுத்தி, இராணுவக் கண்காணிப்பில் பாதுகாப்பான இடத்திற்குப் போய்க் கொண்டிருந்த ஒரு வண்டியில் இருவருக்கும் இடம் பிடித்துக் கொண்டான், அது பாதுகாப்பான இடத்தை நோக்கி நகர்ந்தது.

ஏற்றுக்கொண்ட மதத்திற்கு ஏற்றாற்போல் தன்னுடைய பெயரையும் மாற்றிக்கொண்டிருந்த அந்த 'ஆ' பயணத்தின் போது சிப்பாய்களிடம், "சமீபத்தில் இந்தப் பகுதியில் ஏதேனும் அசம்பாவிதங்கள் நடந்ததா" என்று கேட்டான்.

"அதிகம் இல்லை" என்று பதிலளித்த அந்தச் சிப்பாய் மேலும், "ஒரு நாள் பக்கத்தில் இருக்கும் குடியிருப்பில் ஒரு நாய் செத்துக் கிடந்ததைக் கண்டெடுத்தோம்" என்றான்.

மிகவும் அதிர்ச்சி அடைந்த 'ஆ', "வேறு ஏதேனும் நடந்ததா?" என்று கேட்டான்.

"இல்லை. மூன்று கிறுக்கிகளின் பிணங்கள் மட்டுமே ஒரு ஓடையில் மிதந்து கொண்டிருந்ததைக் கண்டுபிடித்தோம்".

மிரண்டு போய் இருந்த 'ஆ' வுக்கு இராணுவத்தின் நடுநிலையை உணர்த்த விரும்பிய 'அ', "இராணுவம் எதுவுமே செய்வதில்லையா?" என்று சிப்பாய்களைப் பார்த்துக் கேட்டான்.

"நிச்சயமாக. எல்லாமே சரியான கண்காணிப்பில்தான் செய்யப்படுகிறது" என்று பதில் வந்தது.

***



## மிருகத்தனம்

மிகுந்த சிரமத்தோடு கணவனும் மனைவியும் வீட்டில் உள்ள சில மதிப்புள்ள பொருட்களோடு தங்களை எப்படியோ காப்பாற்றிக் கொண்டார்கள்.

ஆனால் அவர்களின் வயது வந்த மகளைக் காணவில்லை.

அந்தத் தாய் தன்னுடைய, பெண் கைக்குழந்தையை நெஞ்சோடு இறுக்க அணைத்துக் கொண்டாள்.

எருமை மாடு ஒன்று அவர்களிடம் இருந்தது. கலகக்காரர்கள் அதை இழுத்துச் சென்றார்கள். பசுமாடு கலகக்காரர்கள் பார்வையிலிருந்து எப்படியோ தப்பித்தது. ஆனால் அதன் கன்றுக்குட்டியைக் காணவில்லை.

கணவனும், மனைவியும், கைக்குழந்தையும், பசுமாடும் ஓர் மறைவிடத்தில் பத்திரமாக இருந்தார்கள். அப்போது இருட்டு மிக மோசமாகக் கறுத்துக் கிடந்தது. அந்தப் பெண்குழந்தை பயத்தால் அழுதபோது, அது அசைவற்ற அந்த இரவில் மேளம் கொட்டுவது போன்ற சத்தத்தை எழுப்பியது. தாய் நடுங்கிப் போனாள். விரோதிகளுக்கு இந்தச் சத்தம் கேட்காமல் இருக்கக் குழந்தையின் வாயைத் தன் கையால் மூடினாள். சத்தம் சற்றுக் குறைந்தது. மேலும் பாதுகாப்பிற்காகத் தந்தை ஒரு தடித்த சொரசொரப்பான துணியைப் போட்டு அந்தக் குழந்தையை மூடினார்.

சில நிமிடங்கள் கழிந்தது. திடீரென்று சற்றுத் தொலைவில் இருந்து கன்றுக்குட்டி ஒன்று கத்தியது. இந்தச் சத்தத்தைக் கேட்ட பசு மாட்டின் காது

கள் சிலிர்த்துக் கொண்டு விறைப்பானது. அது மிகவும் அமைதியற்ற நிலையில் மேலும் கீழும் நகர்ந்து சத்த மாகத் திரும்பக் குரல் கொடுத்தது. அவர்கள் அதை அமைதியாக இருக்க வைக்க முயன்றார்கள். ஆனால் முடியவில்லை.

இந்தச் சத்தம் இவர்களைத் தேடிக்கொண்டிருந்த வர்களை உஷார் படுத்தியது. எரிந்து கொண்டிருந்த தீவெட்டி வெளிச்சங்கள் தொலைவில் நிழலாடின.

அந்தப் பெண் அவளின் கணவரிடம் கோபமாக, "இந் தக் கேடு கெட்ட மிருகத்தை ஏன் நம்மோடு இழுத்து வந்தீர்கள்?" என்று கேட்டாள்.

***



## சந்தோஷமான நேரம்

.... XX XX...... அம்ரித்சர், குவாலியர் மற்றும் பம்பாயில் மகாத்மா காந்தியின் மரணத்தைக் கொண்டாடும் விதமாக இனிப்புகள் வழங்கப்படுவதாகத் தகவல்கள் வந்து கொண்டிருக்கின்றன... XXX... ... XXX...

(அசோஸியேடட் பிரஸ்)

***



## ஜவ்வு மிட்டாய்

காலை ஆறு மணிக்கு, பெட்ரோல் நிலையத்திற்கு அருகில் தள்ளுவண்டியில் ஐஸ் விற்றுக்கொண்டிருப்பவன் கத்தியால் குத்திக் கொல்லப்பட்டான். அவனின் உடல் ஏழுமணி வரை தெருவில் கிடந்தது. ஐஸ் கட்டிகளில் இருந்து உருகிய தண்ணீர் அவன் மீது சொட்டிக் கொண்டே இருந்தது.

ஏழே கால் மணிக்கு போலீஸ் அந்தப் பிணத்தைத் தூக்கிச் சென்றது. உருகிக் கொண்டிருந்த ஐஸும், இரத்தமும் மட்டும் தெருவில் கிடந்தது.

அவ்வழியே ஒரு டோங்கா வந்தது. ஒரு குழந்தை, அங்கே உறைந்து போய் பளபளத்துக் கொண்டிருந்த ரத்தத்தைப் பார்த்தது. அந்தக் குழந்தையின் வாயில் எச்சில் ஊறியது. அம்மாவின் ரவிக்கையைப் பிடித்து இழுத்து, "அம்மா அங்க பார் ஜவ்வு மிட்டாய்" என்றது.

***



## துணிச்சலான செயல்

அந்தச் சுற்று வட்டாரத்தில் எல்லாமே தீ வைக்கப் பட்டு எரிந்து போயின - ஒரே ஒரு கடை மட்டும் தப்பித் தது.

அந்தக் கடையின் அறிவிப்புப் பலகையில் இவ்வாறு எழுதப்பட்டிருந்தது.

'கட்டடங்கள் கட்டுவதற்கான எல்லாப் பொருட்களும் இங்கு விற்கப்படும்.'

***



## பதானிக்காரன்

"ஏய் நில்லு, அப்படியே நில்லு, யார் நீ?"

"நான்... நான்... நான்..."

"சாத்தானுக்குப் பிறந்தவனே, உடனே சொல்...
நீ இந்துவா, முசல்மானா?"

"முசல்மான்"

"சரி, உன்னுடைய நபி யார்"

"முகமது கான்"

"அவன் போகட்டும்."

***



## எச்சரிக்கை

மிகப்பெரிய போராட்டத்திற்குப் பிறகு அந்த வீட்டின் சொந்தக்காரர் வெளியே இழுத்து வரப்பட்டு உதைத் துத் தள்ளப்பட்டார்.

ஆனால் அவர் உடனடியாக எழுந்து கொண்டு தன்னு டைய ஆடைகளில் ஒட்டியிருந்த தூசுகளை மிகக் கண் ணியத்தோடு தட்டிவிட்டு அந்தக் கலகக்காரர்களை நோக்கி விரலை நீட்டிச் சொன்னார், "நீங்கள் என்னைக் கொலை கூடச் செய்யலாம், ஆனால் நான் உங்களை எச்சரிக்கிறேன். என் பணத்தின் மீது மட்டும் கை வைக் காதீர்கள்."

***



## நிரந்தர விடுமுறை

"அவனைப் பிடித்துக்கொள். அவனைத் தப்பிக்க விடாதே"

கொஞ்ச தூரம் துரத்திய பிறகு, வேட்டையாடப் பட்டவன் அகப்பட்டுக் கொண்டான். அவன் குத்திக் கொலை செய்யப்பட இருந்த அந்தத் தருணத்தில் நடுங் கிக் கொண்டே, "தயவு செய்து என்னைக் கொலை செய்யாதீர்கள். தயவு செய்து என்னை விட்டுவிடுங்கள்... நான் என் வீட்டிற்கு விடுமுறையில் போய்க் கொண்டி ருக்கிறேன்" என்றான்.

***



# செருப்பு மாலை

அந்தக் கூட்டம் திடீரென்று இடது பக்கம் திரும்ப, அதன் கோபம் எல்லாம் இப்போது சர் கங்கா ராமின் பளிங்குச் சிலை மீது திரும்பியது. அவர்கள் அந்தச் சிலை மீது கற்களை விட்டெறிந்தார்கள். ஒருவன் மேலே ஏறி அந்தச் சிலையின் முகத்தைத் தார் கொண்டு பூசினான். இன்னொருவன் செருப்பு மாலையை அந்தச் சிலையின் கழுத்தில் போடுவதற்கு இருந்த சமயத்தில் போலீஸ் வந்து, துப்பாக்கியால் சுடத் தொடங்கியது.

செருப்பு மாலையைப் பிடித்திருந்தவன் சுடப்பட்டான். அவன் அருகில் இருந்த சர் கங்கா ராமின் மருத்துவமனைக்குக் கொண்டு செல்லப்பட்டான்.

***



## தன்னடக்கம்

ஓடிக்கொண்டிருந்த ரயிலைக் கட்டாயப்படுத்தி நிறுத்தினார்கள். நிறுத்தியவர்கள் 'அந்த' மதத்தைச் சேர்ந்தவர்கள் எல்லோரையும் திட்டமிட்ட முறையில் பொறுக்கி எடுத்து வாளாலும், துப்பாக்கியாலும் படுகொலை செய்தார்கள். மற்ற பயணிகள் எல்லோருக்கும் பாலும், அல்வாவும், பழங்களும் வழங்கினார்கள்.

இரயில் வண்டி புறப்படுவதற்கு முன், இந்த விருந்தோம்பலுக்கு ஏற்பாடு செய்திருந்த கூட்டத்தின் தலைவன், பிரயாணிகள் முன் ஒரு சொற்பொழிவை நிகழ்த்தினான்: "அன்புள்ள சகோதர சகோதரிகளே, இந்த ரயில் வருவது பற்றிய தகவல் எங்களுக்குத் தாமதமாகத்தான் கிடைத்தது. அதனால்தான், உங்களை இன்னும் சிறப்பாக உபசரிக்க முடியாமல் போனது".

***



## பிடிவாதம்

"முடியாது... முடியாது... எக்காரணங்கள் கொண்டும் நான் சீக்கியனாக மாறுவதற்குச் சம்மதிக்க மாட்டேன். எனக்கு என்னுடைய சவரக்கத்தி திரும்ப வேண்டும்."

***



## விட்டுக்கொடுத்தல்

"வேண்டாம்... தயவு செய்து, என் கண் முன்னால் என்னுடைய மகளைக் கொலை செய்யாதீர்கள்."

"சரி, சரி, அவளின் உடைகளை எல்லாம் எடுத்து விட்டு, மற்ற பெண்களோடு அவளைச் சேர்த்து விடுங்கள்."

***



## என்னதான் வேறுபாடு

"நான் என் கத்தியை அவனின் குரல்வளையில் வைத்து மெதுவாக மிக மெதுவாக, 'ஹலால்' முறையில் செய்யப்படுவது போல அவனைக் கொன்றேன்".

"நீ என்ன செய்திருக்கிறாய்?"

"ஏன்?"

"ஏன் அவனை அந்த முறையில் கொலை செய்தாய்?"

"எனக்கு அப்படிச் செய்வதில் தான் சந்தோஷம்".

"உன் சந்தோஷத்தைப் பற்றி எவன் கவலைப்பட்டான்?. 'ஜட்கா' முறையில் செய்யப்படுவதைப் போல நீ, அவனின் கழுத்தை ஒரே வீச்சில் துண்டாக்கியிருக்க வேண்டும். இது போல"

ஹலால் முறையில் படுகொலை செய்தவன் 'ஜட்கா' முறையில் படுகொலை செய்யப்பட்டான்.

***



# மோசமான வியாபாரம்

இரண்டு நண்பர்கள் அவர்களிடம் இருந்த பணத்தை எல்லாம் ஒன்று சேர்த்தார்கள். ஏறக்குறைய இருபதுக்கு மேல் காண்பிக்கப் பட்ட பெண்களில் இருந்து, கடைசி யாக அவர்கள் ஒருத்தியைத் தேர்ந்தெடுத்தார்கள். அவ ளின் ஒருநாள் விலை நாற்பது ரூபாய்.

அவளோடு ஓர் இரவைக் கழித்தபின் ஒருவன், "உன் பெயர் என்ன?" என்று கேட்டான்.

அவளின் பெயரைக் கேட்டவுடன், அவன் வெறிபிடித் தவன் போல் ஆனான். "ஆனால் எங்களிடம் நீ 'அந்த' மதத்தைச் சேர்ந்தவள் என்றே சொல்லப்பட்டது"

"உங்களிடம் பொய் சொல்லியிருந்தார்கள்" என்று அந்தப் பெண் பதில் தந்தாள்.

அவன் தன் நண்பனிடம் ஓடினான். "அந்தத் தேவ டியாப் பசங்க நம்மை ஏமாற்றி விட்டார்கள். நம்முடைய மதத்தைச் சேர்ந்த பெண்ணையே நமக்கு விற்றிருக்கி றார்கள். வா, நாம் இந்தப் பெண்ணைத் திருப்பி விட்டு விடுவோம்".

***



## உரம்

அவன் தன் நண்பன் தற்கொலை செய்து கொண்டது பற்றி கீழ்க்காணும் கருத்தைக் கொண்டிருந்தான்:

அவன் சரியான முட்டாள்... நான் அவனிடம் எத்தனை முறை சொல்லியிருப்பேன்... "வலுக்கட்டாயமாக உன் தாடி சிரைக்கப்பட்டதனாலேயோ, நீண்ட தலைமுடி கத்திரிக்கப்பட்டதனாலேயோ, உன்னுடைய நம்பிக்கை சரி செய்ய முடியாதது போல் ஆகிவிடாது... உன்னுடைய முகத்தையும், தலையையும் தயிர் கொண்டு தினமும் தேய்த்துக்கொள். குருவின் அருளால் ஒரு வருடத்தில் உன்னுடைய முடி வளர்ந்துவிடும்".

***



## பிழை

வயிற்றை மிகச் சுத்தமாகக் கிழித்துக்கொண்டு அந்தக் கத்தி சரியான நேர்கோட்டில் அவனின் தொப்புளுக்குக் கீழ் இறங்கியது.

அதில் அவனின் பைஜாமா நாடாவும் வெட்டப்பட்டது.

கத்தியைப் பிடித்திருந்தவனிடமிருந்து, அந்த வார்த்தைகள் வருத்தத்தோடு வெளியேறின: "ச்சே... ச்சே... நான் தவறு செய்து விட்டேன்".

***



## கடவுள் உயர்ந்தவன்

அந்த இரவு ஒரு வழியாக ஒரு முடிவுக்கு வர, அந்தத் தாசியின் வாடிக்கையாளர்கள் ஒவ்வொருவராகக் கிளம்பிச் செல்லத் தொடங்கினார்கள்.

அந்த இளம் தாசியின் பாட்டு வாத்தியார் சந்தோஷத்தால் பூரித்துப் போய், "நம்மிடமிருந்தது எல்லாம் கொள்ளையடிக்கப்பட்டு, கையில் காசில்லாமல் இங்கு வந்து சேர்ந்தோம். ஆனால், கருணை உள்ளம் படைத்த இறைவன், சில நாட்களில் நம்முடைய செல்வத்தை நம்மிடம் திருப்பிக் கொடுக்க வைத்தான்" என்றார்.

***



# முன்னெச்சரிக்கை ஏற்பாடுகள்

முதல் சம்பவம் தெருமுனையில் இருந்த ஒரு சிறு ஹோட்டல் முன்பு நடந்தது. உடனடியாக அங்கு ஒரு போலீஸ்காரன் போடப்பட்டான்.

இரண்டாவது சம்பவம் ஒரு மளிகைக்கடைக்கு அருகில் நடந்தது. முதல் சம்பவம் நடந்த இடத்திலிருந்து இரண்டாவது சம்பவம் நடந்த இடத்திற்கு அந்த போலீஸ்காரன் மாற்றப்பட்டான்.

மூன்றாவது சம்பவம் நடுராத்திரியில் சலவைக் கடை முன்பு நடந்தது.

அந்தப் போலீஸ்காரனைக் கொலை நடந்த புது இடத்திற்குப் பாதுகாப்பாய் நிற்கச் சொன்னபோது அவன் சற்று நேரம் சிந்தித்து, "ஐயா அடுத்த சம்பவம் எங்கே நடக்கப்போகிறது என்று தெரிந்து கொண்டு என்னை அங்கே போட முடியுமா?" என்று கேட்டான்.

***



## நன்றி கெட்டவர்கள்

"எவ்வளவு வெட்கம் கெட்டவர்கள் நாமெல்லாம். எவ்வளவோ சிரமப்பட்டு நான் மசூதியின் முன் ஐம்பது பன்றிகளைக் கொன்று போட்டேன். ஆனால், என்ன நடந்தது? ஒரு வாடிக்கையாளன் கூட வரவில்லை. உனக்குத் தெரியுமா? அந்தப் பக்கத்தில் ஒவ்வொரு கோவில் முன்பும் மக்கள் மாட்டுக்கறி வாங்க பெரும் வரிசையில் காத்திருக்கிறார்கள்?"

***



# துரோகம்

"இங்கு பார், இது கொஞ்சம் கூட நியாயமில்லை. கள்ளச்சந்தை விலையில் எனக்கு நீ கொடுத்த இந்தக் கலப்படம் செய்யப்பட்ட பெட்ரோலைக் கொண்டு ஒரு கடையைக் கூட எரிக்க முடியவில்லை".

***



## ஓய்வு நேரம்

"ஏய்...
அவன் இன்னும் சாகவில்லை...
அவனிடம் இன்னும் கொஞ்சம் உயிர் இருக்கிறது".
"என்னால் முடியவில்லை,
எனக்கு ரொம்ப அசதியாக இருக்கிறது".

***



## அதிர்ஷ்டம்

"இதைத்தான் எல்லோரும் பாழாய்ப் போன அதிர்ஷ்டம் என்று சொல்லுவார்கள். இவ்வளவு கஷ்டங்களுக்குப் பிறகு, எனக்குக் கிடைத்ததெல்லாம் இந்த மோசமான தகரப் பெட்டியும் அதனுள் இருந்த பன்றிக் கறியும் தான்".

***



## சுத்தம்

இரயில் நிறுத்தப்பட்டது.

துப்பாக்கிகள் ஏந்தியிருந்த மூன்று நபர்கள் ரயில் பெட்டிக்குள் நுழைந்தார்கள். "துலுக்கன் எவனாவது இருக்கிறானா?" என்று பயணிகளை நோக்கிக் கேட் டார்கள்.

ஒரு பயணி மட்டும் ஏதோ சொல்ல வாயெடுத்து பிறகு தன் எண்ணத்தை மாற்றிக்கொண்டார். மற்றவர் கள் "யாருமில்லை" என்று பதில் தந்தார்கள்.

சில நிமிடங்கள் கழித்து கையில் நீண்ட வாளோடு நான்கு மனிதர்கள் அந்த இரயில் பெட்டியின் ஜன்னல் ஊடே தலையை நுழைத்து, "துலுக்கன் எவனாவது இருக்கிறானா?" என்று கேட்டார்கள்.

போன முறை அமைதியாக இருப்பது என்று தீர்மா னித்த அந்த மனிதன் இந்த முறை பேசினான். "எங்க ளுக்குத் தெரியாது. ஒருவேளை நீங்கள் கழிவறையில் தேடிப் பார்க்கலாம்"

அந்த மனிதர்கள் ரயில் பெட்டிக்குள் நுழைந்தார்கள், கழிவறையின் கதவை உடைத்தார்கள். உள்ளிருந்து மிரண்டு போயிருந்த ஒரு 'துலுக்கன்' வெளியே வந்தான்.

"அவனை ஹலால் முறையில் அறுத்துப் போடு" என்று கத்தியைப் பிடித்திருந்த ஒருத்தன் யோசனை சொன் னான்.

"உனக்கென்ன பைத்தியமா?" என்று கத்தினான் அவன் உடனிருந்தவன். "இந்தப் பெட்டியை நாசப்ப

டுத்த விரும்புகிறாயா? அவனை வெளியே கொண்டு போ".

***



## சோசலிசம்

அவனுக்குச் சொந்தமான எல்லாப் பொருட்களையும் ஒரு வண்டியில் ஏற்றிக்கொண்டு வேறு ஊருக்குப் போய்க்கொண்டிருந்த போது, ஒரு கூட்டத்தினரால் வழி மறிக்கப்பட்டான். பேராசை பிடித்த கண்களோடு அந்த வண்டியில் இருந்த பொருட்களைப் பார்த்துக் கொண் டிருந்த ஒருவன் இன்னொருவனிடம், "அவனைப் பார். இவ்வளவையும் திருடிவிட்டு யாரோடும் பகிர்ந்து கொள்ளாமல் இருக்கிறான்" என்றான்.

அந்தச் சொந்தக்காரன் பெருமையாகச் சிரித்து, "ஐயா, இது எல்லாம் என்னுடைய தனிச் சொத்து" என் றான்.

சிலர் உரக்கச் சிரித்தார்கள். "எங்களுக்குத் தெரியும்... தெரியும்..."

அந்தக் கூட்டத்தில் இருந்த ஒருவன் உரத்த குரலில், "உங்களால் முடிந்ததை எல்லாம் எடுத்துக் கொள்ளுங் கள். அவனைத் தப்பித்துப் போக விடாதீர்கள். அவன் ஏழைகளை ஏமாற்றி வண்டியில் சொத்தைச் சேர்த்து வைத்திருக்கும் பணக்காரன்" என்று சொன்னான்.

***



# பிழை சரி செய்யப்பட்டது

"யார் நீ?"

"நீ யாரு?"

"ஹர் ஹர் மகாதேவ், ஹர் ஹர் மகாதேவ்,"

"ஹர் ஹர் மகாதேவ்"

"என்ன அத்தாட்சி இருக்கிறது?"

"அத்தாட்சி? என்னுடைய பெயர் தரம்சந்த்"

"இது அத்தாட்சியே இல்லை"

"சரி, வேதங்களிலிருந்து எதை வேண்டுமானாலும் கேட்கலாம்"

"எங்களுக்கு வேதங்கள் தெரியாது. எங்களுக்குத் தேவை அத்தாட்சி"

"என்ன அத்தாட்சி வேண்டும்?"

"உன் பைஜாமா நாடாவை அவிழ்த்து விடு"

அவன் தன் பைஜாமாவை இறக்கியவுடன், அங்கு பெரும் குழப்பம் உண்டாயிற்று.

"அவனைக் கொல்லு, அவனைக் கொல்லு"

"கொஞ்சம் பொறுங்கள், தயவு செய்து கொஞ்சம் பொறுங்கள்... நான் உங்களில் ஒருவன். உங்களின் சகோதரன்... பகவான் மீது ஆணையாகச் சொல்கிறேன். நான் உங்களின் சகோதரன்."

"அப்படி என்றால் இதற்கு என்ன அர்த்தம்?"

"நான் வந்துகொண்டிருந்த பகுதி நம்முடைய விரோதி களின் கட்டுப்பாட்டில் இருந்தது. அதனால், வேறு வழி யில்லாமல் இந்த முன் எச்சரிக்கை நடவடிக்கையை எடுக்க வேண்டியதாயிற்று...

வேறு எதற்குமில்லை. என் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள... இது ஒன்றுதான் நான் செய்த தவறு. மற்றது எல்லாம் மிகச் சரியாக இருக்கிறது"

"அந்தப் பிழையை வெட்டியெறியுங்கள்."

அந்தப் பிழை வெட்டியெறியப்பட்டது...

அதுபோலவே தரம்சந்தும்

***



## ஜின்னா சாகிப்

"1939ம் வருடம் முஸ்லிம் லீக் அதனுடைய வாலிபப்ப ருவத்தில் இருந்தது - நானும் அது போலவே தான். ஏதா வது செய்யவேண்டும் என்ற துடிப்புள்ள வயதில்தான் இருந்தேன்... ஏதாவது. நான் திடமாகவும் கட்டுமஸ்தான உடலைக் கொண்டவனாகவும் இருந்தேன். என் வழி யில் எது வந்தாலும் அதனோடு மோதுவதற்குத் தயா ராக இருந்தேன். நான் எதற்கும் துணிந்தவனாக இருந் தேன். என் சொந்தக் கரங்களாலேயே ஏதேனும் ஒரு ஜந்துவை வடிவமைத்து அதனோடு கண்மூடித்தனமாக மல்யுத்தம் செய்வதற்கும் நான் தயாராக இருந்தேன். வாலிபம் அப்படிப்பட்டதுதான். ஏதேனும் செய்யவேண் டும் என்ற துடிப்பில், அதுவும் அது மிகப்பெரிய விசய மாக இருக்கும் என்ற எதிர்பார்ப்பில், சதாசர்வ காலமும் அமைதியற்ற நிலையில் தான் இருப்போம். வெறுமனே அமைதியாக உட்கார மட்டும் முடியவே முடியாது."

இதைச் சொன்னது, சினிமா நடிகர் அசாத் - இந்தப் பெயர் பலருக்குப் பரிச்சயமானது. நாடு துண்டாக்கப்ப டுவதற்கு முன்பு பம்பாய் திரைப்படத்துறையில் இருந் தான். அதற்குப் பிறகு லாகூரில் குடியிருக்க, அங்கு மற்ற சக நடிகர்கள் போல வாழ்வதற்கே போராடிக்கொண்டி ருக்கிறான். பாகிஸ்தானில் திரைப்படத்துறை அப்படிப் பட்ட நிலையில்தான் இருந்தது. அவன் காயிதே அஸாம் முகமது அலி ஜின்னாவின் காரோட்டியாகப் பல வருடங் கள் இருந்தவன் என்று யாரோ என்னிடம் சொன்னார்

கள். அது உண்மைதானா என்று தெரிந்து கொள்ள மிக வும் ஆவலாக இருந்ததால், ஒரு நாள் அவனைத் தேடிச் சென்றேன். அவனுடைய கடந்த கால நினைவுகளை மீட்டெடுப்பதற்கு நான் பல சந்திப்புகள் மேற்கொள்ள வேண்டியிருந்தது. இனி அசாத்தே பேசட்டும்.

"ஒரு சமயம் காலிப் இளமையாய் இருந்தது போல் தான் நானும் இருந்தேன். அந்த மாபெரும் கவிஞன் அரசியல் இயக்கத்தால் உள்ளிழுக்கப்பட்டானா இல் லையா என்று எனக்குத் தெரியாது. என்றாலும் நான் அகில இந்திய முஸ்லிம் லீக்கினுடைய உறுதியான தொண்டன் என்று மட்டும் என்னால் சொல்ல முடி யும். மற்ற எத்தனையோ இளைஞர்கள் போலவே தான் நானும் காஸியாபாத் கிளையின் நேர்மையான உறுப்பி னராக இருந்தேன். நேர்மையாக என்று சொல்வதற்குக் காரணம் என்னிடம் இருந்தது எல்லாம் அது ஒன்று தான்.

முகமது அலி ஜின்னா டெல்லி வந்தபோது, அது வரை, அந்த அளவில் எவருமே பார்த்திராத ஊர் வலமாய் அழைத்து வரப்பட்டதை என்னால் தெளி வாக நினைவுகூர முடிகிறது. காஸியாபாத் வாலிபர்க ளான நாங்கள் அந்த நிகழ்வு பெரும் வெற்றியை அடைவதற்குச் சாதாரணமாகப் பங்காற்றவில்லை. எங் கள் கிளையைத் தலைமை ஏற்று நடத்தியவர் பின் னாளில் பாகிஸ்தானின் கவிஞர் என்று அறியப்பட்ட, மிகவும் துடிப்புள்ள வாலிபனான அன்வர் குரேஷிதான். அந்த நிகழ்ச்சிக்குப் பிரத்யேகமான கவிதை ஒன்றை அவர் எழுதித்தர நாங்கள் எல்லோரும் அதை ஊர்வ லத்தில் பாடிக்கொண்டு சென்றோம். தாளம் தவறியதா இல்லையா என்றெல்லாம் எங்களுக்குத் தெரியாது. ஆனாலும் மிகவும் உணர்ச்சிபூர்வமாக நாங்கள் பாடிக் கொண்டு சென்றோம். எங்கள் தொண்டையிலிருந்து

வெளியேறிய சுருதி சரியானதா தவறானதா என்றெல்லாம் நாங்கள் கொஞ்சம் கூட அக்கறை காட்டவில்லை. காலிப் சொன்னதை நினைத்துப்பார்: 'நீ என்ன பேசுகிறாய் என்பதோ, நீ பேசுவது தாளத்துக்கு உட்பட்டதா, இல்லையா என்பதோ முக்கியமான விசயமே இல்லை. எது முக்கியமானது என்றால் நீ பேச வேண்டும்.' டெல்லியில் வரலாற்று முக்கியத்துவம் பெற்ற 'ஜும்மா மசூதி'யிலிருந்து, அந்த வரலாற்று முக்கியத்துவம் கொண்ட ஊர்வலம் தொடங்கி விண்ணைப் பிளக்கும் கோஷங்களோடு சாந்தினி சௌக், லால் கன்வான், ஹௌக் காஸி மற்றும் சௌரி பஜார் வழியாகச் சென்று முஸ்லிம் லீக் அலுவலகத்தில் முடிவடைந்தது.

இந்த ஊர்வலத்தில்தான் முகமது அலி ஜின்னாவுக்கு மிகவும் உணர்ச்சிபூர்வமாக காயிதே அஸாம் அதாவது மாபெரும் தலைவர் என்ற பட்டம் கொடுக்கப்பட்டதாக நினைக்கிறேன். ஆறு குதிரைகள் பூட்டிய திறந்த வண்டியில் அவர் இருந்தார். ஒவ்வொரு முஸ்லிம் லீக் தலைவரும் அன்று எங்களோடு ஊர்வலத்தில் கலந்து கொண்டார்கள். ஆண்கள் மிதிவண்டி, மோட்டார் வண்டி, ஏன் ஒட்டகம் இழுத்த வண்டியில் கூட வந்தார்கள். எல்லாம் மிக ஒழுக்கத்தோடு நடந்தது. எல்லாம் கண்டிப்பாக ஒழுக்கத்தோடு இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கும் நம் தலைவருக்கு அது பெருத்த சந்தோசத்தைக் கொடுத்தது.

என்னைப் பொறுத்தமட்டில், அந்த ஊர்வலம் மிகவும் உணர்வுப்பூர்வமாக என்னைப் பாதித்தது. நான் அதனால் முழுவதுமாக ஆட்கொள்ளப்பட்டேன். என் கண்கள் முதல் முறையாக ஜின்னா சாகிப்பைப் பார்த்தபோது எப்படி உணர்ந்தேன் என்பதைக் கூட என்னால் இப்போது சரியாக நினைவு கூர முடியவில்லை. நான் திரும்பிப்பார்த்து அந்த உணர்வுகளை ஆராய முற்பட்டால்,

நான் அவரை நேரடியாகப் பார்ப்பதற்கு முன்னரே அவர் மீது இருந்த ஈடுபாட்டில் யாரோ ஒருவர் எவரையோ சுட்டிக்காட்டி, 'அதோ உன்னுடைய காயிதே அஸாம்' என்று சொல்லியிருந்தாலும் நான் அதை முழுமையாக நம்பி அவரைப் பார்த்ததில் தடுமாற்றம் கொள்ளும் அளவிற்கு சந்தோசப்பட்டிருப்பேன் என்றே நினைக்கத் தோன்றுகிறது. நம்பிக்கை அப்படிப்பட்டதுதான். ஓரிழை சந்தேகமும் இல்லாமல் மிகச் சுத்தமானது. பழைய டெல்லி சாலைகளில் அந்த ஊர்வலம் சுழன்று கொண்டிருந்த போது, ஜின்னா சாகிப்பைப் பல கோணங்களில் இருந்து பார்க்க எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. அப்போது திடீரென்று ஓர் எண்ணம் என் மண்டைக்குள் உதித்தது. எப்படி என்னுடைய காயிதே, என்னுடைய மிகப்பெரிய தலைவர் இவ்வளவு பலவீனமாகவும் உடைந்து போகிறாற் போலவும், மெலிந்தும் இருக்க முடியும்!

காலிப் ஒரு முறை, அவரைப் பார்க்க வந்த அவருடைய காதலியைக் கண்டு அதிசயித்துப் போனாராம். ஆச்சரியத்தில் அந்தக் கவிஞர் அவளையும், அவள் நுழைந்த அந்த வீட்டையும் கண் இமைக்காமல் பார்த்துக்கொண்டிருந்தாராம். ஏறக்குறைய நானும் அப்படித்தான் உணர்ந்தேன். உடைந்து போகிறாற் போல் இருக்கும் காயிதேவின் உடலையும் பார்த்து, என்னுடைய திடமான கட்டுமஸ்தான உடலையும் பார்த்து, ஒன்று நான் சுருங்கிவிட வேண்டும் அதாவது நான் அவரைப்போல் ஆகிவிடவேண்டும் அல்லது அவர் என்னைப்போல் மாறிவிடவேண்டும் என்றே விரும்பினேன். அவருக்குக் கேடு நினைப்பவர்களிடம் இருந்து - அதுவும் அப்படி நினைப்பவர்கள் நிறைய இருக்கிறார்கள் என்று என்னிடம் சொல்லப்பட, அவர் பாதுகாப்பாய் இருக்க வேண்டும் என்றும் பிரார்த்தனை செய்தேன்.

வாழ்க்கை நகர்ந்து கொண்டிருக்க, கலாப்பூர்வமாக ஏதேனும் செய்யவேண்டும் என்று என்னுள் மிக ஆழத்தில் மறைந்துகிடந்த துடிப்பும் என் இருப்புக்கொள்ளாமையோடு சேர்ந்துகொண்டது. அதனால் பம்பாய்க்குப் பயணம் செய்து அந்த நகரத்தில் என் அதிர்ஷ்டத்தைப் பரிசோதித்துப் பார்ப்பது, என்று ஒரு நாள் முடிவு செய்தேன். எனக்கு எப்போதும் நாடகம், நடிப்பு என்று ஈடுபாடு உண்டு. அதனால் நான் அங்கிருந்தேன். தேச சேவை செய்யவேண்டும் என்ற உந்துதலைக் காட்டிலும் ஒரு நடிகனாக வேண்டும் என்பதே என்னுள் மேலோங்கி இருந்தது. மனிதன்தான் எத்தகைய முரண்பாடுகளின் மொத்தத் தொகுப்பு! நான் பம்பாயை அடைந்த போது, இம்பீரியல் சினிமாக் கம்பெனிதான் ஆட்சி நடத்திக் கொண்டிருந்தது. ஆனால் அதற்குள் நுழைவது ஏறக்குறைய சாத்தியமில்லாத காரியமாகவே இருந்தாலும் நான் தொடர்ந்து முயன்று, இறுதியில் தினக்கூலியாக எட்டணா வாங்கும் துணை நடிகனானேன். வெள்ளித்திரையில் பெரிய நடிகனாக வேண்டும் என்ற என் கற்பனையை இது எவ்விதத்திலும் தடை செய்யவில்லை. இயல்பாகவே நான் எல்லோரிடமும் இணக்கமாகப் பழகக்கூடியவன். எனக்கு இனிமையாகப் பேசத்தெரியாமல் இருந்தாலும் விட்டெறிந்து பேசக் கூடியவன் இல்லை. என்னுடைய தாய்மொழி உருதுவாக இருந்ததால் - கம்பெனியில் எல்லாப் பெரிய நட்சத்திரங்களும் இதை அறியாதவர்களாக இருந்தது, எனக்கு உதவக்கூடியதாக இருந்தது. இந்த மொழி பேசப்படாத பம்பாயில், அது எனக்கு உதவியாக இருந்தது. ஆனால் எங்கு பேசப்படுகிறதோ, அதாவது டெல்லியில் அப்படி இல்லாதது விசித்திரமானதுதான். திரைப்படங்களில் பேசப்படும் மொழி பொதுவாக உருது அல்லது இந்துஸ்தானியாக இருந்ததால் பெரிய நட்சத்திரங்களுக்கான வசனங்களை எழுதவும் படிக்கவும் நான் மிகவும் அவ

சியமானவனாக இருந்தேன். அவர்களுடைய விசிறிகள் எழுதும் கடிதங்களை அவர்களுக்குப் படித்துக்காட்டி, அதற்குப் பதில்களும் எழுதிக்கொடுப்பேன். ஆனாலும் இப்படிப் படிப்பதும், எழுதுவதும் என்னுடைய குறிக் கோளை அடைவதற்கு எவ்விதத்திலும் பயனுள்ளதாக இல்லாமல் இருந்தது. 'எக்ஸ்ட்ரா' தான் நான். 'எக்ஸ்ட் ரா'வாகவே தான் இருந்தேன்.

அந்த நாட்களில் இம்பீரியல் கம்பெனியின் உரிமை யாளர் சேத் அர்தேஷிர் இரானியினுடைய அந்தரங்கக் காரோட்டியாக இருந்தவனிடம் - அவனுடைய பெயர் புதான், நான் நட்புக் கொண்டிருந்தேன். அவன் செய்த முதல் காரியம், எனக்கு வண்டி ஓட்டக் கற்றுக்கொ டுத்ததுதான். அவனுடைய ஓய்வு நேரங்களில், பொது வாக அது பெரிய அளவில் கிடைப்பதில்லை என் றாலும், அதை எனக்குக் கற்றுக்கொடுத்தான். அவன் செய்து கொண்டிருப்பதை, சேட் கண்டுபிடித்துவிட்டால் வேலையை விட்டு வெளியேற்றப்படுவார் என்று எப் போதும் பயந்து கொண்டிருந்தான். இந்தக் கட்டுப்பாடு களால், என்னுடைய புத்திசாலித்தனம் மற்றும் உற்சா கத்தை மீறி, மோட்டார் வண்டி ஓட்டுவதில் நான் நிபு ணத்துவம் பெற முடியாமல் போயிற்று. என்னால் செய்ய முடிந்தது சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம் பம்பாயில் நூல்பிடித்தாற் போல் நேராக இருந்த சாலைகளில் மட் டுமே சேத் அர்தேஷிர் இரானியின் வண்டியை ஓட்ட முடிந்தது. ஒரு கார் எதனால் ஓடுகிறது என்றோ, அதன் உள்ளே இருக்கும் பாகங்கள் என்னவென்றோ, எனக் குச் சுத்தமாக எதுவும் தெரியாது.

நடிப்பு என்னை முழுமையாய் ஆட்கொண்டது என்றா லும் அது என் மண்டைக்குள் மட்டுமே இருந்தது. என் இதயம் முழுக்க, முஸ்லிம் லீக் மீதும், அதை நடத்திச் செல்லும் சக்தியாய் இருந்த காயிதே அஸாம் முகமது

அலி ஜின்னா மீதும் காதலால் நிரம்பியிருந்தது. இம்பீ ரியல் சினிமா கம்பெனியில் வேலை இல்லாமல் நேரத் தைக் கழித்தபோதும், கென்னடி பாலம், பின்டி பஜார், முகமது அலி சாலை, அல்லது விளையாட்டு இல்லம் என்று சுற்றிக்கொண்டிருக்கும் போதும், காங்கிரஸ் முஸ் லிம் லீக்கை எப்படி நடத்துகிறது என்பது பற்றி முடி வில்லாமல் பேசிக் கொண்டே இருப்போம். இம்பீரியல் கம்பெனியில் எல்லோருக்கும், நான் முஸ்லிம் லீக்கின் தீவிர ஆதரவாளன் என்றும், காயிதே அஸாம் முகமது அலி ஜின்னாவின் தொண்டன் என்றும் தெரிந்துதான் இருந்தது. அந்த நாட்களில் காயிதே அஸாம் மீது பற்றுக் கொண்டிருப்பதனாலேயே, ஓர் இந்து நம்முடைய எதிரி யாகி விடவில்லை. அப்போது பாகிஸ்தானுக்கான அதி காரப்பூர்வமான கோரிக்கை முன்வைக்கப்படவில்லை. ஒருவேளை, இம்பீரியல் கம்பெனியில் காயிதே பற்றி எல்லோருக்கும் தெரிந்திராமலும் இருக்கலாம். நான் அவரைப் புகழ்ந்து பேசும் போது, எனக்கு மிகவும் பிடித்த ஒரு சினிமா நடிகரைப்பற்றி பேசிக் கொண்டிருப் பதா கக்கூட சிலர் நினைத்திருக்கலாம். அந்த நாட்களில் மிகவும் பிரபலமான கதாநாயகனான நடிகர் டி.பில்லி மோரியா ஒரு நாள், 'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்தி ரிகையை என்னிடம் கொடுத்து, "பார், உன்னுடைய ஜின்னா சாகிப் இதில் இருக்கிறார்" என்றான். நான் அவ ருடைய புகைப்படம்தான் அன்று வந்திருக்கிறது என்று நினைத்தேன். ஆனால் எந்தப் பக்கங்களிலும் அதைக் காண முடியாததால், "அவருடைய படம் எங்கே இருக் கிறது?" என்று கேட்டேன். ஜான் கில்பட் பாணியில் தாடி வைத்திருந்த பில்லிமோரியா புன்னகைத்தவாறே, "போட்டோ - கீட்டோ ஏதும் இல்லை. ஒரு விளம்ப ரம் வந்திருக்கிறது" என்றான். "அது என்ன விளம்பரம்?" என்று கேட்டேன். பில்லிமோரியா என்னிடம் இருந்த

பத்திரிகையைப் பிடுங்கி ஒரு பத்தியைச் சுட்டிக்காட்டி னான்.

"திரு. ஜின்னாவின் கார் கொட்டகைகளுக்கும், அதில் உள்ள வண்டிகளுக்கும் பொறுப்பானதொரு மோட்டார் மெக்கானிக் தேவை" அவனுடைய ஆள் காட்டி விரலால் சுட்டிக்காட்டப்பட்ட அந்தப் பகுதியைப் பார்த்தேன். பில்லிமோரியாவுக்கு உருது தெரிந்த அள விற்குதான் எனக்கு ஆங்கிலம் தெரிந்திருந்தது என் றாலும், அதில் உள்ள வார்த்தைகள் ஒவ்வொன்றையும் நான் அந்த நொடியிலேயே படித்துவிட்டது போல், '...ஓ!' என்றேன்.

'நான் முன்னரே சொன்னது போல், என்னுடைய கார் ஓட்டும் திறமை, சாலை நூல் பிடித்தாற்போல் நேராக இருக்கும் பட்சத்தில் அதை நகர்த்துவதற்கு மட் டுமே போதுமானது. கார் எப்படி வேலை செய்கிறது என்று ஏதும் அறியாதவனாகவே இருந்தேன். எனக்குத் தெரிந்தது எல்லாம், வண்டியை உயிர் பெற வைக் கும் பொத்தானை அழுத்தினால், இஞ்சின் இயங்கும். சில சமயங்களில் அது இயங்க மறுப்பதும் உண்டு. ஆனால், யாரேனும் ஏன் என்று கேட்டால், மனிதனு டைய அறிவிற்கு அப்பாற்பட்ட, மாற்ற முடியாத மோட் டார் வண்டி விதிகளில் ஒன்று என்றுதான் நான் பதில் தந்திருப்பேன். விளம்பரத்தில் என்ன விலாசம் இருக்கி றது என்று பில்லிமோரியாவிடம் கேட்டு அதை மனப்பா டம் செய்து கொண்டேன். வேலை கிடைக்க வேண்டும் என்பதற்காக இல்லை என்றாலும், அவரை மறுபடியும் பார்ப்பதற்கான சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்பதற்காகவே, அடுத்தநாள் காலையில் காயிதே அஸாம் இல்லத்திற்குப் போவது என்று முடி வெடுத்தேன். என்னுடைய கரங்களில் நான் வைத்தி ருந்த ஒரே தகுதி, காயிதே மீது நான் கொண்டிருந்த பற்று

மட்டும்தான். மலபார் ஹில்லில், மௌண்ட் பிளசன்ட் வீதியில் இருந்த அவருடைய இல்லத்தை அடைந் தேன். பிரம்மாண்டமான பங்களாவிற்கு வெளியே பெரிய அளவில் தைக்கப்பட்ட அப்பழுக்கற்ற வெள்ளை சல் வாரும், மிகச் சரியாகக் கட்டப்பட்டிருந்த பட்டு டர்ப னும் அணிந்திருந்த ஒரு பதான் காவல்காரனும் நின் றுகொண்டிருந்தான். எனக்கு ரொம்பவும் சந்தோசமாய் இருந்தது. அங்கே திடகாத்திரமாக இன்னொருவனும் இருக்கிறான். மனதிற்குள்ளே அவனை என்னோடு ஒப் பிட்டுப் பார்த்து, எங்களுக்கிடையே ஏதேனும் வித்தியா சம் இருந்தாலும், அது மிகச் சொற்பமானதுதான் என்று நிம்மதியடைந்தேன்.

அங்கு ஏற்கனவே நம்பிக்கையோடு வந்திருந்த எல் லோரிடமும், இந்த வேலைக்கான தகுதி அவர்களிடம் இருக்கிறது என்று நிரூபிக்கச் சான்றிதழ்கள் இருந்தன. நான் அமைதியாக அவர்களோடு சேர்ந்து கொண் டேன். வண்டி ஓட்டுவதற்கான அனுமதியைக்கூட நான் பெற்றிருக்கவில்லை என்பதையும் நான் சொல்லத்தான் வேண்டும். காயிதே அஸாமை மீண்டும் ஒரே ஒருமுறை பார்க்க வேண்டும் என்பதற்காகவே அங்கு காத்திருந் தேன். எந்த நிமிடத்திலும் அங்கு வரலாம் என்று எதிர் பார்ப்போடு இருந்தேன். திடீரென்று அவர் முன் வாச லுக்கு வெளியே இருந்தார். எல்லோரும் இறுக்கமான நிலைக்கு வர, நான் ஒரு பக்கமாய் என்னை மறைத்துக் கொண்டேன். அவருக்கு அடுத்தாற் போல் மிக உயரமா கவும், நேர்த்தியாகவும் அவருடைய சகோதரி ஃபாத்திமா நின்று கொண்டிருந்தார். பத்திரிகைகளிலும், செய்தித் தாள்களிலும் பலமுறை அவருடைய படத்தைப் பார்த் திருக்கிறேன். காயிதேயிடமிருந்து சில அடிகள் தள்ளி மரியாதையோடு நின்று கொண்டிருந்தவர், அவருடைய காரியதரிசி மட்லூப் சாகிப் (மட்லூப் ஹூசைன் சையத்).

காயிதே அவருடைய ஒற்றைக்கண் கண்ணாடியைச் சரி செய்து கொண்டு வேலைக்காக வந்திருந்த ஒவ்வொருவரையும் மிகக் கவனமாக அளந்தெடுத்தார். ஒற்றைக்கண் கண்ணாடி அணிந்திருந்த அந்தக் கண்கள், என் மீது நிலைத்து நின்றன. நான் மேலும் சுருங்கிப்போனேன். பிறகு ஊடுருவக்கூடிய அவருடைய குரல், "யூ..." என்று சொல்வதைக் கேட்டேன். அந்த அளவிற்கு ஆங்கிலத்தை என்னால் புரிந்து கொள்ள முடிந்தது என்றாலும் யார் அந்த 'யூ?' எனக்கு அடுத்தாற் போல் நின்று கொண்டிருந்தவன் தான் என்று தீர்மானமாக இருந்ததால், என்னுடைய முழங்கையால் அவனை இடித்து, "அவர் உன்னைத்தான் அழைக்கிறார்" என்றேன். என்னுடைய கூட்டாளி திக்கித் திக்கி, 'சாகிப், நானா?" என்று கேட்டான். மீண்டும் எழுந்த காயிதே அஸாமின் குரல், "நோ... யூ" என்றது. அவருடைய மெலிந்த, ஆனால் இரும்பு போன்ற விரல் என்னைக் குறிபார்த்து இருந்தது. நான் நடுங்கத் தொடங்கினேன். "சார், நானா?" "ஆமாம்" என்று பதில் தந்தார். அவருடைய இந்த ஒரு வார்த்தை ராயல் என்ஃபீல்ட் 303 துப்பாக்கியிலிருந்து புறப்பட்ட தோட்டா போல் என்னுள் பாய்ந்து சென்றது. காயிதேக்காக எவ்வளவோ கோஷங்கள் எழுப்பிய இந்தத் தொண்டை இப்போது முற்றிலும் வறண்டு கிடந்தது. என்னால் பேசமுடியவில்லை. அவர் ஒற்றைக்கண் கண்ணாடியை எடுத்துவிட்டு, "ஆல்ரைட்" என்றார். நான் எவ்வாறு உணர்கிறேன் என்பதை எப்படியோ அவர் உணர்ந்து கொண்டதைப் போலவும், என் அவஸ்தைகளை ஒரு முடிவுக்குக் கொண்டு வருவதற்காகவும், 'ஆல்ரைட்' என்று சொன்னது போல்தான் எனக்குத் தெரிந்தது. அவர் திரும்பி, இளமையாகவும் அழகாகவும் இருந்த அவருடைய காரியதரிசியைப் பார்த்து ஏதோ சொல்லிவிட்டு, அவருடைய சகோதரியோடு வீட்டிற்குள் சென்றார். நான் அங்கிருந்து

ஓடிவிட எத்தனித்த போது, மட்லூப் பேசினார்: "சாகிப் நாளை காலை பத்து மணிக்கு நீ இங்கு ஆஜராக வேண் டும் என்று சொல்லியிருக்கிறார்" என்னை ஏன் தேர்ந் தெடுத்தார் என்றும் என்னால் கேட்க முடியவில்லை, காயிதே அஸாம் விளம்பரம் கொடுத்த வேலைக்கான தகுதி ஏதும் என்னிடம் இல்லை என்றும் என்னால் சொல்ல முடியவில்லை. பிறகு மட்லூப் சாகிப் வீட்டிற் குள் திரும்பிப்போக, நானும் வீடு திரும்பினேன்.

அடுத்தநாள் காலை மிகச் சரியான நேரத்தில் அவரு டைய இல்லத்தில் ஆஜரானேன். காயிதேவின் காரிய தரிசி, சாகிப்புக்கு என்னைப் பிடித்திருக்கிறது என்றும், நான் உடனடியாகக் கார் கொட்டகைக்குப் பொறுப் பேற்க வேண்டும் என்றும் சொன்னார். எனக்கு ஏதும் தெரியாது என்றும், காயிதே அஸாம் ஏமாற்றப்பட்டார் என்றும் நான் ஒப்புக்கொள்ள வேண்டும் என்பதே என் னுடைய முதல் எண்ணமாக இருந்தது. நான் வெறும னேதான் வந்தேன் என்றும், எனக்குக் கொடுக்கப்பட்ட பொறுப்பை எவ்விதத்திலும் ஏற்றுக்கொள்ள முடியாமல் இருப்பதையும் ஒப்புக்கொள்ளாமல் ஏன் மௌனமாக இருந்தேன் என்று எனக்குத் தெரியவில்லை. கார் கொட்டகையின் சாவிக்கொத்து என்னிடம் கொடுக்கப் பட்டு காயிதேயின் நான்கு கார்களுக்கு நான் பொறுப் பாளனானேன். அவ்வப்போது நான் ஓட்டிய ஒரே வண்டி சேத் அர்தேஷிர் இரானியுடைய பைக் மட்டுமே, அது வும் நேரான சாலைகளில் மட்டும். ஆனால் மௌண்ட் பிளசன்ட் தலைசுற்றும் வளைவுகளையும் திருப்பங்க ளையும் கொண்டது. லட்சக்கணக்கான முசல்மான்க ளின் வாழ்க்கை, எந்த ஒரு மனிதனுடைய வாழ்க்கை யைச் சார்ந்திருக்கிறதோ, அவரைப் பாவம் இந்த அசாத் ஓட்டிச்செல்ல வேண்டும் - அதுவும் மிகவும் ஆபத்தான வளைவுகளில். வேறு எங்கெல்லாம் என்று, கடவுளுக்கு மட்டும்தான் தெரியும்.

சாவிக்கொத்தை அப்படியே தரையில் போட்டுவிட்டு, நேராக வீட்டுக்கு ஓடி என் பொருட்களையெல்லாம் கட்டிக்கொண்டு, டெல்லிக்குப் போகும் ரயில் வண்டி யில் ஏறிவிடவேண்டும் என்ற எண்ணம்தான் என்னுள் இருந்தது. ஆனால் அது சரியல்ல என்றே நினைத் தேன். ஜின்னா சாகிப்பிடம் எல்லா உண்மைகளையும் சொல்லிவிட்டு, அவருடைய மன்னிப்பை வேண்டி, நான் எங்கு இருக்கவேண்டுமோ அங்கு திரும்பிச் சென்றுவி டவேண்டும் என்று எனக்குள் சொல்லிக்கொண்டேன், ஆனால் என்னை நம்பு, ஆறு மாதங்களுக்கு அப்படி யொரு சந்தர்ப்பம் எனக்குக் கிடைக்கவே இல்லை."

"எப்படி?" என்று முகமத் ஹனிஃப், அஸாத்திடம் கேட் டேன்.

"அது அப்படித்தான்" என்று சொல்லி விளக்கம் கொடுத்தான். "நான் வேலைக்குச் சேர்ந்து ஆறு மாதங் களுக்குப் பிறகு, முன் வாசலுக்கு வெளியே காரைக் கொண்டு வந்து நிறுத்திக் காத்திருக்க வேண்டும் என்று எனக்குத் தெரிவிக்கப்பட்டது. நான் ஏறக்குறைய மயங்கி விழுந்தேன் என்றாலும், காயிதே தோன்றியவுடன், அவ ருக்கு சல்யூட் அடித்து கார் கொட்டகையின் சாவி களை அவரிடம் கொடுத்துவிட்டு அவருடைய காலில் விழுந்து விடவேண்டும் என்று தீர்மானித்து என்னை நானே ஆறுதல் படுத்திக்கொண்டேன். ஆனால் அது நடக்கவில்லை. அவர் முன் வாசலில் நுழைந்த அந் தக் கணத்தில் நான் ஊமையாகிவிட, என்னால் ஒரு வார்த்தையைக் கூட உச்சரிக்க முடியவில்லை. அவ ருடைய சகோதரி ஃபாத்திமா சாகிபாவும் அவரோடு இருந்தார். மண்ட்டோ சாகிப், ஒரு பெண்ணின் முன் னிலையில் எப்படி நம்மால் வேறொருத்தர் காலில் விழ முடியும்? எப்படியிருந்தாலும் அது சரியாக இருந்திராது. ஆக மண்ட்டோ சாகிப், புத்தம் புது பேக்கார்ட் வண்

டியை நான் கிளப்ப வேண்டியதாயிற்று. நான் மெளன மாகக் கடவுளை வேண்டியபடியே, எந்தப் பிரச்சினையும் இல்லாமல் முன்கதவு வழியே தெருவுக்கு வந்துவிட்டேன். மௌண்ட் பிளசன்ட் வளைவுகளை நல்ல முறையில்தான் கையாண்டு வந்தேன் என்றாலும், பிரதான சாலையில் இருந்த சிவப்பு விளக்கு நிறுத்தத்தில், நான் சிக்கலில் மாட்டிக்கொண்டேன். என்னுடைய ஆசான் புதான் மிக மென்மையாக வண்டியை நிறுத்தவேண்டும் என்று சொல்லிக் கொடுத்திருந்தான், என்றாலும் நான் பயந்துகிடந்ததால் வெடுக்கென்று பிரேக்கை அழுத்த, வண்டி தூக்கிப் போடப்பட்டது போல் நிற்க, காயிதே பிடித்துக்கொண்டிருந்த சுருட்டு அவருடைய விரல்களில் இருந்து நழுவி கீழே விழுந்தது. ஃபாத்திமா சாகிபா ஏறக்குறைய அவருடைய இருக்கையில் இருந்து தூக்கியடிக்கப்பட, அவர் என்னைச் சபிக்கத் தொடங்கினார். நான் இறந்து விடுவேன் என்றுதான் நினைத்தேன். என் கைகள் நடுங்கத் தொடங்கின. தலை சுற்றுவது போல் உணர்ந்தேன். காயிதே அஸாம் சுருட்டைத் தரையிலிருந்து எடுத்துக்கொண்டு, ஆங்கிலத்தில் ஏதோ சொன்னார். வீட்டிற்குத் திரும்ப வேண்டும் என்று அவர் சொன்னதாக நான் நினைத்துக்கொண்டேன். நாங்கள் திரும்பியவுடன், அவர் வேறொரு வண்டியும் வேறொரு காரோட்டியும் கேட்டுக் கிளம்பிச் சென்றார். அவருக்குச் சேவை செய்யும் வாய்ப்பு அடுத்த ஆறு மாதங்கள் வரை எனக்குக் கிடைக்கவே இல்லை."

"இதே போலத்தான் மறுபடியும் சேவை செய்தாயா?" என்று புன்னகைத்தவாறே கேட்டேன்.

அசாத்தும் புன்னகைத்தான். "விசயம் என்னவென்றால் இத்தனை நாட்களும் சாகிப் என்னைப் பயன்படுத்த உபயோகிக்க முயற்சி செய்யவேயில்லை. அங்கிருந்த மற்ற காரோட்டிகளைத்தான் உபயோகித்தார்.

அவர்கள் எல்லோரும் சாகிப்பின் பணியாளர் அடையாளத்தை அணிந்திருந்தார்கள். அது மிக அழகாக இருக்கும். அடுத்த நாள் யார் கார் ஓட்ட வேண்டும் என்றும், எந்த வண்டியை எடுக்க வேண்டும் என்றும் முந்திய இரவே மட்லூப் சாகிப் எங்களிடம் தெரிவித்துவிடுவார். அவ்வப்போது என்னைப்பற்றி அவரிடம் கேட்பேன் என்றாலும், அவர் ஏதும் சொல்லமாட்டார். உண்மை என்னவென்றால், சாகிப் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார் என்று யாராலும் தீர்மானமாய்ச் சொல்ல முடியாது. அவரிடம் துணிச்சலாகக் கேட்கவும் முடியாது. விசயத்தைச் சுற்றி வளைத்துப் பேசும் தன்மை அவரிடம் கிடையாது. அவசியமாக இருந்தால் மட்டுமே காது கொடுத்துக் கேட்கக்கூடிய அவர், அவசியமாக இருந்தால் மட்டுமே பேசக்கூடியவர். அதனாலேயே தான் காயிதேவுக்கு மிக நெருக்கத்தில் இருந்தாலும், பயன்படுத்தப்படாத உதிரிப் பாகம் போல் என்னை ஏன் கொட்டகைக்குள் தள்ளிவைத்தார் என்று என்னால் தெரிந்து கொள்ளவே முடியவில்லை"

நான் என் யூகத்தை வெளிப்படுத்தினேன். "அவர் உன்னை முழுவதுமாக மறந்திருக்கலாம்". அசாத் உரக்கச் சிரித்தான். "இல்லை ஐயா, சாகிப் மறந்திருப்பதற்கான சாத்தியமே இல்லை, அவர் எதையும் மறக்கக்கூடியவரும் இல்லை. ஒரு சிறு வேலையும் செய்யாமல் அசாத் ஆறு மாதமாக விருந்து உண்டு கொண்டிருக்கிறான் என்று அவருக்கு மிக நன்றாகத் தெரிந்துதான் இருந்தது. அதுவும் மண்ட்டோ சாகிப், அசாத் சாப்பிட உட்கார்ந்தால் அவனைச் சந்தோசப்படுத்துவது அவ்வளவு சுலபமில்லை. என்னையும் என்னுடைய இந்தப் பெரிய உடம்பையும் சற்றுப் பாருங்கள்"

நான் அவனைப் பார்த்தேன். உண்மையில் திடமான மிகப்பெரிய உடம்பைக் கொண்டவன்தான். 1937

அல்லது 38ல் அவன் எப்படி இருந்திருப்பான் என்று என்னால் கற்பனை செய்து பார்க்க முடிந்தது. ஒரு சமயம் காயிதேயின் காரோட்டியாக இருந்தான் என்று தெரிந்து கொண்டது முதல், அவனிடம் பேசுவதற்கான சந்தர்ப்பத்தைத் தேடிக்கொண்டிருந்தேன். அவனைப் பலமுறை சந்தித்து, காயிதேவுடன் அவன் கழித்த நாட் களைப் பற்றிக் கேட்க வேண்டியிருந்தது. நான் இதை எழுதத் தொடங்கிய சமயத்தில், கவிஞர் அல்லாமா முகமது இக்பாலுக்கு உயரமான மனிதர்கள் என்றால் பிடித்திருந்ததைப்போல், காயிதே அஸாம் திடகாத்தி ரத்தை விரும்பினார் என்று என்னுள் தோன்றியது. பலம் - காயிதேவிடம் வேலை பார்த்த எல்லோருமே, இந்தத் தகுதியின் அடிப்படையில் மட்டுமே தேர்ந்தெ டுக்கப்பட்டவர்கள். அசாத் இருந்த சமயத்தில், காயி தேவிற்கு வேலை பார்த்தவர்கள் எல்லோரும் பார்ப்ப தற்கு அழகாகவும் திடமானவர்களாகவும் இருந்தார்கள். அவருடைய காரியதரிசி மட்லூப் அழகாகவும் திடமான உடலைக் கொண்டவராகவும் இருந்தது போலத்தான், அவருடைய வண்டி ஓட்டுநர்களும், காவல்காரர்களும் இருந்தார்கள். திரு. ஜின்னா உடல் ரீதியாக பலவீ னமானவராக இருந்தாலும், இரும்புபோல் திடமான மனதைக் கொண்டவர். பலவீனமானவர்களோடு எத் தகைய தொடர்பும் வைத்துக்கொள்ள அவர் விரும் பாததை, நாம் உளவியல் ரீதியாக அர்த்தப்படுத்திக் கொள்ளலாம். எவர் ஒருவரும் தாம் நேசிப்பதை மிக வும் அக்கறையோடு பார்த்துக்கொள்வார்கள். காயிதே வும் இதில் வேறுபட்டவர் அல்ல. அவருக்கான வேலை பார்ப்பவர்கள், மிக நேர்த்தியாக வேலைக்கு வரவேண் டும் என்பதில் குறியாக இருந்தார். பதான் காவலாளி, எப்போதும் அவனுடைய பாரம்பரிய உடையில் தான் இருக்க வேண்டும் என்று கட்டளையிடப்பட்டுள்ளது. அசாத் பஞ்சாபியில்லை என்றாலும், ஓர் ஆணை உய

ரமாகவும், கம்பீரமாகவும் வெளிப்படுத்தக்கூடிய அந்தத் தலைப்பாகையை அணிய வேண்டும் என்று அடிக்கடி சொல்லப் பட்டதும் உண்டு. அவன் தலைப்பாகையை ஒழுங்காகவும் அழகாகவும் கட்டியிருந்தால், சில சமயங் களில் அன்பளிப்பாகக் காசு பெறுவதற்கான சாத்திய மும் இருந்தது.

இதைப் பற்றியெல்லாம் சிந்திக்கும்போது, காயிதே அஸாமின் திடமான மனதின் ரகசியம் அவருடைய உடல்ரீதியான குறையை அடிப்படையாகக் கொண்டது தான் என்றே தோன்றுகிறது. வலுவற்ற உடல் பலவீ னத்தை அவர் எப்போதும் பிரக்ஞை பூர்வமாக உணர்ந் திருந்ததுதான், அவருடைய மிகப்பெரிய பலமாக இருந் தது. அவர் பேசிய முறை, அவர் தன்னை முன்னெடுத் துச் சென்ற முறை என்று அவருடைய நடத்தை எல் லாவற்றிலும் இது பிரதிபலித்தது. காயிதே அஸாம் மிகக் குறைவாகவே உணவு உட்கொள்ளக்கூடியவர் என்று அசாத் என்னிடம் தெரிவித்தான். "அவர் அத்தனை குறைவாக உண்பதைப் பார்க்கும்போது, எது அவரை உயிரோடு வைத்திருக்கிறது என்று நான் வியந்ததுண்டு. ஒருவேளை நானும் அது போல் மிகக் குறைந்த அளவே உணவு உட்கொள்ள வேண்டியிருந்தால், ஒரு சில நாட் களில் கரைந்து காணாமல் போய்விடுவேன். ஒவ்வொரு நாளும் சமையலறையில் நான்கைந்து கோழிகள் சமைக்கப்படும் என்றாலும், ஜின்னா சாகிப் உட்கொள் ளுவது எல்லாம் ஒரு பெரிய கிண்ணத்தில் சூப் மட் டுமே. ஒவ்வொரு நாளும் மிகப்பெரிய அளவில் புத்தம் புதிய பழவகைகள் அவருடைய வீட்டிற்கு வந்தாலும், அதை அவர் எப்போதும் உட்கொண்டதே கிடையாது. எல்லாமே வேலைக்காரர்கள் வயிற்றுக்குள்தான் சென் றன. ஒவ்வொரு நாளும் படுக்க போவதற்கு முன் அடுத்த நாள் என்ன என்ன சமைக்கப்படவேண்டும் என்று ஒரு

பட்டியலில் இருந்து சொல்வார். பொருட்கள் வாங்குவ தற்கு என்னிடம் நூறு ரூபாய் நோட்டு கொடுக்கப்படும்"

"ஒவ்வொரு நாளும் நூறு ரூபாயா?" என்று ஆச்சர்யத் தோடு கேட்டேன்.

"ஆமாம் ஐயா, நூறு ரூபாய்தான். காயிதே அஸாம் அதற்கான கணக்கை எப்போதும் கேட்டதே கிடை யாது. மிச்சப் பணத்தை எல்லாம் வேலை பார்க்கும் எங்களுக்குள் பகிர்ந்து கொள்வோம். சில நாட்களில் அது முப்பது ரூபாயாக இருக்கும். வேறு சில நாட்க ளில் நாற்பது. ஏன் சில சமயங்களில் அறுபது எழுபதா கக் கூட இருக்கும். நிச்சயமாக இதைப் பற்றி அவருக் குத் தெரியும் என்றாலும் எப்போதும் கணக்கு கேட்டதே கிடையாது. ஆனால் மிஸ். ஜின்னா வேறுமாதிரியானவர். பொருட்களுக்குக் கொடுக்கும் விலையைக் காட்டிலும் அதிகமாகக் கணக்கு கொடுக்கிறோம் என்றும், நாங்கள் எல்லோரும் திருடர்கள் என்றும் அடிக்கடி சொல்வார். அவர் சொல்வதை எல்லாம் நாங்கள் அமைதியாகக் கேட்டுக் கொண்டிருப்போம். ஏனெனில் இது போன்ற விசயங்களில் சாகிப் அக்கறை காட்டுவதில்லை என்று எங்களுக்குத் தெரியும். அத்தகைய சமயங்களில் அவ ருடைய சகோதரியிடம் 'இட்ஸ் ஆல்ரைட்... இட்ஸ் ஆல் ரைட்...' என்பார்.

இருந்தாலும் ஒரு சமயத்தில், அது 'ஆல்ரைட்டாக' மாற முடியாமல் போக, மிஸ். ஜின்னா சமையற்காரர்கள் இருவரை வேலையை விட்டு வெளியேற்றும் அளவிற்கு அவர்கள் மீது கோபம் கொண்டார். அதில் ஒருவன் பிரத்தியேகமாக ஐரோப்பிய உணவுகள் சமைப்பதற்கா கவே இருக்க, மற்றொருவன் இந்திய உணவுகளுக்குப் பொறுப்பாளனாக இருந்தான். பின்னவன் எப்போதும் வேலை எதுவும் இல்லாமல் இருப்பான் - சில சமயங்க ளில் மாதக்கணக்கில்கூட. ஆனால் அவனுடைய முறை

வரும்போது சுறுசுறுப்பாகக் காரியத்தில் குதிப்பான். காயிதே அஸாம் உண்மையில் இந்திய உணவுகளைப் பெரிதாக விரும்பியது கிடையாது. இருந்தாலும் அவரு டைய சகோதரி விஷயங்களில் அவர் எப்போதும் தலை யிடாததால், இரண்டு சமையல்காரர்களும் வேலையை விட்டு நீக்கப்பட்ட போது அமைதியாகவே இருந்தார். உணவு உண்பதற்காக அவர்கள் இருவரும் பல நாட்கள் தாஜ் ஹோட்டலுக்குச் சென்று வந்தார்கள். எங்களைப் பொறுத்தவரை இதனால் நாங்கள் ரொம்ப சந்தோஷ மாக இருந்தோம். புது சமையல்காரர்களைத் தேடுகி றோம் என்று நாங்கள் வண்டியை எடுத்துக்கொண்டு, சௌகரியமாக நகர வீதிகளில் வெறுமனே சுற்றிவிட்டு, வேலைக்குத் தகுதியான ஆட்கள் யாரையும் கண்டுபி டிக்க முடியவில்லை என்று திரும்பி வந்தவுடன் எங் களது அறிக்கையைச் சமர்ப்பிப்போம். இறுதியில் மிஸ். ஜின்னா அந்த இரண்டு பழைய சமையல்காரர்களையே திரும்ப வருமாறு அழைத்தார்.

மிகக் குறைவாகச் சாப்பிடுபவர்கள், அவர்களைக் காட்டிலும் மிக அதிகம் சாப்பிடுபவர்களைப் பார்த்து ஒன்று பொறாமைப் படுவார்கள் அல்லது அவர்கள் சிறப்பாகச் சாப்பிடுவதைப் பார்த்துச் சந்தோசப்படுவார் கள். காயிதே இரண்டாவது வகையைச் சேர்ந்த குறை வாகச் சாப்பிடக்கூடியவராக இருந்தார். அதனால்தான் மளிகைப்பொருட்களும் இறைச்சியும் வாங்கியது போக வெளிப்படையாகத் தெரியக்கூடிய மிச்சப் பணத்தை நாங்கள் என்ன செய்தோம் என்று அவர் எப்போதும் கேட்டதே கிடையாது. நான் உன்னிடம் ஒரு கதை சொல்கிறேன். அது 1939ம் வருடம். கடல் அலைகள் உற்சாகமாய்க் கரைமீது மோதிக்கொண்டிருக்க, நான் காயிதேவை அவருடைய வெள்ளை பேக்கார்ட் வண் டியை மெரீன் டிரைவில் மிக மென்மையாக ஓட்டிக் கொண்டிருந்தேன். காற்றில் சற்றே சில்லிட்டத் தன்மை

இருந்தது. ஜின்னா சாகிப் மிக நல்ல மனநிலையில் இருப்பதை என்னால் பார்க்க முடிந்தது. இன்னும் ஒரு சில நாட்களில் வரப்போகும் ஈத் பண்டிகையைப் பற்றிச் சொல்வதற்கு இதுதான் சரியான சந்தர்ப்பம் என்று நினைத்தேன். பின் பகுதியைப் பார்க்கக்கூடிய கண்ணாடியில், அவரைப் பார்க்க முடிந்தது. அவருடைய உதட்டில் மிக மெல்லிய புன்னகை தோன்றியது. நான் என்ன சொல்ல நினைக்கிறேன் என்று அவருக்குத் தெரிந்திருக்கிறது. எனக்குக் கொஞ்சம் பணம் தேவைப்பட்டது. அவர் எப்போதும் பிடித்துக் கொண்டிருக்கும் சிகார் அவருடைய உதடுகளுக்கு இடையில் இருந்தது. இறுதியாக அவர், 'நல்லது, நல்லது நீ திடீரென்று ஏன் முசல்மானாக மாறிவிட்டாய்... கொஞ்ச நாட்களுக்குக் கொஞ்சம்போல் இந்துவாக இருப்பதற்கு முயற்சி செய்' என்று பேசினார். நான்கு நாட்களுக்கு முன்னர்தான் காயிதே எனக்கு இருநூறு ரூபாய் நோட்டை அன்பளிப்பாகக் கொடுத்து, என்னுள்ளிருந்த முசல்மானைச் சந்தோசப் படுத்தினார். மேலும் பணம் கேட்க நினைத்ததால், நான் இந்துயிசத்தைச் சற்றே தழுவிக் கொள்ளுமாறு இப் போது அறிவுரை கொடுக்கிறார்.

காயிதே அஸாமின் அந்தரங்க வாழ்க்கை எப்போதும் மர்மமாகவே இருந்தது. அப்படியேதான் எப்போதும் இருக்கும். அவருடைய எல்லா நேரங்களும் அரசியலுக்காகக் கொடுக்கப்பட்டதால், அவருக்கு என்று அந்தரங்க வாழ்க்கை என்பது ஏறக்குறைய கிடையாது என்று பொதுவாகச் சொல்லப்படுகிறது. பல வருடங்களுக்கு முன்பு அவர் மனைவியை இழந்ததோடு, அவருடைய மகளும் அவரின் விருப்பத்திற்கு எதிராக ஒரு பார்சியைத் திருமணம் செய்து கொண்டார்.

சாகிப்புக்கு அது பெரும் அதிர்ச்சியாக இருந்தது. எந்த நிறத்தில் இருந்தாலும் எந்த சாதியைச் சேர்ந்தவனாக

இருந்தாலும் அவள் ஒரு முசல்மானைத்தான் திரும ணம் செய்து கொள்ள வேண்டும் என்று அவர் விரும்பி னார். ஆனால் அவருடைய மகள் அவரோடு விவாதம் செய்தாள். அவரே, மனைவியைத் தேர்ந்தெடுப்பதில் அவருடைய சுதந்திரத்தை நிலை நாட்டியிருக்க, அதே சுதந்திரத்தை அவளுக்குக் கொடுக்க அவர் ஏன் மறுக் கிறார் என்று அவள் கேட்டாள் என்றான் அசாத்.

மிகப் பிரபலமான பம்பாய் பார்சி ஒருவருடைய மகளை காயிதே அஸாம் திருமணம் செய்து கொண் டது, அந்தச் சமூகத்தைச் சேர்ந்தவர்களை மிக வும் கோபம் கொள்ள வைக்க அதற்குப் பழி வாங்க வேண்டும் என்றிருந்தார்கள். காயிதே மகளுக்கு ஒரு பார்சியுடனான திருமணம் என்பது சிந்தித்துச் செயல் படுத்தப்பட்ட திட்டம் தான் என்று சிலர் சொன்னார்கள். நான் இதை அசாத்திடம் தெரிவித்தபோது அவன், கட வுளுக்குத்தான் எல்லாம் தெரியும். ஆனால் எனக்குத் தெரிந்ததெல்லாம், அவருடைய மனைவியின் மறை விற்குப் பிறகு இதுதான் காயிதே அஸாமை மிகப் பெரிய அளவில் அதிர்ச்சியடைய வைத்தது. இந்தத் திருமணம் பற்றிய செய்தியை அவர் தெரிந்து கொண் டபோது, அவருடைய முகத்தில் இருந்த சோகத்தைப் பார்க்க வேண்டும். அந்த விதத்தில் அவர் மிகவும் வெளிப்படையானவர். அவர் எந்த நிலையில் இருக்கி றார் என்று அவரைப் பார்த்த மாத்திரத்திலேயே சொல் லிவிட முடியும். எளிதில் புண்படக்கூடிய அவரை ஒரு சாதாரண நிகழ்ச்சி கூட பெரிய அளவில் இம்சைப்படுத் தும். அவருடைய புருவங்கள் விரிவதை வைத்தே அவர் கோபமாக இருக்கிறாரா அல்லது குழப்பத்தில் இருக்கி றாரா என்று சொல்லிவிட முடியும். அவரது துக்கத்தை அவரால் மட்டுமே அளக்க முடியும் என்றாலும், அந்த நாட்களில் அவரைப் பார்த்தவர்கள் எவ்வளவு நிலை குலைந்திருந்தார் என்று உணர்ந்திருப்பார்கள். இரண்டு

வாரங்களுக்கு, அவரைப் பார்க்க வந்தவர்கள் எவரையும் அவர் சந்திக்கவில்லை. சிகார் பிடித்துக் கொண்டு, வெறுமனே அறையில் மேலும் கீழும் நடந்து கொண்டேயிருந்தார். அந்த இரண்டு வாரங்களில் அவர் நூற்றுக்கணக்கான மைல்கள் நடந்திருக்க வேண்டும்.

அவர் சிந்தித்துக் கொண்டிருக்கிறார் என்றால், எப்போதும் தன்னந்தனியே, பின்னிரவில் மிகச் சுத்தமான அவரது அறையில் அளந்தெடுத்தாற் போல் அடி வைத்து, மேலும் கீழும் நடந்து கொண்டேயிருப்பார். அவருடைய பழுப்பு மற்றும் வெள்ளை நிறத்திலோ அல்லது கருப்பு மற்று வெள்ளை நிறத்திலோ இருக்கும், கனத்த தோல் செருப்பு தாள சுதியோடு சத்தம் எழுப்ப, அந்த இரவுகள் நகர்ந்து கொண்டிருக்கும். அது கடிகாரத் துடிப்புப் போலிருக்கும். காயிதே அஸாம் அவருடைய காலணிகளை மிகவும் விரும்புவார். அதற்குக் காரணம் அது எப்போதும் அவருடைய காலடியிலேயே இருப்பதாலும், அவர் விருப்பப்படுவது போல் மிகச் சரியாகச் செயல்படக்கூடியது என்பதினாலும் தானா?

இரண்டு வாரங்கள் கழித்து மீண்டும் வெளியே வந்தார். அவருடைய முகத்தில் துக்கத்திற்கான அறிகுறிகளையோ மன அழுத்தத்திற்கான அறிகுறிகளையோ காண முடியவில்லை. இரண்டு வாரங்களாகத் தாழ்ந்திருந்த அவருடைய தலை இப்போது மீண்டும் நிமிர்ந்திருந்தது. ஆனால் இதற்குள் நடந்த எல்லாவற்றையும் மறந்து விட்டாரென்றோ, அந்த அதிர்ச்சியிலிருந்து தேறிவந்துவிட்டார் என்றோ அர்த்தம் இல்லை"

அசாத்துக்கு இது எப்படித் தெரியும் என்று கேட்டேன். பணியாளர்களிடமிருந்து எதுவும் மறைக்கப்படுவதில்லை என்று பதில் தந்தான். "சில சமயங்களில் ஒரு குறிப்பிட்ட பழைய இரும்புப் பெட்டியை அவரது அறைக்கு எடுத்து வந்து அதன் பூட்டைத் திறக்கச்

சொல்வார். அது முழுக்க இறந்து போன அவருடைய மனைவி மற்றும் பிடிவாத குணம் கொண்ட அவருடைய மகள் சிறு குழந்தையாய் இருந்தபோது அணிந்திருந்த துணிமணிகளால் நிரம்பியிருக்கும். அந்தத் துணிமணி கள் வெளியே எடுக்கப்பட, ஒரு வார்த்தையும் பேசாமல் அதை உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பார். ஒட்டிப்போய் இருக்கும் அவருடைய முகம் கருத்துப் போகும். 'இட்ஸ் ஆல்ரைட்... இட்ஸ் ஆல்ரைட்' என்று சொல்லி, ஒற்றைக் கண் கண்ணாடியைக் கழற்றித் துடைத்துக்கொண்டு அங்கிருந்து நகர்ந்து செல்வார்.

காயிதேவுக்கு மூன்று சகோதரிகள் இருந்தார்கள். ஃபாத்திமா, ரெஹ்மத், மற்றும் மூன்றாவது சகோதரியின் பெயர் என் நினைவிலில்லை. அவள் டோங்கிரியில் வசித்து வந்தாள். ரெஹ்மத் ஜின்னா 'சினாய் மோட் டார்ஸ்' அருகிலிருந்த சௌபாத்தி கார்னரில் வசித்து வந்தார். அவருடைய கணவர் எங்கோ வேலை பார்த்து வந்தாலும் பெரிதாக வருமானம் ஏதுமில்லை. சாகிப் ஒவ்வொரு மாதமும் சீல் வைக்கப்பட்ட உறையை என் னிடம் கொடுப்பார் - அதில் பணம் இருக்கும். சில சம யங்களில் பெரிய பொட்டலத்தைக் கொடுப்பார் - அதில் துணிமணிகள் இருந்திருக்கலாம். நான் இதை ரெஹ் மத் ஜின்னாவிடம் கொண்டு சேர்க்க வேண்டும். அவ் வப்போது சாகிப்பும் மிஸ். ஜின்னாவும் அவரைப்போய் பார்த்து வருவார்கள். டோங்கரியில் இருந்த அவருடைய மற்றொரு சகோதரியும் திருமணமானவர்தான். எனக்குத் தெரிந்தமட்டில் அவர் மிக நல்ல நிலையில் இருந்ததால் அவருக்குப் பொருளாதார உதவிகள் ஏதும் தேவைப் படவில்லை. காயிதேவுக்கு ஒரு சகோதரனும் இருந் தான், அவனுக்கும் அவர் தொடர்ந்து உதவி செய்து கொண்டிருந்தாலும், அவருடைய வீட்டிற்கு வர மட்டும் அவனுக்கு அனுமதி கிடையாது. ஒரு முறை நான் அவ னைப் பம்பாயில் பார்த்தேன், சவாய் பாரில் தான். பார்ப்

பதற்குக் காயிதே போலவே இருந்த அவன், அப்போ துதான் குறைந்த அளவு ரம் சொல்லியிருந்தான். அதே மூக்கு, அதே முக அமைப்பு, அதே போல் வாரியிருந்த தலைமுடி, அதே போல் நடுவில் நரைத்த முடி. நான் எவரோ ஒருவரிடம் அந்த மனிதர் யார் என்று கேட்ட போது, அவன்தான் திரு. முகமது அலி ஜின்னாவின் சகோதரன் அகமது அலி என்று சொல்லப்பட்டது. நான் நீண்ட நேரம் அவனைக் கவனித்துக்கொண்டிருந்தேன். ரம்மை மிக மெதுவாகக் குடித்தபின் பணம் கொடுத் தான் - அது ஒரு ரூபாய்க்கும் குறைவானதுதான் என் றாலும், ஏதோ பெரிய தொகையைக் கொடுப்பது போல் ஆடம்பரமாகக் கொடுத்தான். அவன் அங்கு உட்கார்ந் திருந்த விதம் மூன்றாம் தர பம்பாய் மதுக்கடையில் தான் என்பது போல் அல்லாமல், தாஜ் மஹால் ஹோட் டலிலேயே அமர்ந்திருப்பது போன்ற தோற்றத்தைக் கொடுத்தது. வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த காந்தி - ஜின்னா பேச்சுவார்த்தைக்கு முன்னர் அதே அளவிற்கு முக்கியத்துவம் பெற்ற பம்பாய் முசல்மான்கள் மாநாடு ஒன்று நடந்தது. அதில் என்னுடைய நண்பன் ஒருவ னும் கலந்து கொண்டான். காயிதே அஸாம் அவருக்கே உரிய பாணியில் பேசிக்கொண்டிருக்கும் போது, அவரு டைய சகோதரன் அகமது அலி கூட்டத்திற்குப் பின்னால் ஒற்றைக்கண் கண்ணாடி அணிந்து கொண்டு நின்றப டியே, ஏதோ முணுமுணுத்துக்கொண்டிருந்ததாக என் னிடம் தெரிவித்தான்.

வீட்டிற்குள் விளையாடும் விளையாட்டுகளில் காயிதே அஸாமுக்குப் பிடித்தது பில்லியர்ட்ஸ் மட் டுமே. விளையாட வேண்டும் என்று அவருக்குத் தோன் றும்போதெல்லாம் பில்லியர்ட்ஸ் அறையைத் திறக்கச் சொல்லி உத்தரவிடுவார். ஒவ்வொரு நாளும் அந்த அறை தூசுகள் தட்டப்பட்டு மிகச் சுத்தமாகத்தான் இருக்கும் என்றாலும், பணியாளர்கள் அத்தகைய நாட்

களில் மேலும் ஒரு பார்வை கவனமாகப் பார்த்து, அந்த அறையில் எல்லாம் மேலும் சுத்தமாகவும் பளபளப்பா கவும் இருப்பதை உறுதி செய்து கொள்வார்கள். அந்த விளையாட்டில் எனக்கும் கொஞ்சம் ஆர்வம் இருந் ததால், பில்லியர்ட்ஸ் அறையில் நுழைவதற்கு நான் அனுமதிக்கப்படுவேன். சாகிப் முன்பு பன்னிரெண்டு பந்துகள் வைக்கப்பட, அதில் மிகக் கவனமாக மூன் றைத் தேர்ந்தெடுத்து விளையாடத் தொடங்குவார். பல சமயங்களில் மிஸ். ஜின்னாவும் அங்கிருப்பார். சாகிப் தன் உதடுகளுக்கிடையே சிகாரை வைத்துக்கொண்டு, அவர் தாக்கப்போகும் பந்தின் நிலையை உள்வாங் கிக் கொள்வார். பல கோணங்களில் இருந்து அதை ஆராய வேண்டியிருப்பதால் அதற்குப் பல நிமிடங்களா கும். அவர் கையில் பிடித்திருக்கும் கோலின் கனத்தைப் பரிசோதிப்பது போலவும், ஏதோ தந்தி வாத்தியத்தை வாசிக்க வில்லைப் பிடித்திருப்பது போலும், அவருடைய மெலிந்த நீளமான விரல்களுக்கு இடையே அதை மேலும் கீழும் நகர்த்திக் குறி பார்த்து அடிக்கப்போ கும் அந்தத் தருணத்தில் அதை விட மேலும் சிறப்பான கோணம் ஏதோ ஒன்று தோன்றியதால் ஆட்டத்தை நிறுத்தி விடுவார். அவருடைய ஆட்டம் மிகச் சரியான துதான் என்று முழுமையான திருப்தி ஏற்பட்ட பிறகே விளையாடுவார். அவர் திட்டமிட்டது போல் ஆட்டம் நிகழ்ந்து விட்டால், அவருடைய சகோதரியைப் பார்த் துப் பெருமிதத்தோடு புன்னகைப்பார்.

அரசியலிலும், காயிதே அஸாம் அதே அளவிற்குத் துல்லியமாக இருந்தார். அவசரப்பட்டு எந்த முடிவுக ளையும் அவர் எடுத்ததே கிடையாது. பில்லியர்ட்ஸ் விளையாடுவது போலவே, ஒவ்வொரு நிலைமையை யும் பல கோணங்களில் ஆராய்ந்து முதல் முயற்சி யிலேயே, வேண்டியது கிடைக்கும் என்று உறுதியா கத் தெரிந்துகொண்ட பின்னரே அவர் தன் செயலைத்

தொடங்குவார். அவர் வேட்டையாடும் பொருளை மிகச் சரியாகக் கணித்து, அதை வீழ்த்துவதற்கு மிகச் சரியான ஆயுதத்தைத் தேர்ந்தெடுப்பார். அவசர அவசரமாகத் துப்பாக்கியை எடுத்துக் குறிபாராமல் சுடக்கூடிய வகை யறாக்களைச் சேர்ந்தவர் இல்லை அவர். தாக்குவதற்கு முன்னரே, அதில் உள்ள இடர்ப்பாடுகளைக் காயிதே அறிந்துதான் இருந்தார்.

அசாத் சொன்னதின் அடிப்படையில், காயிதே அஸாம் வீண்பேச்சுகள் பேசுவதை வெறுத்தவர் என் பதால், வெறுமனே அவரைப் பார்க்க வரும் பார்வை யாளர்களை முற்றிலுமாகத் தவிர்த்தார். சுருக்கமான தேவையான உரையாடல்களுக்கு மட்டுமே அவரு டைய காதுகள் இருந்தன. அவரைப் பார்க்க வருபவர் களை வரவேற்கும் அந்தப் பிரத்தியேக அறையில், ஒரே ஒரு சிறிய சோபாவும் அதற்கு அருகில் ஒரு சிறிய மோடா வும் மட்டுமே இருந்தன. அந்த மோடாவில் இருந்த சாம்பல் கிண்ணத்தில், அவருடைய சிகார் சாம்பலைத் தட்டிவிடுவார். எதிரே இருந்த சுவருக்கு முன் கண்ணா டிக் கதவுகள் கொண்ட இரண்டு அலமாரிகளில் அவரு டைய ஆதரவாளர்களால் கொடுக்கப்பட்ட புனித குரான் பிரதிகள் வைக்கப்பட்டிருந்தன. அவர் வேலை பார்த்துக் கொண்டிருக்கும் காகிதங்களும் அங்குதான் வைக்கப் பட்டிருந்தன. அவருடைய பெரும்பாலான நேரம் அந்த அறையில்தான் செலவழிக்கப்பட்டது. எங்களில் யாரே னும் ஒருவர் கூப்பிட்டு அனுப்பப்பட்டால், கதவருகே நின்று கொண்டுதான், அவருடைய உத்தரவுகளைக் கேட்க வேண்டும். பிறகு அங்கிருந்து நகர்ந்து விட வேண்டும். அவர் பார்த்துக் கொண்டிருக்கும் காகிதங் கள், சோபாவில் தாறுமாறாய் இறைந்து கிடக்கும். ஏதே னும் கடிதம் எழுத வேண்டியிருந்தால் மட் லூப் அல்லது சுருக்கெழுத்து எழுதக் கூடியவருக்கு அவர் சொல்லி அனுப்பி, தீர்மானமான குரலில், அதிகாரத்தோடு அவர்

சொல்ல வேண்டியதைச் சொல்வார். என்னுடைய ஆங்கில அறிவு மிகக் குறைவானதுதான் என்றாலும், அழுத்தம் தேவைப்படாத வார்த்தைகளுக்கு எல்லாம் அவர் அழுத்தம் கொடுத்ததாகவே நான் எப்போதும் நினைப்பதுண்டு."

அசாத் குறிப்பிட்ட 'அதிகாரத்தோடு' என்பது ஒரு வேளை அவருடைய வலுவற்ற உடலைத் தற்காத்துக்கொள்ளும் உள்மன வெளிப்பாடாக இருக்கலாம். அவருடைய வாழ்க்கை ஓடும் தண்ணீரில் குமிழிபோல் இருந்தாலும், இந்த உலகத்திற்குப் பெரும் நீர்ச்சுழற்சி போல் தன்னை வெளிப்படுத்திக் கொண்டார். அந்த உடலில் வலு இல்லாததுதான் அத்தனை காலங்களுக்கும் அவரை உயிரோடு வைத்திருக்கிறது. எவ்வித சம்பிரதாயங்களும் இல்லாமல் காயிதே உறவு வைத்திருந்தது அவருடைய மிகச் சிறந்த நண்பரான நவாப் பஹதூர் யார்த் ஜங்குடன் மட்டும்தான் என்று அசாத் சொன்னான். "அவர் அடிக்கடி சாகிப்பைச் சந்திக்க வருவார். இருவரும் அரசியல் மற்றும் முக்கியமான தேசிய விசயங்களை மணிக்கணக்காய்ப் பேசிக்கொண்டிருப்பார்கள். நவாப் போடு இருக்கும்போது மட்டும் காயிதே முற்றிலும் வேறுபட்ட மனிதராக இருந்தார். மிக அன்னியோன்யமான நண்பர் ஒருவரிடம் பேசுவது போல, அவரோடு மட்டுமே பேசுவார். அவர்கள் இருவரும் குழந்தைப் பருவத்து நண்பர்கள் போலவே தோன்றினார்கள். இருவரும் அறையில் ஒன்றாக இருக்கும்போது அவர்களின் உரக்கச் சிரிக்கும் சத்தத்தை நம்மால் கேட்க முடியும். மக்மூதாபாத் ராஜா சாகிப், ஐ.ஐ.சுந்த்ரிகர், மௌலானா ஸாஹித் ஹு"சைன், நவாப் ஸாதா, லியாகத் அலிகான், நவாப் சர் முகமது இஸ்மாயில் மற்றும் அலி இமாம் போன்றவர்கள் உட்பட மற்றவர்களும் அவரைச் சந்திக்க வருவார்கள். ஆனால் சாகிப் அவர்களை எல்லாம் ஒருவித சம்பிரதாயத்தோடுதான் கையாண்டார். பஹதூர் யார்த் ஜங்கின்

வருகையோடு சம்பந்தப்பட்டிருந்த அந்தச் சம்பிரதாயங்கள் அற்ற இலகுவான தன்மை எல்லாம் மற்றவர்கள் வருகையின்போது காணாமல் போய்விடும்"

லியாகத் அவரைப் பார்க்க அடிக்கடி வருவாரா என்று அசாத்திடம் கேட்டேன்.

"ஆமாம்" என்று அசாத் பதில் தந்தான். "மிகவும் திறமை பெற்ற அவருடைய மாணவனைப் போல்தான் காயிதே அவரை நடத்தினார். லியாகத் அவர் மீது பெருமளவு மரியாதை வைத்து, அவரது கட்டளைகளின் கடைசி வரிகளைக்கூட நிறைவேற்றினார். சில சமயங்களில் அவர் அழைக்கப்படும்போது, உள்ளே போவதற்கு முன் சாகிப் எந்த மனநிலையில் இருக்கிறார் என்று என்னிடம் கேட்டுத் தெரிந்து கொள்வார். நான் எப்போதும் அவருக்குப் பதில் சொல்ல முடிந்ததற்குக் காரணம் காயிதே மோசமான மனநிலையில் இருந்தால் அது எல்லோருக்கும், ஏன் மௌண்ட் பிளசன்ட் சுவர்களுக்குக் கூட தெரிந்திருக்கும். காயிதே அஸாம் அவருக்காக வேலை பார்ப்பவர்கள் மற்றும் பணியாட்களின் நடத்தையிலும், தோற்றத்திலும் மிகவும் குறியாக இருந்தார். சுத்தம் இல்லாத எல்லாவற்றையும் அவர் வெறுத்தார் - மனிதர்களின் நடத்தை உட்பட. அவருக்கு மட்லூப்பை மிகவும் பிடித்திருந்தது என்றாலும், முஸ்லிம் லீக் பெண் தொண்டரோடு அவர் உறவு வைத்திருக்கிறார் என்பது தெரிந்தவுடன், இது போன்ற முறையற்ற நடத்தைகளை எப்போதும் பொறுத்துக்கொள்ள முடியாதவராக அவர் மிகவும் எரிச்சலடைந்தார். மட்லூப் வரவழைக்கப்பட்டு, கேள்விகள் கேட்கப்பட்டு, வீட்டிற்கு அனுப்பப்பட்டார். ஆனாலும் காயிதே பிறகு அவரை எப்போது சந்தித்தாலும், பழைய நண்பர் போலவே நடத்தினார்.

ஒரு முறை நான் வீட்டிற்கு மிகவும் தாமதமாக வந்தேன். நகரத்திற்குள் சென்று பாரில் பல மணி நேரங்

கள் செலவு செய்துவிட்டுத் திரும்பி வந்தேன். நான் எவ்வளவு தாமதமாக வந்தேன் என்று சாகிப்புக்குத் தெரிய வாய்ப்பில்லை என்றே நினைத் திருந்தேன். ஆனால் நான் நினைத்தது தவறு. அடுத்த நாள் என்னை அழைத்து நான் என் நடத்தையைப் பாழ்படுத் திக் கொள்வதாக ஆங்கிலத்தில் தெரிவித்தார். பிறகு அரைகுறை உருதுவில், "இப்போது உனக்குத் திரும ணம் செய்து வைத்தாக வேண்டும்" என்று சொன்னார். நான்கு மாதங்கள் கழித்து முஸ்லிம் லீக் கூட்டத்தில் கலந்து கொள்ள அவர் பம்பாயிலிருந்து டெல்லிக்கு வந் தபோது அவர் விருப்பப்பட்டது போலவே உரிய காலத் தில் நான் திருமணம் செய்து கொண்டேன். அவரோடு எனக்குத் தொடர்பு இருந்ததினால் மட்டுமே, சையத் குடும்பத்தில் இருந்து வந்தவள் எனக்கு மனைவியாக முடிந்தது. நான் ஷேக் சாதியைச் சேர்ந்தவன் என் றாலும் சையது குடும்பத்தினர் என்னை மருமகனாக ஏற்றுக்கொள்ளக் காரணம், நான் காயிதே அஸாமிடம் வேலை பார்த்துக் கொண்டிருந்ததனால்தான்.."

காயிதே அஸாம் எப்போதாவது 'என்னை மன்னித் துக்கொள்' என்று சொல்வதைக் கேட்டிருக்கிறானா என்று அசாத்திடம் கேட்டேன். அசாத் தலையை ஆட் டினான், "இல்லை. அவரது உதடுகளில் இருந்து தப் பித் தவறியேனும் அந்த வார்த்தைகள் மட்டும் வெளி யேறியிருக்கும் பட்சத்தில், அதை அகராதியில் இருந்தே வெட்டியெறிந்திருப்பார் என்று என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியும்" என்றான். இந்த ஒரு குறிப்பு ஒன்றே காயிதே அஸாம் முகமது அலி ஜின்னாவின் இயல்பின், திறவுகோலைக் கொண்டிருப்பதாக நினைக்கிறேன்.

முகமது ஹனீஃப் அசாத் உயிரோடுதான் இருக் கிறான், அவனுடைய காயிதே அஸாம் பரிசாகக் கொடுத்த பாகிஸ்தானில். அந்த நாடு மிகவும் திறமை

பெற்ற மாணவரான கான் ஷியாகத் அலிகானின் தலைமையில் இந்த முரட்டுத்தனமான உலகத்தில் தன்னைத் தக்கவைத்துக்கொள்ள முயன்று கொண்டிருக்கிறது. சுதந்திரமான இந்தத் துண்டு நிலத்தில்தான், பஞ்சாப் ஆர்ட்ஸ் பிக்சர்ஸ் அலுவலகத்திற்கு வெளியே, வெற்றிலை விற்கும் கடைக்கு அருகாமையில் உடைந்து கிடக்கும் கட்டிலில் அமர்ந்து கொண்டு, அவனுடைய சாகிப்புக்காக காத்திருப்பதோடு, குறித்த நேரத்தில் அவனுக்கான ஊதியம் கொடுக்கப்படப்போகும் அந்த நாளுக்காகவும் பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறான். சந்தர்ப்பம் கிடைக்கும் என்றால் காயிதே அஸாம் அவனுக்கு அறிவுரை தந்தது போல சற்றே இந்துவாக மாறுவதற்கும் தயாராக இருந்தான்.

சென்ற முறை நான் அவனிடம் காயிதே பற்றி பேசியபோது, மிகவும் மனம் உடைந்திருந்தான். வெற்றிலை வாங்குவதற்குக் கூட அவனிடம் ஏதுமில்லாத நிலையில் இருக்கிறான் என்று தெரிந்து கொண்டேன். அவனிடம் ஏதேதோ பேசி எப்படியோ அவனுடைய மண்டைக்குள் இருந்த பிரச்னைகளிலிருந்து அவனை வெளியே கொண்டுவந்தேன்.

அவன் பெருமூச்சு விட்டான். "என்னுடைய சாகிப் இறந்து விட்டார். அவருடைய கடைசிப் பயணத்தின் போது கூரை அகற்றப்பட்ட அவருடைய வெள்ளை பேக்கார்ட் வண்டியை ஓட்டிக்கொண்டு நான் உடனிருந்திருக்க வேண்டும் என்று எவ்வளவு ஏங்கினேன். அவர் இறுதியாய் அடைய வேண்டிய இடத்திற்கு எவ்வளவு மென்மையாய் வண்டியை நான் ஓட்டியிருக்க வேண்டும் என்று ஏங்கினேன். எளிதில் புண்படக்கூடிய அவரது சுபாவத்திற்குக் கரடுமுரடான, தூக்கிப்போடும் பள்ளங்கள் ஏற்றதில்லை. நான் இதைக் கேள்விப்பட்டேன் - அது உண்மைதானா இல்லையா என்று எனக்

குத் தெரியாது. அவருடைய கடைசிப் பயணமாக இருந் திருக்க வேண்டியதில் விமானம் மூலம் கராச்சிக்கு அவர் கொண்டு வரப்பட்டுப் பிறகு கவர்னர் ஜெனரல் வீட் டிற்கு அவரை எடுத்துச் செல்ல வேண்டிய ஆம்புலன்ஸ் வண்டி சிறிது தூரம் கடந்த உடனே இஞ்ஜின் ஏதோ கோளாறு செய்து நின்று போனதாம். என்னுடைய சாகிப் இதனால் எவ்வளவு வருத்தப்பட்டிருப்பார் என்று எனக் குத் தெரியும்."

அசாத்தின் கண்களில் கண்ணீர் நிறைந்திருந்தது.

***



## அலிக்:

## சாய்வு நாற்காலிப் புரட்சிக்காரர்

எதேச்சதிகார கொடுங்கோல் ஆட்சியாளர்கள்
தகுந்த முடிவைச் சந்திப்பார்கள்.

ரஷ்ய வீதிகளில் பழிவாங்கும் கோஷங்கள் எதிரொலிக்கும்.

ஜார் ஆட்சி சவப்பெட்டியின் கடைசி ஆணி அது.

உரக்கக் கத்தும் இந்தத் தலைப்பு வரிகளோடு மிகப் பெரிய ஆளுயரச் சுவரொட்டிகள் அம்ரித்சரில் பல்வேறு சுவர்களில் தோன்றின. இந்தத் தலைப்பு வரிகளுக்கு மேல் எதையும் படிக்காத பலர் அவர்களுக்குள் கிசு கிசு என்று ஏதோ பரிமாறிக்கொண்டனர். எந்த வருடம் என்று எனக்கு நினைவில்லை என்றாலும் அது கைதுகளால் நிரம்பியிருந்த காலம். அம்ரித்சரில் இது ஒன்றும் அதிசயமாக நடப்பதில்லை. எப்போதும் குண்டுகள் வெடிப்பதும், தடை செய்யப்பட்ட விசயங்கள் நகரத்தின் சிவப்புத் தபால் பெட்டிகளில் தள்ளப்படுவதும் வழக்கமானது தான். சூழ்நிலையில் பெரும் பதற்றம் நிலவியிருந்ததால்தான் போகிறவர்களும் வருகிறவர்களும் கிளர்ச்சியூட்டக்கூடிய இந்தச் சுவரொட்டியில் ஆர்வம் காட்டினார்கள். இருந்தாலும் இத்தகைய தடை செய்யப்பட்ட விசயங்களைப் படிப்பதால் பிடிபட்டு விடுவோம் என்று பயந்து நீண்ட நேரம் எவரும் நிற்கவில்லை.

நானும் என்னுடைய பால்யத் தோழனுமான ஹசன் அப்பாஸும் சேர்ந்து உருதுவில் மொழிபெயர்த்த, சுவ ரொட்டியில் இருந்த இந்தத் தலைப்பு வரிகள், ஆஸ் கர் வைல்ட்-ன் மோசமான நாடகங்களில் ஒன்றான 'வேரா'வில் இருந்து நேரடியாகக் கடன் வாங்கப்பட் டது. கவிஞர் அக்தர் ஷிரானி கையெழுத்துப் பிரதியைத் திருத்தம் செய்து கொடுத்தார். எங்களுடைய குரு பாரி சாகிப் இதை மொழிபெயர்ப்பதில் எங்களுக்கு உதவி செய்தார். 'ஸனாய் எலக்ட்ரிக் பிரஸ்ஸில்' எப்படியோ இதை அச்சடித்து முடித்தோம். போலீஸ் அச்சகத்தைச் சோதனை செய்து எல்லாவற்றையும் எடுத்துச் சென்று விடுவார்கள் என்று பயம் கொண்ட காரணத்தினால் அந்தப் பிளேட்டுகளைப் பாதுகாப்பாய் வைத்திருக்க வேண்டி பாரி சாகிப் அவரே அவருடைய வீட்டிற்கு எடுத்துச் சென்றார். நானும் அப்பாஸும் இந்த நட வடிக்கைகளால் மிகவும் சிலிர்த்துப் போனோம். எங் களுடைய சிறுபிள்ளைத்தனமான மண்டையில், சிறை சென்றவர்களுக்கு என்ன காத்திருக்கின்றது என்றோ, காவல் நிலையங்களில் விசாரணை செய்யப்படுகிறவர் கள், எத்தகைய முறையில் நடத்தப்படுவார்கள் என்றோ எதையும் புரிந்து கொள்ள முடியாமலிருந்தது. இது போன்ற விசயங்கள் பற்றிச் சிந்தித்துப் பார்க்கக்கூட நாங்கள் தயாராக இல்லை. சிறைக்குச் செல்வது என் பது இந்த நாட்டிற்குத் தியாகம் செய்வதாக அர்த்தம் என்ற சிந்தனை மட்டுமே எங்களை முழுமையாய் ஆட் கொண்டு இருந்தது. நாங்கள் விடுதலை செய்யப்பட்ட பின் மாலைகள் போடப்பட்டு, தக்க மரியாதைகளோடு பெரிய ஊர்வலமாய் அழைத்துச் செல்லப்படுவோம் என்பதில் மட்டும் தீர்மானமாய் இருந்தோம்.

எங்களோடு ஒப்பிடப்படும்போதும் 'வேரா'வில் வரும் ரஷ்யப் புரட்சிக்காரர்களும் தீவிரவாதிகளும் முழு அள

வில் ஆயுதங்கள் பெற்றவர்களாக இருந்தார்கள். அந் தக் காலத்தில் அம்ரித்சரில் யாரேனும் ஒருவன் குருவி சுடும் துப்பாக்கியைப் பெற துணிந்திருந்தாலும், அவன் பீரங்கி வாயில் உட்காரவைத்துப் பரலோ கத்திற்கு அனுப்பப்பட்டிருப்பான். அம்ரித்சரில் இருந்து மாஸ்கோ மிக நீண்ட தொலைவில் இருக்கலாம். ஆனா லும் நானும் ஹசன் அப்பாஸும் புரட்சிக்காரர்களை அறி யாதவர்களாக இல்லை. பள்ளியில் மீண்டும் பத்தாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தபோது, வரைபடத்தில் தரை மார்க்கமாகவே ரஷ்யாவிற்குப் போய்ச் சேர வழி யைத் தீர்மானித்திருந்தோம். அதெல்லாம் தொடக்கக் காலங்கள். ஃபெரோஸுதின் மன்ஸூர் இன்னும் தோழர் எஃப்.டி. யாக மாறவில்லை, சஜ்ஜத் ஜாஹீர் இன்னும் எல்லோராலும் மாப்பிள்ளை என்றே அழைக்கப்பட் டான். அம்ரித்சர் தான் எங்களுடைய மாஸ்கோ. இந்த நகரத்து வீதிகளில் தான் அதிகாரம் படைத்த எதேச் சதிகார ஆட்சியாளர்களை, அவர்களுக்குத் தகுதியான முறை யில் ஓடவிட வேண்டும் என்று நினைத்தோம். ரஷ்ய எதேச்சதிகார இல்லம் என்ற சவப்பெட்டியில் அடிக்கப்படப்போகும் கடைசி ஆணி, பாரித் சதுக்கத் தில் அல்லது கட்ரா ஜமீல் சிங்கில் அல்லது கர்மூன் தியோரியில் அடிக்கப்பட வேண்டுமென்று நினைத் தோம். அந்தக் கடைசி ஆணி நேராக இல்லாமல் போக லாம் என்றோ ஆணியை அடிப்பதற்குப் பதில் சுத்தியல் எங்களுடைய விரலைத் தட்டையாக்கிவிடும் என்றோ எங்களுக்குத் தோன்றயில்லை. பாரி சாகிப்தான் எங்க ளுடைய குரு. சிந்திப்பதெல்லாம் அவருடைய வேலை. எங்களுடையது அல்ல. ஆனாலும் எங்களுடைய தலை வராக நாங்கள் தேர்ந்தெடுத்திருக்கும் அந்த மனிதர் பலவீனமான இதயத்தைக் கொண்டவர் என்று எனக் குப் பலமுறை தோன்றத்தான் செய்தது. மரத்தின் சிறு சலசலப்புக்கூட அவரை அதிர்ச்சி கொள்ள வைக்கப்

போதுமானதாக இருந்தது. எங்களுடைய உண்மையான உற்சாகம் மட்டுமே அவரைச் செயல்படத் தூண்டியது என்று சொல்லலாம்.

இப்போது எல்லாவற்றையும் திரும்பிப் பார்க்கும் போது, அந்த விசயங்கள் எல்லாமே சொப்பு விளையாட்டுகள் போல்தான் தோன்றுகிறது. ஆனாலும் அந்தக் காலகட்டத்தில் அதே சொப்புகள் மிகப் பிரம்மாண்டமானதாகவும், எதனாலும் தடுத்து நிறுத்த முடியாததாகவும் தோன்றியது. எங்களுடைய கலீஃபா பாரி சாகிப் மட்டும் பயந்த சுபாவம் கொண்டவராக இல்லாமலிருந்திருந்தால் நாங்கள் நால்வரும் (அபு சையத் குரைஷியும் இப்போது எங்களுடைய மூவரணியில் சேர்ந்து கொண்டான்) தூக்கில் தொங்கவிடப்பட்டு, அம்ரித்சர் தியாகிகளோடு நாங்களும் சேர்ந்து கொண்டிருப்போம். எதற்காக இதையெல்லாம் செய்தோம் என்று கேட்கப் பட்டிருந்தால், இந்தச் சிறுபிள்ளைத்தனமான உற்சாகம் எங்களை எங்கே அழைத்துச் செல்கிறது என்று எங்களுக்கே தெரியவில்லை என்றுதான் பதில் தந்திருக்க முடியும்.

நான் பாரி சாகிப்பைப் பயந்த சுபாவம் கொண்டவர் என்று சொல்லியிருக்கிறேன். அவருடைய தனித்துவத்தின்மீது தாக்குதல் நடத்துவதற்காக நான் இதைச் சொல்லவில்லை. உண்மை என்னவென்றால் அந்தப் பயந்த சுபாவம் தான் அவருடைய தனித்துவத்தின் பிரதானமானதாகவும் இன்றியமையாத பண்பாகவும் அமைந்து இருந்தது. அவர் பயந்த சுபாவம் கொண்டவராக இல்லாமல் இருந்திருந்தால், அவர் என்னவாக இருந்திருந்தாரோ அதுவாக நிச்சயம் இருந்திருக்க மாட்டார். முற்றிலும் வேறுபட்டவராகத்தான் அவர் இருந்திருப்பார்: ஏதேனும் ஒரு சமஸ்தானத்தில் வாழ்நாள் முழுக்க அதற்குச் சேவை செய்யக்கூடிய உலகப்

புகழ் பெற்ற ஹாக்கி விளையாட்டு வீரராகவோ, தொடக் கப் பள்ளி ஆசிரியராகவோ இருந்து பின்னாளில் பல் கலைக்கழக முனைவராகவோ மாறியிருக்கலாம் அல் லது வெடிகுண்டை விட்டெறிந்த மற்றொரு பகத்சிங்கா கவும் இருந்திருக்கலாம். (பகத் சிங்கும் அவர் ஊரான லையால்பூரைச் சேர்ந்தவர்தான் என்பதால் அவருட னான பரிச்சயமும் இருந்தது) இந்தப் பயந்த சுபாவம் தான் ஏதாவது ஒன்றாக உருப்பெறுவதில் இருந்து அவ ரைத் தடுத்து நிறுத்தியது. எப்போதுமே அந்தரத்தில் தொங்கியபடியேதான் இருந்தார். அவ்வப்போது அவ ருக்குத் தோன்றிய பல சிறப்பான சிந்தனைகள் கூட பயம் என்ற கொக்கியில் தொங்கிக் கொண்டிருந்ததா கவே நான் நம்புகிறேன்.

பாரி சாகிப் மிகவும் சுயமான திட்டங்களைக் கொண்டு வரும் அதே வேகத்தில் அதை மறந்து விடுவார். சில சம யங்களில் ஏதேனும் ஒரு தீவைக் கண்டுபிடித்து அதை எப்படி அடைவது என்றும், எப்படி அதை வெற்றிக் கொள்வது என்றும் திட்டங்கள் தீட்டுவார். அதை அடை யக்கூடிய அதிர்ஷ்டசாலிகளுக்கு மறைத்து வைக்கப் பட்டிருக்கும் புதையல் பற்றி அவர் படம் போட்டு விளக் குவது போல் சொல்லும் முறையில் கேட்பவர்களின் கண் முன்னே அவை எல்லாம் தோற்றம் கொள்ள, அவர் பேசி முடிப்பதற்குள்ளாகவே ஒன்றுக்கு மேற்பட்ட தொண்டர்கள் அந்த ஆபத்தான தீவிற்குப் புறப்படத் தயாராக இருப்பார்கள். ஆனால் அதே கணத்தில் பாரி சாகிப் மறைந்து விடுவார், எங்கேயும் அவரைப் பார்க்க முடியாது. அவர் திரும்பவும் தோற்றம் கொடுக்கும் போது, யாரேனும் ஒருவர் அந்தத் தீவைப்பற்றிக் கேட்டால், அதைக்காட்டிலும் ஆச்சரியம் தரக்கூடிய வேறொரு தீவைப் பிறகு அவர் கண்டுபிடித்ததாக விலாவாரியாகச் சொல்லத் தொடங்கிவிடுவார்.

அந்தச் சுவரொட்டிகள் எல்லாம் ஒட்டப்பட்ட பிறகு மிகச் சரியாக அதேதான் நடந்தது. நானும், அப்பாஸும் கைது செய்யப்படலாம் என்று பயந்து கொண்டு இருந்த காரணத்தினால், அன்று இரவு முழுக்கத் தூங்கவே யில்லை. அடுத்த நாள் புது மாப்பிள்ளை போல் நாங் கள் எங்களுடைய அனுபவம் பெற்ற ஆசான் பாரியைச் சந்தித்து அடுத்தக் கட்ட நடவடிக்கை பற்றித் தெரிந்து கொள்ள அவரைத் தேடிக் கொண்டு சென்றோம். அவ ரைக் காணவில்லை. அவர் வழக்கமாகப் போகும் இடங் களில் தேடியும். எங்கும் அவரைக் காண முடியவில்லை. பதினைந்து நாட்களுக்குப் பிறகு, புதுத் திட்டத்திற்கான முழு விவரங்களோடு அவர் தோன்றினார். அதாவது ஒரு வாரப் பத்திரிக்கை தொடங்குவது. அவருக்கே உரிய பாணியில் எங்களிடம், "உங்களைப்போல் நான் ஒன்றும் நேரத்தை வீணாகக் கழித்துக்கொண்டிருக்கவில்லை. நான் இதற்காக ஏற்பாடுகள் செய்வதில் மும்முரமாக இருந்தேன். இப்போது எல்லாம் முடிந்து விட்டது. இப் போது நமக்கு வேண்டியது எல்லாம் அரசாங்கத்திடமி ருந்து அனுமதி மட்டும்தான். நான் இன்றிலிருந்தே கட் டுரையை எழுதத் தொடங்கப் போகிறேன்" என்றார்.

ரஷ்ய ஏகாதிபத்திய இல்லம் என்ற சவப்பெட்டியில் கடைசி ஆணி அடிக்கப்படும் என்று உறுதிமொழி கொடுத்த சுவரொட்டிகள் காணாமல் போய்விட்டன. இருந்த ஓரிரு சுவரொட்டிகளும் ஆண்மை வீரியம் சம் பந்தமான மருந்து விளம்பரங்களால் பாதி மறைக்கப்பட் டிருந்தன. புரட்சிக்கான எங்களுடைய உற்சாகம் எல் லாம் இப்போது அந்தப் புது வாரப் பத்திரிகையின் மீது குவிந்திருந்தது. 'வேரா'வின் எல்லாப் பிரதிகளையும் - அது மிகக் கொடுமையாக அச்சாகியிருந்த காரணத்தா லும் அது இருந்த அழகிற்காகவும் என்னுடைய வீட்டி லேயே பூட்டி வைத்திருந்தேன். இப்போது 'கல்க்' என்ற

அந்த வாரப் பத்திரிகையின் மீதுதான் எங்களுடைய முழு கவனமும் இருந்தது. முதல் இதழ் 'ஸனாய் எலக்ட் ரிக் பிரஸில்' அச்சடிக்கப்பட்டது. நானும் பாரி சாகிப்பும் அதை வீட்டிற்குச் சுமந்து சென்றோம். அது வந்திருந்த முறை எங்களுக்குச் சந்தோசத்தைக் கொடுத்தது. பாரி சாகிப்பை ஆதரிப்பவர்களில் தோல் வியாபாரம் செய்த ஒருவரும் இருந்தார். அவருடைய பெயரை நான் இப் போது மறந்துவிட்டேன். 'கல்க்' வெளிவருவதில் கருத்த தாடிகொண்ட அந்தக் கனவான் மிகப் பெரிய பங்காற்றி யுள்ளார். அவர் மேலும் முதலீடு செய்வதற்கும் தயாரா கத்தான் இருந்தார். ஆனால் பாரி சாகிப் மீண்டும் ஓடிப் போகாமல் இருந்திருந்தால்.

முதல் இதழில் அவருடைய, 'காரல் மார்க்ஸ் முதல் ஹெகல் வரை' என்ற கட்டுரை முதல் பக்கத்திலிருந்து துவங்கியது. அது சோசியலிசத்தின் பரிணாம வளர்ச் சியைப்பற்றி என்பதால் ஹசன் அப்பாஸ் மற்றும் என் னுடைய புரிதலுக்கு அப்பாற்பட்டதாக இருந்தது. எங் களுக்கு ஹெகலையும் தெரியாது, காரல் மார்க்ஸை யும் தெரியாது. இருந்தாலும் பின்னவரின் பெயரை பாரி சாகிப் பலமுறை உச்சரித்ததாகக் கேட்டிருக்கிறோம். எங்களுக்குத் தெரிந்ததெல்லாம் அவர் தொழிலாளி வர்க்கத்தின் மிகச்சிறந்த நண்பர் என்பது மட்டும்தான். ஆனால் அவருடைய தத்துவம் என்னவென்றோ, அது டாக்டர் ஹெகலோடு எவ்விதத்தில் இணைக்கப்படுகி றது என்றோ நாங்கள் இம்மியும் அறிந்திருக்கவில்லை. நான் இதையும் சேர்த்துத்தான் சொல்ல வேண்டும். என் னுடைய முதல் கதை 'தமாஷா' அதே இதழில் அச்சா கியிருந்தாலும் என்னைப் பார்த்து நகைப்பார்கள் என்று பயம் கொண்ட காரணத்தால் அது என்னுடைய பெய ரைக் கொண்டிருக்கவில்லை. என்னுடைய அனுபவம் சுருங்கியது என்று பாரி சாகிப் அறிந்திருந்தாலும் என்

தவறுகளை ஒரு முறை கூட சுட்டிக்காட்டாமல் எப்போ தும் என்னை ஊக்குவித்து வந்தார். அவர் சொல் வதெல்லாம் 'நன்றாக வந்திருக்கிறது' என்பதாகத்தான் இருக்கும்.

'கல்க்' வெளியான ஒரு சில நாட்களுக்கு எங் களுக்குத் தலை கால் புரியவில்லை. அப்பாஸும் நானும் ஏதோ பெரிதாகச் சாதித்து விட்டது போல் காட்ரா ஜமீல்சிங் மற்றும் ஹால் பஜாரில் எங்களுடைய மூக்கை உயர்த்தி வைத்தவாறு நடந்து கொண்டிருந் தோம். ஆனால் அடுத்த சில நாட்களில் எதுவுமே மாற வில்லை என்றும், அம்ரித்சர் நகரத்தைப் பொறுத்தமட் டில் நாங்கள் இப்போதும் முன்பு போலவே நேரத்தை வீணடித்துக் கொண்டிருப்பவர்கள்தான் என்று உணரத் தொடங்கினோம். எப்போதும் போல சிகரெட் கடைக்கா ரன் நாங்கள் அவனுக்குக் கொடுக்க வேண்டிய பாக் கியைக் கொடுக்குமாறு நச்சரித்துக் கொண்டிருந்தான்; குடும்பத்தில் மூத்த உறுப்பினர்கள் நாங்கள் எதற்கும் பிரயோசனம் இல்லாதவர்கள் என்பதில் எப்போதும் போல் தீர்மானமாய் இருந்தார்கள். அது ஒன்றும் உண் மைக்குப் புறம்பான விசயமாகவும் இல்லை. காரணம் ஏதோ சாதாரண உடை அணிந்த போலீஸ்காரர்கள் எங்களைப் பற்றி விசாரித்ததாக அறிந்து கொண்டோம். இந்தச் செய்தி நாங்கள் வசித்துவந்த கூச்சா வக்கீலான் வந்தடைந்தபோது, சமீபத்தில் பில்லாட்டில் இருக்கும் காவல் பயிற்சி பள்ளியிலிருந்து ஓய்வு பெற்ற என்னு டைய மைத்துனன் க்வாஜா அப்துல் ஹமீத் எங்களைத் தேடிக்கொண்டு வந்த போலீஸ்காரர்களை மடக்கி, "போய் வேறு ஏதேனும் வேலையைப் பாருங்கள். இந்த ஹெகல், காரல் மார்க்ஸ்-ஐ எல்லாம் உங்களால் புரிந்து கொள்ள முடியாது. பாவம் அந்த பாரிக்குக் கூட அதைப் பற்றி எல்லாம் ஒன்றும் பெரிதாகத் தெரியாது" என்றார்.

காவல் பள்ளியில் இருந்ததால் ஏறக்குறைய அவருக்கு எல்லோரையும் தெரிந்திருந்தது. அவருக்கு பாரி சாகிப்பையும், அவருக்கு வரலாற்றின் மீதிருந்த ஆர்வத்தையும் கூட அறிந்திருந்தார். குறிப்பாக பாரி சாகிப்பின் பேச்சு பாணி அவருக்கு மிகவும் பிடித்திருந்ததினால் தான் சாதாரண உடையணிந்து வந்த போலீஸ்காரர்களிடம் அத்தோடு விட்டுவிடுமாறும், இந்தியாவில் உள்ள பிரிட்டிஷ் அரசாங்கத்தைத் தூக்கியெறியும் அளவிற்கு பாரி எதையும் எழுதிவிடவில்லை என்றும் உத்தரவாதம் கொடுத்தார். ஆனால் ஏதோ நடக்கிறது என்று எப்படியோ தெரிந்து கொண்ட பாரி சாகிப், மேலும் ஒரே ஒரு இதழ் 'கல்க்' தயாரித்து விட்டு - அதுவும் அதனுடைய எல்லா பிரதிகளும் என்னிடமிருக்க, காணாமல் போய் விட்டார். நீண்ட நாட்களுக்கு எங்கோ இருந்த அவர், முல்டானிலிருந்து எனக்குத் தபால் அட்டை கூட அனுப்பியிருந்தார். அதில், 'முல்டான் வானிலை ஆய்வுக்கூடத்திலிருந்து என்னுடைய நட்சத்திரங்களை ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறேன்' என்று இருந்தது. இது அவருக்கு மிகவும் பிடித்தமான வாக்கியம். எப்போது எங்கிருந்து எனக்கு எழுதினாலும் இந்த வரிகள் நிச்சயம் அதில் இடம்பெறும். அவர் எங்கிருக்க நேர்ந்தாலும், அவருடைய நட்சத்திரங்களை ஆராய்ச்சி செய்ய அவர் மறந்ததே இல்லை என்று நம்புகிறேன். கல்லறையின் இருண்ட ஆய்வுக் கூடத்திலிருந்து கூட, அவருடைய நட்சத்திரங்களை அவர் ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கக் கூடும். ஆனால் அங்கிருந்து எனக்கு ஒரு தபால் அட்டை போட முடியாதது பரிதாபத்திற்குரியதுதான்.

அவருக்குத் தபால் அட்டை என்றால் பிடிக்கும். அது தபால் உறையைக் காட்டிலும் விலை மலிவானது என்பதோடு அதில் பதில் எழுதுவது என்று வரும்போது அவர் சோம்பேறியாகவும் இருந்தார். எனக்கு நினைவிருக்கி

றது. ஒருமுறை நான் அம்ரித்சரில் இருந்து அவருக்குப் பல கடிதங்கள் போட்டும், ஒன்றுக்குக் கூட அவர் பதில் போடவேயில்லை. கடைசியாக இரண்டு ஐந்து பைசா தபால் தலைகளை என்னுடைய கடிதத்தில் இணைத்து பதில் எழுதிப் போடுமாறு அவரை வேண்டிக்கொண் டேன். சில தினங்கள் கழித்து ஒரு தபால் அட்டை வந் தது. அதில் 'நீ அனுப்பியிருந்த தபால் தலைகளை விற்று விட்டு இந்தத் தபால் அட்டையை வாங்கினேன். உன்னு டைய கடிதங்கள் எல்லாம் ஒழுங்காக என்னிடம் வந்து சேர்ந்தது' என்று மட்டுமே இருந்தது. இது என்னை மிக வும் கோபம் கொள்ள வைக்க, நான் நினைப்பதை அவ ரிடம் வெளிப்படையாகச் சொல்லிவிடுவது என்ற தீர்மா னத்தோடு லாகூருக்குப் பயணமானேன் - அங்குதான் அவர் இருந்தார். ஆனால் அராப் ஹோட்டலில் அமர்ந் திருந்தபோது அவர் எவ்வளவு கேவலமானவராக இருக் கிறார் என்று சொல்ல வருவதற்குள் தன்னுடைய நட்சத் திரங்களை லாகூர் ஆய்வுக்கூடத்திலிருந்து ஆராய்ச்சி செய்யத் தொடங்கி விட்டார். அவருடைய கண்டுபிடிப்பு இதுதான்: குடும்பத்தோடு உள்ள பிரச்னைகளைச் சரி செய்து கொள்; லாகூருக்குக் குடியேறு. ஏதாவது ஒரு செய்தித்தாளில் வேலைக்குச் சேர்ந்து கொள்"

இதுபோல் நடப்பது இது ஒன்றும் முதல் முறை யல்ல. கடந்த காலங்களில் எத்தனையோ சந்தர்ப் பங்களில் நான் அவரைப்பற்றி என்ன நினைக்கிறேன் என்று சொல்லிவிட்டு, அதோடு எங்களுடைய நட்பின் முடிவை அறிவித்துவிடலாம் என்று தீர்மானத்தோடு இருக்கும்போது என்னை எப்போதும் அவர் நிராயுதபா ணியாக்கி விடுவார். அவர் வட்டமான கறுத்த பழுப்பு நிறத்தில் முகமும் சற்றே பெரிய அளவில் தலையும் கொண்டவராக இருந்தார். அவருடைய உதடுகளும் ஈறுகளும் கறுத்து இருக்கும். அவர் ஒன்றும் உயரமா

னவர் இல்லை. அவர் புன்னகைக்கும்போது அந்தக் கறுத்த முகம் பிரகாசிக்கும். இது போன்ற சமயங்களில் மட்டுமே, சதாசர்வ காலமும் மறைந்திருந்து பார்க்கப்ப டுவதில் சலிப்புற்றுப்போன அந்த நட்சத்திரங்கள் கூட அவரைப் பார்த்துப் புன்னகைத்திருக்கலாம் என்று நான் நினைப்பதுண்டு.

பாரி சாகிப் ஒரு கோழை. கடவுள் மீது ஆணையா கச் சொல்கிறேன். அவர் மிகப்பெரிய கோழை. அள வுக்கு அதிகமாகச் சாப்பிட்டுவிட்டால் தொந்தி வந்து விடும் என்று பயத்தின் இறுக்குப் பிடியில் சிக்கிக் கொள்வார். ஆனால் அவர் பட்டினி கிடந்தபோது கூட அவருடைய உடலில் இந்தப் பகுதி மட்டும் தொடர்ந்து வளர்ந்துகொண்டேதான் இருந்தது. ஓடினால் இதயம் பாதிக்கப் படும் என்ற பயத்தில் அவர் எப்போதும் ஓடி யதே இல்லை. ஆனாலும் அந்த உறுப்புதான் இறுதியில் அவரைக் கைவிட்டது. மிகப்பெரிய நீலநிற வரைபடங்க ளில் மாபெரும் சிவப்பு எழுச்சிகளைத் தயார் செய்வார் என்றாலும் பட்டாசு வெடியின் சத்தம் கூட அவரை நடுக் கம் கொள்ள வைக்கும். அவர் ஓர் இளம் பெண்ணைக் காதலித்தார். ஆனால் அவருடைய பெற்றோர் வேறொ ருத்தியை அவருக்காகப் பார்த்து வைத்திருந்தார்கள். பாரிக்கு வேறு ஒருத்தி மீது கண் இருக்கிறது என்ப தைக் கண்டுபிடித்தவுடன் திருமணத்திற்கான தேதியை நிச்சயம் செய்துவிட்டார்கள். அந்தச் சமயத்தில் நானும் பாரி சாகிப்பும் ஒரே அறையைப் பகிர்ந்து கொண்டிருந் தோம். திருமணத்திற்கு ஒரு சில நாட்களுக்கு முன்பு அவர் காணாமல் போய்விட, அவருக்கு மனைவியாக வரக்கூடியவள், அவளைத் திருமணம் செய்து கொள் ளவில்லை என்றால், அவருடைய தொந்தியில் கத்தி யைச் சொருகிவிடுவதாகத் தகவல் அனுப்பியிருந்தாள்.

மிரண்டு போயிருந்த பாரி சாகிப் அமைதியாக அவளைத் திருமணம் செய்து கொண்டார்.

அவருடைய நட்சத்திரங்களை ஆராய்ச்சி செய்ய, பர் மாவில் உள்ள ஆய்வுக்கூடத்தை அவர் அடைந்த போது, அவருடைய நட்சத்திரங்கள் பர்மா பெண் ஒருத்தியோடு சிக்கலில் மாட்டிக் கொள்ள, அவ ருடைய மனைவிக்கு உடனடியாகச் சொல்லியனுப்பி னார். ஆனால் அவருடைய நட்சத்திரங்கள் தொடர்ந்து குழப்ப மான நிலையிலேயே நிலைத்திருந்ததால் யுத்தம் தொடங்கியதைக் காரணமாக வைத்து அங்கிருந்து ஓடி விட்டார். அவர் எப்போதும் பெண்களிடமிருந்து விலகி ஓடிக்கொண்டேயிருந்தார். ஒரு சமயம் இக்பாலினுடைய ஆன்ம தத்துவத்தில் முழுமையாய் பாதிக்கப்பட்டிருந் தார். ஒரு மனிதன் அவனுடைய ஆன்மாவுக்குள் மிக ஆழமாய்ப் பயணிக்கவேண்டும் என்றும் 'எல்லாம் வல் லவனே சொல் உனக்கு என்ன வேண்டும்' என்று கேட்க வேண்டும் என்றும் இக்பால் எழுதியிருந்தார். பாரி சாகிப் மிகக் கடுமையாக ஆன்ம பரிசோதனைகளை மேற் கொண்டார். என்றாலும் எல்லாம் வல்ல அவன் அவ ருக்கு என்ன வேண்டும் என்று கேட்கவேயில்லை. முடி வில் பாரி சாகிப் வேறோர் உலகத்தில் இருந்த இக்பா லிடம் அவர் உருவாக்கிய குழப்பத்தைப் பற்றிக் கேட்கச் சென்றுவிட்டார்.

பின்னிரவில் செய்தித்தாளைப் படுக்கைக்கு அனுப் பிவிட்டு பாரி சாகிப் இக்பாலின் கல்லறைக்குச் சென்று மணிக்கணக்காய் அவரோடு ஆன்ம தத்துவத்தைப் பற்றி உரையாடிக்கொண்டிருப்பார். அவர் எப்போதுமே வறுமையில்தான் இருந்தார். பத்திரிகை அலுவலகத் தில் ஒழுங்காகக் காலத்தில் ஊதியம் கொடுக்கப்பட் டதே கிடையாது. அப்படியே சம்பளம் கொடுக்கப்பட்டா லும், அது தவணை முறையில்தான் கொடுக்கப்படும்.

செய்திப் பத்திரிகையின் உரிமையாளர்கள், அவர்களி டம் வேலை பார்ப்பவர்கள் ஏதோ ஒரு வகையைச் சேர்ந்த சுமை இழுக்கும் காளை மாடுதான் என்பதி லும், அவர்களுக்காக எதை விட்டெறிந்தாலும் நன்றி உணர்வோடு பெற்றுக்கொள்பவர்கள்தான் என்பதிலும் மிக உறுதியாய் இருந்தார்கள். பாரி சாகிப் தன் இயல்பை அப்படியே வெளிக்காட்டக்கூடியவர். அவர் கடன் வாங் கிவிட்டால் அதனோடு பாரத்திற்கு அடியில் சிக்கிப் புலம்பத் தொடங்கிவிடுவார். அவர் ஆன்ம தத்துவ விசா ரணையை மிக உயர்ந்த இடத்திற்கு எடுத்துச் சென் றுவிட்டார். அதற்கு மேலும் எடுத்துச் செல்வதென்பது இயலாத காரியம் தான். இதில் சலிப்புற்றுப்போன அவர் இக்பாலின் கல்லறைக்குச் சென்று அவரிடம் மிகச் சாதாரணமான எதிர்க் கேள்விகள் கேட்டிருக்கிறார். நிச் சயமாகச் சொல்கிறேன், அந்தக் கவிஞன் மட்டும் உயி ரோடு இருந்திருந்தால் அதற்குப் பதில் சொல்ல மிகவும் சிரமப்பட்டிருப்பான்.

இறுதியில் அவருள் இருந்த கலகக்காரர் கொதிக் கத் தொடங்கினார். அவர் மட்டும் பயந்தாங்கொள்ளி யாக இல்லாமல் இருந்திருந்தால் இக்பாலின் தத்துவங் களுக்குப் பல புதிய விளக்கங்களைக் கொடுத்திருப் பார். ஆனால் அவரோடு உடன்பிறந்த இந்தப் பயந்தாங் கொள்ளித்தனம்தான் சதாசர்வ காலமும் மிக வேக மாக இயங்கிக்கொண்டிருக்கும் அவருடைய மூளை யில் துளிர்க்கும் சிந்தனைகள் எல்லாம் மலர்வதற்குப் பதிலாக, அவருக்குள்ளாகவே அமைதியாய் உதிர்ந்து போகக் காரணமானது. அவருடைய மற்ற நண்பர்கள் இந்தக் கருத்தோடு ஒத்துப்போவார்கள் என்று என் னால் நிச்சயமாகச் சொல்ல முடியாவிட்டாலும் அவர் மட் டும் சற்றே உறுதியாகவும் எதிர்த்து நிற்பதற்கான திறனும் பெற்றவராக இருந்திருந்தால், 'பிரெஞ்சுப் புரட்சி' என்ற

நூலை எழுதியதற்குப் பதிலாக 'இந்தியப் புரட்சி' என்ற மாபெரும் நூலை எழுதியிருப்பார். 1857ல் சிப்பாய்க் கல கத்தில் சாத்தியமானது போல் தீவிரமான புரட்சிக்கார ராகவும் மாறியிருக்கலாம். இக்பால் போலவே அவ ரும் கடவுளிடம் இதுபோல் சொல்லிக்கொண்டிருந்தார்: 'இந்தப் பூமியில் செய்வதற்கு எவ்வளவோ இருக்கிறது அதனால் எனக்காகக் கொஞ்சம் காத்திரு'. ஆனால் கடவுள் அவருக்காகச் சொல்லி அனுப்பியபோது 'இந் தப் பூமியில் இன்னும் செய்வதற்கு நிறைய இருப்பதால் சற்றே காத்திரு' என்று சொல்வதற்கான துணிச்சல் மட் டும் அவரிடம் இல்லாமல் போனது. முன்னர் இக்பால் சென்றதுபோலவே அவரும் சென்றுவிட்டார். மிக அடக் கமான சிட்டுக்குருவிகூட ஊக்குவிக்கப்பட்டால் கழு கையும் எதிர்கொள்ள முடியும் என்று இக்பால் எழுதியுள் ளார். பாரி சாகிப் எப்போதும் அவருடைய சிட்டுக்குரு வியை ஏகாதிபத்தியக் கழுகோடு மோதுவதற்குத் தயார் நிலையில் வைத்திருந்தார் என்றாலும், மோதுவதற்கான அந்தத் தருணம் வந்தாலும், கூண்டைத் தரையில் விட் டெறிந்து விட்டு அந்தச் சிறு பறவை தன் அலகுகளைக் கழுகினோடு மோதிப் பார்ப்பதற்கான சந்தர்ப்பத்தைக் கொடுக்காமல் ஓடிவிடுவார்.

பாரி சாகிப் மிகப்பெரிய பகல் கனவுக்காரர். மிக அற் புதமான திட்டங்களை அவருடைய கனவுகளில் உரு வாக்கக் கூடியவர். எனக்கு நினைவிருக்கிறது, இரண்டு இதழ்களுக்குப் பிறகு 'கல்க்'கை அவர் மூடிய பிறகு இரண்டு மூன்று செய்தித் தாள்களில் வேலை பார்த் துப் பணம் சம்பாதிக்கும் முயற்சியில் தோற்ற பிறகு 'மோச்னா' அல்லது 'இடுக்கி முள்' என்ற வாரப் பத்தி ரிகையைக் கொண்டு வருவதாக முடிவெடுத்தார். அது என்ன தலைப்புச் செய்தி கொண்டிருக்க வேண்டும், என்ன கட்டுரை தாங்கி வரவேண்டும் என்று அந்

தப் பத்திரிகையின் கடைசி விவரம் வரை தீர்மானித்து வைத்திருந்தார். அதன் ஆரம்ப இதழ்களைப் படம் போட்டு விளக்குவதுபோல் எங்களுக்கு அவர் விளக்கிச் சொன்னவிதம் எங்கள் கண் முன்னே அந்த இதழ்கள் விரிக்கப்பட்டிருந்ததை உண்மையிலேயே எங்களால் பார்க்க முடிந்தது. அவை எல்லாமே வானிலிருந்து மழை கொட்டுவதுபோல் எங்கள் தலை மீது விழுந்து கொண்டிருந்தது. வேறு ஒரு சமயம் பத்திரிகைத் துறை மீதே மிகவும் அருவறுப்புக் கொண்டு புதுசாக மாட்டுத் தீவனம் தயாரிக்கும் இயந்திரம் வாங்கி வியாபாரம் செய்யப்போவதாக முடிவெடுத்தார். அவருக்கே உரிய பாணியில் என்னிடம் அதைப்பற்றி அவர் எடுத்துச்சொன்ன முறை மிக ஆழமான பதிவுகளை என்னுள் ஏற்படுத்திவிட, நான் அகில இந்திய வானொலி நிலையத்தில் சேர்ந்த போது பாரியைப் பிரதான பாத்திரமாக வைத்து 'ஜர்னலிஸ்ட்' என்ற நாடகத்தை எழுதினேன். அதன் ஒலிபரப்பு பெரும் குழப்பத்தை உருவாக்க எல்லாச் செய்தித்தாள்களிலும் அந்த நாடகம் செய்தித்தாள் உரிமையாளர்களை அவமானப்படுத்துவதாகச் சொல்லி அதை நிராகரித்துத் தலையங்கம் எழுதப்பட்டது. இதில் விசித்திரம் என்னவென்றால், எந்தப் பத்திரிகையாளர்களின் நிலைமையை என்னுடைய நாடகத்தில் சித்திரித்தேனோ அதே பத்திரிகையாளர்கள்தான் என்னை நிராகரிக்கப் பயன்படுத்தப்பட்டார்கள்.

அந்த நாடகத்திலிருந்து சில பகுதிகளை இங்குக் கொடுப்பது சுவாரஸ்யமாக இருக்கும். பத்திரிகையாளர் பாரி புதிதாக மாட்டுத் தீவனம் தயாரிக்கும் இயந்திரத்தை நிறுவி மிகச் சந்தோசமாக இந்தப் புது வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருக்கிறார். இங்கே அவருக்குள்ளாகவே உரையாடுகிறார்:

பாரி: நான் ஒரு நாளைக்கு இரண்டு ரூபாய் சம் பாதிக்கிறேன். என்னுடைய மாலைப்பொழுதுகளைத் தெருவிற்கு எதிர்த்தாற் போலிருக்கும் மதுக்கடையில் தான் கழிக்கிறேன். அதுதான் எனக்கான நிம்மதியைத் தருகிறது. எனக்குப் போதும் என்றபோது என்னுடைய இடத்திற்குத் திரும்பி நடந்துவருவேன். மொழிபெயர்ப் பதற்குச் செய்திகள் ஏதும் கிடையாது. ஒட்டுவதற்காக எதையும் வெட்ட வேண்டியது இல்லை. தொலைபேசி அழைப்புகள் கிடையாது. அழகாகப் பிரதி எடுப்பவர்கள் கிடையாது. ராய்ட்டர் சேவை கிடையாது. பையா! இந் தத் தொழிலைத் தொடங்க வேண்டும் என்று முதன் முதலில் யோசனை சொன்ன என் நண்பனிடம் நன்றி உணர்வு கொண்டிருக்கிறேனா...? மழைக்காலம் வந் தால் மாட்டுத்தீவன மூட்டைகளுக்கு மத்தியில் என்னு டைய கட்டிலைப் போட்டு நிம்மதியாக உறங்குவேன். இது பெரிய வாழ்க்கை இல்லாமல் வேறு என்னவாம்? பத்திரிகைகளில் வேலை பார்த்து அவர்களை நாசம் செய்து கொள்கிற எல்லாப் பத்திரிகை ஆசிரியர்களுக் கும் என்னுடைய அறிவுரை என்னவென்றால், புதிதாக மாட்டுத்தீவனம் தயாரிக்கும் இயந்திரம் வாங்கிக் கொள் ளுங்கள். உங்களுடைய வாழ்க்கை முழுக்க என்னைப் போற்றுவீர்கள் என்று மட்டும் என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியும்.

(பத்திரிகையாளரின் வாழ்க்கை இப்படி நிம்மதியாகக் கழிந்துக் கொண்டிருக்கும்போது இரண்டாம் உலகயுத் தம் தொடங்கியது. பாரிக்குள் இருந்த தீர்க்கமான பத்தி ரிகையாளன் உயிர்த்தெழுந்தான். மதுக்கடையிலிருக் கும் போதுதான், உலகம் யுத்தத்தில் மோதிக் கொள்வ தைத் தெரிந்து கொள்கிறான். அவனைச் சுற்றியிருந்த குடிகாரர்கள் குருவிச்சண்டை போட்டு இதைப்பற்றி

விவாதித்துக் கொண்டிருந்தார்கள். இதைப் பாரியால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை.)

பாரி: அமைதி! என்ன குப்பைகளை நீங்கள் எல்லோ ரும் பேசிக்கொண்டிருக்கிறீர்கள்? நீங்கள் எல்லோரும் அறிவு கெட்ட கூட்டத்தைச் சேர்ந்தவர்கள். ஐரோப் பாவில் யுத்தம் நடக்கிறது. அது என்றென்றைக்குமாக உலக வரைபடத்திலிருந்து பல நாடுகளை அழித்து விடும். லட்சக்கணக்கானோர் கொல்லப்படுவார்கள். ஆனால் நீங்கள் இங்கு குருவிச்சண்டை போட்டு விவா தித்துக்கொண்டிருக்கிறீர்கள்.

குடிகாரன் ஒருவன்: அவன் என்ன முட்டாள்தனமாய்ப் பேசிக் கொண்டிருக்கிறான்?

மற்றொரு குடிகாரன்: (சிரிக்கிறான்) அவன் என்ன சொல்கிறான் என்று எனக்குப் புரியவில்லை. (பாரியிடம்) பாரி இன்று உனக்கு என்னவாயிற்று?

முதல் குடிகாரன்: அவன் அளவிற்கு அதிகமாகக் குடித்து விட்டான்.

இரண்டாவது குடிகாரன்: குடிப்பது படுமோசமான விச யம்.

பாரி: நீ என்ன முட்டாள்தனமாய்ப் பேசிக்கொண்டி ருக்கிறாய். நான் சுயநினைவில் தான் இருக்கிறேன். நீதான் குடித்திருக்கிறாய். இந்தக் கணத்தில் நான் என்ன சிந்தித்துக்கொண்டிருக்கிறேன் என்று இந்த நாட்டினால் கூட நினைத்துப் பார்க்க முடியாது.

முதல் குடிகாரன்: மிக நன்று, மிக நன்று என் முல் லாவே!

பாரி: நான் சொல்வதை நீ கிண்டல் செய்கிறாய். (சிரிக் கிறான்) ஆனால் தவறு உன்னுடையது அல்ல என்னு

டையதுதான். இந்நாள் வரை நான் யார் என்பதை இர கசியமாகவே வைத்திருக்கிறேன். ஆனால் நான் யார் என்று உங்களிடம் சொல்லிவிடுகிறேன். இந்த உலக அரசியலில் நான் எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தவன் என்று உங்களால் நினைத்துக்கூடப் பார்க்க முடியாது.

முதல் குடிகாரன்: சரி! இந்த யுகத்தின் மாபெரும் மல் யுத்த வீரன் நீதான். சரியா? நாம் வேறு எதைப் பற்றியா வது பேசுவோம்.

பாரி: நான் உண்மையில் யாரென்று தெரிந்து கொள் ளும் வரை என்னைத் தொடர்ந்து கிண்டல் செய்து கொண்டுதான் இருப்பீர்கள். நான் யார் என்று உனக் குத் தெரியுமா? என்னுடைய பெயர் மௌலானா அப்துல் பாரி. 'கல்க்'கின் ஆசிரியன்.

இந்தக் கடைசி வரிகளில் காணப்படும் வஞ்சப்புகழ்ச் சியை, இதற்கு மேலும் அழகுபடுத்த வேண்டிய அவசி யம் ஏதுமில்லை. உண்மையிலேயே பாரி பத்திரிகைத் துறையை விட்டு விலகி மாட்டுத் தீவனம் தயாரிக்கும் இயந்திரத்தைத்தான் நிறுவினார். ஆனால் அந்த இயந் திரம் அவரது சொத்தாக இருக்கவில்லை. பிரிட்டிஷ் அர சாங்கத்தினருடையதாக இருந்தது. (அவருடைய இறு திக்காலத்தில் லாகூரில் இருந்த 'பிரிட்டிஷ் இன்ஃபர் மேஷன் சர்வீஸில்' வேலைக்குச் சேர்ந்து கொண்டார்) அவரது வாழ்க்கை முழுக்க பிரிட்டிசுஷாரைச் சபித்து விட்டு இறுதியில் அவர்களுக்குக் கீழே வேலை பார்க்க அவர் சம்மதித்ததைப் பலரும் கிண்டல் செய்ததும் உண்டு. அவருடைய மூளைக்குள், 'நான் உண்மை யில் யாரென்று நீங்கள் அறிந்து கொள்ளும் வரை என் னைத் தொடர்ந்து கிண்டல் தான் செய்வீர்கள். என்னு டைய உண்மையான அடையாளத்தை இந்நாள் வரை

உங்களிடமிருந்து மறைத்தே வைத்திருக்கிறேன்.' என்று தொடர்ந்து சொல்லிக்கொண்டிருக்கக்கூடும்.

பாரி சாகிப் எப்போதுமே தப்பிப் போவதற்கான வழி களைத் தேடிக்கொண்டேயிருந்தார் என்பதும், அவர் தப்பித்துப் போனபிறகு கூட மிகவும் எச்சரிக்கை யோடு நடந்து கொண்டதால் உண்மையான பாரியை மற்றவர்களுக்குத் தெரியாமலேயே போய் விட்டது என் பதும் தான், நான் தீர்மானமாக யோசித்து வந்த முடி வாக உள்ளது. அவர் அவரைத்தவிர வேறு யாரையும் குறை சொல்வதற்கு இல்லை. தொடக்கத்தில் மிகப் பெரிய சவாலைச் சந்திப்பதற்கு எல்லா ஏற்பாடுகளை யும் செய்து முடிப்பார். ஆனால் திடீரென்று திசைமாறி எங்கோ சென்றுவிடுவார். என்னுடைய நாடகத்தில் பாரி பாத்திரம் இவ்வாறு பேசும்.

பாரி: இரண்டு உலக யுத்தங்களுக்கு இடையே நடந்த நிகழ்வுகளை எல்லாம் நீங்கள் ஆராய்ந்தால், நம்மு டைய நாகரிகமான இந்த உலகம் தரங் கெட்டுப் போகும் வலையில் சிக்கிக்கொள்ள தன்னை அனு மதித்ததை நாம் வருத்தத்தோடு உணர்ந்து கொள்ள முடியும். விஞ்ஞானம் வீறு நடைபோட்டு முன்னேறிக் கொண்டிருக்க, மனித இனம் அது நின்ற இடத்திலேயே தொடர்ந்து நின்று கொண்டிருக்கிறது. இனவெறியும், மதவெறியும், செழுமையாய் வளர்ந்து கொண்டிருப் பதை நம் எல்லோராலும் தெளிவாகப் பார்க்க முடிகிறது. யுத்தம் போன்ற அமைதி, அமைதி போன்ற யுத்தத்திற்கு வழிவகுத்து விட்டது. நான் இதை மட்டுமே கேட்கி றேன்: நம்முடைய இந்த நாகரிக உலகம் எதை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறது? நாம் இருண்ட யுகங்களுக் குத் திரும்பிக் கொண்டிருக்கிறோமா? மனிதனுடைய இரத்தம் மீண்டும் தண்ணீரைக் காட்டிலும் மலிவாக விற் கப்படுமா? நம்முடைய சதைகளும் எலும்புகளும் ஏதோ

சந்தைப் பொருள் போல் வியாபாரம் செய்யப்படுமா? என்னதான் நடக்கப் போகிறது? நமக்காக என்ன காத்தி ருக்கிறது என்று யாரேனும் என்னிடம் சொல்வார்களா? கொள்கைகளை விட்டெறிந்தது ஆயிரக்கணக்கான பிளவுகளை ஏற்படுத்தியுள்ளது. மனிதன் மனிதனுக்கு எதிராக மோதுகிறான். நாடு நாட்டிற்கு எதிராக, தேசம் தேசத்திற்கு எதிராக. இதுதான் இருபதாம் நூற்றாண்டின் வரலாறு.

இந்தச் சிந்தனைகள் எல்லாம் உண்மையில் பெர்ட் ரண்ட் ரஸ்ஸலுடையவை என்றாலும், நான் அதை பாரி சாகிப்பின் தனித்தன்மை வாய்ந்த பேச்சு பாணியில் அமைத்திருந்தேன். அவருடைய அறிவுத்திறன் எவ் விதத்திலும் ரஸ்ஸலுடையதைக் காட்டிலும் குறைந்த தில்லை என்றாலும் பத்திரிகை உரிமையாளர்களின் தயவில் இருக்க வேண்டிய நாட்டில் அவர் பிறந்து விட் டார். அவர் அவர்களிடம், "நீங்கள் இந்தத் தேசத்திற் காக சேவை செய்வதாகச் சொல்லிக் கொள்கிறீர்கள். நானும் அதையேதான் செய்கிறேன். ஆனால் இந்தச் சேவைக்காக என்னுடைய ஊதியம் சரியான நேரத்தில் கொடுக்கப்பட்டதே இல்லை. ஏன் பல சமயங்களில் ஊதியம் என்று ஏதும் கொடுக்கப்படுவதே கிடையாது. கடைசி நான்கு மாதங்களில் பதினொரு ரூபாய் மட் டுமே எனக்கு கொடுக்கப்பட்டுள்ளது. நானும் மனிதன் தான், கல் அல்ல; எனக்குப் பசி எடுக்கும், சில சமயங் களில் நல்ல சுவையான சாப்பாடு சாப்பிட வேண்டும் என்று தோன்றினால் என்னால் எப்படிச் சாப்பிட முடியும்? நீங்கள் என்னைப் பத்திரிகை ஆசிரியனாகத்தான் நிய மித்தீர்கள். இந்த உலகத்து இன்பங்களுக்கு எல்லாம் முதுகைக் காட்டும் சாதுவாகவோ சன்னியாசியாகவோ அல்ல" என்று சொல்லியிருக்கவும் கூடும்.

நான்கு மாதங்களில் அவருடைய மொத்த வருமானத்தை நான் மிகைப்படுத்திச் சொல்லியிருக்கலாம். இருந்தாலும் உண்மை என்னவென்றால், 'ஹெசான்' தினசரிக்காக வேலைபார்த்துக் கொண்டிருந்தபோது அலுவலகத்திலிருந்து வேறு வழியில்லாமல் பழைய செய்தித்தாள்களைத் திருடி அதை விற்று, ஏதேனும் சாப்பிடப் பெற்றதும் உண்டு. ராஜா மெஹிதி அலிகானும் அந்தச் சமயத்தில் அதே பத்திரிகையில்தான் வேலை பார்த்து வந்தான். பாரி சாகிப் மிகவும் எச்சரிக்கையோடும் ஜாக்கிரதை உணர்வோடும்தான் இருப்பார் என்றால் ராஜா இயற்கையாகவே அசட்டையான சுபாவம் கொண்டவன். கூடுதலாகப் பணம் கிடைக்கதான் செய்து கொண்டிருந்ததை பாரி சாகிப் ரகசியமாக ராஜாவிடம் சொன்னவுடன் அவன் மிகவும் உற்சாகம் அடைந்தான். முதல் நாள் இரண்டு கட்டுகளைத் திருடிச் சென்றான். ஆனால் அடுத்த நாள் இதுபோன்ற சின்னத் திருட்டுகளில் அவனுக்கு ஈடுபாடு இல்லை என்று அறிவித்தான். "நாம் பெரிதாக ஏதேனும் செய்ய வேண்டும்" என்றான். அன்று மாலை இரண்டு பெரிய கோணிப்பைகளைக் கொண்டு வந்து, அது முழுக்க அவனும் பாரி சாகிப்பும் பழைய செய்தித்தாள்களால் நிரப்பினார்கள். ராஜா கோணியை நிரப்புவதில் மும்முரமாக இருக்க, பாரி சாகிப் காவலாக நிற்க வேண்டியிருந்ததால் மிகவும் பயந்து கொண்டிருந்தார். அந்த மூட்டைகளைத் தூக்க இரண்டு தொழிலாளிகள் வரவழைக்கப்பட்டார்கள். அன்று மாலை ராஜா

சொன்னதின் அடிப்படையில் இருவரும் ஏதோ திரைப்படம் பார்க்கச் சென்றார்கள்.

ராஜா மெஹிதி அலிகான் வேறு ஒரு கதை சொல்கிறான்: ஒரு முறை இருவரும் தெருவில் பிச்சை எடுக்க வேண்டியிருந்தது என்று சத்தியம் செய்கிறான். அது

பாரியின் திட்டமாம். அவர்கள் எப்படிப் பிச்சை எடுக்க வேண்டும் என்று மிகச் சரியாகத் திட்டம் போட்டுக் கொடுத்தாராம். அவர்களுடைய வறுமையையும் நாதியற்ற நிலைமையையும் முகத்தில் அணிந்து கொண்டு உணர்வுப்பூர்வமான மொழியில் அவர்களுடைய நிலைமையை எடுத்துச் சொல்ல வேண்டுமாம். ஆனால் நேரம் வந்தபோது, பாரி சாகிப் தைரியத்தை இழந்து ஒரு சில அணாக்களுக்கு மேல் பெறமுடியாமல் போக, ராஜாவோ ஏறக்குறைய மூன்று ரூபாய் பெற்றுவிட்டானாம். ராஜாவின் மற்றொரு கதையும் இங்கு சொல்லப்படுவதற்கு தகுதியானதுதான். அனார்கலி பகுதியில் ராஜா பிச்சை எடுத்துக் கொண்டிருக்கும்போது, ஒரு பால்காரன் மிகப்பெரிய ஜாடியைத் தலையில் சுமந்து கொண்டு, அவனை நோக்கி வந்து கொண்டிருந்தான். மனித மனதின் மனோநிலையைப் பற்றி பாரி சாகிப் கொடுத்த பல சொற்பொழிவுகளைக் கேட்டிருந்த ராஜா, அந்த மனிதன் பணம் படைத்தவன் என்றும் அவனிடம் தன் நிலைமையை விளக்கிச் சொன்னால் பெரிய அளவு பணம் - குறைந்தபட்சம் ஒரு ரூபாயாவது எளிதாகப் பெற்றுவிடலாம் என்றும் தீர்மானித்தான். அவன் முன்னே நகர்ந்து, அந்தப் பால்காரனிடம் தன்னுடைய கஷ்டமான நிலைமையை எடுத்துரைத்தான். 'இந்த ஜாடியை கீழே இறக்கிவைக்க எனக்கு உதவி செய்' என்று ராஜாவிடம் சொல்லப்பட்டது. அது மிகக் கடினமான வேலை என்றாலும் ராஜா எப்படியோ சமாளித்துவிட்டான். பிறகு அந்தப் பால்காரன், அவனது இரகசியப் பையில் கையை நுழைத்து ரூபாய் கட்டை உருவி எடுத்து, நீண்டிருந்த ராஜாவின் கையில் ஒரே ஒரு பைசாவை வைத்திருக்கிறான். பிறகு அவன், 'இளம் வாலிபனே! இப்போது இந்த ஜாடியை மீண்டும் என் தலையில் வைக்க உதவி செய்' என்று சொல்லியிருக்கிறான்.

உண்மையிலேயே மிகவும் கஷ்டமான அந்தக் காலங்களில் பாரி சாகிப்பும், ஹசன் அப்பாஸும் லாகூரில் பழைய அனார்கலி பகுதியில் வாடகைக்குக் குடியிருந்த அந்த ஒற்றை அறைக்குக் கீழே இருந்த கடையிலிருந்து பழங்களைத் திருடியது எனக்குத் தெரிந்துதான் இருந்தது. அந்த அறையில் விளக்கு இல்லை என்றாலும், எவ்வாறு அவர்களுடைய சொந்த மின் உற்பத்தி நிலையத்தை நிறுவ முடியும் என்று பாரி சாகிப், ஹசன் அப்பாஸுக்கு அறிவுரை கொடுத்திருக்கிறார். தெருவில் நிறுவப்பட்டிருந்த மின்சாரக் கம்பங்களில் இருந்து நேரிடையாக மின்சாரத்தைத் திருடுவதுதான் அந்தத் திட்டம்.

இந்த அறையோடு சம்பந்தப்பட்ட இன்னொரு விசயம் என் நினைவிற்கு வருகிறது. நான் பம்பாயிலிருந்து ஏழு வருடங்கள் கழித்துத் திரும்பிவந்தேன் என்றாலும், பாரி சாகிப் மற்றும் ஹசன் அப்பாஸை எங்கு கண்டுபிடிப்பது என்று எனக்குத் தெரியும். அவ்வப்போது அவர்களோடு கடிதத் தொடர்பு வைத்திருந்தேன். அந்தக் காலங்களில் மது தடைச்சட்டம் அமுலில் இல்லாததால் ரயில் நிலையங்களில் மேலும் கீழும் ஓடிக் கொண்டிருக்கும் ஸ்பென்சர் கம்பெனி விற்பனையாளர்களிடம் இருந்து நாம் மது வாங்கிக்கொள்ளலாம். நீண்ட காலங்களுக்குப் பிறகு நானும் அப்பாஸைச் சந்திப்பதால், காலையிலிருந்தே கொண்டாட்டத் தைத் தொடங்கிவிடுவது என்று முடிவு செய்தோம். நாங்கள் விட்டதை எல்லாம் நிறைய பிடிக்க வேண்டியிருந்தது. எங்களுடைய இதயங்கள் ஒன்று சேர்வதற்கு, புத்துணர்ச்சிகள் கொண்ட அந்த வயதான தலைவன் ஜானி வாக்கரைத்தான் நாங்கள் நம்பியிருந்தோம். பாரி சாகிப்பை ரயில் நிலையத்திலே சந்திக்கலாம் என்று எதிர்பார்த்திருந்தேன். ஆனால் அவர் வரவில்லை, அல்லது ஹசன் அப்பாஸ் சொன்னபடி

மீண்டும் ஒருமுறை அவர் வெட்கக்கேடான முறையில் நடந்துகொண்டார். நாங்கள் இருவரும் ஒரு டோங்கா வில் ஏறி அவரைத் தேடத் தொடங்கினோம். இறுதியாக அவரைக் கண்டுபிடித்தோம். என்னுடைய வருகையால் மோசமாகக் குடிப்பது நிகழ்ச்சி நிரலில் இருக்கும் என்ற பயம்தான் அவர் மறைந்து போவதற்கான காரணமாக இருந்திருக்கிறது. அதில் பங்கெடுத்துக் கொள்ளக் கூடாது என்று அவர் தீர்மானமாக இருந்தாலும் எங்க ளுடைய பழைய நட்பை நாங்கள் நினைவூட்டிய பிறகு இடை இடையே எங்களைச் சபித்தவாறு விட்டுக்கொ டுத்தார்.

பழைய அம்ரித்சர் நண்பனான அபு சையத் குரை ஷியை எதிர்பாராத விதமாய்ச் சந்தித்தோம். அவன் ஏற்கனவே 'பேச்சிலர் ஆஃப் ஆர்ட்ஸ்' என்ற நகரத்திலி ருந்த கோட்டை மீது படை யெடுத்து விட்டான் அல் லது தாக்குதலுக்குத் தன்னைத் தயார் படுத்திக்கொண் டிருந்தான் என்று நினைக்கிறேன். அவன் இப் போதும் முன்பிருந்தது போலவே காதல் நாயகனாகத்தான் தோற்றம் கொடுத்தான். நிலவொளி பிரகாச மாலை களில், தண்ணீர் சூழ்ந்திருக்க, ஆண்களைச் சுண்டி இழுக்கக்கூடிய அழகைக் கொண்ட பெண்ணோடு ஓமர் கய்யாமின் வரிகளைப் பாடிக் கொண்டே நேரத்தைக் கழிப்பதுபோல் கனவு கண்டு கொண்டிருப்பான். இந்தப் பாவத்திற்காகவே ஒரு புட்டி ஜானி வாக்கர் அவனுக்கு அபராதமாகக் கொடுக்கத் தகுந்தது என்று பாரி சாகிப் அறிவித்தார். குற்றம் சாட்டப்பட்டவனுக்கும் இந்தத் தண்டனை ஏற்புடையதாக இருந்தது. பழைய அனார் கலி அறையில் நாங்கள் எல்லோரும் ஒன்று கூடினோம்: பாரி சாகிப், அபு சையத் குரைஷி மற்றும் அப்துல்லா மாலிக் (முன்பு இருந்ததைக் காட்டிலும் இப்போது மிக

வும் அழகாக இருந்தான்) அந்தச் சமயத்தில் ராஜேந்திர சிங் பேடியும் வந்து போனான்.

முடிந்தமட்டும் பாரி சாகிப் சுத்தத்தின்மீது பைத்தியம் கொண்டிருந்தார். ஒரு குழந்தையைப்போல் அவருடைய மேசையை இப்படி வைப்பது, அப்படி வைப்பது என்று நிறைய நேரத்தைச் செலவு செய்து கொண்டிருப்பார். நகம் வெட்டி அவருடைய பேனாவிற்கு அடுத்தாற் போல்தான் இருக்க வேண்டும். பேனா கழுத்தை வெட்டும் பிளேடுக்குத் துணையாகத்தான் இருக்க வேண்டும். எங்காவது உருண்டையான கல்லைப் பார்த்துவிட்டால் போதும், அதை உடனடியாகக் காகிதப் பளுவாக உபயோகிப்பார். அவருடைய புத்தகங்கள், எல்லாம் கையால் அழகு செய்யப்பட்ட அட்டைகளைக் கொண்டிருக்கும். நீங்கள் பார்த்தீர்களானால் அதன் மேல் ஓர் ஊசி நூல் இருப்பதையும் காண முடியும். கத்திரிக்கோல் உபயோகிப்பதை பாரி சாகிப் மிகவும் விரும்பினார். ஏன்? எனக்குத் தெரியவில்லை. அவரே பக்கங்களை வடிவமைத்து கவனமாகச் செய்திகளை வெட்டி அழகாக அதில் ஒட்டுவார். அது பிற்பாடு லித்தோவில் மாற்றப் பட்டு அச்சுக்காக அனுப்பி வைக்கப்படும். செய்தி ஆசிரியர்களின் கடமைகளில் இதுவும் ஒன்றுதான் என்று எனக்குத் தெரிந்திருந்தாலும், அவர் செய்தி ஆசிரியராக ஆவதற்கு முன்பிருந்தே கத்திரிக்கோல் உபயோகிப்பதை ஏன் நேசித்து வந்தார் என்று என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. அம்ரித்சர் செய்திப் பத்திரிகை 'முஸாவாட்' அலுவலகத்தில் கையில் கத்திரிக்கோலோடு அவர் அமர்ந்திருப்பதை என்னால் பார்க்க முடிகிறது. பார்ப்பதற்கு மிகவும் பிரமிக்கத்தக்க செயலைத் தொடங்க ஒருவர் காத்திருப்பது போல் அவர் காணப்படுவார்.

அவருடைய மேசை எப்போதுமே சுவரைப் பார்த்துத் தான் வைக்கப்பட்டிருக்கும். அவர் உட்கார்ந்து எழுதும் போது தலை நிமிர்ந்து பார்க்க நேர்ந்தால், சுவரைத் தவிர வேறு எதையும் அவரால் பார்க்க முடியாது. அவர் எழுதும் போது, ஏதேனும் ஒன்று அவர் பார்வையை மறைத்தாக வேண்டும். ஒரு முறை என்னுடைய வீட் டிற்கு வந்தபோது, ஏதோ எழுத வேண்டும் என்று சொன் னார். நான் மேஜையை நகர்த்தி வைத்தேன் - அதாவது அது அவரைப் பார்க்காத வகையில் வைத்தேன். அவர் உட்கார்ந்த பிறகு மிகவும் அசௌகரியமாக உணர்ந்தார். நான் ஏனென்று கேட்டபோது, 'என்னுடைய பார்வையை ஏதோ ஒன்று மறைத்தால் ஒழிய என்னால் எழுத முடி வதில்லை' என்று பதில் தந்தார். பிறகு பெரிய உலக வரைபடத்தை எடுத்து, அவருக்கு முன்னால் வைத் துக் கொண்டார். நான் விலகிச்சென்றேன். நான் பழைய அனார்கலி அறையிலேயே இருந்திருக்க வேண் டும். உண்மையில் நான் எழுதிக் கொண்டிருக்கும்போது, ஏதேனும் என்னுடைய நினைவில் தோன்றினால் உட னடியாக அதை எழுதிவிடுகிறேன். இல்லையென்றால் அதை மறந்து விடுவேனோ என்று எனக்குப் பயமாக இருக்கிறது. அவர் எழுதிக்கொண்டிருக்கும்போது பற் களை நறநற என்று கடித்துக்கொண்டிருப்பது வழக்கம் தான். அவருடைய எழுத்துக்கள் ரொம்பவும் உருண் டையாகவும், சிறிதாகவும் இருந்ததால் அதைப் பிரித்துப் படிப்பது என்பது மிகவும் சிரமமான காரியமாக இருக் கும்.

அந்தப் பழைய அனார்கலி அறையில் அப்பாஸ், பாரி சாகிப், அபு சையத் குரைஷி, மற்றும் நான் என்று எல் லோரும் சேர்ந்து அம்ரித்சரில் எடுத்துக் கொண்ட வர லாற்று முக்கியத்துவம் வாய்ந்த புகைப்படம் ஒன்று தொங்கிக்கொண்டிருக்கும். அந்தப் படத்திற்கு கீழே

பாரி சாகிப் 'அம்ரிஸ்டர் ஸ்கூல் ஆஃப் தாட்' என்று கிறுக்கி வைத்திருந்தார். அவர் அந்தப் படத்தை மிகவும் நேசித்தார். 'மிலாப்' அல்லது 'பிரதாப்' பத்திரிகையில் கொஞ்சக்காலமே இருந்து வெளியேறிய பின், அவர் பர்மாவில் தோற்றம் கொண்டபோது, அதைக் கையில் எடுத்துச் சென்றிருந்தார். மறந்து விட்டேன். அவருடைய ஜாக்கெட்டை அவருடைய நாற்காலி முதுகில் தொங்க விட்டு விட்டுத்தான் போயிருந்தார். பாரி சாகிப்பும், ஹசன் அப்பாஸும் பகிர்ந்து கொண்டிருந்த, அவர்களு டைய இருப்பிடமான அந்த ஒற்றை அறைக்குள் நான் நுழைந்தவுடனே பாரி சாகிப் செய்த முதல் காரியம், அந்தப் புகைப்படத்தைக் காட்டியதுதான், "மகாராஜா சாகிப்பைப் பார்" என்று சந்தோஷமாக ஒரு குழந்தைக் கான உற்சாகத்தோடு சொன்னார். அவரால் அதற்கு மேல் ஏதும் பேச முடியவில்லை. அவர் புன்னகைத்துக் கொண்டிருக்க, அந்த முகம் பிரகாசமானது.

அவர் என்னை நேசித்தார். என்னைப் பற்றி பெரு மையாகவும் நினைத்தார். ஆனால் இதுபோல் எதை யும் எப்போதும் என்னிடம் அவர் சொன்னது கிடையாது. அவர் யாரிடமாவது மண்ட்டோ என்னால் உருவாக்கப் பட்டவன் என்று எப்போதேனும் சொல்லியிருக்கிறாரா என்று எனக்குத் தெரியாது. ஆனாலும் அதுதான் உண் மையாக இருந்திருக்கும். என்னை எழுத்துப்பாதையில் கொண்டுவந்து விட்டது அவர்தான். அம்ரித்சரில் நான் அவரைச் சந்திக்காமல் இருந்திருந்தால், அடையாள மில்லாமல் நான் இறந்திருப்பேன் அல்லது ஆயுதம் ஏந்திக் கொள்ளை அடித்ததற்காக நீண்ட கால சிறைத் தண்டனையை அனுபவித்துக் கொண்டிருப்பேன். அப் பாஸும் நானும் நல்ல போதையில் இருந்தோம். அபு சையத் குரைஷி கொண்டுவந்த புட்டி திருகித் திறக்கப் பட்டு எல்லோருக்கும் ஒரு சுற்று ஊற்றப்பட்டது. பாரி

சாகிப் ரத்தத்தில் மது கலக்கக் கலக்க அவர் ரொம்ப வும் சுவாரஸ்யமானவரானார். அவர் எப்போதும் சுமந்து திரியும் அந்தக் கூச்சமும் உணர்ச்சிவசப்படாத நிலையும் இப்போது காணாமல் போனது. இத்தகைய சமயங்க ளில் நாங்கள் எல்லோரும் எதிர்பார்ப்பது, அவர் பேசிக் கொண்டே இருக்க வேண்டும், அதை நாங்கள் கேட் டுக்கொண்டே இருக்க வேண்டும் என்று மட்டும்தான். அவர் குடிக்கத் தொடங்கிவிட்டால் மற்றவர் கள் ஒட்டிக் கொண்டு கூட ஒரு வார்த்தை பேசுவதற்குச் சந்தர்ப்பம் கிடைக்காது என்பது வேறு விசயம்.

ராஜேந்திர சிங் பேடி நாங்கள் யாரும் படித்திராத மிக் கேல் ஷோலகோவ் உடைய 'அன்டு கொயட் ஃபுளோஸ் தி டான்' (டான் நதி அமைதியாக ஓடுகிறது) பற்றி பேசிக் கொண்டிருந்தான். ஆனால் பேடி பேசிக்கொண்டிருந்த விதம், நானும் அந்தப் புத்தகத்தைப் படித்துவிட்டேன் என்பது போல் பாசாங்கு செய்ய வேண்டி யிருந் தது. நான் இதைச் சொன்னவுடன் பேடி வெலவெலத் துப் போனான். இந்தப் பரிமாற்றங்கள் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்த பாரி சாகிப் அந்தக் கணத் திலேயே உள்ளே புகுந்து ஷோலகோவ் நாவலாசிரியர் என்ற முறையில் உரையாற்றத் தொடங்கினார். சிறிது நேரம் கழித்து அந்தப் புத்தகத்தைப் படித் திருக்க வில்லை என்று பேடி ஒப்புக்கொள்ள வேண்டி வந்தது. அதைத் தொடர்ந்து நானும் அதேபோல் மன்னிப்புக் கேட்டுக் கொண்டேன். இது பாரி சாகிப்பை அமை தியற்ற நிலைக்குக் கொண்டு சென்றது. அவர் சற்றே அமைதியான பிறகு, அன்று மாலைப்பொழுதில் தான் பேடியின் உதடுகளில் இருந்துதான் ஷோலகோவ் என்ற பெயரை முதல் முறையாகக் கேள்விப்பட்டதாக கூறி னார். அவருடைய நாவல் பற்றிப் பேசியதெல்லாம் அவ ருடைய சொந்தக் கண்டுபிடிப்புதான். பேடி தொலை

தூரம் போக வேண்டியிருந்ததால் சீக்கிரமாகக் கிளம்பிச் சென்றான்.

அது டிசம்பர் மாதம் என்பதால் மிகவும் குளிராக இருந்தது. பஞ்சாப் குளிரிலிருந்து பல வருடங்கள் விலகியே இருந்ததால், நான் மேலும் குளிரை உணர்ந்தேன். பாரி சாகிப் எழுந்து வெளியே சென்று, எரிப்பதற்காகச் சில கட்டைகளோடு திரும்ப வந்து மிக திடமான அடிப்ப குதியைக் கொண்ட ஓர் இரும்பு வாளியில் அந்தக் கட்டைகளை எல்லாம் மிகவும் ஒழுங்காக அடுக்கிவைத்து, ஜானி வாக்கரை இந்த ஏற்பாட்டின் மேல் கொஞ்சம் போல் தெளித்துத் தீ மூட்டினார். உடனடியாகப் பிரார்த்தனை செய்வது போல் முழு உடலையும் தரையில் சாய்த்து 'ஜொராஸ்டர், ஜொராஸ்டர்' என்று கத்தினார். பாரி சாகிப் பணிக்கப்பட்டதுபோல் ஐந்து முறையல்லாமல் எட்டு முறையோ சில சமயங்களில் பத்து முறையோ கூட பிரார்த்தனை செய்த அந்தப் பழைய அம்ரித்சர் நாட்களை என் நினைவில் கொண்டு வந்தன. என் வீட்டிற்கு அவர் எப்போது வந்தாலும் 'சிவப்பு பதுங்கு குழி' என்று அவரால் அழைக்கப்பட்ட என்னுடைய அறைக்குச் சென்றுவிடுவோம். அவருக்குப் பிரார்த்தனை செய்யவேண்டும் என்று தோன்றினால், என் அம்மாவை அழைத்து (அவரை பீபி ஜான் என்று அழைப்பார்) 'ஓதுவு' செய்வதற்கு ஜாடி தண்ணீரும் பிரார்த்தனைப் பாயும் கேட்பார். சில சமயம், அவர் செய்த ஏதோ ஒன்றிற்காக, அவர் குற்ற உணர்வு கொண்டிருந்தால், அவருடைய தலை திரும்பத் திரும்ப தரையில் படுமாறு நடந்தவையெல்லாம் நடந்தவையாகவே இருக்கட்டும் என்று கடவுளிடம் வேண்டிக்கொள்வார். அம்ரித்சரில் எங்களுடைய தொடக்கக் காலங்களில் நான் குடிப்பதை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை என்றாலும், அவர் நிச்சயமாக நடிக்கிறார் என்று எனக்குத் தெரிந்துதான் இருந்தது.

ஒரு நாள் மாலை நானும் அவரும் ஒரு சிறு நடை போய் இரயில் நிலையச் சிற்றுண்டிச் சாலையில் எனக் காக விஸ்கியும், பாரி சாகிப்புக்கு இஞ்சிச் சாறும் - அதில் அவருக்குத் தெரியாமல் சற்று ஜின் கலந்து கொடுக்க, ஏற்பாடு செய்தேன். வயிறு என்று வரும்போது பாரி சாகிப் ஏதாவது ஒரு குறை சொல்லிக்கொண்டே இருப்பார். 'எனக்கு வயிறு சரியில்லாததால், ஏதும் குடிக்க வேண் டாம் என்று நினைக்கிறேன்' என்றார்.

அவர் ஒன்றும் பிடிவாத குணம் கொண்டவர் இல்லை. ஒரு சிறு பிரசங்கம் செய்து எதற்கு வேண்டுமென்றா லும் அவரைச் சம்மதிக்க வைக்கலாம் என்பதால் சற்று நேரத்திலேயே அவரைக் குடிப்பதற்குச் சம்மதிக்க வைத்தேன். அதாவது வயிற்று உபாதைகள் எல்லாவற் றிற்கும் இஞ்சிதான் ஆற்றல் வாய்ந்த தற்காப்புக் கவசம் என்றேன். அவர் அதை ஒப்புக்கொள்ள, எங்களுக்கா னதை 'வெய்ட்டர்' கொண்டு வந்தான். இரண்டு மடக்கு குடித்தவுடன், அவருடைய 'இஞ்சிச் சாற்றை' ரசித்துக் குடிக்கிறார் என்பதைத் தெளிவாகப் பார்க்க முடிந்தது. நான் மற்றொரு முறை விஸ்கிக்குச் சொன்ன போது, மற் றொரு முறை இஞ்சிச் சாறு வேண்டும் என்று தன் விருப் பத்தைத் தெரிவித்தார். நான் முன்னரே சொல்லியி ருந்தது போல் வெய்ட்டர் கலக்கப்பட்டதைக் கொண்டு வந்தான். இந்த இரண்டு சுற்று பாரி சாகிப்பைச் சந் தோசமான மனநிலைக்குக் கொண்டு வந்தது. 'கிழக் கத்திய மருத்துவம் பற்றிய புத்தகத்தில் நான் இஞ்சியின் பிரத்யேகக் குணங்கள் பற்றிப் படித்திருக்கிறேன். இந்த இஞ்சி இயற்கையின் அற்புதங்களில் ஒன்று என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லை. காலையிலிருந்து நான் உணர்ந்த ஒரு வித சோர்வு இப்போது முழுமையாக வெளியேறி விட்டது' என்றார்.

நான் சிரித்தேன். அவர் குடித்ததில் உள்ள அற்புத மான விசயம் இஞ்சி அல்ல, ஜின்தான் என்று சொல்ல வேண்டி வந்தது. இது அவரை நோகடித்தாலும், இந் தக் குழந்தைத்தனமான விளையாட்டிற்காக என்னை மன்னித்தார். இருப்பினும், நான் அவரைக் காயப்படுத் திவிட்டதாகவே நினைத்தேன். ஆகையால் ஏதோ ஒரு வேகத்தில், இனி இந்த வஸ்துகளைத் தொடுவதில்லை என்று சத்தியம் செய்து கொடுத்தேன். இந்த நிகழ்ச்சி என்னுள் மிகப்பெரிய பாதிப்பை ஏற்படுத்தியது. அன்று இரவு நான் வீடு திரும்பியவுடன், படிக்கல்லில் பிரார்த் தனை செய்து அந்தக் கடவுளிடம் என்னை மன்னித்து விடுமாறும், என்னுடைய சத்தியத்தைக் காப்பாற்ற திட மான மனதை எனக்குக் கொடுக்குமாறும் வேண்டிக் கொண்டேன். இது என்னை இலகுவாக உணரவைத்த அதே சமயத்தில், இனி நான் குடிக்க முடியாது என்ற எண்ணத்தை என்னுள் இருந்து அகற்ற முடியாதவனா கத் தான் இருந்தேன். நாட்கள் நகர நகர என்னுடைய இருப்புக்கொள்ளாமை அதிகரித்தாலும், எது என்னைத் தாக்குப்பிடிக்க வைத்தது என்றால், நான் கடவுளுக்குக் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்றிக் கொண்டிருக்கி றேன் என்ற திருப்தியும், அரக்கனான இந்தக் குடியை ஒழித்துவிட்டேன் என்பதும்தான்.

ஒரு மாலை, பாரி சாகிப் என்னை பார்க்க வந்த போது ஜன்னல் ஓரமாய் நான் அமர்ந்திருப்பதைப் பார்த் தார். நான் எப்படியிருக்கிறேன் என்று கேட்டார். 'என் னைக் கேட்காதே நான் நன்றாக இருக்கிறேன் என்றே நினைக்கிறேன்' என்று பலவீனமான புன்னகையோடு பதில் தந்தேன். 'இதோ ஒரு நிமிடத்தில் வருகிறேன்' என்று சொல்லிவிட்டு மறைந்து போனார். அவர் திரும்பி வந்த போது அரை புட்டி விஸ்கியை அவருடைய சட் டைக்குள் மறைத்து வைத்திருந்தார். நான் அதிர்ச்சி

யுற்று ஏதோ சொல்ல வாயெடுத்தேன் ஆனால் அதைக் கேட்க அவர் மறுத்து உட்கார்ந்து புட்டியைத் திருகித் திறந்தார். மிகச் சரியாக அந்தச் சமயத்தில் அப் பாஸ் உள்ளே வந்தான். பாரியின் அறிவுரையின் பேரில் எல்லாக் கதவுகளும் மூடப்பட்டன. சமையலறையில் இருந்து கொஞ்சம்போல் உணவு கொண்டு வரச் செய் தோம் என்றாலும் நாங்கள் எதையும் உண்ணவில்லை. கண்ணாடிக் குவளைகளையும் கொஞ்சம் போல் கறி யும் வைத்துக்கொண்டு மற்றதைத் திருப்பி அனுப் பினோம். தெருக்குழாயிலிருந்து தண்ணீர் எடுத்துவர அப்பாஸ் சென்றான். நாங்கள் குடித்துக்கொண்டிருந் தோம். எனக்குக் கொஞ்சம் தயக்கமாக இருந்ததென் றாலும் ஏதும் சொல்லவில்லை. பாரி சாகிப்பை கிண்டல் செய்வதற்காக அப்பாஸ், 'இந்த வீட்டில் உள்ள எல்லோ ரும் உன் மீது மதிப்பு வைத்திருக்கிறார்கள். ஒழுங்காக நமாஸ் செய்யக்கூடிய முசல்மான் என்பதால் பீபி ஜான் உன் மீது மிக அதிகமாக மரியாதை வைத்திருக்கிறார். இப்போது அவர் உள்ளே நுழைந்து உன்னைப் பார்த்து விட்டால் என்ன செய்வாய்?' என்று கேட்டான்.

பாரி சாகிப், 'இந்த ஜன்னலைத் திறந்து வெளியே குதித்து விடுவேன். மறுபடியும் எப்போதும் என் முகத்தை அவருக்குக் காட்டமாட்டேன்' என்று பதில் தந்தார்.

வாழ்க்கை முழுவதும் பாரி சாகிப் குதிப்பதற்கு என்று எப்போதும் ஒரு ஜன்னலைத் திறந்து வைத்திருந்தார். அது பாதி திறந்த நிலையிலேயே விடப்பட்டிருந்தாலும் அதனிடம் அவர்தம் முகத்தை மீண்டும் காட்டியதே கிடையாது. நான் இதை அவரைக் கொச்சைப்படுத்து வதற்காகச் சொல்லவில்லை. பிரிட்டிஸ்காரரால் உரு வாக்கப்பட்ட இந்த அமைப்பைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். பாரி சாகிப் அதில்தான் படிக்க

வேண்டியிருந்தது, அதன் ஊடாகத்தான் வாழ வேண் டியிருந்தது, வேலை பார்க்க வேண்டியிருந்தது அது வெளியேறியதைப் பார்க்க வேண்டியிருந்தது. பிறகு வேறோர் அமைப்பின் கீழ் இருப்பதை அவர் உணர்ந் தார். அதற்கு ஏற்றாற் போல் அவருடைய வாழ்க்கையை அந்திமக் காலத்தில் மாற்றிக்கொள்ள முயற்சி செய்தார். இந்த அமைப்பில் கவிஞர் இக்பால் எழுதியிருந்தது போலவே 'ஒவ்வொரு வாளும் அதனுடைய உறையிலி ருந்து உருவப்பட்டதுதான்'. இதுதான் இப்போது பாகிஸ் தான் வானொலியில் தினமும் பல்லவியாக இருக்கிறது. இந்தப் புது நாட்டில் எல்லோரும் வெளியே குதிக்க வேண்டும் என்று நினைத்த தருணத்திலேயே தானாகத் திறந்து கொள்ளும் ஜன்னல்களால் நிரம்பியிருக்கின் றன.

நான் மறுபடியும் விலகிப் போகிறேன். பழைய அனார்கலியில் இருந்த அறையில் உறைய வைக்கும் குளிர் காலக் குளிரில் நாங்கள் குடித்துக்கொண்டிருந் தோம். அவ்வப்போது பாரி சாகிப் வெளியே சென்று கட்டைகளை எடுத்து வருவார். பல வருடங்களுக் குப் பிறகு நாங்கள் சந்தித்துக்கொள்வதால் எவ்வளவு நேரம் ஒன்றாக அமர்ந்திருந்தோம் என்று எங்களுக்குச் சுத்தமாக ஏதும் தெரியவில்லை. ஜொராஸ்டர் பெயரில் நீண்ட நேரத்திற்கு பாரி சாகிப் அந்தத் தீயை எரிய வைத்துக்கொண்டிருந்தார். அடுத்த நாள் காலை நான் வெளியே சென்ற போதுதான் முன்தினம் நான் பார்த்த மரவேலி இப்போது காணாமல் போயிருந்ததைக் கவ னித்தேன். ஆனாலும் அதனுடைய சாம்பல் மிக பத்தி ரமாக அறைக்குள் இருந்தது. பாரி சாகிப்பிடம், வீட்டுச் சொந்தக்காரருக்கு மரவேலியை நாம் என்ன செய்து விட்டோம் என்று தெரிய வந்தால், கனன்று கொண்டி ருக்கும் கரித்துண்டுபோல் மாறி நம்மை வெளியே விட்

டெறிந்துவிடுவார் என்று அப்பாஸ் சொன்னான். பயந்த சுபாவம் கொண்டவராக பாரி சாகிப் சிரித்துச் சமாளிக்க முயன்றாலும், அவர் கவலையோடு இருப்பதை என் னால் பார்க்க முடிந்தது. 'அவர் கண்டுபிடிப்பதற்குள் நாம் ஓடிவிடுவோம்' என்றார் அப்பாஸிடம். இதில் பிரச்சனை என்னவென்றால், அவர் எங்கேனும் ஓடுவதற்கு முன் னரே அது எங்கே என்று எல்லோருக்கும் தெரிந்த விச யமாகவே இருந்தது. அவருடைய ஜாக்கெட்டை நாற்கா லியின் முதுகில் தொங்கவிட்டு விட்டு 'மிலாப்' அல்லது 'பிரதாப்' பத்திரிகை அலுவலகத்திலிருந்து வெளியேறி, பர்மாவுக்குத் தலைமறைவாகப் போனபோது, எவருக் குமே அது தெரியாது என்று அவர் உறுதியாக இருந்தார். ஆனால் எல்லோருக்கும் தெரிந்திருந்தது.

பாரி சாகிப் பல்வேறு நகரங்களில் இருந்த பல் வேறு ஆய்வுக் கூடங்களிலிருந்து அவருடைய நட்சத் திரங்களை ஆராய்ச்சி செய்து முடித்தாலும், இறுதியாக லாகூரில் இருந்த ஆய்வுக் கூடத்தில்தான் அவர் ஓய்வு எடுக்க வந்தார். சில காலங்களுக்கு அராப் ஹோட் டல் அவருடைய ஆய்வுக்கூடமாக இருந்தது. அதனைத் தொடர்ந்து, நட்சத்திரங்களை உற்று நோக்கக்கூடிய பல்வேறு பண்புகளைக் கொண்டவர்கள் தினமும் ஒன்று கூடி சொர்க்கத்தை வேவு பார்த்த இடம் நஹீம் பேக் கரி. அதில் சிலர் அவர்களுடைய வாழ்நாளிலேயே அந்த நட்சத்திரங்களைக் கடந்து சென்றார்கள். பிரகாசம் இல் லாத நட்சத்திரங்களைக் கொண்டவர்கள் அவர்களைக் காட்டிலும் சிறப்பாக வாழ்ந்து கொண்டிருந்தவர்களிடம் ஆதாயங்களை வேண்டி நிற்கும் நிலைக்கு நிர்ப்பந்திக் கப்பட்டார்கள்.

பாரி சாகிப் தொலைநோக்குப் பார்வையோடு பேசிக் கொண்டிருப்பதைப் பார்க்கும்போதெல்லாம், சூடான காப்பி கோப்பையிலிருந்து சுழன்று சுழன்று எழும்

பிய ஆவி, சிறு மேகக்கூட்டங்களாய்க் காற்றில் சற்று நேரம் நடனமாடி, காற்றின் ஈரப்பசையின் மடியில் உறங் கச் செல்வது போல்தான் உணர்ந்தேன். கதகதப்பாக, உற்சாகங்களோடு, எதற்கும் அக்கறை காட்டாத அந்தச் சந்திப்புகளில் எத்தனையோ சிந்தனைகள் பாரி சாகிப் பின் சட்டி போன்ற தலையிலிருந்து நறுமணம் வீசும் ஆவியாய் எழுந்து கனத்திருந்த சூழலில் சில நொடி நேரம் நளினமாக நடனமாடி மறைந்து போனது. உரை யாடுவதில் பாரி சாகிப் மன்னர்தான். அம்ரித்சரில் 'சிவப் புப் பதுங்கு குழிக்கு' வந்து 'வலியுல்லா' என்று சொல்லி தலையணையில் உடலைச் சாய்த்துக்கொண்டு, நதி பாய்ந்தோடுவது போல் பேசத் தொடங்குவார். பின்னா ளில் 'ஆஃபாக்கின்' ஆசிரியரான முஹமது ஸர்வார் அவ் வப்போது அங்கு வந்து என் மீதும், நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன் என்றும் அக்கறை காட்டுவார். பாரி சாகிப் போலவே அவரும் மிகச் சீக்கிரத்தில் பல புத்த கங்களுக்கு நான் ஆசிரியன் ஆவேன் என்று நம்பிக்கை கொடுத்து என்னை உற்சாகப்படுத்துவார்.

மற்றொரு அம்ரித்சர் கதை: பாரி சாகிப், ஹஸன் அப்பாஸ், அபு சையத் குரைஷி, இவர்களோடு நானும் ஒன்றாக இருக்கும்போது வெளியாட்கள் யாரும் தொந் தரவு செய்வதை நாங்கள் விரும்புவதில்லை. எங் கள் எல்லோருக்கும் தோழர் ஃபெரோஸுதின் மன்ஸூ ரைத் தெரியும். அவ்வப்போது அவரும் 'சிவப்பு பதுங்கு குழிக்கு' வருகை தருவார். எங்களுக்கு இது சுத்தமாகப் பிடிக்கவில்லை. தோழர் பொட்டாசியம் பர்மேங்கனைட் குண்டுகள் தயாரித்துக் கொண்டிருக்கிறார் என்று பாரி சாகிப் சொல்வார். அதே சமயத்தில் அப்பாஸ் அவரை ஃப்ராடுதின் மன்ஸூர் என்று அழைப்பான். பாரி சாகிப் ஒரு வழி கண்டுபிடிக்கும் வரை, நாங்கள் அவரை எப்படியோ சமாளித்து வந்தோம். ஒரு நாள் அவர்

உள்ளே நுழைந்தவுடன், பாரி சாகிப், அப்பாஸைப் பார்த்துக் கொடூரமாகச் கண்சிமிட்டி, "மகாராஜா அலிக் நாம் கிளம்புவோம். இல்லை என்றால் தாமதமாகிவி டும்" என்றார். மன்ஸூர் உட்காருவதற்குக் கூட நேரம் கொடுக்காமல், அவர் எழுந்து எல்லா ஜன்னல்களை யும் தாழிட்டார். பஜாரை அடைந்தவுடன் பாரி சாகிப் ஏதோ சாக்குப் போக்கு சொல்ல நாங்கள் சில நிமிடங் களிலேயே 'சிவப்பு பதுங்கு குழிக்கு' வந்து சேர்ந்தோம். அவர் மிகவும் சந்தோசமாக இருக்க, சிரிப்பதை அவ ரால் அடக்கவே முடியவில்லை. அற்ப விசயங்கள் அவ ரைச் சந்தோசப்படுத்தும். இதில் குழந்தை போல்தான். அவருக்குத் தொந்தி இருந்தது. அவர் சிரிக்கும்போது அதுவும் அவரோடு சேர்ந்து சிரிப்பது போலிருக்கும். ஆனாலும் தேவையற்ற இந்தச் சுமை எப்போதும் அவ ரைக் கவலை கொள்ள வைத்தது.

பாரி சாகிப் முழுதும் நேர்மையானவர். அதாவது மரணம் அவரைக் கவ்வியபோதும் கூட எவ்வித வாக் குவாதங்களையும் தொடங்க முடியாத அளவிற்கு நேர் மையானவர். அமைதி மற்றும் இனிமையான இயல்பை உடையவர் என்பதனாலே எப்போதும் விவாதங்களைத் தவிர்த்தே வந்தார். அவருக்கு நீண்ட காலமாகவே இரு தயநோய் இருந்தாலும், அதற்குத் தீவிரமாக மருத்துவம் பார்த்ததே கிடையாது. அதைக் கூட மிக அமைதியா கத்தான் கவனித்து வந்தார். எனக்கு நினைவிருக்கி றது. இறப்பதற்கு இரண்டு நாட்களுக்கு முன்பு லாகூ ரில் மேயோ வீதியில் அவரைச் சந்தித் தேன். அவர் டோங்காவில் இருந்தார். அவர் தான் முதலில் என்னைப் பார்த்து விட்டு, கீழே இறங்கினார். அவர் 'பிரிட்டிஷ் ஹை கமிஷனி'ல் வேலைக்குச் சேர்ந்த பின், அவருக் குள் சுருங்கிப் போய், எதேச்சையாக ஒரு பழைய நண்ப னைச் சந்திக்க வேண்டியிருந்தால் மிகவும் சங்கடப்பட்ட

வர் போல் காணப் பட்டார் என்பதால் அவர் மீது மிகவும் எரிச்சலோடு இருந்தேன்.

நாங்கள் கைக்குலுக்கிக் கொண்டோம். நான் எப்படி இருக்கிறேன் என்று கேட்டார். எனக்கு இந்தச் சம்பிரதாயம் கொஞ்சமும் பிடிக்கவில்லை. நான் வார்த்தைகளை மென்று விழுங்காமல், "பாரி சாகிப்! இன்னும் எவ்வளவு கீழ்த்தரமாக உங்களால் போக முடியும். என்னைச் சந்திப்பதை நீங்கள் ஏறக்குறைய முழுமையாய் நிறுத்திவிட்டீர்கள். நீங்கள் பிரிட்டிஷீக்குச் சேவை செய்யத் தொடங்கியதால் உங்களுடைய முழு ஆளுமையும் சகதியோடு கலந்து விட்டது" என்றேன். அவர் பதிலேதும் சொல்லவில்லை என்றாலும் மெல்லிய நோய்வாய்ப்பட்ட புன்னகை அவருடைய உதட்டில் தோன்றியது. அவருடைய முகம் வெளிறிப்போய்க் கிடந்தது. குரல் பலவீனமாய் இருந்தது. "நீங்கள் எப்படி இருக்கிறீர்கள்?" என்று கேட்டேன். என்னுடைய இந்தக் கேள்வி, அவருடைய இதயத்திற்குக் கணக்கில டங்கா மருத்துவம் பார்க்கப் படுவதையும், ஏதும் வேலை செய்யாததையும் குறித்து நீண்ட சிரத்தையான விளக்கத்தைக் கொடுக்க வைத்தது. பிறகு மேயோ தெருவில் இருக்கும் ஹோமியோபதி மருத்துவரைப் பார்க்கப் போய்க்கொண்டிருப்பதாக என்னிடம் தெரிவித்தார். நான் கிண்டலாக, "ஆக இந்த ஆய்வுக்கூடத்திலிருந்து மட்டும்தான் உங்களுடைய நட்சத்திரங்களை நீங்கள் ஆராய்ச்சி செய்யவில்லை. பாரி சாகிப் விட்டுத் தொலையுங்கள், உங்களிடம் எவ்விதத்திலும் எந்தக் குறையும் இல்லை. நோய் இருப்பதாக எப்போதும் நினைத்துக்கொண்டிருக்கும் உங்கள் மனநிலையை ஹிப்போகிரேட்ஸ் கூட குணப்படுத்த முடியாது. உங்கள் தேவைக்கு அதிகமாக உணவு சாப்பிடுவதால்தான் எப்போதும் வயிற்று உபாதைகளால் அவதிப்படுகிறீர்கள். அது உங்கள் இதயத்தையும் பாதிக்கிறது.

அவ்வளவுதான் இதற்கு மேல் எதுவுமே இல்லை. மற்ற எல்லாமே உங்களுடைய கற்பனைதான்" என்றேன்.

அவர் உடனடியாக இதை ஏற்றுக்கொண்டு, (அவர் எப்போதும் எல்லாவற்றையும் உடனடியாக ஏற்றுக் கொள்ளக்கூடியவர்),

"நீ சொல்வது சரிதான் என்று நினைக்கிறேன். எனக்கு இருக்கும் இந்த வயிற்றுப் பிரச்சனை... சில மருத் துவர்கள் கூட அதை ஊர்ஜிதப்படுத்தி இருக்கிறார் கள்" என்றார். நாங்கள் நீண்ட நேரம் பேசிக்கொண் டிருந்தோம். அவர் விரிவுபடுத்தப்பட்ட உலக வரலாற் றைப் பல தொகுப்புகளாக எழுதிக்கொண்டிருப்பதா கத் தெரிவித்தார். (அதை அவர் முடிக்கவில்லை) அவர் துருக்கிய மற்றும் பஞ்சாபி மொழிகளுக்கிடையேயான ஒற்றுமை பற்றியும் ஆராய்ச்சி செய்து கொண்டிருப்பதாக வும் தெரிவித்தார். அவர் எப்போதும் பஞ்சாபி மொழியை நேசித்தார். பஞ்சாபின் ஆட்சிமொழியாக பஞ்சாபிதான் இருக்க வேண்டும் என்று அவர் நிலை எடுத்த காலமும் உண்டு. அக்காலத்தில் அவர் பஞ்சாபி செய்திப் பத்தி ரிகையான 'அஜித்'தின் ஆசிரியராக இருந்தார். அதன் உரிமையாளர் ஒரு சீக்கியர். அந்த நாட்களில் அவர் எங்கு சென்றாலும், பஞ்சாபி மொழியை நிலைநிறுத்தத் தயார் படுத்தியிருக்கும் திட்டங்களைப் பற்றிப் பேசிக் கொண்டே இருப்பார். அவர் எல்லோரிடமும் 'உருதுவுக் குப் பதிலாக நீ பஞ்சாபியில் தான் எழுத வேண்டும்' என்பார். அவரைப் பொறுத்த மட்டில் அந்த மொழி ஒன் றுதான் திடமானதாக இருப்பதோடு, திடகாத்திரத்தோடு வசைச் சொற்களைக் கொண்ட மொழியாகவும் இருக் கிறது. வசை சொற்கள் என்று வரும்போது, உலகத்தில் எந்த மொழியும் பஞ்சாபி மொழிக்கு நிகரானது அல்ல என்று தீர்மானமாய் நம்பினார். இதில் சுவாரஸ்யமான

விசயம் என்னவென்றால், அவர் வாழ்க்கை முழுக்க ஒரே ஒரு வரிகூட பஞ்சாபியில் எழுதியது கிடையாது.

நாடு துண்டாக்கப்படுவதற்கு முன் அனார்கலியில் குடிப்பதற்கான வசதியோடு கைலாஸ் ஹோட்டல் என்று ஒன்று இருந்தது. இந்த வழக்கு அல்லது அந்த வழக்கு என்று ஏதாவது ஒன்றுக்கு நான் எப்போது லாகூர் சென் றாலும் சில மாலைப்பொழுதுகளைத் தவிர்க்க முடி யாமல் என்னுடைய புத்தக வெளியீட்டாளர் சௌத்ரி நஸீரோடு குடிப்பதில் கழிக்க வேண்டியிருக்கும். நாங் கள் எப்போதும் பாரி சாகிப்பை எங்களோடு இழுத்துக் கொண்டு, மேல்மாடி வரை நடந்தே செல்வோம். அங்கு ஒரு சீக்கியன் எங்களுக்குப் பரிமாறினான். ஓரிரு சுற்று குடித்தவுடன் பாரி சாகிப் அவனிடம் சுத்தமான பஞ்சா பியில் பேசத் தொடங்குவார். பஞ்சாபி மொழியின் அதி காரத்தை நிலைநாட்ட வேண்டிய அவசியத்தை அவனி டம் எடுத்துரைப்பார். நான்கு சுற்று முடிந்தவுடன் உருது பக்கம் திரும்பி அதன் உலகப் பொதுத்தன்மையைப் பற்றி பேசத் தொடங்குவார். பஞ்சாபி மொழி கொள் ளைக்காரர்கள் மற்றும் பொறுக்கிகளின் மொழி என்று சொல்லத் தொடங்குவார். அதன் நாகரிகமற்ற நாக்கு, காதுகளுக்கு முரட்டுத்தனமானது என்பார். ஐந்து அல் லது ஆறாவது சுற்று முடித்தவுடன் உருது மீதான அவ ருடைய காதல் சுருங்கத் தொடங்கி பார்சிய மொழியின் இனிமையைப் பற்றி புகழ்பாடத் தொடங்குவார். பிறகு பார்சிய மொழியை மிகச் சரியான ஈரானிய உச்சரிப்பில் பேச முயலுவார். ஆனால் ஏழாவது அல்லது எட்டா வது சுற்று அவரை புஸ்டு மொழியை நோக்கி சிரமங்கள் நிறைந்த பாதையில் கொண்டு விடும். மேலும் ஒரு சுற்று இந்த எல்லா மொழிகளும் அவருடைய மண்டையில் கதம்பமாய் கலந்து விடும்.

பாரி சாகிப் அவருடைய குரலைக் கேட்பதில் மிகுந்த பிரியம் கொண்டிருந்தார் என்றாலும் பொதுக் கூட்டங்களில் பேசுவதற்கான தைரியம் இல்லாதவராக இருந்தார். அதற்குப் பதிலாக நண்பர்களோடு பேசு வதை வழக்கமாகக் கொண்டிருந்தார். ஒரு முறை அனார்கலியில் இருந்த டெல்லி முஸ்லிம் ஹோட்டலில் இருந்து ஒரு 'ஸ்பூனை'த் திருடிக்கொண்டு வெளியே றினார். அனார்கலி மத்தியப்பகுதியை அடைந்தவுடன், அரைகுறைத் தீவிரவாதிகளான கார்ஷர் இயக்கத்தைச் சேர்ந்தவர்கள், மண்வாரியைத் தோள்பட்டையில் சுமந் துகொண்டு வீதிகளில் 'சுப் ராஸ்ட்' அல்லது 'லெப்ட் ரைட்' என்று சொல்லியவாறு வீறு நடை போட்டு நடப் பது போல அவர் அந்த ஸ்பூனைப் பிடித்துக் கொண்டு, எழுச்சியூட்டக்கூடிய கஸ்கார் பேச்சாளன் போல் பேசத் தொடங்கினார். பாரி சாகிப்பின் பேச்சுநயம் கூடக் கூட, ஒரு சிறு கூட்டம் சேரத் தொடங்கியது. நாங்கள் 'அல் லாமா மஷ்ரிக் ஜிந்தாபாத்' என்று கோஷங்கள் எழுப்பி, மல்லிகைப்பூ மாலை வாங்கிவந்து, அதை அவருடைய கழுத்தைச் சுற்றி விட்டெறிந்தோம். பாரி சாகிப் அதில் ஒன்றை எடுத்து இடுப்பில் கட்டிக்கொண்டு, 'மகாராஜா சாகிப் நாம் ஹீராமன்டி செல்வோம்... இந்தப் பூக்க ளின் மணம் அதன் திசையை நோக்கித்தான் நம்மை அழைத்துச்செல்கிறது' என்றார்.

லாகூரில் மிகப் பிரபலமான தாசிகள் கூடமான ஹீராமன்டிக்கு வந்து சேர்ந்தோம். பாரி சாகிப் குடித் துவிட்டு சந்தோசமாக இருந்தார். நாங்கள் இருண்டு கிடந்த அந்த வீதிகளில் சற்று நேரம் சுற்றிக் கொண் டிருக்க, பாரி சாகிப் வாயில் படிகளில் நின்று கொண் டிருந்த பல பதானி பெண்களோடு புஸ்டு மொழியில் பேச்சுக் கொடுத்தார். அவர் உரையாடிக்கொண்டிருந்த ஒரு சமயத்தில் அவருக்குத் தெரிந்த ஒருவர் அவ்வழியே

சென்று கொண்டிருந்தார். பாரி சாகிப் முன்னே வந்து அவரோடு கை குலுக்க, பாரி சாகிப் அங்கே என்ன செய்து கொண்டிருக்கிறார் என்று அந்த மனிதர் கேட்ட போது, "நான் இந்த இளம் பெண்ணோடு இன்றைய சர் வதேச நிலைமைகள் பற்றி விவாதித்துக்கொண்டிருக் கிறேன்" என்று பதில் தந்தார்.

காலையில் ஹசன் அப்பாஸ் முந்தைய நாள் நடந்த எல்லாவற்றையும் பாரி சாகிப் மோசமாக உணர்வு கொள்ளும்படியாக, கடமை தவறாமல் மேலும் அழகு படுத்திச் சொன்னான். பாரி சாகிப் அதை ஊர்ஜிதப்ப டுத்திக்கொள்வதற்காக என்னைத் திரும்பிப் பார்த்தார். நான் உண்மையைச் சொல்வது போல் பாசாங்கு செய்து, 'பாரி சாகிப்! நேற்றிரவு அவமானப்படும் அளவிற்குச் சில விசயங்களைச் செய்தது உண்மைதான். இது போல் நீங் கள் நடந்து கொள்வீர்கள் என்று எதிர்பார்க்கவில்லை' என்றேன். உடனடியாக அதற்காக வருத்தம் கொண்டு, செய்ததற்கு எல்லாம் பரிகாரமாய் 'ஓதுவு' செய்து நமாஸ் செய்யத் தொடங்கி விட்டார்.

பாரி சாகிப் சீர்திருத்தவாதியாக வர வேண்டும் என்று மிகவும் விரும்பினார். அவருடைய சிலை நகரத்திலுள்ள ஒவ்வொரு சதுக்கங்களிலும் நிறுவப்படும் அளவிற்குப் பெரிய தலைவராக வரவேண்டும் என்பதே அவரு டைய இதயம் நிரம்பிய ஏக்கங்களாக இருந்தது. வரும் தலைமுறைகளால் நினைவுகூரும் அளவிற்கு பெரிய செயலை அவர் செய்திருக்க வேண்டும். எப்படியிருந்தா லும் வரலாற்றில் இடம்பெற தன்முனைப்பும் துணிச்ச லும் தேவை. ஹீராமண்டியில் பதானி வேசியோடு அன் றைய சர்வதேச நிலைமையை விவாதிப்பதில் காட் டிய முனைப்பும் துணிச்சலும் அடுத்தநாள் காலையில் அவரை நமாஸ் பாய்க்குத் தான் கொண்டு விட்டது. அங்குதான் அவருடைய மனசாட்சியைச் சலவைக்குப்

போட்டு எடுத்தார். அவருடைய வாழ்க்கை முழுக்க, கத்திரிக்கோலைக் கொண்டு அவருடைய எண்ணங் கள் எல்லாவற்றையும் வாழ்க்கை என்னும் புத்தகத் தில் ஒட்டிக்கொண்டுதான் இருந்தார் என்றாலும் அவை எதையுமே ஷித்தோவில் அச்சுகளாக மாற்ற முடியா மல் இருந்தார். அந்தக் கல் அவருடைய சிந்தனைக ளின் கனத்திலேயே நொறுங்கிவிடும் என்று பயந்தார். அவர் எப்போதும் ஏதோ ஒன்று, ஏதோ ஒன்றுக்கடியில் சிக்கி நசுங்கிவிடும் என்று எப்போதும் பயந்து கொண்டே இருந்தார். அவருடைய சிந்தனைகள் எல்லாம் மாவு போல் தூள் தூளாக்கப்பட்டு மூக்குப்பொடியாய் உப யோகிப்பதில்தான் அவருடைய செயல்கள் அவரைக் கொண்டுவிட்டது.

அவர் பிரிட்டிஷாரின் மிகப் பெரிய எதிரியாக இருந் தாலும், பிரிட்டிஷார் இந்தியாவை விட்டு வெளியேறிய பின் அவர்களிடம்தான் அவர் வேலைக்குச் சேர்ந்து கொண்டார் என்பதுதான் இதில் மிகவும் விசித்திரமா னது. 'கம்பெனி கி ஹூக்கூமட்' என்ற புரட்சிகரமான புத்தகத்தை எழுதிய அவரேதான் அவருடைய விலை மதிக்க முடியாத கடைசிக் காலங்களை கிழக்கிந் தியக் கம்பெனியின் முன்னாள் எஜமானர்களுக்காக கழித்தார். பாரி சாகிப் அவருடைய இதய நோய்க்காக ஹோமியோபதி மருத்துவர் ஒருவரைப் பார்க்கச் சென்று கொண்டிருந்தபோது, நான் அவரைச் சந்தித்தது பற்றி சொல்லிக்கொண்டிருந்தேன். அவருடைய இதயம் மிக வும் நல்லவிதமாக பாரி சாகிப்பின் பயந்த குணத்தோடு ஒட்டிச்சென்று துடிப்பதை நிறுத்திக்கொண்டது. நாங் கள் கடைசிமுறையாகச் சந்தித்த சமயத்தில் தான் பிர பலமான நாடகாசிரியரான 'ஆஹா அஸ்கர் காஸ்மீரி' பற்றி நான் எழுதிய ஒரு கட்டுரை பிரசுரம் ஆகியிருந்தது.

அதில் அம்ரித்சரில் நாங்கள் எப்போதும் பொழுதைக் கழித்த ஜிஜா ஹோட்டல் பற்றிக் குறிப்பிட்டிருந்தேன்.

அந்தக் கட்டுரையைப் படித்துவிட்டு அபு சையத் குரைஷி, ஹசன் அப்பாஸ், புகைப்படக்காரர் ஆஷிக், அவர் மற்றும் நான் தெருக்களில் பைத்தியக்கார இளைஞர்களாய்ச் சுற்றிக்கொண்டிருந்ததைப் பற்றி எனக்கு நினைவு படுத்தி ஒரு கடிதம் எழுதியிருந்தார். எங்களுடைய பார்வையில் எந்த நோக்கமும் இல்லை. உண்மையில் எங்களுக்கு ஏதும் தேவையாகவும் இருக்கவில்லை. அதோடு நாங்கள் 'சுதந்திரச் சிந்தனையாளர்கள்' என்று ஒரு அமைப்பையும் ஏற்படுத்தியிருந்தோம். இந்தப் பைத்தியக்கார அமைப்பின் சட்ட திட்டங்களின்படி எந்த உறுப்பினரும் அவர் நினைப்பதுபோல் எதை வேண்டுமானாலும் செயல்படுத்தலாம். மற்ற உறுப்பினர்கள் யாருக்கும், என்ன செய்தேன் என்றோ எதற்காகச் செய்தேன் என்றோ எவரும் எந்த விளக்கங்களும் கொடுக்க வேண்டிய அவசியமில்லை. அடிக்கடி நாங்கள் நால்வரும் ஒன்றாக நடந்து கொண்டிருக்கும் போது பாரி சாகிப் ஒரு வார்த்தையும் சொல்லிக் கொள்ளாமல் பக்கத்து சந்தில் நுழைந்து காணாமல் போய்விடுவார். நாங்கள் அனல் பறக்கும் விவாதத்தில் ஈடுபட்டிருக்கும் போது அப்பாஸ் திடீரென்று மௌனமாகி வெளியேறிவிடுவான்.

அன்று அவர் எழுதிய கடிதம் பற்றி நாங்கள் பேசிக் கொண்டிருந்தோம். நான் பாரி சாகிப்பிடம் எப்போதும் அவருடைய நினைவாற்றலைப் பற்றி அவர் பெருமையாக சொல்லிக் கொண்டாலும், எங்களுடைய அம்ரித்சர் நாட்களைப் பெருமளவு மறந்து விட்டார் என்று தெரிவித்தேன். அவர் பலவீனமான குரலில் மன்னிப்புக் கேட்டு, அந்தக் கடிதத்தை மிகவும் சிரத்தையாக எழுதியதாகவும், இன்னும் எவ்வளவோ விசயங்களை அதில்

சொல்ல நினைத்திருந்தாலும் அவருடைய இதயம் அமைதியான நிலையில் இல்லை என்றும் தெரிவித்தார். மறுபடியும் அவருடைய இதயம் பற்றி அவர் பேசியவுடன், அவர் சொல்வதை ஏற்க மறுப்பதாகத் தெரிவித்தேன். கோளாறு ஏதும் இல்லாத அந்த இதயத்தை, ஏன் தனியே விடமாட்டேன் என்கிறார் என்று கேட்டேன்.

இரண்டு நாள் கழித்து, காலை டீயைக் குடித்த பிறகு என்னுடைய முதல் சிகரெட்டைப் பற்றவைத்துக் கொண்டு, அன்றைய செய்தித்தாள் 'இம்ரோஸை' எடுத்து, முதல் பக்கத்தில் இருந்த தலைப்புச் செய்தியைப் பார்த்தேன். அது 'பிரபலமான சோசலிச எழுத்தாளர் பாரி அலிக் மரணம்' என்று சொன்னது. ஒரு கணம் என்னை இழந்தேன். மீண்டும் அந்தச் செய்தியைப் பார்த்தேன். மூன்று பத்தி தலைப்புச் செய்தியாக வந்திருந்தது. பாரி சாகிப்பே இந்தச் செய்தியை மிகச் சுத்தமாக அவருடைய கத்திரிக்கோலைக் கொண்டு வெட்டி, அந்தப் பக்கத்தில் மிகச் சரியாக ஒட்டியிருப்பது போலத் தான் எனக்குத் தோன்றியது.

சோசலிச எழுத்தாளர் பாரி, என் நண்பர், என் ஆசான், என் வழிகாட்டி. முக்கியமான, முக்கியமல்லாத தலைப்புச் செய்திகள் எல்லாவற்றையும், அவருடைய வாழ்க்கை என்னும் புத்தகத்தில் ஒட்டிக்கொண்டிருந் தாலும், அந்தத் தலைப்புகளுக்குக் கீழ் எழுத முயலாமல், அவருடைய மண்டைக்குள் தோன்றிய கதைகள் எல்லாமே, உணவகங்களிலும், ரொட்டிக்கடைகளிலும், உணர்வுப் பூர்வமான சூழ்நிலைகளிலும், ஆவியாய் மாறி காணாமல் போய் விட்டது.

பாரி சாகிப் கல்லறையில் இருக்கிறார். அதிலிருந்து குதித்து வெளியேறுவதற்கு ஜன்னல் ஏதாவது இருக்கிறதா?



## நூர்ஜஹான்:

## லட்சத்தில் ஒருத்தி

நான் நூர்ஜஹானை முதன் முதலாக 'காந்தானி'ல் பார்த்ததாக நினைக்கிறேன். இல்லை ஐயா, எப்படிக் கற்பனை செய்து பார்த்தாலும் நிச்சயமாக அப்போது அவள் குழந்தை இல்லை. ஓர் இளம் பெண். சூழ்நிலை யின் தேவைக்கு ஏற்றாற் போல் வெளிக்காட்டக்கூடிய சொத்துக்களை மிகச்சரியான அளவில் நிரம்பப் பெற் றிருந்தாள். அந்தக்கால திரைப்படப் பார்வையாளர் கள் - கிளர்ச்சி ஊட்டுகிறவளாகவும், உயிருள்ள வெடி குண்டாகவும் இருந்த - நூர்ஜஹானுக்காக ஏங்கினார் கள். என்னைப் பொறுத்தமட்டில், அவளிடத்தில் இது போன்று எதையும் எப்போதும் காண முடிந்ததில்லை என்றுதான் சொல்ல வேண்டும். அவளிடம் உள்ள ஒரே ஒரு விஷயம்தான் மிகவும் வியப்பிற்குரியதாக இருந்தது. அது, அவளுடைய குரல். சைகலுக்குப் பிறகு என்னுள் அழுத்தமாகப் பதிந்து போன ஒரே பாடகர் அவள்தான். அவளுடைய குரல் பளிங்கு போல் தெளிவாக இருந்தது. அவள் பாடும் பாடல் வரிகள் உச்சஸ்தாயியில் இருந்தா லும், மத்திமத்தில் இருந்தாலும், தாரஸ்தாயியில் இருந் தாலும், அதை மிகச் சரியாகத் தன் கட்டுப்பாட்டில் வைத்திருப்பதோடு, சுருதியினுடைய சிறு ஏற்ற இறக் கங்களைக்கூட மிகத் துல்லியமாக வெளிக்கொணரக் கூடியவள். நான் நிச்சயமாகச் சொல்கிறேன், ஒரு தெரு வித்தைக்காரன் இறுக்கமாகக் கட்டப்பட்ட நீண்ட கயிற்

றின் மேல் எளிதாகவும் லாவகமாகவும் நடப்பது போல், விருப்பப்பட்டால் ஒரே சுருதியில் அவளால் மணிக்க ணக்காக நிற்க முடியும்.

பிற்காலத்தில், அவளுடைய முத்திரையாய் அந்தக் குரலில் இருந்த அதிர்வுகளும், வனப்பும், கபடமற்ற தன் மையும் இழந்திருந் தாலும் நூர்ஜஹான், நூர்ஜஹானா கவே இருந்தாள். லதா மங்கேஷ்கர் இந்த உலகத்தைத் தன்வசப்படுத்தி இருக்கலாம், ஆனால் நூர்ஜஹான் சுருதி பிடித்தாலே, அது நம்மை நிமிர்ந்து உட்கார வைக் கும். அவள் சாஸ்திரிய சங்கீதத்தில், அங்கீகரிக்கப்பட்ட வித்துவான்கள் போல் மிகத் துல்லியமாக அதன் நுட்பங் களை அறிந்திருந்தாள் என்பது பலருக்குத் தெரியாது. அதுபோலவே 'தும்ரி', 'காயல்' ஏன் 'துருபத்' பாடுவதி லும், குறிப்பாகப் பின்னதில் ஆச்சரியப்படும் அளவிற்கு அதிகாரத்தோடு விளங்கினாள். அவளின் குடும்பம் மற் றும் வளர்ந்த சூழ்நிலையின் காரணமாக இசை அவ ளுடைய உடலில் கலந்திருக்க வேண்டும். இருந்தாலும் அதைக் கற்பதற்குப் பல வருடங்களை அவள் செலவு செய்தாள். அவளுடைய திறமை சந்தேகத்திற்கு இட மில்லாமல் கடவுளால் அருளப்பட்டதுதான். ஒரு பாடகர் திறமையோடு இசையின் நுட்பங்களை அறிந்திருந்தா லும் குரலில் அந்த 'ரசம்' இல்லை என்றால், அது எவ்வி தத்திலும் கேட்பவனைப் பாதிக்காது. நூர் ஜஹான் நுட் பங்களையும் அறிந்திருந்தாள். கடவுள் அருளிய குரலும் பெற்றிருந்தாள். இவ்விரண்டும் ஒன்றாய் இணையும் போது அதன் மொத்த விளைவு என்பது மயங்க வைக் கக் கூடியதாக இருந்தது.

இயற்கை அருளிய பொக்கிஷத்தை எவரொருவரும் மிகக் கவனமாகப் பாதுகாத்துக் கொள்ளவேண்டும் என்றுதான் பொதுவாக நினைப்போம். ஆனால் பல சம யங்களில் அதற்கு நேர் எதிராகவே அமைந்துவிடுகிறது.

திறமைபெற்ற பலர், அந்தத் திறமையை அலட்சியப்படுத்தவே செய்கிறார்கள். இன்னும் சொல்லப்போனால் சிந்தித்தோ, சிந்திக்காமலோ அதை அழிக்கவும் முற்படுகிறார்கள். குரல் வளத்தைக் குடி கெடுக்கக்கூடியது என்றாலும், மறைந்த கே.எல். சைகல் வாழ்நாள் முழுக்கக் குடித்துக் கொண்டேயிருந்தார். புளிப்பு மற்றும் எண்ணெய்ப் பண்டங்கள் குரலுக்குக் கேடு விளைவிக்கக் கூடியது. ஆனால் நூர்ஜஹான் எண்ணெய் ஊறுகாயை மிக அதிக அளவில் உட்கொள்ளக் கூடியவள் என்று யாருக்குத்தான் தெரியாது. மேலும் இதில் சுவாரஸ்யமான விஷயம் என்னவென்றால், ஒரு பாடலைப் பதிவு செய்வதற்கு முன் நிஜமாகவே வயிறு நிரம்ப ஊறுகாய் தின்று விட்டு, குளிர்ந்த நீரையும் குடித்து வைப்பாள். இது முடிந்த பிறகு மட்டுமே ஒலிபெருக்கிக்கருவி முன்பு போய் நிற்பாள். அதற்கு அவள் ஓர் விளக்கம் வைத்திருந்தாள். இதுபோன்ற விஷயங்கள் குரலை மேலும் உணர்ச்சிகள் கொண்டதாகவும் உயிருள்ளதாகவும் மாற்றுவதாக நம்பினாள். அது எப்படிச் சாத்தியம்? அவள் மட்டுமே பதில் சொல்ல முடியும். நான் இதையும் சேர்த்துச் சொல்ல வேண்டும். அசோக்குமார் ஐஸ்கட்டிகள் மென்று கொண்டிருப்பதை - அதுவும் குறிப்பாகப் பாடல் பதிவு செய்ய வேண்டியிருந்தால் - பார்த்திருக்கிறேன்.

இதில் ரகசியம் எதுவாக இருந்தாலும், பதிவு செய்யப்பட்ட இசை இருக்கும் வரை, தலைமுறை தலைமுறையாக ரசிகர்களைச் சந்தோஷப்படுத்திக்கொண்டு கே. எல். சைகல் உயிரோடு இருப்பார். அது போலவே நூர்ஜஹானும்.

நான் நூர்ஜஹானைத் திரையில் மட்டுமே பார்த்திருக்கிறேன். நேரடியாகப் பார்த்தது கிடையாது. நான் அவளுடைய ரசிகன் - அவளுடைய அழகுக்காக இல்லை என்

றாலும் பாடகியான அவளின் திறமைக்கு. அவளுக்கு இளம் வயது தான் என்றாலும், தேர்ச்சி பெற்ற வித்வான் போல் எப்படி அவளால் பாட முடிகிறது என்பது எப்போ தும் திகைப்பாக இருந்தது. அந்த நாட்களில் இந்தியத் திரைப்பட இசையில் இரண்டு பெரிய பெயர்கள்தான் இருந்தன: சைகல் மற்றும் நூர்ஜஹான். அங்கு குர்ஷித் தும் அவளுடைய ஆதரவாளர்களோடு இருந்தாள். ஷம் ஷாத் மீது பெரும் புகழ்மாலை சூட்டப்பட்டது. ஆனால் உண்மை இதுதான்: நூர்ஜஹான் பாடத் தொடங்கினால் - ஒரு பேச்சுக்குச் சொல்வதென்றால், அவளுடைய குர லைத் தவிர மற்ற எல்லோருடைய குரலும் காணாமல் போய் விடும். சுரையா - பின்னாளில் தான் வந்தாள். எப்போதும் எனக்கு மிகப்பெரிய வருத்தமாக இருப்பது என்னவென்றால், சைகலும் சுரையாவும் ஒரு திரைப்ப டத்தில் (க்வாஜா குர்ஷித் அன்வர் இசையில் 'பர்வானா' என்ற படம்) ஒன்றிணைந்து இருந்தாலும், எந்தத் தயா ரிப்பாளருக்கும் சைகலையும் நூர்ஜஹானையும் ஒன்று சேர்க்க வேண்டும் என்று தோன்றவில்லை. ஏதோ கார ணங்களுக்காக இவ்விருவரும் ஒரு திரைப் படத்தில் கூட ஒன்றாகப் பணியாற்றவில்லை. இவர்கள் இருவரும் இணைந்து பாடியிருந்தால், இசை உலகில் நிச்சயமாகப் பெரும் சந்தோஷங்கள் நிறைந்த புரட்சியை ஏற்படுத்தி யிருக்கும்.

எப்படி எங்கு எப்போது நான் நூர்ஜஹானை முதல் முறையாகச் சந்தித்தேன் என்பது மிகப்பெரிய கதை. பம்பாயில் பல வருடங்களைக் கழித்தபிறகு, சில தனிப் பட்ட காரணங்களுக்காகக் கொஞ்சமும் சந்தோஷம் இல்லாத மன நிலையில் டெல்லிக்குக் குடியேறி, அங்கு அகில இந்திய வானொலி நிலையத்தில் வேலையில் சேர்ந்தேன். ஆனால் மிகக் குறுகிய காலத்தில் சலிப் புற்றுப் போனேன். அதே சமயத்தில் சமீபத்திய 'காந்

தான்' என்ற வெற்றிப் படத்தை இயக்கிய சையத் ஷௌகத் ஹுசைன் ரிஸ்வி, பம்பாயில் இருப்பதாக வும், அதுவும் தன்னோடு இருப்பதாகவும், நான் கதை எழுத வேண்டும் என்று அவன் குறியாய் இருப்பதாகவும் அதனால் நான் பம்பாய்க்குத் திரும்ப வேண்டும் என் றும் 'முஸாவர்' வாரப் பத்திரிகையின் ஆசிரியர் நஸீர் லூதியான்வி கடிதத்தின் மேல் கடிதம் போட்டு என்னை அரித்தெடுத்தார். இதனால் நான் டெல்லியை விட் டுக் கிளம்பினேன். இந்தியாவில் அப்போதைய அரசியல் சூழ்நிலை மிகக் கொந்தளிப்போடு இருந்தது. 'கிர்ப்ஸ் கேபினட் மிஷன்' தோற்றுத் திரும்பி விட்டது. நான் 1940ல், ஆகஸ்ட் 7ம் தேதி பம்பாய்க்குத் திரும்பி வந் தேன் என்று நினைக்கிறேன். ஷௌகத்துடனான என் முதல் சந்திப்பு 17, அடெல்ஃபி சேம்பர், கிளாரித்தெரு வில் நடந்தது. அதுவே அவனுடைய வீடாகவும், அலுவ லகமாகவும் பயன்படுத்தப்பட்டது. அவன் உயரமாகவும், நாகரிகமான வாலிபனாகவும், நல்ல நிறத்தில் சிவந்த கன்னங்களும் அருமையான கில்பர்ட் பாணியில் தாடி யும், சுருட்டை முடியும், அப்பழுக்கற்ற மடிப்புகள் கலை யாத டிரௌசர் மற்றும் ஜாக்கெட்டோடு, பகட்டாக முடிச் சுப் போடப்பட்ட 'டை' யும் அணிந்த வனாக இருந்தான். அவனுடைய நடை கூட மிகவும் நாகரிகமாக இருந்தது. பார்த்தவுடனே நாங்கள் நண்பர்களானோம்.

மிகவும் சிரத்தையான மனிதனாகவே அவன் எனக் குத் தெரிந்தான். நான் போதிய அளவு எனக்குப் பிடித்தமான 'கேரவன் - ஏ' சிகரெட்டுகள் டெல்லி யில் இருந்து வாங்கி வந்திருந்தேன். யுத்தம் காரண மாக அது கிடைப்பது, குறிப்பாக, பம்பாயில் கிடைப்பது மிகவும் சிரமமாக இருந்தது. ஷௌகத், இருபது டின்க ளும், ஐம்பது பெட்டிகளும் இருந்ததைப் பார்த்து மிகவும் சந்தோஷப்பட்டான். நான் 17, அடெல்ஃபி சேம்பருக்கு

மாறினேன். எங்களுக்கு இரண்டு பெரிய அறைகள் இருந்தன. ஒன்றை அலுவலகமாகவும் மற்றொன்றைக் குடியிருப்பதற்காகவும் வைத்துக் கொண்டோம் என்றா லும், எப்போதும் நாங்கள் அலுவலகத்திலேயே உறங் கிவிடுவோம். நகைச்சுவை நடிகர் மிர்ஸா முஸாரஃப் மற்றும் பலர் மாலை வேளைகளில் வருவார்கள். திரும் பிப் போவதற்கு முன் எங்கள் படுக்கை விரிப்புகளைப் போட்டு விட்டுப் போவார்கள். நாங்கள் மிகவும் உற்சா கமாக நாட்களைக் கழித்து வந்தோம். அங்கு 'கேரவன் - எ' சிகரெட்டும், மான்மார்க் நாஸிக் விஸ்கியும் - அது மிகவும் கொடூரமானது என்றாலும், அதைத்தான் எங் களால் பெற முடிந்தது - இருந்தது. ஷௌகத் பெரிய இயக்குநராக இருந்தாலும் 'காந்தான்' வெற்றிக்குப் பிறகு லாகூரில் நீண்ட நாட்கள் தங்கியிருந்ததால் அவன் சம்பாதித்த பணமெல்லாம் செலவழிக்கப்பட்டுவிட்டது. லாகூரில் வாழ்க்கை - செயல் பாடுகளோடு நிறைந்தி ருந்ததால், அதன் விலை மிக அதிகமாகவும் இருந்தது. என்னிடமிருந்ததும் ஒரு சில நூறு ரூபாய் நோட்டுகள் தான். அதையும் ஏற்கனவே நாஸிக் விஸ்கியில் மூழ்க டித்து விட்டோம்.

எப்படி இருந்தாலும் அந்தக் கஷ்டமான நாட்களை எப்படியோ சமாளித்து விட் டோம். எனக்கு நினை விருக்கிறது - நான் பம்பாய் வந்து இரண்டு நாட் கள் கழித்து, அதாவது 1940 - ல் ஆகஸ்ட் 9ம் தேதி, நான் தொலைபேசியில் பேச முயன்றபோது இணைப்பு துண்டிக்கப்பட்டிருந்தது. இந்திய தேசிய காங்கிரஸ் தலைவர்கள் எல்லோரும் கைது செய்யப்பட்டிருப்பதால் முன்னெச்சரிக்கை நடவடிக்கையாய் நகரம் முழுக்கத் தொலைபேசி இணைப்புகள் துண்டிக்கப்பட்டுள்ளன என்று பிறகு தான் எங்களுக்குத் தெரிந்தது. காந்திஜி, ஜவகர்லால் நேரு, அப்துல் கலாம் ஆசாத் மற்றும் பல

தலைவர்கள் கைது செய்யப்பட்டு ரகசியமான இடத் துக்குக் கொண்டு செல்லப்பட்டிருக்கிறார்கள். சுடுவதற் குத் தயார் நிலையில் இருந்த துப்பாக்கி போல நகரம் இருந்தது. எந்த நிமிடத்திலும் அது வெடிக்கலாம் என் பதால் வெளியே போவதைப் பற்றிய பேச்சுக்கே இட மில்லை. பல நாட்களாக நாங்கள் உள்ளேயே அடைந்து கிடந்தோம். அந்த மோசமான மான் மார்க் விஸ்கியைக் குடித்துக் கொண்டு நேரத்தைக் கழித்தோம். நிலையற்ற அரசியல் சூழ்நிலையால், திரைப்படத்துறை மோசமான பாதிப்புக்குள்ளாகி யிருந்தது. எவரும் எந்தப் புதுப் படத் திற்கும் முதலீடு செய்யத் தயாராக இல்லை. ஷௌகத் பேச்சுவார்த்தை நடத்தியவர்களும் நிலையான காலத் திற்குக் காத்திருக்க முடிவு செய்து விஷயத்தைக் கிணற் றில் போட்டார்கள் இந்த நிலையில் நஸீர் லூதியான்வி கொடுத்தனுப்பிய மோசமான சாப்பாட்டைச் சாப்பிட்டு விட்டுக் காலையில் நீண்டநேரம் வரை உறக்கத்தில் கழித்தோம். அவ்வப் போது உணர்ச்சிவசப்பட்டு புதுத் திரைப்படத்திற்கான கதையைப் பற்றிப் பேசத் தொடங் குவோம்.

அந்த நாட்களில் தான், யாரோ என்னிடம் நூர்ஜ ஹான் பம்பாயிலிருப்பதைப் பற்றி சொன்னார்கள். யார் அதைச் சொன்னது? என் நினைவுகள் என்னை விட்டு நழுவிப் போகின்றன. ஆனால் ஆகஸ்ட் 8ம் தேதி அதாவது நான் ஷௌகத்தைச் சந்திப் பதற்கு முன் னரே, அவள் பம்பாயிலிருப்பது எனக்குத் தெரிந்தி ருக்க வேண்டும் என்று நினைக்கிறேன். நான் 'மஹிம்' போய் என் உறவினர்கள் சிலரைச் சந்தித்து விட்டு, சமீனாவுக்கு என்னவாயிற்று என்று தெரிந்து கொள்ள வேண்டுமென்று நினைத்திருந்தேன். சமீனா பின்னா ளில் கிஷன்சந்தரோடு உறவு கொண்டிருந்தாள். நான் டெல்லியில் அகில இந்திய வானொலி நிலையத்தில்

வேலை பார்த்தபோது அவள் அங்கு வானொலி நடிகையாக இருந்தாள். அவள் திரைப்படத்துறையில் நுழைய விரும்பியதால் நான் பிரித்வி ராஜுக்கும், பிரிஜ் மோகனுக்கும் கடிதம் கொடுத்து அனுப்பியிருந்தேன். அவள் புத்திசாலிப் பெண். பார்க்க அழகாக இருப்பாள். அவளுக்குக் கொடுக்கப்பட்ட வரிகளைத் தங்குதடை யின்றிப் பேசக்கூடியவள். அவளுக்கு ஏதேனும் சந்தர்ப் பம் கிடைத்ததா இல்லையா என்று தெரிந்து கொள்ள ஆவலாக இருந்தேன். ஏதாவது கிடைத்திருக்கும் என்று ஓரளவு நம்பிக்கையோடும் இருந்தேன்.

யாரோ சிவாஜி பூங்கா பகுதியில் அவள் வசிப்பதாகச் சொன்னார்கள். ஆனால் அந்தப் பரந்து விரிந்து கிடந்த பகுதியில் சமீனா காட்டூன் என்ற பெயரை மட்டும் எனக்கு வழிகாட்டியாக வைத்துக் கொண்டு அவளைக் கண்டுபிடிக்க முடியும் என்று நான் கொஞ்சமும் நம் பிக்கை வைக்கவில்லை. நிஜாமி - அதாவது மிகப் பிர பலமான திரைப்பட நடிகையான, நிஜாமியின் மனைவி, கீதா நிஜாமி, நிஜாமியை விட்டு வெளியேறிய பிறகு வரி சையாகப் பல ஆண்களை மணந்தவள் - சிவாஜி பூங்கா பகுதியில் வசித்து வந்தது என் நினைவிற்கு வந்தது. மும்தாஜ் சாந்தியைப் பயிற்றுவித்து அவளின் தொழில் ரீதியான முன்னேற்றத்தில் அக்கறை கொண்டு உலகப் போக்குகளை அவளுக்குப் புரிய வைத்த அதே நிஜாமி தான் இவன். நான் இதையும் சேர்த்துச் சொல்ல வேண் டும். கீதா நிஜாமி பின்னாளில் பல வழக்குகளில் சிக் கிக்கொண்டாள். பாகிஸ்தானின் தொடக்க வருடங்க ளில், அவள் ஓர்அழகான இளம் பெண்ணைப் பிரதான நாட்டியக்காரியாகக் கொண்டு, ஒரு நடனக்குழுவை ஏற்படுத்தி, நகரம் நகரமாகச் சென்று நிகழ்ச்சிகளை நடத்தினாள். இதுவரை நானும் நிஜாமியும் கடிதங்கள் மூலம் மட்டுமே, அதுவும் மிகவும் சம்பிரதாய முறையில்

தொடர்பு கொண்டிருந்தோம். எங்களின் முதல் சந்திப் பைப் பற்றி விரிவாகச் சொல்லப்போனால், தேவை யில்லாமல் பத்துப் பதினைந்து பக்கங்கள் வீணாகும் என்பதால் நான் சுருக்கமாகச் சொல்லி விடுகிறேன். அன்று காலை நான் சிவாஜி பார்க்கில் இருந்த அவனது வீட்டின் முன்பு நின்றபோது, என்னை மிகவும் அன் போடு வரவேற்றான். அவன் வேட்டியும் பனியனும் மட் டுமே அணிந்திருந்தான். எந்த விசயம் என்னை அங்கு கொண்டு வந்தது என்று கேட்டு, நான் சொன்ன வுடன், "சமீனா காட்டுனை இந்த நிமிடத்தில் இங்கு வரவைக்கி றேன்" என்றான். அவனிடம் இருந்த குச்சி போன்ற இந்து மேலாளரை வரவழைத்து, "சமீனா காட்டுனைப் பிடித்து, மண்ட்டோ சாகிப் பார்க்க வேண்டும் என்று உடனடி யாக அழைத்து வா" என்றான். இந்தக் கட்டளையைக் கொடுத்து முடித்தவுடன் எனக்காக, என்ன வேண்டு மென்றாலும் செய்வதாக உறுதியளித்தான். பிறகு அவன் என்னிடம் இதையெல்லாம் கொடுத்தான் - அதாவது வார்த்தைகளில்தான். மிகவும் அற்புதமான, தேவை யான பொருட்கள் எல்லாவற்றையும் கொண்டிருக்கும் வீடு மட்டுமல்லாமல் அதோடு சேர்த்து ஒரு காரும் கொடுத்தான்.

நான் சரியான வார்த்தைகளில் அவனுடைய நல்ல எண்ணங்களுக்கு நன்றியைத் தெரிவித்தேன் என்றா லும், அவன் என் சிறுகதைகளின் ரசிகன் என்ப தால், அதை அவன் எதிர்பார்த்தது போல் தெரிய வில்லை. நிறைவேற்றப்படாத உறுதிமொழிகள் என்று வரும் பொழுது ஓர் அரசனைப் போல் பெரிய கொடை வள்ளலான அவன், பெண்களைப் பிடித்துக் கொடுப்ப வன் என்பது முதல் காமத்தரகன் என்பது வரை எல்லா விதமாகவும் அழைக்கப்படுகிறான். என்றாலும், இவை யெல்லாம் எனக்குப் பிரச்சினையாக இல்லை. புதுப்

புது சவால்களை எப்போதும் தேடிக் கொண்டிருப்ப வன் அந்தக் கலையில் அவனுக்கு நிகர் யாருமில்லை என்றும் எனக்குத் தெரியும். மும்தாஜ் சாந்தி மீதான அவனுடைய பிடியின் இறுக்கம் எவ்வளவு முழுமையா னது என்று அன்றுதான் நான் கவனித்தேன். அதாவது அவன்தான் அவளுடைய தந்தை என்பது போலவே முழுக்க முழுக்க அவனுக்குக் கட்டுப்பட்டிருந்தாள். இயக்குநர் வாலி சாகிப், குதிரை மீது வீற்றிருக்கும் தன்னுடைய எஜமானனைச் சுற்றி நடனமாடும் சேவ கன் போலவே நிஜாமைச் சுற்றி ஏறக்குறைய நடன மாடிக் கொண்டிருந்தான். அந்த வீட்டில் நிஜாமி தான் அரசன். மற்ற எல்லோரும் அவனுக்குக் கீழ்ப்படிந்து மரி யாதை செலுத்தினார்கள். அவனுடைய கடமை மிகச் சிறந்த உணவும், அளவில்லாமல் ஊற்றப்படும் மது வும் கொண்ட, கொண்டாட்டங்களுக்குத் தயாரிப்பாளர் களை அழைப்பது மட்டும் தான். கள்ளச் சந்தையில் இருந்து வண்டிக்கு எரிபொருள் வாங்குவதில் அவ னுக்கு நிகர் யாருமில்லை. எப்படி வெற்றிகரமான நடி கையாய் வளர்வது என்பது பற்றி மும்தாஜ் சாந்திக்குப் பாடம் எடுக்க நேரத்தைச் செலவு செய்வான். "இங்க பார்! இந்த முறையில் நீ புன்னகை செய்தால் அந்தத் தயாரிப்பாளரிடமிருந்து நிச்சயமாக ஓர் ஒப்பந்தத்தை வாங்கித் தருகிறேன்" என்றோ, "தடித்த அந்தப் பணம் முதலீடு செய்பவனிடம் நான் சொல்லிக்கொடுத்தபடி நீ கை குலுக்கினால், அன்று சாயந்திரமே, நம்முடைய சட் டைப் பையில் பத்தாயிரம் இருக்கும் என்று உறுதியாகச் சொல்வேன்" என்றோ சொல்லிக் கொண்டிருப்பான்.

நான் அங்கு அமர்ந்து கொண்டு, எதேச்சையாய் நுழைய நேரிட்ட அந்த உலகத்தைப் பற்றி வியந்து கொண்டிருந்தேன். இந்த இடத்தோடு சம்பந்தப்பட்ட எல்லாமே செயற்கையாக இருந்தது. ஒரு சமயம் நிஜாமி,

அவனுடைய குளியல் அறை காலணியைக் கொண்டு வருமாறு வாலி சாகிப்பிடம் சொன்னான். அவனும் அதைக் கொண்டு வந்து மிகுந்த மரியாதையோடு நிஜாமியின் காலடியில் வைத்தான். சத்தியமாகச் சொல்கிறேன், இது மிகவும் செயற்கைத்தனமான வெளிப்பாடு. நாணயமற்ற தன்மையைக் கொண்டது. மிகச் சாதாரணமான ஆடைகளை அணிந்து கொண்டு மும்தாஜ் சாந்தி பக்கத்து அறையில் உள்ள ஜன்னலில் ஆணி அடித்துக் கொண்டிருக்க, நிஜாமி தொடர் வர்ணனையைத் தொடர்ந்து கொண்டிருந்தான். "மண்ட்டோ சாகிப், இந்தப் பெண் சரியான வெகுளி. திரைப்படத்துறையில் தான் இருக்கிறாள் என்றாலும், நாம் எல்லோரும் எந்த உலகத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம் என்பதைப் பற்றி ஏதும் அறியாதவளாக இருக்கிறாள். ஆண்களை ஏறெடுத்துக் கூட பார்ப்பதில்லை. இதற்கெல்லாம் காரணம் நான் அவளுக்குக் கொடுத்த பயிற்சிதான்". இவை எல்லாமே ஏமாற்று வேலை என்று எனக்குத் தெரிந்திருந்தாலும், என்னால் நிஜாமி பற்றி பெருமையாக நினைக்காமல் இருக்க முடியவில்லை. சரி, நான் நூர்ஜஹான் பக்கம் வருகிறேன்.

நிஜாமி என்னிடம், எவ்வாறு மும்தாஜ் சாந்தியை வெற்றிப்பாதையில் கொண்டு விட்டான் என்றும், எவ்வளவு நேர்த்தியாக அவளுக்குப் பயிற்சி கொடுத்தான் என்றும் சொல்லி முடித்த பிறகு நூர்ஜஹான் பற்றி பேச்சு வந்தது. நூர்ஜஹானும் அவனுடைய பொறுப்பில் இருப்பதாகவும், மும்தாஜ் சாந்தியைப் போல் அவளுக்கும் வித்தைகளைக் கற்றுக் கொடுப்பதாகவும் சொன்னான். அவன் சொன்ன வார்த்தைகளில் சொல்கிறேன்: "மண்ட்டோ சாகிப், இந்தப் பெண் மட்டும் லாகூரிலேயே தங்கியிருந்திருந்தால் அத்தோடு அவளுடைய கதை முடிந்திருக்கும். ஆனால் நான் தான் அவளை இங்கு வரவழைத்து,

திரைப்பட நட்சத்திரமாக மட்டும் மாறுவது போதாது என்று புரியவைத்தேன். ஒரு பெண்ணுக்கு உதவியாக வும் பாதுகாப்பாகவும் வேறு பல வழிகள் இருக்க வேண் டும். ஆரம்பக்காலங்களில் எவ்விதமான காதலும் அவ சியமில்லாதது. அவள் செய்ய வேண்டியதெல்லாம் இது தான் - எல்லா வழிகளிலும் எப்படியெல்லாம் சம்பாதிக்க முடியுமோ அவ்வளவு சம்பாதித்து விட்டு, வங்கியில் போதுமான அளவு பணம் சேர்ந்த பிறகு அவளுடைய வாழ்க்கை முழுக்க அவளுக்கு அடிமையாக இருக்க ஒரு நல்ல மனிதனைத் தேர்ந்தெடுத்துத் திருமணம் செய்து கொள்ளலாம். மண்ட்டோ சாகிப்! நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? நீங்கள் மிகவும் புத்திசாலியான மனி தர்"

என்னுள் ஏதேனும் புத்திசாலித்தனம் இருந்திருந்தா லும், அன்று நான் நிஜாமியின் வீட்டிற்குள் நுழைந்த உட னேயே அது என்னைத் தனியே விட்டு அகன்று விட்டது. அவன் கேட்ட கேள்விக்கு என்னிடம் பதில் இல்லை. அதனால், அவன் என்ன செய்து கொண்டிருந்தாலும் அது சரியானதாகவே இருக்கும் என்றும் - அதுவும், அவன் செய்து கொண்டிருப்பதால் - அது வேறு எப்படி இருக்க முடியும் என்றும் சொன்னேன். இது அவனுக்குப் பெருத்த சந்தோசத்தைக் கொடுக்க, அதனால் நூர்ஜ ஹானுக்குச் சொல்லி அனுப்பினான். அடுத்த அறையில் தொலைபேசி ஒலிப்பதையும் அதனைத் தொடர்ந்து நூர்ஜஹான் குரலையும் கேட்க முடிந்தது. "கமால் சாகிப் தொலைபேசியில் இருக்கிறார். நான் சீக்கிரத்தில் உங் களோடு சேர்ந்து கொள்கிறேன்". நிஜாமி மர்மமான புன்னகை ஒன்று உதிர்த்தான். 'புகார்' படத்தை இயக் கியதில் பிரபலமாயிருந்த சையத் கமால் அம்ரோஹி தான் தொலைபேசியில் பேசிக் கொண்டிருந்த கமால். நிஜாமி, "நான் அவளுக்குக் கொடுத்த அறிவுரைகளைப்

பற்றி உங்களிடம் சொல்லிக் கொண்டிருந்தேன். இந்தத் திருமணம் போன்ற சமாச்சாரங்கள் எல்லாம் இங்கேயும் இல்லை, அங்கேயும் இல்லை என்ற நிலைதான் என்று அவளின் மண்டைக்குள் ஆழமாய் இறக்கியுள்ளேன். முதலில் அவளுக்கு எது உகந்ததோ அதைத்தான் செய்ய வேண்டும். இப்போது கமாலால் சம்பாதிக்க முடியும். அவன் சம்பாதிப்பதில் பாதி நூர்ஜஹானுக்கு வந்து சேர்ந்தாலும், அவளுக்கு நல்லதுதானே. உண்மை இது தான், மண்ட்டோ சாகிப் உண்மை இதுதான்: இந்த நடிகைகள் எல்லாம் பணம் சம்பாதிக்கும் கலையில் திறமை பெற்றவர்களாக மாற வேண்டும்" என்றான்.

நான், "உன்னைப் போன்ற ஆசான்கள் இருக்கும் போது, அவர்கள் அதைக் கற்காமல் இருக்க முடியாது" என்றேன் புன்னகையோடு. அது அவனைச் சந்தோ சப்படுத்த, எனக்காக மிகப் பிரமாதமான எலுமிச்சம் பழ ஜூஸுக்குச் சொல்லி அனுப்பினான். ஆக, இங் குதான் நூர்ஜஹான் விஞ்ஞான முறைப்படி கற்பதும், பயிற்சி எடுப்பதும் நடக்கிறது. நிஜாமியின் நேரடி மேற் பார்வையில் அவளுக்கு வியாபாரத் தந்திரங்கள் சொல் லிக் கொடுக்கப்படுகிறது. தொலைபேசியில் பேச்சை முடித்துக் கொண்டு, நூர்ஜஹான் நாங்கள் இருந்த அறைக்குள் நுழைய, நாங்கள் சந்தித்துக் கொண்டோம் - ஆனால் மிகவும் இயல்பாக. என்னுடைய எண்ணம் என்னவாக இருந்ததென்றால் இந்தக் குமரி வேகமாக மங்கையாக வளர்ந்து கொண்டிருக்கிறாள். அவளின் உதட்டில் உள்ள புன்னகையும், அவளுடைய சிரிப் பும் இப்போதே வியாபாரத் தன்மையோடு மாறியிருந் தது. மேலும் அவளிடம் பெருத்துப் போவதற்கான தன் மையையும் காண முடிந்தது. இருந்தாலும் நிஜாமியின் மாணவிகளில் மிகவும் திறமை பெற்றவளாக, தன்னை

நிரூபிக்கப் போகிறாள் என்பதில் எந்தச் சந்தேகமும் கிடையாது.

ஆனாலும் விதி வேறு விஷயங்களை அதனுடைய மண்டைக்குள் வைத்திருந்தது. மும்தாஜ் சாந்தியைப் போலவே நூர்ஜஹானும் அவனுடைய பிடிக்குள்ளே இருந்துகொண்டு, அவனுடைய அதிகாரத்திற்குக் கட் டுப்பட வேண்டும் என்பதே நிஜாமியின் எண்ணமாய் இருந்தது. அவன் ஓய்வு பெற்ற பைத்தியக்காரன் போல், அந்த இளம் பெண் அவனது கம்பெனியின் பகுதி யாய் இருக்க வேண்டும் என்று விரும்பினான். உதா ரணத்திற்கு மும்தாஜ் சாந்தியின் சம்பாத்தியம் முழுக்க நிஜாமியின் பாதுகாப்பில்தான் இருந்தது. சந்தையைப் பொறுத்தமட்டில் மும்தாஜ் சாந்தியைக் காட்டிலும் நூர் ஜஹானின் மதிப்பு மிக அதிகமானது என்பது தெளி வாகத் தெரிந்தது. இந்தப் பெண்ணிற்கு எப்படிப்பட்ட எதிர்காலம் காத்திருக்கிறது என்பதை நிஜாமி போன்ற சூழ்ச்சிப் புத்திக்காரன் அறிய முடியாதது இல்லை. இந் தப் பட்டாம்பூச்சியைத் தன்னுடைய வலையில் பிடித்து வைத்திருக்க வேண்டும் என்று அவன் எண்ணியது இயற்கைதானே.

லாகூர் பஞ்சோலி ஸ்டூடியோவில் (அங்குதான் 'காந் தான்' படப் பிடிப்பு நடந்தது) ஷௌகத்துக்கும் நூர் ஜஹானுக்கும் தொடர்பு இருந்தது. அங்கு நீதிமன்றத் தில், ஒரு வழக்கின் விசாரணையின்போது அவளுக் கும் ஷௌகத்துக்கும் நெருங்கிய உறவு ஏதுமில்லை என்றும், அவன் தன்னுடைய சகோதரன் போலத்தான் என்றும் உறுதி அளித்திருக்கிறாள். அவளுடைய, இந்த நீதிமன்றச் சகோதரன் இந்தப் பிரம்மாண்டமான நகரத் தில், இந்தியாவின் ஹாலிவுட்டான பம்பாயில் இப்போது இருக்கிறான். ஷௌகத்திடம் நூர்ஜஹானைச் சந்தித் தது பற்றி பின்னர் நான் சொன்னபோது, அவர்களுக்கி

டையே இருந்த உறவு பற்றியோ, இன்று அந்த உறவு மோசமான நிலையில் இருப்பது பற்றியோ நான் அறிந் திருக்கவில்லை. நான் வெறுமனே நிஜாமியின் வீட்டில் அவளைச் சந்தித்தேன் என்று மட்டுமே சொன்னேன். இது சுவாரஸ்யமான வம்புப் பேச்சே தவிர வேறு ஒன்று மில்லை. ஆனால் என் உதடுகளிலிருந்து இந்த வார்த் தைகள் வெளியேறிய அடுத்த நொடியில், மோசமான மான் மார்க் விஸ்கியைக் கொண்ட கண்ணாடிக் குவ ளையை மேஜை மீது மிக வேகமாக வைத்து, "அவள் எக்கேடு கெட்டு ஒழியட்டும்" என்று கத்தினான். நான் மிகவும் சாதாரணமாக, "எனக்கும் அதில் சந்தோசம் தான். ஆனால் நினைவில் வைத்துக்கொள். உன்னு டைய 'காந்தானில்' கதாநாயகியாக நடித்திருக்கிறாள்" என்றேன். ஷௌகத் நான் வைத்த பொடியைப் புரிந் துகொண்டு - உருதுவில் காந்தான் என்றால் குடும்பம் - "மண்ட்டோ நீ ரொம்ப குறும்புக்காரன். ஆனால் அது அப்படித்தான். அவளைப்பற்றி நான் எதையும் தெரிந்து கொள்ள விரும்பவில்லை. உண்மைதான். அவள் பம் பாயில் தான் இருக்கிறாள். அந்தத் தேவிடியா இங்கு வரை என்னைத் துரத்தி வந்திருக்கிறாள். ஆனாலும் அவளோடு எந்தத் தொடர்பும் வைத்துக்கொள்ள நான் விரும்பினவனில்லை" என்றான்.

ஆனால் கமால் அம்ரோஹி அவளோடு தொலைபே சியில் பேசிக்கொண்டிருந்ததையும், நிஜாமி அவர்கள் இருவரையும் ஒன்று சேர்க்க முயன்று கொண்டிருப் பதையும் அவனிடம் சொன்னபோது, அக்கறை காட்டா தது போல் பாசாங்கு செய்தாலும், எனக்குத் தெரியும் அது அவனை மோசமாகத் தாக்கியது. அவன் உடன டியாக மிர்ஸா முஸாரஃப்பை வெளியே அனுப்பி, ஒரு 'பின்ட்' மான் மார்க் விஸ்கி வாங்கி வரச் சொன்னான். இரவு வெகு நேரம் வரை நாங்கள் குடித்துக் கொண்

டிருந்தோம். இடையிடையே நீண்ட மௌனங்களுக்குப் பிறகு நூர்ஜஹானின் பெயர் பேச்சு வாக்கில் வந்து போகும். என்னைப் பொறுத்தவரை ஷௌகத் இன்னும் அவள் மீது ஆசை கொண்டுள்ளான் என்பது தெளிவாயிற்று. இந்தச் சகோதரன் சமாச்சாரம் எல்லாம்

வழக்கறிஞர்களின் மயிர் பிளக்கும் வாதமே தவிர வேறு எதுவும் இல்லை. அவன் இன்னும் அவனுடைய குட்டி பாடல் இளவரசி, அவனது கரங்களில் தவழ்ந்து கிடக்க, ஒருவர் மற்றொருவரிடம் சாகாவரம் பெற்ற காதலைச் சத்தியம் செய்து கொடுத்த அந்த இரவுகளை நினைத்துக் கொண்டிருக்கிறான். ஒரு நாள் சற்றும் எதிர்பாராத சமயத்தில் ஷௌகத்திடம், "ஒப்புக்கொள்... நீ இன்னும் நூர்ஜஹான் மீது காதல் கொண்டிருக்கவில்லையா?" என்று கேட்டேன். ஷௌகத் சிகரெட் புகையைத் தட்டிவிட்டு, மிகவும் சுயபிரக்ஞை பெற்ற நிலையில், "ஆமாம்... ஆனால் அவள் நரகத்திற்குப் போகட்டும். சிறிது காலத்தில் அவளை முழுமையாய் மறந்து விடுவேன்" என்றான். ஆனால் விதி தீர்மானித்திருந்தது அப்படியல்ல.

'சன்ரைஸ் பிக்சர்ஸின்' உரிமையாளர் சேட் வி.எம்.வியாஸ் ஓர் ஒப்பந்தத்தை ஷௌகத்துக்குக் கொடுக்க, அதை அவன் ஏற்றுக் கொண்டான். வியாஸ் முன்னரே நூர்ஜஹானை அவருடைய ஒரு திரைப்படத்திற்கு ஒப்பந்தம் செய்து வைத்திருந்தார். வியாஸ் பற்றி சில வார்த்தைகள்: அவர் தபேலா வாசிப்பவராகத்தான் தன் வாழ்க்கையைத் தொடங்கினார். ஒளிப்பதிவு கூலியாக முன்னேற்றம் பெற்று, பின்னர் ஒளிப்பதிவாளரானார். அடுத்து அவரைப்பற்றி அறிந்தது அவர் ஓர் இயக்குநர். மேலும் ஒரு பெரிய பாய்ச்சலில் பெரிய தயாரிப்பாளர்களில் ஒருவரானார். அவர் அத்தனை மெலிந்திருந்தார். துருத்திக் கொண்டிருக்கும் விலா எலும்புகள் வெளியே

தெரியாமலிருக்க, சட்டைக்குள் தடித்த பனியனை அணிந்து கொள்வார். கடினமான உழைப்பாளியான அவர், சந்தேகத்திற்கு இடமில்லாமல் புத்திசாலியான மனிதர்தான். காலையிலிருந்து இரவு வரை கொஞ்ச மும் அசதியை வெளிக் காட்டாமல் உழைக்கக்கூடிய வர். வியாஸ் பற்றி இன்னும் ஒரு விசயம். ஒரு திரைப் படம் தயாரிப்பதற்கு அவருடைய சொந்தப் பணத்தை எப்போதும் முதலீடு செய்ததே கிடையாது. ஒரு படத்தை முடித்தவுடன், அடுத்த படத்தைப் பற்றி அறிவிப்பு செய்து பெரிய நட்சத்திரங்களை ஒப்பந்தம் செய்து கொள்வார். அந்தக் கட்டத்தில் படம் பற்றி எதுவுமே இருக்காது. கதை கூட இருக்காது. பணம் முதலீடு செய்யப்போவது யாரென்றும் தெரியாது. இருந்தாலும், பெரிய நட்சத் திரங்களைத் தூண்டில் இரையாக, இப்படியும் அப்படி யும் ஆட்டும்போது, எவனோ ஒருவன் அதில் சிக்கிக் கொள்ள, வியாஸ் வேலையைத் தொடங்க அவனை முதலில் பணம் போடச் சொல்லுவார். பிறகு காளியின் பக்தரான சேட் வியாஸ், கடவுளுக்கு நன்றி தெரிவித்து விட்டுத் தயாரிப்பு வேலையைத் தொடங்குவார்.

நூர்ஜஹான் பம்பாயில் காலடி வைத்தவுடனேயே, அவளோடு ஒப்பந்தம் போடக் காரணம், காந்தானின் வெற்றிக்குப் பிறகு அவளுடைய பெயர் நிறைய முத லீட்டாளர்களை முதலீடு செய்யத் தூண்டும் என்பதால் தான். அத்தோடு அந்தப் படத்தின் இயக்குநரும் நக ரத்தில்தான் இருக்கிறான் என்று தெரிந்தவுடன், தன்னு டைய ஆட்களை அவனுக்குப் பின்னால் அனுப்பி, பல முறை பேச்சு வார்த்தை நடத்தி இறுதியாக வரவிருக்கும் படத்திற்கு அவனோடு ஒப்பந்தம் செய்து கொண்டார்.

அது எப்படிப்பட்ட படமாக இருக்கும் என்றோ, அதன் கதை என்னவாக இருக்கும் என்றோ ஒருவருக்கும் தெரியாது. ஆனாலும் நூர்ஜஹான் மற்றும் ஷௌகத்

துடன் அவர் போட்டிருந்த ஒப்பந்தப் பத்திரத்தைக், காற்றில் சுற்றி ஆட்டிய போது, கொஞ்சமும் சிரமமில் லாமல் அவரால் பணத்தைப் புரட்ட முடிந்தது. விதி சில சமயங்களில் விசித்திரமான விளையாட்டுகளை விளையாடும். நூர்ஜஹான் 'சன்ரைஸ் பிச்சர்ஸ்-க்கு' வந் திருப்பதை ஷௌகத்தும் அறிந்திருக்கவில்லை. 'தன் னுடைய சகோதரன்' என்று நீதிமன்றத்தில் அவளால் அழைக்கப்பட்டவன், அதே கம்பெனியில் இருப்பதை அவளும் அறிந்திருக்கவில்லை.

இவர்கள் இருவரும் ஒன்று சேர்வது நீண்ட நாட் களுக்கு இரகசியமாக இருக்க முடியாது. விஷயம் வெளியே வந்தபோது அது நிஜாமியைக் கவலை கொள்ள வைத்தது. காரணம், நூர்ஜஹான் மற்றும் கமால் அம்ரோஹிக்கு அவன் வைத்திருந்த திட்டத் திற்கு இடைஞ்சலாக அது இருந்தது. நூர்ஜஹானின் 'காப்பாளன்' என்று அவனுக்கு இருந்த உரிமையை முன் நிறுத்தி இவர்கள் இருவரும் ஒன்று சேர்வது தனக்கு ஏற்புடையதல்ல என்று சேட் வியாஸிடம் தெரிவித்தான். ஆனாலும் குஜராத்தியான வியாஸ், பஞ்சாபிகளைக் காட்டிலும் எல்லாவிதத்திலும் புத்திசாலி என்பதால், அவனிடம் பேசி இந்த ஏற்பாட்டிற்கு அவனுடைய ஆசி கிடைக்கு மாறு செய்தார். இன்னும் சொல்லப்போனால், ஷௌகத் படத்தில் நூர்ஜஹான் நடிப்பதில் பெரும் உற் சாகம் கொண்டு, வியாஸ் தன்னுடைய சகோதரன் என்று அறிவித்ததோடு, அவருடைய அலுவலகத்தில் மிகுந்த சந்தோசத்தோடு இந்த ஏற்பாட்டிற்காக அவரோடு கை குலுக்கினான்.

அவரவர் காரணங்களுக்காக இருவரும் சந்தோஷப் பட்டார்கள் - தனக்கு வேண்டியது கிடைத்த காரணத் தால் வியாஸும், மிகவும் சக்தி வாய்ந்த பணக்கார மனிதரின் நல்லெண்ணத்தைப் பெற்ற காரணத்திற்காக

நிஜாமியும். சேட் வியாஸ் ஆச்சாரமான வைண வன். இல்லையென்றால் அன்று சாயந்திரமே அவரை அழைத்து மும்தாஜ் சாந்தியின் நேர்த்தியான கரங்க ளால் சமைக்கப்பட்ட மாட்டுக்கறியும் புலாலும் விருந் தாக அளிக்கப்பட்டிருக்கும். சேட்டுக்குக் குடிக்கும் பழக் கம் மட்டும் இருந்திருந்தால் அவனுடைய மெலிந்த மேலாளரை அனுப்பி கள்ளச்சந்தையில் இருந்து இரண்டு 'ஸ்காட்ச்' பாட்டிலை வாங்கி வரச் செய்திருப் பான். எப்படி இருந்தாலும் ஏற்பாடு முடிவானது. நிஜாமி தன் இதயத்தின் மீது கை வைத்தவாறு வியாஸிடம் பிரகடனப்படுத்தினான், "சேட்! நீங்கள் என்னை உங்க ளுடைய சகோதரன் என்று அழைத்ததால், பிரளயமே வந்தாலும், வானமே தலையில் விழுந்தாலும் தேவைப் படும்போதெல்லாம் பேபி நூர்ஜஹான் உங்களுடைய படப்பிடிப்புத் தளத்தில் இருப்பாள் என்று உறுதியளிக்கி றேன்."

இதற்கிடையில் நானும் வியாஸிடம் கதை எழுதிக் கொடுப்பதற்காகக் கையெழுத்திட்டேன். அது என்ன வாக இருக்கவேண்டும் என்று நானும் ஷௌகத்தும் முயற்சித்துக்கொண்டிருந்தோம். நாங்கள் எங்களுடைய முன் பணத்தைப் பெற்றுக்கொண்டோம். எவ்விதத்தி லும் குறையில்லாமல் எங்களிடம் ஒன்று இருந்தது என் றால் அது நாசிக் மான் மார்க் விஸ்கி தான். நகைச்சுவை நடிகர் மிர்ஸா முஸாரஃப், சௌலா மற்றும் ஷெகல் (இரு வரும் பின்னாளில் பிரபலமான இயக்குநர்களானார் கள்) அடிக்கடி எங்களோடு சேர்ந்து கொள்வார்கள். விஸ்கி தீர்ந்துவிட்டது என்றால் நாகப்பராவை நோக்கி சௌலா ஓடத் தொடங்குவான். வேறு ஏதேனும் தேவை இருந்தால் இருக்கவே இருக்கிறான் மிர்ஸா முஸாரஃப். மூன்று சுற்று முடித்தவுடன் எப்படியும் அவன் அழத் தொடங்கி, ஷௌகத்தின் கரங்களைப் பிடித்து முத்தம்

கொடுத்து, கடந்த காலங்களில் ஷெளகத்துக்கு எதிராக அவன் ஏதேனும் செய்திருப்பதாக அவன் நினைத்தால் அதற்காக அவனை மன்னித்து விட வேண்டும் என்று கெஞ்சத் தொடங்கி விடுவான். "எல்லாம் பொய்... எல் லாம் பொய்..." என்று சொல்லத் தொடங்குவான். பிறகு புதிதாகத் திருமணம் செய்து கொண்ட மனைவிக்காக அழுவான். அதனைத் தொடர்ந்து பாடத் தொடங்கு வான். இவை எல்லாமே ஏமாற்று வேலை தான் என்றா லும் திரைப்பட உலகம் அப்படித் தான் இருந்தது.

சேட் வியாஸ் படப்பிடிப்பைத் தொடங்கிவிட்டார் என் றாலும் இதுவரை எடுக்கப்பட்ட காட்சிகளில் நூர் ஜஹான் சம்பந்தப்பட்டது ஏதுமில்லை. அதா வது ஷெளகத்தும் நூர்ஜஹானும் இன்னும் சந்தித்துக் கொள்ளவில்லை. ஒரு நாள் ஸ்டூடியோ அறிவிப்புப் பல கையில் அன்று இரவு நூர்ஜஹான் படப்பிடிப்பில் கலந்து கொள்வாள் என்ற செய்தி இருந்தது. அப்போது நான் பிரபலமான இசையமைப்பாளனும் என் நெருங்கிய நண்பனுமான ரஃபீக் கஸ்நாவி தங்கியிருக்கும் சிவாஜி பூங்கா பகுதியில் இருந்தேன் என்பது எதேச்சையாக நடந்த ஒன்றுதான். கஸ்நாவி பெற்றிருந்த ஒவ்வொரு 'டை' யிலும் காதல் முடிச்சு போடப்பட்டுள்ளது - அவன் பெரிய அளவில் அதைச் சேகரித்து வைத்திருந்தான். அவன் என்னுடைய நண்பன் என்பதால் எங்களுக்கி டையே எவ்விதமான சம்பிரதாயங்களும் கிடையாது. நான் அவன் வீட்டிற்குள் நுழைந்தபோது பெரும் கூட் டம் அங்கு இருந்தது. சோபாவில் அவனுடைய சமீபத் திய மனைவி குர்ஷித் என்று அழைக்கப்பட்ட அனுராதா அமர்ந்திருக்க, அவளுக்குப் பக்கத்தில் நூர்ஜஹான் அமர்ந்திருந்தாள். நிஜாமி ஒரு நாற்காலியில் அமர்ந்தி ருந்தான். பிரபலமான இந்துக் கோயிலான சோமநாதர் ஆலயத்தைச் சூறையாடிய கஜினி முகமது பரம்பரையில்

வந்தவன் போல, இன்றைய சோமநாதர் ஆலயத்தைச் சூறையாடுவதற்குத் தன்னைத் தயார்படுத்திக் கொள்ப வன் போல் ரஃபீக் கஸ்நாவி தரையில் அமர்ந்திருந்தான்.

நூர்ஜஹான் மீது படையெடுக்க ரஃபீக் ஏதேனும் திட் டம் போட்டுக்கொண்டிருந்தான் என்றோ, நிஜாமியோ நூர்ஜஹானோ அதைப் பற்றி ஏதேனும் சந்தேகம் கொண்டார்களா என்றோ எனக்குத் தெளிவாகத் தெரி யவில்லை. கடவுளுக்கு மட்டுமே தெரியும். எந்த நிமிட மும் மும்தாஜ் சாந்தியும் வரலாம் என்று நிஜாமி என்னிடம் தெரிவித்தான். எனக்குக் கொஞ்சம் திகைப்பாகத் தான் இருந்தது. ஸ்டுடியோவில் படப்பிடிப்பு இருக்கும் போது, இங்கு எப்படி இந்தக் குடியும் கொண்டாட்டங்க ளும் முழு மூச்சில் சாத்தியம்? நிஜாமி கையில் கண்ணா டிக் குவளை ஒன்றைப் பிடித்திருந்தான், நூர்ஜஹான் பிடித்திருந்ததில் வண்ணமான திரவம் ஏதோ இருக்க, அதை மிகவும் நளினமாக உறிஞ்சிக் கொண்டிருந்தாள். குர்ஷித் என்று அழைக்கப்பட்ட அனுராதா, நேர்த்தியான குடிகாரி போல் நீண்ட மடக்குகள் எடுத்துக் கொண்டி ருந்தாள். அயாஸ் என்ற சிறுவன் மீது காதல் கொண்ட, முகமது பிறந்த மண்ணான கஸ்நாவியிலிருந்து வந்த ரஃபீக் ஆபாசமான கதைகளைச் சொல்லிக்கொண்டி ருந்தான். என்னை வரவேற்கும் விதமாக தாராளமாக என்னை வசவு பாடினான். ஆனால் உடனடியாகத் தன் னுடைய போக்கை மாற்றிக்கொண்டு மிகவும் அமைதி யாக, "என் அன்பே வா, தயவு செய்து இங்கு வந்து உட்காரு" என்றான். அவன் நூர்ஜஹானைப் பார்த்தான். பிறகு என்னிடம், "உனக்கு இவளைத் தெரியுமா?" என்று கேட்டான். "தெரியும்" என்று பதில் தந்தேன். ரஃபீக்கால் நான்கு சுற்றுக்கு மேல் எப்போதும் முடிக்க முடிந்ததே யில்லை. ஏற்கெனவே அவன் நான்கு சுற்று முடித்திருந் ததால் குழறியபடி, "இல்லை, உனக்கு எதுவும் தெரி

யாது மண்ட்டோ. இது நூர்... நூர்ஜஹான்.. நூர் என்றால் ஒளி. அவள் இந்த உலகத்திற்கான ஒளி மட்டுமல்ல, இதயத்தின் அமுதமும் அவள்தான். கடவுள் மீது சொல் கிறேன், சொர்க்கத்தில் உள்ள எந்த தேவதையைக் காட்டிலும் இவள் இனிமையான குரலைப் பெற்றிருக்கி றாள். இவளின் பாட்டை மட்டும் எந்தத் தேவதையாவது கேட்க நேரிட்டால், இவள் மீது அத்தனை பொறாமை கொண்டு இந்தப் பூமிக்கு ஓடோடி வந்து இவளுடைய குரல் நாளங்களை அழிப்பதற்காகவே ஏதேனும் குடிக் கக் கொடுத்திருப் பாள்." என்றான்.

இந்தப் புகழ்ப் பாலங்களை அவன் எதற்காகக் கட் டுகிறான் என்று எனக்குத் தெரியும். பின்னால் இதைப் பயன்படுத்தி அவளுடைய படுக்கைக்குப் போக விரும் புகிறான். நூர்ஜஹானுக்கு அவன் மீது எந்த ஈடுபாடும் இல்லை என்பதைக் கவனித்தேன். அவன் பேசுவதை அவள் கேட்டுக் கொண்டிருந்தாலும், அவள் முகத்தில் அக்கறை காட்டாத புன்னகை அவ்வப்போது தோன்றி மறையும். ரஃபீக் சரியான கஞ்சன் என்றாலும் அன்று அளவுக்கு அதிகமாகவே தாராளக் குணம் கொண்டவ னாக இருந்தான். புட்டியில் இருந்து ஒரு பெரிய அளவு ஊற்றி என்னிடம் கொடுத்து, ஒரே மடக்கில் நான் அதைக் குடித்து விட வேண்டும் என்றும் அப்போது தான் அடுத்த சுற்றுக்கு ஊற்ற முடியும் என்றும் வற் புறுத்தினான். எல்லோரும் குடித்துக் கொண்டிருந்தார் கள். ஆனால் நூர்ஜஹான் மட்டும் அதிகத் தண்ணீர் கலந்து, மலரில் இருந்து தேனை உறிஞ்சும் தேனீயைப் போல் மிக நிதானமாக உறிஞ்சிக் கொண்டிருந்தாள். ரஃபீக் புகழ்ப் பாலங்கள் கட்டுவதை நிறுத்தவில்லை. ஏனெனில் முன்னர் அவன் கட்டியதெல்லாம் நொறுங்கி விழுந்துவிட்டன. அப்போது திடீரென்று தொலைபேசி அலறியது.

அவளுடைய மென்மையான விரல்களால் தொலை பேசியை எடுத்த குர்ஷித், ஏமாற்றம் அடைந்தது போல் காணப்பட்டாள். பிறகு தொலைபேசியின் வாயைத் தன் கைகளால் மூடியபடி, இணைப்பில் இருப்பது சேட் வியாஸ் என்றும், நூர்ஜஹான் எங்கிருக்கிறாள் என்று கேட்பதாகவும் தெரிவித்தாள். "அன்புள்ள மகளே, நூர் ஜஹான் இங்கில்லை என்று அவனிடம் சொல்" என்று நிஜாமி சொல்ல, குர்ஷித்தும் ஏறக்குறைய அதே வார்த் தைகளில் சேட் வியாஸிடம் சொன்னாள். குர்ஷித் தொலைபேசி இணைப்பைத் துண்டித்தவுடன், "ஸீதன், போய் ஹார்மோனியத்தை எடுத்து வா... சேட் வியாஸ் நரகத்திற்குப் போகட்டும்" என்றான் ரஃபீக். அவள் அடுத்த அறைக்குச் சென்று, வெகு சீக்கிரத்தில் ஆர் மோனியத்தோடு திரும்பி வந்தாள். ரஃபீக் அதன் மேல் மூடியைத் தள்ளிவிட்டு சுருதிக் கட்டையை அழுத்தி, ஏதோ சுருதி பிடித்தான். இதுதான் அவனுடைய பாணி - கண்கள் பாதி

மூடியிருக்க, அப்போது தான் அவள் தொண்டை யில் இருந்து வெளிப்பட்ட சுருதியில் தன்னை மறந் தது போல், "ஆஹா.. ஆஹா.. கடவுள் போற்றுதலுக்கு ரியவன்... ஓ!" என்று திரும்பத் திரும்பச் சொன்னான். ஒவ்வொரு ஸ்வரமும் அவனைப் பேரானந்த நிலைக் குக் கொண்டு செல்வது போல் பார்ப்பவர்களுக்குத் தோன்றும். இதுதான் அவனுடைய திறமை - அவனு டைய ரசிகர்களை நிகழ்ச்சி தொடங்குவதற்கு முன்னரே பெரும் கரகோஷத்தை எழுப்ப வைப்பான். அவன் கவனம் முழுக்க நூர்ஜஹான் மீது இருந்ததால் அன்று அவன் ஏதும் பாடவில்லை. ஒரு சமயத்தில் ஒரு ஸ்வ ரத்தை எழுப்பி, அவனுடைய கண்களைப் பாதி விரித் துக் கொண்டு அவளிடம், "நூர்... ஏதாவது பாடு... ஓ!... என்னவொரு புனிதமான ஸ்வரம்" என்றான்.

நீங்கள் திரையில் நடிகர்களும் நடிகைகளும் அவர் களுக்குக் கொடுக்கப்பட்ட கதாபாத்திரங்களில் நடிப்ப தைப் பார்த்திருப்பீர்கள். நான் இரத்தமும் சதையுமான நடிப்பனுபவத்தைப் பெறுவதற்கு உங்களை அழைத்துச் செல்கிறேன். நூர்ஜஹான் ஹார்மோனியத்தை எடுத்து சோபாவில் தனக்குப் பக்கத்தில் வைத்துக் கொண் டாள். பாதி அளவிருந்த விஸ்கிக் குவளையோடு குர் ஷித் வந்து அவளுக்குப் பக்கத்தில் அமர்ந்து கொண் டாள். ரஃபீக் கஸ்நாவி தரையில் சப்பணம் போட்டு அமர்ந்துகொண்டு காதல் நோய் பிடித்த கண்களோடு நூர்ஜஹானைப் பார்த்துக் கொண்டே, அவளுடைய வாய் திறப்பதற்கு முன்பாகவே தன்னுடைய தலை மற் றும் உடல்களை இப்படியும் அப்படியுமாக ஆட்டத் தொடங்கினான். அவனுக்கு அடுத்தாற்போல் நாற்காலி யில் அமர்ந்திருந்த அந்தக் கிழட்டுச்சாத்தான் நிஜாமி, அவனுடைய இரண்டாவது சுற்றைக் குடித்துக் கொண் டிருந்தான்.

நூர்ஜஹான் பாடத் தொடங்கினாள். பீலோ ராகத் தில் தும்ரி இசையில் - 'உன் கண்களைக் கருமை யாக்க எந்த மையும் அவசியமில்லை' என்ற பாடல் அது. அப்போது போர்ட்டிகோவில் ஒரு கார் வந்து நிற்கும் சத்தத்தை நாங்கள் எல்லோரும் கேட்டோம், அதிலி ருந்து இறங்கி நேராக உள்ளே வந்தவர் வேறு யாரும் இல்லை, சேட் வியாஸ். ஒரு கணப்பொழுது எல்லோ ரும் அதிர்ச்சியுற்றுத்தான் போனோம் என்றாலும் நிஜாமி நிலைமையைச் சீக்கிரத்தில் ஒரு கட்டுப்பாட்டிற்குக் கொண்டு வந்தான். அவன் வியாஸ் வந்ததைப் பார்க் காதவன்போல் பாவனை செய்து குர்ஷித்திடம் "நீ என்ன செய்வதாக நினைத்துக் கொண்டிருக்கிறாய்? அவள் எப்படிப்பட்ட வலியால் அவஸ்தைப்பட்டுக் கொண் டிருக்கிறாள் என்று உனக்குத் தெரியாதா?. ஆனால்

நீ அவளைப் பாடவேண்டும் என்று வற்புறுத்துகிறாய்... பாரு! அவள் ஒரு வரியைக் கூட பாடி முடிக்கவில்லை அதற்குள் மயங்கி விழுந்து விடுவது போல் இருக்கிறாள்" என்று கத்தினான். பிறகு நூர்ஜஹானைப் பார்த்து மிகவும் கவலை கொண்ட குரலில், "படுத்துக்கொள் நூர்ஜஹான், படுத்துக்கொள்" என்றான். அவள் அதைச் செய்வதற்காகக் காத்திருக்காமல், அவனே முன்னே வந்து அவள் சோபாவில் சாய்வதற்கு உதவியும் செய்தான். நூர்ஜஹான் பெரும் வலியிலிருப்பது போல சத்தமான முனகல் கொடுத்தாள். கவலை கொண்டது போல் முகத்தை வைத்துக் கொள்ள முயன்றபடியே ரஃபீக் எழுந்து கொண்டான். அடுத்து நிஜாமி குர்ஷித்திடம், "எதற்காகக் காத்திருக்கிறாய் ஷீதான்... போய் சுடுதண்ணீர் கொண்ட புட்டியைக் கொண்டு வா. மோசமான வலியில் அவள் இருக்கிறாள்" என்றான்.

வேகமான அடி வைத்து ஷீதான் அடுத்த அறைக்குள் நுழைந்தாள். இப்போது நூர்ஜஹான் மெல்லிய குரலில் புலம்பத் தொடங்க, நிஜாமி அவளைச் சமாதானப்படுத்தி விட்டு சேட் வியாஸ் பக்கத்தில் அமர்ந்து கொண்டு, "நேற்றிலிருந்து மோசமான வலியால் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறாள். அவள் என்னிடம், 'மாமா, என்னால் படப்பிடிப்புக்குப் போக முடியாது என்றே நினைத்தேன்' என்றாள். ஆனால் நான் அவளிடம், 'இல்லை குட்டி, இது மோசமான சகுனமாக இருக்கும். பம்பாயில் இதுதான் உன்னுடைய முதல் படம். அதோடு படப்பிடிப்பின் முதல் நாள்... ஆனால் அதையெல்லாம் மறந்துவிடு... எது முக்கியமென்றால் நான் சேட் வியாஸை என்னுடைய சகோதரன் என்று அழைத்து விட்டேன்... நீ போய்த்தான் ஆக வேண்டும்... நீ செத்தால் கூட' என்றேன். அதனால் அவளுக்குச் சற்று உதவியாக இருக்கும் என்று ரஃபீக்கிடம் இருந்து கொஞ்சம் பிராந்தியைக்

கடன் வாங்க இங்கே வந்தோம். அத்தோடு அவனுடைய காரில் எங்களை ஸ்டுடியோ வரை கொண்டு விடச் சொல்லிக் கேட்கலாமே என்று... நீங்கள் என் சகோதரன் சேட்" என்றான்.

எல்லோரும் அமைதியாய் இருந்தது போலவே சேட் வியாஸும் அமைதியாக இருந்தார். ரஃபீக் அவனுடைய நகத்தை மென்று கொண்டிருக்க, நான் கையில் விஸ்கியோடு இவையெல்லாம் என்னவென்று வியந்து கொண்டிருந்தேன். படத்தின் கதை என்னுடையது. இசை ரஃபீக் கஸ்நாவியுடையது. எங்களுடைய முதலாளி சேட் வியாஸ், குடிக்கும் இசைக்கும் இடையே எங்களைப் பிடித்து விட்டார். நிஜாமி தொடர்ந்து சேட் வியாஸிடம் அவர்கள் இருவரும் சகோதரர்கள் என்பதால் அவர்களுக்கிடையே தவறான எண்ணங்கள் ஏதும் இருக்கக்கூடாது என்று சொல்லிக் கொண்டிருந்தான். குர்ஷித் சுடுதண்ணீர் புட்டியோடு தோன்றி, அதை நூர் ஜஹான் வயிற்றில் வைக்க, அவளும் அது வலியைச் சற்று குறைத்து விட்டது போல் பாவனை செய்தாள். ஏறக்குறைய எகிப்திய கல்லறைக் கோபுரங்களுக்கு அருகில் சிறகுகள் உடைய பெண்முக சிங்க உருவச் சிலையின் முகம் போல் மாறியிருந்த சேட் வியாஸிடம், "நீங்கள் இதற்காக இங்கு காத்திருக்க வேண்டிய அவசியமில்லை. நானும் ரஃபீக்கும் நூர்ஜஹானை ஸ்டுடியோவுக்கு அழைத்து வருகிறோம்" என்று நிஜாமி சொல்லிக் கொண்டிருந்தான். பிறகு உரத்த குரலில், "குர்ஷித்தும் உடன் வர வேண்டும் என்று நினைக்கிறேன். இந்தப் பெண்கள் சமாச்சாரங்களெல்லாம் பெண்களுக்குத்தான் தெரியும்" என்றான். சேட் வியாஸ் எழுந்து தன்னுடைய குல்லாவைப் போட்டு கொண்டு வெளியேறினார். எல்லோரும் நிம்மதிப் பெருமூச்சு விட்டார்கள். நூர்ஜஹான் அந்தச் சுடு தண்ணீர்ப் புட்டியை ஓரமாக வைத்து

விட்டு - அதிலிருந்தது உண்மையில் குளிர்ந்த நீர் தான், "ஆனால் நிஜாமி மாமா, நீங்கள் தானே இன்று நான் போகக் கூடாது என்று சொன்னீர்கள்?" என்று கேட்டாள். நிஜாமி மிகவும் அக்கறையோடு, "குட்டி, இங்க பார்! நான் இதைச் சொன்னது உன் நன்மைக்காகத்தான். முதல் நாளன்று தயாரிப்பாளரே நேரில் வந்து அழைக்காமல் நீயாகவே படப்பிடிப்புக்குச் சென்றால், அவன் உன்னை ஏய்க்கத் தொடங்கிவிடுவான். மும்தாஜிடம் கேட்டுப் பார். ஸ்டூடியோவில் இருந்து வண்டி வராமல் அவள் போனதே கிடையாது. அதோடு டிரைவரைக் குறைந்த பட்சம் ஒரு மணி நேரமாவது காத்திருக்க வைப்பாள். இத்தனைக்கும் ராய் பகதூர் சுனிலால் என்னுடைய நெருங்கிய நண்பன்தான். ஆனால் அதைப் பற்றியெல் லாம் நான் கவலைப்படுவது கிடையாது. எத்தனையோ முறை, மும்தாஜை அழைத்துச் செல்ல அவனே நேரில் வந்திருக்கிறான். கவலைப்படாதே! இப்பொழுது எல் லாம் ஒழுங்காக இருக்கிறது. வியாஸ் உன்னை அழைத் துச் செல்ல நேரில் வந்து விட்டான். உனக்கு உடம்பு சரி யில்லை என்றாலும் நீ போகிறாய். சேட் வியாஸ் இதை நினைவில் வைத்திருப்பான்" என்றான்.

தயாரிப்பாளர்களுக்கும் நடிகை, நடிகர்களுக்கும் உள்ள நுண்ணிய உறவை, நிஜாமி இன்னும் கொஞ் சம் நேரம் விளக்கிக் கொண்டிருந்தான். பேச்சு மெல்ல ஷௌகத் ஹுசைன் ரிஸ்வியை நோக்கி நகர்ந்தது. ஷௌகத்தோடு வேறு எந்தத் தொடர்பும் வைத்துக் கொள்ளக்கூடாது என்றும், அவளுடைய இதயத்தில் அவனுக்கான இடம் ஏதும் கூடாது என்றும் நூர்ஜ ஹானுக்குப் புரிய வைக்க நிஜாமி முயன்றுகொண்டி ருந்தான். அவனுடைய வழிகாட்டுதலின்படி இந் நாள் வரை செயல்பட்டு, பெரிய அளவிற்கு வெற்றிகள் பல கண்ட மும்தாஜ் சாந்தியின் பாதையைத்தான் அவ

ளும் பின்பற்ற வேண்டும் என்றான். இந்தச் சமயத்தில் நான் என்னுடைய தலையை உள்ளே நுழைத்தேன். காரணம் ஷெளகத் என்னுடைய நண்பன். அத்தோடு, நூர்ஜஹானைக் காதலிப்பதாகவும் என்னிடம் சொல்லி யிருக்கிறான். மிர்ஸா முஸாரஃப் அழைத்து வந்த பெண் கள் ஷெளகத்திற்கு ஏன் தேவைப்பட்டார்கள் என்று என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. அவர்களுடைய இதமான அணைப்பில் நூர்ஜஹானின் நினைவுகளைப் புதைக்கவே அவன் விரும்புகிறான். அத்தோடு எந்தப் பெண்ணோடு காதல் கொண்டிருக்கிறானோ, அவளை மறக்கவே, மூன்றாம் தரமான அந்த மான் மார்க் விஸ்கி யைக் குடித்துக்கொண்டிருக்கிறான்.

கடிகாரம் தயாரிப்பாளன்போல ஷெளகத், அவனு டைய தொழிலில் மிகச் சரியாக இருப்பான். எப்போ தும் எதையும் சரியாகவே செய்வான். அது சரியாகவே இருந்தாலும் அதை மேலும் சரி செய்யவே விரும்புவான். எதிர்பார்த்துக் கிடைக்காத எதற்கும் அவன் பொறுமை காட்டியது கிடையாது - சுவரில் நேராக அடிக்கப்படாத ஆணி, சரியாக நேரத்தைக் காட்டாத கடிகாரம் அல்லது சரியான மடிப்புகளோடு இல்லாத கசங்கிய டிரெளசர். அது அவனின் இயல்பு. ஒரு நல்ல கடிகாரம் சரியான நேரத்தைக் காட்டுவதற்கு அவசியமாக இருக்க வேண் டிய திட்டமிடுதலும், ஒழுக்கமும் அவனிடம் இயற்கையா கவே இருந்தது என்றாலும் நூர்ஜஹான் என்று வரும் பொழுது அவன் செயலிழந்து நின்றான். இதயம் என்று அழைக்கப்படும் அந்தக் கடிகாரத்தை எப்படி அவனால் சரி செய்ய முடியும்? வேறு ஏதேனும் ஒன்றாக அது இருந்திருந்தால் பூதக்கண்ணாடி மூலம் அதைப் பரி சோதித்துப் பார்த்து, அக்கு வேறு ஆணி வேறாகக் கழற் றிப்போட்டு மீண்டும் பிரித்துப்போட்ட எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து மிகத் துல்லியமாக வேலை செய்யும்படி

செய்திருப்பான். ஆனால் இது முற்றிலும் வேறுவிதமான சமாச்சாரம்.

அவளுடைய குரல் நாளங்களில் இருந்து மிகத் துல்லியமாகச் சுருதி பிடிக்கக்கூடியவளான நூர்ஜஹான், அவளுடைய இதயத்திலிருந்து ஷௌகத்தை வெளியேற்ற முடியாதவளாக இருக்கிறாள். இசை மேதை போல் மிக சுலபமாகக் 'காயலை'ப் பாடக்கூடியவள் என்றாலும், இளமையாகவும், வில்வமரம் போலவும் இருக்கும் ஷௌகத், அவளுடைய வாழ்க்கையில், கொடுத்த அந்தச் சந்தோஷமான கணங்களையும், ஆகச் சிறந்த இசை கூட உருவாக்க முடியாத கிளர்ச்சிகளை அவளுடைய உடலில் அவன் பாய்ச்சியது தான் இப்பொழுதெல்லாம் அவளுடைய மூளை முழுக்க நிரம்பியிருந்தது. உடல் ரீதியான ஏக்கங்களை மிகச் சரியாகப் பூர்த்தி செய்த மனிதனை எப்படி அவளால் மறக்க முடியும்?.

நான் ஷௌகத் பற்றி அவளிடம் சொன்னபோது, அக்கறை காட்டாதது போல் நடித்தாள். நான், "இங்க பார் நூர்ஜஹான், இதெல்லாம் முட்டாள்தனம். நீ ஒன்றும் வெளிக்காட்டுவது போல் உணரவில்லை. அது போலவே அந்தக் கழுதை ஷௌகத் சொல்வதில் ஒரு வார்த்தையைக்கூட நான் நம்பத் தயாராக இல்லை. ஒருவர் மற்றவரை குட்டிக்கரணம் போட்டுக் காதலிக்கிறீர்கள் என்றாலும் அப்படியில்லை என்று நிரூபிக்க நடிக்கிறீர்கள். 'முஸாவர்' பத்திரிகை அலுவலகத்தில் நேற்றுதான் உன்னைப் பற்றி பேசிக் கொண்டிந்தோம். அதற்கு முந்திய தினமும், மாலை வேளைகளில் நானும் ஷௌகத்தும் குடிக்க உட்கார்ந்தால் போதும், ஏதேனும் காரணத்தை முன்னிட்டு எங்களுடைய உரையாடலில் உன் பெயரை இழுத்து வருகிறான். நீயும் அப்படித்தான் இருக்கிறாய். அவன் பெயரை நீ உச்சரித்த போது ஓரிரு முறை உன் கண்கள் குளமானதை நான் பார்த்ததாகவே

நினைக்கிறேன். அவனும் அப்படித்தான் இருக்கிறான் என்று என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியும். இவை யெல்லாம் நல்லதற்கு இல்லை என்றே நினைக்கிறேன். நீ இல்லாமல் ஷௌகத் இருக்க முடியாது என்பதில் உறுதியாக இருக்கிறேன். அவன் மீது அப்படி என்ன தான் வசிய வலையை வீசியிருக்கிறாய்?" என்றேன்.

நூர்ஜஹான் பிரமை பிடித்தவள் போல், நான் சொல் வதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தாள். நான் மேலும், "பார் நூர்ஜஹான், உன்னை நீயே ஏமாற்றிக் கொள்ளாதே. நிஜாமி சாகிப் இந்த உலகத்திற்கு உகந்த அனுபவங்களைப் பெற்றவர் என்று எனக்குத் தெரியும். ஆனால் அவர் முன்வைக்கும் வழிமுறைகள் வாழ்க் கையின் மற்றத் துறைகளுக்கு வேண்டுமென்றால் சரி யாக இருக்கலாம். காதல் என்று வரும்பொழுது அவை கள்ள ரூபாய் நோட்டுகளாகவே நிரூபணமாகும்" என்று சொல்லி நிஜாமி பக்கம் திரும்பி, "நான் சொல்வது தவறா?" என்று கேட்டேன். நான் சொல்லிக் கொண்டி ருந்ததைத் தன்னை மறந்த நிலையில் கேட்டுக் கொண் டிருந்தவன், தீர்மானமாய் 'இல்லை' என்று தலைய சைத்தான். என்னோடு ஒத்துப்போனது மூலம் அவன் பெரும் தவறு செய்கிறான் என்று உணர்ந்தபோது அது காலம் கடந்ததாய் அமைந்தது. நூர்ஜஹானின் கண் களில் கண்ணீரை என்னால் பார்க்க முடிந்தது. நான் மேலும் தொடர்ந்தேன்: "நீங்கள் இருவரும் முட்டாள்கள். ஒருவரை ஒருவர் காதலிக்கிறீர்கள். என்றாலும் அதை நீங்கள் மறைக்கப் பார்க்கிறீர்கள். நான் கேட்கிறேன், யாரிடமிருந்து? நூர்ஜஹான் இந்த உலகத்தால் இரண்டு இதயங்கள் காதல் கொள்வதைப் பொறுத்துக்கொள்ள முடியாது என்பதால், மனிதர்கள் காதல் வலையில் விழக்கூடாது என்றா அர்த்தம்?

நான் ஒத்துக்கொள்கிறேன், மும்தாஜ் சாந்தியின் வாழ்க்கை பொறாமையை ஏற்படுத்தக்கூடியதுதான். மாமா நிஜாமியின் இரக்கமுள்ள அரவணைப்பில், அவள் மேலும் முன்னேறுவாள் என்பதில் எனக்குக் கொஞ்சமும் சந்தேகம் கிடையாது". இந்த இடத்தில் நான் மறுபடியும் நிஜாமி பக்கம் திரும்பி, "ஆனால் நீங்கள் இதையும் தெரிந்து கொள்ள வேண்டும் நிஜாமி சாகிப். நீங்கள் எல்லோருக்கும் மாமாவாக இருக்க முடியாது. நீங்கள் மும்தாஜுக்குக் கொடுக்கும் புத்திமதிகள் நூர்ஜஹானுக்கும் நன்மைதான் செய்ய வேண்டும் என்று அவசியம் ஏதுமில்லை. இவர்கள் இருவரும் வித்தியாசமான மனிதர்கள். நான் சொல்வது தவறா?" என்றேன்.

நான் சொல்வது எதற்கும் இல்லை என்று சொல்ல முடியாத நிலைக்கு நிஜாமியை அழைத்து வந்து விட்டேன். நான் தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தேன். நான் முடித்தபோது, ஷௌகத்தும் அவளும் ஒருவருக்கு ஒருவர் ஆனவர்கள் என்றும், அப்படி இல்லாதது போல் பாவனை செய்வது முட்டாள்தனம் என்றும் நூர்ஜஹான் ஏற்றுக்கொள்ளும்படி செய்துவிட்டேன். நிஜாமி கிளம்புவதற்கு எழுந்தபோது அவன் சந்தோஷமான மனிதனாக இல்லை. அவன் என் மீது மிகவும் கோபத்தோடு இருந்திருக்க வேண்டும் என்றாலும், அதை வெளிக்காட்டும் சுபாவம் அவனிடம் இல்லை. அவனால் செய்ய முடிந்ததெல்லாம் இதுதான்: நூர்ஜஹான் ஸ்டுடியோவிற்கு குர்ஷித்தோடு போக வேண்டும் என்றும், பச்சைத் தண்ணீருக்குப் பதிலாக சுடுதண்ணீர் புட்டியோடு போக வேண்டும் என்றும் அறிவுரை கொடுத்தான். அவள் இடைவெளி விட்டு விட்டு 'வலி' இருப்பதாகக் குறைப்பட்டுக் கொள்ள வேண்டும் என்றும் சொன்னான். நான் தற்சமயம் தங்கியிருக்கும் ஏற்பாட்டைப் பற்றி விசாரித்து, கூடிய சீக்கிரத்தில் எல்லா வசதிகளும் கொண்ட வீட்

டில் என்னை மாற்றுவதாக உறுதிமொழி கொடுத்தான். இன்னும் சொல்லப்போனால், அந்த வீட்டின் சாவி அவனுடைய மேலாளரிடம் இருக்கிறது. நான் அவரைத் தொடர்பு கொள்ள வேண்டும், அவ்வளவுதான். வண்டிக்கான எரிபொருள் எனக்குத் தேவைப்பட்டால், அதற்கும் ஏற்பாடு செய்யப்படும். இந்த ஏற்பாட்டிற்கு நான் சம்மதம் தெரிவிக்க வேண்டும் என்று அக்கறையோடு வேண்டிக்கொண்டான். கூடிய சீக்கிரத்தில் மாட்டுக்கறி வறுவலும் ஜானி வாக்கர் பிளாக் லேபிளும் கொண்டு என்னைச் சந்தோஷப்படுத்துவதாகவும் உறுதியளித்தான். நான் இவையெல்லாம் வேண்டாம் என்று நன்றி தெரிவித்தபோது, இந்த ஏற்பாட்டை நான் ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தினான். அதனால் நானும் சரி என்று சொன்னேன். ஆனாலும் எனக்குத் தெரியும், அடுத்த முறை அவனைச் சந்திக்க சென்றால் மாட்டுக்கறி வறுவலும் இருக்காது; பிளாக் லேபிள் விஸ்கியும் எனக்காகக் காத்திருக்காது. எப்படி இருந்தாலும் ஒன்று மட்டும் மிகத் தெளிவானது. அன்று மாலை நான் நிஜாமியின் ஆப்பிள் கூடையைக் கவிழ்த்து விட்டேன்.

அடுத்த சில நாட்களில் திரைப்பட இயக்குநர் கமால் அம்ரோஹி மீது நூர்ஜஹானுக்கு எந்த ஈடுபாடும் இல்லை என்றும் தெரிந்து கொண்டேன். அவனுடைய தொலைபேசி அழைப்புகளை ஏற்க மறுத்திருக்கிறாள். நிஜாமியின் இடத்திற்கு, விலை கொடுத்து வாங்கிய பழைய காரில் அவன் வரும்போதெல்லாம், வேறோர் அறையில் தன்னை மறைத்துக் கொண்டு அவனைத் தவிர்த்திருக்கிறாள். அவளைப்பற்றி என்னவெல்லாம் தெரிந்து கொள்கிறேனோ அதையெல்லாம் கடமை தவறாமல் ஷௌகத்திடம் தெரிவித்தேன் என்றாலும், அந்தச் சூன்யக்கார கிழவன் நிஜாமியிடமி

ருந்து அவளை விடுவிப்பது அவ்வளவு எளிதானதல்ல என்று நாங்கள் இருவரும் அறிந்துதான் இருந்தோம். இறுதியாக நாங்கள் ஒரு சிறு கூட்டத்திற்கு ஏற்பாடு செய்தோம். அதில் 'முஸாவர்' பத்திரிகையின் ஆசிரியர் நஸீர் லூதியான்வியும் கலந்துகொண்டார். அந்தக் கூட்டத்தில் கடற்கரைக்கு அருகில் உள்ள 'கேடல்' தெருவில் ஒரு வீட்டை வாடகைக்கு எடுப்பது என்று தீர்மானித்தோம். தரைத் தளத்தில் மூன்று படுக்கையறைகளும் பெரிய வரவேற்பறையும் மேலும் சில அறைகளும் கொண்ட வீடு ஒன்று கிடைத்தது எங்களின் அதிர்ஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும். அடல்ஃபி சேம்பரில் படுமோசமான வீட்டில் வசித்து வந்ததால், எரிச்சலும் சோர்வும் கொண்டிருந்த நஸீர், அந்தப் புது வீட்டில் ஓர் அறையை எடுத்துக்கொண்டு பாதி வாடகை கொடுப்பதாகச் சொன்னார். என் நினைவு சரியாக இருந்தால் மாதத்திற்கு ரூ. 175 அல்லது ரூ. 200 என்று நினைக்கிறேன். நாங்கள் எல்லாச் சாமான்களும் வாங்கி வந்து அந்த வீட்டை அழகாக ஏற்பாடு செய்தோம். ஷௌகத்தின் படுக்கையறை கடலைப் பார்த்து இருந்தது. இங்கிருந்து நிஜாமியின் வீடு 500 அடிகள் தொலைவில் தான் இருந்தது. எனக்குக் கொடுக்கப்பட்ட 'பொறுப்பை' மிகவும் சரியாகச் செய்து கொண்டிருந்தேன். அதாவது அவ்வப்பொழுது நிஜாமியின் வீட்டிற்குள் தலையை நுழைத்து, காதல் ஏக்கங்களோடு இரவுகளையும் பகல்களையும் கழித்துக் கொண்டிருக்கும் ஷௌகத் பற்றி நூர்ஜஹானுக்குச் சமீபத்திய தகவல்களைச் சொல்லிக் கொண்டிருந்தேன். நான் அவளிடம், அவள் செய்ய வேண்டியதெல்லாம் ஒரு சின்ன நடை போக வேண்டும் என்றும், அது அவளுடைய உடம்பிற்கு ஆரோக்கியத்தைக் கொடுப்பதோடு, அவளுடைய காதல் வாழ்க்கையில் பல சந்தர்ப்பங்களை உருவாக்கும் என்றும் சொல்வது உண்டு. சில சமயங்களில் நான் பெண்களைக் கூட்

டிக் கொடுக்கும் கிழவன் போல் உணர்ந்தேன். ஆனால் நண்பர்கள் வேறு எதற்காக இருக்கிறார்கள்!

இதில் விசித்திரம் என்னவென்றால், அந்த நாட்களில் நான் திருமணத்தைத் தீர்மானமாக எதிர்த்ததோடு, ஒரு நடிகையைத் திருமணம் செய்து கொள்வதை அதற்கு மேலும் எதிர்த்தேன். இரண்டு மனிதர்கள் ஒருவருக்கு மற்றொருவரைப் பிடித்திருந்தால் சேர்ந்து வாழ வேண்டும். அந்த உறவு சலிப்புற்றுப் போகும்போது அவரவர் வழியில் பிரிந்து செல்ல வேண்டும் என்றே நம்பினேன். ஆனால் ஷெளகத் எல்லாவற்றையும் கருப்பு வெள்ளையில் வைத்துப் பார்ப்பதையே விரும்பினான் - பரம்பரை சொத்து போல அவனின் மிச்சம் வாழ்க்கை முழுக்க அது அவனுக்குச் சொந்தமானதாக இருக்க வேண்டும். நூர்ஜஹான் அவனிடத்தில் வந்தாலும் சேர்ந்து வாழலாமே, தவிர திருமணம் செய்து கொள்ளக்கூடாது என்று அவனிடம் பேச முயன்று, அதை அவன் ஏற்றுக்கொள்வதில் வெற்றியும் பெற்றேன். என் நண்பன் ஷெளகத்துக்கு நான் செய்ய வேண்டியதை எல்லாம் செய்து முடித்த பின், எனக்குக் கொடுக்கப்பட்ட வேலையான 'நக்கூர்' படத்திற்குத் திரைக்கதை எழுதுவதில் இறங்கினேன். நான் அப்போது பைக்குல்லா பகுதியில் வசித்து வந்தேன். அது கேடல் தெருவில் இருந்து சற்றுத் தொலைவிலிருந்தது. இதற்கு அர்த்தம் எங்களுடைய சந்திப்பு அடிக்கடி நிகழவில்லை.

அந்த நாட்களில் நல்ல பீர் கைக்குக் கிடைப்பது இயலாத காரியமாகவே இருந்தது. ஒரு நாள் நான்கு, ஒன்றரை லிட்டர் அமெரிக்கன் பீர் புட்டிகள் என் கைக்கு வர, நான் அதை ஷெளகத்தோடு பகிர்ந்து கொள்ளலாம் என்று எண்ணினேன். அது காலை நேரம் என்றாலும் பீரோடு காலைச் சிற்றுண்டியை உண்பது ஒன்றும் மோசமான எண்ணமில்லை. நான் அவனுடைய வீட்

டிற்குள் நுழைந்தபோது, அது வெறிச்சோடிக் கிடந்தது. நஸீர் அன்றைய வேலைகளுக்காக வெளியே கிளம்பி விட்டார் போலும். நான் மெல்ல அடிமேல் அடி வைத்து ஷௌகத்தின் படுக்கை அறையை நோக்கி நகர்ந்து கதவைத் தட்டினேன். பதிலேதும் இல்லை. நான் மறு படியும் தட்டினேன் - இந்த முறை சற்று வேகமாக. ஷௌகத் தூக்கம் கலையாத குரலில், 'யாரது?' என்று சொல்வது கேட்டது. "மண்ட்டோ" என்று பதில் தந்தேன். "பொறு" என்றான். மூன்று நிமிடங்கள் கழித்துக் கதவு திறக்கப்பட, அந்த அறையில் இருந்த ஒரே கட்டிலில் நூர்ஜஹான் படுத்திருந்தாள். அவளுடைய கண்கள் ஏறக்குறைய சலவை செய்யப்பட்டது போல் பிரகாசமாக இருந்தது. ஷௌகத் ஓரளவிற்கு அசதியுற்றவன் போல் காணப்பட்டான். "சத்தார் கோட்டையா விழுந்து விட் டது?" என்று கேட்டேன். சத்தார் என்ற பதம், உருதுவில் சிலேடையாகப் பிட்டம் என்ற அர்த்தத்தில் உபயோகப் படுத்தப்படும். மேலும் நீண்ட நாட்கள் முற்றுகையிடப் பட்ட பின் விழுந்த கோட்டையின் பெயரும் அது தான். ஷௌகத் புன்னகைத்தான். "வா உட்கார்" என்றான். நான் ஒப்பனைக் கண்ணாடிக்கு முன் இருந்த ஸ்டூலை இழுத்துப் போட்டு உட்கார்ந்து கொண்டேன். போர் வைக்குள் இருந்த நூர்ஜஹான் வெற்றிகரமாக வெளி யேற முயன்று கொண்டிருந்ததை ஷௌகத் பார்த்தான். "வலைத் துணியால் உன்னைச் சுற்றிக்கொண்டு வா" என்றான். அவள் வலை போன்ற துணியில் தன்னைச் சுற்றிக்கொண்டு வந்தாளா? இல்லை முரடான துணி யில் தன்னைச் சுற்றிக்கொண்டு வந்தாளா என்று எனக் குத் தெரியாது. அது எந்தத் துணியாக இருந்தாலும் ஒன்று மட்டும் நிச்சயம், அது காதல் என்னும் நூலால் நெய்யப்பட்டது, ஏனெனில் எப்படியோ இத்தனை நாளும் அவளையும் ஷௌகத்தையும் பிரித்து வைத்

திருந்த அந்த ஐந்நூறு அடி இடைவெளியை அவள் பாய்ந்து கடந்து விட்டாள்.

சுருங்கச் சொன்னாலும் எப்படிச் சொன்னாலும் ஷௌகத்தின் வீட்டில் குறையாய் இருந்த ஒரே பொருள் இப்போது அது இருக்க வேண்டிய இடத்திற்கு வந்து விட்டது. நிஜாமியின் வீட்டைப் பொறுத்தமட்டில், அங் கிருந்த விளக்கு வெளியேறிவிட்டது. அவனுடைய வியாபாரத்தை மிகப் பிரகாசமாக வைத்திருக்கக்கூடிய விளக்கு அது. நிஜாமி அவ்வளவு எளிதில் விட் டுக் கொடுக்கவில்லை. ஷௌகத்துடன் சேர்ந்து வாழ அவள் எடுத்த முடிவிலிருந்து அவளை மாற்றிவிட அவ னால் முடிந்தமட்டில் அவளோடு பேசிப் பார்த்த பிறகு, அவளுடைய சகோதரர்களை அழைத்து வந்து, அவள் தன்னுடைய எண்ணத்தை மாற்றிக்கொள்ளவில்லை என்றால், வன்முறை தான் என்றும் மிரட்டியிருக்கிறான். ஆனாலும் இந்த அறிவுரைகளாலும் மிரட்டல்களாலும் எதுவும் செய்ய முடியவில்லை. ஷௌகத் என்னிடம், "இந்தத் தேவடியாளை நான் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று நினைக்கிறேன்" என்றான். "நீ தீர் மானித்துக் கொள். அவள் உன்னுடையவள். ஆனால் அது சரியான காரியமாக இராது என்பதே என்னு டைய கருத்து. அவளைப்பற்றி உன் குடும்பத்தாரோடு நீ பேசி விட்டாயா?" என்பதுதான் என்னுடைய பதிலாய் இருந்தது. அவன் ஏதும் சொல்லவில்லை. அவசரப் பட்டு ஏதும் செய்யமாட்டான் என்ற நம்பிக்கையில் நான் கிளம்பினேன்.

அந்த நாட்களில் பம்பாயில் ஹக்கீம் அபு மொஹ மத் தாஹிர் அஸ்க் அஸீமாபாடி என்று ஒரு வித்தி யாசமான மனிதர் இருந்தார். எழுபத்தைந்து வயதான அவர் ஓர் இளைஞனுக்கான இதயத்தைக் கொண்டி ருந்தார். அவருடைய கண் பார்வை மிகத் துல்லிய

மாக இருந்தது. பற்கள் எல்லாம் அப்படியே இருந்தன. திரைப்படம் வெளியாகும் முதல்நாள் இரவை அவர் எப் பொழுதும் தவற விட்டதில்லை. அவர் ஐந்து மொழிக ளைப் பேசக்கூடியவர் - உருது, பார்சி, அரபி, ஆங்கிலம் மற்றும் பஞ்சாபி. மிகவும் அபூர்வமான மனிதர். பொழு துபோவதற்கு மூலிகை மருந்துகளோடு நேரத்தைச் செலவிடுவார். கவிதைகள் எழுதுவார். நண்பர்களோடு இருப்பதைப் பெரிதும் விரும்புவார். நான்தான் அவரை ஷௌகத்துக்கு அறிமுகம் செய்து வைத்தேன். அவ னுக்கும் அவரை எடுத்தவுடன் பிடித்துப்போக, மாமா என்று அழைக்கத் தொடங்கினான். உண்மையில் அந்த வயதான மனிதருக்கும் அவனுக்கும் ஏதோ ஒரு விதத் தில் தூரத்து உறவு என்றும் கண்டுபிடித்தான். நான் முன்னே சொன்னது போல், தொலைவு காரணமாக வும் ஸ்டுடியோவில் என்னுடைய வேலைப் பளு காரண மாகவும் ஷௌகத்தை அடிக்கடி சந்திப்பது நிகழாமல் போனது. ஆனால் எனக்கு ஹக்கீம் தாஹிரைப் பிடித்தி ருந்ததால் என்னுடைய மொழிநடை பற்றி அவருடைய அறிவுரையை அடிக்கடி கேட்டுக் கொண்டிருப்பேன். அவருக்கும் என்னைப் பிடித்திருந்ததால் சந்தோஷமாக அவருடைய கருத்துகளை என்னோடு பகிர்ந்து கொள் வார். ஒரு நாள் நான் அவரை எதேச்சையாய்ச் சந்தித் தபோது ஷௌகத், நூர்ஜஹானைத் திருமணம் செய்து கொண்டு விட்டதாகத் தெரிவித்தார். நான் அதிர்ச்சி யுற்றுப் போனேன். அதை வெளிக்காட்டவும் செய்தேன். சற்று தயக்கத் திற்குப் பிறகு, ஹக்கீம் தாஹிர், "பார் சாதத், யாருக்கும் தெரியாமலிருப்பது நல்லது என்பதால், எல் லாம் ரொம்ப அவசரத்தில் செய்யப்பட்டது. நான் உன்னி டம் சொல்வதற்குக் காரணம் ஷௌகத் போலவே நீயும் என் மகன் தான். ஆனால் இதை நீ உன்னோடு வைத் துக்கொள்" என்றார்.

எழுபத்தைந்து வயதான அந்த மனிதரிடம், இந்த இர கசியம் நீண்ட நாட்களுக்கு இரகசியமாக இராது என்று எப்படி நான் வாதாட முடியும்? ஷௌகத் என் மீது நம் பிக்கை வைக்காதது என்னைச் சற்றே காயப்படுத்தியது. அவன் அவளைத் திருமணம் செய்து கொள்ள வேண் டுமென்று எண்ணியிருந்தால், ஏன் என்னிடம் அதை மறைக்க வேண்டும்? சீட்டுக்கட்டிலிருந்து ஜோக்கர் விட்டெறியப்படுவது போல் நான் ஏன் விட்டெறியப் பட் டேன்? நான் காயப்படுத்தப்பட்டேன். ஆனாலும் அதை எப்போதும் ஷௌகத்திடம் சொன்னது கிடையாது. கார ணம், அது எங்களுடைய உறவைப் பாதித்திருக்கும். காலம் நகர்ந்தது; நிஜாமி, நூர்ஜஹான் மீது நம்பிக் கையை இழந்தான். அது போலவே கணக்கிலடங்காத முறை பதில் கிடைக்காத தொலைபேசி முயற்சிகளுக் குப் பிறகும், விலை கொடுத்து வாங்கிய பழைய காரில் பலமுறை நிஜாமியின் வீட்டிற்குப் போனதையும் மீறி கமால் அம்ரோகியும் தன் நம்பிக்கையை இழந்தான். ஷௌகத்தின் படுக்கையறை, சிரிப்புகளாலும், சந்தோ ஷங்களாலும் நூர்ஜஹானின் குரலில் உருக்கிய இசை யாலும் உயிர்பெற்று விளங்கிற்று. ரஃபிக் கஸ்நாவி தான் படத்திற்கான இசையமைப் பாளன். நூர்ஜஹான் அவளுடைய பாடல்களைக் கடலைப் பார்த்திருந்த ஷௌகத்தின் காதல் கூட்டில் இருந்து ஒத்திகை பார்த் தாள்.

இப்போது ஒரு கதை. என்னுடைய சகோதரன் சய் யிது ஹசன், ஃபீஜி தீவில் பாரிஸ்ட்டராக இருப்பவன், பல வருடங்கள் கழித்து பம்பாய்க்கு வந்தான். அவன் இவ்வழியே அம்ரித்சர் போவதாக இருந்தது. அவன் வான் வழியே வந்து சேர்வதாக எனக்குத் தெரிவிக்கப் பட்டது. நான் மிகச் சிறிய வீட்டில் வசித்து வந்ததாலும், ஷௌகத் மற்றும் நாஸிர் வீட்டில் நிறைய அறைகள்

இருந்ததாலும் அவனை அங்கு தங்க வைக்க நானும் என் மனைவியும் முடிவெடுத்தோம். நாஸிர் ஒண்டிக் கட்டை, ஷௌகத் அவனுடைய நூர்ஜஹான் இருந்த அந்த ஒரு படுக்கையறையை மட்டுமே உபயோகிப்பதாகத் தெரிந்தது. மற்ற அறைகள் பற்றி எந்த அக்கறையும் அவன் காட்டியது இல்லை. அதனால் என் சகோதரனை அங்கு தங்க வைப்பதால், அவனுக்கு எந்தத் தொந்தரவும் இருக்காது என்பதோடு, ஐரோப்பிய பாணியில் அறைக்குள்ளேயே குளியலறை இணைக்கப்பட்டிருந்தது என் சகோதரனுக்கு ஏற்றதாகவும் இருக்கும். நான் அவனை அங்கு அழைத்து வந்தபோது, இடம் புதிதாக இருந்ததால் அவனுக்கு அது பிடித்திருந்தது. வீட்டினுடைய சொந்தக்காரன் மாடியிலிருந்தான். சில அடிகள் தள்ளியிருந்த குழந்தைகள் விளையாட்டு மைதானத்தில் ஊஞ்சல் கட்டை, சறுக்கு மரம் எல்லாம் இருந்தது. இவை யெல்லாம் பார்க்க மிகவும் அழகாக இருந்தன. எந்நேரமும் வீட்டிற்குள் கடல் காற்று வீசிக்கொண்டிருந்தது. சில சமயங்களில் அது அவ்வளவு பலமாக வீசும். அதனால் அறைக்கதவுகளையும் ஜன்னல் கதவுகளையும் இறுக்க மூடி வைக்க வேண்டி வரும். சில நாட்கள் சந்தோஷமாகக் கழிந்தது என்றாலும், பெரிய பிரச்சனை ஒன்று காத்திருந்தது.

ஷௌகத் அவனுடைய வாழ்க்கையின் மிகச் சிறந்த நாட்களை அனுபவித்துக் கொண்டிருந்தான். அவனோடு அவனுடைய நூர்ஜஹான் இருந்தாள். அத்தோடு அங்குச் சுற்றிக்கொண்டிருந்த மிர்ஸா முஸாரஃப், சௌலா, மற்றும் சைகல் அவனோடு சேர்ந்து பணியாற்றுவதற்குத் தவம் கிடந்தார்கள். திரைப்படத் துறையில் வேலை பார்ப்பவர்கள் பொதுவாக இராக்கோழிகள். காலையி லிருந்து பல வேலைகளில் மும்முரமாக இருப்பவர்கள், இரவு வந்தால் கூத்தும் கும்மாளமும்தான்.

ஷௌகத் வீட்டில் ஒவ்வொரு நாள் மாலையிலும் ஏதா வது கொண்டாட்டங்கள் நடந்து கொண்டேயிருக்கும். நண்பர்கள் குடித்துக் கொண்டும், அழுக்கேறிய கதைக ளைப் பேசிக் கொண்டும், சிரித்துக் கொண்டும், பாடிக் கொண்டும் இருப்பார்கள். சில சமயங்களில் இவர்கள் எழுப்பும் பெரும் கூச்சலினால், பக்கத்து வீட்டுக்கா ரர்கள், எதிர்ப்பு தெரிவிப்பதும் உண்டு. ஒரு மாலை ஷௌகத்தின் வழக்கமான கூட்டத்தோடு, - பம்பாய் முழுக்கத் திரைப்பட மகாராணி நஸுமிக்காக டமாரம் போடுகிறவன் என்று அறியப்பட்டவனான எம்.ஏ. முக் ஹானியும், நானும், என் மனைவியும் அங்கு இருந் தோம். நாங்கள் சாப்பிட்ட பிறகு வேறு ஓர் இடத்திற்குப் போக வேண்டியிருந்ததால் அங்கிருந்து கிளம்பிவிட் டோம். என் சகோதரன் வெளியே சாப்பாட்டை முடித்துக் கொண்டு, மிகவும் தாமதமாகத் திரும்பியிருக்கிறான். அவன் வரவேற்பறைக்குள் நுழைந்த போது கொண் டாட்டங்கள் அதன் முழு வேகத்தில் நடந்து கொண்டி ருந்தன. எல்லோரும் குடித்திருக்க, சிலர் நடனமாடிக் கொண்டிருந்தார்கள். வேறு விதமாய்ச் சொல்வதென் றால் ஒவ்வொருவரும் நேரத்தை மிகச் சந்தோஷமாக அனுபவித்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் வெளி நாட்டில் வசித்து வந்த என் சகோதரன், இறுக்கமாகச் சிந்திக்கும் மூளையைக் கொண்ட பாரிஸ்டர். அங்கு நடந்த எல்லாவற்றிலுமிருந்து அவன் அந்நியப்பட்டிருந் தான். அடுத்த நாள் காலை அவனது மூட்டைகளை எடுத்துக்கொண்டு 'கிலாஃபத்' இல்லத்திற்குச் சென்று விட்டான். நேரடியாக என்னையும் என் நண்பர்களை யும் சபித்தான். இன்று கூட அவன் சொன்னதையெல் லாம் நினைத்துப் பார்க்கும்போது, ஈயத்தைக் காய்ச்சி என் காதில் ஊற்றுவது போல்தான் நான் உணர்கிறேன். அவன் வாழ்க்கை முழுக்கச் சட்டப் புத்தகங்களைப் படிப்பதிலும், லாகூர், பம்பாய், கிழக்கு ஆப்பிரிக்கா மற்

றும் பீஜி தீவில் சட்டரீதியான போராட்டங்கள் நடத்துவதிலுமே கழித்து விட்டான். திரைப்படம் என்பது எதைப் பற்றியது என்றும் அதில் சம்பந்தப்பட்ட மனிதர்கள் எப்படிப்பட்டவர்கள் என்றும் அவன் எப்படி அறிந்திருப்பான். இதில் சுவாரஸ்யமான விசயம் என்னவென்றால், 'கிலாஃபத்' இல்லம், காதல் சந்து என்று அழைக்கப்பட்ட தெருவில் தான் இருந்தது.

ஆனால் நான் திரும்ப நூர்ஜஹானிடம் செல்கிறேன். அவளுடைய மூத்த சகோதரி கூட 'கேடல்' தெருவிற்கு அருகில்தான் வசித்து வந்தாள். அங்கு அவள், அவளுடைய, சகோதரனோடு சேர்ந்து உடல் வியாபாரம் நடத்திக்கொண்டிருந்தாள். இந்தச் சகோதரிகள் எப்போதாவது சந்தித்துக்கொண்டார்களா என்று என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஷௌகத் அதற்கு அனுமதி கொடுத்திருப்பானா என்பதும் சந்தேகமாகத்தான் இருந்தது. அவளுடைய சகோதரன் மோசமான சூதாடி. சீட்டு விளையாடுவான், குதிரைப் பந்தயத்திற்குப் போவான். அவளுடைய சகோதரன் ஷௌகத்தைத் திருமணம் செய்து கொள்வதை முழு மூச்சாக எதிர்த்தான். ஷௌகத் மீது நூர்ஜஹான் கொண்ட மோகத்தைக் கலைக்க நிஜாமியின் உதவியோடு அவளிடம் பேச எவ்வளவோ முயன்றான். அவனைப் பொறுத்தமட்டில் நூர் ஜஹான் தங்க முட்டையிடும் வாத்து. ஷௌகத் பலமுறை மிரட்டப்பட்டான் என்றாலும், அவை எதுவும் அவனை எவ்விதத்திலும் பாதிக்கவில்லை. இறுதியாக நூர்ஜஹானும் ஷௌகத்தும் ஒன்று சேர்ந்திருக்கிறார்கள் என்பதையும் அப்படியே இருக்கத் தீர்மானித்திருக்கிறார்கள் என்பதையும், ஏற்றுக் கொள்ளத் தொடங்கினார்கள். 'நுக்கார்' படத்தின் வேலை மும்மரமாக நடந்து கொண்டிருந்தது. ஆனாலும் ரஃபிக் கஸ்நாவி பார்ப்பதற்குக் கொஞ்சமும் சந்தோஷமில்லா

தவன் போலவே தெரிகிறான் என்று அடிக்கடி நான் நினைப்பதுண்டு. அதற்குக் காரணம் அவனுடைய கற்ப னையிலிருந்த நூர்ஜஹான் அவன் கண்ணெதிரே அப கரிக்கப்பட்டதுதான்.

ஷௌகத்தைத் திருப்திப்படுத்துவது மிகவும் கடின மான காரியம். அவன் விருப்பப்படுவது போல்தான் எல் லாம் நடக்க வேண்டும். மற்றவர்கள் செய்த வேலையில் அவன் முழுமையாகத் திருப்தி அடைந்ததே கிடை யாது. நான் எழுதிய திரைக்கதையை முழுமையாக அவனிடம் கொடுக்க, அவனும் அது பிடித்திருக்கிறது என்று சொன்னாலும். ஹக்கீம் தாஹிர் அஸ்க் அஸீ மாபாடி உட்பட பலரிடம் அதைக் கொடுத்து வேறுவி தமாய் எழுதச் சொல்லியிருக்கிறான். அஸீமாபாடியிடம் கொடுத்தது பற்றி நான் பெரிது படுத்தவில்லை, கார ணம் என்னைவிட மூத்தவர் என்ற முறையில் நான் அவ ரிடம் மரியாதை வைத்திருக்கிறேன். ஆனால் மற்றவர் களிடம் கொடுத்ததை என்னால் ஏற்றுக்கொள்ள முடிய வில்லை.

ஒருநாள் ஷௌகத்திடம் ஒளிவு மறைவில்லாமல் நான் என்ன நினைக்கிறேன் என்று எல்லாவற்றை யும் சொல்லிவிட்டேன். அவன் எப்போதும் சாமர்த்தி யமாகவும், சிந்தித்தும் செயல்படக்கூடியவன் என்பதால் என்னை அமைதிப்படுத்த முயன்றாலும், சுபாவத்தில் நான் பிடிவாதக் குணம் கொண்டவன். ஒன்றைத் தீர்மா னித்து விட்டேன் என்றால் எதனாலும் அதை மாற்ற முடி யாது. எப்படியிருந்தாலும் நான் எழுதிய அந்தக் கதை எனக்குப் பிடிக்கவில்லை. என்னால் ஏற்றுக் கொள்ள முடியாத பல மாற்றங்களை ஷௌகத் செய்ய வைத் தான். ஷௌகத் என்னுடைய நெருங்கிய நண்பன் என் றாலும், ஒவ்வொரு நாளும் மோசமான அந்த மான் மார்க் விஸ்கியை ஒன்றாகக் குடித்திருக்கிறோம் என்றாலும்,

கேரவன் - சிகரெட்டுகள் பிடித்திருக்கிறோம் என்றாலும் நான் எதைச் செய்யச் சொன்னாலும் மறுக்காமல் செய்யக் கூடியவன் என்று எனக்குத் தெரியும் என்றாலும் திரைப்படத்தைப் பொறுத்தமட்டில் அவனுடைய கடிகாரத் தயாரிப்பாளருடைய மூளை என்ன செய்யச் சொல்கிறதோ அதை மட்டுமே மிகச் சரியாகச் செயல் படுத்துவான். அதனால் நான் அமைதியாகவும் சாதாரணமாகவும் 'நுக்கார்' படத்திலிருந்து வெளியேறினேன். ஷௌகத்தும் என்னைப்பற்றித் தெரியும் என்பதனால், நான் வெளியேறியதை அவன் வரவேற்றும் இருக்கலாம். நான் அதில் தொடர்ந்திருந்திருந்தால் முடிவேயில்லாத எங்களுடைய விவாதங்களால், தயாரிப்பு பல மாதங்கள் தாமதமாகி இருந்திருக்கும்.

ஷௌகத்துடன் தொடர்பற்றுப் போனேன். அவனும் அது போலவே உணர்ந்திருக்கலாம் என்றாலும் எங்களுடைய நட்பு எவ்விதத்திலும் பாதிக்கப்படாமல் இருந்தது. நாட்டினுடைய அரசியலின் நிலையற்ற தன்மையினால், திரைப்படத்துறை பெரும் சிக்கலில் இருந்தது. தயாரிப்பிலிருக்கும் ஓரிரு படங்களையும் கொலை செய்ய வேண்டும் என்றால், நீங்கள் செய்ய வேண்டியது எல்லாம், மேஜை மீது ஏறி நின்று 'புரட்சி ஓங்குக' என்று கத்தினால் போதும். இரண்டாம் யுத்தம் காரணமாக ஃபிலிம் சுருள்கள் கிடைப்பது மிகவும் சிரமமாக இருந்தது. சுற்றிலும் குழப்பமான சூழ்நிலை நிலவியது. குறிப்பாகப் பட இயக்குநர்கள் தான் மிக மோசமாகப் பாதிக்கப்பட்டார்கள். தயாரிப்பாளர்கள் 'இல்லை' என்று சொல்வதற்கு ஒரு காரணம் தயாராக இருந்தது. அவர்களை அணுகினால் "எங்கே பணம் இருக்கிறது?" என்று கேட்பார்கள். யுத்தம் நடந்து கொண்டிருந்தது. இன்று கிரிட்டியில் இருந்து நாளை பின்லேண்டுக்கு அது நகரும். அத்தோடு இந்தியா மீது ஜப்பானியர்கள் எப்போது

வேண்டுமென்றாலும் படையெடுக்கலாம் என்ற பயமும் நிலவியது. இருந்தாலும் நிலையற்ற அந்தக் காலங்க ளில் தான் பல முதலாளிகளும், பண முதலீட்டாளர் களும், திரைப்படத் தயாரிப்பாளர்களும் கோடிக்கணக் கில் சம்பாதித்தார்கள்.

ஷௌகத் வேறோர் ஒப்பந்தத்தில் கையெழுத்திட் டான். மிகவும் சிக்கலான மனிதனான சேட் சாவேரி யுடன் என்றே நினைக்கிறேன். என்னுடைய பார்வை யில் அவன் மூன்றாம் தரமான மனிதன். யுத்தம்தான் அவனைச் சேட்டாக மாற்றியது. எரிக்கும் அளவிற்கு அவனிடம் பணம் இருந்ததால் சினிமா கம்பெனி ஒன்று தொடங்கியதோடு, இரண்டு மூன்று கார்களும் வாங்கி னான். பெரிய நடிகைகள் அவன் தொட முடியாத தூரத் தில் இருந்ததால், துணை நடிகைகளைத் தன்னுடைய சந்தோஷங்களுக்காகப் பொறுக்கி எடுத்துக் கொண் டான். அவன் ஷௌகத்தோடு ஒப்பந்தம் போட்டு முன் பணமாக மூவாயிரம் ரூபாய் கொடுத்தான். வங்கியில் காசோலையைக் கொடுத்துப் பணமாக ஷௌகத் பெற் றபோது, நான் அவனுடன் இருந்தேன். நான் அவனைத் தபால் நிலையத்திற்கு அழைத்துச் சென்று எல்லாப் பணத்தையும் அவனுடைய பெற்றோருக்கு அனுப்பி வைக்கும்படி செய்தேன். இதற்காக நூர்ஜஹான் என்னை வெறுத்திருக்கலாம். இருந்தாலும், எவ்விதத் திலும் அது என்னைப் பாதித்திருக்காது. ஆயுள் காப் பீடு எடுத்துக் கொள்ளுமாறு ஷௌகத்தை வற்புறுத்தி னேன். ஏறக்குறைய நான் சொன்னதற்கெல்லாம் சரி என்று சொல்லக்கூடிய அவன் இதற்கும் சம்மதித்தான். பத்தாயிரம் ரூபாய்க்கு ஒரு காப்பீடு எடுத்துக் கொடுத் தேன். நான் ஏன் இதையெல்லாம் செய்து கொண் டிருக் கிறேன்? எனக்குத் தெரியவில்லை. குடும்பத் தில் மூத்தவன் என்ற முறையில் நடந்து கொள்கிறேன்.

மற்றவர்களுக்கு நிறைய அறிவுரைகளைக் கொடுக்கி றேன். ஆனால் எனக்காக எதுவும் செய்து கொள்ளாமல் இருக்கிறேன்.

ஷௌகத்துடன் சேர்ந்த பின் நூர்ஜஹான் மலர்ந்தி ருந்தாள். உடல்ரீதியாக ஓர் ஆணின் தொடர்பு மட்டுமே, ஒரு பெண்ணின் அழகிற்குப் பூர்த்தியைக் கொடுக் கிறது. இப்பொழுது அவள் முழுமையான மங்கை யாக இருந்தாள். லாகூரில் இருந்தபொழுது அவளிடம் காணப்பட்ட இளம் பெண் தன்மை பம்பாயில் முழுமை யாய் உருமாறியிருந்தது. எல்லா விதமான உடலின்பங் களையும் அதன் ரகசியங்களையும் அவளுடைய உடல் இப்போது அறிந்திருந்தது. இன்னும் பலர், அவளை பேபி நூர்ஜஹான் என்று அழைத்தாலும், அவள் ஒன் றும் குழந்தை இல்லை. காதலையும் அதன் பரவசத் தையும் அனுபவித்த மங்கை. படத்தின் வெளிப்புறக் காட்சி ஒன்றை பம்பாயின் புறநகரில் பிடிப்பதாக இருந் ததால், நானும் உடன் வரவேண்டும் என்று ஷௌகத் வற்புறுத்தினான். படத்தில் காட்சி இரவு போல் இருக்க வேண்டும் என்பதற்காக, கேமிராவில் சிவப்பு ஃபில்டர் போட்டு படப்பிடிப்பு நடத்துவதாக இருந்தது. நான் சேட் வியாஸின் காரில் அங்கு சென்றேன். நூர்ஜஹான் முன் னரே அங்கு வந்திருக்க, அவள் அணிந்திருந்த விசித் திரமான ஆடை என் கண்களுக்குப் பெரும் அதிர்ச்சி யைக் கொடுத்தது. அவளுடைய சல்வார், 'நெட்' என்று அழைக்கப்பட்ட துணியால் தைக்கப்பட்டது. பொதுவாக இது திரைச் சீலையாகவே பயன்படுத்தப்படும். ஆனால் அதைத்தான், அவளுடைய உடலின் கீழ்ப் பகுதியை மறைக்க, அவளோ ஷௌகத்தோ தேர்ந்தெடுத்திருக் கிறார்கள். அவளுடைய சல்வாரில் இருந்த ஆயிரக்க ணக்கான சிறு சிறு ஜன்னல்களின் ஊடாக அவளுடைய உடல் வனப்பு பாய்ந்து வந்தது என்று சொல்லலாம்.

அவளுடைய சட்டையும் அதே துணியில்தான் தைக் கப்பட்டிருந்தது. கற்பனைக்கு எதுவுமே விட்டு வைக் கப்படவில்லை. வெளிப்படையாகச் சொல்வதென்றால், நூர்ஜஹானின் உடை என்னைப் பெரும் அதிர்ச்சிக்கு உள்ளாக்கியதால், நான் அங்கிருந்த நடிகை ஷோபனா ஷமார்க்கை நோக்கி நகர்ந்தேன். ஷோபனா படித்த பெண், எப்படிப் பழகுவது என்று அவளுக்குத் தெரியும். நல்ல மராத்திக் குடும்பத்திலிருந்து வந்தவள். பொது வாக நடிகைகளிடம் காணப்படும் எதையும் அவளி டம் பார்க்க முடியாது. அவளின் வெளிப்பாடுகள் மிகப் பிரமாதமாய் இருக்கும். அவளும் இந்தப் படத்தில் நடிக் கிறாள். நூர்ஜஹானையும் அவள் அணிந்திருந்த கோர மான ஆடையையும் நான் பார்த்த அந்த ஒரு பார் வையிலேயே, நான் அடைந்த மோசமான அதிர்ச்சியி லிருந்து மீண்டு என்னுடைய நிதானத்தைத் திரும்பப் பெற ஷோபனா அருகில் சென்று புல்தரையில் அமர்ந்து கொண்டேன். நான் தான் 'நுக்கார்' எழுதியிருக்கிறேன் என்றாலும் எனக்கு அதன் மீது எந்த ஈடுபாடும் இல்லை. ஷௌகத் வற்புறுத்தியதன் பேரில் மட்டுமே நான் அங்கு சென்றேன்.

பிறகு பலமுறை நூர்ஜஹானை அவளுடைய வீட்டில் சந்தித்திருக்கிறேன். நான் அவளை மேலும் கூர்ந்து கவனித்தபோது, எத்தகைய சூழ்நிலையிலிருந்து வந் தாளோ அதோடு சம்பந்தப்பட்ட ஒவ்வொரு குணாம்ச மும் அவளிடம் இருப்பதைக் கவனித்தேன். அவள் சம் பந்தப்பட்டது எல்லாமே உருவாக்கப் பட்டதாக இருந் தது. அவள் குலுக்கும் மினுக்கும் இயல்புடையவள் என்பதோடு, அது நாகரிகமற்ற முறையிலும் இருந்தது. உ.பி. மையப்பகுதியிலிருந்து வந்த ஷௌகத், எப்படிச் சரியான பஞ்சாபி விவசாயப் பெண்ணோடு இணைந்து வாழ்கிறான் என்பது எனக்கு ஆச்சர்யமாக இருந்தது.

அவளுடைய தடித்த பஞ்சாபி உச்சரிப்பில் பேசப்படும் உருதுவை அவன் கிண்டல் செய்வான். அவளும் அவ னுடைய உ.பி. உச்சரிப்பை நடித்துக்காட்டிக் கேலி செய்வாள். இறுதியாக ஷௌகத் 'நுக்காரை' முடிக்க நாங்கள் மேலும் விலகினோம். காதல் சந்தோஷங் களை அனுபவித்திருந்த அவன், என்னைப் போலவே இப்போது வேலையில் முழு கவனத்தைச் செலுத் தத் தொடங்கினான். அவ்வப்பொழுது நானும் அவனும் ஏதேனும் ஒரு திரைப்படக் கம்பெனி அலுவலகத்திலோ அல்லது ஒரு ஸ்டூடியோவிலோ அல்லது தெருவோ ரமோ சந்தித்துக்கொண்டால் வாழ்த்துக்கள் பரிமாறிக் கொண்டு, ஓரிரு நிமிடங்கள் பேசிய பிறகு அவரவர் வழியில் போய்க் கொண்டிருந்தோம். திரைப்படத்துறை பெரும் புயலிலிருந்து தப்பித்து விட்டது. தயாரிப்பாளர்க ளைப் பொறுத்தமட்டில் யுத்தம் பற்றிய பயம் விலகிவிட் டது. திரைப்படத் துறை பொருளாதார ரீதியாக நிலை யான தன்மைக்குள் நுழைந்து விட்டதாக எல்லோரும் உணர்ந்தார்கள்.

வியாபாரம் பற்றி ஷௌகத் எப்போதும் தெளிவாகச் சிந்திக்கக் கூடியவன். சந்தை நிலவரத்தைத் தனக் குச் சாதகமாக்கிக் கொண்டு சொந்தத் தயாரிப்பு நிறுவ னத்தைத் தொடங்கினான். ஏற்கனவே இயக்குநராகவும் எடிட்டராகவும் மிக நல்ல பெயர் எடுத்திருக்கும் கார ணத்தால், தயாரிப்பிலும் நுழைந்தது, அவனை மேலும் பிரபல மாக்கியது. பொதுவாகத் திரைப்படத்துறையில் நடிகைகளைத் திருமணம் செய்து கொள்வது என்பது காதலால் மட்டுமல்ல. ஷௌகத், நூர்ஜஹானை அப் படித்தான் பார்த்தானா என்று என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஆனால் எனக்குத் தெரிந்தது என் னவென்றால், அவன் அவளைத் திருமணம் செய்து கொள்ளவில்லை என்றாலும் அப்போதும் சிறப்பாகவே

வெற்றி பெற்றிருப்பான். அவனுக்குத் தொழில் தெரியும் என்பதோடு கடுமையான உழைப்பாளி. அவன் ஏன் பம்பாயை விட்டு பாகிஸ்தான் வந்தான் என்று என்னால் புரிந்து கொள்ளவே முடியவில்லை. அவன் தீவிரமான இஸ்லாமிய நம்பிக்கை கொண்டவன் என்பதாலா அல்லது சுதந்திரத்திற்குப் பிறகு பம்பாயில் இஸ்லாமியர்கள் எதிர்கொள்ளக்கூடிய சாதாரண அவமதிப்பைக்கூட விருப்பு வெறுப்பில்லாமல் தன்னால் பார்க்க முடியாது என்ற காரணத்தினாலா? இஸ்லாமுக்கு எதிராக யாரேனும் அவன் முன்னிலையில் ஏதேனும் சொல்லியிருந்தால், நிச்சயமாகச் சொல்கிறேன் அவன் தன்னுடைய கருவிகளைக் கொண்டு அந்தக் கபாலத்தைத் திருகி எடுத்து, ஒவ்வொரு பகுதியையும் தனியே பிரித்துப் போட்டு இப்படி மோசமாகப் பேசத்தூண்டும் பழுதடைந்த பகுதியை அகற்றி விட்டு மறுபடியும் எல்லாவற்றையும் பழையபடி இணைத்திருப்பான். பம்பாயை விட்டுப் போக வேண்டும் என்று நூர்ஜஹான் வற்புறுத்தியிருப்பதற்கும் சாத்தியங்கள் உண்டு. அவள் எப்போதும் லாகூரைக் காதலித்தாள். 'லாகூர் லாகூர் தான்' - எல்லாப் பஞ்சாபிகளும் இப்படித்தான் சொல்வார்கள்.

பம்பாயில் ஷௌகத் பெரும் வெற்றி பெற்றிருந்தான். இரண்டு பெரும் வெற்றிப் படங்கள் கொடுத்துள்ளதால், அவன் விரும்பியிருந்தால் அங்கேயே தங்கியிருந்து பெருமளவு பணம் பார்த்திருக்கலாம். ஆனால் அவன் பாகிஸ்தானைத் தன் இல்லறமாகத் தேர்ந்தெடுத்தான். திறமையற்ற செயல்களைக் கொஞ்சமும் சகித்துக் கொள்ளாத, கடிகாரத் தயாரிப்பாளனின் மூளையைக் கொண்ட ஷௌகத், லாகூரில் திரைப்படத்துறை மரணப்படுக்கையில் இருக்கும்போது வந்து சேர்ந்தான். ஒன்றுமில்லாமல் இருந்த 'ஷோரி ஸ்டூடியோ' வை வாங்கி அதை முதல் தரமான தயாரிப்பு வசதிகள்

கொண்ட ஸ்டூடியோவாக மாற்றினான். 'ஷௌநூர் ஸ்டூ டியோ'வில் உள்ள ஒவ்வோர் ஆணியும் ஷௌகத்தால் வைக்கப்பட்டது என்றும், அவனுடைய கைகளாலேயே நிலையாக அடிக்கப்பட்டது என்றும் வெகு சிலருக்கே தெரியும். தோட்டத்தில் உள்ள ஒவ்வொரு செடி யும், ஸ்டூடியோ 'லேப்'-ல் உள்ள ஒவ்வொரு இயந்திர மும் வைக்கப்பட வேண்டிய இடத்தில் அவன் கைகளா லேயே வைக்கப்பட்டது, இது அவனுடைய மிகச் சிறந்த பண்பு என்றாலும் இது பல சமயங்களில் பலரை அவன் மீது வெறுப்புக் கொள்ள வைத்தது.

அடிக்கடி எனக்குப் பணம் கொடுத்து உதவிய நண் பன் ஒருவன் லாகூரில் இருந்தான். ஒருமுறை நான் அவனைப் பார்க்கச் சென்றிருந்த போது, அப்பழுக் கற்ற வெள்ளைச்சட்டை போட்டிருந்தும் மணிக்கட் டில் கட்டக்கூடிய 'கஃப்' இல்லாமல் இருந்தான். என் னுடைய அதிர்ச்சியை நான் வெளிப்படுத்திய போது, அதை வாங்குவதற்குப் பணம் இல்லை என்று என்னிடம் சொன்னான். நான் சிகரெட் கேட்டபோது, கடந்த பத்து நாட்களாகக் கடன் வாங்கிய சிகரெட்டுதான் பிடித் துக் கொண்டிருப்பதாகப் பதில் தந்தான். அந்த மனி தன் தான் அவனுடைய ஸ்டூடியோவில் எல்லோருக்கும் குளிர் சாதனப் பெட்டியிலிருந்து சில்லென்று சுத்தமான தண்ணீர் கொடுத்தவன். அங்கு மலர்கள் பூத்துக் குலுங் கின. பல தோட்டக்காரர்கள் வேலை செய்தார்கள். அங் குதான் நூற்றுக்கணக்கான தொழிலாளிகள் வேலை பார்த்தார்கள். மிக நீண்ட காரில் ஓட்டுநர் வைத் துக் கொண்டு எங்கும் அழைத்துச் செல்லப்பட்டவளும், மிகவும் விலை உயர்ந்த ஆடை களை அணிந்தவளு மான நூர்ஜஹான் என்ற பெண் அங்குதான் இருந்தாள். அந்த நண்பன் வேறு யாரும் இல்லை, ஷௌகத் தான்.

நூர்ஜஹான் பற்றி பல கதைகள் உண்டு. அதில் சில உண்மையாகக் கூட இருக்கலாம். எனக்குத் தெரிந்த தெல்லாம், இரண்டு அழகான ஆண் குழந்தைகளின் தாய் அவள். அவர்கள் லாகூரில் உள்ள 'சீஃப்ஸ் காலே ஜில்' படித்து வந்தார்கள். அவர்களை அவள் நேசித் தாள். சில காலங்களுக்கு முன்பு, கல்லூரியில் குழந் தைகளின் நாடக நிகழ்ச்சி ஒன்றை நடத்தினார்கள். அதில் நூர்ஜஹானின் மகன், பகவான் கிருஷ்ணனைக் காதலிக்கும், மாடு மேய்க்கும் பெண்ணான ராதாவாக நடித்தான். அவன் மிகச் சிறப்பாக நடனமாடினான். நூர் ஜஹானுக்கு எப்படி நடனமாட வேண்டும் என்று தெரி யும். அவள் ஒரு சில பாடங்களை அந்தப் பையன் அக்பருக்குச் சொல்லிக் கொடுத்திருக்கலாம் அல்லது அவனுடைய இரத்தத்திலேயே அது இருந்திருக்கலாம். இந்த இரண்டு பையன்கள், அக்பர் மற்றும் அஸ்கர் வளர்ந்த பின் என்னவாகிறார்கள் என்று பார்க்க வேண் டும். இந்தக் குடும்பமும் பேரிமோர் மற்றும் கபூர் குடும் பங்கள் போல் மற்றொரு கலைக் குடும்பமாகுமா? காலம் தான் சொல்ல வேண்டும்.

நூர்ஜஹானால் அகங்காரம் கொண்டவளாக இருக்க முடியும். அழகாக இருக்கிறேன் என்பதற்காக அவள் அகங்காரத்தை வெளிக்காட்ட முடியாது - அவளிடம் பெரிய அளவில் அது ஏதுமில்லை. ஆனால் அவளு டைய குரல் - பெரும் பிரகாசத்தைக் கொண்ட அந் தக் குரலுக்காக அவள் நிச்சயம் பெருமை கொள்ள லாம். எனக்கு நினைவிருக்கிறது ஒரு முறை பம்பாயில் என் மனைவி அவளுடைய நண்பர்கள் நூர்ஜஹானைப் பார்க்க வேண்டும் என்று விரும்பியதால், அவளை வரச் சொல்ல முடியுமா என்று கேட்டாள். அதில் பிரச்சனை ஏதுமில்லை என்று சொல்லி, நூர்ஜஹானை அனுப்பி வைக்குமாறு ஷௌகத்திடம் கேட்க, அவனும் ஒரு நாள்

கழித்து அனுப்பி வைத்தான். எனக்குத் தெரிந்த எல்லா நடிகைகளிலும் - எனக்கு நூற்றுக்கணக்கில் தெரியும் - நூர்ஜஹான் மட்டும்தான் அவளுடைய பழக்க வழக்கத் தில் மிகவும் சம்பிரதாயத்தில் நின்று கொண்டிருந்தாள். எப்போதும் தான் ஒரு நடிகை என்ற பிரக்ஞையோடு இருந்தாள். அவளைப் பொறுத்த மட்டில் எல்லாமே செயற்கைத்தனமானவை. அவளது புன்னகை, அவளது சிரிப்பு, அவள் மனிதர்களை வரவேற்கும் விதம், அவர் கள் எப்படி இருக்கிறார்கள் என்று அக்கறை காட்டும் விதம், எல்லாமே. அவளது திருமண வாழ்க்கை கூட செயற்கையானது தானா? இல்லை என்றே நினைக்கி றேன். அவளுடைய வழக்கமான செயற்கையான அக் கறையோடு எல்லோரையும் சந்தித்தாள். நான் கிளம்ப வேண்டும் என்று எண்ணியிருந்தேன். ஆனால் என் நண்பனின் மனைவி நூர்ஜஹானைப் பாடும்படி கேட் டுக் கொள்ள வேண்டும் என்றும் அதற்காக நான் அங்கி ருக்க வேண்டும் என்றும் வற்புறுத்தினாள். "ஓரிரு பாட்டு கள் பாடேன்" என்று நூர்ஜஹானிடம் எந்தச் சம்பிரதாய மும் இல்லாமல் சொன்னேன். "வேறு ஒரு சமயம் வைத் துக் கொள்ளலாம் மண்ட்டோ சாகிப், என் குரல் சரி யாக இல்லை" என்றாள் செயற்கைத்தனமான குரலில். அவளுடைய குரல் இரும்பினால் ஆனது என்றும் அதை எதனாலும் சேதப்படுத்த முடியாது என்றும் நான் அறிந் திருந்ததால், கரித் துண்டு போல் கனன்று கொண்டிருந் தேன். அவள் சால்ஜாப்பு சொல்கிறாள் என்று எனக்குத் தெரியும். "இந்த சால்ஜாப்பு எல்லாம் வேலை செய்யாது. நீ பாடித்தான் ஆக வேண்டும். உன் பாடல்களை நான் ஆயிரக்கணக்கான முறை கேட்டிருக்கிறேன். ஆனால் இவர்கள் உன் பாட்டைக் கேட்க வேண்டும் என்று விரும்புகிறார்கள். அதனால் உன் குரல் சரியாக இருந் தாலும், இல்லாவிட்டாலும் இவர்களுக்காக நீ பாடித் தான் ஆக வேண்டும்" என்றேன்.

பெண்கள் வற்புறுத்தினாலும் மேலும் பலமுறை அவள் 'முடியாது' என்று சொன்னாள். என் மனைவி இதற்கு மேல் பொறுக்கமாட்டாமல், "தயவு செய்து நாம் அவளை வற்புறுத்த வேண்டாம்" என்றாள். ஆனால் நான் எதை யும் விட்டுக் கொடுக்கும் சுபாவம் கொண்டவனில்லை என்பதால், "நூர்ஜஹான்! நீ பாடித்தான் ஆக வேண் டும்" என்றேன். கடைசியாக அவள் ஒத்துக் கொண்டு பயஸூடைய பிரபலமான வரிகளான 'இரவுகளில் சுவா சமே பிரிவின் வலியாய்' என்ற பாடலைப் பாடினாள். அது மிகவும் பிரமாதமாக இருந்தது. இது நடந்து பல வருடங் கள் கடந்து விட்டன என்றாலும், அவள் குரல் தேனாய், அடுக்கடுக்காய் என் காதுகளில் பாய்ந்ததை இன்னும் என்னால் உணர முடிகிறது.

நூர்ஜஹானைக் காதலித்த எத்தனையோ மனிதர் கள் இருக்கத்தான் செய்தார்கள். சாகிப்புகளுக்கும் அவர்களின் மனைவி மார்களுக்கும் சமையல் செய் யும்போது, சமையலறையில் ஒட்டப்பட்டிருக்கும் அவ ளுடைய படத்தை ஏக்கத்தோடு பார்த்துக்கொண்டிருக் கும் சமையல்காரர்களை எனக்குத் தெரியும். நர்கீஸ் பற்றியோ, நிம்மி பற்றியோ, காமினி குஷால் பற்றியோ கவலைப்படாத வீட்டு வேலைக்காரர்கள் நூர்ஜஹான் மீது பைத்தியம் கொண்டிருந்தார்கள் என்றும் எனக் குத் தெரியும். அவளுடைய படத்தை எங்கு, எப்போது பார்த்தாலும் அதைப் பிய்த்து எடுத்து அவர்களுடைய உடைந்த டிரங்க் பெட்டியில், அவர்களுடைய பொரு ளோடு சேர்த்து வைத்துக்கொண்டு, ஓய்வு நேரங் களில் அதைப் பார்த்து அவர்களுடைய கண்களில் உள்ள வெப்பத்தைத் தணித்துக்கொண்டார்கள். நூர் ஜஹானைப் பற்றி யாரேனும் இழிவாக ஏதேனும் ஒன்று சொன்னால் போதும் சண்டை போடுவதற்கு அப்படிப் பட்ட ஆண்கள் தயாராகவும் இருந்தார்கள். ஒவ்வொரு

இளம் பெண்ணையும், சிவப்பு ஆடை அணிந்த எல் லாப் பெண்களையும், ஒவ்வொரு மணமகளையும் நூர் ஜஹான் என்று அழைத்த, அவளது காதலன் ஒருவன் எங்களுடைய வீட்டிலும் இருந்தான். அவனுக்கு ஏறக் குறைய அவள் பாடிய பாடல்கள் அனைத்தும் தெரியும். அவன் பார்ப்பதற்கு அழகாக இருப்பான். அதையும் மீறி நாள் முழுக்கத் தொடர்ந்து அவளைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கும் அளவிற்கு நூர்ஜஹானிடம் என்ன இருக்கிறது என்று நிச்சயமாக எனக்குப் புரிய மாட்டேன் என்கிறது.

அவன் எனக்கு நெருங்கிய உறவு முறை. என்னு டைய சகோதரியின் மகனுக்கும் அன்னி ஜாக்கியாவிற் கும் பிறந்த அவனது பெயர் ஷாகித் ஜலால். நாங் கள் அவனை 'டாக்கு' என்றே அழைப்போம். நாங்கள் அவனிடம் பலமுறை எடுத்துச் சொல்லி விட்டோம். அவன் உண்மையிலேயே நூர்ஜஹானைக் காதலிப் பதை நிறுத்த வேண்டும் என்றும், அவனால் அவளைத் திருமணம் செய்து கொள்ள முடியாது என்றும், அவ ளுக்கு ஏற்கனவே திருமணமாகி சொந்தக் குழந்தை கள் உண்டு என்றும் சொல்லிவிட்டோம். ஆனால் இவை எதுவும் அவனை எவ்விதத்திலும் பாதிக்கவில்லை. அவனுக்குத் திரைப்படங்கள் என்றால் பிடிக்கும். அவன் பார்த்த படத்தில் நூர்ஜஹான் நடிக்கவில்லை என்றால் மிகவும் வருத்தப் படுவான். வீட்டிற்கு வந்தவுடன் அவள் பாடிய பாடல்களைப் பாடத் துவங்குவான். இந்த உல கத்தில் அவனுக்கு வேண்டியதெல்லாம் நூர்ஜஹான் மட்டுமே என்று அவனுடைய பெற்றோர்களிடம் சொல் லிவிட்டான். சில காலங்களுக்கு முன்பு அவனுடைய தாத்தா மியான் ஜலாலுதின், ஷெளகத் ஹுசைன் ரிஸ் வியைச் சந்திக்கச் சென்ற போது, "இங்க பார்! உனக்குப் போட்டியாக, உன் மனைவியைப் பைத்தியம் பிடித்தது

போல் காதலிக்கும் ஒருவன் இருக்கிறான். வரும் நாட்களில் அவன் அவளோடு ஓடிப்போக, நீ வேடிக்கை பார்த்துத்தான் நிற்க வேண்டும்" என்று சொல்லியிருக்கிறார். ஷௌகத் மிகவும் சங்கடப்பட்டு, "யார் அது?" என்று கேட்டிருக்கிறான். மியான் ஜலாலுதின் புன்னகைத்தவாறு, "என் பேரன்!" என்று சொல்லியிருக்கிறார். "உங்கள் பேரனா!? அவனுக்கு என்ன வயது?" "சுமார் 4" இந்தக் கதையை நூர்ஜஹான் கேட்ட போது அவளுடைய காதலனைப் போய்ப் பார்த்துத் திருமணம் செய்து கொள்வதாகச் சொல்லியிருக்கிறாள். ஷாகித் ஜலால் ஏழாவது சொர்க்கத்தில் இருந்தான். காரணம் இந்தச் செய்தி அவனிடம் சொல்லப்பட, நூர்ஜஹான் அவனை வந்து பார்த்து அவனுடைய மனைவியாவதற்கு பொறுமையிழந்து காத்திருந்தான்.

சமீபத்தில் நூர்ஜஹானின் மற்றொரு காதலன் பற்றிய கதையை யாரோ என்னிடம் சொன்னார்கள். அவனுக்கு நான்கு வயது இல்லை, முழுமையாக வளர்ந்த மனிதன். அவனுடைய தொழில் முடிவெட்டுதல். நாள் முழுக்க அவள் பாடிய பாடல்களைத் தொடர்ந்து பாடிக் கொண்டிருப்பான். சளைக்காமல் அவளைப் பற்றி பேசிக் கொண்டே இருப்பான். எவனோ ஒருவன் அவனிடம், "நீ உண்மையிலேயே நூர்ஜஹானைக் காதலிக்கிறாயா?" என்று கேட்டிருக்கிறான். "கொஞ்சமும் சந்தேகமில்லாமல்" என்று முடிவெட்டுபவன் அக்கறையோடு சொல்லியிருக்கிறான்.

"நீ உண்மையாகவே அவளைக் காதலித்தால், பஞ்சாபி புராணக் கதையில், காதலன் மகிலால் அவனுடைய காதலி சோனிக்காகச் செய்ததை உன்னால் செய்ய முடியுமா? தன்னுடைய தொடையிலிருந்து கொஞ்சம் சதையை வெட்டியெடுத்து அவனுடைய காதலை நிரூபித்தான்" என்றான் அந்த மனிதன். முடி

வெட்டுபவன் மிகக் கூர்மையான கத்தியை அவனிடம் கொடுத்து, "என் உடம்பில் எந்தப் பகுதியில் இருந்து வேண்டுமானாலும் கொஞ்சம் சதையை எடுத்துக் கொள்" என்று சொல்லியிருக்கிறான். அவனுடைய நண்பன் உண்மையிலேயே விசித்திரமான மனிதன்தான். முடிவெட்டுபவனின் புஜத்தில் இருந்து பெரிய அளவு சதையை வெட்டி எடுத்துக்கொண்டு ஓடிவிட, முடி வெட்டுபவன் தன் காதலை நிரூபித்து, மயங்கி விழுந்து விட்டான். மயோ மருத்துவ மனையில் அந்த மாபெரும் காதலன் தன் நினைவுகளைத் திரும்பப்பெற்ற போது, அவனது உதடுகளில் இருந்து வெளியேறிய முதல் வார்த்தை இதுதான்: "நூர்ஜஹான்..."

இப்போது நூர்ஜஹானுக்கு எதிராக நீதிமன்றத்தில் ஒரு வழக்கு உள்ளது. நிஹாத் சுல்தானா என்ற இளம் நடிகையை அடித்ததாக அவள் மீது குற்றம் சாட்டப்பட்டுள்ளது. வழக்கு நிலுவையில் இருப்பதாலும், நீதிமன்றத்தை அவமதிப்பதாக அமையும் என்பதாலும் நான் அதைப்பற்றி ஏதும் சொல்ல விரும்பவில்லை. என்றாலும் அந்தப் பெண்ணை நூர்ஜஹான் எதற்காக அடிக்க வேண்டும் என்று என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. நிஹாத் சுல்தானா பற்றி நான் இதற்கு முன் கேள்விப்பட்டது கிடையாது. கிழக்கு வங்காளத்தில் டாக்கா நகரில் இருந்து வந்தவள் என்று என்னிடம் சொல்லப்பட்டது. அவள் எப்படி எப்போது நடிகையானாள் என்று எனக்குச் சுத்தமாய் ஏதும் தெரியாது.

நூர்ஜஹானுடைய நாகரிகமான கணவன் சையத் ஷௌகத் ஹுசைன் ரிஸ்வி இன்னும் இருக்கிறான். அவளுடைய அழகான குழந்தைகளும் அது போலவே, அவள் ஒரு தாய், அடுத்து கூர்மையான கத்தியால் தன்னை வெட்டிக் கொண்டு அவள் மீதான காதலை நிரூபிக்க முயன்ற முடிவெட்டுபவன் லாகூரில் இருக்கி

றான். நான்கு வயது காதலன் சாகித் ஜலால் 'டாக்கு' என்று அழைக்கப்பட்டவன், அவளைத் தன்னுடைய மனைவியாக்கிக் கொள்ள கற்பனை செய்து கொண் டிருப்பதைச் சொல்லவே வேண்டாம். பாத்திரங்களைக் கழுவிக் கொண்டிருக்கும்போது தங்களுடைய மோச மான குரலில் அவள் பாடிய பாடல்களைப் பாடிக் கொண்டிருக்கும் சமையல்காரர்களை நாம் மறக்கக் கூடாது. இறுதியாக அவள் அணிந்து கொண்டிருக்கும் கோரமான உள் பாடியைப் பார்க்க, சகித்துக்கொள்ள முடியாமல் இருக்கிறான் சாதத் ஹசன் மண்ட்டோ. இந்த முன் மேடுகளை இப்படித் தூக்கி வைத்துக் கொள் வதில் என்ன அழகைக் கண்டாள் அவள்? சையத் ஷௌகத் ஹுசைன் ரிஸ்வி அவனுடைய நாகரி கமான உணர்வுகளை முழுமையாய் அத்துமீறி, இதை ஏன் அனுமதிக்கிறான் என்று என்னால் சொல்ல முடிய வில்லை.

***



நர்கிஸ்

## துயரம் சுமந்த குவளை மலர்

இவையெல்லாம் ரொம்பக் காலத்துக்கு முன் நடந்தது. சத்தாரி நவாபின் மகள் தஸ்னிம், பின்னாளில் திருமதி. தஸ்னிம் சலீம் சத்தாரி, எனக்கு எழுதியிருந்த கடிதத்தில்,

"என் கணவர், உங்களுடைய மைத்துனனைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?... அவர் பம்பாயிலிருந்து திரும்பியது முதல் நான் மிகவும் சந்தோஷப்படுமளவிற்கு உங்களைப் பற்றியே ஓயாமல் பேசிக் கொண்டிருக்கிறார். நான் இதுவரை, பார்த்திராத சந்தித்திராத என் சகோதரனைப் பார்ப்பதில் அவருக்கு நிறைய தயக்கமிருந்தது. உண்மையில், உங்களைப் பற்றிப் பேசி என்னைக் கிண்டல் செய்தார். இப்போது கடைசி இரண்டு நாட்களாக, நானும் பம்பாய் வந்து உங்களைச் சந்திக்க வேண்டுமென்று வற்புறுத்தினார். நீங்கள் அவரை மிகவும் கவர்ந்து விட்டதாகச் சொன்னார். அவர் உங்களைப் பற்றி பேசுவதைக் கேட்கும் போது, எனக்கு நீங்கள் சகோதரன் என்பதை விட, அவருக்கு நீங்கள் சகோதரன் என்றே நினைக்கத் தோன்றும். எப்படியிருந்தாலும், நான் மனிதர்களைக் கவனமாகத் தேர்ந்தெடுப்பதில் அவருக்கு மகிழ்ச்சியே. சலீமுக்கு முன்பே என் சகோதரன் இங்கு வந்து சேர்ந்துவிட்டதால் உங்களைச் சந்தித்த விஷயத்தை உடனடியா

கத் தெரிவித்தான். நர்கிஸ் பற்றி அவன் ஏதும் சொல் லவில்லை என்றாலும், சலீம் வந்து சேர்ந்தவுடன் 'நக்ஷாபு'டனான உங்கள் சண்டை மற்றும் எல்லாவற் றையும் கொட்டிக் கவிழ்க்க அப்போதுதான் எனக்கு எல்லாம் புரிந்தது. சலீம் இரண்டாவது முறையாக, ஜாதன்பை வீட்டிற்குப் போனது பற்றி வருத்தப்பட்டார். அதற்குக் காரணம், அவரின் சகோதரன் 'ஷாம் ஷத்' தான். நீங்கள் அவனைச் சந்தித்திருக்கிறீர்கள். எப்ப டியிருந்தாலும், உங்களுக்குத் தெரியும். சலீம் எப்போ தேனும் சலனப்பட்டிருந்தால், அது லீலா சிட்னிஸுக் காகத்தான். அது குறைந்தபட்சம் அவரின் நல்ல ரச னையை வெளிப் படுத்துகிறது..."

சலீம் என்னைப் பார்க்க பம்பாய் வந்தபோது, அது எங்கள் முதல் சந்திப்புதான் என்றாலும், தஸ்னிம் எழு தியிருப்பது போல அவன், அவளின் கணவன் என்ப தால் எனக்கு மைத்துனன் ஆனான். என்னால் முடிந்த அளவு உபசரித்தேன்.. திரைப்படத் துறையோடு சம் பந்தப்பட்டவர்களால் எப்போதும் ஓர் 'அன்பளிப்பை'க் கொடுக்க முடியும். விருந்தினரைப் படப்பிடிப்புத் தளத் திற்கு அழைத்துச் செல்வது. அதனால் நானும் கடமை தவறாமல் ஸ்ரீ ஸ்டுடியோவைச் சுற்றிக் காண்பித்தேன். அப்போது கே. அஸீப், 'பூல்' படமெடுத்துக் கொண்டிருந் தார்.

சலீம் மற்றும் அவனின் நண்பர்கள் இத்தோடு சந்தோ ஷம் அடைந்திருக்க வேண்டும் என்றாலும் பம்பாய் வரு வதற்கு முன்பே அவர்கள் வேறு ஏதோ திட்டம் போட்டி ருப்பதாக எனக்குத் தோன்றியது. ஆகையால் ஒரு சம யத்தில் மிகச் சாதாரணமாக சலீம் கேட்டான்.

"இப்போது நர்கிஸ் எங்கிருக்கிறாள்?..."

"அவள் அம்மாவோடு" என்றேன் சாதாரணமாக. என் கிண்டல் குப்புற விழுந்தது. ஏனெனில் ஒரு நவாப் மிகவும் சாதாரணமாக, "ஜாதன்பையோடவா" என்று கேட்டான்.

"ஆமாம்"

அடுத்து சலீம் பேசினான், "யாரேனும் அவளைப் பார்க்க முடியுமா?... நான் என்ன சொல்கிறேன் என்றால் நண்பர்கள் அவளைப் பார்க்க ரொம்ப ஆர்வமாய் இருக்கிறார்கள். உங்களுக்கு அவளைத் தெரியுமா?"

"எனக்குத் தெரியும்... ஆனால்...." நான் பதிலளித்தேன்.

"ஏன்?" அவர்களில் ஒருவன் கேட்டான்.

"நானும் அவளும் ஒரு படத்தில் கூட சேர்ந்து பணியாற்றியது கிடையாது என்பதால்...." என்றேன்.

"அப்படி என்றால் இதில் நாங்கள் உங்களைத் தொந்தரவு செய்யக்கூடாது" என்றான் சலீம்.

இருந்தாலும், நானும் நேரில் சென்று நர்கிஸைப் பார்க்க வேண்டும் என்று எண்ணினேன். நானே நேரில் சென்று பார்க்க வேண்டும் என்று பலமுறை தீர்மானித்தும் என்னால் அதைச் செய்ய முடிந்ததில்லை. அவளைப் பார்க்க நான் அழைத்துச் செல்லும் இந்த வாலிபர்கள் தங்கள் கண்கள் குழியிலிருந்து பிதுங்கி நிஜமாகவே வெளியே தெறிக்கும் அளவிற்குப் பெண்களை முறைத்துப் பார்க்கும் வகையைச் சேர்ந்தவர்கள். ஆனால் கபடமில்லாதவர்கள். அவர்களுக்கு வேண்டியதெல்லாம், நர்கிஸை ஒரு முறையேனும் பார்த்துவிட்டு, தங்கள் ஊருக்கோ, எஸ்டேட்டுக்கோ திரும்பியவுடன் மிகப் பிரபலமான சினிமா நடிகை நர்கிஸைப் பாத்தோம் என்று நண்பர்கள் மத்தியில் பெருமையாய்ச் சொல்

லிக் கொள்ளத்தான். அதனால், "நாம் போய் அவளைப் பார்க்கலாமென்று" அவர்களிடம் சொன்னேன்.

நான் ஏன் நர்கிஸைப் போய்ச் சந்திக்க வேண்டும்? பம் பாய் முழுக்க நடிகைகளால் நிறைந்திருந்ததால், அவர் கள் வீட்டிற்கு எப்போது வேண்டுமென்றாலும் நான் போகலாம். நான் இதற்குப் பதில் சொல்லும் முன் ஒரு சுவாரஸ்யமான கதையைச் சொல்கிறேன்.

அப்போது நான் ஃபிலிமிஸ்தானில் இருந்தேன். காலையில் வேலை மிகவும் சீக்கிரமாகத் தொடங்கி மாலை எட்டு மணிக்கு முடியுமளவிற்கு நாட்கள் நீண்டு கிடந்தன. ஒரு நாள் நான் வீட்டிற்கு வழக்கத்தை விடச் சற்று முன்னதாக, சரியாகச் சொன்னால் மதியமே திரும் பினேன். நான் உள்ளே நுழைய, அந்த இடத்தில் ஏதோ வித்தியாசத்தை உணர்ந்தேன். யாரோ கம்பி வாத்தி யத்தை மீட்டிவிட்டு பார்வையிலிருந்து மறைந்து விட்டது போலிருந்தது. என் மனைவியின் இரண்டு தங்கைகள் தங்களின் தலைமுடியைச் சீவிக் கொண்டிருந்தாலும் கவனம் எங்கோ இருப்பது போல் தோன்றிற்று. அவர் களின் உதடுகள் அசைந்து கொண்டிருந்தாலும் என் னால் ஒரு வார்த்தையைக் கூட கேட்க முடியவில்லை. அவர்கள் எதையோ மறைக்க முயலுகிறார்கள் என்பது மட்டும் தெளிவானது. நான் சோபாவில் என்னை ஆசு வாசப்படுத்திக் கொள்ள, இரண்டு சகோதரிகளும் ஒரு வர் மற்றொருவர் காதில் ஏதோ கிசுகிசு என்று பேசிக் கொண்டு, பிறகு ஒன்று சேர்ந்து "பாய் சலாம்" என்றார் கள். நான் பதிலுக்கு வாழ்த்துச் சொல்லி, அவர்களை உற்றுப் பார்த்து "என்ன விஷயம்" என்று கேட்டேன்.

அவர்கள் ஏதோ திரைப்படம் போகத் திட்டம் போட்டி ருக்கிறார்கள் என்று நினைத்தேன். ஆனால் அது உண் மையில்லை. இருவரும் ஒருவர் மற்றொருவரிடம் மெல்

லிய குரலில் ஆலோசனை செய்து, உரத்த சிரிப்பைக் கொட்டி, பக்கத்து அறைக்கு ஓடிப் போனார்கள். அவர்கள் தங்களின் நண்பரை அழைத்திருக்கிறார்கள் என்பதையும், எதிர்பாராமல் நான் இங்கு வந்ததால் அவர்களின் திட்டம் பாதிக்கப்பட்டதையும் என்னால் உணர முடிந்தது.

மூன்று சகோதரிகளும், சற்று நேரம் ஒன்றாகக் கூடி ஏதோ பேசிக்கொள்வதை என்னால் கேட்க முடிந்தது. அங்கு நிறைய சிரிப்பு நிறைந்திருந்தது. சில நிமிடங்கள் கழித்து என் மனைவி தன் சகோதரிகளிடம் பேசுவது போல் பாவனை செய்தாலும், என் கவனத்தைத் திருப்ப எண்ணி, "என்னை ஏன் கேட்கிறீர்கள்? நீங்களே அவரிடம் ஏன் பேசக்கூடாது? சாதத்! நீங்கள் வழக்கத்தைக் காட்டிலும் இன்று ரொம்ப முன்னதாக வந்து விட்டீர்கள்" என்றாள். "ஸ்டுடியோவில் வேலை இல்லை" என்று அவளிடம் சொன்னேன்.

"இந்தப் பெண்களுக்கு என்ன வேண்டுமாம்?" என்று கேட்டேன்.

"அவர்கள் நர்கிஸை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம் என்று சொல்ல விரும்புகிறார்கள்" என்று பதிலளித்தாள். அடிக்கடி இவர்களை வந்து பார்க்கும், அதே பகுதியில் வசிக்கும் பார்ஸிப் பெண்ணைப் பற்றித்தான் சொல்கிறார்கள் என்று எண்ணி, "அதனாலென்ன? இதற்கு முன் அவள் இங்கு வந்ததே கிடையாதா என்ன?" என்றேன். அவளின் தாய் ஒரு முஸ்லிமைத் திருமணம் செய்து கொண்டவள். இந்த நர்கிஸ் இதற்கு முன் இங்கு வந்தது கிடையாது. "நான் நடிகை நர்கிஸைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறேன்" என்று என் மனைவி பதில் தந்தாள். "அவள் இங்கு வந்து என்ன செய்யப் போகிறாள்?" என்றேன்.

பிறகு என் மனைவி, முழுக் கதையையும் என்னிடம் சொன்னாள். வீட்டில் தொலைபேசி இருந்ததால் ஒரு நிமிடம் கிடைத்தாலும் மூன்று சகோதரிகளும் அதில் பேசிக் கொண்டிருக்கவே விரும்பினார்கள். தங்கள் நண்பர்களோடு பேசிச் சலித்த பிறகு, ஏதேனும் நடிகையின் எண்ணை டயல் செய்து, "ஓ...! நாங்கள் உங்களின் பெரும் ரசிகைகள். நாங்கள் இன்றுதான் டெல்லியிலிருந்து வந்தோம் என்றாலும் மிகச் சிரமப் பட்டு உங்கள் தொலைபேசி எண்ணைக் கண்டுபிடித் தோம். உங்களைப் பார்க்க நாங்கள் துடித்துக்கொண்டிருக்கிறோம்... உங்களை நேரில் பார்க்க நாங்கள் வந்திருப்போம். ஆனால் நாங்கள் பர்தா அணிந்திருப்பதால் எங்களால் வீட்டை விட்டு வெளியே வர முடியவில்லை... நீங்கள் எவ்வளவு அழகாக இருக்கிறீர்கள். நிச்சயமாகப் பேரழகு. அத்தோடு என்ன இனிமையான குரல் உங்களுக்கு வாய்த்திருக்கிறது. அவர்கள் திரையில் கேட்கும் குரல் 'ஷாம் ஷத் பேகம்' அல்லது 'அமீர்பை கர்நாதிகி'யுடையது என்று அவர்களுக்குத் தெரிந்திருந்தாலும் இது போன்ற பொதுவான பைத்தியக்காரத்தனமான உரையாடலைத் தொடங்குவார்கள்.

நடிகைகளுக்குப் பட்டியலில் இல்லாத தொலைபேசி எண்கள் இருக்கும். இல்லையென்றால், அவர்களின் தொலைபேசி அடித்துக் கொண்டிருப்பது எப்போதும் ஓயாது. இருந்தாலும் இந்த மூவரும் என் நண்பனும் திரைக்கதை ஆசிரியனுமான 'ஆகா காலிஷ் கஷ்மிரி'யின் உதவியோடு ஏறக்குறைய எல்லா நடிகைகளின் தொலைபேசி எண்களையும் திரட்டி வைத்திருந்தார்கள். இத்தகைய தொலைபேசி உரையாடல்களில் ஒருமுறை அவர்கள் நர்கிஸோடு பேச, அவள் உரையாடிய விதம் இவர்களுக்கு மிகவும் பிடித்திருந்தது. அவர்கள் சம வயது கொண்டவர்கள் என்பதால்,

சுலபமாக நண்பர்களாகி அடிக்கடி தொலைபேசியில் பேசிக் கொண்டாலும் ஒருமுறையேனும் நேரில் சந்தித் தது கிடையாது. தொடக்கத்தில் சகோதரிகள் தாங்கள் யாரென்பதை வெளிக் காட்டவில்லை. ஒருவர் தான் ஆப்பிரிக்காவிலிருந்து வந்திருப்பதாகவும், மற்றொருவர் தன் அத்தையைப் பார்க்க லக்னோவிலிருந்து வந்தி ருப்பதாகவும் சொல்லியிருக்கிறார்கள், அல்லது ராவல் பிண்டியிலிருந்து நர்கிஸைத் தரிசனம் பண்ண பம்பாய் வந்தவர்களாக. என் மனைவி சில சமயங்களில் தான் குஜராத்திலிருந்து வந்தவளாகவும் வேறு சமயங்களில் பார்ஸியாகவும் நடித்திருக்கிறாள். வெகு சில சமயங்க ளில் நர்கிஸ் எரிச்சலடைந்து உண்மையில் இவர்கள் யார்? எதற்காகத் தங்களின் உண்மையான பெயரை மறைக்கிறார்கள் என்று கேட்டிருக்கிறாள்.

தன் வீட்டிற்குப் போன் செய்யும் ரசிகர்கள் கூட்டத் திற்கு அளவில்லை என்றாலும், இவர்களை நர்கிஸுக் குப் பிடித்திருக்கிறது என்பது தெளிவாகத் தெரிகி றது. இந்த மூன்று பெண்களும் வித்தியாசமானவர்களாக இருந்ததாலும் இவர்களைச் சந்திக்க விரும்பியதாலும் இவர்கள் யாரென்று அறிந்துகொள்ள மிகவும் விரும் பினாள். எப்போது இந்த மூன்று மர்மமான பெண்கள் அழைத்தாலும் அப்போதெல்லாம் எல்லாவற்றையும் அப்படியே போட்டு விட்டு மணிக்கணக்காகப் பேசிக் கொண்டிருப்பாள். ஒருநாள் நர்கிஸ் இவர்களைச் சந் திக்க வேண்டும் என்று வற்புறுத்தினாள். என் மனைவி நாங்கள் வசிக்கும் இடத்தைச் சொல்லி அதைக் கண் டுபிடிப்பதில் ஏதேனும் சிரமம் இருந்தால் பைகுல்லாவி லுள்ள ஹோட்டலில் இருந்து போன் செய்தால் அங்கு சென்று அவளை அழைத்து வருவதாக நர்கிஸிடம் சொல்லியிருக்கிறாள்.

அன்று நான் வீட்டிற்கு வந்தபோது, தான் அந்தப் பகுதியில் இருப்பதாகவும், ஆனால் வீட்டைக் கண்டுபிடிக்க முடியவில்லையென்றும் அப்போது தான் நர்கிஸ் போன் செய்திருக்கிறாள். அவளை அழைத்து வர எல்லோரும் அவசரமாய்க் கிளம்பிக் கொண்டிருந்தார்கள். நான் பொருத்தமற்ற நேரத்தில் உள்ளே நுழைந்துவிட்டேன்.

நான் எரிச்சலடைவேன் என்று என் மனைவி நடுக்கம் கொள்ள, இரண்டு சகோதரிகளும் மிகவும் பயந்து கிடந்தார்கள். நான் எரிச்சலடைவது போல், பாவனை காட்ட விரும்பினாலும் அது சரியாக வரவில்லை. இது சூதுவாது இல்லாத விளையாட்டு. இந்த முட்டாள்தனமான திட்டத்திற்குப் பின்னாலிருந்தது என் மனைவியா அல்லது அவளின் இரண்டு சகோதரிகளா? உருதுவில் சொல்வார்கள், "ஒருத்தனின் மைத்துனி வீட்டின் பாதி சொந்தக் காரி" என்று. ஆனால் இங்கு எனக்கு ஒன்றல்ல, இரண்டு. நான் போய் நர்கிஸை அழைத்து வருவதாக முன் வந்தேன். நான் கதவைத் தாண்டி வெளியே வந்தவுடன் மற்றோர் அறையிலிருந்து பலமாகக் கைதட்டும் சத்தம் கேட்டது.

பைகுல்லா பிரதான சதுக்கத்தில், நான் ஜாதன்பையின் மிகப் பெரிய காரையும், அவரையும் கண்டேன். நாங்கள் வாழ்த்துக்களைப் பரிமாறிக் கொண்டோம், "மண்ட்டோ எப்படியிருக்கிறாய்" என்று சற்று சத்தமாகக் கேட்டார். "நான் நன்றாக இருக்கிறேன். ஆனால் நீங்கள் இங்கு என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்" என்று கேட்டேன். பின் இருக்கையில் அமர்ந்திருக்கும் தன் மகளைத் திரும்பிப் பாத்து, "ஒண்ணுமில்லை, பேபி தன் நண்பர்களைச் சந்திக்க வேண்டுமாம். ஆனால் அவர்களிடத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை" என்றார். நான் புன்னகைத்தேன். "நான் உங்களுக்கு வழிகாட்டுகிறேன்" இதைக் கேட்டவுடன் நர்கிஸ் தன் முகத்தை ஜன்

னல் கண்ணாடிக்கு அருகில் கொண்டு வந்து, "அவர்கள் எங்கே வசிக்கிறார்கள் என்று உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டாள். "கண்டிப்பாக" என்று பதில் சொல்லி, "ஒருத்தன் எப்படித் தன் சொந்த வீட்டை மறக்க முடியும்?" என்றேன். ஜாதன்பை மென்று கொண்டிருந்த வெற்றிலையை வாயில் ஒரு பக்கத்திலிருந்து மற்றொரு பக்கத்திற்கு மாற்றி, "இதென்ன கதையாயிருக்கு?" என்றார். நான் கார் கதவைத் திறந்து அவருக்குப் பக்கத்தில் உட்கார்ந்தேன். "பீபி, இதில் கதை ஏதும் இல்லை. அப்படியேயிருந்தால் அதன் ஆசிரியர்கள் என் மனைவியும் அவளின் சகோதரிகளாகவும்தானிருக்க வேண்டும்" என்றேன். பிறகு நான் வீட்டிற்கு வந்தது முதல் எல்லாவற்றையும் விளக்கிச் சொன்னேன். நர்கிஸ் மிகக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தாள். ஆனால் அவளின் அம்மாவிற்கு இது அவ்வளவாகப் பிடிக்கவில்லை. "இந்தச் சாத்தான்களைச் சபிக்க... அவர்கள் ஆரம்பத்திலேயே உன் வீட்டிலிருந்துதான் பேசுவதாகச் சொல்லியிருந்தால் பேபியை நான் உடனடியாக அனுப்பியிருப்பேன். நான்... நான்... நாட்கணக்காக மிகவும் ஆவலோடு இருந்தோம்... கடவுளே... பேபி இந்த மூவரின் தொலைபேசி அழைப்புக்காக எவ்வளவு உணர்ச்சிவசப்பட்டும், எதிர்பார்ப்போடும் இருந்தாள் என்று உனக்குத் தெரியாது. எப்போது தொலைபேசி வந்தாலும் அதை எடுக்க அவள் வருவாள்... ஒவ்வொரு முறையும் மணிக்கணக்காக இவ்வளவு இனிமையாக யாருடன் பேசிக் கொண்டிருக்கிறாள் என்று கேட்பேன். அவர்கள் யாரென்று தனக்குத் தெரியாது என்றும், ஆனால் அவர்கள் நல்ல மனிதராகத் தெரிந்தார்கள் என்று மட்டும் சொல்வாள். ஒரு முறை நானும், தொலைபேசியை எடுத்துப் பேச அவர்கள் நடத்தை எனக்கு மிகவும் பிடித்திருந்தது. அவர்கள் நல்ல குடும்பத்திலிருந்து வந்தவர்களாகத் தெரிந்தார்கள். ஆனால் இந்தக் குட்டிச்சாத்தான்கள் தங்களின்

பெயரை என்னிடம் சொல்ல மறுத்தார்கள். இன்று பேபி, சந்தோஷத்தால் நிலை கொள்ளாமல் இருக்கக் காரணம், அவர்கள் இவளைத் தங்கள் வீட்டிற்கு அழைத்து, எங்கு வசிக்கிறார்கள் என்று சொல்லியிருக்கிறார்கள். நான், உனக்கென்ன பைத்தியமா! அவர்கள் யாரென்று உனக்குத் தெரியாது என்று சொன்னேன். ஆனால் இதையெல்லாம் கேட்கும் நிலையில் அவள் இல்லை. என்னை மிகவும் தொந்தரவு செய்ததால், நானே வர வேண்டியதாயிற்று. கடவுள் புண்ணியத்தில் அந்தப் பூதங்கள் உன் வீட்டில் தான் வசிக்கிறார்கள் என்று தெரிந்ததால்..."

"நீங்கள் இங்கே வந்திருப்பது நிச்சயமாக நடந்திருக்காது" என்று அவர் பேச்சை முடிக்கவிடாமல் தடுத்தேன்.

அவர் முகத்தில் புன்னகை வந்தது. "உண்மைதான். எனக்கு உன்னைத் தெரியாதா?"

ஜாதன்பை நல்ல படிப்பாளி. என் எழுத்துக்களை எப்போதும் படிப்பார். ஷாகித் அஹமது டெல்லி, ஆசிரியராக இருந்த 'ஸகி' என்ற உருது இலக்கியப் பத்திரிகையில் என்னுடைய 'முற்போக்காளர்களின் கல்லறை' சமீபத்தில் வெளிவந்தது. அதன் பக்கம் அவர் ஏன் திரும்பினார் என்று கடவுளுக்குத்தான் வெளிச்சம். "கடவுளே!" "மண்ட்டோ என்ன எழுத்தாளன் நீ? இதில் நீ செய்திருப்பது போல் உன்னால் மட்டுமே இவ்வளவு பிரமாதமாகக் கத்தியைச் சொருக முடியும். பேபி... அன்று முழுக்க நான் அதைப் பற்றி பேசிக் கொண்டிருந்தது உனக்கு நினைவிருக்கா?" என்றாள்.

ஆனால் நர்கிஸ் இதுவரை தான் சந்தித்திராத நண்பர்களைப் பற்றி சிந்தித்துக்கொண்டிருந்தாள். "நாம் போகலாம் அம்மா!" என்று பொறுமையின்றிக் கெஞ்சினாள்.

"நாம் போகலாம்" என்றார் ஜாதன்பை என்னிடம்.

சில நிமிடங்களில் நாங்கள் வீட்டிலிருந்தோம். பால்க னியிலிருந்து மூன்று சகோதரிகளும் எங்களைப் பார்த் தார்கள். இளைய வர்கள் இருவரும் தங்கள் பரப ரப்பை அடக்க முடியாமல், ஓயாமல் ஒருவர் மற்றொ ருவர் காதில், ஏதோ இரகசியம் பேசிக் கொண்டே யிருந்தார்கள். நாங்கள் படியேறிச் சென்றோம். நர்கிஸ் மற்றும் இரண்டு இளையவர்கள் அடுத்த அறைக்குள் செல்ல, ஜாதன்பை, என் மனைவி மற்றும் நான் முன் னறையில் அமர்ந்து கொண்டோம். இந்தப்பெண்கள் இத்தனை மாதங்களாக விளையாடிக்கொண்டிருந்த கண்ணாமூச்சி விளையாட்டைப் பற்றி வேடிக்கையா கப் பேசிக் கொண்டிருந்தோம். என் மனைவி இப் போது சற்று அமைதியடைய, உபசரிப்பாளர்களுக்கான வேலைகளைச் செய்யச் சென்றாள். நானும் ஜாதன்பை யும் திரைப்படத் துறையைப் பற்றியும் அது இன்றிருக்கும் நிலை பற்றியும் பேசிக் கொண்டிருந்தோம். அவரால் எப் போதும் வெற்றிலை இல்லாமல் இருக்க முடியாது என் பதால் வெற்றிலைப் பெட்டியைத் தன்னோடு எப்போ தும் எடுத்து வருவார், எனக்கும் ஓரிரு முறை எடுத்துக் கொள்ளும் சந்தர்ப்பம் கிடைத்தது.

நர்கிஸை பத்து அல்லது பதினொரு வயதுக்குப் பிறகு நான் பார்த்தது கிடையாது. திரைப்படம் வெளியாகும் இரவுகளில், அம்மா கையைப் பிடித்துக் கொண்டு நின் றது நினைவிருக்கிறது. மெல்லிய கால்களும், கவர்ச்சி யில்லாத நீண்ட முகமும் ஒளியில்லாத இரண்டு கண் களும் கொண்ட சிறுமி அவள். பார்ப்பதற்கு அப்போ துதான் தூக்கத்திலிருந்து எழுந்து வந்தது போலவோ அல்லது தூங்கப் போவது போலவோ காணப்படுவாள். ஆனால் இப்போது உடலில் சரியான இடங்களில் சரி யாக நிரம்பிய இளம் நங்கையாக இருந்தாலும், அவள் கண்கள் மட்டும் எப்போதும் போல சிறிதாகவும், கன

வைச் சுமந்தும் கொஞ்சம் துயரம் கொண்டும் காணப் பட்டன. நான் நினைக்கிறேன் அவளுக்கு மிகச் சரியா கப் பெயர் சூட்டப்பட்டுள்ளது. நர்கிஸ் - துயரம் சுமந்த குவளை மலர். உருதுக் கவிதைகளில் 'நர்கிஸ்' எப்போ தும் பார்வையற்றது, துயரம் சுமந்த குவளை மலர் என்றே சொல்லப் படுகிறது.

அவள் எளிமையாகவும், குழந்தை போல விளை யாடிக் கொண்டும், எப்போதும் வற்றாது சளி பிடித்தி ருப்பது போல் மூக்கை உறிஞ்சிக் கொண்டும் இருப் பாள். இதை 'வார்சாத்' திரைப்படத்தில் பயன்படுத்த, அது நல்ல வரவேற்பைப் பெற்றது. அவளின் வெளிறிய முகம் அவளுக்கு நடிப்புத்திறன் இருப்பதாகக் காட்டி யது. அவளுக்குத் தன் உதடுகளைச் சற்றே சேர்த்து வைத்ததுபோல் பேசும் பழக்கம் இருந்தது. அவளின் சிரிப்பு பிரக்ஞை பூர்வமானதாகவும், கவனமாகப் பழக் கிக் கொள்ளப்பட்டதாகவும் இருந்தது. இந்தப் பழக்கவ ழக்கங்கள், அவளது நடிப்பு பாணியை வளர்த்தெடுக்க அவளுக்குக் கச்சாப்பொருளாக உபயோகப்பட்டதை ஒருவரால் உணர முடியும். நினைத்துப் பார்த்தால் நடிப்பு என்பது இத்தகைய பழக்க வழக்கங்களையும் கொண் டதுதானே.

நான் அவளிடம் கவனித்த மற்றொரு விஷயம், தான் ஒரு நாள் நடிகைக்கான அந்தஸ்தைப் பெறு வோமென்ற நம்பிக்கை. இருந்தாலும், அந்த நாளை நெருக்கத்தில் கொண்டு வர கொஞ்சமும் அவள் அவ சரப்பட்டதில்லை. இளம் வயதின் சந்தோஷங்களைக் கொண்ட சிறு உலகத்திற்கு விடை கொடுத்து வளர்ந்த மனிதர்களின் பெரும் குழப்பங்களையும் அதற்கான வாழ்க்கை முறைகளையும் கொண்ட பெரும் உலகத் திற்குச் செல்ல அவள் விருப்பம் கொள்ளவில்லை.

நாம் மதியத்திற்குத் திரும்பி வருவோம். மூன்று பெண்களும் தங்கள் கான்வென்ட் பள்ளி மற்றும் வீட்டு அனுபவங்களைத் தங்களுக்குள் பகிர்ந்து கொண்டார்கள். அவர்கள் திரைப்பட ஸ்டுடியோவில் என்ன நடக்கிறது என்றோ, காதல் விவகாரங்கள் எப்படி நடத்தப்படுகிறது என்றோ கொஞ்சமும் விருப்பம் காட்டவில்லை. திரைப் படங்களில் தோன்றும்போது பல உள்ளங்களைக் கொள்ளை கொண்ட திரைப்பட நட்சத்திரம் என்பதை நர்கிஸ் மறந்திருந்தாள். இரண்டு பெண்களும் அதற்குச் சமமாக நர்கிஸ் ஒரு நடிகை என்பதையும், அவள் நடிக்கும் படங்களில் சில சமயங்களில் துணிச்சலான செயல்களைச் செய்யும் நடிகை என்பதைப் பற்றியும் கொஞ்சமும் அக்கறை காட்டாமலிருந்தார்கள்.

என் மனைவி நர்கிஸைக் காட்டிலும் வயது கூடியவள் என்பதால் அவளைத் தன் சகோதரிகளோடு மற்றொரு சகோதரியாய்த் தன் பாதுகாப்பில் ஏற்கனவே அரவணைத்துக் கொண்டாள். ஆரம்பத் தில் அவள் நர்கிஸ் மீது ஈடுபாடு காட்டக் காரணம், அவள் திரைப்பட நடிகை என்பதாலும், தன் திரைப்படங்களில் பல மனிதர்களோடு காதல் கொண்டாள் என்பதாலும், திரைக் கதைக்கு ஏற்றாற்போல் அழுதும், சிரித்தும் நடனமாடினாள் என்பதாலும்தான் என்றாலும் இப்போது அப்படி அல்ல. அவள் புளிப்பானவற்றை உண்பதாலும் ஐஸ் வாட்டர் குடிப்பதாலும், பல படங்களில் நடிப்பதாலும் அவள் உடல் கேடு உண்டாகக் கூடாது என்று அக்கறை காட்டினாள். இப்போது நர்கிஸ் ஒரு நடிகை என்பது அவளைப் பொறுத்தமட்டில் பெரிய விஷயமல்ல.

நாங்கள் மூவரும் சுவாரஸ்யமாக வம்பளந்து கொண்டிருந்த போது என் உறவினர்களில் ஒருவர் - 'அபா சாதத்' என்று எங்களால் அழைக்கப்பட்டவர் - உள்ளே நுழைந்தார். அவர் என் பெயரைக் கொண்டிருப்பதோடு

மிகவும் பகட்டான இயல்பு கொண்டவர். நடைமுறைச் சம்பிரதாயங்களைக் கொஞ்சமும் பின்பற்றாதவர் என்பதால் நான் அவரை ஜாதன்பைக்கு அறிமுகம் செய்ய வேண்டிய தேவையைக் கூட உணரவில்லை. இருநூறு பவுண்டுக்கு அதிகமான எடையுள்ள தன் உடம்பை சோபாவில் சரித்துக் கொண்டு, "சாபோ ஜான்... உன் தம்பியிடம் இந்தக் காரெல்லாம் வேண்டாமென்று வேண்டிக் கொண்டேன். ஆனால் அவன் கேட்கவில்லை. நாங்கள் கொஞ்ச தூரம் தான் ஓட்டியிருப்போம். அந்த இழவு நின்று போக அவன் அதைச் சரி பார்த்துக் கொண்டிருக்கிறான். என்னால் அங்கு காத்து நிற்க முடியாது என்று சொல்லி, காத்திருப்பதற்குப் பதிலாக இந்த உடம்பைத் தூக்கிக் கொண்டு இங்கு வந்து சேர்ந்தேன்" என்றார்.

ஜாதன்பை ஏதோ ஒழுக்கங்கெட்ட நவாபைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்க, உடனே அபா சாதத் அந்த விஷயத்தில் ஆர்வத்துடன் தன்னையும் ஈடுபடுத்திக் கொண்டார். அவரின் கணவர் மங்ரோல் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர் என்பதால், கத்தியவார் பகுதியைச் சுற்றியிருக்கும் அரசுகளை ஆண்டு கொண்டிருக்கும் எல்லா நவாபுகளைப் பற்றியும், இளவரசர்களைப் பற்றியும் அவருக்குத் தெரியும். அந்த இளவரசர்களை எல்லாம் ஜாதன்பைக்குத் தொழில் ரீதியாகத் தெரியும். இந்தப் பேச்சு ஒரு சமயத்தில் மிகவும் பிரபலமான, பல அரசுகளை ஓட்டாண்டியாக்கிய விலை மாது பக்கம் திரும்பியது. அபா சாதத் அவருக்கேயுரிய பாணியில், "இந்தப் பெண்களிடமிருந்து கடவுள் நம்மைக் காப்பாற்றட்டும். இவர்கள் பிடியில் சிக்குண்டவர்கள் யாராக இருந்தாலும் இந்த ஜென்மத்திலும், அடுத்த ஜென்மத்திலும் தொலைந்தார்கள். இந்த ஜந்துக்களின் பொறியில் சிக்கிக் கொண்டவன், தன் பணம், உடல் ஆரோக்கியம்,

நற்பெயர் எல்லாவற்றுக்கும் விடைகொடுக்க வேண்டிய துதான். என்னைக் கேட்டால், இந்த உலகத்தின் மீது உள்ள மிகப் பெரிய சாபம் இந்த வேசிகளும், விலை மாதுகளும் தான்..."

என் மனைவியும், நானும் ரொம்ப சங்கடப்பட்டோம், அபா சாதத்தை எப்படி நிறுத்துவது என்று தெரியவில்லை. ஆனால் மறுபக்கத்தில் ஜாதன்பை மிகச் சிரத்தையோடு அவரின் கருத்துக்களுக்கு தன் ஏற்பை வெளிக்காட்டிக் கொண்டிருந்தார். ஓரிரு முறை நான் அபா சாதத்தின் பேச்சுக்கு நடுவே பேச முயன்றேன். ஆனால் அவர் மேலும் தன்னை மறந்து பேசிக் கொண்டிருந்தார். சில நிமிஷங்களுக்கு அவர், இத்தகைய பெண்கள் மீது வசைமாரி பொழிந்தார், திடீரென்று மௌனமாக அவரின் சிவந்த அகலமான முகம் பெரும் அதிர்ச்சிக்குள்ளாக, அவர் மூக்கில் அணிந்திருந்த சிறிய வைரம் வழக்கத்தை விட அதிகமாக மின்னியது. தன் தொடையில் ஓங்கி அடித்து, தட்டுத் தடுமாறி, ஜாதன் பையைப் பார்த்து, "நீ... ஜாதன்பை... நீ... ஜாதன்பை தானே.... இல்லையா?"

"ஆமாம்" என்றார் ஜாதன்பை அமைதியாக.

அபா சாதத் நிறுத்தவில்லை, "ஓ... நீயா, நான் சொல்ல வருவது, நீ ரொம்ப உயர்குடி தாஸி தானே?! அப்படித் தானே சாபோஜான்?" என்றார். என் மனைவி உறைந்து போனாள். நான் ஜாதன்பையைப் பார்த்து மெல்லிய தாகச் சிரிக்க, அது அருவருப்பானதாக இருந்திருக்க வேண்டும்.

ஜாதன்பை கொஞ்சமும் அசைந்து கொடுக்காமல், அமைதியாகவும், இன்னும் கூடுதல் விவரங்களோடும் அந்த அபாயகரமான விலைமாதைப் பற்றிய தன் கதையைத் தொடர்ந்தார். ஆனாலும் நிலைமையைச் சரி

செய்ய முடியவில்லை. அபா சாதத் கடைசியாக தான் செய்த அபத்தத்தை உணர, நாங்கள் அதைப் பற்றி ஏதும் சொல்ல முடியாமல் ரொம்பவும் சங்கடப்பட்டுக் கிடந்தோம். அப்போது பெண்கள் உள்ளே நுழைய, இறுக்கம் காணாமல் போனது. நர்கிஸைப் பாடச் சொன்ன போது, ஜாதன்பை "மோகன் பாபுவுக்கு விருப் பம் இல்லதாததால் நான் அவளுக்குப் பாட்டுச் சொல் லிக் கொடுக்கவில்லை. உண்மை என்னவென்றால் எனக்கும் அது பிடிக்கவில்லை. இருந்தாலும் அவளால் கொஞ்சம் பாட முடியும்" என்றாள். பிறகு தன் மகளைப் பார்த்து "பேபி ஏதாவது பாடு!" என்றார்.

குழந்தை போல் நர்கிஸ் பாடத் தொடங்கினாள். அவ ளுக்குக் கொஞ்சமும் குரலே இல்லை. அது இனி மையாகவும் இல்லை. ஒழுங்காகவும் இல்லை. என் கடைசி மைத்துனியை அவளோடு ஒப்பிடும் போது ஆயிரம் மடங்கு சிறப்பாகப் பாடுவாள். இருந்தாலும் திரும்பத் திரும்ப அவள் பாடக் கேட்டுக் கொள்ளப்பட் டதால், இரண்டு மூன்று நிமிடங்கள் நாங்கள் சிரமப்பட வேண்டியிருந்தது. அவள் முடித்தவுடன் என்னையும், அபா சாதத்தையும் தவிர எல்லோரும் புகழ்ந்தார்கள். சில நிமிடங்கள் கழித்து ஜாதன்பை நேரமானதால் திரும்ப வேண்டும் என்றார். பெண்கள் ஒருவரை ஒரு வர் அணைத்துக் கொண்டு மீண்டும் சந்திப்பதாக உறு தியளித்துக் கொண்டார்கள். அங்கு நிறைய கிசுகிசுப் பேச்சுக்கள் கிடந்தன. பிறகு தாயும் மகளும் கிளம்பிப் போனார்கள்.

இதுவே நர்கிஸ் உடனான என் முதல் சந்திப்பு.

இதற்குப் பிறகு பலமுறை நான் அவளைச் சந்தித்தி ருக்கிறேன். தொலைபேசி எப்போதும் இயங்கிக்கொண் டிருக்கும். இந்தப் பெண்கள் அவளோடு தொலைபே

சியில் தொடர்பு கொள்ள, அவள் தன் தாயில்லாமல் காரிலேறி இங்கு வருவாள். அவள் ஒரு நடிகை என்ற உணர்வு ஏறக்குறைய முற்றிலுமாக மறைந்து போனது. இந்தப் பெண்கள் உறவுக்காரர்கள் போலவோ அல்லது ஒருவரை ஒருவர் பல ஆண்டுகளாக அறிந்திருந்ததைப் போலவோ சந்தித்துக் கொண்டார்கள். பலமுறை நர்கிஸ் கிளம்பிச் சென்றவுடன் மூன்று சகோதரிகளும் அவளிடம் நடிகைக்கானது ஏதுமில்லை என்று சொல்வார்கள்.

இந்தச் சமயத்தில் நர்கிஸின் ஒரு புதுத் திரைப்படம் வெளியாக அதில் அவள் கதாநாயகனோடு நாணத்தோடு இரகசியம் பேசிக் கொண்டும், ஏக்கத்தோடு அவனைப் பார்த்துக்கொண்டும், அவன் கையைப் பிடித்துக்கொண்டும், அணைத்துக்கொண்டும் இன்னும் பல காதல் காட்சிகளில் நடித்திருந்தாள். என் மனைவி, 'அவளைப் பாரேன்! அவள் பெருமூச்சு விடுவதைப் பார்த்தால் உண்மையிலேயே அவனோடு காதல் கொண்டிருப்பது போல் தோன்றுகிறது' என்று சொன்னாள். அவளின் இரண்டு சகோதரிகள் தங்களுக்குள், "நேற்றுதான் சர்க்கரையைக் கொண்டு எப்படி இனிப்புப் பலகாரம் செய்வது என்று கேட்டாள்" என்று பேசிக் கொண்டார்கள்.

நர்கிஸின் நடிப்புத் திறமையைப் பொறுத்தமட்டில் என் சொந்த அபிப்ராயம், அவளால் உணர்ச்சிகளை வெளிப்படுத்த முடியாது. அனுபவமற்ற அவளின் விரல்கள் காதலுணர்வுகளின் ஓட்டத்தை உணர முடியாமல் இருந்தது. பள்ளிக்கூட ஓட்டப்பந்தயத்தில் ஓடுவதிலிருக்கும் உற்சாகத்திற்கு, காதல் கொள்ளும் உற்சாகத்திற்கும் உள்ள வேறுபாட்டை அவள் அறிந்திருக்கவில்லை. எந்த ஒரு கூர்மையான பார்வையாளனாலும், ஆரம்பக் காலப் படங்களில் அவளின் நடிப்பு என்பது

திறமையோ, சாதுரியமோ இல்லாமல் காணப்படுவதை உணர முடியும். திறமையின் மிகச் சரியான விளைவு என்பது யதார்த்தமாக வெளிப்பட வேண்டும். ஆனால் சிறகு முளைக்காததாலும், அனுபவமில்லாததாலும் நர்கிஸின் நடிப்பு கொஞ்சம் களையற்றுக் கிடந்தது. அவளின் நேர்மையும் தொழில் மீது கொண்ட காதலும் தான் ஆரம்பக்காலப் படங்களில் அவளை உயர்த்திப் பிடித்தது. இந்த உலகத்தைப் பற்றி ஏதும் அறியாதவளாக இருந்ததால் அந்த உண்மையான வெகுளித்தனம் அவள் நடிப்பில் வெளிப்பட்டது. ஆனால் இப்போது வயதும், அனுபவமும் கூட அவள் முதிர்ந்த நடிகையாக வளர்ந்து வந்தாள். காதலுக்கும் பள்ளிக்கூட விளையாட்டிற்குமுள்ள வேறுபாட்டை உணர்ந்திருந்தாள். காதலின் எல்லா நுணுக்கங்களையும் அவளால் வெளிக்கொணர முடிந்தது. அவள் வயதுக்கு வந்து விட்டாள்!.

நடிகையின் புகழுக்கான பயணம் மெதுவாய் நடந்தது அவளுக்கு நல்லதாய் அமைந்தது. ஒரே பாய்ச்சலில் அவள் வந்து சேர்ந்திருந் தால், கூர்மையான திரைப் படப் பார்வையாளனின் கலை உணர்வை அது ரொம்பவும் புண்படுத்தியிருக்கும். அவளின் தொடக்கக் காலங்களில் திரைப்படத்திற்கு வெளியேயான அவளின் வாழ்க்கை, அவள் நடிக்க ஏற்றுக்கொண்ட பாத்திரங்கள் போல் அமைந்திருந்தால், என்னைப் பொறுத்தவரையில் நான் அதிர்ச்சியில் மரணமடைந்திருப்பேன்.

அவளின் பிறப்பு அடிப்படையில் சொல்வதென்றால் நர்கிஸ் - நடிகையாய் மட்டும் வந்திருக்க முடியும். ஜாதன்பை எப்படியோ வாழ்க்கையை ஓட்டிக் கொண்டிருந்தாலும் - அவருக்கு இரண்டு மகன்கள் இருந்த போதிலும் - அவரின் கவனம் முழுக்க, பார்ப்பதற்குச் சாதாரணமாய் இருந்த, பாடத் தெரியாத நர்கிஸ்

மீது தான். எப்படி இருந்தாலும் இனிமையான குரலை இரவல் வாங்கிக்கொள்ளலாம் என்றும், திறமை மட்டு மிருந்தால் பார்ப்பதற்கு சாதாரணமாக இருக்கும் பாதிப் பையும் கூட சரிக்கட்டி விடலாமென்று ஜாதன்பைக் குத் தெரியும். அதனாலேயே அவர் நர்கிஸின் வளர்ச்சி யில், அவளிடம் என்ன திறமை இருந்தாலும் அதனை முழுமையாய் வெளிக்கொணர தன்னை முழு அளவில் அர்ப்பணித்துக் கொண்டு, தன் ஆளுமையின் மையப் பகுதியாய் அமைத்துக் கொண்டார். நர்கிஸ் நடிகையாய் இருக்க விதிக்கப்பட்டவள். அவள் நடிகையானாள். அவளின் வெற்றியின் இரகசியம், என் அபிப்பிராயத்தில் அவளின் உண்மையான உழைப்பு. இதை அவள் எப் போதும் தக்க வைத்துக் கொண்டாள்.

ஜாதன்பை குடும்பத்தில் மோகன்பாபு, பேபி நர்கிஸ் மற்றும் அவளின் இரண்டு சகோதரர்கள் இருந்தார்கள். எல்லோரும் ஜாதன்பையின் பொறுப்பில் இருந்தார்கள். மோகன்பாபு பணக்காரக் குடும்பத்தில் இருந்து வந்த வர். ஜாதன்பையின் தேன் போன்ற இனிமையான குர லில் தன்னைச் சுற்றிலும் பின்னிய இசை வலையில் மிக வும் கவரப்பட்டு, அவரையே தன் முழு வாழ்க்கையாய் உருமாற்ற அனுமதித்தார். பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருந்தார். பணத்தோடு இருந்தார். படித்தவராகவும், நல்ல ஆரோக்கியமான உடலைக் கொண்டவராகவும் இருந்தார். இந்த எல்லாச் சொத்துக்களையும் கோவி லில் காணிக்கை வைப்பதுபோல் ஜாதன்பை காலடியில் அர்ப்பணித்தார். ஜாதன்பை அந்தக் காலத்தில் பெரும் புகழோடு இருந்தார். முன்னணியிலுள்ள ராஜாக்களும், நவாபுகளும் அவர் பாடியவுடன் தங்கத்தைக் கொண் டும் வெள்ளியைக் கொண்டும் அவரைக் குளிப்பாட்டி னார்கள். இருந்தாலும் தங்கமும், வெள்ளியும் கொண்ட அந்த மழை ஓய்ந்தபின் தன் கரங்களால் மோகன்

பாபுவை அணைத்துக் கொண்டார். காரணம், அவர் மீது மட்டும் தான் அக்கறை காட்டினார். ஜாதன்பை யின் மறைவு வரை மோகன்பாபு அவருடனேயே இருந் தார். ஜாதன்பையும் மோகன் பாபுவைத் தீர்க்கமாய்க் காதலித்தார். ஜாதன்பையின் குழந்தைகளுக்கு அவர் தந்தையாகவும் இருந்தார். ஜாதன்பைக்கு ராஜாக்கள் மீதும் நவாபுகள் மீதும் எந்தக் கற்பனையும் கிடையாது. அவர்களின் பணத்தில் ஏழைகளின் இரத்த வாடை வீசு கிறதென்று அவருக்குத் தெரியும். அவருக்கு இதுவும் தெரியும், பெண்கள் என்று வந்துவிட்டால் அவர்கள் பச் சோந்திகள்.

என் மைத்துனிகளை நேரில் வந்து சந்தித்தாலும் அவர்களோடு மணிக்கணக்காய்ச் செலவு செய்தாலும், அவர்களிடமிருந்து தான் வேறுபட்டவள் என்பதை நர் கிஸ் எப்போதும் உணர்ந்தேயிருந்தாள். அவர்களைத் தன் வீட்டிற்கு அழைக்க மிகவும் தயக்கம் காட்டினாள். காரணம், தன் அழைப்பை அவர்கள் மறுப்பதற்கான வாய்ப்பிருக்கிறது என்று பயந்தாள். ஒரு நாள் நான் அங்கு இல்லாதபோது அவள் தன் நண்பர்களிடம், "நீங்க இப்போது கொஞ்ச நேரமாவது என் வீட்டிற்கு வரவேண் டும்" என்று சொல்லியிருக்கிறாள். சகோதரிகள் என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் ஒருவரையொரு வர் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். என் மனைவி இதில் என் நிலைப்பாட்டை அறிந்திருந்ததால் நர்கி ஸின் அழைப்பை ஏற்றுக் கொண்டிருந்தாலும் என்னிடம் ஏதும் சொல்லவில்லை. மூவரும் சென்றார்கள்.

நர்கிஸ் தன் காரை அனுப்பி வைத்திருந்தாள். பம் பாயில் மிகவும் ஆடம்பரமான குடியிருப்புப் பகுதி யான மெரீன் ட்ரைவை அடைந்த போது நர்கிஸ் இவர்களுக்காகச் சிறப்பு ஏற்பாடுகளைச் செய்திருப் பதை உணர்ந்தார்கள். நர்கிஸ், தன் நண்பர்களை

எதிர்பார்த்துக் கொண்டிருப்பதால், மோகன்பாபு மற்றும் அவரின் இரண்டு வளர்ந்த மகன்கள் அங்கு இருக் கக் கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. பெண் கள் உள்ள அறையில் ஆண் வேலையாட்கள் நுழைய அனுமதிக்கப்படவில்லை. ஜாதன்பை சில நிமிடங்களே வந்து வாழ்த்துப் பரிமாறிக் கொண்டு வெளியேறினார். இவர்களுக்கு எந்தச் சங்கடத்தையும் உருவாக்க அவர் விரும்பவில்லை. மூன்று சகோதரிகளும் அவளுடைய வீட்டிலிருந்தபோது நர்கிஸ் எவ்வளவு உணர்ச்சி வசப் பட்டுக் காணப்பட்டாள் என்று பிறகு சொல்லிக் கொண் டிருந்தார்கள். மிக நுட்பமாக ஏற்பாடுகள் செய்யப்பட்டு, அருகாமையிலிருந்த பார்ஸியின் பால் பண்ணையிலி ருந்து பிரத்தியேகமான மில்க்ஷேக்குக்குச் சொல்லப்பட் டிருந்தது. வேலையாட்கள் சரியானதைத் தேர்வு செய் வார்கள் என்று நம்பிக்கை இல்லாததால் நர்கிஸ், தானே அந்தக் கடைக்குச் சென்று அந்தப் பானத்தை வாங்கி வந்திருக்கிறாள். அவள் உற்சாகத்தாலும் உணர்ச்சி வசப்பட்டிருந்ததாலும் புதிதான ஒன்று போலிருந்த கண் ணாடிக் குவளைகளில் ஒன்றை உடைத்து விட்டாள். அவளின் விருந்தாளிகள் அதற்காக வருத்தம் தெரி வித்த போது, "இது ஒண்ணுமில்லை. பீபி கொஞ்சம் கோபப்படுவார். ஆனால் அப்பா அவரைச் சமாதானப்ப டுத்துவார். பிறகு விஷயத்தை மறந்து போவார்கள்" என் றாள்.

மில்க்ஷேக்குக்குப் பிறகு தான் நடித்த திரைப்படங்க ளில் எடுக்கப்பட்ட புகைப்பட ஆல்பத்தை அவர்களுக் குக் காண்பித்தாள். அந்தப் புகைப்படங்களின் பொரு ளாயிருந்த நர்கிஸுக்கும் அந்தப் புகைப்படங்களைக் காண்பித்துக்கொண்டிருந்த நர்கிஸுக் கும் உலகளவு வேறுபாடு இருந்தது. அவ்வப்போது மூன்று சகோதரிக ளும் அவளை நிமிர்ந்து பார்த்துப் புகைப்படத்திலுள்ள

நர்கிஸோடு ஒப்பிட்டார்கள். "நர்கிஸ்! நீ எப்படி நர்கிஸாக மாறுகிறாய்?" என ஒருத்தி கேட்டாள். நர்கிஸ் வெறுமனே புன்னகைத்தாள், நர்கிஸ் சாதாரணமாகவும் குடும்பப் பெண்ணாகவும் குழந்தை மாதிரியும் இருந்தாள் என்றும் திரையில் மக்கள் பார்ப்பது போல், குலுக்கிக் கொண் டும், குதித்துக் கொண்டும் இருக்கும் பெண் அல்ல அவள் என்றும் என் மனைவி சொன்னாள். ஆனால், நிச் சலனமான குட்டையில் அநாதையாய் மிதந்து கொண் டிருக்கும் உடல், எப்போதாவது வீசும் மெல்லிய காற் றில் அசைவது போல் அவள் கண்களில் சோகம் மிதந்து கொண்டிருப்பதாகவே எப்போதும் நான் உணர்கிறேன்.

நர்கிஸ் அவளுக்கென்று விதிக்கப்பட்டுள்ள புகழை அடைய நீண்ட காலம் காத்திருக்க வேண்டிய அவசி யமில்லை என்பது எனக்குத் தெளிவாயிற்று. விதி எப் போதோ தீர்மானத்தை எடுத்து ஆவணப் பத்திரத்தில் கையெழுத்திட்டு அவளிடம் கொடுத்து விட்டது. பிறகும் ஏன் அவள் சோகம் கொண்டு காணப்படுகிறாள்? திரை யில் அவள் விளையாடும் உண்மை போன்ற காதல் விளையாட்டு ஒரு நாள் அவளைப் பாலைவனத்திற்கு இழுத்துச் செல்லும் என்றும், வேறு எதையும் பார்க்க முடியாமல் தொடர்ந்து கானல் நீர் மட்டுமே அவள் முன் தோன்ற, அவள் தொண்டை தாகத்தால் வறண்டு போக, கூடியிருந்த மேகக் கூட்டங்கள் வெளியிட மழை ஏதும் இல்லாமல் போகும் என்றும் தன் உள்ளுணர்வில் உணர்ந்திருப்பாளோ? அவள் தாகத்தோடு தவிக்கி றாள் என்று நம்ப மறுத்த வானம் அவள் மீது கொஞ்சமும் இரக்கம் காட்ட மறுக்க, பூமியோ எல்லா ஈரப்பசையை யும் தன்னுள் ஆழத்தில் இழுத்துக் கொண்டது. அவளே இறுதியில் தன் தாகம் என்பது கனவுதான் என்று நம்பும் நிலைக்கு வருவாள்.

பல வருடங்களுக்குப் பிறகு நான் அவளைத் திரையில் பார்க்கும் போது, அவளின் சோகம் சோர்வாக மாறியிருப்பதைக் கண்டேன். ஆரம்பத்தில் அவள் எதையோ தேடிக்கொண்டிருப்பதை உணர முடிந்திருந்தது. ஆனால் இப்போது அசதியும் தளர்ச்சியும் அந்த உந்துதலையும் விழுங்கிவிட்டதை உணர முடிந்தது. ஏன்? இந்தக் கேள்விக்கு நர்கிஸ் மட்டுமே பதில் சொல்ல முடியும்!.

நாம் திரும்ப நர்கிஸ் வீட்டிலிருக்கும் மூன்று சகோதரிகளிடம் வருவோம். அவர்கள் தாங்களாகவே அங்கு சென்றதால், அதிக நேரம் தங்கவில்லை. இரண்டு இளைய சகோதரிகள் நான் இதுபற்றி அறிந்து கொண்டு எரிச்சலடைவேன் என்று பயந்து, நர்கிஸிடமிருந்து விடைபெற்று வீடு வந்து சேர்ந்தார்கள். நான் ஒன்றைக் கவனித்தேன். நர்கிஸ் பற்றி அவர்கள் பேசும் போதெல்லாம் அவளின் திருமணம் குறித்த பேச்சும் வரும். இளையவர்கள் யார் எப்போது நர்கிஸைத் திருமணம் செய்து கொள்வார்கள் என்று தெரிந்து கொள்ளத் துடிக்க, என் மனைவியோ திருமணமாகி ஐந்து வருடங்களைக் கடந்துவிட்டவள். நர்கிஸ் எத்தகைய தாயாக இருப்பாள் என்று யூகம் செய்து கொண்டிருப்பாள்.

என் மனைவி முதலில் அவர்கள் நர்கிஸ் வீட்டிற்குப் போய் வந்தது பற்றி ஏதும் சொல்லவில்லை என்றாலும் அவள் சொன்னபோது, அதில் எனக்கு விருப்பம் இல்லை என்பது போல் நடித்தேன். அவள் உடனடியாகத் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள அது தவறுதான் என்று ஒப்புக் கொண்டாள். இந்த மூவரும் வளர்க்கப் பட்ட சமூகப் பழக்க வழக்கங்களின்படியும், ஒழுக்க நெறிகளின்படியும் ஒரு நடிகையின் வீட்டிற்குச் செல்வது முறையற்ற செயல் என்பதால் இந்த விஷயத்தை நான் என்னோடு வைத்திருக்க வேண்டும் என்றும்

சொன்னாள். எனக்குத் தெரிந்தமட்டில் அவர்கள் நர்கிஸைப் பார்க்கச் சென்ற விஷயத்தைத் தங்கள் தாயிடம் கூட - அந்த வயதான பெண்மணி எப்படிப் பார்த்தாலும் குறுகிய மனப்பான்மை கொண்டவரில்லை என்றாலும் - சொல்லவில்லை. இன்று வரைக்கும் அவர்கள் ஏதோ தவறு செய்துவிட்டது போல் ஏன் நினைக்கிறார்கள் என்று எனக்குப் புரியவில்லை. நர்கிஸைப் பார்க்க அவள் வீட்டிற்குப் போனதில் என்ன தவறு இருக்க முடியும்? நடிப்பு ஏன் தவறான தொழிலாகப் பார்க்கப் படுகிறது.? நம் சொந்தக் குடும்பங்களில், மனிதர்கள் தங்கள் வாழ்க்கை முழுக்கப் பொய்களைச் சொல்லிக் கொண்டிருக்கவில்லையா? நர்கிஸ் தொழில்ரீதியான நடிகை. அவள் செய்வதை வெளிப்படையாகச் செய்தாள். ஏமாற்று வித்தையைப் பழகிக் கொண்டிருப்பது மற்றவர்கள் தானேயொழிய அவளல்ல.

தஸ்னிம் சலீம் சத்தாரியின் கடிதத்திலிருந்து தொடங்கியதால் நான் திரும்ப அதற்கே செல்கிறேன். அது தானே இதையெல்லாம் ஆரம்பித்து வைத்தது. நானும் நர்கிஸைப் பார்க்க வேண்டும் என்று விரும்பியதால், எனக்கு நேரம் இல்லை என்றாலும் சலீம் மற்றும் அவன் நண்பர்களுடன் சென்றேன். நான் ஜாதன்பைக்குத் தொலைபேசி செய்து நர்கிஸைப் பார்க்க நேரம் கிடைக்குமா என்று கேட்டுக்கொண்ட பிறகே சென்றிருக்க வேண்டும். ஆனால், நான் என் அன்றாட வாழ்க்கையில் இது போன்ற சடங்குகளில் கொஞ்சமும் நம்பிக்கை அற்றவன் என்பதால், அவர்களின் வீட்டுக்கதவு முன்பு போய் நின்றேன். ஜாதன்பை வராந்தாவில் அமர்ந்து பாக்கு உடைத்துக் கொண்டிருந்தார். என்னைப் பார்த்தவுடன் குரலை உயர்த்தி, "மண்ட்டோ... வா... வா.." என்றார். பிறகு நர்கிஸுக்கு "பேபி, உன் தோழிகள் வந்திருக்கிறார்கள்" என்று குரல் கொடுத்தார் - என் இரண்டு

மைத்துனிகளை அழைத்து வந்திருப்பதாக நினைத்துக்கொண்டு. நான் என்னுடன் அழைத்து வந்திருப்பது தோழிகள் அல்ல, தோழர்கள் என்று சொல்லி அவர்கள் யாரென்ற விஷயத்தைச் சொன்னவுடன் அவரின் குரல் மாறியது.

"அவர்களை உள்ளே அழைத்து வா" என்றார். நர்கிஸ் உள்ளேயிருந்து ஓடிவர, "பேபி.. நீ உள்ளே போ. மண்ட்டோ சாஹிப் தன் நண்பர்களோடு வந்திருக்கிறார்" என்றார். சலீம் மற்றும் அவரின் நண்பர்களை அவர் வரவேற்ற விதம் வீட்டை விலை கொடுத்து வாங்க நினைத்துப் பரிசோதிக்க வந்தவர்களை வரவேற்பது போலிருந்தது. எந்தச் சடங்கு முறையும் இல்லாமல் அவர் என்னிடம் பேசும் முறை முற்றிலும் காணாமல் போனது. 'உட்காரு' என்பது 'தயவு செய்து இருக்கையில் அமருங்கள்' என்றும், 'ஏதாவது குடிக்கிறாயா' என்பது 'நீங்கள் என்ன குடிக்க விரும்புகிறீர்கள்' என்றும் மாறியது. நான் முட்டாளாக உணர்ந்தேன்.

நான் வந்த காரணத்தைச் சொல்ல, அவரின் அளந்தெடுத்த ஒழுங்குபடுத்திய பதில் என்னை ஆச்சர்யப்பட வைத்தது.

"ஓ! அவர்கள் பேபியைச் சந்திக்க விரும்புகிறார்களா? பாவம் அவள் பல நாட்களாக ஜலதோஷத்தால் ரொம்பவும் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறாள். அவளின் வேலைப்பளு ஓய்வெடுக்க முடியாமல் கடைசிச் சொட்டு பலத்தையும் உறிஞ்சிவிட்டது. ஒவ்வொரு நாளும் நான் அவளிடம் சொல்கிறேன். 'மகளே! ஒரே ஒரு நாள் ஓய்வெடுத்துக்கொள்'என்று. நான் சொல்வதைக் கேட்க மறுக்கிறாள். தொழில் மீது அவ்வளவு ஈடுபாடு. இயக்குநர் மெஹ்பூப் கூட இதையேதான் சொல்லி படப்பிடிப்பை ஒருநாள் ரத்து செய்யக் கூட தயாராயிருக்

கிறார். ஆனாலும் அவள் அசைந்து கொடுக்க மறுக்கி றாள். இன்று ஜலதோஷம் மிக மோசமாக இருப்பதால் நான் தீர்மானமாய் அவளை ஓய்வெடுக்கச் சொல்லி விட்டேன். பாவம் அவள்!".

என் இளம் நண்பர்கள் அவர் சொன்னதைக் கேட்டு மிகவும் ஏமாற்றமடைந்தது இயற்கைதானே. நர்கிஸ் வராந்தாவிற்கு ஓடி வந்தபோது, ஒரு நொடி அவள் பிம் பத்தை அவர்கள் பார்த்தார்கள் என்றாலும் அவளை நெருக்கத்தில் பார்க்கத் துடித்துக் கொண் டிருக்க, அவளுக்கு உடல் நலம் சரியில்லை என்பது அவர் களை மிகவும் ஏமாற்றமடையச் செய்தது. இதற்கிடை யில் ஜாதன்பை மற்ற விஷயங்களைப் பற்றி பேசத் தொடங்க, அது என் இளம் நண்பர்களுக்குச் சலிப்பை ஏற்படுத்தியது. நர்கிஸுக்கு ஏதும் பிரச்சினை இல்லை என்று எனக்குத் தெரிந்திருந்ததால் நான் ஜாதன்பையி டம், "பேபிக்கு இது ரொம்பக் கஷ்டமாய்த்தானிருக்கும். ஆனால் இவர்கள் மிகத் தொலைவிலிருந்து வந்திருப் பதால் சில நிமிடங்கள் அவள் வந்தால் நல்லது" என் றேன்.

மூன்று நான்கு முறை அழைக்கப்பட்ட பிறகு இறு தியாய் நர்கிஸ் வந்தாள். எல்லோரும் எழுந்து நின்று மரியாதையோடு அவளுக்கு வணக்கம் தெரிவித்தார் கள். நான் எழுந்து கொள்ளவில்லை. நர்கிஸ் ஒரு நடி கையாய்ப் பிரவேசித்தாள். அவளின் பேச்சு, கொடுக் கப்பட்ட வரிகளைப் பேசுவது போல் ஒரு நடிகை யின் பேச்சாய் இருந்தது. இவை எல்லாமே அபத்தமாய் இருந்தன. "உங்களைச் சந்திப்பதில் பெரும் மகிழ்ச்சி யடைகிறேன்." "ஆமாம்! நாங்களும், இன்றுதான் பம் பாய் வந்தோம்." "ஆமாம். நாளை மறுநாள் திரும்பு கிறோம். இந்தியாவில் தலைசிறந்த நட்சத்திரம் நீங் கள்தான். உங்களின் ஒவ்வொரு படமும் வெளியாகும்

முதல் நாளே நாங்கள் கட்டாயம் அதைப் பார்த்து விடு வோம். நீங்கள் கொடுத்திருக்கும் புகைப்படம் கண்டிப் பாக எங்கள் ஆல்பத்தில் சேர்க்கப்படும்" ஒரு சமயத்தில் மோகன்பாபுவும் எங்களோடு சேர்ந்து கொண்டாலும் ஒரு வார்த்தை கூட பேசாமல் தன் பெரிய கண்களால் எங்களை உற்று பார்த்துக் கொண்டே, தன் பகற்கனவிற் குள் நுழைந்து கொண்டார்.

ஜாதன்பை இந்தியாவிலுள்ள ஒவ்வொரு இராஜாக்க ளோடும், நவாபுகளோடும் தனிப்பட்ட முறையில் தனக் குப் பழக்கமுண்டு என்பதைப் பார்வையாளர்களுக் குப் புரிய வைக்கும் வண்ணம் பெரும்பாலான நேரங் கள் அவரே பேசிக்கொண்டிருந்தார். நர்கிஸின் பேச்சும் முழுக்க செயற்கையாய் இருந்தது. அவள் உட்கார்ந்த முறை, அசைந்த முறை, ஏன் - கண்களை உயர்த்திய முறை கூட ஏதோ தட்டில் வைத்துப் படைக்கப்பட்டது போலிருந்தது. இதற்கு ஏற்றாற்போல் வந்தவர்களை யும், பிரக்ஞைபூர்வமாகவும் செயற்கைத்தனமாகவும் தங்களை வெளிப்படுத்த வேண்டும் என்று எதிர்பார்த் தாள். இது அவசியமில்லாத இறுக்கமான சந்திப்பாகவும் இருந்தது. இந்த வாலிபர்கள் நான் உடனிருந்ததால் சங் கோஜப்பட்டார்கள். அவர்கள் என்னுடன் இருந்ததால் நானும் அவ்வாறே உணர்ந்தேன். எனக்குப் பழக்கப்பட் டுப்போன நர்கிஸி டமிருந்து முற்றிலுமான வேறு நர்கி ஸைப் பார்ப்பது சுவாரஸ்யமாக இருந்தது. சலீம் மற்றும் அவனின் நண்பர்கள் மறுநாளும் அவளைப் பார்க்கச் சென்றிருக்கிறார்கள் - ஆனால் என்னிடம் சொல்லாமல். ஒருவேளை இந்தச் சந்திப்பு வேறு விதமாக இருந்திருக் கலாம்.

தஸ்னிம் சலீம் தன் கடிதத்தில் குறிப்பிட்டிருக்கும் கவிஞர் நாக் ஷாப் உடனான என் வாக்குவாதம் பற்றி என்னால் கொஞ்சமும் நினைவு கூர முடியவில்லை.

ஜாதன்பை கவிதை மீது மிக ஈடுபாடு கொண்டிருந்த தால் கவிஞர்களை வரவேற்று அவர்களின் கவிதைக ளைப் படிக்கச் சொல்லிக் கேட்கும் பழக்கம் இருந்தது. ஒரு வேளை நான் சென்ற போது அவர் அங்கு இருந்தி ருக்கலாம். நான் நாகஷாப்புடன் சிறு பூசலைத் தொடங்கி யிருக்கவும் வாய்ப்புண்டு.

ஒருமுறை நான் அசோக்குடன் இருந்த போது நர்கி ஸின் ஆளுமையின் மற்றோர் அம்சத்தைப் பார்த்தேன். ஜாதன்பை தன் சொந்தத் திரைப்படத் தயாரிப்புக்கா கத் திட்டமிட்டுக் கொண்டிருக்க, அதில் அசோக் கதா நாயகன் பாத்திரம் ஏற்க வேண்டும் என்று விரும்பினார். அசோக் வழக்கம் போல் தான் மட்டும் தனியே போக விருப்பமில்லாமல் என்னையும் தன்னோடு வருமாறு அழைத்தார். எங்கள் உரையாடலில் ஒன்றோடொன்று தொடர்பில்லாமல் வியாபாரம், பணம், போலிப் புகழ்ச்சி, நட்பு என்று பல விஷயங்கள் பற்றி விவாதித்தோம். சில சமயங்களில் ஜாதன்பை மூத்தவர் என்ற முறையி லும், வேறு சில சமயங்களில் திரைப்படத் தயாரிப்பாளர் என்ற முறையிலும் இன்னும் சில சமயங்களில் தன் மக ளின் வேலைக்குச் சரியான ஊதியம் கிடைக்க வேண் டும் என்றும் நர்கிஸின் தாயாகவும் உரையாற்றினார். மோகன்பாபு அவ்வப்போது தலையசைத்துத் தன் ஏற் பைத் தெரிவித்தார்.

இனி செலவழிக்கப்படப் போகும் பணம், இதுவரை செலவழிக்கப்பட்ட பணம் என்று அவர்கள் பெரும் பணத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். இருந் தாலும் ஒவ்வொரு பைசாவும் கவனமாக விவாதிக் கப்பட்டுக் கணக்கில் சேர்க்கப்பட்டது. நர்கிஸ் மிகச் சரியான வியாபாரி போலிருந்தாள். "இங்க பாருங்க அசோக். நீங்கள் மெருகேறிய நடிகர் என்பதையும், புகழ் பெற்ற நடிகர் என்பதையும் நானும் ஏற்றுக்கொள்கி

றேன். ஆனால் என்னைக் குறைத்து மதிப்பிட வேண் டாம். உங்களுக்குச் சமமாக என்னாலும் நடிக்க முடியும் என்பதை நீங்கள் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்" என்பதை வெளிப்படுத்த விருப்பப்படுவது போலி ருந் தது. இந்த விஷயத்தை ஆணித்தரமாக நிலைநிறுத்த விரும்பினாள். அவ்வப்பொழுது அவளுள் இருக்கும் பெண் உயிர்ப்போடு வெளிப்பட்டு, ஆயிரக்கணக்கான பெண்கள் உங்கள் மீது காதல் கொண்டிருக்கிறார்கள் என்று எனக்குத் தெரியும். ஆனால் எனக்கும் ஆயி ரக்கணக்கான ரசிகர்கள் உண்டு என்பதை உங்களால் நம்ப முடியவில்லை என்றால், யாரை வேண்டுமானாலும் கேட்டுப் பாருங்கள்... ஏன்? இனி வரும் நாட்களில் நீங்க ளும் என் ரசிகராக மாறுவதற்கான வாய்ப்புகள் உண்டு' என்று அசோக்கிடம் சொல்வது போலிருந்தது.

அவ்வப்போது இடைவெளி விட்டு ஜாதன்பை மத்தி யஸ்தர் பாத்திரம் ஏற்று, "அசோக்! இந்த உலகம் உங் கள் மீதும் பேபி மீதும் பைத்தியம் கொண்டிருக்கிறது. அதனால் நீங்கள் இருவரும் சேர்ந்து நடிக்க வேண்டு மென்று விரும்புகிறேன். அது மிகப் பெரிய பரபரப்பை ஏற்படுத்தும். நாம் எல்லோரும் மிகவும் சந்தோஷமாக இருக்கலாம்". சில சமயங்களில் என்னிடம், "மண்ட்டோ! அசோக் மிகப் பெரிய நட்சத்திரமாகி விட்டார். அவர் மிக வும் நல்ல மனிதர். அமைதியானவர். கூச்ச சுபாவமுள் ளவர். கடவுள் அவருக்கு நீண்ட ஆயுளைக் கொடுக் கட்டும். இந்தப் படத்தில் அவருக்கென்று பிரத்தியே கமான கதாபாத்திரத்தை நான் வைத்திருக்கிறேன். அதை நான் உன்னிடம் சொல்லும்போது நீ சிலிர்த்துப் போவாய்" என்று சொன்னார்.

அசோக்குக்காக அப்படி என்ன பிரத்தியேகமான கதாபாத்திரம் வைத்திருக்கிறார் என்று எனக்குத் தெரி யவில்லை என்றாலும், நான் அவருக்காக மகிழ்ச்சி

கொண்டேன். ஜாதன்பை பெரும் பிரமிப்பை ஏற்படுத்தும் பாத்திரத்தைத் தானே ஏற்று நடித்துக்கொண்டிருப்பது போலவும் தன் மகள் நர்கிஸுக்கு அவர் தேர்ந்தெடுத்திருக்கும் பாத்திரம், அதையும் விட மாபெரும் பிரமிப்பை ஏற்படுத்தக் கூடியது என்ற எண்ணமும் என் மனதில் தோன்றத்தான் செய்தது. இதே காட்சி அசோக்குடன் படமெடுக்கப்பட்டிருந்தால் அவர் தன் வரிகளை இத்தனை அழுத்தத்துடன் பேசியிருக்க முடியாது. ஒரு சமயத்தில் சுரையாவின் பெயர் அடிபட, அவர் முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு அவளைப் பிடித்துக் கீழே தள்ளுவது தன் கடமை என்பது போல அவள் குடும்பத்தைப் பற்றி மிகக் கேவலமான விஷயங்களைச் சொல்லத் தொடங்கினார். சுரையாவின் குரல், மிக மோசமானது என்றும், அவளால் ஸ்ருதி பிடிக்கக் கூட முடியாது என்றும் அவளுக்கு இசையில் கொஞ்சமும் பயிற்சி இல்லை என்றும் இன்னும் இது போன்ற விஷயங்களைச் சொல்லத் தொடங்கினார்.

நான் நிச்சயமாகச் சொல்கிறேன். சுரையாவின் வீட்டிற்கு யாரேனும் சென்றால் ஜாதன்பை மற்றும் நர்கிஸ் மீது நடத்தப்படும் அறுவை சிகிச்சைக்குச் சாட்சியாக இருக்க வேண்டியது வரும். பாட்டி என்று சுரையாவால் அழைக்கப்பட்ட, உண்மையில் சுரையாவின் தாய், ஹுக்காவை ஓர் இழு இழுத்து ஜாதன்பை பற்றியும், நர்கிஸ் பற்றியும் மிகக் கேவலமான கதைகளைச் சொல்லியிருப்பார். எனக்குத் தெரியும், எப்போது நர்கிஸ் பெயர் அடிபட்டாலும் சுரையாவின் தாய் அருவறுப்புக் கொண்டு அவளின் முகத்தை அழுகிய பப்பாளிப் பழத்துக்கு ஒப்பிடுவார்.

மோகன்பாபுவின் அழகான பெரிய கண்கள் பல வருடங்களாக நிரந்தரமாய் மூடிக் கிடக்கின்றன. ஜாதன்பை தன் இதயம் முழுக்கப் பிரதிபலன் கிடைக்காத ஏக்கங்க

ளுடன், டன் கணக்கில் மணல் குவிந்து கிடக்க அதன் அடியில் பல காலங்களாகக் கிடக்கிறார். பேபி நர்கி ஸைப் பொறுத்தமட்டில் நாம் அறிந்திருந்த திரைப்படம் என்ற நம்பகத்தன்மை வாய்ந்த ஏணியில் மேல் படி யில் நின்று கொண்டிருந்தாலும் அவள் இன்னும் உயரே பார்த்துக் கொண்டிருக்கிறாளா அல்லது பல வருடங்க ளுக்கு முன்பு தன் சிறிய குழந்தைப் பாதத்தை ஏணியின் முதல் படியில் வைத்ததைப் பார்த்துக் கொண்டிருக் கிறாளா என்று தீர்மானமாய்ச் சொல்ல முடியவில்லை. இப்போது அவள் வாழ்க்கையைப் பிரகாசமாக வைத்தி ருக்கும் பிரம்மாண்டமான ஒளிவட்டத்தில் கரும் வெளி யைத் தேடிக் கொண்டிருக்கிறாளா அல்லது அந்தக் கரும் வெளியில் சிறு ஒளிக்கீற்றைத் தேடிக்கொண்டி ருக்கிறாளா? இந்தப் பிரகாசம் மற்றும் கருமை மாறி மாறி விளையாடுவதுதான் வாழ்க்கை என்றாலும் திரைப்பட உலகில் இந்த இரண்டையும் பிரித்துக் காட்டும் மெல் லிய கோடு இல்லாமல் போகும் சமயங்களும் உண்டு.

***



# அசோக்குமார்

## என்றும் நாயகன்

இவையெல்லாம் ரொம்பக் காலத்துக்கு முன் நடந்தது. சத்தாரி_நஜ்முல் ஹசன் தேவிகா ராணியோடு ஓடிப்போனபோது பாம்பே டாக்கீஸ் முழுக்கப் பெரும் குழப்பத்திற்குள்ளானது. அப்போது அவர்கள் தயாரித்துக் கொண்டிருந்த படத்தில் பல காட்சிகள் படமாக்கப்பட்டு முடிந்திருந்தன. அந்த மிகப் பிரபலமான பெண்மணியைத் திரை உலகிலிருந்து நிஜ உலகிற்கு இழுத்துச் செல்ல தீர்மானித்திருந்தார் நஜ்முல் ஹசன். இதில் மிக மோசமாகப் பாதிக்கப்பட்டதும், பெரும் கவலைக்குள்ளானதும் பாம்பே டாக்கீஸ் ஹிமான்ஷு ராய் தான். இவர் தேவிகா ராணியின் கணவர். பாம்பே டாக்கீஸின் ஆன்மாவாக இருந்தவர்.

அசோக்குமாரின் மைத்துனரான எஸ். முகர்ஜி, பின்னாளில் - பல வெற்றிப் படங்களைக் கொடுத்தவர், அப்போது ஒளிப்பதிவாளரான சவாக் வாச்சாவின் உதவியாளராகப் பணியாற்றிக் கொண்டிருந்தார். அவரும் வங்காளி என்பதால் ஹிமான்ஷு ராய் மீது இரக்கம் கொண்டு, தேவிகா ராணியைத் திரும்ப அழைத்து வர ஏதேனும் செய்ய விரும்பினார். ராயிடம் ஏதும் சொல்லாமல் கல்கத்தாவிலிருந்த தேவிகா ராணியை, தன் காதலன் நஜ்முல் ஹசனின் இதமான படுக்கையைவிட்டு,

அவர் திறமைகளை மலரச் செய்யக் கூடிய பாம்பே டாக் கீஸுக்குத் திரும்ப அழைத்து வந்தார்.

ஓடிப்போய் திரும்பிய தன் மனைவி தேவிகா ராணியை, ரொம்பவும் ஆடிப்போயிருந்த ஹிமான்ஷு ராய் திரும்பவும் ஏற்றுக்கொள்ள வேண்டி, முகர்ஜி சமாதானப்படுத்தினார். நஜ்முல் ஹசனைப் பொறுத் தவரை மதத்திற்காகவோ பொருளாதாரக் காரணங்க ளுக்காகவோ அரசியல் பின்னணிக் காரணங் களுக் காகவோ உணர்ச்சியற்ற காதலால் நிராகரிக்கப்பட்டவர் களின் வரிசையில் அவரையும் இணைத்துக் கொள்ள வேண்டியதாயிற்று. அவர் ஏற்கனவே நடித்துப் படமாக் கப்பட்டிருந்த காட்சிகள் அழிக்கப்பட்டன. இப்போதைய கேள்வி, இவரிடத்தை யார் நிரப்பப் போகிறார்கள்?

ஹிமான்ஷு ராய் மிகக் கடினமான உழைப்பாளி. திரைப்படத் தயாரிப்பில் தன்னை முழுவதுமாக ஈடுப டுத்திக் கொள்பவர், தனிமையானவர். அவர் பாம்பே டாக்கீஸை பம்பாய்க்கு வெளியே 'மலாட்' என்ற கிராமத் தில் ஒரு கல்வி நிறுவனம் போன்று நிறுவினார். அமை தியான உழைப்புக்கு ஊறு விளைவிக்கக் கூடியதை வெளியே வைக்க விரும்பினார் - நஜ்முல் ஹசன் போன் றவர்களை! மாற்று தேவைப்பட்டது. உணர்வுப்பூர்வமா கப் பாதிக்கப்பட்டிருந்த தன் எஜமானனுக்கு முகர்ஜி மீண்டும் உதவ முன்வந்தார். அறிவியலில் பட்டப்படிப்பு முடித்து கல்கத்தாவில் சட்டம் பயின்று கொண்டிருந்த அசோக்குமார் (முகர்ஜி மனைவியின் சகோதரன்) அப் போது பாம்பே டாக்கீஸில் ஊதியம் இல்லாமல் ஆய்வுக் கூடத்தில் பயிற்சியாளராகப் பணி செய்து கொண்டிருந் தார். அவர் பார்ப்பதற்கு அழகாகவும் கொஞ்சம் பாடத் தெரிந்தவராகவும் இருந்தார். முகர்ஜி அவரை நஜ்முல் ஹசனுக்குப் பதிலாகப் பரிந்துரைத்தார். தன் வாழ்க்கை முழுக்கப் பல பரிசோதனைகளைச் செய்த ஹிமான்ஷு

ராய் இந்த வாலிபரைப் பார்க்கச் சம்மதம் தெரிவித்தார். அவரின் ஜெர்மன் ஒளிப்பதிவாளர் 'டெர்ஷிங்' அசோக் குமாரை திரைப் பரிசோதனைக்குட்படுத்தி அதன் முடிவை ஹிமான்ஷுராயிடம் கொடுக்க, ஹிமான்ஷுராய் தன் சம்மதத்தைத் தெரிவித்தார். அவரின் ஜெர்மன் நாட்டைச் சேர்ந்த இயக்குநருக்கு இதில் மாற்று அபிப் ராயம் இருந்தாலும் ஹிமான்ஷுராய் எடுத்த முடிவை யாராலும் மாற்ற முடியாது. இருபது வயதான அசோக்கு மார் கங்குலி, தேவிகா ராணியுடன் ஜோடியாக நடிக்க இப்படியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

அவர்கள் முதலில் ஒரு படம், பிறகு அடுத்து, அடுத்து என்று திரையில் பிரிக்க முடியாத ஜோடியாக உருவா னார்கள். பெரும்பாலான படங்கள் வெற்றிப் படங்கள். பொம்மை போன்ற தேவிகா ராணியும், இளமையான வெகுளித்தனமான அசோக் குமாரும் திரையில் மிகச் சரியான ஜோடியாகத் தெரிந்தார்கள். தேவிகா ராணி யின் மிகையற்ற பாவனைகளும், குழந்தைத்தனமும் அதுவரை மிகக் கனமான காதல் உணர்ச்சிகளுக்கும், மிகைப்படுத்தப்பட்ட உணர்வுகளுக்கும் மட்டுமே பழ கிப் போயிருந்த பார்வையாளர்களின் உள்ளங்களைக் கவர்ந்தது. சிறு அதிர்ச்சியையும் பொறுக்க முடியாத இந்த மென்மையான காதலர்கள் இந்தியாவின் கன வாய் மாறினார்கள். கல்லூரி மாணவிகள் அசோக்குமார் மீது மோகம் கொண்டும், மாணவர்கள் பட்டன் போடா மல் மிக நீண்ட, பெரிய சட்டைகளை அணிந்து கொண் டும், அசோக்குமார் தேவிகா ராணியுடன் நடித்த ஒரு காதல் பாட்டில் வருவது போல் நடந்தார்கள்.

**'நான் காட்டுப் பறவை**

**நந்தவனம் விட்டு நந்தவனம் பாய்ந்து பாடும்**

**காட்டுப் பறவை'**

நான், அசோக்குமார் நடித்த சில படங்களைப் பார்த் திருக்கிறேன். நடிப்பைப் பொறுத்தவரை தேவிகா ராணி அவரைவிட பலதூரம் முன்னேறியவர். தொடக்கத்தில் அசோக்குமார் பார்ப்பதற்கு சாக்லேட் பையன் போல் இருப்பார். ஆனால் போகப் போக அவர் முதிர்ச்சிய டைந்து தன் பாணியில் தீர்க்கமாய் இருந்தார்.

ஆய்வுக்கூடத்தில் இருந்து அவர் நடிப்புத் துறைக்கு மாறிய போது மாதச் சம்பளம் ரூபாய் எழுபத்தைந்தா கத் தீர்மானிக்கப் பட்டது. அதை அவர் மிகவும் சந் தோஷமாக ஏற்றுக் கொண்டார். அந்த நாட்களில் மிகத் தொலைவில் இருந்த 'மலாட்' போன்ற கிராமங்களில் வசிக்க இத்தொகை மிகவும் அதிகம். அவரின் சம்பளம் இரட்டிப்பான போது கூடுதலாக மகிழ்ச்சியடைந்தார்.

மிகக் குறுகிய காலத்தில் சம்பளம் இருநூற்றைம்பது ரூபாயாக மாற்றப்பட்ட போது அவர் மிகவும் பயந்து போனார். அந்த நாளை அவர் நினைவுகூர்ந்து சொன் னது:

"கடவுளே... அது விசித்திரமான உணர்வு. நான், ஸ்டுடியோ காசாளரிடம் பணத்தைப் பெற்றுக்கொண்ட போது என் விரல்கள் நடுங்கின. அந்தப் பணத்தை எங்கு வைப்பது என்று புரியாமல் தவித்தேன். எனக் குத் தங்கியிருக்க இடம் இருந்தது. அது காட்டிற்கு வெளியே, இரண்டு மூன்று நாற்காலிகளும், ஒரு கட் டிலும் கொண்ட சின்ன வீடு. இரவு வேளையில் திரு டர்கள் வந்தால், நான் என்ன செய்வது? எனக்கு எது வும் புரியவில்லை... என்னிடம் ரூபாய் 250 இருப்பது அவர்களுக்குத் தெரிந்து விட்டால் என்ன செய்வது... எப்போதும் திருட்டு, திருடர்கள் என்றால் நடுங்கிப் போய்விடுவேன். அதனால் இறுதியாக நான் அந்தப் பணத்தை என் தலையணைக்கு அடியில் வைத்துக்

கொண்டேன். அந்த இரவில் எனக்கு விசித்திரமான கனவு வந்தது. மறுநாள் காலை, முதல் வேலையாக பணத்தைத் தபால் நிலையத்திற்கு எடுத்துச் சென்று சேமிப்புச் செய்தேன்."

இந்த விஷயத்தை அசோக் என்னிடம் சொல்லிக் கொண்டிருந்தபோது, கல்கத்தாவிலிருந்து வந்திருந்த ஒரு படத் தயாரிப்பாளர் இவரைக் காண வெளியே காத்திருந்தார். ஒப்பந்தம் தயார் செய்யப்பட்டிருந்தா லும் அசோக்குமார் அதில் கையொப்பமிட மறுக்கக் காரணம், தயாரிப்பாளர் ரூ. 80,000 கொடுக்க முன்வந்த போதிலும் அசோக் ரூ. 1,00,000 வேண்டுமென்று சொன் னார். சில வருடங்களுக்கு முன் ரூ. 250 ஐ வைத்துக் கொண்டு என்ன செய்வது என்று புரியாமல் விழித்த அசோக்கை நினைத்துப் பார்த்தேன்.

அசோக் மிகச் சிறப்பாகச் செயல்பட்டுக் கொண்டி ருந்தபோது, எல்லாவற்றையும் கவனிக்கக் கூடியவரும் புத்திசாலியுமான முகர்ஜி அவரோடு சேர்ந்து பல வெள் ளிவிழா மற்றும் தங்கவிழா கண்ட படங்களை பாம்பே டாக்கீஸுக்குக் கொடுக்கும் அளவிற்கு முன்னேறினார். திரைக்கதையில் பல புதிய உத்திகளை நிலைபெறச் செய்தார். என்னைப் பொறுத்தவரை அவரை என் குரு வாக நான் ஏற்றுக் கொண்டுள்ளேன்.

அசோக்கின் பிரபலம் நாளுக்குநாள் வளர்ந்து கொண்டே இருந்தது. எப்போது வெளியே சென்றாலும் அடையாளம் காணப்பட்டு ரசிகர்களால் சூழப்படுவதால் அவர் வெளியே போவதைத் தவிர்த்தார். பல சமயங் களில் போக்குவரத்துத் தடைபட்டுப் போலீஸ்காரர் கள் தடியடி செய்ய வேண்டிய நிர்ப்பந்தமும் உருவானது. அவர் தன் ரசிகர்களிடம் தாராளமாக நடந்து கொண்டது கிடையாது. அவர்கள் இவரை அருகாமையில் பார்க்க

முன்னேறுவது, இவரைக் கோபம் கொள்ள வைக்கும். சில சமயங்களில் யாரோ இவரைத் தரக்குறைவாகப் பேசியதைப் போலவும் நடந்து கொள்வார். நான் அவ ரிடம் அடிக்கடி சொல்வதுண்டு, "தாதாமோனி, உங்கள் வெளிப்பாடு மிகவும் கேலிக்குரியது. இத்தனை கவனத் தைப் பெறுவதற்கு நீங்கள் பெருமைப்படுவதற்குப் பதில் எரிச்சல் பட வேண்டியது ஏன்? இவர்கள் உங்கள் மீது காட்டும் அன்பு உங்களுக்குப் புரியவில்லையா?" எப்படி யிருந்தாலும் அவரின் மூளையில் இத்தகைய கேள்விக ளற்ற அன்பை ஏற்றுக்கொள்ளும் 'செல்'கள் இல்லாமல் போய்விட்டது போலும்.

நான் 1948ல் பம்பாயை விட்டுப் போகும் வரை அவ ருக்குக் காதல் என்பது பரிச்சயமற்றது. பின்னாளில் ஏதேனும் மாற்றங்கள் நடந்திருந்தால் அதை நான் அறி யேன். நூற்றுக்கணக்கான அழகான பெண்கள் அவரை நெருங்க முயன்ற போதிலும் எல்லோரையும் அவர் ஒதுக்கியே வைத்தார். அடிப்படையில் அவர் கரடுமுர டானவர். அவர் வாழ்க்கை முறை, உணவுப் பழக்கங்கள் எல்லாவற்றிலும் இந்தத் தன்மை வெளிப்படும்.

தேவிகா ராணி அவரோடு உறவுகொள்ள முயன்ற போது நயமற்ற முறையில் ஒதுக்கித் தள்ளினார். மற் றொரு நடிகை தைரியத்தை வரவழைத்துக் கொண்டு அசோக்கைத் தன் வீட்டிற்கு அழைத்தார். ஒரு சமயம் அவர் தன் வீட்டிற்கு வந்தபோது மிகவும் மென்மை யாக, தான் அவரை நேசிப்பதாகச் சொல்லி இருக்கிறார். அசோக்கின் எதிர்வினையைப் பார்த்து அதிர்ச்சியுற்று அவரைத் தான் பரிசோதித்ததாகவும், ஒரு சகோதரியின் உணர்வோடு மட்டுமே அவரை அணுகியதாகவும் அந்த நடிகை தடம் புரண்டிருக்கிறார். இதில் வேடிக்கை என் னவென்றால் அசோக் அந்த நடிகையோடு படுக்கைக் குப் போகவே விரும்பினார். அந்த நடிகை எப்போதும்

சுத்தமான ஆடையணிந்து, அப்பொழுதுதான் குளித்தவர் போல பளிச்சென்று காணப்படுவார். அசோக்கினால் இதைத் தாங்க முடியவில்லை. அவள் தன்னை தங்கை என்று வெளிப்படுத்தியதை, பெரும் ஏமாற்றமாக நினைத்தார்.

அசோக் தொழில்ரீதியிலான காதலன் அல்ல. அவர் பெண்களை, எல்லா ஆண்களும் செய்வது போல் பார்க்கவே விரும்பினார். பெண்களின் முக்கியமான கவர்ச்சிகரமான அங்கங்களை முறைத்துப் பார்ப்பதைக் கூட அவர் வழக்கமாகக் கொண்டார். சில சமயங்களில் இதைப் பற்றி நண்பர்களோடு பகிர்ந்து கொள்வதும் உண்டு. சில சமயங்களில் ஒரு சில பெண்களோடு உறவு கொள்ள உணர்வு கொண்டதுமுண்டு. ஆனால் ஓரடி முன்னே எடுத்து வைக்க மாட்டார். அதற்குப் பதிலாக இப்படிச் சொல்வார். "மண்ட்டோ, எனக்குத் தைரியம் கிடையாது" உண்மையில் அவருக்குத் துணிச்சல் இல்லாதது, அவரின் திருமண வாழ்க்கைக்கு உகந்த விஷயமாக அமைந்தது. அவரின் மனைவி ஷோபா தன் கணவரின் இந்தக் குணாம்சத்தில் மகிழ்ச்சியடைந்து, அதை அவர் எக்காலத்திலும் இழக்கக்கூடாது என்று நிச்சயம் பிரார்த்தனை செய்திருப்பார்.

நூற்றுக்கணக்கான பெண்கள் அவர் குதிக்கச் சொன்னால் குதிக்கத் தயாராக இருந்தபோதிலும் அசோக் பெண்களைக் கண்டு பயப்பட்டது எனக்கு எப்போதும் விசித்திரமாகப்பட்டது. ஆயிரக்கணக்கான பெண்களிடமிருந்து அவருக்குக் காதல் கடிதங்கள் குவிந்தபோதிலும், ஒரு நூறு கடிதங்களுக்கு மேல் அவர் படித்திருக்க மாட்டார் என்று நினைக்கிறேன். அவரின் நீளமுகம் கொண்ட உதவியாளர், டிசோஸா ஏதோ யாத்திரையில் ஈடுபட்டிருப்பது போல், ஒவ்வொரு கடிதத்தையும் படிப்பார். அது அவரை மேலும் துச்சமானவராகக் காட்டி

யது. பிரிவினைக்குச் சில மாதங்களுக்கு முன்பு 'சந் திரசேகர்' படத்திற்காக அவர் கல்கத்தாவில் இருந்தார். ஹுஸைன் சாஹித் சுரவர்தி அப்போது வங்காளத்தின் முதலமைச்சராக இருந்தார். அசோக் அவரது இல்லத் திற்குச் சென்று 16 எம். எம். திரையில் படம் பார்த்தார். அவர் திரும்பியபோது இரண்டு அழகான ஆங்கிலோ-இந்தியப் பெண்கள் லிப்ட் கேட்டு அவரது காரை மறித் தார்கள். அசோக் நிறுத்தியவுடன் உள்ளே பாய்ந்தார் கள். ஆனால் அற்ப சுகத்திற்காகத் தன் சிகரெட் பெட் டியை இழந்ததோடு, ஒரு பெண் அவரது சிகரெட்டை யும் எடுத்து ஊதித் தள்ளினாள். அவர்கள் எங்கே தங்கி யிருந்தார்கள் என்ற விஷயம் அசோக்குக்குத் தெரியும். இதை வைத்து ஏதேனும் தொடங்க அவர் விரும்பினார். ஆனால் அவரால் அதற்கான தைரியத்தை வரவழைத் துக் கொள்ள முடியவில்லை.

ஒரு சமயம் அசோக் கோலாப்பூரில் படப்பிடிப்பில் இருந்தார். அது கத்தி, தண்டாயுதம், கேடயம் போன் றவற்றை முக்கிய மானதாகக் கொண்ட குப்பைப்படம். அசோக்கின் காட்சிகள் ஏறக்குறைய எல்லாம் முடிந்து விட்டதாலும், அவர் இந்தப் படத்தை விரும்பாததா லும் மற்ற காட்சிகள் படமாக்கப்படும்போது அங்கிருக்க அவர் விரும்பவில்லை. அவர் பம்பாய் திரும்பியவுடன் கோலாப்பூருக்குத் திரும்ப அவரை வரவழைக்க செய்தி மேல் செய்தியாக வந்தது. ஒப்பந்தத்தை மீற முடியாது என்பதால் என்னையும் இழுத்துக் கொண்டு சென்றார். அப்பொழுது நான் ஃபிலிமிஸ்தானுக்காக 'எட்டு நாட் கள்' என்ற கதையை எழுதிக் கொண்டிருந்தேன். அந் தப் படத்தை அசோக் தயாரித்து இயக்குவதாக இருந் ததால், 'நாம் அங்கு அமைதியாய் வேலை செய்வோம். வா!' என்று சொன்னபோது என்னால் மறுக்க முடிய வில்லை.

ஆனால் அமைதி எங்கிருந்து கிடைக்கும்? அசோக் நகரத்தில் இருப்பதாகச் செய்தி பரவியது. நாங்கள் தங்கியிருந்த ஹோட்டல் எப்போதும் ரசிகர்களால் சூழப்பட்டு இருந்தது. ஹோட்டல் மேனேஜர் மிகவும் புத்திசாலி, ஏதேனும் காரணம் சொல்லி கூட்டத்தைக் கலைய வைப்பார். ஆனால் தீவிரமான ரசிகர்கள் இதற்கெல்லாம் சளைக்காமலும் உற்சாகம் குறையாமலும் ஏமாற்றப்பட அனுமதிக்காமலும் அசோக்கைப் பார்க்க நீண்ட நேரம் காத்திருந்தார்கள். அசோக்கின் வெளிப்பாடு எப்போதும் போலவே நட்பற்று இருக்கும். அது என்னை மிகவும் எரிச்சலடையச் செய்தது.

அசோக் கறுப்புக் கண்ணாடி அணிந்து தன்னை உரு மாற்றிக் கொள்ள, ஒரு மாலை நாங்கள் வெளியே சென்றோம். ஒரு கையில் கைத்தடியும் மற்றொரு கையில் ஏதேனும் அவசியம் ஏற்பட்டால் முன்னே பின்னே சென்று தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்கு, அசோக் என் தோள்பட்டையில் வைத்துக் கொள்ள நாங்கள் நடந்தோம். கோலாப்பூர் தூசி மற்றும் குப்பையால் அவதியுற்ற அசோக்கிற்கு மருந்து வாங்க ஒரு கடைக்குள் நுழைந்தோம். கடைக்காரர் எங்கள் மீது எந்தக் கவனமும் செலுத்தாமல் அலமாரியில் இருந்த மருந்தை எடுக்கத் திரும்பினார். திடீரென்று அவருக்கு ஏதோ தோன்றியது. அது சற்றுத் தாமதித்த வெடிகுண்டு போல் இருந்தது.

"நீங்க... நீங்க யாரு?" என்றான்.

"நான் யாரு? நான் யாரோ... அது தான்" என்றார் அசோக். கடைக்காரர் அவரை மிகவும் கவனமாய்ப் பார்த்தார்.

"நீங்க அசோக்குமார்" என்றார். "அசோக்குமார் வேறு யாரோ.... மண்ட்டோ வா போகலாம்..." என்றார் அசோக்.

தன் கையை என் தோள் மீது வைத்து மருந்து வாங்காமல் கடையை விட்டு வெளியே வந்தார். நாங்கள் ஹோட்டலை நோக்கித் திரும்பியபோது மூன்று மராத்தியப் பெண்கள் எதிர்ப்பட்டார்கள். அவர்கள் பார்க்க அழகாகவும் நடுவகிடு எடுத்து வாரி குங்குமம் வைத்திருந்தார்கள். அவர்கள் தலையில் பூவும் இருந்தது. சில ஆரஞ்சுப் பழங்களை வைத்திருந்த ஒருத்தி அசோக் குமாரை அடையாளம் கண்டாள். அவள் அதிர்ச்சியுற்று மெல்லிய குரலில் தன் நண்பர்களிடம் 'அசோக்' என்றாள். அதை அவள் சொன்னபோது அவள் கையிலிருந்த ஆரஞ்சுப் பழங்கள் கீழே விழுந்தன. அசோக் என் தோளிலிருந்து கையை எடுத்து ஹோட்டலை நோக்கி ஓடினார். பெண்கள் விஷயத்தில் அவர் எப்போதும் இப்படித்தான்.

எஸ்.முகர்ஜி பாம்பே டாக்கீஸைவிட்டுத் தன் குழுவோடு வெளியேறி ஃபிலிமிஸ்தான் தொடங்கிய போதுதான், அசோக்கை முதல் முறையாக அவர் குழுவோடு சந்தித்தேன். அசோக்குமார் பற்றி இங்கு அங்கு என்று சில விஷயங்களை அறிந்திருந்தாலும் புதுக் கம்பெனியில் சேர்ந்தபோது நான் அவரைத் தெரிந்து கொள்ள முடிந்தது. ஒவ்வொரு நடிகருக்கும் இரண்டு ஆளுமைகள் உண்டு. திரையில் பார்ப்பது ஒன்று, மற்றொன்று அவரின் வாழ்க்கை. நான் அசோக்கை முதல் முறையாக நெருக்கத்தில் பார்த்தபோது நான் திரையில் பார்த்ததிலிருந்து வேறுபட்டவராக இருந்தார். அவர் நல்ல கறுப்பாகவும், தடித்த, உருண்ட கைகளும், திடமான உடம்பும் சற்று முரட்டுத்தனமான வெளிப்பாடும் கொண்டவராக இருந்தார். அவர் சற்று இறுக்கமான ஒழுங்குமுறைக்கேற்பவராகவும் இருந்தார்.

அசோக் மிகச் சிறப்பாக உருது பேசக்கூடியவர். அவர் அதை எழுதப் படிக்கக் கற்றுக் கொள்ள முயன்றபோதி

லும் அவரால் முதல் பாடத்தைக் கடக்க முடியவில்லை. இருந்தும் ஓரிரு வரிகள் எழுதக் கூடிய அளவிற்குக் கற்றறிந்தார். நாங்கள் அறிமுகப்படுத்தப்பட்ட போது, "உங்களைச் சந்திப்பதில் பெரு மகிழ்ச்சி யடைகிறேன்"என்று சொன்னேன். அசோக்கின் பதில் சுயபிரக்ஞை யோடு, ஒத்திகை பார்க்கப்பட்டது போல இருந்தது. ஒரு சமயம் ஃபிலிமிஸ்தானுக்கு வந்த ஒரு பார்வையாளன் அசோக்கிடம் இலக்கிய உருதுவில், "உங்களின் தாழ்மையான இந்த வேலைக்காரன் தங்களை முன்பு எங்கோ சந்தித்தது போன்ற உணர்வு கொள்கிறான்" என்றான். அசோக் அதற்கு நேர் மாறான பேச்சு வழக்கு உருதுவில் சம்மந்தமில்லாமல் ஏதோ சொல்லத் தொடங்கி வார்த்தை குழம்பி, அதில் பிரக்ஞை பெற்று, மேலும் ஒரு வார்த்தை சொல்லாமல் அவ்விடத்தை விட்டு நகர்ந்தார். நான் பம்பாயை விட்டு பாகிஸ்தான் வந்த பின்பு ஏதோ காரணத்திற்காக என்னைத் திரும்ப அழைத்துத் தொடர்ச்சியில்லாத உருதுவில் கடிதம் எழுதினார். நான் அதற்குப் பதில் போடவில்லை.

என் மனைவி எல்லாப் பெண்களையும் போல அசோக்குமாரின் விசிறி. ஒரு நாள் நான் அவரை என் வீட்டிற்கு அழைத்து வர, அவர் உள்ளே நுழைந்தவுடன், "சஃபியா வெளியே வா... அசோக்குமார் வந்திருக்கிறார்" என்று கத்தினேன். சஃபியா அப்பொழுது சமைத்துக் கொண்டிருந்தாள். நான் அவளைத் தொந்தரவு செய்ததால் இறுதியாக வெளியே வந்தாள். "தாதாமோனி... இது என் மனைவி, அவளோடு கை குலுக்குங்கள்" என்றேன். இருவரும் சுய பிரக்ஞை அடைந்தார்கள். நான் அசோக்கின் கையைப் பிடித்து, "தாதாமோனி... (வங்காளத்தில் இதற்கு மூத்த அண்ணன் என்று பொருள்) என் மனைவியோடு கைகுலுக்க நீங்கள் ஏன் வெட்கப்படுகிறீர்கள்?" என்றேன். அதனால் அவர் கைகுலுக்க வேண்

டியதாயிற்று. அன்று என் மனைவி பரோட்டா செய்திருந் தாள் - ரொட்டிக்குள் மசாலா கொத்துக்கறி வைத்து - அசோக் அதை மிகவும் விரும்பியதால் மூன்று பரோட்டா சாப்பிட்டார். இதில், விசித்திரம் என்னவென்றால் என் மனைவி எப்போது கொத்துக்கறி பரோட்டா செய்தா லும் அதை உண்ண அசோக் கண்டிப்பாக இருப்பார். இது எப்படி நடந்தது என்று எங்கள் யாராலும் விளக்க முடியவில்லை. எங்கே, யார், எப்போது, என்ன உண்ண வேண்டும் என்பது முன்பே விதித்தது போலும்!

அசோக் என்னை வற்புறுத்தியதால் நான் அவரைத் தாதாமோனி என்று அழைக்கத் தொடங்கினேன். "எப் படி நீங்கள் என்னைக் காட்டிலும் மூத்தவர் என்று நினைக்கிறீர்கள்? நான் மூத்தவன் என்று என்னால் நிரூ பிக்க முடியும்" என்று வாதிட்டேன். கணக்குப் போட் டுப் பார்த்தபோது அவர் என்னைக் காட்டிலும் இரண்டு மாதங்கள் மூத்தவர் என்று தெரியவர, நான் அவரை மிஸ்டர் கங்குலி என்று அழைப்பதற்குப் பதிலாக 'தாதா மோனி' என்றே அழைக்கத் தொடங்கினேன். எப்படி யிருந்தாலும் நான் தாதாமோனி என்ற வார்த்தையின் ஓசையை விரும்பினேன். வங்காளக் கலாச்சாரத்தின் இனிமையான மென்மை அதிலிருந்தது. தொடக்கத்தில் அவர் என்னை மிஸ்டர் மண்ட்டோ என்று அழைப்பார். ஆனால் நான் அவரை தாதாமோனி என்று அழைக்கத் துவங்கியதிலிருந்து வெறும் மண்ட்டோவிற்கு மாறினார். எப்படி அழைக்கப்படுகிறோம் என்பது பற்றி நான் கவ லைப்பட்டது கிடையாது.

அசோக் திரையில் மிக மென்மையாகக் காணப்பட்டா லும் நிஜ வாழ்க்கையில் தொடர்ந்து உடற்பயிற்சி செய்து உடலைத் திடமாக வைத்திருந்தவர். ஒரு மரக்கதவை ஓங்கிக் குத்தி அதை உடைக்கக் கூடியவர். வீட்டில் குத் துச்சண்டை பழகுவார். சிகார் பிடிப்பதில் வெறி பிடித்த

வர். மிகக் கடினமான வேலைகளையும் உற்சாகத்தோடு செய்யும் தன்மை கொண்டவர். இருந்தும் வீட்டைச் சுத் தமாக வைத்திருப்பதில் கொஞ்சமும் அக்கறை காட் டாதவர். தேவையென்றால் நகரத்தில் மிகச் சிறந்த பொருட்களைக் கொண்டு வீட்டை அலங்கரித்திருக்க முடியும். இருந்தும் அதைப் பற்றி எப்போதும் அக்கறை காட்டியதில்லை. அவர் முயன்றபோதெல்லாம் முடிவு விபரீதமாய் இருந்தது. கையில் பிரஷ் எடுத்து மிகச் சிறந்த நாற்காலியை நீல வண்ணத்தில் பூசுவது, அல் லது சிறந்த சோபாவை அதன் முதுகை எடுத்து திவா னாக மாற்றுவது தான் நடக்கும்.

அசோக் கடலைப் பார்த்த வீட்டில் வசித்தார். அது அவ்வளவு சிறப்பாக இருக்காது. ஜன்னல், இரும்புக் கம்பிகள் எல்லாம் அரிக்கப்பட்டு மோசமாகத் துருப் பிடித்துக் கிடந்தது. அந்த இடம் துர்நாற்றத்தை வீசி யது. இருந்தும், இவை எதுவுமே அசோக்கைப் பாதித் ததில்லை. வராண்டாவில் ஃபிரிட்ஜ் வைக்கப்பட்டிருக் கும் அதற்கருகே அல்சேஷன் தூங்கிக் கொண்டிருக் கும், அவரின் குழந்தைகள் ஹாலில் துவம்சம் செய்து கொண்டிருப்பார்கள். அசோக் எதையும் கண்டுகொள் ளாமல் அடுத்த பந்தயத்தில் எந்தக் குதிரையில் பணம் கட்டலாம் என்று தீவிரமாகக் கணக்குப் பார்த்துக் கொண்டிருப்பார். அவர் கழிவறையில் உட்கார்ந்து தன் வசனங்களை ஒத்திகை பார்ப்பதும் உண்டு.

அசோக் சோதிடக் கலையில் ஞானமுள்ளவர். அதை அவர் தந்தையிடமிருந்து கற்றார். அதைப்பற்றி நிறைய புத்தகங்கள் படித்ததோடு நேரங்கிடைத்த போது தன் நண்பர்களுக்குப் பலன்கள் சொல்வதுண்டு. ஒரு நாள் என் பிறந்த தேதியைக் கேட்டு காகிதத்தில் ஏதோ கணக்குப் போட்டு எனக்குத் திருமணமாகிவிட்டதா என்று கேட்டார். "எனக்குத் திருமணமாகி விட்டது என்று

உங்களுக்குத் தெரியும்" என்றேன். சற்று நேரம் அமைதியாக இருந்து விட்டு, "எனக்குத் தெரியும் மண்ட்டோ. எனக்கு ஒரு விஷயம் சொல். உனக்கு இன்னும் குழந்தை கிடையாது இல்லையா?" என்றார். "எதுக்காகக் கேட்கிறீர்கள்?" என்றேன். அவர் சொல்வதற்கு முன் சற்றுத் தயங்கி, "இந்த நட்சத்திரங்களைக் கொண்டவர்களின் முதல் குழந்தை ஆணாக இருக்கும். ஆனால் அது உயிர் வாழாது" என்றார். நான் என் மகனை ஒரு வயதில் இழந்ததைப் பற்றி அசோக்கிற்குத் தெரியாது.

அசோக் பின்னர் அவருடைய முதல் குழந்தை, ஆண் குழந்தையாக இருக்க வேண்டியது இன்னும் பிறக்கவில்லை என்றார். அவரின் ஜாதகமும் என்னுடைய ஜாதகமும் ஏறக்குறைய ஒன்று போல இருப்பதால் அத்தகையவர்களின் முதல் குழந்தை இறக்காமல் இருப்பது சாத்தியமில்லை என்றார். கணக்கு மிகச் சரியாக இருக்கும் வரை ஜோதிடக் கலையை முழுமையாக நம்பியவர் அசோக். "கணக்கில் ஒரு பைசா கூடினாலும் குறைந்தாலும் மொத்தம் சரியாக வராதது போல் ஜாதகத்தை மிகச் சரியாகக் கணிக்கா விட்டால், அது தவறான முடிவுகளைக் கொடுக்கும். நாம் இதை நம்ப முடியாததற்குக் காரணம், அடிப்படைத் தகவல் தவறாக இருப்பதுதான்" என்றார்.

அசோக் ஜோதிடக்கணக்குப் போட்டு பந்தயம் கட்டுவார். ஜெயிக்கக் கூடிய குதிரையைப் பற்றி மணிக்கணக்கில் கணக்குப் போடுவார். இருந்தும் ஒரு குதிரை மீது ரூ. 100க்கு மேல் கட்டியதில்லை. சில சமயங்களில் பத்து ரூபாய் கூடுதலாகக் கிடைக்கும் அல்லது கட்டிய பணம் திரும்பக் கிடைக்கும். ஆனால் எப்போதும் நஷ்டம் ஏற்பட்டது கிடையாது. குதிரை மீது பணம் கட்டுவதை, பணம் ஜெயிப்பதற்காக அல்லாமல் ஒரு பொழுதுபோக்குக்காகவே செய்தார். குதிரைப் பந்தயத்திற்கு அவர்

எப்பொழுதும் மூன்று குழந்தைகளுக்குத் தாயான தன் அழகான மனைவி ஷோபாவை அழைத்துச் செல்வார். பந்தயம் தொடங்கு வதற்குச் சில நிமிடங்களுக்கு முன் தன் மனைவியிடம் பணம் கொடுத்துக் கட்டச் சொல்லு வார். பிறகு பந்தயம் முடிந்தபின் பணத்தை எடுக்க வரி சையில் நிற்பதும் அவர் மனைவிதான். ஷோபா சுமாரா கப் படித்த இல்லத்தரசி. அசோக் அவரைப் படிக்காதவர் என்று கிண்டல் செய்வார். இருந்தும் அவர்களிடையே சந்தோஷமான வாழ்க்கை நடந்தது. அத்தனை பணமி ருந்தும் ஷோபா எல்லா வீட்டு வேலைகளையும் அவரே செய்வார். ஓர் உண்மையான வங்காளியைப்போல் சுத்த மான பருத்திப் புடவை அணிந்திருப்பார். கொத்துச்சாவி அவர் இடுப்பில் தொங்கிக் கொண்டிருக்கும். நாங்கள் மாலை வேளையில் குடிக்கும் போது ருசியாக கொறித் துத் தின்ன நொறுக்குத்தீனி தயார் செய்து கொடுப் பார். மற்றவர்களைக் காட்டிலும் நான் அதிகம் குடிப்ப தால் அவர் அசோக்கிடம், "இங்க பாருங்க, திரு. மண்ட் டோவிற்கு அதிகம் குடிக்கக் கொடுக்காதீர்கள். அவர் மனைவி என்னிடம் எதிர்ப்புத் தெரிவிப்பார்" என்று சொல்வார்.

எங்கள் மனைவிமார்கள் சிறந்த நண்பர்களாக இருந் தார்கள். அடிக்கடி ஷோபா கடைக்குச் செல்லும்போது, சஃபியாவை அழைத்துச் செல்வார். ஒவ்வொரு கடைக் காரருக்கும் அவர் யாரென்று தெரியும். பிரபலமான நடிகர் அசோக்குமாரின் மனைவி. அதனாலேயே மிக வும் அரிதான பொருள்களை மறைவிலிருந்து எடுத் துக் காட்டுவார்கள். பம்பாய் ஆண்கள், பொதுவாக பெண்களைக் காட்டிலும் மென்மையானவர்கள் என நான் சொல்ல விரும்புகிறேன். நீங்கள் வங்கியிலிருந்து பணமெடுக்க விரும்பினாலும், சினிமா பார்க்க டிக்கெட் வாங்க விரும்பினாலும் இரயில் டிக்கெட் எடுக்க விரும்

பினாலும் ஆணாயிருக்கும் பட்சத்தில் மணிக்கணக் காக வரிசையில் நிற்க வேண்டும். அதுவே பெண்ணாக இருந்தால் சில நிமிடங்களில் அதை முடித்துவிடலாம். அசோக் தன் பிரபலத்தையும் புகழையும் எப்போதும் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டது கிடை யாது. ஆனால், மற்றவர்கள் அவரைப் போன்று தூய்மை யானவர்கள் இல்லை. 'ராஜா மெகிதி அலிகான்' அப்ப டிப்பட்டவன்.

அவன் ஃபிலிமிஸ்தானில் வேலை பார்த்து வந்தான். நான் அப்போது அதை விட்டு வெளியேறிய சமயத்தில் இந்தச் சம்பவம் நடந்தது. இயக்குநர் 'வாலி சாகிப்'பிற் காகக் கதை எழுதுவதில் மும்முரமாக இருந்தேன். ஒரு நாள் அசோக்கின் உதவியாளர் எனக்குப் போன் செய்து ராஜா உடல்நலமின்றி இருப்பதாகச் சொன் னார். நான் அவனைப் பார்க்கச் சென்றபோது அவன் மிக மோசமான நிலையில் தொண்டை முழுக்கப் புண் ணாகி ஏதும் பேச முடியாதவனாக இருந்தான். உதவி யில்லாமல் எழுந்து நிற்க முடியாத அளவிற்குப் பலவீ னமாயிருந்தான். உப்புத்தண்ணீரைக் கொப்பளித்தும், தைலத்தை நெஞ்சில் தடவியும் ஏதும் பலனில்லாமல் இருந்தது. அவனுக்கு டிப்தீரியாவாக இருக்குமோ என்று நான் பயந்தேன். அதனால் நான் அவனைக் காரில் ஏற்றி அசோக்கிற்குப் போன் செய்தேன். அவர் தன் மருத்துவ நண்பரிடம் அழைத்துச் செல்லுமாறு சொன்னார், அந்த மருத்துவரும் டிப்தீரியாதான் என்று உறுதிப்படுத்தினார். அவர் அறிவுரையின் பேரில் தொற்றுநோய் மருத்துவ மனையில் அவனை அனுமதிக்க, அவனுக்கு நிறைய ஊசிகள் போடப்பட்டன. நான் போன் செய்து அசோக் கிடம், ராஜாவின் நோய் பற்றிச் சொல்ல, அவர் எந்த அக்கறையும் காட்டாதவராக இருந்தார். அவரின் இந்த வெளிப்பாட்டில் மிகவும் கோபமுற்று அவரிடம் சொன்

னேன், "எனக்கு விசித்திரமாய் இருக்கிறது. இங்கு ஒரு மனிதன் மிக மோசமான நோயால் பாதிக்கப்பட்டுக் கிடக்கிறான். நீங்கள் கொஞ்சமும் அக்கறையில்லாத வர் போல் நடந்து கொள்கிறீர்கள். அவனைப் பார்த்துக் கொள்ள யாருமில்லையென்று உங்களுக்குத் தெரியும்" என்றேன்.

அசோக் மொத்தமாகச் சொன்ன பதில், "நாம் இன்று மாலை அவனைப் போய்ப் பார்ப்போம்". நான் போனை வைத்துவிட்டு மருத்துவமனைக்குச் சென்றேன். ராஜா சற்றுத் தேறியிருந்தான். மருத்துவர் சொன்ன சில ஊசி மருந்துகளை நான் வாங்கி வந்திருந்தேன். நான் சற்று நேரம் இருந்து விட்டு ராஜாவைக் கவலைப்பட வேண் டாமென்றும், அங்கே தொடர்ந்து இருக்கட்டும் என்றும் சொல்லிப் புறப்பட்டேன். மாலை, 'வாலி சாகிப்' அலு வலகத்திலிருந்து அசோக் என்னை அழைத்துச் சென் றார். நான் சற்று மன வருத்தத்தில் இருந்தேன். என் மன சங்கடத்தைப் போக்க அசோக் பேசினார். தான், முன்னமே வந்திருக்க வேண்டுமென்றும், வேலைப் பளுவால் வர முடியாமல் போய்விட்டது என்றும் ராஜாவி டம் மன்னிப்புக் கோரினார். சற்று நேரங்கழித்து அவர் கிளம்பிச் சென்றார். மறுநாள், நான் மருத்துவமனைக் குச் சென்றபோது எல்லாம் மாறியிருப்பதைப் பார்த் தேன். ராஜா பார்ப்பதற்கு உண்மையிலேயே ராஜாவாக இருந்தான். அவன் படுக்கை விரிப்புகள் சுத்தமாகவும், தலையணை உறைகள் புதியதாகவும் இருந்தன. அவன் கையில் ஒரு சிகரெட் பாக்கெட்டும், ஜன்னல் அருகே பூந்தொட்டியும் வைக்கப்பட்டிருந்தன. அவன் மடிப் புக் கலையாத மருத்துவமனை உடையணிந்து, செய் தித்தாள் படித்துக் கொண்டிருந்தான். "ராஜா! என்ன இதெல்லாம்?" என்றேன்.

ராஜா, தன் தடித்த தாடிக்குப் பின்னால் சிரித்து, "இதெல்லாம் ஒன்றுமில்லை. பொறுத்திருந்து பார்" என்றான்.

"என்ன?" என்றேன்.

"ஒரு மனிதனுக்குத் தேவையான அனைத்தும் எனக்குக் கிடைக்கிறது. நான் இன்னும் சில நாட்கள் இங்கு தங்கியிருந்தால் பக்கத்து அறை என் அந்தப்புரமாயிருக்கும். அசோக்குமாரை அந்தக் கடவுள் வாழ்த்த... ஆனால் அவர் எங்கே!!" பிறகு இந்த மாற்றத்திற்கெல்லாம் முழுக் காரணம் அசோக்குமார் தான் என்று என்னிடம் சொன்னான். மருத்துவமனை நிர்வாகம் இவரைப் பார்க்க அசோக் வந்திருப்பதை அறிந்திருக்கிறது. தாதியர்களில் பாதிக்கு மேல் அசோக்குமார் உண்மையிலேயே வந்தாரா? இவர்கள் நட்பு எவ்வளவு நெருக்கமானது? திரும்ப அசோக் வருவாரா என்பது போன்ற விஷயங்களை அறிந்து கொள்ள ஆவலாக இருந்தார்கள்.

ராஜா எல்லோரிடமும் அசோக் தன் மிக நெருங்கிய நண்பனென்றும் தனக்காக தன் உயிரையும் கொடுக்கத் தயங்காதவன் என்றும் சொல்லியிருக்கிறான். அசோக் தன்னோடு இந்த மருத்துவமனையில் சேர விரும்பியதாகவும், டாக்டர்கள் அதற்கு மறுப்புத் தெரிவித்ததாகவும் சொல்லியிருக்கிறான். அவர் ஒரு நாளைக்கு இரண்டு முறை தன்னைப் பார்க்க வந்திருப்பார் என்றும், வேலைப்பளுவால் முடியவில்லை என்றும், இருந்தும் நல்ல செய்தி, இன்று மாலை அவர் கண்டிப்பாகத் தன்னைப் பார்க்க வருவார் என்றும் சொல்லியிருக்கிறான். இது நல்ல விளைவை ஏற்படுத்தியுள்ளது. அந்த இலவச மருத்துவமனையில் எல்லா வசதிகளும் ராஜாவிற்குச் சொந்தமாக மாறியது. பார்வையாளர்கள் நேரம் முடியும் நேரம் வந்ததால் நான் கிளம்பத் தயாரானபோது மருத்

துவக் கல்லூரி மாணவர்கள் கூட்டமாக வந்தனர். ராஜா சிரித்தான், "பக்கத்து அறை என் அந்தப்புரத்தைத் தாங் கும் அளவிற்குப் பெரிதாக இருக்காது" என்று கண் சிமிட்டினான்.

அசோக் எப்பவுமே அற்புதமான நடிகர் என்றா லும் அவர் நன்கறிந்த குழுவோடு வேலை செய்யும் போது மட்டுமே அவரது முழுத்திறமை வெளிப்படும். அப்படி அல்லாத படங்களில் அவரது நடிப்பு வேறுவி தமாக அமையும். நன்கறிந்த குழுவோடு அவர் உயிர் பெற்று விளங்குவார். அவர் தொழில் நுட்பக் கலைஞர் களுக்கு அறிவுரை சொல்லுவதோடு, அவர்களின் அறி வுரையையும் ஏற்றுக் கொள்வார். தன் நடிப்பைப் பற்றிய அபிப்பிராயத்தைப் பெற்றுக் கொண்டு ஒரே காட்சியின் இறுதி வடிவத்தைத் தீர்மானிப்பதற்கு முன் பலவிதமாய் நடித்துக் காட்டுவார். மற்றவர் அபிப்பிராயங்களை அவர் கேட்டுக் கொள்வார். இருந்தும், தான் வேலையில் ஈடு படும் போது எந்தவித இடைஞ்சலையும் அவர் விரும் பியதில்லை. படித்தவர் என்பதாலும் பாம்பே டாக்கீஸ் போன்ற நிறுவனத்தில் பல ஆண்டுகள் இருந்ததாலும், திரைப்பட உருவாக்கத்தின் அத்தனை துறைகளைப் பற்றியும் தேவைப்படும் அளவிற்கு அனுபவம் பெற்றிருந் தார். புகைப்படக் கலையின் மிக நுண்ணிய விஷயங் களை நன்கு அறிந்திருந்தும், தொழில் நுட்பங்களையும் தெரிந்து வைத்திருந்தார்.

படத்தொகுப்பு பற்றிப் போதுமான அறிவும், இயக்கு தல் பற்றி தீவிரமான படிப்பும் பெற்றிருந்தார். இதனா லேயே, துறையின் மிக முக்கியமானவரான 'ராய் பகதூர் சுனிலால்' ஃபிலிமிஸ்தானுக்காக ஒரு படம் தயாரிக்க வேண்டிக் கொண்ட போது உடனே சம்மதம் தெரிவித் தார்.

ஃபிலிமிஸ்தான் அப்பொழுதுதான் யுத்தப் பிரச்சா ரப் படமான 'ஷிகாரி'யை முடித்திருந்தது. கம்பெனியின் உறுப்பினர்கள் உழைத்துப் பெற்ற விடுமுறையை குடும் பத்தோடு அனுபவித்துக் கொண்டிருந்தார்கள். ஒரு நாள் 'சவாக் வாச்சா' எங்களைப் பார்க்க வந்து சிறிது நேரம் உரையாடிய பிறகு, "சாதத், கங்குலிக்கு ஒரு கதை எழுது" என்றார். அவர் சொல்வதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. நான் ஃபிலிமிஸ்தான் தொழிலாளி. என் வேலை கதை எழுதுவது. கங்கு லிக்குக் கதை எழுத 'சவாக்' கிடமிருந்து எந்தச் சிபா ரிசும் தேவையில்லை. ஃபிலிமிஸ்தானிலுள்ள எந்தப் பொறுப்பான அதிகாரியும் என்னைக் கதையெழுதச் சொல்லியிருந்தால் நான் அங்கு அப்போதே எழுதத் துவங்கியிருப்பேன். பிறகு தான் எனக்குத் தெரிந் தது அசோக் அந்தப் படத்தைத் தயாரிக்கப் போவ தால் சற்றுக் கூடுதல் முயற்சியோடு ஒரு வித்தியாச மான கதையை எழுத வேண்டுமென்று. சில நாட்கள் கழித்து நல்ல அழகாகக் கட்டப்பட்ட 'சவாக்'கின் வீட்டில் ஒன்று கூடினோம். அசோக் எந்த மாதிரியான கதையை எதிர்பார்க்கிறார் என்று எனக்குத் தெரியவில்லை. "மண்ட்டோ... எனக்குத் தெரியாது... ஆனால் அது பரப ரப்பு ஊட்டுவதாக இருக்க வேண்டும். இது நான் தயா ரிக்கும் முதல் படம் என்பதை நினைவில் வைத்துக் கொள்" என்றார்.

நாங்கள் மணிக்கணக்காக அமர்ந்தும் எந்த யோச னையும் கிடைக்கவில்லை. அந்தச் சமயத்தில் 'சவாக்' வசித்த இடத்திற்கு அருகாமையில் 'ஆகா கானி'ன் வைரவிழாக் கொண்டாட்டத்திற்காக 'பர பார்ன்' ஸ்டே டியத்தில் மிகப்பெரிய மேடை அமைக்கும் பணி நடந்து கொண்டிருந்தது. அது தூண்டுதலாக இருக்கும் என்று நினைத்தும் ஏதும் கிடைக்கவில்லை. 'சவாக்'கின் வீட்

டிலிருந்த மிகச் சிறந்த சிற்பம் கூட என் படைப்புணர் வோட்டத்தை உருவாக்கவில்லை. நான் என் பழைய கதையிலிருந்து ஒரு யோசனையைப் பெற முயன்றேன். இருந்தும் ஏதும் கிடைக்கவில்லை. அன்று மாலை, நீண்ட வறட்சியான நாளை கழித்து, மொட்டை மாடியில் பிராந்தி குடிக்க நாற்காலிகளைப் போட்டோம். குடிப்ப தில் மிக உயர்ந்த கலையுணர்வைக் கொண்ட 'சவாக்', அன்றும் சிறந்த பிராந்தியை எங்களுக்குக் கொடுத் தார். ஒரு மிடறு குடித்தவுடன் ஏழாவது சொர்க்கத்தில் இருந்தோம். கீழே சர்ச் கேட் - இரயில் நிறுத்தத்தை யும் அங்கு முழுக்க நிலவியிருந்த மக்கள் கூட்டத்தையும் பார்க்க முடிந்தது. அதற்குப் பின்னால் கடல், தெரு விளக்கு வெளிச்சத்தில் சத்தம் ஏதுமில்லாமல் விலை உயர்ந்த கார்கள் நகர்ந்து கொண்டிருந்தன. திடீரென்று எங்கிருந்தோ மிகப்பெரிய கோரமான சாலை இயந்திரம் தெரிந்தது. அது சற்று விசித்திரமான காட்சியாக இருந் தாலும், அது என்னுள் ஒரு யோசனையைத் தோற்று வித்தது. ஓர் இளம் அழகான பெண், அவளின் பால் கனியில் நின்றுகொண்டு சிறு காகிதத்தை அங்கிருந்து போட்டு அந்தக் காகிதத்தை எந்த ஆண் எடுக்கிறாரோ, அவரையே திருமணம் செய்து கொள்வதாக உறுதி பூண்டால், அவள் நிச்சயமாக அழகான மிக விலை உயர்ந்த கார்களை ஓட்டிச் செல்பவர்களைக் காட்டிலும் சாலை இயந்திரத்தை ஓட்டுபவனையே மணக்க நேரி டும். எது வேண்டுமானாலும் நடக்கலாம்.

நான் இதை அசோக் மற்றும் 'சவாக்'கிடம் சொன்ன போது அவர்களுக்கு மிகவும் பிடித்திருந்தது. நாங்கள் இன்னும் சற்று பிராந்தி ஊற்றிக் கொண்டு பல யோச னைகளைக் கொண்டு, காற்றில் கற்பனையான சூழ்நி லையை உருவாக்கினோம். நாங்கள் பிரிந்தபோது இந்த யோசனை அடிப்படையில் ஒரு கதை எழுத வேண்டு

மென்று தீர்மானித்தோம். ஆனால் அது வேறாய் இருந் தது. பால்கனியில் எந்தப் பெண்ணும் இல்லை. தெரு இயந்திரமும் இல்லை. நான் துன்பியல் கதையை விரும் பினேன். ஆனால் அசோக் சந்தோஷமான முடிவையும், வேகமான கதையையும் விரும்பினார். நாங்கள் எல் லோரும் 'ஒரு கதையை' நெருங்கினோம். கடைசியாக அது முடிந்தது. அசோக்கிற்கு அது பிடித்திருக்க படப் பிடிப்புத் தொடங்கியது. படத்தில் ஒவ்வொரு அடியும் அசோக்கின் மேற்பார்வையில் தயாரிக்கப்பட்டது. நாங் கள் தயாரித்த 'எட்டு நாட்கள்' என்ற படத்தை இயக்கி யதாக டி.என். பாயின் பெயர் போட்டிருந்தாலும், முழுப் படத்தையும் இயக்கியவர் அசோக்குமார் தான் என்று வெகு சிலருக்குத்தான் தெரியும். டி.என். பாய், படத்தில் ஓர் அங்குலம் கூட இயக்கவில்லை. மற்ற இடங்களில் உள்ளது போல் பாம்பே டாக்கீஸ் இயக்குநர் பிரதானமா னவரல்ல. எல்லாம் குழு முயற்சியால் உருவாக்கப்பட்டு படம் முடிந்து வெளிவரும் போது அந்தக் குழுவிலுள்ள யாரேனும் ஒருவருக்கு அந்தப் படத்தின் இயக்குநராகப் பெருமை அளிக்கப்படும். ஃபிலிமிஸ்தானிலும் நாங்கள் இதே முறையைப் பின்பற்றினோம். டி.என். பாய் திரைப் படத் தொகுப்பாளர். அதுவும் திறமையானவர். அதனா லேயே படத்தின் இயக்குநராக அவர் பெயரைப் போட சம்மதித்தோம்.

'எட்டு நாட்கள்' தயாரிப்பின் போது தான் நான் புரிந்து கொண்டேன் அசோக் நல்ல நடிகர் போன்றே, மிகச் சிறந்த இயக்குநரும் கூட. ஒரு சிறு காட்சிக்குக் கூட பெரும் சிரத்தையோடு செயல்படுபவர். ஒரு காட்சி பட மாக்கப்படுவதற்கு முந்தைய தினம் திரைக்கதையை - நான் ஏற்கனவே அதன் இறுதி வடிவத்தைத் தயார் செய்து கொண்டிருந்ததை, மணிக்கணக்காக சீட்டாடிக்

கொண்டே அசை போடுவார். விசித்திரமாக, அவர் சீட்டு விளையாடும் போது தீவிரமாகச் சிந்தித்தார்.

இந்தப் படத்தில் நான்கு புது முகங்கள் ராஜா மெகிதி அலிகான், உபிந்தர் நாத் அஸ்க், முஷின் அப்துல்லா (மர்மமான பெண் என்று விளம்பரப்படுத்தப்பட்ட நடிகை நீனாவின் கணவர்) மற்றும் நான். முகர்ஜிக்கு இந்தப் படத்தில் ஒரு சிறு பாத்திரம் கொடுப்பதாகத் தீர்மானிக் கப்பட்டிருந்தது. ஆனால், நான் அவரின் 'ஜல் ஜல் ரே நவ்ஜவான்' படத்தில் கேமராவிற்குப் பயந்து பின் வாங்கி யதால் அவரும் இந்தப் படத்திலிருந்து தன்னைக் கழற் றிக் கொண்டார். ஆனால் அது ஒரு காரணம் மட்டுமே. உண்மை என்னவென்றால் அவரும் என்னைப்போல் கேமராவிற்கு மிகவும் பயந்தவர்.

முகர்ஜி மிகவும் மிரண்டுபோன படைவீரன் பாத்தி ரம் செய்ய வேண்டியிருந்தது. அவருக்காகச் சீருடை எல்லாம் தயாராக இருந்தபோது அவர் முடியாதென்று சொன்னது அசோக்கை மிகவும் வருத்தப்பட வைத் தது. படப்பிடிப்பை பல நாட்களுக்கு நிறுத்தி வைக்க வேண்டியதாயிற்று. ராய் பகதூர் சுனிலால் பொறுமை இழக்கத் தொடங்கினார். ஒரு நாள் நான் பல காட்சிக ளைத் திரும்ப எழுதிக் கொண்டிருக்கும்போது அசோக் என் அறைக்கு வேகமாக வந்தார். எல்லாக் காகிதங்க ளையும் அள்ளி எடுத்து ஓரமாக வைத்து அவர் சொன் னார், "மண்ட்டோ! என்னோடு வா". படத்தின் ஏதோ புதிய பாடலைக் கேட்க அழைப்பதாக நினைத்து நானும் அவருடன் சென்றேன். ஆனால் இறுதியாக என்னைப் படப்பிடிப்புத் தளத்திற்கு அழைத்துச் சென்றபோது இதெல்லாம் என்னவென்று கேட்டேன். "அந்தப் பைத் தியக்காரன் பாத்திரத்தில் நீ தான் நடிக்கப் போகிறாய்" என்று அறிவித்தார். முகர்ஜி முடியாதென்று சொன்ன தும் அதற்குப் பதிலாக அசோக்கால் வேறு ஒருவரைத்

தேர்ந்தெடுக்க முடியாத நிலையை நான் அறிந்திருந்தாலும், என்னைத் தேர்ந்தெடுப்பார் என்று நான் சற்றும் கற்பனை கூடச் செய்து பார்க்காததால், "நீங்கள் உங்கள் சுயசிந்தனையோடு இல்லை"என்று நான் சொன்னேன். "இல்லை மண்ட்டோ! நீதான் செய்ய வேண்டும்" என்று தீர்மானத்தோடு சொன்னார். ராஜா மெகிதி அலிகானும், உபிந்தர் நாத் அஸ்க்கும் அப்படியே நினைத்தார்கள். ராஜா என்னிடம், "இங்கு பார்! நான் அசோக் தங்கையின் கணவராகப் பாத்திரம் ஏற்க வேண்டி உள்ளது. சினிமாவில்தான் என்றாலும் என் மிகச் சிறந்த நண்பனின் தங்கையை நான் 'திருமணம்' செய்து கொள்வது பெரும் சங்கடமாகத்தான் இருக்கிறது. அப்படியிருக்க மூளை முழுக்க இழந்துவிட்ட ஒரு பாத்திரத்தைச் செய்வதில் உனக்கென்ன சங்கடம்" என்றான். இறுதியில் மிரண்டுபோன, விமானப் படைத் தளபதி 'கிர்பா ராம்' பாத்திரத்தை நான் செய்ய வேண்டியதாயிற்று. ஆனால், நான் கேமராவிற்கு முன்பு எவ்வளவு பயந்து நடுங்கினேன் என்று எனக்கும், அந்தக் கடவுளுக்கும் மட்டுமே தெரியும்.

படம் வெளியாகி பெரும் வெற்றி கண்டது. பார்வையாளர்கள் எங்கள் நகைச்சுவையை மிகவும் ரசித்தது எனக்கும் அசோக்கிற்கும் சந்தோஷத்தைக் கொடுத்தது. நாங்கள் வேறுவிதமான புதுப்படம் தயாரிக்க எண்ணியிருந்தோம். ஆனால், விதி வேறு விஷயங்களை நினைத்திருந்தது. 'எட்டு நாட்கள்' படப்பிடிப்புத் தொடங்கியவுடன் 'சவாக் வாச்சா' தன் தாயின் மருத்துவத்திற்காக லண்டன் செல்ல வேண்டியதாயிற்று. அவர் திரும்பியபோது திரைப்படத் துறை பெரும் பிரச்சனைகளில் இருந்தது. பல கம்பெனிகள் திவாலாகின. பாம்பே டாக்கீஸ் மிக மோசமான நிலையில் இருந்தது. தன் கணவர் ஹிமான்ஷு ராய் இறந்து சில ஆண்டு

கள் கழித்து தேவிகா ராணி, ரூர்கி என்ற ரஷ்யனை மணந்து கொண்டார். அவர் திரைப்படங்களிலிருந்தும் விலகியிருந்தார். பாம்பே டாக்கீஸை பழைய நிலைக் குக் கொண்டு வர எவ்வளவோ முயற்சிகள் எடுக்கப்பட் டாலும் எதுவும் வெற்றி காணவில்லை. சவாக் வாச்சா, அசோக்கின் உதவியோடு கம்பெனியைக் காப்பாற்ற கடைசி முயற்சியில் இறங்கினார்.

அசோக் ஃபிலிமிஸ்தானை விட்டு வெளியேறினார். இதற்கிடையில் லாகூரிலிருந்து மோதி. பி. குத்வானி அவருக்காக வேலை செய்ய மாதம் 1000 ரூபாய் தரு வதாக எனக்குத் தந்தி அடித்தார். நான் அங்கு போயி ருக்க முடியும். இருந்தாலும் 'சவாக்' திரும்பி வரக் காத் திருந்தேன். அவர் திரும்பியவுடன் அசோக்கை பாம்பே டாக்கீஸுக்கு அழைத்துச் சென்றபோது நானும் உடன் சென்றேன். இது பிரிவினைக்கு முந்தைய பொழுது நடந்தது. எல்லாம் எரிந்து புகையும் போது தூரத்திலி ருந்து வேடிக்கை பார்க்க பிரிட்டிஷ், துணைக்கண் டத்தின் வரைபடத்தில் இறுதிக் கோடுகளைப் போட்டுக் கொண்டிருந்தது. இந்து முஸ்லிம் கலவரம் தொடங்கி கிரிக்கெட் விளையாட்டில் விக்கெட் விழுவது போல் மக்கள் இறந்து கொண்டிருந்தார்கள். எங்கு பார்த்தாலும் பெரும் தீ.

சவாக் பாம்பே டாக்கீஸைச் சீரமைக்கத் துவங்கி யவுடன் பலவிதமான பிரச்சினைகளை எதிர்கொள்ள வேண்டியிருந்தது. தேவையில்லை என்பதால் பலர், அதில் பெரும்பாலோர் இந்துக்கள் வேலையை விட்டு நீக்கப்பட்டார்கள். அவர்களிடத்தை முஸ்லிம்களைக் கொண்டு நிரப்பியதால் பெரும் குழப்பம் ஏற்பட்டது. என் னைத் தவிர, அங்கு சாஹீத் லத்தீப், அவரின் மனைவி இஸ்மத் சுக்தாய், திரைப்பட இயக்குநர் கமல் அம்ரேகி, ஹஸ்ரத் லுக்நாவி, நசீம் பானிபட் மற்றும் இசையமைப்

பாளர் குலாம் ஹைதர் இருந்தார்கள். இது கம்பெனி யின் ஹிந்துத் தொழிலாளர்கள் மத்தியில் சவாக் வாச்சா மற்றும் அசோக்குமார் மீது பெரும் அதிருப்தியை ஏற்ப டுத்தியது. இதை நான் அசோக்கிடம் சொன்னபோது அவர் சிரித்துக் கொண்டு, 'நான் வாச்சாவிடம் சொல்லி இந்த மடையர்களைச் சரிக் கட்டுகிறேன்' என்றார்.

அது செய்யப்பட்டது. ஆனால் எதிர்வினையை ஏற் படுத்தியது. வாச்சா மிரட்டல் கடிதங்களைப் பெறத் தொடங்கினார். முஸ்லிம்களை ஒழித்துக் கட்டாவிட் டால் ஸ்டுடியோ தீக்கிரையாகும் என்று அவரிடம் சொல் லப்பட்டது. இத்தகைய கடிதங்களை அவர் படிக்கும் போது மிகவும் கோபம் கொள்வார். "இந்த மடையர்கள் நான் தவறு செய்வதாகச் சொல்கிறார்கள். நல்லது, நான் தவறே செய்கிறேன். அதனால் இவர்களுக்கு என்ன? இந்த ஸ்டுடியோவிற்குத் தீ வைத்தால் நான் அவர்களை அந்தத் தீயில் தள்ளி விடுவேன்" என்றார். அசோக் எந் தவித மதவெறியுமற்றவர். அவர் இயல்புக்கு அது எதிரா னது. ஸ்டுடியோவைத் தீக்கிரையாக் குவதாக ஏன் மிரட் டுகிறார்கள் என்று கூட அவரால் புரிந்து கொள்ள முடி யவில்லை. "மண்ட்டோ! இதெல்லாம் முட்டாள்தனம்... எல்லாம் சரியாகும். சில காலம் கழித்து, எல்லாம் சரியா கும்".

ஆனால் அது சரியாகவில்லை. அந்த முட்டாள்தனம் காலம் நகர மேலும் மேலும் தீவிரமானது. இப்படியெல் லாம் நடப்பதற்கு நான்தான் காரணமென்று எண்ணி னேன். அசோக் மற்றும் வாச்சா என் சிறந்த நண்பர் கள். அவர்கள் என்னை நம்பியதாலும், நான் நேர்மை யானவன் என்பதாலும் என் அறிவுரையைக் கோரினார் கள். ஆனால் என் நேர்மை குலையத் தொடங்கியது. நான் எனக்குள் கேட்டுக் கொண்டேன். பாம்பே டாக்கீ

ஸுக்கு ஏதேனும் கெடுதல் நேர்ந்தால் வாச்சா மற்றும் அசோக்கை எந்த முகம் கொண்டு பார்ப்பேன்.

மதப் படுகொலைகள் அதன் முழுத் தீவிரத்திலிருந் தது. ஒரு நாள் நானும், அசோக்கும் பாம்பே டாக்கீஸி லிருந்து திரும்பிக் கொண்டிருந்தோம். அவரோடு இறங் கிப் பல மணி நேரங்கள் தங்கிய பிறகு, அன்று மாலை என்னை என் வீட்டில் கொண்டு விடுவதாகச் சொன் னார். அவர், முஸ்லிம்கள் பகுதியில் குறுக்கு வழியில் போனார். அந்தத் தெருவில் எதிர்ப்பக்கத்திலிருந்து ஒரு திருமணக் கோஷ்டி பாண்டு வாத்தியங்களுடன் வந்து கொண்டிருந்தது. நான் மிரண்டு போனேன். "தாதா மோனி ஏன் இங்கு வந்தீர்கள்?" என்றேன். "எதற்காகக் கவலைப்படுகிறாய்?" என்றார். நான் என்ன நினைக்கி றேன் என்று அவருக்குத் தெரியும், ஆனால் எனக்கு அது அமைதியைக் கொடுக்கவில்லை. எந்த இந்து வும் நுழையத் தயங்கும் பகுதியில் நாங்கள் இருந்தோம். உலகம் முழுக்கத் தெரியும், அசோக் ஓர் இந்து. அது வும் முக்கியமான இந்து. அவரின் படுகொலை பெரும் அதிர்ச்சி அலையை ஏற்படுத்தும்.

அரேபிய மொழியிலிருந்து எந்தப் பிரார்த்தனையோ அல்லது குரானிலிருந்து பொருத்தமான வரிகளையோ என்னால் நினைவுகூர முடியவில்லை. நான் என்னையே சபித்துக்கொண்டு தொடர்பற்று வேண்டிக் கொண் டேன்., "ஐயோ கடவுளே! என்னை மதிப்பிழக்கச் செய் யாதே... எந்த முஸ்லிமும் அசோக்கைக் கொல்ல அனு மதிக்காதே. அது நடக்கும் பட்சத்தில் என் சவக்குழி வரை நான் அந்தக் குற்றவுணர்வைச் சுமக்க வேண்டும். நான் ஒரு தனி மனிதன்தான். நான் மட்டுமே இஸ்லாமிய சமூகமல்ல. ஆனாலும் அசோக்கிற்கு ஏதேனும் ஒன்று நடந்து, அதனால் இந்து சமூகம் என்னைக் காலம் கால மாகச் சபிக்க வேண்டாம்."

அந்த ஊர்வலம் எங்கள் கார் அருகே வந்தவுடன் சிலர் அசோக்கை அடையாளம் கண்டு, "அசோக்குமார், அசோக்குமார்" என்று கத்தினார்கள். நான் உறைந்து போனேன். அசோக் ஸ்டீரியங்கைப் பிடித்துக் கொண்டு அமைதியாக இருந்தார். நான் ஒரு முஸ்லிம், அசோக் என்னை என் வீட்டிற்கு அழைத்துச் செல்கிறார் என்று உரக்கக் கத்தப் போன சமயத்தில் இரண்டு இளைஞர் கள் முன்னே வந்து சொன்னார்கள், "அசோக் பாய்! இந் தத் தெரு முட்டுச் சந்து. நீங்கள் பக்கத்திலுள்ள தெரு வழியாகச் செல்வது நல்லது".

அசோக் பாய்? அசோக் அவரின் சகோதரர் என்றால் நான் யார்? நான் உடுத்தியிருக்கும் ஆடைகளைப் பார்த் தேன். கைத்தறி கதர்... என்னையும் மற்றோர் இந்து என்று நினைத்து விட்டார்களா? அல்லது அசோக் இருந்ததால் என்னைக் கவனிக்கத் தவறினார்களா? அந்தப் பகுதியைவிட்டு வெளியேறியபோது நான் நிம் மதியடைந்து கடவுளுக்கு என் நன்றியைத் தெரிவித் தேன்.

அசோக் சிரித்தார், "நீ தேவை இல்லாமல் பயந்து விட்டாய். மக்கள் ஒரு போதும் கலைஞனுக்குத் தீங்கு விளைவிப்பது இல்லை" என்றார். சில நாட்கள் கழித்து நஸீர் அஜ்மீரி எழுதிய கதையைப் பற்றிய விவாதத்தில் இருந்தபோது - பின்னர் அது 'மஜ்மூர்' என்ற திரைப் படமாக்கப்பட்டது - நான் சில விமர்சனங்களை வைத் தேன். நஸீர், வாச்சா மற்றும் அசோக் பக்கம் திரும்பி, "இது போன்ற கூட்டங்களுக்கு நீங்கள் மண்ட்டோவிற்கு அழைப்பு விடுக்கக் கூடாது. அவரும் ஒரு சிறுகதை எழுத்தாளர் என்பதால் முன் தீர்மானங்களோடு இருப் பார்" என்றார்.

இது என்னை மிகவும் அமைதி குலையச் செய்தது. நான் சில தீர்மானங்களை எடுக்க நேரம் வந்து விட்ட தாக உணர்ந்தேன். பல நாட்கள் என்னால் எந்த முடி விற்கும் வர முடியவில்லை.

எனவே எனக்கு நானே சொல்லிக் கொண்டேன், "மண்ட்டோ பாய், இந்தத் தெரு முட்டுச் சந்து, அதனால் பக்கத்திலுள்ள தெரு வழியாக நீங்கள் போவது நல்லது".

அதனால் நான் பக்கத்துச் சந்தைத் தேர்ந்தெடுத் தேன். அது என்னைப் பாகிஸ்தானில் கொண்டு போய் விட்டது. அங்கு நான் எழுதிய 'தண்டா கோஷ்' என்ற சிறு கதை ஆபாசமானது என்று கூண்டில் ஏற்றப்பட்டேன்.

***



## ஷியாம்

# கிருஷ்ணனின் வேய்ங்குழல்

அன்று ஏப்ரல் 23 அல்லது 24. என்னால் சரியாக நினைவு கூர முடியவில்லை. ஷியாம் இறந்து விட் டான் என்ற செய்தியை, செய்தித்தாளில் படித்தபோது நான் தடம் புரண்டு போய் மனநல மருத்துவமனையில் குணமாகிக் கொண்டிருந்தேன். பிரக்ஞைக்கும், பிரக் ஞையற்ற நிலைக்கும் இடையில் தொங்கும் விசித்திர மான மன நிலையிலிருந்தேன். ஒன்றெங்கே முடிகிறது, மற்றொன்று எங்கே தொடங்குகின்றது என்று என்னால் தீர்மானிக்க முடியவில்லை. இரண்டு நிலைகளும், பாகு படுத்திப் பார்க்க முடியாதவாறு பின்னிப் பிணைந்து கிடந்தது. மனிதர்கள் எவருமற்ற வனாந்தரத்தில் உள் ளது போல் உணர்ந்தேன்.

ஷியாம் இறந்த செய்தியை என் கண்கள் பார்த்தபோது நான் குடிப்பதை நிறுத்தியதன் விளைவு என்று நினைத் தேன். கடந்த சில வாரங்களில் என் அரைகுறை நினை வில் என் குடும்ப உறுப்பினர்கள் பலர் இறந்து விட்டார் கள். அவர்கள் எல்லோரும் உயிரோடு இருப்பதையும், நான் குணமாகப் பிரார்த்திப்பதையும் பின்னால் தெரிந் துகொண்டேன்.

ஷியாம் பற்றிய செய்தியைப் படித்ததை, என்னால் மிகத் துல்லியமாக நினைவுகொள்ள முடிகிறது. என் அறையிலிருந்த நோயாளியிடம் நான் சொன்னேன்,

"உனக்குத் தெரியுமா? என் மிகச் சிறந்த நண்பன் இறந்துவிட்டான்".

"யார்?" அவன் கேட்டான்.

"ஷியாம்". நான் அழுதுகொண்டே பதில் சொன்னேன்.

"இங்கேயா? இந்தப் பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலா?"

அவன் கேள்விக்கு நான் பதில் கூறவில்லை. திடீரென்று சூடேறியிருந்த என் மூளையில் ஒன்றன் பின் ஒன்றாகப் பல காட்சிகள் உயிர் பெற்றன. சாவைப் பற்றி ஏதும் அறியாத, அதன் பயங்கரங்களை உணராத நிரந்தர வாழ்வு கொண்ட ஷியாம், சிரித்துக் கொண்டிருக்கும் ஷியாம், கத்திக் கொண்டிருக்கும் ஷியாம். அதனால் நான் செய்தித்தாளில் படித்ததெல்லாம் உண்மையில்லை என்று எனக்குள் சொல்லிக்கொண்டேன். கையில் பிடித்திருக்கும் செய்தித்தாள் கூட என் கற்பனையின் ஒரு பகுதி தான்.

ஆனால், நேரம் கடக்க என் மூளையில் மது மூட்டம் விலக, நிஜத்தின் மீதான என் பிடியை ஊர்ஜிதப்படுத்திக் கொண்டேன். இந்த முழு நிகழ்வும் மிகவும் மெதுவாகவும், இழுத்து இழுத்து நகர்ந்ததாலும் இறுதியில் ஷியாம் இறந்துவிட்டான் என்ற செய்தியை முழுமையாக நான் உணர்ந்தபோது என்னுள் அதிர்ச்சி எதுவும் ஏற்படவில்லை. அவன் எப்போதோ, இறந்துவிட்டான் என்பது போலவும், அவனின் மறைவுக்காகப் பல காலங்களுக்கு முன்பே துக்கம் கொண்டது போலவும் உணர்ந்தேன். உடைந்த செங்கல்லும், மணலும் குவிந்த மேட்டிற்கு அடியில், புதைந்து போன ஷியாமின் முத்துப் போன்ற சிரிப்பைக் காண முடியும் என்ற நம்பிக்கையில், நான் தோண்டிக் கொண்டிருப்பது போன்ற துயரத்திற்கான அறிகுறி மட்டுமே இப்போது தொற்றிக் கொண்டிருந்தது.

மனநல மருத்துவமனைக்கு வெளியே, பைத்தியமல் லாதவர்கள் உலகில், ஷியாமின் மரணச் செய்தியைக் கேட்டு மண்ட்டோ பைத்தியமாகி விட்டான் என்று நம்பினார்கள். உண்மையில் அப்படி நடந்திருக்குமா னால் நான் மிகவும் வருத்தப்பட்டிருப்பேன். ஷியாமின் மரணம், வாழ்க்கையின் நிலையற்ற தன்மையை எனக்கு விளக்கி என்னை இன்னும் புத்திசாலியாக மாற்றியி ருக்கும். மிச்சமிருக்கும் வாழ்க்கையை அதன் முழுமை யோடு வாழ்ந்து முடிக்க என்னுள் வெறியைக் கிளப்பியி ருக்கும். ஷியாமின் மரணச் செய்தியைக் கேட்டு பைத்தி யம் பிடிப்பது, பைத்தியக்காரத்தனமாகும்.

காவிய நாயகன் பர்ஹாத், தன் காதலி ஷெரினின் மரணச் செய்தியைக் கேட்டு, அவன் கல் உடைக் கப் பயன்படுத்தப்படும் ஆயுதத்தால், ஒரே அடியில் தன்னை மாய்த்துக் கொண்டதாக காலீப் எழுதினார். காலீப், ஒரு சிறந்த காதலன் செய்யக்கூடிய காரியமாக அதைப் பார்க்கவில்லை. பழக்கப்பட்டுப் போன முறை யில் இயந்திரத்தனமாக அவன் ஏன் தன் உயிரை மாய்த் துக் கொள்ள வேண்டும்? அவன் அப்படியே இல்லா மல் அல்லவா ஆகியிருக்க வேண்டும். அப்படி இருக்க, பைத்தியம் பிடித்து - நான் எப்படி, பழக்கமாகிப்போன எல்லாவற்றையும் நிராகரித்த ஷியாமைக் கேவலப்ப டுத்த முடியும்?

ஷியாம் உயிரோடு இருக்கிறான். என் பலவீனம் - என்று ஷியாமால் அழைக்கப்படும் 'தாஜி'யுடனான, அவனது பேரொளி மிக்க காதலின் அடையாளமாக விளங்கக் கூடிய அவனின் இரண்டு குழந்தைகளில், அவன் உயிரோடுதானிருக்கிறான். அவனின் மென்மை யான இதயத்திற்கு நிழலாகவும், பாதுகாப்பாகவும், பட் டும், மஸ்லினும் கொண்டு வந்த பெண்களில் எல்லாம் அவன் உயிரோடிருக்கிறான். அவன் இறந்துகொண்டி

ருக்கும் போது அருகில் நின்று "ஷியாம் ஜிந்தாபாத்" என்று உரக்கக் கத்த முடியாமல் போன என் இதயத்தில் அவன் உயிரோடிருக்கிறான்.

நான் நிச்சயமாய்ச் சொல்கிறேன். அவன் மரணத்தை முழு சிரத்தையோடு அணைத்து முத்தம் கொடுத்து அவனுக்கேயுரிய பாணியில் "மண்ட்டோ! கடவுள் புண் ணியத்தில் அந்த உதடுகள் வேறு எதுவோ" என்று சொல்லியிருப்பான்.

நான் ஷியாம் பற்றி நினைக்கும்போது, ஒரு ருஷ்ய நாவ லில் வரும் கதாபாத்திரம் தான் நினைவுக்கு வருகிறது. ஷியாம் காதலில் ஊடாடித் திளைப்பவன். ஆனால், அவன் மட்டில் காதல் கொள்வதென்பது காதலுக்காகச் செய்யப்படும் நிகழ்வு இல்லை. அவன் அழகானவற்றிற் காகச் சாகவும் தயாராக இருந்தான். நான் நினைக்கி றேன், மரணம் என்பது மிகவும் அழகானதாக இருந் திருக்க வேண்டும். இல்லையென்றால் அவன் இறந்தி ருக்க மாட்டான்.

அவன் தீவிரத்தன்மையை நேசித்தான், மரணத்தின் கரங்கள் மிகவும் குளிர்ச்சியானது என்று சொல்வார்கள், ஆனால் நான் நம்பவில்லை. அது உண்மையாய் இருந் திருக்கும் பட்சத்தில், ஷியாம் அதை விலக்கித் தள்ளி சொல்லியிருப்பான்: 'விலகிப் போ, பெண்ணே! உன்னி டம் வெம்மை இல்லை'.

அவன் எழுதிய ஒரு கடிதத்தில்,

"நண்பா! சுருங்கச் சொன்னாலும், வேறு எப்படிச் சொன்னாலும், இங்கு எல்லோரும் சரியான 'ஹிப் டுல்லா'. ஆனால் உண்மையான 'ஹிப்டுல்லா' எங்கோ மிகத் தொலைவு சென்று விட்டான். என்னைப் பொறுத்தவரை குறைப்பட்டுக் கொள்ள ஏதுமில்லை... வாழ்க்கை ஓடிக் கொண்டிருக்கிறது. சந்தோஷமான

நேரங்கள், அப்புறம் குடிப்பது, குடிப்பது, அப்புறம் சந் தோஷமான நேரங்கள். ஆறு மாதங்கள் கழித்து தாஜி திரும்ப வந்தாள். இப்பவும் என் மிகப் பெரிய பலவீ னமாக அவள் இருக்கிறாள். உனக்குத் தெரியும், ஒரு பெண்ணின் உடல் வெப்பத்தை அனுபவிப்பதைக் காட்டிலும் வாழ்க்கையில் வேறேதும் பெரிய இன்பம் கிடையாது... எப்படி இருப்பினும் நான் மனிதன்தான். அதுவும் சாதாரண மனிதன்தான்.

நான் விட்டுவிட்டு நிஹாரை (நிஹார் சுல்தானா) எதிர் கொள்ள வேண்டியிருக்கிறது. ஆனாலும் எனக்கு முத லில் எப்போதும் 'தா'தான். மாலை நேரங்களில் உன் னுடைய புத்திசாலித்தனமான குப்பைப் பேச்சுகள் இல்லாதது ஒரு குறைதான்..."

ஷியாம் 'ஹிப்டுல்லா' என்ற வார்த்தையை உபயோகித் துள்ளான். அதற்கு விளக்கம் தேவை.

நான் பாம்பே டாக்கீஸில் வேலை பார்த்துக் கொண் டிருந்தேன். அப்போது 'மஹால்' என்று பின்னாளில் பட மாக்கப்பட்ட - கமல் அம்ரேகியின் 'ஹவேலி' கதைக்கு இறுதி வடிவத்தைக் கொடுத்துக் கொண்டிருந்தோம். அசோக்குமார், வாச்சா, ஹஸ்ரத் லுக்நாவி மற்றும் நான். தினமும் ஒன்று கூடி கதை என்று மட்டுமல்லாமல் கிசு கிசு முதல் அவதூறு வரை எல்லாவற்றையும் விவாதிப் போம். அப்போது 'மஜ்பூர்' படப்பிடிப்பில் இருந்த ஷியாம், வேலையில் இருந்து தன்னை விடுவித்துக் கொண்டு எங்களோடு சேர்ந்து கொள்வான்.

சாதாரணமான பேச்சில் கூட கமல் அம்ரேகி கனமான சொற்களையும் பாவனைகளையும் உபயோ கித்தது எனக்குப் பிரச்சினையாய் இருந்தது. நான் ஏதே னும் சொல்ல விருப்பப்படும்போது மிகவும் சாதாரண மான சொற்களில் சொல்ல, அது அவருக்குப் பிடிக்கா

மல் போனதைப் பார்க்க முடிந்தது. அவரின் கனமான பாணியில் நான் சொற்களை உபயோகிக்கும் போது அது அசோக் மற்றும் வாச்சாவின் தலைகளைச் சீவிக் கொண்டு போனது. அதனால் நான், என்னைப் புரிய வைக்க ஒரு விசித்திரமான வார்த்தைக் கலவையை உருவாக்க வேண்டி வந்தது.

ஒரு நாள் காலை பாம்பே டாக்கீஸுக்குச் செல்ல ரயிலில் பயணம் செய்து கொண்டிருந்தபோது பரபார்ன் ஸ்டேடியத்தில் நடந்துகொண்டிருந்த கிரிக்கெட் விளையாட்டின் ஸ்கோர் கார்டைப் பார்க்க செய்தித்தாளில், விளையாட்டுப் பக்கத்தைப் புரட்டியபோது, ஒரு விசித்திரமான வார்த்தை என் கண்ணில் பட்டது. 'ஹிப்டுல்லா', இந்த வார்த்தையை நான் இதற்கு முன் கேள்விப்பட்டதில்லை. ஹிப்டுல்லாஹி என்ற வார்த்தையின் பிழையான வடிவம் என்று நினைத்துக்கொண்டேன்.

நான் ஸ்டுடியோவுக்குள் நுழைந்தபோது திரைக்கதை விவாதம் நடந்து கொண்டிருந்தது. கமல், அவருக்கேயுரிய அலங்காரப் பாணியில் ஒரு பகுதியை விவரித்துக் கொண்டிருந்தார். அவர் முடித்தவுடன் அசோக் என்னைப் பார்த்து, "சொல்லு மண்ட்டோ?" என்றார். எனக்கு ஏனென்று புரியவில்லை. "பரவாயில்லை, ஆனால் இதில் 'ஹிப்டுல்லா' இல்லை" என்று நான் சொன்னதை நானே கேட்டேன்.

எப்படியோ 'ஹிப்டுல்லா' நான் சொல்ல விரும்பியதை உணர வைத்தது. விவரிக்கப்பட்ட காட்சியில் வேகமே இல்லையென்று நான் சொல்ல விரும்பினேன்.

கூட்டத்தின் பின் பகுதியில் ஹஸ்ரத் அதே காட்சியை சில மாற்றங்களுடன் கொடுத்தார். என் கருத்து கோரப்பட்ட போது, இந்த முறை நான் பிரக்ஞையோடு, "என் இனிய நண்பா ஹஸ்ரத், இந்தத் தந்திரம் பலிக்க

வில்லை. வேறு ஏதேனும் ஹிப்டுல்லாவோடு வா. ஹிப்டுல்லா புரிகிறதா?" என்று சொன்னேன். நான், இரண்டாவது முறை ஹிப்டுல்லா என்று சொன்னபோது, சுற்றிலும் மற்றவர்களின் எதிர்கொள்ளலை கவனித்தேன். இந்த வார்த்தை எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப் பட்டதைப் பார்த்து மிகவும் சந்தோஷம் அடைந்தேன். சொல்லப் போனால் அந்தக் கூட்டத்தின் மிச்சப் பகுதியில் எல்லோராலும் அந்த வார்த்தை பல்வேறு மாற்றங்களுடன், இதில் ஹிப்டுல்லா தன்மை இல்லை என்றோ, இது ஹிப்டுல்லா ஆக்கப்பட வேண்டுமென்றோ சகஜமாக உபயோகப்படுத்தப்பட்டது.

ஒரு சமயம் அசோக் என்னை மடக்கி, "ஹிப்டுல்லாவுக்குச் சரியான அர்த்தம் என்ன? அது எந்த மொழியிலிருந்து வந்தது?" என்று கேட்டார்.

நான் அந்த விநோதமான வார்த்தையைச் செய்தித்தாளில் பார்த்தபோது ஷியாம் என்னோடு இருந்தான். சிரிப்பை அடக்க முடியாமல், "மண்ட்டோவின் புதிய மண்ட்டோயிசம்" என்றும், "எல்லாம் தோல்வியுற்றபோது அவன் 'ஹிப்டுல்லா'வைத் திரைப்பட உலகிற்கு இழுத்து வந்தான்" என்றும் கூட்டத்தில் சொன்னான். குறுகிய காலத்தில், அந்த வார்த்தை பம்பாய் திரையுலகில் பிரபலமானது.

ஜூலை 29, 1948 தேதியிட்ட கடிதத்தில் ஷியாம் எழுதினான்:

அன்புள்ள மண்ட்டோ,

உன் மந்த மனநிலையை நான் அறிந்திருந்தாலும், மீண்டும் நீ மௌனமாகிப் போனது என்னை ரொம்பவும் சங்கடப்படுத்துகிறது. எப்படி இருந்தாலும் நீ இது போல் மௌனமாகிப்போவது, என்னைப் பைத்தியம் பிடிக்க வைக்கிறது. நான் ஒன்றும் பெரிய கடித வியாபாரி

இல்லை என்பது உண்மையானாலும், வேறு விதமான கடிதங்களை - வேறு வார்த்தையில் சொன்னால், 'ஹிப்டுல்லா'வைப் பெற்றுக் கொள்ளும்போதும், எழுதும்போதும் ஒரு வித சந்தோஷம் கிடைக்கிறது.

இங்கு ஹிப்டுல்லா அரிய பறவையாகிவிட்டது. இதை ஒரு காகிதத்தில் எழுத முயலும் போது அது ஹிப்டுல்லாவாக மாற, இந்த ஹிப்டுல்லாவை இங்கு ஒருத்தராலும் கிரகித்துக் கொள்ள முடியாதபோது அது எவ்வளவு எரிச்சல் ஊட்டும் என்று உன்னால் கற்பனை செய்து பார்க்க முடியும். நான் ஹிப்டுல்லா செய்யத் துவங்கியிருந்தால் என்னை மன்னித்து விடு. நான் என்ன செய்ய முடியும். ஒருவன் தன்னைத் தொலைத்து விடும்போது அவன் ஹிப்டுல்லா செய்யத் தொடங்குகிறான். ஆனாலும் நீ என்ன நினைக்கிறாய்? அல்லது நீ என்ன நினைக்கவில்லை என்பதைப் பற்றி எனக்கு இங்கிதமும் அக்கறையும் கிடையாது. எனக்குத் தெரிந்த தெல்லாம் உனக்குத் தெரியாமலிருக்க வாய்ப்பில்லை. போர்க்களத்தில் உன்னைப் போன்ற பெரிய ஹிப்டுல்லாவைப் பணிய வைத்த பெருமை என் ஒருவனையே சேரும்.

மண்ட்டோ, 'ஒரு காதலனுக்கு வார்த்தைகள் அற்றுப் போகும்போது முத்தம் கொடுக்கத் துவங்குகிறான்' என்றும், 'ஒரு பேச்சாளன் வார்த்தைகள் இல்லாமல் போகும்போது இருமத் தொடங்குகிறான்' என்றும் யாரோ சொல்லியிருக்கிறான். நான் அதற்கு மேலும் ஒன்று சேர்க்க விரும்புகிறேன். 'ஒரு மனிதன் தன் ஆண்மையை இழக்கும்போது தன் கடந்த காலத்தைத் திரும்பிப் பார்க்கத் தொடங்குகிறான்'. ஆனால் நீ கவலைப்பட வேண்டாம். நான் அந்த இறுதிப்புள்ளிக்குப் போய்ச் சேர இன்னும் சற்று தூரம் இருக்கிறது. வாழ்க்கை முழுமையானதாகவும், வேகமாகவும் ஓடிக்கொண்டிருக்கிறது.

இந்தச் சிறந்த முட்டாள்தனத்திற்கு எனக்கு நேரமில்லை என்றாலும் மிகவும் தேவைப்படுகிறது.

நளீமோடு நான் நடித்துக் கொண்டிருக்கும் படம் (சந் தினி ராத்) பாதி முடிந்துவிட்ட நிலையில் நான் அமர் நாத்தோடு ஒரு படம் செய்ய ஒப்பந்தத்தில் கையெழுத் திட்டுள்ளேன். என் கதாநாயகி யாரென்று உன்னால் ஊகிக்க முடிகிறதா? நிஹார்! இருவரும் நிஜ வாழ்க் கையில் மற்றொருவர் மீது கொண்ட உணர்வுகளைத் திரையில் கொண்டு வர சாத்தியமிருக்கிறதா என்று பார்க்க விரும்பி, நான்தான் அவள் பெயரை முன்வைத் தேன். அப்போது அது சந்தோஷம், இப்போது இது வேலை இருந்தாலும் நீ என்ன நினைக்கிறாய்? இது மிகப் பெரிய கேளிக்கையாகவும், கொண்டாட்டமாகவும் தானே இருக்கும்?

தாஜி இன்னும் என் வாழ்க்கையில் இருக்கிறாள். நிஹார் என்னிடம் நல்ல விதமாயிருக்கிறாள். என்னை மிகவும் மென்மையாகக் கையாளுகிறாள். இங்கு பம்பா யில் சில காலங்களாக ரமலா இருக்கிறாள். நான் அவ ளைப் பார்த்தபோது, என் மீது அவள் கொண்ட பலவீ னத்திலிருந்து, இன்னும் அவளால் மீள முடியவில்லை என்பதை உணர்ந்தேன். அதனால் நாங்கள் கொஞ்சம் விளையாடி சந்தோஷப்பட்டோம்.

பெரியவரே, இதுபோல் ஏமாற்றுவதில் நான் தீவிரப் பயிற்சி பெற்றுக்கொண்டிருக்கிறேன். ஆனால் நண்பா! இதெல்லாம் மிகவும் சிக்கலானது என்றாலும் எனக்குச் சிக்கல்களே மிக பிடிக்கும் என்று உனக்குத் தெரியும்.

என்னுள் இருக்கும் நாடோடி, சாகசக்காரன், தேடல் வேட்கை எல்லாம் இன்னும் வீரியத்தோடு இருக்கிறது.

நான் எந்த ஓர் இடத்தையும் சேர்ந்தவன் இல்லை. அப்படி இருக்கவும் விரும்பவில்லை. நான் மனிதர்

களை விரும்புகிறேன். நான் மனிதர்களை வெறுக்கி றேன். இப்படித் தான் வாழ்க்கை நகர்ந்து கொண்டிருக் கிறது. நினைத்துப் பார்த்தால் வாழ்க்கை மட்டுமே என் காதலி. என்னைப் பொறுத்தவரை மனிதர்களெல்லாம் நரகத்துக்குப் போகட்டும்.

இதை யார் எழுதியது என்பதை மறந்துவிட்டேன். என்னால் நினைவுபடுத்த முடிந்ததெல்லாம் இந்த வரி களை மட்டுமே. அது சரியானதாக இல்லாமல் இருக்க லாம். இருந்தாலும் அவர் சொன்னது இதுதான்.

'அவன் மனிதர்களை மிகவும் நேசித்தான், அத னால் எப்போதும் தனிமையை உணர்ந்தவன் இல்லை, அவன் மனிதர்களை வெறுத்தபோது மிகவும் தனிமை யானவனாக ஆனான்'. என்னால் இதற்கு மேல் ஏதும் சேர்க்க முடியாது."

தாஜி என்று அழைக்கப்பட்ட மும்தாஜ் பற்றி இரண்டு கடிதங்களிலும் பேசப்படுகிறது. சரி, யாரிந்த மும்தாஜ்? ஷியாமின் வார்த்தைகளில் சொன்னால், அவனின் மிகப்பெரிய பலவீனம். உண்மை என்னவென்றால், நிஹார், ரமலா எல்லோருமே அவனின் மிகப் பெரிய பல வீனங்கள். பெண்கள் தான் அவனின் மிகப் பெரிய பல வீனமாகவும் பலமாகவும் இருந்தார்கள்.

மும்தாஜ், ஜெப் குரேஷியின் சிறிய தங்கை. மும்தாஜ் ஜெப்போடு பம்பாய் வந்து இறங்கியவுடன், மிக தடித்த நடிகர் ஹசூர் ராஜாவோடு 'கனமான' காதல் வலை யில் விழுந்தார் என்று சொல்லலாம். இருந்தாலும் குறு கிய காலத்தில் தன்னை விடுவித்துக் கொண்டு லாகூர் திரும்பினார். அங்கு ஷியாமைச் சந்திக்க அன்றிலிருந்து அவர்களின் மிகப் பெரிய காதல் உறவு தொடங்கியது. பம்பாயில் ஷியாம் நல்ல நிலைக்கு உயர்ந்த போது அவ

ளோடு குழந்தை பெற்றுக் கொள்வதற்காகவே அவ ளைத் திருமணம் செய்து கொண்டான்.

ஷியாம் குழந்தைகளை ரொம்பவும் நேசித்தான். அது வும் அழகான குழந்தைகளை - முறைகெட்ட முறை யில் பிறந்த குழந்தைகளாக இருந்தாலும் கூட - அவன் மிகவும் நேசித்தான். நேர்மையற்றவர்கள் பார்வையிலும், சுதந்திரமற்றவர்கள் பார்வையிலும், ஷியாம் முறைகேடா னவன். சில பெண்கள் அவனின் நேரடித் தன்மையை யும், குழையும் குணம் இல்லாததையும் வெறுத்தாலும் அவன் அதைப் பற்றி கொஞ்சமும் கவலை பட்டது கிடையாது. அவர்களின் அங்கீகாரத்தைப் பெற எப்போ தும் தன்னை மாற்றிக் கொள்ள முயற்சித்தது கிடையாது. ஷியாமின் வெளித் தோற்றம், அவனின் உள் மனதில் முழு வெளிப்பாடு. அவன், "மண்ட்டோ, என்னைக் கேவ லமாகப் பார்க்கும் இந்த தேவடியாக்கள் போல இல்லை நான். அவர்கள் செயற்கை உலகில் வேஷம் போட்டு வாழ்பவர்கள்" என்று சொல்வான்.

அவனின் வெளிப்படையான தன்மைக்காகவும், அவ னின் மெருகில்லாத் தன்மைக்காகவும் காதலித்த பெண்களும் உண்டு. அவர்கள் அவனோடான உரை யாடலில் போலியான காமவெறி பிடித்த பேச்சுகள் கொஞ்சமும் இல்லாததை உணர்ந்தார்கள். ஷியாம் சுயப் பிரக்ஞையற்று அவர்களிடம் பேச, அவர்களும் நாகரிகமான சமூகத்தில் பேசத் தகுதியற்றவை என்று சொல்லும் விஷயங்களையும், எந்தத் தயக்கமும் இல் லாமல் வெளிப்படையாகப் பேசுவார்கள். ஷியாம் அங்கு தலைதெறிக்கச் சிரித்துக் கொண்டும், மேலும் கீழும் குதித்துக் கொண்டும், முகத்தில் கண்ணீர் வழிந்து கொண்டிருக்க, அந்த அறையில் எங்கோ ஒரு மூலை யில் கூர்மையான நகங்கள் கொண்ட படுக்கையில் கூச்

சம் என்ற கடவுள், அவனின் பாவங்களுக்காக மன்னிப் புக்கோரி கிடப்பதை என்னால் உணர முடிகிறது.

எங்கே... எப்போது... நான் முதலில் ஷியாமைச் சந்தித் தேன் என்று எனக்கு இப்போது சரியாக நினைவில்லை. அவன் எனக்கு அறிமுகமாவதற்கு முன்னே, அவனை நான் அறிந்திருந்தது போல் தோன்றியது. ஓரளவுக்கு உறுதியாகச் சொல்வதென்றால் எங்கள் முதல் சந்திப்பு, என் தங்கை தங்கியிருந்த 'லேடி ஜாம்ஷெட்ஜி' தெரு வில் நடந்தது. ஹைநெஸ்ட் என்றழைக்கப்பட்ட அந்தக் கட்டடத்தின் மேல் மாடியில் டைமண்ட் என்ற பெண் மணி வசித்து வந்தாள். அவள் வீட்டிற்குப் போகும், படிக்கட்டின் வழியில் நான் ஷியாமை ஓரிரு முறை சந் தித்திருக்கிறேன். ஆனால் அந்தச் சந்திப்புகள் மிகச் சாதாரணமானதாகவும், சடங்காகவும் இருந்தன. அத்த கைய சந்திப்பின் போது ஷியாம் ஒருமுறை என்னிடம் திருமதி ஷியாம் என்று அந்தக் கட்டடத்தில் எல்லோரா லும் அழைக்கப்பட்ட டைமண்ட், தன் மனைவி இல்லை என்று சொன்னாலும், சகலவிதங்களிலும் அவர்கள் கணவன், மனைவியாகவே வாழ்ந்து வந்தார்கள். போலி யான திருமண வாழ்க்கையில் ஷியாம் கொஞ்சமும் நம் பிக்கை வைத்தது கிடையாது. இருந்தாலும், டைமண்ட் ஒரு 'பிரச்சினை'க்காக மருத்துவமனையில் அனுமதிக் கப்பட நேர்ந்த போது, அவளைத் தன் மனைவி என்று பதிவேட்டில் பதிவு செய்து கொண்டான்.

அந்த உறவு முறிந்து பல காலங்களுக்குப் பிறகு டைமண்ட்டின் கணவன் ஷியாம் மீது வழக்குத் தொடர, அந்தப் பிரச்சினை கொஞ்ச காலங்களுக்கு இழுத் துச் சென்றது. டைமண்ட் இப்போது திரை உலகிற்குள் நுழைந்து விட்டதாலும் பை நிறைய பணம் கொண்ட மனிதர்களின் வரிசையைப் பார்த்ததாலும் இந்தப் பிரச் சினை ஒரு வழியாக முடிந்தது. அவளுடைய வாழ்க்

கையில் ஷியாம் இல்லை யென்றாலும் அவளைப் பற்றி ஷியாம் அடிக்கடி பேசுவதுண்டு.

எனக்கு நினைவிருக்கிறது, ஒரு முறை பூனாவிலுள்ள ஒரு பூங்காவில் நடந்துகொண்டிருக்கும் போது ஷியாம் என்னிடம் சொன்னான்.

"மண்ட்டோ, டைமண்ட் மிகப்பெரிய பெண்மணி. கட வுள் மீது ஆணையாக, ஒரு பெண் கருக்கலைப்பு வேதனையைத் தாங்கிக் கொள்ளும்போது அவளால் உலகத்தில் எவ்வளவு பெரிய சவால்களையும் எதிர் கொள்ள முடியும்." சற்று இடைவெளி விட்டு, "ஆனால் மண்ட்டோ, இத்தகைய உறவுகளால் வெளிப்படுவதை ஏற்றுக்கொள்ள பெண்கள் ஏன் அஞ்சுகிறார்கள்? தாங் கள் செய்த பாவத்தின் விளைவாக அதைப் பார்க்கிறார் களா? பாவம், புண்ணியம் என்று என்ன பைத்தியக்கா ரத் தனங்கள். ஒரு ரூபாய் நோட்டு உண்மையானதா கவோ, போலியானதாகவோ இருக்கலாம். ஆனால் ஒரு குழந்தை முறையான குழந்தை, முறையற்ற குழந்தை என்பது எப்படி சாத்தியம்! அது முஸ்லிம் கடவுள் பெயரால், ஒரு விலங்கை கத்திக்கடியில் நிற்க வைப் பது போன்றதோ அல்லது சீக்கியர்கள் அனுமதிப்பது போல் அதன் தலையை வெட்டுவதோ போன்றதல்ல. ஒரு குழந்தை என்பது ஆதாம் மற்றும் ஏவாளைப் பிடித் துக் கொண்ட மிகப் பிரம்மாண்டமான, உன்னதமான பைத்தியக்காரத்தனத்தின் விளைவு. ஐயோ! அந்தப் பைத்தியக்காரத்தனம்!" அதன் பிறகு அந்தப் பைத்தி யக்காரத்தனத்தோடு அவன் கொண்ட கணக்கிலடங்கா அனுபவங்களை நினைவுகூர்ந்து சொல்லிக்கொண்டே இருந்தான்.

ஷியாம் அதீத ஸ்ருதியில் தன்னை வெளிப்படுத் தும் தன்மை கொண்டவன். அவனின் பேச்சு, அசைவு,

பாவனை எல்லாமே உச்ச ஸ்தாயியில் வெளிப்படுத் தப்படும். இடைநிலையில் கொஞ்சமும் நம்பிக்கையற் றவன். அவனைப் பொறுத்தவரையில் கூடி இருக்கும் போது முகத்தில் எந்தப் பாவனையுமில்லாமல் அமர்ந் திருப்பது என்பது வேறு எதைக்காட்டிலும் மிகவும் நகைப்புக்குரியதாகும். மது அருந்திக் கொண்டிருக்கும் போது யாரேனும் அமைதியாக இருந்தாலோ அல்லது தத்துவம் பேச முயன்றாலோ அவன் தலை வெடித்துப் போவான். பாட்டில், கிளாஸ் எல்லாவற்றையும் மேஜை மேல் போட்டுடைத்து வேகமாக வெளியேறிய சந்தர்ப் பங்களும் உண்டு.

பூனாவில் நடந்த ஒரு நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது. ஜுபேதா காட்டேஜ் என்றழைக்கப்பட்ட இல்லத்தில் ஷியாம் மற்றும் எழுத்தாளரும், கலைஞருமான மசூத் பர் வேஸ் வாழ்ந்து வந்தார். என் திரைக்கதையை வியா பாரம் செய்ய அப்போது நான் அங்கிருந்தேன். மசூத் சுபாவத்தில் அமைதியான மனிதர். அத்தோடு கொஞ் சம் மது குடித்தவுடன் சமாதி அமைதிக்குச் சென்று விடுவார். ஒரு நாள் நாங்கள் ரம் குடிக்கும் வைபவத் தைக் காலையிலிருந்தே தொடங்கிவிட்டோம். நிறைய பேர் வந்தார்கள், கொஞ்சம் குடித்தார்கள். போதையேறி வெளியேறினார்கள். மசூத், ஷியாம் மற்றும் நான் மட்டும் தொடர்ந்திருந்தோம். ஷியாம் மிகச் சத்தமாக, குடிக்க வந்த ஒவ்வொருவரிடமும் வம்பு செய்து கொண்டு, நல்ல மூடில் இருந்தான். அவனது இந்த அட்டூழியங்க ளைத் தாங்கமாட்டாமல், மசூத் எங்களிடமிருந்து விலகி தனியே இருப்பதை சாயந்திரம்தான் உணர்ந்தான் ஷியாம். போதையேறிய தன் கண்களைச் சுருக்கி நக்க லாக மசூதைப் பார்த்துக் கேட்டான், "ஹஸ்ரத் பர்வேஸ்! உன் துன்பவியல் காவியத்தை முடித்து விட்டாயா?"

மசூத் ஏதும் சொல்லாமல் தனக்கேயுரிய பாணியில் சிரித்து அமைதியாக இருந்தார். அந்த நேரத்தில் சிறுகதை எழுத்தாளர் கிஷன் சந்தர் உள்ளே நுழைய, ஷியாம் மசூத் பர்வேஸையும் அவரது உறைந்துபோன சிரிப்பையும் மறந்துவிட்டான். மேலும், சற்றுக் குடித்த பின் மசூதின் 'தாள முடியாத சில்லிட்டு'ப்போன நிலையை கிஷனிடம் சொன்னான். கிஷன் தன் நாக்கின் பூட்டைத் திறக்க மேலும் இரண்டு மடக்கு தான் தேவைப்பட்டது. அதுவும் உடனே நடந்தது, "நீ எல்லாம் என்ன கவிஞன்?" என்றான் கிஷன் மசூதிடம். "நீயும் காலையிலிருந்து குடித்துக் கொண்டு தான் இருக்கிறாய். இருந்தும் இன்னும் நீ தரக் குறைவாக ஏதும் பேசவில்லை. கடவுள் மீது ஆணையாகச் சொல்கிறேன். குப்பைகளைப் பேசத் தெரியாதவன் கவிதை எழுத லாயக்கற்றவன். உன்னால் கவிதை எழுத முடியும் என்பது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. தீர்மானமாய்ச் சொல்கிறேன். உன் கவிதைகளெல்லாம் குப்பை. உன்னையே நீ பார்... இவ்வளவு குடித்த பின்பும் நீ விளக்கெண்ணெய் பாட்டிலாகத்தான் மாறியுள்ளாய்". இதற்கும் மசூதின் சிரிப்பைப் பார்த்துக் கண்களிலிருந்து நீர் வழியும் அளவுக்குத் தரையில் விழுந்து புரண்டு சிரித்தான் ஷியாம். நாங்கள் மசூதைத் தொடர்ந்து நையாண்டி செய்து கொண்டிருந்தும், அவன் ஏதும் எதிர்வினை காட்டவில்லை. பிறகு திடீரென எழுந்து, எல்லா கிளாஸையும் ஒன்றன் பின் ஒன்றாக மிக வேகமாகக் குடித்து 'வாங்க போகலாம்' என்று அறிவித்தான்.

நாங்கள் வீட்டை விட்டு வெளியே வந்தவுடன் மசூதின் அறிவுரை பேரில் எங்கள் காலணிகளைக் கழற்றி அக்குளில் வைத்துக் கொண்டு ஓடத் தொடங்கினோம். அப்போது நடுநிசி நேரம் என்பதால் தெருவெல்லாம் வெறிச்சோடிக் கிடந்தது. நாங்கள் நான்கு பேர் மற்றும்

இன்னும் ஒருவர் - அவரின் பெயரை நினைவு கூர முடி யவில்லை, எல்லோரும் எங்கு போகிறோம் என்று தெரி யாமல், தெரிந்து கொள்ள விருப்பம் காட்டாமல், தலை தெறிக்க உரக்கக் கத்திக்கொண்டு பைத்தியம் பிடித்த தைப் போல் ஓடிக் கொண்டிருந்தோம்.

ஒரு சமயத்தில் நாங்கள் கிஷன் சந்தர் வீட்டிற்கு முன் வந்து நின்றபோது, அவர் எங்களைக் காட்டிலும் முன்னே ஓடி வீட்டிற்குள் நுழைந்து கொண்டு விட்டதை உணர்ந்தோம். அவரைக் கதவைத் திறக்கச் சொல்லி வற்புறுத்திக் கொஞ்ச நேரம் கிண்டல் செய்தோம். அவ ரின் நண்பர் சமீனா காதூன் - பக்கத்து அறையில் தூங் கிக் கொண்டிருந்தவர் என்ன நடக்கிறது என்று விசா ரிக்க எழுந்து வந்தார். கிஷன் தன்னைத் தனியே விடும் படி கெஞ்ச, கடைசியாக நாங்கள் அவரை விட்டு விட்டு மறுபடியும் தெருவில் ஓடத் தொடங்கினோம்.

பூனா, கோவில்களால் நிறைந்த ஊர். ஒரு நூறு அடி நடந்தால் ஒரு கோவிலைக் காண முடியும். மகூதின் அடுத்த நடவடிக்கை. முதலில் தென்பட்ட கோவிலுக் குள் நுழைந்து கோவில் மணிக்கயிறை இழுத்து சத்த மெழுப்ப, மணிச் சத்தம் கேட்டவுடன் நானும் ஷியாமும் எங்கள் நெற்றி தெருவில் படும் அளவிற்குப் படுத்து, சிவசம்போ, சிவசம்போ என்று பஜனை செய்தோம். அதிலிருந்து நாங்கள் கடக்கும் ஒவ்வொரு கோயில் மணியும் கடமை தவறாமல் அடிக்கப்பட, நாங்கள் நமஸ் காரம் செய்து எழுந்தவுடன் உரக்கச் சிரித்தோம். ஓரிரு முறை நல்ல தூக்கத்திலிருந்த கோயில் பூசாரியை எழுப்பிவிட்டு, தூக்கக் கலக்கக் கண்களோடு ஆச்ச ரியத்தோடு என்னவென்று கேட்கும் முன்பே நாங்கள் ஓடத் தொடங்கி விடுவோம்.

விடியற்காலை மூன்று மணிக்கு மசூத் பர்வேஸ் நடுத் தெருவில் நின்று கொண்டு நாங்கள் எங்கள் காதுகளை நம்ப முடியாத அளவிற்கு வசை மாரியாகக் கெட்ட வார்த்தைகளைக் கொட்டினான். வாழ்க்கையில் ஒரு அநாகரிகமான வார்த்தையை அவன் பேசி நான் கேட் டதில்லை. நான் இதுவரை கேட்டிராத, தேர்ந்தெடுத்த ஆபாச வார்த்தைகளைக் கொட்டி அவன் தன் பாரத் தைக் குறைத்துக் கொண்டாலும் அந்த வார்த்தைகள் அவன் நாக்கில் சரியாகப் பொருந்தவில்லை என்பதைச் சொல்லத்தான் வேண்டும்.

ஜுபேதா காட்டேஜுக்கு நான்கு மணியளவில் திரும் பியவுடன் நாங்கள் படுக்கச் செல்ல, மசூத் விழித்திருந்து கவிதை எழுதத் தொடங்கினான்.

குடிப்பது என்று வந்துவிட்டால் ஷியாமுக்கு எந்த நிதா னமும் கிடையாது. எல்லாவற்றையும் அதன் முழு அள வில் விளையாடிப் பார்க்கவே அவன் விரும்பினான். மிகவும் அனுபவம் வாய்ந்த விளையாட்டு வீரனைப் போல் தன்னைச் சுற்றியுள்ள சூழ்நிலையை மிகக் கவ னமாக ஆராய்ந்து அதன் அளவிற்குத் தன்னை நிறுத் திக் கொள்ள முயலுவான். என்னிடம் அவன் சொல்வ துண்டு, "ஆனால் தற்செயலாக நான்கு அல்லது ஆறு ரன்கள் அடிக்கவே விரும்புகிறேன். நான் அடிப்பது திட் டமிட்டல்ல."

இங்கே ஒரு ஸிக்ஸர்.

பிரிவினைக்குச் சில மாதங்கள் முன்பு சாஹீத் லத்தீப் பின் வீட்டிலிருந்து என்னிடத்திற்கு ஷியாம் இடம் மாறி வந்தான். பம்பாயில் அப்பொழுது சிக்கலான காலம். நாங்கள் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தோம் என்றாலும், குடிப்பதில் எந்தக் குறையுமில்லாமல் தொடர்ந்து கொண்டிருந்தது. ஒரு மாலை, நாங்கள்

கொஞ்சம் அதிகமாகவே குடித்திருந்தோம். கவிஞரும், பாடலாசிரியருமான ராஜா மெகதி அலிகான் அப்பொழுது அங்கிருந்தார். ஒவ்வோர் இரவும் ஊரடங்கு உத்தரவு அமுலில் இருந்ததால் ராஜா தன் வீட்டிற்குக் கிளம்பத் தயாரானபோது,

"உன் மூளை வேலை செய்ய மறுத்துவிட்டதா? உன்னை இழுத்துப் போவார்கள்" என்றேன்.

"நீ ஏன் இங்கே தூங்கக் கூடாது? தாஜி தான் இங்கே இல்லையே" என்றான் ஷியாம் கிண்டலாக. ராஜா சிரித்துக் கொண்டே, "என்னால் ஸ்பிரிங் மெத்தையில் படுக்க முடியாது. முடியவே முடியாது" என்றான்.

ராஜாவின் அளவிற்கு பிராந்தியை ஊற்றிக் கொடுத்து, "இதக் குடி., மரக்கட்டை போல் தூக்கம் வரும்" என்றான்.

ஒரே மடக்கில் ராஜா குடித்தான். தாஜி பற்றி ரொம்ப நேரம் பேசிக் கொண்டிருந்தோம். அவள் ஷியாமோடு சண்டை போட்டு, தன் தங்கையோடு இருக்கச் சென்றுவிட்டாள். அவர்கள் ஒவ்வொரு எட்டு அல்லது பத்து நாட்களுக்குச் சின்னச் சின்ன விஷயங்களுக்குச் சண்டை போட்டுக் கொள்வார்கள் என்றாலும், ஷியாம் விரும்பாததால் நான் அதில் தலையிடுவதில்லை. எங்களிடையே ஒருவர் மற்றவர் விஷயத்தில் தலையிடுவதில்லை என்பது பேசப்படாத ஒப்பந்தமாகவே இருந்தது.

தாஜி இந்த முறை தீர்மானமாய் வெளியேறிய விதம், அவளுக்குத் திரும்பும் எண்ணம் ஏதுமில்லை என்பது போல் தோன்றியது. ஷியாம் அவளுக்கு விடை கொடுத்த முறையும், இனி அவளை அவன் பார்க்க மாட்டான் என்பது போலவும், எப்படியிருப்பினும் பார்க்க விரும்பவில்லை என்பது போலவும் தான் உணர்த்தியது. சாயந்திர வேளைகளில் ஷியாம் தாஜி மீது உணர்ச்சி

வசப்பட்டுப் பேசும்போதெல்லாம் அவன் இரவு முழுக்க விழித்திருந்து அவளை நினைத்துக்கொண்டிருப்பான் என்று நினைப்பேன். ஆனால் தூக்கத்தில் அவனுக் கிருக்கும் ஆர்வத்தில் படுத்த அடுத்த நொடி கண் ணுறங்கிப் போவான். என் வீட்டில் இரண்டு அறை கள் தானிருந்தன. ஒன்று படுக்கையறையாகவும், மற் றொன்று வரவேற் பறையாகவும் உபயோகப்படுத்தப்பட் டது. நான் வரவேற்பறையில் தரையில் பாய் விரித்துப் படுத்துக் கொள்ள, ஷியாம் மற்றும் தாஜிக்குப் படுக்கை யறையைக் கொடுத்திருந்தேன். தாஜி இப்போது இல் லாததால், படுக்கை அறையிலிருந்த இரண்டு மெத்தை களில் ஒன்றை ராஜா மெகதி அலிகானுக்கு ஒதுக்கி னோம். நாங்கள் உறங்கச் சென்ற போது நீண்ட நேரமா கிவிட்டது.

காலையில் ஆறு மணிக்கு, நான் வழக்கம்போல் விழித்துக் கொள்ள, யாரோ என் அருகில் படுத்திருப் பதை உணர்ந்தேன். அது என் மனைவியாயிருக்க முடி யாது. ஏனெனில் அவள் லாகூரில் இருக்கிறாள். கண் களைக் கசக்கிக் கொண்டு தெளிவாகப் பார்த்தபோது அது ஷியாம் என்று தெரிந்தது. இங்கே எப்படி வந்தான்?

அப்போது ஏதோ எரிந்த துணி வாசனையை முகர்ந் தேன். பாய் விரிப்புக்குப் பக்கத்திலிருந்த சோபா ஒழுங் காக அணைக்கப்படாத சிகரெட்டால் எரிந்து பெரிய ஓட்டையாகிக் கிடந்தது. ஆனால் அது பல மாதங்க ளுக்கு முன்னே நடந்திருந்தது. அது எப்படி இப்போது புகையும்? நான் இப்பொழுது ஏறக்குறைய முழுமையாக விழித்த நிலையில் காற்றில் மெல்லிய புகை மூட்டத் தைப் பார்க்க முடிந்தது. புகையினால் கண்ணெரிச் சலை உணர்ந்தேன். நான் படுக்கையறைக்குச் சென்ற போது ஷியாம் வழக்கமாகப் படுக்கும் மெத்தையிலி ருந்து புகை வந்து கொண்டிருக்க, மற்றொரு மெத்

தையில், ராஜாவின் பெரிய மண்மேடு போன்ற வயிறு, குறட்டை சத்தத்திற்கேற்ப ஏறி இறங்கிக்கொண்டிருக்க, அவன் உறங்கிக் கொண்டிருந்தான்.

எரிந்த மெத்தையைக் கவனமாகப் பார்த்தபோது ஒரு சாப்பாட்டுத் தட்டு அளவிற்கு எரிந்திருக்க, அதிலிருந்து புகை விட்டு விட்டு வந்து கொண்டிருந்தது. மெத்தையைச் சுற்றி நிறைய தண்ணீர் இருந்ததால் யாரோ நெருப்பை அணைக்க முயற்சி செய்திருந்தும், மெத்தை தேங்காய் நாரும் பஞ்சும் கொண்டிருந்ததால் அது முழுமையாக அணைக்கப்படாமல் இருந்தது. நான் ராஜாவை எழுப்ப முயல அவன் திரும்பிப் படுத்து இன்னும் சத்தமாகக் குறட்டைவிடத் தொடங்கினான். திடீரென்று மெத்தை கருகிய இடத்திலிருந்து ஜுவாலை விட்டு தீ வெளியே பாய்ந்தது. நான் பாத்ரூமுக்கு ஓடி, ஒரு பக்கெட் நிறைய தண்ணீர் கொண்டு வந்து நெருப்பை முழுவதுமாக அணைத்தேன். எழுந்து கொள்ள கொஞ்சமும் விருப்பமில்லாத ராஜாவை, ரொம்பச் சிரமப்பட்டு எழுப்பினேன்.

என்னதான் நடந்தது என்று கேட்க, ராஜா தனக்கேயுரிய பாணியில், நேற்றிரவு நடந்த விஷயத்தை மிகைப் படுத்தியும், சகலவிதமான விவரங்களைக் கண்டுபிடித்தும், தான் சொல்வதெல்லாம் உண்மை என்று சத்தியமும் செய்தான்.

"இங்கே இருக்கும் உன் ஷியாம் உண்மையிலேயே வானரக் கடவுள், மஹாராஜன் ஹனுமான். நேற்றிரவு நான், என்னை பிராந்தியில் மூழ்கடித்துக் கொண்டு உறங்கச் சென்றேன். அப்போது மணி இரண்டிருக்கும். விசித்திரமான சத்தங்கள் கேட்டு விழித்துக் கொண்டேன். அனுமானாக மாறியிருந்த ஷியாமின் வாலில் தீ. அவன் மெத்தையின் மேலும் கீழும் குதித்து, தன்

வாலில் இருந்த நெருப்பால் மெத்தைக்குத் தீ வைக்க முயன்று கொண்டிருந்தான். அது தீப்பிடித்துக் கொண்ட உடன், நான் என் கண்களை மூடி பிராந்திக் குட்டையில் குதித்து அதன் ஆழத்திற்குச் சென்றேன். இரவு முழுக்க அங்கேயே தங்கியிருக்கத் தீர்மானித்திருந்தேன். ஆனால், நான் அப்படிச் செய்தால் பாவம் உன் மெத்தை சாம்பலாக மாறிவிடும் என்று தோன்றியது. நான் எழுந்து பார்த்தபோது ஷியாமை அங்கு காணவில்லை. பக்கத்து அறையில் உறங்கிக் கொண்டிருக்கும் உன்னை எழுப்பி நிலைமையை விளக்கிச் சொல்லலாம் என்று வந்தபோது உன் அருகில் மறுபடியும் மனித உருவத்திற்கு மாறிவிட்ட ஷியாம் உறங்கிக் கொண்டிருப்பதைக் கண்டேன். நான் உன்னை எழுப்ப முயற்சி செய்தேன். உன் பெயரை உரக்கச் சொல்லிக் கத்தினேன். கண்டாமணியை அடித்தேன். இரண்டு அணுகுண்டுகளைக் கூட வெடித்தேன். இருந்தும் நீ எழுந்திருக்க வில்லை. கடைசியாக நான் உன் காதருகில் மெல்லிய குரலில் 'எழுந்திரு மகாராஜா, ஸ்காட்ச் விஸ்கி முழு கிரேடு இப்போழுது தான் வந்தது' என்று சொன்னேன். நீ உடனடியாகக் கண்விழித்து 'எங்கே' என்றாய். 'எழுந்திரு... வீடு தீப்பற்றி எரிகிறது... தீ... உனக்குப் புரிகிறதா?... தீ...' என்றேன். அதற்கு 'உளறிக் கொண்டிருக்காதே' என்று நீ பதில் தந்தாய். இறுதியாக உனக்கு நான் சொன்னதில் நம்பிக்கை ஏற்பட்ட பின், தீயணைப்புப் படைக்குச் செய்தியைச் சொல்ல அறிவுரை கூறி மீண்டும் உறங்கத் தொடங்கினாய். உன்னால் ஏமாற்றம் அடைந்த நான் ஷியாமை எழுப்பி சூழ்நிலையின் பாதுகாப்பற்ற தன்மையை விளக்க முயன்றேன். கடைசியாக நான் சொல்ல வந்ததைப் புரிந்து கொண்ட பிறகு, 'நண்பா! நீ ஏன் அந்தத் தீயை அணைக்கக் கூடாது? என்ன இருந்தாலும் அது ஒவ்வொரு குடிமகனின் கடமைதானே' என்றான். அதன் பிறகு இந்த மனித

இனத்தின் மீது நாம் கொண்ட பற்று முழுவதையும் என் கைகளில் ஒன்று திரட்டி, நானே ஒரு தீயணைப்புப் படையாக மாறினேன். உன் பிறந்த நாளைக்கு நான் பரி சாகக் கொடுத்த ஒரு பிளாஸ்டிக் முகவையை எடுத்து தண்ணீரால் நிரப்பி மெத்தையில் ஏற்பட்டிருந்த பள்ளத் தில் ஊற்றினேன். என் கடமை முடிந்தவுடன் கடவுள் மீது பாரத்தைப் போட்டு உறங்கச் சென்றேன்".

ஷியாம் தன் முழுத் தூக்கத்தையும் முடித்து எழுந்த பின்பு, நானும் ராஜாவும் எப்படி அந்த நெருப்பு தொடங் கியது என்று கேட்டோம். நாங்கள் எதைப்பற்றி பேசு கிறோம் என்று புரியாமல் விழித்தான். நீண்ட நேரம் தீவிரச் சிந்தனைக்குப் பிறகு, தீர்மானமாய், "இந்தத் தீ விபத்து பற்றி என்னால் மேலும் ஏதும் சொல்ல முடியாத நிலையில் இருக்கிறேன்" என்றான். நாங்கள் பக்கத்து அறைக்குச் சென்று மோசமாய் எரிந்திருந்த ஷியாமின் பட்டுச் சட்டையை எடுத்து வந்து அவனிடம் கொடுத் தோம். ஒரு பார்வை பார்த்து விட்டு, "இதைப் பற்றிய விசாரணை அவசியமாகிறது" என்றான்.

எங்கள் கூட்டு விசாரணையில் ஷியாம் அணிந்திருந்த பனியனில் இரண்டு மூன்று எரிந்த அடையாளங்கள் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. மார்புப் பகுதியில் ஒரு ரூபாய் நாணயம் போல் பெரிய அளவில் இரண்டு எரிந்த அடையாளம் இருந்தது. நேற்று நடந்த தீயோடு அவன் சம்பந்தப்பட்டிருப்பது ஊர்ஜிதப்படுத்தப்பட்டது. இந்தச் சமயத்தில் ஷெர்லாக் ஹோம்ஸ் தன் நண்பர் டாக்டர் வாட்சனிடம் சொன்னான். "தீர்மானமாய் நேற்று தீ பிடித் துக் கொண்டது என்றும், சந்தேகத்துக்கு இடமில்லா மல் நிரூபிக்கப்பட்டுள்ளதென்றும், தன் நண்பர் ராஜா மெகதி அலிகானின் தூக்கத்திற்கு எந்தவிதத் தொந் தரவும் கூடாது என்று அமைதியாக தன் படுக்கையை

விட்டு எழுந்து அடுத்த அறைக்குச் சென்று படுத்துக் கொண்டான் என்று தீர்ப்பாகிறது".

ஷியாம் சமூகப் பழக்கவழக்கங்களைத் திருப்தி செய்ய வழக்கமான முறையில் திருமணம் செய்து கொண்டான். என்னைப் பொறுத்தவரை தன் வழியில் அத்தகைய பழக்கவழக்கங்களை ஏற்படுத்தியவர்களோடு சவால் விடுமளவிற்கு, மிகப் பெரிய கூட்டத்தைக் கூட்டினான். பல காலங்களுக்கு பம்பாய் திரைப்படத் துறையில் அந் தத் திருமணம் பற்றிய பேச்சு நிலவியது. அளவில்லாமல் மது ஊற்றிக் கொடுக்கப்பட்டாலும், இந்த நாகரிக சமூ கம், தங்கள் குறைவான ஆடைகளில், படிந்திருக்கும் அசிங்கத்தை மூடிமறைத்து வெளிக்காட்ட மறுத்தார் கள்.

ஷியாம் பெண்கள் மீதும், குடிப்பது மீதும் மட் டும் மோகம் கொண்டிருக்கவில்லை. வாழ்க்கையில் அழகானது எல்லாவற்றிலும் மோகம் கொண்டிருந்தான். அழகான பெண்களை நேசித்தது போலவே நல்ல புத்தங்களையும் நேசித்தான். தன் சிறு வயதிலேயே தாயை இழந்திருந்தாலும் தன் வளர்ப்புத்தாயைப் பெற் றதாயைப் போலவே நேசித்தான். தன் வாரிசுகள் மீது கொண்ட அன்பைக் காட்டிலும், தன் வளர்ப்புத் தாய் மீதும் தன் சகோதரிகள் மீதும் அளவற்ற அன்பு கொண் டிருந்தான். தன் தந்தையின் மரணத்திற்குப் பிறகு, முழுக்குடும்பத்தையும் - அதுவும் மிகப் பெரியது, இவன் தான் பார்த்துக் கொண்டான்.

நீண்ட, காலத்திற்கு மிகச் சிரத்தையோடு, பணத்திற் காவும், புகழுக்காகவும் தீவிரமாக உழைத்தாலும், எப் போதும் அதிர்ஷ்ட தேவதை அவனைக் கடைசி நொடி யில் ஏமாற்றிக் கொண்டுதானிருந்தாள். இந்தத் தோல் விகளால் ஷியாம் எப்போதும் நிலை குலையவில்லை.

"இனியவளே, நிச்சயம் ஒரு நாள் என்னை நீ தழுவத் தான் போகிறாய்" என்பான். ஒரு நாள் அவன் தேடிய புகழும், பணமும் அவனை வந்தடைந்தது. அவன் இறந் தபோது மாதத்திற்கு ஆயிரக்கணக்கான ரூபாய் சம்பா தித்தும், பம்பாய் வெளிப்புறத்தில் மிக அழகான வீட்டில் வசித்தும் வந்தான். தங்குவதற்குக் கூட இடமில்லாமல் அவதியுற்ற நாட்கள் உண்டு. என்றாலும், வறுமை விரட் டிய காலங்களிலும் அவன் எப்பொழுதும் சந்தோஷமா கவும் வற்றாத சிரிப்போடு காணப்படும் ஷியாமாகவே இருந்தான்.

புகழ், பணம் என்ற இரண்டு பெண்கள் அவனைத் தேடி வந்த போது, பொதுவாக துணை ஆட்சியரை மக் கள் வரவேற்பது போலில்லாமல் இரும்புக் கட்டிலில் அவர்களைத் தன் அருகே உட்கார வைத்து அவர்க ளுக்குப் பெரிய முத்தம் கொடுத்தான்.

கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த அந்தக் காலங்களில் நானும் ஷியாமும் ஒரே இடத்தைப் பகிர்ந்து கொண் டோம். எங்கள் பொருளாதார நிலைமை பேசும்படியாக இல்லை. நாட்டின் அரசியல் போல் ரொம்பவும் இக் கட்டான காலங்களாக நகர்ந்து கொண்டிருந்தது. நான் பாம்பே டாக்கீஸில் வேலை பார்த்துக் கொண்டிருக்க, ஷியாம் அப்போதுதான் ஒரு படத்துக்கு ஸ்டூடியோ வோடு ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டு ரூபாய் பத்தா யிரம் முன் பணமாகப் பெற இருந்தான். இந்தப் புதை யல் அவன் நீண்ட நாட்கள் வேலையற்று இருந்ததற்குப் பிறகு கிடைத்தது. இருந்தாலும் என்னதான் ஒப்பந் தம் கையெழுத்தாகியிருந்தாலும், சொல்லப்பட்ட நேரத் திற்கு எப்பவும் பணம் கொடுக்கப்பட்டதில்லை. ஆனால் நாங்கள், எப்படியோ சமாளித்து வந்தோம். நாங்கள் கணவன், மனைவியாக இருந்திருந் தால் பணம் பற்றி நிச்சயம் வாக்குவாதம் நடந்திருக்கும். ஆனால் என்னை

யும் ஷியாமையும் பொறுத்தமட்டில் யார் செலவு செய்கி றார்கள் என்று எப்போதும் எந்தக் கணக்கும் வைத்துக் கொண்டது கிடையாது.

ஒரு நாள் மிகப் பெரிய விவாதத்திற்குப் பிறகு அந் தக் காலத்தில் மிகப் பெரிய பணமான ரூபாய் ஐந்நூறை ஸ்டூடியோவிலிருந்து வாங்கி வந்தான். நான் சல்லிக்காசு இல்லாமல் இருந்தேன். நாங்கள் 'மலாட்'டில்லிருந்து இரயிலில் திரும்பிக் கொண்டிருந்தோம். வழியில் சர்ச் கேட்டில் ஒரு நண்பனைப் பார்க்க ஷியாம் முடிவு செய் தான். என் நிறுத்தம் முதலில் வர நான் இறங்கும் முன்பு ஷியாம் தன் கண்களை மூடிக் கொண்டு, பாக்கெட்டி லிருந்து கத்தையாக ரூபாய் நோட்டை எடுத்து, எண் ணாமல் அதன் நடுப்பகுதியில் இரண்டாகப் பிரித்து, "மண்ட்டோ சீக்கிரம்!... ஏதாவது ஒன்றை எடுத்துக் கொள்" என்றான். நான் ஒன்றை எடுத்து என் பாக்கெட் டில் சொருகிக் கொண்டு இறங்கினேன். இரயில் நகரத் துவங்கிய போது டாட்டா... என்று சொல்லி மேலும் ஒரு கட்டுப் பணத்தை எடுத்துக் காற்றில் ஆட்டிக்காட்டி னான். "நீ என்ன நெனக்கிற? பாது காப்புக்காகப் பணத் தைப் பதுக்கிக் கொண்டேன்... ஹிப்டுல்லா" என்றான்.

சாயங்காலம் ஷியாம் திரும்பியபோது அவன் மன நிலை சரியாக இல்லை. அவனிடம் தனியே பேச வேண் டும் என்ற தன் விருப்பத்தைத் தெரிவித்திருந்த குல் தீப் கௌரைப் பார்க்கச் சென்றிருக்கிறான். ஷியாம் தன் அக்குளில் வைத்திருந்த பிராந்தி பாட்டிலில் இருந்து ஒரு பெரிய அளவு ஊற்றிக் கொண்டு, "என்னிடம் தனியே பேச வேண்டும் என்று அவள் சொல்லக் கார ணம், ஒரு முறை லாகூரில் யாரிடமோ அவள் என்னை நெருங்க விரும்புவதாகச் சொல்லியிருந்தேன். அந்த நாட்களில் அவளுக்காக நேரம் செலுத்தும் நிலையில் நான் இல்லை. இன்று நான் அவளிடத்திற்குச் சென்ற

போது, லாகூரில் நான் சொன்னது குப்பையென்றும், என்றுமே அவள் என்னை நெருங்க விருப்பம் கொண் டிருக்கவில்லை என்றும் தெரிவித்தாள். அதற்கு நான், நல்லது இன்றிரவு நாம் நெருங்கிக் கொள்ளலாம் என் றேன்."அவள் என்னிடம் மிக மோசமாக நடந்து கொள்ள முயன்றாள். நான் அவளை என் முஷ்டியால் ஓங்கிக் குத்தினேன்" என்றான். "ஒரு பெண்ணை அடித்தாயா?" என்றேன். காயம்பட்ட தன் கையைக் காட்டி, "அந்த ராட் சஸி நகர்ந்து கொள்ள நான் சுவரில் குத்த வேண்டியதா யிற்று" என்றான்.

பிறகு நீண்ட நேரம் உரக்கச் சிரித்து, "தேவடியா... என்னை அடைய ரொம்பக் கஷ்டப்பட்டு விளையாடுகி றாள்" என்றான்.

நான் பணம் பற்றி முன்னே குறிப்பிட்டிருந்தேன். இரண்டு வருடங்களுக்கு முன், லாகூர் திரைப்படத் துறையிலிருந்த மோசமான நிலையினாலும், 'தண்டா கோஷ்' என்ற என் சிறுகதை ஆபாசமானது என்று வழக்கு தொடரப்பட்டிருந்ததாலும், நான் பெரும் வேத னையில் இருந்தேன். கீழ் நீதிமன்றத்தில், நான் குற்ற வாளி என்று தீர்ப்பளிக்கப்பட்டு மூன்று மாதக் கடுங் காவல் சிறைத் தண்டனையும் முந்நூறு ரூபாய் அபரா தமும் விதிக்கப்பட்டது. நான் எல்லா நம்பிக்கையையும் இழந்து இதுவரை எழுதியது எல்லாவற்றையும் நெருப் பில் எரித்து விட்டு, இலக்கியத்தோடு எந்தச் சம்பந்தமும் இல்லாத வேறு ஏதோ ஒன்றினைச் செய்யவே விருப் பப்பட்டேன். சுங்கத் துறையில் நிறைய லஞ்சம் வாங் கும் வேலையாக இருந்தால் நல்லது. என் குடும்பத்தின் தேவையையாவது பூர்த்தி செய்யலாம். நான் யாரையும் விமர்சிக்கவோ அல்லது என் கருத்தைக் கூறவோ கூட விரும்பவில்லை.

அது, விசித்திரமான நிலை கொள்ளாமையும், அவ நம்பிக்கையும் நிரம்பிய காலம். சிலர் என் உண் மையான தொழில், சிறுகதை எழுதுவதென்றும், நான் நீதிமன்றத்தில் ஆபாச வழக்கில் விசாரிக்கப்பட்டதால், நான் மலிவான புகழ் தேடி எழுதுபவன் என்றும், வேறு சிலர் நான் மக்களின் ஒழுக்கங் கெட்ட உணர்வுகளைத் தூண்டிவிட்டு சந்தோஷம் காண்பவன் என்றும் சொன் னார்கள். என்னை விசாரித்த அந்த நான்கு வழக்குக ளும் என்னை என்ன செய்தது என்பதை நான் மட்டும் அறிவேன்.

நான் ஒன்றும் நல்ல நிலையில் இல்லையென்றா லும், எழுதுவதை நான் கொஞ்சமும் விரும்பவில்லை. பெரும்பாலான நேரங்களை வீட்டிற்கு வெளியே கழிப் பதும், இலக்கியத்தோடு சம்பந்தப்படாதவர்கள் மத்தி யில் சுற்றித் திரிந்து கொண்டிருப்பதுமாகக் கழித்தேன். அவர்கள் மத்தியில் நான் தீவிரமாக உடலாலும் மனத் தாலும் தற்கொலை செய்து கொண்டிருந்தேன்.

திரைப்பட விநியோகஸ்தர்கள் டெஹசின் பிச்சர்ஸ் முதலாளியிடமிருந்து ஒரு நாள் எனக்குக் கடிதம் வந் தது. பம்பாயிலிருந்து எனக்காக ஏதோ செய்தி வந் திருப்பதால், என்னை உடனடியாகப் பார்க்க விருப் பம் தெரிவிக்கப்பட்டிருந்தது. பம்பாயிலிருந்து எனக்குச் செய்தி அனுப்பியது யார் என்று தெரிந்துகொள்ள, நான் அவர்கள் அலுவலகம் சென்ற போது, ஷியாம் என்னை எங்கிருந்தாலும் கண்டுபிடித்து ஐந்நூறு ரூபாயை என் னிடம் கொடுக்குமாறு தந்தி மேல் தந்தி அடித்துக் கொண்டிருக்கிறான் என்று சொன்னார்கள். நான் டெஹ சின் பிச்சர்ஸ் போன சமயத்தில், ஷியாம் அனுப்பியிருந்த மற்றொரு தந்திக்கு, எவ்வளவு முயன்றாலும் மண்ட்டோ வைக் கண்டுபிடிக்க முடியவில்லை என்று யாரோ பதில் தந்தி எழுதிக் கொண்டிருந்தார்கள்.

ஐந்நூறு ரூபாயை நான் பெற்றுக் கொள்ள போதையே றியிருந்த என் கண்களிலிருந்து கண்ணீர் கொட்டியது. நான் ஷியாமுக்கு, நன்றி தெரிவித்தும் அந்தப் பணத்தை எதற்காக அனுப்பினான் என்று கேட்டும் குறிப்பு எழுத விரும்பினேன். நான் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டி ருப்பதை அவன் அறிந்திருப்பானா? நான் நிறைய கடி தங்கள் எழுதினேன். ஆனால் அவை எல்லாமே இந் தப் பணத்தை அனுப்ப வேண்டுமென்ற ஷியாமின் எண் ணத்தைக் கேலிக்குரியதாக்குவதாக இருந்ததால், எல் லாவற்றையும் கிழித்துப் போட்டேன்.

ஒரு வருடத்துக்கு முன் ஷியாம், தன் படம் ஒன்றை வெளியிட, அம்ரித்சர் வந்தான். அங்கிருந்து லாகூர் வந் தவுடன் என்னைப் பற்றி நிறைய பேரிடம் விசாரித் திருக்கிறான். அவன் லாகூர் வந்திருப்பதை முன்னரே தெரிந்து கொண்ட நான், ஷியாம் தன் இரவுச் சாப்பாடு முடித்தவுடன், வரவிருக்கும் சினிமாக் கொட்டகைக்கு வீட்டை விட்டுக் கிளம்பி ஏறக்குறைய ஓடிச்சென்றேன்.

ஷியாமின் பழைய நண்பரும், இசையமைப்பாளரு மான பூனாவிலிருந்து வந்த ரஷீத் அட்ரே என்னு டனிருந்தார். ஷியாமின் கார் சினிமா கொட்டகைக்கு முன்னே வந்தபோது ரஷீத் அட்ரேயையும் என்னையும் பார்த்து விட்டு ஷியாம் தன் டிரைவரிடம் காரை நிறுத்தச் சொல்லிக் கத்தினான். ரசிகர்கள் கூட்டத்தின் நெருக்க டியில் டிரைவரால் காரை நிறுத்த முடியவில்லை. ஷியா முடன் நடிகர் ஓம்பிரகாஷ் இருந்தார். இருவரும் ஒரே மாதிரி உடையணிந்து பனாமா தொப்பி அணிந்திருந் தார்கள். அவர்கள் சினிமா கொட்டகைக்குள் பின் கதவு வழியே செல்ல, நாங்கள் முன் கதவு வழியே சென் றோம். நிறைவான வாழ்க்கையோடு சிரித்துக் கொண்டு, புன்னகைத்துக் கொண்டிருக்கும் அதே பழைய ஷியாம் தான்.

அவன் ஓடி வந்து எங்களை அணைத்துக் கொள்ள, நாங்கள் போட்ட கூச்சலில் யாராலும் ஒரு வார்த்தை யையும் புரிந்து கொள்ள முடியவில்லை. நாங்கள் எல் லோரும் ஒரே சமயத்தில் நூற்றுக்கணக்கான விஷயங் களைப் பற்றிப் பேசி உரையாடலின் குவியலில் எங்க ளைப் புதைத்துக் கொண்டோம்.

சினிமா கொட்டகையில் பொதுநிகழ்ச்சி முடிந்தவு டன் எங்களைப் பட விநியோகஸ்தர் அலுவலகத்திற்கு அழைத்துச் சென்றான். மக்கள் வெள்ளம் தொடர்ந்து முடிவில்லாமல் வந்துகொண்டே இருந்ததாலும், அடிக் கடி குறுக்கிடப்பட்டதாலும் எங்களால் எதையும் தெளி வாகப் பேசிக் கொள்ள முடியவில்லை. ஷியாம் வந் திருந்த செய்தி பரவியவுடன் தெருவில் பெருங்கூட் டம் கூடியிருந்தது. மக்கள் ஷியாமைப் பார்க்க வேண் டுமென்றும், அவனை மொட்டை மாடிக்கு வருமாறும் கோரிக்கை வைத்தார்கள். ஷியாம் மிகவும் வினோ தமான மனநிலையிலிருந்தான். லாகூரில் ஷியாம் மிக இறுக்கமாகத் தன் இருப்பை உணர்ந்தவனாக இருந் தான். எண்ணற்ற அவனின் லீலைகளுக்குச் சாட்சி யாக விளங்கும் அதே லாகூர் தெருக்கள். இந்த லாகூர் இப்போது அம்ரித்சரிலிருந்து ஆயிரக்கணக்கான மைல் தள்ளி உள்ளது. அவன் தன் இளம் வயதைக் கழித்த அன்பிற்குரிய ராவல்பிண்டி எவ்வளவு தூரத்தில் உள் ளது? லாகூர், அம்ரித்சர், ராவல்பிண்டி எல்லாமே இருக்க வேண்டிய இடத்தில் இருந்தாலும், அந்த நாட் களோ, ஷியாம் விட்டுச் சென்ற இரவுகளோ அங்கு இல்லை, அரசியல் காப்பாளர்கள் அதை ஆழத்தில் எங்கோ புதைத்து விட்டார்கள். அவை எங்கே என்று அவர்களுக்கு மட்டுமே தெரியும்.

ஷியாம் என்னிடம் சொன்னான், "என் பக்கத்திலேயே இரு". ஆனால், அவனின் உணர்வுப்பூர்வமான போராட்

டம் என்னையும் அந்த நிலைக்குத் தள்ள, நான் அங்கு இருக்க விரும்பவில்லை. அவனை 'ஃபளட்டி' ஓட்டலில் சந்திப்பதாக உறுதியளித்து வீடு திரும்பினேன்.

நீண்ட இடைவெளிக்குப் பிறகு, நான் ஷியாமைச் சந்தித்தாலும் எனது மனதில் சந்தோஷத்திற்குப் பதில் வெளிப்படுத்த முடியாத சோர்வே நிறைந்திருந்தது. நான் மிகவும் நிலைகுலைந்த நிலையில் யாரிடமாவது உடல்ரீதியாகச் சண்டையைத் தொடங்கி உதைத்தும், உதை வாங்கியும், தளர்சியுற்று உறங்கவே விரும்பினேன். நான் என் உணர்வுகளை அலசி ஆராய விரும்ப, அவை படுமோசமாகச் சிக்குண்ட நூல் கண்டைப் போல் கிடந்தது. ஃபளட்டிக்குச் சென்று நண்பன் அறையில் குடிக்கத் துவங்கியவுடன் இன்னும் பரிதாபமாக உணர்ந்தேன்.

ஒன்பது அல்லது ஒன்பதரை இருக்கும்போது வெளியே சத்தம் கேட்க, ஷியாம் வந்து விட்டான் என்று உணர்ந்து கொண்டேன். அறை முழுக்க அவனைப் பார்க்க மக்கள் நிரம்பியிருந்தார்கள். நான், சற்று நேரம் அமர்ந்திருந்தாலும் என்னால் ஏதும் பேச முடியவில்லை. எங்கள் உணர்வுகளுக்கு யாரோ பெரிய பூட்டுப்போட்டு, அதன் சாவியை மிகப்பெரிய வளையத்தில் மற்றச் சாவிகளோடு சேர்த்து விட, நாங்களிருவரும் அதைக் கண்டுபிடிக்க முயலுவது போலிருந்தது.

நான் அசதியுற்றேன். சாப்பாட்டுக்குப் பிறகு ஷியாம் உணர்ச்சிப்பூர்வமாக உரையாற்றினான். ஆனால் அதில் ஒரு வார்த்தையைக் கூட நான் கேட்கவில்லை. என் மனம் வேறு எதையோ உரத்த அலைவரிசையில் ஒளிப்பதிவு செய்து கொண்டிருந்தது.

ஷியாம் அவன் குப்பைப் பேச்சை முடித்தவுடன், கூடி இருந்தவர்கள் கரகோஷமாகத் தங்கள் ஏற்பை வெளிப்

படுத்திப் பலமாகக் கைதட்டினார்கள். நான் வெளியேறி அவன் அறைக்குச் செல்ல, அங்கு திரைப்பட இயக்கு நர் ஃபாஸல் கரிம் ஃபாஸலி காத்துக் கொண்டிருந்தார். நாங்கள் அற்ப விஷயத்துக்கு வாக்குவாதத்தில் ஈடுபட் டோம். அப்போது ஷியாம் உள்ளே நுழைந்து, "இவர்கள் எல்லோரும் ஹிராமண்டி போகிறார்கள். எங்களோடு நீயும் வா" என்று அழைத்தான்.

நான் ஏறக்குறைய அழத் தொடங்கினேன். "நான் போக விரும்பவில்லை. நீ போ. உன்னோடு இருப்பவர் கள் போகட்டும்" என்றேன்.

"அப்ப, எனக்காகக் காத்திரு... நான் சீக்கிரம் வந்து விடுகிறேன்"

ஹிராமண்டி போகும் கூட்டத்தோடு ஷியாம் சென் றான்.

நான் அங்கே அமர்ந்திருந்து, ஷியாம் மற்றும் திரைப் படத்துறையை முழுக்கத் திட்டித் தீர்த்தேன். பிறகு ஃபா ஸலியிடம், "நீ இங்குக் காத்திருப்பாய் என நினைக்கி றேன். இருந்தாலும், உன்னால் முடிந்தால் உன் காரில் என்னை வீடு வரை கொண்டு விட முடியுமா?" என்று கேட்டேன்.

இரவு முழுக்க எந்தத் தொடர்ச்சியுமில்லாமல் விசித் திரமான கனவுகள் கண்டேன். நான் ஷியாமோடு பல முறை சண்டையிட்டேன். காலையில் பால்காரன் வந்த போது, பொருளற்ற கோபத்தில், "ஒழுக்கங்கெட்டவனே, கேவலமானவனே... மதிப் பிழந்தவனே... நீ ஒரு இந்து..." என்றேன்.

நான் விழித்துக் கொள்ள. இந்த உலகத்திலுள்ள மிக மோசமான வார்த்தை என் உதடுகளிலிருந்து வெளி வந்ததாக உணர்ந்தேன். ஆனால் என்னுள், இந்த இத

யத்தைப் பார்த்தபோது, அந்த மோசமான வார்த்தையை வாந்தி எடுத்துத் தள்ளியது அப்போது வீசிக்கொண்டி ருந்த அரசியல் தானே தவிர நானல்ல என்பது எனக்குத் தெரியும். நாலுக்கு ஒரு பங்கு தண்ணீர் கலந்த பாலை, பால்காரனிடமிருந்து பெற்றுக் கொண்ட போது, ஷியாம் பற்றி நினைத்தேன். ஷியாம் இந்து தான். ஆனால், 'தண் ணீர் கலக்காத இந்து' என்று உணர்ந்தபோது, மனதிற் குள் நிம்மதியாய் இருந்தது.

பிரிவினை சமயத்தில் இந்து முஸ்லிம் சகோதரர்க ளுக்குள்ளான உள்நாட்டு யுத்தத்தில் தினமும் ஆயி ரக்கணக்கானவர்கள் மடிந்து கொண்டிருக்கும் போது, ஒரு சமயம் ராவல்பிண்டியிலிருந்து வந்த சீக்கிய அகதிக் குடும்பத்தினர் அனுபவத்தை நானும் ஷியாமும் கேட் டுக் கொண்டிருந்தோம். தங்கள் மக்கள் எப்படியெல் லாம் கொல்லப்பட்டார்கள் என்ற கோரமான கதையைச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். ஷியாம் மிகவும் பாதிக் கப்பட, அவன் அனுபவித்துக்கொண்டிருக்கும் உணர்ச் சிக் கொந்தளிப்பை என்னால் புரிந்து கொள்ள முடிந் தது. நாங்கள் கிளம்பும் போது, "நான் ஒரு முஸ்லிம். என்னைக் கொலை செய்ய வேண்டும் போல உனக்குத் தோன்றவில்லையா?" என்று கேட்டேன்.

எந்த உணர்வும் இல்லாமல், "இப்போது இல்லை... ஆனால் முஸ்லிம்கள் செய்த அட்டூழியங்களைக் கேட் டுக் கொண்டிருந்தபோது, நான் உன்னைக் கொலை செய்திருக்கக்கூடும்" என்றான். ஷியாமின் இந்த வார்த் தைகளால் நான் மிகவும் அதிர்ச்சியுற்றேன். ஒருவேளை நானும் அந்த நேரத்தில் அவனைக் கொலை செய்தி ருக்கக் கூடும். இதைப்பற்றி நான் பின்னால் யோசித்த போது, அப்போதைக்கும், இப்போதைக்கும் உலக அளவு வேறுபாடு உள்ளது. தினமும் ஆயிரக்கணக்கான அப்பாவி இந்துக்களும், முஸ்லிம்களும் கொலை செய்

யப்படுவதற்கான அடிப்படையை திடீரென்று உணர்ந் தேன்.

"இப்போது இல்லை... ஆனால், அந்த நேரத்தில், ஆமாம்"

அந்த வார்த்தைகள் பற்றி நீங்கள் சிந்தித்தால், பிரி வினை யதார்த்த வலிக்கு நாம் விடை காண முடியும். மனித சுபாவத்திலேயே மறைந்திருக்கும் அந்த விடை.

பம்பாயில், ஒவ்வொரு நாளும் மதவெறி விஷம் ஏறிக் கொண்டே யிருந்தது. பாம்பே டாக்கீஸின் நிர் வாகப் பொறுப்பை அசோக் மற்றும் வாச்சா ஏற்றுக் கொண்டபின், எல்லா உயர் பதவிகளும் ஏதோ கார ணத்தினால் முஸ்லிம்களுக்குச் சென்றன. இது இந்துத் தொழிலாளர்கள் மத்தியில் பெரும் அதிருப்தியை ஏற் படுத்தியது. ஸ்டூடியோவை எரித்து விடுவோம் என்பது முதல் கொலை மிரட்டல் வரை எல்லா மொட்டைக் கடிதங்களும் வாச்சாவிற்கு வரத் தொடங்கின. அசோக் குமாரும், வாச்சாவும் இதைப்பற்றி கொஞ்சமும் கவனம் செலுத்தியது கிடையாது. நான் தான் என்னுடைய எளி தில் புண்படக் கூடிய தன்மையினாலும், ஒரு முஸ்லிம் என்பதாலும் பலமுறை அவர்களிடம் என் சங்கடத்தை வெளிப்படுத்தினேன். பாம்பே டாக்கீஸில் நிறைய முஸ் லிம்கள் நுழைய நானே பொறுப்பு என்று இந்துக்கள் நினைத்ததால் என்னை வேலையிலிருந்து விடுவிக்கு மாறு அறிவுரை கூறினேன். அவர்கள் எனக்குப் பைத்தி யம் பிடித்து விட்டது என்று சொன்னார்கள்.

உண்மைதான், எனக்குப் பைத்தியம்தான் பிடித்து விட்டது.

என் மனைவியும், குழந்தைகளும் பாகிஸ்தானில் இருக்கிறார்கள். அந்த நிலம் இந்தியாவின் ஒரு பகு தியாய் இருந்தபோது என்னால் அதை அடையாளம்

காண முடிந்தது. எப்போதாவது இந்து முஸ்லிம் கல வரம் நடந்ததை நான் அறிந்திருந்தாலும் இப்போதைய சூழ்நிலை வேறு. அந்த நிலப்பரப்புக்கு இப்போது புதுப் பெயர் உண்டு என்றாலும், அந்தப் பெயர் அந்த நிலப்ப ரப்புக்கு என்ன செய்து விட்டது என்று எனக்குப் புரிய வில்லை. நான் எவ்வளவு முயன்றாலும் எங்களுக்கான அரசாங்கம் என்று சொல்லப்பட்டதை என்னால் உணரத் தொடங்கக் கூட முடியவில்லை.

ஆகஸ்ட் 14 - பம்பாயில் சுதந்திரதின விழா ஆரவார முழக்கத்துடன் கொண்டாடப்பட்டது. பாகிஸ் தானும், இந்தியாவும் இரண்டும் வெவ்வேறு நாடுகள் என அறிவிக்கப்பட்டன. பொதுமக்களிடம் அளவற்ற மகிழ்ச்சி வெளிப்பட்டாலும், கொலையும், கொள்ளை யும் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தன. 'இந்தியா ஜிந் தாபாத்' கோஷங்கள் ஊடே 'பாகிஸ்தான் ஜிந்தாபாத்' கோஷங்களையும் கேட்க முடிந்தது. இஸ்லாமியப் பச் சைக்கொடி, இந்திய தேசிய காங்கிரஸின் மூவர்ணக் கொடிக்கு அடுத்து படபடத்துக்கொண்டிருந்தது. பண் டிட் ஜவஹர்லால் நேரு மற்றும் காயித்-இ-அஸாம் முக மது அலி ஜின்னா பெயர்களைச் சொல்லி தெருக்களி லும், பஜார்களிலும் கோஷங்கள் எழுப்பப்பட்டன.

இந்தியா, பாகிஸ்தான் இதில் எது என் நாடு என்று என்னால் தீர்மானிக்க முடியவில்லை. ஒவ்வொரு நாளும் ஈவிரக்கமின்றிச் சிந்தப்படும் இரத்தத்துக்கு யார் பொறுப்பாளி? கழுகுகளாகவும் இரை தேடும் பறவைக ளாகவும், மதத்தின் சதையைப் பிய்த்தெடுத்து, உருவி யெடுத்த எலும்புகள் எங்கே புதைக்கப்படப் போகின் றன? நாம் இப்போது சுதந்திரம் பெற்று விட்டோம் என்ப தால், நம் அடிமைத்தனம் அழிந்து விட்டதா?

இனி யார் நம்முடைய அடிமைகளாக இருப்பார்கள்? அந்நியராட்சியில் நாம் குடிமக்களாக இருந்தபோது சுதந்திரம் பற்றி கனவு காண முடிந்தது. ஆனால் இனி நம்முடைய கனவுகள் என்னவாக இருக்கும்? நாம் சுதந் திரமானவர்கள்தானா? ஆயிரக்கணக்கான இந்துக்க ளும், முஸ்லிம்களும் நம்மைச் சுற்றி இறந்து கொண்டி ருக்கிறார்கள். அவர்கள் ஏன் செத்துக் கொண்டிருக்கி றார்கள்?

இந்தக் கேள்விகள் எல்லாவற்றிற்கும் பலவிதமான பதில்கள் இருந்தன - இந்தியாவின் பதில்கள் - பாகிஸ் தானின் பதில்கள் - பிரிட்டிஷ் பதில்கள் - ஒவ்வொரு கேள்விக்கும் பதில் இருந்தது என்றாலும், உண்மை என்னவென்று பார்க்க முயன்றால் இந்தப் பதில்களெல் லாம் பயனற்றுப் போகின்றன. உண்மையைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்றால், தோல்வியுற்ற 1857 சிப் பாய்க் கலகத்திற்குச் செல்ல வேண்டும் என்று சிலர் சொன்னார்கள்.

வேறு சிலர், கிழக்கிந்தியக் கம்பெனியிடமிருந்து தொடங்குகிறது என்றார்கள். இன்னும் சிலர் ரொம்பப் பின்னே சென்று முகலாயப் பேரரசை ஆராய்ச்சி செய்யு மாறு அறிவுரை கூறினார்கள். ஒவ்வொருவரும் நம்மைக் கடந்த காலத்திற்கு இழுத்துச் செல்ல முயன்றார்கள். அதே சமயத்தில் கொலைகாரர்களும், தீவிரவாதிகளும் எதிர்ப்பில்லாமல் முன்னேறி, வரலாற்றில் இதற்குச் சம மானது ஏதும் இல்லாத, ரத்த ஆறு பாயும் புதிய வர லாற்றை உருவாக்கிக் கொண்டிருந்தார்கள்.

நான் பாம்பே டாக்கீஸ் போவதை நிறுத்திக் கொண் டேன். இப்போதெல்லாம் அசோக் மற்றும் வாச்சா என் னைப் பார்க்க வந்தாலும், எனக்கு உடல் நலம் சரி யில்லை என்பது போல் நடித்தேன். ஷியாம் என்னைப்

பார்த்துப் புன்னகைப்பான். என்னுள் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை ஷியாம் உணர்ந்திருந் தான். நான் மிக அதிகமாகக் குடிக்கத் துவங்கினேன். அதிலும் சலிப்புற்றுப் போய் அதையும் விட்டு விட்டேன். நாள் முழுக்கக் குழப்பமான சிந்தனைகளுடன் சோபா வில் படுத்துக் கிடந்தேன்.

ஒரு நாள் ஷியாம் ஸ்டுடியோவிலிருந்து நேரடியாக என்னிடத்திற்கு வந்தான். நான் நிலை கொள்ளாமல் சோபாவில் கிடந்தேன்.

"என்ன மகாராஜா! இன்னும் அசைபோட்டுக் கொண் டுதானிருக்கிறோமா?" என்றான். நான் நிலையற்றுப்போ னேன். இவன் ஏன் என்னைப்போல் சிந்திக்க மாட் டேன் என்கிறான். எப்படி இவ்வளவு அமைதியாகக் காணப்படுகிறான்? என் இதயத்திலும், ஆன்மாவிலும் முட்டி மோதும் பயங்கரத்தை இவன் ஏன் உணரமாட் டேன் என்கிறான். எப்படி இவனால் சிரித்துக் கொண்டும் நையாண்டிக் கதைகள் சொல்லிக் கொண்டும் இருக்க முடிகிறது. நம்மைச் சுற்றியுள்ள சமூகம் முழுக்கப் பைத் தியம் பிடித்து விட்டதென்றும், இனி அதை அர்த்தப்ப டுத்திக் கொள்ள முயல்வது கூட வீண் என்ற முடிவிற்கே வந்து விட்டானா?

அது திடீரென்று நடந்தது. ஒரு நாள் எனக்குள் சொல் லிக் கொண்டேன், "எல்லாம் நரகத்திற்குப் போகட்டும், நான் கிளம்புகிறேன்". அன்றிரவு ஷியாம் படப்பிடிப்பில் இருந்தான்.

நான் தங்கியிருந்து பொருட்களைக் கட்டத் துவங்கி னேன்.

ஷியாம் விடியற்காலையில் வந்து சுற்றுமுற்றும் பார்த் துக் கேட்டான், "போகிறாயா?"

"ஆமாம்" என்றேன்.

மறுபடியும் அதைப்பற்றி நாங்கள் பேசவில்லை. எனக்குக் கூடமாட உதவி செய்து கொண்டே அன்றிரவு படப்பிடிப்பில் நடந்த சுவாரஸ்யமான கதைகளைத் தொடர்ச்சியாய்ச் சொல்லிக்கொண்டே இருந்தான். அவன் நிறையச் சிரித்தான். நான் கிளம்பும் நேரம் வந்தபோது, பிராந்தி பாட்டில் எடுத்து, இரண்டு பெரிய அளவு ஊற்றி என்னிடம் கொடுத்து, சொன்னான் "ஹிப்டுல்லா"

"ஹிப்டுல்லா" என்று பதில் தந்தேன். பிறகு என்னைத் தன் கரங்களால் அணைத்துக் கொண்டு, "திமிர் பிடித்தவனே" என்றான்.

நான் என் அழுகையை அடக்க முயன்று "திமிர் பிடித்த பாகிஸ்தானி" என்றேன். "பாகிஸ்தான் ஜிந்தாபாத்" என்று அவன் உண்மையாகக் கத்தினான். நான் "பாரத் ஜிந்தாபாத்!" என்றேன்.

கராச்சி போகும் கப்பலுக்கு, என்னை ஏற்றிச் செல்லக் காத்திருந்த டிரெய்லர் வண்டியில் ஏற நாங்கள் படியிறங்கினோம்.

துறைமுகத்திற்கு ஷியாம் வந்தான். கப்பல் தளத்தில் ஏற இன்னும் சிறிது நேரம் இருந்தது. அவன் வேடிக்கையான கதைகளைச் சொல்லிக் கொண்டிருந்தான். கப்பல் மணி அடித்தவுடன் கடைசி முறையாக "ஹிப்டுல்லா" என்று உரக்கச் சொல்லி நீண்ட பெரிய தீர்மானமான அடிகளை வைத்துத் திரும்பி குறுகிய வழியில் நடக்கத் துவங்கினான். ஒரு முறை கூட அவன் திரும்பிப் பார்க்கவில்லை.

லாகூரிலிருந்து நான் எழுதிய கடிதத்திற்கு அவன் ஜனவரி 19, 1948 -ல் பதிலெழுதினான்.

"இங்கே எல்லோரும் உன்னை இழந்திருப்பதோடு, இங்குள்ள கதாபாத்திரங்களின் மீது தாராளமாக நீ சித றவிடும் வேடிக்கைகளை இழந்து வெறுமையை உணர் கிறோம். வாச்சா, நீ அவரிடம் சொல்லிக் கொள்ளாமல் போய் விட்டதாகச் சொன்னார். இதில் முரண் என் னவென்றால், பாம்பே டாக்கீஸில் முஸ்லிம்கள் நுழை வதை எதிர்த்த முதல் நபரும் நீதான். பாகிஸ்தானுக்கு ஓடிப்போன முதல் நபரும் நீதான். இப்படியாக நீயே உன் கோட்பாட்டிற்குத் தியாகியானாய். எப்படியிருந்தா லும் இது வாச்சா-வின் கருத்து. நீ அவருக்குக் கடிதம் எழுதியிருப்பாய் என்று நினைக்கிறேன். இல்லையென் றால் நடைமுறைப்படி நீ எழுத வேண்டும் என்று எதிர் பார்க்கிறேன்."

- உன் ஷியாம்.

இன்று ஆகஸ்ட் 14. இந்தியாவும், பாகிஸ்தானும் சுதந் திரம் அடைந்த நாள். இரண்டு பக்கங்களிலும் கொண் டாட்டங்கள்.

அதே சமயத்தில் தாக்கவும் தற்காத்துக் கொள்ளவும், முழு ஏற்பாடுகளும் நடந்து கொண்டிருக்கின்றன.

நான் ஷியாமின் தொனியில் சொல்கிறேன்.

"அன்புள்ள ஷியாம், நான் பாம்பே டாக்கீஸை விட்டு வந்தேன். பண்டிட் நேருவால் காஷ்மீரை விட்டுக் கொடுக்க முடியாதா? இப்போது இது 'ஹிப்டுல்லா' இல் லையா?"

***

# மண்ட்டோ மாமா

## ஹமீத் ஜலால்

என்னுடைய தினசரி வார்த்தைப் புழக்கத்தில் மண்ட்டோ மாமா என்று எதுவும் கிடையாது. யாரேனும் திடீரென்று என்னிடம் மண்ட்டோ மாமா பற்றி கேட்டால் என்னுடைய தாயின் தம்பியைத்தான் சொல்கிறார்கள் என்று எனக்கு உடனடியாகப் புரியாமல் போகலாம். நாங்கள் எப்போதும் பஞ்சாபியில் பேசிக்கொள்வதால் அவரை 'சாதத் மாமாஜன்' என்றே அழைப்பேன். பொதுவாக வீட்டில் அவர் பேசும் மொழி இதுதான் என்றாலும், அவரின் குழந்தைகள் உருது கற்றுக்கொள்ள வேண்டும் என்று அவர்களிடம் மட்டும் அவரின் இலக்கிய வெளிப்பாட்டு மொழியான உருதுவில் பேசுவார். உருது மொழியில் நீண்ட உரையாடல்கள் நடத்துவது கடினமாக இருப்பதால், பஞ்சாபியில் எழுதுவதைத் தவிர்ப்பது போல உருதுவில் பேசுவதைத் தவிர்த்தார்.

அவருடனான என்னுடைய உறவைப் பொறுத்தமட்டில் நான் மண்ட்டோவாக இருக்க வேண்டிய அவசியமில்லை. உண்மை என்னவென்றால் நான் மண்ட்டோவாக இருந்திருந்தாலும் நான் அந்தக் குடும்பப் பெயரை உபயோகித்திருக்க மாட்டேன். காரணம் இப்போது அது ஒரு குடும்பத்திற்குச் சொந்தமானது என்பதை விட உருது இலக்கியத்தில் தனக்கென்று ஒரு பெயரை நிலைநிறுத்திக் கொண்ட ஒருவருக்குச் சொந்தமானது.

இனிவரும் காலங்களில் 'மண்ட்டோ' என்பது அடை மொழியாக இலக்கியப் போக்கையோ, ஒருவரின் தனித் துவத்தையோ குறிப்பதாக மாறுவதற்கான வாய்ப்புகள் உண்டு. இதில் இரண்டாவதில் தான் சில விசயங் களைச் சொல்வதற்கான தகுதி என்னிடம் இருப்பதாக நினைக்கிறேன். என்னுடைய பிரதான சிக்கல் என்ன வென்றால் எப்படி சாதத் மாமாஜன்னையும் மண்ட்டோ வையும் பிரித்து வேறுபடுத்திப் பார்ப்பது என்பதுதான். காரணம், ஹசன் மண்ட்டோ உண்மையில் ஒரு தனித் துவத்தின் பிளவுண்ட கூறுகள். சாதத் ஹசன் சம்ப்ராலா வில் (இப்போது கிழக்கு பஞ்சாபில் இருக்கிறது) மே மாதம் பதினோராம் தேதி 1912ல் பிறந்தார். அவரே, தன் னுடைய பள்ளி இறுதி நாட்களை நெருங்கிக் கொண்டி ருக்கும் போது மண்ட்டோவைப் பிறப்பு கொள்ள வைத் தார்.

அவரின் தனித்துவத்தில் 'மண்ட்டோ' என்பது எப் போது தன்னை வெளிப்படுத்திக்கொள்ளத் தொடங் கியது என்ற சரியான தேதியைச் சொல்வது சாத் தியமில்லை. ஆனால் அது எப்படி முதல் முறையா கத் தன்னை வெளிப்படுத்திக் கொண்டது என்று ஒரு நிகழ்வை விவரிப்பது, அவசியமான ஒன்றாக இருக்க லாம். அவரின் விடலைப்பருவத்தில் இருக்கும்போது, மாஸ்டர் குதா பக்ஷ், லண்டனில் தன்னுடைய கண்க ளைக் கட்டிக்கொண்டு பிக்காடிலி சர்க்கஸ் ஊடாகக் கார் ஓட்டிப் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியிருந்தார். இது நடந்த வெகு சில நாட்களில் தீ மிதிக்கக்கூடிய ஒருவர் அம்ரித்சரில் தோன்றி தன்னை மாஸ்டர் குதா பக்ஷின் குரு என்று சொல்லிக்கொண்டு திரிந்தார். அவரின் பெயர் அல்லா ராக்ஹா என்று நினைக்கிறேன். ஆழமில் லாத பள்ளம் தோண்டி அதில் கனன்று கொண்டிருந்த கங்குத்துண்டுகளைப் போட்டு, சிறு காயமும் இல்லா

மல் அதன் மேல் அவர் நடந்து வருவதைப் பார்க்கத் தினமும் ஆயிரக்கணக்கில் மக்கள் கூடினார்கள். ஒரு நாள் இன்னும் ஒரு படி மேலே சென்று அவர் மீதும் கடவுள் மீதும் நம்பிக்கைக் கொண்டவர்கள் யாரேனும் இருந்தால், வெறுங்காலோடு அவரைப் பின்தொடர்ந்து எந்தத் தீப்புண்களும் இல்லாமல் மீண்டு வரலாம் என்று அறிவித்தார். சிறு சிறு தீநாக்குகளையும், அது கங்குத் துண்டுகளை எளிதில் சிவப்பாக்கிக் கொண்டிருப்பதை யும் பார்த்து, 'எங்கே மாஸ்டர் அல்லா ராக்ஹா கட்டா யப்படுத்தி அவரைப் பின் தொடரச் செய்துவிடுவாரோ' என்று கூட்டத்தில் ஒவ்வொருவரும் அச்சம் கொண்டார் கள். அவர் தன்னுடைய அறிவிப்பை மீண்டும் சொல்ல, கூட்டம் பெரும் அமைதியில் பயத்தோடு இருந்தது.

பிறகு ஒரு இளைஞன் முன்னே வந்தான். அவன் மற்ற எவரும் முன்வராததை ஊர்ஜிதப்படுத்திக் கொள்ளவே இத்தனை நேரம் காத்திருந்தது போல் காணப்பட்டான். கூட்டம் முணுமுணுக்கத் தொடங்க, அந்த மெலிந்த வாலிபன் மாஸ்டர் அல்லா ராக்ஹாவின் அறிவுரையின் பேரில் அவன் அணிந்திருந்த ஷூ மற்றும் காலுறையைக் கழற்றி, தன்னுடைய கால்சட்டையை முட்டிக்கு மேல் மடித்துவிட்டுக் கொண்டான். "கலிமாவை உச்சரித்துக் கொண்டே உன்னுடைய குதிகால்களால் என்னைத் தொடர்ந்து வா." கூட்டம் என்ன நடந்தது என்று புரிந்து கொள்வதற்குள் மாஸ்டர் அல்லா ராக்ஹாவும் அந்த வாலிபனும் கனன்று கொண்டிருந்த கங்குத்துண்டுகள் மீது அவர்களின் பயணத்தை முடித்தார்கள். அந்த வாலி பன் தன் காலில் இல்லாத தீப்புண்களையும், காயங்க ளையும் பரிசோதித்துக் கொண்டிருந்த போது கூட்டம் கைதட்டத் தொடங்கியது.

பொதுமக்களிடம் சாதத் ஹசன் மண்ட்டோ கைதட் டல் பெற்றது இதுவே முதல் முறை. ஆனால் அவருடைய

பொது வாழ்க்கையில் இது ஒரு துரதிர்ஷ்டவசமான துவக்கம். ஏனெனில் மண்ட்டோ மாமா அன்றிலிருந்து இன்று வரை நெருப்பின் மீதுதான் நடந்து கொண்டி ருக்கிறார். அவருடைய பங்காக, அதுவும் மிகப் பெரிய அளவில் - பொதுமக்களின் கைத்தட்டலை அவர் பெற்று வந்தாலும், நெருப்பு சாதாரணமாக உருவாக்கும் பாதிப்புகளிலிருந்து அவரால் தப்பிக்க முடியவில்லை. அவரைத் தீ சூழ்ந்து விழுங்கிக்கொண்டிருக்க, அதை எதிர்த்து அவர் அரைமனதோடு போராடியதைக் கூட, மக்கள் வித்தையின் ஒரு பகுதியாகப் பார்த்து அவ ரைப்பற்றி எந்தக் கவலையும் கொள்ளாமல் இருந்தார் கள். நான் அவரின் போராட்டங்களை அரைமனதோடு என்று சொல்வதற்குக் காரணம், ஓர் எழுத்தாளன் என்ற முறையிலும், அவரின் தனித்துவத்தின் பகுதியாகவும் இப்படித் தீயின் மீது நடப்பதை அவசியமான ஒன் றாக அவர் கருதினார். தீயில் நடப்பது போன்ற அதீத செயல்களிலும், அபாயகரமான செயல்களிலும் ஈடுப டவில்லை என்றால் பொதுமக்களின் அங்கீகாரத்தைப் பெற முடியாமல் போய் விடும் என்று அவருடைய ஆழ்ம னதில் அவர் நினைத்திருக்கலாம்.

மண்ட்டோ மாமாவைப் பற்றி முழு ஓவியத்தையும் கொடுப்பது என்பது முப்பட்டகம் ஊடே பார்க்கும்போது கிடைக்கக்கூடிய எல்லா வண்ணங்களையும் ஒன்றி ணைக்க முயல்வது போல சாத்தியமில்லாத செயலா கும். மண்ட்டோவின் 'க்ளைடாஸ்கோப்'பை மெல்லச் சுழற்றி, என் சிந்தனைத் திரையில் உருவாகும் பல்வேறு வடிவங்களை விளக்குவது மட்டுமே என்னால் முடியும்.

அப்படிப்பட்ட ஒரு படிமம் அவர் நெருப்பின் மீது நடந்த காலத்திற்கு என்னை அழைத்துச் செல்கிறது. அவரின் படிப்பறையில் கார் போன்ற வடிவத்தில் இங்க் புட்டியைக் கொண்டிருக்கும் மேஜையின் முன்பு அவர்

அமர்ந்திருப்பதைப் பார்க்கிறேன். அவர் என் காதில் ஏதோ இரகசியம் சொல்ல நான் வெளியேறி, வழக்கமாக அவரோடு கூடி அரட்டை அடிக்கும் கும்பல் வந்தவு டன் திரும்பவும் வருகிறேன். நான் இதுவரை சந்தித்தி ராத ஓரிரு நண்பர்களுக்கு என்னை அறிமுகப்படுத்தி வைக்கிறார். நான் லாகூரிலிருந்து அப்போதுதான் வந்தது போல அவர்களிடம் சொல்லி, மிகவும் கவலை கொண்ட தொனியில் தாஜ்மஹால் பற்றி மேலும் ஏதே னும் செய்தி லாகூரை வந்தடைந்ததா என்று விசாரிக் கிறார். எனக்கு அப்போது பத்துவயது கூட இருக்காது என்றாலும், மிகச் சரியாக நான் செய்ய வேண்டியது ஏற் கனவே சொல்லப்பட்டிருந்ததால் சூழ்நிலையின் இறுக் கத்தை உணர்ந்தவன் போல, "ஆமாம். அந்தச் செய்தி உண்மைதான். லாகூரில் எல்லோரும், தாஜ்மஹாலை அமெரிக்காவுக்கு விற்று விட்டதாகப் பேசிக்கொள்கி றார்கள்" என்றேன். மண்ட்டோ மாமாவும் அவருடைய மிக நெருங்கிய நண்பர்களும் இந்த செய்தி மீது பாய்ந்து, எளிதில் ஏமாறக்கூடிய அவர்களின் புது நண்பர்களிடம் அவர்கள் முன்னால் சொன்ன கிசுகிசு உண்மைதான் என்று நம்ப வைக்கிறார்கள். பிரிட்டிஷ் தாஜ்மஹாலை அமெரிக்காவுக்கு விற்றுவிட்டது. அவர்கள் மிக பிரத்தி யேகமான இயந்திரங்களை ஆக்ராவுக்கு வரவழைத்து அந்த நினைவுச் சின்னத்தை நியூயார்க் நகருக்கு எடுத் துப்போவதாகத் திட்டம் போட்டுள்ளார்கள். அடுத்த நாளே 'அம்ரித்சர்' பஜார் முழுக்க இந்த வதந்தி மிக முக் கியமான செய்தியாகப் பரவிக்கொண்டிருக்க மண்ட்டோ மாமா தன்னுடைய படிப்பறையில் அமர்ந்து குலுங்கிக் குலுங்கிச் சிரித்துக் கொண்டிருந்தார்.

அந்த நாட்களில் மண்ட்டோ மாமா வதந்தி வியாபா ரத்தில் சந்தோஷமாக ஈடுபட்டிருந்தார். அவர் உருவாக் கிய ஒவ்வொரு கிசுகிசுவும் அவரின் படைப்பாற்றலை

வெளிப்படுத்துவதாக அமைந்தது. அவர் வைத்திருக்கும் இங்க் பேனா கழுதையின் கொம்பைக் குடைந்து செய்யப்பட்டது என்று அவரின் நண்பர் களை நம்ப வைத்ததைச் சொல்லலாம். அம்ரித்சரில் இருந்த இளம் அறிவுஜீவிகள் கூட்டத்திற்கு அவர் தலைவராக இருந்தார். மற்ற மாணவர்கள் கூட்டத்திலிருந்து தங்களை வேறுபடுத்திக்காட்ட பல புதிய சொற்றொடர்களையும், உரையாடும் பாணியையும் அவர் அறிமுகப்படுத்தியிருந்தார்.

இந்த இருபது வருடங்களில் மிகவும் பிரபலமாகி எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட. 'பிராடு' 'கபாப்' என்ற சொற்கள் அவருடையது. இன்று பலர் 'பிராடு' என்ற வார்த்தையை உருதுவிலிருந்தோ பஞ்சாபிலிருந்தோ வந்தது போல உபயோகித்துக் கொண்டிருக்கிறார்கள். மண்ட்டோவைப் பொறுத்தவரை இது ஒருவரின் செயலைக் குறிப்பதாக இல்லாமல் அவரின் தனித்துவத்தைக் குறிப்பதாகவே பயன்படுத்தினார். யாரேனும் ஒருவர் கைவிட்டுவிட்டாலோ, எரிச்சல் கொள்ள வைத்தாலோ, மண்ட்டோ மாமாவின் வார்த்தையில் சொல்வதென்றால், அவன் 'கபாப்' செய்து விட்டான். அவர் உபயோகித்த வாக்கிய அமைப்பை வெளிநபர் யாரேனும் கேட்டால் குழம்பித்தான் போவார்கள். ஒருவருடைய சட்டையைப் பற்றியோ அவர் வைத்திருக்கும் இங்க் பேனா பற்றியோ அவர் ஏதேனும் கேட்க விருப்பப்பட்டால்,

"நீ அணிந்து கொண்டிருக்கும் உன் பட்டன் என்ன?" என்றோ, "உன் நிப் என்ன?" என்றோ கேட்பதையே வழக்கமாகக் கொண்டிருந்தார். மற்றவர்களிடம் இருந்து வேறுபட்டிருப்பதற்கான தூண்டுதலும், மரபிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்வதிலும், யாருக்கும் நன்றிக்கடன் படாமல் இருப்பதிலும், சுருங்கச் சொன்னால்

மண்ட்டோவாக மட்டுமே இருப்பதற்கான உந்துதல்கள் இவை எல்லாவற்றிற்கும் அடித்தளமாக இருந்தன.

நான் எப்போதாவதுதான் அம்ரித்சர் சென்று வந்தேன் என்பதால், அவரை அருகிலிருந்து பார்க்க முடியாமல் போனது. உண்மை என்னவென்றால் நான் அம்ரித்சரில் இருந்திருந்தாலும் அல்லது மண்ட்டோ மாமா அடிக் கடி லாகூர் வந்து கொண்டிருந்தாலும், எங்களின் வயது வித்தியாசத்தின் காரணமாக அவரின் நடவடிக்கைகள் எல்லாவற்றையும் அறிந்து கொள்வது என்பது சிரமமா கத்தான் இருந்திருக்கும். பிறகு அவர் பம்பாய் சென்று விட, எங்களுக்கு இடையேயான இடைவெளி இன்னும் அதிகமானது. நாங்கள் பல வருடங்கள் கழித்துத்தான் மீண்டும் சந்தித்துக் கொண்டோம். 1940 டிசம்பர் மாதம் அவருடைய முதல் சிறுகதைத் தொகுப்பு 'மண்ட்டோ கி அப்சானே' வெளியிடுவது தொடர்பாக அவர் லாகூர் வந்திருந்தார். அவர் புத்தக வெளியீட்டாளரிடம் புத் தகத்தின் அட்டைப்படம் எப்படி அழுக்கேறியதாகவும் அதில் அவருடைய ஓவியம் சட்டைக் காலர் தூக்கி விடப்பட்டும் தலைமுடியெல்லாம் கலைந்தும் எதிர்ப் புணர்வோடும் அகங்காரத்தோடும் இருக்க வேண்டும் என்றும் சொல்லிக் கொண்டிருப்பதை நான் கேட்டேன். "மக்கள் என்னைத் திட்டுவதற்கு இது தூண்டிவிட வேண்டும்" என்றார்.

வெளியீட்டாளர் பிரமித்துப் போய் வாயடைத்து நிற்ப தற்காக இப்படிச் சொன்னாரா அல்லது வாசகனுக்கும் படைப்பாளிக்கும் உள்ள உறவு இப்படித்தான் இருக்க வேண்டும் என்று நினைத்தாரா என்று எனக்குத் தெரி யவில்லை. தனிப்பட்ட முறையில் மண்ட்டோ வேண்டு மென்றே இதைச் சொன்னது போல் எனக்குத் தெரிய வில்லை. அப்படி அவர் பேசியிருப்பதைக் கூட நினை வில் வைத்திருப்பதற்கான வாய்ப்புகள் இல்லை. ஆனா

லும் அவரின் குணாம்சத்தைப் புரிந்து கொள்வதற்கான துருப்புச்சீட்டாக இது அமைகிறது. அவரின் முதல் குறிக் கோள் வெளியீட்டாளர் மற்றவர்களிடம் வழக்கமாக நடந்து கொள்ளும் முறையில் மண்ட்டோவிடம் நடந்து கொள்ளக் கூடாது என்று மறைமுகமாகச் சொல்வதற் காக இருந்திருக்கலாம். உருது இலக்கியத்தில் தன்னு டைய படத்தை மேல் அட்டையில் போட்ட முதல் எழுத் தாளர் மண்ட்டோ தான். 'நான்தான், மண்ட்டோவின் எழுத்துக்களைப் போலவே அவரின் தனித்தன்மைக் கும் உரிமையாளன்' என்று சொல்வது போலிருந்தது.

ஆனால் புத்தகத்தின் அட்டைப்படத்தைப் பார்த்து யாரேனும் அவர் மீது வசவுகளைக் கொட்டினார்களா என்று எனக்குச் சந்தேகமாகத்தான் இருக்கிறது. பொது வாக சாதத் ஹசன் மண்ட்டோ, அதாவது அவர் இன்னும் அவராக இருந்த காலங்களில் அவரின் படைப்புகளை மற்றவர்களைக் காட்டிலும் படுமோசமாக விமர்சித்து வந்தார். அவரின் படைப்புகளுக்கு அவர்தான் பொறுப்பு என்றாலும் அவர் தன்னை 'பிக்மாலியனா'கக் கற்பனை செய்து கொள்ள அவரின் நடவடிக்கைகள் திரு. ஹைடி மற்றும் ஃப்ரங்கஸ்டைனைப் பின்பற்றியது. இந்த அரக் கன்- என்னால் இதை வேறு எப்படி அழைக்க முடி யும், பல வருடங்களாகச் சூறையாடிக்கொண்டிருக்கி றான். இவனை அடக்குவதற்கான முயற்சிகள் எல்லாம் வீணாகிப் போகக் காரணம், அவரால் குடிப்பதை நிறுத்த முடியாமல் போனதே ஆகும். இதை விளக்கு வதற்கு ஓரிரு விஸ்கி சொட்டுகள் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சியைச் சொல்கிறேன்...

1953 ஆகஸ்டில் மண்ட்டோ மாமா மஞ்சள் காமா லையால் பாதிக்கப்பட்டிருப்பதால் 'மேயோ' மருத்து வமனைக்குக் கொண்டு செல்லப்பட்டார். ஆயிரத்தில் ஒருவர்கூட குணமாக முடியாத குடலைப் பாதிக்கும்

நோயான சிரோஸிஸ் அவரைத் தாக்கியிருப் பதா கக் கண்டுபிடிக்கப்பட்டது. நான் அப்போது மர்ரேயில் இருந்தேன். நான் அங்கிருந்து கிளம்பிய அன்று, அவ ரின் நிலைமை மிக மோசமாக இருப்பதாக எனக்குத் தந்தி வந்தது. நான் ராவல்பிண்டி வந்து சேர்ந்தவுடன் தொலைபேசியில் லாகூரில் தொடர்பு கொள்ள, மருத் துவர்கள் நம்பிக்கை இழந்துவிட்டதாகவும் நான் வரு வதற்குள் எல்லாம் முடிந்துவிடும் என்றும், என்னை எங்கே என்று கேட்டதாகவும் என்னிடம் தெரிவிக்கப்பட் டது. கடந்த சில வருடங்களாக இதுபோன்ற செய்தியை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன் என்றாலும் எனக்கு இது பெரும் அதிர்ச்சியாக இருந்தது. அத்தோடு அவர் என்னைப் பற்றி கேட்டுள்ளார் என்ற விஷயம் என்னை மேலும் சோகம் கொள்ள வைத்தது. ஆனால் இவை எல்லாவற்றையும்விட சாதத் மாமாஜன்னுடன் நான் கழித்த அந்தப் பழைய சந்தோஷமான நாட்கள் மண்ட் டோவோடு சேர்ந்து புதைந்து போகும் என்ற எண்ணம் என்னை உணர்வுகள் அற்றதாகவும், ஏதும் செய்ய முடி யாமலும் ஆக்கியது. மருத்துவர்கள் வெறும் இரண்டு மணிநேரம் மட்டுமே கொடுத்திருக்க, இரவு முழுக்க நான் செய்த பயணம் வீண் என்றே தோன்றியது.

மரணத்தில் கொண்டுவிடும் அளவிற்கு அவர் ஏன் குடிக்க வேண்டும்? அன்று இரவு நான் லாகூரை நோக் கிப் பயணித்துக் கொண்டிருந்தபோது இந்தக் கேள்வி தான் என்னுள் திரும்பத் திரும்ப எழுந்து கொண்டி ருந்தது. அவர் மீது பரிதாபம் கொள்வதற்குப் பதிலா கக் கோபமே எழுந்தது. அவர் செய்தது கொஞ்சமும் நியாயம் இல்லாத செயல். குடும்பத்தின் மீதிருந்த அன் பிற்கும் குடியின் பிடிக்கும் இடையில் நடந்த சண்டை, இத்தனை நாட்களாக இழுத்துக்கொண்டிருந்தது. இறு தியாகக் குடிப்பழக்கம் வென்றது. கடைசி சில வாரங்

களாக அவர் தற்கொலை செய்து கொள்வதற்கான எண்ணத்தோடு இருந்ததாக நான் சந்தேகப்படுகிறேன். எதற்கும் உபயோகமில்லை என்ற முடிவுக்கு வந்த அவரின் குடும்பத்தார், குற்ற உணர்வு கொள்வதற்கும் இது உதவியாய் இருந்திருக்கும். அவர் நினைவிழந்து விட்டதாகவும், ஏற்கனவே ஆக்ஸிஜன் உதவியில் இருப்பதாகவும் சொல்லியிருந்ததால், நான் போய்ச் சேருவதற்குள் எல்லாம் முடிந்து விடும் என்று நினைத்தேன்.

மண்ட்டோ மாமாவிற்கு மிக நீண்ட ஆயுள் இருப்பதாக யூகித்திருந்த ஒரு பம்பாய் ஜோதிடருக்கும் இது பெரும் தோல்வியாக அமைந்திருக்கும். ஆனால் அவர் மிகச் சரியாக மண்ட்டோ படக்கூடிய கஷ்டங்களைப் பற்றி முன்கூட்டியே சொல்லியிருந்தார். 1946ல் திரைப்படத்துறையில் மண்ட்டோ மாமா இருந்தபோது நிறைய வருமானங்கள் கிடைத்த காலத்தில் இது சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் உடனடியாகத் திரைப்படத்துறை பெரும் சரிவைக் காண, பிரிவினைக்குப் பிறகு அவர் லாகூருக்குக் குடிபெயர்ந்தவுடன் அவரின் நிலைமை மிக மோசமாகத் தொடங்கியது. அந்த ஜோதிடர் மண்ட்டோ மாமாவின் கேது அல்லது அது போல் ஏதோ ஒன்று ஒரு தவறான பாதைக்கு நகரப் போவதாகவும், அதனால் அவரைத் தொடர்ந்து ஏழு வருடங்கள் கடுமையாகத் தாக்கப் போவதாகவும் அதற்குப் பிறகு எல்லாம் சரியாகிவிடும் என்றும் சொல்லியிருக்கிறார். நான் அந்த ஜோசியனின் வார்த்தைக்குப் புது அர்த்தம் கொடுக்க நினைக்கிறேன். ஒருவேளை மண்ட்டோ மாமா இலக்கியவாதியாக நீண்ட ஆயுளைக் கொண்டிருப்பார் என்றும், அவருடைய கடுமையான ஏழு வருடங்கள் அவரின் மரணத்தின் மூலமாக ஒரு முடிவுக்கு வரும் என்ற அர்த்தத்தில் அவன் சொல்லியிருக்கலாம்.

மிக மோசமானதை எதிர்கொள்ளத் தயார்நிலையோடு நான் மருத்துவமனைக்கு வந்து சேர்ந்தேன். மருத்துவமனையில் இரத்தச் சிவப்பாயிருந்த கண்களோடு கூடியிருந்த உறவினர்கள் அவர் இன்னும் உயிரோடு இருப்பதைத் தெரிவித்தார்கள். என் தொண்டை அடைத்துக் கொண்டிருந்ததால் என்னால் எந்தக் கேள்வியும் கேட்க முடியவில்லை. நான் வார்டுக்குள் நுழைந்து கதவுக்கு அடுத்தாற் போல் இருந்த அவரின் கட்டிலுக்குப் பக்கத்தில் போய் நின்றேன். நான் பார்த்ததை என்னால் எப்போதும் மறக்க முடியாது.

கட்டிலில் எலும்புக்கூடாய் ஒரு மனிதன் படுத்துக்கிடக்க, சவரம் செய்ய சோப்பு நுரையால் மறைத்திருந்த அந்த முகத்தில் மஞ்சள் காமாலை நோயினால் மஞ்சளேறிக் கிடந்த இரண்டு கண்கள் துருத்திக் கொண்டிருப்பதை மட்டுமே பார்க்க முடிந்தது. ஆமாம்! சவரச் சோப்பு போட்டுக்கொண்டு அவரை நோக்கிக் குனிந்திருந்தவன் எந்த மருத்துவரின் உதவியாளனும் இல்லை. அவன் மருத்துவமனையின் சவரத்தொழிலாளி. அவன் குனிந்து மண்ட்டோ ஈனஸ்வரத்தில் சொல்லிக்கொண்டிருப்பதைப் புரிந்து கொள்ள முயன்றுக் கொண்டிருந்தான். மிகவும் சிரமப்பட்டு மண்ட்டோ மாமா எலும்பும் தோலுமாய் நடுங்கிக் கொண்டிருந்த தன் கையை உயர்த்தி முகவாய்க்கு எடுத்துச் சென்று விரல்களை மேலும் கீழுமாகத் தேய்த்துக் காண்பித்தார். சவரத்தொழிலாளி அதைப் புரிந்து கொண்டான். "இன்னும் சரியாக இல்லை என்று சாகிப் சொல்கிறார்" என்று எங்களுக்கு விளக்கம் கொடுத்து பிரஷ்ஷை எடுத்தான். இன்னும் சில மணி நேரங்களாவது உயிர் வாழ்வாரா என்ற சிந்தனையோடு நான் மண்ட்டோ மாமா அருகில் சென்றேன். ஆனால் அது மண்ட்டோவின் சிறுகதையைப் படிப்பது போல அமைந்திருந்தது.

நான் மருத்துவர்களைச் சந்திக்க, அவர்கள் தலையை அசைத்து நம்பிக்கை இல்லை என்று தெரிவித்தார் கள். அடுத்து இரண்டு வாரங்களில் மண்ட்டோ மாமா மெல்ல மெல்ல முன்னேற்றம் காண்பித்தாலும் மருத்து வர்கள் அவர்களுடைய தீர்மானத்தில் நின்றார்கள். பரி சோதனை முடிவுகள் அவருக்கு எதிராக இருக்கிறது என்று தெரிவித்தார்கள். எல்லா நம்பிக்கைகளையும் இழந்திருந்ததால், அவர் விஸ்கி குடிப்பதை முழுமையா கத் தடுக்காமல் இருந்தார்கள். அவரின் உடலும் இதற் குப் பழக்கப்பட்டுப் போயிருந்ததால், தினமும் மூன்று வேளைக்கு ஓரிரு சொட்டு விஸ்கி கொடுத்துக்கொண் டிருந்தார்கள்.

நான் மர்ரேயில் இருந்து வந்து இரண்டு மூன்று நாட்கள் கழிந்த பிறகு மண்ட்டோ மாமாவின் கட்டி லுக்குப் பக்கத்தில் இருந்த சின்ன அலமாரியில் ஒரு கண்ணாடிக் குவளையில் வைத்திருந்த விஸ்கி காணா மல் போனதில் சிறு குழப்பம் உண்டாயிற்று. தவறுத லாக யாரேனும் அதைக் கொட்டிவிட்டார்களா அல் லது மருத்துவமனை வேலையாட்கள் யாரேனும் குடித் துவிட்டார்களா? யாருக்கும் தெரியவில்லை. மண்ட்டோ மாமா சந்தேகங்களுக்கு அப்பால் இருந்தார். ஏறக்கு றைய எல்லா நேரமும் கோமா நிலையில் இருந்ததோடு, தன்னால் ஒரு சிகரெட்டை எடுத்து வாயில் வைத்துக் கொள்ளக் கூட முடியாது என்று அவர் உணர்ந்துதான் இருந்தார். மதியம் விஸ்கி கொடுப்பதற்கான நேரம் வந் தபோது அவர் சக்தியற்று சைகைகள் செய்து கவனத் தைத் திருப்பி அதை நினைவூட்ட முயன்றார். அவர் என்ன சொல்கிறார் என்று கேட்க மருத்துவமனை உத வியாளன் குனிந்த போது மண்ட்டோ மாமா வாயில் இருந்து விஸ்கி நாற்றம் வருவதை உணர்ந்திருக்கிறான். மிகவும் சிரமப்பட்டுத்தான் அவர் அதை ஏற்கனவே

குடித்து விட்டார் என்று ஏற்றுக்கொள்ள வைக்க வேண்டியிருந்தது. யார் அவருக்கு அதைக் கொடுத்தார்கள் என்று கேட்ட போது, ஒரு சில நொடிகள் கூட ஒரு சிகரெட்டைப் பிடித்திருக்க முடியாத அவர் தன்னுடைய முட்டியை ஊன்றி எழுந்து - அதாவது ஒரு பொறுப்பற்ற தாதி அவருக்குக் கொடுக்க வேண்டிய நேரத்திற்கு முன்பே அதை அங்கு வைத்திருக்கிறார் - அந்தக் கண்ணாடிக் குவளையை எடுத்துக் குடித்துவிட்டு மீண்டும் அந்த இடத்திலேயே அதை வைத்திருக்கிறார்.

இது அவரின் அசாத்தியமான மனதிடத்தைக் காட்டினாலும் அவர் நோய்க்கு எதிராகப் போராடிக் கொண்டிருப்பதைக் காட்டிலும் அதற்காக போராடியது போலவே இருந்தது. சில நாட்களுக்குப் பிறகு நண்பர்கள் கொஞ்சம் விஸ்கியை வெற்றிகரமாகக் கடத்திவந்து அவருக்குக் கொடுத்ததின் விளைவாய், அவரின் நிலை படுமோசமாக, மருத்துவர்கள் பெரும் கவலையில் இருந்தார்கள். இதனால் மருத்துவர்கள் ஒரு தீர்மானமான முடிவை எடுத்தார்கள். விஸ்கி கொடுப்பதை முழுமையாக நிறுத்தினார்கள்.

இது நான் எதிர்பார்த்த விளைவை ஏற்படுத்தியது. பிறழ்ந்த சிந்தனைகள் அவரைத் தாக்கத் தொடங்கின. முன்பு கூட ஒருமுறை இப்படி நடந்திருக்கிறது. அவர் நடுநிசியில் எழுந்து எதையோ பார்த்தும், அதைப் பற்றிப் பேசுவதாகவும் இருந்தார். அவருக்குப் பைத்தியம் பிடித்து விட்டதோ என்று நாங்கள் எல்லோரும் அச்சம் கொள்ளும் படி அவர் நடந்து கொண்டார். நான் வந்தவுடன், பக்கத்துக் குடியிருப்பில் இருந்த ஒரு ஆங்கிலோ பாகிஸ்தானிப் பெண்மணி கொடுத்த மிகப்பெரிய மீனை தன்னுடைய மனைவி வறுத்துக்கொடுக்க வேண்டும் என்று அடம் பிடித்தார். என்னைப் பார்த்தவுடன் என் கைகளைப் பிடித்துக்கொள்ள, நாங்கள் இருவரும்

பிளாட்டை விட்டு வெளியே நடக்கத் தொடங்கினோம். அவர் அந்த ஆங்கிலோ பாகிஸ்தானிப் பெண்மணி யின் பெயரைச் சொல்லி உரக்கக் கத்தத் தொடங்கி னார். மிகவும் சிரமப்பட்டு நான் அவரைத் திரும்ப வீட் டிற்குள் இழுத்து வந்தேன். முதல் சில நிமிடங்களுக்கு இதை எப்படி எதிர்கொள்வது என்று எனக்கு புரியாமல், அவர் கேட்ட கேள்விகளுக்கு ஏதோ பதில்களை முணு முணுத்துக்கொண்டிருந்தேன். அவர் எந்த அளவிற்குச் சாத்தியமோ அந்த அளவிற்கு மிகவும் சாதாரணமாகப் பேசிக் கொண்டிருந்தார். அவர் பேசிக்கொண்டிருந்த விஷயம் மட்டுமே தவறாக இருந்தது. பக்கத்தில் இருந்த வேறொருத்தர் வீட்டில் சில பெண்கள் பாட்டுப்பாடி ஏதோ நிகழ்ச்சி நடத்திக்கொண்டிருக்கிறார்கள் என் றும், நானும் வர வேண்டும் என்றும் அழைத்தார். அவர் 'கேட்டதாக' திரும்பத் திரும்ப சொல்லிக்கொண்டிருந்த அந்த பஞ்சாபிப் பாடலை அங்கு போய் கேட்க வேண் டும் என்று சொன்னார்.

அவரின் அறிவுத்திறனில் நம்பிக்கை வைத்து நான் அந்தத் துணிச்சலான காரியத்தைச் செய்தேன். நான் நேரடியாக அவர் பிறழ்ந்த சிந்தனைகளின் பிடியில் இருப்பதாகவும், அவருக்கு மீனைக்கொடுத்த பக்கத் தில் குடியிருந்த அந்த ஆங்கிலோ பாகிஸ்தானிப் பெண் மணி ஆறு மாதங்களுக்கு முன்பே மாற்றலாகி லாகூரை விட்டு வெளியேறிவிட்டதாகவும், அருகாமையில் எங் கும் யாரும் பாடிக்கொண்டிருக்கவில்லை என்றும், இர வின் உறைந்த அமைதியில் எங்களுடைய குரல்களைத் தவிர வேறு எதையும் கேட்க முடியவில்லை என் றும் சொன்னேன். சில கணங்கள் அமைதியாக இருந்த பிறகு, "அப்போது அங்கு மூலையில் புறாக்கள் தங் களின் சிறகுகளை அடித்துக்கொள்ளும் சத்தம் கூட கேட்கவில்லையா? " என்று கேட்டார்.

"இல்லை" என்று என் பதில் இருந்தது.

"பாட்டுப் பாடிக்கொண்டிருக்கும் அந்தப் பெண்களின் குரல் இன்னும் கேட்டுக்கொண்டிருக்கிறது... நான் அந் தப் பாட்டை எழுதிக் கொள்கிறேன்", என்று சொல்லி அவர் அதை செய்யத் தொடங்கினார்.

"என்னால் எந்த பாட்டையும் கேட்க முடியவில்லை" என்று என்னுடைய கருத்தைச் சொன்னேன்.

அவர் தன்னுடைய மனைவியிடமும் அந்த அறை யில் அமர்ந்திருந்த மற்ற குடும்ப உறுப்பினர்களிடமும் பாட்டுச்சத்தம் கேட்கிறதா என்று கேட்டார். அவர்கள் எல்லோரும் இல்லை என்று பதில் தந்தார்கள். அவர் எழுதுவதை நிறுத்தினார்; ஆனால் அந்தப் பாட்டை இன்னும் கேட்டுக்கொண்டிருப்பதாகப் பிடிவாதமாகச் சொன்னார். மிக மெதுவாக நிஜத்தைக் கற்பனையிலி ருந்து பிரித்துப் பார்க்கத் தொடங்கினார். பிறகு தயக் கத்தோடு அவர் படுக்கைக்குச் செல்வதற்கு முன் "நான் அந்த மீனுக்காக மிகவும் வருத்தப்படுகிறேன். அது மிக நல்ல மீன்" என்றார்.

இந்தப் பிறழ்ந்த சிந்தனைகள் அவரை ஏன் தாக்கியது என்று என்னால் சரியாக நினைவுகூர முடியவில்லை. ஆனாலும் திடீரென்று மதுவையும் சாப்பாட்டையும் நிறுத்தியது ஒரு காரணமாக இருந்திருக்கலாம். மருத் துவமனையில் இந்தத் தாக்குதல் இன்னும் மோசமாக இருந்ததோடு ஏறக்குறைய ஒரு வாரகாலம் தொடர்ந் திருந்தது. எல்லா நேரமும் அவரின் மிக சந்தோச மான நாட்களைக் கழித்த பம்பாயில் இருப்பதாகவே அவர் கற்பனை செய்துகொண்டார். ஒவ்வொரு நாளும் அவர் லாகூரில் இருப்பதை நான் நினைவூட்டினாலும் அதை நம்ப மறுத்தார். ஒரு வேளை அவர் நம்பக் கூடாது என்று முடிவெடுத்திருக்கலாம். பிரிவினைக்குப்

பிறகு லாகூரில் அவர் இருந்த நாட்கள் சந்தோசங்கள் அற்றதாகவே இருந்தது. அவரின் பிறழ்ந்த சிந்தனைகள் மிகவும் விசித்திரமான குகைகளுக்குள் சென்று வந்தது. ஒரு நாள் ஒரு செய்தித்தாளிலிருந்து ஒரு கற்பனைச் செய்தியை என்னிடம் படித்துக் காண்பித்தார். "மதுக் கடைகள் மீது போலீசார் வெற்றிகரமாகச் சோதனை நடத்தினார்கள். அவர்கள் ஆறு காலி புட்டிகள், இருபத் திரெண்டு சீட்டுகள், ஒரு நடனப்பெண் ஆகியோரைக் கைது செய்திருக்கிறார்கள்."

மிகவும் அபாயகரமான நோயின் தாக்குதல்க ளில் இருந்து துணிச்சலோடும் கம்பீரத்தோடும் அவர் பிழைத்து வந்தாலும், அவரின் உடல் நிலையில் முன் னேற்றம் கூடக் கூட, அவர் எல்லாவற்றின் மீதும் எரிச் சல் கொள்ளத் தொடங்கினார். செய்யக்கூடாது என்று சொல்லப்பட்ட எல்லாவற்றையும் செய்தாக வேண்டும் என்று நினைத்தார். அவரைச் சாகடித்திருக்கக்கூடிய, மதத்தால் ஒதுக்கப்பட்ட உணவும், மதுவும் வேண்டும் என்று அடம் பிடித்தார். இன்னும் ஓரிரு மாதங்களுக்கு அவர் எழுந்து நடக்க முயலக் கூடாது என்று மருத்துவர் கள் சொல்லி யிருந்தும் அவர் நடக்க வேண்டும் என் றார். அவர் இருந்த வார்டை அதிர்ச்சி கொள்ள வைக்க வேண்டும் என்பதற்காகவும் நடப்பதற்கான அரிப்பு அடக்கிக் கொள்ள முடியாமல் இருந்ததாலும், இதை எல்லாம் விட மண்ட்டோவால் இதை செய்துகாட்ட முடியும் என்று நிரூபிப்பதற்காகவும், நடக்க வேண்டும் என்பதில் பிடிவாதமாகவும் இருந்தார். அவர் ரகசியமா கச் செய்த முயற்சி, அது கனன்று கொண்டிருந்த பள் ளத்தில் வெண்ணெய் போன்ற கால்களை வைத்தது போல் ஆனது. அது அப்படியே உருகிப்போக, கான்கிரீட் தரையில் அவரின் எலும்புகள் மோத மிகச் சிறிய காயங்

களோடு அவர் தப்பித்தது அவரின் அதிர்ஷ்டம் என்று தான் சொல்ல வேண்டும்.

அவர் நினைத்ததை யாராலும் மாற்ற முடியாது என்பதற்கு அது ஒரு உதாரணம். அவரை இருபத்து நான்கு மணிநேரமும் கண்காணிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அவர் என்ன செய்வார் என்று யாராலும் யூகிக்க முடியாது. அவருடைய கண்களும் சிந்தனைகளும் சதாசர்வகாலமும் வெறுங்காலோடு நடப்பதற்காகக் கனன்று கொண்டிருக்கும் கங்குத்துண்டுகளைத் தேடிக்கொண்டிருந்தன. என்னுடைய எரிச்சல் எல்லாம் இந்தப் போராட்டங்கள் அவர் மீண்டும் மதுவை நாடினால் வீணாகிப் போய்விடுமே என்ற கவலையில்தான். நான் சாத்தியமில்லாததைச் சாத்தியப்படும் என்று நம்பிக்கொண்டிருக்க, அவரின் நண்பர்கள் என்று அழைக்கப்பட்டவர்கள் ஓரிரு மாதங்களுக்குள் அவருக்கு சிரோஸிஸ் இல்லை என்றும், அப்படி இருந்திருந்தால் நிச்சயம் குணமாகியிருக்க முடியாது என்றும் மண்ட்டோ மாமாவிடம் சொல்லி மீண்டும் குடிப்பதற்கான வழியை வகுத்தார்கள்.

அவர் பூரணமாகக் குணமாகியிருந்த முதல் நாள் மது குடித்திருப்பதைக் கண்டுபிடித்துவிட்டாலும் அவர் பிடிவாதமாக மறுத்தார். இது கூட அவரின் பிரத்யேகமான குணம் தான். ஒரு சுற்று விஸ்கி குடித்தாலே அதன் பாதிப்பை அவரால் மறைத்துக்கொள்ள முடியாது என்றாலும், தன்னால் நிலையாய் இருக்க முடியும் என்று நினைத்துக்கொண்டிருந்தார். அவரின் உடல் பற்றி எது சொன்னாலும், அவர் தான் தாக்கப்படுவதாக நினைத்தார். இந்த மது அவரைப் பல வழிகளில் நாசம் செய்து கொண்டிருப்பதை அவர் உணர வேண்டும் என்று நான் ஆசைப்பட்டேன். அவரின் உடலைக் காட்டிலும் அவ

ரின் நடத்தையை மிக மோசமாகப் பாதித்தது என்றே சொல்ல வேண்டும்.

பிரிவினைக்குப் பிறகு நாங்கள் ஒரே கட்டடத்தில் தான் வசித்து வந்தோம். முதல் மாடியில் இருந்து என் வீட்டிற்கும், கீழே இருந்த அவரின் வீட்டிற்கும் நேரடி யாகப் படிக்கட்டுகளைக் கொண்டிருந்தது. குடிப்பதற்கு எதிரான அவரின் தீர்மானம் பலவீனப்பட்டுப் போன தும், மதுக்கடை அருகாமையில் இருந்ததும் அவரை நாள் முழுக்கக் குடிக்க வைத்தது. அவரின் வழக்க மான பாதை குளியலறை வழியாக வெளியேறுவது. இது மிக ரகசியமானது என்று அவர் நினைத்துக்கொண்டி ருந்தார். ஒரு நாளில் பலமுறை அவர் குளியலறைக்குள் சென்று மிகச் சத்தமாக உள்ளிருந்து தாழ்ப்பாள் போட்டு விட்டுக் குழாயைத் திறந்து வைத்துவிட்டு, மெதுவாகப் பின் கதவைத் திறந்து கட்டடத்தை விட்டு வெளியேறி நேராக மதுக்கடைக்குச் சென்று வேகமாக ஒரு சுற்று குடித்து விட்டு அவ்வழியே திரும்பி விடுவார். திரும்பி வந்தவுடன் உடனடியாக ஜெனரல் ரோமெலின் அசாத் தியமான புத்திசாலித்தனத்தைப் பற்றி பேசத் தொடங்கு வார்.

பிறகு மதுத்தடைச் சட்டம் அமுலில் வந்தவுடன், மதுக் கடைகள் எல்லாம்

மூடப்பட அவரின் குடிகார வாழ்க்கையில் அந்தக் குளியலறை மிக முக்கியமானதாகவே நிலைத்து நின் றது. புட்டியை அங்கு மறைத்து வைத்துவிட்டு ஒவ் வொரு கால் அல்லது அரைமணி நேரத்திற்கும் அங்கு சென்று சிறிதளவு குடித்துவிட்டு வருவார். ஒருமுறை நான் 'காம்மோடு'க்கு பின்னால் அந்த புட்டியைப் பார்த் தேன். அது என்னை அவர் மீது மிகவும் இரக் கம் கொள்ள வைத்தது. அவர் நிலையாகச் சிந்திக்

கும் நிலையில் சுத்தத்திற்கு அத்தனை முக்கியத்துவம் கொடுத்திருப்பார். அவர் அணியும் கஞ்சி போடப்பட்ட வெள்ளைவெளேரென்று இருக்கும் குர்தா பைஜாமா அவ்வளவு பிரபலமானது. அவரின் கையெழுத்து மிகச் சுத்தமாகவும் அழகாகவும் இருக்கும். அவரின் தட்டச்சு இயந்திரத்தை முழுமையாகச் சுத்தம் செய்யாமல் அதை உபயோகப்படுத்தியதே கிடையாது. மலிவான காகிதத் திலோ கசங்கிய காகிதங்களிலோ அவர் என்றும் எழுதி யதே கிடையாது. ஒரு சிறு தூசும் இல்லாத தட்டில்தான் அவர் உண்ணுவது வழக்கம். சுத்தம் இல்லாத குவ ளையிலிருந்து அவர் எதையும் குடித்ததே கிடையாது. அதைக் காட்டிலும் அவரே அதை எல்லாம் சுத்தம் செய்து கொள்வார். அப்படிப்பட்ட மனிதர் தண்ணீர் ஒழு கிக் கொண்டிருக்கும் 'காம்மோடு'க்குப் பின்னால் புட் டியை மறைத்து வைத்துக் குடிக்கிறார் என்றால் அதன் தேவையை அவரால் தவிர்க்க முடியாமல் போகிறது என்றே நினைக்க வேண்டி உள்ளது.

இத்தகைய சூழ்நிலையில் நாங்கள் இருவரும் அடிக் கடி சந்திப்பது தவிர்க்கப்பட்டு எப்போதாவது வாரத் திற்கு ஒருமுறை மட்டுமே சந்தித்துக்கொண்டோம். இருந்தாலும் ஒரு சாதாரண மனிதனை எரிச்சலும் கோபமும் கொள்ள வைக்கக்கூடிய அவரின் நடவ டிக்கைகளைப் பற்றி அறிந்துதான் இருந்தேன். அவர் மிகவும் பொறுப்பற்றவராகவும், எதற்கும் கட்டுப்படாத வராகவும் இருந்தார். இரவு முழுக்க விழித்திருந்து, ஒவ்வொரு அரைமணி நேரத்திற்கும் பெரிய அளவு எடுத்துக் கொள்ள அந்தப் புட்டியை நோக்கி ஓடினார். சில சமயங்களில், அவர் தெளிவில்லாத நிலையில் போடும் கணக்கு தவறாகிப்போய் நடுநிசியில் மது இல் லாமல் இருக்கும் நிலைக்கு வருவார். பிறகுதான் அவ ரின் குடும்பத்தாருக்குப் பெரும் சோதனை தொடங்கும்.

அவருடைய மனைவிதான் புட்டியைக் கண்டுபிடித்து எல்லாவற்றையும் 'ஸிங்'கில் கொட்டிவிட்டாள் என்று சந் தேகப்பட்டுக் கத்திக் கொண்டிருப்பார். நாங்கள் ஒவ் வொருவராக விழித்துக்கொண்டு அதைக் கேட்கத் தொடங்குவோம்.

சில சமயங்களில் சிகரெட் தீர்ந்துவிட ஒவ்வொரு பத்து நிமிடத்திற்கும் அவருடைய வேலைக்காரன் மீது கோபப்பட்டு, பஜார் போய் ஒரு பாக்கெட் வாங்கி வரவேண்டும் என்று கத்துவார். ஒரு முறை முயற் சித்து பார்த்து கடைகள் எல்லாம் மூடியிருக்கின்றன என்று வேலைக்காரன் சொன்னாலும் அது அவரை எந்த விதத்திலும் பாதிக்காது. தொடர்ந்து அவருடைய கட்டளையை இடைவெளி விட்டுவிட்டுச் சொல்லிக் கொண்டே இருப்பார். பிறகு முழுக்க அசதியுற்று கோமா வந்தது போல் உறங்கத் தொடங்கிவிடுவார்.

அமைதியான இரவுகளில் தொடர்பில்லாத அவரு டைய கத்தல்கள் நடுக்கம் கொள்ள வைக்கக்கூடிய தாக இருந்தது. முதலில் குடும்ப உறுப்பினர்கள் எல் லோரும் அவரின் பிளாட்டில் ஒன்று சேர்ந்து அவரை உறங்கச் செல்லுமாறு வேண்டிக்கொள்வோம். இதனால் எந்தப் பயனும் இல்லாமல் போன போது அதையும் விட் டுவிட்டோம். இப்போதெல்லாம் அவருடைய பைத்தி யக்காரத்தனமான கத்தல்கள் தொடர்ந்து எழுந்தாலும் அவருடைய குடும்பத்தாரும் என்னுடைய குடும்பத்தா ரும் விழித்துக் கொண்டிருந்தாலும் எவரும் படுக்கைக ளில் இருந்து நகர்வது இல்லை. நாங்கள் எல்லோரும் விழித்திருப்போம். ஒரு வார்த்தையும் பேசாமல் இதயங் கள் அடித்துக்கொள்ள, எங்கள் எல்லோர் மண்டை யிலும் ஒரே சிந்தனைதான் நிரம்பியிருந்தது. எப்போது அவரின் கஷ்டமும் எங்களின் கஷ்டமும் ஒரு முடிவுக்கு வரும்?

இலக்கிய உலகில் பிரபலமானவர்களின் குடும்பங்கள் இத்தகைய விலையைக் கொடுப்பது சகஜம் தானா என்று பலமுறை சிந்தித்துப் பார்த்தேன். மண்ட்டோ மாமாவுக்கு அவருடைய பலவீனங்கள் எல்லாம் தெரிந்தே இருந்தன. எழுதுவதற்குப் பல்வேறு அனுபவங்களை உணர்வதன் மூலமே சாத்தியம் என்றும், அது எவ்வளவு கோரமாக, இருந்தாலும் எவ்வளவு வலி கொண்டதாக இருந்தாலும் அதை அனுபவித்தாக வேண்டும் என்றும் சொன்னார். ஓரளவிற்கு அவர் சொல்வது சரியாக இருந்தாலும், மதுவின் பாதிப்பில் அவர் எழுதிய கதைகள் பத்துப் பன்னிரண்டுக்கு மேல் இருக்காது. உண்மை என்னவென்றால் அவர் மிகத் தெளிவாக இருக்கும்போதுதான் அவரால் எழுத முடிந்தது. இது போல தன்னை இழந்த நாட்களில் அவர் எழுதிய கதைகளை நான் அறிந்திருந்தாலும் அதன் தரம் எப்படிப்பட்டது என்றால், அவர் தான் அதை எழுதியது என்பதை மறுக்கக்கூடிய அளவிலேயே இருந்தது. பின் எதற்காக அவர் குடிக்க வேண்டும்?

இந்தக் கேள்வியை அவரிடம் கேட்டால் அதைப் பற்றி விவாதிப்பதற்கு ரொம்பவும் ஆர்வம் காட்டுவார். அவர் இந்தக் கொடுமையிலிருந்து எப்படித் தப்பிப்பது என்று கேட்டு, மனோதத்துவ ஆராய்ச்சி செய்யப்பட தன்னை தாராளமாகக் கொடுத்து, தேவையான தகவல்கள் எல்லாவற்றையும் பகிர்ந்து கொள்வார், அவரின் நண்பர்கள் இந்தப் பழக்கத்திற்கான காரணத்தையும், அதிலிருந்து குணமாவதற்கான யோசனையும் சொல்ல, அவர்கள் சொல்லும் முடிவை ஏற்றுக் கொள்வார். அவர்கள் கொடுக்கும் விளக்கங்கள் மிகச் சரியானவை என்றும் சொல்லி தன்னுடைய வியாதியை அவர்தான் முதல்முறையாக மிகத் தெளிவாகவும் விஞ்ஞானமுறையிலும் அணுகியதாகப் புகழ்ந்து கூறுவார். இவையெல்

லாம் நடந்துகொண்டிருக்கும் போது மறைத்து வைக் கப்பட்டிருக்கும் பாட்டிலை நோக்கித் தொடர்ந்து போய் வந்து கொண்டு, அவருடைய நண்பனின் மனோதத்துவ ஆராய்ச்சிகளைத் தொடரும்படி ஊக்கம் கொடுத்து, கொஞ்சம் கொஞ்சமாக நான் குடியை விட்டு விடுகி றேன் என்று சொல்லிக்கொண்டு தன்னுடைய நிதான நிலையை இழந்து கொண்டிருப்பார். அவர்கள் எல்லாம் கிளம்பிச் சென்ற பின் அம்ரித்சர் பஜாரில் தாஜ்மஹால் பற்றி வதந்தி கிளப்பிய பிறகு குலுங்கிக் குலுங்கிச் சிரித்த தைப் போல ஒருவேளை அவர் சிரித்துக் கொண்டிருக் கலாம்.

அவரின் வாழ்கையில் ஒரே ஒருமுறைதான் என்னால் நினைவு கூர முடிந்த அளவிற்கு - குடிப்பதை விட்டொ ழிக்கத் தீவிரமான முயற்சி எடுத்தார். அவரின் நிலைமை ஒவ்வொரு நாளும் மோச மாகிக்கொண்டிருக்க, அவ ரின் மனைவி அவரை பஞ்சாப் மனநல மருத்துவம னையில் குடிகார வார்டுக்கு அழைத்துச்செல்வதைப் பற்றி என்னுடைய யோசனையை அவரிடம் சொல்லியி ருக்கிறார். அடுத்த நாள் நான் மிகவும் ஆச்சரியப்பட்டுப் போகும் வகையில், அவரின் அறையைக் கடந்தபோது என் பெயர் சொல்லி அழைத்தார். நான் உள்ளே சென்று அவர் கட்டிலில் படுத்திருப்பதைப் பார்த்தேன். அவரின் முகத்தின் உண்மையான நிலையை நான் பார்க்காமலி ருக்க, சுவரைப் பார்த்துப் படுத்திருந்தார். அவர், "நான் மருத்துவமனைக்குச் செல்லத் தயாராக இருக்கிறேன்... வேண்டிய ஏற்பாடுகளைச் செய்" என்றார்.

நான் அடுத்த நாளே மருத்துவமனை டாக்டரிடமி ருந்து நேரம் வாங்கி வைத்திருந்தேன். மருத்துவ மனைக்குக் கிளம்புவதற்குச் சிறிது நேரமே இருக்க, அவர் காணாமல் போய், பல மணிநேரங்கள் கழித்தே திரும்ப வந்தார். கடைசி நிமிஷத்தில் தன் எண்ணத்தை

மாற்றிக்கொண்டு தப்பி ஓடிவிடவில்லை. அதற்கு வேறு காரணம் இருந்தது. மருத்துவமனைக்கு முப்பத்திரண்டு ரூபாய் கொடுக்க வேண்டும் என்று அறிந்து அதைப் புரட்டுவதற்காக வெளியே சென்றிருக்கிறார். அவர் பம் பாயில் வசதியாக இருந்த நாட்களில், மிகவும் விலை உயர்ந்த மருத்துவரைப் பார்ப்பதை, அதுவும் அறுபத்து நான்கு ரூபாய் கொடுத்து பார்ப்பதை, அதுவும் ஆலோ சனை பெறுவதற்கு மட்டும், பொழுதுபோக்காகவே கொண்டிருந்தார். ஒருமுறை அவர் வீட்டு வேலைக் காரனைக் கூட முழுப் பணத்தையும் கொடுக்கும் தீர் மானத்தோடு அத்தகைய மருத்துவரிடம் அழைத்துச் சென்றிருக்கிறார். அந்த மருத்துவருக்கு இது மிகவும் வித்தியாசமாக இருந்தது. அந்த மருத்துவரின் வாடிக் கையாளர்கள் கோடீஸ்வரர்கள் என்றாலும் அவர்களின் ஏழை உறவினர்கள் ஒருவரைக் கூட அவரிடம் அனுப் பியது கிடையாது. அவர் வழக்கமாக வாங்கும் பணத்தில் பாதி மட்டுமே, அதாவது முப்பத்திரண்டு ரூபாய் மட்டுமே வாங்கிக் கொண்டார்.

முப்பத்திரண்டு ரூபாய்! அவருக்கும் மருத்துவருக்கும் இடையில் இந்தப் பணம் குறுக்காக நிற்கவில்லை அந்த நாட்களில் இன்னும் யாரிடம் பணம் கேட்கிறோம் என்ப தில் கவனமாக இருந்தார். எப்படியோ அவர் பணத்தைக் கடனாக வாங்கிவர, பின்பு மருத்துவமனையில் அனும திக்கப்பட்டார். முதல் சில நாட்களுக்கு மிகவும் சிரமமாக இருந்தாலும் ஆறு வாரங்கள் கழித்து அவர் வெளியே வந்தார். அவர் பூரணமாகக் குணமாகியிருக்க அடுத்த எட்டு மாதங்களுக்கு அவர் குடிக்கவில்லை. அந்த நாட் களில் ஏறக்குறைய ஒரு மாதத்திற்கு ஒரு புத்தகம் என்றும், சில சமயங்களில் ஒரு நாளைக்கு ஒரு கதை என்றும் அவர் எழுதிக் கொண்டிருந்தார். பிறகு அவர் மீண்டும் தன் பழைய நிலைக்குப் போக, இந்த முறை

தாக்குதல் முன்னைவிட படுமோசமாக இருந்தது. அவர் எல்லா நேரங்களிலும் குடித்துக்கொண்டிருக்க, அவ ரால் எழுத முடியவில்லை. அவரின் வருமானம் ஒன்று மில்லாத நிலைக்குப் போனது.

மண்ட்டோ மாமாவின் குடிப்பழக்கத்தைவிட அவர் புதிதாகத் தொடங்கிய ஒரு பழக்கம் அவரின் குடும்பத் தாரை மிகவும் வேதனைக்குள்ளாக்கியது. வரைமுறை இல்லாமல் அவர் எல்லோரிடமும் பணம் கேட்கத் தொடங்கினார். எவ்வளவு என்பதோ யாரிடம் என்பதோ முக்கியமில்லாமல் போனது. உறவினர்கள், நண்பர்கள், பக்கத்தில் குடியிருப்பவர்கள், ஏன் அந்நியர்களைக்கூட விட்டு வைக்கவில்லை. மரியாதை நிமித்தமாக அவ ரைப் பார்க்க வருபவர்களிடமும் பணம் கேட்பதை அவ ரால் தடுக்க முடியவில்லை. 1952 முதல் ஆகஸ்ட் 1953 வரை இந்த முடிவில்லாத ஆட்டம் தொடர்ந்து கொண்டேயிருந்தது. அப்போது சிரோஸிஸ் நோய்க்காக மருத்துவமனையில் அனுமதித்தோம். இந்த நாட்களில் வலுக்கட்டாயமாக நாங்கள் அவரை மனநல மருத்துவ மனைக்கு இழுத்துச்சென்றோம். ஆனால் அவர் மருத் துவமனை அதிகாரிகளோடு ஒத்துழைக்க மறுத்தார். சட்டப்படி தெளிவான சிந்தனையில் உள்ள ஒருவரை அவரின் விருப்பத்திற்கு மாறாக சிகிச்சை அளிக்கக்கூ டாது என்பதால் அந்த அதிகாரிகள் அவரை இரண்டு நாட்களில் விடுவித்தார்கள். இதற்குப் பிறகு மண்ட்டோ மாமா தன் குடும்பத்தார் மீது பெரும் எரிச்சல் கொள்ளத் தொடங்கினார். ஆனால் அந்த நாட்களில் அவர் என்ன செய்து கொண்டிருக்கிறார் என்று அவருக்குத் தெரிந்தி ருக்கவில்லை.

அந்த நாட்கள் ஏதோ கோரமான கனவு போல் மிகத் தெளிவாக என் நினைவிலிருக்கிறது. அவரின் மூத்த மகள் மிக மோசமாக உடல்நிலை பாதிக்கப்பட்டிருக்க,

அது அவரை எந்தவிதத்திலும் பாதிக்காததை அரு வருப்போடு பார்த்துக்கொண்டிருந்தேன். இப்போது இருப்பதைப் போல அவரின் குடிப்பழக்கம் எப்போதும் இவ்வளவு மோசமாக இருந்ததேயில்லை. அவர் எப்போ தும் தன்னுடைய குழந்தைகள் மீது மிகவும் பாசத்துடன் இருந்ததோடு, அதைப் பலமுறைகளில் வெளிப்படுத்தி யும் இருக்கிறார். உதாரணத் திற்கு, பாகிஸ்தான் தினக் கொண்டாட்டத்தின் போது, அவர் கலந்து கொள்ளாமல் இருந்ததே கிடையாது. மற்ற அறிவுஜீவிகள் போலவே, அவராலும் தன்னுடைய தேசப்பற்றை வெளிக்காட்ட கொடியேற்றி வீட்டு முன் பறக்கவிட முடியாது என்றா லும், அவரின் குழந்தைகள் அதைச் செய்ய வேண்டும் என்று விரும்பினார். பாகிஸ்தான் தினத்தன்று தன்னை மிகத் தெளிவாக வைத்துக் கொண்டு, கொடிகள் நிறைய வாங்கி, தன்னுடைய குழந்தைகள் மூலம் என் வீட்டின் முன்பும் அவர் வீட்டின் முன்பும் பறக்க விடுவார். போன முறை அவரின் மகள் நோயுற்று இருந்த போது, அவரே அவளுக்கு வைத்தியம் பார்த்ததோடு, ஒரு புத்த கத்தை அவளுக்குச் சமர்ப்பணமும் செய்தார்.

அவரின் மூத்த மகள் டைபாய்டு ஜுரத்தால் பாதிக்கப் பட்டிருந்தபோது, சிகிச்சைகளுக்கு நிறைய செலவாகும் என்றும், வீட்டில் அதற்கான பணமில்லை என்றும் அவர் ஓரளவிற்கு உணர்ந்திருக்கலாம். அன்று மாலை தன்னு டைய மகளின் பெயரைச் சொல்லிக் கடனாகப் பெற்ற பணத்தைக் கொண்டு முக்கியமான மருந்துகளை வாங் குவதற்குப் பதிலாக வீட்டிற்கு விஸ்கி பாட்டிலோடு திரும்ப வந்தார். அன்றைய தேதிவரை அதுதான் அந்த குடிப்பழக்கத்தின் மிகப்பெரிய வெற்றியாகும். அவர் தன்னையே நொந்துகொண்டும், குற்ற உணர்வோ டும் நோயுற்றிருக்கும் குழந்தையின் மீது தன்னுடைய அன்பை வெளிப்படுத்த அவர் முயன்றார். அவர் மனை

வியின் எதிர்ப்புகளை மீறி அவர் தள்ளாடியபடியே, தொங்கிய தலைமுடி அவரின் முகத்தை மறைத்திருக்க தகப்பனின் அன்போடு அந்தக் குழந்தையை எடுத்துத் தன்னுடைய மடியில் போட்டுக் கொள்ள முயன்றார். அவர் மனைவி கட்டிலுக்குப் பக்கத்தில் இருந்த அவரை இழுக்க முயல, அவர் வெறிபிடித்தவர் போல் ஆனார். வன்முறையை உபயோகிக்க வேண்டியிருந்தாலும் தன் னுடைய தகப்பனுக்கான உரிமையை நிலை நிறுத் துவது என்று முடிவெடுத்தார். ஆனால் அவர் அதைச் செயல்படுத்துவதற்குள் என்னுடைய மனைவி - இதை எல்லாம் பார்த்துக்கொண்டு சாட்சியாக இருந்தவள் - எதிர்பாராத விதமாய், மிகவும் மென்மை யான வெளிப் பாட்டைக் கொண்டிருந்த அவள் முதல் முறையாக தன்னுடைய நிதானத்தை இழந்தாள். இது மண்ட்டோ மாமாவுக்குப் பெரும் அதிர்ச்சியாக இருந்தது. உடனடி யாக தன் நிதானத்தைத் திரும்பப் பெற்ற அவர் அமைதி யாக அறையை விட்டு வெளியேறினார்.

அடுத்த நாள் காலை அவர் குடிப்பதை மீண்டும் விட்டுவிட்டதால் மிகவும் பலவீனமாகக் காணப்பட்டார். மண்ட்டோவின் வீட்டில் மீண்டும் சூரிய வெளிச்சம் தோன்ற - இது நிரந்தரமாய் இருக்கவேண்டும் என்ற ஏக் கங்களோடு, எல்லோரும் சந்தோஷமாய் இருந்தார்கள். வைட்டமின் மாத்திரைகளும் டானிக்குகளும் அவரின் கட்டிலுக்கு அருகில் இருந்த மேஜையில் தோன்றியது. மண்ட்டோ மாமாவின் வாழ்க்கையில் அடுத்தக் கட் டம் தொடங்க, அவர் வீட்டிலிருக்கும் செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டும், உடைந்து போன நாற் காலிகளைச் சரி செய்து கொண்டும், காலியான புட்டி களையும் பழைய பேப்பர்களையும் விற்றுக்கொண்டும் - இது அவரின் பழைய பொழுதுபோக்கு, குழந்தை களுக்காக ஊஞ்சல் கட்டிக்கொடுத்தும், பெரிய கூடு

ஒன்று செய்து அதில் காதல் பறவைகளைக் கொண்டு வந்து வைத்தும், கொத்தனார்களையும் தச்சர்களையும் வரவழைத்து வீட்டில் செய்யவேண்டி இருந்தவற்றைச் சரிசெய்தும், காலியான சிகரெட் பெட்டிகளை அடுக்கிக் குழந்தைகளுக்காக சோபா செய்தும் குடும்பம் சம்பந் தப்பட்ட விசயங்களில் எல்லாம் முழுமையாகப் பங்கெ டுத்துக்கொண்டும் விவாதங்கள் செய்தார்.

இந்த விவாதங்களில் எல்லாம் மண்ட்டோ மாமா பெண்களின் கல்வி பற்றியும் அவர்களின் சமூக நட வடிக்கைகள் பற்றியும் பேசியதை எல்லாம் கேட்டால் பிற்போக்கானவன், பழைமைவாதி என்றே நினைக்கத் தோன்றும். இத்தகைய விசயங்கள் பற்றி அவர் பேசு வதைக் கேட்கும்போதெல்லாம் பத்து வருடங்களுக்கு மேலாக அவர் சொல்லிக் கொண்டிருக்கும் ஒரு பாத் திரத்தை - அந்தக் கதையை ஏனோ அவர் எழுதவே இல்லை, என்னால் நினைத்துப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. அந்தப் பாத்திரம் ஒரு பொறுக்கி. நக ரத்தில் அவனைக் கண்டாலே எல்லோரும் நடுங்கி னார்கள். நகரத்தில் நடந்த ஒவ்வொரு கொலையி லும், திருட்டிலும் கடத்தலிலும் தாக்குதலிலும் அவன் சம்பந்தப்பட்டிருந்தான். இருந்தாலும் அவன் வசித்துக் கொண்டிருக்கும் மொஹல்லாவுக்குள் அவன் நுழைந்த அந்த நொடியில் ஒரு பெரும் மாற்றம் அவனுள் ஏற்படும். அவன் அப்போது நேராக நிமிர்ந்து நடக்க மாட்டான். அவனின் கண்கள் பூமியை நோக்கியிக்கும். குழந்தை கள் விளையாட அவனின் பெயர் சொல்லி அழைக்க அவனும் அவர்களுக்குப் பணிந்து போவான். பெரியோர் கள் அவன் என்ன செய்ய வேண்டும் என்று கட்டளை யிட்டால் போதும் அவன் செய்து முடிப்பான். அவன் எந்தப் பெண்களையும் ஏறெடுத்துப் பார்க்க மாட்டான். மொஹல்லாவில் உள்ள பெண்களைப் பார்த்து யாரெ

னும் ஒருவன் ஒரு சின்னச் சிரிப்பு சிரித்திருந்தால் போதும் கடவுள்தான் அவனைக் காப்பாற்ற வேண்டும்!.

ஆனால் மண்ட்டோவின் வீட்டில் சூரிய வெளிச்சம் நீண்ட நாட்களுக்கு இருந்ததே கிடையாது. அவரின் உடல்நிலை தேறிவர இனி குடிபோதைக்கு எதிராக அவர் தீர்மானமாய் இருப்பார் என்று அவரின் குடும்பத் தார் நினைத்திருக்க, அவர் மீண்டும் அதற்குத் தன்னை பலி கொடுத்தார்.

பொதுவாக அவர் திரும்பத் திரும்ப மதுபோதைக்கு அடிமையாகக் காரணம், அவரோடு இருந்தவர்கள்தான். நான் வேண்டுமென்றே நண்பர்கள் என்ற பதத்தை உபயோகிக்கவில்லை. உண்மையான நண்பர்களுக்கும் நண்பர்கள் போல நடிப்பவர்களுக்கும் இடையே ஒரு மெல்லிய கோடு இருக்கத்தான் செய்கிறது. அவரின் உண்மையான நண்பர்கள் இப்போதெல்லாம் திரைக் குப் பின்னால்தான் இருந்தார்கள். ஏனெனில் அவர் கள் இவரின் குடிப்பழக்கத்தை ஏற்றுக்கொள்ளாத தோடு, மற்ற விஷயங்களிலும் நேரடியாகவும் தயக்கமில் லாமலும் தங்கள் விமர்சனங்களை முன் வைத்தார்கள். ஆனால் அவருக்கோ அவரைச் சுற்றியிருப்பவர்கள் எந் நேரமும் அவர் பெரிய எழுத்தாளர் என்றும், பெரிய ஆகி ருதி என்றும், ஏன் சிரோஸிஸ் கூட அவரைத் தொட முடி யாது என்றும் சொல்லிக் கொண்டிருப்பவர்கள் மட்டுமே தேவைப்பட்டது. அவர்கள் மண்ட்டோ மீது மிக மோச மான விளைவை ஏற்படுத்தினார்கள். அவர்களுக்கு மத் தியில் அவர் எப்போதுமே போற்றக்கூடியவராக இருந் ததோடு, அவர் விருப்பப்பட்டது போன்று அவர்களை அசிங்கப்படுத்தியும் அவமானப்படுத்திப் பேசுவதற்கும் அவருக்கு உரிமை இருந்தது. அவர் அவர்களை நாற்கா லிகளின் மீது ஏறி நிற்கச் சொன்னாலும் அவர்கள் மறுப்

பேதும் சொல்லாமல் நிற்க வேண்டும் என்று எதிர்பார்த் தார்.

பாகிஸ்தான் கிரிக்கெட் அணி இந்தியாவில் விளை யாடித் திரும்பிய பிறகு, வக்கார் ஹசன் மற்றும் மெக மூத் ஹுசைன் பாகிஸ்தான் வீரர்கள் உட்பட ஒரு நாள் மாலை என்னைப் பார்ப்பதற்காக வந்திருப்பதை மண்ட்டோ மாமா கேள்விப் பட்டிருக்கிறார். அவர் இருந்த நிலையில் எப்போதும் என் வீட்டிற்கு வந்தது கிடையாது என்றாலும் கிரிக்கெட் வீரர்களைப் பார்ப் பதற்காக என் வீட்டிற்கு வந்தார். அவரை அறிமுகம் செய்த பின் இந்தியா போய் வந்ததைப் பற்றி அவர் கள் என்ன நினைக்கிறார்கள் என்று கேட்பதற்கு மற் றவர்களோடு அவரும் அமர்ந்து கொண்டார். ஆனால் எவ்வளவு நேரம் மண்ட்டோ மாமா பின்இருக்கையில் அமர்ந்திருக்க முடியும். நான் இதை உவமையில்தான் சொல்கிறேன். ஏனெனில் அவர் உள்வட்டத்தில் கிரிக் கெட் வீரர்களோடு தான் அமர்ந்திருந்தார். அவர்கள் வந்து ஐந்து நிமிடங்கள்தான் ஆகியிருக்கும். அவர் தன் நாற்காலியிலிருந்து இறங்கிக் கீழே உட்கார்ந்து கொண்டு மெகமூத் ஹுசைன் பேசிக் கொண்டிருப் பதற் குக் குறுக்கே புகுந்து, "எல்லா வேகப்பந்து வீச்சாளர்க ளும் பிராடு என்று எனக்குத் தெரியும். நீங்கள் எப்படி பந்தை நாசமாக்குகிறீர்கள் என்று எனக்கு விளக்கிக் காட்டுங்கள்" என்றார். வக்கார் ஹசன் வேறு வழியில்லா மல் மண்ட்டோ மாமாவுக்கு அவரின் சில பிராடுகளை விளக்கிச் சொல்ல வேண்டியதாயிற்று. அன்று மாலைப் பொழுது முழுக்க மண்ட்டோ மாமாவின் ஆதிக்கத்தில் கழிந்தது. கூடியிருந்த மற்றவர்கள் கிரிக்கெட் வீரர்க ளோடு ஒரு வார்த்தை பேசுவதற்குக் கூட சந்தர்ப்பம் கிடைக்கவில்லை.

ஏன் எப்போதும் எல்லோருடைய கவனமும் தன் மீதே குவிந்திருக்க வேண்டும் என்று நினைக்கிறார்? என் னால் இதற்கு ஒரே ஒரு காரணத்தைத்தான் சொல்ல முடியும். கடைசி சில வருஷங்களாகத் தன்னுடைய வீட்டிலும் உறவினர்களிடமும், நண்பர்களிடமும் தனக் கான மரியாதையை முழுவதுமாக இழந்து விட்டார். இது அவர் ஏற்றுக்கொள்ளக் கூடியதைக் காட்டிலும் மிக மோசமாக அவரைப் பாதித்திருந்தது. அவர் அன்புக் கும் அரவணைப்புக்கும் ஏங்கினார். அது கிடைக்காத போது கவனத்தை எல்லாம் தன்மீதே திருப்பிக்கொண் டார். இது மோசமான குறுக்கு வழி என்றாலும், முழு மையாக நிராகரிக்கப்படுவதைக் காட்டிலும் நிச்சயம் மேலானது. குடும்பமாகட்டும், அவரின் உண்மையான நண்பர்களாகட்டும், அவரின் சந்தோசமான காலங்க ளில் எந்த எதிர்பார்ப்பும், சுயநலமும் இல்லாமல் அவர் காட்டிய அன்பைத் திருப்பிக் கொடுக்கவே ஏங்கினார் கள். அவர்கள் எதிர்பார்த்த தெல்லாம் ஒரு சந்தர்ப்பம். சரியான மனிதனிடம் திருப்பிக் கொடுப்பதற்கான சந் தர்ப்பம். ஆனால் அவரின் எண்ணமோ 'சாதத் ஹசனை நேசியுங்கள் மண்ட்டோவை மன்னித்துவிடுங்கள்' என் பதைப் போலவே இருந்தது. இது ஏற்றுக்கொள்ளக்கூடி யதாக இல்லை. அனுபவத்தில் சாதத் ஹசன் எப்போதும் மண்ட்டோ பின்னால் இடைவெளி இல்லாமல் போய்க் கொண்டிருப்பதுதான் உண்மை.

இத்தோடு மண்ட்டோ மாமா தன்னுடைய சுயம்புவான தனித்துவத்தின் விளைவுகளை முழுமையாக அறிந்தே இருந்தார். நான் இதை மிகவும் சுவாரசியமான ஒரு நிகழ்வு மூலமாக அறிந்து கொண்டேன். நான் அப் போது பம்பாயில் இருந்தேன். பாம்பே டாக்கீஸைச் சேர்ந்த அசோக்குமார் மற்றும் சவாக் வாச்சா அவர் களுக்காக மண்ட்டோ மாமா எழுதிய ஒரு திரைக்க

தையைப் பற்றி விவாதிப்பதற்காக என்னையும் அழைத் திருந்தார்கள். அந்தக் கதை மிகவும் வீரியத்தோடு இருந்தது. அசோக்குமார் தான் கதாநாயகன் என்றாலும் அவருக்காக உருவாக்கப்பட்ட பாத்திரத்தை வேறொரு பாத்திரம் விழுங்கிவிடக் கூடியதாக இருந்தது. அந்தப் பாத்திரம் குடிகாரனாகவும் கொடுமைப்படுத்தி சந்தோ ஷம் காணக்கூடிய பாத்திரமாகவும் இருந்தது. நான் அந்தப் பாத்திரத்தின் முக்கியத்துவத்தைக் குறைக்கச் சொல்லி மண்ட்டோ மாமாவிடம் எவ்வளவோ வாதிட் டேன். ஆனால் அவர் தன் நிலையில் திடமாய் இருந் தார். விவாதத்தின் போது ஒரு சில நிமிடங்களுக்கு அவர் அறையை விட்டு வெளியே போக நேர்ந்த சம யத்தில், அசோக்குமார் உடனடியாக என் காதில், "நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? அவர்தான் அந்தப் பாத்திரத்தில் நடிக்கப் போகிறார் என்று உனக்குத் தெரி யாதா?" என்று இரகசியமாகக் கேட்டார். இருந்தாலும் நான் சொல்ல நினைப்பதை இதனால் தடுத்து நிறுத்த முடியவில்லை. நான் இந்தக் கட்டுரையில் மிகவும் கடி னமாகவும் வெளிப்படையாகவும் மண்ட்டோ மாமாவைப் பற்றி எழுதியிருக்கிறேன். இதை எழுதிக் கொண்டிருக் கும்போதே மண்ட்டோ மாமா ஒவ்வொரு பக்கத்தையும் சின்ன எதிர்ப்பும் காட்டாமல் படித்துக் கொண்டிருந்தார். இறுதியாக அந்த விவாதத்தில் மண்ட்டோ மாமா தானே அந்தப் பாத்திரத்தில் நடிக்க விரும்புவதாகவும் தன்னை வைத்தே அந்தப் பாத்திரத்தை உருவாகியிருப்பதாகவும் சொன்னார். திரைக்கதையில் அந்தப் பாத்திரம் அவ னைப் பெற்ற தாயால் கொல்லப்படுகிறது.

நான் இதற்கு ஒரே ஒரு அர்த்தத்தைத்தான் கொடுக்க முடிகிறது. மண்ட்டோவின் தனித்தன்மையில் உள்ள அபாயகரமான போக்கை உருவாக்கிய சாதத் ஹசனால் மட்டுமே அதை ஒரு முடிவுக்குக் கொண்டுவர முடியும்.

அவர் வாழ்ந்த காலத்தில் உருது இலக்கியத்தில் மற்ற எழுத்தாளர்களை விட மண்ட்டோ மாமா நிறை யவே சம்பாதித்தார். மற்றவர்களைப் போல் அல்லாமல் தன்னுடைய வாழ்க்கைக்கு முழுவதுமாக எழுத்தையே நம்பியிருந்தார். மண்ட்டோ மாமாவின் வெற்றியின் இரக சியம் ஆசிரியராகவும் விற்பனையாளராகவும் மிகப் பிர மாதமாக ஒருங்கிணைந்து செயல்பட்டதுதான். அவர் வாழ்ந்த முறை மிகவும் ஆடம்பரமானதாக இருந்தது. அவருடைய தேவைக்குப் பேருந்துகளே போதும் என் றாலும் அவர் டாக்ஸிகளை வைத்துக்கொண்டார். அவர் வாங்கியவை எல்லாமே மிகச் சிறந்ததாகவே இருந்தன. துணிமணிகள், பேனா, காகிதங்கள், சிகரெட்டுகள், ஷூக்கள், இரயில்வே பயணம், மருத்துவம் எல்லாமே. அவருடைய திரைக்கதைகளுக்கு சினிமாக் கம்பெனி கள் போதுமான அளவிற்குக் கொடுத்துக்கொண்டிருந் தவரையிலும் எல்லாம் ஒழுங்காக இருந்தன. ஆனால் இந்தியாவில் சினிமாக் கம்பெனிகள் படுத்துப் போன தும், அவர் பாகிஸ்தானுக்குக் குடிபெயர்ந்ததும் எல்லா வற்றையும் தலைகீழாக்கியது.

இப்போது அவர் சந்தோஷமாக இல்லை. தீ மிதித்த போது கிடைத்த கைத்தட்டல்கள் இப்போது இல்லை. இன்னும் மோசம் என்னவென்றால் அவரின் பாதங்க ளில் இத்தனை வருடங்களுக்குப் பிறகு தீப்புண்கள் தோன்றியிருந்தன. உடல்ரீதியாகவும் மன ரீதியாகவும் இப்போது அவர் இருப்புக்காய்ப் போராடிக் கொண்டி ருந்தார்.

அவ்வப்போது அவர் குணமாகி, மதுப்பழக்கத்திற்கு எதிராகப் போராடிக்கொண்டிருந்த காலங்களில் புத்திக் கெட்ட நண்பர்கள் புதைமணலில் சிக்கியிருப்பவரை நோக்கி மதுப்புட்டியை வீசி எறிந்தார்கள்.

குடும்பத்தாருக்குத் தன் மீதுள்ள நம்பிக்கையை மீட்டெடுப்பதற்காக அவர் பல விஷயங்கள் செய்து, முடிவில்லா சுழற்சிகளில் இருந்து தன்னை விலக் கிக்கொள்ள முயன்றார். ஒருவேளை தன்னுடைய 'கேது'வை மங்களகரமான பாதையில் கொண்டுவிட அவர் முயன்றிருக்கலாம். தன்னுடைய கடந்தகால, நிகழ்கால, எதிர்காலப் படைப்புகளுக்கான காப்புரிமை யையும், வங்கிக் கணக்கையும் அவரின் மனைவி பெய ருக்கு மாற்றியிருந்தார். இப்போது எந்த வெளியீட்டா ளரிடமிருந்தும் அவரின் மனைவி கையெழுத்திடாமல் அவரால் ஒரு நயாபைசா கூட வாங்கிக் கொள்ள முடி யாது.

ஆனால் அவரின் மனைவியால் இலக்கியத்தை ஏற் றுக் கொள்ள முடியவில்லை. மண்ட்டோ மாமாவின் வெற்றிக்கும், வசை பெயருக்கும் அவர் மிகப்பெரிய விலையைக் கொடுக்க வேண்டியிருந்தது. இலக்கியத் திற்காக மண்ட்டோ மாமா பல துயரங்களை அனுப வித்தார் என்றால் அவரின் மனைவி அதைவிட அதிக மாக அனுபவித்தார். அதனால் என்னுடைய இலக்கிய ஈடுபாட்டையும் எழுத்தாளனாக உருவாகிக் கொண் டிருக்கிறேன் என்பதையும் அவர் தெரிந்துகொண்டு உண்மையாகவும் அக்கறையோடும் தீவிரமாகவும் என் னுடைய மனைவியிடம் அதாவது அவருடைய தங்கை யிடம், "நான் இது உண்மையாக இருக்காது என்று நம் புகிறேன். அவர் எழுத்தாளராக ஆகக்கூடாது என்று பிரார்த்தனை செய், இல்லையெனில் உன் வாழ்க்கை முழுக்க நீ அதற்காக வருத்தப்படவேண்டியிருக்கும்" என்று சொன்னதில் ஆச்சர்யப்படுவதற்கு ஏதுமில்லை.

பிற்சேர்க்கை

(மண்ட்டோ மாமா 1955ம் ஆண்டு ஜனவரி 18ம் தேதி அதாவது மேலே உள்ள கட்டுரை வெளியாகி ஆறு மாதங்கள் கழித்து மரணமடைந்தார்)

மியானி சாஹிப் கல்லறையில் இருந்து மண்ட்டோ மாமா எழுந்து வந்தால் என்ன பேசுவேன் என்று பல முறை நினைத்துப் பார்த்திருக்கிறேன். உயிர்த்தெழும் அந்த மாபெரும் அதிசயத்தை ஓரங்கட்டி கண்டிப்பாக அவரிடம், "நீங்கள் செய்த எல்லா பொறுப்பற்ற செயல் களைவிட உங்களின் மரணம்தான் மிகவும் பொறுப்பற்ற செயல்" என்று சொல்லியிருப்பேன்.

நான் அப்போது பாஹாவால்பூர் கிரிக்கெட் ஸ்டேடி யத்தில் பாபி தல்வார்கானுடன் இந்தியா - பாகிஸ் தான் கிரிக்கெட் ஆட்டத்திற்குத் தொடர் வர்ணனை யில் ஈடுபட்டிருந்தபோது, லாகூரில் இருந்து தொலை பேசி அழைப்பு வந்தது. "இன்று காலை சாதத் ஹசன் மண்ட்டோ இறந்து விட்டார்" என்று சொல்லப் பட்டது. உடனடியாக நான் சோகத்தில் மூழ்கிப் போகவில்லை. என்னுடைய முதல் உணர்வு கோபமாகத்தான் இருந் தது. என்னுள் அசாத்திய கோபம் தோன்றியது. அவரின் குடும்பத்தாருக்கு எப்படி அவரால் இதுபோல் செய்ய முடிந்தது? ஆனாலும் நான் பேசும்போது இதை வெளிக் காட்டிக்கொள்ளவில்லை. "எங்கு இறந்தார்?" என்று கேட்டேன். பதில், "வீட்டில்தான்" என்று வந்தது. நான் நிம்மதிப் பெருமூச்சு விட்டேன். டோங்காவில், ஏதோ ஓர் உணவகத்தில், புத்தக வெளியீட்டாளர் அலுவல கத்தில், திரைப்பட ஸ்டூடியோவில்... என்று ஏதோ ஒரு இடத்தில் அவர் இறந்திருக்கலாம் என்று பயந்திருந் தேன்.

நான் என் இருக்கைக்குத் திரும்பியவுடன் வர்ணனை யாளர் பெட்டியில் என்னுடனிருந்தவர் என்ன நடந்தது

என்று செய்கை மூலம் கேட்டார். என்னுடைய நோட்டை எடுத்து, "கடைசியாக, அம்பயர் சாதத் மண்ட்டோ 'அவுட்' என்று சொல்லிவிட்டார். அவர் இன்று காலை இறந் துவிட்டார்." என்று கிறுக்கினேன். மண்ட்டோ மாமா நிறைய அப்பீல்களில் இருந்து தப்பித்து வந்தார். இப் போது அவரின் பொறுப்பற்ற தாறுமாறான ஆட்டம் முடி வுக்கு வந்துவிட்டது. அவர் கிரிக்கெட் ஆட்டக்காரராக இருந்திருந்தால் ஹனீப் முகமது போல மிகவும் நிதா னமாகவும் கவனமாகவும் ஆடக்கூடிய ஆட்டக்காரராக இருந்திருக்க மாட்டார். ஹனீப் முகமதுவின் ஆட்டத்தை லாகூரில் நடக்கவிருந்த மூன்றாவது டெஸ்டில் பார்க்க வேண்டும் என்று விரும்பியிருக்கிறார். நான் இதை வீடு திரும்பிய பிறகு அதாவது அவர் இறந்து இருபத்து னான்கு மணி நேரங்கள் கழித்துத் தெரிந்து கொண் டேன். உண்மையில் அவரின் கடைசி இரண்டு ஆசை களில் இது ஒன்று. இறப்பதற்கு முன் மாலை ஓர் உண வகத்தில் தன்னுடைய நண்பர்களிடம், "ஹமீத் லாலா வரட்டும், ஹனீப்பின் ஆட்டத்தைப் பார்க்க நான் அவ னோடு விளையாட்டு அரங்கத்திற்குப் போவேன்" என்று சொல்லியிருக்கிறார்.

இரண்டாவது விருப்பம், குஜராத்தில் ஓர் இளம்பெண் ணின் நிர்வாண உடல் தெரு ஓரமாய்க் கிடக்க அந்தக் கோரமான மரணத்தைப் பற்றி எழுத வேண்டும் என்று விரும்பியிருக்கிறார். செய்தித்தாள்களில் வந்ததின் அடிப்படையில் அந்தப் பெண்ணும் அவளுடைய கைக் குழந்தையும் பஸ் நிலையத்தின் காத்திருப்பு அறையில் இருந்து கடத்தப்பட்டு, ஆறு ஏழு மிருகங்களால் சூறை யாடப்பட்டு அவர்களின் குகையில் இருந்து உடம்பில் ஒரு துண்டு துணி இல்லாமல் உறைய வைக்கும் அந்த குளிர்கால இரவில் ஓடவைக்கப்பட்டிருக்கிறாள். இந்தச் செய்தி மண்ட்டோவை மிகவும் பாதித்திருந்தது. அன்று

மாலையே குஜராத்திலிருந்து வந்திருந்த சிலரைச் சந்தித்து அவர்கள் மூலம் அந்தக் கோரமான சம்பவம் பற்றி மேலும் பல தகவல்களைத் தெரிந்து கொண்டிருக்கிறார். இது அவரைக் கட்டுக்கடங்காமல் உணர்ச்சி கொள்ள வைத்திருக்க வேண்டும். அந்த மாலைப்பொழுதை நான் என் கற்பனையில் உருவாக்க முயன்றால் அது, அவர் எடுத்துக் கொள்ளும் அளவைவிட மிக அதிகமாக மதுவைக் குடிக்க வைத்திருக்கும். அதுதான் விபரீதமானது. அன்று மாலை தாமதமாக வீடு திரும்பியவுடன் அவர் வாந்தியெடுக்க, அதில் இரத்தம் கலந்து வந்திருக்கிறது. அவருக்கு அருகில் இருந்த என்னுடைய ஆறுவயது மகன் இரத்தத்தைச் சுட்டிக் காட்டியிருக்கிறான். மண்ட்டோ மாமா, "இல்லை... அது பான் துப்பியதால் தான்... இதை யாரிடமும் சொல்லாதே" என்று சொல்லியிருக்கிறார். அதன் பிறகு வழக்கம் போல இரவு உணவை முடித்துவிட்டுப் படுக்கச் சென்றிருக்கிறார். மண்ட்டோ மாமாவின் இரகசியத்தை என் மகன் தனக்குள் வைத்துக்கொண்டதால் குடும்பத்தில் யாருக்கும் எந்தச் சந்தேகமும் வரவில்லை. ஒருவேளை மண்ட்டோ மாமாவும் இதில் கவலைப்படுவதற்கு ஏதும் இல்லை என்று நினைத்திருக்கலாம். பொதுவாகவே இதுபோன்ற விஷயங்களை அவர் வெளியே சொல்வதில்லை. காரணம், குடிப்பதை நிறுத்து என்று தவிர்க்க முடியாத அறிவுரைக்கு ஆளாக வேண்டும்.

விடியற்காலையில் தன்னுடைய மனைவியை எழுப்பி, மிக மோசமாக வலியிருப்பதாகவும், நிறைய இரத்தம் வெளியேறி விட்டதாகவும் சொல்லியிருக்கிறார். அவரின் குடல் கிழிந்திருக்க வேண்டும். அவரின் மனைவியால் நிலைமையைச் சமாளிக்க முடியாது என்ற நிலையில், மற்ற குடும்ப உறுப்பினர்கள் எழுப்பப் பட்டார்கள். பிறகு அவரின் உயிரைக் காப்பாற்றுவதற்கான

போராட்டம் தொடங்கியது. பலமுறை செத்துப் பிழைத் தவர் என்பதால் இன்னும் சில மணி நேரங்கள்தான் அவர் உயிரோடு இருப்பார் என்று யாரும் அந்த நேரத் தில் நினைத்துப் பார்க்கவில்லை. உண்மையில் அன்று மாலை மண்ட்டோ மாமா வாந்தி யெடுத்த போதே அம்ப யர் தன்னுடைய விரலை உயர்த்தத் தொடங்கிவிட்டார்.

மண்ட்டோ மாமாவின் கடைசி நேரங்கள் பற்றி நான் கேட்ட வரையில் மருத்துவர் ஏதோ ஊசி போட்டு ஏறக் குறைய ஒரு மணி நேரம் வரை அவருக்கே இது இறு தியான முடிவு என்று தெரிந்திருக்கவில்லை. பொதுவாக மருந்து எடுத்துக் கொண்டவுடன் அவரிடம் காணப்படும் முன்னேற்றம் இந்த முறை இல்லாமல் போனது. அவ ரின் நாடித்துடிப்பு மோசமாகிக்கொண்டே இருந்தது. வலி அதிகரித்தது. அவர் மேலும் இரத்தத்தை இழந் தார். காலையில் அவரை மருத்துவமனைக்கு அழைத் துச் செல்லுமாறு மருத்துவர் ஆலோசனை கொடுத்தார்.

மண்ட்டோ மாமாவிற்கு இன்னும் முழுமையாக நினைவிலிருந்தது. மருத்துவமனை என்று கேள்விப் பட்டவுடன் எதிர்ப்பு தெரிவித்தார். "இப்போது எல்லாம் கடந்து விட்டது... என்னை இங்கிருந்து அப்புறப்படுத் தாதீர்கள்... இந்த மதிப்பற்ற வாழ்க்கை முடிந்து போகட் டும்... நான் இங்கேயே அமைதியாக மரணம் கொள்கி றேன்." என்று சொல்லியிருக்கிறார்.

இதைப் பெண்களால் தாங்கிக்கொள்ள முடிய வில்லை. அவர்கள் அழத் தொடங்கிவிட்டார்கள். இது மண்ட்டோ மாமாவைக் கோபம் கொள்ளவைத்தது. "யாரும் அழுவதை நான் விரும்பவில்லை." என்று எரிச்சலோடு சொல்லிப் போர்வையால் தன் முகத்தை மூடிக்கொண்டார். இதுதான் உண்மையான மண்ட்டோ. தன்னுடைய வாழ்க்கை முழுவதையும் எல்லோர் முன்

னிலையிலும் வெளிப்படையாக வாழ்ந்த அந்த மனிதர் தன்னுடைய மரணத்தை யாரும் பார்ப்பதை விரும்ப வில்லை.

அவருடைய மொத்தச் செயல்பாடும் அவருள் இருந்த கோபத்தை வெளிப்படுத்தி இருக்கிறது. தன் மீதா? தன்னை அற்ப ஆயுளில் மடியவைத்த மதுவின் மீதா? தெரியவில்லை.

ஆம்புலன்ஸ் வருவதற்கு முன்பு ஓரிரு முறை மட்டும் தன்னுடைய முகத்தை மறைத்திருந்த போர்வையை விலக்கியிருக்கிறார். அவர், "எனக்கு ரொம்பக் குளிராக இருக்கிறது. என் சவக்குழியில் இருப்பதைவிட அதி கமான குளிரை உணர்கிறேன்... நிறைய போர்வையை எடுத்துப் போர்த்துங்கள்" என்று சொன்னார். சற்று நேரம் அமைதியாக இருந்தபின், அவரின் கண்கள் பிரகாசிக்க, "என்னுடைய கோட் பாக்கெட்டில் மூன்றரை ரூபாய் இருக்கிறது அதை எடுத்துக்கொண்டு மேலும் கொஞ் சம் பணம் போட்டு யாரிடமாவது கொடுத்தனுப்புங்கள்... கொஞ்சம் விஸ்கி வாங்கி வரச்சொல்..." என்றார். அவர் அதில் பிடிவாதமாக இருக்க அவரைத் திருப்திப் படுத் துவதற்காக ஒரு கால் புட்டி வாங்கி வரப்பட்டது. அவர் அதை விசித்திரமான சந்தோஷத்தோடு பார்த்தார்.

"ஒரு பெக் கொடுங்கள்" என்று சொன்னவுடன் வலி யால் அவரின் உடல் தூக்கிப் போடப்பட்டது.

அவரின் கண்களில் சுய இரக்கம் ஏதும் இல்லை. செத்துக் கொண்டிருக்கிறோம் என்று அவருக்குத் தெரிந்துதான் இருந்தது. ஆனால் ஒரு கணப்பொழுது கூட அவர் உணர்ச்சி வசப்படவில்லை. அவர் தன் குழந்தைகளையோ வேறு யாரையோ பார்க்க வேண் டும் என்று சொல்லவில்லை. கடைசிப் புத்தகங்கள், கடைசிப் பார்வை கள் இவற்றை அவர் என்றுமே நம்பி

யதில்லை. அவரைப் போன்ற மனிதர்களுக்கு வாழ்வுக்கும் மரணத்திற்குமான வேறுபாடு என்பது மிக மெல்லியக் கோடாகத்தான் இருந்திருக்கிறது. அது அப்படித்தான் இருக்க முடியும். அவர் உடலிலிருந்த ஆன்மா அவருடைய புத்தகங்களுக்கு மாற்றப்பட்டு விட்டது. அதில் அவருக்கு சாகாவரம் உறுதியானது. சிரித்துக்கொண்டும் நேசித்துக்கொண்டும் அவர் அதில் தொடர்ந்து வாழ்ந்துகொண்டிருப்பார்.

அவர் தன்னுடைய மரணப்படுக்கையில் விஸ்கியைத் தவிர வேறு எதையும் கேட்கவில்லை. பல காலங்களுக்கு முன்பே விஸ்கிதான் தன்னுடைய விரோதி என்பதை உணர்ந்து கொண்டார். அவரைப் பொறுத்தவரை மரணமும் விஸ்கியும் ஒன்றுதான். அதை உடல் ரீதியாக வெற்றி கொள்வது என்பது சாத்தியமில்லாதது. ஒவ்வொரு மனிதனும் மரணத்தின் முன்பு செயலிழந்து நிற்பது போல மண்ட்டோ மாமா விஸ்கி முன்பு செயலிழந்து நின்றார்.

ஆனால் எல்லாவற்றையும் நிராகரிப்பது அவரின் குணாம்சத்தில் முக்கியமானது. அவர் மரணத்தையும் நிராகரித்தார். அவர் தோல்வியை வெறுத்தார். மரணத்தின் கரங்களால் கூட தோல்வியடைவதை வெறுத்தார். அதனாலேயே அவர் தன்னந்தனியே மரணம் கொள்ள விரும்பினார். யாரும் பார்க்காமல், தோல்வி யடையாமல். ஒரு சாதாரண மனிதன் தன்னுடைய மரணத்தை நாடகத்தன்மை கொண்டதாக மாற்றியிருப்பான் - தன்னுடைய சந்ததியர்கள் தன்னைப்பற்றி எழுதவும் பேசவும், நண்பர்களும் உறவினர்களும் தான் வாழ்ந்த முறையை அங்கீகரிக்கவில்லை என்றாலும் அதற்காக வருத்தம் கொண்டு திருந்திய மனிதனாய் மாறிவிட்டான் என்று நினைத்திருக்க... என்று பல காரணங்கள் அதற்கு சாத்தியப்படலாம். ஆனால் மண்ட்டோ மாமா போலி

யானவர் இல்லை. அதற்கான உந்துதல்களை அவர் எதிர்த்தார். அவரின் மரணத்தில் நாடகத்தன்மையானது விஸ்கி கேட்டது மட்டும்தான். மரணக்காட்சியில் அது செய்யப்படுவதற்கான காரணம் பிரதான நடிகனின் நன் மைக்காகத்தான். அவரின் இந்தச் செயலின் முக்கியத் துவத்தை அவர் மட்டுமே உணர்ந்திருந்தார்.

நான் அங்கு இருந்திருந்தால் அவரின் சிந்தனை என் னவாக இருக்கிறது என்று என்னிடம் கோடிட்டுக் காட்டி யிருப்பார். இதில் எனக்கு எந்தச் சந்தேகமும் இல்லை. அது ஒன்றும் அவ்வளவு சிரமமாக இருந்திராது. "பாம்பும் மனிதனும் என்ற கதை நினைவிருக்கா" என்று மட்டுமே அவர் கேட்டிருந்தால் போதும், நான் என் தலையை ஆட்டிக் கடைசி விஸ்கியைக் குடிக்கக் கொடுத்திருப் பேன். அந்த ஒரு வாக்கியம் எல்லாவற்றையும் மிகத் தெளிவாக்கியிருக்கும். அவர் குறிப்பிட விரும்புவது, நண்பர் களின் எச்சரிக்கைகள் எல்லாவற்றையும் நிராக ரித்து ஒரு மனிதன் விஷப்பாம்பு ஒன்றைத் தன்னுடைய தோழனாக வைத்திருந்தான். அந்தப் பாம்பு அவனைக் கடித்த போது, அவன் அதைப் பிடித்து அதன் கழுத் தைக் கடித்து தனியே எடுத்தான்.

ஆம்புலன்ஸ் வந்தபோது அவர் மறுபடியும் விஸ்கி கேட்டார். ஒரு ஸ்பூன் அளவு அவருக்குக் கொடுக் கப்பட்டது. ஓரிரு சொட்டுகள் மட்டுமே அவர் விழுங் கியிருப்பார். அவர் சரிந்துவிழ, மற்றதெல்லாம் அவரின் வாயிலிருந்து வழிந்தது. அப்போதுதான் முதல் முறை யாக அவர் தன் நினைவுகளை இழக்கிறார். அதே நிலையில் அவர் ஆம்புலன்ஸுக்கு தூக்கிச் செல்லப்பட் டார்.

மருத்துவமனையை அடைந்தவுடன் மருத்துவர்கள் பரிசோதிக்க ஆம்புலன்ஸுக்குள் வந்தார்கள். அவர்

இறந்து விட்டதை உணர்ந்தார்கள். வரும் வழியிலேயே மண்ட்டோ இறந்து விட்டார்.

***



## என் நண்பன் என் எதிரி

## இஸ்மத் சுக்தாய்

நான் அடோல்ஃபி சேம்பரின் மரப் படிக்கட்டுகளில் ஏறும்போது ஒரு விதமான கலக்கத்தை உணர்ந்தேன். இந்தக் கலக்கம், நான் தேர்வறைக்குள் நுழையும்போது உணர்ந்தது போலிருந்தது. எப்போதும் நான் ஒருவரை முதல் முறையாகச் சந்திக்கும் போது நடுக்கம் கொள் வேன். ஆனால் இந்த முறை நான் முதல் முறையாகச் சந்திக்கப் போகும் அந்தப் 'புது மனிதர்' மண்ட்டோ. என் னுடைய தயக்கம் கலக்கத்தின் எல்லையைத் தொட் டது. நான் ஷாஹீத்திடம் "நாம் திரும்பிப் போய்விடலாம், ஒருவேளை மண்ட்டோ வீட்டில் இல்லாமலும் போக லாம்" என்றேன். ஆனால் ஷாஹீத் என் நம்பிக்கைக்கு முட்டுக்கட்டை போட்டார்.

"அவர் குடிப்பதால் மாலை நேரங்களில் எப்போதும் வீட்டில்தான் இருப்பார்".

இது நன்றாகத் தானிருக்கிறது. பிணத்தை அடிப்பது போன்று. மண்ட்டோ, அதற்கு மேலும் குடித்துக் கொண் டிருக்கும் மண்ட்டோ. ஆனால் இதில் பயம் கொள் வதற்கு என்ன இருக்கிறது? அவர் ஒன்றும் என்னை விழுங்கி விடப் போவதில்லை. விஷம் கொண்ட அவரின் நுனி நாக்கு தன்னை வெளிப்படுத்திக் கொள்ளட்டும். எவரோ ஊதிவிட்டார்கள் என்பதால் உடைந்து போகும் நீர்க்குமிழி இல்லை நான். தூசு படிந்த படிக்கட்டுக

ளில் சத்தம் எழுப்பி அவரிருந்த தளத்திற்கு வந்தோம். அவர் வீட்டின் கதவு சற்றே திறந்திருந்தது. வரவேற்பறை போலிருந்த அந்த அறையின் ஒரு மூலையில் சோபா வையும், மற்றொரு மூலையில் சுத்தமான வெள்ளைத் துணி போர்த்திய பெரிய கட்டிலையும் பார்த்தேன். ஜன் னலுக்கு அடுத்தாற் போலிருந்த மேசையில் புத்தகங் கள் குவிந்து கிடக்க, மேசைக்கு அடுத்தாற் போலிருந்த பெரிய நாற்காலியில் 'அழகான வடிவம் கொண்ட பூச்சி' போல் ஒரு மனிதர் குதிகாலிட்டு அமர்ந்திருந்தார்.

"உள்ளே வா. உள்ளே வா" மண்ட்டோ எழுந்து உற்சா கமாக எங்களை வரவேற்றார். அவர் எப்பொழுதும் இந்த நாற்காலியில் தான் குதிகாலிட்டு அமர்ந்திருப்பார். இந்த நிலையில் அவர் பார்ப்பதற்குச் சுருங்கிக் கிடந்தார். ஆனால் அவர் முழுவதும் எழுந்து கொண்டபோது நல்ல உயரமானவர் என்பதைப் பார்க்க முடிந்தது. அதுவும் சில சமயங்களில் நிமிர்ந்து நிற்கும் நிலைக்குத் தன்னை நேர்ப்படுத்திக் கொள்ளும்போது பார்ப்பதற்கு விஷமம் கொண்டவராகத் தெரிந்தார். அவர் முரட்டுத்தனமான பருத்திப் பைஜாமாவும் குர்தாவும் ஜவஹர் பாணியில் கோட்டும் அணிந்திருந்தார்.

"அட... பார்ப்பதற்கு நீங்கள் கறுப்பாகவும் எலும்பும் தோலுமாய் நோயுற்று இருப்பவர் போல் இருப்பீர்கள் என்று நினைத்தேன்" என்று தன் ஈறெல்லாம் தெரிய அசட்டுச் சிரிப்பு சிரித்தார்.

"நீங்கள் உரத்த குரலைக் கொண்ட மிக தடித்த பஞ் சாபியாக இருப்பீர்கள் என்று நினைத்தேன்." அவரோடு கண்டிப்பாக ஈடுகொடுக்க வேண்டும் என்று நினைத் துக் கொண்டேன்.

அடுத்த நொடியில் நாங்கள் காரசாரமான விவாதத் தில் எங்களை ஈடுபடுத்திக் கொண்டோம். நாங்கள்

ஒருவருக்கொருவர் இத்தனை நாட்களாக அறிமுகம் ஆகாதது பெரும் இழப்பு என்பதைப் போலவும், அதனைச் சரிக்கட்ட ஒரு நொடியும் காலம் கடத்த விரும்பாதது போலவும் நடந்து கொண்டோம். ஓரிருமுறை நாங்கள் சிக்கலில் மாட்டிக் கொண்ட போது, இருவரிடமும் இன்னும் கொஞ்சம் தயக்கம் மிச்சமிருந்ததால் அதை அடுத்த சந்திப்பிற்கென்று தள்ளி வைத்தோம். பல மணி நேரங்கள் எங்களின் தாடைகள் இயந்திரங்கள் போல் வார்த்தைகளை உற்பத்தி செய்துகொண்டே இருந்தன. என்னைப் போலவே, பேசுவதை முழுமையாகக் கேட்காமல் குறுக்கே பேசும் பழக்கம் மண்ட்டோவிற்கும் இருந்ததைக் குறுகிய நேரத்தில் நான் கண்டுபிடித்ததாலேயே என்னிடம் இருந்த கொஞ்சம் பணிவும் காணாமல் போனது. எங்களுடைய உரையாடல்கள் வாதங்களாக மாறி அது விவாதங்களாக உருக்கொள்ள - எங்களுடைய அறிமுகம் இப்போதுதான் நடந்தது என்பதால் - நாங்கள் இருவரும் ஒருவர் மற்றொருவரைப் பைத்தியக்காரன் என்றும், முட்டாள் என்றும், அறிவற்றவன் என்றும் விளக்கம் கொள்ள வழக்கமான இலக்கியப் பதங்களை உபயோகித்துக் கொண்டோம்.

இந்தச் சண்டைகளுக்கு ஊடே நான் என் ஓரக்கண்ணால் அவரைப் பார்த்தேன். தடித்த கண்ணாடிகளுக்குப் பின்னே பிரகாசித்த அந்தக் கருவிழிகள் திடீரென்று எனக்கு மயிலின் தோகையை நினைவூட்டியது. இந்தக் கண்களுக்கும் மயில் தோகைக்கும் என்ன சம்பந்தம்? எனக்குத் தெரியவில்லை என்றாலும் நான் எப்போது அந்தக் கண்களைப் பார்த்தாலும் எனக்கு மயில் தோகை தான் நினைவுக்கு வந்தது. ஒரு வேளை அகங்காரமும், அடங்காத தன்மையும் இணைந்து இயல்பாய்த் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும் அந்தப் பிரகாசம்

தானா அது? அவரின் கண்களை நான் பார்த்த போது என் இதயம் ஒரு துடிப்பை மறந்தது.

அந்தக் கண்களை இதற்கு முன்னரே பார்த்திருக்கி றேன். மிக நெருக்கத்தில் பார்த்திருக்கிறேன். இதயம் நிரம்பிச் சிரிப்பதை, தீவிரமாய்ச் சிரிப்பதை, வடுச் சொல் தாங்கிய அம்பை விட்டெறிவதை, உயிரற்ற கல் லாய் மாறுவதைப் பார்த்திருக்கிறேன். அதே மென்மை யான கை கால்கள், கந்தலாகவும் அலங்கோலமாகவும் இருக்கும் தலைமுடி, வெளிறிய மஞ்சள் நிறக் கன்னங் கள், சற்றே ஒழுங்கில்லாத பற்கள், திடீரென்று மண்ட் டோவிற்கு விஸ்கி தொண்டையை அடைக்க இருமத் தொடங்கினார். இது எனக்குப் பழக்கப்பட்ட இருமல். நான் குழந்தையாய் இருந்த போது கேட்டிருக்கிறேன். நான் சங்கடப்பட்டுப்போன காரணத்தால், "நீங்கள் செய் வது கண்டிப்பாகத் தவறு" என்று சொன்னேன். இதனால் நாங்கள் நிஜமாகவே சண்டை போடத் தொடங்கினோம்.

"நீங்கள் சொல்வதில் ஏதும் அர்த்தமிருப்பது போல் தெரியவில்லை".

"இது எல்லாம் படு முட்டாள்தனம்".

"இது நியாயமில்லை, இஸ்மத் பேஹன்".

"என்னை ஏன் பேஹன் என்று அழைக்கிறீர்கள்?" என்றேன் எரிச்சலோடு.

"காரணம் ஏதுமில்லை, நான் வழக்கமாக எந்தப் பெண்ணையும் பேஹன் என்று அழைப்பதில்லை. என் சொந்த சகோதரிகளைக் கூட நான் பேஹன் என்று அழைத்தது கிடையாது".

"அப்ப எதற்காக என்னைக் கிண்டல் செய்கிறீர்கள்?".

"இல்லை நான் கிண்டல் செய்யவில்லை. அப்படி ஏன் நீங்கள் நினைக்க வேண்டும்".

"காரணம். என் சகோதரன் என்னை எப்பவும் கிண்டல் செய்து துன்புறுத்துவான். என்னை அடிப்பான், அல்லது மற்றவர்களிடம் நான் உதை வாங்குமாறு ஏதாவது செய்வான்".

மண்ட்டோ உரக்க சிரிக்கத் தொடங்கினார்.

"அப்படியென்றால் நான் கண்டிப்பாக உங்களைப் பேஹறன் என்றே அழைக்க வேண்டும்".

"சரி. ஆனால் இதையும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். என் சகோதரர்களுக்கு என் மீது கொஞ்சமும் நல்ல அபிப்ராயம் கிடையாது. உங்களுக்கு இருமல் அதிகமாக உள்ளது. இதற்குச் சிகிச்சை ஏன் எடுத்துக் கொள்ளக் கூடாது".

"சிகிச்சையா? டாக்டர்கள் எல்லாம் முட்டாள்கள். மூன்று வருடங்களுக்கு முன்பு ஒரு டாக்டர் எனக்குக் காசநோய் இருப்பதாகவும் இன்னும் ஒரே வருடத்தில் நான் இறந்து விடுவேன் என்றும் சொல்லியிருந்தான். நான் இறந்து போய் அவனின் குறிவாக்கை மெய்ப்படுத்தாதது வெட்ட வெளிச்சமானது. நான் எப்போதும் டாக்டர்களை முட்டாள்கள் என்றே கருதுகிறேன். மாய வித்தைக்காரர்களும், வசியக்காரர்களும் இவர்களைக் காட்டிலும் புத்திசாலிகள்".

"மதிப்பிற்குரிய மூத்தவர் ஒருவரும் இதையே தான் சொல்வார்".

"யாரது?"

"என் சகோதரன் அஸீம் பைக். இப்போது ஒன்பது டன் மணலுக்கு அடியில் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கி றான்".

கொஞ்ச நேரம் நாங்கள் 'அஸீம் பைக்'கின் ஓவியம் பற்றி பேசிக் கொண்டிருந்தோம். நானும் ஷாஹீத்தும் சும்மா பார்த்து விட்டுப் போகவே வந்தோம். ஆனால் இப்போது மணி ஏறக்குறைய பதினொன்று ஆகிறது என்றாலும், இன்னும் நாங்கள் இங்கிருக்கிறோம். எங் களுடைய விவாதங்கள் எதிலும் கலந்துகொள்ளாமல் அமைதியாய் எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டி ருந்த ஷாஹீத் இப்போது பசியை உணர்ந்தார். நாங்கள் ஏதாவது சாப்பிட வேண்டுமென்றும், நாங்கள் திரும்ப 'மலாட்' போய்ச் சேர மணி ஒன்றுக்கு மேலாகிவிடும் என் றார் ஷாஹீத். மண்ட்டோ, எங்களைச் சாப்பாட்டுத் தட் டுகள் மற்றும் கரண்டிகளை அலமாரியிலிருந்து எடுத்து வைக்கச் சொல்லிவிட்டு, ஓட்டலில் இருந்து உணவு வாங்கி வரக் கிளம்பினார்.

சிறிது நேரம் கழித்துத் திரும்பி, 'அந்த ஜாடியிலிருந்து கொஞ்சம் ஊறுகாய் எடுத்துக் கொள்ளுங்கள்' என்று சொல்லி மிக வேகமாகச் சாப்பாட்டை விரித்து வைத்து மீண்டும் நாற்காலியில் குதிகாலிட்டு அமர்ந்தார். முன் னர் இலக்கியப் படைப்புகளின் களமாய் இருந்த அதே மேசை இப்போது உணவு மேசையாக உருமாற, எந்தச் சங்கோஜமும் இல்லாமல் பல வருடங்களாக இதுபோல் சாப்பிட்டுப் பழக்கப்பட்டது போல உணவை உண்ணத் தொடங்கினோம்.

சாப்பிடும் போதும் அனல் பறக்கும் விவாதம் தொடர்ந் தது. அவ்வப்போது அவர் 'லிகாப்'(ரஜாய்)புக்கு திரும் பியது எனக்குச் சங்கடமான விஷயமாக இருந்தது. அதை வைத்து என்னைக் குத்தத் தொடங்கினார். நான்

அதிலிருந்து நழுவ முயன்றாலும் அவர் தீர்மானமாய் தன் நிலையிலிருந்து மாறாமல் அந்தக் கதையின் ஒவ் வோர் இழையையும் பிடுங்கிப் போட்டார். நான் அதை எழுதியதற்காக மன்னிப்பு கேட்டவுடன் அவர் மிகவும் ஏமாற்றமடைந்தார். என்னைக் கோழை என்றும் வெத்து என்றும் திட்டித் தீர்த்தார். 'லிகாப்' சிறுகதையை நான் என் மிகச் சிறந்த படைப்பாகக் கருதவில்லை என்றா லும் மண்ட்டோ அது என் மிகச் சிறந்த படைப்புத்தான் என்று அழுத்தமாகச் சொன்னார். சுருங்கச் சொன்னால் 'லிகாப்'-ஐப் பற்றி நாங்கள் அக்குவேறு, ஆணிவேறாய் விவாதித்தபோது மண்ட்டோவால் ஆபாசமான, அசிங் கமான விஷயங்களைக் கொஞ்சமும் தயக்கம் இல் லாமலும் போலி உணர்வு இல்லாமலும் மிக அழகாக வெளிப்படுத்த முடிந்ததைக் கண்டு நான் பிரமித்துப் போனேன். அல்லது அதைக் கவனிக்க எனக்கு வாய்ப் புக் கொடுக்க அவர் மறுத்திருக்கலாம். அவரின் விமர்ச னங்கள் எனக்குக் கோபத்தையும் எரிச்சலையும் தருவ தற்குப் பதில் சிரிப்பையே வரவழைத்தது.

நாங்கள் கிளம்பத் தயாரான போது சஃபியா பற்றிக் குறிப் பிட்டார். நாங்கள் அங்கு இருந்த நேரம் முழுக்க அவளைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டே இருந்திருக்கி றார்.

"சஃபியா மிக நல்ல பெண்மணி"

"சஃபியா மிக நன்றாகச் சமைப்பாள்"

"அவளைச் சந்தித்தால் நீங்கள் சந்தோஷம் கொள்வீர் கள்"

"அவளுக்காக இவ்வளவு ஏங்கினால், அவளை ஏன் திரும்ப வரச்சொல்லி நீங்கள் அழைக்கவில்லை?" என்று கேட்டேன்.

"ஆங்....! அவளில்லாமல் என்னால் உறங்க முடியாது என்று நினைக்கிறீர்களா?" என்று வழக்கமான துடுக் குத்தனத்திற்குத் திரும்பினார்.

"அது சரி! ஒருவனால் கழுமரத்தில் கூட தூங்க முடி யும்" என்றேன். பேசும் விஷயத்தை மாற்ற எண்ணி அவர் சிரிக்கத் தொடங்கினார்.

"நீங்கள் சஃபியாவை மிகவும் நேசிக்கிறீர்களா?" என்று திட்டமிட்டே கேட்டேன்.

"நேசிப்பா!?" நான் ஏதோ அவரைச் சபித்து விட் டது போல் கத்தினார். "நான் அவளைக் கொஞ்சமும் விரும்பவில்லை." தன் முகத்தைக் கோணலாக வைத் துக் கொண்டு தன் பெரிய கண்களை உருட்டி, "நான் காதலை எல்லாம் நம்புவது கிடையாது" என்றார்.

"ஆங்...! நீங்கள் யாரையும் காதலித்ததே கிடையாதா?" என்று திகைப்புக் கொண்டது போல் பாவனை செய் தேன்.

"இல்லை"

"உங்களுக்கு எப்பவும் 'பொன்னுக்கு வீங்கி' வந் ததே கிடையாது. ஆனால் அடிவயிற்றிலிருந்து இருமிக் கொண்டே இருப்பீர்கள்".

இது அவரை மீண்டும் சிரிக்க வைத்தது.

"காதல் என்பதற்கு நீங்கள் என்ன அர்த்தம் கொடுக் கிறீர்கள்?" என்று கேட்டார், "காதல் மிகவும் சிக்கலான சமாச்சாரம். நீ உன் தாயைக் காதலிக்கலாம், உன் சகோ தரியைக் காதலிக்கலாம், அப்புறம் உன் பெண்... உன் மனைவி... அப்புறம் என் செருப்பு....

"உன் காலணி. என் நண்பன் ஒருத்தன் அவனுடைய நாயை மிகவும் நேசித்தான்... அப்புறம்... ஆமாம். நான்

என் மகனை மிகவும் நேசித்தேன்". தன் மகனின் சிந்தனை வந்தவுடன் தன் இருக்கையிலிருந்து எழுந்து நின்றார், "நான் சத்தியமாய்ச் சொல்கிறேன், அவன் வெகு சீக்கிரத்தில் நடக்கத் தொடங்கி, வீடு முழுக்க நடந்து கொண்டே தரை வெடிப்புகளுக்கிடையே இருந்த தூசுகளை எடுத்துச் சாப்பிடத் தொடங்கினான். நான் சொல்வதை எப்போதும் கேட்பான்...." எல்லாத் தகப்பனைப் போலவே மண்ட்டோவும் தன் மகன் வித்தியாசமானவன் என்பது போல் பேசத் தொடங்கினார்.

"என்னை நம்பு. அவன் ஆறு அல்லது ஏழு நாட்கள் குழந்தை யாய் இருந்தபோதே என் படுக்கையில் படுக்க வைத்துக் கொண்டேன். அவன் உடம்பை எண்ணெய் கொண்டு மஸாஜ் செய்தேன். அவனுக்கு மூன்று மாதம் கூட இருக்காது. சத்தமாய் குலுங்கிக் குலுங்கிச் சிரிக்கத் தொடங்கினான். சஃபியா எதுவுமே செய்யத் தேவையில்லை. அவனுக்குத் தாய்ப்பால் கொடுப்பது தவிர, அவ்வளவுதான். அவள் இரவு முழுக்க தூங்கிக் கொண்டிருக்க அவன் பால் குடிக்க அமைதியாக அவளருகில் படுக்க வைப்பேன். குழந்தை பால் குடிப்பது கூட அவளுக்குத் தெரியாது. குழந்தை வீடு முழுக்கச் சுற்றிக் கொண்டிருப்பதால் புண் வராமல் இருக்க, 'ஒடிகோலன்' கொண்டு குழந்தையைச் சுத்தம் செய்ய வேண்டும்." இதையெல்லாம் அவர் ரொம்ப அக்கறையோடு பேசிக் கொண்டிருந்தபோது, நான் 'இவ்வளவு திறமையோடு குழந்தைகளைப் பராமரிக்கும் இவர் எத்தகைய மனிதர்?' என்று பிரமித்துப் போனேன்.

"ஆனால் அவன் இறந்து விட்டான்" என்றார் வலுக்கட்டாயமான புன்னகையோடு. "ஏறக்குறைய என்னை முழுவதுமாக ஆயாவாக மாற்றி விட்டான். அவன் உயிரோடிருந்திருந்தால் வேறு எதற்கும் லாயக்கற்றவனாக இந்நேரம் அவன் 'பீத் துணிகளை நான் துவைத்துக்

கொண்டிருப்பேன். வேறு எந்த வேலையும் செய்ய முடி யாது. இஸ்மத் பேஹன், நான் அவனை உண்மையில் ஆராதனை செய்தேன்".

நாங்கள் கிளம்பும் போது, "சஃபியா இன்னும் சில நாட் களில் திரும்பி விடுவாள். அவளைச் சந்திப்பதில் நீங்கள் மிகவும் மகிழ்ச்சி அடைவீர்கள்" என்றார்.

உண்மையில் சஃபியாவைச் சந்தித்ததில் நான் பெரும் மகிழ்ச்சி கொண்டேன். சந்தித்த ஓரிரு நிமிடங்க ளில் எங்கள் தலைகளை ஒட்ட வைத்துக் கொள் ளுமளவிற்கு சிநேகிதர்களாக மாறி, ஆண்கள் காதுக ளுக்கு அப்பாற்பட்ட விஷயங்களையும், கிசுகிசுக்களை யும் பேசிக் கொள்ளத் தெடங்கினோம்.

நானும் சஃபியாவும் எங்களுக்குள் மெல்லிய குர லில் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்துப் பொறாமை கொண்ட மண்ட்டோ, எங்களைக் கேலி செய்யத் தொடங்கினார். பின்புற அறையிலிருந்த மரச்சுவரில் தன் காதை ஒட்டவைத்து எங்கள் உரையாடல்களை ஒட்டுக் கேட்கத் தொடங்கினார்.

"ஓ...! பெண்கள் இவ்வளவு மோசமாகப் பேசிக் கொள் வார்கள் என்று நான் நினைத்துக் கூடப் பார்த்த தில்லை" என்றார் குறும்புத்தனத்தோடு. சஃபியாவின் காதுகள் வெட்கத்தால் சிவந்தன. "அப்புறம் இஸ் மத் பேஹன், நீங்களும் சுற்றுவட்டாரத்திலுள்ள படிப் பறிவில்லாத பெண்களைப் போல் இருப்பீர்கள் என்று நான் நினைத்துப் பார்க்கவே இல்லை. முதலிரவு எப்படி இருந்தது? எங்கு எப்படி முதல் குழந்தை கருவுற்றது? நிஜமாகவே எவ்வளவு அசிங்கமானது".

நான் உடனடியாக அவரைத் தடுத்து நிறுத்தி னேன். "இவ்வளவுதான். உங்களின் எல்லை மண்ட்டோ சாஹிப், நீங்கள் இத்தனை குறுகிய மனப்பான்மை

கொண்டவராக இருப்பீர்கள் என்று நினைக்கவில்லை. நான் கேட்கிறேன். இது போன்ற பேச்சுக்களை நீங்கள் கேவலமானது என்று நினைக்கிறீர்களா? இதில் கேவலமென்ன இருக்கிறது? ஒரு குழந்தையைப் பெற்றுக் கொள்வது என்பது இந்த உலகத்திலேயே மிக அழகான விபத்து. இது போன்ற மூடிய அறைகளில் கிசுகிசுப்பது தான் எங்களின் பயிற்சி. குழந்தையை எப்படிப் பெற்றுக் கொள்வது என்று நாங்கள் படித்த கல்லூரியா எங்களுக்குக் கற்றுக் கொடுத்தது? அந்த வயதான பேராசிரியர்களும் தங்கள் முகத்தை எதிர்ப்புணர்வோடு வைத்துக் கொண்டு அதிர்ச்சியடைந்தது போல் தொடர்ந்து பாவனை செய்தார்கள். ஏன்? இந்தச் சுற்று வட்டாரத்திலுள்ள படிப்பறிவில்லாத பெண்களிடமிருந்து தானே நம் வாழ்க்கைக்கு அவசியமான முக்கியமான பாடங்களைக் கற்றுக் கொண்டோம்?"

"சஃபியா கொஞ்சமும் தெளிவில்லாதவள். அவள் இலக்கிய மற்றும் அது போன்று எதுவும் அறியாதவள். எல்லாவற்றிலும் அவள் அதிர்ச்சியுற்று இருக்கிறாள். உங்கள் எழுத்துக்களால் அவள் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறாள். அவளோடு குருமாவில் எவ்வளவு மஞ்சள் தூள் சேர்க்கப்பட வேண்டும் என்று மணிக்கணக்காய்ப் பேசிக் கொண்டிருப்பது உங்களுக்குச் சங்கட உணர்வைக் கொடுக்கவில்லையா? அப்புறம் உளுந்தைக் கொண்டு தயிர் வடை..."

"மண்ட்டோ சாஹிப்! குருமாவில் யார் மஞ்சள் சேர்க்கிறார்கள்?" என்று மிரண்டு போய்க் கேட்டாள் சஃபியா. உடனடியாக அவளோடு விவாதத்தைத் தொடங்கினார்.

எல்லா உணவு வகைகளிலும் மஞ்சள்தூள் உபயோகப்படுத்த வேண்டுமென்றும், அப்படி இல்லையென்றால் அது கொடூரமானது, நியாயமில்லாதது என்று

நிலைநிறுத்த அவர் விரும்பினார். "எனக்கொரு இரஜ புத்திர நண்பன் இருந்தான். குளிர் காலங்களில் உடற்ப யிற்சி செய்வதற்கு முன் நெய் மற்றும் மஞ்சள்தூள் கலந்த பானத்தை அவன் அருந்துவான். அவன் உண்மையான குத்துச்சண்டை வீரன்".

நாங்கள் எங்கள் நிலையைத் தெளிவுபடுத்தினோம். அவரின் நண்பர் நெய்யோடு மஞ்சள் கலந்து சாப்பிட் டாரா அல்லது மண்ணைச் சாப்பிட்டாரா என்பது பற்றி எங்களுக்குக் கவலையில்லை. எந்தச் சூழ்நிலையிலும் குருமாவில் மஞ்சள்தூள் கலக்கப்படுவது கிடையாது. இறுதியாக நாங்கள் சொல்வதை அவர் ஏற்றுக் கொள்ள வேண்டியதாயிற்று.

எப்போதுமே நானும் மண்ட்டோவும் ஐந்து நிமிடம் சந் திக்கலாம் என்று நினைத்தால் அது ஐந்து மணி நேரச் சந்திப்பாக மாறியது. அவரோடு விவாதம் செய்வதென் பது ஒருவரின் புத்தியைக் கூர்ப்படுத்துவது போலிருக் கும். விளக்குமாற்றைக் கொண்டு மூலையில் படிந் துள்ள ஒட்டடைகளை எல்லாம் அகற்றிச் சுத்தம் செய் வது போலிருக்கும். சில சமயங்களில் எங்கள் உரையா டல்கள் தீவிரமடைந்து மிக நீளமான நூல் சிக்குண்டது போலவும், சிந்திப்பதற்கும், புரிந்து கொள்வதற்குமான திறமை முழுக்க அழிக்கப்பட்டது போலவும் அமையும். சில சமயங்களில் எங்களின் விவாதங்கள் சண்டைக ளாக உருமாறி, சங்கடமான விளைவை ஏற்படுத்தும் முடிவுக்குக் கொண்டு வரும். தோல்விகளால் ஏற்படும் ஏமாற்றத்தை நான் மூடிமறைக்கும் கலையில் தேர்ச்சி பெற்றிருந்தேன். ஆனால் மண்ட்டோ அழத் தொடங் குவார். அவரின் கண்கள் மயில் தன் தோகையை விரிப்பது போல் விரிந்து, மூச்சின் சுவாசக் குழாய் பெரிதாகி, வாய் கோணலாகி அவரின் முகம் சுருங்கி தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும். தனக்கு உத

வியாய் ஷாஹீத்துக்கு அழைப்பு விடுவார். அத்தகைய சமயங்களில் எங்களின் விவாதங்கள் இலக்கியம், தத்து வம் என்பதிலிருந்து விலகி குடும்ப விஷயங்கள் பக்கம் திரும்பும். மண்ட்டோ அறையை விட்டுச் சீறி வெளியேறி விடுவார். ஷாஹீத் என் மீது எரிச்சல் கொள்வார், "என் நண்பர்களிடம் நீ முரட்டுத்தனமாய் நடந்து கொள்கி றாய்" என்று சொல்வார். "மண்ட்டோ இப்போது கோப மாய் இருக்கிறார். இனி மறுபடியும் நம் வீட்டிற்கு அவர் வரப்போவதில்லை. எனக்கும் அவர் வீட்டிற்குப் போகும் தைரியம் இல்லை. அவர் இப்படித்தான் என்று தீர்மா னிக்க முடியாது. கோபத்தில் என்னிடம் அவர் ஏதா வது சொல்லிவிட்டால் இத்தனை காலங்களாக நாங்கள் பகிர்ந்து கொண்ட நட்பு முறிந்து போகும்".

சில சமயங்களில் நான் மண்ட்டோவிடம் மிகக் கடு மையாக நடந்துகொள்ள, அதனால் அவர் சினங் கொள்ள - மண்ட்டோவுடனான நட்பைக் காட்டிலும் இறுக்கமானது, சஃபியாவுடனான என் நட்பு முடிவுக்கு வருமோ என்று நினைத்ததும் உண்டு. மண்ட்டோவின் தற்பெருமை இப்போது அகங்காரத்தின் எல்லையைத் தொட்டது. நண்பர்களுக்கு மத்தியில் தன்னை வெளிப் படுத்திக் கொள்ள மிகவும் விருப்பம் கொள்வார். தன் நெருங்கிய நண்பர்கள் முன்னே அவர் கேலி செய்யப்பட் டால் மிகவும் அமைதி குலைந்து காணப்படுவார். நானும் அவரும் சமமானவர்கள் என்றும் எங்களுக்குள்ளே நாங் கள் எதை வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளலாம் என்றும், ஆனால் மற்றச் 'சாதாரண மக்கள்' முன்பு ஒரு வர் மற்றவர் மீது கடும் சொல்லைக் கொட்டக் கூடாது என்றும் ஒரு நிலையை எடுத்தார். அவருடன் பழ கிக் கொண்டிருந்தவர்களின் அறிவுத்திறன் அவருடை யதைக் காட்டிலும் தரங்குறைந்தது என்றே நினைத்தார்.

ஆனால் நாங்கள் காலையில் சண்டை போட்டுக் கொண்டாலும், மறுபடியும் மாலையில் சந்திக்க வேண்டி வந்தால், ஏதும் நடக்காதது போல் அன்போடு வர வேற்பார். நாங்கள் வழக்கம் போல் அனல் பறக்கும் விவாதத்தில் ஈடுபட்டாலும் முதல் சில நிமிடங்களுக்கு நாங்கள் எங்களை மிக மென்மையாக வெளிப்படுத் திக் கொண்டு, மற்றொருவரின் சிந்தனையை முழு மன தோடு ஏற்றுக் கொள்வது போல் பாவனை செய்வோம். ஆனால் இந்தப் பாவனைகள் எல்லாம் சீக்கிரத்தில் காற்றில் மறைந்து வழக்கம் போல் பட்டாசு வெடிக்கத் தொடங்கும். எங்களின் வார்த்தைகள் ஒரு தோட்டாவுக் கான வேகத்தைக் கொண்டவை. பல சமயங்களில் மற் றவர்கள் வேண்டுமென்றே வேடிக்கைக்காக எங்களை முட்டி மோதிக் கொள்ள வைக்க, நாங்கள் எரிச்சல டைந்து எங்களுக்குள்ளான கருத்து வேறுபாட்டை அச் சமயத்திற்கு ஒதுக்கிவைத்துக் கொள்வோம். நாங்கள் எங்களின் சந்தோஷத்திற்காகத்தான், விவாதித்தோமே தவிர கோழிச்சண்டை போட்டு மற்றவர்களைச் சந்தோ ஷப் படுத்த அல்ல. நாங்கள் எவ்வளவு விவாதங்களில் ஈடுபட்டாலும் நாங்கள் ஒன்றாக இருக்கும் சந்தர்ப்பங் களில் பலமான ஒரு 'அணி'யாய் இருந்து மற்றவர் களை வியக்க வைக்க வேண்டும் என்பது மண்ட்டோ வின் கருத்து. ஆனால் பல சமயங்களில் நான் அதை மறந்து என் 'அணி'க்கு உண்மையாக இருக்க வேண்டி யிருப்பதால், கலைக்கப்பட்ட கூட்டிலிருந்து சீற்றத்துடன் வெளியேறும் குளவி போல் கொட்டத் துவங்கி விடு வேன்.

மண்ட்டோ குடித்ததால் அதிகம் உற்சாகம் கொள்கி றாரா அல்லது அதிகம் உற்சாகம் கொண்டதால் குடிக் கிறாரா என்று எனக்கு எப்போதும் புரிந்ததே கிடை யாது. அவரின் நடை எப்போதும் தடுமாறியதும் இல்லை.

பேச்சு எப்போதும் குழறியதும் இல்லை. அவர் அதிகம் குடித்து விட்டார் என்றால் ஆணித்தரமாக, தான் ஒன்றும் அளவுக்கதிகமாக குடிக்கவில்லையென்று நான் ஏற்றுக்கொள்ள வேண்டி முயலுவதைத் தவிர அவரின் வெளிப்பாட்டில் எந்த மாற்றத்தையும் காண முடியாது.

"நான் உங்களிடம் இப்போது சொல்கிறேன் இஸ்மத் பேஹன், நான் போதையில் சொல்லவில்லை. வேண்டுமென்றால் இன்றைக்குக் கூட என்னால் குடிப்பதை நிறுத்த முடியும். நான் நினைக்கிறபோது என்னால் குடிப்பதை நிறுத்த முடியும். உங்களுக்கு விருப்பமிருந்தால் என்னோடு பந்தயம் கட்டலாம்".

"நீங்கள் கண்டிப்பாகத் தோற்றுப் போவீர்கள் என்பதால் நான் பந்தயம் கட்ட மாட்டேன். உங்களால் குடிப்பதை நிறுத்த முடியாது. உங்களுக்குப் போதை ஏறியிருக்கிறது".

தனக்குப் போதை ஏறவில்லையென்றும், தான் விரும்புவது போல் எப்போது வேண்டுமானாலும் குடிப்பதை நிறுத்த முடியும் என்பதற்கும் அவரால் எந்த வாதத்தையும் முன்வைக்க முடியாது என்பதால், பந்தயம் கட்டினால் நிச்சயம் நிறுத்திக் காட்டுவதாக வற்புறுத்தினார். ஒரு நாள் அவரின் தொந்தரவு தாங்க மாட்டாமல் நான் பந்தயம் கட்ட, அவர் தோற்றுப் போனார். நான் ஜெயித்தேன். அதனால் என்ன பயன்? பந்தயம் கட்டியாயிற்று. ஆனால் பணம் ஏதும் அதில் சம்பந்தப்படவில்லை. அதன்பிறகு மண்ட்டோ எப்போது போதையேறும் அளவிற்குக் குடித்தாலும் நான் பந்தயம் கட்ட வேண்டுமென்று தீவிரமாக வற்புறுத்தினார். வேறு வழியே யில்லாமல் அவருக்கு விட்டுக்கொடுத்தாக வேண்டும்.

மண்டோ தற்புகழ்ச்சிக்குப் பழக்கப்பட்டவர். ஆனாலும், நான் அவருடன் இருக்கும்போது என்னையும்

அதனுள் இணைத்துக் கொள்வார். அவரைப் பொறுத் தமட்டில் இரண்டே இரண்டு எழுத்தாளர்கள் தான் உருப்படியானவர்கள். ஒன்று அவர். மற்றொன்று நான். அவர் அடிக்கடி விமர்சனம் செய்யத் தேர்ந் தெடுக்கும் இரண்டு எழுத்தாளர்கள் கிருஷன் சந்தர் மற்றும் தேவீந் தர் சத்யார்த்தி. நான் அவர்களைப் புகழ்ந்து பேசினால் மண்ட்டோ கோபம் கொள்வார். நான் சொல்வேன், 'நல் லது! நீங்கள் ஒன்றும் விமர்சகரல்ல. பின் ஏன் உங்கள் வாதத்தை நான் ஏற்றுக்கொள்ள வேண்டும்'. இப்போது அவர் விமர்சகர்களை வெட்டித் தள்ளத் தொடங்குவார். அவர்களின் வெறும் இருப்பையே, குறிப்பாக இலக்கி யத்திற்கு அழிவு சக்தியாகக் கருதினார்.

'இந்த விமரிசகர்கள் பேசுவதெல்லாம் அபத்தமானது' என்பார் எரிச்சலோடு. 'அவர்கள் சரியானது என்று சொல்வதற்கு எதிர் மறையானதைச் செய். என்னுடைய கதைகளை மோசமாக விமர்சனம் செய்யும் இவர்கள் தான், அதை இரகசியமாகப் படிக்கிறார்கள். படித்து, என் கதைகளிலிருந்து எதையாவது கற்றுக் கொள்வதற்குப் பதில், கூச்சப்படுகிறார்கள். பிறகு அந்தச் சந்தோஷங் களுக்காகக் குற்றவுணர்வு கொண்டு முட்டாள்தனமான விமர்சனங்களை என் படைப்பின் மீது சுமத்துகிறார்கள்'.

சில சமயங்களில் மிக மோசமான சினம் கொண்ட அவரைச் சமாதானப்படுத்த வேண்டி, 'அவர்கள் எழுது வது எல்லாம் குப்பை என்று நீங்கள் இவ்வளவு தீர்மான மாக இருக்கும் போது அதை ஏன் பெரிது படுத்துகிறீர் கள்? விமர்சனங்கள் உங்களுக்கு உதவியாக இல்லை யென்றால், அதைப் படிக்காதீர்கள். ஆனால் பொதுமக் கள் அபிப்பிராயத்தோடு ஏன் மல்லுக்கு நிற்கிறீர்கள்?' என்பேன். ஆனால் விமரிசகர்களின் மீதான அவரின் எரிச்சல் மேலும் வளர்ந்தது.

ஒரு நாள் மிக அமைதியானவராக என்னைப் பார்க்க வந்து, "நாம் அவன் மீது வழக்குத் தொடருவோம்" என்றார்.

நான் கேட்டேன், "நாம் என்பது யார்?"

அவர் சொன்னார் "நீயும் நானும்"! அந்த முட்டாள் உன் கதையையும் என்னுடையதையும் தொகுப்பில் சேர்த்து விட்டு நம் படைப்பு ஆபாசமானது என்று சொல்லி, இந்த நாட்டை இது போன்ற இலக்கியங்களிலிருந்து காப்பாற்ற வேண்டும் என்று பிரகடனப்படுத்தி இருக்கின்றான். அந்த முட்டாளிடம், 'இது என்ன தலைகீழ்வாதம்' என்று கேட்கவே தோன்றுகிறது. முதலில் நம் கதையைப் பிரசுரித்து அதைப் பிரபலமாக்குகிறான். இரண்டாவதாக இந்த வியாபாரத்திலிருந்து பணமும் பண்ணுகிறான். நம் கதையை, நம் அனுமதியில்லாமல் பிரசுரம் செய்திருக்கிறான். நான் இந்த இழப்புகளுக்காக வழக்குத் தொடரப் போகிறேன்".

ஆனால் வெகு சீக்கிரத்தில் இதையெல்லாம் மறந்து விட்டார்.

மண்ட்டோ என் முன்னால் தன்னைக் காட்டிலும் தன் நண்பர்களை மிகவும் புகழ்ந்து பேசுவார். ரஃபீக் கஸ்நாவி மீது என்னால் புரிந்து கொள்ள முடியாத விசித்திரமான ஈடுபாட்டை அவர் கொண்டிருந்தார். அவரைப் பற்றி மண்ட்டோ எப்போது பேசினாலும் இது போல் தானிருந்தது: "அவன் பொறுக்கி, கீழ்த்தரமானவன். அக்கா, தங்கை நால்வரையும் ஒருவர் பின் ஒருவராக மணந்து கொண்டான். லாகூரில் அவனின் காலணியில் தங்கள் மூக்கைத் தேய்க்காத எந்த விலைமாதுவும் கிடையாது."

ஒருவன் தன் மூத்த சகோதரன் பற்றி பேசுவது போல் மண்டோ ரஃபீக் பற்றிப் பேசினார். ரஃபீக்கின் காதல்

லீலைகளைத் துல்லியமான விவரங்களோடு விளக்கிச் சொல்வார். ஒரு நாள் நான் அவரைச் சந்திக்க வேண் டும் என்று யோசனை சொன்னார். "நான் ஏன் அவரைச் சந்திக்க வேண்டும். நீங்கள்தானே அவரைப் பொறுக்கி, கீழ்த்தரமானவன் என்று சொன்னீர்கள்?" என்று கேட் டேன்.

"ஆம்! அதனால்தான் நீ அவனைச் சந்திக்க வேண் டும் என்று சொல்கிறேன். ஒருவன் பொறுக்கி, கீழ்த்த ரமானவன் என்றால் அவனை நேரிடையாகக் கெட்ட மனிதன் என்று யார் சொன்னது? ரஃபீக் மிகவும் கண்ணி யமானவன்."

"மண்ட்டோ சாஹிப், பொறுக்கி, கண்ணியமானவன், கீழ்த்தரமானவன் - அவர் எப்படிப்பட்ட மனிதர் என்று என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஒருவேளை, நீங்கள் நினைப்பது போல் நான் அவ்வளவு புத்திசா லியோ அல்லது அனுபவம் பெற்றவளாகவோ இல்லாம லிருக்கலாம்" என்றேன்.

"நீ பாசாங்கு செய்கிறாய்" என்றார் கடுகடுப்போடு. "அதனால் தான் நீ அவனைச் சந்திக்க வேண்டுமென்று சொல்கிறேன். அவன் ரொம்ப சுவாரஸ்யமானவன். எந் தப் பெண்ணாலும் அவன் மீது அதீதக் காதல் கொள் ளாமல் இருக்க முடியாது."

"ஆனால் நானும் ஒரு பெண்தானே" என்றேன், போலிக் கலக்கத்தோடு.

அவர் சங்கடம் கொண்டு, "நான் உன்னை என் சகோ தரியாகக் கருதுகிறேன்." என்றார்.

"ஆனால் உன் சகோதரியும் ஒரு பெண்தானே". மண்ட்டோ உரக்கச் சிரிக்கத் தொடங்கினார், "உண் மைதான். சரியாகச் சொன்னாய். அவளும் விழத்தான்

செய்வாள்". ஆனாலும் தன் நிலையில் தீர்மானமாய் "நீ அவனைச் சந்திக்க வேண்டும். குறைந்தபட்சம் அவ னைப் பார்க்கவாவது செய்"என்றார். அதற்கு, "ஒருநாள் நான் அவரை ரயில் நிலையத்தில் பார்த்தேன். என் தலை முழுக்க அவரைப் பற்றி நீ சொன்ன கதைகள் நிரம்பி இருந்ததால் எங்கே அந்தப் பாதகன் மீது காதல் கொண்டு சிக்கி விடுவேனோ என்று பயந்து, நான் உட னடியாக அங்கிருந்து ஓடிப் போனேன்." என்றேன்.

ஆனால் நான் ரஃபீக்கைக் சந்தித்தபோது மண்ட்டோ வின் அவதானிப்பு எவ்வளவு துல்லியமாக இருந்தது என்பதை உணர்ந்தேன். ஈரேழு ஜென்மங்களுக்கான பாவங்களைச் செய்திருந்தாலும், ஒரு கண்ணியமான மனிதருக்கு வேண்டிய எல்லாத் தகுதிகளும் அவரிடமி ருந்தது. ஒரு மனிதன் பொறுக்கியாக இருந்தாலும் நேர் மையானவனாகவும், கண்ணியமானவனாகவும் இருக்க முடியும். எப்படி? இந்தப் புதிரை விடுவிக்க நான் முயல வில்லை. அது மண்ட்டோவின் துறை. இந்த உலகத்தை மாற்றி அமைக்க முடியும் என்று நம்பிக்கை கொண்டவர் களையும், அவர்களின் தீர்மானங்களையும், அறிவுத்திற னையும் நம்ப மறுத்ததால், ஒதுக்கித் தள்ளப்பட்ட ஒவ் வொரு குப்பைமேடுகளிலும், கழிவுகளிலும் முத்தைத் தேடிக் கொண்டிருந்தார்.

நல்லொழுக்கமும், நன் மதிப்பும் கொண்ட பெண்க ளின் இதயங்களில் அத்துமீறி நுழைந்திருப்பவர்களைத் தாவிப் பிடித்து அவர்களைக் கடவுள் பற்றுக் கொண்ட விலைமாதர்களின் இதயங்களோடு ஒப்பிடுவார். நறும ணப் பொருட்களால் முழுகிய திருமணப் பெண்களை விட அழுக்கடைந்த, வண்ணாத்தியின் நாற்றம் இனி மையானது என்று கருதுபவர், 'ப்பூ' - (நாற்றம்) என்ற சிறுகதையை மேலோட்டமாக வாசித்தால் உடலை மட் டுமே காண முடியும் என்றாலும், நீங்கள் கதையை

மிகக் கவனமாகப் படித்துப் பார்த்தால் அந்த உடலுக் குள் இதயத்தைக் காண முடியும். புளித்துப்போன சலிப் பூட்டுகிற செல்வந்தர்களின் இதயம் இன்பத்தை நாடும் வர்க்கம். பாசாங்கு இல்லாதது அடித்தட்டு மக்களின் யதார்த்தம். இதை நாம் வர்க்க வேறுபாடுகள் பற்றிய கேள்விகள் என்று ஏற்றுக் கொள்ள மறுத்தால், நாம் இதை உடல் சம்பந்தப்பட்டது என்றும் ஏற்றுக்கொள்ள முடியாது. மண்ட்டோ கண்டிப்பாக, இந்த இரண்டு வர்க் கங்களுக்கிடையேயுள்ள முரண்பாட்டைப் பற்றித்தான் சிந்திக்கிறார். இந்த உலகம் முழுவதும் வழிபடும் விக்கி ரகங்களைப் போட்டு உடைக்கும் துணிச்சல் அவருக்கு இருந்தது.

அவர் எப்போதும் தன் ஒழுக்கம் கெட்ட நண்பர்கள் பற்றிய கணக்கில்லாக் கதைகளைப் பெருமையாகச் சொல்லிக் கொண்டிருப்பார்.

ஒரு நாள் அவரை எரிச்சலடையச் செய்ய நான் வேண்டுமென்றே, "இவர்கள் எல்லாம் பொய் சொல் கிறார்கள். நூற்றுக்கணக்கான விலைமாதர்களுக்கும் அவர்களுக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது. ஒருத்தி யிடம் கூட அவர்கள் நிஜமாகவே போனதும் கிடையாது" என்றேன். தன் நண்பர்கள் காமவெறி பிடித்த செயல்க ளில் ஈடுபட்டார்கள் என்றும், அதற்கு மேலும் சொல்லி என்னை நம்பவைக்க உடனடியாகத் தன் பிரச்சாரத் தைத் தொடங்கினார்.

"இவையெல்லாம் பொய்" வேண்டுமென்றே அவரை மேலும் சீண்டிவிட நான் சொன்னேன். "ஆங்! நான் சொல்வதை நீ ஏன் நம்ப மறுக்கிறாய்? யார் வேண்டு மென்றாலும் தாசிகள் 'கோதே'வுக்குப் போகலாம்."

"அப்படிச் சொல்வதற்கு அவர்களுக்கு எங்கிருந்து தைரியம் வருகிறது. அப்படியே அவர்கள் போனாலும்

தாசிகள் பாடுவதைக் கேட்கத்தானேயொழிய வேறு எதற்கும் இல்லை".

"ஆனால் நான் தாசிகள் 'கோத்தா'வுக்குச் சென்றிருக் கிறேன்".

"பாட்டைக் கேட்கவா?" என்றேன் கிண்டலாக.

"இல்லவே இல்லை, என் பணத்திற்கான சந்தோஷத் தைப் பெறவே அங்கு சென்றேன். அதை எப்போதும் பெற்றேன்".

"நான் உன்னை நம்பவில்லை" என்றேன்.

"ஏன்?" தன் நாற்காலியிலிருந்து எழுந்து தரை விரிப் பில் சம்மணம் போட்டு என் முன்னே அமர்ந்தார்.

"காரணம், நான் அப்படித்தான் நினைக்கிறேன். என் முன் நீ உன்னைக் காட்டிக் கொள்ள விரும்புகிறாய்."

"கடவுள் மீது சத்தியமாக நான் அங்கு போயிருக்கி றேன்".

"நீ கடவுளை நம்புவது கிடையாது. பின் ஏன் அவரை இதில் இழுக்கிறாய்?"

"இறந்து போன என் குழந்தை மீது சத்தியமாகச் சொல்கிறேன். நான் அங்கு போயிருக்கிறேன். ஒருமுறை அல்ல. ஆனால்..."

"இறந்து போன குழந்தை மீது சத்தியம் செய்து பொய் சொல்வதால் அந்தக் குழந்தைக்கு என்ன தீங்கு நேரி டப்போகிறது?"

ஆனால், மண்ட்டோ விட்டுக் கொடுக்கவில்லை. அவர் விலைமாதுவிடம் சென்றிருக்கிறார் என்று நான் ஏற்றுக் கொள்ள அவரால் முடிந்ததையெல்லாம்

செய்து பார்த்தார். சஃபியாவையும் அதற்குச் சாட்சியாக அழைத்தார்.

"அவர் உன்னிடம் தாசியிடம் போவதாகச் சொல்லிவிட்டு வீட்டை விட்டுக் கிளம்பியிருப்பார். ஆனால் அங்கு சென்று சலாம் சொல்லிவிட்டு உடனே திரும்பி வந்திருப்பார்" என்று இரண்டே நிமிடத்தில் சஃபியாவை அமைதிப்படுத்தினேன்.

சஃபியா சில நிமிடங்கள் அமைதியாக இருந்தார். "என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியாது. அவர் சலாம் சொல்லத்தான் சென்றாரா அல்லது..." இதற்குமேல் அவளால் தொடர முடியவில்லை.

இதனால் இறுக்கமான மண்ட்டோ வழக்கத்திற்கு மேலே குடித்து விட்டு, வெறி பிடித்தது போல் என்னிடம் சண்டை போடத் தொடங்கினார். தான் ஒரு பொம்பளைப் பொறுக்கி என்பதில் விடாப்பிடியாக இருந்தாலும், என்ன நடந்தாலும் அவர் சொல்வதை நம்ப முடியாது என்று அறிவித்தேன்.

இதைக் கேட்டவுடன் அவரின் கோபம் எல்லையைக் கடந்தது.

சஃபியா அழுது கொண்டே, "பேஹறன், தயவு செய்து நீங்கள் நம்புவதாகச் சொல்லுங்கள்" என்றாள்.

ஷாஹீத், "வா வீட்டுக்குப் போகலாம்" என்றார்.

இதனால் மண்ட்டோ, ஷாஹீத் மீது எரிச்சலடைந்து, நான் அவர் சொல்வதை ஏற்றுக் கொள்ளும் வரை எங்களை வெளியே விடமாட்டேன் என்றார். இதற்குப் பிறகு அங்கு மிகப்பெரிய குழப்பம் நிலவியது.

மண்ட்டோ, ஷாஹீத் பக்கம் திரும்பி நிஜமாகவே, "நாம் இந்த நிமிடமே தாசிகள் 'கோத்தா'வுக்குப் போகலாம்.

அவள் அப்போதும் நான் சொல்வதை ஏற்றுக் கொள்ள வில்லையென்றால், நான் பன்றியின் பாலைக் குடித்து வளர்ந்தவனேயொழிய என் தாயின் பாலை அல்ல" என்று சொன்னார்.

நான் அவரை மேலும் வதைத்தேன். "நீங்கள் உண் மையில் அங்கு போகமாட்டீர்கள். பல்கா பாலத்தின் சுற்று வட்டாரத்தில் வெறுமனே சுற்றி விட்டுத் திரும்பி விடுவீர்கள். நாங்கள் உங்களை அப்பவும் நம்பத் தயா ராக இல்லை, அதனால் என்ன பயன்?"

இப்போது மண்ட்டோ குமுறிக் கொண்டிருந்தார். மிக வும் கஷ்டப்பட்டு தன்னை அடக்கிக் கொண்டு "சரி. நான் எப்படி உங்களை ஏற்றுக் கொள்ள வைக்க முடி யும்?" என்று கேட்டார்.

நான் சொன்னேன், "எங்களையும் அழைத்துப் போங் கள். அதாவது உங்களோடு என்னையும் சஃபியாவை யும்".

"நான் வரமாட்டேன்" என்றாள் சஃபியா மிக வேகமாக, "உங்களுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது".

"இல்லை. நீயும் வருகிறாய்" என்று மண்ட்டோ கர்ஜித் தார்.

"சரி சரி! நாம் போகலாம். போகலாம்" என்று சொல்லி சஃபியாவைப் பார்த்துக் கண் சிமிட்டினேன். எல்லோரும் கிளம்பினோம். நானும் ஷாஹீத்தும் கதவைக் கடந்து வெளியே வந்தோம். எப்படியோ சஃபியா மண்ட்டோ வைத் தக்க வைத்துக் கொண்டாள்.

நாங்கள் மறுபடியும் சந்தித்தபோது மண்ட்டோ தலை வெடிக்கச் சிரித்தார். பிறகு மெல்லிய குரலில், "இப்ப சொல்லு என்னை நம்புகிறேன் என்று சொல்லு" என் றார்.

நான் சொன்னேன், "எப்பவும் முடியாது".

மண்ட்டோ விலைமாதுகள் பற்றி எழுதியது எல் லாம் உண்மையான அனுபவங்கள் சார்ந்ததா அல்லது கொள்கைகள், நம்பிக்கைகள் சார்ந்ததா என்று எனக்கு நிச்சயமாய்த் தெரியாது. நான் இதைச் சொல்வதற் குக் காரணம், அவர் உண்மையில் விலைமாதர்களிடம் போயிருந்தாலும் சகதியில் புழுவைப்போல் மிதக்கும் அந்தப் பெண்களின் இதயத்தையும், அது வாழ்க்கை யின் நல்லதை எல்லாம் நேசிப்பதையும் பார்த்திருப்பார். நல்லது, கெட்டது என்று அளந்து பார்க்கும் அளவு கோல்களைச் சுக்கு நூறாக்கிய மண்ட்டோ தன்னுடைய சொந்த அளவுகோலை உருவாக்கியிருந்தார்.

'குஷியா' போன்ற கேவலமான பயனற்ற ஜீவன்கள் கூட கௌரவத்தை உணர்கிறது. சலனம் கொண்ட கோபி நாத் கூட கடவுளை வென்று அதிகாரமும், மதிப்பும் கொண்ட அந்தக் கடவுளைத் தன் காலடியில் கிடத்து கிறான். தேசிய சேவை உறுப் பினர்கள் கூட கறைப டிந்தவர்களாக இருக்கிறார்கள். பிணத்தைப் பலாத்கா ரம் செய்து அதனோடு உடலுறவு கொள்பவன் பிணமாக மாறுகிறான் (தண்டா கோஷ்).

சில சமயங்களில் நாங்கள் படுமோசமாகச் சண்டை போட, எங்கள் நட்பு உடைந்துவிடும் போலிருந்ததும் உண்டு. ஒரு நாள் ரொம்ப எரிச்சலோடு தன் பல்லை நற நறவென்று கடித்து,

"நீ மட்டும் பெண்ணாக இல்லாமல் இருந்திருந்தால், உன்னைச் சங்கடப் படுத்தும் அளவுக்கு ஏதாவது சொல் லியிருப்பேன்" என்றார்.

"உன் இதயத்தில் இருப்பதை நீ ஏன் வெளிக் கொட்ட மறுக்கிறாய்? நாகரிகமாக இருக்க வேண்டிய அவசியம் ஏதுமில்லை" நான் கிண்டல் செய்தேன்.

"பரவாயில்லை. நீ மட்டும் ஆணாக இருந்திருந்தால் ஓரிரு விஷயங்களைச் சொல்லியிருப்பேன்."

"சொல்ல வந்ததை என்னிடம் சொல். என் மீது நீ விட்டெறியாத என் மனதைப் புண்படுத்தும் வார்த்தை வேறு என்ன உன்னிடம் இருக்கிறது".

"நீ சங்கடப்பட்டுப் போவாய்".

"கடவுள் மீது சத்தியமாக அது என்னை ஒன்றும் செய்யாது".

"அப்படியென்றால் நீ பெண் அல்ல".

"ஏன்? ஒரு பெண் சங்கடத்தை உணரவில்லை என்றாலும் சங்கடப்படத்தான் வேண்டுமா? என்ன பரிதாபம் மண்ட்டோ சாஹிப்? உங்களிடமும் ஆணுக்கென்று, பெண்ணுக்கென்று வெவ்வேறு விதிமுறைகள் இருக்கிறது. நீங்கள் மற்ற 'சாதாரண மனிதர்களை'விட மேல் தளத்தில் இருப்பவர் என்றே நினைத்திருந்தேன்" என்று அவரைப் போலியாய்ப் புகழ்ந்தேன்.

"இல்லவே இல்லை. நான் ஆண், பெண் என்று எந்த வேறுபாடும் பார்ப்பது இல்லை".

"நல்லது. அப்படியென்றால் என்னைச் சங்கடப்படுத்தினாலும் நீங்கள் சொல்ல நினைத்ததைச் சொல்லுங்கள்".

"இல்லை. எனக்கு இப்போது கோபமில்லை" என்றார் சிரித்துக் கொண்டே.

"சரி போகட்டும். எப்படியிருந்தாலும் அந்த மோசமான விஷயம் என்னவென்று சொல்லுங்கள்".

"அது ஒன்றுமில்லை... எனக்கு இப்போது நினைவில் இல்லை. அதில் விசேஷம் ஒன்றுமில்லை. நான் ஏதா

வது தடித்த, பொருளற்ற வார்த்தைகளை உபயோகப்ப டுத்தியிருக்கலாம்".

"அவ்வளவுதானா?" என்றேன் ஏமாற்றத்துடன்.

"அல்லது நான் உன்னை அறைந்திருக்கலாம்".

"அதுவும் என்னை ஏதும் செய்திருக்காது. நான் உங் களால் கற்பனை செய்து பார்க்க முடியாத பொருளற்ற வார்த்தைகளைக் கேட்டிருக்கிறேன். கொஞ்சம் அறை பட்டுமிருக்கிறேன். ஆனால் ஒரு பெண் என்பதால் சலுகை பெறுவது இதுவே முதல் தடவை. நான் குழந் தையாயிருந்தபோது என் சகோதரர்கள் என்னை அடிக் கடி அடிப்பது உண்டு".

நாங்கள் மறுபடியும் நண்பர்களானோம்.

ஒரு நாள் என் அலுவலகத்தில் வெப்பத்தால் மிக வும் அவதியுற்றதால் மலாட் போகும் முன் மண்ட்டோ வீட்டிற்குச் சென்று சற்று ஓய்வெடுக்கலாம் என்று நினைத்தேன். வீட்டின் கதவு வழக்கம் போல் சற்றுத் திறந்தே இருந்தது. நான் உள்ளே நுழைந்தபோது, சஃ பியா முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு கட்டிலில் படுத்திருந்தாள். மண்ட்டோ கையில் விளக்குமாற்றைப் பிடித்துத் தரையைக் கூட்டிக் கொண்டு இருந்தார்.

"என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று கேட் டேன்.

"கிரிக்கெட் விளையாடிக் கொண்டிருக்கிறேன்" என்று கண்களை உருட்டிப் பதில் தந்தார்.

"நல்லது. நான் இங்கு சற்று நேரம் ஓய்வெடுக்கலாம் என்று வந்தேன். ஆனால் நீங்கள் இருவரும் ஏதோ சண்டை போட்டுக் கொண்டிருப்பது போல் தெரிகிறது". நான் கிளம்பத் தயாரானேன்.

"ஐயோ" என்று சஃபியா எழுந்தமர்ந்து, "உள்ளே வா உள்ளே வா!" என்றாள்.

"சண்டை எதற்காக?" நான் கேட்டேன்.

"ஒண்ணுமில்லை. வீட்டில் சமைப்பது, சுத்தம் செய் வது, வீட்டைப் பார்த்துக் கொள்வது போன்ற வேலை களை ஓர் ஆண் செய்யக்கூடாது என்றேன். அவ்வளவு தான். அவர் உங்களிடம் வாதம் பண்ணுவது போல் என் னிடமும் தொடங்கி விட்டார்.

ஏன் இதெல்லாம் ஓர் ஆணின் வேலை இல்லை என்று கேட்டு, என்னால் தரையைக் கூட்ட முடியும் என் றார். நான் அதைத் தடுக்க முயன்றபோது என்னோடு சண்டை போடத் தொடங்கினார்.

'நீ இப்படித்தான் நினைக்கிறாய் என்றால் என்னை ஏன் நீ விவாகரத்து செய்யக் கூடாது' என்று கேட்கிறார்". சஃபியா அழுது கொண்டே பேசினாள்.

மண்ட்டோ விளக்குமாற்றை விட்டுத் தொலைக்க வேண்டும் என்று நான் இருமத் தொடங்கி, "விடியற் காலையில் மாநகராட்சி துப்புரவுப் பெண்கள் சுத்தம் செய்கிறேன் என்று, எல்லாக் குப்பைகளையும் கிளறி விட்டதை நீ இப்போது முடிக்கப் பார்க்கிறாய். இந்த வெப்பத்திலும், தூசியிலும் ஒருவன் செத்தே போவான்" என்றேன்.

விளக்குமாற்றை உடனடியாக அப்படியே போட்டு விட்டு ஹோட்டலிலிருந்து ஐஸ் வாங்கி வரச் சென்றார். சஃபியா சமையலறைக்குள் சென்று பருப்பைத் தாளித் தாள். மண்ட்டோ வாங்கி வந்த ஐஸ் கட்டியைத் துண் டில் கட்டி சுவற்றில் அடித்துத் துண்டுகளாக உடைத்து அதைத் தட்டில் பரப்பி என் முன்னே வைத்தார். பிறகு எனது எதிரே தரையில் அமர்ந்து கொண்டார்.

"அப்புறம் வேறு என்ன புது விஷயம்?" என்று அவருக் கேயுரிய வழக்கமான பாணியில் கேட்டார். தாளிப்பது கருகிப் போக எனக்குக் குமட்டி எடுத்தது.

"உஸ்! சஃபியா! நீ பிணத்தையா எரிக்கிறாய்?" என்று என் மூக்கை மூடிக் கொண்டேன். மண்ட்டோ ஆச்ச ரியத்தோடு என்னைப் பார்த்துக் கண்களை உருட்டிப் பாய்ந்தெழுந்தார். சமையலறையில் சஃபியாவின் உரத்த எதிர்ப்பினை உதாசீனப்படுத்தி முழு பக்கெட் தண் ணீரை வாணலியில் ஊற்றிக் கவிழ்த்தார்.

திரும்பி வந்து தன் நாற்காலியில் அமர்ந்து என்னை விசாரமாய்ப் பார்த்தார். பிறகு நாணத்தோடு புன்னகைத் தார்.

சஃபியா முணுமுணுத்துக் கொண்டே சமையலறை யில் இருந்து திரும்பி வந்தாள். சத்தமான கண்டிப்போடு சஃபியாவை மௌனமாக்கி, பிறகு வெட்கத்தோடு - என் வயிற்றில் குழந்தை இருக்க, அவர் வயிற்றில் குழந்தை இருப்பது போல், "உன் வயிற்றில் குழந்தை இருக்கி றது" என்றார். அப்போது தான் சஃபியாவும் கருவுற்றி ருக் கிறாள் என்பது என் நினைவுக்கு வந்தது. தீய்ந்து போகும் வாசனை அவளுக்கும் குமட்டலைக் கொடுக் கும்.

நான் சட்டென்று, "மண்ட்டோ சாஹிப், மருத்துவச்சி போல் நடந்து கொள்ளாதீர்கள்" என்றேன்.

அவர் சிரிக்கத் தொடங்கினார்.

"ஆங்! நான் சொல்வதில் என்ன தவறு இருக்கிறது? நீ புளிப்பு மற்றும் இனிப்பு பலகாரங்களுக்கு ஏங்குவாய். நான் இப்போதே கொஞ்சம் புளித்த மாங்காய் வாங்கி வருகிறேன்" இதைச் சொல்லிக் கொண்டே மறுபடியும் வீட்டை விட்டு வெளியேறி புளித்த மாங்காய்களைச்

சட்டை மடியில் மூட்டை கட்டிக் கொண்டு திரும்பி வந்தார். அதன் தோலைக் கவனமாகச் சீவிப் பொடிப் பொடியாய் அரிந்தார். அதில் கொஞ்சம் உப்பையும் மிள காய்த்தூளையும் தூவி என்னிடம் கொடுத்தார். என் முன்னே வழக்கம் போல் சம்மணம் கட்டி உட்கார்ந்து என்னை மிகக் கவனமாகப் பார்த்துக் கொண்டே எந்நே ரமும் புன்னகைத்துக் கொண்டேயிருந்தார்.

"சஃபியா... ஓ... சஃபியா..." அவர் திடீரென்று கத்தினார்.

சஃபியா தன் துப்பட்டா முனையால் தன் கண்களைத் துடைத்தபடியே வந்தாள்.

"என்ன விஷயம் மண்ட்டோ சாஹிப்? ஏன் இப்படிக் கத்துகிறீர்கள்?" என்றேன்.

"ஐயோ... பைத்தியக்காரப் பெண். அவள் கர்ப்பமுற்று இருக்கிறாள்" என்று சொல்லி அவளின் இடுப்பில் தன் கையை வைத்தார்.

"ச்சே! என்ன பேசுகிறாய்? இதனால்தான் எல்லோரும் உங்களை ஆபாச எழுத்தாளன் என்று சொல்லுகிறார் கள்" என்றேன்.

என்னுடைய இந்தக் கருத்து அவரை மிகவும் சந்தோ ஷப்படுத்த, மேலும் தடையின்றிக் கிழவி போல் அறி வுரை சொல்லத் தொடங்கினார்.

"ஆலிவ் எண்ணெய் கொண்டு வயிற்றை மஸாஜ் செய்தால் உனக்குச் சுருக்கங்கள் வராது".

"காலையில் வேறு எதுவும் சாப்பிடும் முன் ஆப்பிள் சாப்பிட்டால் உங்களுக்கு குமட்டல் வராது".

"தேங்காய் சாப்பிட்டால் நிச்சயமாகப் பிறக்கும் குழந்தை நல்ல நிறத்தோடு பிறப்பதோடு பிரசவமும் எளிதாக இருக்கும்".

"பிரசவத்தின்போது ஐஸ் சாப்பிடக் கூடாது. நான் சொல்வது சரிதானே சஃபியா?"

"தயவு செய்து நிறுத்துங்கள் மண்ட்டோ சாஹிப். இவையெல்லாம் என்ன பேச்சு". சஃபியா பார்ப்பதற்கு மிகவும் சங்கடத்தோடு காணப்பட்டாள்.

எனக்கு சீமா பிறந்த போது என் அருகில் சஃபியா இருந்தாள் - நடுங்கிக் கொண்டு. மண்ட்டோ குழந்தையைப் பார்த்தவுடன் தன் மகனின் இழப்பு அவரை வெகுவாகப் பாதிக்க நீண்ட நேரம், அவன் செய்த சிறு சிறு குறும்புகளைப்பற்றிச் சொல்லிக் கொண்டே இருந்தார். சஃபியாவின் இதயம் உருகியது.

ஒரு வருடத்திற்குள் மண்ட்டோவின் மூத்த மகள் பிறந்தாள். நான் பூனேவிலிருந்து திரும்பியவுடன் இந்தச் செய்தி கிடைக்க நான் நேராக அவர்களைப் பார்க்கச் சென்றேன். அவரும் சஃபியாவும் வேறு வீட்டிற்கு மாறி இருந்தார்கள். கொஞ்சம் அலைச்சலுக்குப் பிறகு அவர்களிடத்தைக் கண்டுபிடித்து, நான் உள்ளே நுழைந்த போது வரவேற்பறையில் கயிறு கட்டி அதில் குழந்தையின் ஈரத் துணியை உலர்த்திக் கொண்டிருந்தார். இந்தப் புது வீடு காற்றோட்டமில்லாமலும் சிறியதாகவும் இருந்தது. பழைய வீட்டிலிருந்த சொரசொரப்பான தரை குழந்தை தவழத் தொடங்கும் போது காயம் ஏற்படுத்தும் என்று மண்ட்டோ இங்கு வந்திருக்கிறார். அவள் தரையிலிருக்கும் தூசுகளை நக்கி விடுவாள் என்பதும் ஒரு காரணம். இங்கு 'நிகாத்' எந்தப் பயமுமில்லாமல் தரையில் விளையாடலாம். பிறந்த சில வாரங்களே ஆன 'நிகாத்' துக்காக இவையெல்லாம் செய்யப்பட்டன.

"எனக்குக் குழந்தைகளைப் பிடிக்கவே பிடிக்காது" என்று சொல்வார் மண்ட்டோ. "அவர்கள் பேராசை பிடித்தவர்கள். அதனாலேயே அவர்களிடம் பயம் கொள்ள

வேண்டியிருக்கிறது. எந்நேரமும் நான் அவளையே கவனித்துக் கொண்டிருக்க வேண்டும். வேறு எதுவும் செய்யும் எண்ணமே தோன்ற மாட்டேன் என்கிறது." குழந்தையின் பால் புட்டியைச் சுத்தம் செய்து கொண்டிருக்கும் போதே அவர்களைப் பற்றி தத்துவார்த்தமாக வியாக்கியானம் செய்து கொண்டேயிருப்பார். என் தங்கையின் குழந்தை மினுவை அவருக்கு மிகவும் பிடிக்கும். மணிக்கணக்காய் அவளுடன் பொம்மைகள் பற்றியும், சட்டிப்பானைகள் பற்றியும் செடிகள் பற்றியும் பேசிக் கொண்டிருப்பார். அவள் கேட்டாள் என்பதால் ஜன்னல் வழியாகக் கொம்பை விட்டுப் புளியங்காயை அடித்து அதைப் பொறுக்கி வரக் கீழே செல்வார். சீமாவை பாத்ரூம் அழைத்துச் சென்று அவள் சிறுநீர் கழிக்கும்போது "சீச்சீ" என்பார். குழந்தைகள் மீது கொண்ட அன்பால் அவர்கள் முன் நிலை குலைந்து காணப்படுவார்.

ஓர் இரவு நாங்கள் 'மலாட்'டில் வசித்துக் கொண்டிருந்த நாட்களில் பன்னிரண்டரை மணிக்கு யாரோ கதவைத் தட்டினார்கள். அது சஃபியா. பெருமூச்சு வாங்க நின்று கொண்டிருந்தாள். "என்ன விஷயம்?" என்று கேட்டேன். "இந்த நேரத்தில் நாம் மற்றொருவர் வீட்டுக்குப் போவது முறையல்ல என்று சொன்னேன். ஆனால் அவர் நான் சொல்வதை எப்போதும் கேட்பதேயில்லை" என்று பதில் தந்தாள். அவளுக்குப் பின்னால் மண்ட்டோ, நந்தாஜி மற்றும் குர்ஷீத் அன்வர் (பிரபலமான இசையமைப்பாளர். பிரிவினைக்குப் பின்பு பாகிஸ்தானைத் தேர்ந்தெடுத்தார்) நடந்து வந்தார்கள்.

"என்னைத் தடுக்க சஃபியா யார்?" மதுப்புட்டி மற்றும் கண்ணாடிக் குவளைகளைக் கையில் பிடித்தவாறு மூவரும் உள்ளே நுழைந்தார்கள்.

ஷாஹீத் எல்லோரையும் வரவேற்றார். அவர்கள் எல்லோரும் பசியோடிருந்ததாலும் எல்லா ஹோட்டல்களும் அடைக்கப்பட்டு விட்டதாலும் கடைசி இரயில் புறப்பட்டு விட்டதாலும் அவர்களே ஏதாவது சமைத்து உண்பது என்று தீர்மானிக்கப்பட்டது. "கொஞ்சம் மாவு மற்றும் பருப்பைக் கொடுங்கள், நாங்களே சமையலறையில் ஏதாவது சமைத்துக் கொள்கிறோம்" என்றார்கள்.

ஆண்கள் சமைப்பதில் சஃபியாவுக்கு உடன்பாடு இல்லை. ஆனால் அவர்கள் அவளுக்குச் செவி சாய்க்காமல் சமையலறைக்குள் நுழைந்தார்கள். மண்ட்டோ மாவைப் பிசையத் தொடங்க, நந்தாஜி அடுப்பைப் பற்ற வைக்க, குர்ஷீத் அன்வர் உருளைக்கிழங்குத் தோலை உரித்தார். அவர் தோலை உரிப்பதைக் காட்டிலும் அப்படியே தோலோடு சாப்பிட விரும்புவது போலிருந்தது. மதுப்புட்டியும் சமையலறைக்குள் கொண்டு வரப்பட்டது. அவர்கள் எல்லோரும் தரையில் வசதியாக அமர்ந்து கொண்டு பரோட்டா தயாரித்து அது சரியாக வெந்திருக்கிறதா இல்லையா என்பதைப் பற்றிக்கூட கவலை கொள்ளாமல் உண்ணத் துவங்கினார்கள். மண்ட்டோ பரோட்டா மாவை மிகவும் சிரத்தையோடு சிறப்பான முறையில் பிசைந்து கொடுத்தும் அடுத்த சில நிமிடங்களில் புதினாச் சட்னியும் தயாரித்தார். அவர்கள் மூவரையும் சமையலறையில் இருந்து வரவேற்பறைக்கு இழுத்து வரவில்லை என்றால் அங்கேயே உடம்பை நீட்டி உறங்கியிருப்பார்கள்.

இந்த வாழ்க்கை தான் - சுமாரான வருமானம், குடிப்பது, சிரிப்பது, கவலைகள் ஏதுமற்று எல்லாவற்றையும் விளையாட்டாகப் பார்க்கும் இந்த வாழ்க்கைதான் மண்ட்டோவிற்கு மிகவும் பிடித்திருந்தது.

ஏறக்குறைய அந்தச் சமயத்தில் லாகூர் அரசாங்கம் என்னையும் மண்ட்டோவையும் நீதிமன்றத்துக்கு இழுத் தது. மண்ட்டோவின் நீண்ட நாள் ஆசை நிறைவேறியது. நாங்கள் லாகூரில் நிறைய வேடிக்கைகளை அனுபவித் தோம். பல விருந்துகளுக்கு நாங்கள் அழைக்கப்பட்ட தால் லாகூரைச் சுற்றிப் பார்க்கும் சந்தர்ப்பம் கிடைத்தது. நாங்கள் சரிகைச் செருப்பு வாங்க ஒன்றாகச் சென் றோம். மண்ட்டோவின் பாதங்கள் மிக மென்மையான தாகவும் நல்ல நிறத்தில் தாமரைப்பூப் போல் இருந் தன. அவரின் பாதங்களுக்கு அந்தச் செருப்புகள் மிக அழகாக இருந்தன.

"என் பாதங்கள் பார்க்கச் சகிக்காது. நான் இத்தனை அழகான செருப்புகளை வாங்கப் போவதில்லை" என் றேன்.

"என் பாதங்கள் பெண்ணின் பாதங்களைப் போலிருக் கிறது. எனக்கு அசிங்கமாக இருக்கிறது".

ஆனால் நாங்கள் இருவரும் பல ஜோடி செருப்புகளை வாங்கினோம்.

"உங்களுடைய பாதங்கள் அழகாக இருக்கின்றன" என்றேன்.

"அவை படுமோசமானவை. நாம் பாதங்களை மாற்றிக் கொள்வோம்".

"நாம் எதையாவது மாற்றிக்கொள்ள வேண்டும் என் றால், நம்முடைய தலைகளை மாற்றிக் கொள்ளலாம்" என்று யோசனை சொன்னேன்.

"கடவுள் புண்ணியத்தில் எனக்கு எந்த ஆட்சேப ணையும் கிடையாது" என்றார் மண்ட்டோ மிகவும் தாரா ளமாக.

நாங்கள் காதல் விவகாரம் பற்றி கணக்கிலடங்கா முறைகள் விவாதித்தாலும் திருப்தி தரும் முடிவுக்கு எங்களால் வரமுடியவில்லை. "காதலா? அப்படின்னா?" அவர் எப்போதும் சொல்வதுண்டு. "நான் ஜரிகைச் செருப்புகளைக் காதலிக்கிறேன். ரஃபீக் தன் ஐந்தாவது மனைவியைக் காதலிக்கிறான்".

"நான் சொல்வது ஒரு வாலிபன், ஒரு இளம் பெண் ணைத் தீவிரமாக ஆராதனை செய்வது".

"ஆமாம்! இப்போது புரிகிறது" என்று யோசித்தபடியே சொன்ன மண்ட்டோ தெளிவற்ற தன் கடந்த காலத் தைத் துருவி எடுத்துத் தனக்குள் பேசிக் கொள்வது போல முணுமுணுத்தார்.

"காஷ்மீரில் ஆடு மேய்க்கும் பெண்ணொருத்தி இருந் தாள்".

"அப்புறம்?" கதை கேட்பது போலக் கேட்டு அவரை மேலும் தூண்டிவிட்டேன்.

"அப்புறம், ஒண்ணுமில்ல". உடனடியாகத் தன்னைக் காத்துக் கொள்ளும் நிலைக்குச் சென்றார்.

"என்னிடம் எவ்வளவோ அசிங்கமான விஷயங்க ளைப் பேசி விட்டு இன்று ரொம்பக் கூச்சமுள்ளவன் போல் ஏன் நடிக்கிறாய்?"

"யார் கூச்சமுள்ளவன்?" என்றார் மண்ட்டோ நாணத் தோடு.

தொடர்ந்து குத்தி எடுத்தபின், தன் கதையை வெளியே விட்டார். "ஆடுகளை விரட்ட அவள் பிடித் திருந்த கொம்பை உயர்த்தியபோது வெள்ளை வெளே ரென்றிருந்த அவளின் முழங்கை வெளிப்படும். நான் உடல் நலம் சரியில்லாமல் இருந்தேன். ஒவ்வொரு

நாளும் மலையடிவாரத்தில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் ஜமக்காளம் எடுத்துப் போய் படுத்து மூச்சைப் பிடித்து அவள் கையை உயர்த்தும் தருணத்திற்காகக் காத்தி ருப்பேன். அவள் அணிந்திருந்த ஆடை நழுவ அவளின் முழங்கையைக் கண நேரம் என்னால் பார்க்க முடியும்."

"அவளின் முழங்கையா?" நான் ஆச்சரியத்தோடு கேட்டேன்.

"ஆமாம். அவள் உடம்பின் வேறு எந்தப் பகுதியை யும் நான் பார்த்ததில்லை. அவள் எப்போதும் மிக வும் தளர்ந்த உடையினையே அணிந்திருந்ததால் அவ ளின் உடல் வளைவுகள் எப்போதும் வெளிப்பட்டதே யில்லை. ஆனால் அவளின் ஒவ்வொரு அசைவிலும் அவளின் முழங்கையைப் பார்க்க என் கண்கள் பாயும்."

"பிறகு என்ன நடந்தது".

"பிறகு ஒரு நாள் ஜமக்காளத்தில் நான் படுத்திருந்த போது அவள் வந்து எனக்குச் சற்றுத் தள்ளி அமர்ந் தாள். அவள் சட்டையின் முன்புறத்தில் எதையோ மறைத்து வைத்திருந்தாள். அவள் வைத்திருந்ததைக் காண்பிக்கச் சொல்லிக் கேட்டேன். அவளின் கன்னங் கள் வெட்கத்தால் சிவந்தன. 'ஒன்றுமில்லை' என்றாள். அவள் வைத்திருப்பதைக் காட்ட வேண்டும் என்று வற்புறுத்தினேன். 'நீ என்னிடம் காட்டும் வரை உன் னைப் போகவிட மாட்டேன்' என்றேன். அவள் அழும் நிலைக்கு வந்தாள். நான் விட்டுக் கொடுக்க மறுத்தேன். நீண்ட போராட்டத்துக்குப் பிறகு அவள் தன் முகத்தை வெட்கத்தோடு தன் முட்டிகளுக்கிடையே மறைத்துக் கொண்டு கையை என்னை நோக்கி நீட்டி, மூடியிருந்த உள்ளங்கையை விரித்துக் காட்டினாள்".

"அவள் உள்ளங்கைகளில் என்ன இருந்தது?" என்று பொறுமையின்றிக் கேட்டேன்.

"ஒரு கற்கண்டு. அவளின் சிவந்த உள்ளங்கையில் ஐஸ்கட்டி போல் மங்கலாக அமர்ந்திருந்தது."

"பிறகு நீ என்ன செய்தாய்?".

"நான் அதையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந் தேன்." அவர் ஏதோ யோசனையில் மூழ்கினார்.

"அதன் பிறகு?"

"அப்புறம் அவள் ஓடிப் போனாள். ஆனால் சில கணங் கள் கழித்து திரும்பி வந்து அந்தக் கற்கண்டை என் மடி யில் போட்டு விட்டு என் பார்வையிலிருந்து மறைந்தாள். ரொம்பக் காலம் அந்தக் கற்கண்டு என் சட்டைப்பையி லேயே இருந்தது. பிறகு அதை என் மேசை டிராயரில் போட்டேன். சில நாட்களில் எறும்புகள் அதைத் தின்று தீர்த்தன."

"அந்தப் பெண்?"

"எந்தப் பெண்?" அவர் அதிர்ச்சியுற்றார்.

"உன்னிடம் கற்கண்டைக் கொடுத்த அந்தப் பெண்"

"நான் மறுபடியும் அவளைப் பார்க்கவில்லை."

"உன் காதல் எவ்வளவு சுவாரஸ்யமற்றது" என் றேன் ஏமாற்றத்தோடும், சலிப்போடும். "நான் உன்னிட மிருந்து ஏதாவது பிரம்மாண்டமான உணர்வை எதிர் பார்த்தேன்".

"இல்லவே இல்லை, அது சுவாரஸ்யமானதுதான்" என்றார், சண்டை போடுவதற்குத் தயாராக இருப்பது போல்.

"குப்பை. மூன்றாந்தரம். மந்தமான உணர்வு. ஒரு கற் கண்டை எடுத்துக் கொண்டு வந்திருக்கிறாய். இதெல் லாம் ஒரு சாதனையா?"

"சரி, நான் என்ன செய்திருக்க வேண்டும்? அவளோடு படுத்து, அவளிடம் ஒரு தேவடியா மகனைக் கொடுத்து விட்டு அவளைப் பற்றி நினைக்கும்போதெல்லாம் என் ஆண்மையில் பெருமை கொள்ள வேண்டும் என்கி றாயா?" அவர் சலிப்புற்றார்.

"நீ சொல்வது சரிதான். கற்கண்டை உடனடியாகக் கடித்து மென்று விழுங்கக் கூடாது, அதை நிதானமாய்ச் சப்ப வேண்டும்."

இந்த மண்ட்டோதான் மூளை முழுக்க அழுக்கைக் கொண்டு, இழிவான கதைகளை எழுதும் எழுத்தாளர்!.

இவர்தான் ப்பூ- வை எழுதியவர்.

இவர்தான் தண்டாகோஷ் - ஐ எழுதியவர்.

'மிர்ஸா காலீப்' திரைப்படத்தில் 'சந்தாவின்பேகம்' தான் மிர்ஸா காலீப்பின் காதலரா என்பது விவாதத்திற் குரியது. ஆனால் மண்ட்டோ தன் சிந்தனையில் ஒரு பெண்ணை வைத்திருந்தார். அவளைத் தொடக் கூட விருப்பம் கொள்ளவில்லை. அவளின் இடையை ஒரு நொடிப் பொழுது பார்க்கத் தன் வாழ்க்கை முழுவதும் காத்திருக்கத் தயாராக இருப்பவர். மண்ட்டோவிடம் பல நேரங்களில், பல கதைகளில் இந்த முரண்பாடுதான் மேலுக்கு வருகிறது. ஒரு பக்கம் அவர் நயாகானூன் (புதுச்சட்டம்) எழுதுகிறார். மறுபக்கம் 'ப்பூ' வை எழுது கிறார். இந்த இரண்டு விதமான கதைகளை எழுதும் போதும் தன்னை அதில் மூழ்கடித்துக் கொள்கிறார். மக் கள் இழிவானதைப் படைத்தவரை நினைவில் கொண் டிருக்கிறார்கள். ஆனால் அக்கதைகளை உருவாக்கிய படைப்பாளியை மறந்து விடுகிறார்கள். இது திட்டமிட் டதா அல்லது வசதி கருதி செய்யப்படுகிறதா? எல்லாம் ஒன்றுதான்.

நாட்டில் மதக்கலவரம் வெடிக்கத் தொடங்கியது. பிரி வினைக்குப் பிறகு மக்கள் இரண்டு பக்கங்களிலும் மற் றவர்களின் பெரிய வீடுகளைத் தங்களுடையதாக ஆக் கிக் கொண்டார்கள். அந்தச் சமயத்தில் மண்ட்டோ ஃபி லிமிஸ்தானில் ஏறக்குறைய நிரந்தர ஊழியராக இருந் தார். அவர் சந்தோஷமாக இருப்பது போல் காணப் பட்டார். அவருக்கு வேண்டிய அங்கீகாரம் கிடைத்தது. அதுவேதான் அவர் வாழ்கையின் தூண். அவரின் படம் 'ஆத் தின்' தோல்வியடைந்த பிறகு ஏதோ காரணத்திற் காக அவர் அசோக் குமாருடன் பாம்பே டாக்கீஸுக்குச் சென்றார். அவருக்கு அசோக் குமாரை அதிகம் பிடிக் கும். முகர்ஜி (ஹிரிஷிகேஷ்) என்ன சொன்னாரென்று யாருக்குத் தெரியும்? ஆனால் மண்ட்டோ அவர் மீது மிக வும் கோபம் கொண்டார்.

"முகர்ஜி ஒரு முட்டாள், அயோக்கியன்" என்றார் கசந்த உணர்வோடு. "அசோக் திரைக்கதைத் துறையில் ஒரு வருஷத்திற்கு வேலை வாங்கித் தந்து உதவி செய்துள் ளார்" என்று என்னிடம் சொன்னார். "நான் இப்போது மிகவும் சந்தோஷமாக இருக்கிறேன். நீயும் நானும் சேர்ந்து ஒன்றாய் கதை உருவாக்கத்தில் வேலை செய் வோம். அது பெரும் பரபரப்பை ஏற்படுத்தும். கதை நம் முடையதாக இருக்கும். அசோக்குமார் அதன் கதாநாய கனாக இருப்பார். பிறகு நீ பாரேன்" என்றார்.

மண்ட்டோவின் ஒரு கதை ஏற்றுக் கொள்ளப்படுவ தாய் இருந்தது. அசோக்கிற்கு அது பிடித்திருந்தது. முன் னதாய் அசோக், மஜ்பூரின் கதைக்குத் தன் விருப்பத் தைத் தெரிவித்திருந்தார். பிறகு அதில் தன் ஈடுபாட்டை இழந்து மண்ட்டோவின் கதைக்குத் தன் ஏற்பைத் தெரிவித்தார். நான் அவர்களோடு சேர்ந்த பிறகு என் கதை (ஸித்தி) மீது விருப்பம் காண்பிக்கத் தொடங்கி னார். மண்ட்டோ அதைப் பற்றிக் கவலைப்படவில்லை.

பிறகு அசோக், மண்ட்டோ வின் கதையில் என்னையும், என் கதையில் மண்ட்டோவையும் உழைக்கச் சொன் னார். இதன் விளைவாக நானும் மண்ட்டோவும் ஒரு வர் மற்றொருவரை ஏற்றுக் கொள்ள மறுத்து தொடர்ந்து விவாதித்துக்கொண்டிருந்தோம். சிறிது காலத்தில் கமல் அம்ரேகி 'மகால்' கதையுடன் வந்ததும், என் கதை யும் மண்ட்டோவின் கதையும் ஒதுக்கி வைக்கப்பட்டது. இது கௌரவப் பிரச்சினையாக மட்டுமே இருக்குமா னால் சரி, ஆனால் என்ன நடந்ததென்றால், எங்களின் கதை உபயோகப்படுத்தப்படவில்லை என்றால் எங்க ளுக்கு செய்வதற்கு ஏதுமில்லை. நாங்கள் ஒப்பந்தத் தில் கையெழுத் திட்டு இருந்ததால் எங்கள் ஊதியத் தைப் பெற்றுக் கொண்டு ஓரமாக அமைதியாக உட்காரச் சொல்வது போலிருந்தது. எங்கள் கதைகளுக்கு வாய்ப் பில்லை என்பது தெள்ளத் தெளிவாயிற்று.

இதன் விளைவாக நாங்கள் இருவரும் - ஷாஹீத்தும், நானும், என் கதை 'ஸித்தி' இரண்டாம் நிலைக்குத் தள் ளப்பட, அசோக்குமாரின் பங்கேற்பு இல்லாமல் படமெ டுக்க முடிவெடுத்தோம்.

ஆனால், மண்ட்டோவின் கதை மொத்தமாக நிராக ரிக்கப்பட்டது. மண்ட்டோ தன் அறையிலமர்ந்து நாள் முழுக்கத் கதையில் மாற்றங்கள் செய்து கொண்டே இருந்தார். முடிவைத் தொடக்கமாகவும், தொடக் கத்தை முடிவாகவும் மாற்றுவதோடு சில சமயங்களில் நடுவிலிருந்து தொடங்கி தொடக்கத்தை முடிவாக்க வும், நடுப் பகுதியை முடிவாக்குவது என்றும் மாற் றிக் கொண்டே இருந்தார். நூற்றுக்கணக்கான அறுவை சிகிச்சைகள் செய்யப்பட்ட பிறகும் அசோக்குமார் கதையை ஏற்றுக் கொள்ளவே இல்லை.

இருந்தாலும், மண்ட்டோ நம்பிக்கை இழக்கவில்லை, "உனக்கு கங்குலியைத் தெரியாது. கண்டிப்பாக அவர் என் கதையை உபயோகப்படுத்துவார்" என்றார்.

"உங்கள் கதையில் அவருக்குக் காதல் நாயகன் பாத்திரம் இல்லை" என்றேன் அவரிடம். "அவர் தந்தை வேடம் ஏற்க வேண்டும். அதை அவர் எப்போதும் ஏற்க மாட்டார்." நாங்கள் வெற்று வாதத்தில் மறுபடியும் ஈடுபட்டோம். இத்தகைய சூழ்நிலையில் இலக்கியத்தனமான அழகிய சொற்களைக் காட்டிலும் எங்கள் தோலைப் பாதுகாத்துக் கொள்வதே பிரதானமாக இருந்தது. பிறகு நாங்கள் பயந்தது நடந்தது. 'ஸித்தி' மற்றும் 'மகால்' ஏற்றுக் கொள்ளப்பட மண்டோவின் கதை ஒதுக்கித் தள்ளப்பட்டது. மண்ட்டோ இதை எதிர்பார்க்கவில்லை. அவமானப் படுத்தப்பட்டதாக உணர்ந்தார். அவரால் எதை வேண்டுமென்றாலும் ஏற்றுக் கொள்ள முடியும். ஆனால் நிராகரிப்பை மட்டும் ஏற்றுக் கொள்ள முடியாது. அதே காலத்தில் நாட்டிலும் நிலைமை மேலும் மோசமாகிக் கொண்டிருந்தது. மண்ட்டோவின் மனைவியும், குழந்தைகளும் அவரைப் பாகிஸ்தான் போக வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். மண்ட்டோ "பாகிஸ்தானில் நமக்கு நல்ல பிரகாசமான எதிர்காலம் இருக்கிறது. ஓடிப்போனவர்களின் பங்களாக்கள் அங்குள்ள மக்களுக்குக் கொடுக்கப்படும். நினைப்பதைச் செய்ய நாம் நல்ல நிலையிலிருப்போம். நாம் மிக வேகமாக முன்னேறுவோம்" என்று என்னையும் உடனழைத்தார். என்னுடைய பதில் அவரை மிகவும் ஏமாற்றம் கொள்ள வைத்தது. நாங்கள் பல சண்டைகளிலும் விவாதங்களிலும் ஈடுபட்டாலும் எந்த ஒரு விஷயத்தைப் பற்றியோ, கொள்கை பற்றியோ தீவிரமாகக் கலந்துரையாடவில்லை.

அப்போதுதான் நான் உணர்ந்தேன். மண்ட்டோ எவ்வளவு பெரிய கோழை என்று. என்ன விலை கொடுத்தும் தன் தோலைப் பாதுகாத்துக் கொள்ளத் தயாராக இருந்தார். மற்றவர்கள் உழைத்துப் பெற்றதை விட்டு விட்டு ஓடிப்போனவுடன் அதைத் தனதாக்கிக் கொள்ள விரும்பினார். அவர் மீது ஒருவித வெறுப்புணர்வு கொண்டேன்.

பிறகு ஒரு நாள் எங்களிடம் சொல்லிக் கொள்ளாமலும், சந்திக்காமலும் அவர் பாகிஸ்தான் சென்றார்.

நான் அவமானப்படுத்தப்பட்டதாக உணர்ந்தேன். பிறகு அவர் சந்தோஷமாக இருப்பதாக எழுதிய கடிதம் கிடைக்கப் பெற்றேன். மிக அழகான, விசாலமான விலையுயர்ந்த அழகான பொருட்களைக் கொண்ட வீட்டையும் அவர் பெற்றிருந்தார். என்னை பாகிஸ்தான் வருமாறு மறுபடி கேட்டுக்கொண்டார். நாங்கள் 'ஸித்தி'யை முடித்துவிட்டு அர்ஸூவைத் தொடங்கியிருந்தோம். கடினமான காலங்கள் வந்து போயின. அதன் பிறகு இரண்டு முறை அவர் எழுதியிருந்தார். நாங்கள் அங்கு வர வேண்டுமென்றார். ஒரு திரையரங்கு எங்கள் பெயருக்கு ஒதுக்கப்படுவதற்கான வாய்ப்பிருக்கிறது என்று சொன்னார். நான் மிகவும் நெகிழ்ந்து போனேன். அவருக்கு என் மீதிருந்த அன்பில் நான் எப்போதும் நம்பிக்கை வைத்திருந்தாலும் இப்போது கொஞ்சமும் சந்தேகத்திற்கு இடமில்லாமல் போனது. ஆனால் நான் அந்தக் கடிதங்களைக் கிழித்துப் போட்டேன். என் கொள்கையை அவர் மதிக்காததால், அவர் மீது எரிச்சல் கொண்டேன். அவர் போவதை நான் தடுக்கவில்லை. பிறகு ஏன் அவர் தேர்ந்தெடுத்த பாதையில் என்னை இழுத்துச் செல்ல முயலுகிறார்?

பிறகு மண்ட்டோ சந்தோஷமாக இருப்பதாகக் கேள்விப்பட்டேன்.

முதல் வீடு அவரிடமிருந்து எடுத்துக் கொள்ளப்பட்டது. ஆனால் இரண்டாவது வீடும் நன்றாகத்தான் இருந்தது.

வருடங்கள் கழிந்தன.

மற்றொரு பெண் பிறந்தாள். மண்ட்டோவிடம் இருந்து ஒரு கடிதம் வந்தது. "நான் ஹிந்துஸ்தான் வருவதற்கு ஏதாவது ஏற்பாடு செய்." பிறகு தான் மண்ட்டோ மீது வழக்குத் தொடரப்பட்டு அவர் சிறையில் அடைக்கப்பட்டதாகக் கேள்விப்பட்டோம். யாரும் எதுவும் செய்யவில்லை. எவரும் எந்த எதிர்ப்பும் தெரிவிக்கவில்லை. உண்மையைச் சொல்வதென்றால் அவரைச் சிறையில் அடைத்ததே சரியென்றும் அப்போதுதான் அவர் தன்னைத் திருத்திக் கொள்வாரென்றும் பலரும் நினைத்தது போலவே தோன்றியது. எந்தக் கூட்டங்களும் இல்லை. எந்த ஆர்ப்பாட்டங்களும் இல்லை. எந்தத் தீர்மானங்களும் இயற்றப்படவில்லை.

மண்ட்டோவிற்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்றும், அவரின் நண்பர்களும் தெரிந்தவர்களும் அவரை மனநலக் காப்பகத்திற்கு அழைத்துச் சென்று அங்கு விட்டு வந்தார்கள் என்றும் கேட்டறிந்தோம்.

ஆனால் ஒரு நாள் மண்ட்டோவிடமிருந்து கடிதம் வரப்பெற்றோம். அவர் தன் உணர்வுகளை மிகச் சரியான நிலையில் வைத்திருப்பதாகப்பட்டது. தான் இப்போது குணமாகிவிட்டதாகவும், முகர்ஜியிடம் பேசி பம்பாய் வர ஏதேனும் செய்தால் மிக நன்றாக இருக்கும் என்றும் எழுதியிருந்தார். அதன் பிறகு நீண்ட காலங்களுக்கு அவரிடமிருந்து எந்தச் செய்தியும் இல்லை. நான் எழுதிய கடிதத்திற்குப் பதிலும் இல்லை. பிறகு மறுபடியும் அவர் மனநல மருத்துவமனையில் இருப்பதாகச் செய்தி வந்தது. இப்போது மண்ட்டோ பற்றி எந்தச் செய்தியை

யும் பெற்றுக் கொள்ள நாங்கள் அச்சம் கொண்டோம். கேட்பதற்கு எங்களுக்குத் துணிச்சல் இல்லை. அவரின் அடுத்த அடி அவரை எங்கே அழைத்துச் செல்லும் என்பது கடவுளுக்குத் தான் தெரியும். ஆனால் மனநல மருத்துவமனையை நோக்கி நடந்த பாதங்கள் எப்போதும் அங்கிருந்து திரும்பியது கிடையாது. பாகிஸ்தானிலிருந்து வருபவர்கள் மண்ட்டோ பற்றிக் கொண்டு வரும் துயரமான செய்திகள் எங்களை மிகவும் சங்கடப்படுத்தியதோடு அமைதி குலைய வைத்தது. அவர் அளவுக்கதிகமாகக் குடிக்கத் தொடங்கியிருக்கிறார். அவரின் நண்பர்கள், அறிமுகம் ஆகாதவர்கள் என்று எல்லோரிடமும் பணம் கேட்கத் தொடங்கியிருக்கிறார். பத்திரிகை ஆசிரியர்கள் தங்கள் கண்காணிப்பில் அவரை எழுத வைத்தார்கள். இல்லையென்றால் முன் பணமாகப் பெற்றதைக் குடிப்பதில் செலவு செய்து விட்டு வேலையை முடிப்பதில்லை.

மண்ட்டோவின் கடைசிக் கடிதத்தில் அவரைப் பற்றி நான் ஒரு கட்டுரை எழுத வேண்டுமென்று கேட்டுக் கொண்டபோது, சபிக்கப்பட்ட என் நாக்கிலிருந்து திடீரென்று இந்த வார்த்தைகள் வெளியேறியது: "அவரின் மரணத்திற்குப் பிறகே நான் எழுதுவேன்."

இன்று நான் இதை மண்ட்டோவின் மரணத்திற்குப் பிறகு எழுதிக் கொண்டிருக்கிறேன். ஆனால் இறந்தது மண்ட்டோ மட்டுமல்ல, எனக்கும் மண்ட்டோவிற்கும் இடையிலுள்ள எவ்வளவோ விஷயங்கள் நீண்ட காலங்களுக்கு முன்பே இறந்து விட்டன. இன்று வலி மட்டுமே மிஞ்சியிருக்கிறது. இந்த வலி என்ன என்று எனக்குத் தெரியவில்லை. அவர் இறந்து விட்டதாலும் நான் உயிரோடு இருப்பதாலும் என்னுள் குற்றவுணர்வு மேலோங்கியிருக்கிறதா? ஏதோ பெருங்கடன் பட்டது போல் என் இதயத்தில் ஏன் இவ்வளவு பாரம்? மண்ட்

டோவிற்கு நான் திருப்பிக் கொடுக்க வேண்டியது எது வுமே என் நினைவிலில்லை. அந்தக் கடன்தான் என்ன? என்னை அவர் 'பேஹன்' என்று அழைத்ததா? ஆனால் சகோதரர்கள் இறப்பதை சகோதரிகள் ஏதும் செய்ய முடியாமல் பார்த்துக் கொண்டு தானே இருக்கிறார்கள். இறந்து போகிறவர்கள் காயத்தை உருவாக்குகிறார்கள். அந்தக் காயம் வலியைக் கொடுப்பதில்லை. இரத்தம் கசிவதில்லை என்றாலும் எக்காலத்துக்கும் அமைதி யாய்ப் புகைந்து கொண்டே இருக்கிறது.

இன்று சஃபியா இல்லாத வெறுமையை உணர்கிறேன். நாங்கள் இருவரும் எங்கள் தலைகளை ஒன்றாகச் சேர்த்து அடோல்ஃபி சேம்பரில் இத்தனை வருடங்களா கப் பேசியது போல் பேச வேண்டும் என்று நினைக்கி றேன். அப்போது எங்கள் உரையாடல் எங்களின் முதலி ரவு பற்றியும் முதல் குழந்தை பற்றியும் இருந்தது. ஆனால் இப்போது அது மரணம் பற்றியது. அதனாலேயே என் னுள் தயக்கம் ஏற்படுகிறது. என் பேனா வறண்டு போகி றது. கடைசி சில வருடங்களில் அவர் எவ்வளவு கஷ்டங் களை அனுபவித்தார் என்று யாருக்குத் தெரியும்? நான் யாரிடம் கேட்பேன்? பொங்கி வழியும் உணர்வுகளைக் கொண்ட மண்ட்டோவை, இந்த உலகம் முழுக்க நிரா கரித்தபோதும், அவர் மீதான உன் அன்பு, மலைபோல் திடமானதாய் இருந்ததா? அல்லது அசதியினால் தளர்ச் சியுற்றதா? இந்தப் பன்னிரண்டு பதிமூன்று வருடக் குமு றல்கள், உன்னை ஆட்டங்காணச் செய்து கீழே தள்ளி யதா அல்லது இன்னும் நீ உன் மண்ட்டோ சாஹிப்பின் சஃபியாதானா? சுற்றியிருந்தவர்களும், கண்ணியமான குடிமக்களும், உன் உறவினர்களும் அவரின் தவறான நடத்தையில் தங்கள் அதிருப்தியைத் தெரிவித்த போது நீ என்ன செய்தாய்? உன்னைச் சுற்றிலும் பொறுப்பற்றும்,

சிந்தனையற்றும் சூழ்ந்திருந்த நஞ்சு கலந்த காற்றை எப் படி எதிர்கொண்டாய்?

நீ மூச்சுத் திணறியிருக்க வேண்டும். அவரின் கடைசி மூச்சு உன் மடியில் விடப்பட்டதா அல்லது எல்லா உற வினர்களும் சூழ்ந்திருந்தும் அவரின் மரணம் தனித்து நிகழ்ந்ததா?

அவரின் மகள்கள் அவரைப் பைத்தியக்காரன் என் றும், ஆதரவற்றவன் என்றும், குடிகாரன் என்றும் கரு தினார்களா? உனக்கு அவர் அவமானத்தையும் வறு மையையும் தவிர வேறு ஏதேனும் கொடுத்தாரா? அவ ரின் தனிப்பட்ட வாழ்க்கை, அவரின் எழுத்துக்களில் கொஞ்சமும் ஏன் பிரதிபலிக்கவில்லை என்று எனக்குத் தெரியவில்லை. தன்னுடைய பிரச்சனைகளை தன் பல வீனங்களுக்காக ஒதுக்கித் தள்ளினார். அதைப் பெரிய குறையாக மறைத்தார். ஒரு நொடியில் எந்தச் சிரமமும் இல்லாமல் லட்சக்கணக்கில் சம்பாதிக்க முடியும் என்று தீர்மானமாய் இருந்தார். அதனாலேயே தன் வறுமையை அவரால் நம்ப முடியாமல் போனது. அவரின் பேனா எந்த உதவியுமின்றிச் சிரமப்பட்டு நகர்ந்தது.

நீ எழுத்தாளர்கள் என்றாலே நோயுற்ற உணர்வைக் கொள்கிறாயா? சொல்லு! அவர்கள் தங்களையும் தங் களை நேசிப்பவர்களையும் சகதிக்கு இழுத்துச் செல்கி றார்கள். பிறகு ஒரு நாள் தனியே விட்டு விட்டு அவர் கள் போய் விடுவார்கள். ஆனால் என் சகோதரியே இத் தகையதை எதிர்கொள்ள வேண்டியது எழுத்தாளர்கள் மட்டுமல்ல, நம் நாட்டில் கோடிக்கணக்கான மக்கள் இத்தகைய தோல்விகளையும், அதிர்ஷ்டமற்ற வாழ்க் கையையும் எதிர்கொள்ள வேண்டியுள்ளது. இவர்கள் எழுத்தாளர்களாகவும் இருக்கலாம். குமாஸ்தாவாகவும் இருக்கலாம். இது தான் அவர்களின் வாழ்க்கை. இதே

விதியைத்தான் அவர்களும் அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள். மிகவும் மென்மையான உணர்வு கொண்டவர்கள் பைத்தியம் பிடித்துப் போகிறார்கள். சற்றுத் திடமானவர்கள் எக்காலத்திற்கும் அமைதியாய்க் கண்ணீர் விட்டுக் கிடக்கிறார்கள்.

மண்ட்டோவின் அகால மரணத்தில் எனக்கும் பங்கிருக்கிறது என்று என் இதயம் ஏன் இப்படிக் கதறுகிறது என்று எனக்குத் தெரியவில்லை. எனது முன் சட்டையில் அவரின் இரத்தம் சிதறிக் கிடக்கிறது. அதை என் இதயம் மட்டுமே பார்க்க முடியும். அவரை மரணம் கொள்ள வைத்த இந்த உலகம்தான், என்னுடைய உலகமும். இன்று அவரை மரணங்கொள்ள வைத்தது - நாளை என்னையும் அதே போல் மரணம் கொள்ள அனுமதிக்கும். பிறகு மக்கள் துக்கம் கொண்டாடுவார்கள். என் குழந்தைகளின் எதிர்காலம் அவர்களின் நெஞ்சில் பாரமாய்க் கனக்கும். கூட்டங்கள் நடத்தப்பட்டு நிதி திரட்டப்படும். ஆனால் நேரமின்மை காரணமாக ஒருவரால் கூட அந்தக் கூட்டத்திற்கு வர முடியாமல் போகும். காலம் நகர, அவர்கள் நெஞ்சில் உள்ள பாரம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறையத் தொடங்கும். பிறகு மக்கள் எல்லாவற்றையும் மறந்து போவார்கள்.

***

## மண்ட்டோ

## சாதத் ஹசன் மண்ட்டோ

இது வரை மண்ட்டோவைப் பற்றி நிறையவே எழுதப் பட்டிருக்கின்றன. பேசப்பட்டிருக்கின்றன. அதில் எதிர்த் துப் பல, ஆதரித்துச் சில. இந்த எழுத்துக்களை ஆழ்ந்து படிக்கும் ஒருவனால் கூட ஒரு தீர்மானமான முடிவுக்கு வருவது மிகவும் சிரமமாக இருக்கும். நான் இந்தக் கட் டுரையை எழுத அமர்ந்திருக்கும் போது தான், மண்ட் டோவைப் பற்றி என்னுடைய எண்ணங்களை வெளிப் படுத்துவதில் உள்ள சிரமத்தை உணர்கிறேன். ஒரு விதத்தில் எனக்கு அது எளிதாக இருந்திருக்க வேண் டும். ஏனெனில் நான் அவனோடு மிக நெருக்கத்தில் இருந்து கொண்டிருக்கிறேன். உண்மையைச் சொல்லு வது எனில் நான்தான் 'அவன்'.

இதுவரை அந்த மனிதனைப் பற்றி எழுதியிருப்பதில் எனக்கு எந்த ஆட்சேபணையும் கிடையாது. ஆனா லும் இந்த எழுத்துக்களில் வெளிப்பட்டிருக்கும் பார்வை உண்மையிலிருந்து பல மைல் தூரம் விலகியே நிற்கி றது என்று நினைக்கிறேன். சிலரால் அவன் அரக்கன் என்று அழைக்கப்பட்டிருக்கிறான், மற்றவர்கள் அவனை வழுக்கை விழுந்த தேவதூதன் என்று சொல்கிறார் கள். ஒரு நிமிஷம் இருங்கள். நாம் பேசிக்கொண்டி ருப்பதை அவன் ஒட்டுக்கேட்கிறானா என்று பார்க்கி றேன். இல்லை... பிரச்சனையேதும் இல்லை. இப்போது

எனக்கு நினைவுக்கு வருகிறது. இந்த நேரத்தில் அவன் மது அருந்திக் கொண்டிருப்பான். மாலை ஆறு மணிக் குப் பிறகு மோசமாகக் குடிப்பதை அவன் வழக்கமாகக் கொண்டிருக்கிறான்.

நாங்கள் இருவரும் ஒன்றாகப் பிறந்தோம், ஒன்றா கவே மரணம் கொள்வோம் என்று நினைக்கிறேன். ஆனாலும் சாதத் ஹசன் இறந்து போய் மண்ட்டோ தொடர்ந்து உயிர் வாழ்வதற்குச் சாத்தியங்களும் இருக் கின்றன. இந்த எண்ணம் என்னை அடிக்கடி கவலை கொள்ள வைக்கிறது. அதனாலேயே அவனைச் சந் தோசமாக வைத்திருக்க என்னால் முடிந்ததை எல்லாம் செய்து கொண்டிருக்கிறேன். ஒரு வேளை அவன் உயி ரோடு இருந்து, நான் இறந்து போனால் ஒரு முட்டை அதன் வெள்ளைப் பகுதி இல்லாமல், மஞ்சள் கருவை மட்டுமே கொண்டிருப்பது போலிருக்கும்.

விஷயத்தை மேலும் சிக்கலாக்காமல் உங்களிடம் வெளிப்படையாகச் சொல்கிறேன். இதுவரை மண்ட் டோவைப் போல் ஒரு குறுக்குப் புத்திக்காரனை நான் பார்த்ததில்லை. அதற்கு முழு காரணமும் அவன் தான். திரிகோண வடிவத்தை அவன் அறிந்திருந்தா லும், அவன் இன்னும் மும்மையோடு இணைந்து விட வில்லை என்று எனக்குத் தெரியும். மிகவும் கூர்ந்து படிக்கும் வாசகனால் மட்டுமே என்னுடைய இந்தக் குறிப்பைப் புரிந்து கொள்ள முடியும்.

பிறந்தது முதல் எனக்கு அவனைத் தெரியும். நாங் கள் இருவரும் 1912, மே 11-ல், ஒரே நேரத்தில் பிறந் தோம். ஆனால் அவன் எப்போதும் தன்னை ஆமை போலவே உருமாற்றிக்கொண்டு, தன்னுடைய தலை யையும் கழுத்தையும் ஓட்டுக்குள் மறைத்துக் கொள்ள, அவனைக் கண்டுபிடிப்பது என்பது மிகவும் சிரமமாக இருக்கும். ஆனால் நான்தான் 'அவன்' என்பதால் அவ

னின் ஒவ்வோர் அசைவுகளையும் நான் புரிந்து வைத்திருக்கிறேன்.

இப்போது இந்தக் கழுதை எப்படி எழுத்தாளனாக மாறினான் என்று உங்களிடம் சொல்கிறேன். விமர்சகர்கள் தங்களுடைய மேதாவித்தனத்தைப் பிரகடனப்படுத்த, மிக நீண்ட அற்புதமான கட்டுரைகளில், அவனுக்கும் ஷோபென்ஹோவூர், நீட்சே, ஃப்ராய்ட், ஹெகல், மார்க்ஸ் போன்றவர்களுக்கும் உள்ள தொடர்பைப் பற்றி எழுதுகிறார்கள். ஆனால் உண்மை என்பது அவர்களிடமிருந்து தப்பித்து மிகத் தொலைவிற்குச் சென்று விடுகிறது.

மண்ட்டோவின் படைப்புத்திறன் என்பது அவனை உருவாக்கியிருந்த இரண்டு முரண்பட்ட குணாம்சங்களின் விளைவுதான். அவனின் தந்தை - கடவுள் மன்னிக்க வேண்டும் - மிகவும் அதிகாரத்தோரணையோடு இருந்தவர். அவனின் தாயோ மிகவும் இளகிய மனம் கொண்டவராக இருந்தார். இந்தக் கோதுமை தானியம் இரண்டு முரண்பட்ட சக்திகளுக்கு இடையில் சிக்கி எத்தகையதாக உருப் பெற்றிருக்கும் என்று உங்களால் மிக எளிதாகக் கற்பனை செய்து பார்க்க முடியும்.

அடுத்து நான் அவனின் பள்ளி நாட்களுக்கு வருகிறேன். அவன் புத்திசாலி என்றாலும் குறும்புக்காரப் பையனாக இருந்தான்.

அந்த நேரத்தில் அவன் அதிகபட்சமாக மூன்றரை அடி உயரம்தான் இருந்திருப்பான். பெற்றோர்களுக்குக் கடைசிப் பையன் என்பதால் எல்லோராலும் மிகவும் நேசிக்கப்பட்டான். ஆனாலும் அவனுடைய மூன்று மூத்த சகோதரர்களைச் சந்திப்பதற்கான சந்தர்ப்பம் அவனுக்குக் கிடைக்கவே இல்லை. அவர்களுக்கும் அவனுக்கும் நிறைய வயது வித்தியாசம் இருந்தது. அவர்கள் ஐரோப்பாவில் படித்துக் கொண்டிருந்தார்கள்.

அவர்கள் அவனுடைய தந்தையின் முதல் மனைவிக்குப் பிறந்த சகோதரர்கள். அவர்கள் வீட்டிற்கு வந்து இளைய சகோதரனை அன்போடு நடத்த வேண்டும் என்று அவ்வளவு ஏங்கினான்! அவனின் அந்த எண்ணம் இலக்கிய உலகம் அவனைப் பெரிய சிறுகதை எழுத்தாளனாக அங்கீகரித்த பிறகே நிறைவேறியது.

நாம் இப்போது அவனின் கதை சொல்லும் திறன் பக்கம் திரும்புவோம். அவன் முதல் தரமான ஏமாற்றுக்காரன். அவன் எழுதிய முதல் கதை 'தமாஷா'. அது ஜாலியன் வாலாபாக் படுகொலையை அடிப்படையாகக் கொண்டது. அந்தக் கதையை அவனின் உண்மையான பெயரில் பிரசுரிக்காமல் போலீஸின் பிடியில் இருந்து தப்பினான். பிறகு எல்லாவற்றையும் எதிர்க்கும் அவனின் மனோபாவம் உயர்கல்வி கற்க வேண்டும் என்ற ஆவலைத் தூண்டியது. மெட்ரிக்குலேஷன் தேர்வில் இரண்டு முறை தோல்வியைச் சந்தித்தான் என்ற சுவாரஸ்யமான தகவலை இங்கு சொல்லத்தான் வேண்டும். மூன்றாவது முயற்சியில் அதுவும் மூன்றாம் வகுப்பில் தான் தேறினான். அதுவும் உருதுப் பாடத்தில் தோல்வியுற்றான் என்று தெரிந்து கொண்டால் நீங்கள் ஆச்சர்யப்படுவீர்கள். இப்போது எல்லோரும் அவனை உருதுவின் மிகச் சிறந்த எழுத்தாளன் என்று சொல்கிறார்கள். இதைக் கேட்கும் போதெல்லாம் எனக்குச் சிரிப்புத்தான் பிறக்கிறது. ஏனெனில் இப்போது கூட அவனுக்கு உருது அவ்வளவு நன்றாகத் தெரியாது. கையில் வலையுடன் பட்டாம் பூச்சியைப் பிடிக்க முயல்பவன் போல வார்த்தைகளைப் பிடிக்க இன்னமும் முயன்றுக் கொண்டிருக்கிறான். ஆனாலும் அவை அவன் கைகளுக்குள் பிடிபட மறுக்கின்றன. அதனாலேயே அவனின் எழுத்துக்களில் அழகான வார்த்தைகளுக்குப் பஞ்சம் இருக்கிறது. அவன் எல்லாவற்றிற்கும் தடியை எடுக்கும் கூட்டத்தைச் சேர்ந்தவன். அதனாலேயே அவன் தோள்

களில் விழும் உதைகளைச் சந்தோஷ மாக ஏற்றுக் கொள்கிறான்.

நான்கு பேர் கூடியிருக்கும் இடத்தில் சண்டை போடு வதில் மண்ட்டோ மிகவும் திறமை வாய்ந்தவன். அதி லிருக்கும் அவனின் திறமை, பொதுவாகச் சொல் லும் உவமையில் சொல்வதென்றால் 'ஜாட்' முறையில் சண்டை போடுவது போல் இருக்காது. அதற்கு நேர்மா றாக மிகவும் புத்திசாலித்தனமாகக் காய்களை நகர்த்திச் சண்டை போடுவான். பழக்கப்பட்ட பாதைகளில் நடப் பதை நிராகரிப்பவர்களில் அவனும் ஒருவன். அதனால் எப்போதும் கயிற்றின்மேல் நடப்பதையே விரும்பினான். எந்த நொடியும் அவன் கீழே விழுந்து விடுவான் என்று எல்லோரும் எதிர்பார்க்கிறார்கள். ஆனால் இதுவரை அந்த வெட்கம் கெட்டவன் ஒரு முறை கூட கீழே விழ வில்லை. ஒரு நாள் குப்புற விழுந்து அதற்குப் பிறகு எழுந்து கொள்ள முடியாமல் போகவும் வாய்ப்புகள் உண்டு. ஆனால் அவன் சாகப்போகும் அந்தக் கடைசி நேரத்தில் கூட கீழே விழுந்தது அதன் சுகத்தை அனு பவிக்கத்தான் என்று சொல்லுவான் என்று எனக்குத் தெரியும்!.

மண்ட்டோ முதல் தரமான ஏமாற்றுக்காரன் என்று முன்பே சொல்லிவிட்டேன். இதற்கு மேலும் சாட்சி யாக, அவன் கதைகளை எழுதுவதில்லை என்றும், கதைகள்தான் அவனை எழுதுகின்றன என்றும் அவன் சொல்லியிருப்பதைச் சொல்லலாம். இதெல்லாம் ஏமாற்று வேலை. உண்மை என்னவென்றால் கதையெ ழுத வேண்டும் என்று விரும்பினால் - மிகச் சரியாகச் சொல்வதென்றால் கோழி, முட்டை போடுவதற்கு முன் எப்படியெல்லாம் உணர்கிறதோ, அதுபோலவே அவ னும் உணர்கிறான் என்று எனக்குத் தெரியும். ஆனால் அவன் முட்டையை மறைவில் போடுவதில்லை. எல்

லோரும் பார்த்துக்கொண்டிருக்க அவன் முட்டையிடுகிறான். நண்பர்கள் கூடியிருக்க, அவனின் மூன்று பெண்களும் பெரும் சத்தம் எழுப்பிக்கொண்டிருக்க அவனுக்காகப் பிரத்தியேகமாகச் செய்யப்பட்ட நாற்காலியில் கால்கள் இரண்டையும் நெடுக்காக மடித்து வைத்துக் கொண்டு முட்டைகளைப் போடுகிறான். நேரம் எதுவும் எடுத்துக்கொள்ளாமலேயே அந்த முட்டைகள் கதை வடிவில் கோழிக்குஞ்சுகளாக உருமாறுகின்றன.

அவன் எழுத்தாளனாக இருப்பதில் அவனின் மனைவிக்கு விருப்பமில்லை. அவன் எழுதுவதை நிறுத்தி விட்டு எங்காவது மளிகைக் கடை ஒன்று வைக்கும்படி சொல்கிறாள். ஆனால் மண்ட்டோவின் கற்பனையில் எப்போதும் திறந்து கிடக்கும் கடை, எல்லா மளிகைக் கடைகளும் கொண்டிருக்கும் பொருட்களைக் காட்டிலும் மிக அதிகமான பொருட்களைக் கொண்டிருக்கிறது. அதனாலேயே அவன் ஒரு கடை வைத்தாலும் அவனே அதில் உள்ள குளிர்ப் பெட்டியாய் மாறி அவனுள்ளிருக்கும் எண்ணங்களும் கருத்துகளும் உறைந்து போய்விடுமோ என்று பலமுறை நினைத்துப் பார்த்திருக்கிறான்.

நான் இதை எழுதிக் கொண்டிருக்கும்போது மண்ட்டோ என்மீது கோபம் கொள்வானே என்று பயமாக இருக்கிறது. அவனின் விசித்திரமான செயல்பாடுகளைக் கூட ஒருவனால் பொறுத்துக் கொள்ள முடியும், ஆனால் அவன் கோபத்தில் செய்வதைப் பொறுத்துக்கொள்ள முடியாது. அப்போது அவன் அரக்கன் போல் மாறிவிடுகிறான். உண்மைதான், ஒரு சில நிமிடங்களுக்குத்தான். ஆனாலும் அந்த ஒரு சில நிமிடங்களுக்குக் கடவுள்தான் உங்களைக் காப்பாற்ற வேண்டும்.

அவனின் கதை எழுதும் திறமை பற்றி நிறைய உளறிக் கொண்டிருப்பான். ஆனால் நான்தான், 'அவன்' என்

பதால் அவன் தன்னைப் பகட்டாக வெளிப்படுத்திக் கொள்வதுகூட, ஏமாற்று வேலைதான் என்று எனக்குத் தெரியும். எங்கோ ஒரு முறை அவனின் சட்டைப்பையில் நிறைய கதைக் கட்டுகள் இருப்பதாக எழுதியிருக்கி றான். ஆனால் உண்மை அதற்கு நேர்மாறானது. கதை எழுத வேண்டும் என்று நினைத்தால் இரவு முழுக் கச் சிந்தித்துக் கொண்டிருப்பான், ஆனால் அதிலிருந்து ஏதும் உருவாகாது. காலையில் ஐந்து மணிக்கு எழுந்து, செய்தித்தாள்களில் ஏதேனும் கதை கிடைக்குமா என்று தேடிப் பார்ப்பான். ஆனால் அதுவும் தோல்வியைத் தரும். சூடேறிப் போயிருக்கும் அவனின் மண்டையைக் குளிர்ச்சியாக்கினால் ஏதேனும் சிந்திக்க முடியும் என்று குளியலறைக்குச் சென்று ஜில்லென்று தண்ணீரைத் தலையில் ஊற்றிக்கொள்வான். ஆனால் இவை ஏதும் எந்தப் பயனும் தராது. எரிச்சலடைந்து காரணமே இல் லாமல் மனைவியோடு சண்டையைத் துவங்குவான். அதிலும் தோல்வியுற்று பான் வாங்க வெளியே கிளம்பு வான். ஆனால் பான் மேஜை மீது வெறுமனே அமர்ந்தி ருக்க, கதைக்கான விஷயம் அவனுக்கு இன்னும் பிடிப டாமலிருக்கும். இறுதியாக நம்பிக்கையிழந்த நிலையில் பேனாவோ, பென்சிலோ எடுத்து, 786 என்று மேலே எழுதி மண்டைக்குள் தோன்றுவதை முதல் வரியில் கிறுக்கத் தொடங்குவான். 'பாபு கோபிநாத்', 'டோபா டேக் சிங்', 'மம்மி', 'ஹட்டாக்'(அவமானம்), 'மோஸல்' எல்லாம் இப்படித்தான் மோசமான முறையில் மண்ட்டோவால் எழுதப்பட்டன.

மக்கள் அவனை மதநம்பிக்கை இல்லாதவன் என் றும் ஆபாசக்காரன் என்றும் சொல்வது விநோத மாக இருக்கிறது. இந்தச் சொற்களின் எல்லைக்குள் வைத்துப் பார்க்கப்படவேண்டியவன் என்றுதான் நானும் நினைக்கிறேன். இதற்குக் காரணம் நாகரிகமற்றது என்று பொதுவாகக் கருதப்படும் விஷயங்களையும், ஏற்

றுக்கொள்ள முடியாது என்று கருதப்படும் வார்த்தைக ளையும்தான் அவன் தன்னுடைய எழுத்துக்களில் உப யோகிக்கிறான். இருந்தாலும் அவன் எப்போது என்ன எழுதினாலும் முதல் பக்கத்தின் மேலே பிஸ்மில்லா என்பதைக் குறிக்கும் 786ஐ எழுதி விட்டுத்தான் எதை யும் எழுதத் தொடங்குகிறான் என்று எனக்குத் தெரி யும். இந்த மண்ட்டோ, மதநம்பிக்கை அற்றவன் என்று அறியப்படுகிறவன் காகிதத்தில் மதநம்பிக்கை உள்ள வனாகவும், ஓர் இறை விசுவாசியாகவும் மாறிவிடுகி றான். இதுதான் மிகவும் மென்மையான தோள்களைக் கொண்ட மண்ட்டோ. உங்களின் விரல்களால் ஒரு முட்டை ஓட்டை உடைப்பது போல அவனை உடைத்து விடலாம். இல்லை எனில் அவன் இரும்புச் சுத்தியால் அடித்தாலும் தாங்கிக் கொள்ளும், உடைக்கப்பட முடி யாதவன்.

நான் இப்போது மண்ட்டோவின் தனித்துவத்தைப் பற் றிச் சொல்கிறேன். அதை ஓரிரு வார்த்தைகளில் சொல் லிவிடலாம் - திருடன், பொய்யன், ஏமாற்றுக்காரன், கூட் டத்தைச் சந்தோசப்படுத்த எதையும் செய்யக்கூடியவன். பலமுறை அவன் மனைவியின் அஜாக்கிரதையைத் தனக்குச் சாதகமாக்கிக் கொண்டு, தனக்கு தேவைப் படும் நூறு ரூபாய் நோட்டுகளை எடுத்துக்கொள்வான். மாதத் துவக்கத்தில் அவளிடம் எண்ணூறு ரூபாயைக் கொடுத்து விட்டு அதை அவள் எங்கே வைக்கிறாள் என்று மிகக் கவனமாகப் பார்த்துக்கொள்வான். அடுத்த நாளே அங்கிருந்து நூறு ரூபாயைத் திருடிக்கொள்வான். பாவம் அந்தப் பெண்மணி, காணாமல் போனதைக் தெரிந்து கொண்டால், அதனால் வேலைக்காரர்கள் கடிந்து கொள்ளப்பட்டு, திருடியதற்காகத் தண்டிக்கப்ப டுவார்கள்.

பொதுவாக மண்ட்டோ முகத்திற்கு நேராகப் பேசக் கூடியவன் என்று கருதப்படுகிறான். இந்தப் பார்வையை நான் ஏற்றுக்கொள்ள மாட்டேன். அவன் முழுக்க முழுக் கப் பொய்யானவன். தொடக்கத்தில் அவன் சொன்ன பொய்களில் பிரத்தியேகமான மண்ட்டோ தன்மை கலந் திருந்ததால், அவன் குடும்பத்தாரிடம் இருந்து தப்பித் துக்கொண்டான். ஆனால் பிறகு அவனின் மனைவி 'ஏதோ பிரத்தியேக விஷயம்' என்று சொல்லப்பட்டது எதுவானாலும் அது பொய் என்று கண்டுபிடித்துவிட் டாள். மண்ட்டோ பொய்யை எப்போதாவதுதான் பயன் படுத்தினான் என்றாலும் இப்போது அவன் எது சொன் னாலும் பொய்தான் என்று அவனின் குடும்பத்தார் நினைக்கத் தொடங்கியதுதான் பெருத்த அவமானம். இது ஒரு பெண் அவளின் கன்னங்களில் கருப்பு மை தடவி வைத்துக்கொள்வது போலிருக்கிறது.

மண்ட்டோ அறிவில்லாதவன். அவன் மார்க்ஸை எப் போதும் படித்தது கிடையாது. ஃப்ராய்டின் படைப்புக ளைக் கண்ணால் பார்த்தது கூட கிடையாது. அவனுக்கு ஹெகல் மற்றும் ஹாவ்லொக் பற்றி பெயரளவில் மட்டும் தான் தெரியும். ஆனாலும் எல்லோரும் - நான் விமர்சகர் களைச் சொல்கிறேன் - இந்தச் சிந்தனையாளர்களால் பாதிக்கப்பட்டவன் என்று சொல்வதைக் கேட்கும்போது வேடிக்கையாக இருக்கிறது. எனக்குத் தெரிந்தமட் டில் அவன் யாருடைய சிந்தனைகளாலும் எப்போதும் பாதிக்கப்படவில்லை. இந்த உலகத்தை விளக்க முயல் பவர்கள் எல்லோரையும் முட்டாள்கள் என்றே கருதி னான். இந்த உலகத்தை ஒருவனால் மற்றொருவனுக்கு விளக்க முடியாது... ஒருவன் தானாக அதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

தன்னைப் புரிய வைப்பதற்காக அவன் செய்த முயற் சிகள் எல்லாம் அவனைப் புரிந்து கொள்ள முடியாத

ஏதோ ஒன்றாக மாற்றிவிட்டது. பல சமயங்களில் எனக்குச் சிரிப்பை வரவழைக்கும் அளவிற்கு அவன் முட்டாள்தனமாகப் பேசுகிறான்.

நான் மிகவும் தீர்மானமாக இதைச் சொல்ல முடியும்.

ஆபாச எழுத்தாளன் என்று பலமுறை நீதிமன்றத்திற்குக் கொண்டு செல்லப்பட்ட இந்த மண்ட்டோ தூய்மையை நேசித்தான்.

நான் இதையும் சொல்லத்தான் வேண்டும். எளிதில் திருப்தி கொள்ள முடியாத அளவிற்குத் தூய்மையை நேசித்ததால் அவனை எப்போதும் சுத்தப்படுத்திக் கொண்டே இருந்தான்.

***




## 16, டிசம்பர் 1951

31 லஷ்மி மேன்ஷன்
ஹால் வீதி
லாகூர்

அன்புள்ள அங்கிள்,

வணக்கம்

நீங்களோ அல்லது ஏழு சுதந்திரங்களும் பெற்றிருக்கும் உங்கள் நாட்டிலோ யாருமே அறிந்திராத உங்களுடைய பாகிஸ்தான் சகோதரன் மகளிடமிருந்து உங்களுக்கு இந்தக் கடிதம் வருகிறது.

என்னுடைய நாடு, இந்தியாவிலிருந்து ஏன் துண்டிக்கப்பட்டது என்றும் ஏன் உயிர் பெற்றது என்றும் ஏன் சுதந்திரம் அடைந்தது என்றும் நீங்கள் அறிந்துகொள்ள வேண்டும் என்ற காரணத்திற்காகவே உங்களுக்கு எழுதும் உரிமையை நான் எடுத்துக்கொள்கிறேன். என் நாட்டைப் போலவே நானும் சுதந்திரம் பெற்றுவிட்டேன் - மிகச் சரியாக அதே பாணியில். அங்கிள், இறகுகள் துண்டிக்கப்பட்ட பறவை எவ்வளவு சந்தோஷமாக இருக்க முடியும் என்பதை, எல்லாம் அறிந்த உங்களால் கற்பனை செய்து பார்க்க முடியும். உங்களுக்கு நான் இதை விளக்கத் தேவையில்லை.

என் பெயர் சாதத் ஹசன் மண்ட்டோ. இப்போது இந்தியாவிலிருக்கும் ஓர் இடத்தில்தான் நான் பிறந்தேன். என் தாய் அங்குதான் புதைக்கப்பட்டிருக்கிறார். என் தந்தை

அங்குதான் புதைக்கப்பட்டிருக்கிறார். எனக்குப் பிறந்த முதல் குழந்தையும் அந்தத் துண்டு நிலத்தில்தான் ஓய் வெடுத்துக் கொண்டிருக்கிறான். இருந்தாலும் அந்த நிலம் இனியும் என்னுடைய நாடு அல்ல. இப்போது என் னுடைய நாடு பாகிஸ்தான். இதை நான் பிரிட்டிஷ் பிர ஜையாக இருந்தபோது ஐந்தாறு முறை மட்டுமே பார்த் திருக்கிறேன்.

நான் அகில இந்தியாவிற்கும் மிகச் சிறந்த சிறுகதை எழுத்தாளனாக இருந்தேன். இப்போது பாகிஸ்தானின் மிகச் சிறந்த சிறுகதை எழுத்தாளனாக இருக்கிறேன். என்னுடைய கதைகள் பல தொகுப்புகளாக வெளியாகி உள்ளன. மக்கள் என்னை மதிக்கிறார்கள். ஒன்றுபட்ட இந்தியாவில் நான் மூன்று முறை விசாரிக்கப்பட்டேன். பாகிஸ்தானில் இதுவரை ஒரே ஒரு முறைதான். என்ன இருந்தாலும் பாகிஸ்தான் சிறு குழந்தைதானே!

பிரிட்டிஷ் அரசாங்கம் என்னுடைய எழுத்துகள் ஆபா சமானவை என்று கருதியது. என் சொந்த அரசாங்க மும் அதே எண்ணத்தில்தான் இருக்கிறது. பிரிட்டிஷ் அரசாங்கம் என்னை விட்டுவிட்டது. ஆனால் என்னு டைய அரசாங்கம் அப்படிச் செய்யுமென்று நான் எதிர் பார்க்கவில்லை. கீழ் நீதிமன்றம் எனக்கு, மூன்று மாதக் கடுங்காவல் தண்டனையும் முந்நூறு ரூபாய் அபராதமும் விதித்தது. மேல் நீதிமன்றத்தில் நான் முறையிட்டதால் விடுவிக்கப்பட்டேன். ஆனாலும் என்னுடைய அரசாங் கம், நீதி நிலை நாட்டப்படவில்லை என்று நம்புவதால் என்னை விடுவித்த தீர்ப்பை ரத்து செய்யக் கோரி யும் நான் தண்டிக்கப்பட வேண்டுமென்றும் உயர் நீதி மன்றத்தில் முறையிட்டுள்ளது. உயர் நீதிமன்றம் என்ன தீர்மானிக்கிறது என்று பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்.

என்னுடைய நாடு உங்களுடைய நாடாக இல்லாததைக் கண்டு நான் வருந்துகிறேன். உயர் நீதிமன்றம் என்னைத் தண்டிக்குமானால், என் நாட்டில் எந்தச் செய்தித்தாளும் என் புகைப்படத்தையோ வழக்கு பற்றிய குறிப்புகளையோ வெளியிடாது.

என் நாடு ஏழ்மையானது. இங்கு பளபளக்கும் காகிதங்களோ, சிறந்த அச்சு இயந்திரங்களோ கிடையாது. இந்த ஏழ்மைக்கு உயிருடன் இருக்கும் நானே சாட்சி. அங்கிள், நீங்கள் நம்ப மாட்டீர்கள். இருபத்திரண்டு புத்தகங்களுக்கு ஆசிரியனாக இருந்தும் எனக்கென்று சொந்தமாக ஒரு வீடுகூடக் கிடையாது. ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குப் போகக்கூட என்னிடம் வசதிகள் ஏதும் கிடையாது என்று தெரிந்துகொண்டால் நீங்கள் ஆச்சரியப்பட்டுப் போவீர்கள். என்னிடம் பேக்கார்ட் காரோ, டாஜ் காரோ கிடையாது. ஏன், ஏற்கனவே உபயோகப்படுத்தப்பட்ட கார்கூட என்னிடம் கிடையாது.

நான் எங்காவது போக வேண்டுமென்றால் மிதிவண்டியை வாடகைக்கு எடுத்துக் கொள்கிறேன். ஒரு பத்திக்கு ஏழு ரூபாய் வீதம் செய்தித்தாளில் என்னுடைய எழுத்து வெளிவந்து, இருபது முதல் இருபத்தைந்து ரூபாய் கிடைத்தால் டோங்காவை எடுத்துக் கொண்டு உள்ளூர் விஸ்கியை வாங்கக் கிளம்பி விடுவேன். இந்த விஸ்கி மட்டும் உங்களுடைய நாட்டில் தயாரிக்கப்பட்டிருக்குமானால், அந்த சாராயத் தொழிற்சாலையை அணுகுண்டு போட்டு அழித்திருப்பீர்கள். அதனுடைய தரம் அப்படிப்பட்டது. அதைக் குடிப்பவன் ஓராண்டுக்குள் சொர்க்கத்திற்கு அனுப்பப்படுவான் என்ற உத்தரவாதம் கண்டிப்பாக உண்டு.

நான் தடம் புரண்டு போகிறேன். நான் செய்ய விரும்புவது, என்னுடைய சகோதரன் 'எர்ஸ்கின் கால்டுவெல்'-

கு என்னுடைய நல்வாழ்த்துகளைத் தெரிவிக்கத்தான். அவருடைய 'ழுடின'ள டுவைவடந ஹஉசந' என்ற நாவலுக்காக வழக்குப்போட்டதை உங்களால் நினைத்துப் பார்க்க முடியும். அதாவது நான் இங்கு சந்தித்த அதே குற்றச்சாட்டு: ஆபாச இலக்கியம்.

அங்கிள், என்னை நம்புங்கள். ஏழு சுதந்திரங்களையும் உடைய உங்களுடைய நாட்டில் அவருடைய நாவல் ஆபாசமானது என்று வழக்கு தொடரப்பட்டதைக் கேள்விப்பட்டபோது, நான் அதிர்ச்சியுற்றுப் போனேன். உங்களுடைய நாட்டில் அனைத்துமே அதனுடைய ஒளிவுமறைவுகள் அகற்றப்பட்டு, காட்சிப்பொருளாக வைக்கப்படுவதுதானே சகஜமானது. அது பழமாகட்டும், பெண்ணாகட்டும், இயந்திரமாகட்டும், மிருகங்களாகட்டும், புத்தகங்களாகட்டும், நாட்குறிப்புகளாகட்டும், நிர்வாணப் பொருட்களின் பேரரசர் நீங்கள் என்பதால், என் சகோதரன் எர்ஸ்கின் கால்டுவெல் மீது வழக்குப் போட்டீர்கள் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.

நான் மட்டும் நீதிமன்றத் தீர்ப்பை ஒரு ஓட்டு ஓட்டவில்லை என்றால் கால்டுவெல் வழக்கு பற்றிக் கேள்விப்பட்ட அந்தக் கணத்திலே, நான் அடைந்த அதிர்ச்சியில் எங்களுடைய உள்நாட்டு மதுவை மிக அதிக அளவில் குடித்துத் தற்கொலை செய்து கொண்டிருப்பேன். ஒரு வழியில், என் போன்றவர்களை ஒழித்துக் கட்டும் சந்தர்ப்பத்தை இந்த நாடு இழந்தது துரதிர்ஷ்டவசமானது. அங்கிள், நான் அடித்தொண்டையிலிருந்து கத்தியிருந்தால் உங்களுக்கு இந்தக் கடிதத்தை நான் எழுதிக்கொண்டிருக்க முடியாது. இயற்கையாகவே நான் மிகவும் கடமை உணர்வு கொண்டவன். என்னுடைய நாட்டை நான் நேசிக்கிறேன்.

கடவுளின் அருளால் இன்னும் சில நாட்களில் நான் இறந்துவிடுவேன். நான் என்னையே கொலை செய்து கொள்ளாவிட்டாலும், இன்று கோதுமை மாவு விற்கும் விலையில் மானங்கெட்டவன் மட்டுமே அவனுக்கு இந்தப் பூமியில் விதிக்கப்பட்ட நாட்களை வாழ முடியும்.

ஆக நான் கால்டுவெல் தீர்ப்பைப் படித்துவிட்டு, பெருமளவு உள்ளூர் சாராயத்தைக் குடித்து என் உயிரை மாய்த்துக் கொள்வதில்லை என்று தீர்மானித்தேன். அங்கிள், உங்களுடைய நாட்டில் எல்லாவற்றிலும் ஒருவித செயற்கை அலங்காரத்தன்மை உண்டு. ஆனால் என்னுடைய சகோதரன் கால்டுவெல்லை விடுவித்த நீதிபதியிடம் நிச்சயமாக எவ்வித செயற்கை அலங்காரத்தையும் காண முடியவில்லை. ஒரு வேளை அந்த நீதிபதி - என்னை மன்னிக்க வேண்டும், எனக்கு அவருடைய பெயர் தெரியாது; உயிரோடு இருந்தால் என் மதிப்பிற்குரிய வணக்கங்களை அவருக்குத் தெரியப்படுத்தவும்.

தீர்ப்பில் அவருடைய கடைசி வரிகள், அவருடைய அறிவார்ந்த தளத்தின் மேன்மையை வெளிப்படுத்துகின்றன. அவர் எழுதுகிறார்: "இதுபோன்ற புத்தகங்களை ஒடுக்குவதன் மூலம் அந்தப் புத்தகத்தின் நோக்கம் அதுவல்ல என்றாலும், அது மக்கள் மத்தியில் தேவையில்லாத ஆவலை உருவாக்கி, தேவையில்லாமல் காம உணர்வுகளைத் தூண்டிவிடும் என்பதையே என்னுடைய தனிப்பட்ட கருத்தாக நினைக்கிறேன். அமெரிக்கச் சமூகத்தில் ஒரு சாரார் பற்றிய உண்மையையே அவர் வெளிப்படுத்துகிறார் என்பதில் தீர்மானமாக இருக்கிறேன். உண்மை என்பது எப்போதும் இலக்கியங்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டது என்று பிரகடனப்படுத்த வேண்டும் என்பதே என் கருத்து."

என்னைத் தண்டித்த நீதிமன்றத்திலும் நான் இதை யேதான் சொன்னேன் என்றாலும் அது எனக்கு மூன்று மாத காலக் கடுங்காவல் சிறைத் தண்டனையும் முந் நூறு ரூபாய் அபராதமும் விதித்தது. என்னுடைய நீதிபதி உண்மையும் இலக்கியமும் பிரித்து வைக்கப்பட வேண் டும் என்று கருதுகிறார். பெரும்பாலானோரும் இதே கருத்தைத்தான் கொண்டிருக்கிறார்கள்.

நான் மூன்று மாத காலக் கடுங்காவல் சிறைத் தண் டனையை அனுபவிக்கத் தயாராக உள்ளேன். ஆனால், நான் முந்நூறு ரூபாய் அபராதத்தைக் கட்டக்கூடிய நிலையில் இல்லை. அங்கிள், உங்களுக்குத் தெரியாது. நான் வறுமையில் இருப்பவன். கடின உழைப்பிற்குப் பழக்கப்பட்டவன். ஆனால் பணத்திற்குப் பழக்கப்பட்ட வன் இல்லை. எனக்கு முப்பத்தொன்பது வயதுதான் ஆகிறது. என் வாழ்க்கை முழுக்க நான் கடினமாக உழைத்துள்ளேன். இதை மட்டும் நினைத்துப் பாருங் கள். பிரபலமான எழுத்தாளனாக இருந்தும் என்னிடம் பேக்கார்ட் கார் கிடையாது.

என் நாடு ஏழ்மையில் இருப்பதால் நான் ஏழையாக இருக்கிறேன். எனக்கு ஒரு நாளைக்கு இரண்டு வேளை உணவு என்று எப்படியோ சமாளிக்க முடிகிறது. ஆனால் என்னுடைய பல சகோதரர்கள் இவ்வளவு அதிர்ஷ்டசா லிகள் கிடையாது.

என் நாடு ஏழ்மையான நாடாக இருக்கட்டும். ஆனால் அது ஏன் அறியாமையில் மூழ்கிக் கிடக்கிறது? அங்கிள், நான் நிச்சயமாகச் சொல்கிறேன் இதற்குக் காரணம் நீங்களும் உங்களுடைய சகோதரன் ஜான்புல்-ம் தான் என்று உங்களுக்குத் தெரிந்திருக்கும். நான் இதைப் பற்றிப் பேச விரும்பவில்லை. காரணம் அது உங்களு டைய காதுகளுக்கு இனிமையான இசையாக இருக்

காது. நான் உங்களை மதிக்கும் இளையவனாக இருந்து வருவதால் தொடக்கத்திலிருந்து முடிவு வரை அப்படி இருக்கவே விரும்புகிறேன்.

என் நாடு இத்தனை பேக்கார்ட், பைக் மற்றும் மாக்ஸ் ஃபேக்டர் ஒப்பனையைக் கொண்டிருந்தாலும் ஏன் ஏழ் மையில் உள்ளது என்று நீங்கள் நிச்சயமாக ஆச்சரி யப்பட்டுக் கேட்கலாம். அங்கிள், இது உண்மைதான். ஆனால் ஏனென்ற காரணத்தை நான் சொல்லப் போவ தில்லை. நீங்கள் உங்களுடைய இதயத்தைத் திறந்து பார்த்தால் உங்களுக்கே தெரியும். (உங்களுடைய அதி புத்திசாலி மருத்துவர்களால் உங்களுடைய இதயம் வெளியே எடுக்கப்படாமல் இருக்கும் பட்சத்தில்)

பேக்கார்ட் மற்றும் பைக்கில் பயணிக்கும் என்னுடைய நாட்டு மக்களின் ஒரு பகுதியினர் உண்மையில் என்னு டைய நாட்டைச் சேர்ந்தவர்களில்லை. எங்கு என்னைப் போன்ற ஏழைகளும் என்னை விட ஏழைகளும் வாழ்கி றார்களோ அதுவே என்னுடைய நாடு.

இவையெல்லாம் கசப்பான விஷயங்கள். ஆனால் இங்கு சர்க்கரைத் தட்டுப்பாடு உள்ளது. இல்லையென் றால் என்னுடைய வார்த்தைகள் மீது தேவைப்படும் அளவுக்குப் பூசியிருப்பேன். அதனால் என்ன? சமீபத் தில் நான் 'ஈவ்லின் வாக்'கின் புத்தகம் 'த லவ்ட் ஒன்ஸ்' படித்தேன். அவர் உங்கள் நண்பரின் நாட்டைச் சேர்ந்த வர்தான். என்னை நம்புங்கள், உடனடியாக இந்தக் கடி தத்தை எழுத உட்கார்ந்துகொள்ளும் அளவுக்கு அந்தப் புத்தகத்தால் பாதிக்கப்பட்டேன்.

உலகத்தில் உங்களுடைய பகுதியில் பல மேதாவி களைக் காண முடியும் என்று எப்போதும் பூரண நம் பிக்கை கொண்டிருந்தேன். ஆனால் இந்தப் புத்தகத் தைப் படித்த பின் வாழ்க்கை முழுதும் அவருடைய

விசிறியாகவே மாறிவிட்டேன் என்று சொல்லலாம். எத்தகைய செயல்! நான் சொல்கிறேன், உண்மையிலேயே அங்கு மிகவும் துடிப்புள்ள மனிதர்கள் வாழத்தான் செய்கிறார்கள்.

உங்களுடைய கலிபோர்னியாவில் இறந்தவர்களை அழகுபடுத்த முடியும் என்றும் அந்தக் காரியத்தைச் செய்வதற்குப் பல பெரிய நிறுவனங்கள் இருக்கின்றன என்றும் ஈவ்லின் வாக் தெரியப்படுத்துகிறார். நமது அன்புக்குரியவர் உயிரோடு இருக்கும்போது எவ்வளவு கோரமாக இருந்தாலும் இறந்த பின் அவர் ஆசைப்பட்ட அழகை அவருக்குக் கொடுக்க முடியும். சில படிவங்களில் உங்கள் விருப்பங்களைப் பூர்த்தி செய்து கொடுக்கலாம். முடிக்கப்பட்ட பொருளின் தரம், சிறப்பானதாக இருக்கும் என்பது மட்டும் உத்தரவாதம். அதாவது தேவைப்படும் பணத்தை நீங்கள் கொடுக்கத் தயாராக இருக்கும்வரை. இறந்துபோனவரை எந்த அளவுக்கு வேண்டுமென்றாலும் அழகுபடுத்த முடியும். இந்த நளினமான காரியத்தைச் செய்வதற்குப் பல நிபுணர்கள் உண்டு. நம் அன்புக்குரியவரின் மோவாய் அறுவை சிகிச்சை செய்யப்பட்டு, அவருடைய முகத்தில் அழகான புன்னகையை நட்டுவைக்க முடியும். அவருடைய கண் இமைகளைத் திறந்து வைப்பதோடு, நெற்றியைப் பார்ப்பதற்குப் பளபளவென்றும் மாற்றி அமைக்க முடியும். அதாவது இறந்தவர் கல்லறைக்குள் வைக்கப்பட்ட பின், அவருடைய கணக்கைத் தீர்ப்பதற்கு வரும் இரண்டு தேவ தூதர்கள் குழம்பிப் போகும் அளவிற்கு இவையெல்லாம் அவ்வளவு அற்புதமாகச் செய்து முடிக்கப்படும்.

அங்கிள், கடவுள்மீது ஆணையிட்டுச் சொல்கிறேன். உங்களுடைய மக்களுக்கு ஈடு இணை யாரும் கிடையாது. உயிரோடு இருப்பவர்களுக்கு அறுவை சிகிச்சை

செய்வதையும், பிளாஸ்டிக் சர்ஜரி மூலம் அழகுபடுத்து வதையும் ஒருவர் கேள்விப்பட்டிருக்கலாம். இங்கு அது பற்றி நிறைய பேச்சுகள் உண்டு. ஆனால் அது போலவே இறந்தவரையும் அழகுபடுத்த முடியும் என்பதை இங்கு ஒருவரும் கேள்விப்பட்டதே கிடையாது.

சமீபத்தில் உங்கள் நாட்டுப் பிரஜை ஒருவர் இங்கு வந்தார். சில நண்பர்கள் அவரை எனக்கு அறிமுகப்ப டுத்தி வைத்தார்கள். அப்போது நான் சகோதரன் 'ஈவ் லின் வாக்'கின் புத்தகத்தைப் படித்திருந்தேன். உங்கள் நாட்டைச் சேர்ந்தவருக்குப் புரிந்துகொள்ள முடியாத இரு வரி உருதுக் கவிதையைப் படித்துக் காண்பித் தேன். எப்படியிருந்தாலும் உண்மை என்னவென்றால், அங்கிள் நம்முடைய முகம் நமக்கே அடையாளம் தெரி யாத அளவுக்கு அதைச் சிதைத்துவிட்டோம். ஆனால் உயிரோடு இருந்ததைக் காட்டிலும் இறந்தபின் அழகு படுத்துவதற்கு நீங்கள் இருக்கிறீர்கள். உண்மை என் னவென்றால் இந்தப் பூமியில் வாழ்வதற்கு உங்களுக்கு மட்டும்தான் உரிமை இருக்கிறது. மற்றபடி நாங்கள் எல் லொரும் நேரத்தை வீணடித்துக்கொண்டிருக்கிறோம்.

எங்களுடைய ஆகப் பெரிய உருதுக் கவிஞன் காலிப் நூறு வருடங்களுக்கு முன் எழுதினான்:

**மரணத்திற்குப் பின் அவமானப்படுவது**
**என் விதியாக இருந்தால்**
**என் முடிவைத் தண்ணீரில் மூழ்கி**
**எதிர்கொண்டிருப்பேன்.**
**அது என் சவ அடக்கத்தைத்**
**தவிர்த்திருப்பதோடு**
**என் இறுதி ஓய்விடத்தில் தலைமீது**
**கல்லேதும் இருந்திருக்காது.**

உயிரோடு இருக்கும்போது அவமானப்படுத்தப்படுவதைக் கண்டு காலிப் அச்சம் கொண்டது கிடையாது. தொடக்கத்திலிருந்து இறுதி வரை எப்போதும் அவன் அப்படித்தான் இருந்தான். ஆனால் மரணத்திற்குப் பின் அவமானப்படுத்தப்படுவதைக் கண்டு அச்சம் கொண்டான். அவன் மிகவும் பண்பட்டவன். தன்னுடைய மரணத்திற்குப் பின் என்ன நடக்கும் என்று மட்டும் அவன் அச்சம் கொண்டிருக்கவில்லை, அவன் சென்ற பிறகு என்ன நடக்கும் என்று மிகத் தெளிவாகவும் உணர்ந்திருந்தான். அதனாலேயே அவன் தன்னுடைய மரணம் தண்ணீரில் மூழ்கி ஏற்பட்டால் சவ அடக்கமோ கல்லறையோ அவசியமில்லாமல் போகும் என்று தன் விருப்பத்தைத் தெரிவித்தான்.

அவன் உங்களுடைய நாட்டில் பிறந்திருக்க வேண்டும் என்று எவ்வளவு அவா கொள்கிறேன். அவனது கல்லறைக்கு அவனை மிகப் பிரம்மாண்டமான ஊர்வலத்தில் எடுத்துச் சென்று, அவன் ஓய்வெடுக்கும் இடத்தில் வான் உயரக் கட்டடத்தைக் கட்டியிருப்பீர்கள் அல்லது அவன் விருப்பம் சாத்தியப்பட்டிருந்தால் கண்ணாடிப் பெட்டிக்குள் அவனது உடல் வைக்கப்பட்டு மிருகக் காட்சி சாலைக்கு மக்கள் சென்று வருவதுபோல, அவனைப் பார்க்கப் போயிருப்பார்கள்.

உங்களுடைய நாட்டில் இறந்தவர்களை அழகுபடுத்தும் நிறுவனங்கள், இறந்த மனிதர்களுக்காக மட்டுமல்லாமல் இறந்த மிருகங்களுக்கும் சாத்தியம் என்று சகோதரர் 'ஈவ்லின் வாக்' எழுதுகிறார். ஒரு விபத்தில் நாய் தன்னுடைய வாலை இழந்து விட்டால் அதற்குப் புதியதாக ஒரு வாலைப் பொருத்திவிடலாம்.

உயிரோடு இருக்கும்போது அதற்கு எத்தகைய உடல் ரீதியான குறை இருந்தாலும், மரணத்திற்குப் பின் அதை

யெல்லாம் சரி செய்துவிடலாம். பிறகு அது சடங்குக ளோடு புதைக்கப்பட்டு மலர்வளையங்கள் அதன் கல் லறை மீது வைக்கப்படும். ஒவ்வொரு வருடமும் நம் அன்பிற்குரியது, இறந்த தினத்தன்று அதனுடைய எஜ மானனுக்கு இதுபோல் பொறிக்கப்பட்ட அட்டை ஒன்று அனுப்பப்படும்: 'சொர்க்கத்தில் உங்களுடைய டாமி (அல்லது ஜேஃபி) அதனுடைய வாலை (அல்லது காதை) ஆட்டிக்கொண்டே உங்களைப் பற்றி நினைத் துக்கொண்டிருக்கிறது'

இவையெல்லாம் எதை உணர்த்துகிறது என்றால் எங் களைக்காட்டிலும் உங்களுடைய நாட்டில் நாய்கள் எவ் வளவோ நல்ல நிலையில் உள்ளன. இங்கு இன்று நீங் கள் இறந்தால் நாளை மறக்கப்பட்டு விடுவீர்கள். குடும் பத்தில் யாரேனும் ஒருவர் இறந்து போனால், உயிரோடு இருப்பவர்களுக்கு அது ஏற்படுத்திய பேரிழப்பால் இப்ப டித்தான் கதறுவார்கள்:

"இந்தப் பாவப்பட்டவன் ஏன் இறந்தான்? அவனுக்குப் பதிலாக நானல்லவா இறந்திருக்க வேண்டும்". அங்கிள் உண்மை என்னவென்றால், எங்களுக்கு வாழவும் தெரி யாது. சாகவும் தெரியாது.

நான் இதையும் கேள்விப்பட்டேன். உங்களுடைய நாட்டுப் பிரஜை ஒருவர் அவர் இறந்தபின், எத்தகைய சவ அடக்கம் அவருக்குக் கொடுக்கப்படும் என்று தீர் மானமாகத் தெரியாததால், அவர் உயிரோடு இருக்கும் போது அவருக்கு சவ அடக்கம் எப்படி நிகழ்த்தப்பட வேண்டும் என்று நிகழ்த்திக் கொண்டாடினாராம். அவர் விருப்பப்பட்டால் ஒழிய எதுவுமே நடக்காத, செல்வம் கொழித்த, பகட்டான அவருடைய வாழ்க்கைக்கு இது தகுதியுடையதுதான். அவருடைய சவ அடக்கத்தில், காரியங்கள் சரியாகச் செய்யப்படாமல் போகும் சாத்தி

யங்களை அவர் ஒழித்துக் கட்ட விரும்பினார். உயிரோடு இருக்கும்போதே தன்னுடைய இறுதிச் சடங்குகளை அவரே நேராக நின்று பார்த்தது அவரளவில் நியாய மானதுதான். ஏனெனில் மரணத்திற்குப் பின் நடப்பவை எல்லாம் இங்கும் இல்லாதது; அங்கும் இல்லாதது.

நான் சற்று முன்தான் 'Life' (நவம்பர் - 5, 1951. சர்வதேச வெளியீடு) இதழைப் பார்த்தேன்.

அமெரிக்க வாழ்க்கை பற்றிய மிக முக்கியமான விஷ யத்தைத் தெரிந்துகொண்டேன். இரண்டு பக்கங்கள் விரிந்திருந்த அந்த விவரணை உங்கள் நாட்டின் ஆகச் சிறந்த கொள்ளைக்காரனின் இறுதிச்சடங்கை விவ ரித்திருந்தது. நான் வில்லி மோரீட்டியின் (அவனின் ஆன்மா சாந்தி அடையட்டும்) படத்தைப் பார்த்தேன். சமீபத்தில் ஸ்ரீ55,000-க்கு விற்கப்பட்ட அவனுடைய மிகப் பிரம்மாண்டமான

வீட்டையும் பார்த்தேன். இந்த உலகத்தின் கவனச் சிதறல்களிலிருந்து தப்பிக்க அவன் வைத்திருந்த ஐந்து ஏக்கர் நிலத்தையும் பார்த்தேன். கண்கள் மூடியிருக்க இறந்து போனது போல் அவன் படுக்கையில் கிடந்த படத்தையும் பார்த்தேன். ஸ்ரீ5000 விலை நகைப்பெட்டி யும் அவருடைய சவ அடக்கத்திற்கு எழுபத்தைந்து கார் கள் ஊர்வலமாக வந்த படங்களும் அதிலிருந்தன. கட வுள்மீது சத்தியமாகச் சொல்கிறேன், அது என் கண்க ளில் கண்ணீரை வரவழைத்தது.

என் வாயில் மண் விழட்டும். ஒருவேளை நீங்கள் இறக்க நேர்ந்தால், வில்லி மோரீட்டியைவிட பிரம்மாண் டமான இறுதி ஊர்வலம் உங்களுக்கும் நடத்தப்பட வேண்டும். பயணம் செய்வதற்கு ஒரு மிதிவண்டிகூட இல்லாத ஏழ்மையில் இருக்கும் பாகிஸ்தான் எழுத்தா ளனின் உண்மையான வேண்டுதல் இதுதான். உங்க

ளுடைய நாட்டில் உள்ள தொலைநோக்குப் பார்வை கொண்டுள்ளவர்கள் போல், நீங்களும் உயிரோடு இருக்கும்போதே உங்களுடைய இறுதிப் பயணத்தைப் பார்ப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்பதே என் தாழ்மையான வேண்டுகோள். இதை நீங்கள் மற்றவர்க ளிடம் விட்டுவிட முடியாது. எதையுமே தவறாகவே செய் யும் பழக்கமுடையவர்கள் இதிலும் தவறு செய்யக்கூடும். நீங்கள் இறந்தபின் உங்களுடைய உடல் தகுதியான அளவுக்கு அழகுபடுத்துவதில் கவனம் செலுத்தப்படா மல் போகலாம். இந்தக் கடிதம் உங்களிடம் வந்து சேர் வதற்கு முன்னதாகவேகூட உங்களுடைய இறுதி ஊர் வலத்துக்கு நீங்களே சாட்சியாக இருந்திருக்கக் கூடும். நீங்கள் எல்லாம் தெரிந்தவர் என்பதால் மட்டுமல்ல, நீங் கள் என்னுடைய தந்தையின் சகோதரர் என்பதாலும் தான் நான் இதையெல்லாம் சொல்கிறேன்.

என் சகோதரன் 'எர்ஸ்கின் கால்டுவெல்'லுக்கும், அவரை ஆபாச வழக்கிலிருந்து விடுதலை செய்த நீதி பதி அவர்களுக்கும் என்னுடைய வணக்கங்களைத் தெரியப்படுத்தவும்.

நான் என்னை அறியாமல் ஏதாவது தவறு இழைத்தி ருந்தால் என்னை மன்னித்துவிடுமாறு கேட்டுக்கொள் கிறேன்.

உங்களின் ஏழைச் சகோதரனின் மகன்

சாதத் ஹசன் மண்ட்டோ

பாகிஸ்தானில் குடியிருப்பவன்

(இந்தக் கடிதத்திற்குப் போதுமான அளவு தபால் தலை இல்லாததால் தபாலில் சேர்க்க முடியவில்லை.)




31 லஷ்மி மேன்ஷன்
ஹால் வீதி
லாகூர்

என் மதிப்பிற்குரிய அங்கிள்,

வணக்கம்

நான் சமீபமாக உங்களுக்கு ஏதும் எழுதவில்லை. உங்களிடமிருந்து பதில் ஏதும் வரவில்லை என்றாலும் உங்கள் தூதரகத்திலிருந்து ஒரு நாகரிகமான மனிதர் - அவருடைய பெயர் எனக்கு இப்போது நினைவில் இல்லை, சில நாட்களுக்கு முன் உள்ளூர்க்காரர் ஒருவரோடு என்னைப் பார்க்க வந்தார். அந்த நாகரிகமான மனிதரோடு நடந்த உரையாடலின் சுருக்கத்தை இங்கு எழுதுகிறேன்.

நாங்கள் ஆங்கிலத்தில் எங்களை அறிமுகப்படுத்திக் கொண்டோம். அவர் ஆங்கிலம் பேசியது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. வாழ்க்கை முழுக்க என்னால் புரிந்து கொள்ள முடியாத, அமெரிக்க மொழி அல்ல அது.

நாங்கள் முக்கால் மணி நேரம் பேசினோம். ஒவ்வொரு அமெரிக்கனும் ஒரு பாகிஸ்தானியையோ ஒரு இந்தியனையோ சந்திக்கும்போது சந்தோஷப்படுவது போலவே என்னைச் சந்தித்ததிலும் சந்தோஷப்பட்டார். அவரைச் சந்தித்ததில், எனக்குப் பெரும் மகிழ்ச்சி என்பது போன்ற தோற்றத்தைக் கொடுத்தேன். உண்மை என்னவென்

றால், வெள்ளைக்கார அமெரிக்கர்களைச் சந்திப்பதில் நான் எப்போதுமே மகிழ்ச்சி அடைந்தது கிடையாது.

தயவு தாட்சண்யம் அற்ற என்னுடைய வார்த்தை களை அப்படியே எடுத்துக்கொள்ள வேண்டாம். போன யுத்த சமயத்தில், நான் பம்பாயில் வாழ்ந்தபோது, பம்பாய் சென்ட்ரல் ரயில் நிலையத்தில் இருந்தேன். அந்த நாட் களில் நகரம் முழுக்க எங்கு பார்த்தாலும் அமெரிக்கர் கள்தான். பாவப்பட்ட பிரிட்டிஷ் சிப்பாய்களை எவரும் சீண்டவில்லை. பம்பாயைச் சேர்ந்த ஆங்கிலொ-இந்தி யப் பெண்மணிகள், யூதப் பெண்கள், பார்ஸி பெண்கள் நாகரிகம் என்பதால் கண்ட இடத்திலெல்லாம் படுத்த வர்கள், இப்போது ஒரு அமெரிக்கனோடு கைகோத்து நடப்பதைப் பார்க்க முடிந்தது.

அங்கிள், நான் சொல்வதை நம்புங்கள். உங்களு டைய படைவீரர்களில் ஒருவர் ஒரு ஆங்கிலோ-இந்தி யப் பெண்ணுடனோ, யூதப் பெண்ணுடனோ, பார்ஸி பெண்ணுடனோ, கைகோத்து பிரிட்டிஷ் சிப்பாய்களைக் கடந்து செல்லும்போதெல்லாம், அவர்கள் பொறாமை யால் வெந்து எரிவதைப் பார்க்க முடிந்தது.

இந்த உலகத்தில் உண்மையிலேயே நீங்கள் மற்றவர் களிடமிருந்து வித்தியாசமான மனிதர்கள்தான். எங்க ளுடைய படைவீரர்கள், அவர்களுக்குத் தேவைப்படும் உணவில் பாதி அளவைக்கூடப் பெற முடியாதவர்களாக இருக்கிறார்கள். ஆனால் உங்களுடைய அலுவலக உதவியாளனுக்குக்கூட மூச்சு முட்டும்வரை ஒன்றை யல்ல, இரண்டு வயிறுகளை நிரப்பிக்கொள்ள முடிகிறது.

அங்கிள், நான் தவறாகப் பேசுவதற்கு மன்னித்துவி டுங்கள். ஆனால் உண்மையிலேயே இது மாபெரும் ஏமாற்றும் வேலை இல்லையா? இதற்கெல்லாம் உங்க ளுக்கு எங்கிருந்து பணம் கிடைக்கிறது? இதையெல்

லாம் சொல்வதற்கு ஏற்ற இடம் இது இல்லை என்று எனக்கு நன்றாகத் தெரியும் என்றாலும், உங்கள் நடத்தைகள் எல்லாம் வேறு எதற்காகவும் அல்லாமல் ஒரே ஒரு குறிக்கோளை மட்டுமே கொண்டது: பகட்டாய் வெளிப்படுத்துவது. ஒருவேளை நான் சொல்வது தவறாக இருக்கலாம். ஆனால் தவறு செய்வது மனித இயல்புதானே! நீங்களும் மனிதர்தான் என்று நினைக்கிறேன். அப்படி இல்லையென்றால் அதற்காக என்னால் எதுவும் செய்ய முடியாது.

நான் தடம் புரண்டு போகிறேன். பம்பாய் சென்ட்ரலில் உங்களுடைய படை வீரர்கள் பலரைப் பார்த்தது பற்றி நான் பேசிக் கொண்டிருந்தேன். பெரும்பாலும் வெள்ளைக்காரர்கள் என்றாலும் சில கருப்பர்களையும் எதிர்கொண்டேன். உண்மையைச் சொல்லத்தான் வேண்டும் என்றால், அந்தக் கருப்புப் படை வீரர்கள் வெள்ளைக்காரர்களைக் காட்டிலும் திடகாத்திரமாகவும் ஆரோக்கியமாகவும் இருந்தார்கள்.

உங்களுடைய மக்கள் பெரும்பாலானோர் ஏன் கண்ணாடி அணிந்துகொண்டிருக்கிறார்கள் என்று என்னால் புரிந்துகொள்ளவே முடியவில்லை. வெள்ளையர்கள் கண்ணாடி அணிந்துகொண்டிருக்கிறார்கள். உங்களால் நீக்ரோ என்றழைக்கப்படும் கருப்பர்கள்கூட அதை அணிந்துகொண்டு இருக்கிறார்கள். அவர்களுக்குக் கண்ணாடி ஏன் தேவைப்படுகிறது? எனக்கு எந்தக் காரணமும் தெரியவில்லை. இப்படியும் இருக்கலாம்: இவையெல்லாம் உங்களுடைய பெரிய செயல் திட்டத்தின் ஒரு பகுதியாக இருக்கலாம். நீங்கள் ஐந்து சுதந்திரங்களைப் பெற்றுள்ளதால் உங்களால் எளிதாக நிரந்தரமான தூக்கத்திற்கு ஆளாக்கப்படுகிறவர்கள் - நீங்கள் அப்படிச் செய்வது உண்டுதானே, உங்களை

உங்களுடைய கண்ணாடிகள் மூலம் மட்டுமே பார்க்கப் படுவதை நீங்கள் விரும்பியிருக்கலாம்.

பம்பாய் சென்ட்ரலில் நான் ஒரு நீக்ரோ படை வீர ரைப் பார்த்தேன். அவருடைய புஜங்களின் உறுதியைப் பார்த்த அந்தக் கணத்திலேயே என் உயரத்தில் பாதியாக நான் சுருங்கிப் போனேன். எப்படியோ என் தைரியத்தை எல்லாம் ஒன்றுதிரட்டி, அவரை நோக்கி நடந்தேன்.

அவர் முதுகைச் சுவரில் சாய்த்து ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். அவருடைய மூட்டை முடிச்சுகள் அவருக்கு அருகில் இருந்தன. கண்கள் பாதி மூடியிருந் தன. என்னுடைய காலணிகளைத் தரையில் தேய்த்து நான் சத்தம் எழுப்ப, அவர் கண்களைத் திறந்து பார்த் தார். நான் அவரிடம் ஆங்கிலத்தில், 'நான் இவ்வழியே போய்க்கொண்டிருக்க, உங்கள் ஆளுமையில் மெய்ம றந்து நின்றுவிட்டேன்' என்றேன். பிறகு அவரை நோக்கி நட்புக்கரம் நீட்டினேன்.

கண்ணாடி அணிந்துகொண்டிருந்த அந்தப் படை வீரர், தன்னுடைய திடகாத்திரமான கையால் என் கையைப் பிடிக்க, என் கை எலும்புகள் சுக்குநூறாவ தற்கு முன்பே என் கையை விடுவிக்குமாறு கெஞ்சி னேன். அவருடைய கருத்த உதடுகளில் பெரிய புன் னகை தோன்றியது, அவர் என்னிடம், 'நீங்கள் யார்?' என்று சுத்தமான அமெரிக்க உச்சரிப்பில் கேட்டார்.

என் கையைத் தடவிக் கொடுத்தபடியே, 'நான் இங்கு தான் வாழ்கிறேன்' என்றேன். மேலும், 'நான் உங்களை இந்த நிலையத்தில் பார்த்தவுடன் ஓரிரு வார்த்தைகள் உங்களுடன் பகிர்ந்துகொள்ள வேண்டும் என்று எனக் குத் தோன்றியது' என்றேன்.

'இங்கு நிறைய படைவீரர்கள் இருக்கிறார்கள். ஏன் என்னைத் தேர்ந்தெடுத்தீர்கள்? என்று கேட்டார்.

இது சிக்கலான கேள்வி என்றாலும் நான் சிரமப்படா மல் அதற்குப் பதில் தந்தேன். 'நான் கருப்பு, நீங்களும் அப்படியே. நான் கருப்பின மக்களை நேசிக்கிறேன்' என்றேன்.

மிகப்பெரிய சிரிப்பை வெளிப்படச் செய்தார். அவரு டைய கருத்த உதடுகள் அவ்வளவு அழகாக இருந்தன. அதில் முத்தமிட வேண்டும் என்று தோன்றியது. கதை முற்றும்.

அங்கிள், உங்களுடைய பெண்கள் மிகவும் அழகாக இருக்கிறார்கள். 'பாத்திங் பியூட்டி' என்ற உங்களுடைய திரைப்படம் ஒன்றை முன்பு ஒரு முறை பார்த்தேன். 'இத் தனை அழகான கால்களை எங்கிருந்து எப்படி அங்கிள் ஒன்றுதிரட்டினார்' என்று என் நண்பர்களிடம் பின்னர் கேட்டேன். ஏறக்குறைய இருநூற்று ஐம்பது கால்கள் அதிலிருந்தன என்று நினைக்கிறேன். அங்கிள் உங்கள் நாட்டில் பெண்களின் கால்கள் அப்படித்தான் இருக் குமா? அப்படி இருந்தால் கடவுள் புண்ணியத்தில் (அதாவது உங்களுக்குக் கடவுள்மீது நம்பிக்கை இருந் தால்) குறைந்தபட்சம் அதை பாகிஸ்தானில் கண்காட்சி யாக்குவதைத் தடுத்து நிறுத்துங்கள்.

இங்கு பெண்களின் கால்கள் உங்கள் நாட்டுப் பெண் களின் கால்களைவிட அழகாக இருப்பதுகூடச் சாத்தி யம். ஆனால் அதை இங்கு யாரும் வெளிச்சம் போட் டுக் காட்டுவதில்லை. இதைக் கொஞ்சம் நினைத்துப் பாருங்கள். நாங்கள் எங்கள் மனைவிமார்களின் கால் களை மட்டுமே பார்த்திருக்கிறோம். மற்ற கால்கள் எல் லாம் எங்கள் பார்வைக்குத் தடைசெய்யப்பட்டவையா கும். உங்களுக்குத் தெரியும் தானே, நாங்கள் மரபைப் போற்றுபவர்கள்.

நான் மீண்டும் தடம் புரண்டு போகிறேன் என்றாலும் இம்முறை மன்னிப்புக் கோரப் போவதில்லை. ஏனெனில் இத்தகைய எழுத்துகள்தான் உங்களுக்குப் பிடித்திருக்கும்.

என்னைப் பார்க்க வந்த அந்த நாகரிகமான மனிதர், உங்களுடைய தூதரகத்தைச் சேர்ந்தவர் என்பதைச் சொல்லிவிட வேண்டும் என்று தோன்றுகிறது. அவருக்காக ஒரு கதை எழுத வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். எனக்கு ஆங்கிலத்தில் எழுதத் தெரியாததால், எனக்கு அதைக் கேட்டதும் அதிர்ச்சியாக இருந்தது. அதனால் நான் அவரிடம், "சார் நான் உருது எழுத்தாளன். ஆங்கிலத்தில் எப்படி எழுத வேண்டும் என்றுகூட எனக்குத் தெரியாது" என்றேன்.

"நான் உருது மொழியில் ஒரு பத்திரிகை கொண்டு வருவதால், எனக்கு உருதுக் கதை தான் வேண்டும்" என்று பதில் தந்தார்.

இதற்கு மேலும் விசாரிக்க விரும்பாததால், "நான் சம்மதிக்கிறேன்" என்றேன்.

கடவுள்தான் என்னுடைய சாட்சி. உங்கள் உத்தரவின் பேரில்தான் அவர் என்னைப் பார்க்க வந்துள்ளார் என்று எனக்குத் தெரியாது. ஒருவேளை உங்களுக்கு நான் அனுப்பிய கடிதத்தை, இவருக்கு நீங்கள் படிக்கக் கொடுத்திருக்கலாம்.

இதையெல்லாம் விட்டுத் தள்ளுவோம். எத்தனை காலத்திற்குப் பாகிஸ்தானுக்கு உங்களுடைய கோதுமை தேவைப்படுகிறதோ, அதுவரை நான் உங்களிடம் மரியாதையில்லாமல் நடந்துகொள்ள முடியாது. ஒரு பாகிஸ்தானி என்ற முறையில் (என்னுடைய அரசாங்கம் சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்பட்டக் குடிமக

னாக என்னைப் பார்க்கவில்லை என்றாலும்) நான் கடவுளிடம் இதைத்தான் வேண்டிக்கொள்கிறேன்.

உங்களுக்கு உண்ணத் தகுந்த கீரை வகைகளும் வரகு தானியமும் தேவைப்படும் காலம் ஒன்று வரும். அன்று நான் உயிரோடு இருந்தால் நிச்சயமாக அவற்றையெல்லாம் உங்களுக்கு அனுப்பி வைப்பேன்.

என்னிடம் கதை கேட்ட அந்த நாகரிகமான மனிதர், அதற்கு நான் எவ்வளவு பணம் எதிர்பார்க்கிறேன் என்று தெரிந்துகொள்ள விரும்பினார்.

அங்கிள், பொய் சொல்வது உங்களுக்குச் சாத்தியமானது - நிஜமாகவே அதைச் செய்வதோடு, ஒரு கலையாகவே அதை மாற்றிவிட்டீர்கள். ஆனால் எனக்கு அப்படி செய்யத் தெரியாது.

இருந்தாலும் அன்றைய தினம் நான் பொய் சொன்னேன்.

'என் கதைக்கு ரூபாய் இருநூறு கேட்கிறேன்' என்றேன்.

உண்மை என்னவென்றால் இங்கு பெரும்பாலான வெளியீட்டாளர்கள் ஒரு கதைக்கு நாற்பது முதல் ஐம்பது ரூபாய் வரை தான் கொடுப்பார்கள். அதனால் என் கதைக்கு 200 ரூபாய் வேண்டுமென்று சொன்னபோது மிகவும் அசிங்கமாகவும் அவமானமாகவும் உணர்ந்தேன். ஆனால் எல்லாம் கடந்துவிட்டது.

அங்கிள், நான் அதிர்ச்சியடைந்த அதே அளவிற்கு நீங்கள் அனுப்பி வைத்த அந்த நாகரிகமான மனிதரும் அதிர்ச்சியடைந்தார். (இது உண்மையா அல்லது நடிப்பா என்று எனக்குத் தெரியாது) 'வெறும் இருநூறு ரூபாய் தானா... நீங்கள் குறைந்தபட்சம் ஐநூறு ரூபாயாவது கேட்க வேண்டும்' என்று சொன்னார்.

ஒரு கதைக்கு ஐநூறு ரூபாய் கேட்கலாம் என்று அதிக பட்சம் கற்பனையில்கூட என்னால் நினைத்துப் பார்க்க முடியாது என்பதால், அவர் பதில் என்னைத் தூக்கிவாரிப் போட்டது. இருந்தாலும் நான் சொன்னதிலிருந்து பின்வாங்கப் போவதில்லை என்பதால்,

"இங்க பாருங்க சார்., இருநூறு ரூபாய்தான். இது சம் பந்தமாக

இதற்கு மேலும் எந்தப் பேச்சுவார்த்தைக்கும் நான் தயாரில்லை" என்று பதில் தந்தேன்.

நான் குடித்திருப்பதாக நினைத்து அவர் திரும்பிச் சென்றுவிட்டார். நான் குடிக்கிறவன்தான். எதைக் குடிக் கிறேன் என்று என்னுடைய முதல் கடிதத்தில் விவரித் துள்ளேன்.

அங்கிள், இங்கு தயாரிக்கப்படும் அந்த விஷத்தைத் தொடர்ந்து ஐந்து வருடங்களாகக் குடித்துக்கொண்டிருந்தும், நான் உயிரோடு இருக்கிறேன் என்பதே எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. நீங்கள் எப்போதாவது இங்கு வர நேர்ந்தால் இந்தக் கேடுகெட்டதை உங்களுக்கும் குடிக்கக் கொடுக்கிறேன். நீங்களும் அதைக் குடித்துவிட்டு உங்களுடைய ஐந்து சுதந்திரங்களோடு என்னைப் போல் உயிரோடு இருக்கலாம்.

எப்படியிருந்தாலும் அடுத்த நாள் காலை நான் வராந்தாவில் சவரம் செய்துகொண்டிருந்தபோது உங்களுடைய இந்த நாகரிகமான மனிதர் மீண்டும் தோன்றி, "இங்கே பாருங்கள். இருநூறு ரூபாய்தான் வேண்டும் என்று அடம் பிடிக்காதீர்கள். முந்நூறு ரூபாயாவது வாங்கிக்கொள்ளுங்கள்" என்றார்.

நான் நல்லது என்று சொல்லி அவர் கொடுத்த முந்நூறு ரூபாயை வாங்கிக்கொண்டேன். அந்தப் பணத்தை

என் சட்டைப்பையில் வைத்தபின் அவரிடம், "நான் உங்களிடம் நூறு ரூபாய் அதிகமாகப் பெற்றுக்கொண்டிருக்கிறேன் என்றாலும் இதைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன். நான் எழுதுவது உங்களுக்கு ஏற்றதாக இருக்காது. அதில் மாற்றங்கள் செய்யும் உரிமையையும் உங்களுக்குக் கொடுக்க மாட்டேன்" என்றேன்.

இதற்குப் பிறகு அவர் என்னைப் பார்க்க வந்ததே கிடையாது. நீங்கள் அவரைச் சந்திக்க நேர்ந்தாலோ அல்லது அவருடைய அறிக்கையை உங்களிடம் சமர்ப்பிக்கும்போதோ உங்கள் பாகிஸ்தான் சகோதரரின் மகனுக்கு அதைத் தெரியப்படுத்துங்கள்.

அந்த முந்நூறு ரூபாயை நான் ஏற்கனவே செலவுசெய்துவிட்டேன். உங்களுக்கு அந்தப் பணம் திரும்ப வேண்டும் என்றால், மாதத்திற்கு ஒரு ரூபாய் என்ற வீதத்தில் திரும்பக் கொடுத்துவிடுகிறேன்.

உங்களுடைய ஐந்து சுதந்திரங்களோடு நீங்கள் சந்தோஷமாக இருக்கிறீர்கள் என்று நான் நம்புகிறேன்.

உங்களுக்குக் கீழ்ப்படிந்த

உங்கள் சகோதரனின் மகன்.

சாதத் ஹசன் மண்ட்டோ

***




## 15, மார்ச் 1954

31 லஷ்மி மேண்ஷன்
ஹால் வீதி
லாகூர்

அன்புள்ள அங்கிள்,

வணக்கம்

நீண்ட இடைவெளிக்குப் பிறகு நான் இதை எழுதுகிறேன். விஷயம் என்னவென்றால் நான் நோயுற்றிருந்தேன். எங்களுடைய கவித்துவ மரபில் நோய்க்கான மருந்து என்பது உமர்கயாமின் கவிதைகளிலிருந்து நேரடியாகத் தோன்றும் ஒயிலான கவர்ச்சி மங்கைகள், நீண்ட கழுத்துள்ள குவளையிலிருந்து, அருமருந்தை ஊற்றிக் கொடுப்பதில்தான் உள்ளது. இருந்தாலும் நான் இதையெல்லாம் வெறும் கவிதை என்றே நினைக்கிறேன். குவளையை ஏந்தி வரும் அழகு மங்கைகள் பற்றிப் பேசுவதற்கு ஒன்றுமில்லை. இங்கு தாடி முளைத்த கோரமான வேலையாட்கள்கூடக் குவளை ஏந்தி வருவது கிடையாது.

இந்த மண்ணிலிருந்து அழகெல்லாம் ஓடோடி விட்டது. பெண்கள் முகத்திரைக்கு வெளியே வந்துவிட்டார்கள் என்றாலும், அவர்களுடைய முகத்தை ஒரே ஒருமுறை பார்த்தால் போதும், முகத்திரைக்குப் பின்னாலேயே அந்த முகங்கள் இருந்திருக்கலாம் என்று தோன்றுகிறது. உங்களுடைய மாக்ஸ் ஃபேக்டர் அவர்

களுடைய முகங்களை மேலும் கோரமாக்கிவிட்டது. இலவச கோதுமை, இலவச இலக்கியம், இலவச ஆயு தங்கள் என்று நீங்கள் அனுப்பி வைக்கிறீர்கள். மிகத் தூய்மையான இருநூறு அமெரிக்கப் பெண்மணிகளை நீங்கள் ஏன் இங்கு அனுப்பி வைக்கக் கூடாது? குறைந் தபட்சம் குடிப்பதற்கு எப்படி ஊற்றிக் கொடுக்க வேண் டுமோ அப்படியாவது அவர்கள் ஊற்றிக் கொடுக்கட்டும்.

நான் நோயுற்றுப் போகக் காரணம், அசாத்திய வேகம் கொண்ட அந்த மதுதான். நான் கடவுளைச் சபிக்கி றேன். கலப்படம் ஏதுமில்லாமல் நேரடியாகவும் வெளிப் படையாகவும் சொல்வதென்றால் - அது விஷம். எனக்கு ஏனென்று தெரியாததும் இல்லை. புரிந்து கொள்ள முடி யாததும் இல்லை. ஆனால் கவிஞன் மீர் எழுதிய வரிகள் என் நிலைப்பாட்டிற்கு மிகச் சரியாகப் பொருந்துகின் றன.

எவ்வளவு சாதாரணமானவன் இந்த மீர்.

மருந்து விற்பவனின் மகன்தான் அவனை நோயுறச் செய்தான்

மருந்து விற்பவனின் மகன்தான் அவனுக்கு மருந்து களை வாங்கி வர ஓடினான்.

எந்த மருந்து விற்பவனின் மகனால் அவன் நோயுற் றிருக்கிறான் என்று மீர் அறிந்திருந்தும், ஏன் அதே மருந்து விற்பவனின் மகனிடம் மருந்தை எதிர்பார்க்கி றான் என்று யாருக்குத் தெரியும்? நான் எவனிடமிருந்து என் விஷத்தை வாங்குகிறேனோ அவன் என்னைக் காட்டிலும் மோசமாக நோயுற்றுக் கிடக்கிறான். நான் உயிரோடு இருப்பதற்குக் காரணம் கடின உழைப்புக்குப் பழக்கப்பட்டுப் போனதுதான். அவன் நிலையில் எனக்கு கொஞ்சமும் நம்பிக்கை இல்லை.

மூன்று மாதங்கள் மருத்துவமனையின் பொது வார்டில் இருந்தபோது அமெரிக்காவிலிருந்து எந்த உதவியும் எனக்குக் கிடைக்கவில்லை. நான் நோயுற்று இருந்ததையே நீங்கள் அறிந்திருக்க வாய்ப்பில்லை. அறிந்திருந்தால் நிச்சயமாக இரண்டு அல்லது மூன்று டெராமைசின் புட்டிகளை எனக்கு அனுப்பி வைத்து, அதற்காக இந்த உலகத்திலும் அடுத்த உலகத்திலும் நற்பெயரைப் பெற்றிருப்பீர்கள்.

அயல்நாடுகளில், எங்களை விளம்பரப்படுத்திக் கொள்வதில் செய்ய நிறைய இருக்கிறது என்றாலும் எங்களுடைய அரசாங்கம் எந்த நிலையிலும் எழுத்தாளர்கள், கவிஞர்கள் மற்றும் ஓவியர்கள் மீது கொஞ்சமும் ஈடுபாடு காட்டப் போவதில்லை.

என்னால் நினைவில் கொண்டு வர முடிகிறது. புலம்பிக்கொண்டிருந்த எங்களுடைய முந்தைய அரசாங்கம் 'ஃபிர்தௌஸி -இ- இஸ்லாம் ஹாபிஸ் ஜுலாந்தரி'யை மாதம் ஆயிரம் ரூபாய் சம்பளம் என்று பாடல்களைப் பிரபலப்படுத்தும் நிறுவனத்தின் இயக்குநராக நியமித்தது. பாகிஸ்தான் உருவாக்கப்பட்ட பிறகு அவருக்குக் கொடுக்கப்பட்டதெல்லாம் ஒரு வீடும் ஓர் அச்சு இயந்திரமும்தான். இன்று நீங்கள் செய்தித்தாள்களை விரித்துப் பார்த்தால் என்ன பார்க்க முடிகிறது? பாகிஸ்தானுக்கு தேசிய கீதம் உருவாக்க அமைக்கப்பட்ட குழுவிலிருந்து அவர் தூக்கி எறியப்பட்டதால், ஹாபிஸ் ஜுலாந்தரி புலம்பிக்கொண்டிருக்கிறார். உலகிலேயே பெரிய இஸ்லாமிய நாட்டிற்குத் தேசியகீதம் எழுதுவதற்கும், ஏன் அதை இசை வடிவில் கொடுப்பதற்கும் உள்ள ஒரே கவிஞர் அவர்தான். பிரிட்டிஷார் போய் விட்டதால் அவர் தன்னுடைய பிரிட்டிஷ் மனைவியை விவாகரத்து செய்துவிட்டார். இப்போது அவர் ஒரு அமெரிக்க மனைவியைத் தேடிக் கொண்டிருப்பதாகச் சொல்கிறார்கள்.

அங்கிள், கடவுளுக்குப் புண்ணியமாகட்டும். அவருக்கு இந்த விஷயத்தில் ஏதாவது உதவிசெய்து, மிக மோச மான முடிவிலிருந்து அவரைக் காப்பாற்றுங்கள்.[3]

உங்களுடைய சகோதரன் மகன்கள் கோடிக்கணக் கில் இருந்தாலும் இந்தச் சகோதரன் மகன் போன்ற உண்மையானவனை நீங்கள் அணுகுண்டு வெளிச்சத் தில்கூடக் காண முடியாது. அதனால் நான் சொல்வ தைக் கொஞ்சம் கவனமாகக் கேளுங்கள். நான் வேண் டுவதெல்லாம் இதுபோல் ஒரு அறிக்கையை நீங்கள் வெளியிட வேண்டும்: 'அதாவது உங்கள் நாடு (காலம் முடியும்வரை கடவுள் அதைக் காப்பாற்ற வேண்டும்) ஆயுதங்கள் கொடுத்து எங்கள் நாட்டிற்கு (இந்த நாட் டில் உள்ள மதுபானத் தயாரிப்பாளர்களை அந்தக் கட வுள் ஒழித்துக் கட்டட்டும்) உதவ வேண்டுமானால் சாதத் ஹசன் மண்ட்டோவை உங்களிடம் ஒப்படைத்துவிட வேண்டும்'.

ஒரே இரவில் என்னுடைய மதிப்பு எங்கோ போய் விடும். இந்த அறிவிப்புக்குப் பிறகு, நான் 'ஷாமா' மற் றும் 'டைரக்டர்' பத்திரிகைகளில் வரும் குறுக்கெழுத் துப் போட்டியை விளையாடுவதை நிறுத்திவிடுவேன்[4]. மிக முக்கியமானவர்கள் என்னைப் பார்க்க வீடு தேடி வருவார்கள். உங்களுடைய வழக்கமான பல்லிளிப்பை 'ஏர் மெயிலி'ல் எனக்கு அனுப்பி வைக்குமாறு உங்களி டம் கேட்டுக்கொள்கிறேன். அதை என் முகத்தில் ஒட்ட வைத்துக்கொண்டு வருகிறவர்களை ஒழுங்காக அப் போதுதான் வரவேற்க முடியும்.

இது போன்ற பல்லிளிப்புக்கு ஆயிரம் அர்த்தங்கள் உண்டு. உதாரணத்திற்கு, 'நீ கழுதை', 'நீ வழக்கத் திற்கு மாறாக அதி புத்திசாலி', 'எனக்கு மன அமைதி யைத் தவிர வேறு எதுவும் இந்தச் சந்திப்பில் கிடைக்க

வில்லை', 'நீ அமெரிக்காவில் தயாரிக்கப்பட்ட டி-சர்ட்', 'நீ பாகிஸ்தானில் தயாரிக்கப்பட்ட தீப்பெட்டி', 'நீ உள்நாட்டில் தயாரிக்கப்பட்ட மூலிகை மருந்து', 'நீ கோக்கோ-கோலா' இத்யாதி... இத்யாதி...

பாகிஸ்தானில் நான் வாழ விரும்பக் காரணம், பூமியில் இந்தத் துண்டுப் பகுதியை நான் நேசிக்கிறேன். இதிலிருந்து புறப்படும் தூசியெல்லாம் நிரந்தரமாக என் இதயத்தில் படிந்துவிட்டது. இருந்தாலும் என் ஆரோக்கியத்தைத் திரும்பப் பெறுவதற்கு உங்கள் நாட்டிற்கு வருவேன். என் இதயத்தைத் தவிர மற்ற எல்லாப் பகுதிகளையும் உங்கள் நாட்டு நிபுணர்களிடம் கொடுத்து அதையெல்லாம் அமெரிக்காவாக மாற்றிக்கொள்வேன்.

எனக்கு அமெரிக்க வாழ்க்கை முறை பிடித்திருக்கிறது. உங்கள் டி-சர்ட் வடிவமைப்பும் எனக்குப் பிடித்திருக்கிறது. அது மிகச் சிறப்பாக வடிவமைக்கப்பட்டிருப்பதோடு விளம்பரங்களுக்கும் மிகவும் உபயோகமானது. ஒவ்வொரு நாளும் அன்றைய பிரச்சார வரிகளை அதில் அச்சடித்து ஷ¨ஸானிலிருந்து காபி ஹவுஸ் வரை, பிறகு சீன உணவகம்[5] வரை போனால் அதில் உள்ள வரிகளை எல்லோரும் படிக்கலாம்.

டி-சர்ட் போட்டுக்கொண்டு, நீங்கள் அன்பளிப்பாகக் கொடுத்த பைப்பை என் பற்களுக்கு இடையில் வைத்துக்கொண்டு, மாலுக்குப் போக எனக்கு 'பேக்கார்ட்' வண்டியும் தேவை. என்னைப் பார்த்தவுடன் எல்லா முற்போக்கு மற்றும் முற்போக்கு அல்லாத எழுத்தாளர்கள் அனைவரும் அவர்களுடைய நேரங்களை வீணடித்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதை உணர வேண்டும்.

ஆனால் பாருங்கள் அங்கிள், காருக்கு பெட்ரோலை நீங்கள்தான் வாங்கித் தர வேண்டும். இருந்தாலும் எனக்கு 'பேக்கார்ட்' கிடைத்த அந்த நொடியிலேயே

'ஈரானின் ஒன்பது மணங்கு எண்ணெயும் ராதையும்' என்று கதை எழுதுவதாக உறுதிமொழி தருகிறேன். என்னை நம்புங்கள். அந்தக் கதை பிரசுரமாகும் அந்தக் கணத்திலேயே ஈரான் எண்ணெயோடு உள்ள எல்லாப் பிரச்சினைகளும் தீர்ந்து விடும். பிறகு உயிரோடு இருக்கிற மௌலானா ஜாஃபர் அலிகான்[6] 'லாய்ட் ஜார்ஜும் எண்ணெயும்' என்ற கவிதையை மாற்றி எழுத வேண்டி வரும்.

நான் உங்களிடம் எதிர்பார்க்கும் இன்னொரு விஷயம், குட்டிக்குட்டியான அணுகுண்டுகளை நீங்கள் எனக்கு அனுப்பி வைக்க வேண்டும். மிக நீண்ட நாட்களாக ஒரு நற்காரியம் செய்ய வேண்டும் என்று விருப்பம் கொண்டுள்ளேன். அது என்னவென்று தெரிந்து கொள்ள நீங்கள் ஆசைப்படுவது இயற்கையானதுதான்.

நீங்கள் எத்தனையோ நற்காரியங்கள் செய்திருக்கிறீர்கள். தொடர்ந்து செய்து கொண்டிருக்கிறீர்கள். 'ஹிரோஷிமாவை நிர்மூலமாக்கினீர்கள். நாகசாகியைத் தும்பும் தூசுமாக்கினீர்கள். ஒவ்வொன்றும் அதனதன் வடிவில் என்று பல ஆயிரம் குழந்தைகள் ஜப்பானில் பிறப்பதற்குக் காரணமானீர்கள். எனக்கு வேண்டியதெல்லாம், எனக்குச் சில சலவை இயந்திரங்களை அனுப்பி வையுங்கள். இது அப்படித்தான்: இங்கு பல முல்லா வகையறாக்கள் சிறுநீர் கழித்த பிறகு ஒரு களிமண் கட்டியை எடுத்து, ஒரு கையை நாடா அவிழ்க்கப்பட்ட சல்வாருக்குள் விட்டு சிறுநீர் கழித்த பிறகு சொட்டக் கூடிய கடைசி துளிகளைக் களிமண்கட்டியில் பிடித்த பிறகு அவர்கள் நடையைத் தொடருகிறார்கள். இதைப் பொதுவில் எல்லோரும் பார்ப்பது போல் செய்கிறார்கள். நான் விருப்பப்படுவது எல்லாம் அப்படி ஒருவன் தோன்றும் அந்தச் சமயத்தில் நீங்கள் எனக்கு அனுப்பி வைத்த அணுகுண்டை எடுத்து அவன்மீது வீச, அந்த முல்லா

வும் அவன் பிடித்துக்கொண்டிருக்கும் களிமண்கட்டியும் புகையாக மாற வேண்டும் என்பதே என்னுடைய விருப்பம்.

எங்களோடு நீங்கள் போட்டுள்ள இராணுவ ஒப்பந்தம் தனிச்சிறப்பு வாய்ந்தது. அதை நீங்கள் அப்படியே தொடர வேண்டும். இந்தியாவோடும் இதற்குச் சமமான ஒன்றை நீங்கள் கையெழுத்திட வேண்டும். போன யுத்தத்தில் நீங்கள் உபயோகித்து இப்போது பயனற்று இருக்கும் ஆயுதங்களை எல்லாம் எங்கள் இருவருக்கும் விற்பனை செய்யுங்கள். இந்தக் குப்பைகள் எல்லாம் உங்களிடமிருந்து அகற்றப்படுவதோடு, உங்களுடைய ஆயுதத் தொழிற்சாலைகளும் இனிமேல் வேலையற்று இருக்காது.

பண்டிட் ஜவஹர்லால் நேரு காஷ்மீரைச் சேர்ந்தவர். அதனால் அவருக்கு சூரிய ஒளியில் வைத்தவுடன் வெடிக்கும் துப்பாக்கி ஒன்றை நீங்கள் அனுப்பி வைக்க வேண்டும். நானும் காஷ்மீரைச் சேர்ந்தவன் தான். ஆனால் முசல்மான். அதனால்தான் எனக்கென்று சிறிய அணுகுண்டுகளைக் கேட்கிறேன்.

இன்னும் ஒரு விஷயம். எங்களால் அரசியல் சாசனத்தை உருவாக்க முடியவில்லை. அதனால் தயவு செய்து சில நிபுணர்களை அனுப்பி வையுங்கள். ஒரு தேசம், தேசிய கீதம் இல்லாமல் இருக்கலாம். ஆனால், அரசியல் சாசனம் இல்லாமல் இருக்க முடியாது - உங்களுடைய விருப்பமும் அதுவாக இருந்தால் மட்டும்.

இன்னும் ஒரு விஷயம். இந்தக் கடிதம் உங்களுக்குக் கிடைத்தவுடன் ஒரு கப்பல் முழுக்கத் தீப்பெட்டிகளை எனக்கு அனுப்பி வைக்கவும். இங்கு தயாரிக்கப்படும் தீக்குச்சிகளை ஈரானில் தயாரிக்கப்படும் தீப்பெட்டிகளோடு உரசினால்தான் பற்றவைக்க முடிகிறது. பாதிப்

பெட்டி வரை உபயோகித்த பின், மிச்சத்தை ரஷ்யாவில் தயாரிக்கப்பட்ட தீப்பெட்டிகளின் உதவியின்றி உபயோகிக்க முடியாமல் வீணாகிறது. ஆனால் அது தீக்குச்சி போல் அல்லாமல் பட்டாசுபோல் நடந்துகொள்கிறது.

அமெரிக்காவில் தயாரிக்கப்படும் மேலங்கி அற்புதமானது. அவை இல்லாமல் எங்கள் லண்டா பஜார்[7] வெறிச்சோடிக் கிடக்கும். அங்கிள், நீங்கள் ஏன் எங்களுக்கு டிரவுசர்களையும் அனுப்புவதில்லை. நீங்கள் உங்கள் டிரவுசர்களைக் கழற்றுவதே கிடையாதா? அப்படி ஒருவேளை செய்தால், அதை இந்தியாவிற்கு அனுப்பி வையுங்கள். இதிலும் ஒரு செயல்திட்டம் இருக்க வேண்டும். எங்களுக்கு டிரவுசர் இல்லாமல் மேலங்கியை மட்டும் அனுப்பி வையுங்கள். டிரவுசரை எல்லாம் இந்தியாவுக்கு அனுப்பி வையுங்கள். யுத்தம் என்று வந்தால் உங்களுடைய டிரவுசரும் மேலங்கியும் நீங்கள் கொடுத்த ஆயுதங்களைக் கொண்டு போரிட்டுக்கொள்ளும்.

சார்லி சாப்ளின் தன்னுடைய அமெரிக்கப் பிரஜா உரிமையைத் திருப்பிக் கொடுத்துவிட்டதாகக் கேள்விப்பட்ட விஷயம் என்ன? அந்தக் கோமாளி என்ன செய்துகொண்டிருப்பதாக நினைக்கிறான்? நிச்சயமாக அவன் கம்யூனிஸத்தால் அவதிப்பட்டுக்கொண்டிருக்க வேண்டும். இல்லையென்றால் வாழ்க்கை முழுக்க உங்கள் நாட்டில் வாழ்ந்தவன், பேரும் புகழும் பெற்றவன், பணமும் சம்பாதித்தவன், அவன் செய்தது போல் செய்திருப்பானா? எவராலும் கவனிக்கப்படாமல் லண்டன் தெருக்களில் பிச்சை எடுத்துத் திரிந்ததை அவன் மறந்துவிட்டான் போலும்!

அவன் ஏன் ருஷ்யாவிற்குப் போகவில்லை? ஆனால் அங்குதான் கோமாளிகளுக்குப் பஞ்சமே இல்லையே!

அவன் இங்கிலாந்துக்குத்தான் போக வேண்டும். அப்போதாவது அங்குள்ளவர்கள் அமெரிக்கர்போல் வாழ்க்கையில் வாய்விட்டுச் சிரிக்கக் கற்றுக்கொள்ளட்டும். தற்போதைய நிலையில் அவர்கள் எப்போதும் துயரம் நிறைந்தவர்களாகவும் தற்பெருமை கொண்டவர்களாகவும் இருக்கிறார்கள். அவர்களுடைய போலித்தன்மைகளில் சிலவற்றைக் கிழித்து எறிவதற்கு, இதுதான் சரியான சந்தர்ப்பம்.

ஹெட்டி லாமருக்கு காற்றில் ஒரு சுதந்திரமான முத்தம் கொடுத்து நான் இந்தக் கடிதத்தை முடித்துக் கொள்கிறேன்.

உங்கள் சகோதரனின் மகன்

சாதத் ஹசன் மண்ட்டோ.

***




## 21, பிப்ரவரி, 1954

31 லஷ்மி மேன்ஷன்
ஹால் வீதி
லாகூர்

அன்புள்ள அங்கிள்,

சில தினங்களுக்கு முன்புதான் நான் உங்களுக்கு எழுதியிருந்தேன் என்றாலும் மீண்டும் இப்போது எழுதிக்கொண்டிருக்கிறேன். பாகிஸ்தானுக்கு நீங்கள் செய்யும் ராணுவ உதவி, எந்த வேகத்தில் முன்னேறுகிறதோ அதே வேகத்தில் உங்கள் மீதான என்னுடைய மதிப்பும் மரியாதையும் கூடுகிறது. நான் உங்களிடம் சொல்லிவிடுகிறேன் - உங்களுக்கு தினமும் ஒரு கடிதம் எழுத வேண்டும் போல் தோன்றுகிறது.

உலகத்திலேயே மிகப் பெரிய இஸ்லாமிய நாடான பாகிஸ்தானின் ஸ்திரத்தன்மை பற்றி உண்மையிலேயே நீங்கள் கவலைப்படுவதால், இந்தியாவைப் பற்றியும் அது எழுப்பும் பரபரப்புகள் பற்றியும் கவலைப்படாமல் நீங்கள் எங்களோடு இராணுவ ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டும். ஏனெனில் ருஷ்ய கம்யூனிஸத்திற்கு மிகச் சிறந்த எதிர்ப்பு மருந்து எங்களுடைய முல்லாக்கள்தான். இராணுவத் தளவாடங்களை இங்கு குவிக்கத் தொடங்கியவுடன், அதையெல்லாம் முதலில் எங்களுடைய முல்லாக்களிடம்தான் கொடுக்க வேண்டும். அவர்களுக்கு அமெரிக்காவில் தயாரிக்கப்பட்ட பிரார்த்தனைப் பாயும் 'தஸ்பிஹ்'கூடத் தேவைப்பட

லாம். மறந்துவிடாதீர்கள் சிறுநீரின் கடைசிச் சொட்டு களை உறிஞ்சிக்கொள்வதற்குக் களிமண் கட்டிகளை யும் அனுப்பி வையுங்கள். கழுத்தை வெட்டக்கூடிய பிளேடுகளும் கத்தரிக்கோல்களும் இந்தப் பட்டியலில் முதலில் இருக்க வேண்டும். இவற்றோடு அமெரிக்கா வின் தலைமுடி சாயமும் சேர்க்கப்பட வேண்டும். இவை இந்த முல்லாக்களையெல்லாம் சந்தோஷமாக வைத்தி ருப்பதைச் சாத்தியப்படுத்தும்.

இந்த முல்லாக்களிடம் ஆயுதங்களைக் கொடுப்பதற் காகத்தான் இந்த இராணுவ ஒப்பந்தமே என்று நினைக் கிறேன். நான் உங்களுடைய பாகிஸ்தானிய சகோதர னின் மகன் என்பதால் உங்கள் நடவடிக்கைகளைப் புரிந்துகொள்ள முடிகிறது. உங்களுடைய அரசியல் விளையாட்டின் பாணியின் புண்ணியத்தால் இப்போது எல்லோரும் புத்திசாலிக் கழுதைகளாக மாறிவிடலாம்.

இந்த முல்லாக் கூட்டங்கள் அமெரிக்க பாணியில் ஆயுதங்களைத் தரித்துக்கொண்டால், எங்கள் நாட் டில் சோஷலிசம், கம்யூனிசம் என்று வெறி பிடித்திருக் கும் சோவியத் யூனியன் கடையை மூட வேண்டிதான் வரும். மிகத் துல்லியமாக 'ஷரியா'படி தயாரிக்கப்பட்ட அமெரிக்கக் கத்தரிக்கோல்களால் ஒழுங்குபடுத்தப் பட்ட தலையோடும் அமெரிக்க இயந்திரத்தால் தைக் கப்பட்ட பைஜாமாக்களோடும் உள்ள முல்லாக்களை என்னால் கற்பனைசெய்து பார்க்க முடிகிறது. சிறுநீர்ச் சொட்டுகளைப் பிடித்துக்கொள்ள அவர்கள் உபயோ கிக்கும் களிமண் கட்டிகூட - எந்த மனிதக் கைகளா லும் தொடப்படாதது, அமெரிக்கத் தயாரிப்பாகத்தான் இருக்கும். அவர்களுடைய பிரார்த்தனைப் பாய்கள்கூட அமெரிக்கத் தயாரிப்பாகத்தான் இருக்கும்.

பிறகு எல்லோரும் உங்கள் முகாமைச் சேர்ந்தவர்க ளாக மாறிவிடுவார்கள். வேறு எவருக்கும் அல்லாமல் உங்களுக்கு மட்டுமே விசுவாசமுள்ளவர்களாக இருப் பார்கள்.

இந்த நாட்டில் உள்ள அடித்தட்டு மக்களையும் அதற்கு சற்றே மேலுள்ள மக்களையும் முன்னேற்றுவ தற்கு உங்களால் முடிந்ததை நீங்கள் நிச்சயம் செய்வீர் கள் என்பதால், உங்களுடைய தேவைகளுக்கு ஆட் களை இந்தப் பட்டாளத்திலிருந்துதான் தேர்வு செய்வீர் கள் என்பது தெள்ளத் தெளிவானது. பல்வேறு அலுவ லகங்களில் பணிபுரியும் குமாஸ்தாக்களும் பியூன்களும் கூட இதற்கான மூலதனமாவார்கள்.

அவர்களுக்குக் கொடுக்கப்படும் ஊதியம் அமெரிக் கத் தரத்திற்கு ஒத்ததாக இருக்கும். இந்தப் பணத் திற்கு மத்தியில் தங்களைப் பார்த்தவுடன், இவர்களு டைய இதயங்கள் அழுகிப்போவது போல் கம்யூனிசம் மறைந்து போகும்.

வேலைக்கு ஆட்களைத் தேர்வுசெய்வதில் எனக்குப் பிரச்சினை ஏதுமில்லை. ஆனால் உங்கள் போர் வீரர் கள் இங்கு வருவதை நான் விரும்பவில்லை. காரணம் எங்களுடைய பெண்கள் எங்கள் இளைஞர்களுக்கு முதுகைக் காட்டிவிட்டு உங்களுடைய ஆண்களைத் தேர்ந்தெடுப்பதை நான் விரும்பவில்லை. நீங்கள் இங்கு அனுப்பி வைக்கும் இளைஞர்கள் திடகாத்திரமாகவும் அழகாகவும் இருப்பார்கள் என்பதில் எனக்குச் சந்தேக மேதுமில்லை.

நான் இதை உங்களிடம் ஒப்புக்கொள்ளவே விரும் புகிறேன். எங்களுடைய மேல்தட்டு வர்க்கம் அவர்க ளுடைய வெட்கத்தையெல்லாம் அமெரிக்கச் சலவைக் கடையில் போட்டுச் சுத்தப்படுத்திவிட்டதால், இனி மன

சாட்சி பற்றி அவர்கள் கவலைப்படப் போவதில்லை. கீழ் மட்ட வர்க்கத்தைப் பொறுத்தமட்டில் இது போன்ற விஷயங்கள் என்று வரும்போது இன்னும் தயக்கங்களைக் கொண்டிருக்கிறார்கள்.

எங்களுடைய இளைஞர்களுக்கு எப்படி நடனமாட வேண்டும் என்றும் பொது இடங்களில் எப்படி முத்தம் கொடுக்க வேண்டும் என்றும் அவர்களுக்குப் பாடமெடுத்து அவர்களுடைய சுயபிரக்ஞையைக் குறைப்பதற்கும் முதலுதவிகள் செய்வதற்கும் வேண்டுமென்றால் நீங்கள் அமெரிக்கப் பெண்களை அனுப்பி வைக்கலாம். அது உங்களுக்குத்தான் உபயோகமாக இருக்கும். 'பாத்திங் பியூட்டி' என்ற திரைப்படத்தில் நீங்கள் நூற்றுக்கணக்கான நிர்வாணக் கால்களைக் காட்ட முடியுமென்றால், அதிலிருந்து நாங்கள் ஒரே ஒரு பாடத்தையாவது கற்றுக்கொண்டு, எங்களுடைய ஒரே ஒரு ஸ்டுடியோவான 'ஷாநூர்'- ஐப் பயன்படுத்தி அந்தக் கால்கள் போலவே நகலெடுத்து ஒரு திரைப்படம் தயாரித்து அதை 'ஏ.பி.டபிள்யூ.ஏ.' (APWA: All Pakistan Women's Association) உறுப்பினர்களைச் சந்தோஷப்படுத்துவதற்காகவே அவர்களுக்குப் போட்டுக் காட்டுவோம்.

ஆமாம், 'ஏ.பி.டபிள்யூ.ஏ.' என்ற விசித்திரமான ஜந்து ஒன்று, இங்கு பிறந்துள்ளது. அது எங்கள் நாட்டில் உள்ள முக்கியமான மனிதர்களின் மனைவிமார்களையும் அவர்களுடைய பெண்களையும் சரியானபடி சந்தோஷமாக வைத்திருக்கிறது. 'ஏ.பி.டபிள்யூ.ஏ.' என்பது 'அகில பாகிஸ்தான் பெண்கள் அமைப்பு' என்பதன் சுருக்கம். என்னால் இதைக் காட்டிலும் சுருக்க முடியாது என்றாலும் சுருங்கிக்கொண்டே போவது எதுவென்றால் அதன் உறுப்பினர்கள் அணியும் 'ஜம்பர்' தான். அதாவது வயிற்றுப்பகுதியை வெளிப்படையாக எல்லோரும் பார்க்குமளவுக்கு அது சுருங்கிவிட்டது. இதில்

வேடிக்கை என்னவென்றால் இதுமாதிரி துண்டு துக்கா ணியை அணிந்துகொண்டிருக்கும் பெண்கள் எல்லாம் நாற்பது வயதைக் கடந்தவர்கள். காலம் அவர்களுடைய வயிற்றுப் பகுதியை அன்போடு நடத்தவில்லை. இது எதிர்பார்த்த ஒன்றுதானே. நான் ஒன்றை ஒப்புக்கொள் ளத்தான் வேண்டும். என்னால் வயோதிகத்தால் விழுந்த கோடுகளுடைய வயிற்றுப் பகுதியைப் பார்க்க முடிய வில்லை. அதன் உரிமையாளர்கள் அமெரிக்கர்களாக இருந்தாலும் சரி, பாகிஸ்தானியர்களாக இருந்தாலும் சரி.

'ஏ.பி.டபிள்யூ.ஏ.' உறுப்பினர்களுக்குச் சொற்பமான ஆடைகள் அணிவது குறித்துச் சரியான தொழில் நுட்பத்தை யாரேனும் கற்றுக் கொடுக்கும்வரை அது சிறுபிள்ளைத்தனமாகத்தான் தெரியும். உங்கள் நாட்டுப் பெண்கள் 65 வயதைக் கடந்திருந்தாலும் அவர்களு டைய வயிற்றுப் பகுதி தளராமல் இருக்கிறது. எப்படி இவ்வளவு சரியான முறையில் குழந்தைகளைப் பெற் றெடுக்கிறார்கள் என்றுதான் வியக்கத் தோன்றுகிறது. ஒருவேளை அவர்களுக்குக் குழந்தை பெற்றுக்கொள் வதோடு குழந்தைப் பிறப்பால் ஏற்படக்கூடிய நாசத்திலி ருந்து வயிற்றுப்பகுதியைக் காப்பாற்றிக்கொள்வதற்குச் சரியான தொழில்நுட்பம் தெரிந்திருக்கிறது போலும்.

சொற்பமான ஆடைகள் அணிவதற்கான நுணுக் கங்கள் எல்லாவற்றையும் அறிந்திருக்கக்கூடிய ஓரிரு ஹாலிவுட் நிபுணர்களை இங்கு அனுப்பி வைக்கும் யோசனை ஒன்றும் மோசமான ஒன்றல்ல. உங்கள் நாட் டில் பிளாஸ்டிக் சர்ஜரி ஒரு சிறந்த கலையாகவே மாற் றப்பட்டுள்ளது. எங்களுடைய பெண்கள் சிலரை அவர் களுடைய நாகரிகத்திற்கு ஏற்றாற்போல் அவர்களது இளமையையும் வனப்பையும் வடிவமைக்க, எங்களுக்

குக் குறைந்தபட்சம் ஆறு பிளாஸ்டிக் சர்ஜன்களாவது தேவைப்படுகிறார்கள்.

எங்கள் மரபுக் கவிதையில் எங்களுடைய காதலிக ளுக்கு இடை என்ற ஒன்று இருக்கவே கூடாது. எங்க ளுடைய புதுக்கவிதையில் இதற்கு எதிர்மாறாக, அவர் களுடைய இடை என்பது தடித்த அடிமரம் போன்றது. அங்கிள், ராணுவ ஒப்பந்தம் செய்துகொள்வதற்குமுன், காதலிகளுக்கு இடை இருக்கலாமா, கூடாதா என்பது பற்றி முடிவான தீர்ப்பை எடுப்பதற்கு நீங்கள் எங்கள் நாட்டிற்கு ஒருமுறை வந்து போக வேண்டும்.

மேலும் ஒரு விஷயம், உங்களுடைய திரைப்படத் தயாரிப்பாளர்கள், இந்தியத் திரைப்படத் துறையின் மீது மிக அதிகமான ஈடுபாட்டைக் காட்டுகிறார்கள். இதை எங்களால் பொறுத்துக் கொள்ள முடியாது. சமீபத்தில் 'கிரிகோரி பெக்' இந்தியாவில் இருந்தபோது, திரைப்பட நட்சத்திரம் 'சுரையா'வுடன் நின்று புகைப்படம் எடுத் துக்கொண்டதோடு, அவளுடைய அழகைப் புகழ்ந் தும் பேசியுள்ளார். மற்றொரு திரைப்படத் தயாரிப்பாளர், அவருடைய கைகளால் எங்களுடைய நட்சத்திரமான 'நர்கிஸை' அணைத்துக்கொண்டு முத்தம் கொடுத்தி ருக்கிறார். இது சரியில்லை. பாகிஸ்தான் நடிகைகள் எல்லோரும் காக்கைகள் போலவா கரைந்துகொண்டி ருக்கிறார்கள் இப்படி உதாசீனப்படுத்துவதற்கு.

எங்களிடமும் 'குல்ஷன் அரா' இருக்கிறார். பானை யைப் போல அவர் கருப்பாக இருந்தாலும், பல திரைப் படங்களில் அவர் முக்கியக் கதாபாத்திரத்தில் நடித்துள் ளார். அவருக்குத் தாராளமான இதயம் உண்டு என்றும் சொல்லப்படுவதுண்டு. 'ஷமிகா'-வைப் பொறுத்தமட்டில் அவருக்குக் கண்கள் சற்றே கோணலானது என்றாலும்,

நீங்கள் சற்றே கவனம் செலுத்தினால் போதும், அதைச் சரி செய்துவிடலாம்.[8]

நீங்கள் இந்தியத் திரைப்படத் தயாரிப்பாளர்களுக்கு நிதியுதவிகூடச் செய்வதாகக் கேள்விப்பட்டோம். அங்கிள், இதற்கெல்லாம் என்னதான் அர்த்தம்? யார் வேண்டுமானாலும், எவர் வேண்டுமானாலும் உங்களை வந்து பார்த்தால், வேண்டியது கிடைத்து விடும் போலிருக்கிறது.

உங்களுடைய 'கிரிகோரி பெக்' நரகத்திற்குப் போகட்டும். (என்னை மன்னித்துவிடுங்கள். எனக்குக் கோபம் தான் வருகிறது). எங்களுடைய ஒரே கதாநாயகனான சந்தோஷ் குமார், தனிமையில் இருப்பதால் உங்களுடைய இரண்டு அல்லது மூன்று நடிகைகளை இங்கு அனுப்பி வையுங்கள் என்று யோசனை தருகிறேன். சமீபத்தில் அவன் கராச்சிக்குச் சென்றிருந்தபோது, ஆயிரம் 'கோக்க-கோலா' பாட்டில்கள் குடித்துவிட்டு, இரவு முழுவதும் 'ரீட்டா ஹேவோர்த்'-தைக் கனவு கண்டுகொண்டிருந்தானாம்.

உங்களது உதட்டுச் சாயம் பற்றிச் சொல்வதற்குச் சில விஷயங்கள் இருக்கின்றன. எங்களுடைய உயர் வர்க்கப் பெண்களிடம், நீங்கள் அனுப்பி வைத்திருந்த முத்தத்தால் பாதிக்காத உதட்டுச் சாயம் பெருமளவு வரவேற்புப் பெறவில்லை. இளம் பெண்களாகட்டும், வயதான பெண்களாகட்டும்- இருசாராருமே, அது முத்தத்தால் பாதிக்காததல்ல என்று சத்தியம் செய்கிறார்கள். இவர்கள் சரியான முறையில் முத்தம் கொடுக்காததுதான் எல்லாப் பிரச்சினைகளுக்கும் காரணம் என்பதே என்னுடைய கருத்து. சிலர் தர்பூசணிப் பழத்தைச் சாப்பிடுவதுபோல் முத்தம் கொடுக்கிறார்கள். உங்கள் நாட்டில் சமீபத்தில் பிரசுரமான 'முத்தம் கொடுக்கும் கலை' என்ற

புத்தகத்தால் இங்கு எந்தப் பயனும் இல்லை. காரணம், அதிலிருந்து கற்றுக்கொள்வதற்கு எவருக்கும் எதுவு மில்லை. அதற்குப் பதிலாக, எங்களுடைய உயர்குடிப் பெண்களுக்கு முத்தம் கொடுப்பதற்கும் தர்பூசணிப் பழம் சாப்பிடுவதற்கும் உள்ள வேறுபாட்டைக் கற்றுக் கொடுப்பதற்கு ஒரு அமெரிக்கப் பெண்ணை விமானத் தில் அனுப்பி வைக்கலாம். இந்த வேறுபாட்டை அடித் தள மக்களுக்கும் அதற்குச் சற்றே மேலே உள்ளவர் களுக்கும் விளக்க வேண்டிய அவசியம் ஏதுமில்லை. காரணம், இவர்களுக்கு இது போன்ற விஷயங்களில் ஈடுபாடு இல்லாததோடு, அவர்கள் எப்படி இருக்கிறார் களோ அப்படியேதான் தொடர்ந்து இருப்பார்கள்.

என்னுடைய வயிறு அமெரிக்கக் கோதுமைக்குப் பழ கிப் போய்விட்டது என்பதை நீங்கள் தெரிந்துகொண் டால் சந்தோஷப்படுவீர்கள். உங்களுடைய கோதுமை யும் எங்களுடைய உணவு முறையும் மிகச் சரியாக இணைந்து போகக்கூடியது போலும். நாங்கள் கோது மையைச் சப்பாத்தியாக மாற்றி விடுவோம். நல்லெண் ணத்தின் அடிப்படையில், நீங்களும் கொஞ்சமேனும் பாகிஸ்தான் கோதுமையை இறக்குமதி செய்ய வேண் டும். உங்களுடைய மண், செழிப்பானது என்பதால், இந் தப் புது வகையான அமெரிக்க - பாகிஸ்தான் கோதுமை மிகச் சுலபத்தில் வேர்விடும். அது புதுவகையான மனி தர்களையும் பிறப்புக்கொள்ள வைக்கலாம். அதனு டைய வம்சத்தினர் நம்மிடமிருந்து வேறுபட்டவர்களா கக்கூட இருக்கலாம்.

நான் உங்களிடம் ரகசியமாக ஒன்று கேட்டு, அது உண்மைதானா என்று தெரிந்துகொள்ள விரும்புகி றேன். அதாவது டெல்லியில் (நான் இதை எங்கோ படித் திருக்கிறேன்). இளம் பெண்கள் இரவு வேளைகளில் நடக்கும்போது, அவர்களுடைய தலைமுடியில் மினுமி

னுக்கக் கூடிய விளக்கைப் பொருத்திக்கொள்கிறார்க ளாம். அதே செய்தியில், சிலர் அதை அவர்களுடைய ரவிக்கைக்குள் செருகி வைத்துக்கொள்கிறார்கள் என் றும் இருந்தது. இது உங்களுடைய யோசனைதான் என் றால், அதற்காக என்னுடைய பாராட்டுகள். உடல் முழு வதும் தடவிக்கொண்டால், ஆடைகளை மீறிப் பிரகா சிக்கக்கூடிய மாவை நீங்கள் ஏன் தயாரிக்கக் கூடாது!

பண்டிட் ஜவஹர்லால் நேரு, பழைய பாணியிலான மனிதர். எப்படியிருந்தாலும், பெண்களை ஏறெடுத்துப் பார்க்கக் கூடாது என்பதற்காகவே, இளைஞர்கள் தங் களுடைய கண்களை மூடிக்கொள்ள வேண்டும் என்று சொன்ன மனிதரின் சீடர்தானே! ஒருசமயம் அவர் இந் தியாவில் உள்ள பெண்கள் எப்படி உடை உடுத்த வேண்டுமென்றும் முக ஒப்பனைகள் செய்து கொள்ளக் கூடாது என்றும் சொல்லியிருக்கிறார். ஆனால், யார் அதைக் கேட்கப் போகிறார்கள்! 'ஹாலிவுட்' சொல்வ தைத்தான் இந்தப் பெண்கள் கேட்டுக்கொள்வார்கள். அதனால் இந்தியாவுக்கு இந்த மாவுத் தூளை உடன டியாக அனுப்பி வைக்குமாறு நான் கேட்டுக் கொள்கி றேன். பண்டிட் நேருவின் எதிர்வினை மிக வேடிக்கை யாக இருக்கும்.

இந்தக் கடிதத்தோடு, பம்பாயில் உள்ள மீனவப்பெண் போல் வேடம் போட்டுள்ள பாகிஸ்தானிப் பெண்ம ணியின் புகைப்படத்தை இணைத்துள்ளேன். அவளு டைய மறைப்பில்லாத வயிற்றுப் பகுதி வெளிப்படை யாகத் தெரிகிறது. இது எங்களுடைய பாகிஸ்தானி யப் பெண்ணை வைத்து உங்கள் பெண்களைச் சற்றே கோபமூட்டுவதற்குத்தான். இதை நீங்கள் ஏற்றுக் கொள்வீர்கள் என்று நம்புகிறேன்.

உண்மையுள்ள உங்கள்




31 லஷ்மி மேன்ஷன்
ஹால் வீதி
லாகூர்

மதிப்பிற்குறிய அங்கிள்,

நான் எப்போதும் உங்களை 'அன்புள்ள அங்கிள்' என்றுதான் விளித்திருக்கிறேன். ஆனால் இந்த முறை 'மதிப்பிற்குரிய அங்கிள்' என்று விளிப்பதற்கான காரணம், உங்களோடு ஒரு விஷயத்தில் நான் சண்டை போட வேண்டுமென்று நினைக்கிறேன். எனக்கான பரிசை, அதாவது அணுகுண்டை நீங்கள் இதுவரை அனுப்பி வைக்காதது, எனக்கு ஏமாற்றத்தைக் கொடுக்கிறது. நான் உங்களைக் கேட்கிறேன்: 'இதற்கெல்லாம் என்ன அர்த்தம்!'.

மாமாக்கள் தங்களுடைய சகோதரனின் மகன்களை, ஒரு தந்தை தன் மகனை நேசிப்பதைக்காட்டிலும் அதிகமாக நேசிப்பார்கள் என்று எப்போதும் கேள்விப்பட்டு வந்திருக்கிறேன். ஆனால் அமெரிக்காவில் அப்படியில்லை போலும். நம்மிடையேயான வேறுபாடு இது மட்டுமேயில்லை. உதாரணத்திற்கு ஒவ்வொரு நாளும் எங்களுடைய மந்திரிகள் மாறிக்கொண்டே இருப்பார்கள். ஆனால், அப்படி ஏதும் உங்கள் நாட்டில் நடப்பதில்லை. இங்கு, தீர்க்கதரிசியாக இருப்பதற்காகவே பிறந்தோம் என்று பிரகடனம் செய்து கொள்பவர்கள் உண்டு.

ஆனால் அப்படிப்பட்ட பறவைகள் உங்களிடையே கிடையாது. இங்கு அத்தகையவர்களின் தொண்டர்கள் அயல்துறை மந்திரியாகி, எத்தகைய மாற்றத்தையும் ஏற்

படுத்தாத கலவரத்தை நாடு முழுவதும் தூண்டிவிடு வார்கள்.[9] விசாரணை கமிஷன்கள் இத்தகைய கல வரங்களுக்கான காரணத்தைக் கண்டுபிடிக்கத்தான் என்றாலும், இந்த கமிஷன்களை வழி நடத்துவது, அவர் களைக் காட்டிலும் மேலே உள்ளவர்களின் அதிகாரத் தால்தான். இத்தகைய சுவாரசியமான விஷயங்கள் உங் கள் நாட்டில் நடப்பதில்லை.

அங்கிள், நான் உங்களிடம் கேட்கிறேன். ஏன் உங் கள் நாட்டில் தீர்க்கதரிசிகள் பிறப்பதில்லை. கடவுள்மீது ஆணையாகச் சொல்கிறேன், உங்களுக்குத் தேவைப் படுவதெல்லாம் ஒன்றே ஒன்றுதான். வாழ்க்கை முழு வதற்கும் அது பொழுதுபோக்குவதற்கு உதவும் என்று உறுதியாகச் சொல்கிறேன். குறிப்பாக உங்களுடைய வயதான காலத்தில் இது மிகவும் பயனுள்ளதாக இருக் கும். எருமைகள் கூட்டத்தை - அமெரிக்காவிலும் இவை இருக்கும் என்று நம்புகிறேன் - கலைக்க உங்களுடைய கைத்தடி போல் அது உதவும்.

ஒரு வேளை, உங்களால் ஒரு தீர்க்கதரிசி யைப் பெற்றெடுக்க முடியவில்லை என்றால், நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் இதுதான்: என்னிடம் தெரி யப்படுத்துங்கள், நான் 'மீர்ஷா பாஷீருதீன் முஹமது'- விடம் ஒரு மகனை உங்களிடம் அனுப்பி வைக்குமாறு வேண்டிக் கொள்கிறேன்.[10] ஆனால், மிகத் துரிதமாக முடிவை எடுங்கள். இல்லையென்றால், உங்களுடைய எதிரியான ருஷ்யா இதேபோல் ஒரு வேண்டுகோளை முன்வைத்துவிட்டால், நீங்கள் வெறுங்கையோடுதான் திரும்ப வேண்டியிருக்கும்.

போகட்டும், நாம் அணுகுண்டுக்குத் திரும்புவோம். தொளதொளவென்று டவுசர் போட்டுக்கொண்டு, உள்ளே கையைவிட்டு சிறுநீரின் கடைசிச் சொட்டுக ளைக் களிமண் கட்டிகளில் ஏந்துபவர்கள், வெடித்துப்

போவது மாதிரி சிறு அளவுதான் எனக்குத் தேவையானது. என்னுடைய வேண்டுகோளை நீங்கள் கவனத்தில் எடுத்துக்கொள்ளவில்லை என்றே நினைக்கிறேன். ஒரு வேளை நீங்கள் உங்களுடைய ஹைட்ரஜன் குண்டு பரிசோதனையில் தீவிரமாக இருந்திருக்கலாம்.

அங்கிள், எப்படியிருந்தாலும் ஹைட்ரஜன் குண்டு என்பது என்ன? காற்றைக் காட்டிலும் ஹைட்ரஜன் இலகுவானது என்று எங்களுக்கு எட்டாம் வகுப்பில் சொல்லிக் கொடுக்கப்பட்டது. இந்தப் பூமியிலிருந்து எந்த நாட்டின் எடையைக் குறைக்க விரும்புகிறீர்கள் என்று என்னிடம் தயவுசெய்து சொல்லுங்களேன்? ருஷ்யா?

ருஷ்யா நைட்ரஜன் குண்டுகள் தயாரித்துக் கொண்டிருப்பதாகக் கேள்விப்பட்டேன். நைட்ரஜன் என்ற வாயுவை சுவாசித்த மனிதன் சாகாமல் இருக்க முடியாது என்று எங்களுக்கு எட்டாம் வகுப்பில் சொல்லிக் கொடுக்கப்பட்டது. நான் நினைக்கிறேன் இந்த நைட்ரஜன் குண்டுகளுக்கான பதில் ஆக்ஸிஜன் குண்டுகள் தான். நைட்ரஜனும் ஆக்ஸிஜனும் சந்தித்தால், அது தண்ணீராக மாறிவிடும் என்று எங்களுக்கு எட்டாம் வகுப்பில் சொல்லிக் கொடுக்கப்பட்டது. ருஷ்யர்கள் அவர்களுடைய நைட்ரஜன் குண்டுகளை மேலே விட்டெறிய, நீங்கள் உங்களுடைய ஆக்ஸிஜன் குண்டுகளைக் கீழே விட்டெறிய, அவையெல்லாம் தண்ணீராக மாறிவிட... இந்த உலகம்தான் எவ்வளவு வேடிக்கையானதாக இருக்கும்!

இது 'ஜோக்' தான். ஆனால் இந்த உலகத்தில் நிலையான அமைதிக்காக ஹைட்ரஜன் குண்டுகளைத் தயாரித்துள்ளீர்கள் என்று கேள்விப்பட்டேன். வரும் காலங்களில் என்ன நடக்கும் என்று கடவுளுக்குத் தான் வெளிச்சம் என்றாலும், என்னைப் பொறுத்தமட்டில், உங்கள்மீது முழு நம்பிக்கையுள்ளது. ஏனெனில்,

நான் உங்களுடைய கோதுமைகளை உண்டவன் என் பதோடு, கூடுதலாக உங்களுடைய சகோதரனின் மக னுமாவேன். இளையவர்கள், பெரியவர்கள் பேச்சைக் கேட்க வேண்டும். எனக்குத் தெரிய வேண்டியதெல் லாம் நிலையான அமைதியை நிலைநாட்டுவதற்காக, இந்தப் பூமியின் முகத்திலிருந்து எத்தனை நாடுகள் அகற்றப்பட வேண்டும் என்பது மட்டும்தான். பள்ளியில் படிக்கும் என்னுடைய அக்கா குழந்தை, நேற்று உலக வரைபடத்தை வரையச் சொல்லிக் கேட்டுக்கொண்டது. ஆனால் சற்று காத்திருக்க வேண்டுமென்றும், முதலில் நிலைத்து நிற்கப்போகிற நாடுகளின் பெயர்களை அங் கிளிடம் பேசி, தெரிந்துகொள்கிறேன் என்றும் சொன் னேன். உங்களிடம் பேசிய பிறகு உலக வரைபடத்தை வரைந்து கொடுப்பதாக உறுதி தந்தேன்.

இந்தப் பூமியிலிருந்து ருஷ்யாவை அகற்றிவிடுமாறு நான் உங்களிடம் மண்டியிட்டு வேண்டிக்கொள்கிறேன். எனக்கு இயற்கையாகவே அதன்மீது எரிச்சல் உண்டு. போன வாரமோ, அதற்கு முந்தியோ, நல்லெண்ண வெளிப்பாடாக, கலைஞர்கள் குழு ஒன்று எங்கள் நாட் டிற்கு வந்தது. இப்போது அவர்கள் எல்லாம் திரும்பிச் சென்றிருக்க வேண்டும். ஆனாலும் பெண் பாடகர்களும் நடனக் கலைஞர்களும் அவர்களுடைய நிகழ்ச்சியின் மூலம் பாகிஸ்தானிகளின் எளிமையான இதயங்களைக் கொள்ளை கொண்டார்கள். இதைச் சமன்படுத்துவதற் காக நீங்களும் பாடக்கூடிய, நடனமாடக்கூடிய பெண் களைக் கொண்ட நல்லெண்ணக் குழுவை அனுப்பி வைக்க வேண்டும்.

முன்னரே, நான் உங்களிடம் ஹாலிவுட்டைச் சேர்ந்த மில்லியன் டாலர் கால்களைக் கொண்ட பெண்களை அனுப்பி வைக்குமாறு சொல்லியிருந்தேன். ஆனால் நீங்கள் உங்களுடைய சகோதரனின் முட்டாள் மக

னுக்கு எந்தக் கவனமும் கொடுக்காமல், உங்களுடைய ஹைட்ரஜன் குண்டு பரிசோதனைகளில் மும்முரமாக இருந்து விட்டீர்கள்.

தயவுசெய்து உங்கள் தூதரகத்தில் கேட்டு இவை யெல்லாம் உண்மையா இல்லையா என்று தெரிந்துகொள்ளுங்கள். இப்போதெல்லாம் 'கானும்' மற்றும் 'மேடம் அஸ¨ரா' என்ற இரண்டு ருஷ்யக் கலைஞர்களின் பெயர்களை மட்டும்தான் எங்கும் கேட்க முடிகிறது. எங்களிடம் வறண்டுபோன தூய்மைவாத செய்தித்தாள் ஒன்றுண்டு. அதன் பெயர் 'ஜமீன்தார்'. ருஷ்யர்களால் முழுவதுமாய் வெற்றிகொள்ளப்பட்ட அதிலிருந்த ஒரு செய்தி இதுபோல் இருந்தது (நான் அப்படியே அதைக் கொடுக்கிறேன்): 'கூட்டம் நிரம்பி வழிந்த அந்த வெட்டவெளி அரங்கில், அவர் பாடிக்கொண்டிருந்தபோது, வேறொரு சத்தத்தைக் கேட்க முடிந்ததென்றால், அது பார்வையாளர்களின் மூச்சுச் சத்தம்தான். நட்சத்திரங்கள் பதிக்கப்பட்ட வானம் அவருடைய தலைக்கு மேல் பாதுகாப்பு வளையம்போல் இருந்தது என்றால், மேடைக்குப் பின்புறத்தில் பச்சைப் பசேலென இருந்த மரங்கள் ஆச்சரியத்தில் உறைந்துபோயிருந்தன. இந்த ஆழ்ந்த அமைதியில் அந்த இராப்பாடி பறவையோ, அதனுடைய இதயத்தை வெளியே கொட்டிப் பாடிக் கொண்டிருந்தது. தீர்க்கமாக, ஆழமாக ஊடுருவக்கூடிய, அவரது குரல் இரவின் கருத்த மார்பகங்களில், ஒளிக்கீற்றான கத்தியைப் பாய்ச்சுவதுபோல் இருந்தது'.

அங்கிள், இதைப் படித்தீர்களா? நான் சொல்கிறேன், இது மிகவும் கவலைக்கிடமான விஷயம். உங்களுடைய ஹைட்ரஜன் குண்டுகளைக் கொஞ்சம் தனியே ஒதுக்கி வைத்துவிட்டு, இந்தச் சூழ்நிலையின் மீது கொஞ்சம் கவனம் செலுத்துங்கள் என்றே நான் உங்களுக்கு அறிவுரை சொல்ல விரும்புகிறேன். பட்டாசு வெடி போன்ற

பெண்களுக்கு, உங்களிடம் பற்றாக்குறை கிடையாது என்பதால் அவர்களில் கொஞ்சம்போல் பொறுக்கியெ டுத்து எங்களிடம் உடனடியாக அனுப்பி வையுங்கள் என்பதே என் யோசனை. அதே சமயத்தில் அவர்கள் எல்லொரிடமும் மில்லியன் டாலர் கால்கள் இருக்கு மாறு கவனமாய் இருங்கள். என்னவானாலும், அவர் கள் அந்த விசித்திரமான முத்தங்களை எங்களுடைய பாகிஸ்தான் ஆண்கள்மீது விட்டெறிய பயம் கொள்ளக் கூடாது. ஒரு பிளேன் முழுக்க 'கோலினாஸ்' பற்பசையை அனுப்பி வைப்பதாக இருந்தால், அதை எங்கள் ஆண் களிடம் கொடுத்து அவர்களுடைய பற்கள் ஒழுங்காகத் தேய்க்கப்பட்டு நாற்றமடிக்காமல் இருக்குமாறு பார்த் துக்கொள்கிறேன்.

இது ருஷ்யாவைத் தூக்கியெறியுமென்று நான் உறுதி யளிக்கிறேன். அவர்களுடைய 'காநூம்' மற்றும் 'மேடம் அஸ¨ரா' வெறும் நினைவுகளாக மட்டுமே இருப்பார் கள். 'ஜமீன்தார்' பத்திரிகையின் ஆசிரியர் பகல் வெளிச் சத்திலேயே நட்சத்திரங்களைப் பார்க்கத் தொடங்கிவி டுவார். அங்கிள், இன்னுமொரு விஷயம். நீங்கள் 'எலி ஸபெத் டெய்லர்'-ஐ அனுப்பி வைப்பதாக இருந்தால், என்னைத் தவிர வேறு எவருக்கும் முத்தம் கொடுக்கக் கூடாது என்று அறிவுரை சொல்லியனுப்பி வையுங்கள். எனக்கு அவருடைய உதடுகள் மிகவும் பிடித்துப்போய் விட்டன.

ஆமாம், இந்த நல்லெண்ணக் குழுவில் 'பால் ராபி ஸன்' மட்டும் சேர்க்கப்படக் கூடாது. அவன் ஒரு 'பொறம்போக்கு கம்யூனிஸ்ட்'. இதுவரை நீங்கள் ஏன் அவனைக் கிழக்கு ஆப்பிரிக்காவிற்கு அனுப்பி வைக் கவில்லை என்பது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. அங்கு, அவனை 'மௌ மௌ' கூட்டத்தைச் சேர்ந்தவன் என்று சுட்டுத் தள்ளி இருப்பார்கள்.

நான் மிக ஆவலுடன் உங்களுடைய நல்லெண் ணக் குழுவுக்காகக் காத்திருக்கிறேன். 'நவாய் வாஹ்'ன் ஆசிரியரிடம் சொல்லி, உடனடியாக ஒரு பிரச் சார இயக்கத்தைத் தொடங்கச் சொல்கிறேன். அவர் அடக்கமானவர். நல்ல மனிதரும்கூட. நான் கேட்டுக் கொண்டால் நிச்சயமாக முடியாது என்று சொல்லமாட் டார். இருந்தாலும், கையெழுத்துப் போடப்பட்ட 'ரீட்டா ஹேவோர்த்'தின் புகைப்படத்தை அன்பளிப்பாக அவ ருக்கு அனுப்பி வைக்கலாம். அவரை சந்தோஷப்படுத் துவதற்கு இதுவே போதுமானது.[11]

மேலும், உங்களுடைய நல்லெண்ணக்குழு லாகூர் வரும்போது 'ஷோரிஷ் காஸ்மீரி' துணையோடு அவர்க ளுக்கு "ஹீரா மண்டி'யைச் சுற்றிக்காட்டுவதாக உறுதிய ளிக்கிறேன்.[12] அவர்தான் இந்தப் பகுதிக்கான தன்னல மற்ற தியாகி (சமீபத்தில் 'அந்தத் தெருவில்' என்றொரு புத்தகத்தில் அதைப் பற்றி எழுதியிருக்கிறார். உங்கள் தூதரகத்தில் சொல்லி, அதன் மொழிபெயர்ப்புப் பிர தியை உங்களுக்கு அனுப்பி வைக்கச் சொல்லுங்கள்) இங்கு, "ஹீரா மண்டி'யில் எல்லா வண்ணங்களிலும் எல்லா வடிவங்களிலும் அற்புதமான பட்டை தீட்டப்ப டாத வைரங்கள் நிறையவே இருக்கின்றன.

மற்ற விஷயங்களுக்கு வருவோம். சமீபத்தில் பண்டிட் நேரு, பாகிஸ்தானுக்கு ஆயுத உதவி செய்வதாக நீங் கள் எடுத்த முடிவை விமர்சித்துள்ளார். மேலும் மத்தியக் கிழக்கு நாடுகளில் உங்கள் அரசியல் செயல் திட்டம் பற் றியும் இந்தியாவோடு உங்களுக்கு உள்ள முரண்கள் பற் றியும் பேசியுள்ளார்.

இதன் விளைவாக நீங்கள் இந்தியா மீதும் அதிக கவனம் செலுத்தும் செயல் தந்திரங்களை உருவாக்கி யுள்ளீர்கள் என்று என்னிடம் சொல்லப்பட்டது.

உங்களுடைய தெற்காசியா மற்றும் ஆப்பிரிக்கா விவ காரங்களுக்கான பொறுப்பிலிருப்பவர் இந்தியாவைப் பற்றி மிகவும் நல்ல விதமாகப் பேசியிருப்பதைப் பார்த் தால், வாஷிங்டன், எப்படியேனும் இந்தியாவின் நல் லெண்ணத்தைப் பெறுவதில் குறியாக இருப்பதுபோல் தெரிகிறது. பாகிஸ்தான் மற்றும் இந்தியா இரண்டையும் நீங்கள் திருப்திப்படுத்த முயலுவதன் மூலம், அணைந் தணைந்து எரிந்துகொண்டிருக்கும் ஜனநாயகம் என்ற விளக்கு அணைந்து போகாமலிருக்க முயல்கிறீர்கள் என்று எனக்குத் தெரிந்திருந்தாலும் இதைச் செயல்ப டுத்துவதற்கான வழிமுறைகளில் ஒன்று, அந்த விளக் கில் எப்போதும் தேவைப்படுமளவிற்கு எண்ணெயை ஊற்றி விடுவதுதான். பிறகு எப்போதுமே பற்றாக்குறை என்ற பேச்சை நீங்கள் கேட்க வேண்டிய அவசியமே இருக்காது. அங்கிள், நான் சொல்வது சரிதானே?

நீங்கள் சுதந்திரமான பாகிஸ்தானை விரும்புவதற் குக் காரணம், பல நூற்றாண்டுகளுக்கு முன் எங்கள்மீது படையெடுக்க உபயோகிக்கப்பட்ட கைபர் கணவாய்மீது உங்களுக்கு உள்ள காதல்தான். கைபர் கணவாய்தான் உண்மையில் எவ்வளவு அழகு வாய்ந்தது. நான் என்ன சொல்ல வருகிறேன் என்றால், இதைவிட்டால் பாகிஸ் தானில் வேறு என்னதான் இருக்கிறது!

அடுத்து, நீங்கள் சுதந்திரமான இந்தியாவை விரும் புவதற்குக் காரணம் இதுதான்: போலந்து, செக்கோஸ் லொவாகியா, கொரியா போன்ற நாடுகளில் ருஷ்யா செய்வதை நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். அந்தச் சிவப்புப் பேரரசு, அதனுடைய அரிவாள் சுத் தியலோடு எங்கே இந்தியாமீது பாய்ந்துவிடுமோ என்று அச்சம் கொள்கிறீர்கள். இந்தியா அதனுடைய சுதந்தி ரத்தை, ஒருவேளை இழக்க நேரிட்டால் அது மிகப்

பெரிய துயரமாவதோடு, உங்கள் முதுகுத்தண்டு நடுங்கிக்கொண்டிருப்பதையும் என்னால் பார்க்க முடிகிறது.

நட்சத்திரங்கள் பொறிக்கப்பட்ட உங்களுடைய தொப்பி மீது ஆணையிட்டுச் சொல்கிறேன், உங்களைக் காட்டிலும், உண்மையான மனிதர் இதுவரை பிறக்கவேயில்லை. கடவுள் உங்களுக்கு நீண்ட ஆயுளைக் கொடுக்கட்டும். உங்களுடைய ஏழு சுதந்திரங்களும் தொடர்ந்து செழிக்கட்டும்.

எங்களிடம் மேற்கு பஞ்சாப் என்று அழைக்கப்படும் பகுதியொன்று உண்டு. அதன் முதலமைச்சர் 'ஃபெரோஸ் கான் நூன்' என்று அழைக்கப்படுபவர் (அவருடைய மனைவி ஒரு பிரிட்டிஷ்காரர்) பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்க வேண்டும். பஞ்சோலி ஃபிலிம் ஸ்டுடியோவிற்கு அடுத்தாற்போல் இருக்கும் அவருடைய வீட்டில், சமீபத்தில் ஒரு கூட்டம் ஒன்றை அவர் நடத்தினார். அதில் முஸ்லிம் லீகைச் சேர்ந்த தொண்டர்களுக்கு (சமீபத்தில் இவர் கிழக்கு பாகிஸ்தானில் மிகக் கேவலமான தோல்வியைச் சந்தித்தவர்) அவரவருடைய தொகுதிகளுக்குச் சென்று, சிவப்புக்கு எதிராகப் போராட்டத்தைத் தீவிரப்படுத்த அறிவுறுத்தியுள்ளார்.

இங்கே பாருங்கள் அங்கிள், தயவுசெய்து 'ஃபெரோஸ் கான் நூன்'க்கு உங்களுடைய நன்றியைத் தெரிவிப்பதோடு, நல்லெண்ணத்தின் அடையாளமாக, அவருடைய மனைவிக்கு ஆயிரம் தையல்கள் போடப்பட்ட இரண்டு மூன்று ஆடைகளை அனுப்பி வையுங்கள்.

இல்லை வேண்டாம், இப்போதுதான் நினைவிற்கு வருகிறது. இப்போதெல்லாம் அவர் புடவை மட்டும்தான் கட்டுகிறார் என்பதை மறந்துவிட்டேன்.[13]

எப்படியிருந்தாலும், கம்யூனிஸத்திற்கு எதிரான ஃபெரோஸ் கான் நூன்-ன் யுத்தம் என்பது நல்ல அறிகுறிதான். ஏனெனில், அது தோழர் 'ஃபெரோஸு'`'தின் மன்

ஸுர்'-ஐ மீண்டும் சிறைக்கு அனுப்புவதாகத்தான் அர்த் தமாகும். [14]

ஆஸ்துமா உள்ள அவரைப் போன்றோரை எப்படியி ருந்தாலும் எனக்குப் பிடித்ததே கிடையாது.

இப்போது, நான் உங்களுக்கு உண்மையிலேயே நல்ல அறிவுரை ஒன்றைச் சொல்லப் போகிறேன். சமீபத் தில் எங்கள் அரசாங்கம், தோழர் 'சிப்தே ஹசன்'-ஐச் சிறையிலிருந்து விடுதலை செய்தது.[15] தயவுசெய்து அவனை எப்படியாவது கடத்திக் கொண்டு போய்விடுங் கள். ஏனெனில், அவன் என்னுடைய நண்பன் மட்டுமல் லாமல், அவனுடைய மென்மையான, எல்லோரையும் கவரக்கூடிய பேச்சுத் திறமையில், ஒரு நாள் என்னை யும் கம்யூனிஸ்டாக மாற்றிவிடுவதற்கான சாத்தியங்கள் உண்டு. நான் பயம் கொண்டவனில்லைதான். இறுதி யாக, நான் கம்யூனிஸ்டாக மாற வேண்டி வந்தாலும் என்னைப் பொறுத்தமட்டில், அது எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தாது என்பதை உங்களிடம் சொல்லிக்கொள்கி றேன். இருந்தாலும், அது உங்கள்மீது மோசமான விமர் சனங்களை உருவாக்கலாம். உங்கள் சகோதரனின் மகன், எப்படி இது போன்ற முட்டாள்தனத்தில் சிக்கிக் கொண்டான் என்று மக்கள் உங்களைப் பார்த்துத்தான் கேட்பார்கள்.

இங்கு எப்படி வாழ்ந்துகொண்டிருக்கிறோம் என்பது பற்றி சில வார்த்தைகள். அங்கிள், பெருமதிப்பிற்குரிய உங்களுடைய தாடிமீது சத்தியமிட்டுச் சொல்கிறேன், என் வாழ்க்கை மிகவும் கடினமாக உள்ளது. நான் எவ் வளவு மோசமான நிலையில் இருக்கிறேன் என்றால், நல்வாழ்விற்காக எப்படிப் பிரார்த்தனை செய்வது என்ப துகூட எனக்கு மறந்துவிட்டது. இங்கு ஒருவன் சரியான ஆடையைக்கூட அணிய முடியாமல்தான் இருக்கிறான். துணிமணிகள் விற்கப்படும் விலையில், புதைக்கப்ப

டும்போதுகூட முழுமையாய் மறைத்துக்கொள்ள முடியாமல்தான் இருக்கிறது. உயிரோடு இருப்பவர்கள் கந்தலில் கிடக்கிறார்கள். அதனால்தான், 'நிர்வாண கிளப்' என்று ஒன்றைத் தொடங்குவதாக முடிவெடுத்து விட்டேன். அதில் உள்ள ஒரே சிக்கல், அதன் உறுப்பினர்கள் எதை உண்பார்கள் என்பதுதான். ஒருவர் மற்றொருவர் நிர்வாணத்தை என்றே நினைக்கிறேன். ஆனால் அது அவ்வளவு ருசிகரமாக இருக்காது.

இங்கு வாழ்க்கை வெறிச்சோடி, சுவாரசியமற்று, கடினமாகத்தான் உள்ளது. ஆனால் அங்கிள், காலம் எவ்வளவு கடினமானதாக இருந்தாலும், நான் மட்டும் உங்களை மறக்கவேமாட்டேன்.

தயவுசெய்து, சீக்கிரமாக இனிமையான குரல் கொண்ட, அழகான பெண்களைக் கொண்ட நல்லெண்ணக் குழுவை அனுப்பி வையுங்கள். எங்களுடைய கஷ்டங்களை மீறி எப்படியேனும் வாழ்ந்துகொள்கிறோம். மிஸ். டைலரின் உதடுகளை அச்சிட்டு அனுப்புவது, மிகவும் வரவேற்கத் தகுந்ததாக இருக்கும்.

உண்மையுள்ள உங்கள்

பாகிஸ்தானி சகோதரனின் மகன்

சாதத் ஹசன் மண்ட்டோ

***




அன்புள்ள அங்கிள்,

வாழ்த்துகள்.

என்னுடைய ஆறாவது கடிதம். அதுவும் நானே தபாலில் சேர்த்தது காணாமல் போய்விட்டது.

அது எங்கு போனது என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்.

சாதத் ஹசன் மண்ட்டோ.

***




## 14, ஏப்ரல் 1954

31 லஷ்மி மேன்ஷன்
ஹால் வீதி
லாகூர்

அன்புள்ள அங்கிள்,

வாழ்த்துகள்.

நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும். ஆனால் எனக்கும் குழப்பமாகத்தான் இருக்கிறது. என்னுடைய கடைசிக் கடிதம், அதாவது ஆறாவது கடிதம், அதுவும் நானே தபால் பெட்டியில் போட்டது. உங்களுக்கு ஏன் வந்து சேரவில்லை என்று தெரியவில்லை. அதற்கு என் னவாயிற்று என்று வியந்து கொண்டிருக்கிறேன்.

எங்களுடைய நாட்டில் நீங்கள் லாகூரிலிருந்து 'ஷேக் ஹு¨புரா'விற்கு ஒரு கடிதம் அனுப்பினால், அது போய்ச் சேருவதற்கு இரண்டரை அல்லது மூன்று வருடங்கள் எடுத்துக்கொள்ளும் என்பது உண்மைதான். ஆனாலும் பாகிஸ்தானிகளான நாங்கள் கவித்துவமான மனோபா வம் கொண்டவர்கள் என்பதால், இதுபோன்ற தாமதங் கள் கவித்துவமானது என்றே கருதப்படுகிறது. எங்களு டைய தபால் துறையினர் உங்களை ஏமாற்றுவது பற்றிக் கனவில்கூட நினைத்துப் பார்க்கமாட்டார்கள். என்ன இருந்தாலும் அவர்கள் நீங்கள் பரிசாகக் கொடுத்த கோதுமையைத்தானே உண்டிருக்கிறார்கள்.

எனக்குத் தெரிந்தமட்டில், இது முழுக்க முழுக்க ருஷ் யாவின் திட்டமாகத்தான் இருக்க வேண்டும். இந்தியா

வுக்கும் அதில் பங்கிருக்கலாம். சில நாட்களுக்கு முன்பு லக்னோவில், உங்கள் சகோதரனின் மகன் பற்றி ஒரு கருத்தரங்கம் நடந்ததாம். அதில் பேசிய ஒரு பேச்சாளர், பாகிஸ்தானில் அமெரிக்கா நுழைவதற்கு நான் வழி செய்து கொடுப்பதாகப் பேசியுள்ளார்.

இது முழுக்க முழுக்க உண்மை என்றாலும் இப்போது உலகம் முழுவதற்கும் தெரிந்துவிட்டதால், நீங்கள் நிச் சயமாக எனக்கு இரண்டு புல்டோசர்களை அனுப்பி வைக்கத்தான் வேண்டும். அது சரி! லக்னோவில் பேசிய அந்த முட்டாளிடம் எவராவது ஒருத்தர் இப்படிக் கேட் டிருக்க வேண்டும். அவன் எப்படி பூமியை, அவன் நினைப்பது போல் மிகச் சரியாகச் சமன்படுத்தப் போகி றான் என்று! என்னுடைய வெற்றுக் கைகளை மட்டும் கொண்டா?

எப்போதும் நான் என்ன சொல்ல வருகிறேன் என்று உங்களுக்கு உடனடியாகப் புரிந்ததே கிடையாது. உங்க ளுடைய கவனம் எல்லாம் ஹைட்ரஜன் குண்டுமீது மட் டுமே குவிந்திருப்பதால் மறந்தும் வேறு எதைப் பற்றியும் நீங்கள் சிந்திப்பதே கிடையாது.

ஒரே ஒரு நிமிஷம் அந்தக் குண்டுகளை மறந்து தொலையுங்கள். நான் உங்களுக்கு எழுதிய கடிதத் தைக் கம்யூனிஸ்டுகள் கடத்திச் சென்றிருக்கும் சாத்தி யங்கள் உண்டு என்பதை நினைத்துப் பாருங்கள்.

என்னிடம் மட்டும் விட்டிருந்தால் இதுபோல் வம்பு செய்கிறவர்களை, நானே அதற்கேற்ற முறையில் கையாளுவதோடு, அவர்கள் வாழ்க்கை முழுக்க மறக்க முடியாத பாடத்தையும் அவர்களுக்குக் கற்றுக்கொடுத் திருப்பேன். இதில் பிரச்சினை என்னவென்றால், இங் குள்ள எல்லாக் கம்யூனிஸ்டுகளும் என்னுடைய நண் பர்கள். 'அஹமது நதீம் காஸிமி' இருக்கிறான். அப்புறம் 'சிப்தே ஹசன்', 'அப்துல்லா மாலிக்' (இவன் கீழ்த்தர

மான கம்யூனிஸ்ட் என்பதால் நான் அவனை வெறுத்தா லும்கூட) 'ஃபெரோஸு''தின் மன்ஸூர்', 'அஹமது ரா'ஹி', 'ஹமீது அக்தர்', 'நாஸிஷ் காஸ்மீரி' அப்புறம் 'பேராசிரியர் சஃப்தார்'.[16]

அங்கிள், இவர்களெல்லாம் எனக்குத் தொடர்ந்து பணம் கொடுப்பவர்கள் என்பதால், நான் இவர்களிடம் ஏதும் சொல்ல முடியாது. பணம் கொடுத்தவர்கள் முன்பு, பணம் வாங்கியவன் நிமிர்ந்து நிற்க முடியாது என்பதை நீங்கள் புரிந்துகொள்வீர்கள். நீங்கள் எனக்குப் பணம் ஏதும் கொடுத்ததில்லை என்பதைத்தான் இது நினை வூட்டுகிறது. தொடக்கத்தில், நான் உங்களுக்கு முதல் கடிதம் எழுதியபோது, நல்லெண்ணத்தின் வெளிப்பா டாக முந்நூறு ரூபாயை எனக்கு அனுப்பி வைத்தீர்கள். உங்களுடைய இந்த வெளிப்பாட்டில் நான் பூரித்துப் போய், இனி வாழ்நாள் முழுவதும், உங்களுக்கானவன் என்ற முடிவுக்கே வந்துவிட்டேன். ஆனால் என்னுடைய இந்த உணர்வுக்கு, மதிப்புக் கொடுத்து மேலும் பொரு ளாதார உதவிகள் நீங்கள் செய்யவில்லை.

அன்புள்ள அங்கிள், சொல்லுங்கள் இத்தகைய தண் டனையை நான் அனுபவிப்பதற்கு என்ன பாவம் செய் துவிட்டேன்? லாகூரில் உங்கள் அலுவலகத்திற்கு வெளியே நிற்கும் பியூன்கூட என்னிடம் நல்லவிதமா கப் பேசுவதற்கு ஏதுமில்லாமல் போய்விட்டது. அங்கு வேலை பார்க்கும் என்னுடைய பாகிஸ்தானியச் சகோ தரர்கள் இரண்டு மூன்று பேர்கள் எப்போதுமே அவர்க ளைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பதால், என்னு டைய பெயரைக் கேள்விப்பட்ட அந்த நொடியிலேயே என்னைச் சபிக்கத் தொடங்கிவிடுகிறார்கள்.

நான் செய்த தவறுதான் என்ன? நீங்கள் எனக்குச் செய்த உதவியை நான் மனதாரப் பாராட்டியது அவ்வ ளவு மோசமான விஷயமா? நீங்கள் மில்லியன் கணக்கில்

இந்தியாவுக்குக் கொடுக்கிறீர்கள். இந்தியாவும் அதை ஒப்புக்கொள்கிறது. பாகிஸ்தானுக்கு இலவசமாகக் கோதுமையை அனுப்பி வைக்கிறீர்கள். பாகிஸ்தானும் அதை ஒப்புக்கொள்கிறது. நீங்கள் ஒரு முறை பணம் கொடுத்ததை நானும் ஒப்புக்கொள்கிறேன். கராச்சியில் உங்களுக்கு நன்றி சொல்லும் விதமாக ஒட்டகங்களின் ஊர்வலம் நடத்தப்பட்டது. நீங்கள் எங்களுக்குப் பெரும் சேவை செய்துள்ளதாகத் துண்டறிக்கைகள் விநியோகிக்கப்பட்டன. உங்களுடைய கோதுமையை ஜீரணம் செய்ய, எங்களுடைய வயிற்றை எல்லாம் அமெரிக்கத் தன்மை கொண்டதாக மாற்ற வேண்டியுள்ளது என்பது வேறு விஷயம்.

இந்தியாவுக்கு மில்லியன் கணக்கில் கொடுக்கும் போது, பாகிஸ்தானுக்கு இராணுவ உதவிகளுக்கு உத்தரவாதம் கொடுக்கும்போது, எனக்கு மட்டும் ஏன் மாதச் சம்பளம் கொடுக்க மறுக்கிறீர்கள் என்று என்னால் புரிந்துகொள்ளவே முடியவில்லை. பாகிஸ்தானின் மிகச் சிறந்த சிறுகதை எழுத்தாளனுக்கு வெறும் முந்நூறு ரூபாய் மட்டும் கொடுத்துவிட்டு, முதுகைத் திருப்பிப் போய்விட்டீர்கள் என்று மக்கள் கேள்விப்பட்டால் என்ன நினைப்பார்கள்? நான் மிகவும் அசிங்கப்படுத்தப் பட்டது போல் உணர்கிறேன். நீங்களும் அப்படித்தான் உணர்ந்திருக்க வேண்டும். அதனால் நான் சற்றே நிம்மதியாக சுவாசிப்பதற்கு ஸ்ரீ100,000 என்று வைத்துக் கொள்ளலாமா?.

'ஆகா கான்'. இவரை நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும். ஏனெனில் அவர் கூட மிகப்பெரிய முதலாளிதான். சமீபத்தில்தான் அவருடைய 'பவள விழா' கொண்டாடப்பட்டது. என்னுடைய 'பவள விழா'வும் கொண்டாடப்பட வேண்டும்; நீங்கள்தான் என்மீது மிகவும் அன்புகொண்ட அங்கிள். அதனால் உங்களிடம் மட்

டுமே என்னால் இந்த உரிமையை எடுத்துக்கொள்ள முடியும். பாகிஸ்தான் பிரதம மந்திரி 'முஹமது அலி போஹ்ரா'விடம் இது சாத்தியமில்லை. தயவுசெய்து என்னுடைய பவள விழாவைக் கொண்டாடுவதற்கு ஏற்பாடுகள் செய்யுங்கள். அப்போதுதான், என் கல்லறையில் நான் நிம்மதியாக ஓய்வெடுக்க முடியும்.

பாகிஸ்தான், என்னுடைய பாகிஸ்தான், அதனுடைய கலைஞர்களை உதாசீனப்படுத்துவதில்லை. சிக்கல் என்னவென்றால், என்னைக்காட்டிலும் தகுதியானவர்கள் எண்ணிக்கையில் அதிகம் இருக்கிறார்கள். சமீபத்தில்தான், எங்களுடைய அரசாங்கம் 'கான் பகதூர் அப்துல் ரஹ்மான் சுக்தாய்'க்கு வாழ்நாள் ஓய்வூதியமாக ஐநூறு ரூபாயை வழங்கியது. கடவுள் அருளால் 'கான் பகதூர்' செல்வச் செழிப்பான மனிதர் என்பதோடு, என்னைக் காட்டிலும் அதிகத் தகுதியானவர். இது போலவே 'கான் பகதூர் அப்துல் அஸர் ஹாபிஸ் ஜூலாந்தரி'க்கும் வாழ்நாள் ஓய்வூதியம் வழங்கப்பட்டது. ஏனெனில் அவரும் நல்ல நிலையில் இருப்பவர்தான்.[17]

என்னுடைய முறை எப்போது வரும் என்று யாருக்குத் தெரியும்? எனக்காக அரசாங்கம் ஒதுக்கியுள்ள வீட்டில்தான் நான் வசித்து வருகிறேன். அதற்கான வாடகையைக்கூட என்னால் கொடுக்க முடியவில்லை.

என்னைக் காட்டிலும் தகுதியானவர்கள் நிறையப் பேர் இருக்கிறார்கள். உதாரணத்திற்கு, துருக்கியின் பாகிஸ்தான் தூதராகவும் 'ஹு¨மாயூன்' பத்திரிகையின் ஆசிரியருமான 'மியான் பஷீர் அஹமது', 'சையது இம்தியாஸ் அலி தாஜ்', திரு. 'முஹமது இக்ரம்', 'பி.சி.எஸ்.', 'ஃபஸல் அஹமது கரீம் ஃபஸ்லி' இன்னும்... இவர்களுக்கு ஓய்வூதியம் அவசியப்படாததால், என்னைக் காட்டிலும் முன்னுரிமை பெறுகிறார்கள்.[18] எப்படியிருந்தாலும், இத்தகைய கனவான்களைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு என்

பக்கம் திரும்ப அப்படி என்ன அற்புதத்தை நான் செய்துவிட்டேன்? நான் உங்களிடம் கேட்பதற்குக் காரணம், நான் உங்களுடைய சகோதரனின் மகன் என்பதாலும், என்னுடைய விழாவை நீங்கள் கொண்டாட வேண்டும் என்று நான் விரும்புவதாலும்தான்.

நான் நீண்ட நாட்கள் வாழப் போவதில்லை. இதற்காக நீங்கள் வருத்தப்படலாம். ஆனாலும், இந்தப் பூமியில் மிகக் குறுகிய காலமே நான் வாழ நேர்வதற்கு நீங்கள் மட்டுமே காரணமில்லை. உங்களுக்கு என் உடல் நலத்தில் அக்கறை இருந்திருக்கும் பட்சத்தில், குறைந்தபட்சம் எலிஸபெத் டெய்லர்-ஐ எனக்குச் சேவை செய்ய அனுப்பியிருப்பீர்கள். ஏன் என்னைப் பற்றி இப்படி அக்கறை கொள்ளாமல் இருக்கிறீர்கள்? நான் சாக வேண்டும் என்பதுதான் உங்கள் விருப்பமா அல்லது வேறு ஏதேனும் காரணங்கள் உண்டா?

இந்த ரகசியத்தை என்னோடு பகிர்ந்துகொள்ளும் நேரம் வந்து விட்டது. ஆனால் ரகசியமில்லாத விஷயம் என்னவென்றால், என் நாடான பாகிஸ்தானில், கம்யூனிசம் மிக வேகமாகப் பரவிக் கொண்டிருக்கிறது. நான் சொல்கிறேன், சில சமயங்களில் எனக்குக்கூடச் சிவப்பு இறக்கையை என் தொப்பியில் செருகிக் கொண்டு, சிவப்பாகவே மாறிவிட வேண்டும் என்பதுபோல் தோன்றுகிறது. இது மிகவும் அபாயகரமான சிந்தனை இல்லையா? அதனால்தான் ருஷ்ய நல்லெண்ணக் குழு ஏற்படுத்திய பாதிப்புக்குப் பதிலாக, உங்களுடைய வசீகரிக்கும் அழகுடைய பெண்கள் கூட்டத்தை அனுப்பி வைக்கச் சொல்லியிருந்தேன். இங்கு மழைக் காலம் வரப் போகிறது என்பதால், வருடத்தின் இந்தப் பகுதியில், நாங்கள் காதல் உணர்ச்சியில் திளைத்திருப்போம். உங்களுடைய குழு இப்போது இங்கு வந்தால், அது மிகப்

பெரிய பலனைக் கொடுக்கும் என்பது என் யோசனை யாகும்.

அங்கிள், உங்களுடைய தொழில் மற்றும் வியாபாரம் மிகவும் சிரமமான காலகட்டத்தில் உள்ளது என்ற சங்க டமான செய்தியைக் கேள்விப்பட்டேன். நீங்கள் எல்லாம் அறிந்தவர் என்றாலும் என்னுடைய முட்டாள்தனமான யோசனையை ஒரு நிமிடம் கவனமாகக் கேளுங்கள். நீங்கள் கொரியா யுத்தத்தை முடித்துக்கொண்டதால் தான் உங்களுடைய தொழிலும் வியாபாரமும் சிக்கலில் மாட்டிக் கொண்டது. இது மிகப் பெரிய தவறு. உங்களு டைய டேங்குகள், குண்டுகள், பீரங்கிகள், துப்பாக்கிகள் - இவற்றை எல்லாம் வைத்துக்கொண்டு என்ன செய்யப் போகிறீர்கள்?

நீங்கள் யுத்தத்தை முடிவுக்குக் கொண்டுவர வேண் டியிருந்தது, உலகத்தின் கருத்தொற்றுமையால்தான் என்பது உண்மைதான் என்றாலும், இந்த உலகம் முழு வதும் ஒன்றுசேர்ந்தாலும், உங்களுடைய ஒரே ஒரு ஹைட்ரஜன் குண்டுக்குச் சமமாகாது என்றபோது, அந் தக் கருத்துக்கு நீங்கள் ஏன் முக்கியத்துவம் கொடுக்க வேண்டும்!.

நீங்கள் கொரியா யுத்தத்தை முடிவுக்குக் கொண்டு வந்தீர்கள். இது மிகப் பெரிய பிழையென்றாலும், நான் அது பற்றி மேலும் பேச விரும்பவில்லை. நீங்கள் ஏன் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையே ஒரு யுத் தத்தைத் தொடங்கக் கூடாது? இதில் கிடைக்கக்கூடிய லாபம், கொரிய யுத்தத்தில் கிடைத்ததோடு ஒப்பிட்டால், ஒன்றுமே இல்லாமல் போகும். நீங்கள் உங்கள் சகோத ரன் மகனின் வார்த்தைகளை நம்பலாம்.

இந்த யுத்தம் எவ்வளவு பயனுள்ளதாக இருக்கும் என்று மட்டும் சற்று நினைத்துப் பாருங்கள்!. உங்களு டைய ஆயுதத் தொழிற்சாலைகள் எல்லாம் மீண்டும் 24

மணி நேரமும் செயல்படத் தொடங்கும். இந்தியா உங் களிடமிருந்து ஆயுதங்களை வாங்கும். பாகிஸ்தானும் அப்படியே. நீங்கள் வைக்கோல் குவியலுக்கு மத்தியிலி ருப்பீர்கள்.

நீங்கள் இந்தோ-சீனாவுடனான யுத்தத்தைத் தொடர்ந்து கொண்டிருப்பதோடு, அது இந்த உலகத் தின் நன்மைக்குத்தான் என்றும் உறுதிபடத் திரும்பத் திரும்பச் சொல்லுங்கள்.

அந்த பிரான்சு அரசாங்கமும் பிரான்சு மக்களும் எக் கேடும் கெட்டுப் போகட்டும். அவர்களுக்குத் தேவை யென்றால், இந்த யுத்தத்திற்கு எதிராக இருக்கட்டும். அவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்று நீங்கள் கவ லைப்படக் கூடாது. என்ன இருந்தாலும், நம்முடைய நோக்கம் இந்த உலகத்தில் சமாதானத்தை நிலை நாட் டுவதுதானே? அங்கிள், உண்மைதானே!

உங்களுடைய திரு. டல்லஸ்-ன் சுதந்திரமான உலகத் தின் ஒரே ஒரு குறிக்கோள் 'கம்யூனிசத்தைத் தோற்க டிப்பது தான்' என்று சொன்னது எனக்குப் பிடித்திருக் கிறது. இதுதான் உண்மையிலேயே ஹைட்ரஜன் குண் டின் சுதந்திரமான கருத்து.

மேற்குக் கூட்டணியில், வெவ்வேறு நாடுகள் தங் களுக்கிடையேயான முரண்பாடுகளை அமைதியான முறையில் தீர்த்துக்கொள்ள வேண்டும் என்று அறிவில் லாதவர்கள்தான் சொல்வார்கள். நான் கேட்கிறேன், எங் காவது முரண்பாடுகள் வன்முறை இல்லாமல் தீர்க்கப் பட்டுள்ளனவா? இந்த உலகம் முழுவதுமாக முரண்பாடு களால் நிரம்பியிருக்கிறது. அதனால் எல்லோரும் ஒத்த நிலைக்கு வரவில்லை என்றால், அந்த நொடியிலேயே அழிக்கப்படுவார்கள் என்று எச்சரிக்கை செய்து விடு வதைக்காட்டிலும் ஏதாவது சிறந்த வழி இருக்கிறதா என்ன?

பிரிட்டனைச் சேர்ந்த 'பேவன்' வாயை மூடிக்கொள்ள நீங்கள் ஏன் ஏதாவது செய்யக் கூடாது? அவன் உங்களால் உருவாக்கப்பட்டவன்தான் என்றாலும், அவனுடைய விஷப் பல்லை உங்களிடமே காட்டுகிறான். அந்தக் கழுதை, உங்கள்மீது விஷத்தைத் துப்புகிறது. உங்களுடைய திரு. டல்லஸ்-ஐப் பற்றிச் சொல்லும்போது, அவருக்கு நவீனச் சிந்தனைகளில் பரிச்சயம் கிடையாது என்றும் இந்த உலகத்தை அடக்கியாளுவதற்கு ஹைட்ரஜன் குண்டுகளை வைத்து அச்சுறுத்துகிறான் என்றும் சொல்லியிருக்கிறான்.

அங்கிள், சில பிரிட்டிஷ் கோமாளிகள் அவர்களுடைய மூக்கை உங்கள் மீது உரசும் போது, எனக்கு உண்மையில் கோபம்தான் வருகிறது. நீங்கள் என்னுடைய யோசனையை ஏற்றுக்கொள்வதாக இருந்தால், இந்தப் பூமியின் முகத்திலிருந்து பிரிட்டனை அழித்து விடுங்கள். இந்தச் சிறு தீவு இந்த உலகத்திற்குப் பிரச்சினைகளை மட்டும்தான் கொண்டுவரும். இதைச் செய்வதற்கு உங்களுக்கு விருப்பம் இல்லையென்றாலும், குறைந்தபட்சம் ஐரோப்பாவிலிருந்து அதைப் பிரிக்கும் இருபது மைல் அகலமுடைய ஊħyaரநேட-ஐ மூடிவிடுங்கள். நெப்போலியன் மற்றும் 'ஹிட்லருக்குக் கடவுள் அருளட்டும். இருவருமே இந்த நாட்டை வெறுத்தார்கள். பிரிட்டன் இல்லாமல் இருந்திருந்தால், 'பேவன்' என்று ஒருவன் இருந்திருக்க முடியாது என்பதோடு, இது போன்ற முட்டாள்தனங்களால் நீங்களும் துன்புற வேண்டிய அவசியமும் இருந்திருக்காது.

உண்மையைச் சொல்வதென்றால், வருங்காலங்களில் பிரிட்டன் உங்களுக்கு நிறைய தொந்தரவுகளைக் கொடுக்கப் போகிறது. நீங்கள் அதை ஒழித்துக்கட்ட முயற்சிகள் எடுத்தாலும், அது உங்களை எளிதில் விடப் போவதில்லை. போன யுத்தத்தில் ஜெர்மனி, இத்தாலி

யோடு கூட்டு சேர்ந்தது. அதனால் அதற்கு எந்தப் பய னுமில்லை. இதிலிருந்து நீங்கள் பாடம் கற்றுக்கொள்ள வேண்டும். உங்களுடைய பழைய தத்துவத்தை நீங்கள் பின்பற்றுங்கள்: கையில காசு, வாயில தோசை!

பிரிட்டனை உங்கள் கண்டத்தோடு சேர்த்துவிடும் வேலையை நீங்கள் இந்தக் கடிதம் கிடைத்தவுடன் தொடங்கிவிட வேண்டும். உங்களுடைய பொறியாளர்க ளால், ஒரு மாதத்திற்குள் இதைச் செய்து முடித்துவிட முடியும். இதில் எனக்கு முழு நம்பிக்கை இருக்கிறது.

நான் இதை உங்களுக்கு எழுதுவதற்குக் காரணம், என்னுடைய 'பவள விழா' கொண்டாடப்பட வேண்டும் என்று நான் விரும்புவதால். உண்மையில், அதை நான் வேண்டி நிற்கிறேன். நான் இருபத்தைந்து வருடங்க ளாகத் தொடர்ந்து எழுதிக்கொண்டிருக்கிறேன். என் னுடைய ஆசை குழந்தைத்தனமானது என்று நீங்கள் நினைக்கலாம். இருந்தாலும் விழாவுக்கான ஏற்பாடுக ளைத் தயவுசெய்து தொடங்கிவிடுங்கள்.

என்னுடைய தொழில் எழுத்து என்பதால், என் எடைக்குச் சமமாக 'பார்க்கர்-51' பேனாவை வையுங்கள். இதற்காக நான், 'இஷான் டேனிஷ்'[19] மரக்கடையிலி ருந்து தராசைக் கடன் வாங்கி வருகிறேன். ஒரு பேனா எவ்வளவு கனம் என்று எனக்குத் தெரியாது. தற்சம யம் நான் ஒரு 'மணங்கு'ம்[20] இரண்டரை 'சீரும்' எடை உள்ளேன். ஆனால் 'பவள விழா' அன்று நான் ஒரு 'மணங்காக' குறைந்திருப்பேன். நீங்கள் இதைத் தள் ளிப்போட்டுக்கொண்டே போனால், என்னுடைய எடை பூஜ்ஜியத்தை அடைந்துவிடும். ஒரு மணங்குக்கு எத் தனை 'பார்க்கர்-51' தேவைப்படும் என்று நீங்கள்தான் கணக்கிட்டுக் கொள்ள வேண்டும். ஆனால் தயவு செய்து வேகப்படுத்துங்கள்.

இங்கு எல்லோரும் நலமாக இருக்கிறார்கள். 'மௌலானா பாஷானி' மற்றும் திரு. 'சுஹ்ராவர்தி'[21] ஒவ்வொரு நாளும், மேலும் ஆரோக்கியமானவர்க ளாக மாறிக்கொண்டிருக் கிறார்கள். ஆனால் உங்கள் மீது சற்று எரிச்சலோடு இருக்கிறார்கள். தயவுசெய்து மௌலானா -விற்கு உண்மையான அமெரிக்க 'தஸ் பிஹ்'-ம், திரு. 'சுஹ்ராவர்தி'-க்கு ஒரு அமெரிக்கக் கேம ராவும் அனுப்பி வைத்தால் எல்லாம் சரியாகிவிடும்.

'ஹீரா மண்டியில் உள்ள நடனப் பெண்கள், 'ஷோரிஷ் காஸ்மீரி' அலுவலகம் மூலமாக அவர்களுடைய வாழ்த் துகளை உங்களிடம் தெரியப்படுத்துமாறு கேட்டுக் கொண்டுள்ளார்கள்.

உங்களுக்குக் கீழ்ப்படிந்த

உங்கள் சகோதரனின் மகன்

சாதத் ஹசன் மண்ட்டோ

***




அன்புள்ள அங்கிள்,

வாழ்த்துகள்.

என்னுடைய ஏழாவது கடிதம் உங்களுக்கு நிச்சயமாகக் கிடைத்திருக்குமென்று நம்புவதால், உங்களுடைய பதிலுக்காக நான் இன்னமும் காத்திருக்கிறேன். சமீபத்தில் இங்கு வந்துபோன ருஷ்யக் கலாச்சாரக் குழுவிற்குப் பதிலடியாக உங்களுடைய நல்லெண்ணக் குழுவை அனுப்பி வைப்பது பற்றி நீங்கள் ஏதேனும் முடிவு செய்துவிட்டீர்களா? அதை என்னிடம் தெரியப்படுத்தினால், நான் சற்றே நிம்மதியாக இருப்பேன். உள்ளூர் கம்யூனிஸ்டுகள் இன்னமும் அந்த ருஷ்ய வெற்றி பற்றிப் பிதற்றிக்கொண்டிருக்கிறார்கள். என்னுடைய அங்கிள் ஒரு குழுவை அதுவும் மில்லியன் டாலர் கால்களும் மில்லியன் டாலர் அழகும் கொண்ட பெண்களை அனுப்பி வைக்கப்போகிறார் என்று தெரிந்துகொள்ளும் அந்த நொடியிலேயே வாயை மூடிவிடுவார்கள். அவர்கள் எப்படி இருப்பார்கள் என்றால் நாக்கைத் தொங்கப் போட்டுக்கொண்டு அலைந்துகொண்டிருப்பார்கள்.

எங்கள் மாநிலத்தின் முதல்வர் மாலீக் ஃபெரோஸ் கான் நூன் நடவடிக்கைகள் எடுப்பதென்று தீர்மானித்துவிட்டார். இதை நீங்கள் தெரிந்துகொண்டால் சந்தோஷப்படுவீர்கள். சில நாட்களுக்குமுன் கம்யூனிஸ்டுகளின் சதித் திட்டங்களை எதிர்கொள்ள வேண்டும் என்று பேச்சோடு பேச்சாகத் தெரிவித்தார். இது நல்ல செய்தி. இதற்கான தொடக்கம் ஏற்கனவே தொடங்கிவிட்டது. கம்யூனிஸ்ட் கட்சி அலுவலகங்கள்

தீவிர சோதனைகளுக்கு உள்ளாயின. ஒரு பேச்சுக் குச் சொல்வதென்றால் அதைக் கொண்டாடுவதற்கா கத்தான் நான் இந்தக் கடிதத்தை எழுதுகிறேன்.

சிவப்புக் கைதுகள் சீக்கிரத்தில் தொடங்கிவிடும் என்று எங்கள் செய்திப் பத்திரிகைகள் சொல்கின்றன. காவல்துறை ஒரு பட்டியலைத் தயார்செய்துவிட்டதாம். கடவுள் புண்ணியத்தில் வெகுவிரைவில் குழப்பங்களை உருவாக்கும் இவர்கள் எல்லாம் கூஜாவிற்குள் அடைக் கப்படுவார்கள். பிடிபடப் போகிறவர்களில் முதல் நபராக தோழர் ஃபெரோஸு"'தின் மன்ஸுர்-ஆக இருந்தால் நான் சிலிர்த்துப் போவேன். அவர் ஆஸ்துமாவில் அவ திப்பட்டுக் கொண்டிருக்கிறார். ஆஸ்துமா உள்ளவர்கள் நீண்டநாள் உயிர் வாழ்வார்கள் என்று கேள்விப்பட்டி ருக்கிறேன். இந்த முறை அவர் சிறையில் அடைக்கப் பட்டால் 'தவளைக் கூச்சல்' போட்டுக்கொண்டிருப்பார் என்று நினைக்கிறேன். தொலைந்தது போ என்பேன். அஹமது நதீம் காஸிமி- கூட உள்ளே கொண்டு செல் லப்படுவான். இவனை 'இம்ரோஸ்' செய்தித்தாளின் ஆசிரியராக நியமித்ததன் மூலம் 'மியான் இஃப்திகாரு தீன்'-க்கு எந்தப் புண்ணியமும் கிடையாது. உண்மையில் எது சரியான விஷயமாக இருக்கும் என்றால் 'மியான் இஃப்திகாருதீன்'-னைத் தான் கைது செய்ய வேண்டும். ஆனால் அவர் மிக புத்திசாலி. போலீஸ்காரர்கள் அவ ரைக் கைதுசெய்யச் சென்றால் அவருடைய மாளிகை போன்ற வீட்டிலிருந்து வெளியே வந்து, சிரித்தபடியே நீதிமன்றத்திலிருந்து பெற்ற தடை உத்தரவை அவர்க ளுடைய முகத்திற்கு நேராக ஆட்டிக் காட்டுவார். சமீ பத்தில் 'தி பாகிஸ்தான் டைம்ஸ்' மற்றும் 'இம்ரோஸ்' பத்திரிகை அலுவலகங்கள் வாடகை கொடுக்கப்படாத தால் 'சீல்' வைக்கப்படுவதாக இருந்தன. ஆனால் அது நடக்கவில்லை. ஆபத்பாந்தவர் போல் 'மியான் இஃப்தி காருதீன்' தடை உத்தரவை அவருடைய பையிலிருந்து

எடுத்து போலீஸ்காரர்களின் நம்ப முடியாத கண்க ளுக்கு முன் சட்டென்று காட்டினார். ஒன்றுமட்டும் நிச் சயம். 'அஹமது நதீம் காஸிமி' குற்றவாளிதான். அவன் தண்டிக்கப்பட வேண்டியவன்தான். அந்த மனிதன் அவ னுடைய பத்திரிகையில் 'பஞ்ச் தர்யா' என்ற புனைபெய ரில் எழுதும் பத்தியில் உங்களைத் தொடர்ந்து கிண்டல் செய்துகொண்டிருக்கிறான்.[22]

நான் என்ன யோசனை சொல்கிறேன் என்றால், அவனை நேர்படுத்துவதற்கு நமக்குத் தேவையான தெல்லாம் ஐந்து அல்லது ஆறு திருமணமாகாத அமெ ரிக்கப் பெண்கள்தான். அவன் அந்தப் பெண்களை உட னடியாகத் தன்னுடைய சகோதரிகள் என்று பிரகடனப் படுத்துவான். இது அவனை உள்ளே வைக்க வேண்டிய அவசியம் ஏதுமில்லாமல் செய்து விடும். அவனுடைய கம்யூனிஸம் கழுதையின் கொம்புபோல் உடனடியாக மறைந்துவிடும். சிவப்புகளைக் கைது செய்யத் தொடங் கிய உடனே நான் உங்களுக்கு அதைத் தெரியப்படுத்து கிறேன். நான் உங்களுக்காகச் செய்யும் சேவைகள் எல் லாவற்றையும் கணக்கில் எடுத்துக்கொள்ளுங்கள். நீங் கள் நல்ல மனநிலையில் இருந்தால், முந்நூறு ரூபாய் எனக்குக் கடனாகக் கொடுக்க மறந்துவிடாதீர்கள். நீங்கள் போனமுறை கொடுத்ததெல்லாம் அப்போதே செலவாகிவிட்டது. அத்தோடு எப்படியிருந்தாலும் அந்த அன்பின் வெளிப்பாடு என்பது இரண்டு வருடங்களுக்கு முந்தையது.

என்னுடைய ஆறாவது கடிதம் காணாமல் போன தைப் பற்றி, நான் துப்புத் துலக்கியபோது நான் சந் தேகப்பட்டது போலவே, இந்தச் சூழ்ச்சிக்குப் பின்னால் நம்முடைய கம்யூனிஸ்ட் நண்பர்கள்தான் இருந்திருக்கி றார்கள். அது 'அஹமது ரா'ஹி' தான். அதாவது 'தரஞ் சன்' என்ற புத்தகத்தை எழுதியவன்தான். எங்

களுடைய அரசாங்கம் இதற்காக அவனுக்கு ஐந்நூறு ரூபாயைப் பரிசாகக் கொடுத்தது. அவன் பஞ்சாபி யில் மிக அற்புதமான கவிதைகள் எழுதியுள்ளான். ஆனால் உங்களுக்குத் தெரியாத விஷயம் என்னவென் றால் இந்த 'அஹமது ரா'ஹி' ஓர் அபாயகரமான கம் யூனிஸ்ட். கட்சியின் மற்ற உறுப்பினர்கள் உடைந்து போன கோப்பையில் டீ குடிப்பார்கள் என்றால் இவன் ரகசியமாக பீர் குடிப்பவன். இதன் காரணமாக அவன் பெருத்துக்கொண்டே போகிறான். அவன் என்னுடைய நண்பன் என்பதால்தான், அவனிடம் தபாலில் சேர்க்கச் சொல்லிக் கடிதத்தைக் கொடுத்தேன். ஆனால் அவன் கம்யூனிஸ்டாக இருப்பதால் என்னுடைய கடிதத்தைக் கட்சியிடம் கொடுத்து விட்டான். நான் எப்படிக் கோபம் கொண்டிருக்க வேண்டுமோ அப்படிக் கோபம் கொள் ளவில்லை. அதுபோலவே இப்போதெல்லாம் என்னி டம் அவ்வளவாகப் பணமும் இருப்பதில்லை. ஆனால் என்றோ ஒரு நாள் புரண்டு விழும் அளவிற்கு அவனைக் குடிக்க வைப்பது மட்டும் நிச்சயம்.

ஒரு நாள் அவன், நான் அங்கிள் 'சாம்'க்கு கடி தம் எழுதுவதை நிறுத்திவிட்டு 'மாலொன்கோவ்'-ம் என் னுடைய அங்கிளாகத்தான் இருக்க முடியும் (அவன் சொன்னது) என்றும், நான் அவரோடு கடிதத் தொடர்பு கொள்ள வேண்டும் என்றும், யோசனை சொன்னான். அதற்கு நான் அப்படியிருக்கலாம் என்றாலும் என்னால் அவரையோ, அவரால் என்னையோ நேசிக்க முடியாது என்றேன். என்ன இருந்தாலும் வறுமையிலும் கந்தலி லும் வாழ்ந்து கொண்டிருந்தாலும், முழு அளவில் விசு வாசமாக இருந்துகொண்டிருக்கும் அவருடைய சகோ தரனின் மகன்களை அவர் எப்படி நடத்துகிறார் என்று எனக்குத் தெரியும்தானே! இதற்கெல்லாம் அவர்க ளுக்கு எப்போதாவது கிடைப்பது 'சிவப்பு முத்திரை' பதித்த கடிதங்கள் மட்டும்தான். பிரிட்டிஷ் அங்கிள்கள்

இந்த ருஷ்ய அங்கிள்களைக் காட்டிலும் எவ்வளவோ மேலானவர்கள். அவர்களாவது 'சர்', 'கான் பகதூர்', 'கான் சாகிப்' போன்ற பட்டங்களையாவது வெகுமதி யாகக் கொடுத்தார்கள். 'மாலொன்கோவ்' இதைக்கூடச் செய்வது கிடையாது. நான் ஒப்புக்கொள்ள வேண்டு மென்றால் அவருடைய உண்மையான சகோதரனின் மகனான 'அப்துல்லா மாலிக்'-க்கு ஒரு பட்டத்தை, குறைந்தபட்சம் மிகச் சாதாரணமானதையாவது அவர் கண்டுபிடித்தாக வேண்டும். சற்று நினைத்துப் பாருங் கள். அவனைச் சிறைக்கு அனுப்பினால் அவன் புத்த கங்கள் எழுதுவதற்கு எவ்வளவு சௌகரியமாக இருக் கும்.

நான் உங்களுடைய மிகப் பெரிய பக்தன் என்பதை நீங்கள் மறந்துவிடக் கூடாது. முந்நூறு ரூபாய் நீங் கள் அனுப்பிவைத்தபோதே என் வாழ்நாள் முழுவதும் உங்களுடையதாகிவிட்டது. இன்னுமொரு முறை நீங் கள் அனுப்பிவைத்தால் போதும். என் வாழ்நாள் முழு வதும் உங்களுடைய அடிமையாகி விடுவேன். அதா வது உங்களைவிட மேலானவனான கடவுள், எனக்கு மாதம் ஐநூறிலிருந்து அறுநூறு வரை கிடைக்க ஏதாவது வழி செய்தாலொழிய. அத்தோடு கடவுளே 'ஏவாளை' நான் திருமணம் செய்துகொள்ள ஏதாவது ஏற்பாடு செய்துவிட்டால், உங்களிடம் சொன்ன உறுதிமொழிகள் எதையும் என்னால் நிறைவேற்ற முடியாது. நான் வெளிப் படையாக இருப்பதை நீங்கள் பாராட்டுவீர்கள் என்று நம்புகிறேன். விஷயம் என்னவென்றால், கடவுள் முன்பும் 'ஏவாள்' முன்பும் வாயைத் திறப்பதற்கு எனக்குத் தைரி யம் கிடையாது.

சமீப காலங்களில் நாங்கள் ஓர் இளவரசனுக்குப் பின் மற்றொருவன் என்று வரிசையாக உபசரிப்பவர்களாக மாறிவிட்டோம். இதில் முதலில் வந்தது 'ஈரானின் ஷா',

அடுத்து 'ஈராக்கின் ஷா', அடுத்து அலிகான் (இவர் ரீட்டா ஹேறவோர்த்-ன் முன்னாள் கணவர்), அப்புறம் ஜெய்ப்பூர் மகாராஜா. இப்போது சவுதி அரேபியாவின் மன்னர் 'ஷா சவுத்'. இவர் வருகையைக் கண்ணால் பார்த்தவரின் விவரங்களை அப்படியே கொடுக்கிறேன். இவர் இருபத்தைந்து இளவரசர்களைக் கட்டியிழுத்துக் கொண்டு விமானத்தின் மூலம் கராச்சி வந்து சேர்ந்தார். அவர் முழு மரியாதையோடு வரவேற்கப்பட்டார். மேலும் பல இளவரசர்களுக்கு அவர் தந்தை என்றாலும் அவர் கள் எல்லாம் ஏன் உடன் வரவில்லை என்பதற்கு ஒவ் வொருவரும் ஒவ்வொரு காரணம் சொல்ல முடியும்.

அதற்கு மேலும் இரண்டு, மூன்று விமானங்கள் தேவைப்பட்டிருக்கலாம் அல்லது விமானத்தில் பறப்ப தைக் காட்டிலும், அவர்களின் தாயின் மடியில் இருக்க விரும்பும் குழந்தைகளாக இருந்திருக்கலாம். இது ஏற் றுக்கொள்ளக் கூடியதுதான். ஏனெனில் தாயின் பாலும் ஒட்டகத்தின் பாலும் குடித்து வளர்ந்த குழந்தைகள் 'கிளாஸ்கோ' பவுடர் மற்றும் 'கௌ & கேட்' பாலை ஏற் றுக்கொள்ள முடியாதுதான்.

அங்கிள், இதைக் கொஞ்சம் நினைத்துப் பாருங் கள். 'ஷா சவுத்' இருபத்தைந்து மகன்களுடன் வந்துள் ளார். அவருக்கு எத்தனை பெண்கள் இருக்கக்கூடும் என்று கடவுளுக்குத்தான் தெரியும். கடவுள் அவர்களை யும் காப்பாற்றட்டும். ஏழு சுதந்திரங்களையும் பெற்றுள்ள உங்கள் நாட்டில், இத்தனை குழந்தைகளைப் பெற் றெடுப்பதற்கு ஒருவராது இருக்கிறார்களா? அங்கிள், எங்கள் மதமான இஸ்லாமுக்குக் கடவுளின் அருளில் இதுவும் ஒன்று. இது கடவுளின் தயாள குணத்தைக் காட்டுகிறது. என்னுடைய தாழ்மையான கருத்து என்ன வென்றால் - உடனடியாக உங்களுடைய அரசின் மதம் இஸ்லாம் என்று அறிவிப்புச் செய்யுங்கள். இதனால் பல

நன்மைகள் உண்டாகும். திருமணம் செய்துகொள்ளும் ஒவ்வொரு ஆணும் நான்கு மனைவிகள் வரை ஏற்ப டுத்திக்கொள்ளலாம். பிறகு சற்றே கவனமாக இருக்கப் பயிற்சி எடுத்தால் ஒரு மனைவிக்கு நான்கு குழந்தை கள் என்று வைத்துக்கொண்டாலும், ஒவ்வொரு குடும் பத்திலும் பதினாறு குழந்தைகள் வரை சாத்தியமாகும். அது கணவனின் ஆண்மைக்கும் மனைவியின் செழிப் புக்கும் உயிருள்ள சாட்சியாக விளங்கும்.

யுத்த காலத்தில் இத்தகைய எண்ணிக்கைகள் எத் தகைய வித்தியாசத்தைக் கொடுக்கும் என்று மட்டும் நினைத்துப் பாருங்கள். நீங்கள் நிறைய அனுபவங்கள் பெற்ற மனிதர். அதனால் இது பற்றி மேலும் விளக்க அவசியமில்லை என்றே நினைக்கிறேன்.

நான் அம்ரித்சரில் இருந்து வந்தவன். 'ராட்க்ளிஃப்'[23] புண்ணியத்தில் இப்போது இந்தியாவின் ஒரு பகுதி யாக அது இருக்கிறது. அங்கு 'ஹக்கிம் அபு துராப்' என்று ஒருவர் இருந்தார். அவர் பத்து முறை திருமணம் செய்துகொண்டு, கணக்கிலடங்காத குழந்தைகளைப் பெற்றெடுத்தார். அவருடைய கடைசித் திருமண ஒப்பந் தம் நடைபெற்றபோது அவருக்கு வயது தொண்ணூறு. அப்போது அவருடைய மூத்த மகனுக்கு எழுபத்தைந்து வயது. அவருக்குக் கடைசியாய் வந்திருக்கும் மனைவி யின் கடைசிக் குழந்தைக்கு இரண்டு வயதுதான். லாகூ ரில் அகதியாக அவருடைய நூற்றுப் பனிரெண்டாவது வயதில் காலமானார். யாரோ ஒரு கவிஞன் அவர் இறந்த துயரத்தை இந்த வரிகளில் கவிதையாக்கியுள்ளான்:

"ஐயோ! இந்த மொட்டுகள்
மலர்வதற்கு முன்னரே
உதிர்ந்துவிட்டனவே..."

இதுகூடக் கடவுளின் அருளாலும் அவர் ஆசீர்வதித்த இஸ்லாம் மதத்தினாலும்தான். உங்கள் நாட்டு ஆண்

களுக்கு எப்படி நான்கு மனைவிமார்களைச் சமாளிப் பது என்று புரியாமல் கஷ்டப்பட்டால், நீங்கள் ஷா சௌத்-ஐ உங்கள் நாட்டிற்கு அழைத்துச்சென்று அவரு டைய அறிவுரைகளைப் பெற்றுக்கொள்ளலாம். நீங்கள் அவருடைய நண்பர் என்றாலும் அதைவிட அவருடைய தந்தைக்கு மிக நெருக்கமானவர் என்றும் அவருடைய அந்தப்புரத்திற்குக் கார்கள் படையை அன்பளிப்பாகக் கொடுத்தீர்கள் என்றும் கேள்விப்பட்டிருக்கிறேன்.

'ஷா சவுத்', உங்களிடம் சொல்ல முடியாத ரகசி யம் ஏதும் வைத்திருக்கமாட்டார் என்று மட்டும் என் னால் நிச்சயமாகச் சொல்ல முடியும். இப்போதெல்லாம் ருஷ்யா மற்றும் இந்தியா தவிர, எல்லா நாடுகளும் பாகிஸ்தான்மீது அதிகக் கவனம் செலுத்துகின்றன. இதற்கெல்லாம் அடிப்படையான காரணம், நீங்கள் உங் களுடைய நட்புக் கரத்தை எங்களிடம் நீட்டியதுதான். பாகிஸ்தானிகளான நாங்கள் இஸ்லாமிற்காக எங்கள் உயிரையும் கொடுக்க எப்போதும் தயாராக இருக்கி றோம். முன்னொரு சமயத்தில் துருக்கியைச் சேர்ந்த 'முஸ்தஃபா கமால் பாஷா' மற்றும் 'அன்வர் பாஷா' ஆகியோருக்குத் தீவிரத் தொண்டர்களாக இருந்தோம். 'அன்வர் பாஷா'வின் மரணச் செய்தி வந்தபோது, நாங் கள் துக்கம் கொண்டாடினோம். பிறகு, அவர் உயிரோடு தான் இருக்கிறார் என்று எங்களுக்குத் தெரிய வந்தவு டன், எங்கள் வீடுகளை விளக்குகளால் அலங்கரித்துக் கொண்டாடினோம். 'முஸ்தஃபா கமால்'-ம், 'அன்வர்'-ம் வெளிப்படையான எதிரிகள். ஆனால் அது பற்றி எங் களுக்கு ஏதும் தெரியாது. துருக்கியர்களுக்கு இந்திய முசல்மான்கள் மீது அக்கறையேதும் கிடையாது. அவர் களைப் பொறுத்தமட்டில் நாங்கள் இருப்பதும் இல்லா தது போல்தான். எங்களுக்கு இதைப் பற்றிக்கூட ஏதும் தெரியாது. அவர்கள் எங்களுடைய இஸ்லாமியச் சகோ தரர்கள் என்ற ஒரே காரணத்திற்காக நாங்கள் அவர்

களை நேசித்தோம். நாங்கள் எப்படிப்பட்ட வெகுளி கள்!. 'இஸ்லாமியச் சகோதரர்களால் தயாரிக்கப்பட்டது' என்று விளம்பரத்தில் சொல்லப்பட்டிருக்கும் இந்த ஒரே காரணத்திற்காக வாசனைத் திரவியம் கலந்த கூந்தல் தைலத்தை நாங்கள் விரும்பினோம். அதை எங்களது தலையில் தேய்த்துக்கொள்ளும்போதெல்லாம், ஏழா வது சொர்க்கத்தில் இருப்பதுபோல் உணர்ந்தோம். இத் தோடு ஒப்பிடும்போது, சொர்க்கத்தில் கிடைக்கக்கூடிய சந்தோஷங்கள் பற்றிய கனவுகள் எல்லாம் ஒன்றுமில் லாமல் போகும். நாங்கள் வெகுளிகள்தான். ஆனால் நல்ல மனிதர்கள். இறுதித் தீர்ப்பு நாள்வரை, நாங் கள் எப்படி இருக்கிறோமோ அப்படியே தொடர்ந்து எங் களைக் கடவுள் வைத்திருக்கட்டும்.

நான் 'ஷா சவுத்' பற்றிப் பேசிக்கொண்டிருந்தேன். ஆனால் சற்றே உணர்ச்சிவசப்பட்டு இஸ்லாமியப் புகழ் பாடத் தொடங்கிவிட்டேன். உண்மை என்னவென்றால், நாங்கள் இஸ்லாமைப் புகழத்தான் வேண்டும். ஓர் இந் துவோ, ஒரு கிறிஸ்துவனோ, பௌத்தத்தைச் சேர்ந் தவனோ நாங்கள் செய்வதற்கு ஈடுகொடுக்க முடி யுமா? அதனால்தான், அமெரிக்காவின் அரசு மதத்தை இஸ்லாமாக மாற்றிவிடுங்கள் என்று உங்களுக்கு யோசனை சொன்னேன். இப்படிச் செய்தால் நீங்கள் ஜப்பானை வெற்றிகொண்டு திருமணத்திற்கு வெளியே குழந்தைகள் பெற்றுக்கொள்ள வேண்டிய அவசியமே துமிருக்காது. அங்கிள், நிச்சயமாக உங்களால் முறை யற்ற குழந்தைகளை அங்கீகரிக்க முடியாது. நான் ஒரு முசல்மான்தான். கடவுள் மீதும் அவரது தூதர் மீதும் ஆணையிட்டுச் சொல்கிறேன். என்னுடைய இதயத்தின் ஆழத்திலிருந்து அதை வெறுக்கிறேன். நீங்கள் குழந் தைகளைத்தான் உற்பத்தி செய்ய வேண்டுமென்றால், இஸ்லாம் அதற்குச் சுலபமான வழியைக் கொண்டுள் ளது. திருமணம் செய்துகொண்டு, இதயம் நிரம்பும்வரை

பெற்றுப் போடுங்கள். ஏன், நீங்கள் நான்கு மனைவி களை எடுத்துக்கொள்ளுங்கள் என்றுகூட சொல்வேன். 'ஆன்ட்டி' உயிரோடு இருந்தால் மூன்று மனைவிகளை எடுத்துக்கொள்ளுங்கள். நீங்கள் செய்ய வேண்டிய தெல்லாம் இதுதான்: இஸ்லாமுக்கு மாறிவிடுங்கள்.

பாகிஸ்தானில் நீங்கள் 'இஸ்ரத் ஜஹான் பிபோ'[24]-வைத் திருமணம் செய்து கொள்ளலாம். ஏனெனில் அவளுக்குப் பல கணவன்மார்கள் கொண்ட அனுப வம் உண்டு. நாம் திரும்ப ஷா சவுத்-க்கு வருவோம். அவர் பார்ப்பதற்கு அழகானவர். அவர் விமானத்திலி ருந்து இறங்கியவுடன் செய்த முதல் வேலை, லாகூரில் உள்ள 'மோச்சி கேட்'-ல் இருந்து வந்த கவர்னர் ஜென ரல் 'குலாம் முஹமது'-வைத் தழுவிக்கொண்டதுதான். இரண்டு இஸ்லாமியச் சகோதரர்கள் ஒருவரை ஒரு வர் தழுவிக்கொண்டது, மனதுக்கு எவ்வளவு இதமான காட்சியாக இருந்தது. அந்தக் காட்சியைக் கண்ட கராச்சி இஸ்லாமியர்கள், அவர்களுடைய தொண்டை கட்டிக்கொள்ளும் அளவுக்குக் கோஷம் எழுப்பினார் கள். பொதுக் கூட்டங்களும் அணிவகுப்பும் நடந்தன. பெரிய விருந்துகள் கொடுக்கப்பட்டன. பல நூற்றாண்டு இஸ்லாமிய மரபுப்படி, 'ஷா சவுத்' ஒரு பெட்டி முழுக்கத் தங்கம் கொண்டு வந்திருந்தார். அதைத் தூக்குவதற் குக் கராச்சியில் உள்ள கூலிகள் மிகவும் சிரமப்பட்டார் கள். அவர் அந்தத் தங்கத்தை எல்லாம் கராச்சியில் விற்று, கிடைத்த பத்து லட்சம் ரூபாயை, 'சவுதாபாத்' என்ற அகதிகளுக்கான குடியிருப்பு கட்டுவதற்கு நன் கொடையாகக் கொடுத்தார். அவரை 'அல்லா' வாழ்த் தட்டும்.

மேலும், அவருக்கு பாகிஸ்தான்மீது இருந்த அன்பை நிரூபிப்பதற்காக, அவருடைய இரண்டு மகன்களுக் குப் பாகிஸ்தானில் திருமணம் செய்ய விரும்பினார்

என்ற வதந்தியும் இருந்தது. இதையும் கேள்விப்பட்டேன், கராச்சியைச் சேர்ந்த 'பேகம் ஷாநவாஸ்' இளவரசர்களுக்கு ஏற்றாற்போல் ஜோடியைக் கண்டுபிடிக்க முடியாத காரணத்தால், லாகூரில் உள்ள 'பேகம் பஷீர் அஹமது'-வுடன் தொலைபேசியில் பேசியுள்ளாராம். எப்படிப் பார்த்தாலும் 'லாகூர் லாகூர்தான்' என்பதால் 'இளவரசர் தகுதி' பெற்ற பெண்களுக்கு லாகூரில் பஞ்சமிருக்காது. இதையும் கேள்விப்பட முடிந்தது. 'பேகம் ஜி.ஏ. கான்' மற்றும் 'பேகம் சல்மா டஸாடுக் ஹு¨சேன்' [25] ஆகியோரை மரபுரீதியான திருமணத் தரகராக இருக்கும்படி, 'பேகம் பஷீர் அஹமது' கேட்டுக்கொண்டாராம். இந்தத் தொழிலை முடிவெட்டுபவனின் மனைவிமார்கள் செய்வதுதான் வழக்கம். இவர்கள், சில உயர்ந்த குடும்பங்களை அணுகியதாகவும் துரதிர்ஷ்டவசமாக ஏதுமில்லாமல் போனதாம். எங்களுடைய உயர்குடிப் பெண்களுக்கு ஒட்டகத்தைக் கண்டால் பிடிக்காது என்று சொல்லப்படுவதுண்டு. தனிப்பட்ட முறையில் அவர்கள் தவறு செய்வதாகவே நான் நினைக்கிறேன். பாகிஸ்தான் உருவாவதற்கு முன்பு, சவூதி அரேபியா மற்றும் இந்திய இஸ்லாமியர்களுக்கு இடையே சிறப்பான தொடர்பு இருந்தது. 'மௌலானா தௌத் கஸ்நாவி' மற்றும் 'மௌலானா இஸ்மாயில் கஸ்நாவி' குடும்பத்திலிருந்து ஓர் இளம் பெண் 'ஷா சவுத்'-ன் தந்தையான 'அப்துல் அஜீஸ் இப்னு சவுத்'-ன் அந்தப்புரத்தில் சேர்க்கப்பட்டுள்ளார். உங்களுக்கு இது தெரிந்திருக்கலாம். இதனால் - ஒரே ஒரு முறை மட்டுமே போதுமென்றாலும், 'இஸ்மாயில் கஸ்நாவி' முப்பத்தேழு முறை 'ஹஜ்' சென்றுள்ளார்.[26]

'பேகம் பஷீர் அஹமது', 'பேகம் ஜி.ஏ. கான்' மற்றும் 'பேகம் டஸாடுக்' அவர்களுடைய தேடலில் வெற்றி பெறவில்லை என்றாலும், அவர்கள் தேடும் இனிமையான குரலைக் கொண்ட 'இராப்பாடி பறவையை' இறுதியில்

கண்டெடுப்பார்கள் என்பதில் நான் உறுதியாக இருக்கிறேன். இந்த பாகிஸ்தானில், "ஹித்ஜாஸ்' இளவரசர்களுக்குத் தகுதியான இரண்டு பெண்கள் கண்டுபிடிக்கப் படுவார்கள்.

என்னுடைய ஒரு கடிதத்தில் எங்களுடைய வயதான பெண்கள், அவர்களுடைய வயிற்றுப் பகுதியை வெளிக் காட்டுவது போல், சுருக்கப்பட்ட 'ஜம்பர்' அணிந்திருப்பது பற்றி எழுதியிருந்தேன். இது எங்களுடைய பல்கலைக்கழகத்தில், பாரசீகத் துறையின் தலைவர், டாக்டர். 'முஹமது பஹ்ஹர்'-ஐக் கோபப்படுத்திவிட்டது போலும். நாகரிகமான வார்த்தைகளால் என்னை வசை பாடியுள்ளார். பாகிஸ்தான் பெண்ணினத்தை நான் அவமானப்படுத்திவிட்டதாகவும் அதனால் நான் தண்டிக்கப்பட வேண்டியவன் என்றும் சொல்லியிருக்கிறார். சாத்தான் அவரைக் கொண்டு செல்லட்டும். நான் சொன்னதெல்லாம் வயதுகூடிய பெண்கள் அவர்களை இளமையாகக் காட்டும் ஆடைகளை அணிய வேண்டாம் என்று மட்டும்தான். நான் நிச்சயமாகச் சொல்கிறேன்

'டாக்டர். பஹ்ஹர்' இந்தக் கடிதத்தைப் படிக்க நேர்ந்தால், மீண்டும் நான் பெண்களை அவமானப்படுத்திவிட்டதாக என்னைக் குற்றஞ்சாட்டுவார். உண்மையைச் சொல்வதென்றால் நாங்கள் எளிமையானவர்கள், வெகுளிகள். எங்களுடைய பெண்களைப் பொறுத்த மட்டில் அவர்கள் 'திசையறி' கருவியில் உள்ள சேவல் போன்றவர்கள். காற்று எந்தப் பக்கம் அடிக்கிறதோ அந்தப் பக்கம் திரும்பிவிடுவார்கள்.

'ஈரானின் ஷா' இங்கு வந்தபோது தனிக்கட்டையாக இருந்ததால், எங்களுடைய உயர்குடிப் பெண்கள் கவர்ச்சியாக இருப்பதற்காகப் புத்தகங்களில் உள்ள எல்லாத் தந்திரங்களையும் உபயோகப்படுத்தினார்கள்.

அவர் 'ஃபௌஷியா'-வை விவாகரத்துச் செய்திருந்தார். இருப்பினும் அவர் எங்கள் பெண்மணிகள் மீது கொஞ் சமும் ஈடுபாடு காட்டாமல், ஈரான் திரும்பியபின், 'ஸங்ர் ரியா இஸ்பந்த்யர்'-ஐத் திருமணம் செய்துகொண்டார். அவரைத் தொடர்ந்து திருமணம் ஆகாத இளவரசர் 'அலி', எங்களுடைய உயர்குடிப் பெண்கள் அவருடைய கவனத்தைப் பெறுவதற்கு அவர்களால் முடிந்தமட்டும் எல்லாவற்றையும் செய்து பார்த்தார்கள். ஆனால், உங் களுடைய ஹாலிவுட் நடிகை 'ஜினி டையர்நே' உடன் காதல் புரியத் தொடங்கியதன் மூலம், அவர்களின் நம் பிக்கையின் மீது குளிர்ந்த தண்ணீரை ஊற்றிவிட்டார். ஏழு சுதந்திரங்கள் பெற்றுள்ள உங்கள் நாட்டைக் கட வுள் காப்பாற்றட்டும்!. பிறகு 'ஈராக்கின் ஷா' வந்தார். ஆனால் எங்களுடைய உயர்குடிப் பெண்கள் பெரும் ஏமாற்றத்தை அடைந்தார்கள். காரணம் அவர் சிறுவ னாக இருந்தார். ஒருத்தி அவர் குட்டிப் பையன் என் றும் விளையாடிக்கொண்டிருக்க வேண்டியவர் என்றும் கருத்துத் தெரிவித்தாள். ஆட்சிப் பளு அவர்மீது ஏன் சுமத்தப்பட்டுள்ளது என்று தன்னால் புரிந்துகொள்ள முடியவில்லை என்றும் சொன்னாள். வயிற்றுப் பகுதி அவ்வளவாக வெளியே தெரியாதது போல் உடைய ணிந்திருந்த ஒரு வயதான பெண்மணி, 'ஷா'வை ஒரு பார்வை பார்த்துவிட்டு, "அவனுக்கு வயதானவர்கள்மீது ஈர்ப்பு இருக்காது. அவனுடைய வயதுக்கு ஏற்றாற்போல் ஒருத்தியைப் பாருங்கள்" என்று கருத்துச் சொன்னாள்.

இப்போது, 'ஷா சவுத்' அவருடைய இருபத்திரண்டு அல்லது இருபத்தைந்து இளவரசர்களோடு வந்தி ருக்கிறார். லாகூரில் உள்ள கவர்மெண்ட் ஹவுஸில் மிகப் பிரம்மாண்டமான விருந்து நடத்தப்பட்டது. திரு மணம் செய்து கொள்ளக்கூடிய, திருமணம் செய்து கொள்ள முடியாத எல்லா உயர்குடிப் பெண்களும் அதில் கலந்துகொண்டார்கள். புகைபிடிப்பது அனும

திக்கப்படவில்லை. அடுத்த நாள், இரண்டு டஜன் இளவரசர்கள் அவர்களின் நல்லெண்ணத்தின் அடை யாளமாக, 'அனார்கலி' பகுதிக்குப் பொருட்கள் வாங் கச் சென்று நூற்றுக்கணக்கான பாகிஸ்தானியக் கால ணிகளை வாங்கினார்கள். இனி இவர்கள் அரேபியப் பாலைவன மணலில், இந்தக் காலணிகளோடு நடந்து, அதில் அதன் பதிவுகளை விட்டுச் செல்வார்கள். நான் இந்தக் கடிதத்தைப் பாதியில் முடித்துக் கொள்கிறேன். ஏனென்றால் நான் புத்தக வெளியீட்டாளரிடம் சென்று, என்னுடைய புதுப் புத்தகத்திற்கான ராயல்டி தொகை யைப் பெற்றுக்கொள்ள வேண்டும். அவரும் பத்து நாட் களாகச் சத்தியம் செய்து கொண்டிருக்கிறார் என்பதால், ஒருவேளை இன்று எனக்குப் பத்து ரூபாய் கொடுப் பார் என்று நினைக்கிறேன். அவர் மட்டும் கொடுத்து விட்டால், இந்தக் கடிதத்தை உடனடியாகத் தபாலில் சேர்த்து விடுகிறேன்.

'ஜினி டையர்நே'-க்கு என்னுடைய காற்று முத்தங்கள்.

உங்களுக்குக் கீழ்ப்படிந்த

உங்கள் சகோதரனின் மகன்.

சாதத் ஹசன் மண்ட்டோ

***




## 26, ஏப்ரல் 1954

31 லஷ்மி மேண்ஷன்
ஹால் வீதி
லாகூர்

அன்புள்ள அங்கிள்,

என்னுடைய கடைசிக் கடிதம், முடிவுபெறாமல் இருந்தது என்பது மட்டுமே என் நினைவிலிருக்கிறது. அதில் என்ன எழுதியிருந்தேன் என்று ஞாபகப்படுத்திப் பார்க்க முடிந்தால், அதை முடிப்பதாக உறுதியளிக்கிறேன்.

உள்ளூர்ச் சாராயம் குடித்துக்கொண்டிருப்பதால், என்னுடைய ஞாபக சக்தி பாதிக்கப்பட்டுள்ளது. பஞ்சாபில் குடிப்பது தடை செய்யப்பட்டுள்ளது என்றாலும், யார் வேண்டுமென்றாலும் பன்னிரெண்டு ரூபாயும் இரண்டு அணாவும் செலவுசெய்து குடிப்பதற்கான அனுமதியைப் பெற்றுவிடலாம். இதில் ஐந்து ரூபாய், விண்ணப்பதாரருக்குக் குடிக்க முடியாமல் போனால், தவளைச் சத்தம் போட்டுக்கொண்டிருப்பார் என்று சான்றிதழ் கொடுக்கும் மருத்துவருக்குப் போய்விடும். எனக்கு நினைவிருக்கிறது பல வருடங்களுக்குமுன், உங்கள் நாட்டில் நீங்களும் குடிப்பதைத் தடை செய்திருந்தீர்கள்- ஆனால் அனுமதிச் சான்றிதழ் பற்றியெல்லாம் கவலைகொள்ளாமல். அதன் விளைவுகள் ஒன்றும் ஆரோக்கியமானதாக இல்லை.

மதுத் தடை கள்ளச்சாராயம் காய்ச்சுபவர்களையும், ரௌடிக் கும்பல்களையும் உருவாக்கியது. அவர்கள்

ஏறக்குறைய ஓர் இணை அரசாங்கத்தை நடத்தினார்கள். முடிவில் சட்டத்திருத்தம் கொண்டு வரப்பட்டு, குடிப்பது மறுபடியும் சட்டப்பூர்வமாக்கப்பட்டது.

எங்களுக்கு இது போன்ற அதிர்ஷ்டம் ஏதும் உருவாகப் போவதில்லை. ஏனெனில் எங்களுடைய அரசாங்கம், முல்லாக்களையும் குடிப்பவர்களையும் சந்தோஷமாக வைத்திருக்கவே விரும்புகிறது. இதில் சுவாரசியமான விஷயம் என்னவென்றால், குடிக்கும் வகையினரில் பல முல்லாக்கள் இருக்கிறார்கள் என்பதும் பல முல்லாக்கள் குடி விஷயத்தில் பலவீனமானவர்களாக இருக்கிறார்கள் என்பதும்தான்.

விஷயம் எதுவாக இருந்தாலும், சாராயம் விற்கப்படுவது தொடர்ந்துகொண்டுதான் இருக்கும். அதனால் நீங்கள் என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம் - குறைந்தபட்சம் இந்த விஷயத்திலாவது. இத்தோடு நீங்கள் கல்நெஞ்சுக்காரர் என்பதையும் சேர்த்துச் சொல்ல விரும்புகிறேன். ஏனெனில், நான் பலமுறை, இங்கு கிடைக்கும் சாராயத்தின் மட்டமான தரம் பற்றி உங்களுக்கு எழுதியிருந்த போதிலும், எனக்கு நல்ல தரமான விஸ்கியை அனுப்பிவைக்க வேண்டுமென்றோ, வேறு வழியேதுமில்லாமல் குடிப்பதால் ஏற்படும் மோசமான பின்விளைவுகளிலிருந்து அவனைக் காப்பாற்ற வேண்டுமென்றோ, உங்களுக்கு எப்போதும் தோன்றியதே இல்லை. எப்படியிருந்தாலும், நான் மறுபடியும் இதைப் பற்றி எழுதப் போவதில்லை. பாகிஸ்தானுக்கு நீங்கள் ராணுவ உதவி செய்து கொண்டிருக்கும்வரை, என்னை நீங்கள் நரகத்திற்குக்கூட அனுப்பி வைக்கலாம். ஆனாலும் நான் சந்தோஷமாக இருப்பேன்.

உங்களுடைய 'பைப்'பைப் பற்ற வைப்பதற்காக, என்னுடைய கடிதங்களை நீங்கள் உபயோகிக்கவில்லை என்பதே எனக்குச் சந்தோஷம்தான். ஆனாலும், அதை

மிகக் கவனமாகப் படித்து, நான் கொடுக்கும் யோசனைகள்மீது கவனம் செலுத்துங்கள். இப்போது நான் மெதுவாக, மிக மெதுவாக ஒரு அறிவுரை சொல்லப் போகிறேன் - அதாவது எவரும், எப்போதும் கண்டுபிடிக்க முடியாதபடி. 'ஜமீன்தார்'[27] செய்திப் பத்திரிகைக்கு நிதியுதவி செய்ய முன்வாருங்கள். கோணல் கண்ணும் ஊனக்காலும் கொண்ட அதன் ஆசிரியன், உங்களுடைய பணத்தை எப்படிப் பெற்றுக்கொள்வது என்ற அளவிற்குக்கூட அறிவில்லாதவன். அதன் நிறுவனரின் மகனான 'மௌலானா அக்தர் அலிகான்', அவனுடைய தந்தையிடமிருந்து 'மௌலானா' என்ற பட்டத்தைப் பரம்பரைச் சொத்தாகப் பெற்றிருந்தாலும், இது போன்ற விஷயங்கள் என்று வரும்போது கொஞ்சமும் தொழில் முறை அறிவில்லாதவன். உதாரணத்திற்குச் சொல்வதென்றால் சமீபத்தில் பஞ்சாப் அரசாங்கத்தின் முன்னாள் மக்கள் தொடர்பு இயக்குநர் 'மீர் நூர் அஹமது', இவருடைய வாயை அடைப்பதற்காக, பல லட்சம் ரூபாய்களைத் தள்ளியபோது, இந்த 'மௌலானா' அந்தப் பணத்தை எடுத்துக்கொண்டு உடனடியாகப் புத்தம் புதிய அமெரிக்கக் கார் ஒன்றை விலைகொடுத்து வாங்கியிருக்கிறான். அத்தோடு இந்தப் புதிய சம்பாத்தியத்தைப் பிரகடனப்படுத்த ஒரு கொண்டாட்டத்திற்கும் ஏற்பாடு செய்திருக்கிறான். இது மிக முட்டாள்தனமானது. இப்போது அவன் சிறையில் இருக்கிறான். அவனுடைய முட்டாள்தனமான நடவடிக்கைகளுக்கு நான் மேலும் சாட்சியாக இல்லாமலிருக்க அவன் தொடர்ந்து சிறையிலேயே இருக்கட்டும் என்று கடவுளை வேண்டிக்கொள்கிறேன்.

இப்போது 'ஜமீன்தாரின்' நிர்வாக மேலாளராக இருக்கும் அவனுடைய மகனும் படித்தவன்தான் என்றாலும் சரியான கழுதைதான்.

சமீபத்தில் இந்தப் பத்திரிகையின் 'ஊனத்தின் தைமூர்' எனக்கான பொருளாதார உதவியைத் திரட் டுவது என்று அவனாகவே முடிவுசெய்தான். அவனுக்கு மட்டும் கால் ஊனமில்லாமல் இருந்திருந்தால் பாகிஸ் தானின் 'டாக்டர். முஹமது முஷ்டாஹ்' - ஆக இருந்திருப் பான். அவன் எழுதும்போது, உலகத்தின் எல்லாப் பளு வையும் தன்மீது சுமத்திக்கொள்கிறான். உங்களுக்கு இந்தச் செய்தி கிடைத்திருக்கும் என்று நிச்சயமாக நம் புகிறேன். அதாவது டாக்டர். முஷ்டாஹ்-ன் வழக்கை ஈரான் உச்ச நீதிமன்றம் விசாரித்த போது - 'ஷருல் ஹசன் தர்' நிழல் எழுத்தாளர்களை வைத்து வகையறை இல் லாமல் எழுதுவதில் இவருக்கு இணையாக எவருமே கிடையாது - அவருடைய மனைவி கொடுத்த மந்திர மோதிரத்தில் முழு நம்பிக்கையுள்ளதால், தன்னுடைய கருத்தை வெளியிட விரும்பவில்லை என்று சொல்லியி ருக்கிறான். ஒருமுறை ராணுவ நீதிமன்றத்திற்கு இழுக் கப்பட்டபோது அவன் அரசுத் தரப்பு வழக்கறிஞரை, மல் யுத்தத்திற்கு வருமாறு சவால் விட்டான். பிறகு உண் ணாவிரதம் இருக்கப்போகிறேன் என்று மிரட்டினான். இரண்டே நாளில் அது தன்னைக் கொன்றுவிடுமென்று எல்லோரிடமும் சத்தியம் செய்துகொண்டிருந்தான். ஆனால் அப்படி ஏதும் நடக்கவில்லை என்பதோடு இன்னமும் உயிரோடுதான் இருக்கிறான். இருந்தாலும் அவ்வப்போது மயங்கி விழுந்துகொண்டிருக்கிறான்.

இந்தப் பாகிஸ்தானி 'ஷருல் ஹசன் தர்' (அல்லது டாக்டர் முஷ்டாஹ்) மருத்துவம் படித்தவரில்லை என் றாலும் டாக்டர் முஷ்டாஹ் போலவே அடிக்கடி மயங்கி விழுந்துகொண்டிருந்தார். பிறகு என்ன நடக்குமென் றால் 'அலி சூஃபியான் அஃபா'ஹி' மற்றும் 'மன்சூர் அலி கான்' [28] இருவரும் 'மோப்ப உப்பை' அவனுக்குக் கொடுப்பார்கள். (இது 'மௌலானா ஜாஃபர் அலிகான்'-ன் ரகசிய மருந்து) அதாவது அவர் பத்திரிகை அலு

வலகத்திற்கு வந்து அன்றைய தினத்திற்கான டைரிக் குறிப்பைப் பத்திரிகையில் எழுதுவதற்கு. அத்தோடு 'தர்' எருமைத் தோல் கொண்ட பத்திரிகையாளன் என்ப தால் வசவுகளை, ஏன் மோசமான வசவுகளைக்கூடக் கண்டுகொள்ள மாட்டான். ஒரு வேளை அவனிடம் கொடுக்கப்பட்ட அந்த மாய மோதிரத்தில் அவனது ரக சியம் அடங்கியிருக்கலாம். அவன் சிறுவனாக இருந் தபோது அவனை ஆராதனை செய்தவன் கொடுத் திருக்கலாம் என்று தீவிரமாகச் சந்தேகப்படுகிறேன். தயவுசெய்து 'ஜமீன்தார்'-க்காகக் கொஞ்சம் பணம் அனுப்பி வையுங்கள். ஆனால் என் மூலமாக, அதைக் கொடுத்தால், அதில் கொஞ்சம் போல் 'ஷருல் ஹசன் தர்'-க்குக் கொடுப்பேன். அவன்தான் என்னுடைய பாது காப்பாளனாக நடிக்க விரும்புகிறான். இது நல்லெண் ணத்தின் அடிப்படையிலானது என்றாலும், பொதுவாக ஒரு படைப்பிற்கு நான் ஐம்பது ரூபாய்வரை எதிர்பார்க் கிறேன் என்றாலும் அவனுடைய சிறப்பிதழ் ஒன்றுக் காக நான் எழுத வேண்டும் என்று கேட்டு இருபது ரூபாய்க்கு மேல் கொடுக்க முடியாது என்று தெளிவாகச் சொல்லிவிட்டான். அதுவும் நான் அந்தப் பணத்தைக் குடியில் செலவிட்டுவிடுவேன் என்று அவன் தீர்மா னமாக இருந்ததால், காசோலையை அவனே சென்று செலுத்திவிடுவதாக என்னிடம் தெரிவித்தான். நானும் என் குடும்பமும் அவனுக்கு என்றென்றும் கடமைப்பட் டிருக்க வேண்டும் என்று அவன் நினைப்பதாகவே நான் கருதுகிறேன். ஒருவேளை வெறுக்கத்தக்க என் போன் றவர்கள்மீது அவன் அக்கறை காட்டியதற்கு, நான் நன் றியுள்ளவனாக இருந்திருக்க வேண்டும்.

இங்குள்ள எல்லாச் செய்திப் பத்திரிகைகளிலும், 'ஜமீன்தார்'-ஐ மட்டுமே நீங்கள் உங்களுடைய டாலரைக் கொடுத்து வாங்க முடியும். ஒருவேளை 'அக்தர் அலி கான்' விடுதலை செய்யப்பட்டால், 'ஷருல் ஹசன் தர்'

தொடர்ந்து ஆசிரியராக இருக்க என்னால் முடிந்ததை முயன்று பார்க்கிறேன். உண்மையில் அவனொன்றும் அவ்வளவு மோசமானவனில்லை.

உங்களால் முடிந்தால் உங்களுடைய சிபாரிசை உப யோகப்படுத்தி 'மீர் நூர் அஹமது'-வை மீண்டும் மக்கள் தொடர்பு இயக்குநராக ஆக்குவதற்கு முயலுங்கள். அது சிறப்பாக இருக்கும். ஏனெனில் 'எம். ஷர்ஃபரஸ்'[29] பத் திரிகைகளுக்குப் பெரிய அளவில் பணம் பட்டுவாடா செய்வதற்கு வேண்டிய சாமர்த்தியம் இல்லாதவர்.

பணத்தை நீங்கள் என்னிடம் அனுப்பிவைத்தால் அது சிறப்பாக இருக்கும். நான் அதைப் பட்டுவாடா செய் கிறேன். இப்படிச் செய்வதன் மூலம் 'ஜமீன்தார்' ஆசி ரியரின் மனதில் என்னை நிறுத்திக்கொள்வதோடு, என்னுடைய மேற்பார்வையில் உங்களுடைய பிரசாரம் ஆழமான பாதிப்பை ஏற்படுத்தும் என்று உறுதி செய்து கொள்ளலாம்.

அத்தோடு நீங்கள் பிரசுரிக்கும் இதழ்கள் எல்லாம் இங்கு குப்பைச் சந்தையில்தான் விற்கப்படுகின்றன. இதற்கு என்ன அர்த்தம் என்றால் குப்பைச் சந்தை வியாபாரிகள் உங்களுக்குக் கடன்பட்டவராகிறார்கள். இந்த இதழ்களெல்லாம் நல்ல காகிதத்தில் அச்சிடப்ப டுவதால் பொருட்கள் வாங்கும் 'பை' செய்வதற்கு மிக அருமையாக இருக்கும். இந்த நல்ல காரியத்தைத் தொடர்ந்து செய்துகொண்டிருங்கள். ஏனெனில் இந்த நாட்டில் காகிதங்களுக்குப் பற்றாக்குறை உள்ளது. மிக மோசமான காகிதத்தில் அச்சடிக்கப்பட்ட, குப்பைச் சந் தையில் சொற்பக் காசே கிடைக்கக்கூடிய எங்கள் பத் திரிகைகள் சிலவற்றை வாங்கும் விருப்பம் உங்களுக்கு இருக்கலாம்.

அங்கிள், சங்கடப்படக்கூடிய செய்தி ஒன்றைக் கேள் விப்பட்டேன். அது கம்யூனிஸ்டுகள் பரவவிட்ட வதந்

தியாகக்கூட இருக்கலாம். இயற்கைக்கு விரோதமான குற்றங்கள் உங்கள் நாட்டில் அதிகரித்து வருகின்றன என்ற விஷயம் எங்கள் செய்தித்தாள்களில் வந்திருக் கிறது. மில்லியன் டாலர் கால்களைக் கொண்ட அந்தப் பெண்களுக்கு என்னதான் ஆயிற்று? என்ன அவமானம்! ஆனால் வெளிவந்த செய்திகள் உண்மையென்றால், தயவுசெய்து உங்களுடைய எல்லா 'ஆஸ்கர் ஒயில்ட்'-களையும் இங்கு அனுப்பி வையுங்கள். தேவையான அளவுக்கு நாங்கள் அவர்களைக் கவனித்துக் கொள் கிறோம். அவர்களுக்கு என்ன தேவையிருந்தாலும் அதைச் செய்து முடிப்பதற்கு நாங்கள் தயாராக இருக்கி றோம். ஏனெனில், நீங்கள் தானே எங்களுக்கு ராணுவ உதவி செய்து கொண்டிருக்கிறீர்கள்.

'அஹமது ரா'ஹி' அபகரித்துச் சென்ற, நான் உங்க ளுக்கு எழுதிய அந்தக் கடிதத்தைத் தோழர். 'சிப்தே ஹசன்' படித்துவிட்டான் என்றே நினைக்கிறேன். என் னிடமே வெளிப்படையாக, நான் ஏற்றுக்கொண்டாலும் ஏற்றுக்கொள்ள மறுத்தாலும் நானும் கம்யூனிஸ்ட்தான் என்கிறான். அங்கிள், உங்களுடைய ஏழு சுதந்திரங் கள்மீதும், உங்களுடைய டாலர்மீதும் ஆணையிட்டுச் சொல்கிறேன், நான் முன்பும் கம்யூனிஸ்டாக இருந்தது கிடையாது. இப்போதும் கிடையாது. இவையெல்லாம் 'சிப்தே ஹசன்' -ன் குறும்பு வேலைதான். அதுவும் உங்க ளுக்கும் எனக்கும் இடையே குழப்பத்தை உண்டாக்கு வதற்கான மிகவும் சிவப்பான குறும்பு வேலை.

உங்களுக்கு மிக நன்றாகவே தெரியும் உங்களுக்குக் கட்டுப்பட்ட, உங்களுடைய சகோதரனின் மகன் ஒன் றுக்கு மேற்பட்ட வழிகளில் உங்களுக்குக் கடமைப்பட் டவன். நீங்கள் முன்பு அனுப்பிவைத்த முந்நூறு ரூபாய் முழுவதும் 'ஜிம்கானா' விஸ்கி - அதன் தரம் பற்றி ஏற்கெ னவே என்னுடைய முந்தைய கடிதங்களில் விளக்கியுள்

ளேன், குடித்தே தீர்ந்துவிட்டது. அந்தப் பணத்தில் நான் உப்பு ஏதும் வாங்கவில்லை என்பதால், எங்களுடைய பழக்கத்தில் சொல்லப்படுவது போல், 'நான் உங்களுடைய உப்பைத் தின்றவன்' இல்லை என்று என்னால் சொல்லிக்கொள்ள முடியும். உங்களுக்குத் தெரியுமா? மருத்துவர்கள் நான் உப்பு சேர்த்துக்கொள்ளக் கூடாது என்று சொல்லியிருக்கிறார்கள். அதற்கு அனுமதிக்கப் பட்ட உடனேயே உங்களுக்குத் தெரியப்படுத்துகிறேன். நீங்கள் உங்களுடைய சுத்தமான அமெரிக்க உப்பை எனக்கு அனுப்பி வைத்தீர்களானால், நான் என்றென்றைக்கும் உங்களுக்குக் கடமைப்பட்டவனாக இருப்பேன்.

நான் மீண்டும் ஒருமுறை உறுதியளிக்கிறேன் - நான் கம்யூனிஸ்ட் அல்ல. நான் 'காதியானி' [30] ஆக ஆவேனே தவிர நிச்சயமாகக் கம்யூனிஸ்டாக ஆக மாட்டேன். ஏனெனில், இந்தக் கோமாளிகளிடம் கொடுப்பதற்கென்று வெறும் வார்த்தைகள்தான் இருக்கும். எப்போதும் பணமிருக்காது. 'காதியானி' முரட்டுப் பயல்களாக இருந்தாலும், பாகிஸ்தானிகளாக இருப்பதால் இந்தக் கம்யூனிஸ்டுகளுக்கும், 'காதியானி'-களுக்கும் இடையே தகராறு ஏதும் ஏற்படுவதை நான் விரும்பவில்லை. நீங்கள் ஹைட்ரஜன் குண்டை வெடித்தபின், ஓர் இறைத்தூதரின் சேவை உங்களுக்குத் தேவைப்படும் என்று எனக்குத் தெரியும். அதை 'மீர்ஷா பாஷீருதீன் முஹமது'-வால் மட்டுமே கொடுக்க முடியும்.

இப்போதெல்லாம் பழைமைவாத இஸ்லாமியர்கள் 'சர். ஜபாருல்லா கான்'-க்கு எதிராக ஒன்று திரண்டு, அவர் 'காதியானி' என்பதால் அவரை வெளியுறவு அமைச்சர் பதவியிலிருந்து வெளியேற்ற வேண்டும் என்று கோரிக்கை வைக்கிறார்கள்.

தனிப்பட்ட முறையில் அவருக்கு எதிராக என்னிடம் ஏதுமில்லை என்றாலும், அவர் உங்களுக்கு மிகவும் பய னுள்ளவராக இருப்பார் என்று மட்டும் எனக்குத் தெரி யும். என்னுடைய யோசனை என்னவென்றால், எப்படி யாவது நீங்கள் அவரை வென்றெடுத்துவிட்டால், உங் களுடைய நாட்டில் உள்ள பாலியல் வக்கிரங்களைக் கையாள்வதில், திறம்படச் செயல்படுவார் என்று மட்டும் என்னால் உறுதியாகச் சொல்ல முடியும்.

இஸ்லாமிய நாடுகளுக்கு ராணுவ உதவி செய் வதென்று ஒப்புக்கொண்டுள்ளதாக ஈராக் அரசாங்கம் அறிவித்துள்ளது. மேலும் இந்த உதவிகள் எவ்வித முன் நிபந்தனைகளும் இல்லாதவை என்றும் அறிவித்துள் ளது. அங்கிள், நீங்கள் மட்டும் அருகில் இருந்திருந் தால், உங்களுடைய கால்களை முத்தமிட்டு, என்றென் றும் நீவிர் நீடூழி வாழ வாழ்த்தியிருப்பேன்.

இஸ்லாமிய நாடுகள்மீது உங்கள் இதயம் கனிந்து போகத் தொடங்கியுள்ளதைப் பார்த்தால் வெகுவிரை வில் நீங்களும் முசல்மானாக மாறிவிடுவீர்கள் என்றே நினைக்கிறேன். முன்பு, இஸ்லாமில் உள்ள பல்வேறு ஒழுக்கப்பாடுகளை உங்களுக்கு விளக்கிச் சொல்லியி ருக்கிறேன். 'ஆன்ட்டி' உயிரோடு இருக்கும் பட்சத்தில், நீங்கள் மேலும் மூன்று மனைவிமார்களை எடுத்துக் கொள்ள முடியும் என்றும் சொல்லியிருந்தேன். நான் ஏற் கனவே நடிகை 'இஸ்ரத் ஜஹான் பிபோ'-விடம் உங்களு டைய மனைவியாவதற்கு, அவளைச் சம்மதிக்கவைக்க முயற்சிகளைத் தொடங்கிவிட்டேன். நான் வெற்றிபெற வேண்டுமென்றால், நீங்கள் மனைவியில்லாதவராக இருக்க வேண்டும். இது போன்ற விஷயங்களில், அவள் மிகவும் அனுபவம் பெற்றவள் என்பதோடு, குடிப்பதன் மீது வெறுப்பு ஏதும் இல்லாதவள். தற்சமயம் அவளுக்கு ஒரு கணவர் இருக்கிறார். ஆனால் நான் கேட்டுக்

கொண்டால், அவள் மிக சந்தோஷமாக அவளுடைய இந்த ஐந்தாவது அல்லது ஆறாவது கணவரை ஒதுக்கித் தள்ளிவிடுவாள்.

அங்கிள், உங்களுடைய 'ரீட்டா ஹேவோர்த்' ருஷ்யா போகப் போவதாகக் கேள்விப்பட்டேன். தயவுசெய்து அவளைத் தடுத்து நிறுத்த முயலுங்கள். அவள் 'சர். ஆஹா கான்'-ன் மகனான இளவரசர் 'அலிகான்'-ஐத் திருமணம் செய்துகொண்டபோது, நான் என் தூக்கத்தை இழக்கவில்லை என்றாலும் அவள் ருஷ்யா போவதை நான் விரும்பவில்லை. இந்தக் குறும்புக்காரப் பெண்ணின் காதைப் பிடித்துத் திருகுவதற்கு நேரம் வந்துவிட்டது என்று நினைக்கிறேன். இவ்விஷயத்தை நான் தோழர் 'சிப்தே ஹசன்' மூலம் கேள்விப்பட்டேன். என்னிடம் சொல்லும்போது, அவன் மிகவும் பெருமைப் பட்டான். இறுதியில் அவள் போய்த்தான் தீருவாள் என்றால் நான் சிறுமைப்படுத்தப்பட்டது போல் உணர்வேன். அதுபோல்தான் உங்களுக்கும். உச்சந்தலைக்குச் சட்டென்று கோபம் ஏறும். அந்த நடிகை 'மாலொன் கோவ்' [31]ஐத் திருமணம் செய்துகொள்வதற்காகவா அங்கு போகிறாள்?

அப்படி இருக்கும்பட்சத்தில் நிச்சயமாக இது உங்களுடைய அரசியல் தந்திரமாகத்தான் இருக்க வேண்டும். அப்படி நீங்கள் திட்டமிடவில்லை என்றால், அங்கு போகும் அவளுடைய இந்த நடவடிக்கை நம்மை அவமானப்படுத்துவதோடு மட்டுமல்லாமல் அபாயகரமானதும்கூட.

இன்றைய செய்தித்தாளில், 'யாஸ்மின்' மற்றும் முந்தைய திருமணத்தின் மூலம் (யார் கணவர் என்று எனக்குத் தெரியாது) பெற்ற மற்றொரு மகளை அவள் நடத்திய விதத்திற்காக 'ரீட்டா' குற்றஞ்சாட்டப்பட்டதாகச் செய்தி வந்திருக்கிறது. இந்த இரண்டு பெண்களும்

நீதிமன்றப் பாதுகாப்பில் இருப்பதாகச் சொல்லப்படுகி றது. 'ரீட்டா' மேற்கு புளோரிடாவில் இருக்கிறாள். அங் குள்ள அரசாங்கம் அவளுடைய நான்காவது கணவரை அங்கிருந்து வெளியேற்றுவதற்கான வழக்கில் சிக்க வைக்க மும்முரமாக இருக்கிறது. உண்மையான கதை தான் என்ன? நான் 'அஹமது ரா'ஹி'-யிடம் கேட்டேன். ஆனால் அவன் என் கேள்வியைத் தவிர்த்தான். இவை யெல்லாம் ருஷ்யாவின் சதிதான் என்ற விஷயத்தைச் சேகரிக்கும் அளவுக்கு, நான் சாமர்த்தியமானவன். இந்த விஷயத்தில் உங்களுடைய மௌனத்தை என் னால் புரிந்துகொள்ள முடியவில்லை.

என் அறிவுரை என்னவென்றால், நீங்கள் இசைக் கலைஞரான 'ரீட்டா'-வின் நான்காவது கணவரை, அணு ஆயுத ரகசியங்களை ருஷ்யாவுக்குத் திருடி விற்று விட்டார் என்று குற்றஞ்சாட்டித் தூக்கில் தொங்கவிடுங் கள் அல்லது ஆயுள் தண்டனை விதியுங்கள்.

பிறகு 'ரீட்டா'-வை இங்கு அனுப்பிவைத்து திரு. 'சுஹ்ராவார்டி'-ஐ மயக்கித் திருமணம் செய்துகொள்ளச் சொல்லுங்கள். பிறகு அவள் மௌலானா பாஷானி-ஐத் திருமணம் செய்துகொள்ளலாம். பிறகு, கடவுளின் அரு ளிருந்தால், இன்னும் உயிரோடு இருப்பதோடு கிழக்குப் பாகிஸ்தானின் முதல்மந்திரியாகவும் இருக்கும். 'ஷெர்-இ-பெங்கால் சௌத்ரி'-ஐத் திருமணம் செய்துகொள்ள லாம். அவள் இந்த மூன்று 'பெரிய திருவாளர்களை'த் திருமணம் செய்துகொண்டு, அவர்களிடமிருந்து முறை யாக விவாகரத்து பெற்றபின், முன்னாள் பிரதம மந்திரி 'காஜா நஸீமுதீன்' பக்கம் அவளுடைய கவனத்தைத் திருப்பலாம். நான் உயிரோடு இருக்கும்பட்சத்தில், அவ ளுக்குச் சேவைசெய்ய நான் காத்திருப்பதாக அவளிடம் சொல்லுங்கள். அதாவது எனக்கு நீங்கள் தொடர்ந்து

பணம் அனுப்புவீர்கள் என்ற நிபந்தனையின் அடிப்ப டையில் மட்டும்.

எங்களுடைய செய்தித்தாளில், எங்களுடைய ஐ.நா. தூதர் பேராசிரியர் 'ஏ.எஸ். பொக்காரி'[32]-க்கு ஐ.நா. வில் செய்தித் தொடர்புத் தலைவர் பதவி கொடுக்கப்பட் டுள்ளது என்ற செய்தி வந்திருந்தது. 'சர். ஜபாருல்லா'-வை வெளியேற்றிய பின், பொக்காரி-யை அயல் துறை அமைச்சராக்கப் போகிறார்கள் என்று கேள்விப்பட் டேன். ஆனால் நீங்கள் அவரை நிரந்தரமாக அங்கேயே வைத்திருக்க விரும்புவது போல் தெரிகிறது.

எனக்கும் பொக்காரி-யை மிக நன்றாகத் தெரியும். அவரும் என்மீது மிகவும் பிரியமுள்ளவர். இதை ஒவ் வொரு ஐந்து வருடத்திற்கு ஒருமுறை தெளிவுபடுத்தி விடுவார். மிகச் சிறந்த பேச்சாளர் என்று மட்டும்தான் உங்களுக்கு அவரைப் பற்றித் தெரிந்திருக்கும்.

ஆனால் அவர் சிறந்த நகைச்சுவை எழுத்தாளர் என்று எனக்குத் தெரியும். லாகூர் புவியியல் பற்றி அவர் எழுதியுள்ள கட்டுரை, எங்களுடைய முன்னோர் கள் சொன்னதைத்தான் உறுதிப்படுத்துகிறது: லாகூர் லாகூர்தான். அப்புறம் பொக்காரி பொக்காரிதான்.

தயவுசெய்து அவரை 'அமெரிக்காவின் புவியியல்' என்று ஒன்றை எழுதச் சொல்லுங்கள். அதன் மூலம் உலகம் முழுவதும், உங்கள் நாடு எங்கிருக்கிறது என் பதைத் தெரிந்துகொள்ளட்டும். அதை ருஷ்ய மொழி யில் மொழிபெயர்த்து அங்கிள் மாலொன்கோவ்-க்கு அனுப்பி வைக்க வேண்டும்.

நானும் சிறப்பாக எழுதுவேன் என்றாலும், எங்கள் பழமொழியில் சொல்வதுபோல், 'பழக்கப்பட்டது எல் லாம் அசுகை தரும்' என்பது மீண்டும் உண்மையாக் கப்பட்டுள்ளது. என்னை உங்கள் நாட்டிற்கு அழைத் துச் சென்று, உங்களுடைய ஏழு சுதந்திரங்கள் கொண்ட

பூமி எப்படி உள்ளது என்பதை நேரில் பார்க்க, இரண்டு மூன்று மாதங்களுக்கு என்னை வெறுமனே அங்கு தங்க வையுங்கள். என்னுடைய பதிவுகளை நீங்கள் பார்க்க நேர்ந்தால், டாலர் நோட்டுகளை என் வாயில் திணித் துவிடுவீர்கள் என்று மட்டும் என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியும்.

ஜப்பானிய விஞ்ஞானிகள் ஹைட்ரஜன் குண்டுகள் வானிலையைப் பாதிக்கும் என்று சமீபத்தில் கண்டுபி டித்திருக்கிறார்கள். சமீபத்தில், நீங்கள் 'மார்ஷெல்' தீவு மீது குண்டு போட்டுள்ளீர்கள். அது ஜப்பானின் வானி லையைப் பாதித்துள்ளது. ஏப்ரல் மாதத்தின் இறுதி என் றாலும், அங்கு இன்னும் குளிராக இருக்கிறது. இந்த ஜப் பானியர்களுக்கு ஏன் குளிர்காலம் பிடிக்கவில்லை என் பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. பாகிஸ் தானியான எங்களுக்கு அதன் மேல் விருப்பம் அதி கம். அத்தோடு நீங்கள் ஏன் இந்தியாமீது ஹைட்ரஜன் குண்டை விட்டெறியக் கூடாது. இதன் மூலம் எனக்குப் பிடிக்காத கோடையிலிருந்து தப்பித்துக்கொள்ள இது உதவும்.

தயவுசெய்து 'ரீட்டா'-விடம் அவள் பாகிஸ்தானில் என்னை முதல் கணவராகத் தேர்ந்தெடுப்பாளா என்று கேட்டுச் சொல்லுங்கள். உங்களுடைய பதிலை ஆவ லோடு எதிர்பார்த்துக் காத்திருக்கிறேன்.

உங்களுக்குக் கீழ்ப்படிந்த

உங்கள் சகோதரனின் மகன்

சாதத் ஹசன் மண்ட்டோ

***

இங்கு தான் கிடக்கிறான்
சாதத் ஹசன் மண்ட்டோ
அவனோடு புதைந்து விட்டது
சிறுகதை எழுத்தின்
ரகசியங்களும் நுட்பங்களும்.
பெரும் மண்குவியலுக்கு அடியில்
வியந்துகொண்டிருக்கிறான்
யார் பெரிய எழுத்தாளன் என்று
கடவுளா? அவனா?

- சாதத் ஹசன் மண்ட்டோ





# விலைமாதுவும் மண்ட்டோவும்:

# பல்வந்த் கார்கி

(பல்வந்த் கார்கி (பிரபலமான நாடக ஆசிரியர்), பாரி அலிக், மண்ட்டோ மூவரும் லாகூரில் ஒரு விலைமா துவிடம் சென்ற அனுபவத்தைப் பல்வந்த் கார்கி பதிவு செய்துள்ளார். அதிலிருந்து ஒரு பகுதி மட்டும்.)

நாங்கள் மூவரும் படியேறிச் சென்றோம். பால்கனி யைக் கடந்து ஓர் அறைக்குள் நுழைந்தபோது, பதானி விலைமாது ஒருத்தி தரையில் அமர்ந்திருப்பதைப் பார்த்தோம். அவளுக்கு முப்பத்தைந்து வயதிருக்கும். தடித்த உருவ அமைப்பு அதிகமாகத் தலையில் எண் ணெய் தடவி அதில் மல்லிகைப்பூவைச் சொருகியிருந் தாள். மிகச் சாதாரண நீலநிறப் பட்டுச்சட்டையும், சாட் டின் சல்வாரும் அணிந்திருந்தாள். அவள் வாயில் பான் போட்டிருந்தாள்.

"வா, வந்து உட்கார்."

அவளின் பூனை முடி கொண்ட, மருதாணி பூசப்பட்ட முகம் திடீரென்று பணிந்து போனது. அடிமை போல எங் களுடைய கட்டளைகளுக்கு நடனமாடுவதற்குத் தயா ராக இருக்கிறேன் என்பது போல் மாறியது. அவள் தலைமை விலைமாது. தொங்கும் சதை கொண்டிருந்த அந்த விலைமாதுவை ஒரே பார்வையில் மண்ட்டோ அபகரித்தான்.

ஒரு வேலைக்காரன் வந்து மூன்று கண்ணாடித் தம்ளர்களை எங்களுக்கு அருகில் வைத்தான்.

மண்ட்டோ, "சோடா கொண்டு வா. அப்புறம் டிக்கா, கபாப். சரி பல்வந்த் உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டான்.

அந்த நாட்களில் நான் அசைவ உணவைத் தவிர்த்து வந்தேன். ஒரு முறை முயன்று பார்த்திருக்கிறேன். ஆனால் நான் அதைக் கடிக்கும்போது என்னுடைய நாக்கில் ஏதோ தோலைக் கடிப்பது போலவே உணர்ந்தேன். ஆம்லெட் போதும் என்றேன்.

மண்ட்டோ மூன்று புத்தம் புதிய பத்து ரூபாய் நோட்டுகளை எடுத்து அந்தப் பதானியிடம் கொடுத்தான். பத்தே நிமிடங்களில் அந்த வேலைக்காரன் கபாப், ஆம்லெட் மற்றும் அசைவ உணவைத் தனித் தனித் தட்டுகளில் எடுத்து வந்து வைத்தான். அத்தோடு சோடா, ஐஸ், எலுமிச்சம்பழம், மற்றும் குறுக்காக வெட்டப்பட்ட வெங்காயம் - இவற்றையும் வேறு ஒரு தட்டில் கொண்டு வந்து வைத்தான். மிச்சப்பணத்தை அவன் திருப்பிக் கொடுத்தபோது மண்ட்டோ அவனிடம், "நீயே வைத்துக்கொள்" என்றான்.

பாரி, மதுப் புட்டியைத் திறந்து மூன்று கண்ணாடி தம்ளர்களில் விஸ்கியை ஊற்றி அதில் சோடாவும் ஐஸ்கட்டியையும் சேர்த்தார்.

"நான் குடிப்பதில்லை" என்றேன்.

பாரியின் கருத்த முகத்தில் ஒரு புன்னகை தோன்றி மறைந்தது. "மது குடிப்பதற்காகத்தான் இருக்கிறது, குடி" என்றார்.

மண்ட்டோ, "அவனை விட்டு விடு. அவன் குடிப்பதில்லை" என்றான்.

பிறகு அந்த விலைமாதுவின் தொடையில் ஓங்கித் தட்டி,

"என் அன்பே நீ குடி" என்றான்.

அந்த விலைமாது மண்ட்டோவை மிகக் கூர்மையாக முறைத்து ஒரு தடித்த சிரிப்பை உதிர்த்து, கண்ணாடித் தம்ளரை எடுத்துக் கொண்டாள்.

மண்ட்டோவும் பாரியும் மிக விரைவில் அவர்களின் டம்ளர்களைக் காலி செய்து அடுத்த சுற்றுக்குத் தயாரானார்கள். மண்ட்டோ இரண்டாவது சுற்றைக் குடித்துக் கொண்டிருக்கும் போது, "இப்போது வைத்திருப்பதைக் காட்டு" என்றான்.

அவள் பதானியிடம் செய்கையில் ஏதோ சொன்னாள். அவன் வெளியே சென்று சற்று நேரத்தில் மிக ஆடம்பரமாக அலங்கரிக்கப்பட்ட விலைமாதுவைத் தன்னோடு அழைத்து வந்தான்.

வந்தவள் எங்களுக்கு முன்னால் அமர்ந்து கொண்டாள். மண்ட்டோ மிகத் தீவிரமாக அவளைப் பார்த்தான். நானும் அவளை ஆர்வம் கொண்டு பார்த்தேன். மெலிந்த முகத்தில் அடர்த்தியான ஒப்பனை. மை போட்டுக் கருத்திருந்த கண்கள். அடிக்க வரும் சிவப்புப் புடவை. அவள் புன்னகைத்து, "எங்கிருந்து வருகிறீர்கள்?" என்று கேட்டாள்.

"உன் அம்மாவின் கிராமத்திலிருந்து" என்று பதில் தந்த மண்ட்டோ, "நீ எங்கிருந்து வருகிறாய்?"என்று கேட்டான்.

மேலும் சில கேள்விகளைக் கேட்டு மண்ட்டோ அவளை நிராகரித்தான். பதான் அவளை வெளியேறும்படி செய்கை செய்தான். அவள் வெளியேறினாள். அதற்குப் பிறகு பதான் வேறு ஒருத்தியையும், அதற்குப் பிறகு மற்றொருத்தியையும் அழைத்து வந்தான். மண்ட்டோவுக்கு யாரையும் பிடிக்கவில்லை.

பிறகு வேறு ஒரு விலைமாது உள்ளே வந்தாள். மிகக் கூர்மையான முக அமைப்பும் அந்த முகத்தில் சுண்டி இழுக்கும் புன்னகையும் படர்ந்திருந்தது. அவள் கருப் புக் கண்ணாடி போட்டிருந்தாள். அவள் எங்களுக்கு முன்னால் 'நமாஸ்' செய்யப்போவது போல கால்களை மடித்து உட்கார்ந்து கொண்டாள். மண்ட்டோவுக்கு அவள் உட்கார்ந்திருந்த விதம் மிகவும் பிடித்திருந்தது. அவன் அவளிடம் சில கேள்விகளைக் கேட்க, அவளின் பதில்களும் சுவாரஸ்யமாகவும், நையாண்டி கலந்தும் இருந்தது. அவள் மீதான ஆர்வம் மண்ட்டோவிடம் தீவி ரமானது. ஆனால் அதே சமயத்தில் அவனுள் ஏதோ ஒரு தயக்கம் உறுத்திக் கொண்டிருப்பதை உணர முடிந்தது.

"இரவு வேளையில் எதற்காக இந்தக் கருப்புக் கண் ணாடியை அணிந்திருக்கிறாய்?" என்று அவளிடம் கேட் டான்.

அதற்கு அவள், "உன்னுடைய அழகு என்னுடைய கண்களைக் குருடாக்குகிறது" என்று பதில் தந்தாள்.

மண்ட்டோ அவள் கண்களை நேராகப் பார்த்து, "என் அன்பே! நான் உன்னோடு காதல் செய்து கொண்டிருக் கும்போது சொர்க்கத்தில் இருப்பது போலவே உணரு வேன். ஆனால் அதற்கு முன் உண்மையில் நீ எப்படி இருக்கிறாய் என்று நான் தெரிந்து கொள்ள விரும்புகி றேன்" என்று சொல்லி ஒரு நொடியில் அவள் அணிந்தி ருந்த கருப்புக் கண்ணாடியை அகற்றினான்.

அந்த விலைமாதுவின் இமைகள் வேகமாக அடித் துக் கொண்டன. அவளுக்கு ஒற்றைக்கண். மண்ட்டோ, "என் அன்பே, நீ மட்டும் இந்தக் கண்ணாடி இல்லாமல் வந்திருந்தால் உன்னுடைய இந்தச் சுண்டி இழுக்கும் கண்களின் காதல் வலையில் வீழ்ந்திருப்பேன். ஆனால் யாரும் என்னை ஏமாற்ற முயலுவதை என்னால் ஏற்றுக்

கொள்ள முடியாது. நீ செய்தது படுமோசமான ஏமாற்று வேலை." என்றான்.

அந்த விலைமாதுவும் அங்கிருந்து வெளியேற்றப்பட் டாள்.

அப்போது நேரம் பதினொன்றரையை நெருங்கிக் கொண்டிருந்தது. மாமிசமும் கபாபும் மற்ற நொறுக்குத் தீனிகளும் மூன்றுமுறை வைக்கப்பட்டன. மண்ட்டோ ஐந்து சுற்றுகளை முடித்திருந்தான். அவனின் கருவிழி கள் அகன்று கிடந்தன. அவன் ஆறாவது சுற்றுக்காக விஸ்கிப் புட்டியை எடுத்த சமயத்தில் அவனுக்குப் பக் கத்தில் அமர்ந்திருந்த விலைமாது அவனின் கையைப் பிடித்தாள். "இதற்கு மேல் வேண்டாம்" என்றாள். அவ ளின் குரலில் அனுதாபம் இருந்தது.

நான் சொன்னேன், "அவள் சொல்வது சரிதான். அவள் உன் மீது அக்கறை காட்டுகிறாள்".

மண்ட்டோ, "என் மீது அக்கறையா? அவள் அந்தப் பதானுக்காக இதை மிச்சப்படுத்த விரும்புகிறாள். நான் அவனுக்காக ஒரு புட்டியையும் வாங்கித் தரத் தயாராக இருக்கிறேன். இவள் நடிக்கிறாள்." என்றான்.

அவன் தன்னுடைய டம்ளரில் ஊற்றிக் கொண்டு மிகவும் அனுபவித்து ஒரு மிடறு குடித்தான். அந்த விலைமாது மீண்டும் மண்ட்டோவின் கையைப் பிடித் தாள். "கடவுள் தான் என்னுடைய சாட்சி. நீ அவ்வளவு அழகாக இருக்கிறாய்" என்றாள்.

மண்ட்டோ அவளின் அடி வயிற்றைக் கிள்ளினான். "என் அன்பே! இந்த உலகத்திலேயே நீதான் மிக அழகான பெண்மணி... நீதான் கிளியோபாட்ரா. நீதான் ஹெலன்." என்றான். மண்ட்டோ விசித்திரமாகத் தனி யாக விடப்பட்டது போல் உணர்ந்து கொண்டிருந்தான். அவன் விலைமாதுகளின் உலகில் வாழ்ந்து கொண் டிருந்தாலும் அவர்களிடமிருந்து விலகியே இருந்தான்.

பாவங்களைச் சுமந்து கொண்டிருக்கும் அவர்களிடம் மனிதத் தன்மையைக் கண்டான். ஒதுக்கப்பட்டு கீழே விழுந்து கிடந்த பெண்களிடம் ஒரு பெண்ணிற்கான இதயத்தைக் கண்டான். சதை வியாபாரம் செய்யப்ப டும் சந்தையில் கூட ஒரு பெண்ணின் இதயத்தைத் தேடிக்கொண்டிருந்தான். நானும் பாரியும் கிளம்பிவிட மண்ட்டோ அங்கேயே தங்கியிருந்தான். எதார்த்தமான முன்னெச்சரிக்கை நடவடிக்கையாய் அவனிடமிருந்த பர்ஸை என்னிடம் கொடுத்து அடுத்த நாள் ஆல் இந் தியா ரேடியோ அலுவலகத்தில் திருப்பிக் கொடுக்கு மாறு சொன்னான்.

***



## எதிர்வினைகள்-பதில்கள்

## சாதத் ஹசன் மண்ட்டோ

'தண்டா கோஷ்' (இத்தொகுப்பில் சில்லிட்டுப்போன சதைப்பிண்டம்) சிறுகதை எழுப்பிய பிரச்சனையைத் தொடர்ந்து, கொஞ்ச நாட்களுக்குச் சிறுகதை எழுது வதை நிறுத்தி விட்டு 'AFAQ' என்ற செய்தித்தாளில் பம் பாய்த் திரையுலகின் பிரபலங்கள் பற்றிய நினைவோ டைகள் எழுதத் தொடங்கினார் மண்ட்டோ. அதிலும் அவர் கடுமையான விமர்சனத்திற்கு உள்ளாக வேண் டியிருந்தது.

"நான் இப்படித்தான் அந்தக் காலத்தை நினைவு கூர் கிறேன்: அரசாங்கத்தின் வெறுப்பைச் சம்பாதிப்பதிலி ருந்தும், எழுதப்படுவதெல்லாம் மிகச் சுத்தமாக இருக் கவேண்டும் என்றும் பிரகடனப்படுத்துபவர்களிடமிருந் தும் ஒரு வழியாக என்னைக் காப்பாற்றி கொண்டு விட் டேன் என்ற சந்தோஷத்தில் இருந்தேன். ஆனால் நான் தவறாகப் புரிந்து கொண்டிருந்தேன். என்னுடைய முதல் கட்டுரை வெளிவந்தவுடன் பெரும் கூச்சல் உருவானது. அந்தச் செய்தித்தாளுக்கு மூட்டை மூட்டையாய் அந்தக் கட்டுரையை எழுதியவனை நிராகரித்துக் கடிதங்கள் வந்தன... அதற்குப் பிறகு 'கிருஷ்ணனின் வேய்ங்குழல்' என்ற கட்டுரை வெளிவந்தவுடன் சியால் கோட்டில் இருந்து நயார் பானோ என்ற பெண்மணி நீண்ட கடி தத்தை பத்திரிகையின் ஆசிரியருக்கு எழுதியிருந்தார். நான் அதைப் படித்ததும் அவருக்காக வருத்தம் கொண்

டேன். அவரின் கடிதங்களில் இருந்து சில பகுதியைக் கொடுக்கிறேன்:

"நான் திரைப்படங்களுக்குப் போவதை மிகப் பெரிய பாவமாகக் கருதவில்லை. படங்களைப் பார்க்கும் போது என்னுடைய கண்களைத் துணி கொண்டு கட்டிக்கொள்வதுமில்லை. எனக்கு ஐந்து குழந்தைகள் இருக்கிறார்கள். அவர்கள் நேர்மையான வழியில் வளர வேண்டும் என்று விரும்புகிறேன். ஆனாலும் திரைப்படங்கள் பார்த்துப் பழக்கப்படுவது ஒருவனின் நற்குணங்கள் உருவாக்கத்திற்குத் துணை புரிவதைவிடக் கேடுதான் விளைவிக்கிறது என்று கருதுவதால் நான் திரைப்படங்களுக்குப் போவதை நிறுத்திக் கொண்டேன். நான் திரைப்படங்களுக்குச் சென்றால் என்னுடைய குழந்தைகளும் வருவார்கள். பிறகு எப்போதெல்லாம் சந்தர்ப்பம் கிடைக்கின்றதோ அப்போதெல்லாம் அதற்குத் தயாராவார்கள். நான் வளர்ந்த பெண்மணி தான் என்றாலும் சில படங்களைப் பார்ப்பதை என்னால் சகித்துக்கொள்ள முடியவில்லை. நான் அவற்றைக் கீழ்த்தரமாகவும் அவற்றைப் பார்ப்பதன் மூலம் நான் மற்றொருவரின், அந்தரங்கத்தில் ஊடுருவுவதாகவும், கௌரவம் என்ற அடிப்படையான விஷயத்தை மீறுவதாகவும் கருதுகிறேன். அப்படிப்பட்ட பத்திரிகைகள், செய்தித்தாள்கள், புத்தகங்கள் எல்லாம் குழந்தைகளின் பார்வைக்கு வெளியே வைக்கப்பட வேண்டும் என்று நீங்கள் ஒருவேளை சொல்லக் கூடும். இதைச் செய்வதைக்காட்டிலும் சொல்லுவது எளிது. இதற்கு அர்த்தம் என்ன என்றால், இதை எல்லாம் மேசை மீது வைப்பதற்குப் பதிலாக அலமாரியில் பூட்டி வைக்க வேண்டும் என்றே கொள்ள முடியும். இப்போது நீங்களே மறுமுறை 'கிருஷ்ணனின் வேய்ங்குழலை'ப் படித்துப் பாருங்கள். அதில் இருப்பது என்ன என்று தீர்மானித்துக் கொள்ளுங்கள். ஒரு மனிதனால் அவன்

எவ்வளவு கீழ்த்தரமானவனாக இருந்தாலும் நேர்மை யான வாழ்வில் இருந்து விலகியவனாக இருந்தாலும் தன்னுடைய மனைவியும் குழந்தைகளும் சூழ்ந்திருக்க நீங்கள் எழுதியிருக்கும் அனுபவங்களை வீட்டில் சொல்ல முடியும் என்று நினைக்கிறீர்களா? அவன் எவ் வளவு குடித்திருக்கிறான் என்பது பற்றியோ குடிப்பதில் அவன் எவ்வளவு விருப்பம் கொண்டுள்ளான் என்பது பற்றியோ கவலைப்படுவதற்கு ஏதும் இல்லை. அவன் அசிங்கத்தைத் தவிர வேறு எதையும் பேசாதவனாக வும் பெண்களைச் சாப்பாட்டிற்கு ஊறுகாய் தொட்டுக் கொள்வது போல் பார்க்கிறவனாகவும் இருந்திருக்க லாம். அவனால் ஒரு பெண்ணைத் தேவடியா என்ப தைத் தவிர வேறுமாதிரி அழைக்கவே முடியாதா? படுக் கையில் தனக்கு அருகில் ஒரு பெண் இல்லை என்ப தால் அதற்குத் தீ வைத்துக் கொளுத்துகிறான். தயவு செய்து சொல்லுங்கள் உங்களுடைய செய்தித்தாளில் இப்படிப்பட்ட விஷயங்களைப் பிரசுரிப்பதன் மூலம் இந்தச் சமூகத்திற்கும் அதன் நெறிமுறைகளுக்கும் என்ன செய்கிறீர்கள்? மற்றவர்களுக்கு, வீடு, குடும்பம், குழந்தை என்று இருப்பது போலவே உங்களுக்கும் இருக்கிறது என்பதை நீங்கள் நினைத்துப் பார்க்க வேண்டும் அல்லது இந்த உலகம், குப்பையைக் கிளறி அவர்களையும் மற்றவர்களையும் அழுக்குப்படுத்திக் கொள்வதோடு அப்பாவிகளின் மனதில் நோயைப் பரப்பி, தங்களுடைய கற்பனைகளுக்கெல்லாம் செயல் வடிவம் கொடுக்கக்கூடிய ஆண்களுக்கு மட் டுமே சொந்தமானதா? இவர்கள் யாருக்கும் கடமைப் பட்டவர்கள் இல்லையா? என்னைப் போன்ற மனிதர்க ளுக்கான புகலிடம் எது? நாங்கள் எங்களை எவ்வாறு பாதுகாத்துக் கொள்வது? பெற்றோர்களால் செய்யக்கூ டியது இது ஒன்றாகத்தான் இருக்க முடியும். செய்தித் தாள்கள், பத்திரிகைகள், இலக்கியங்கள் பரப்பிக்

கொண்டிருக்கும் தீயதை எதிர்ப்பதற்குப் பதில் அதைச் செய்து கொண்டிருப்பவர்களோடு இணைந்து கொள்வது; தந்தைமார்கள் அவருடைய மகன்களுக்கு எப்படிக் குடிபோதையில் மூழ்குவது என்றும், எப்படித் தேவடியாப் பெண்களைக் கட்டிலுக்கு இழுத்து வருவது என்றும் சொல்லிக்கொடுப்பதைத் தவிர, வேறு வழியில்லை. தாய்மார்கள் அவர்களுடைய மகள்களுக்கு நவீன முறையில் எப்படி ஓர் ஆணோடு படுத்துக்கொள்வது என்று கற்றுக்கொடுக்க வேண்டும். அது எப்படிப்பட்ட உலகமாக இருக்கும் என்று தயவு செய்து நினைத்துப் பாருங்கள். கடவுள்தான் நம்மைக் காப்பாற்ற வேண்டும். நினைத்துப் பார்த்தாலே நடுக்கம் கொள்கிறேன்."

நான் இந்தக் கடிதத்தைப் படித்த போது கடவுள் மீது சத்தியமாக நான் மிகவும் பாதிக்கப்பட்டேன். நயார் பானோவின் நிலைக்காக நான் இரக்கம் கொண்டு, நான் அவருக்குச் செய்த அநீதிக்காக ஏதேனும் ஈடு செய்ய வேண்டும் என்று நினைத்தேன். ஆனால் நான் சிந்தித்துப் பார்த்த பிறகு பத்திரிகைகளில் பிரசுரிக்கப்படும் புகைப்படங்களைப் பார்த்து தன்னுடைய கண்களை தாழ்த்திக் கொள்கிறவர்களும், அதைப் பார்ப்பதன் மூலம் மற்றவர்களின் அந்தரங்கத்தில் ஊடுருவுவதாக நினைக்கும் அந்தப் பெண்மணிக்கும் நான் ஏதேனும் பதில் கொடுத்தால் அதை அவரால் தாங்கிக் கொள்ள முடியாமல் போகலாம். அவர் மயக்கம் கொண்டு கீழே விழலாம். ஒருவேளை அதிர்ச்சியில் மரணமும் கொள்ளலாம். எனக்குச் சந்தேகமே இல்லை நயார் பானோ போன்றவர்கள் நோயுற்றவர்களின் வகையைச் சேர்ந்தவர்கள். நாம் அவர்கள் மீது இரக்கம் கொள்ள வேண்டும். அதற்கான சிகிச்சை என்பது - என்னால் கொடுக்க முடிந்தது இதுதான்: மதுப் புட்டிகளின் மூடிகள் எல்லாத் திசையிலும் பறந்து கொண்டி

ருக்க, ஒரு நீச்சல் குளம் முழுக்க மது கொண்டு நிரப்ப வேண்டும். உலகத்தில் உள்ள மிக மோசமான சகதியை அவர்களின் நன்மைக்காக எட்டி உதைக்க வேண்டும். அவர்களின் தலையில் குப்பைகளை அள்ளிப் போட்டுக் கொள்ள வேண்டும். ஒருவரால் இதைச் செய்ய முடியவில்லை என்றால் அதைச் செய்வதற்காக மனிதர்களை வாடகைக்கு அமர்த்திக் கொள்ள வேண்டும். அவரின் காதுகளில் எல்லாக் கெட்ட வார்த்தைகளையும் உரக்கக் கத்திச் சொல்ல வேண்டும். ஷமா, பிஷ்வின் சாதி, ரோமன் போன்ற குப்பைகளில் (பாலியல் நோய் குறித்த ரகசிய விளம்பரங்கள்) வரும் விளம்பரங்களைத் திரும்பத் திரும்ப அவர்களின் காதுகளில் கத்த வேண்டும். இந்த மருந்தும் அவர்களின் நோயைக் குணப்படுத்தவில்லை என்றால் சாதத் ஹசன் மண்ட்டோவை அழைத்து, நயார் பானோவின் பழைய செருப்பை எடுத்து அவனின் தலை முடியெல்லாம் உதிர்ந்து வழுக்கையாகும் அளவிற்கு அடித்துக்கொள்ளச் சொல்ல வேண்டும்."

நினைவோடைகளில் இறந்தவர்களைக் கொச்சைப் படுத்தி அவர்களின் அந்தரங்கங்களைத் திருடுகிறான் என்ற வேறொரு விமர்சனத்திற்கு மண்ட்டோவின் பதில்:

"நான் பாவம் செய்திருந்தால் என் முழுப் பிரக்ஞையோடு அதைப் பாவம் என்று அறிந்தும் நான் அந்தப் பாவத்தைச் செய்திருக்கிறேன். அந்த விமர்சகர் நாகரிகமான சமூகத்திலும் எல்லா நாகரிகமான நாடுகளிலும் இறந்து போனவர்களைப் பற்றி, அவர்கள் ஒருவனின் எதிரியாக இருந்தாலும் கூட நல்ல வார்த்தைகளைத் தான் சொல்ல வேண்டும் என்று எதிர்பார்க்கிறார். அவர்களின் பலங்கள் மட்டுமே முன்வைக்கப்பட்டு அவர்களின் பலவீனங்கள் கண்டுகொள்ளாமலும் மறைக்கப்

பட வேண்டும் என்றும் விரும்புகிறார். ஒவ்வொரு இறந்த மனிதனின் நடத்தைகளும் தனித்தன்மைகளும் வண்ணான் கடைக்குப் போட்டு மிகச் சுத்தமாக்கி 'வாழ்த்துகளின் நினைவுகளோடு' என்ற அட்டையைக் கட்டித் தொங்கவிடவேண்டும் என்று எதிர்பார்ப்பது உண்மை என்றால் அந்த நாகரிகமான சமூகங்கள் மீதும் நாகரிகம் அடைந்த நாடுகள் மீதும் ஆயிரம் சாபங்களை இடுகிறேன். என்னுடைய இல்லறத்தில் நான் சீப்புகளோ, ஷாம்புகளோ வைத்திருப்பதில்லை. மனிதர்களுக்கு எப்படி ஒப்பனை செய்வது என்று எனக்குத் தெரியாது. 'ஆகா ஹாஷ்ர்'ரின் (இந்தியாவின் ஷேக்ஸ்பியர் என்று கொண்டாடப்பட்ட நாடக ஆசிரியர்) கண்கள் கோணலாக இருந்தால் அந்தக் கோணல் கண்களை நேராக்குவதற்கு என்னிடம் இயந்திரங்கள் எதுவும் இல்லை. அவர் வாயிலிருந்து நான்கு எழுத்து ஆங்கில வார்த்தை வருவதற்குப் பதில் என்னால் பூக்களை வரவழைக்க முடியாது. மீராஜியின் (வினோதமான, வித்தியாசமான நடத்தையைக் கொண்டிருந்த உருது கவிஞர்) மாறுபட்ட நடத்தையை என்னால் சுத்தம் செய்ய முடியாது. அதுபோலவே என்னுடைய நண்பன் ஷியாம் சுயநம்பிக்கை கொண்ட பெண்களை 'தேவடியா' என்று சொல்வதை என்னால் தடுக்க முடியாது. நான் அறுவை சிகிச்சை செய்வதற்காக அனுமதிக்கப்படும் ஒவ்வொரு தேவ தூதர்களின் உடலிலும் ஒரே ஒரு முடிகூட இல்லாத அளவிற்கு மிகச் சுத்தமாகச் சிரைத்துவிடுகிறேன்."

'தண்டா கோஷ்' சிறுகதை ஆபாசமானது என்று தொடரப்பட்ட வழக்கில் லாகூர் உயர்நீதிமன்றம் செக்சன் 292 ஐபிசி படி இவ்வாறு தீர்ப்பளித்தது:

ஓர் எழுத்தாளனின் குறிக்கோள் என்னவென்பதோ, அது நல்லதா கெட்டதா என்பது பற்றியோ சட்டம் அக்கறை கொள்ள முடியாது. சட்டம் ஒரு வாசகனின்

மனநிலை எவ்வழியில் நடத்திச் செல்லப்படுகிறது என் பதைப் பற்றி மட்டுமே கவலைப்பட முடியும். ஓர் எழுத்து ஆபாச உணர்வுகளை நோக்கி வாசகனை அழைத் துச் செல்லும் என்றால், அந்த எழுத்தை ஆபாசமானது என்று கருது வதற்கும் அதற்காகத் தண்டனை கொடுப் பதற்கும் தகுதி உடையதாகிறது.

இந்தத் தீர்ப்பை பற்றி 'ஞயள ஆயணேயச'-ல் மண்ட்டோ எழுதியது...

"கனவான்களே, மண்ட்டோவுக்குப் பைத்தியம் பிடித்து விட்டால் அவனின் மனைவி மற்றும் குழந்தை களின் கதி என்னவாகும் என்று நான் கவலைப்படுகி றேன்".

"அவர்கள் நரகத்துக்குப் போகட்டும். சட்டம் எப்படி இதோடு சம்பந்தப்பட்டிருக்க முடியும்"

"நீ சொல்வது சரியாக இருக்கலாம். ஆனால் அரசாங் கம் அவர்களுக்கு உதவ முன் வராதா?"

"அரசாங்கமா? ஆனால் அது முற்றிலும் வேறான விஷ யம். அரசாங்கம் அவர்களுக்கு உதவ வேண்டும் என்று நானும் நம்புகிறேன். வேறெதுவும் செய்யவில்லை என் றாலும் அரசாங்கம் செய்தித்தாள்களில் இந்த விஷயத் தைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருப்பதாக அறிவிப்பு செய்ய வேண்டும்"

"ஆனால் அரசாங்கம் இந்த விஷயத்தைப் பற்றிச் சிந் தித்து முடிவெடுப்பதற்குள் எல்லாம் முடிந்துவிடும்."

"உண்மைதான். எல்லா விஷயங்களும் அப்படித் தானே நடந்து கொண்டிருக்கின்றன."

"மண்ட்டோவும் அவரின் குடும்பத்தாரும் சபிக்கப்பட வேண்டியவர்கள். என்னிடம் சொல்லு, உயர்நீதி மன்றத் தின் தீர்ப்பு உருது இலக்கியத்தில் எத்தகைய பாதிப்பை ஏற்படுத்தும்?"

"உருது இலக்கியம் கூட சபிக்கப்பட வேண்டியது தான்."

"வேண்டாம். தயவு செய்து அப்படிச் சொல்லாதே. இலக்கியம் என்பது ஒரு தேசத்தின் உண்மையான சொத்து."

"அப்படியும் ஒருவேளை இருக்கலாம். ஆனால் நாம் சொத்து என்று எதைச் சொல்கிறோம் என்றால் ரூபாய் வடிவத்தில் வங்கியில் இருப்பதை மட்டும்தான்."

"உன்னுடைய கருத்து கோடி ரூபாய்களுக்குச் சமமா னது. ஆனால் செக்சன் 292 மாவோமின், மிர், ஹஸன், ஜாக், ஷாதி, ஹஃபீஸ் எல்லோரையும் ஒரே செயலில் ஒழித்துக் கட்டிவிடும்."

"உண்மைதான். அது அப்படித்தான் நடக்கும். இல் லையென்றால் செக்சன் 292 - ன் பயன் என்ன?"

"தங்களை எழுத்தாளராகவும் கவிஞர்களாகவும் பிர கடனப்படுத்திக் கொள்கிறவர்கள் காலம் கடப்பதற்கு முன் புத்தியைப் பெறவேண்டும். அவர்கள் கண்ணிய மான வாழ்க்கை நடத்துவதற்கு வேறு ஏதேனும் தொழி லுக்கு மாற்றிக்கொள்ள வேண்டும்."

"அவர்கள் அரசியல் தலைவர்களாக வரவேண்டும்."

"ஆனால் முஸ்லிம் லீக் தலைவர்களாக மட்டுமே வர வேண்டும்"

"ஆமாம். நான் சொல்ல வருவதும் அதேதான். வேறொரு கட்சிக்குத் தலைவராவது என்பது நேரடியாக ஆபாசமான விசயம்."

"உண்மைதான். மிகவும் ஆபாசமானது."

***



# கலாச்சாரக் குறியீடுகளற்ற நிர்வாண உடல்கள்

## ராமாநுஜம்

□ என் கதைகளை உங்களால் தாங்கிக்கொள்ள முடியவில்லை என்றால் நம்முடைய காலத்தைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை என்றே அர்த்தம். என் கதைகளில் எந்தத் தவறும் இல்லை. என் கதைகளில் தவறு என்று சொல்லப்படுவன எல்லாம் உண்மையில் அழுகிப்போன இந்தச் சமூக அமைப்பைத்தான் குறிக்கிறது... என் இலக்கியத்தை எதிர்ப்பதைக் காட்டிலும், இப்படிப்பட்ட இலக்கியங்கள் உருவாவதற்கு ஏதுவாக இருக்கும் சூழ்நிலையை மாற்ற முயற்சி செய்யுங்கள். இதுதான் சிறந்த வழி.

□ முன்னர் நான் ஒன்றுபட்ட இந்தியாவின் மிகச் சிறந்த சிறுகதை எழுத்தாளனாக இருந்தேன். இப்போது நான் பாகிஸ்தானில் மிகச் சிறந்த சிறுகதை எழுத்தாளனாக இருக்கிறேன்.

- சாதத் ஹசன் மண்ட்டோ

இறந்தவர்களைக் கொச்சைப்படுத்தி அவர்களின் அந்தரங்கங்களைத் திருடியவன் என்றும், அரசாங்கத்தால் கம்யூனிஸ்ட் என்றும், இடதுசாரி இயக்கங்களால் பிற்போக்குவாதி என்றும், சில இலக்கியவாதிகளால் அகங்காரம் கொண்டவன் என்றும், ஆபாச இலக்கி

யம் படைத்தவன் என்றும், பலவிதமான பார்வைகளி லும் அதன் எல்லையில் இருந்து மண்ட்டோ விமர்சிக் கப்பட்டார். மண்ட்டோவின் மரணத்திற்குப் பிறகு, 'ஏன் அவரின் மரணத்தை இவ்வளவு பெரிய விஷயமாக்குகி றார்கள்? எதற்காக அவருக்கு இவ்வளவு முக்கியத்துவம் கொடுத்து பத்திரிகைகள் சிறப்பு மலர்களைக் கொண் டுவருகின்றன? ஆபாசத்தை வைத்துப் புகழ் பெற்ற வன் ஒழிந்ததற்காக நாம் கடவுளுக்கு நன்றி சொல்ல வேண்டும்' என்ற கருத்து ஒரு வாசகனால் முன்வைக் கப்பட்டது. இந்த அனைத்து விமர்சனங்களையும் மீறி மண்ட்டோ இந்தியத் துணைக் கண்டத்தில் மிகச் சிறந்த எழுத்தாளன் என்று அவர் உயிரோடு இருந்த காலத்தி லேயே ஏற்றுக் கொள்ளப்பட்டார்.

1912-ல் சம்ப்ராலாவில் (இப்போது லூதியானாவில் இருக்கிறது) பிறந்த மண்ட்டோ பாகிஸ்தான் உதயத் திற்குப் பிறகு பாகிஸ்தானைத் (1948) தேர்ந்தெடுத்தார், 1955ல் லாகூரில், அவரின் 43-வது வயதில் அந்த 'மதிப் பற்ற வாழ்க்கை' முடிந்து போனது. 250க்கும் மேற்பட்ட சிறுகதைகள், நூற்றுக்கணக்கான வானொலி நாடகங் கள், பல திரைப்படங்களுக்கு கதை, திரைக்கதைகள், பல கட்டுரைகள், பல பிரபலங்களைப் பற்றிய நினை வோடைகள் என்று இருபது வருட இலக்கிய வாழ்க்கை யில் நிறையவே படைத்துள்ளார்.

மத்தியதர வர்க்கத்தின் சமூக, கலாச்சாரக் குறியீ டுகளை மண்ட்டோ கையாண்டவிதம், மண்ட்டோவை உதாசீனப்படுத்துவதை மட்டுமே சாத்தியப்படுத்தியது. அவரின் மரணத்திற்குப் பிறகு 'ஏதோ திட்ட மிட்டது போல்' செத்த பாம்பை அடிப்பது போல அவரையும் அவரின் படைப்புகளையும் விமர்சித்தனர். இவை எல் லாவற்றையும் மீறி மீண்டும் மண்ட்டோ கண்டெடுக்கப் படுகிறார். (1985-ல் தான் மண்ட்டோ தீவிர வாசிப்புக்கு

உட்படுத்தப்படுகிறார். 1996-ல் தான் இந்தியன் இன்ஸ்டி டியூட் ஆப் அட்வான்ஸ் ஸ்டடி - சிம்லா ஒரு கருத்தரங்கு நடத்தியது)

மண்ட்டோவின் படைப்புகளில் அனைத்துத் தரப்பு வாசகர்களையும் பிரமிக்கவைப்பது - சுதந்திரத்தை ஒட் டிய கலவரங்களை அவர் கையாண்டவிதமும், மனி தர்களை உன்னதமாகவும், தூய்மையாகவும் படைக்கும் நோக்கில் அவர்களைச் சிதைக்காமல் ரத்தமும், சதையு மாய் படைத்ததும் தான். பொதுவாக 'நாம்' மற்றும் 'அவர்' என்று பிரிந்து கிடக்கும் சமூகங்கள் இலக்கியத்திற்குள் கொண்டுவரப்படும் போது ஒரு சமன்பட்ட நிலையை உருவாக்க ஒரு படைப்பாளி முயலுகிறான். அதாவது 'ஒரு பக்கத்தில் இருந்து உருவாக்கப்படும் வன்முறை சம அளவில் எதிர்ப்பக்கத்தில் இருந்தும் உருவாக்கப் படுகின்றது. இப்படியாக லாகூரில் இருந்து இரயிலில் வரும் இந்துக்கள் படுகொலை செய்யப்பட்டால், அதற் குச் சமமான வன்முறை இந்துக்களால் அம்ரித்சரில் நடத்தப்பட்டு சமன் செய்யப்படும். ஒரு பாலியல் தொழி லாளி இரண்டு நபர்களுக்கு அடைக்கலம் கொடுக்க, அவர்கள் அடையாளம் தெரியாத அளவிற்கு வன்முறை யாளர்களால் சிதைக்கப்பட்டால் கண்டிப்பாக அதில் ஒருவன் முசல்மானாகவும் மற்றொருவன் இந்துவாக வும் இருப்பார்கள்'. இந்தச் சமன்படுத்தும் விளையாட் டில் அந்தப் படைப்பு உண்மைக்கு முரணாகத் தன்னை நிறுத்திக் கொள்கிறது.

ஆனால் மண்ட்டோவிடம் இதுபோன்ற சமன்படுத்து வதற்கான முயற்சிகள் எதையும் காணமுடியவில்லை. இலக்கியப் படைப்பில் மாபெரும் துயரத்திற்கான கார ணத்தை ஒரு படைப்பாளி ஆராய முயலும்போது, நிச் சயமாக 'ஓர் மாபெரும் உண்மையை' தன் படைப்பில் தேட நிர்ப்பந்திக்கப்படுகிறான். ஒரு படைப்பாளி அவன்

சார்ந்துள்ள கோட்பாடுகளின் இறுகிய வடிவத்தைத் தன் படைப்பின் அடித்தளமாகக் கொள்கிறான். ஆனால் மண்ட்டோ துயரத்தின் சமூகக் காரணத்தையோ வர லாற்றின் நிர்ப்பந்தத்தையோ பார்க்க மறுத்து பல் வேறு உண்மைகளைப் பல்வேறு தளத்தில் கொடுக்க முயன்றான். மண்ட்டோவின் பிரிவினை வன்முறை தொடர்பான கதைகளில் கலாச்சாரக் குறியீடுகளோடே மனிதர்கள் அறிமுகப்படுத்தப்பட்டாலும் கதைக்குள்ளா கவே அந்தக் குறியீடுகளை இழந்து வன்முறைக்குப் பலியானவன், வன்முறையைத் தூண்டிவிட்டவன் ஆகி யோரின் வலியாய் உருமாறுகிறது.

இந்த நூலில் 'மோஸல்' தவிர வேறு எந்தக் கதையி லும் இந்தக் கலாச்சார குறியீடு கதையின் இறுதிவரை நிலைநிறுத்தப்படவில்லை. 'மோஸல்' கதையில் நிலை நிறுத்தப்பட்ட கலாச்சார குறியீடு, மோஸல் நிர்வாண மாகி திர்லோச்சனின் தலைத்துணியை விட்டெறிவதன் மூலமாக, அந்தக் கதை சுமந்து வந்ததும் விட்டெறி யப்படுகிறது. முசல்மான், சீக்கியன், இந்து, கிறித்துவன் போன்ற கலாச்சாரக் குறியீடுகளை மண்ட்டோ தன் கதைகளில் மனிதர்களுக்குக் கொடுத் தாலும் வாச கனை அதே தளத்தில் சுருங்க விடுவதில்லை. 'அக் காலத்திய மற்ற எழுத்தாளர்கள் அவர்களின் படைப் பில் பிரிவினையின் கோரத்தையும் முட்டாள்தனத்தை யும் சுமந்து திரிந்த தனிநபர்களை, ஒரு மக்கள் கூட் டத்தின் பகுதியாய் உருவகப்படுத்தி மனிதனை அடை யாளம் காண முடியாத அளவிற்குச் சிதைத்தார்கள்'. ஆனால் மண்ட்டோவின் பாத்திரங்கள் மிகை யதார்த் தத் தன்மையோடு வெளிப்பட்டு அவர்களுள் புதைந்து கிடக்கும் உலகம் நம்மிடமிருந்து மறைக்கப்படுகிறது. மறைக்கப்பட்ட பகுதியில் இந்தக் கலாச்சாரக் குறியீடு கள் காணாமல் போயின. அவர்களின் செயல்களுக்கு

மட்டுமே நாம் சாட்சியாகிறோம். அதனாலேயே, பிரிவி னைத் துயரங்களுக்கான காரணத்தைக் கடந்த காலத் தில் தேடுவதைத் தவிர்த்து மண்ட்டோ நிகழ்காலத்தில் தேடிக் கொண்டிருந்தார்.

"...கேள்விகள் எல்லாவற்றிற்கும் பலவிதமான பதில் கள் இருந்தன - இந்தியாவின் பதில்கள் - பாகிஸ் தானின் பதில்கள் - பிரிட்டிஷ் பதில்கள் - ஒவ்வொரு கேள்விக்கும் பதில் இருந்தது என்றாலும் உண்மை என்னவென்று பார்க்க முயன்றால் இந்தப் பதில்க ளெல்லாம் பயனற்றுப் போகின்றன. உண்மையைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்றால், தோல்வியுற்ற 1857 சிப்பாய்க் கலகத்திற்குச் செல்ல வேண்டும் என்று சிலர் சொன்னார்கள். வேறு சிலர் கிழக்கிந்தியக் கம் பெனியிடமிருந்து தொடங்குகிறது என்றார்கள். இன் னும் சிலர் ரொம்பப் பின்னே சென்று முகலாயப் பேர ரசை ஆராய்ச்சி செய்யுமாறு அறிவுரை கூறினார்கள். ஒவ்வொருவரும் நம்மைக் கடந்த காலத்திற்கு இழுத் துச் செல்ல முயல, அதே சமயத்தில் கொலைகாரர் களும், தீவிரவாதிகளும் எதிர்ப்பில்லாமல் முன்னேறி, வரலாற்றில் இதற்குச் சமமானது ஏதும் இல்லாத, ரத்த ஆறு பாயும் புதிய வரலாற்றை உருவாக்கிக் கொண்டி ருந்தார்கள்."

வன்முறையின் நிழல்களாகக் கள்ளங்கபடமற்ற மனித மனமும், மிருகத்தனமும் இணைந்தே காணப்படுகி றது. யதார்த்தத்தின் வன்முறையை விட மனிதனின் இருண்ட மனதிற்குள் உறைந்து கிடக்கும் வன் முறையை அவர் வெளிக்கொணர்ந்தார். 'சில்லிட்டுப் போன சதைப்பிண்டம்' கதையில் குல்வந்த்கௌருக் கும் ஐஷர்சிங்குக்கும் இடையில் உடல் உறவுக்கான அந்த முன் தயாரிப்புகள் பற்றிய விவரணங்களை எடுத் துவிட்டுப் படித்தால் அந்தக் கதை ஆன்மாவை இழந்து

சதைப்பிண்டமாய் வாடிவிடுகிறது. வாசகனுள் அந்தக் கதை கொள்ளும் உறவில்தான் ஐஷர்சிங்கின் கௌரவம் நிலைநிறுத்தப்படுகிறது. வாசகனுள் புதைந்து கிடக்கும் வன்முறையின் ஊடாகத்தான் ஐஷர்சிங்கின் கௌரவம் மண்ட்டோவால் மீட்டெடுக்கப்படுகிறது.

அதுபோலவே 'திற' கதையில் வாசகனின் வன்முறை ஊடாகத்தான் கதையின் முடிவு நிறுத்தப்படுகிறது. சகினாவைத் தொண்டர்கள் கண்டெடுத்து பாதுகாப்பாய் லாரியில் ஏற்றிக்கொள்கிறார்கள். அதற்குப் பிறகு அவளுக்கு என்ன நடந்தது என்று மண்ட்டோ ஒரு வார்த்தைகூட எழுதவில்லை. வாசகனுள் புதைந்து கிடக்கும் வன்முறை அந்த இடைவெளியைப் பூர்த்தி செய்யும்போது நினைவிழந்து தூக்கி வரப்படும் சகினா 'திற' என்ற சொல்லைக் கேட்டு தன்னுடைய சல்வார் நாடாவை அவிழ்க்கும்போது வாசகன் வெட்கத்தால் தலைகுனிய வேண்டியுள்ளது. இந்தக் கதையில் 'சகீனா' என்ற இஸ்லாமியப் பெண்ணை இந்து வாலிபர்கள் சூறையாடினார்கள் என்ற எண்ணம் தோன்றாமல், ஒரு பெண் உடலுக்கு எதிரான வன்முறையும், அதே உடல் அந்த வன்முறைக்கு எதிராக ஆடையை அவிழ்த்துக் கலகம் செய்வதும் தான் வாசகனைத் தீவிரமாய் பாதிக்கிறது.

கையில் வாளோடு வீட்டிற்குள் நுழைந்த பீம்லாவின் தந்தை, தன் மகள் இறந்து கிடப்பதைப் பார்த்து வாளைக் கீழே போட்டு விட்டு வெளியே பைத்தியம் பிடித்து ஓடுகிறார் (ஷரிபான்). ஏன் அவர் கையில் வாளோடு வெளியே ஓடவில்லை. மண்ட்டோவின் பிரிவினை வன்முறைகளுக்கான புரிதலில் பீம்லாவின் தந்தை வாளோடு ஓடுவதற்கான சந்தர்ப்பங்கள் இல்லை. ஓர் அளவிற்கு மேல் வன்முறை எதிர் வன்மு

றையைத் தூண்டுவதற்குப் பதில் இந்த மனித இனத்தைப் பைத்தியம் கொள்ள வைக்கிறது.

இந்தப் புரிதல்தான் கருப்புக் கட்டங்கள் (இத்தொகுப்பில் 'சொற் சித்திரங்கள்') என்ற தொகுப்பை 1947-ல் மண்ட்டோ கொண்டு வந்தபோது, 'நான் அந்த வயதான பெண்மணியைக் கொன்றபோது ஏதோ கொலையே செய்துவிட்டது போல் உணர்ந்தேன்' என்று சொன்னவனுக்குச் சமர்ப்பணம் செய்ய வைத்தது. இந்த ஒரு வாக்கியத்திற்குள் உள்ள ஆழத்தைச் சமூக விஞ்ஞானிகள்தான் கண்டெடுக்க வேண்டும். கொலைக்கு அவன் கொடுக்கும் அர்த்தம் என்ன? அவன் செய்த செயலை என்னவென்று அழைப்பான்? இவ்விரண்டும் வெவ்வேறு தளத்தில் நிற்பது எப்படி சாத்தியமானது?

பல நூற்றாண்டுகளாக 'மனிதனின் இயற்கை' என்று சொல்லப்பட்ட மதம், நம்பிக்கை, குடும்பம் ஆகியவற்றை மண்ட்டோ அவரின் படைப்புகளில் நிராகரித்தார். குடும்பத்திலும், சமூகத்திலும் வன்முறையினால் மிக மோசமாகப் பாதிக்கப்படுவது ஒரு பெண்ணின் உடல்தான். அவரின் கதைகளில் வரும் பெண்கள் குடும்பம், குடும்ப உறவுகள், அதன் சந்தோஷங்கள், துயரங்கள் இவற்றிலிருந்து விலகியவர்களாகவே இருக்கிறார்கள். இதுவரை ஆங்கிலத்தில் வந்திருக்கும் 50க்கும் மேற்பட்ட கதைகளில் - காலீத் கதை தவிர எதிலும் குடும்ப உறவு காணப்படவில்லை. காலீத் அவரின் மூத்த மகனின் மரணத்தை அடிப்படையாகக் கொண்டது என்றே தோன்றுகிறது. அவருடைய கதைகளில் வரும் பெண்கள் பெரும்பாலும் பாலியல் தொழிலில் ஈடுபடுகிறவர்களாகவும், தங்களின் உடல் தூய்மையைப் போற்றாதவர்களாகவும்தான் இருக்கிறார்கள். கண்ணியம், நேர்மை எல்லாம் மத்தியதர வர்க்கத்திற்கு மட்டுமே சாத்தியம் என்ற கருத்தாக்கத்தை உடைத்து, பெண்

உடலின் தூய்மையை நிராகரித்து அந்த உடலைக் கலகம் செய்யும் குறியீடுகளாக முன்வைக்கிறார். இத னால் மண்ட்டோ ஆபாச எழுத்தாளன் என்றும், மூன் றாம் தர மஞ்சள் இலக்கியம் படைக்கிறார் என்றும் விமர் சிக்கப்பட்டார், இந்த விமர்சனத்தை ஏற்றுக்கொண்ட மண்ட்டோ,

"விலைமாதுகள் பற்றி எழுதுவதே ஆபாசம் என்றால் அவர்களின் இருப்பும் ஆபாசமானதுதான். அவர்க ளைப் பற்றி எழுதுவதைத் தடை செய்வதை விரும் பினால் முதலில் அவர்களை ஒழித்துக் கட்டுங்கள். பிறகு அவர்களைப் பற்றி எழுதுவது தானாக மறைந்து விடும். ஒரு விலைமாதுவின் வீடு என்பது இந்தச் சமூகம் தன்னுடைய முதுகில் சுமந்து கொண்டிருக்கும் பிணம்தான். இந்தச் சமூகம் அதை ஏதோ ஒரு இடத் தில் புதைக்கும் வரை அதைப்பற்றியான விவாதங்கள் தொடர்ந்து கொண்டுதான் இருக்கும்".

என்கிறார். மண்ட்டோவின் பெண்கள், தலைமுறை தலைமுறையாய் ஒரு ஆணின் சிந்தனை வட்டத்திற் குள் சுருங்கியவர்கள் இல்லை. சுகந்தி, சுல்தானா, மம்மி, ஜானகி போன்ற மனிதர்களை உருவாக்க மண்ட்டோ ஒரு பெண் எழுத்தாளராக இருக்க வேண்டிய அவசி யம் ஏற்படவில்லை. 'இரவெல்லாம் விழித்திருக்கும் ஒரு தேவடியா காலையில் உறங்கிக் கொண்டிருப்பாள். திடீ ரென்று அவளுடைய கனவில் வயோதிகம் வந்து அவள் வீட்டுக் கதவைத் தட்ட, அவள் அலறியடித்து விழித்துக் கொள்வாள். தன் கணவனோடு சண்டை போட்டுத் தற் கொலை செய்து கொள்வதாக மிரட்டும் ஒரு மனைவி அவளின் கணவன் மிகவும் வருத்தப்பட்டுக் கொண்டி ருக்க திரைப்படம் பார்க்கப் போவார்கள்' - இவர்கள் தான் மண்ட்டோவின் கதாநாயகிகள்.

மண்ட்டோ மனித மனத்தை ஒற்றைப் பரிமாணத்தில் இயற்கையானது என்று ஏற்றுக்கொள்ளப்பட்ட வரம்புக் குள் சுருக்கிப் பார்க்க மறுத்தார். மதமும், சமூக நிய திகளும் குடும்பமும் உருவாக்கியிருக்கும் பெண்களை நிராகரித்து இருண்ட அறைகளுக்குள் அயர்ந்து கிடக் கும் பெண்மனங்களைத் தேடிச் சென்றார். ஒரு தபால் நிலையத்திற்கு வரும் கடிதங்களை எல்லாம் மிக அக்க றையோடு அதனதன் விலாசங்களைப் பிரித்து வைக் கும் பெட்டியில், பொறுப்போடு போட்டுக் கொண்டி ருக்கும் நேர்மையான ஊழியனாக மண்ட்டோ இந்தச் சமூகத்தை நோக்கினார். தத்துவங்களாலும், அரசியல் நிலைபாடுகளாலும் கோட்பாடுகளின் அடிப்படையில் எல்லாக் கடிதங்களும் ஒரே விலாசத்துக்குத்தான் போக வேண்டும் என்ற பார்வையில், கடிதங்களில் எழுதப்பட் டிருக்கும் விலாசங்கள் தவறானவை என்று அவர் ஏற்றுக் கொள்ள மறுத்தார்.

மனிதனின் சுயமரியாதை என்பது மத்தியதர வர்க்கத் திற்கு மட்டும் சொந்தமானதாக அவர் பார்க்க மறுத்தார். "மண்ட்டோ விலைமாதுகள் பற்றி எழுதியதெல்லாம் உண்மையான அனுபவங்கள் சார்ந்தவையா அல்லது கொள்கைகள், நம்பிக்கைகள் சார்ந்தவையா என்று எனக்கு நிச்சயமாகத் தெரியாது. நான் இதைச் சொல் வதற்குக் காரணம் அவர் உண்மையில் விலைமாதுகளி டம் போயிருந்தாலும் சகதியில் புழுவைப் போல மிதக் கும் அந்தப் பெண்களின் இதயத்தையும் - அது வாழ்க் கையின் நல்லதையெல்லாம் நேசிப்பதையும் பார்த்தி ருப்பார்." என்று இஸ்மத் சுக்தாய் எழுதியிருக்கிறார்.

சாதத் ஹசன் தன் வாழ்க்கையில் விலைமாது களோடு கொண்ட உறவு எத்தகையது? இதற்கும், மண்ட்டோ தன் படைப்புகளில் கொண்ட அனுபவங்க ளுக்கும் உள்ள தொடர்பு என்ன? 'அவன் விலைமாதுக

ளின் உலகில் வாழ்ந்து கொண்டிருந்தாலும் அவர்களிட மிருந்து விலகியே இருந்தான். பாவங்களைச் சுமந்து கொண்டிருக்கும் அவர்களிடம் மனிதத்தன்மையை அவன் கண்டான். ஒதுக்கப்பட்டுக் கீழே விழுந்து கிடந்த பெண்களிடம் ஒரு பெண்ணிற்கான இதயத்தை அவன் கண்டான். சதை வியாபாரம் செய்யப்படும் சந்தையில் கூட அவன் ஒரு பெண்ணின் இதயத்தைத் தேடிக் கொண்டிருந்தான்' என்று பல்வந்த் கார்கி (பிரபலமான எழுத்தாளரும் நாடக ஆசிரியரும்) மண்ட்டோவுடனான தன்னுடைய அனுபவத்தைப் பதிவு செய்துள்ளார்.

இத்தகைய மனம் கொண்ட மண்ட்டோ, ஒழுக்க முறைகளை உயர்த்திப்பிடிக்கும் தூய ஆத்மாக்களால் ஆபாச இலக்கியம் படைத்ததாக ஆறுமுறை நீதிமன் றத்திற்கு இழுக்கப்பட்டார். பிரிவினைக்கு முன்பு மூன்று முறையும், பிரிவினைக்குப் பின் பாகிஸ்தானில் மூன்று முறையும் அவர் நீதிமன்றப் படிக்கட்டுகளில் அடிவைக்க வேண்டியதாயிற்று.

தன் படைப்புகளில், வரலாற்றின் காரண காரியத் தைத் தேடி அலையாமல் அன்றைய மனிதன் வரலாற் றுச் சுமைகளோ, வரலாற்றுப் பொறுப்புகளோ இல்லா மல் தன் வாழ்க்கையை எதிர்நோக்கும் சாத்தியத்தை மண்ட்டோ உருவாக்குகிறார். அவர்களைச் சிலுவை சுமக்க வேண்டி மண்ட்டோ நிர்பந்தித்தது இல்லை.

"...இந்த எட்டு வருடங்களில் என்னுடைய கடந்த காலத்தைப் பற்றி நான் கொஞ்சமும் அக்கறை கொள் ளாதவனாக மாறியிருந்தேன். எதற்காகக் கடந்த காலத்தைப் பற்றிச் சிந்திக்க வேண்டும்? இந்த எட்டு வருடங்களில் நடந்ததை எல்லாம் ஒன்று திரட்டுவதில் என்ன நன்மை இருக்க முடியும்? வாழ்க்கை பணப் பெட்டியில் இருந்து செலவு செய்யும் ஒவ்வொரு நயா

பைசாவும் நாளையை நோக்கிக் குறிவைத்திருக்கும் என்பதை மட்டுமே கணக்கில் எடுத்துக் கொள்ள முடியும்..."

என்றும்,

"நான் எப்போதுமே இன்றைய பொழுது பற்றி மட்டுமே கவலைப்படுகிறேன். நான் கடந்த காலங்கள் பற்றி எப்போதும் அசை போட்டது கிடையாது. நாளையைப் பற்றி சிந்தித்ததும் கிடையாது..."

என்றும் மண்ட்டோவால் எழுத முடிகிறது. அதுபோலவே மதத்தையும் வரலாற்றுச் சுமையிலிருந்து விடுவிக்க முயலுகிறார். உதாரணத்திற்குச் 'சஹாய்'. வரலாற்றில் மதம் வரையறுக்கப்பட்ட எல்லைக்குள் வாழ்ந்து கொண்டிருந்தாலும் அவன் மதத்தின் அர்த்தத்தை வேறு மாதிரி தான் புரிந்து கொண்டிருக்கிறான். அவனின் புரிதல் வேறாகவும் நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்த நம்முடைய புரிதல் வேறாக இருப்பதையும் மண்ட்டோ நிலை நிறுத்துகிறார். மதத்தை வரலாற்றுப் பரிமாணத்தில் நாம் பார்க்கிறோம். நம்மால் ஒதுக்கித் தள்ளப்பட்ட மனிதர்களிடத்தில் மதத்தை மனிதர்களின் உயரிய பண்புகளின் அடையாளமாக மண்ட்டோ உருமாற்றுகிறார். மும்தாஜ் (சஹாய்) சொல்வது போல்,

"மதம் என்று நான் சொன்னது நம்மில் 93 சதவீதம் பேர் அவதிப்பட்டுக் கொண்டிருக்கும் மதத்தை நான் சொல்லவில்லை. நான் அதை எப்படி புரிந்து கொண்டிருக்கிறேன் என்றால், இந்தப் பூமியில் உள்ள எல்லா உயிரினங்களிலும் மனிதனைப் பிரித்துக் காட்டக்கூடியதை - எது மனிதனை மனிதனாக்குகிறதோ, அதாவது உண்மையான மனிதனாக்குகிறதோ அதைத் தான் சொல்கிறேன். ஆனால் நான் அதை என் உள்ளங்கையில் வைத்துச் சுற்றிலும் காட்ட முடியாது..."

மதத்தைக் கோட்பாடுகளில் இருந்து பிரித்தெடுக்கி றார். 'மத அடிப் படைவாதத்தின் அடிப்படை, மத நம்பிக் கையல்ல; மதக் கோட்பாடே தான்' என்று முன்வைக்கி றார்.

'சுதந்திரத்திற்காக' கதையிலும் நம்மால் போற்றப்படும் பெரும் தலைவரைத் தயக்கமின்றி எதிர்கொள்கிறார். (எல்லாவற்றையும் வெளிப்படையாகவும் துணிச்சலாக வும் எழுதிய மண்ட்டோ 'பாபுஜி' யைப் 'பாபாஜி'யாக ஏன் மாற்றினார் என்று தெரியவில்லை. நம்முடைய வாசிப்பில் 'பாபாஜி'யைப் 'பாபுஜி'யாகக் கொண்டு வர வில்லை என்றால், கதை ஓட்டத்தில் பல கேள் விகளை எழுப்ப வேண்டி உள்ளது) "சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கும் இவர்கள் மனித பலவீனங்கள் பற்றி அக்கறை காட்டுவது கிடையாது. அத்தோடு சாதா ரண மனித மனங்களில் குடிகொண்டிருப்பது இவர்க ளுடைய இயல்புகளோ, சிந்தனை முறைகளோ, நம் பிக்கைகளோ இல்லை என்பதை முற்றிலும் மறந்து விடுகிறார்கள்... நீங்கள் அவனைக் கடவுளாக்க முயலு கிறீர்கள். ஆனால் பாவம் அவன். அவனுடைய மனிதத் தன்மையைத் தக்கவைத்துக் கொள்ள அரும்பாடுபட் டுக் கொண்டிருக்கிறான்." மலை உச்சிக்குக் கொண்டு சென்று பூஜிக்கப்பட்ட விக்கிரகங்கள் தூள் தூளாக உடைந்து போகின்றன.

ஒரு மனிதன் எப்படி வரலாற்றால் படைக்கப்படுகி றான் என்று மண்ட்டோ கவலைப்படவில்லை. வரலாற் றால் படைக்கப்பட்ட அவன் எப்படி தன்னுடைய சுய மரியாதையைத் தக்கவைத்துக் கொள்ளப் போராடுகி றான், என்பதுதான் மண்ட்டோவிற்கு முக்கியமானதாகப் படுகிறது. ஒரு தனிமனிதன் தன்னுடைய சுயமரியாதை யைத் தக்க வைத்துக் கொள்ளப் போராடுவது என்பது

அவனை உருவாக்கிய வரலாற்றுக்கு எதிரான போராட்டமாகத் தானே இருக்க முடியும்.

அந்த உரிமை என்பது எவ்விதத்திலும் மரபு சார்ந்த சமூகக் கட்டமைப்புக்குள் சுருங்கிவிடவில்லை. சுகந்தி (அவமானம்), சுல்தானா (கருப்பு சல்வார்), மோஸல் (மோஸல்), 'நூறு விளக்குகளின் வெளிச்சம்' கதையில் வரும் பாலியல் தொழிலாளி போன்ற மனிதர்கள் தங்கள் மீது கட்டவிழ்க்கப்பட்ட வன்முறைகளுக்கு எதிராகத் தயக்கமின்றி எதிர்வினை புரிகிறார்கள். இந்த மனிதர்கள் பெரும்பாலும் பம்பாய் நகரத்தை மையமாகக் கொண்டு இயங்குகிறார்கள். இந்தியாவின் முக்கிய நகரங்களான பம்பாய், டெல்லி, கல்கத்தா, சென்னை ஆகிய நகரங்களில் பம்பாய் மட்டுமே தொழில் வளர்ச்சியினால் உருவாக்கப்பட்ட நகரம். பம்பாய்க்கு உள்ள சில தனிப்பண்புகள் மண்ட்டோவிற்கு சில சாத்தியங்களை உருவாக்கித் தந்துள்ளது. இந்த சாத்தியத்தை அவரின் பாத்திரங்கள் தக்கவைத்துக்கொண்டது போலவே அவரும் இறக்கும் வரை அதைத் தக்கவைத்துக் கொள்ள முயன்றிருக்கிறார் என்றே தோன்றுகிறது.

"என் இதயத்தில் மிகப்பெரிய வேதனை நிறைந்துள்ளது என்று சொல்ல விரும்புகிறேன். நாலரை வருடங்களுக்கு முன்பு என்னுடைய இல்லமாக இருந்த பம்பாய்க்கு நான் விடை கொடுத்த அன்று உணர்ந்தது போலவேதான் இன்றும் உணர்ந்துகொண்டிருக்கிறேன். என்னுடைய வாழ்க்கையில் மிகக் கடினமான நாட்களையும் சந்தோஷமான நாட்களையும் மறக்க முடியாத நாட்களையும் கழித்த நகரத்தை விட்டு வெளியேறியதில் நான் துயரம் கொள்கிறேன். பம்பாய் என்ற ஒரு துண்டு நிலம், குடும்பத்தாரால் நிராகரிக்கப்பட்ட ஒரு பொறுப்பற்ற வாலிபனைத் தன்னுடைய மடியில் உட்கார வைத்து, 'நீ இங்கு இரண்டு பைசாவிலும்

சந்தோஷமாக இருக்கலாம், ஒரு நாளைக்கு லட்சக் கணக்கில் சம்பாதித்தும் சந்தோஷமாக இருக்கலாம். உன் சம்பாத்தியங்களையும் மீறி உலகிலேயே மிகவும் துயரம் கொண்ட மனிதனாகவும் இருக்கலாம். இவை எல்லாமே உன்னைப் பொறுத்ததுதான். நீ என்ன செய்ய விருப்பப்படுகிறாயோ அதைச் செய்துகொள்ள லாம். யாரும் உன்னைப் பற்றித் தரக்குறைவாகப் பேச மாட்டார்கள். யாரும் உன்னிடம் உபதேசங்கள் செய்து சரி எது, தவறு எது என்று விளக்கம் கொடுக்க மாட் டார்கள். சூழ்நிலை எவ்வளவு கடினமானதாக இருந் தாலும் அதை நீயேதான் பார்த்துக் கொள்ள வேண் டும். நீ, நீ மட்டும்தான் உன் வாழ்க்கையில் மிக முக்கி யமான தீர்மானங்களை மற்றவர்களின் இடையூறுகள் எதுவுமற்று எடுத்தாக வேண்டும். நீ விருப்பப்பட்டால் நடைபாதையில் படுத்துறங்கலாம் அல்லது மாளிகை யில் படுத்துறங்குவதற்கான சாத்தியங்களை நீ ஏற்ப டுத்திக் கொள்ளலாம். அதன் விளைவுகளைப் பற்றி நான் எந்தவிதத்திலும் அக்கறை கொள்வது கிடை யாது. நீ விருப்பப்பட்டால் இங்கிருந்து வெளியேறலாம் அல்லது இங்கு தங்கியிருக்கலாம். என்னைப் பொறுத் தவரை எந்த வேறுபாடும் கிடையாது. நான் இங்கு என்னவாக இருக்கிறேனோ அதுபோலவே எப்போதும் இருப்பேன்' என்று சொன்னது.

"நான் பன்னிரெண்டு வருடங்களாகப் பம்பாயில் தங்கி யிருந்தேன். நான் இன்று என்னவாக இருந்தாலும் அது நான் பம்பாயில் கழித்த நாட்களால் உருவாக்கப்பட்ட துதான். நான் இன்று பாகிஸ்தானில் வாழ்ந்து கொண் டிருக்கலாம், நாளை நான் வேறு எங்கேனும் வாழ்வ தற்காகப் போகலாம். ஆனால் நான் எங்கு சென்றா லும் பம்பாய் என்னை உருவாக்கியது போலவே நான் என்றும் இருப்பேன். நான் எங்கு வாழ்ந்தாலும் பம்

பாயை என்னுடன் சுமந்து செல்வேன். நான் பம்பாயை விட்டுக் கிளம்பியபோது அதற்காக வருத்தப்பட்டேன். அங்கு தான் என் வாழ்க்கையில் நிலைத்திருக்கக் கூடிய பல நட்புகளை என் வாழ்க்கையில் உருவாக்கிக் கொண்டேன். நான் பெருமைப் படக்கூடிய நட்புகள்! அங்குதான் நான் திருமணம் செய்து கொண்டேன். அங்குதான் என் முதல் குழந்தை பிறந்தது. என் இரண் டாவது குழந்தை அவளின் முதல் நாளை அங்குதான் தொடங்கினாள். பம்பாயில் ஒருவேளை சோற்றுக்குக் கூட வழியில்லாமல் அவதிப்பட்ட காலங்கள் உண்டு. நிறையப் பணம் சம்பாதித்து அதைச் செலவு செய்து வாழ்ந்ததும் உண்டு. நான் அந்த நகரத்தை நேசித் தேன். அந்த நகரத்தை இன்னும் நேசிக்கிறேன்."

1947-க்குப் பிறகு அவர் பாகிஸ்தானுக்கு குடிபெயர்ந் தாலும், லாகூர் நகரம், சென்னை, டெல்லி, கல்கத்தா போன்று பழைய சுமைகளைச் சுமந்து கொண்டிருக் கும் நகரம் தான். (1.4 கோடி மக்கள் கொண்ட பம்பாய் தான் இந்த பூமியில் மிக அதிகமான நகரவாசிகளைக் கொண்டது. பம்பாய் தான் இந்த பூமியில் வருங்கால நகர நாகரிகத்தின் முன்னோடி - பார்க்க Maximum City: Bombay Lost and Found by Suketa Metha - மண்ட்டோ, தான் பம்பாயில் இல்லை என்பதையும் லாகூரில் இருப் பதையும் சாகும் வரை அவரால் ஏற்றுக்கொள்ள முடிய வில்லை.

மனித மனம் 'பல பெட்டிகளுக்குள்' இயங்குவதற்கான சாத்தியங் களை ஏற்றுக் கொண்டதன்மூலம் அவரால் சமூகத்திலிருந்து ஒதுக்கித் தள்ளப்பட்ட மனித மனங்க ளின் மேன்மையை இலக்கியங்களில் உருவாக்க முடிந் தது. "ஒரு மனிதன் பொறுக்கியாக இருந்தாலும், நேர் மையாகவும், கண்ணியமாகவும் இருக்க முடியும். எப் படி? இந்தப் புதிரை விடுவிக்க நான் முயலவில்லை.

அது மண்ட்டோவின் துறை" என்று இஸ்மத் சுக்தாய் எழுதினார். மண்ட்டோவின் படைப்புகளில் பாலியல் தொழிலாளர்களின் சமூகத்துடனான பரிமாற்றம் என் பது பழைய சமூகக் கட்டுப்பாடுகளுக்குள் சுருங்காமல் நவீனச் சந்தையின் பொருளாக உருக்கொள்கிறது. ஒரு சந்தைப் பொருள் அதன் மீது கட்டவிழ்க்கப்படும் வன் முறைகளுக்கு எதிராகக் கலகம் செய்யும் உரிமையை யும் தக்கவைத்துக்கொண்டுதான் இருக்கிறது. அதன் தனித்துவத்தைத் தக்கவைத்துக்கொள்வதற்கும், எதிர் வினை புரிவதற்குமான உரிமை நிலைநிறுத்தப்ப டுகிறது. சுகந்தி (அவமானம்), நான்கு வாடிக்கையா ளர்களிடம் ஏமாறுவதற்கான சுதந்திரமும், அவர்களின் படங்களை இரண்டாம் தளத்தில் இருந்து விட்டெ றிவதற்கான சுதந்திரமும் மண்ட்டோவால் அவளுக்கு வழங்கப்படுகிறது. சந்தைப் பொருளாதாரத்தாலும் ஒரு மனிதனுக்கு இது வழங்கப்படுகிறது. மதத்தைப் போற் றுகிறவனையும் (திர்லோச்சன் - மோஸல்) தேசியத்தை உயர்த்திப் பிடித்தவர்களையும் (பாபாஜி - சுதந்திரத் திற்காக), பெண்களை இழிவாகப் பார்த்தவர்களையும் (சத்தா - மம்மி) மண்ட்டோ விட்டு வைக்கவில்லை. மோஸலின் மரணத்தின் மூலமாக திர்லோச்சனையும், குலாம் அலி தன் சபதத்தை மீறுவதன் மூலம் பாபா ஜியையும் மம்மி மூலமாக சத்தாவையும் அவமானத்தின் எல்லையில் நிற்க வைக்கிறார். ஆனால் சத்தாவை மீட் டெடுத்தது போல் பாபாஜியையும், திர்லோச்சனையும் அவர் மீட்டெடுக்கவில்லை. மதத்தையும், தேசியத்தை யும் உதாசீனப்படுத்தினார். மனிதனை மீட்டெடுக்கிறார்.

மிகவும் உயிரோட்டம் கொண்ட காலகட்டத்தில் வாழ்ந்த மண்ட்டோ தன்னைச் சுற்றிலும் நிகழ்ந்து கொண்டிருக்கும் பெரும் மாற்றங்களை உணர்ந்துதான் இருந்தார். அன்று நிகழ்ந்த அரசியல் போக்குகளை

மிகத் துல்லியமாக உள்வாங்கிக்கொண்டிருக்கிறார். மண்ட்டோ சுதந்திரமான சிந்தனையாளன். 1947-க்குப் பிறகு ஒரு முசல்மான் மனதில் உள்ள முரண்பாட்டை அவர் உணர்ந்திருந்ததால் தான், 'பாகிஸ்தான் இராணு வம் காஷ்மீருக்காகச் சண்டை போடுகிறதா அல்லது காஷ்மீர் முஸ்லிம்களுக்காகச் சண்டை போடுகிறதா? காஷ்மீர் முஸ்லிம்களுக்காகத்தான் என்றால் அவர்கள் ஏன் ஹைதராபாத்தில் உள்ள முஸ்லிம்களுக்காகவும் போர்புரிவதில்லை. ஏன் மற்ற முஸ்லிம் நாடுகள் இந்த யுத்தத்தில் பங்கெடுத்துக்கொள்வதில்லை' என்று கேட் கிறார். அது போலவே பண்டிட் நேருவுக்கு எழுதிய கடி தத்தில் 'இந்தியா என்ற ஒரு ரொட்டித் துண்டை ராட் கிளிஃப் (radcliff) இரண்டாகக் கிழித்துப் போட்டான். ஆனால் அவை இன்னும் தீயில் வேகாமல் இருப்பது வருத்தத்திற்குரியது. நீங்கள் அந்தப் பகுதியில் இருந்து தீ மூட்டுகிறீர்கள். நாங்கள் இந்தப் பகுதியில் இருந்து தீ மூட்டுகிறோம். ஆனால் நெருப்பின் நாக்குகள் அடுப் புக்கு வெளியே எங்கோ எரிந்து கொண்டிருக்கின்றன.' என்றும் எழுதுகிறார். பிரிவினையை ஏற்றுக்கொள்ள முடியாத மனம் தான் 'டோபா டெக்சிங்' மற்றும் 'டிக்வா லில் ஒரு நாய்' கதைகளை எழுத வைக்கிறது. மண்ட் டோவின் பார்வையில், 'பிரிவினை என்பது வரலாற்றில் இருந்து துண்டிக்கப்பட்ட துரதிர்ஷ்டவசமான ஒன்றல்ல. அது அதனுடைய தொடர்ச்சிதான். இந்தப் பிரிவி னையை ஏற்றுக்கொள்ள மறுத்த மனம் தான் 'பாகிஸ் தான் இலக்கியம் இந்தியாவில் இருந்து வேறுபட்டதாக இருக்குமா? இருக்கும் என்றால் எவ்விதத்தில்? இலக் கியமும் பிரிவினை செய்யப்படுமா? நாம் இப்போது எந்த நாட்டைச் சேர்ந்தவர்கள்? இந்தியாவா? பாகிஸ்தானா? - இந்தக் கேள்விகளுக்கு என்னால் சரியான பதிலைக் கொடுக்க முடியவில்லை' என்றும், 'நான் யார்? என் னுடைய மதிப்பென்ன? மிகப்பெரிய இஸ்லாமிய தேசம்

என்று கருதப்படும் இந்த நாட்டில் என்னுடைய பங்கு என்ன?, என்று அந்நியப்படுத்தப் பட்ட மனிதனின் குரல் களாய் ஒலிக்கிறது.

> நான் ஏழையாய் இருப்பதற்குக் காரணம் என் நாடு ஏழையாய் இருக்கிறது. எப்படியோ எனக்கு ஒரு நாளைக்கு இரண்டு வேளை சாப்பாடு கிடைக்கிறது. ஆனால் இது கூட மறுக்கப்பட்டு என்னுடைய சகோ தரர்கள் அவதிப்பட்டுக் கொண்டிருப்பதை நான் அறி வேன். விலை உயர்ந்த கார்களில் சவாரி செய்யும் கூட்டத்தைக் கொண்டதில்லை என்னுடைய நாடு. என்னுடைய நாடு என்னைப் போன்ற ஏழைகளையும், என்னைக் காட்டிலும் மோசமாய் இருப்பவர்களையும் கொண்டது தான்.

என்று எழுதிய மண்ட்டோதான் 'அங்கிள் சாம்'-க்கு எழு திய ஒன்பது கடிதங்களில் தன்னுடைய மிகக் கூர் மையான அரசியல் புரிதலை அங்கதப் பார்வையில் முன்வைக்கிறார். ஆயுதங்கள் தொடர்பாக அமெரிக் காவுக்கும் பாகிஸ்தானுக்கும் ஒப்பந்தம் ஏற்படவிருந்த சமயத்தில் மண்ட்டோ, 'எங்கள் முல்லாக்கள் தான் ரஷ்யக் கம்யூனிசத்திற்குச் சரியான பதிலடி' என்றும், அமெரிக்கா ஹைட்ரஜன் குண்டு தயாரித்திருப்பதைக் கேள்விப்பட்டு, 'இந்த உலகத்தில் நிலையான அமை தியைக் கொண்டுவர இந்தப் பூமியின் முகத்திலிருந்து இன்னும் எத்தனை நாடுகளை நீங்கள் அழிக்கப் போகி றீர்கள்?' என்றும் கேட்கிறார். ஒருமுறை அவரிடம் ஒரு குழந்தை உலக வரைபடத்தை வரையச் சொல்லிக் கேட்டதற்கு, முதலில் இந்த உலகத்தில் நிலைத்திருக் கக் கூடிய நாடுகளின் பெயர்களைத் தெரிந்து கொள்கி றேன் என்று பதில் தருகிறார். வேறொரு இடத்தில் 'நான் இன்னும் சில நாட்களில், கடவுளின் அருளால் தற் கொலை செய்து கொள்ளவில்லை என்றால், நிச்சயம்

இறந்து விடுவேன். ஏனென்றால் உங்களுடைய மாவு கள் (அமெரிக்காவில் இருந்து இறக்குமதி செய்யப்பட்ட கோதுமை மாவு) இன்று விற்கும் விலையில் வெட்கம் கெட்டவன் மட்டும் தான் இந்த பூமியில் அவனுடைய முழு ஆயுளுக்கும் வாழ்ந்து முடிப்பான்' என்று எழுதுகி றார்.

அவரின் மரணத்திற்குப் பிறகு மண்ட்டோ மிக மோச மாக விமர்சிக்கப்பட்டார். அந்த விமர்சனங்கள் எல் லாம் சாதத் ஹசனையும் மண்ட்டோவையும் ஒன்றாகப் புதைப்பதற்கான முயற்சி போலவே தெரிகிறது. இத் தகைய விமர்சனங்களை எதிர்த்து இஸ்மத் சுக்தாய், 'மண்ட்டோ பற்றியான உங்களுடைய கட்டுரைகளில் வெளிப்படும் மண்ட்டோ நான் பார்த்திருந்த, இத்தனை வருடங்களாக பழகியிருந்த மண்ட்டோவிடமிருந்து வேறுபட்டவராகவும், அது அவரின் கதைகளை ஏற் றுக்கொள்ளாதவர்களின் மனங்களில் இருந்து உற்பத் தியானது போலவும் தான் தோன்றுகிறது. மிக அழகான கட்டுரைகள் எழுதுவதற்காக மக்கள் அவரிடமுள்ள சிறு சிறு குறைகளை எடுத்து பூதக் கண்ணாடி மூலம் பெரிது படுத்திக் காட்டுகிறார்கள். மண்ட்டோவின் தனிப்பட்ட வாழ்க்கை அவருடைய இலக்கிய வாழ்க்கையோடு இணைக்கப்பட்டு அதையும் ஒரு நையாண்டி இலக் கியமாக மாற்றுகிறார்கள்... மண்ட்டோவின் வாழ்க்கை சம்பந்தப்பட்ட எல்லாமே வியாபாரத்திற்கானது அல்ல. நட்பு, நேசம், கௌரவம், தனிப்பட்ட வாழ்க்கை - இவை எதையுமே காசுக்காக அவர் விற்றுவிடவில்லை... அவர் அற்பமானவராகவும், எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்ளக் கூடியவராகவும், பொய் சொல்லக் கூடிய வராகவும் உண்மையாக இருப்பவராகவும் இருந்திருக் கிறார். அவருடைய பாணியில் எரிச்சலையும் சந்தோ சத்தையும் வெளிப்படுத்தியிருக்கிறார். அவர் தன்னைத்

தவிர வேறு எதற்கும் முக்கியத்துவம் கொடுக்கவில்லை என்று சொல்வது முற்றிலும் தவறானது. கடவுளுக்குப் புண்ணியமாகப் போகட்டும், அவரை மிருகமாக ஆக்கா தீர்கள். மண்ட்டோ தன் குழந்தைகளை மிகவும் நேசித்த தகப்பன். நீங்கள், மண்ட்டோ பாம்பைப் போல இந்த மண்ணை அறிந்திருந்தார் என்று சொல்கிறீர்கள். அன் புள்ள ஐயா, முதலில் நீங்கள் எந்தப் பாம்பையும் பேட்டி எடுத்து அது இந்தப் பூமியை அறிந்திருக்கிறதா இல் லையா என்று தெரிந்து கொண்டிருக்கவில்லை என்று நினைக்கிறேன்... நீங்களும் உங்களைப் போன்ற மதிப் பிற்குரியவர்களும் ஆராதனை செய்யும் எந்த மனிதத்து வத்தை மண்டோ மீறிவிட்டார் என்று நான் உங்களைக் கேட்கலாமா? அவர் செய்தது எல்லாம் குடித்தது ஒன் றுதான். குடிப்பவர்களை உங்கள் விரலால் எண்ணத் தொடங்குங்கள். அவர்கள் எல்லோரும் மண்ட்டோவாக ஆகிவிட்டார்களா?...' என்று பதில் தருகிறார்.

தான் ஒரு மிகச்சிறந்த எழுத்தாளன் என்பதை மண்ட்டோ தன் நிழலோடு சுமந்து திரிந்தார் 'உருது இலக்கியத்தில் எனக்கான இடம் உண்டு என்று நம்பு கிறேன். வெளிப்படையாகச் சொல்வதென்றால் எனக்கு இந்த மயக்கம் கூட இல்லையென்றால் என்னுடைய வாழ்க்கை தாங்கிக் கொள்ள முடியாததாக இருக்கும்' என்கிறார். வரலாற்றுச் சுழற்சிக்குள் சிக்கிய ஒரு அந் நியப்பட்ட மனிதனின் ஓர் தற்பாதுகாப்பு வளையமாக இந்த வார்த்தைகளைப் புரிந்து கொள்ளலாம்.

அவரின் வார்த்தைகளில் சொல்வது என்றால் 'திருப் திகொள்ள முடியாத அளவிற்குத் தூய்மையை நேசித் ததால் எப்போதும் தன்னை சுத்தப்படுத்திக்கொண்டி ருந்த' மண்ட்டோ இறந்து போவதற்கு ஆறு மாதங்க ளுக்கு முன்பு -

இங்கு தான் கிடக்கிறான்

சாதத் ஹசன் மண்ட்டோ

அவனோடு புதைந்து விட்டது

சிறுகதை எழுத்தின்

ரகசியங்களும் நுட்பங்களும்.

பெரும் மண் குவியல்களுக்கு அடியில்

வியந்துகொண்டிருக்கிறான்

யார் பெரிய எழுத்தாளன் என்று

கடவுளா? அவனா?

என்று எழுதப்பட்ட இந்த வரிகள் தன்னுடைய கல்லறை வாசகமாக இருக்க வேண்டும் என்று விரும்பிய ஒரு மென்மையான இதயத்தின் வலியைத்தான் எதிரொலிக்கிறது.

இந்திய அரசியலிலும் கலை இலக்கியங்களிலும் மரபு - நவீனம் என்ற முரண் ஏதோ ஒரு தளத்தில் இயங்கிக் கொண்டிருக்கிறது. இந்த முரணில் நவீனத்தை மரபுக்குள் அடக்குவதற்கான முயற்சிகள் எடுக்காமல் மண்ட்டோவின் மனிதர்கள் மரபின் பிடிப்பில் இருந்து விலகி, குடும்ப உறவுகளில் இருந்து விடுபட்டு, இந்தப் பரந்த உலகில் அந்நியர்களாய் தங்கள் வாழ்க்கையைத் தாங்களே தீர்மானிப்பவர் களாய், வரலாறு சுமைகள் சுமக்க மறுப்பவர்களாய் மனித கண்ணியத்திற்காகப் போராடுகிறவர்களாய் வாழ்ந்து கொண்டிருந்தார்கள்.

***

# மண்ட்டோவின் படைப்புகளில் மண்ட்டோவின் தன்னிலை.

## -ராமாநுஜம்

இவ்வருடம் சாதத் ஹசன் மண்ட்டோவின் நூற்றாண்டு விழா. அவனுடைய நூற்றாண்டு விழாவைக் கொண் டாடுவதற்கு முன்னரே அவன் இறந்து 57 வருடங் கள் ஆகிவிட்டன. அற்ப ஆயுளைக் கொண்டிருந்தான். மண்டோ என்ற தனி மனிதனைப் போலவே, அவனு டைய படைப்புகளும் சிக்கலானவை; பன்முகத் தன்மை கொண்டவை. அவனைப் பிடித்துவிட்டோம் என்று நினைக்கும்போது விரல்களுக்கிடையில் நழுவிவிடக் கூடியவன். எந்த ஒரு இலக்கியப் படைப்பும் பல்வேறு தளங்களிலிருந்து அணுகுவதற்கு சாத்தியங்களைக் கொண்டிருக்கும்.அதுபோலவே மண்டோவின் படைப் புகளில் காணப்படும் பன்முகத்தன்மையில், ஒரேயொரு இழையை மட்டும் எடுத்து வாசிக்க முயலுவோம்.

மண்ட்டோவின் பெரும்பாலான கதைகளில் மனிதர் கள் அறிமுகப்படுத்தப்படும்போது, திடப்படுத்தப்பட்டச மூக அடையாளங்களோடுதான் அறிமுகப்படுத்தப்படு கிறார்கள். அதாவது முசல்மான், இந்து, பாலியல் தொழி லாளி, காமத்தரகன், கொலைகாரன், ஏமாற்றுப்பேர்வழி என்பதுபோன்ற, சமூகத்தால் முத்திரைக் குத்தப்பட்ட அடையாளங்களோடுதான் நமக்கு அறிமுகப்படுத்தப்ப டுகிறார்கள். இருந்தாலும் மண்ட்டோவின் படைப்புக ளில், அது இரண்டு பக்க அளவில் இருந்தாலும், இரு பது பக்க அளவில் இருந்தாலும்,சமூகத்தால் முத்திரைக் குத்தப்பட்ட அந்த அடையாளங்கள் முற்றும் முழுவதுமா கக் காணாமல் போகிறது, கதையின் போக்கில் கரைந்து போகிறது. வாசகனான நம்முடைய மனிதத்தன்மை என்ற ஏதோ ஒரு அபத்தத் தளத்தில் அந்தப் பாத்திரங்

கள் நம்மோடு கரைந்து போகின்றன. மற்ற எழுத்தாளர் களிடமிருந்து மண்ட்டோவைப் பிரித்துக் காட்டுவதில் இத்தகைய பண்பு முக்கியப் பங்காற்றுகிறது என்று கரு துகிறேன். இது எப்படி மண்ட்டோவிற்குச் சாத்தியப்பட் டது?.

மண்ட்டோவின் கதைகளில் நிகழும் இந்த ரசவாதத் தின் அடிப்படையைப் புரிந்துகொள்ள நாம், 'நான்' என்ற தன்னிலையை மண்ட்டோ எப்படிக் கையாண்டான் என்ற கேள்வியிலிருந்து தொடங்க வேண்டியுள்ளது. 'நான்' என்பதற்குள் அடங்கியிருக்கும் தன்னிலை அதி காரத்தோடு, அதாவது அந்தந்தக் காலக்கட்டங்களில் நிலவியிருந்த அதிகாரம் மற்றும் அந்த அதிகாரம் முன் வைக்கும் உலகப் பார்வையோடு உள்ள தொடர்பை அடிப்படையாகக் கொண்டதாகும். உதாரணத்திற்குக் குடியுரிமை என்று நவீன தேசம்-அரசு முன்வைக்கும் தன்னிலைக்கும், பிரா்ஜை என்ற நவீனத்துவத்திற்கு முந்தைய சமூகத்திலிருந்த மனிதனின் தன்னிலைக் கும் பெருத்த வேறுபாடுகள் உண்டு. இதைச் சற்று விரிவாக விளக்கிக் கொள்வதென்றால், நவீனத்துவத் தளத்தில் நான் பார்ப்பனன், நான் பார்ப்பனன் அல்லா தவன், நான் தலித், நான் தொழிலாளி வர்க்கத்தைச் சேரந்தவன், நான் முதலாளி வர்க்கத்திற்கு எதிரானவன் போன்ற தன்னிலைகள் நவீனத்துவத்திற்கு முந்தைய சமூகத்தில் முன்வைக்கப்பட்ட தன்னிலையில் இருந்து பெருத்த பண்பு வேறுபாடு கொண்டதாகும். நவீனத் துவச் சமூகத்தில் அரசியல் தளத்திலான தன்னிலை தனித்தியங்கும் அடிப்படையைக் கொண்டதாகும். நவீ னத்துவத்திற்கு முந்தைய சமூகத்தில் இதற்கான அடிப் படைகள் கிடையாது. அது ஒரு கூட்டு அடையாளத்தின் தொகுதி. இருப்பினும், குடிமகன் என்பது பழைய தன் னிலையை முற்றும் முழுவதுமாக அழித்துவிட்டது என்று அர்த்தப்படுத்திக்கொள்ள முடியாது. அதாவது, தனித்தி

யங்கும் தன்னிலை, கூட்டு அடையாளத்திலிருந்து முற்றாகப் பிரிந்துவிட்டது என்று முன்வைக்க முடியாது. ஒரே சமூக வெளியில் இந்த இரண்டு நிலைகளும் இணைந்து இயங்குவதும் சாத்தியமானது தான்.

இந்த நவீன தேசம்-அரசு என்ற அமைப்பு உருவாக்கிய தன்னிலையை மண்ட்டோ தீவிரமாக மறுத்தான். இந்த அதிகார அமைப்பு உருவாக்கிய 'நான்' என்ற தன்னிலையைச் சதா சர்வகாலமும் விமர்சனத்திற்கு உள்ளாக்கிக்கொண்டே இருந்தான். இந்த 'நான்' என்பது உருப்பெற்றுத் திடமாவதை மிகத் தீவிரமாக எதிர்த்து வந்தான். தேசியம்-அரசு உருவாக்கிய 'சுயமான' மனிதர்களை மண்ட்டோ தன்னுடைய படைப்புகளில் விலக்கி வைத்ததற்கு இதை அடிப்படைக் காரணமாக முன்வைக்கலாம். இத்தகைய தன்னிலையைக் கொண்டாடிய மனிதர்களை நிராகரித்துவிட்டு, இத்தகைய தன்னிலையைக் கைக்கொள்ள முடியாத, அதிகார அமைப்புக்கு வெளியே இருப்பவர்களைத் தேடிச்சென்றான். அதனால்தான், 'குடும்பப் பெண்களை ஏறெடுத்துப் பார்க்காத அவன், வேசிகளோடு இருக்கும்போது ஏழாவது சொர்க்கத்தில் இருந்தான்'. ஒருவர் தன்னை 'சுயமாக'ச் சிந்திக்கக்கூடிய நவீன மனிதனாகக் கற்பிதம் செய்து கொள்ள முடியும். இத்தகைய சிந்தனைகளுக்கு ஆட்படாதவராகவும் ஒருவர் இருக்கலாம். ஒருவருக்குக் கடந்த காலம் என்பது (வரலாறாக இல்லாமல்) அவருடைய இருப்பின் மையப்பகுதியாக இருக்கலாம். பாலியல் தொழிலில் ஈடுபடும் ஒரு பெண் தான் 'சுயமாக'ச் சிந்திக்கும் குடிமகள்என்ற தன்னிலையை முன்னிலைப் படுத்தி இருக்க முடியாது. கடந்த காலம் என்பது அவளுடைய இருப்பின் மையப்பகுதியாக இருக்கும் சாத்தியங்களும் அற்றது. ஆக, மண்ட்டோவின் நிலைப்பாடு என்பது கடந்த காலத்தை மையப்படுத்திய இருப்பையும், நவீன தேசம்-அரசு என்பது மையப்படுத்திய இருப்பையும் ஒரு

சேர நிராகரித்ததுதான். இவ்விரண்டு நிலைப்பாடுகளையும் நிராகரிக்கும் அழகியலைச் சமூகத்தின் விளிம்பில் உள்ளவர்களிடம் தான் மண்ட்டோ கண்டான். இதில் 'ரொமாண்டிசம்' ஏதுமில்லை. இது ஒரு தேர்வு. அதிகாரத்துக்கு எதிரான ஒரு தத்துவார்த்தத் தேர்வு. மண்ட்டோ வாழ்ந்த காலத்திலான முற்போக்கு எழுத்தாளர்கள் தேசம்-அரசு என்ற கருத்தாக்கத்தை ஏற்றுக் கொண்டவர்கள். நவீனத்துவம் முன்வைத்த தளத்தில் இருந்தும், அது உருவாக்கிய அடிப்படைகளில் இருந்தும் சமூகத்தையும் மனிதர்களையும் எடை போட்டார்கள். மண்ட்டோ நவீனத்துவம் முன்வைத்ததை முற்றாக நிராகரித்ததோடு, அது உருவாக்கிய அடிப்படைகளிலிருந்து சமூகத்தையும் மனிதர்களையும் எடைபோட மறுத்தான். அதனால்தான் மண்டோவிற்கும் முற்போக்கு எழுத்தாளர்களுக்கும் இடையே இடைவெளி உருவானது. முற்போக்கு எழுத்தாளர்கள் தேசம்-அரசு என்ற கருத்தாக்கம் உருவாக்கிய தன்னிலையை விமர்சன மற்று ஏற்றுக் கொண்டவர்கள். மண்டோ அத்தகைய தன்னிலையை முற்றும் முழுவதுமாக நிராகரித்தவன். விளிம்பு நிலையில் இருப்பவர்கள் பற்றி மண்ட்டோ சிந்தித்தான் என்பது, அதிகார மையத்தில் இருந்து முன்வைக்கும் மேலாதிக்கப் பார்வையாகும். மண்ட்டோ விளிம்பின் அடிப்படையை மையத்திற்கு எதிரான பெரும் போராட்டமாக மாற்றினான். மையத்தின் பகுதியாக அதை மாற்ற முயன்றான். இந்த இயக்கத்தில்தான் அவன் படைத்த மனிதர்களின் ஸ்தூலமான சமூக அடையாளங்கள், அதாவது தேசம்-அரசு உருவாக்கிய அடையாளங்கள் கதையின் இயக்கத்தில் கரைந்து போக முடிந்தது. அதாவது, 'நான்' என்ற சுயத்தை சதாசர்வகாலமும் விமர்சித்து, தேசம்-அரசு என்பது உருவாக்கிய தன்னிலையைத் தனக்குள் தொடர்ந்து சிதைத்துக்

கொண்டது போலவே, அவன் படைத்த மனிதர்களிலும் அவன் வெற்றிகரமாகச் சிதைத்துவிட்டான்.

இரண்டாவதாக, மண்ட்டோ நவீனத்துவம் கைக் கொண்ட மதத்தை நிராகரித்தான். நவீனத்துவத்திற்குள் தங்களை இன்னும் முழுமையாக இணைத்துக்கொள் ளாத அல்லது இணைத்துக்கொள்ள முடியாத வெகு ஜனங்களின் ஆன்மாவாக இருக்கும் மதத்தையல்ல. மதம் என்பது ஒரு சிந்தனை முறைமை; அரசியல் என்பது ஒரு சிந்தனை முறைமை என்பதைப் போலவே. இந்த இரண்டு சிந்தனை முறைமைகளுக்கும் இடை யில் உள்ள முரண்பாடு என்பது மதத்தைப் பிற் போக்குத்தனமானதாகவும், அரசியலை முற்போக்குத்த னமானதாகவும் முன்வைத்தது. இவ்விரண்டு சிந்தனை முறைமைகளுக்கும் அடிப்படையில் வேறுபாடுகள் இல் லாமலில்லை. அரசியல் என்பது உரிமைகள் சார்ந்தது என்றால், மதம் என்பது கடமைகள் சார்ந்தது. அரசிய லில் கடமை என்பது சந்தைப் பொருளாதாரம் சார்ந் தது என்றால், மதத்தில் உரிமை என்பது பிறப்புச் சார்ந்ததாக இருக்கிறது. அரசியல் என்பது சமத்துவம் என்ற லட்சியத்தைச் சார்ந்தது என்றால், மதம் என்பது இறப்புக்குப் பிந்தைய நிலையைச் சார்ந்ததாக இருக் கிறது. இருப்பினும் இருத்தியலில் பிரச்சனைகளுக்கு, குறிப்பாக மரணம் பற்றிய கேள்விக்கு அரசியல் என்ற சிந்தனை முறைமையில் இதுவரை எந்த அடிப்படை களும் உருவாக்கப்படவில்லை. இது மரணம் என்ற விஷயத்தில் பெரும் வெற்றிடத்தைத்தான் கொண்டுள் ளது. இது நவீன விஞ்ஞானத்தின் உதவியோடு மனித உடலை ஒரு இயந்திரமாக மாற்றிவிட்டது. மரணம் என் பது செயலியக்கம் இழந்த இயந்திரம் மட்டுமே என்பதாக முன்வைக்கிறது. சரியாகவோ, தவறாகவோ மதம் என் பது மரணம் என்பதோடு முட்டி மோதியது. இத்தகைய மதத்திற்கும் அரசியலாக்கப்பட்ட மதத்திற்கும் உள்ள

வேறுபாடு மிக முக்கியமானது. சமூக ஆய்வாளர் அஷிஷ் நந்தி 'நம்பிக்கை சார்ந்த மதம்' என்றும், 'கருத்தியல் சார்ந்த மதம்' என்றும் வகைப்படுத்துகிறார். மண்ட்டோ கருத்தியல் சார்ந்த மதத்தைத் தீர்க்கமாக மறுத்தான். தேசம்-அரசு என்ற கருத்தாக்கம் கைக்கொண்ட மதம் தான், மத அடிப்படைவாதமாக உருமாற்றம் காண்கிறது. மத அடிப்படைவாதத்தை உருவாக்கிய நவீனத்துவம் தான் மதச்சார்பின்மை என்பதையும் உருவாக்கியது. இதைக் காந்தி மிகத் தெளிவாகப் புரிந்துக்கொண்டார். வெகுஜனங்களுக்கு இடையே புழங்கும் நம்பிக்கையி லான மதத்திற்கும், அதிகாரத்தின் மையத்தில் உள்ள கருத்தியல் ரீதியான மதத்திற்கும் உள்ள இடைவெளி களை நாம் மண்ட்டோவின் கதைகளில் காண முடியும். 'மோஸல்' மற்றும் 'கடவுள் மீது சத்தியமாக' என்ற கதை களை இதற்கு உதாரணமாகச்சொல்லலாம்.

மூன்றாவதாக, ஆண் உடல் மற்றும் குடும்பம் என் பதை அவனுடைய படைப்புகளில் மண்ட்டோ முற் றும் முழுவதுமாக விமர்சனத்துக்கு உள்ளாக்கினான். மண்ட்டோ ஆண் உடல் என்ற தன்னிலையை விமர்சிக் காமல், சுகந்தி, சாந்தி, ஜானகி, மம்மி போன்ற பெண்க ளைப் படைத்திருக்க முடியாது. இந்த ஆணுடல் என் பது அந்தந்தக் காலத்திற்கான அதிகார அமைப்போடு நெருங்கிய உறவு கொண்டதாகும். நவீன ஆண் உடல் என்பது, நவீன தேசம்-அரசு என்பதன் அடிப்படையில் கட்டமைக்கப்பட்டதாகும். இந்தக் கருத்தாக்கத்தை நிராகரிக்காமலும், விமர்சனமற்றும் ஏற்றுக் கொண்ட ஒரு ஆண், ஆண்மையவாத பார்வையிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்வது என்பது சாத்தியமா காமல் போகிறது. இதைப்பற்றி சிந்திக்கும்போது நாம் காந்தியை நினைக்காமலிருக்க முடியாது. காந்தியும் தேசியம் என்பதற்கும் அரசு என்பதற்கும் தன் உடலைப் பணிய வைக்க மறுத்தார். ஒருவன் தன் ஆண் உடலை

நேசிப்பதற்கும், தேசம்-அரசு என்பதை நேசிப்பதற்கும் நெருங்கிய தொடர்புண்டு. ஒன்றை நிராகரிப்பது என் பது, ஏதோ ஒரு தளத்தில் மற்றொன்றை விமர்சனத் துக்குள்ளாக்குகிறது. இங்கு முக்கியமான ஒரு வேறு பாட்டை நாம் கவனத்தில் கொள்ள வேண்டியுள்ளது. காந்தியை யாரேனும் அச்சம் கொள்ள வைத்தார்கள் என்றால் அது பாலியல் தொழிலாளிகள்தான். ஒருமுறை சில பாலியல் தொழிலாளிகள் சில கோரிக்கைகளோடு காந்தியைப் பார்த்தபோது, பாலியல் தொழிலை விட்டு விலகிய பிறகு அவர்களுக்கு உதவி செய்வதாகக் காந்தி வாக்குறுதி அளித்தார். மண்ட்டோவிற்கும் காந்திக்கும் உள்ள இந்த வேறுபாட்டை மிகத் தெளிவாகப் புரிந்து கொண்டால்தான் காந்தியின் பாலியல் மற்றும் குடும்பம் பற்றிய பார்வையை விமர்சிக்கும் விதமாக 'சுதந்திரத் திற்காக' என்ற கதையை மண்ட்டோ படைத்ததை நாம் புரிந்து கொள்ள முடியும். காந்தி ஒரு பெண் உடலுக்கு ஒரு தாயாக வேண்டுமென்று விரும்பினார் என்றால், மண்ட்டோ ஒரு பெண் உடலை, ஒரு ஆண் மற்றொரு ஆண் உடலைப் பார்க்கும் பார்வையில் பார்க்க விரும்பி னான் என்று சொல்லலாம். 'குஷியா' கதையோடு 'சாந்தி' கதையை ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

நான்காவதாக, மண்ட்டோ சமூகத்தில் மனிதர்களுக் கிடையே ஒரு 'மற்றமை'யை [other] உருவாக்கத் தீர்க்க மாக மறுத்தான். தேசம்-அரசு என்பது உருவாக்கிய 'மற் றமையை' ஏற்றுக்கொள்ள மறுத்தான். இயேசு கிறிஸ்து வைப் புனிதப்பிறவியாக்க ஜூடாஸ் அவசியம் இல்லா தவன் என்று மண்ட்டோ கருதினான். இந்தப் பண்பை நாம் அரசியல் தளத்தில் காந்தியிடம் காணலாம். காந்தி, 'காலனியத்தை எதிர்க்கிறேன் ஆனால் ஒரு பிரிட்டி ஷாரைக் கூட நான் எதிர்க்கவில்லை' என்றார். இதே பண்பைப் பார்ப்பனியத்தை எதிர்த்து மிகத் தீர்க்கமாகப் போராடிய அம்பேத்கர் மற்றும் பெரியாரிடம் நாம் காண

முடியும். சமூக முரண்களையும், மனிதர்களுக்கிடையே யான முரண்களையும் 'மற்றமை' என்பது மூலம் இவர் கள் கையாளவில்லை. அதுபோலவே மண்ட்டோ தேசி யம்-அரசு என்பது உருவாக்கிய தன்னிலையில்தான் ஜூடாஸ் பதுங்கியிருப்பதைக் கண்டான். ஆனால் நவீ னத்துவத்தில், ஒரு எதிரியைக் கற்பிதம் செய்துகொள்ள வரலாறு என்ற ஆயுதம் கைக்கொள்ளப்படுகிறது. காந்தி வரலாறு என்பதை நிராகரித்தார் என்பது மிக முக்கியமா னது. அதுபோலவே மண்ட்டோவும் வரலாற்றைக் கைக் கொள்ளும் அபாயத்தை உணர்ந்திருந்தான். இதை நாம் 'இது 1919-இல் நடந்தது' என்ற கதையில் மிகத் தெளிவாகக் காண முடியும். 1857-இல் நடந்த முதல் சுதந்திரப் போராட்டத்தில், அப்பாவிகளான ஆங்கிலே யப் பெண்கள் மற்றும் குழந்தைகள் மீது கிளர்ச்சிக்கா ரர்கள் செய்த வன்முறைகளை 150 வருடங்களுக்குப் பின்பும் நம்மால் விமர்சனத்தோடு பார்க்க முடியவில்லை என்பது, தேசியம்-அரசு என்ற கருத்தாக்கம் நமக்குள் உருவாக்கியிருக்கும் 'நான்' என்ற தன்னிலையை எவ் வளவு விமர்சனமற்று நாம் ஏற்றுக்கொண்டுள்ளோம் என்பதைத் தான் காட்டுகிறது. மண்ட்டோ இந்தத் தன் னிலையை ஏற்றுக்கொள்ள மறுத்ததால்தான், அவனு டைய கதைகளில் 'மற்றமை' என்று ஒன்று உருக்கொள் ளாமலேயே போனது.

தேசம்-அரசு உருவாக்கிய ஒரு சாதியத் தன்னிலை சார்ந்த 'நான்' என்பதை விமர்சனமற்று ஏற்றுக்கொண்ட படைப்புகளில் ஒலிக்கக்கூடிய பல்வேறு குரல்க ளைப் 'பன்முகத்தன்மை'யாக முன்வைத்துக்கொண்டி ருக்கிறோம். நம்முள் ஒலிக்கும் இந்தப் பல்வேறு குரல் கள் என்பது தேசம்-அரசு என்பதால் திடப்படுத்தப்பட்ட ஆண்மையவாதத் தன்னிலையின் ஒரே முகத்தின் பல மாதிரிகளே தவிர, சமூகத்தின் பல்வேறு குரல்களோ, முகங்களோ அல்ல.

## தமிழாக்கக் குறிப்புகள்

கதைகள்

திற, கருப்பு சல்வார், சில்லிட்டுப்போன சதைப்பிண்டம் ஆகிய கதைகள் ஆபாசமானது என்று, மண்ட்டோ மீது வழக்குத் தொடரப்பட்டது.

சொற்சித்திரங்கள்

சொற்சித்திரங்கள் 1948 - ல் 'கருப்புக் கட்டங்கள்' தொகுப்பாக வெளி வந்தது

என்னதான் வேறுபாடு

'ஹலால்' கோஷர் மரபுப்படி ஒரு மிருகம், பிராத்தனைகள் முடிந்தபின் கொல்லப்பட்டு, அதன் ரத்தம் முழுவதுமாக வெளியேறிய பின்னே உண்பதற்குத் தகுதியுடையதாகக் கருதப்படுகிறது. 'ஜட்கா' முறை என்பது ஒரே வீச்சில், ரத்தம் வெளியேறுவதற்கு இடம் கொடுக்காமல் மிருகத்தைக் கொல்வதாகும். முசல்மான்கள் பொதுவாக 'ஹலால்' முறையில் தயாரிக்கப்பட்ட இறைச்சியை உண்பார்கள்.

நினைவோடைகள்

அசோக்குமார்

மண்ட்டோவின் மனைவி சஃபியா, ஏப்ரல் 6, 1968-ல் அளித்த ஒரு பேட்டியில் "பிரிவினைக்குச் சில மாதங்களுக்கு முன்பு ஃபிலிமிஸ்தானிலிருந்து மண்ட்டோ நீக்கப்பட்டார்." என்ற செய்தியைத் தெரிவித்திருக்கிறார் எஸ்.முகர்ஜி மற்றும் அசோக்குமார் நட்பின் மீது கொண்டிருந்த பெருமையின் காரணமாகப் பல காலங்களுக்குப் பின்னரே இந்தச் செய்தியை மண்ட்டோ தன்னிடம் சொன்னதாகவும் அந்தப் பேட்டியில் தெரிவித்திருக்கிறார்.

மண்ட்டோ, தான் ஃபிலிமிஸ்தானில் இருந்து நீக்கப் பட்ட விஷயம் தொடர்பாக எங்குமே குறிப்பிடவில்லை.

நர்கிஸ்

பாரசீக மொழியில் 'நார்சிஸஸ் என்பது உருது மொழி யில் 'நர்கிஸ்' ஆங்கிலத்திலும் 'நார்சிஸஸ்' என்றே பயன் படுத்தப்படுகிறது. இந்தப் பதம் 'னயககடினடை' என்ற மலர் வகையைக் குறிக்கிறது. நீண்ட காம்பு கொண்டும், மலர் தனியே தெரிய அதன் மையப் பகுதியில் அடர்த்தி யான வண்ணமும் இதழ்களில் வெளிறிய நிறமும் இதன் சிறப்பம்சமாகும். இந்த மலர் கண்களோடு ஒப்பிடப்ப டுகிறது. ஆங்கில மொழியாக்கத்தில் 'நார்சிஸஸ்' என்ற பதம் குவளை மலர் என்று உத்தேசமாய் உபயோகப்ப டுத்தப்பட்டுள்ளது.

ஷியாம் சத்தா (Shyam chadha)

ஷியாம் சத்தா பஞ்சாப் திரைப்படங்கள் மூலமாக பம் பாய் திரைப்படத் துறைக்குள் நுழைந்தவர். 1941-ல் பாம்பே டாக்கீஸில் திரைப் பரிசோதனைக்காக அழைக் கப்பட்டு நிராகரிக்கப்பட்டவர். DAV College, Gordon College-ல் படிக்கும்போது பம்பாய் திரைப்படத் துறை பிரபலங்களோடு அவருக்கு நட்பு கிடைத்தது. 1947- ல் K.L. Salgal மரணத்திற்குப் பிறகு பம்பாய் திரைப்படத் துறையில் ஏற்பட்ட வெற்றிடத்தை ஷியாம் நிரப்பி, 1948 முதல் 1951 வரை Dillagi, Patanga, Kaneej, Samadhi, Man ka Meet, Shabistan போன்ற வெற்றிப் படங்க ளைக் கொடுத்தார். 'தில்லாஹி' படத்தில் சுரையாவு டன் அவர் நடித்த பாடல் காட்சி மிகவும் புகழ் பெற்றது. நஸீம் பானோவுடன் 'சபிஸ்தான்' படத்தில் நடித்துக் கொண்டிருந்த போது படப்பிடிப்பில் ஏற்பட்ட ஒரு விபத் தில் குதிரை மேலிருந்து கீழே விழுந்து அவர் மரணம் அடைந்தார். அப்போது அவருக்கு வயது 31.

நூர்ஜஹான்

இந்தியாவில் லதா மங்கேஷ்கர், மறைந்த முகேஷ் மற்றும் எம்.எஸ். சுப்புலெட்சுமி ஆகியோருக்கு எத்தகைய மரியாதையும் மதிப்பும் இருக்கிறதோ அது போலவே பாகிஸ்தானில் நூர்ஜஹானுக்கு இருந்தது. தன்னுடைய போக்கில் திரைப்பட வாழ்க்கையை வாழ்ந்த அவர், புகழை எட்டுவதற்கு மிகக் கடினமாக உழைத்தார். சந்தோஷமான காலங்கள், மோசமான காலங்கள், திருமணங்கள், விவாகரத்துகள், தோல்வியுற்ற காதல் அனுபவங்கள், புகழ், பணம், மிகச் சாதாரணமாக மற்ற ஆண்களுடனான அவருடைய தொடர்புகள் என்று அவருடைய தனிப்பட்ட வாழ்க்கை பல சச்சரவுகளோடு நிறைந்திருந்தது. அதுபோலவே பல இடங்களில் அவருடைய 'ஒற்றர்கள்' நட்டு வைக்கப்பட்டதும் மிகப் பிரபலமானது. ஒரு முறை அவருடைய வயது கேட்கப்பட்ட போது, "எனக்கு என்ன வயது இருக்கும் என்று எல்லோரும் தெரிந்து கொள்ள ஆவலாக இருக்கிறார்கள். நான் சொல்கிறேன் வாழ்க்கை அனுபவத்திலும், ஆண்களை அனுபவித்ததிலும் எனக்கு எப்போதும் நூறு வயதுதான்" என்று பதில் தந்துள்ளார். மண்ட்டோவின் கட்டுரையில் ஷெளகத்துடனான அவருடைய உண்மையான காதல் எந்த அளவிற்கு விவரிக்கப்படுகிறதோ அதற்கு நேர்மாறாக அந்த உறவு பின்னாளில் சேதமடைந்தது. 1943ல் அவருடைய 16 அல்லது 17வது வயதில் ஷெளகத்தைத் திருமணம் செய்து கொண்டார். இவர்களிடையேயான உறவு முறிந்த பிறகு ஷெளகத் எழுதிய ஒரு புத்தகத்தில் நூர்ஜஹானுடைய பிறப்பைக் கேவலப்படுத்தியதை அவரால் என்றும் மறக்க முடியவில்லை. அவருடைய பிறப்புச் சான்றிதழில் அவருடைய பெற்றோர்களின் தொழில் 'பாலியல் தொழிலாளி' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஷெளகத் அந்தப் புத்தகத்தில் இதைக் குறிப்பிட்டதோடு, நூர்ஜஹானுக்கு மற்ற ஆண்களோடு இருந்த எல்லாத் தொடர்புகள் பற்றியும் எழுதியுள்ளார்.

இசாஸ் துரானி என்ற நடிகரோடு அவருடைய தோல்வி யுற்ற இரண்டாவது திருமணம், (இந்தத் திருமணமும் முறிந்த பிறகு போதைப் பொருள் கடத்தியதற்காக இங்கிலாந்தில் இசாஸ் கைது செய்யப்பட்டபோது அவரைக் காப்பாற்ற நூர்ஜஹான் முன் வந்தார்) பாகிஸ்தானின் கிரிக்கெட் தொடக்க ஆட்டக்காரரான நாசர் முகமது உடனான அவருடைய தொடர்பு, (இருவரும் ஒன்றாக இருக்கும்போது ஷௌகத் தன் கூட்டாளிகளைக் கொண்டு அவர்கள் இருந்த கட்டடத்தை முற்றுகை யிட்ட போது அதிலிருந்து தப்பிக்க நாசர் 21 அடி உயரத்தி லிருந்து குதித்துத் தன் கையை உடைத்துக் கொண்டார். பாகிஸ்தான் ஒரு சிறந்த தொடக்க ஆட்டக்காரரை இழக்க நேரிட்டது) 'பாபுலர் பிக்சர்ஸ்'ன் உரிமையாளர் எம். நஸீமுடனான அவருடைய தொடர்பு, நஸீமுக்கு நூர்ஜஹான் எழுதிய காதல் கடிதங்கள் என்று எல்லாமே ஷௌகத் எழுதிய புத்தகத்தில் வெளியிடப்பட்டது! 1971-ல் பங்களாதேஷ் உதயத்திற்குப் பின் ஜெனரல் யாகியாகான் உடனான அவருடைய தொடர்பு பற்றி பாகிஸ்தானில் தொடர்ந்து விமர்சிக்கப்பட்டது. இதில் உண்மையில்லை என்று பின்னாளில் வரலாற்றாசிரியர்களால் சொல்லப்பட்டாலும் நூர்ஜஹான் அந்தக் காலங்களில் அடைந்த மன வேதனைகள் மிக அதிகம். ஒரு கட்டத்தில் ஜுல்ஃபிகர் அலி பூடோ ஆட்சிக்கு வந்த பின் அவரது தலையீட்டின் பேரில் இந்த விமர்சனம் நிறுத்தப் பட்டது. இவை எல்லாவற்றையும் மீறி மிகக் கம்பீரமான பெண்மணியாக அவரது துறையில் தனித்துவத்தோடு விளங்கினார் என்பது குறிப்பிடத்தக்கது. ஒரு முறை, 'ஒரு பெண் வேலை செய்வதால் அவளுக்கு என்ன கிடைக்கிறது. அவளுக்கு மனநிம்மதி என்பது வீட்டினுடைய நாலு சுவருக்குள் தான். நான் என்ன நிம்மதி அனுபவித்திருக்கிறேன் என்று கேட்கிறேன். தன்னைக் காட்டிலும் தன்னுடைய மனைவி அதிகம் சம்பாதிக்கிறாள்

என்பதை ஓர் ஆண் உணர்ந்தவுடன் அவளை வெறுக்கத் தொடங்குகிறான். தன்னுடைய மனைவி தன்னைச் சார்ந்திருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறான். அவள் ஒரு புடவை வாங்க வேண்டும் என்றாலும் கூட அவனிடம் பிச்சை எடுக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறான். நம் நாட்டின் பெண்களுடைய கதி இதுதான். பெண்கள் பொருளாதார ரீதியாகச் சுதந்திரமாக இருப்பதை ஆண்கள் ஏற்றுக்கொள்ள மறுக்கிறார்கள். மனைவி, கணவனை முழுக்கச் சார்ந்திருக்கும் பட்சத்திலேயே ஒரு குடும்ப வாழ்க்கையை ஏற்படுத்திக் கொள்ள முடிகிறது. தன்னுடைய மனைவிக்குப் பணம் சம்பாதிப்பதற்கான திறமையும் புத்திசாலித்தனமும் இருக்கிறது என்பதை அறிந்த மாத்திரத்திலேயே ஓர் ஆண் பாதுகாப்பற்ற தன்மையை உணர்கிறான். வேலை செய்து சம்பாதிப்பதால் அவளுக்குக் கிடைப்பதெல்லாம் நிராகரிப்பும் எதிர்ப்பும் தான். வெற்றி பெற்ற பெண்களின் கணவன்மார்கள் வெவ்வேறு விதமாய் தாழ்வு மனப்பான்மையில் அவதிப் படுகிறார்கள். இந்த நாட்டில் பெண்கள் சம்பாதிக்கக் கூடாது. அவள் ஒன்றும் இல்லாதவளாக இருக்கும் பட்சத்தில் மட்டுமே வெற்றிகரமாகக் குடும்ப வாழ்க்கையை மேற்கொள்ள முடிகிறது.' என்று 1981-ல் கொடுத்த ஒரு பேட்டியில் குறிப்பிட்டுள்ளார். மண்ட்டோவின் கட்டுரையில் உள்ள கடைசி சில வாக்கியங்களின் உள் அர்த்தத்தைப் புரிந்து கொள்ள நூர்ஜஹானுக்கும் ஷௌகத்துக்கும் இடையேயான உறவு எவ்வளவு கீழ்த்தரமாகப் போனது என்பதைப் படித்த போது உணர்ந்து கொள்ள முடிகிறது. அவரின் மறைவுக்குப் பிறகு திரு. காலித் ஹசன் அவர்கள் நூர்ஜஹான் பற்றி எழுதிய கட்டுரையிலிருந்து இதை விளங்கிக் கொள்ள முடிகிறது.

அசோக்குமார், நர்கிஸ், மற்றும் நடிகர் ஷியாம் பற்றி மண்ட்டோ எழுதிய கட்டுரைகளின் காலம், மண்ட்டோவிற்கு மிகச் சாதகமான சூழ்நிலையை ஏற்படுத்தியது

என்று எண்ணத் தோன்றும். அதாவது அவர் பாகிஸ்தான் சென்ற பிறகு இந்தியாவிலிருந்த அசோக்குமார் மற்றும் நர்கிஸ் பற்றியும், ஷியாமின் இறப்பிற்குப் பிறகு அவரைப் பற்றிய கட்டுரையும் பிரசுரமானதும் அப்படிச் சொல்வதற்கு வாய்ப்பை ஏற்படுத்துகிறது. ஆனால் இந்தக் கட்டுரை நூர்ஜஹான் உயிரோடு பாகிஸ்தானில் இருக்கும்போது, அதுவும் மிகவும் பிரபலமானவராகவும், மரியாதைக்குரியவராகவும் இருக்கும்போது மண்ட்டோவால் எழுதப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. நூர்ஜஹானின் மறைவுக்குப் பிறகு அவரோடு மிக நெருக்கமாகவும் மரியாதையோடும் உறவு கொண்டிருந்த திரு. காலித் ஹசன் எழுதிய கட்டுரையில் நூர்ஜஹானின் பிறப்பு பற்றிய தகவல்களும், அவர் குடும்பச்சூழல், அவருடைய தனித்துவத்தை நிலை நிறுத்திய பாதை என்று எல்லாமே வெளிப்படை யாகவும் தகவல்களை மூடி மறைக்காமலும் எழுதப்பட்டுள்ளது என்பது மிகவும் ஆச்சர்யமான விசயமாக இருக்கிறது. மேலும் அந்தக் கட்டுரையில் சாதாரணமாகப் பேசும்போது நூர்ஜஹான் பயன்படுத்தக்கூடிய பஞ்சாபி வசைச்சொற்கள் கட்டுரையில் அப்படியே கொடுக்கப்பட்டுள்ளன.

மண்ட்டோவின் கட்டுரையையும் காலித் ஹசன் எழுதிய கட்டுரையையும் படித்தபோது, கணிதவியலாளர் இராமானுஜன் பற்றியும், ஜெகதீஷ் சந்திர போஸ் பற்றியும், ஆஷிஸ் நந்தி எழுதிய 'ஆல்டர்நேட் சயின்ஸ்' (Alternate Science) என்ற புத்தகத்தின் முன்னுரையில் எழுதப்பட்டிருப்பது மிக முக்கியமானதாகப் படுகிறது. இந்தப் புத்தகம் 1980-ல் வெளிவந்தது. இந்திய மரபில் தனி மனித வாழ்க்கை வரலாறு எவ்வாறு கையாளப்பட்டிருக்கிறது என்பதை விவரிக்கிறார். அதில் தனி மனித வாழ்க்கை வரலாறு, பார்ப்பனிய மரபில் உணர்ச்சிகளால் மாசு அடையாத, இரத்தமும் சதையுமான மனிதன் நிராகரிக்கப்பட்டு, 'சுத்தமான தகவல்'

என்ற அடிப்படையில் எப்படித் தலைமுறை தலைமு றையாக வரலாறு சொல்லப்பட்டு வருகின்றன என்று குறிப்பிடுகிறார். இராமானுஜன் பற்றி தகவல்கள் திரட்ட முயன்றபோது அவரை மனிதனாய்ப் பாவித்து எந்தத் தகவல்களையும் எவரும் சொல்ல முன்வராததை அவர் குறிப்பிடுகிறார். இந்த மரபில் எல்லாத் தகவல்களை யும் சேர்த்திணைத்துப் பார்ப்பது புனிதமற்ற செயலா கக் கருதப்படுகிறது. அதாவது தனி மனித வாழ்க்கை வரலாறு என்பது ஒரு தனி மனிதனின் வாழ்க்கை யில் ஸ்தூலமானதையெல்லாம் நிராகரித்து அரூபமான சலிப்பு தரக்கூடிய 'கணிதமாக' மாற்றப்படுகிறது என்றும் சொல்கிறார். அத்தோடு அந்த வரலாறு மனிதனை எண் களாகவும், தூய தகவல்களாகவும் சுருக்கி விடுகிறது. உதாரணத்திற்கு ஓர் அரசனுக்கு 60,000 குழந்தைகள் இருந்தன என்றும், சொர்க்கத்தில் 330 லட்சம் கடவுள் கள் இருக்கிறார்கள் என்றும் சொல்லப்படுகிறது. இப்ப டிச் சொல்லப்படுவதன் மூலம் இது உண்மையான தக வல்தானா என்று கேள்வியைக் கேட்கத் தூண்டாமல் அது சரிதானா என்று யதார்த்தத்தில் சோதித்துப் பார்க்க வாய்ப்புகள் அற்றதாகவும் தான் வரலாறு சொல்லப்பட்டு வருகிறது என்கிறார்.

இறந்தவர்களின் பலவீனங்களைப் பேசுவதும், அவர் களுடைய அற்பத்தனங்களை விவாதிப்பதும் நாகரிக மற்ற செயலாகவே இன்றும் கருதப்படுகிறது. இன்றள வும் நம்முடைய தனி மனித வாழ்க்கை வரலாறுகள் இந்த வரம்புக்குள்ளேயே தான் இயங்கிக்கொண்டிருக் கிறது என்று சொல்லலாம். மண்ட்டோவின் வார்த்தை களில் சொல்வதென்றால் ஒரு தனி மனித வாழ்க்கை வரலாறு சலவைக்குப் போடப்பட்டு மடிப்புக் கலையா மல் கண்ணாடிப் பேழைக்குள் வைத்து நமக்குக் காட் டப்படுகிறது. இந்த மரபை மீற முயலும் எந்த வாழ்க்கை வரலாறும் தூய்மையற்றதாகக் கருதி ஒதுக்கித் தள்ளப்

படுகிறது. இத்தகைய வாழ்க்கை வரலாறுகள் எழுது வது என்பது 'ஒரு தெருவித்தைக்காரன் இறுக்கமாகக் கட்டப்பட்ட கயிற்றின் மேல் லாவகமாகவும் எளிதாகவும் நடப்பது போன்ற சிரமமான காரியம்தான்'. மண்ட்டோ எழுதிய இந்தக் கட்டுரையைப் படித்து விட்டு நூர் ஜஹான் எந்த எதிர்ப்பும் தெரிவிக்கவில்லையென்ப தைத் தெரிந்து கொள்ள முடிந்தது. தன்னை எதிர்ப்ப வர்களை மிக மூர்க்கமாகத் தாக்கக்கூடிய நூர்ஜஹான், இந்தக் கட்டுரைக்கு எதிர்ப்புத் தெரிவிக்காதது அவ ருடைய சகிப்புத்தன்மையைக் காட்டுகிறது. ஆனாலும் மண்ட்டோ திறமை வாய்ந்த தெரு வித்தைக்காரன் தான்!

('நூர்ஜஹானும் ஒரு தெருவித்தைக்காரனும்'

என்ற தலைப்பில் நிழலில் வெளிவந்தது)

பாரி அலிக் (1907 - 1949)

பாரி அலிக் என்று புகழ் பெற்ற குலாம் பாரி 1907-ம் ஆண்டு குர்தாஸ்பூர் மாவட்டத்தில் பிறந்தார். பைச லாபாத்தில் அவருடைய தொடக்கக் கல்வியை முடித் தபின் அலிகர் முஸ்லிம் பல்கலைக்கழகத்தில் அவரு டைய பட்டப் படிப்பை முடித்தார். கம்யூனிஸ்ட் இயக் கங்களோடு தொடர்பு கொண்டிருந்த அவர் ஒரு பத் திரிகையாளராகவும், வரலாற்றாசிரியராகவும், விமர்சக ராகவும் அறியப்பட்டார். கம்யூனிஸ்ட் கட்சியில் அவர் உறுப்பினராக இருந்தாரா இல்லையா என்று தெரிந்து கொள்ள முடியவில்லை. லாகூர், அம்ரித்சர், ரங்கூன் என்று பல்வேறு இடங்களில் பல்வேறு பத்திரிகைகளில் ஆசிரியராகப் பணியாற்றி இருக்கிறார். வரலாறு, இஸ் லாம், கம்யூனிசம் என்று அவர் மொத்தம் 13 புத்தகங்கள் எழுதியுள்ளார். தரீக் யா ஹே (வரலாறு என்றால் என்ன) தரீக் கா முத்தாலியா (வரலாற்றாய்வு) இன்குலாப் - கி - பிரெஞ்ச் (பிரெஞ்ச் புரட்சி) கம்பெனி கி ஹூக்கூமட் (கம்

பெனியின் சட்டங்கள்) ஆகியவை மிகவும் பிரபலமான புத்தகங்கள். இதில் 'கம்பெனி கி ஹூக்கூமட்' என்ற புத்தகம் தான் அவருக்குப் பெரும் புகழைக் கொடுத்த தோடு அவரைப் பெருமளவிற்கு விமர்சனத்திற்கும் உள் ளாக்கியது. இந்தப் புத்தகம் கிழக்கிந்தியக் கம்பெனி யின் வரலாற்றைத் தொகுத்துள்ளது. பாகிஸ்தானில் சமீ பத்தில் கூட அவரின் புத்தகங்கள் மறு பதிப்பைக் கண் டுள்ளன. உருதுப் பத்திரிகைத் துறைக்கு இவர் ஆற்றிய பங்கு, காலனிய வரலாற்றுக்கு எதிராக இவர் வரலாற்றை முன்வைத்த விதம் மற்றும் தன்னுடைய ஆசான் என்று மண்ட்டோவால் ஏற்றுக் கொள்ளப்பட்டது - இவையெல் லாம் பாரி அலிகின் பிரதான பங்களிப்பாக வரலாற்றாசி ரியர்கள், இலக்கியவாதிகள், விமர்சகர்கள் என்று எல் லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. சூதாட்டத்தில் பொழுதையெல்லாம் கழித்துக் கொண்டிருந்த மண்ட் டோவை எழுத்துப்பணியில் கொண்டுவிட்ட பெருமை பாரி அலிக்கைத்தான் சாரும். திரைப்படங்கள் பற்றி மண்ட்டோவை விமர்சனம் எழுத வைத்ததும் இவர் தான். மண்ட்டோவின் முதல் திரைப்பட விமர்சனம் பிர சுரமானதைப் படித்துவிட்டு, 'இந்த வரிகள் மண்ட்டோ என்ற சிறுகதை எழுத்தாளனின் மேதமையை வெளிப்ப டுத்துகிறது' என்று குறிப்பிட்டுள்ளார். 1949 டிசம்பர் 10ம் தேதி மாரடைப்பால் அவர் மரணம் அடைந்தார். அவ ரைக் கௌரவிக்கும் வகையில் பாகிஸ்தான் அரசாங்கம் அவருடைய உருவம் பதித்த 5 ரூபாய் தபால் தலையை 1999 டிசம்பர் 10ம் தேதி அன்று வெளியிட்டது. ஆநா டிக டநவவநசள என்ற வரிசையில் இந்தத் தபால் தலை வெளியிடப்பட்டது. இதே வரிசையில்தான் மண்ட்டோ வின் உருவமும் தபால் தலையாக வெளியிடப்பட்டது.

ஹிப்டுல்லா

மண்ட்டோ மாமா

சாதத் ஹசன் மண்ட்டோவின் சிறுகதைகளை 1956-ல் ஹமீத் ஜலால், ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துக் கொண்டுவந்த Black Milk தொகுப்பிலிருந்து இந்தக் கட்டுரை தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளது. ஆங்கில மூலத்தில் இருந்த சில பத்திகள் தவிர்க்கப் பட்டுள்ளன. 1956-ல் இந்தப் புத்தகம் வெளியானவுடன் பாகிஸ்தான் அரசாங்கம் ஏறக்குறைய எல்லாப் பிரதிகளையும் கைப் பற்றியது.

இதே கட்டுரை காலித் ஹாசன் 2001-ல் கொண்டு வந்த A Wet Afternoon ஹ றுநவ ஹகவநசாடிடிn என்ற தொகுப்பில் சேர்க்கப்பட்டுள்ளது.

இஸ்மத் சுக்தாய்

இந்தியாவில் பி.ஏ. பட்டமும், கல்வியியல் பட்டமும் பெற்ற முதல் இஸ்லாமியப் பெண் ஆவார். 1941 - ல் 'லிகாப்' என்ற சிறுகதை மூலம் உருது இலக்கி யத்தில் அறிமுகமானவர். அலட்சியப்படுத்தப்பட்ட ஒரு நவாபின் மனைவிக்கும், அவளின் பணிப்பெண்ணுக் கும் (வயதானவர்) உள்ள உடல்ரீதியான தொடர்பு பற் றியது கதை. 9 வயது சிறுமியின் பார்வையில் இந்தக் கதை சித்திரிக்கப்படுகிறது. இந்தக் கதை ஆபாசமா னது என்று லாகூர் நீதிமன்றத்தில் வழக்குத் தொட ரப்பட்டது. இந்த வழக்கு இரண்டாண்டுகள் இழுத்துச் செல்லப்பட்டு, பிறகு 'நான்கு சொல்' ஆங்கில வார்த்தை ஏதும் இல்லாததால் வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது. இவர் திரைப்பட இயக்குநர் ஷாகித் லத்தீபை தனது குடும்பத்தின் எதிர்ப்பை மீறி 1942-ல் திருமணம் செய்து கொண்டார். அவரோடு இணைந்து ஆறு திரைப்படங்க ளையும், அவரின் மறைவிற்குப் பிறகு ஆறு திரைப்படங் களையும் தயாரித்து இயக்கியுள்ளார். இன்றளவும் இவர் எழுதிய 'Crooked line' என்ற நாவல் இந்தியத் துணைக் கண்டத்தில் பெண் படைப்பாளிகளின் படைப்புகளில்

மிக முக்கியமானதாகக் கருதப்படுகிறது. நவீன உருது இலக்கியத்தில் மண்ட்டோ, கிஷன் சந்தர், பேடி, இஸ்மத் சுக்தாய் நால்வரும் பிரதான தூண்களாகக் கருதப்படுகிறார்கள்.

பின்னிணைப்பு

Manto Naama-The Life of Saadat Hasan Manto: Jagdish Chander Wadhawan (1998)- அடிப்படையாகக் கொண்டது.

---

[1] A wet afternoon: Khalid Hasan (2001) (இந்த ஆங்கிலத் தொகுப்பு The end of kingdom and other stories (1989)/ Partition and other stories (1990) / Mottled Dawn (1997) / Stars from anothersky (1998) ஆகிய தொகுப்புகளை உள்ளடக்கியது), Black Milk: Hamid Jalal (1956), Saadad Hasan Manto - Selected Stories: Madan Gupta (1997), Black Borders: Rakhshanda Jalil (2003), Black Margins: Selected by M. Asaduddin (2003)

[2] Manto flattened: An assessment of Khalid Hasan's Translations - M. Asaduddin

[3] ஹாபிஸ் ஜுலாந்தரி - சுதந்திரத்திற்கு முன் மிக முக்கியமான உருதுக் கவிஞர். 'ஷாநாமா-இ-இஸ்லாம்' என்ற இஸ்லாமிய வரலாறு பற்றிய காவியப் படைப்பின் மூலம் பிரபலமானவர். 'ஷாநாமா' என்ற காவியத்தைப் படைத்த பாரசீகக் கவிஞன் ஃபிர்தௌசிக்குச் சமமாக ஒப்பிடக்கூடியவர். ஹாபிஸ் பிரபலமாக ஃபிர்தௌசி-இ-இஸ்லாம் என்று அழைக்கப்பட்டார். சுதந்திரத்திற்குப் பிறகு பாகிஸ்தானின் தேசிய கீதம் எழுதும் பொறுப்பு அவரிடம் கொடுக்கப்பட அவரும் அதைச் செய்து முடித்தார். இருப்பினும் தன்னுடைய திறமைக்கேற்ற அங்கீகாரம் வழங்கப்படவில்லை என்ற மனவருத்தம் அவருக்கு இருந்தது. அவரை மனிதனாகவோ, கவிஞனாகவோ மண்ட்டோ ஏற்றுக்கொள்ளவில்லை.

[4] . டெல்லியிலிருந்து வெளிவந்த 'ஷாமா', லாகூரில் இருந்து வெளிவந்த 'டைரக்டர்' இரண்டும் பிரபலமான உருதுப் பத்திரிகைகள். அச்சமயத்தில் இப்பத்திரிகைகள் குறுக்கெழுத்துப் போட்டிகளை நடத்தி நிறைய பணத்தைப் பரிசாகக் கொடுத்தன.

[5] ஸெலின் காப்பி ஹவுஸ், பாக் டீ ஹவுஸ், செனே உணவகம் எல்லாம் லாகூரில் உள்ள மாலில் உள்ள பிரபலமான உணவகங்கள். எழுத்தாளர்களும் அறிவுஜீவிகளும் அங்கு ஒன்றுகூடுவது வழக்கம். பாக் டீ ஹவுஸ் மட்டுமே பெரும் நஷ்டத்தில் இருந்தாலும் தொடர்ந்து இயங்கிக்கொண்டிருக்கிறது.

[6] மௌலானா ஜாஃபர் அலிகான்: கவிஞர், எழுத்தாளர், பத்திரிகையாளர். 'ஜமீன்தார்' என்ற செய்தித்தாளை நிறுவியவர். 1950-களில் இறந்து போனார்.

[7] லண்டா பஜார், மிகப் பிரபலமான உபயோகிக்கப்பட்ட ஆடைகளை விற்கும் சந்தை

[8] சுரையா, 1940 பிற்பகுதியிலிருந்து 1960வரை பிரபலமாயிருந்த பாடகி-நடிகை. குல்ஷன் அரா மற்றும் ஷமிகா பாகிஸ்தான் திரைப்படத் துறையின் தொடக்க காலத்தில் நட்சத்திரங்களாக இருந்தார்கள். குல்ஷன் அரா சுமார் பத்து வருடங்களுக்குப் பின் காணாமல் போனார். ஷமிகா, சந்தோஷ் குமார் என்ற பிரபலமான நடிகரைத் திருமணம் செய்து கொண்டு கதாநாயகி பாத்திரங்களிலிருந்து விலகி குணச்சித்திர நடிகையானார்.

[9] இங்கு பாகிஸ்தானின் முதல் அயல்துறை மந்திரி 'சௌத்ரி ஜபருல்லா கான்'-ஐக் குறிப்பிடப்படுகிறது. இவர் ஹஅநனலைலய என்ற விவாதத்திற்குரிய அமைப்பைச் சார்ந்தவர். மைய நீரோட்டத்தில் இவர்கள் இஸ்லாமியர்கள் என்று கூட ஏற்றுக்கொள்ள மறுக்கப்பட்டவர்கள். இந்த அமைப்பைச் சார்ந்தவர்கள் 1953-இல் மிக மோசமான கலவரத்தைப் பஞ்சாபில் தோற்றுவித்தார்கள். இதன் விளைவாய் பாகிஸ்தானில் முதன்முறையாக இராணுவ ஆட்சி பிரகடனப்படுத்தப்பட்டது.

[10] மீர்ஷா பாஷீருதீன் முஹமது என்பவர் துயஅயன-i-ஹாஅநனலைலய என்ற இயக்கத்தைத் தோற்றுவித்த 'குலாம் அஹமது'-வின் மகன். அச்சமயத்தில் அவர் அந்த ஜமாத்தின் தலைவராக இருந்தார்.

[11] நவாய் வாஹ்: இது மறைந்த ஹமீது நிஜாமுதீனால் தோற்றுவிக்கப்பட்ட உருது செய்திப் பத்திரிகை. அவர் பத்திரிகையின் ஆசிரியராக இருந்ததோடு துணிச்சல் மிக்க பத்திரிகையாளராகவும் நேர்மையாளராகவும் இருந்தார்.

[12] 'ஹீரா மண்டி: லாகூரில் பாலியல் தொழிலாளிகளைக் கொண்ட மிகப் பிரபலமான இடம். ஷோரிஷ் காஸ்மீரி அதிரடி பத்திரிகையாளராகவும் பெருமளவில் புத்தகம் எழுதுபவராகவும் இருந்தார். 'ஹீரா மண்டி பற்றிய இந்தப் புத்தகம் 1950-இல் வெளிவந்தது.

[13] ஃபெரோஸ் கான் நூன்: நிலச்சுவான்தாரராகவும் பஞ்சாபைச் சார்ந்த அரசியல்வாதியாகவும் இருந்தவர். 1947-க்கு முன்னும் பின்னும் பல உயர் பதவிகளில் இருந்தார். சுதந்திரத்துக்கு முன் லண்டனில் இந்திய ஹை கமிஷனராக இருந்தார். நூன் 1958-இல் பாகிஸ்தானின் பிரதம மந்திரியாக இருந்தார். பிறகு இராணுவ ஜெனரல் முஹமது அயூப்கான் அவரது அரசாங்கத்தைக் கலைத்துப் பாகிஸ்தானில் நீண்ட காலங்களுக்கு இராணுவ ஆட்சியை நடத்தினார். நூனின் மனைவி கிழக்கு ஐரோப்பாவைச் சேர்ந்தவர். செஞ்சிலுவைச் சங்கத்திலும் பெண்ணிய அமைப்புகளிலும் தீவிரமாகப் பணியாற்றியவர். தன் பெயரை இஸ்லாமியப் பெயரான 'விஹார்-அன்-நிஷா' என்று மாற்றிக்கொண்டவர்.

[14] ஃபெரோஸு˝தின் மன்ஸு˝ர்: வாழ்க்கை முழுவதும் கம்யூனிஸ்டாக இருந்தவர். மண்ட்டோ போல் அம்ரித்சரில் இருந்துவந்தவர். மண்ட்டோ இவரை 'ஃபிராடுதீன் மன்ஸூர்' என்று கிண்டலாகக் குறிப்பிடுவார்.

[15] சிப்தே ஹசன்: பத்திரிகையாளர், இலக்கியவாதி, வாழ்நாள் முழுவதும் கம்யூனிஸ்டாக இருந்தவர்.

[16] எல்லோரும் படைப்பிலக்கியவாதிகள். கம்யூனிஸ்டு கட்சி அல்லது முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தோடு சம்பந்தப்பட்டவர்கள்.

அஹமது நதீம் காஸிமி: கவிஞர், சிறுகதை எழுத்தாளர் மற்றும் விமர்சகர். மண்ட்டோவைக் காட்டிலும் பல வருடங்கள் இளையவர் என்றாலும் மண்ட்டோவோடு நெருக்கமாக இருந்தவர்.

அப்துல்லா மாலிக்: வாழ்நாள் முழுவதும் கம்யூனிஸ்டாக இருந்தவர். 1940-இல் கட்சிப் பத்திரிகைக்காகப் பம்பாய் சென்ற போது மண்ட்டோவிற்கு அறிமுகமானவர்.

அஹமது ரா'ஹி: இந்தக் குழுவில் மிகவும் இளையவர். மண்ட்டோவின் அனுதாபி. மண்ட்டோ போல் அம்ரித்சரில் இருந்து வந்தவர். பஞ்சாபி இலக்கியத்தில் போற்றப்பட்ட கவிஞர். அவரது கவிதைத் தொகுப்பு 'தரஞ்சன்'. இது நவீனக் காதல் கவிதையில் ஒரு மைல் கல்லாகும். திரைப்படங்களுக்கு நிறைய எழுதிய இவரின் இலக்கியப் படைப்புகள் சொற்பமானவை.

நாஸிஷ் காஸ்மீரி: இவரும் அம்ரித்சரில் இருந்து வந்தவர். பம்பாய் திரைப்படத் துறையில் பணியாற்றி இருக்கலாம்.

ஹமீது அக்தர்: எழுத்தாளர், பத்திரிகையாளர். லாகூரில் வசித்து வந்தார். கம்யூனிஸ்டாகவும் முற்போக்கு எழுத்தாளர்கள் சங்கத்தில் முக்கியப் பொறுப்பாளராகவும் இருந்தார்.

பேராசிரியர் சஃப்தார்: இடதுசாரி அறிவுஜீவி. பம்பாயிலிருந்து மண்ட்டோவை அறிந்தவர். பம்பாயின் 'IPTA' -இல் பங்கெடுத்தவர்.

[17] அப்துல் ரஹ்மான் சுக்தாய்: பிரபலமான ஓவியர். ஈரான் மற்றும் முகலாய ஓவிய பாணிகளில் வரையக்கூடியவர்.

[18] மியான் பஷீர் அஹமது: ஓய்வுபெற்ற தூதரக அதிகாரியாக இருந்தவர். லாகூரில் உள்ள நிலப்பிரபுத்துவக் குடும்பத்தைச் சேர்ந்தவர்.

சையது இம்தியாஸ் அலி தாஜ்: நாடக ஆசிரியர். அவ்வப்போது திரைப்படங்களுக்கும் எழுதியவர், வசதியான நிலையில் இருந்தார்.

முஹமது இக்ரம்: சிறந்த படிப்பாளி வரலாற்றாசிரியர். அரசுதுறையில் உயர் அதிகாரியாகப் பணியாற்றியதால் பல சலுகைகளைப் பெற்றவர்,

[19] இஷான் டேனிஷ்: உருதுக் கவிஞர். ஒரு சமயத்தில் விறகு வியாபாரம்செய்து கொண்டிருந்தார்.

[20] ஆங்கிலேயர்கள் வருகைக்கு முன் வட இந்தியாவில் எடையின் அளவுகோல்களாக மணங்கு, சீர் இருந்தன. ஒரு மணங்கு என்பது நாற்பது சீரைக் கொண்டது. ஒரு சீர் என்பது 0.933105 கிலோ கிராம் எடையைக் கொண்டது.

[21] சுஹ்ராவர்தி: பிரபலமான வங்க அரசியல்வாதி. சுதந்திரத்திற்கு முன் வங்காளத்தின் பிரதம மந்திரியாகவும் சுதந்திரத்திற்குப் பின் பாகிஸ்தானின் பிரதம மந்திரியாகவும் இருந்தவர்.

[22] மியான் இஃப்திகாருதீன்: ஆங்கிலத்தில் 'தி பாகிஸ்தான் டைம்ஸ்' என்ற பத்திரிகையும் உருதுவில் 'இம்ரோஸ்' என்ற பத்திரிகையும் தொடங்கியவர். இவ்விரு பத்திரிகைகளும் இடதுசாரிச் சார்புடையவை. 'அயூப்கான்'-ன் இராணுவ ஆட்சி இந்தப் பத்திரிகைகளை அரசுக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தது. 'அஹமது நதீம் காஸிமி' சிறிது காலம் 'இம்ரோஸ்'-இல் ஆசிரியராக இருந்தார். இவர் 'பஞ்ச் தர்யா' (ஐந்து நதிகள்) என்ற புனைபெயரில் எழுதிக்கொண்டிருந்தார்.

[23] ராட்க்ளிஃப்: பிரிட்டிஷ் அரசாங்கத்தில் நீதிபதியாக இருந்தவர். இந்தியா - பாகிஸ்தான் பிரிவினைக்கான கோட்டை முட்டாள்தனமாக வரைந்தவர்.

[24] இஸ்ரத் ஜஹான் பிபோ: பிரபலமான திரைப்பட நடிகை 'பிபோ' என்ற பெயரில் திரையில் தோன்றினார். 1947-க்குப் பிறகு பாகிஸ்தானில் குடியேறினார். இவர் 'நரிபெண்' என்று பிரபலமாக அழைக்கப்பட்டவர்.

[25] பேகம் ஷாநவாஸ், பேகம் பஷீர் அஹமது, பேகம் ஜி.ஏ. கான், பேகம் சல்மா டஸாடுக்: செல்வமும் அதிகாரமும் கொண்ட பின்னணியில் வந்தவர்கள்.

[26] மௌலானா தௌத் கஸ்நாவி, மௌலானா இஸ்மாயில் கஸ்நாவி: கஸ்நாவி குடும்பத்தினர் இஸ்லாமிய மரபைப் போற்றிய குடும்பத்திலிருந்து வந்தவர்கள். அதற்காகப் பெரிதும் மதிக்கப்பட்டவர்கள்.

[27] 'ஜமீன்தார்' பத்திரிகை அரசியல் செயல்வீரரும் கவிஞரும் பத்திரிகையாளருமான 'மௌலானா ஜாஃபர் அலிகான்'-ஆல் தொடங்கப்பட்டது. 1947-க்கு முன் இஸ்லாமியர்கள் நலனுக்காகத் தீவிரமாகக் குரல் கொடுத்தவர். 1947-க்குப் பின் அவருடைய அரசியல் நிலைப்பாடு தெளிவில்லாமல் இருந்தது. உடல்நலம் குன்றியதால் பத்திரிகையைத் திறமையில்லாத அவரது மகனான 'மௌலானா அக்தர் அலிகான்'-னிடம் ஒப்படைத்தார். 'மீர் நூர் அஹமது' அரசாங்கச் செய்தித் துறையில் பணியாற்றிய அனுபவம் பெற்றவர். பத்திரிகைத் துறையை

அரசாங்கத்தின் நிலைப்பாட்டிற்கு ஆதரவு தெரிவிக்க முறை யான, முறையற்ற வழிகளில் திறம்படச் செயல்படுத்தும் அனுப வம் கொண்டவர்.

[28] மௌலானா அலிகான், மௌலானா அக்தர் அலிகான்-ன் மகன். மௌலானா ஜாஃபர் அலிகான்-ன் பேரன்.

[29] முஹமது ஷர்ஃபரஸ்: அரசாங்கச் செய்தித் துறையில் மூத்த அதிகாரியாகப் பணியாற்றியவர். அயூப்கான்-ன் இரா ணுவ ஆட்சியில் இடதுசாரிப் பத்திரிகை நிறுவனத்தின் நிர்வா கத்தைக் கையிலெடுத்தபோது பொறுப்பாளராக நியமிக்கப் பட்டவர்.

[30] காதியானி: 'ஜமாத்-இ-அஹமதியா' இயக்கத்தின் உறுப் பினர்கள் இப்படி அழைக்கப்பட்டார்கள். காரணம் இந்த இயக் கத்தின் நிறுவனர் 'மீர்ஷா குலாம் முஹமது', இந்தியாவிலுள்ள (கிழக்கு பாகிஸ்தான்) காதியான் என்ற கிராமத்திலிருந்து வந் தவர். இந்த இயக்கத்தாருக்கும் மைய நீரோட்டத்திலுள்ள இஸ்லாமியர்களுக்கும் ரத்த மோதல் இருந்துகொண்டே இருந்தது. 1953-இல் பஞ்சாபில் பெரும் கலவரம் வெடித்தது. 974-இல் 'சுபிகர் அலி பூட்டோ' அரசாங்கத்தால் 'காதியானி'-கள் இஸ்லாமியர்கள் அல்ல என்று பிரகடனப்படுத்தப்பட்டது.

[31] மாலென்கோவ்: சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவராக இருந்தார். ஸ்டாலினின் அதிகார வளையத்திற் குள் முக்கியமானவர். ஸ்டாலின் மறைவிற்குப் பிறகு, குறுகிய காலத்திற்கு (மார்ச் - செப்டம்பர் 1953) சோவியத் அதிபராக இருந்தார்.

[32] பேராசிரியர் அஹமது ஷா பொக்காரி: கல்வியாளர், இலக்கியவாதி. நையாண்டி இலக்கியத்தில் புகழ் பெற்றவர். 'பித்ராஸ் கி முஸாமீன்' என்ற புத்தகத்தின் ஆசிரியர்.